உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சேக்கிழார்சுவாமிகளருளிச்செய்த

## திருத்தொண்டர்புராணமென்னும்

# பெரியபுராணம்.

முதற்காண்டம் மூலமும்,

---

ஸ்ரீகைலாயபரம்பரைத் திருவண்ணாமலை ஆதீனம்

## ஸ்ரீ ஆறுமுகத்தம்பிரான்சுவாமிகள்

இயற்றிய பதவுரையும்

---

பையூர்க்கோட்டம்

பெருவாயல்

சுந்தரமுதலியாரவர்கள் குமாரர்

## கிருஷ்ணசுவாமிமுதலியாரவர்களால்

சென்னை:

பா - சோமையரவர்களது

ஆதிகலாநிதி அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டன.

---

கலியுகாப்தம் - ௪௯௮௯ - க்கு

ஸர்வஜித்து௵ மீனரவி.

# அறிவிப்பு.

இப்புத்தகங்கள் சென்னை கோமளீச்சுரன்பேட்டை நாகப்பமுதலியார் வீதி உஅ-வது கதவிலக்கமுள்ள வீட்டில் விற்கப்படும். பெரியபுராண முதற்காண்டம் பாயிரந்தொடங்கி சண்டேசுரநாயனார்புராணம்வரையிலும் சந்தானாசாரியரிலொருவராகிய கொற்றவன்குடி உமாபதிசிவாசாரியார்செய்த கிரந்தமும் (௬௪) படஞ்சேர்ந்து கட்டடஞ்செய்த காபி க-க்கு விலை ரூபா-௬, அணா-௪, கட்டடமில்லாத காபி ரூபா-௫, அணா-அ, படமில்லாத காபி ரூபா-௪, அணா-அ, திருஞானசம்பந்தசுவாமிகள்புராணம் கட்டடத்துடன் ரூபா-௬,அணா-௪, கட்டடமில்லாதது ரூபா-௫, அணா-அ, படமில்லாதது ரூபா-௪, அணா-அ.

திருநாவுக்கரசுசுவாமிகளென்னும் அப்பர்சுவாமிகள் புராணம் தேவாரமும் படமும் சேர்த்து மாதம் க-சஞ்சிகை விகிதம் அச்சிட்டுவருகிறது, விலைஅணா-௫.

| படம் எண். | படத்தின் விவரங்கள். | பக்கம். |
|---|---|---|
| ௩௪ | சோழர் யானை சிவகாமியாண்டார் புட்பக்குடலையைப் பறித்து மிதிக்க எறிபத்தநாயனார் மழுவால் துணித்தது ... | உ௬௪ |
| ௩௫ | சோழர்கண்டு அத்தண்டனை போதாது என்று தன்னையும் வெட்டும்படி வாள்கொடுக்க நாயனார் தான் வெட்டிக்கொள்ள அசரீரி கூறியது.. ... ... ... ... ... ... ... | உ௭௩ |
| ௩௬ | ஏனாதிநாதநாயனார் அதிசூரனைப் பலமுறை தோற்கச்செய்ய, அவன் கபடத்தால் நாயனாரை வென்றது ... ... | உ௯உ |
| ௩௭ | கண்ணப்பர் திருவவதாரம்... ... ... ... ... ... ... ... | உ௯௮ |
| ௩௮ | கண்ணப்பநாயனார் அற்புதத்திருத்தொண்டு ... ... ... ... ... ... ... | ௩௪௧ |
| ௩௯ | சிவகோசரியார் அன்பும் கண்ணப்பர் அருமைத்திருத்தொண்டும்... ... ... ... ... ... | ௩௪௭ |
| ௪0 | கண்ணப்பர் முத்தியடைந்தது ... ... ... ... ... ... ... ... | ௩௬௫ |
| ௪௧ | குங்குலியக்கலயநாயனார் மனைவி நெல் வாங்கிவரும்படி கொடுத்த தாலியைத்தந்து குங்குலியப்பொதி கொண்டது ... | ௩௭0 |
| ௪உ | திருப்பனந்தாளில் திருமேனிவளைந்திருந்த சிவலிங்கப்பெருமானை மனக்கயிற்றால் நிமிர்த்திச் சோழனைச்சந்தோஷிப்பித்தது. | ௩௭௭ |
| ௪௩ | சிவபிரான் மானக்கஞ்சாறநாயனார்புத்திரி விவாகத்திற்கு முன் அக்கன்னிகை கூந்தலைப்பெற்று மீண்டும் வளரச்செய்தது. | ௩௯௧ |
| ௪௪ | அரிவாட்டாயநாயனார் சிவபிரான் திருவமுதுக்கெடுத்துவந்த செந்நெல்லரிசி முதலியன கமரிற்சிந்த அதுகாரணமாய் முத்தியடைந்தது... ... ... ... ... ... ... ... .. | ௩.௯௯ |
| ௪௫ | ஆனாயநாயனார் சரக்கொன்றைமரத்தைநோக்கி வேய்ங்குழலில் ஸ்ரீபஞ்சாட்சர மமைத்தூதினது... ... ... | ௪௧0 |
| ௪௬ | மூர்த்திநாயனார் சுந்தரேசருக்குக் கொடுத்துவந்த சந்தனத்திருத்தொண்டுக்கு முட்டு நேரிட்டது ... ... ... | ௪உ௫ |
| ௪௭ | மூர்த்திநாயனார் சிவசின்னத்துடன் அரசாண்டது... ... ... ... ... ... ... | ௪௩௩ |
| ௪௮ | முருகநாயனார் புட்பத்திருத்தொண்டு... ... ... ... ... ... ... ... | ௪௩௮ |
| ௪௯ | உருத்திரபசுபதிநாயனார் தடாகத்தில் கழுத்தளவு ஜலத்தில் உருத்திரமந்திரத்தை ஜபித்து முத்தியடைந்தது ... ... | ௪௪௩ |
| ௫0 | திருநாளைப்போவார் திருப்புன்கூரில் விடைத்தேவரை விலக்கித்தரிசித்தது... ... ... ... ... | ௪௫0 |
| ௫௧ | திருநாளைப்போவார் தீயில் மூழ்கிக் கனகசபையை யடைந்தது... ... ... ... ... ... | ௪௫௫ |
| ௫உ | திருக்குறிப்புத்தொண்டர் சிவனடியாருக் கழுக்காடை ஒலித்துத்தந்து முத்தியடைந்தது... ... ... ... | ௫௪0 |
| ௫௩ | சண்டேசர் சிவபெருமானை அருச்சித்து தந்தைதாளைத் துணித்து சண்டேசர்பதம் பெற்றது ... ... ... | ௫௩௭ |



சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சந்தானாசாரியர் சரித்திர சங்கிரகம்.

---

சைவசித்தாந்தோபதேச சந்தானாசாரியர்களுள் தலைவராவார் பரமசிவனது அருள்பெற்ற திருநந்திதேவர், அவர் மாணாக்கர் சனற்குமார மகாமுனிவர், அவர் மாணாக்கர் சத்தியஞானதரிசனிகள், அவர் மாணாக்கர் பரஞ்சோதிமகாமுனிவர், அவர் கிருபாவசத்தினாலே ஸ்ரீகைலாயகிரியினின்றும் நீங்கித் தமிழ்நாட்டிற்கு எழுந்தருளியபோது அவரிடத்திலே ஞானோபதேசம்பெற்ற மாணாக்கர் திருவெண்ணெய்நல்லூரில் எழுந்தருளியிருந்த வேளாளராகிய மெய்கண்டசிவாசாரியர்என்னும் காரணப்பெயரை உடைய சுவேதவனப்பெருமாள், அவர் மாணாக்கர் நாற்பத்தொன்பதின்மருள் சிரேஷ்டர் திருத்துறையூரில் எழுந்தருளியிருந்த ஆதிசைவராகிய சகலாகமபண்டிதர் என்னும் காரணப்பெயரை உடைய அருணந்திசிவாசாரியர், அவர் மாணாக்கர் சிதம்பரத்தில் எழுந்தருளியிருந்த ஆதிசைவராகிய மறைஞானசம்பந்தசிவாசாரியர், அவர் மாணாக்கர் தில்லைவாழந்தணரில் ஒருவராய் அந்தத் திருப்பதியைச்சார்ந்த கொற்றவன்குடியில் எழுந்தருளியிருந்த உமாபதிசிவாசாரியர், அவர் அத்திருத்தொண்டர்புராணத்தைச் சுருக்கித் திருத்தொண்டர்புராணசாரம் எனப் பெயர் தந்து, எழுபத்தைந்து திருவிருத்தத்தால் அருளிச்செய்து, சேக்கிழார் புராணமும் பாடியருளினார்.

# புராண அட்டவணை.

# தடுத்தாட்கொண்டபுராணத்திலுள்ள

## தேவார அட்டவணை.

| எண். | தலம் | பண். | தேவாரத்தின்முதலடி. | பக்கம். |
| --- | --- | --- | --- | --- |
| க * | திருவெண்ணெய்நல்லூர் ... | இந்தளம் | பித்தாபிறைசூடிபெருமானேயருளாளா ... ... ... ... | கoச |
| உ | திருவெண்ணெய்நல்லூரும் திருநாவலூரும் | நட்டராகம் | கோவலனான்முகன்வானவர்கோனுங்குற்றேவல்செய்ய... ... ... | கoசு |
| ங | திருத்துறையூர் ... | தக்கராகம் | மலையாரருவித்திரண்மாமணியுந்திக் ... ... ... ... | கoஎ |
| ச * | திருவதிகைவீரட்டானம்.. | கொல்லிக் கௌவாணம | தம்மானையறியாதசாதியாருளரோ-சடைமேற்கொள்பிறையானை விடைமேற் கொள்விகிர்தன் | ககo |
| ரு | திருத்தினைநகர் ... | தக்கேசி | நீறுதாங்கியதிருநுதலானைநெற்றிக்கண்ணனைநிரைவளைமடந்தை ... ... | ககங |
| சு | திருக்கழுமலம் ... | தக்கேசி | சாதலும்பிறத்தலுந்தவிர்த்தெனைவகுத்துத்தன்னருடந்தவெந்தலைவனைமலையின். | கஉரு |
| எ | திருவாரூர் * ... | காந்தாரம் | கரையுங்கடலுமலையுங்காலையுமாலையுமெல்லா... ... ... ... | கஉகூ |
| அ | திருத்தொண்டத்தொகை.. | கொல்லிக் கௌவாணம் | தில்லைவாழந்தணர்தமடியார்க்குமடியேன் ... ... ... ... | கசுச |



# படத்தின் அட்டவணை.

# படத்தின் அட்டவணை.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருமுறைகண்டபுராணம்.

கருமுறை விண்டடி யவருயு மாறருள் கவுணியர் குலதீபந்
தருமிறை நாவுக் கரசா ரூரர் தாஞ்சே மித்திடுமத்
திருமுறை கண்ட புராண முரைக்கச் சிந்துர முகனற்றாள்
ஒருமுறை யிருமுறை மும்முறை வாழ்த்தி யுவந்தன் பொடுபணிவாம்.

(இ-ள்.) கருமுறைவிண்டடியவருயுமாறருள்=ஒன்றன்பின் ஒன்றாய் வரும் பிறவித்தொடக்குநீங்கி அடியார்கள் ஈடேறும்நெறியை யருளாநின்ற; கவுணியர்குலதீபந்தருமிறை=கவுணியகுலத்தில் தீபம்போல் அவதரித்த திருஞானசம்பந்தசுவாமிகளும்; நாவுக்கரசாரூரர்தாம்=திருநாவுக்கரசு சுவாமிகளும் சுந்தரமூர்த்திசுவாமிகளும் என்னும் மூவரும்; சேமித்திடுமத்திருமுறைகண்டபுராணமுரைக்க=சேமித்துவைத்த அத்திருமுறைகளைக்கண்டபுராணத்தைச்சொல்வதற்கு; சிந்துரமுகனற்றாள்=பானைமுகக்கடவுளின் நல்ல திருவடிகளை; ஒருமுறையிருமுறைமும்முறைவாழ்த்தி=ஒருகாலும் இருகாலும் முக்காலும் துதித்து; உவந்தன்பொடுபணிவாம்=களித்து மெய்யன்போடு வணங்குவாம்.—எ-று.

வேறு.

உலகமகிழ் தருசைய மீதுதோன்றி யோவாது வருபொன்னி சூழ்சோணாட்டின், றிலகமென விளங்குமணி மாடவாரூர்த் தியாகேசர் பதம்பணிந்து செங்கோலோச்சி, யலகில்புகழ் பெறுராச ராசமன்ன னபயகுல சேகரன்பா லெய்துமன்பர், இலகுமொரு மூவரருள் பதிகமொன்றொன் றேயினிதி னுரைசெய்ய வன்பாற்கேட்டு.

(இ-ள்.) உல்கமகிழ்தருசையமீதுதோன்றி=உலகத்தார் மகிழ்ச்சியடைதற்கேதுவான சையமலையின்கணுதித்து; ஓவாதுவருபொன்னிசூழ்=இடைவிடாது பெருகிவருகின்ற காவேரிசூழ்ந்த; சோணாட்டின்றிலகமெனவிளங்கும்=சோழநாட்டிற் பூதேவிக்குத் திலகம்போல் விளங்காநின்ற; மணிமாடவாரூர்த்தியாகேசர்பதம்பணிந்து=மணிமாடங்களையுடைய திருவாரூரின்கண் தியாகேசர் திருவடிகளைப்பணிந்து; செங்கோலோச்சி=செங்கோலை உலகமுழுதும் நடாத்தி; அலகில்புகழ்பெறுராசராசமன்னன்=அளவில்லாத புகழைப்பெற்ற ராசராசமன்னவனென்னும்; அபயகுலசேகரன்பாலெய்துமன்பர்=அபயகுலசேகர சோழனிடத்தில்வருகின்ற சிவனடியார்கள்; இலகுமொருமூவரருள்பதிகமொன்றொன்றே=புகழ்விளங்கிய ஒப்பற்ற மூவர்முதலிகள் அருளிய திருப்பதிகங்களில் ஒவ்வொன்றையே; இனிதினுரைசெய்யவன்பாற்கேட்டு=இனிதாக ஓதுதலும் அவற்றை மெய்யன்போடு கேள்வியுற்று.—எ-று. (க)

கையிரண்டு முச்சிமே லேறக்கண்ணீர் கரைந்தோட மெய்ம்மு
ழுதும் புளகம்போர்ப்ப, ஐயன்மலர்ப் பதமுளத்தே கொண்டுபோற்
றி யரியமுறை தேடவெங்கு மிலாமையாலே, நையுமனத் தினனாகி
யிருக்குங்காலை நாரையூ ரினிலாதி சைவமறையோன்பால், வையமெ
லா மீடேறச் சைவம்வாழ மாமணிபோ லொருசிறுவன் வந்து
தோன்றி.

(இ-ள்.) கையிரண்டுமுச்சிமேலேற=இரண்டுகைகளுஞ் சிரசின்மேலே
றவும்; கரைந்துகண்ணீரோட=மனமுருகிக் கண்ணினின்றும் ஆனந்த அருவி
சொரியவும்; மெய்ம்முழுதும்புளகம்போர்ப்ப=உடம்பெங்கும் புளகாங்கிதமா
கவும்; ஐயன்மலர்ப்பதமுளத்தேகொண்டுபோற்றி=சிவபிரான் திருவடிகளை உ
ள்ளத்திற் சிந்தித்துத் துதித்து; அரியமுறைதேடவெங்குமிலாமையால்=பெறு
தற்கரிய திருமுறைகளைத் தேசங்கள்தோறும் தேடிப்பார்க்க எவ்விடத்தும் அக
ப்படாமையால்; நையுமனத்தினனாகியிருக்குங்காலை=அபயகுலசேகரசோழன்
வருந்திய மனத்தையுடையவனா யிருக்குங்காலத்தில்; நாரையூரினிலாதிசைவம
றையோன்பால்=திருநாரையூர் என்னுந் திருப்பதியின்கண் ஒரு ஆதிசைவவே
தியரிடத்தில்; வையமெலாமீடேறச்சைவம்வாழ=உலகுயிரெல்லாங் கடத்தே
றவும் சைவநெறி தழைக்கவும்; மாமணிபோலொருசிறுவன்வந்துதோன்றி=
மாணிக்கம்போல ஒருமைந்தர் அவதரித்து.—எ-று. ஏ-அசை. (உ)

வளமொடுப நயனவிதிச் சடங்கும்பூண்டு மறைமுதலாங் கலைப
யின்று வருநாளீன்ற, கிளர்மறையோ னோரூர்க்குச் செல்லமைந்தன்
கேடில்பிதா வுரைத்தமொழிப் படியேயந்தி, இளமதிச்செஞ் சடைப்
பொல்லாப் பிள்ளையாரை யேத்தியா ராதிப்பா னினிதினேகி, உளம
லியன் பொடுதிருமஞ் சனமுன்னாகு முரியவெலாஞ் செய்துநிவே த
னமுன் வைத்து.

(இ-ள்.) வளமொடுபநயனவிதிச்சடங்கும்பூண்டு=சிறப்பாக உபநயன
விதிச்சடங்குகளும் தந்தைசெய்யப் பெற்றுக்கொண்டு; மறைமுதலாங்கலைப
யின்றுவருநாள்=வேதமுதலிய கலைகளை ஓதிவருகின்றநாளில்; ஈன்றகிளர்மறை
யோனோரூர்க்குச்செல்ல=தம்மைப்பெற்ற தந்தையாகிய வேதியர் ஓரூர்க்குப்
போனபடியால்; மைந்தன்கேடில்பிதாவுரைத்தமொழிப்படி=புத்திரன் குற்ற
மில்லாத தந்தைசொன்ன சொற்படி; அந்தியிளமதிச்செஞ்சடைப்பொல்லாப்
பிள்ளையாரை=மாலைக்காலத்தில் தோன்றுகின்ற இளம்பிறையைத்தரித்த சிவ
ந்த சடையையுடைய திருநாரையூர்ப் பொல்லாப்பிள்ளையாரை; ஏத்தியாராதிப்
பானினிதினேகி=துதித்து ஆராதிக்கும்பொருட்டு இனிதாய்ச்சென்று; உளம
லியன்பொடுதிருமஞ்சனமுன்னாகும்உரியவெலாஞ்செய்து=உள்ளத்தில் மிகுந்
த அன்புடனே திருமஞ்சனமுதலிய வனைத்துஞ்செய்து; நிவேதனமுன்வைத்
து=நிவேதனத்தைப் பிள்ளையார் திருமுன்வைத்து.—எ-று. ஏ-அசை. (௩)

எம்பெருமா னமுதுசெய வேண்டுமென்ன விறைஞ்சிடவு மமு துசெயா திருப்பக்கண்டு, வெம்பியுள மேதேனுந் தவறிங்குண்டோ வேழமுக னேயடியே னிவேதித்திட்ட, பம்பமுத முண்ணாத தென் னையென்னப் பரிந்துதலை தனைமோதப் புகுங்காலெம்மா, னம்பிபொ று வெனத்தடுத்தவ் வமுதமெல்லா நன்கருந்த வுவந்துநம்பி நவில் வதானன்.

(இ-ள்.) எம்பெருமானமுதுசெய வேண்டுமென்ன விறைஞ்சிடவும்= எம்பெருமானே இதனைத்திருவமுதுசெய்யவேண்டுமென்று பிரார்த்தித்துப்ப ணியவும்; அமுதுசெயாதிருப்பக்கண்டு=விநாயகர் திருவமுதுசெய்யாமலிருப் பதுகண்டு; உளம்வெம்பியேதேனுந்தவறிங்குண்டோ=உள்ளம்நொந்து இவ் விடத்தில் ஏதேனுந்தவறுண்டாயிற்றோ; வேழமுகனேயடியேனிவேதித்திட் ட=யானைமுகக்கடவுளே அடியேன் நிவேதனமாகவைத்த; பம்பமுதமுண்ணா தென்னையென்ன=மிக்க அமுதத்தை யுட்கொள்ளாதிருப்பது யாதுகாரணமெ ன்றிரந்து; பரிந்துதலைதனைமோதப்புகுங்கால்=வருந்தித் தமதுதலையை மோதி க்கொள்ளப் புகுந்தபோது; எம்மானம்பிபொறுவெனத்தடுத்து=எமதாண்டவ ராகிய பிள்ளையார் நம்பியேபொறுவென்றுதடுத்து; அவ்வமுதமெல்லா நன்கரு ந்த=அவ்வமுதையெல்லாங் களிப்புடன்றிருவமுதுசெய்யவும்; நம்பியுவந்துந வில்வதானன்=நம்பியாண்டார்நம்பிமகிழ்ந்து சொல்லத்தொடங்கினர்.—எ-று.

இந்நான்குங்குளகம்.

எந்தையே யினியடியேன் பள்ளிக்கேகி லெங்கடேசிகனடிப்பா னாதலாலே, சந்தமறை முதற்கலைக ணீயேயோதித் தரல்வேண்டு மெ னவேழ முகத்தோன்றானு, மந்தமற வோதுவிக்க வோதிநம்பி மகிழ் ந்தனனன் றதுபோல மற்றைநாளும், விந்தையொடு நிகழநம்பி யா ண்டார்நம்பி மேவியிருந் திடுஞ்செய்தி வேந்தன்கேளா.

(இ-ள்.) எந்தையேயினியடியேன் பள்ளிக்கேகில்=எம்துதந்தையே இனிமேல் அடியேன் பள்ளிக்குச்சென்றால்; எங்கடேசிகனடிப்பானாதலால்= எங்கள் உபாத்தியாயர் அடிப்பார் ஆதலினால்; சந்தமறைமுதற்கலைகள்=சந்த த்தோடுங்கூடிய வேதமுதலியகலைகளை; நீயேயோதித் தரல்வேண்டுமென= தேவரீரே கற்பித்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ் செய்ய; வேழமுகத் தோன்றானு மந்தமறவோதுவிக்க=யானைமுகக்கடவுளும் அவ்வாறே அவிச் சைத்தடைநீங்கும்படி வேதமுதலியகலைகளை யோதுவித்தருள; ஓதிநம்பிமகிழ் ந்தனனன்று= அவைகளை நம்பியாண்டார்நம்பிகற்று அன்றுமகிழ்ச்சிகூர்ந்த னர்; அதுபோல மற்றைநாளும் விந்தையொடுநிகழ=அவ்வாறாகவே மற்றைநா ட்களிலும் அதிசயமாய்நடந்துவர; நம்பியாண்டார்நம்பி மேவியிருந்திடுஞ்செ ய்தி=நம்பியாண்டார்நம்பி பயின்றுவருஞ்செய்தியை; வேந்தன்கேளா=அபய குலசேகரசோழன் கேள்வியுற்று.—எ-று. (௫)

ஏ - அசை.

செல்வமிகு திருநாரை யூரின்மேவுஞ் சிவனளித்த மதகரிக்குச் சிந்தைகூர்ந்து, நல்லபுக ழுடையநம்பி யாண்டார்நம்பி நண்பினொடு நிவேதிப்பான் மதுரமிக்க, வெல்லையில்வா ழைக்கனிதே னவலோடப்ப மெள்ளுண்டை யிவ்வுலகோ ரொடுக்கவென்றே, மல்லன்மிகு சேனையுட னிராசராச மன்னவனு மந்நகரில் வந்துசேர்ந்தான்.

(இ-ள்.) செல்வமிகுதிருநாரையூரின்மேவும்= வளப்பமிகுந்த திருநாரையூரிற்கோயில்கொண்டருளாநின்ற; சிவனளித்தமதகரிக்குச் சிந்தைகூர்ந்து=சிவபிரான் ஈன்றருளிய யானைமுகக்கடவுளுக்கு 'மனமகிழ்ந்து; நல்லபுகழுடைய நம்பியாண்டார்நம்பி=மிக்கபுகழுள்ள நம்பியாண்டார்நம்பியைக்கொண்டு; நண்பினொடுநிவேதிப்பான்= மெய்யன்போடு நிவேதனஞ்செய்விக்கும் பொருட்டு; மதுரமிக்கவெல்லையில் வாழைக்கனி=சுவைமிகுந்த அளவற்றவாழைக்கனிகளும்; தேனவலோடப்பமெள்ளுண்டை=கட்டித்தேனும் அவலும் அப்பங்களும் எள்ளுண்டைமுதலியவையும்; இவ்வுலகோரெடுக்கவென்று=இந்நகரத்திலுள்ளார் கொணர்கவென்று கட்டளைசெய்து; மல்லன்மிகுசேனையுடனிராசராசமன்னவனும்= வலிமைமிகுந்தசேனைகளோடும் அபயகுலசேகரசோழனும்; அந்நகரில்வந்துசேர்ந்தான்=திருநாரையூரில்வந்து சேர்ந்தனன்.—எ-று. ஏ-அசை. (௬)

இவ்விரண்டுங்குளகம்.

ஆங்கதனுக் கந்நகரி லிடம்போதாம லயல்சூழப் பதின்காத வகலவெல்லை, மாங்கனிவா ழைக்கனிகள் வருக்கையாவும் வந்தனவவ் வெல்லையெல்லா மருவவைத்துப், பாங்கினுட னம்பிதாள் பணிந்து மன்னன் பலகனிகள் கொணர்ந்தவெலாம் பகர்ந்துபோற்றி, யீங்கிதனைப் பொல்லாத பிள்ளையாருக் கிப்பொழுதே நிவேதிக்க வென்று சொன்னான்.

(இ-ள்.) ஆங்கதனுக்கந்நகரிலிடம்போதாமல்= அவ்வாறுஅவர்கள்கொண்டுவந்த பலபண்டங்களுக்குத் திருநாரையூரில் இடம்போதாமையால்; அயல்சூழப்பதின்காதவகலவெல்லை=அவ்வூர்ப்புறத்தில் பதின்காதம் அகலமான எல்லைவரையில்; மாங்கனிவாழைக்கனிகள் வருக்கையாவும்=மாங்கனிகளும் வாழைக்கனிகளும் பலாக்கனிகள்முதலியனவுமாக; வந்தனவவ்வெல்லையெல்லாமருவவைத்து=வந்ததுகளை மேற்சொல்லிய எல்லைமுழுதும்பரவவைத்து; மன்னன்பாங்கினுடனம்பிதாள்பணிந்து=அபயகுலசேகரசோழன் அன்புடன் நம்பியாண்டார்நம்பியினுடைய திருவடிகளைவணங்கி; பலகனிகள்கொணர்ந்தவெலாம் பகர்ந்துபோற்றி=பலவகைப்பட்ட கனிவர்க்கங்களையும் தாங்கொண்டுவந்த எல்லாப்பண்டங்களையுந் தெரிவித்துவணங்கி; ஈங்கிதனைப்பொல்லாத பிள்ளையாருக்கு=இப்பண்டங்களைப் பொல்லாப்பிள்ளையார்க்கு; இப்பொழுதே நிவேதிக்கவென்றுசொன்னான்=இப்பொழுதே நிவேதனஞ்செய்யவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தனன்.—எ-று. (௭)

1. அபயகுலசேகரசோழர்)

2 நம்பியாண்[illegible])

அபயகுலசேகரசோழர் தம்மிடத்துவரும் சிவனடியார்கள் மூவர் திருப்பதிகங்களில் சிலவற்றை இனிதாக ஓதுதலைக்கேட்டு அத்திருமுறைகள் முழுமையுங் கண்டுபிடிக்கத் தேசமெங்குந் தேடிக்காணாமல் வருந்துகையில் திருநாரையூரிற் பொல்லாப்பிள்ளையார் நம்பியாண்டார்நம்பியென்னும் மறைச்சிறுவருக்கு வேண்டுவனவற்றை அனுக்கிரகஞ்செய்வதறிந்து அப்பிள்ளையாருக்கு வேண்டிய நைவேத்தியத்துடன்சென்று நம்பியாண்டார்நம்பியை நமஸ்கரித்து அப்பண்டங்களை நிவேதனஞ்செய்விக்கவும் திருமுறைகளிருக்குமிடத்தைத் தெரிந்துசொல்லவும் வேண்டிக்கொள்ள அவர் அவ்வாறே நிவேதனஞ்செய்து கேட்கப் பொல்லாப்பிள்ளையார் அத்திருமுறைகள் கனகசபைக்கு மேற்பால் அம்மூவர் [illegible]

நம்பியர சன்சொன்ன வார்த்தைகேளா நன்றுனது பணியென்
ன வருளாலுன்னித், தும்பிமுக னடிபணிந்து மன்னனிங்குத் தொ
குத்தனநீ யமுதுசெய வேண்டுமென்னக், கம்பமதக் களிற்றுமுகத்
தானுமங்குக் கருத்தினுட னம்பியுரைக் கிசைந்துகாட்ட, விம்பரினி
ல் வந்தனநாற் சுத்திசெய்தே யிருந்தவெலாம் படைக்கவவ னேற்ற
ல்செய்தான்.

(இ-ள்.) நம்பியரசன்சொன்ன வார்த்தைகேளா=நம்பியாண்டார்நம்பி அபயகுலசேகரசோழன் தம்மைப்பிரார்த்தித்த விண்ணப்பத்தைக்கேட்டருளி; நன்றுனதுபணியென்னவருளாலுன்னி=உமது திருப்பணி நன்றென்று திருவருளினால் நினைந்து; தும்பிமுகனடிபணிந்து=பொல்லாப்பிள்ளையாரது திருவடியை வணங்கி; மன்னனிங்குத்தொகுத்தனநீயமுதுசெயவேண்டுமென்ன=அபயகுலசேகரசோழன் இவ்விடத்திற் கொணர்ந்தவைகளைத் தேவரீர் திருவமுது செய்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய; கம்பமதக்களிற்றுமுகத்தானும்=கட்டுத்தறியை ஒடிக்கும் மதத்தையுடைய யானைமுகக்கடவுளும்; அங்குக் கருத்தினுடனம்பியுரைக்கிசைந்துகாட்ட=அவ்வாறு திருவுளப்பாங்காய் நம்பியாண்டார்நம்பியின் விண்ணப்பத்திற்கிசைந்தருளலும்; இம்பரினில்வந்தனநாற்சுத்திசெய்துபடைக்க=இப்பதியினிடத்துவந்த அப்பண்டங்களை நால்வகைச் சுத்தியுஞ்செய்து நிவேதிக்க; இருந்தவெலாமவனேற்றல்செய்தான்=அவற்றையெல்லாம் பொல்லாப்பிள்ளையார் அமுதுசெய்தருளினர்.—எ-று. ஏ-அசை.()

நால்வகைச்சுத்தியாவன:—நிரீட்சணமும் புரோட்சணமும் அப்யுட்சணமும் அபிமந்திரிதமும் என இவை.

புகர்முகக்கை புறப்படவே படைத்தவெல்லாம் புகுந்தவிட ம
றியாமற் போனபின்னை, யகநெகிழ மெய்யரும்பிக் கண்ணீர்வார நம்
பிகழ லன்பினு லரசன்போற்றி, மிகவுமொரு விண்ணப்ப மடியேற்
குண்டு வேதியனே கேளென்று விளம்புவான்மெய்ப், புகழுதுசேர்
மூவர்தமிழ் தொண்டர்செய்தி பூதலத்தில் விளங்கவெனப்போற்றிநி
ன்றான்.

(இ-ள்.) புகர்முகக்கைபுறப்பட=பொல்லாப்பிள்ளையாரது கபிலநிறந்தங்கிய முகத்திலுள்ள துதிக்கையானது வெளிப்படலும்; படைத்தவெல்லாம்=படைத்த பண்டங்களெல்லாம்; புகுந்தவிடமறியாமற் போனபின்னை=போனவிடந்தெரியாமற் போய்விட்டபின்பு; அகநெகிழமெய்யரும்பி=மனமுருக உரோமம் முகிழ்த்து; கண்ணீர்வார=கண்ணீர்பெருக; அன்பினுல்நம்பிகழலரசன்போற்றி=அன்புடனே நம்பியாண்டார்நம்பி திருவடிகளை அபயகுலசேகரசோழன்வணங்கி; மிகவுமொருவிண்ணப்பமடியேற்குண்டு=இன்னுமொரு விண்ணப்பம் அடியேனுக்குளது; வேதியனேகேளென்றுவிளம்புவான்=மறைச்சிறுவரே கேட்டருள்வீரென்று விளம்புகின்றனன்; அதுமெய்ப்புகழ்சேர்மூவர்தமிழ்=அஃது அழியாப்புகழ்மை சேர்ந்துள்ள மூவர்முதலிகள் திருமுறையும்; தொண்டர்செய்தி=திருத்தொண்டர் வரலாறும்; பூதலத்தில்விளங்கவெனப்போற்றிநின்றான்=இவ்வுலகின்கண் விளங்கவேண்டுமென்பதேயெனச் சொல்லித் துதித்துநின்றனன்.—எ-று. ஏ-அசை. (௬)

அந்தவுரை கேட்டலுமங் கரசன்றன்னை நம்பிமகிழ்ந் தருள்புரிவா னருள்சேர்மூவர், செந்தமிழ்க ளிருந்தவிட மன்பருள்ளோர் செய்திக்கவ் விநாயகன்றாள் சிந்தித்தெந்தா, யந்தவகை யேதென்று கேட்டாலெந்தை மகிழ்ந்தருளு மந்நெறியை வழாதுனக்குத், தந்திடுவன் மன்னபொறு வென்றுசொல்லித் தந்திமுகன் சந்நிதியிற் றாழ்ந்துசென்றான்.

(இ-ள்.) அந்தவுரைகேட்டலும்=அவ்விண்ணப்பத்தைக் கேட்டவுடன்; நம்பியரசன்றன்னைமகிழ்ந்தருள்புரிவான்=நம்பியாண்டார்நம்பி அபயகுலசேகரசோழனை மகிழ்ந்துசொல்லுவார்; அருள்சேர்மூவர்செந்தமிழ்களிருந்தவிடம்=திருவருள்பெற்ற மூவர்திருநெறித் தமிழிருக்குமிடத்தின்பொருட்டும்; அன்பருள்ளோர்செய்திக்கு=திருத்தொண்டர் வரலாற்றின்பொருட்டும்; அவ்விநாயகன்றாள்சிந்தித்து=அவ்விநாயகருடைய பாதங்களைத்தியானித்து; எந்தாயந்தவகையேதென்றுகேட்டால்=எந்தையே அவ்விவரம் ஏதென்று பிரார்த்தித்து வேண்டினால்; எந்தைமகிழ்ந்தருளும்=எமது தந்தையாகிய விநாயகரும் முனிவின்றித் தெரிவித்தருள்வர்; அந்நெறியைவழாதுனக்குத்தந்திடுவன்=அவரருளிய வரலாற்றை யுமக்குத்தவறாமல் தெரிவிப்பேன்; மன்னபொறுவென்றுசொல்லி=அரசனே விசனமடையாதிருவென்று சொல்லி; தந்திமுகன்சந்நிதியிற்றாழ்ந்துசென்றான்=பொல்லாப்பிள்ளையாரது சந்நிதிக்கண்வந்து பணிந்து உள்ளேபுகுந்தனர்.—எ-று. ஏ-அசை. (௧௰)

சென்றுபணிந் திபமுகத்தோன் பாதப்போதைச் சென்னியில் வைத் தவனருளிற் றிளைத்துச்சிந்தை, யொன்றுமற வுருகிவிழி தாரைகொள்ள வுண்மையினால் வந்தித்தங் குவாவோன்றன்னை, யின்றமிழ்சேர் மூவர்தமி ழிருந்தவெல்லை யெல்லையில்சீர்த் திருத்தொண்டரியல்புமூர்த்தி, நன்றுமருள் செய்தருள வேண்டுமென்ன நாகமுகனம்பிக்கு நவிலலுற்றான்.

(இ-ள்.) சென்றுபணிந்து=அவ்வாறுசென்று வணங்கி; இபமுகத்தோன்பாதப்போதைச்சென்னியில்வைத்து=பொல்லாப்பிள்ளையார் பாததாமரையைத் தமது சிரசில்வைத்து; அவனருளிற்றிளைத்து=அவரது திருவருள்வசத்தராய்; சிந்தையொன்றுமறவுருகிவிழிதாரைகொள்ள=சித்தவிகற்பம் சிறிதுமின்றி யுருகி ஆனந்தக்கண்ணீர் இடையீடின்றிப்பெருக; உண்மையினால்வந்தித்து=மெய்யன்போடு வந்தனைசெய்து; அங்குவாவோன்றன்னை=அவ்விடத்துப் பொல்லாப்பிள்ளையாரைநோக்கி; இன்றமிழ்சேர்மூவர்தமிழிருந்தவெல்லை=இனிய மதுரம்பொருந்திய மூவர் திருநெறித்தமிழ்வேதம் இருக்குமிடமும்; எல்லையில்சீர்த்திருத்தொண்டரியல்பும்=அளவிடற்கரிய சீர்மையுள்ள திருத்தொண்டர் வரலாறும் தெரியும்படி; மூர்த்திநன்றுமருள்செய்தருள வேண்டுமென்ன=விநாயகமூர்த்தியே மிகவும் தேவரீர் அருள்புரியவேண்டுமென்றிரக்க; நாகமுகனம்பிக்குநவிலலுற்றான்=யானைமுகக்கடவுளும் நம்பியாண்டார்நம்பிக்குத் திருவாய்மலர்ந்தருள்வாராக.—எ-று. உற்றான் என்றது முற்றெச்சம். (௧௧)

வார்ந்தருட்க ணீர்சொரிய நம்பிகேட்ப வண்டமிழ்க ளிருந்தவிடம் மன்றுளாடுங், கூர்ந்தவிருட் கண்டர்புறக் கடையின்பாங்கர்க் கோலமலர்க் கைகளுடை யாளமாகச், சார்ந்தனவென் றருள்செய்து தொண்டர்பேறுஞ் சாற்றுதலாற் சகதலத்தோ ரருளைச்சார, ஆர்ந்ததமிழிருந்தவிட மன்பர்செய்தி யத்தனையு நம்பிமனத் தருளிற்கொண்டார்.

(இ-ள்.) வார்ந்தருட்கணீர்சொரிய நம்பிகேட்ப=கண்களில் ஆநந்தநீர் பொழியும்படி நம்பியாண்டார்நம்பி கேட்க; வண்டமிழ்களிருந்தவிடம்=அத்திருமுறைகள் இருக்குமிடம்; மன்றுளாடுங்கூர்ந்தவிருட்கண்டர்=மன்றுள் நடித்தருளுகின்ற நீலகண்டராகிய நடேசரது; புறக்கடையின்பாங்கர்=சிற்சபையின்புறத்தே; கோலமலர்க்கைகளுடையாளமாக=அம்மூவரது அழகிய மலர்போன்ற திருக்கரங்களடையாளமாக; சார்ந்தனவென்றருள்செய்து=சேமித்திருக்கின்றனவென்றுரைத்து; தொண்டர்பேறுஞ்சாற்றுதலால்=திருத்தொண்டரது வரலாறுஞ் சொல்லியருளினபடியால்; சகதலத்தோரருளைச்சார=உலகுயிர்கள் சிவபிரான் திருவருளை யடைதற்பொருட்டு; ஆர்ந்ததமிழிருந்தவிடம்=முற்றிய திருநெறித்தமிழ் சேமித்த இடமும்; அன்பர்செய்தியத்தனையும்=அடியார்கள் சரித்திரம் அவ்வளவும்; நம்பிமனத்தருளிற்கொண்டார்=நம்பியாண்டார்நம்பி தமதுள்ளத்தின்கண் திருவருட்சார்பினால் மனனஞ்செய்து கொண்டனர்.—எ-று. இவ்விரண்டுங்குளகம். (கஉ)

கொண்டுகுல சேகரனுங் கோன்பால்வந்து குஞ்சரத்தோ னருள்செய்த கொள்கையெல்லா, மண்டுபெருங் காதலுடன் சொல்லியந்த வண்டமிழின் பெருமைதனை வகுத்துச்சொல்வார், கண்டபெரு மந்திரமே மூவர்பாடல் கைகாணு மந்திரங்கண் ணுதலோன்கூற, லெண்டிசையுஞ் சிவனருளைப் பெறுதற்காக விம்மொழியின் பெருமையையா ணியம்பக்கேணீ.

(இ-ள்.) கொண்டுகுலசேகரனுங்கோன்பால்வந்து=அவ்வாறு சிந்தித்துக்கொண்டு அபயகுலசேகரசோழனிடத்தில்வந்து; குஞ்சரத்தோனருள்செய்தகொள்கையெல்லாம்=பொல்லாப்பிள்ளையார் அருளிச்செய்த வரலாறு முற்றும்; மண்டுபெருங்காதலுடன்சொல்லி=அதிகரிக்கின்ற பெருமகிழ்ச்சியுடன் தெரிவித்து; அந்தவண்டமிழின்பெருமைதனைவகுத்துச்சொல்வார்=அத்திருநெறித்தமிழின் மகிமையை வகையுறச்சொல்லுகின்றார்; மூவர்பாடல்கண்டபெருமந்திரம்=மூவர்களோதிய திருமுறைகள் கண்கூடாக நாமறிந்த பெரியவேதம்; கண்ணுதலோன்கூறல்கைகாணுமந்திரம்=சிவபிரான் ஓதிய வேதங்கள் எம்மாற் கண்கூடாகக் காணப்படாத மறைகளாம்; எண்டிசையுஞ்சிவனருளைப்பெறுதற்காக=எட்டுத்திக்கிலுள்ள ஆன்மாக்களும் சிவபிரான் திருவருளைப்பெறுமாறு; இம்மொழியின்பெருமையையானியம்பக்கேணீ=இத்திருநெறித் தமிழ்வேதத்தின் பெருமையை யாம் சொல்வோம் நீவிர்கேட்க.—எ-று. ஏ-அசை.

திருநெறித்தமிழ் வேதநூல்லியமாயினும் என்பு பெண்ணுக்கல் கல்மிதப்பித்தல் முதலைவாய்ப்பிள்ளை யழைத்தல் சிவபிரான் அவர்க்குத் தரிசனங்கொடுத்தல் முதலியன அப்பாடலோடு யாம் காணவருதலில் கண்டமந்திரமென்று

ம், வேதத்திற்கூறும் பொருள்கள் யாவும் பிரமாணமாயினும் அது அருளிச்செய்யுங்கால் அப்பொருளின் விசேடங்கள் ஆங்காங்கு சரிதத்தோடு நிகழாமையின்கைகாணுமந்திரமென்றுங்கூறினர்.

சேடர்மலி காழிநகர் வேந்தர்தாமும் தேவர்புகழ் திருத்தோணிச் சிவனார்பங்கிற், பீடுடைய வுமைமுலைப்பா லருளாலுண்டு பிஞ்ஞகனைச் சினவிடைமேற் பெருகக்கண்டு, தோடுடைய செவியன்முதற் கல்லூரொன்னுந் தொடைமுடிவாப் பரசமயத் தொகைகண்மாளப், பாடினார் பதிகங்கள் பாவிலொன்றும் பதினாறா யிரமுளதாப் பகருமன்றே.

(இ-ள்.) சேடர்மலிகாழிநகர்வேந்தர்தாமும்=அறிவுடையோர் வாழ்கின்ற சீகாழிப்பதியில் அவதரித்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரும்; தேவர்புகழ்திருத்தோணிச்சிவனார்பங்கில்=தேவர்களேத்துகின்ற திருத்தோணியப்பரது இடதுபாகத்திருக்கும்; பீடுடையவுமைமுலைப்பாலருளாலுண்டு=பெருமையுள்ள பார்வதியாரது திருமுலைப்பாலைச் சிவபிரானது திருவருளினாலுண்டு; பிஞ்ஞகனைச்சினவிடைமேற்பெருகக்கண்டு=திருத்தோணியப்பரை வீரமுடைய இடபவாகனத்தின்மேல் வீற்றிருந்தருளத்தரிசித்து; தோடுடையசெவியன்முதற்கல்லூரொன்னுந்தொடைமுடிவாய்=தோடுடைய செவியன் என்னும் பதிகமுதல் கல்லூரொன்னும் பதிகமிறுதியாக; பரசமயத்தொகைகண்மாளப்பாடினார்=வேற்றுச்சமயங்கள் பிற்பட்டொழியும்படி ஓதியருளினர்; பதிகங்கள்பாவிலொன்றும்பதினாறாயிரமுளதாப்பகரும்=அத்திருப்பதிகங்கள் பலபாக்களோடு சேர்ந்திருக்கும் பதினாறாயிரமுள்ளனவாகச் சொல்லப்படும்.—எ-று. ()

அன்று - ஏ-அசை.

திருநாவுக் கரையரெனுஞ் செம்மையாளர் தீயமணர் சிறைநீங்க வதிகைமேவுங், குருநாமப் பரஞ்சுடரைப் பரவிச்சூலை கொடுங்கூற்றா யினவென்ன வெடுத்துக்கோதி, லொருமானைத் தரிக்குமொரு வரையுங்காறு மொருநாற்பத் தொன்பதினா யிரமதாகப், பெருநாமப் புகலூரிற் பதிகங்கூறிப் பிஞ்ஞகனா ரடியிணைகள் பெற்றுளாரே.

(இ-ள்.) திருநாவுக்கரையரெனுஞ்செம்மையாளர்=திருநாவுக்கரையரென்னுஞ் செவ்விய குணத்தையுடைய அப்பர்சுவாமிகள்; தீயமணர்சிறைநீங்க=கொடிய சமணர்களது சிறையினின்று நீங்க; அதிகைமேவுங்குருநாமப்பரஞ்சுடரைப்பரவி=திருவதிகையிற் கோயில்கொண்டருளிய வீரட்டானேசுரனை வணங்கி; சூலைகொடுங்கூற்றாயினவென்னவெடுத்து=கொடிய சூலைநோய் காரணமாகக் கூற்றாயினவென்று முதல்தொடங்கிய பதிகமுதல்; கோதிலொருமானைத்தரிக்குமொருவரையுங்காறும்=குற்றமில்லாத ஒருமானைத்தரிக்கு மொருவரையுமென்னும் பதிகமீறாக; ஒருநாற்பத்தொன்பதினாயிரமதாக=நாற்பத்தொன்பதினாயிரம் திருப்பதிகங்கள் ஓதியருளி; பெருநாமப்புகலூரிற்பதிகங்கூறி=மிக்க புகழுள்ள திருப்புகலூரிற் பதிகம்பாடி; பிஞ்ஞகனாரடியிணைகள்பெற்றுளார்=சிவபிரான் திருவடியைச் சேர்ந்தனர்.—எ-று. ஏ-அசை. (௧௫)

பின்புசில நாளின்க ணாரூர்நம்பி பிறங்குதிரு வெண்ணைநல்லூர்
ப் பித்தாவென்னு, மின்பமுதற் றிருப்பதிக மூழிதோறு மீறாய்முப்
பத்தெண்ணா யிரமதாக, முன்புபுகன் றவர்கொடித்தான் மலையிற்சேர்
ந்தார் முறைகளெல்லாந் திருத்தில்லை மூதூர்தன்னி, லன்றவர்கை
யிலச்சினையால் வைத்தார்மன்ன வாராய்ந்து தருகவென வருளிச்செ
ய்தார்.

(இ-ள்.) பின்புசிலநாளின்கணாரூர்நம்பி=சிலநாளின்பின் சுந்தரமூர்த்திசுவாமிகள்; பிறங்குதிருவெண்ணைநல்லூர்=சிறந்த திருவெண்ணைநல்லூரின்கண்வாழும்; பித்தாவென்னுமுதலின்பத்திருப்பதிகம்=பித்தாவென்னு முதன்மொழியுள்ள பேரின்பத்தைத்தருகின்ற திருப்பதிகம்முதல்; ஊழிதோறுமீறும்=ஊழிதோறும் என்னும் பதிகமீறாக; முப்பத்தெண்ணாயிரமதாக=முப்பத்தெண்ணாயிரம் பதிகங்கள்; முன்புபுகன்று=ஆதிகாலத்தில் ஓதியருளி; அவர்கொடித்தான்மலையிற்சேர்ந்தார்=அவர் திருக்கயிலையிற் சென்றனர்; முறைகளெல்லாந்திருத்தில்லைமூதூர்தன்னில்=அத்திருமுறைகள் அனைத்தும் திருத்தில்லைப்பதியின்கண்; அன்றவர்கையிலச்சினையால் வைத்தார்=அக்காலத்தில் சமயாசாரியராகிய அம்மூவரும் தமதுதிருக்கரங்கள் அடையாளமாகச்சேமித்துவைத்தனர் ஆதலால்;மன்னவாராய்ந்துதருகவெனவருளிச்செய்தார்=அரசனே அவற்றை ஆராய்ந்து தரவேண்டுமென்று சொல்லியருளினர்.—எ-று. (கசு)

அருமறையைச் சிச்சிலிபண் டருந்தத்தேடு மதுபோலன் றிது
வென்று முளதாமுண்மைப், பரபதமுந் தற்பரமும் பரனேயன்றிப்
பலரில்லை யென்றெழுதும் பனுவல்பாரி, னெரியினிடை வேவாதாற்
றெதிரேயோடு மென்புக்கு முயிர்கொடுக்கு மிடுநஞ்சாற்றுங், கரி
யைவளை விக்குங்கன் மிதக்கப்பண்ணுங் கராமதலை கரையிலுறக் காற்
றுங்காணே.

(இ-ள்.) அருமறையைச்சிச்சிலிபண்டருந்தத்தேடுமதுபோலன்று=பூர்வத்தில் அருமையாகிய எசுர்வேதத்தைச் சில சிச்சிலிப்பறவை விழுங்கினதால் அதைக்காணமல் தேடினதுபோலன்று; இதுவென்றுமுளதாம்=இத்திருமுறையென்றும் நிலைபெற்றதாகும்; உண்மைப்பரபதமுந்தற்பரமும்=மெய்ம்மையான சிவலோகமுதலிய மேலாம்பதங்களும் அப்பதங்கட்குரிய முதற்பொருளும்; பரனேயன்றிப் பலரில்லையென்றெழுதும்பனுவல்=சிவபிரானேயல்லாமல் பலகடவுளில்லை என்றெழுதியருளிய பனுவலாகும்; பாரின்எரியினிடைவேவாது=உலகின்கண் அதுநெருப்பில்வேகாது; ஆற்றெதிரேயோடும்=ஆற்றுப்பெருக்கில் எதிரேறிவரும்; என்புக்குமுயிர்கொடுக்கும்=எலும்புக்கும் உயிரைக்கொடுக்கும்; இடுநஞ்சாற்றும்=இடப்பட்ட விடத்தை முறிக்கும்; கரியைவளைவிக்கும்=மதயானையைவணங்கப்பண்ணும்; கன்மிதக்கப்பண்ணும்=கடலிற் கருங்கல்லை மிதக்கப்பண்ணும்; கராமதலைகரையிலுறக்காற்றுங்காண்=மடுக்கரையில் முதலையானது பிள்ளையைக் கக்கும்படிசெய்யும் அதன்மான்மியத்தையறிதி.—எ-று. ஏ-அசை. (கஎ)

மறைகள் அதன் அங்கங்களால் அர்த்தவாதமுதலியன நீக்கிச் சிவபிரானே பரம்பொருளென அரிதில் உணரக்கூடியதுபோலன்றி இத்திருமுறைகள்

தெள்ளிதிற் புலப்படக்கூறுதலிற் பரனேயன்றிப் பலரில்லையென்றெழுதும் ப
னுவலென்றார். வைசம்பாயனமுனிவர் தன்மாணவகராகிய காத்தியாயனமுனி
வரை முனிந்து நீ ஓதிச்சாணித்தியமாக்கிய வேதத்தை இப்பொழுதே உமிழ்ந்
துவிடென்று கூற அவர் மாணவகனுக்குரிய இயல்புகுறையாது உம்மிடத்து
ஓதினேன் ஆதலால் தேவரீர் அவ்வாறு கட்டளையிடக்கூடாதென்று மறுக்கவும்
அவர் உடன்படாமையால் உமிழ்ந்துவிட்டனர் அப்பொழுது அவ்வேதம் தீச்சு
டராய்ச்சொலித்தது அதைக்கண்ட வியாசர் அத்தியின் வெம்மையைத்தணித்
து அங்கிருந்த சிலமுனிவரைத் தித்திரிரூபமெடுத்து உண்ணும்படி செய்தார்
அதனால் சிச்சிலிகள் அருந்தியதென்று கூறப்பட்டது. எசுர்வேதம் பின்பு அத்
தித்திரிகளாற் கூறப்பட்டமையால் தைத்திரியமெனப் பெயர்பெற்றதென்க.

என்றென்று நம்பிக்குப் பரிவாலுண்மை யின்றமிழின் பெருமை
தனை யியம்பக்கேட்டுக், குன்றொன்று பேருருவங் கொண்டாற்போ
லுங் குஞ்சரத்தோ னருளினையுட் கொண்டுமன்னன், மன்றினிடஞ்
சென்றுமறை யோர்கடொண்டர் வார்சடையோர் காவலுடை மர
போர்க்கெல்லா, நன்றெங்கள் கணபதிதன் சொல்லிதென்று நன்மை
யுடன் மன்னவனார் நவிலுங்காலை.

(இ-ள்.) என்றென்றுநம்பிக்குப்பரிவால் = என்றிவ்வாறு நம்பியாண்டா
ர்நம்பிக்குத்தயையாய்; உண்மையின்றமிழின் பெருமைதனையியம்பக்கேட்டு =
மெய்ப்பொருளாகிய இனியதமிழ்வேதத்தின்பெருமையை விநாயகர் உபதேசி
த்தருளியவாறு நம்பியாண்டார்நம்பி தமக்குச்சொல்லியருளக்கேட்டு; மன்ன
ன்குன்றொன்றுபேருருவங்கொண்டாற்போலும் = அபயகுலசேகரசோழன் ஒ
ருமலையானது பெரியஉருவங்கொண்டாற்போன்றுள்ள; குஞ்சரத்தோனருளி
னையுட்கொண்டு = பொல்லாப்பிள்ளையாரது திருவருளையுள்ளத்திற்கொண்டு; ம
ன்றினிடஞ்சென்று = சிதம்பரத்தின்கண்வந்து; மறையோர்கடொண்டர்வார்ச
டையோர்காவலுடைமரபோர்க்கெல்லாம் = தில்லைமூவாயிரவர் நாற்பத்தெண்
ணாயிரமகேசுரர்கள் எழுநூறுதிருமடத்துமுதலிகள் ஏழாயிரத்துத்தொளாயிரவ
ராகிய கோயில்திருத்தொண்டுசெய்பவர்கள் என்னுமிவர்கட்கெல்லாம்; நன்றெ
ங்கள்கணபதிதன் சொல்லிதென்று = நன்றாக நமதுபொல்லாப்பிள்ளையார் சொ
ல்லியருளியமுறை யின்னதென்று; நன்மையுடன்மன்னவனார் நவிலுங்காலை =
மனக்களிப்புடன் அபயகுலசேகரசோழன் தெரிவித்தபோதில். — எ-று. (௧௫)

அத்தகையோர் தமிழ்வைத்த மூவர்வந்தா லறைதிறக்கு மென
வுரைக்க வரசன்றானு, மெய்த்தகுசீ ரம்பலவர்க் குற்றசெல்வ விழா
வெடுத்து விளம்புதமிழ் மூவர்தம்மை, யுய்த்தணிவீ தியினிலுலா வ
ருவித்தும்பர் நாயகன்றன் கோயில்வல மாக்கியுள்ளே, சித்தமெலா
முருக்குதமி ழிருக்கைசேரச் சேர்த்தியவர் சேர்ந்ததெனச் செப்பி
னான்.

(இ-ள்.) அத்தகையோர்தமிழ்வைத்தமூவர்வந்தால் = அவ்வாறுகேள்வி
யுற்ற தில்லைவாழந்தணர்முதலாயினோர் திருநெறித்தமிழ்வேதத்தைச் சேமித்
துவைத்த (சமயாசாரியராகிய) மூவரும்வந்தால்; அறைதிறக்குமெனவுரை




1. செல்லுப்புற்று. 2. சோழன். 3. நம்பியாண்டார். 4 திருமுறை.

சோழரும் நம்பியும் தில்லைமூவாயிரவரைக்கண்டு பிள்ளையாருரைத்ததைச்சொல்ல அவர்கள் அம்மூவர்வந்தால் அறைதிறக்குமென்று கூறவுடனே கட்டேசருக்குத் திருவிழாச்செய்து மூவரையு மெழுந்தருளப்பண்ணிச் சேர்த்த அறையைத்திறந்து திருமுறைகள்மேல் மூடியிருந்த செல்லுப்புற்றை நீக்கி வெளியிலெடுத்து அவ்வேடுகளுக்குத் தயிலமிட்டுப்பார்க்க அளவற்ற ஏடுகள் பழுதாயிருக்கக்கண்டு சோழன்மனம் வருந்துகையில் சிவபிரான் திருவருளால் இக்காலத்திற்கு வேண்டுவனவைத்து மற்றதை மண்மூடச்செய்தோமென்று அசரீரி அருளியது.

க்க—அச்சேமித்தஅறை திறக்குமெனச்சொல்லுதலும்; அரசன்றானுமெய்த்த குசிரம்பலவர்க்குற்றசெல்வவிழாவெடுத்து—அபயகுலசேகரசோழனும் மெய்ம்மையுள்ள சிறப்பையுடைய நடேசர்க்கு விபவம்பொருந்திய திருவிழாச்செய்து; தமிழ்விளம்புமூவர்தம்மை—திருமுறையோதியருளியமூவரையும்; உய்த்த ணிவீதியினிலுலாவருவித்து—எழுந்தருளப்பண்ணித்திருவீதியினில் உலாவருவித்து; உம்பர்நாயகன்றன்கோயில்வலமாக்கி—நடேசரது திருக்கோயிலுள்ளே வலமாக எழுந்தருளுவித்து;உள்ளேசித்தமெலாமுருக்குதமிழிருக்கைசேரச்சேர்த்தி—ஆன்மாக்களது உள்ளத்தையெல்லாம் உருக்காநின்ற திருமுறைச்சேமத்தின்கண்கொணர்ந்துசேர்த்து; அவர்சேர்ந்ததெனச்செப்பிநின்றான்—அம்மூவர்கள்வந்துசேர்ந்ததென்று சொல்லிநின்றான்.—எ-று. (கசு)

சேர்ந்ததென்றது மூவராசிரியரையும் தெய்வமென்னுங்கருத்தால் தொகுதியொருமையாய்க்கூறிய திணைவழுவமைதி. இவ்விரண்டுங்குளகம்.

ஐயர்நட மாடுமம் பலத்தின்மேல்பா லருள்பெற்ற மூவர்தம தருள்சேர்செய்ய, கையதுவே யிலச்சினையா யிருந்தகாப்பைக் கண்டவர்க ளதிசயிப்பக் கடைவாய்நீக்கிப், பொய்யுடையோ ரறிவுதனைப் புலன்கண்மூடும் பொற்பதுபோற் போதமிகும் பாடறன்னை, நொய்யசிறு வன்மீக மூடக்கண்டு நொடிப்பளவி னிற்சிந்தை நொந்தவேந்தன்.

(இ-ள்.) ஐயர்நடமாடு மம்பலத்தின்மேல்பால்—சிவபிரான் திருநட்ஞ்செய்கின்ற சிற்சபையின்மேல்பால்: அருள்பெற்றமூவர்—திருவருள்பெற்றமூவரும்; தமதருள்சேர்செய்யகையதுவேயிலச்சினையாயிருந்தகாப்பை— தமதுகருணைசேர்ந்த செவ்வியதிருக்கரமே அடையாளமாகப்பொறித்திருந்த திருமுறைச்சேமத்தை; கண்டவர்களதிசயிப்பக்கடைவாய்நீக்கி—பார்த்தவர்கள் அதிசயிக்கக்கதவைத்திறந்து; பொய்யுடையோரறிவுதனை—பொய்ம்மையுடையோர்களது அறிவை; புலன்கண்மூடும்பொற்பதுபோல்—புலன்கள்மறைத்திருக்குந்தன்மைபோல்; போதமிகும்பாடறன்னை—திருவருண்ஞானம்மிக்கிருக்கின்ற திருமுறையை; நொய்யசிறுவன்மீகமூடக்கண்டு—நொய்மையாகிய சிறியசெல்லுப்புற்றானது மூடியிருக்கப்பார்த்து; நொடிப்பளவினிற் சிந்தைநொந்தவேந்தன்—அக்கணத்தில் மனம்வருந்திய அபயகுலசேகரசோழன்.—எ-று. (உ0)

புலனென்றது ஐம்பொறிகட்குரிய விடயத்தை.

பார்த்ததனைப் புறத்துய்ப்ப வுரைத்துமேலே படிந்திருந்த மண்மலையைச் சேரத்தள்ளிச், சீர்த்ததில தயிலமலி கும்பங்கொண்டு செல்லுநனை யச்சொரிந்து திருவேடெல்லா, மார்த்தவரு ளதனாலே யெடுத்துநோக்க வலகிலா வேடுபழு தாகக்கண்டு, தீர்த்தமுடிக் கணிபரனே பரனேயென்னச் சிந்தைதளர்ந் திருகணீர் சோரநின்றான்.

(இ-ள்.) பார்த்ததனைப்புறத்துய்ப்பவுரைத்து—அவ்வாறுபார்த்ததிருமுறையைப்புறத்தே எடுத்துவைக்கும்படி கட்டளையிட்டு; மேல்படிந்திருந்தமண்மலையைச்சேரத்தள்ளி—மூடியிருந்தபுற்றுமண்குவையைமுழுதுநீக்கி; சீர்த்ததிலதயிலமலிகும்பங்கொண்டு—தெளிவாகிய எண்ணெய்க்குடங்களால்; செ

ல்லுநலையச்சொரிந்து— செல்லுநலையும்படியூற்றி; திருவேடெல்லாமார்த்தவருளதனாலெடுத்துநோக்க— திருவேடெல்லாவற்றையும் மிக்க திருவருளாலெடுத்துநோக்குதலும்; அலகிலாவேடுபழுதாகக்கண்டு—அளவற்றஏடுகள் பழுதாயிருக்கக்கண்டு; தீர்த்தமுடிக்கணிபரனேபரனேயென்ன— கங்கையைச்சடையில் அணிகின்ற பரமனேபரமனேஎன்று வாய்விட்டு; சிந்தைதளர்ந்திருகணீர் சோரநின்றான்—சிந்தைதளர்ந்து இரண்டுகண்களிலும் நீர்பெருகும்படித்துயரமுற்றுநின்றனன்.—எ-று. ஏ - இரண்டும் அசை. (௨௧)

ஏந்துபுகழ் வளவனிவ்வா றன்பினாலே யிடர்க்கடலின் கரைகாணா தினையுங்காலை, சார்ந்தமலை மகள்கொழுந னருளால்வேதச் சைவநெறித் தலைவரெனு மூவர்பாடல், வேய்ந்தனபோன் மண்மூடச் செய்தேயீண்டு வேண்டுவன வைத்தோமென் றுலகிலுள்ள, மாந்தரொடு மன்னவனுங் கேட்குமாற்றால் வானகத்தி லோரோசை யெழுந்ததன்றே.

(இ-ள்.) ஏந்துபுகழ்வளவனிவ்வாறன்பினால்—விரிந்தபுகழையுடைய அபயகுலசேகரசோழன் இவ்வாறுமெய்யன்பினால்; இடர்க்கடலின்கரைகாணாதினையுங்காலை—துன்பக்கடலின்கரைகாணாமல்வருந்தினபோது; சார்ந்தமலைமகள்கொழுனனருளால்—இடப்பாகத்திலிருக்கும் உமாதேவியார் கணவராகிய சிவபிரான் திருவருளால்; வேதச்சைவநெறித்தலைவரெனுமூவர்பாடல்—வேதசாரசைவத்தலைவராகிய மூவரதுதிருப்பாடல்களை; வேய்ந்தனபோன்மண்மூடச்செய்து—கவசமிட்டாற்போல் மண்ணால்மூடும்படிசெய்து; ஈண்டுவேண்டுவனவைத்தோமென்று—இக்காலத்திற்கு வேண்டுவனவற்றைத்தெரியும்படிவைத்தோமென்று; உலகிலுள்ளமாந்தரொடு மன்னவனுங்கேட்குமாற்றால்—உலகிலுள்ளமனிதர்களும் அரசனுங்கேட்கும்படி; வானகத்திலோரோசையெழுந்தது—ஆகாயத்தின்கண் ஓரசரீரிவாக்குதித்தது.—எ-று. (௨௨)

ஏ - மூன்றும் அன்றும் அசை.

அந்தமொழி கேட்டலுமே மன்னன்றானு மாடினான் பாடினா னலக்கண்யாவுஞ், சிந்தினா னமுதமுண்டான் போலநெஞ்சந் தேறினா னம்பிதிரு வடியிற்றாழ்ந்தான், பந்தமறு சிவனடியார் கொள்கவென்னாப் பண்டாரந் திறந்துவிட்டான் பரிவுகூர்ந்தான், இந்தவகைப் பெருங்களிகொண் மன்னன்றானு மெழின்முறையை முன்போல வருக்கவெண்ணி.

(இ-ள்.) அந்தமொழிகேட்டலுமன்னன்றானும்— அவ்வசரீரித்திருவாக்கைக்கேட்டமாத்திரத்தில் அபயகுலசேகரசோழன்; ஆடினான்பாடினான்—ஆனந்தக்கூத்தாடினானைப் பாடினான்; அலக்கண்யாவுஞ்சிந்தினான்—தனது உள்ளக்கவலைமுற்றும்நீங்கினன்; அமுதமுண்டான்போல நெஞ்சந்தேறினான்—தேவாமிர்தங்கிடைத்து உண்டாற்போல மனக்குறைநீங்கினவனாகி; நம்பிதிருவடியிற்றாழ்ந்தான்—நம்பியாண்டார்நம்பியினுடைய திருவடிகளில்வணங்கி; பந்தமறுசிவனடியார்கொள்கவென்னா—அவிச்சைத்தொடக்கைநீக்கிய சிவனடியார்கள் கொள்ளக்கடவதென்று; பரிவுகூர்ந்தான் பண்டாரந்திறந்துவிட்டான்—அன்பு

மிகுந்து பொன்மணிமுதலியவைவைத்திருக்கும் சாலையைத்திறந்துவிட்டான்; இந்த வகைபெருங்களிகொண் மன்னன்ருனும்—இவ்வாறுபேரானந்தக்களிப்படைந்த அபயகுலசேகரசோழனும்; எழின்முறையைமுன்போலவகுக்கவெண்ணி—தெய்வத்தன்மையுள்ளதிருமுறையை முன்னுளிலிருந்தவாறு வகைப்படுத்தும்படி நினைந்து—எ-று. ஏ-அசை. (உந)

மன்னுதமிழ் விரகரெங்கள் காழிவேந்தர் வகுத்தருளா லமைத் ததிரு முறையோர்மூன்றும், அன்னவகை வாகீசர் முறையோர்மூன் று மாரூரா ருரைத்ததிரு முறையதொன்றுந், துன்னவகை யேழாகத் தொகுத்துச்செய்தான் றூயமனு வெழுகோடி யென்பதுன்னித், த ன்னிகரி றிருவருளான் மன்னன்ருனுந் தாரணியோர் வீடுபெறுந் த ன்மைசூழ்ந்தே.

(இ-ள்.) மன்னுதமிழ்விரகரெங்கள்காழிவேந்தர்—நிலைபெற்ற திருநெறித்தமிழ்விரகராகிய எமது திருஞானசம்பந்தப்பிள்ளையார்; அருளால்வகுத்த திருமுறையோர்மூன்றும்—சிவபிரான் திருவருளால் வகுத்துச்சொல்லிய திருமுறைகள் மூன்றும்; அன்னவகைவாகீசர்முறையோர்மூன்றும்—அவ்வாறு திருநாவுக்கரசுசுவாமிகள் சொல்லிய திருமுறைகள் மூன்றும்; ஆரூரருரைத்ததிருமுறையதொன்றும்—சுந்தரமூர்த்திசுவாமிகள் ஓதிய திருமுறை ஒன்றும் என; தன்னிகரிறிருவருளான்மன்னன்ருனும்—தனக்குத்தானே இணையாகிய திருவருளை முன்னிட்டு அபயகுலசேகரசோழனும்; தாரணியோர்வீடுபெறுந்தன்மைசூழ்ந்து—உலகத்திலுள்ளோர் பேரின்பவீடு பெறுகின்றதன்மையை ஆலோசித்து; தூயமனுவெழுகோடியென்பதுன்னி—தூய்மையான மந்திரங்கள் ஏழந்த முடையனவாயிருக்கும் வகையை அநுசரித்து; துன்னவகையேழாகத்தொகுத்துச்செய்தான்—அவற்றின்வகுப்பு ஏழாகத்தொகுத்தனர்.—எ-று. (உச)

ஈண்டுக் கோடியென்றது அந்தத்தை.

முன் மூவர்முதலிகள் திருமுறை ஏழாய்வைத்தகாரணம் மந்திரங்கள் எழுவகையந்தமுடையன என்னுங் கருத்தாற்போலுமென அவ்வாறு வகுக்கக்கருதினன் ஆதலில் தூயமனுவெழுகோடியென்பதுன்னி என்றார். எழுகோடி என்றது நமமுதல் ஏழந்தமாயிருக்கும் முறைமைநோக்கியென்க.

வேறு.

பண்புற்ற திருஞான சம்பந்தர் பதிகமுந்நூற்
றெண்பத்தி னொன்றினு லிலங்குதிரு முறைமூன்று
நண்புற்ற நாவரசர் முந்நூற்றேழ் மூன்றினுல்
வண்பெற்ற முறையொன்று நூற்றினுல் வன்றொண்டர்.

(இ-ள்.) பண்புற்றதிருஞானசம்பந்தர்பதிகமுந்நூற்றெண்பத்தினொன்றினுல்—நன்மைமிகுந்த திருஞானசம்பந்தசுவாமிகள் பதிகம் முந்நூற்றெண்பத்தினொன்றினுல்; இலங்குதிருமுறைமூன்றும்—விளங்குந் திருமுறைகள் மூன்றும்; நண்புற்றநாவரசர்—சிவநேசமிக்க திருநாவுக்கரசுசுவாமிகள் பதிகம்; முந்நூற்றேழ்மூன்றினுல்வண்பெற்றமுறையொன்றும்—முந்நூற்றேழுபதிகங்களால் திருமுறை மூன்றும்; நூற்றினுல்வன்றொண்டர்—சுந்தரமூர்த்திசுவாமிகள் நூறு பதிகங்களால் திருமுறையொன்றுமாம்.—எ-று. (உரு)

ஆகவளர் திருமுறையே ழருட்டிருவா சகமொன்று
மோகமெறி திருவிசைப்பா மாலைமுறை யொன்றுசிவ
போகமிகு மந்திரமா முறையொன்று புகழ்பெறவே
பாகமிகுந் திருமுறைகள் பத்தாக வைத்தார்கள்.

(இ-ள்.) ஆகவளர்திருமுறையேழு—இவ்வாருக ஓங்குந்திருமுறைகள் ஏழும்; அருட்டிருவாசகமொன்று—அருள்வாக்காகிய திருவாசகத் திருமுறையொன்றும்; மோகமெறிதிருவிசைப்பாமாலைமுறையொன்று—மோகமாகிய கட்டைப்பற்றறக் களைகின்ற திருவிசைப்பாமாலைத் திருமுறையொன்றும்; சிவபோகமிகுமந்திரமாமுறையொன்றுபுகழ்பெற—சிவபோகமிகுந்த திருமந்திரத்திருமுறையொன்றும் எனப் புகழ்பரவும்படி; பாகமிகுந்திருமுறைகள்பத்தாக வைத்தார்கள்—பரிபாகத்தை உண்டாக்கும் திருமுறைகள் பத்தாக ஏற்படுத்தினர்.—எ-று. ஏ-அசை. (உசு)

வைத்ததற்பி னம்பிகழன் மன்னர்பிரான் மகிழ்ந்திறைஞ்சிச்
சித்திதரு மிறைமொழிந்த திருமுகப்பா சுரமுதலா
வுய்த்தபதி கங்களையு மொருமுறையாச் செய்கவெனப்
பத்திதருந் திருமுறைகள் பதினொன்றுப் பண்ணினர்.

(இ-ள்.) வைத்ததற்பினம்பிகழல்—அவ்வாறு ஏற்படுத்தியபின்பு நம்பியாண்டாரது திருவடியை; மன்னர்பிரான்மகிழ்ந்திறைஞ்சி—அபயகுலசேகர சோழன் மகிழ்வுடன்பணிந்து; சித்திதருமிறைமொழிந்ததிருமுகப்பாசுரமுதலா—இட்டசித்தியைப் பிரசாதித்தருளுகின்ற சிவபிரான் வரைந்தருளின திருமுகப்பாசுரமுதலாக;உய்த்தபதிகங்களையுமொருமுறையாச்செய்கவென—எண்ணப்பட்ட திருப்பதிகங்களையும் ஒருதிருமுறையாகச் செய்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தவாற்றால்; பத்திதருந்திருமுறைகள்பதினொன்றுப்பண்ணினர்—அத்திவ்வியபிரபந்தத்திருமுறையும் சேர்த்துச் சிவபத்திநெறியைத் தருகின்ற திருமுறை பதினொன்றுகச்செய்தனர்.—எ-று. (உஎ)

மந்திரங்க ளெழுகோடி யாதலினுன் மன்னுமவ
ரிந்தவகை திருமுறைக ளேழாக வெடுத்தமைத்துப்
பந்தமுறு மந்திரங்கள் பதினொன்று மாதலினு
லந்தமுறை நான்கிஞெடு முறைபதினென் ருக்கினர்.

(இ-ள்.) மந்திரங்களெழுகோடியாதலினுல்—மகாமந்திரங்கள் ஏழுந்தமுடைமையால்; மன்னுமவர்—நிலைபெற்ற நம்பியாண்டார்; இந்தவகைத்திருமுறைகளேழாகவெடுத்தமைத்து—இவ்வகைக்கேற்பத் திருமுறைகள் ஏழாக ஏற்படுத்திவைத்து; பந்தமுறுமந்திரங்கள்பதினொன்றுமாதலினுல்—சேர்க்கையான மந்திரங்கள் பதினொன்றுமாதலால் அவைக்கேற்ப அவ்வேழுடன்; அந்தமுறைநான்கிஞெடு—திருவாசகத்திருமுறை முதலிய நான்குஞ்சேர்த்து; முறைபதினென்ருக்கினர்—திருமுறைகள் பதினென்ருக அமைத்தனர்.—எ-று. (உஅ)

ஆக்கியபின் றிருத்தொண்டத் தொகையடைவை யருளாலே
நோக்கியபின் னயன்மார் நடங்கடைவுந் தொழிற்பேறும்
பாக்கியத்தா லிபமுகத்தோ னருள்செய்த பகுதியினல்
வாக்கியல்சே ரந்தாதி நம்பியடை வேவகுத்தார்.

(இ-ள்.) ஆக்கியபின்திருத்தொண்டத்தொகையடைவை=அவ்வாறு அமைத்தபின்னர் சுந்தரமூர்த்திசுவாமிகள் அருளிச்செய்த திருத்தொண்டத்தொகையின் முறையை; அருளால்நோக்கியபின்=திருவருளால் ஆராய்ந்தபின்னர்; நாயன்மார்நடங்கடைவுந்தொழிற்பேறும்=அத்திருத்தொண்டர்களது அருமையான வரலாற்றையும் திருத்தொண்டுகளையும் அவர்கள் அடைந்துள்ள பேறுகளையும்; பாங்கியத்தாலிபமுகத்தோனருள்செய்தபகுதியினால்=உலகர்தவப்பேற்றினால் பொல்லாப்பிள்ளையார் உபதேசித்தருளிய முறைமைப்படி; வாக்கியல்சேரந்தாதிநம்பியடைவேவகுத்தார்=நம்பியாண்டார்நம்பி தமது திருவாக்கால் இலக்கணமமைந்த திருவந்தாதியை நெறிமுறையே வகைநூலாகச் செய்தருளினர்—எ-று. ஏ - அசை.

சீரருள்சே ரறுபத்து மூவர்தனி திருக்கூட்டஞ்
சாருமவ ரொன்பானுந் தண்டமிழா னுரைசெய்து
பேரிசையாம் வகையடைவு புவியினிடைப் பெருமையினாற்
சீருலவு திருவெருக்கத் தம்புலியூர் சென்றடைந்தார்.

(இ-ள்.) சீரருள்சேரறுபத்துமூவர்தனி=திருவருளையடைந்த அறுபத்துமூவர் தனித்திருப்பேரும்; திருக்கூட்டஞ்சாருமவரொன்பானும்=திருக்கூட்டமாகச்சேர்ந்த அடியார் ஒன்பதின்மருமாகிய இவர்களது வரலாற்றை; தண்டமிழானுரைசெய்து=இனிய தமிழ்த்திருவந்தாதியாலுரைத்து; பேரிசையாம் வகையடைவு=மூவர்திருமுறைகளுக்கு இசைகளைப்பெறவேண்டி; புவியினிடைப்பெருமையினாற்சீருலவு=இப்புவிக்கண்பெருமையால் மேம்பட்டிருக்கின்ற; * திருவெருக்கத்தம்புலியூர் சென்றடைந்தார்=திருவெருக்கத்தம்புலியூரென்னுந்தலத்திற்போய்ச்சேர்ந்தனர்—எ-று. (கூ0)

சென்னியரு ணம்பியிவ ரந்நகரைச் சேர்ந்துசிவன்
மன்னுதிருக் கோயிலினை வலங்கொண்டு பணிந்தரனை
யின்னிசைதந் தருளென்ன விரக்கமுடன் குறைந்திரப்பக்
கன்னியொரு பங்குடையோ னருள்செய்த கடனுரைப்பாம்.

(இ-ள்.) சென்னியருணம்பியிவர்=அபயகுலசேகரசோழன் அருள்பெற்ற நம்பியாண்டார்நம்பி என்னும் இவ்விருவரும்; அந்நகரைச்சேர்ந்து=அத்தலத்தின்கண்சென்று; சிவன்மன்னுதிருக்கோயிலினைவலங்கொண்டுபணிந்து=சிவபிரான் வீற்றிருக்கின்ற திருக்கோயிலை வலம்வந்துவணங்கி; அரனையின்னிசைதந்தருளென்னவிரக்கமுடன்குறைந்திரப்ப=சிவபிரானை திருமுறைகட்கு இனிய இசைதந்தருளவேண்டுமென்று கனிவுடன் குறையிரந்துவேண்டலும்; கன்னியொருபங்குடையோனருள்செய்த கடனுரைப்பாம்=உமாதேவியை ஒருபாகத்திலுடைய இறைவர் அருளிச்செய்த முறைமையைச் சொல்லுவாம்.—எ-று. (கூக)

நல்லிசையாழ்ப் பாணனார் நன்மரபின் வழிவந்த
வல்லியொருத் திக்கிசைகள் வாய்ப்பவளித் தோமென்று
சொல்லவவ டனையழைத்துச் சுருதிவழிப் பண்டழுவு
நல்லிசையின் வழிகேட்டு நம்பியிறை யுண்மகிழ்ந்தார்.

---

* நடுநாட்டிலுள்ள சிவதலங்கள் இருபத்திரண்டுள் ஒன்று.

(இ-ள்.) நல்லிசையாழ்ப்பாணனார் நன்மரபின்வழிவந்தவல்லியொருத்
திக்கு=இத்திருவெருக்கத்தம்புலியூரில் இனிமையான இசைநூலில்வல்ல திரு
நீலகண்டயாழ்ப்பாணநாயனாரது திருமரபிற்பிறந்துள்ள ஒருபெண்ணுக்கு; இ
சைகள்வாய்ப்பவளித்தோமென்றுசொல்ல=திருமுறைகட்குரிய இசைத்திறங்
களினது தேர்ச்சி சித்திக்கும்படி தந்தருளினோமென்று சிவபிரான் அநுக்கிரகி
க்க; அவடனையழைத்துச்சுருதிவழிப்பண்டமுவுநல்லிசையின்வழிகேட்டு=அப்
பெண்ணை வருவித்துச் சுதிமுறையால் பண்கள் பொருந்துகின்ற இனிய இசை
த்திறங்களைக்கேட்டு; நம்பியிறையுண்மகிழ்ந்தார்=நம்பியாண்டார்நம்பியும் அப
யகுலசேகரசோழனும் உள்ளங்களித்தனர்.—எ-று. (௩௨)

ஆங்கவளை யம்பலத்து ளாடுவார் திருமுன்பே
பாங்கினுடன் கொடுவந்து பண்ணடைவு பயில்பாட
லோங்கருளான் முறைபணித்தற் கொக்குமென வோரோசை
நீங்கரிய வானின்க ணிகழவர சன்கேட்டான்.

(இ-ள்.) ஆங்கவளையம்பலத்துளாடுவார்திருமுன்பு=அப்பெண்ணை அம்ப
லத்தில்ஆடுகின்ற நடேசரதுசந்நிதியில்;பாங்கினுடன்கொடுவந்து=சிறப்புடன்
அழைத்துவந்து அங்கு; பண்ணடைவுபயில்பாடல்=பண்களின் முறைதழுவுகி
ன்ற திருநெறிப்பனுவல்களை; ஓங்கருளான்முறைபணித்தற்கொக்குமென=பெ
ருகுகின்ற திருவருளால் முறையே பாடுவித்தல் தகுதியாமென்று; ஓரோசைநீ
ங்கரியவானின்கணிகழ=ஒரு அசரீரிவாக்கானது நீக்கமில்லாத ஆகாயத்தின்க
ண் உண்டாக; அரசன்கேட்டான்=அதனை அபயகுலசேகரசோழன் கேட்ட
னன்.—எ-று. ஏ-அசை. (௩௩)

மன்னனுக்கு நம்பிக்கு மறையவர்மூ வாயிரவர்
பன்னரிய திருத்தொண்டர் பலமுறையோர்க் குங்கேட்க
வின்னருண்முன் வியந்துரைத்த விவண்முதலா விசைத்தவிசை
தென்னிலமேன் மிகத்தோன்றத் திருவருளாற் றோன்றியதாம்.

(இ-ள்.) மன்னனுக்குநம்பிக்கும்=அங்ஙனம் அபயகுலசேகரசோழனு
க்கும் நம்பியாண்டார்க்கும்;மறையவர்மூவாயிரவர்=தில்லைவாழந்தணர் மூவா
யிரவர்க்கும்; பன்னரியதிருத்தொண்டர்=எண்ணுதற்கரிய திருத்தொண்டர்க
ளுக்கும்; பலதுறையோர்க்குங்கேட்க=இன்னும் பல இடத்திலிருந்து வந்தவ
ருமாகிய யாவர்க்கும் அவ்வசரீரிவாக்குக் கேட்டஅளவில்; இன்னருண்முன்விய
ந்துரைத்த=இனிய திருவருள் அபயகுலசேகரசோழர் முதலாயினோர்முன் அ
திசயிக்கச்சொல்லிய; இவண்முதலாவிசைத்தவிசை=இப்பாடினியே அவ்வி
சைக்கு முதல்வியாகப்பாடிய இசைத்திறமானது; தென்னிலமேன்மிகத்தோன்
ற=தென்தேசத்தின்கண் மிகவும் விளங்கும்படி; திருவருளாற்றோன்றியதாம்=
சிவபிரான் திருவருளால் சித்தித்ததாம்.—எ-று. (௩௪)

சொன்னட்ட பாடைக்குத் தொகையெட்டுக் கட்டளையா
மின்னிசையாற் றருந்தக்க ராகத்தேழ் கட்டளையாம்
பன்னுபழந் தக்கராகப் பண்ணின் மூன்றுளதா
முன்னரிய தக்கேசிக் கோரிரண்டு வருவித்தார்.




சோழரும் நம்பியாண்டாரும் இத்திருமுறைகளுக்கு இசைதந்தருளவேண்டுமென்று நடேசனைத் துதிக்க இசைநூலில்வல்ல திருநீலகண்டத்தியாழ்ப்பாணர் மரபில் ஓர்பெண்ணுக்கு இவ்விசைகள் கற்பித்தருளினோமென்றும் அப்பெண்ணைக் கனகசபையில் வருவித்து இப் பாடச்செய்யுமென்றும் அசரீரிவாக்காக நடேசப்பிரான் கட்டளையிட அவ்வாறே நடத்திக்கேட்டு ஆனந்தமடைந்தது.

(இ-ள்.) சொன்னட்டபாடைக்குத்தொகையெட்டுக்கட்டளையாம்—பாடாநின்ற நட்டபாடையென்னும் பண்ணுக்குத் தொகுத்தது எட்டுக்கட்டளையாகும்; இன்னிசையாற்றருந்தக்கராகத்தேழ்கட்டளையாம்—மதுரமுள்ள இசையோடுபொருந்திய தக்கராகமென்னும் பண்ணுக்கு ஏழுகட்டளையாகும்; பன்னுபழந்தக்கராகப்பண்ணின்மூன்றுளதாம்—சொல்லுகின்ற பழந்தக்கராகப்பண்ணுக்கு மூன்றுகட்டளையுள்ளனவாம்; உன்னரியதக்கேசிக்கோரிரண்டுவருவித்தார்—எண்ணுதற்கரிய தக்கேசிப்பண்ணுக்கு இரண்டுகட்டளையாக வருவித்தனர்.—எ-று. (ருரு)

மேவுகுறிஞ் சிக்கஞ்சு வியாழக்குறிஞ் சிக்காறு
பாவுபுகழ் மேகரா கக்குறிஞ்சிப் பாலிரண்டு
தேவுவந்த விந்தளத்தின் செய்திக்கு நான்கினிய
தாவில்புகழ்க் காமரத்தின் றன்மைதனக் கிரண்டமைத்தார்.

(இ-ள்.) மேவுகுறிஞ்சிக்கஞ்சு—நன்மைபொருந்திய குறிஞ்சிப்பண்ணுக்கு ஐந்துகட்டளையும்; வியாழக்குறிஞ்சிக்காறு—வியாழக்குறிஞ்சிப்பண்ணுக்கு ஆறுகட்டளையும்;பாவுபுகழ்மேகராகக்குறிஞ்சிப்பாலிரண்டு—பரந்த புகழுள்ள மேகராகக்குறிஞ்சிப்பண்ணுக்கு இரண்டுகட்டளையும்; தேவுவந்தவிந்தளத்தின் செய்திக்குநான்கு—சிவபிரான் விரும்புகின்ற இந்தளப்பண்ணுக்கு நான்குகட்டளையும்; இனியதாவில்புகழ்க்காமரத்தின்றன்மை தனக்கிரண்டமைத்தார்—குற்றமற்ற சீருள்ள மதுரமான காமரமென்னும் பண்ணுக்கு இரண்டுகட்டளையுமாக அமைத்தனர்.—எ-று. (ருசு)

காந்தார மாகிய பியந்தையாங் கட்டளைக்கு
வாய்ந்தவகை மூன்றாக்கி வன்னட்ட ராகத்தி
லேய்ந்தவகை யிரண்டாக்கிச் செவ்வழியொன் றாக்கியிசைக்
காந்தார பஞ்சமத்தின் கட்டளைமூன் றாக்கினார்.

(இ-ள்.) காந்தாரமாகியபியந்தையாங்கட்டளைக்கு—பியந்தைக்காந்தாரமென்னும் பண்ணுக்கு; வாய்ந்தவகைமூன்றாக்கி—பொருந்திய கட்டளைவகை மூன்றும்; வன்னட்டராகத்திற்கு—வன்மையான நட்டராகத்திற்கு; ஏய்ந்தவகையிரண்டாக்கி—கட்டளைவகை இரண்டும்; செவ்வழியொன்றாக்கி—செவ்வழிப்பண்ணுக்குக் கட்டளை ஒன்றும்; இசைக்காந்தாரபஞ்சமத்தின்—காந்தாரபஞ்சமமென்னும் பண்ணுக்கு; கட்டளைமூன்றாக்கினார்—கட்டளைவகை மூன்றுமாக அளவிட்டனர்.—எ-று. (ருஎ)

கொல்லிக்கு நாலாக்கிக் கவுசிகத்துக் கூறும்வகை
சொல்லிலிரண் டாக்கிமிகு தூங்கிசைசேர் பஞ்சமத்திற்
கொல்லையினி லொன்றாக்கிச் சாதாரிக் கொன்பதாப்
புல்லுமிசை புறநீர்மைக் கொன்றாகப் போற்றினார்.

(இ-ள்.) கொல்லிக்குநாலாக்கி—கொல்லிப்பண்ணுக்கு நான்கும்; கௌசிகத்துக்கூறும்வகைசொல்லிரண்டாக்கி—கௌசிகப்பண்ணுக்கு உள்ளவகையைச் சொல்லுங்கால் இரண்டும்; மிகுதூங்கிசைசேர்பஞ்சமத்திற்கு—மிகுந்த தூங்கல் இசைபொருந்திய பஞ்சமத்திற்கு; ஒல்லையினிலொன்றாக்கி—தடைபடாத ஒன்றும்; சாதாரிக்கொன்பதா—சாதாரிப்பண்ணுக்கு ஒன்பதும்; புல்லுமிசைப்புறநீர்மைக்கு—இசைதழுவிய புறநீர்மைக்கு; ஒன்றாகப்போற்றினார்—ஒன்றுமாகக் கட்டளைகள் பொருத்தினர்.—எ-று. (௩௮)

அந்தாளிக் கொன்றாக்கி வாகீச ரருந்தமிழின்
முந்தாய பலதமிழுக் கொன்றொன்று மொழிவித்து
நந்தாத நேரிசையாங் கொல்லிக்கு நாட்டிலிரண்
டுந்தாமின் குறுந்தொகைக்கோர் கட்டளையா விரித்துரைத்தார்.

(இ-ள்.) அந்தாளிக்கொன்றாக்கி—அந்தாளியென்னும் பண்ணுக்குக்கட்டளையொன்றாகவும் அமைத்து (இவை ஆளுடையபிள்ளையார் திருமுறைப்பதிகங்கட்கு;) வாகீசரருந்தமிழின்—அப்பர்சுவாமிகளது அருமைத்திருமுறையுள்; முந்தாயபலதமிழுக்கு—முதன்மையான பல திருப்பதிகங்களின் பண்களுக்கு; ஒன்றொன்றுமொழிவித்து—ஒவ்வொருகட்டளையாக அமைத்து; நந்தாதநேரிசையாங்கொல்லிக்குநாட்டிலிரண்டு—நிலைபெற்ற நேரிசைக்கொல்லிக்கு நிச்சயிக்குமிடத்து இரண்டுகட்டளையும்; உந்தாமின்குறுந்தொகைக்கு—இனிதாயொலிக்கின்ற குறுந்தொகைக்கு; ஓர்கட்டளையாவிரித்துரைத்தார்—ஒருகட்டளையுமாக விரித்தனர்.—எ-று. (௩௯)

தாண்டகமாம் பாவுக்கோர் கட்டளையாத் தாபித்தங்
காண்டகையார் தடுத்தாண்ட வையரரு டெய்முறைக்
கிண்டிசைசே ரிந்தளத்துக் கிரண்டாக வெடுத்துரைத்து
நீண்டதக்க ராகத்துக் கிரண்டாக நிகழ்வித்தார்.

(இ-ள்.) தாண்டகமாம்பாவுக்கோர்கட்டளையாத்தாபித்து—திருத்தாண்டகமென்னும் பதிகத்திற்கு ஒருகட்டளையாக நிச்சயித்து; அங்காண்டகையார்தடுத்தாண்டவையரருடெய்முறைக்கு—(திருவெண்ணெய்நல்லூரில்) அருளாளராகிய சிவபிரான் தடுத்தாட்கொண்டருளின சுந்தரமூர்த்திசுவாமிகள் ஓதிய திருமுறையுள்; ஈண்டிசைசேரிந்தளத்துக்கிரண்டாகவெடுத்துரைத்து—மிக்க இசைதழுவிய இந்தளத்திற்குக் கட்டளை இரண்டாக எடுத்துச்சொல்லி; நீண்டதக்கராகத்துக்கிரண்டாகநிகழ்வித்தார்—வளர்கின்ற தக்கராகத்துக்குக் கட்டளை இரண்டாக நிகழ்வித்தனர்.—எ-று. (௪0)

கூறரிய நட்டரா கத்திரண்டு கொல்லிக்கு
வேறுவகை மூன்றாக மிகுத்தபழம் பஞ்சுரத்துக்
கேறும்வகை யிரண்டாக்கி யின்னிசைசேர் தக்கேசிப்
பேறிசையா றாக்கியதிற் காந்தாரம் பிறிதிரண்டாம்.

(இ-ள்.) கூறரியநட்டராகத்திரண்டு—சொல்லுதற்கரிய நட்டராகத்திற்குக் கட்டளை யிரண்டாகவும்; கொல்லிக்குவேறுவகைமூன்றாக—கொல்லிப்பண்ணுக்கு வெவ்வேறுவகையால் மூன்றாகவும்; மிகுத்தபழம்பஞ்சுரத்துக்கேறும் வகையிரண்டாக்கி—இனிமைமிக்க பழம்பஞ்சுரத்திற்கு ஏற்றவகை இரண்டாகவும் ஏற்படுத்தி; இன்னிசைதேர்தக்கேசிப்பேறிசையாறாக்கி—இனிய இசை முற்றிய தக்கேசிக்கு ஆறாக்கி; அதிற்காந்தாரம்பிறித்திரண்டாம்—அதில்நின்றும் காந்தாரப்பண்ணானது பிரிக்கப்பட்டு இரண்டுவகையாம்.—எ-று. (௪௧)

ஒன்றாகுங் காந்தார பஞ்சமத்துக் கோரிரண்டா
நன்றான சீர்நட்ட பாடைக்கு நவின்றுரைக்கிற்
குன்றாத புறநீர்மைக் கிரண்டாகுங் கூறுமிசை
யொன்றாகக் காமரத்துக் கொன்றாகப் போற்றினார்.

(இ-ள்.) ஒன்றாகுங்காந்தாரபஞ்சமத்துக்கு—காந்தாரபஞ்சமத்திற்கு இசை ஒன்றாகவும்; ஓரிரண்டாநன்றானசீர்நட்டபாடைக்கு—நன்மையமைந்த சீர்மையுள்ள நட்டபாடையென்னும் பண்ணுக்கு இசை இரண்டாகவும்; நவின்றுரைக்கிற்குன்றாதபுறநீர்மைக்கிரண்டாகும்—ஆராய்ந்து சொல்லுமிடத்துக் குன்றுதலில்லாத புறநீர்மைப்பண்ணுக்கு இரண்டாகவும்; கூறுமிசையொன்றாகக்காமரத்துக்கு—சொல்லாநின்ற காமரப்பண்ணுக்கு ஒன்றாகவும்; ஒன்றாகப்போற்றினார்—பொருத்தமாக நிருமித்தனர்.—எ-று. (௪௨)

உற்றவிசைக் குறிஞ்சிக்கோ ரிரண்டாக வகுத்தமைத்துப்
பற்றரிய செந்துருத்திக் கொன்றாக்கிக் கவுசிகப்பாற்
றுற்றவிசை யிரண்டாக்கித் தூயவிசைப் பஞ்சமத்துக்
கற்றவிசை யொன்றாக்கி யரனருளால் விரித்தமைத்தார்.

(இ-ள்.) உற்றவிசைக்குறிஞ்சிக்கோரிரண்டாகவகுத்தமைத்து—குறிஞ்சிப்பண்ணுக்கு அமைந்த இசை இரண்டாகவகுத்து; பற்றரியசெந்துருத்திக்கொன்றாக்கி—எண்ணுதற்கரிய செந்துருத்தியென்னும் பண்ணுக்கு இசைஒன்றாக்கி; கவுசிகப்பாற்றுற்றவிசையிரண்டாக்கி—கௌசிகப்பண்ணுக்குப்பொருந்திய இசை இரண்டாக்கி; தூயவிசைப்பஞ்சமத்துக்கற்றவிசையொன்றாக்கி—நுட்பமான பஞ்சமப்பண்ணுக்கு உரித்தான இசை ஒன்றாக்கி; அரனருளால்விரித்தமைத்தார்—சிவபிரான் திருவருளால் பண்ணடைவு விளங்கும்படி யமைத்தனர்.—எ-று. (௪௩)

முன்கட்டளை என்றது விருத்தபேதத்தையாதலின் ஈண்டு இசையென்றதும் அதனையே என்க.

இந்தவகைச் சிவன்செவிப்பா லெக்கண்ணுந் தழைத்தோங்க
வந்தமிலா வறுபத்து மூவரரு ளம்புவிமே
னந்தியிட மும்மலமு நல்லுலகோர் நீங்கியிடச்
சிந்தையருட் சிவமாகத் தெளிவித்தா னருட்சென்னி.

(இ-ள்.) இந்தவகைச்சிவன்செவிப்பால்=இவ்வகையாகச் சிவபிரான் திருச்செவிக்கேற்க; எக்கண்ணுந்தழைத்தோங்க=எத்திசையும்பெருகவும்; அந்தமிலாவறுபத்துமூவரருள்=அழிவில்லாத அறுபத்துமூன்றுநாயன்மார்களது திருவருள்; அம்புவிமேனந்தியிட=அழகிய உலகின்கண் வியாபிக்கவும்: மும்மலமுநல்லுலகோர்நீங்கியிட=நிலையுலகத்தின்கண் உயிர்கள் மலரகிதமாகி முத்திபெறவும்; சிந்தையருட்சிவமாகத்தெளிவித்தான்=சிந்தையானது அருள்மேனியாகிய சிவாகாரமாகநின்று யாவரையுங் கடத்தேற்றுவித்தனன்; அருட்சென்னி=சிவகாருண்ணியத்தையுடைய அபயகுலசேகரசோழன்.—எ-று. (

சீராருந் திருமுறைகள் கண்டதிறற் பார்த்திபனு
மேராரு மிறைவனையு மெழிலாரு நம்பியையு
மாராத வன்பினுட னடிபணிந்தங் கருள்விரவச்
சோராத காதன்மிகுந் திருத்தொண்டர் பதந்துதிப்பாம்.

(இ-ள்.) சீராருந்திருமுறைகள்கண்டதிறற்பார்த்திபனும்=சிறப்புமிக்க திருமுறைகளையெடுத்துத் தந்தருளிய பத்திவயிராக்கியமுள்ள அபயகுலசேகரசோழனுகிய; ஏராருமிறைவனையும்=அருள்நிறைந்த முதல்வனையும்; எழிலாருநம்பியையும்=சிவஞானமிக்க நம்பியாண்டாரையும்; ஆராதவன்பினுடனடிபணிந்து=இடையறாத உள்ளன்புடனே திருவடிகளில்வணங்கி; அங்கருள்விரவச்சோராதகாதன்மிகும்=அப்பிறப்பின்கண் திருவருள் பொருந்தும்படிச் சோர்வில்லாத சிவநேசமிக்க; திருத்தொண்டர்பதந்துதிப்பாம்=திருத்தொண்டர் பாதங்களைத் துதிசெய்வாம்.—எ-று. (சரு)

திருமுறைகண்டபுராணம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - சரு.

---

# திருத்தொண்டர்புராணசாரம்.

மல்குபுகழ் வன்றொண்ட ரருளாலீந்த வளமருவு திருத்தொண்டத் தொகையின் வாய்மை, நல்கும்வகை புல்கும்வகை நம்பியாண்டார் நம்பிதிரு வந்தாதி நவின்றவாற்றாற், பல்குநெறித் தொண்டர்சீர் பரவவல்ல பான்மையா ரெமையாளும் பரிவால்வைத்த, செல்வமிகுந் திருத்தொண்டர் புராணமேவுந் திருந்துபய னடியேனுஞ் செப்பலுற்றேன்.

(இ-ள்.) மல்குபுகழ்வன்றொண்டரருளாலீந்த=மிக்க புகழையுடைய நம்பியாரூரர் சிவபிரான் திருவருளினாலருளிய; வளமருவுதிருத்தொண்டத்தொகையின்=சொல்வளமமைந்த திருத்தொண்டத்தொகைக்கு; வாய்மைநல்கும்வகைபுல்கும்வகை=மெய்ம்மையைத்தரும் வகையைப் பொருந்தும்வண்ணம்; நம்பியாண்டார்நம்பிதிருவந்தாதிநவின்றவாற்றால்=நம்பியாண்டார்நம்பியென்னும் பெரியோர் திருவந்தாதியாக அருளிய முறைமையால்; பல்குநெறித்தொண்டர்சீர்பரவவல்லபான்மையார்=பரம்பிய பத்திநெறியை யனுட்டித்த அறுபத்துமூன்று திருவடியாரது புகழைத் துதிக்கவல்ல மேன்மையையுள்ள சேக்கிழார்நாயனார்; எமையாளும்பரிவால்வைத்த=எம்மை யடிமைக்கொள்ளுங் கருணையால் விரிவாகப்பாடியருளிய; செல்வமிகுந்திருத்தொண்டர்புராணமேவும்=திருவருட்செல்வமிகுந்த திருத்தொண்டர்புராணத்தின்கணுள்ள; திருந்துபயனடியேனுஞ்செப்பலுற்றேன்=திருத்தமான சாரத்தை அடியேனுஞ் சொல்லத் தொடங்கினேன்.—எ-று. (க)

## நம்பியாரூரர்புராணம்.

தண்கயிலை யதுநீங்கி நாவலூர்வாழ் சைவனார் சடையனார் தனயனாராய், மண்புகழ வருட்டுறையா னோலைகாட்டி மணம்விலக்க வன்றொண்டா யதிகைசேர்ந்து, நண்பினுட னருள்புரிய வாரூர்மேவி நலங்கிளரும் பரவைதோ ணயந்துவைகித், திண்குலவும் விறன்மிண்டர் திறல்கண்டேத்துந் திருத்தொண்டத் தொகையருளாற் செப்பினாரே.

(இ-ள்.) தண்கயிலையதுநீங்கி=ஆலால்சுந்தரர் தட்பமான திருக்கயிலையைநீங்கி; நாவலூர்வாழ்சைவனார்சடையனார்தனயனாராய்=திருநாவலூரின்கண்வாழ்ந்த ஆதிசைவமறையவராகிய சடையனாருக்குப் புத்திரராயவதரித்து; மண்புகழவருட்டுறையானோலைகாட்டி=நிலவுலகத்தார் துதிக்கும்படி திருவருட்டுறையென்னும் ஆலயத்தில் வீற்றிருந்தருளும் சிவபிரான் அடிமைச்சீட்டைக்காட்டி; மணம்விலக்கவன்றொண்டாயதிகைசேர்ந்து=இவன் எமக்கடியானென்று திருமணத்தைத்தவிர்க்க அதனால் வன்றொண்டனென்னும் திருநாமத்தைப்பெற்றுத் திருவதிகையடைந்து; நண்பினுடனருள்புரியவாரூர்மேவி=பிரானார்முன் நமக்குத் தொண்டனென்னும் பெருங்கருணையோடு திருவடிசூட்டியருளத் திருவாரூரையடைந்து அங்கு; நலங்கிளரும்பரவைதோணயந்துவைகி=நன்மைமிக்க பரவையாரது தோளைத்தழுவியனுபவித்து அங்கு வசித்து; திண்குலவும்விறன்மிண்டர்திறல்கண்டு=பத்திவலியால் விளங்கிய விறன்மிண்டநா

யனாரது உறுதிப்பாடான மெய்யன்பைக்கண்டு; எத்துந்திருத்தொண்டத்தொகையருளாற்செப்பினார்=அவ்வடியார்களைத் துதிக்கும் திருத்தொண்டத்தொகையென்னும் திருப்பதிகத்தைச் சிவபிரான் திருவருளாலருளிச்செய்தார்.—எ-று. ஏ-அசை. (௨)

ஈண்டுத்திறலென்றது திருக்கூட்டம் இருவர்க்கும் புறம்பென்றெடுத்தோதியதை.

செப்பலருங் குண்டையூர் நெல்லழைத்துத் திருப்புகலூர்ச் செங்கல்செழும் பொன்னாச்செய்து, தப்பின்முது குன்றர்தரும் பொருளாற்றிட்டுத் தடத்தெடுத்துச் சங்கிலிதோள் சார்ந்துநாத, னைப்பிறனித் தூதுவந்தா றூடுகீறி யுறுமுதலை சிறுமதலை யுமிழநல்கி, மெய்ப்பெரிய களிறேறி யருளாற்சேர வேந்தருடன் வடகயிலை மேவினாரே.

(இ-ள்.) செப்பலருக்குண்டையூர்நெல்லழைத்து=அளவுபடாத குண்டையூரின்கணுள்ள நென்மலையைப் பரவையார் மனைக்கு அழைப்பித்து; திருப்புகலூர்ச்செங்கல்செழும் பொன்னாச்செய்து=திருப்புகலூரின்கணுள்ள சிலதிருப்பணிச்செங்கல்லை மாற்றுயர்ந்த பொன்னாகச்செய்து; தப்பின்முதுகுன்றர்தரும்பொருளாற்றிட்டுத்தடத்தெடுத்து=தவறின்றித் திருமுதுகுன்றர் கொடுக்கும்பொருளை மணிமுத்தாற்றிலிட்டுக் கமலாலயமென்னும் வாவியிலெடுத்துப் பின்; சங்கிலிதோள்சார்ந்து=திருவொற்றியூரில் சங்கிலிநாச்சியாரது தோளைத்தழுவிப்பின்; நாதனைப்பிறனித்தூதுவந்து=(பரவையார் பிணக்குநீக்கச்) சிவபிரானை ஒப்பற்ற ஓர்தூதராக அனுப்பிப்பின்பு; ஆறூடுகீறி=திருவையாற்றுக் காவிரிநதியை விலகும்படி நடுவேசென்று; உறுமுதலைசிறுமதலையுமிழநல்கி=புக்கொளியூரின்கண் பதிகத்தால் தடத்திற்றோன்றிய முதலை முன்தான் விழுங்கிய மறைச்சிறுவனைக் கக்கும்படிசெய்து பின்; சேரவேந்தருடன்மெய்ப்பெரியகளிறேறி=திருவஞ்சைக்களத்தில் சேரமான்பெருமாணாயனாருடன் மெய்ம்மையாகப் பெரிய வெள்ளானைமீதெழுந்தருளி; அருளால்வடகயிலைமேவினார்=சிவபிரான் திருவருளினால் வடக்கின்கணுள்ள திருக்கயிலையை அடைந்தார்.—எ-று. ஏ-அசை. (௩)

## தில்லைவாழந்தணர்புராணம்.

நல்லவா னவர்போற்றுந் தில்லைமன்று ணாடகஞ்செய் பெருமானுக் கணியார்நற்பொற், றில்லைவான் பணியெடுத்தற் குரியார்வீடுந் துறந்தநெறி யார்தொண்டத் தொகைமுன்பாடத், தில்லைவா ழந்தணரென் றெடுத்துநாதன் செப்புபரு ளுடையார்முத் தீயார்பத்திக், கெல்லைகாண் பரியாரொப் புலகிற்றாமே யேய்ந்துளா ரெமையாள வாய்ந்துளாரே.

(இ-ள்.) நல்லவானவர்போற்றுந்தில்லைமன்றுள்=தில்லைமூவாயிரமறையவர் சிறப்பமைந்த தேவர்கள் துதிக்கும் கனகசபையின்கண்; நாடகஞ்செய்பெருமானுக்கணியார்=நிருத்தஞ்செய்தருளுகின்ற சிவபிரானுக்கு அணுக்கராய்த் தொண்டுபூண்டவர்; நற்பொற்றில்லைவான்பணியெடுத்தற்குரியார்=நல்ல

சிறந்த பழமையான பெரிய கவரி குடை ஆலவட்டம் முதலிய பொருள்களைப் பணிமாறுதற்குரியவர்கள்; வீடுந்துறந்தநெறியார்=பற்றற்றாரால் விரும்புஞ் சிறப்புடைய வீட்டையும் விரும்பாத பத்திநெறியுடையவர்கள்; தொண்டத்தொகைமுன்பாட=முன்னே திருத்தொண்டத்தொகையைப் பாடும்படிக்கு; நாதன்றில்லைவாழந்தணரென்றெடுத்துச் செப்புமருளுடையார்=புற்றிடங் கொண்டார் தில்லைவாழந்தணரென்னும் முதலடியெடுத்தருளும் திருவருளைப்பெற்றவர்கள்; முத்தீயார்=மூன்றக்கினியையுடையவர்கள்; பத்திக்கெல்லைகாண்பரியார்=தாம்செய்யும் பத்தியின்வரம்பை யாவராலும் காணுதற்கரியவர்கள்; ஒப்புலகிற்றமேயேய்ந்துளார்=உலகில் தமக்கொப்புத்தாமேயாயுள்ளவர்கள்;எமையாளவாய்ந்துளார்=எம்மை யடிமைக்கொள்ளுதற்கேதுவாகத் திருவுருக்கொண்டவர்கள்.—எ-று. ஏ-அசை. (எ)

## திருநீலகண்டநாயனார்புராணம்.

தில்லைநகர் வேட்கோவர் தூர்த்தராகித் தீண்டிலெமைத் திருநீலகண்டமென்று,சொல்லுமனை யாடனையே யன்றிமற்றுந் துடியிடையா ரிடையின்பந் துறந்துமூத்தங், கெல்லையிலோ டிறைவைத்து மாற்றிநாங்க ளெடுத்திலமென் றியம்புமென விழிந்துபொய்கை, மெல்லியலா ளுடன்மூழ்கி யிளைமையெய்தி விளங்குபுலீச் சரத்தரனை மேவினாரே.

(இ-ள்.) தில்லைநகர்வேட்கோவர்தூர்த்தராகி=சிதம்பரத்தின்கண்வாழும் குயவர்குலத்திற்பிறந்த திருநீலகண்டநாயனார் காமுகராய்ப் (பரத்தைபாற்சென்ற துணர்ந்தாடி;) தீண்டிலெமைத் திருநீலகண்டமென்றுசொல்லும்=எம்மைநீர் தீண்டினால் சிவபிரான் திருநீலகண்டத்தின் திருவாணையுளதென்று கூறும்; மனையாடனையேயன்றிமற்றுந்துடியிடையாரிடையின்பந் துறந்துமூத்து=தம்மனையாளின்பத்தையேயன்றிப் பிறமாதர்களிடத்துள்ள இன்பத்தையும் நீக்கி அங்ஙியமமுடையராய் மூப்படைந்து;அங்குஎல்லையிலோடிறைவைத்துமாற்றி=அவ்வாறொழுகும்நாளில் அளவுபடாதபெருமையினையுடைய திருவோடொன்றைச் சிவபிரான் சிவயோகிவடிவங்கொண்டு அவரிடத்துக்கொடுத்துப்பின் அதைக் காவலாகவைத்த இடத்தினின்றும் மறைத்து; நாங்களெடுத்திலமென்றியம்புமென=சிலநாள் கழித்துவந்து கேட்டு அதுகாணாமையால் நாம் எடுக்கவில்லையென்று கூறுங்களென்று கேட்க; பொய்கையிழிந்துமெல்லியலாளுடன்மூழ்கியிளமையெய்தி=புலீச்சரவாவியில் தம்மனையாளோடு மூழ்கி இளமையடைந்து; விளங்குபுலீச்சரத்தரனைமேவினார்=புகழ்விளங்குகின்ற திருப்புலீச்சரத்தின்கண் வீற்றிருந்தருளும் சிவபிரான் திருவருளையடைந்தார்.—எ-று.ஏ-அசை.

## இயற்பகைநாயனார்புராணம்.

எழிலாருங் காவிரிப்பூம் பட்டினத்து ளியல்வணிக ரியற்பகையா ரிருவர்தேட,வழலாயபிரான்றூர்த்த மறையோனாகி யாயிழையைத் தரவேண்டி யணையவையன், கழலாரப் பணிந்துமனைக் கற்பின்மேன்மைக் காதலியைக் கொடுத்தமர்செய் கருத்தால்வந்த, பிழையாருஞ் சுற்றமெலாந் துணித்துமீளப் பின்னுங்க ளழைத்தருளப் பெற்றுளாரே.

(இ-ள்.) எழிலாருங்காவிரிப்பூம்பட்டினத்துள்=அழகுவளருங் காவிரிப்பூம்பட்டினத்துள் வாழ்ந்த; இயல்வணிகரியற்பகையார்=ஒழுக்கமமைந்த வணிகர்குலத்திலவதரித்த இயற்பகைநாயனார்; இருவர்தேடவழலாயபிரான்=திருமால் பிரமன் என்னும் இருவரும் முன்னாள் தேடும்படிக்கு ஒளிப்பிழம்பாய் நீடிய சிவபிரான்; தூர்த்தமறையோனாகி=தூர்த்தவேடங்கொண்ட ஓர் மறையவனாய்த் திருமேனிதாங்கி; ஆயிழையைத்தரவேண்டியணைய=அவர் மனைவியாரைக்கேட்க விரும்பிவர; ஐயன்கழலாரப்பணிந்து=அப்பிரானார் திருவடிகளில் முடியுறவணங்கி; மனைக்கற்பின்மேன்மைமிக்காதலியைக்கொடுத்து=மனையறத்திற்குரிய கற்பிற்சிறந்த தம்மனைவியைக்கொடுத்து; அமர்செய்கருத்தால் வந்த=அதுகாரணமாய்ப் போர்செய்யும் எண்ணத்தோடு திரண்டுவந்த; பிழையாருஞ்சுற்றமெலாந்துணித்து=தங்கருத்துக்குப்பிழைத்த உறவினரையெல்லாம் வாளால்வெட்டி; மீளப்பிஞ்ஞகனழைத்தருளப்பெற்றுளார்=மீண்டு மனைக்குவருங்கால் சிவபிரான் அழைத்துக் காட்சிகொடுக்கப்பெற்றவர்.—எ-று. (சு)

ஏ-அசை.

## இளையான்குடிமாறநாயனார்புராணம்.

மன்னியவே ளாண்டொன்மை யிளசைமாறர் வறுமையா லுணவுமிக மறந்துவைகி, யுன்னருநள் ளிருண்மழையி லுண்டிவேண்டி யும்பர்பிரா னணையவய லுழுதுவித்துஞ், செந்நென்முளை யமுதுமனை யலக்காலாக்கிச் சிறுபயிரின் கறியமுது திருந்தச்செய்து, பன்னலரு மூணவருந்தற் கெழுந்தசோதிப் பரலோக முழுதாண்ட பான்மையாரே.

(இ-ள்.) மன்னியவேளாண்டொன்மை யிளசைமாறர்=நிலைபெற்ற பழைய வேளாண்குடிப்பிறப்பினையுடைய இளையான்குடிமாறநாயனார்; வறுமையாலுணவுமிகமறந்துவைகி=இலம்பாட்டால் உண்ணும் உணவின்றி மிகப்பசித்திருந்து; உன்னருநள்ளிருண்மழையிலுண்டிவேண்டியும்பர்பிரானணைய=நினைத்தற்கரிய கூர்த்த இருளோடுகூடிய மழைக்காலத்து உணவைவிரும்பிச் சிவபிரான் அடியார்வேடங்கொண்டு எழுந்தருள; வயலுழுதுவித்துஞ்செந்நென்முளை=அன்று வயலையுழுது விதைத்த சம்பாநென் முளைகளை; அமுதுமனையலக்காலாக்கி=மனையலக்கால் திருவமுதாகச்செய்வித்து; சிறுபயிரின்கறியமுது திருந்தச்செய்து=குழிநிரம்பாத புன்செய்ப்பயிரின் கீரையாலாகிய கறியமுதைத் திருத்தமாகச்சமைத்து; பன்னலருமுணவருந்தற்கெழுந்தசோதி=பாகமமைந்த திருவமுதுசெய்யும்படிக்குத் துயினீங்கியெழுந்த ஒளிப்பிழம்பாகிய சிவபிரானது; பரலோகமுழுதாண்டபான்மையார்=சிவலோகமுழுதையும் ஆளுமியல்புடையவர்.—எ-று. ஏ-அசை. (எ)

## மெய்ப்பொருணாயனார்புராணம்.

சேதிபர்நற் கோவலூர் மலாடமன்னர் திருவேட மெய்ப்பொருளாத் தெளிந்தசிந்தை, நீதியினா ருடன்பொருது தோற்றமாற்றா னெஞ்சினமுங் கொடும்படையு நிகழாவண்ண, மாதவர்போ லெராருமு

றைகொண் டணுகிவாளால் வன்மைபுரிந் திடமருண்டு வந்ததத்தன்,
காதலுற நமர்தத்தா வென்றுநோக்கிக் கடிதகல்வித் திறைவனடி கைக்
கொண்டாரே.

(இ-ள்.) சேதியர்நற்கோவலூர்மலாடமன்னர்=சேதிநாட்டுக்கதிபரும் திருக்கோவலூரின்கண்வாழ்ந்த மலையாளதேசத்தரசருமாகிய; திருவேடமெய்ப்பொருளாத்தெளிந்தசிந்தைநீதியினார்=மெய்ப்பொருணாயனார்; உடன்பொருதுதோற்றமாற்றான்=தன்னுடன் போர்செய்து தோல்வியடைந்த முத்தநாதன்; நெடுஞ்சினமுங்கொடும்படையுநிகழாவண்ணம்=கடிய சினமுங் கொடியபடையும் தன்னையடையாமல்; மாதவர்போலொருமுறைகொண்டணுகிவாளால்வன்மைபுரிந்திட=பெரிய தவத்தினர்போல வேடங்கொண்டு ஒருபுத்தகக்கவளிகையைக் கையிலெடுத்துவந்து அதனுட்கரந்த ஓர் குற்றுடைவாளினால் நலிவுசெய்ய; மருண்டுவந்ததத்தன்காதலுற=அதுகண்டு மனமயங்கி விரைந்துவந்த தத்தனென்பவன் அவனைக் கொல்லவர; நமர்தத்தாவென்றுநோக்கிக்கடிதகல்வித்து=தத்தனே இவர் நம்பெரியவரென்று பார்த்துக் கொல்லாமல் விரைந்து அவ்வூருக்குப் புறம்புகொண்டுபோய் விடும்படிசெய்து; இறைவனடிகைக்கொண்டார்=சிவபிரான் திருவடியையடைந்தார்.—எ-று. ஏ-அசை. (௮)

## விறன்மிண்டநாயனார்புராணம்.

விளங்குதிருச் செங்குன்றூர் வேளாண்டொன்மை விறன்மிண்
டர் திருவாரூர் மேவுநாளில், வளங்குலவு தொண்டரடி வணங்காதே
கும் வன்றொண்டன் புறகவனை வலியவாண்ட, துளங்குசடை முடி
யோனும் புறகென்றன்பாற் சொல்லுதலு மவர்தொண்டத் தொகை
முன்பாட, வுளங்குளிர வுளதென்றா ரதனாலண்ண லுவகைதர வுயர்
கணத்து ளோங்கினாரே.

(இ-ள்.) விளங்குதிருச்செங்குன்றூர் வேளாண்டொன்மை=புகழ்விளங்கிய திருச்செங்குன்றூரின்கண் அவதரித்த பழைய வேளாண் குடிப்பிறப்பினராகிய; விறன்மிண்டர்திருவாரூர்மேவுநாளில்=விறன்மிண்டநாயனார் தாம் திருவாரூரின்கண் வாழும்நாளில்; வளங்குலவுதொண்டரடிவணங்காதேகும்=திருவருட்செல்வம் விளங்கிய திருத்தொண்டர்கள் திருவடியைத் தொழாது சென்ற; வன்றொண்டன்புறகு=நம்பியாரூரர் அடியார்க்குப்புறம்பு; அவனைவலியவாண்டதுளங்குசடைமுடியோனும்புறகு=அந்நம்பியாரூரனை வலியவந்து தடுத்தாட்கொண்ட விளக்கமாகிய சடைமுடியையுடைய சிவபிரானும் அடியார்க்குப்புறம்பு; என்றன்பாற்சொல்லுதலும்=என்று அன்போடு சொல்லவும்; அவர்தொண்டத்தொகைமுன்பாட=அந்நம்பியாரூரர் திருத்தொண்டத்தொகையை அவர் திருமுன்னே வணங்கிப்பாடியருள; உளங்குளிரவுளதென்றாரதனால்=மனமகிழ்ந்து புறம்பில்லையென்றருளினார் அக்காரணத்தால்; அண்ணலுவகைதரவுயர்கணத்துளோங்கினார்=சிவபிரான் களிகூர்ந்தருள உயர்ந்த சிவகணத்துள் அதிபராய் விளங்கினர்.—எ-று. ஏ-அசை. (௯)

## அமர்நீதிநாயனார்புராணம்.

பழையாறை வணிகரமர் நீதியார்பாற் பரவுசிறு முனிவடிவாய்ப் பயிலுநல்லூர்க், குழைகாதர் வந்தொருகோ வணத்தைவைத்துக் கொடுத்ததனை யெடுத்தொளித்துக் குளித்துவந்து,தொழிலாரு மது வேண்டிவெகுண்டுநீரித் துலையிலிடுங் கோவணநேர் தூக்குமென்ன, வெழிலாரும் பொன்மனைவி யிளஞ்சேயேற்றி யேறினர்வா னுலகு தொழ வேறினரே.

(இ-ள்.) பழையாறைவணிகரமர்நீதியார்பால்=பழையாறையென்னும் ஊரில் அவதரித்த வணிகராகிய அமர்நீதிநாயனாரிடத்து; பயிலுநல்லூர்க்குழைகாதர்=நல்லூரின்கண்வாழும் குழையணிந்த காதையுடைய சிவபிரான்; பரவுசிறுமுனிவடிவாய்வந்து=வழிபடுதற்குரிய சிறிய பிரமசாரிவடிவமாய்வந்து; ஒருகோவணத்தைவைத்து=தான் தரிக்கும்படி வைத்திருந்த கோவணமிரண்டனுள் ஒன்றை அவரிடத்துக்கொடுத்து; கொடுத்ததனையெடுத்தொளித்துக்குளித்துவந்து=கொடுத்த அக்கோவணத்தைத் தன் ஆணையால் எடுத்துமறைத்து நீராடிவந்து; தொழிலாருமதுவேண்டிவெகுண்டு=உடுத்தற்றொழிலுக்குரிய அக்கோவணத்தைக்கேட்டு அதுகொடாமையால் அவரைமுனிந்து; நீரித்துலையிலிடுங்கோவணநேர்தூக்குமென்ன=நீர்தூக்கிய இத்தராசில் நானிடும் கோவணத்திற்கு ஒத்த நிறையுள்ள கோவணத்தை நிறுத்துக்கொடுமென்று கேட்க; எழிலாரும்பொன்மனைவியிளஞ்சேயேற்றியேறினர்=அவர் இட்ட கோவணமுதலிய நிறைநில்லாமையால் அழகுள்ள பொருளையும் மனையாளையும் இளையனாகிய புதல்வனையும் அத்துலையிலேற்றித் தாமும்ஏறினார்; வானுலகுதொழவேறினார்=அத்துலையே விமானமாக விண்ணுலகத்தார் வணங்கும்படி சிவபதமெய்தினர். —எ-று. ஏ-அசை. (௧௦)

## எறிபத்தநாயனார்புராணம்.

திருமருவு கருவூரா னிலையார்சாத்துஞ் சிவகாமி யார்மலரைச் சிந்தயானை, யரனெறியோ ரெறிபத்தர் பாகரோடு மறவெறிய வென்னுயிரு மகற்றீரென்று, புரவலனார் கொடுத்தபடை யன்பால்வாங்கிப் புரிந்தரிவான் புகவெழுந்த புனிதவாக்காற், கரியினுடன் விழுந்தாரு மெழுந்தார்தாமுங் கணநாத ரதுகாவல் கைக்கொண்டாரே.

(இ-ள்.) திருமருவுகருவூரானிலையார்சாத்தும்=செல்வமமைந்துள்ள திருக்கருவூர்த் திருவானிலையென்னும் ஆலயத்தின்கண் வீற்றிருந்தருளும் சிவபிரானுக்குத்தரிக்கும்; சிவகாமியார்மலரையானைசிந்த=சிவகாமியாண்டாரது திருப்பூங்கூடையிலுள்ள மலரைப் புகழ்ச்சோழரது பட்டவர்த்தனயானை பறித்துச்சிதற; அரனெறியோரெறிபத்தர்பாகரோடுமறவெறிய=சிவபிரான் திருத்தொண்டுக்குரியோராகிய எறிபத்தநாயனார் அவ் யானையைப் பாகரோடும் அறும்படிவெட்ட; என்னுயிருமகற்றீரென்று=அப்பிழைக்கு என்னுடைய உயிரையும் நீக்குவீரென்று; புரவலனார்கொடுத்தபடையன்பால்வாங்கிப்புரிந்தரிவான்புக=புகழ்ச்சோழர்கொடுத்த உடைவாளை யன்பினோடுவாங்கித் தான் தன் கழுத்தினை யரியப்புகுங்கால்; எழுந்தபுனிதவாக்கால்=(உம்அடிமைத்திறத்தை

வெளிப்படுத்த இவ்வாறு நிகழ்ந்ததென்று) வானின்கணுதித்த தூய்மையான அசரீரிவாக்கெழுந்தவுடன்; கரியினுடன்விழுந்தாருமெழுந்தார்=இறந்த யானையும் பாகரும் உயிர்பெற்றனர்; தாமுங்கணநாததாதுகாவல்கைக்கொண்டார்=அந்த எறிபத்தநாயனாரும் சிவகணத்தலைவராம் முறைமையை அடைந்தார்.—எ-று. ஏ-அசை.

## ஏனாதிநாதநாயனார்புராணம்.

ஈழக் குலச்சான்ற ரெயினனூர்வா ழேனாதி நாதனா ரிறைவனீ
ற்றைத், தாழத் தொழுமரபார் படைகளாற்றுந் தன்மைபெறா வதிசூ
ரன் சமரிற்றோற்று, வாழத் திருநீறு சாத்தக்கண்டு மருண்டார் தெ
ருண்டார் கைவாள்விடார்நேர், வீழக் களிப்பார்போ னின்றேயாக்கை
விடுவித்துச் சிவனருளே மேவினாரே.

(இ-ள்.) ஈழக்குலச்சான்றரெயினனூர்வாழேனாதிநாதனார்=ஈழநாட்டுச் சான்றார்குலத்து அவதரித்த எயினனூரின்கண்வாழ்ந்த ஏனாதிநாதநாயனார்; இறைவனீற்றைத்தாழத்தொழுமரபார்=சிவபிரான் திருவெண்ணீறணிந்த அடியார்களை நிலமுறவணங்கு மியல்புடையவர்; படைகளாற்றுந்தன்மைபெறாவதிசூரன்சமரிற்றோற்று=அவர் தன்னோடு வாட்படையைச் சமமாகப்பயிற்றுந் தொழிலிற் கைவராத வதிசூரனென்பவன் வாட்போரிற் றனக்குத் தோல்வியடைந்து; வாழத்திருநீறுசாத்தக்கண்டு=தானுய்யும்படி அன்று திருநீறு தரித்து வர நோக்கி; மருண்டார்தெருண்டார்கைவாள்விடார்=இவர் அடியார்வேடங் கொண்டனனென்றையுற்று இவராற் கொல்லப்படுவதே நமக்குத்துணிவென்று நிச்சயித்துக் கையின்கட்டாங்கிய வாளைவிடாதவராய்; நேர்வீழக்களிப்பார்போனின்று=அவன்நேரில் இறக்கக்களிப்படையுஞ் சாவானந்தர்போல நின்று; யாக்கைவிடுவித்துச்சிவனருள்மேவினார்=உடம்பை அவனால் நீக்குவித்து அவர் சிவபிரான் திருவருளையடைந்தார்.—எ-று. ஏ-இரண்டும்-அசை. (கஉ)

## கண்ணப்பநாயனார்புராணம்.

வேடரதி பதியுடுப்பூர் வேந்தனாகன் விளங்கியசேய் திண்ணனார்
கன்னிவேட்டைக், காடதில்வாய் மஞ்சனமுங் குஞ்சிதருமலருங் கா
ய்ச்சினமென் றிடுதசையுங் காளத்தியார்க்குத், தேடருமன் பினிலா
று தினத்தளவுமளிப்பச் சீறுசிவ கோசரியுந் தெளியவிழிப்புண்ணீ,
ரோடவொரு கண்ணப்பி யொருகண்ணப்ப வொழிகவெனு மருள்கொ
ட்ரு குறநின்றாரே.

(இ-ள்.) வேடரதிபதியுடுப்பூர்வேந்தனாகன்=வேடர்க்கதிபதியும் உடுப்பூருக்கரசனுமாகிய நாகனென்பவன்பெற்ற; விளங்கியசேய்திண்ணனார்=விளக்கமடைந்த புதல்வராகிய கண்ணப்பநாயனார்; கன்னிவேட்டைக்காடதில்=முதல் வேட்டையாடப்புகுந்த காட்டில்; வாய்மஞ்சனமுங்குஞ்சிதருமலரும்=திருவாயிற்பூரித்த திருமஞ்சனத்தையும் குடுமியிற்சூடிய திருப்பள்ளித்தாமத்தையும்; காய்ச்சினமென்றிடுதசையும்=அம்பிற்கோத்துக் காய்ச்சியமென்று சுவைபார்த்த மாமிசமாகிய திருவமுதையும்; காளத்தியார்க்குத்தேடருமன்பினில்=திருக்காளத்தியப்பருக்கு யாவராலும் அளவுபடுத்தற்கரிய மெய்யன்போடு; ஆறுதினத்

ளவுமளிப்ப—ஆறுநாளளவுங்கொடுக்க; சிறுசிவகோசரியுந்தெளிய—அதைக்க
ண்டு வெகுண்ட சிவகோசரியாரென்னும் சிவவேதியரும் உலகத்தாருந் தெளி
யும்படி; விழிப்புண்ணீரோட—சிவபிரான் திருக்கண்களினின்றும் உதிரநீர்பெ
ருக; ஒருகண்ணப்பியொருகண்ணப்ப—அதற்குத் தம்வலக்கண்ணை யிடந்தப்பி
ப் பின் இடக்கண்ணையு மிடந்தப்பப்புகுங்கால்; ஒழிகவெனுமருள்கொடருகுற
நின்றார்—கண்ணைப்பறிக்க என்று கூறும் அருளாணிகழ்த்திய திருவாக்கைப் பெ
ற்றுக்கொண்டு எந்நாளும் அவரருகில் நீங்காதிருக்கப் பெற்றுக்கொண்டனர்.
—எ-று. ஏ-அசை. (௧௩)

## குங்குலியக்கலயநாயனார்புராணம்.

சீலமலி திருக்கடவூர்க் கலயனாராந் திகழ்மறையோர் பணிவறு
மை சிதையாமுன்னே, தாலியைநெற் கொளவென்று வாங்கிக்கொண்
டு சங்கையில் குங்குலியத்தாற் சார்ந்தசெல்வர், ஞாலநிகழ் திருப்ப
னந்தா ணாதர்நேரே நரபதியுந் தொழக்கச்சா னயந்துபோதப், பால
முத முண்டாரு மரசுமெய்திப் பரிந்தமுது செயவருள்சேர் பான்மை
யாரே.

(இ-ள்.) சீலமலிதிருக்கடவூர்க்கலயனாராந்திகழ்மறையோர்—ஒழுக்கம
மைந்த திருக்கடவூரின்கண் அவதரித்த குங்குலியக்கலயநாயனாரென்னும் புக
ழ்விளங்கும் மறையவர்; பணிவறுமைசிதையாமுன்னே—தாமிடுந் தூபப்பணி
வறுமையாற் கேடடையாமுன்; தாலியைநெற்கொளவென்றுவாங்கிக்கொண்டு—
மனையாள் திருமங்கிலியத்தை நெற்கொள்ளும்படி அம்மனையாளிடத்தில் வாங்
கிக்கொண்டு; சங்கையில்குங்குலியத்தாற் சார்ந்தசெல்வர்—அதைக்கொடுத்து
மாறிய பழுதற்ற குங்குலியத்தாற் றூபமிட்டு அடைந்த செல்வத்தையுடையவர்;
ஞாலநிகழ்திருப்பனந்தாணாதர்—அவர் நிலவுலகத்தாராற் புகழத்தக்க திருப்ப
னந்தாளென்னும் திருப்பதியில் வீற்றிருந்தருளுஞ் சிவபிரானை; நேரேநரபதியுந்
தொழக்கச்சானயந்து—திருமுடி நேரேயிருக்கும்படி சோழராசனும் பிறரும்
வணங்கப் பூங்கச்சைத் தன்கழுத்தின் மாட்டியிழுத்து நேராக்கி; போதப்பால
முதமுண்டாருமரசுமெய்தி—ஞானப்பாலுண்ட ஆளுடையபிள்ளையாரும் ஆளு
டைய வரசும் தம்மனைக்கெழுந்தருளி; பரிந்தமுதுசெயவருள்சேர்பான்மையா
ர்—கருணைகூர்ந்து திருவமுது செய்தகாரணத்தால் அவரருளேயன்றிச் சிவபி
ரான் திருவருளையும் அடைந்தனர்.—எ-று. ஏ-இரண்டும்-அசை. (௧௪)

## மானக்கஞ்சாறநாயனார்புராணம்.

கஞ்சநகர் மானக்கஞ் சாறனார்சீர்க் காதன்மகள் வதுவைமணங்
காணநாதன், வஞ்சமலி மாவிரதத் தலைவனாகி வந்துபுகுந் தவளளக
மகிழ்ந்து நோக்கிப், பஞ்சவடிக் காமென்ன வரிந்துநீட்டும் பத்தரெதி
ர் மறைந்திறைவன் பணித்தவாக்கா, லெஞ்சலில்வண் குழல்பெற்ற
பேதைமாதை யேயர்பிராற் குதவியரு ளெய்தினாரே.

(இ-ள்.) கஞ்சநகர்மானக்கஞ்சாறனார்—கஞ்சாறூரில் வாழ்ந்த மானக்
கஞ்சாறநாயனார்; சீர்க்காதன்மகள்வதுவைமணங்காண—தம் சிறப்பமைந்த
காதற்புதல்வியின் சிறந்த திருமணத்தைக்காணும்படி; நாதன்வஞ்சமலிமாவிர

நீத்தலேவஞ்கிவந்துபுகுந்து—சிவபிரான் தன் நிலைமையை அவரறியாவண்ணம் மறைத்த ஓர் மாவிரதவேடந் தாங்கிக்கொண்டு அவர் மனையிற்புகுந்து; அவளை ளகமகிழ்ந்துநோக்கிப்பஞ்சவடிக்காமென்ன—அப்புதல்வியின் கேசபாரத்தை மகிழ்கூர்ந்து பார்த்தருளி இக்கேசம் மயிர்ப்பூணநூலுக்காமென்று கூறியருள; அரிந்துநீட்டும்பத்தரெதிர்மறைந்திறைவன்—அப்பொழுது தன்னுடை வாளால் அக்கேசத்தை யரிந்துகொடுக்கும் அந்நாயனார்முன் சிவபிரான் அவ்வேடம் மறைந்து; பணித்தவாக்கால்—வானின்கட்பணித்தருளிய அசரீரிவாக்கினால்; எஞ்சலில்வண்குழல்பெற்றபேதைமாதை—குறைவின்றி முன்போல் அளகபாரத்தைப்பெற்ற மடமைக்குணமுள்ள அப்புதல்வியை; ஏயர்பிராற்குதவியருளெய்தினார்—ஏயர்கோன்கலிக்காமநாயனாருக்கு மணஞ்செய்துகொடுத்துத் திருவருளையடைந்தார்.—எ-று. ஏ-அசை. (கரு)

## அரிவாட்டாயநாயனார்புராணம்.

தாவில்கண மங்கலத்துள் வேளாண்டொன்மைத் தாயனார்நாயனார் தமக்கே செந்நெற், றூவரிசி யெனவிளைவ தவையேயாசத் துறந்துணவு வடுவரிசி துளங்குகீரை, யாவினினைந் துடன்கொணர வோர்கமரிற்சிந்த வழிந்தரிவாள் கொண்டேட்டி யரியாமுன்னே, மாவடுவினொலியுமரன் கரமுந்தோன்றி வாள்விலக்கி யமரர்தொழ வைத்த தன்றே.

(இ-ள்.) தாவில்கணமங்கலத்துள்—தன்பமில்லாத கணமங்கல மென்னும் ஊரில் அவதரித்த; வேளாண்டொன்மைத்தாயனார்—பழைய வேளாண்குடிப்பிறப்பினராகிய அரிவாட்டாயநாயனார்; நாயனார்தமக்கேசெந்நெற்றூவரிசியென—விளையும் சம்பாநெல்லின் தூய்மையான அரிசிகளெல்லாம் சிவபிரானுக்கேயென்று கூறியருள; விளைவதவையேயாக—தந்நிலமுழுதும் விளையும் நெல்லெல்லாம் அச்சம்பாவேயாக; துறந்துணவு—அதனால் அந்நெல்லைத்தானுண்ணுமல்; வடுவரிசிதுளங்குகீரையாவினினைந்துடன்கொணர—மாவடுவும் செந்நெல் அரிசியும் தளிர்த்தகீரையும் ஆகிய இவைகளைப் பஞ்சகவ்வியத்துடன் கொண்டுவர; ஓர்கமரிற்சிந்தவழிந்து—அப்படித் தாங்கள் திருமேனிமெலிவால் கால்தளர்ந்து நிலப்பிளப்பில் சிந்த அதுகண்டு வருந்தி; அரிவாள்கொண்டேட்டியரியாமுன்—கையரிவாளால் உள்ளந்தண்டை யரிவதற்குமுன்னே; மாவடுவினொலியுமரன்கரமுந்தோன்றி—அக்கமரில் விடேலென்னும் மாவடுவினொலியுஞ் சிவபிரான் திருக்கரமும் வெளிப்பட்டு; வாள்விலக்கியமரர்தொழவைத்தது—உள்ளந்தண்டை யரியும் அரிவாளை விலக்கித் தேவர்கள் தொழும்படி வைத்தது.—எ-று. அன்று. ஏ-இரண்டும்-அசை. (கசா)

## ஆனாயநாயனார்புராணம்.

மங்கலமா மழநாட்டு மங்கலமாநகருண் மருவுபுக ழானாயர் வளராமேய்ப்பார், கொங்கலர்பூந் திருக்கொன்றை மருங்குசார்ந்து குழலிசையி னைந்தெழுத்துங் குழையவைத்துத், தங்குசரா சரங்களெல்லா முருகாநிற்பத் தம்பிரா னணைந்துசெவி தாழ்த்திவாழ்ந்து, பொங்கியவான் கருணைபுரிந் தென்றுமூதப் போதுகவென் றருளவுடன் போயினாரே.

(இ-ள்.) மங்கலமாமழநாட்டுமங்கலமாநகருண்மருவுபுகழாணயர்—சி
றப்பமைந்த மழநாட்டின்கணுள்ள திருமங்கலமென்னுந் திருப்பதியில் அவதரி
த்த புகழையுடைய ஆனாயநாயனார்; வளராமேய்ப்பார்—வளர்கின்ற அவ்வூர்ப்
பசுக்களை மேய்க்கின்றவர்; கொங்கலர்பூந்திருக்கொன்றை மருங்குசார்ந்து—
அவர் தேன்பிலிற்றுகின்ற பூக்களையுடைய திருக்கொன்றைமரத்தின் அருகிற்
சென்று; குழலிசையினைந்தெழுத்துங்குழையவைத்து—வங்கியமென்னும் புள்
ளாங்குழலிசையிலே திருவைந்தெழுத்தையும் அமையும்படி வைத்து வாசிக்க;
தங்குசராசரங்களெல்லாமுருகாநிற்ப—அதைக்கேட்ட நிலைபெற்ற சரம் அசர
மென்னும் உயிர்வர்க்கங்களெல்லா முள்ளமுருக; தம்பிரானணைந்துசெவிதாழ்
த்திவாழ்ந்து—அப்பொழுது சிவபிரானெழுந்தருளித் திருச்செவிகொடுத்துத்
திருவுளங்களிகூர்ந்து; பொங்கியவான்கருணைபுரிந்து—மிகப்பெருங் கருணைசெ
ய்து; என்றுமூதப்போதுகவென்றருளவுடன்போயினார்—எந்நாளுஞ் சிவபதத்
திலிருந்து புள்ளாங்குழலூதும்படி வரக்கடவையென்றருளிச்செய்ய அவருட
ன்சென்றனர்.—எ-று. ஏ-அசை. (௧௭)

## மூர்த்திநாயனார்புராணம்.

வழங்குபுகழ் மதுரைநகர் மூர்த்தியாராம் வணிகர்திரு வாலவா
ய் மன்னர்சாத்தத்,தழங்குதிர முழங்கைதரத் தேய்த்தவூறுந் தவிர்ந்த
மணர் வஞ்சனையுந் தவிரமன்ன, னிழந்தவுயி ரினனாக ஞாலநல்க வெ
ழில்வேணி முடியாக விலங்குவேட,முழங்குபுக ழணியாக விரைநீறு
க மும்மையுல காண்டருளின் முன்னினாரே.

(இ-ள்.) வழங்குபுகழ்மதுரைநகர்மூர்த்தியாராம்வணிகர்—பரம்பிய பு
கழையுடைய மதுரையில் அவதரித்த மூர்த்திநாயனாரென்னும் வணிகர் குலத்த
வர்; திருவாலவாய்மன்னர்சாத்த—தாம் திருவாலவாயென்னும் ஆலயத்தில்
வீற்றிருந்தருளும் சுந்தரேசருக்குச்சாத்தக் (கருநடமன்னன் சந்தனக்கட்டை
கொடாதுவிலக்க;) தழங்குதிரமுழங்கைதரத்தேய்த்தவூறுந்தவிர்ந்து—இன்று
சந்தனக்காப்புக்கு முட்டாயினும் தேய்க்குங்கைக்கு முட்டில்லையென்று சொ
ரிகின்ற உதிரத்தை முழங்கைசொரிக்கச் சாணையில் தேய்த்ததனாலாய காயமு
ம் நீங்கி; அமணர்வஞ்சனையுந்தவிர—சமணர்களுடைய வஞ்சனையும் நீங்க; ம
ன்னனிழந்தவுயிரினனாக—அக்கருநட மன்னனும் உயிரிழக்க; ஞாலநல்கவெ
ழில்வேணிமுடியாக—உலகத்தையாளும்படிக்கு அழகிய சடைமுடியே மகுட
மாக; இலங்குவேடமுழங்குபுகழணியாக—விளங்கிய உருத்திராக்கம் குண்ட
லம்முதலிய திருவேடமே புகழ்மிக்க ஆபரணமாக; விரைநீறுக—பூசுங்கலவை
திருவெண்ணீறேயாக; மும்மையுலகாண்டருளின் முன்னினார்—இம்மூன்றினா
லும் உலகத்தை யாளுகைசெய்து திருவருளடைந்தார்.—எ-று. ஏ-அசை.(௧௮)

## முருகநாயனார்புராணம்.

மன்னுதிருப் புகலூர்வாழ் முருகனாரா மறையவர்கோ வர்த்த
மா னீச்சரத்தார், சென்னியினுக் கழகமரு மலர்கள்கொய்து திரு
மாலை புகழ்மாலை திகழச்சாத்திக், கன்னிமதிற் கழுமலநா டுடையநா
தன் காதன்மிகு மணங்காணுங் களிப்பினாலே, யின்னல்கெட வுடன்
சேவித் தருளான்மீளா திலங்குபெரு மணத்தானை யெய்தினாரே.

(இ-ள்.) மன்னுதிருப்புகலூர்வாழ்முருகனாராமறையவர்கோ—நிலைபெற்ற திருப்புகலூரில் வாழ்ந்த முருகநாயனாரென்னும் திருநாமமுடைய மறையவர் முதல்வர்; வர்த்தமானீச்சரத்தார்சென்னியினுக்கு—வர்த்தமானீச்சரமென்னும் ஆலயத்தில் வீற்றிருந்தருளும் சிவபிரான் திருமுடிக்கு; அழகமருமலர்கள்கொய்து—அழகுதங்கிய மலர்களைக்கொய்து; திருமாலைபுகழ்மாலைதிகழச்சாத்தி—அவைகளாலாய திருப்பள்ளித்தாமங்களையும் பாமாலைகளையும் புகழுண்டாகும்படி தரித்து; கன்னிமதிற்கழுமலநாடுடையநாதன்—காப்பாகிய மதில்சூழ்ந்த சீகாழிநாட்டையுடைய ஆளுடையபிள்ளையாரது; காதன்மிகுமணங்காணுங்களிப்பினால்—பேரவாவை விளைவிக்குந் திருமணத்தைத்தரிசிக்கும் மகிழ்ச்சியினாற்சென்று; இன்னல்கெடவுடன்சேவித்து—பிறவித்துயர் கொடுக்கும்படி அத்திருமணத்தை அடியாருடன் தாமும் தரிசித்து; அருளான்மீளாதிலங்குபெருமணத்தானையெய்தினார்—சிவபிரான் திருவருளினால் மீண்டு பிறவாமல் விளங்கிய திருநல்லூர்ப்பெருமணமென்னும் ஆலயத்திற் சிவபிரானை யடைந்தார்.—எ-று. ஏ-இரண்டும்-அசை. (௧௯)

## உருத்திரபசுபதிநாயனார்புராணம்.

பங்கமில்வண் புகழ்நிலவு தலையூர்வாழும் பசுபதியா ரெனுமறையோர் பணிந்துசெந்தே, னங்கமல மடுவினிடை யல்லுமெல்லு மகலாதே யாகளமா யமர்ந்துநின்று,திங்கள்வளர் சடைமுடியா னடிகள் போற்றித் திருவெழுத்து முருத்திரமுந் திகழவோதி,மங்கையிட முடையபிரா னருளான்மேலை வானவர்க டொழுமுலகின் மன்னினாரே.

(இ-ள்.) பங்கமில்வண்புகழ்நிலவுதலையூர்வாழும்—குற்றமற்ற வளவிய புகழ்விளங்கிய திருத்தலையூரின்கண்வாழ்ந்த; பசுபதியோரெனுமறையோர்பணிந்து—உருத்திரபசுபதிநாயனாரென்னுந் திருப்பெயருடைய மறையவர் திருக்கரங்களைக் குவித்துக்கொண்டு; செந்தேனங்கமலமடுவினிடை—சிவந்த தேன் சொரியும் அழகிய தாமரைமலர்கள் தங்கிய வாவியின்கண்; அல்லுமெல்லுமகலாதுஆகளமாயமர்ந்துநின்று—இரவும்பகலும் நீங்காமல் கழுத்தளவுநீரில் நின்று; திங்கள்வளர்சடைமுடியானடிகள்போற்றி—இளம்பிறைவளர்கின்ற சடைமுடியையுடைய சிவபிரான் திருவடிகளைத்தியானித்து; திருவெழுத்துமுருத்திரமுந்திகழவோதி—திருவைந்தெழுத்தையும் உருத்திரத்தையும் விளங்க ஓதி; மங்கையிடமுடையபிரானருளால்—உமாதேவியை இடக்கூற்றிலுடைய சிவபிரான் திருவருளினால்; மேலைவானவர்கடொழுமுலகின்மன்னினார்—விண்ணுலகத்தின்கணுள்ள தேவர்களுந்தொழத்தக்க சிவபதத்தையடைந்தார்.—எ-று.()
ஏ-இரண்டும்-அசை.

## திருநாளைப்போவார்நாயனார்புராணம்.

நன்மைதிகழ் மேற்கானாட் டாதனூர்வாழ் நந்தனார் புறத்தொண்டர் நாளைப்போகப், பொன்மலிதென் புலியூர்க்கென் றுரைப்பார்புன்கூர்ப் பொய்கையமைத் தடலேறு பிரியநோக்கி, வன்மதில்சூழ் தில்லையிறை யருளால்வாய்ந்த வண்டழலி னிடைமூழ்கி மறையோர் போற்ற,மின்மலிசெஞ் சடைமுனியா யெழுந்துநாதன் விளங்குநடந் தொழமன்றுண் மேவினாரே.

(இ-ள்.) நன்மைதிகழ்மேற்காநாட்டாதனூர்வாழ்—நலம்விளங்கும் மேற்காநாட்டின்கண் ஆதனூரில்வாழ்ந்த; நந்தனார்புறத்தொண்டர்—நந்தனாரென்னும் திருப்பெயருடைய புறத்திருத்தொண்டு செய்கின்றவர்; நாளைப்போகப்பொன்மலிதென்புலியூர்க்கென்றுரைப்பார்—ஆலயத்திற்சென்று தொழுதல் தம்மரபுக்கிசையாமையின் இலக்குமிவாழும் தென்றிசைக்கணுள்ள சிதம்பரத்திற்சென்று நாளை உட்புகுந்து தரிசிப்போம் என்று சொல்கின்றவர்; புன்கூர்ப்பொய்கையமைத்தடலேறு பிரியநோக்கி—திருப்புன்கூரின்கண் ஒருவாவியை உண்டாக்கி அத்திருப்பதிக்கணுள்ள விடைத்தேவர் விலகும்படி தரிசித்து; வன்மதில்சூழ்தில்லையிறையருளால்வாய்ந்த—வலிய மதில்சூழ்ந்த தில்லைக்கண் வாழும் நடேசப்பிரான் திருவருளால் அமைக்கப்பட்ட; வண்டழலினிடைமூழ்கிமறையோர்போற்ற—ஈவாலிக்கின்ற தீயிற்குளித்துத் தில்லைமூவாயிரவர்கள் துதிக்க; மின்மலிசெஞ்சடைமுனியாயெழுந்து—மின்போல ஒளிர்கின்ற செந்நிறமுள்ள சடையையுடைய மறைமுனிவராய்த்தோன்றி; நாதன்விளங்குநடந்தொழமன்றுண்மேவினார்—சிவபிரான் திருநடத்தைத் தரிசிக்கும்படி கனகசபையுள் அடைந்தார்.—எ-று. ஏ-அசை. (உக)

## திருக்குறிப்புத்தொண்டநாயனார்புராணம்.

கொந்தலர்பூம் பொழிற்கச்சி நகரேகாலிக் குலத்தலைவர் தவர்குறிப்புக் குறித்துளார்பால், வந்திறைவர் நமக்கின்று தாரீராகின் வருந்துமுடலெனவாங்கி மாசுநீத்த, கந்தைபுல ராதொழிய மழையுமாலைக் கடும்பொழுதும் வரக்கண்டு கலங்கிக்கன்மேற், சிந்தமுடி புடைப்பளவிற் றிருவேகம்பர் திருக்கைகொடு பிடித்துயர்வான் சேர்த்தினாரே.

(இ-ள்.) கொந்தலர்பூம்பொழிற்கச்சிநகரேகாலிக்குலத்தலைவர்—கொத்தாக அலர்ந்த மலர்களையுடைய சோலைசூழ்ந்த காஞ்சிநகரத்து ஏகாலிகுலத்தலைவராயவதரித்த;தவர்குறிப்புக்குறித்துளார்பால்—அடியார்குறிப்பை யுணரும் இயல்புடைய திருக்குறிப்புத்தொண்டநாயனாரிடத்து; வந்திறைவர்நமக்கின்று தாரீராகில்வருந்துமுடலென—சிவபிரான் ஓர் அடியராய் எழுந்தருளிவந்து யாங்கொடுக்கு மிக்கந்தையை இன்றைக்கே கொடாதொழிவீராகில் உடம்புகுளிரால் வருந்துமென்றருளிச்செய்ய; வாங்கிமாசுநீத்தகந்தைபுலராதொழிய—அவரிடத்து வாங்கித்தான் அழுக்ககற்றிய அக்கந்தை புலராதிருக்க; மழையுமாலைக்கடும்பொழுதும்வரக்கண்டுகலங்கி—மழையும் மாலைப்பொழுதும்வர அதனைக்கண்டு மனங்கலங்கி; கன்மேற்சிந்தமுடிபுடைப்பளவில்—துறைக்கல்லின்மேல் தன்சிரசைச் சிதறும்படி மோதுங்கால்; திருவேகம்பர்திருக்கைகொடு பிடித்துயர்வான்சேர்த்தினார்—ஏகாம்பரநாதர் தமது திருக்கரத்தால் அவர் கையைப்பிடித்து விலக்கி உயர்ந்த சிவபதம் அடைவித்தார்.—எ-று. ஏ-அசை. ()

## சண்டேசுரநாயனார்புராணம்.

வேதமலி சேய்ஞலூ ரெச்சதத்தன் விளங்கியசேய் மறைபயிலும் விசாரசன்மர், கோதனமேய்ப் பவன்கொடுமை பொறுதுதாமே கொண்டுநிரை மண்ணியின்றென் கரையினீழற், றுதகியின் மணலிலிங்கத்

தான்பாலாட்டத் தாதைபொறு தலைவிட்டுந் தாள்கண்மாளக், கா
திமலர்த் தாமமுயர் நாமமுண்ட கலமகனும் பதமருளாற் கைக்கொ
ண்டாரே.

(இ-ள்.) வேதமலிசேய்ஞலூரெச்சதத்தன்விளங்கியசேய்—வேதங்களி
னொலிமிக்க திருச்சேய்ஞலூரின்கண் அவதரித்த எச்சதத்தனது அறிவாற்சிறந்
த புதல்வராகிய; மறைபயிலும்விசாரசன்மர்—வேதங்களையோதும் விசாரசரு
மர்; கோதனமேய்ப்பவன்கொடுமைபொறுது—பசுக்கூட்டங்களை மேய்க்கும் இ
டையன்செய்த பிழையைத் தான்பொறுமல்; நிரைதாமேகொண்டுமண்ணியின்
றென்கரையின்—அப்பசுக்கூட்டங்களைத் தாமே மேய்த்துக்கொண்டு மண்ணி
யாற்றின் தென்கரையிலுள்ள; தாதகியின்நீழல்மணலிலிங்கத்தான்பாலாட்ட—
ஆத்திநிழலில் மணலாலமைத்த சிவலிங்கத்தின் திருமுடியில் அப்பசுக்களின்
பாலைக்கறந்து திருமஞ்சனஞ்செய்ய; தாதைபொறுதலைவிட்டுந்தாள்கண்மா
ளக்காதி—அதைக்கண்ட எச்சதத்தன்பொருது அப்பாற்குடங்களை யிட்டிய
கால்கள் அறும்படி வெட்டி; மலர்த்தாமமுயர்நாமமுண்டகலம்—திருமுடியிற்
றரித்த கொன்றைமாலையையும் உயர்ந்த சண்டீசனென்னும் திருநாமத்தையும்
பரிகலத்தையும்; மகனும்பதமருளாற்கைக்கொண்டார்—மகனும் முறைமையை
யும் சிவபிரான் திருவருளினுற் பெற்றுக்கொண்டார்.—எ-று. ஏ-அசை. (௨௩)

## திருநாவுக்கரசுநாயனார்புராணம்.

போற்றுதிரு வாமூரில் வேளாண்டொன்மைப் பொருவில்கொ
றுக் கையரதிபர் புகழனார்பான், மாற்றருமன் பினிற்றிலத வதியாமா
து வந்துதித்த பின்புமரு ணீக்கியாருந், தோற்றியமண் சமயமுறு
துயரநீங்கத் துணைவரரு ளரவந்த சூலைநோயாற், பாற்றருநீ ளிடரெ
ய்திப் பாடலிபுத்திரத்திற் பாழியொழித் தரனதிகைப் பதியில்வந்தார்.

(இ-ள்.) போற்றுதிருவாமூரில்வேளாண்டொன்மை—யாவராலும் புக
ழப்படும் திருவாமூரின்கண்வாழ்ந்த பழைய வேளாண்மரபில்; பொருவில்கொ
றுக்கையரதிபர்புகழனார்பால்—ஒப்பற்ற கொறுக்கையர்குடி முதல்வராகிய புக
ழனாரிடத்து; மாற்றருமன்பினிற்றிலதவதியாமாது—நீங்காத பேரன்பினையு
டைய திலதவதியென்னும் புதல்வி; வந்துதித்தபின்புமருணீக்கியாருந்தோற்
றி—வந்தவதரித்தபின்பு மருணீக்கியாரென்னும் புதல்வரும் அவதரித்து; அம
ண்சமயமுறுதுயரநீங்க—தான் சமணசமயத்தடைந்த துயரம் நீங்கும்படி; து
ணைவரருடரவந்தசூலைநோயால்—சிவபிரான் தனக்குக்கொடுத்தருளவந்த சூ
லைவியாதியினால்; பாற்றருநீளிடரெய்திப்பாடலிபுத்திரத்தில்—நீக்குதற்கரிய பெ
ருந்துயரடைந்து பாடலிபுத்திரமென்னும் ஊரிலுள்ள; பாழியொழித்தரனதி
கைப்பதியில்வந்தார்—அமண்பள்ளியை நீங்கிச் சிவபிரான் வீற்றிருந்தருளுந் தி
ருவதிகைவீரட்டத்தில் வந்தார்.—எ-று. (௨௪)

வந்துதமக் கையரருளா னீறுசாத்தி வண்டமிழா னோய்தீர்ந்து
வாக்கின்மன்னாய், வெந்தபொடி விடம்வேழம் வேலைநீந்தி வியன்சூ
லங் கொடியிடபம் விளங்கச்சாத்தி, யந்தமிலப் பூதிமக னரவுமாற்றி
யருட்காசு பெற்றுமறை யடைப்புநீக்கிப். புந்திமகிழ்ந் தையாற்றிற்
கயிலைகண்டு பூம்புகலூ ரரன்பாதம் பொருந்தினாரே.

(இ-ள்.) வந்துதமக்கையருளானீறுசாத்தி—அத்திருவதிகைவீரட்டத்
தில்வந்து தமது தமக்கையாராகிய திலதவதியார் திருவருளினால் திருவெண்ணீ
றுதரித்து; வண்டமிழாலேநோய்தீர்ந்துவாக்கின்மன்னாய்—வளவிய திருப்பதிகத்தா
ல் அந்நோய்நீங்கித் திருநாவுக்கரசென்னும் திருநாமம்பெற்று; வெந்தபொடிவி
டம்வேழம்வேலைநீந்தி—சமணரிட்ட சுண்ணாம்புநீற்றறை விடம் இடறச்செய்த
யானை கல்லோடுபிணித்துவீழ்த்திய கடல் என்னும் இவற்றாலாய துயரத்தினின்
றும் நீங்கி; வியன்சூலங் கொடியிடபம் விளங்கச்சாத்தி—மேன்மைமிக்க சூலமு
த்திரையும் கொடியாகிய இடபமுத்திரையும் திருமேனியிற் பொருந்தத்தரித்து;
அந்தமிலப்பூதிமகனரவுமாற்றி—கெடாத பத்திநிலைமையுள்ள அப்பூதியடிகளது
புதல்வனைத் தீண்டிய பாம்புவிடத்தை நீக்கி; அருட்காசுபெற்றுமறையடைப்பு
நீக்கி—சிவபிரான் திருவருளாற் படிக்காசுபெற்றுத் திருமறைக்காட்டில் அடை
த்த கதவுதிறக்கப்பாடி; புந்திமகிழ்ந்தையாற்றிற்கயிலைகண்டு—திருக்கயிலைக்குச்
சேரல்கூடாமையின் திருவையாற்றின்கண் திருக்கயிலையின்கோலத்தை மனமகி
ழ்ந்து தரிசித்து; பூம்புகலூரரன்பாதம்பொருந்தினார்—பொலிவுதங்கிய திருப்பு
கலூரில் வீற்றிருந்தருளும் சிவபிரான் திருவடிகளிற் கலந்தருளினார்.—எ-று.()

ஏ-அசை. இவ்விரண்டுங்குளகம்.

## குலச்சிறைநாயனார்புராணம்.

கோதில்புகழ் தருமணமேற் குடியார்கோவண் குலச்சிறையார்
தென்னர்குல வமைச்சர்குன்றா, மாதவர்க ளடிபரவு மரபார்பாண்டி
மாதேவி யாரருள்வான் பயிர்க்குவேலி, காதன்மிகு கவுணியர்கோன்
வாதிற்றோற்ற கையரைவை யைக்கரைசேர் கழுவிலேற்று, நீதியினா
ராலவாய் நிமலர்ச்சேர்ந்த நின்மலனா ரென்மலங்க ணீக்கினாரே.

(இ-ள்.) கோதில்புகழ்தருமணமேற்குடியார்கோ—குற்றமற்ற புகழ்விள
ங்கிய மணமேற்குடியென்னும் ஊரிலுள்ளார்க்கு முதல்வராகிய; வண்குலச்சி
றையார்தென்னர்குலவமைச்சர்—வண்மையையுடைய குலச்சிறைநாயனாரென்
பவர் பாண்டியவமிசத்திற்கு மந்திரியாயுள்ளவர்; குன்றாமாதவர்களடிபரவுமர
பார்—குறையாத பெருந்தவத்தையுடைய சிவனடியார்களது திருவடியைத்
துதிக்கின்ற முறைமையினையுடையவர்; பாண்டிமாதேவியாரருள்வான்பயிர்க்
குவேலி—பாண்டிமாதேவியார் வணங்கும் அருணெறியாகிய உயர்ந்த சைவப்
பயிர்க்கு வேலியாயுள்ளவர்; காதன்மிகுகவுணியர்கோன்வாதிற்றோற்றகைய
ரை—சிவநேசமிக்க ஆளுடையபிள்ளையாரோடு வாதுசெய்து தோற்ற சமணர்
களை; வையைக்கரைசேர்கழுவிலேற்றுநீதியினார்—வையையாற்றங்கரையில் நி
றைத்த கழுவிலேற்றும் அறத்தையுடையவர்; ஆலவாய்நிமலர்ச்சேர்ந்தநின்மல
னார்—திருவாலவாயின்கண் வீற்றிருந்தருளுஞ் சுந்தரேசர் திருவடித்தாமரைக
ளை அடைந்த தூயர் (அவர்;) என்மலங்கணீக்கினார்—என்னுடைய ஆணவாதி
மும்மலங்களையு நீக்கினவர்.—எ-று. ஏ-அசை. (௨௯)

## பெருமிழலைக்குறும்பநாயனார்புராணம்.

கொண்டல்பனி வளர்சோலை மிழலைநாட்டுக் கோதில்புகழ்ப் பெ
ருமிழலைக் குறும்பனார்சீ, ரண்டர்பிரா னடியவருக் கடியாராகு மா
தரவா லணுக்கவன் றொண்டர்க்காளாய், மண்டொழுமெண் டருசித்

தி வாய்ந்துளார்தாம் வன்றொண்டர் வடகயிலை மருவுநாண்மு, னெண்டிகழு மறைமூல நெறியூடேகி யிலங்கொளிசேர் வடகயிலை யெய்தினாரே.

(இ-ள்.) கொண்டல்பணிவளர்சோலை மிழலைநாட்டு=மேகங்கள் வாழும் குளிர்ச்சிதங்கி வளர்கின்ற சோலைசூழ்ந்த மிழலைநாட்டின்கண்வாழ்ந்த; கோதில்புகழ்ப்பெருமிழலைக்குறும்பனார்=குற்றமற்ற புகழினையுடைய பெருமிழலைக் குறும்பநாயனார்; சீரண்டர்பிரானடியவருக்கடியாராகுமாதரவால்=சிறப்பினையுடைய தேவர்பிரானாகிய சிவபிரானடியாருக்குத் தாம் அடியாராகவிருத்தல் வேண்டுமென்னும் பெருவிருப்பால்; அணுக்கவன்றொண்டர்க்காளாய்=திருவணுக்கராகிய நம்பியாரூரருக்கு அடிமைபூண்டு; மண்டொழுமெண்டருசித்திவாய்ந்துளார்=நிலவுலகத்தாரால் தொழத்தக்க அணிமாமுதலிய எண்வகைச்சித்தியையும் அடைந்தவர்; தாம்வன்றொண்டர்வடகயிலைமருவுநாள்முன்=அவர் நம்பியாரூரர் திருக்கயிலைக்கு எழுந்தருளும் தினத்திற்கு முன்னாளில்; எண்டிகழுமறைமூலநெறியூடேகி=மகிமைவிளங்கும் பிரணவ உச்சாரணத்தின்வழியே பிரமரந்திரமார்க்கமாய்ச்சென்று; இலங்கொளிசேர்வடகயிலையெய்தினார்=விளங்கிய ஒளியினையுடைய வடக்கின்கணுள்ள திருக்கயிலையை அடைந்தார்.—எ-று. ஏ-அசை. (௨௭)

## காரைக்காலம்மையார்புராணம்.

தங்குபுகழ்க் காரைக்கால் வணிகன்மிக்க தனதத்தன் றரும்புனிதவதியார்மாவின், செங்கனிக டிருவருளா லழைப்பக்கண்டு திகழ்கணவ னதிசயித்துத் தேசநீங்க, வங்கவுட லிழந்துமுடி நடையாலேறி யம்மையே யெனநாத னப்பாவென்று, பொங்குவட கயிலைபணிந் தாலங்காட்டிற் புனிதனட மனவரதம் போற்றினாரே.

(இ-ள்.) தங்குபுகழ்க்காரைக்கால்வணிகன்=நிலைபெற்ற புகழையுடைய காரைக்கால் என்னும் ஊரிலுள்ள செட்டியாகிய; மிக்கதனதத்தன்றரும்புனிதவதியார்=மேலான தனதத்தனென்பவன்பெற்ற புனிதவதியென்னுந் திருநாமத்தையுடையவர்; மாவின்செங்கனிகடிருவருளாலழைப்பக்கண்டு=செவ்விதான மாங்கனிகள் சிவபிரான் திருவருளினால் அழைத்துக்கொடுத்ததைப்பார்த்து; திகழ்கணவனதிசயித்துத்தேசநீங்க=கீர்த்திவிளங்கிய தன்கொழுநன் விம்மிதமடைந்து தானிருந்த ஊரைவிட்டு வேற்றூர்க்குச்செல்ல; அங்கவுடலிழந்துமுடிநடையாலேறி=தான்சென்று அவ்வூரின்கண்ணே அவனுக்குப்பாரியாம் உரிமைபூண்ட மக்களுடம்பை நீக்கிப் பேய்வடிவமெய்தித் திருக்கயிலைக்குத் தலையானடந்து ஏறி அங்கு; அம்மையேயெனநாதனப்பாவென்று=சிவபிரான் அம்மையேயென்று அழைக்கத்தான் அப்பாவென்று கூறி; பொங்குவடகயிலைபணிந்து=பொலிவினையுடைய திருக்கயிலையைத்தொழுது; ஆலங்காட்டிற்புனிதனடமனவரதம்போற்றினார்=திருவாலங்காட்டின்கண் சிவபிரானது நடனத்தை எப்பொழுதும் வணங்கிக்கொண்டிருந்தார்.—எ-று. ஏ-அசை. (௨௮)

## அப்பூதியடிகணாயனார்புராணம்.

அந்தமினற் றிங்களூர் வருமப்பூதி யருமறையோர் திருநாவுக் கரசினாமம், பந்தரிடை யெழுதக்கண் டாசுமெய்தப் பணிந்துபரி கல

நேடிப் படப்பைசேர்ந்த, மைந்தனுயி ருயர்கதலி யிலைமேற்றுஞ்சும்
வாளரவு கவரவுடன் மறைத்தல்கேட்டுச், சிந்தைமகிழ்ந் துயர்பதிக
மருந்தாற்றீர்த்துத் திருவமுது செயவருளைச் சேர்ந்துளாரே.

(இ-ள்.) அந்தமினற்றிங்களூர்வருமப்பூதியருமறையோர்=அழியாத புகழையுடைய நல்ல திங்களூரின்கண் அவதரித்த அப்பூதியடிகளென்னும் அரிய மறையவர்; திருநாவுக்கரசினுமம்பந்தரிடையெழுதக்கண்டு=திருநாவுக்கரசு என்னும் இனிய திருநாமத்தைத் தண்ணீர்ப்பந்தரிடத்து வரைந்திருக்கநோக்கி; அரசுமெய்தப்பணிந்து=ஆளுடையவரசுந் தம்மனைக்கு எழுந்தருள வணங்கி; பரிகலநேடிப்படப்பைசேர்ந்தமைந்தனுயிர்=அவர்க்கமுதூட்டப் பரிகலக்குருத்தைத் தேடிக்கொண்டுவரத் தோட்டத்திற்சென்ற தமது புத்திரன் உயிரை; கதலியிலைமேற்றுஞ்சும்வாளரவுகவர=வாழைக்குருத்தின்மேல் உறங்கும் ஒளியையுடைய பாம்பு தீண்டிக் கவர்ந்துகொள்ள; உடன்மறைத்தல்கேட்டு=அப்புதல்வனது மரித்தவுடலை மறைத்துவைத்ததை வினவி; சிந்தைமகிழ்ந்துயர்பதிகமருந்தாற்றீர்த்து=மனமகிழ்ந்து உயர்ந்த திருப்பதிகம் என்னும் மருந்தினால் அவ்விடத்தைப்போக்கி; திருவமுதுசெயவருளைச்சேர்ந்துளார்=அவ்வாளுடைய வரசு திருவமுது செய்யும்படிக்குத் திருவருளடைந்தவர்.—எ-று.(௨௬)

ஏ-அசை.

## திருநீலநக்கநாயனார்புராணம்.

நீதிதரு மறையோர்வாழ் சாத்தமங்கை நீலநக்க னாவந்தி நிமல
ர்மேனி, யூதிவிழுஞ் சிலம்பிகடிந் தவளைநீத்தார்க் குமியாத விடநா
த னுறுநோய்காட்டக், காதன்மிகு மனைவியையு மகிழ்ந்துமேவிக்
காழியர்கோ னமுதுசெயக் களித்துவாழ்ந்து,வேதிகையிற் பாணனார்க்
கிடமுநல்கி விளங்குபெரு மணத்தரனை மேவினாரே.

(இ-ள்.) ஐவந்திமலர்மேனி=ஐவந்தியென்னும் ஆலயத்தில் வீற்றிருந்தருளும் சிவபிரான் திருமேனியில்; ஊதிவிழுஞ்சிலம்பிகடிந்தவளைநீத்தார்=விழுந்த சிலம்பியை வாயாலூதித் துமிந்துவிலக்கிய மனையாளை நீக்கிய; நீதிதருமறையோர்வாழ்சாத்தமங்கைநீலநக்கர்க்கு=ஒழுக்கமமைந்த மறையவர்கள் வாழ்கின்ற சாத்தமங்கையென்னும் ஊரில் அவதரித்த திருநீலநக்கநாயனார்க்கு; உமியாதவிடநாதனுறுநோய்காட்ட=ஊதித்துமியாத திருமேனியிற் சிவபிரான் தனக்குற்ற விடநோயைக்காட்ட; காதன்மிகுமனைவியையுமகிழ்ந்துமேவி=தான் விலக்கிய அன்புள்ள மனையாளையும் மகிழ்ச்சியடைந்து சேர்த்துக்கொண்டு; காழியர்கோனமுதுசெயக்களித்துவாழ்ந்து=தமது திருமனையில் ஆளுடையபிள்ளையார் திருவமுதுசெய்ய அதனாற் களிப்படைந்து வாழ்ந்து; வேதிகையிற்பாணனார்க்கிடமுநல்கி=அன்றிரவு திருநீலகண்டயாழ்ப்பாணநாயனாருக்கு ஔபாசன அக்கினியிருக்குந் திருவேதியின்சமீபத்தில் துயில இடங்கொடுத்து; விளங்குபெருமணத்தரனைமேவினார்=விளக்கமான நல்லூர்ப்பெருமணத்துச் சோதியாய் வெளிப்பட்ட சிவபிரானை அடைந்தார்.—எ-று. ஏ-அசை.()

## நமிநந்தியடிகணாயனார்புராணம்.

நண்ணுபுகழ் மறையோர்வா ழேமப்பேறூர் நமிநந்தி யடிகடிரு விளக்குநல்க, எண்ணெயம ணர்கள்விலக்க நீராலாரூ ரிலங்குமர னெறியாருக் கேற்றுநாளிற், கண்ணமணர் கெடக்கண்பெற் றடிகள்வாழக் காவலனா னிமிந்தங்கள் கட்டுவித்தே, யண்ணலருள் கண்டாரூ ரமர்ந்துதொண்டர்க் காணியெனு மரசினரு ளடைந்துளாரோ.

(இ-ள்.) நண்ணுபுகழ்மறையோர்வாழேமப்பேறூர்=நிலைபெற்ற புகழையுடைய மறையவர்கள் வாழ்கின்ற ஏமப்பேறூரின்கண் அவதரித்த; நமிநந்தியடிகடிருவிளக்குநல்க=நமிநந்தியடிகணாயனார் திருவிளக்கிடுதற்கு; எண்ணெயமணர்கள்விலக்க=சமணர்கள் எண்ணெயைக் கொடாதொழிய; நீராலாரூரிலங்குமரனெறியாருக்கேற்றுநாளில்=கமலாலயநீரினால் ஆரூரின்கண் விளங்கிய அரனெறியென்னும் ஆலயத்தில் வீற்றிருந்தருளும் சிவபிரானுக்குத் திருவிளக்கிட்டுவரும்நாளில்; கண்ணமணர்பெறக்கண்பெற்றடிகள்வாழ=கண்ணுள்ள வமணர்கள் கண்ணிழக்கக்கண்ணில்லாத குளந்தொட்ட தண்டியடிகணாயனார் கண்பெற்று வாழ்வடைய; காவலனானிமிந்தங்கள்கட்டுவித்து=சோழனால் படித்தரங்கள் நியமிப்பித்து: அண்ணலருள்கண்டாரூரமர்ந்து=சிவபிரான் திருவிழாச்சிறப்பைத்தரிசித்துத் திருவாரூரின்கண் வாழ்ந்து; தொண்டர்க்காணியெனுமரசினருளடைந்துளார்=திருத்தொண்டர்களுக்கு உரையாணியென்று ஆளுடையவரசா லருளிச்செய்யப்பெற்ற மேன்மையையுடையவர்.—எ-று.(௬௧)
ஏ-இரண்டும்-அசை.

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்புராணம்.

காழிநகர்ச் சிவபாத விதயர்தந்த கவுணியர்கோ னழுதுமையாள் கருதியூட்டு, மேழிசையி னமுதுண்டு தாளம்வாங்கி யிலங்கியநித் திலச்சிவிகை யிசையவேறி, வாழுமுய லகனகற்றிப் பந்தரேய்ந்து வளர்கிழிபெற் றரவின்விட மருகற்றீர்த்து, வீழிநகர்க் காசெய்தி மறைக்கதவம்பிணித்து மீனவன்மே னியின்வெப்பு விடுவித்தாரோ.

(இ-ள்.) காழிநகர்ச்சிவபாதவிதயர்தந்தகவுணியர்கோனழுது=சீகாழிப்பதியில் சிவபாதவிதயரென்னும் மறையவர்பெற்ற கவுணியர்குலதீபராகிய ஆளுடையபிள்ளையார் திருத்தோணிச்சிகர நோக்கியழுது; உமையாள்கருதியூட்டுமேழிசையினமுதுண்டுதாளம்வாங்கி=உமையம்மை திருவுளக்கருணையா லூட்டிய ஏழிசையோடுகூடிய திருப்பதிகத்தைப்பாடியருளுதற்கேதுவான பரஞானமென்னுந் திருமுலைப்பாலமுதை அயின்றருளிப் பொற்றாளம்பெற்று; இலங்கியநித்திலச்சிவிகையிசையவேறி=ஒளிவிளங்கிய முத்தச்சிவிகைவர அதன்மீதெழுந்தருளி; வாழுமுயலகனகற்றிப்பந்தரேய்ந்து=கொல்லிமழவன் புதல்வியின் முயலகனென்னும் நோயைநீக்கி முத்துப்பந்தல்பெற்று; வளர்கிழிபெற்றரவின்விடமருகற்றீர்த்து=உலவாக்கிழிபெற்று ஓர்வணிகன் மகனுக்குப் பாம்பின் விடத்தைத் திருமருகலின்கண் நீக்கி; வீழிநகர்க்காசெய்திமறைக்கதவம்பிணித்து=திருவீழிமிழலையிற் படிக்காசுபெற்றுத் திருமறைக்காட்டில் திருக்கதவமடைக்கப்பாடி; மீனவன்மேனியின்வெப்புவிடுவித்தார்—கூன்பாண்டியன் உடம்பில் உண்டான சுரநோயை நீக்கியருளினார்.—எ-று. ஏ-அசை.(௬௨)

ஆறெரியிட் டெடுத்தவே டவைமுன்னேற்றி யாற்றிலிடு மேடெ
திர்போ யணையவேற்றி,யோரமண ரொழியாமே கழுவிலேற்றி யோ
துதிருப் பதிகத்தா லோடமேற்றிக், காருதவு மிடிபுத்தன் றலையிலேற்
றிக் காயாத பனையின்முது கனிகளேற்றி, யீரமிலா வங்கமுயி ரெய்த
வேற்றி யிலங்குபெரு மணத்தரனை யெய்தினாரே.

(இ-ள்.) ஆறெரியிட்டெடுத்தவேடவைமுன்னேற்றி—மேலும் அவர் சு
வாலிக்கும் நெருப்பிலிட்டு எடுத்த திருப்பதிகம் எழுதிய திருவேட்டைப் பாண்
டியன் அவையத்தார்முன் காட்டி; ஆற்றிலிடுமேடெதிர்போயணையவேற்றி—
வையையாற்றிலிட்ட திருமுகப்பாசுரம் எழுதிய திருவேடு நீர் எதிர்செல்லும்ப
டி செலுத்தி அதனால்; ஓரமணரொழியாமேகழுவிலேற்றி—வாதுசெய்த சமண
ர்களுள் ஒருவரும் நீங்காமல் கழுமரத்திலேற்றி; ஓதுதிருப்பதிகத்தாலோடமே
ற்றி—அருளிய திருப்பதிகத்தினால் திருக்கொள்ளம்பூதூரில் ஓடத்தைக் கரை
யேறச்செய்து; காருதவுமிடிபுத்தன் றலையிலேற்றி—திருத்தெளிச்சேரியில் புத்
தநந்தியின் தலையில் மேகத்தினின்றும் உதித்த இடிவிழச்செய்து; காயாதபனை
யின்முதுகனிகளேற்றி—திருவோத்தூரில் ஆண்பனையினிடத்து முதிர்ந்த கனிக
ளுண்டாகப் பாடியருளி; ஈரமிலாவங்கமுயிரெய்தவேற்றி—பசையில்லாத வெ
ந்த எலும்பு உயிர்பெற்றுப் பெண்ணாகும்படி பாடியருளி; இலங்குபெருமணத்த
ரனையெய்தினார்—புகழ்விளங்கிய திருப்பெருமணமென்னும் ஆலயத்திற் சிவபி
ரானைச் சேர்ந்தருளினார்.—எ-று. ஏ-அசை. இவ்விரண்டுங்குளகம். (௩௩)

## ஏயர்கோன்கலிக்காமநாயனார்புராணம்.

ஏதமில்வே ளாளர்பெரு மங்கலத்து ளேயர்கோன் கலிக்காம ரி
றையைநேரே, தூதுகொளு மவனணுகி லென்றுமென்னுந் துணிவி
னர்பா லிறைவனருஞ் சூலையேவி, வேதனைவன் றொண்டன்வரி னீங்
குமென்ன வெகுண்டுடல்வாள் கொடுதுறந்து மேயநாவற், போதக
மு முடலிகழ வெழுந்துதாழ்ந்து போற்றியது விலக்கியருள் பொரு
ந்தினாரே.

(இ-ள்.) இறையைநேரேதூதுகொளுமவனணுகில்—சிவபிரானைக் கண்
முன்னே தூதாக அனுப்பிய அவ்வன்றொண்டர் தம்மிடத்துவந்தால்; என்றுமெ
ன்னுந்துணிவினர்—என்றாய் முடியுமென்னும் துணிவையுடையராகிய; பெரு
மங்கலத்துள்ஏதமில்வேளாளர் ஏயர்கோன்கலிக்காமர்பால்—பெருமங்கல மெ
ன்னும் ஊரில் அவதரித்த குற்றமற்ற வேளாளமரபினராகிய ஏயர்கோன்கலிக்
காமநாயனாரிடத்து; இறைவனருஞ்சூலையேவி—சிவபிரான் அரிய சூலைநோயை
க்கொடுத்து; வேதனைவன்றொண்டன்வரினீங்குமென்ன—இந்நோய் நம்பியா
ரூரன் உன்மனைக்குவந்தால் நீங்கிவிடுமென்றருளிச்செய்ய; வெகுண்டுடல்வா
ள்கொடுதுறந்து—அவர்வரவுகேட்டுச் சினந்து குற்றுடைவாளால் உயிரைநீக்
கி; மேயநாவற்போதகமுமுடலிகழவெழுந்துதாழ்ந்துபோற்றி—அங்குவந்துபா
ர்த்த நம்பியாரூரரும் அவ்வாளால் உயிர்துறக்கக்கருதச் சிவபிரான் திருவரு
ளால் தானும் உயிர்பெற்றெழுந்து நம்பியாரூரரைவணங்கித்துதித்து; அதுவில
க்கியருள்பொருந்தினார்—அவ்வாளை விலக்கித் திருவருளையடைந்தார்.—எ-று.
ஏ-அசை. (௩௪)

## திருமூலநாயனார்புராணம்.

கயிலாயத் தொருசித்தர் பொதியிற்சேர்வார் காவிரிசூழ் சாத்தனூர் கருதுமூலன், பயிலாநோ யுடன்வீயத் துயரநீடும் பசுக்களைக்கண் டவனுடலிற் பாய்ந்துபோத, வயலாகப் பண்டையுட லருளான்மேவி யாவடுதண் டுறையாண்டுக் கொருபாவாகக், குயிலாரு மரசடியி லிருந்துகூறிக் கோதிலா வடகயிலை குறுகினாரே.

(இ-ள்.) கயிலாயத்தொருசித்தர்பொதியிற்சேர்வார்—திருநந்திதேவர் அருள்பெற்ற திருக்கயிலையின்கண்வாழும் ஒருசிவயோகியார் தமிழ்முனியாகிய அகத்தியனாரைக்காணுங் கருத்தாற்செல்பவர்; காவிரிசூழ்சாத்தனூர்கருதுமூலன்—காவிரிக்கரையிலுள்ள சாத்தனூரின்கண்வாழும் மூலனென்னுமிடையன்; பயிலாநோயுடன்வீய—தனக்கு முன்னில்லாது சடுதிவந்த நோயாலிறக்க; துயரநீடும்பசுக்களைக்கண்டவனுடலிற்பாய்ந்துபோத—அவனைநோக்கி அவலமடைந்த பசுக்களைநோக்கி அப்பசுக்களின்துயரத்தை யகற்றும்பொருட்டுப் பிராகாமியசித்தியால் அவனுடலிற்புகுந்துசெல்ல; பண்டையுடல்அயலாகஅருளான்மேவி—முன்தான்வைத்த உடம்பானது மறைந்து திருவருளினால் அவ்வுடம்போடிருந்து; ஆவடுதண்டுறைகுயிலாரு மரசடியிலிருந்தாண்டுக்கொருபாவாகக்கூறி—திருவாவடுதுறையில் குயில்கள்வாழும் அரசமரத்தினிழலிலிருந்து மூவாயிரம்வருடத்திற்கு மூவாயிரம்பாடலாகத் திருமந்திரமாலையை அருளிச்செய்து; கோதிலாவடகயிலைகுறுகினார்—முன்போலக் குற்றமற்ற திருக்கயிலையையடைந்தார்.—எ-று. ஏ-அசை. (௫௫)

## தண்டியடிகணாயனார்புராணம்.

திருவாரூர் வருந்தண்டி யடிகள்காட்சி சேராதார் குளந்தொட்டற் கமணர்சீறிக், குருடாநீ முன்செவிடுங் கூடிற்றென்று குறித்தறியைப் பறித்தெறியக் கொதித்துத்தங்க, ணருளாலே விழித்தெவரு மந்தராக வமணர்கலக் கம்பலகண் டவர்கள்பாழிப், பருவான கற்பறித்தா விக்கரையுங்கட்டிப் பரனருளா லமருலகம் பற்றினாரே.

(இ-ள்.) திருவாரூர்வருந்தண்டியடிகள்காட்சிசேராதார்—திருவாரூரின்கண் அவதரித்த தண்டியடிகணாயனார் பிறவிக்குருடாயுள்ளவர்; குளந்தொட்டற்கமணர்சீறி—அவர் ஓர்வாவியைப் புதிதாய் எடுத்தலுக்குச் சமணர்கள் முனிந்து; குருடாநீமுன்செவிடுங்கூடிற்றென்று—நீ முன் குருடனும் இப்பொழுது நாம் கூறும் கொல்லா அறத்தைக் கேளாமையால் செவிடுமுண்டாயிற்றென்று; குறித்தறியைப்பறித்தெறியக்கொதித்த—குறியாகநட்ட தறியைப்பிடுங்கியெறிய வெகுண்டு; தங்கணருளால்விழித்தெவருமந்தராக—தம் கண்ணைச் சிவபிரான் திருவருளினால் திறக்கப்பெற்று அச்சமணரெல்லாம் குருடராக; அமணர்கலக்கம்பலகண்டு—அவர் அடையுந்துன்பம் பலவற்றையுந் தங்கண்ணாற்கண்டு; அவர்கள்பாழிப்பருவானகற்பறித்தாவிக்கரையுங்கட்டி—அவர்களை அவ்வூரினின்றும் நீக்கி அவர் பள்ளியிலுள்ள பருத்த கற்களை யிடித்தெடுத்துத் தான்தொட்ட வாவிக்கரையையுங்கட்டி; பரனருளாலமருலகம்பற்றினார்—சிவபிரான்திருவருளினால் வீற்றிருந்தருளும் சிவபதத்தையடைந்தார்.—எ-று. (௫௬)

ஏ-இரண்டும் அசை. அமருலகம் அழியாநிலைமைத்தாய சிவலோகமெனினுமொக்கும்.

## மூர்க்கநாயனார்புராணம்.

தொண்டைவள நாட்டுவளர் வேற்காட்டூர்வாழ் தொல்லுழவர் ந
ற்சூதர் சூதுவென்று, கொண்டபொருள் கொண்டன்பர்க் கமுதளிக்
குங் கொள்கையினார் திருக்குடந்தை குறுகியுள்ளார், விண்டிசைவு
குழறுமொழி வீணர்மாள வெகுண்டிடலான் மூர்க்கரென விளம்புநா
ம,மெண்டிசையு மிகவுடையா ரண்டர்போற்று மேழுலகு மூடனாளு
மியல்பினரோ.

(இ-ள்.) தொண்டைவள நாட்டுவளர் வேற்காட்டூர்வாழ்=வளமுள்ள
தொண்டைநாட்டின்கண் சிறந்த திருவேற்காடென்னும் ஊரின்கண்வாழ்ந்த;
தொல்லுழவர்நற்சூதர்=பழமையான வேளாண்குடிப்பிறப்பினராகிய நல்ல
சூதாடுந்தொழிலுடையவர்; சூதுவென்றுகொண்டபொருள்கொண்டு=அச்சூ
தில் தான் வெற்றியடைந்து அதனால் அடைந்த பொருளைக்கொண்டு; அன்பர்க்
கமுதளிக்குங்கொள்கையினார்=சிவனடியார்களுக்குத் திருவமுது செய்விக்கு
ம் கொள்கையையுடையவர்;திருக்குடந்தைகுறுகியுள்ளார்=திருக்குடந்தையின்
கண்வந்து; விண்டிசைவுகுழறுமொழிவீணர்மாளவெகுண்டிடலால்=சூதாடுதற்
கண் ஆட்டத்தை மறுத்துக்கூறும் மொழியையுடைய வீணர்கள் இறக்கும்படி
கோபித்தலால்; மூர்க்கரெனவிளம்புநாமமெண்டிசையுமிகவுடையார்=மூர்க்க
நாயனாரென்னுந் திருநாமம் எட்டுத்திக்கிலும் விளங்கப்பெற்றவர்; அண்டர்போ
ற்றுமேழுலகுமூடனாளுமியல்பினர்=தேவர்கள் துதிக்கும்படி ஏழுலகத்தையும்
அரசாளும் முறைமையையுடையவர்.—எ-று. ஏ-அசை. (௧௭)

மேலேழுலகினுஞ் சிவபதம் மேம்படுதலின் அதனையடைந்த அவரை ஏழு
லகுமாளுமியல்பினரென்றார்.

## சோமாசிமாறநாயனார்புராணம்.

அம்பர்நக ரந்தணர்சோ மாசிமாற ரன்பர்களாம் யாவர்க்கு ம
ன்பினமுதளிப்பா,ரும்பர்நிகழ் வகையாகம் பலவுஞ்செய்யு முண்மை
யினா ரைந்தெழுத்து மோவாநாவார், நம்பர்திகழ் திருவாரூர் நயந்
தும்பாற்று நாவலர்கோ னடிபரவு நன்மையாலே, யிம்பர்தொழ வும்
பர்பணிந் தேத்தமேலை யேழுலகு மூடனாளு மியல்பினரோ.

(இ-ள்.) அம்பர்நகரந்தணர்சோமாசிமாறர்=திருவம்பர் என்னும் நக
ரத்தில் வாழ்ந்த மறையவர்குலத்தினராகிய சோமாசிமாறநாயனார்; அன்பர்க
ளாம்யாவர்க்குமன்பினமுதளிப்பார்=அடியார்களாகிய யாவர்க்கும் அன்போ
டு திருவமுது செய்விக்கின்றவர்; உம்பர்நிகழ்வகையாகம்பலவுஞ்செய்யுமுண்
மையினார்=தேவர்கள் ஏற்றுக்கொள்ளும்படி பலவகை வேள்விகளையும் செய்
கின்ற மெய்ம்மையையுடையவர்; ஐந்தெழுத்துமோவாநாவார்=திருவைந்தெ
ழுத்தும் நீங்காத நாவையுடையவர்; நம்பர்திகழ்திருவாரூர்நயந்துபோற்றும்=
சிவபிரான் வீற்றிருந்தருளும் திருவாரூரை விரும்பித்துதிக்கும்; நாவலர்கோன
டிபரவுநன்மையால்=நம்பியாரூரர் திருவடிகளைத்துதிக்கும் நன்மையினால்; இ
ம்பர்தொழவும்பர்பணிந்தேத்த=இவ்வுலகத்தார் வணங்கவும் தேவர்கள் வண
ங்கித்துதிக்கவும்; மேலையேழுலகுமூடனாளுமியல்பினர்=மேலேழுலகத்தையும்
அரசாளும் இயல்பினையுடையவர்.—எ-று. ஏ-இரண்டும் அசை. (௧௮)

## சாக்கியநாயனார்புராணம்.

சங்கமங்கை வரும்வேளாண் டலைவர்காஞ்சிச் சாக்கியரோ டியைந்தவர்தந் தவறுஞ்சைவத், துங்கமலி பொருளுமுணர்ந் தந்தவேடந் துறவாதே சிவலிங்கந் தொழுவோர்கண்டோ, ரங்கன்மலர் திருமேனி யழுந்தச்சாத்தி யமருநாண் மறந்தொருநா ளருந்தாதோடிச், செங்கலெறிந் திடுமளவின் மகிழ்ந்தநாதன் றிருவருளா லமருலகஞ் சேர்ந்துளாரே.

(இ-ள்.) சங்கமங்கைவரும் வேளாண்டலைவர்—திருச்சங்கமங்கையில் அவதரித்த வேளாண்குடிக்கு முதல்வராகிய சாக்கியநாயனார்; காஞ்சிச்சாக்கியரோடியைந்து—காஞ்சிநகரத்தின்கணுள்ள பவுத்தர்களோடுகூடி; அவர்தந்தவறுஞ்சைவத் துங்கமலிபொருளுமுணர்ந்து—அப்புத்தமதத்தின் வழுவையும் சைவநெறிக்கணுள்ள உயர்ந்த உண்மைப்பொருளையும் அறிந்து; அந்தவேடந்துறவாதேசிவலிங்கந்தொழுவோர்—அப்பவுத்தவேடத்தை நீங்காமலே சிவலிங்கத்தை வழிபடுங் கருத்துடையராய்; கண்டோரங்கன்மலர்திருமேனியழுந்தச் சாத்தி—நாள்தோறும் ஓர் சிவலிங்கத்தைக்கண்டு ஒரு அழகிய செங்கல்லாகிய மலரைத் திருமேனியிலழுந்தும்படி சாத்தி; அமருநாண்மறந்தொருநாளருந்தாதோடி—ஒழுகும்நாளில் அக்கல்லெறிதலை ஒருநாள்மறந்து உணவுசெய்யாதோடிச்சென்று; செங்கலெறிந்திடுமளவின்மகிழ்ந்தநாதன்—செங்கல்லை எறியும் அளவில் அதற்குத் திருவுளம் மகிழ்ச்சியடைந்த சிவபிரான்; திருவருளாலமருலகஞ்சேர்ந்துளார்—திருவருளால் விளங்கியிருக்கும் சிவபதத்தை யடைந்தார்.—எ-று. ஏ-அசை. (கக)

## சிறப்புலிநாயனார்புராணம்.

திருவாக்கூ ரருமறையோ ருலகமேத்துஞ் சிறப்புலியார் மறப்புலியா ருரிமேற்செங்க, ணரவார்த்தார் வருமேற்றூர்க் கன்பரானார்க் கமுதளிப்பா ரொளிவெண்ணீ றணிந்தமார்பர், பெருவாக்கான் மறைபரவி யாகம்போற்றும் பெற்றியினா ரைந்தெழுத்தும் பிறழாதோதிக், கருவாக்கா விறைவன்றா ளிணைகள்சேர்ந்த கருத்தினா ரெனையாவுந் திருத்தினாரே.

(இ-ள்.) திருவாக்கூரருமறையோருலகமேத்துஞ்சிறப்புலியார்—திருவாக்கூரின்கண்வாழும் அரிய மறையவர்குலத்தில் அவதரித்த சிறப்புலிநாயனார்; மறப்புலியாருரிமேற்செங்கணரவார்த்தார்—வலிய புலியுரியின்மேற் சிவந்த கண்களையுடைய பாம்பைக் கச்சாகப்பிணித்து; வருமேற்றூர்க்கன்பரானார்க்கமுதளிப்பார்—காட்சிகொடுத்தருளும் இடபவாகனத்தையுடைய சிவபிரான் அடியார்களுக்குத் திருவமுது செய்விக்கின்றவர்; ஒளிவெண்ணீறணிந்தமார்பர்—விளக்கமான திருவெண்ணீறு தரித்த திருமார்பினையுடையவர்; பெருவாக்கான்மறைபரவி யாகம்போற்றும்பெற்றியினார்—தம்பெருமையுடைய திருவாக்கினால் வேதங்களையோதி யாகங்களைச்செய்யும் இயல்புடையவர்; ஐந்தெழுத்தும்பிறழாதோதி—திருவைந்தெழுத்தையுந் தவறாமல் ஓதி; கருவாக்காவிறைவன்றாளிணை

கள்சேர்ந்தகருத்தினர்=தம்மையடைந்தாரைப் பிறப்பிற்சேர்க்காத சிவபிரான் திருவடிகளையடைந்த கருத்தையுடையவர்; எனையாவுந்திருத்தினர்=என்னை எல்லாத்துயரத்தினின்றும் நீக்கினவர்.—எ-று. ஏ-அசை. (௪௰)

## சிறுத்தொண்டநாயனார்புராணம்.

பல்குமருத் துவரதிபர் செங்காட்டங்குடிவாழ் படைத்தலைவ ரமுதளிக்கும் பரஞ்சோதியார்மெய்ச், செல்வமிகு சிறுத்தொண்டர் காழிநாடன் றிருவருள்சேர்ந் தவர்வளருஞ் சீராளன்றன்னை, நல்குதிரு வெண்காட்டு நங்கைசமைத்திடப்பின் னன்மதிச்சந் தனத்தாதி தலைக்கறியிட்டுதவப், புல்கவரும் வயிரவர்தா மகிழ்ந்துமகவருளப் போற்றியவர் சிவனருளே பொருந்தினரே.

(இ-ள்.) பல்குமருத்துவரதிபர்=புகழ்பரம்பிய மாமாத்திரகுலத்தில் அவதரித்த முதல்வர்; செங்காட்டங்குடிவாழ்படைத்தலைவர்=திருச்செங்காட்டங்குடியின்கண்வாழ்ந்த சேனாதிபர்; அமுதளிக்கும்பரஞ்சோதியார்=சிவன் அடியார்களுக்கு மெய்யன்போடு அமுதுபடைக்கும் பரஞ்சோதியாரென்னும்; மெய்ச்செல்வமிகுசிறுத்தொண்டர்=மெய்ம்மையான செல்வத்தையுடைய சிறுத்தொண்டநாயனார்; காழிநாடன் றிருவருள்சேர்ந்தவர்=ஆளுடையபிள்ளையார் திருப்பதிகத்திற்பாடுந் திருவருளைப்பெற்றவர்; வளருஞ்சீராளன்றன்னை=அவர் தன்னிடத்து வளரும் தன்புதல்வனாகிய சீராளனை; நல்குதிருவெண்காட்டுநங்கை சமைத்திடப்பின்=இன்பத்தை விளைக்கும் திருவெண்காட்டு நங்கையென்னும் தம்மனைவியார் சமைக்கப்பின்; நன்மதிச்சந்தனத்தாதி தலைக்கறியிட்டுதவ=நல்ல புத்தியையுடைய சந்தனத்தாதியார் தலைக்கறிசமைத்துக்கொடுக்க; புல்கவரும்வயிரவர்தா மகிழ்ந்துமகவருள=அதனை யமுதுசெய்யும்படிக் கெழுந்தருளிய வயிரவமதச் சிவயோகியாய் வேடங்கொண்டுவந்த சிவபிரான் திருவுளங் களிகூர்ந்து அப்புத்திரன் உயிர்பெற்றுவரும்படி அருளிச்செய்ய; போற்றியவர்சிவனருள்பொருந்தினர்=வணங்கி அந்நாயனார் மனைவி புதல்வன் தாதியென்னும் இவர்களோடு சிவபிரான் திருவருளையடைந்தார்.—எ-று. (௪௧)
ஏ - இரண்டும் அசை.

## சேரமான்பெருமாணாயனார்புராணம்.

காவலர்ம கோதையார் கொடுங்கோளூர்க்கோ கழறியவை யறிந்தகோ சிலம்போசைக்கருத்தார், நாவலர்கோ னண்பரடிச் சேரனென்றே நவின்றுவரும் வண்ணானை நயந்தகோநற், பாவலர்கோப் பாணபத்திரனல்வாய்ந்த பரமர்திரு முகம்வாங்கிப் பணிகோவெற்பின், மேவியகோ வானைக்குக் குதிரைவைத்த வீரர்கோ வெனையாளுஞ் சேரர்கோவே.

(இ-ள்.) காவலர்மகோதையார் கொடுங்கோளூர்க்கோ=அரசராகிய மகோதையாரென்னும் பெயரையுடைய மலையாளத்தின்கணுள்ள கொடுங்கோளூரில் வாழ்ந்த முதல்வரும்; கழறியவையறிந்தகோ=உயர்திணைப்பொருளும் அஃறிணைப்பொருளுமாகிய எல்லாங்கூறும் உரையும் ஒலியுமாகிய பொருளி

ணுண்மையையறிந்த முதல்வரும்; சிலம்போசைக்கருத்தார்=திருச்சிலம்போசையில் வைத்த கருத்தினையுடையவரும்; நாவலர்கோனன்பர்=நம்பியாரூரருக்கு நேசரும்; அடிச்சேரனென்றேநயந்துவரும்வண்ணானைநயந்தகோ=அடியேன் சேரனென்று விரும்பி எதிரில்வரும் வண்ணானை வழிபட்ட முதல்வரும்; நற்பாவலர்கோ=நல்ல கவிவாணர்க்கு முதல்வரும்; பாணபத்திரனால்வாய்ந்த=பாணபத்திரரால் கொடுக்கப்பட்ட; பரமர்திருமுகம்வாங்கிப்பணிகோ=சிவபிரான் திருமுகத்தைப்பெற்று வணங்கிய முதல்வரும்; வெற்பின்மேவியகோவானைக்கு=திருக்கயிலையிற்சென்ற திருவெள்ளானைக்குமுன்; குதிரைவைத்தவீரர்கோ=தன்குதிரையை நடாத்திய வீரமுள்ள முதல்வருமாயுள்ளவர்; எனையாளுஞ்சேரர்கோ=என்னை யடிமைக்கொள்ளும் சேரமான்பெருமாணாயனார்.—எ-று. ஏ-அசை. (௪௨)

மாகோதையென்றது மகோதையென விகாரமாயிற்று.

## கணநாதநாயனார்புராணம்.

கந்தமலி வயற்காழி மறையோரேத்துங் கணநாதர் திருத்தோணிக் கடவுளார்க்கு, நந்தவனம் பலவமைத்து மலருங்கொய்து நற்றாமஞ் சொற்றாம நயந்துசாத்தி, வந்தவரைத் தொண்டாக்கிப் பணிகள்பூட்டி வாதுசெய்த வாரணத்தை மகிழ்ந்துவாழ்த்திப், புந்திமகிழ்ந் தரனருளாற் கயிலைமேவிப் பொருவில்கணத் தவர்காவல் பொருந்தினாரே.

(இ-ள்.) கந்தமலிவயற்காழிமறையோரேத்துங்கணநாதர்=மணங்கமழும் வயல்சூழ்ந்த சீகாழியில் மறையவர் துதிக்கும் கணநாதநாயனார்; திருத்தோணிக்கடவுளார்க்கு நந்தவனம்பலவமைத்து=திருத்தோணியப்பருக்குப் பல திருநந்தவனங்கள் வைத்து; மலருங்கொய்துநற்றாமஞ்சொற்றாமநயந்துசாத்தி=அதிலுள்ள பூக்களையுமெடுத்து நல்ல மலர்மாலைகளையும் பாமாலைகளையும் விரும்பிச்சாத்தி; வந்தவரைத்தொண்டாக்கிப் பணிகள்பூட்டி=தம்மையடைந்த அடியார்களைத் தொண்டுபடுத்தி அவர்க்குத் திருப்பணிவிடைகளை ஏற்படுத்தி; வாதுசெய்தவாரணத்தைமகிழ்ந்துவாழ்த்தி=சமணரோடு வாதுசெய்த ஆளுடையபிள்ளையாரை மனமகிழ்ந்து துதித்து; புந்திமகிழ்ந்தரனருளாற்கயிலைமேவி=உள்ளங்களித்துச் சிவபிரான் திருவருளினாற் றிருக்கயிலையையடைந்து; பொருவில்கணத்தவர்காவல்பொருந்தினார்=ஒப்பற்ற சிவகணநாதராம் முறைமையைப்பெற்றார்.—எ-று. ஏ-அசை. (௪௩)

## கூற்றுவநாயனார்புராணம்.

குன்றாத புகழாளர் களந்தைவேந்தர் கூற்றுவனார் மாற்றலர்மண் கொண்டுசூடப், பொன்றாழு முடிவேண்டப் புலியூர்வாழும் பூசுரர்கள் கொடாதகலப் புனிதனீந்த, மன்றாடுந் திருவடியே முடியாச்சூடி மாநிலங்காத் திறைவனுறை மாடக்கோயிற், சென்றாசை யுடன் வணங்கிப் பணிகள்செய்து திருவருளா லமருலகஞ் சேர்ந்துளாரே.

(இ-ள்.) குன்றாதபுகழாளர்களந்தைவேந்தர் கூற்றுவனார்=குறையாத புகழையுடையராய்க் களந்தையென்னும் ஊரையாண்ட குறுநிலமன்னவராகி

ய கூற்றுவநாயனார்; மாற்றலர்மண்கொண்டுசூடப்பொன்முடிவேண்ட=பகைவரது நிலத்தைக் கவர்ந்துகொண்டு தான் அரசாளும்பொருட்டுச் சூடிக்கொள்ளப் பொன்னாற்செய்த மகுடத்தைக்கேட்க; புலியூர்வாழும்பூசுரர்கள் கொடாதகல=தில்லைவாழந்தணர்கள் கொடாது அவ்வூரினின்றும் நீங்கிப்போக; புனிதனீந்தமன்றுடுந்திருவடியேமுடியாச்சூடி=அதனால் சிவபிரான் சூட்டிய கனகசபையின்கண் ஆடியருளும் திருவடியையே முடியாகத் தியானித்துக்கொண்டு; மாநிலங்காத்திறைவனுறைமாடக்கோயிற்சென்று=பெரிய பூமி முழுதையுங் காவல்செய்து சிவபிரான் வீற்றிருந்தருளும் மாடங்களமைந்த திருக்கோயில்கடோறு மெழுந்தருளி; ஆசையுடன்வணங்கிப்பணிகள்செய்து=பேரன்போடு தொழுது திருப்பணிகளையுஞ்செய்து; திருவருளாலமருலகஞ்சேர்ந்துளார்=சிவபிரான் திருவருளால் வீற்றிருந்தருளும் சிவலோகத்தையடைந்தார்.—எ-று. ஏ-அசை. (௪௪)

## பொய்யடிமையில்லாதபுலவர்புராணம்.

பொய்யறியாக் கபிலரொடு பரணராதிப் புலவோர்பொற் பார்கலைகள் பொருந்தவோதிச், செய்யுளிடை வளராசு மதுரநல்ல சித்திரவித் தாரமெனத் தெரிக்குஞ்செம்மை,மெய்யுடைய தொடைகளெல்லா மன்றுளாடன் மேவியகோ னிருதாளில் விரவச்சாத்திக், கையுடையஞ் சலியினரா யருளான்மேலைக் கருதரிய வமருலகங் கைக்கொண்டாரே.

(இ-ள்.) பொய்யறியாக்கபிலரொடுபரணராதிப்புலவோர்=கபிலர் பரணர் முதலான பொய்யடிமையில்லாப்புலவர்கள்; பொற்பார்கலைகள்பொருந்தவோதி=அழகமைந்த பலநூல்களையும் ஐயந்திரிபற உணர்ந்து; செய்யுளிடைவளராசுமதுரம்=செய்யுளியலிற் கூறப்படும் ஆசுகவி மதுரகவி; நல்லசித்திரவித்தாரமெனத்தெரிக்கும்=நல்ல சித்திரகவி வித்தாரகவியாகப்பாடும்; செம்மைமெய்யுடையதொடைகளெல்லாம்=செவ்விய மெய்ம்மையமைந்த பிரபந்தங்களெல்லாம்;மன்றுளாடல்மேவியகோனிருதாளில்விரவச்சாத்தி=கனகசபையின்கண் ஆனந்தநிருத்தஞ்செய்தருளும் சிவபிரானது இரண்டுபாதங்களில் பொருந்தும்வண்ணம் சூட்டி; கையுடையஞ்சலியினராய்=தொழுத கையுடையவர்களாய்; அருளான்மேலைக்கருதரியவமருலகங் கைக்கொண்டார்=சிவபிரான் திருவருளினால் நினைத்தற்கரியதாய் மேலுள்ள அழியாத சிவபதத்தையடைந்தனர்.—எ-று. ஏ-அசை. (௪௫)

## புகழ்ச்சோழநாயனார்புராணம்.

பொழின்மருவுங் கருவூர்வாழ் புகழார்சோழர் போதகம்போலென்னுயிரும் போக்குமென்றே, யழலவிர்வாள் கொடுத்தபிரா னதிகைமான்மே லடர்ந்தபெரும் படையேவ வவர்கொண்டேய்ந்த, தழல்விழிகொ டலைகாண்பார் கண்டதோர்புன் சடைத்தலையை முடித்தலையாற் றாழ்ந்துவாங்கிக், கழல்பரவி யதுசிரத்தி னேந்திவாய்ந்த கனன்மூழ்கி யிறைவனடி கைக்கொண்டாரே.

(இ-ள்.) பொழின்மருவுங் கருவூர்வாழ் புகழார்சோழர்—சோலைசூழும் திருக்கருவூரின்கண் வாழ்ந்த புகழ்ச்சோழநாயனார்; போதகம்போலென்னுயிரும்போக்குமென்று—பட்டத்துயானையின் உயிரை நீக்கியதுபோல என்னுயிரையும் நீக்குமென்று; அழலவிர்வாள்கொடுத்தபிரான்—வெம்மையைக்காலுகின்ற உடைவாளை எறிபத்தநாயனார் கையிற்கொடுத்த முதல்வர்; அதிகைமான்மேலடர்ந்தபெரும்படையேவ—அதிகமானென்னுங் குறுநிலமன்னரிடத்து நெருங்கிய பெரிய சதுரங்கசேனைகளையும் போருக்கனுப்ப; அவர்கொண்டேய்ந்ததழல்விழிகொடலைகாண்பார்—அவர்கள் மாற்றரசர் சேனைத்தலைவரை அரிந்துகொண்டுவந்த தழல்போற் சிவந்த கண்ணையுடைய தலைகளைக் காண்கின்றவராய்; கண்டதோர்புன்சடைத்தலையைமுடித்தலையாற்றாழ்ந்துவாங்கி—அதன் நடுவே கண்ட ஒரு புல்லிய சடையையுடைய தலையைத் தமது முடியணிந்த சிரசினால் வணங்கி எடுத்து; கழல்பரவியதுசிரத்தினேர்திவாய்ந்தகனன்மூழ்கி—சிவபிரான் திருவடிகளைத் துதித்துக்கொண்டு அத்தலையைச் சிரசிற்றாங்கி அவ்விடத்தமைத்த நெருப்பில் முழுகி; இறைவனடிகைக்கொண்டார்—சிவபிரான் திருவடியடைந்தார்.—எ-று. ஏ-இரண்டும் அசை. (சகூ)

## நரசிங்கமுனையரைய நாயனார்புராணம்.

நாடுபுகழ் முனைப்பாடி நாடுமேய நரசிங்க முனையர்புவி நயந்து மன்று, ளாடுமவ ராதிரைநா ளடியார்க்கம்பொ னமுதளிப்பா ரொளிவெண்ணீ றணிந்துதூர்த்த, வேடமுடை யவர்க்கிரட்டிச் செம்பொனீந்து விடுத்தழகா ராலயங்கள் விளங்கச்செய்து, தோடலர்தாருடையபிரா னருளையாளத் தோன்றினா ரெனையருளி னூன்றினாரே.

(இ-ள்.) நாடுபுகழ்முனைப்பாடிநாட்டுமேயநரசிங்கமுனையர்—நிலவுலகத்திற் புகழ்பெற்ற திருமுனைப்பாடிநாட்டில் வாழ்ந்த நரசிங்கமுனையரையநாயனார்; புவிநயந்து—பூமியை அரசாண்டு; மன்றுளாடுமவராதிரைநாள்—கனகசபையின்கண் ஆடியருளும்பிரானது திருவாதிரைநாளில்; அடியார்க்கம்பொனமுதளிப்பார்—சிவனடியார்களுக்கு அழகிய பொன்னையும் திருவமுதையும் கொடுக்கின்றவர்; ஒளிவெண்ணீறணிந்துதூர்த்தவேடமுடையவர்க்கு—விளக்கமான திருவெண்ணீற்றையணிந்து தம்முடம்பில் தூர்த்தவேடமுடையராய்வந்த ஒருவருக்கு; இரட்டிச்செம்பொனீந்துவிடுத்து—இருமடங்கு சிவந்த பொன்னைக்கொடுத்தனுப்பி; அழகாராலயங்கள்விளங்கச்செய்து—சிறப்பமைந்த திருவாலயங்களை விளக்கமாகத் திருப்பணிசெய்து; தோடலர்தாருடையபிரானருளையாளத் தோன்றினார்—இதழ்விண்டலர்ந்த கொன்றைப்பூமாலையைத்தரித்த சிவபிரான் திருவருளை உடையராம்படிக்கு அவதரித்தவர் அவர்; எனையருளினூன்றினார்—என்னைத் திருவருளிற் கலப்பித்தவர்.—எ-று. (சள)

## அதிபத்தநாயனார்புராணம்.

அலையாருங் கடனாகை நகருள்வாழு மதிபத்தர் பரதவர்க ளதிபர்வேலை, வலைவாரி வருமீனிற் றலைமீனீசன் வார்கழற்கே யென்றுவிடு மரபார்பன்னாட், டலையான தொருமீனே சாரநாளுந் தந்தொழிலால் விடுத்துமிடி சாரச்செம்பொ, னிலையாரு மணிநயந்த மீனொன்றெய்த நீத்தருளா லிறைவனடி நேர்ந்துளாரே.

(இ-ள்.) அலையாருங்கடனாகைநகருள்வாழுமதிபத்தர்=அலையெறிகின்ற கடற்கரையின்கணுள்ள திருநாகைக்கண்வாழ்ந்த அதிபத்தநாயனார் என்னும்; பரதவர்களதிபர்=பரதவர்குலத்தில் அவதரித்த முதல்வர்; வேலைவலைவாரிவருமீனில்=கடலினிடத்து வலையாற்கவர்ந்துவரும் மீன்களுள்; தலைமீனீசன்வார்கழற்கேயென்றுவிடுமரபார்=தலைமையான ஒருமீனைச் சிவபிரான் திருவடிக்கென்று நாடோறும் விடுமியல்புடையவர் அவர்; பன்னாட்டலையானதொருமீனேசார=பலநாளும் வலைப்படுத்த மீன் முதன்மையான ஒன்றேவர; நாளுந்தந்தொழிலால்விடுத்துமிடிசார=நாள்தோறும் தந்நியமத்தின்வழி அதனைவிடுத்து வறுமையடைய; செம்பொனிலையாருமணிசயந்தமீனொன்றெய்தநீத்து=ஒருநாளில் சிவந்த பொன்னும் மணியும் சேர்ந்த ஓர்மீன்வர அதையும்விட்டு; அருளாலிறைவனடிசேர்ந்துளார்=திருவருளினால் சிவபிரான் திருவடியையடைந்தனர்.—எ-று. ஏ-அசை. (௪௮)

## கலிக்கம்பநாயனார்புராணம்.

கடவுளருட் கண்ணார்கள் பயிலுந்தொல்லைக் கடந்தைநகர் வணிகர்கலிக் கம்பரன்பர்க், கடிமையுற வமுதளிப்பா ரடியானீங்கி யருளுருவா யன்பருட னணையவேத்தி, யிடையிலவ ரடியிணையும் விளக்காநிற்ப விகழ்மனைவி கரகமலி யிரண்டுகையும், படியில்விழ வெறிந்தவள்செய் பணியுந்தாமே பரிந்துபுரிந் தரனருளே பற்றினாரே.

(இ-ள்.) கடவுளருட்கண்ணார்கள்பயிலும்=சிவபிரான் திருவருளையே கண்ணாகவுடைய அடியார்கள்வாழும்; தொல்லைக்கடந்தைநகர்வணிகர்கலிக்கம்பர்=பழமையான திருப்பெண்ணாகடத்தில்வாழ்ந்த வணிகர்குலத்தினராகிய கலிக்கம்பநாயனார்; அன்பர்க்கடிமையுற வமுதளிப்பார்=சிவனடியார்களுக்குப் பாங்காகத் திருவமுது படைக்கின்றவர்; அடியானீங்கியருளுருவாயன்பருடனணையவேத்தி=தன் ஏவலாளன் தன்னினின்றும் நீங்கித் திருவேடங்கொண்டு சிவனடியாருடன்வர அவனை வணங்கி; இடையிலவரடியிணையும்விளக்காநிற்ப=இடையில் அவர் பாதத்தையும் நீரால் விளக்க; இகழ்மனைவிகரகமலியிரண்டுகையும்=இவன் நம்ஏவலாளனென்று விளக்க நீர்விடாதொழிந்த கரகந்தாங்கிய தமது மனைவியாரது இரண்டுகையையும்; படியில்விழவெறிந்து=நிலத்தில் விழும்படியாக வெட்டி; அவள்செய்பணியுந்தாமேபரிந்து புரிந்தரனருள்பற்றினார்=அம்மனையாள் செய்யும் பணியையும் தாமே விரும்பிச்செய்து சிவபிரான் திருவருளையடைந்தார்.—எ-று. ஏ-இரண்டும் அசை. (௪௯)

## கலியநாயனார்புராணம்.

தடமதில்சூ ழொற்றியூர் நகருள்வாழுஞ் சக்கரப்பா டியர்குலமெய்த் தவமாயுள்ளார், படர்புகழார் கலியனார் நலியுங்கூற்றைப் பாய்ந்தவர்க்கு விளக்கெரிக்கும் பரிவான்மற்றோ, ருடலிலராய்ச் செக்குழல்வார்க் கதுவுநேரா துயர்மனைவி யைக்கொள்வா ருளருமின்றி, மிடறுதிர மகனிறைய வரியநாதன் வியன்கைகொடு பிடிப்பவருண் மேவினாரே.

(இ-ள்.) தடமதில்சூழொற்றியூர்நகருள்வாழும்=பெரிய மதில்சூழும் திருவொற்றியூரென்னும் நகரின்கண்வாழ்ந்த; சக்கரப்பாடியர்குலமெய்த்தவமாயுள்

ளார்—செக்காற்குலத்தினர் செய்த மெய்ம்மையான தவப்பயனுமுள்ளவர்; பட்ர்புகழார்கலியனார்—பரம்பிய புகழையுடைய கலியநாயனார்; நலியுங்கூற்றைப்பாய்ந்தவர்க்குவிளக்கெரிக்கும்பரிவால்—மார்க்கண்டேயரை வருத்திய இயமனை உதைத்தருளிய சிவபிரானுக்குத் திருவிளக்கேற்றும் மெய்யன்பால்; மற்றொருடலிலராய்ச்செக்குழல்வார்க்கு—வேறொருபொருளில்லாமல் கூலிக்குச் செக்காட்டுகின்றவர்க்கு; அதுவுநேராதயர்மனைவியைக் கொள்வாருளருமின்றி—அக்கூலித்தொழிலும் கிடையாமல் கற்பிலுயர்ந்த மனைவியாரை விற்கப்புக வாங்குவாருமில்லாமையால்; மிடறுதிரமகனிறையவரிய—தன்கழுத்திலுள்ள இரத்தமானது அகலினிடத்து நிறையும்படி அரியுங்கால்; நாதன்வியன்கைகொடுபிடிப்பவருண்மேவினார்—சிவபிரான் பெருமையான திருக்கரத்தால் பிடித்தருள அவர் திருவருளையடைந்தார்.—எ-று. ஏ-அசை. (௫௰)

## சத்திநாயனார்புராணம்.

விரிதருகா விரிநாட்டு வரிஞ்சியூர்வாழ் வேளாளர் சத்தியார் வி
மலர்பாதத், துரியவர்க ளடிபரவு மொருமையார்நா வோவாமே யை
ந்தெழுத்து முனைக்குநீரா, ரிருளின்மிட றுடையபிரா னடியார்தம்
மை யிகழ்வார்நாத் தண்டாயத் திடுக்கிவாங்கி, யரியுமது திருத்தொ
ழிலா வுடையார்மன்று ளாடியசே வடிநீழ லடைந்துளாரே.

(இ-ள்.) விரிதருகாவிரிநாட்டுவரிஞ்சியூர்வாழ் வேளாளர்சத்தியார்—பரம்பிய நீரையுடைய காவிரிநாட்டின்கணுள்ள வரிஞ்சியூரின்கண்வாழ்ந்த வேளாளமரபினராகிய சத்திநாயனார்; விமலர்பாதத்துரியவர்களடிபரவுமொருமையார்—சிவபிரான் திருவடிக்கண் அன்புபூண்டொழுகும் அடியர் திருவடிகளை வழிபடும் ஒருமைப்பாடுடையவர்; நாவோவாமேயைந்தெழுத்து முனைக்குநீரார்—தந்நாவினிடத்து நீங்காமல் திருவைந்தெழுத்தை யுச்சரிக்குங் குணமுடையவர்; இருளின்மிடறுடையபிரானடியார்தம்மை—இருள்போலுங் கரிய திருமிடற்றையுடைய சிவபிரான் திருவடியார்களை; இகழ்வார்நாத்தண்டாயத்திடுக்கிவாங்கி—இகழ்ந்துசொல்லும் மூர்க்கர்கள் நாவைப் பற்றுக்குறட்டால் இடுக்கியிழுத்து; அரியுமதுதிருத்தொழிலாவுடையார்—சூரியால் அரிதலையே தமக்குத் திருப்பணியாகக்கொண்டொழுகுவோர்; மன்றுளாடியசேவடிநீழலடைந்துளார்—கனகசபையின்கண் ஆனந்தநிருத்தஞ்செய்தருளும் குஞ்சிதபாத நிழலையடைந்தவர்.—எ-று. ஏ-அசை. (௫௧)

## ஐயடிகள்காடவர்கோனாயனார்புராணம்.

வையநிகழ் பல்லவர்தங் குலத்துவந்த மாமணிமா நிலமுழுது ம
கிழ்ந்துகாக்கு, மையடிகள் காடவர்கோ னருளானூல்க ளறிந்தரசு பு
ரிந்திடுத லமையுமென்றே, பொய்யனைய வுடல்வாழ்வு கழியுமாறு
பொருந்தியிடும் புகழ்வெண்பா புலியூர்மேவுஞ், செய்யதிரு வடிமுத
லாப் பதிகடோறுஞ் செப்பினு ரொன்வினைக டப்பினாரே.

(இ-ள்.) வையநிகழ்பல்லவர்தங் குலத்துவந்தமாமணி—நிலவுலகத்தின்கண் பரம்பிய புகழையுடைய பல்லவர்குலத்தில் அவதரித்த மாணிக்கம்போலும்;

மானிலமுழுதும்மகிழ்ந்துகாக்கு மையடிகள்காடவர்கோன்—பெரிய பூமிமுழு
தையும் மனமகிழ்ந்து காக்கின்ற ஐயடிகள்காடவர்கோன்நாயனார்; அருளானூ
ல்களறிந்து—சிவபிரான் திருவருளினால் வீட்டுநெறிக்குரிய மெய்ந்நூல்களை ஓ
தியுணர்ந்து; அரசுபுரிந்திடுதலமையுமென்று—அரசாட்சிசெய்தல் நமக்கினிச்
சாலுமென்று; பொய்யனையவுடல்வாழ்வுகழியுமாறு—பொய்போலத்தோன்றி
யழியும் உடம்பின்வாழ்க்கை நீங்கும்வண்ணம்; பொருந்தியிடும்புகழ்வெண்பா—
புகழ்பொருந்திய வெண்பாவை; புலியூர்மேவுஞ்செய்யதிருவடிமுதலா—சிதம்
பரத்தின்கண் நிருத்தஞ்செய்தருளும் செந்நிறமுடைய நடேசப்பிரான் திருவடி
யைத்தரிசித்து அத்தலமுதலாக; பதிகடோறுஞ்செப்பினார்—தலங்கள்தோறும்
பாடியருளினார்; என்வினைகடப்பினார்—என்னுடைய தீவினைகளை நீக்குவித்தார்.
—எ-று. ஏ-இரண்டும் அசை. (௫௰)

## கணம்புல்லநாயனார்புராணம்.

இலகுவட வெள்ளாற்றுத் தென்பால்வாழு மிருக்குவே ளூரதி
ப னெழிலார்சென்னிக், கலைநிலவா ரடிபரவுங் கணம்புல்லர்தில்லைக்
கருதுபுலீச் சரத்தாற்குக் காதற்றீப, நிலைதரத்தா மிடமிடியா லொரு
நாட்புல்லா னீடுவிளக் கிடவதுவு நேராதாகத், தலைமயிரி னெரிகொ
ளுவு மளவினாதன் றுவாதவாழ்வருளுந் தன்மையாரே.

(இ-ள்.) இலகுவடவெள்ளாற்றுத் தென்பால்வாழும்—புகழ்விளங்கிய
வடவெள்ளாற்றின் தென்றிசைக்கணுள்ள; இருக்குவேளூரதிபர்—இருக்குவே
ளூரின்கண் அவதரித்த முதல்வராகிய; எழிலார்சென்னிக்கலைநிலவாரடிபரவுங்
கணம்புல்லர்—அழகமைந்த திருமுடியின்கண் இளம்பிறைவீசும் நிலவையுடை
ய சிவபிரான் திருவடியைத்துதிக்கும் கணம்புல்லநாயனார்; தில்லைக்கருதுபுலீச்
சரத்தாற்கு—திருத்தில்லையின்கணுள்ள புலீச்சரத்தில் வீற்றிருந்தருளும் சிவ
பிரானுக்கு; காதற்றீபநிலைதரத்தாமிட—விருப்பங்கொடுக்குந் திருவிளக்கு நிலை
யாக இட்டுவர; மிடியாலொருநாட்புல்லானீடுவிளக்கிட—வறுமையால் ஒருநா
ள் கணம்புல்லுக்களினால் விளக்கேற்ற; அதுவுநேராதாக—அப்புல்லும் நியமித்
தகாலத்திற்கு விளக்கெரிக்க அமையாதிருக்க; தலைமயிரினெரிகொளுவுமளவி
ல்—தலைமயிரின்கண் அப்புல்லின்தீயைக் கொளுத்தும்பொழுது; நாதன்றுவா
தவாழ்வருளுந்தன்மையார்—சிவபிரான் அழியாத சிவானந்தவாழ்வைக் கொ
டுக்குந்தன்மையையுடையவர்.—எ-று. ஏ-அசை. (௫௧)

## காரிநாயனார்புராணம்.

திருக்கடவூர் வருமுரவோர் காரியாராந் திகழ்தொண்டர் வண்ட
மிழ்நூ றிருந்தவோதி, விருப்பொடுதம் பெயராற்பா விளம்பிமும்மை
வேந்தரையு முறைமுறையே மேவியங்க, ணுரைத்தவுரை நயமாக்கி
யவர்பாலெய்த வொண்பொருளா லாலயங்க ளோங்கச்செய்து, த
ரைக்குளருந் தவர்க்கேவ றகமுன்போற்றுந் தன்மையா லருள்சேர்ந்த
நன்மையாரே.

(இ-ள்.) திருக்கடவூர்வருமுரவோர்—திருக்கடவூரின்கண் அவதரித்த
அறிவினையுடையவராகிய; காரியாராந்திகழ்தொண்டர்—காரிநாயனாரென்னும்
புகழ்விளங்கிய திருத்தொண்டர்; வண்டமிழ்நூறிருந்தவோதி—வளவிய தமி

ற்றூல்களை நன்றாக ஓதியுணர்ந்து; விருப்பொடுதம்பெயராற்பாவிளம்பி—விருப்புடன் தமது திருப்பெயரினால் கோவைபாடி; மும்மைவேந்தரையுமுறைமுறையேமேவி—தமிழ்நாட்டு மூவேந்தரையுங் கிரமமாக அடைந்து; அங்கணுரைத்தவுரைநயமாக்கி—அவ்விடத்துப்பாடிய கோவையை அவர்முன் அரங்கேற்றி; அவர்பாலேய்ந்தவொண்பொருளாலாலயங்களோங்கச்செய்து—அவர் கொடுத்த பொருளினால் சிவாலயத்திருப்பணிசெய்து; தரைக்குளரூர்தவர்க்கு—நிலவுலகின்கண் அரியதவத்தையுடைய சிவனடியார்களுக்கு; ஏவுறுகமுன்போற்றுந்தன்மையால்—பணிவிடையைப் பொருந்தச்செய்யும் முறைமையினால்; அருள்சேர்ந்தநன்மையார்—சிவபிரான் திருவருளையடைந்த நன்மையை உடையவர்.—எ-று. ஏ-அசை. (ருச)

## நின்றசீர்நெடுமாறநாயனார்புராணம்.

கன்னன்மலி நெல்வேலிக் கவினார்மாறர் கவுரியர்கோ னமணரு று கலக்கமெல்லாம்,பொன்னெயில்சூழ் சிரபுரக்கோ னணையமாற்றிப் புனிதமிகு நீறணிந்து போற்றிசெய்து, மன்னுபுகழ் மங்கையருக் கரசியாரா மலர்மாது மணிமார்ப மகிழ்ந்துமாற்றார், வெந்நிடுதல் கண்டரசு புரிந்துகாழி வேந்தரருள் சேர்ந்தபெரு விறலினாரே.

(இ-ள்.) கன்னன்மலிநெல்வேலிக்கவினார்மாறர்கவுரியர்கோன்—கரும்புகள் மிக்கோங்கும் திருநெல்வேலியின்கண் வாழ்ந்த நின்றசீர்நெடுமாறநாயனாராகிய பாண்டியகுலமுதல்வர்; அமணருறுகலக்கமெல்லாம்—சமணர்களால்வந்த துயரங்களெல்லாம்; பொன்னெயில்சூழ்சிரபுரக்கோனணையமாற்றி—பொன்னாலாகிய மதில்சூழ்ந்த சீகாழியில் அவதரித்த ஆளுடையபிள்ளையார் எழுந்தருளிவர நீக்கி; புனிதமிகுநீறணிந்துபோற்றிசெய்து—தூய்மையான திருவெண்ணீற்றைத் தரித்துத்துதித்து; மன்னுபுகழ்மங்கையருக்கரசியாராமலர்மாது—நிலைபெற்ற புகழையுடைய மங்கையர்க்கரசியாரென்னும் திருமகள்போல்வாளது; மணிமார்பமகிழ்ந்து—அழகிய திருமார்பை விரும்பி; மாற்றார்வெந்நிடுதல்கண்டரசுபுரிந்து—மாற்றரசர்கள் புறங்கொடுக்கும்படி அரசாட்சிசெய்து; காழிவேந்தரருள்சேர்ந்தபெருவிறலினார்—அவ் ஆளுடையபிள்ளையார் திருவருளையடைந்த மிக்க வெற்றியையுடையவர்.—எ-று. ஏ-அசை. (ருரு)

## வாயிலார்நாயனார்புராணம்.

ஞாயிலார் மதிற்றொண்டை நாட்டுமேன்மை நண்ணுமயி லாபுரியின் வேளாண்டொன்மை, வாயிலார் மலைவில்லா னடியேபோற்றி மறவாமை தலைநின்ற மனமேசெம்பொற், கோயிலா வுயர்ஞானம் விளக்காநீராக் குலவியவா னந்தமன்பே யமுதாக்கொண்டு,தாயிலா னிருசரண நிகழவேத்துந் தன்மையா ரருள்சேர்ந்த நன்மையாரே.

(இ-ள்.) ஞாயிலார்மதிற்றொண்டைநாட்டு—உறுப்பமைந்த மதிலையுடைய தொண்டைநாட்டின்கண்; மேன்மைநண்ணுமயிலாபுரியில்—மேன்மைதங்கிய திருமயிலாப்பூரில்; வேளாண்டொன்மைவாயிலார்—பழைய வேளாளகுலத்தவதரித்த வாயிலார்நாயனார்; மலைவில்லானடிபோற்றிமறவாமைதலைநின்றமன

மே—மேருவில்லையுடைய சிவபிரான் திருவடிகளைத்துதித்து மறவாமை நிலை பெற்ற உள்ளமே; செம்பொற்கோயிலா—செம்பொன்னாலாய திருக்கோயிலாகவும்; உயர்ஞானம்விளக்கா—உயர்ந்த சிவஞானமே திருவிளக்காகவும்; குலவியவானந்தம்நீரா—விளங்கிய ஆனந்தமே திருமஞ்சனமாகவும்; அன்பேயமுதாக்கொண்டு—பேரன்பே திருவமுதாகவும் அமைத்துக்கொண்டு; தாயிலானிருசரணநிகழவேத்துந்தன்மையார்—தனக்கோர் தாய்தந்தையையில்லாத சிவபிரான் திருவடியைப் பொருந்தத்துதிக்குங் குணத்தையுடையவர்; அருள்சேர்ந்தநன்மையார்—திருவருளையடைந்த நன்மையையுடையவர்.—எ-று. (௫௬)

ஏ-இரண்டும்-அசை.

## முனையடுவார் நாயனார் புராணம்.

பொன்னிவளந் தருநாட்டுப் புகழுநீடூர்ப் பொருவிறிரு மலிவேளாண் டொன்மைமிக்கார், முன்னியவர் முனையடுவா ரிகலார்போரின் முரணழிவார் தமக்காக மொழிந்தகூலி,மன்னுநிதி கொண்டுசயங் கொடுத்துவந்த வளர்பொருளா லிறைவனடி வழுவாவன்பர்க், கன்னமவர் நசையின்மிக மிசையநல்கு மன்பர்துன்ப மவையாவு மகன்றுளாரே.

(இ-ள்.) பொன்னிவளந்தருநாட்டுப்புகழுநீடூர்—காவிரிநதியானது பல வளங்களைக்கொடுக்கும் சோழநாட்டிற் புகழமைந்த திருநீடூரின்கண்வாழ்ந்த; பொருவிறிருமலிவேளாண்டொன்மைமிக்கார்—ஒப்பற்ற செல்வமிக்க பழைய வேளாண்குடியிற்சிறந்தவர்; முன்னியவர்முனையடுவார்—தன்னோடெதிர்த்த பகைவரது போர்முனையைக்கெடுத்தலின் முனையடுவார்நாயனாரென்னுந் திருப்பெயருடையவர்; இகலார்போரின்முரணழிவார்—பகைமிக்க போரில் வலியிழந்தவர்கள்; தமக்காகமொழிந்தகூலிமன்னுநிதிகொண்டு—தமக்கென்று நியமித்த கூலிப்பொருளைக்கொண்டு; சயங்கொடுத்துவந்தவளர்பொருளால்—வெற்றியைக்கொடுத்து அதனால்வந்த மிக்க பொருளினால்; இறைவனடிவழுவாவன்பர்க்கு—சிவபிரான் திருவடியை நீங்காத பேரன்புடைய அடியார்க்கு; அன்னமவர்நசையின்மிகமிசையநல்குமன்பர்—திருவமுதை அவர் இச்சைவழி மிகவும் அமுதுசெய்யக்கொடுக்கும் அன்பையுடையவர்; துன்பமவையாவுமகன்றுளார்—எல்லாத்துயரங்களினின்றும் நீங்கினவர்.—எ-று. ஏ-அசை. (௫௭)

## கழற்சிங்கநாயனார்புராணம்.

காடவர்தங் குலமுவந்த கழலார்சிங்கர் காதன்மிகு தேவியுடன் காவலாரூ, ராடவல பெருமானைப் பணிவாரங்கோ ரகன்றமலர் தனைமோந்த வரிவைமூக்கைச், சேடுடைய செருத்துணையா ரரியக்கேட்டுத் திறலரசர் மலரெடுத்த செங்கையென்றே, சூடகமுன் கைதடிந்து ஞாலங்காத்த தூய்மையா ரருள்சேர்ந்த வாய்மையாரே.

(இ-ள்.) காடவர்தங்குலமுவந்தகழலார்சிங்கர்—பல்லவரென்னுங் காடவர்குலத்துக்கு முதல்வராகிய கழற்சிங்கநாயனார்; காதன்மிகுதேவியுடன்காவலாரூர்—தனக்கன்புமிக்க மனையாளோடு திருவாரூரையாளும்; ஆடவலபெரு

மானைப்பணிவார்=தியாகப்பிரானை வணங்குங்கால்; அங்கோரகன்றமலர்தனை மோந்தவரிவைமூக்கை=அவ்வாலயத்துத் திருமாலைக்குறட்டினின்றும் தவிர்ந்த பூவை எடுத்து மோந்த அம்மனையாள் மூக்கை; சேடுடையசெருத்துணையாரரியக்கேட்டு=நன்மைமிக்க செருத்துணைநாயனார் அரிந்ததனைக் கேள்வியுற்று; திறலரசர்மலரெடுத்தசெங்கையென்று=தாமும் அப்பூவை எடுத்த கையிதுவென்று; சூடகமுன்கைதடிந்துஞாலங்காத்ததூய்மையார்=வளையலணிந்த அம்மனையாள் முன்கையை வெட்டி நிலவுலகத்தை அரசாண்ட தூய்மையையுடையவர்; அருள்சேர்ந்தவாய்மையார்=சிவபிரான் திருவருளையடைந்த மெய்யன்பர்.—எ-று. ஏ-இரண்டும்-அசை. (ருஅ)

## இடங்கழிநாயனார்புராணம்.

கோநாட்டுக் கொடும்பாளூ ரிருக்கும்வேளிர் குலத்தலைவ ரிடங்கழியார் கொங்கிற்செம்பொ, னானேற்றூர் மன்றின்முக டம்பொன் மேய்ந்த வாதித்தன் மரபோர்நெற் கவர்ந்தோரன்பர், போநாப்ப ணிருளின்கட் காவலாளர் புரவலர்முன் கொணரவவர் புகலக்கேட்டு, மானேற்றூ ரடியாரே கொள்கவென்று வழங்கியர சாண்டருளின் மன்னினாரே.

(இ-ள்.) கோநாட்டுக் கொடும்பாளூரிருக்கும்=கோநாட்டின்கணுள்ள கொடும்பாளூரில் வாழும்; வேளிர்குலத்தலைவரிடங்கழியார்=குறுநிலமன்னவருள் முதல்வராகிய இடங்கழிநாயனார்; கொங்கிற்செம்பொன்=கொங்கின்கணுள்ள உயர்ந்த செம்பொன்னால்; ஆனேற்றூர்மன்றின்முகடம்பொன்மேய்ந்தவாதித்தன்மரபோர்=இடபக்கொடியையுடைய நடேசப்பிரானது கனகசபையின் முகட்டை ஒளியுண்டாம்படி அலங்கரித்த சோழவமிசத்தையுடையவர்; நெற்கவர்ந்தோரன்பர்போநாப்பணிருளின்கண்=நெல்லைக் களவுசெய்துகொண்டு ஓரடியார் செல்லும் யாமவிருளில்; காவலாளர்புரவலர்முன்கொணர=அந்நெற்காவலாளர்கள் அவ்வடியாரைத் தம்முன் கொண்டுவர; அவர்புகலக்கேட்டு=அவர் அடியார் திருவமுதுக்கில்லாமையால் இவ்வாறு செய்தேனென்று கூற அதனைக்கேட்டு; மானேற்றூரடியாரேகொள்கவென்றுவழங்கி=இடக்கரத்தில் மானையேந்திய சிவபிரான் அடியவர்களே இப்பண்டாரத்தைக் கொள்ளக்கடவென்று கொடுத்து; அரசாண்டருளின்மன்னினார்=நிலவுலகத்தை அரசாண்டு திருவருளிற்சேர்ந்தார்.—எ-று. ஏ-அசை. (ருகூ)

பண்டாரம் என்புழி பொன் நெல்என்னும் இருவகைப்பண்டாரமுங்கொள்க.

## செருத்துணைநாயனார்புராணம்.

இரைத்தணையார் புனற்பொன்னி மருகனன்னாட் டெழிலாருந் தஞ்சைநக ருழவரேத்துஞ், செருத்துணையார் திருவாரூர் சேர்ந்துவாழ்வார் செல்வமிகும் பல்லவர்கோன் றேவிவீழ்ந்த, மருத்துணையார் மலரெடுத்து மோப்பக்கண்டு வளமலிபூங் கத்தியா லவண்மூக்கீர்ந்த, கருத்துணையார் விறற்றிருத்தொண் டினையேசெய்து கருதலருமமருருலகங் கைக்கொண்டாரே.

(இ-ள்.) இரைத்தலையார்புனற்பொன்னி மருகனன்னாட்டு=ஒலித்துக் கரையில் அலைமோதுகின்ற நீரையுடைய காவிரிசூழ்ந்த மருகல்நாட்டில்; எழிலாருந்தஞ்சைநகருழவர்=அழகமைந்த தஞ்சைநகரின்கண் வாழ்ந்த வேளாளமரபினராய்; எத்துஞ்செருத்துணையார்=யாவரும் புகழுஞ் செருத்துணைநாயனார்; திருவாரூர்சேர்ந்துவாழ்வார்=திருவாரூரின்கண் திருப்பணிசெய்து வாழ்பவர்; செல்வமிகும்பல்லவர்கோன்றேவி=செல்வமிக்க பல்லவர்குலத்தரசராகிய கழற்சிங்கநாயனார் மனைவி; வீழ்ந்தமருத்துணையார்மலரொடுத்துமோப்பக்கண்டு=திருமாலைக்குறட்டினின்றுந் தவறிவீழ்ந்த வாசனையோடு இதழொத்த பூவை எடுத்துமோந்ததைக்கண்டு; வளமலிபூங்கத்தியால்=வளமைமிக்க பொல்வினையுடைய ஓர் சூரியினால்; அவண்மூக்கீர்ந்த=அவளது மூக்கையரிந்த; கருத்துணையார்=என்பிறவித்துயரத்தை நீக்குந் துணையாயுள்ளவர்; சிறந்திருத்தொண்டினையேசெய்து=பத்திவலிமிக்க திருத்தொண்டினையே செய்து; கருதலருமமருலகங் கைக்கொண்டார்=நினைத்தற்கரிய அழியாத சிவபதத்தை யடைந்தார்.—எ-று. ஏ-அசை. (௯௦)

## புகழ்த்துணைநாயனார்புராணம்.

புண்ணியர்கள் புகழழகார் திருப்புத்தூர்வாழ் புகழ்த்துணையாரகத்தடிமைப் புனிதர்சின்னாண், மண்ணிகழ மழைபொழியா வற்காலத்தால் வருந்துடல நடுங்கிடவு மணிநீரேந்தி, யண்ணன்முடி பொழிகலச முடிமேல்வீழ வயர்ந்தொருநாட் புலம்பவர னருளாலீந்த, நண்ணலரு மொருகாசுப் படியால்வாழ்ந்து நலமலிசீ ரமருலக நண்ணினாரே.

(இ-ள்.) புண்ணியர்கள்புகழழகார்திருப்புத்தூர்வாழ்புகழ்த்துணையார்=அடியார்கள் துதிக்கும் அழகமைந்த செருவிலிபுத்தூரின்கண்வாழ்ந்த புகழ்த்துணைநாயனார்; அகத்தடிமைப்புனிதர்=அகத்தடிமைசெய்யும் சிவமறையவர்; சின்னாண்மண்ணிகழமழைபொழியாவற்காலத்தால்=சிலநாள் நிலவுலகம் ஓங்கும்படி மழைபெய்யாத பஞ்சகாலத்தால்; வருந்துடலநடுங்கிடவும்=வருந்திய உடம்பானது நடுக்கமெய்தவும்; மணிநீரேந்தியண்ணல்முடிபொழிகலசம்=அழகிய திருமஞ்சனத்தை எடுத்துச் சிவபிரான் திருமுடியில் ஆட்டுகின்ற கலசமானது; முடிமேல்வீழவயர்ந்தொருநாட்புலம்ப=சிவபிரான் திருமுடியில் தவறிவிழ வருந்தி ஒருநாள் துயருற; அரனருளாலீந்தநண்ணலருமொருகாசுப்படியால்வாழ்ந்து=சிவபிரான் திருவருளினாற்கொடுத்த யாவருக்கும் கிடையாத அரிய ஓர் பொற்காசுப்படித்தரத்தால் வாழ்வடைந்து; நலமலிசீரமருலகநண்ணினார்=நன்மைமிக்க சிறப்பமைந்த சிவபதவியடைந்தார்.—எ-று. ஏ-அசை.

## கோட்புலிநாயனார்புராணம்.

குலவுபுகழ் நாட்டியத்தான் குடிவேளாளர் கோட்புலியார் குவித்துயர்த்த செங்நெற்கூடு, நிலவணிவார்க் கமைத்தானை நிறுத்தியொன்னார் நேர்மலைவார் திருவாணை நினையாதேநெற், சிலமிடியா லழித்தபடி யறிந்துவாளாற் சேர்ந்தபெருங் கிளைஞருடல் சிதறவீசி, யிலகுமொரு குழவியையு மெறிந்துநாத னெண்ணரிய கருணைநிழ லெய்தினாரே.

(இ-ள்.) குலவுபுகழ்நாட்டியத்தான் குடிவேளாளர்கோட்புலியார்=விளங்கிய புகழையுடைய நாட்டியத்தான்குடியில் அவதரித்த வேளாளமரபினராகிய கோட்புலிநாயனார்; குவித்துயர்த்த செந்நெற்கூடு=குவித்துயர்த்திச் சேர்கட்டிய சம்பாநெற்கூட்டை; நிலவணிவார்க்கமைத்தாணைநிறுத்தி=சிவபிரானுக்கென்று நியமித்துத் திருவிரையாக்கலி என்னுந் திருவாணையை நிறுத்தி; ஒன்னார்நேர்மலைவார்=பகைவரோடெதிர்த்துப் போர்செய்கின்ற அவரது; திருவாணைநினையாது=திருவாணையை நினையாமல்; நெல்சிலமிடியாலழித்தபடியறிந்து=அந்நெல்லிற் சிலவற்றைத் தமக்கு நேரிட்ட வறுமையால் செலவுசெய்தமையை அறிந்து; வாளால்சேர்ந்தபெருங்கிளைஞருடல்சிதறவீசி=வாளினால் தம்மனையுட்கூடியிருந்த மிக்க சுற்றத்தாரது உடம்பைச் சிதறும்படி வெட்டி; இலகுமொருகுழவியையுமெறிந்து=விளங்குகின்ற தனது ஓர்குழந்தையையும் துணித்து; நாதனெண்ணரியகருணைநிழலெய்தினார்=சிவபிரானுடைய நினைத்தற்கரிதாகிய திருவருணிழலடைந்தார்.—எ-று. ஏ-இரண்டும்-அசை. (௬௨)

## பத்தராய்ப்பணிவார்கள்புராணம்.

தொண்டரடித் தொழல்பூசைத் தொழின்மகிழ்தலழகார் துளங்கியவர்ச் சனைபுரித றொகுநியமங்கள், கொண்டபணி திருவடிக்கே கொடுத்தலீசன் குணமருவு மருங்கதையைக் குலவிக்கேட்டு, மண்டிவிழி துளும்பன்மயிர் சிலும்பலுன்னன் மருவுதிருப் பணிகாட்டி வருபவாங்கி, யுண்டிகொளா தொழிதலென விவையோரெட்டு முடையரவர் பத்தரென வுரைத்துளாரே.

(இ-ள்.) தொண்டரடித்தொழல்பூசைத்தொழில்மகிழ்தல்=அடியார் திருவடிகளை வணங்குதலும் சிவபூசையைத் தரிசித்து மகிழ்ச்சியடைதலும்; அழகார்துளங்கியவர்ச்சனைபுரிதல்=அழகார்ந்த விளக்கமான சிவபூசையைச் செய்தலும்; தொகுநியமங்கள்கொண்டபணிதிருவடிக்கேகொடுத்தல்=பலவகை நியமங்களும் தாங்கொண்ட திருப்பணியையும் சிவபிரான் திருவடிக்கே அர்ப்பணஞ்செய்தலும்; ஈசன்குணமருவுமருங்கதையை=சிவபிரானது நன்மைமிக்க அரிய சரிதங்களை; குலவிக்கேட்டுமண்டிவிழிதுளும்பல்=பாராட்டிக்கேட்டுக் கண்களில் நெருங்கும்படி யானந்தநீர் சொரிதலும்; மயிர்சிலும்பலுன்னல்=மயிர்க்கூச்செறிதலும் திருவடியைச் சிந்தித்தலும்; மருவுதிருப்பணிகாட்டிவருபவாங்கியுண்டிகொளாதொழிதல்=மேன்மைதங்கிய திருப்பணிகளைச் செய்வதாகக்கூறி அதனால்வரும் பொருள்களை வாங்கித் தான் அப்பொருளால் சீவியாதிருத்தலும்; எனவிவையோரெட்டுமுடையரவர்பத்தரெனவுரைத்துளார்=என்னும் இவ்வெண்வகைப்பத்தியையுடையரே பத்தரென்று சொல்லப்படுவர்.—எ-று. ஏ-அசை. (௬௩)

## பரமனையேபாடுவார்புராணம்.

அருந்தமிழால் வடகலையா லருளாலொன்று லறிவுநெறி மருவுமருங் கவிகள்யாவுந், திருந்தியவா னவர்பணிய மன்றுளாடுந் தேவர்பிரான் கழலிணையே சேரவோதி, விருந்திடுநா வுடையபயன் மேவினோர்தா மேலானோ மெனமகிழ்ந்து விழிநீர்சோரப், பரிந்தருளாற் பரமனையே பாடவல்ல பான்மையா ரெமையாளு மேன்மையாரே.

(இ-ள்.) அருந்தமிழால் வடகலையா லருளாலொன்றால்—அரிய தமிழ்மொழியினாலேனும் ஆரியமொழியினாலேனும் இவ்விரண்டுமேயன்றிப் பிராகிருதம் தேசிகம்முதலிய ஒன்றாலேனும்; அறிவுநெறிமருவுமருங்கவிகள்யாவும்—மெய்யுணர்ச்சி வாயிலாகவரும் அரிய ஆசு முதலிய நாற்கவிகளையும்; திருந்தியவானவர்பணியமன்றுளாடும்—திருத்தமான தேவர்கள் வணங்கும்படி கனகசபையின்கண் திருத்தஞ்செய்தருளும்; தேவர்பிரான்கழலிணையேசேரவோதி—சிவபிரான் திருவடிகளையே பொருந்தும்படி பாடி; விருந்திடுநாவுடையபயன்மேவினோர்—கேட்போர் செவிக்கு விருந்தாகச்செய்யும் நாவின்வளத்தையடைந்தவர்கள்; தாமேலானோமெனமகிழ்ந்துவிழிநீர்சோரப்பரிந்து—தாம் உலகர் யாவர்க்கும் மேலானோமென்று மகிழ்ச்சியடைந்து ஆனந்தக்கண்ணீர் சொரிய விரும்பி; அருளாற்பரமனையேபாடவல்லபான்மையார்—திருவருளினாற் பரமனையேபாடுவாரென்று சொல்லப்படுவார்; எமையாளுமேன்மையார்—அவர் எம்மை யடிமைக்கொள்ளும் மேன்மையுடையவர்.—எ-று. ஏ-அசை. ()

## சித்தத்தைச்சிவன்பாலேவைத்தார்புராணம்.

பாரணவும் புலனந்தக் கரணமொன்றும் படராமே நடுநாடி பயிலுநாதங், காரணபங் கயன்முதலா மைவர்வாழ்வுங் கழியுநெறி வழிபடவுங் கருதிமேலைப், பூரணமெய்ப் பரஞ்சோதிப் பொலிவுநோக்கிப் புணர்ந்தணைந்த சிவாநுபவ போகமேவுஞ், சீரணவு மவரன்றோ வெம்மையாளுஞ் சித்தத்தைச் சிவன்பாலே வைத்துளாரே.

(இ-ள்.) பாரணவும்புலனந்தக்கரணமொன்றும்படராமே—உலகைச்சார்ந்த புலன்களில் அந்தக்கரணங்கள் ஒன்றேனும் பொறிவழிச்சென்று பற்றாமல் பிராணாயாமத்தின்பின் பிரத்தியாகாரம் செய்து பின்; நடுநாடிபயிலுநாதம்—சுழுமுனையின் அந்தர்க்கதமாகச் சஞ்சரிக்கின்ற சிவமந்திரமென்னும் பிரதான நாதமானது; காரணபங்கயன்முதலாமைவர்வாழ்வும்—சிருட்டித்தொழிற்குக் காரணனான பிரமன்முதல் ஐந்துகர்த்தாக்களுடைய தானங்களையும்; கழியுநெறிவழிபடவுங்கருதி—மேற்சென்று நீங்கும் முடிவில் தியானமுஞ்செய்து; மேலைப்பூரணமெய்ப்பரஞ்சோதிப்பொலிவுநோக்கி—நிராதாரபுவனத்திலிருக்கின்ற வியாபகமான சிவதேசசின் பொலிவைக்கண்டு; புணர்ந்தணைந்தசிவானுபவபோகமேவும்—அதனோடுகூடி அதனால் உண்டான சிவானந்தவாழ்வை யனுபவிக்கும்; சீரணவுமவரன்றோவெம்மையாளும்—சிறப்பமைந்த சிவயோகிகளன்றோ எம்மை யடிமைக்கொள்ளும்; சித்தத்தைச்சிவன்பாலேவைத்துளார்—சித்தத்தைச் சிவன்பால் வைத்தாரென்று சொல்லப்படுவார்.—எ-று. ஏ-அசை.()

தியானமுஞ்செய்து என்னும் உம்மையால் சமாதியுஞ்செய்தென்க. பொலிவுநோக்கி என்றதனாற் சாட்சாத்காரமுங்கொள்க. சைவாசாரியர் தியானசமாதிகளைச் சாட்சாத்காரத்திற்கங்கமெனவும் யோகநூலார் சமாதிக்கங்கமெனவுங்கொள்வர்.

## திருவாரூர்ப்பிறந்தார்புராணம்.

பொங்கியமா தவமுடையார் வருணநான்கிற் பொருந்தினர்க ளல்லாத புகழினுள்ளார், சங்கையிலா வருந்தவமுன் புரிந்தாரிங்குச் சா

ர்விலா ரிறைவனருள் சார்தலாலே, சங்கைவாழ் சடைமுடியா னருளைநீங்காக் கணநாத னெனவாழுங் கருத்தர்கன்னிச், செங்கண்வரால் வளர்வாவி திகழுமாரூர்ச் சிறந்துளா ரெமையாளப் பிறந்துளாரே.

(இ-ள்.) பொங்கியமாதவமுடையார்=மிகுந்த மாதவத்தையுடையவர்களாயும்; வருணநான்கிற்பொருந்தினர்கள்=நான்கு வருணத்தினராயும்; அல்லாதபுகழினுள்ளார்=அவரல்லாத அநுலோமர் முதற்புகழப்படும் இயல்பினையுடையவர்களாயும்; சங்கையில்லாவருந்தவமுன்புரிந்தார்=எண்ணிறந்த அரிய தவத்தை முன்செய்தவர்களாயும்; இங்குச்சார்வில்லாரிறைவனருள்சார்தலால்=சிவபிரான் திருவருளையடைதலினால் இவ்வுலகத்துப் பற்றில்லாதவர்களாயும்; கங்கைவாழ்சடைமுடியானருளைநீங்கா=அச்சிவபிரான் திருவருளை நீங்காத; கணநாதனெனவாழுங்கருத்தர்=சிவகணத்தலைவர்போல் இவ்வுலகத்து வாழுங் கருத்தினையுடையவர்களாயும் உள்ளவர் யாரெனில்; கன்னிச்செங்கண்வரால்வளர்வாவிதிகழுமாரூர்ச்சிறந்துளார்=இளமையான செந்நிறம்பொருந்திய கண்ணையுடைய வரால்மீன்கள் வளர்கின்ற வாவிகள் தங்கிய திருவாரூரின்கண் சிறப்படைந்தவர்களாய்; எமையாளப்பிறந்துளார்=எம்மை யடிமைக்கொள்ளும்படி யிவ்வுலகத்திற்பிறந்தவர்கள்.—எ-று. ஏ-இரண்டும் அசை. (௬௬)

## முப்பொழுதுந்திருமேனிதீண்டுவார்புராணம்.

செப்பலருந் தவமுடைய செம்மையாளர் சிறுகாலே மலர்வாவி திகழமூழ்கி, யொப்பிறிரு நீறணிந்து நியதியாற்றி யோவாமே யைந்தெழுத்து முரைத்துமேன்மைத், தப்பில்சிவா கமவிதியா லின்பாலன்பாந் தன்மையா னன்மையாந் தகையாரென்று,முப்பொழுதுந் திருமேனி தீண்டவல்ல முறைமையார் பிறவிதெறுந் திறமையாரே.

(இ-ள்.) செப்பலருந்தவமுடையசெம்மையாளர்=எடுத்தோதுதற்கரிய பெருந்தவத்தையுடைய ஒழுக்கத்தாற் சிறந்தவரும்; சிறுகாலேமலர்வாவிதிகழமூழ்கி=வைகறையின்கண் மலரையுடைய தடாகத்தில் விளக்கமாக நீராடி; ஒப்பிறிருநீறணிந்துநியதியாற்றி=ஒப்பில்லாத திருவெண்ணீற்றை விதிப்படி தரித்து நித்தியகன்மங்களை முடித்து; ஓவாமேயைந்தெழுத்துமுரைத்து=இடையறாமல் திருவைந்தெழுத்தை யோதி; மேன்மைதப்பில்சிவாகமவிதியால்=கெடாத மேன்மையையுடைய சைவாகம விதியினால்; இன்பாலன்பாந்தன்மையானன்மையாந்தகையார்=சிவானந்த விளைவினாலும் அன்பின்குணத்தாலும் நன்மையான மேன்மையுள்ளவர்களுமாகிய; என்றுமுப்பொழுதுந்திருமேனிதீண்டவல்லமுறைமையார்=எந்நாளும் முப்பொழுதுந் திருமேனி தீண்டுவாரென்னுந் திருநாமமுடையவர்கள்; பிறவிதெறுந்திறமையார்=என்னுடைய பிறவியைக் கெடுக்கும் வல்லமையையுடையவர்கள்.—எ-று. ஏ-அசை. (௬௭)

## முழுநீறுபூசியமுனிவர்புராணம்.

கற்பமனு கற்பமுப கற்பமென்றிக் கடனணைந்த திருநீறுங் கனற்கணீறும், பொற்புடைய வரனுசா ணங்கியாறு பொல்லாத பூமியெதிர் புனைதலாகா,வற்புதமாந் திரிபுண்ட மதியின்பாதியகிலாங்கந் தீபமிகு மழகார்வட்ட,முற்பொலிய வுடலணியு முறையாரன்றே முழுநீறு பூசவல்ல முனிவர்தாமே.

(இ-ள்.) கற்பமனுகற்பமுபகற்பமென்று—கற்பமென்றும் அனுகற்பமென்றும் உபகற்பமென்றும்; இக்கடனாணைந்ததிருநீறுங்கனற்கணிறும்—இம்மூன்று நாமங்களையடைந்த திருவெண்ணீறும் காட்டக்கினியால்வெந்த அகற்பமென்னுந் திருவெண்ணீறும்; பொற்புடையவரனுசானங்கியாறுபொல்லாதபூமியெதிர்புனைதலாகா—மேன்மைமிக்க சிவபிரான் சந்நிதியிலும் குருசந்நிதியிலும் சிவாக்கினிசந்நிதியிலும் வழியிடத்தும் அசுத்தநிலத்திலும் தரித்தல் விதியன்றென்று; அற்புதமாந்திரிபுண்டமதியின்பாதி அகிலாங்கந்தீபமிகுமழகார்வட்டம்—தீங்குகளை நீக்கும் அதிசயத்தைக்கொடுக்கும் திரிபுண்டரமும் பிறையும் சதுரமும் முக்கோணமும் வட்டமும் ஆக; முற்பொலியவுடலணியுமுறையாரன்றே—தம் திருமேனியில் முன்னே விளங்கும்படி அணியு மியல்புடையவர்களே; முழுநீறுபூசவல்லமுனிவர்—முழுநீறுபூசிய முனிவர்களென்று சொல்லப்படுவார்.—எ-று. தாம்-ஏ-அசை. (௬௮)

கற்பாதி மூன்றும் மறையவர்முதல் உயர்ந்த நான்குவருணத்தார்க்கும் அநுலோமர்க்குமுரியன. அகற்பம் எல்லார்க்கும் பொதுவாயுரியன. புண்டரம் நால்வருணத்தாரும் அனுலோமருமாகிய பதின்மருக்கும் அவ்வருணத்து மகளிர்களுக்கும் அங்குலபேதத்தாற் றரித்தற்குரியன. உத்தமசாதியல்லாத மகளிரும் நபுஞ்சகர் முதலாயினூர்க்கும் வட்டம் சதுரம் பிறை முதலியன தரித்தற்குரியதென்றுங்கொள்க.

## அப்பாலுமடிச்சார்ந்தார்புராணம்.

தாராரு மூவேந்தர் பயிலுந்தொல்லைத் தமிழ்நாட்டப் புறத்திறைவன் சரணஞ்சார்ந்த, சீராருந் தொண்டர்களு மண்டரேத்துந் திருத்தொண்டத் தொகையருளாற் செப்புங்காலத், தேராருந் தொடையிலுறு திப்பாலப்பா லெந்தைபிரா னடியடைந்த வியல்பினோரு, மாராத காதலுடை யவர்களன்றே வப்பாலு மடிச்சார்ந்த வடியார்தாமே.

(இ-ள்.) தாராருமூவேந்தர்பயிலுந்தொல்லைத்தமிழ்நாட்டப்புறத்து—பனை ஆத்தி வேம்பு என்னும் மாலைவிளங்கிய சேரசோழபாண்டியரென்னும் மூவேந்தரும்வாழும் பழமையாகிய தமிழ்நாட்டின்புறம்பே; இறைவன்சரணஞ்சார்ந்தசீராருந்தொண்டர்களும்—சிவபிரான் திருவடியையடைந்த சிறப்புள்ள அடியார்களும்; அண்டரேத்துந்திருத்தொண்டத்தொகையருளாற்செப்புங்காலத்து—தேவர்களுந் துதித்தற்குரிய திருத்தொண்டத்தொகையைச் சிவபிரான் திருவருளினால் நம்பியாரூரர் அருளிச்செய்யுமிடத்து; ஏராருந்தொடையிலுறுதிப்பாலப்பால்—அழகமைந்த அத்திருத்தொண்டத் தொகையிற்கூறிய தனியடியாருள் அடங்காமல் தொகையடியார்களிற் சேர்ந்தவர்களாய் அதற்குமுன்னும் பின்னும்; எந்தைபிரானடியடைந்தவியல்பினோரும்—சிவபிரான் திருவடியையடைந்த முறைமையை யுடையவருமாய்; ஆராதகாதலுடையவர்களன்றே—நீங்காத பேரன்பையுடையவர்களே; அப்பாலுமடிச்சார்ந்தவடியார்—அப்பாலுமடிச்சார்ந்த அடியார்களென்று சொல்லப்படுவேர்.—எ-று. (௬௯)

தாம்-ஏ-அசை.

## பூசலார்நாயனார்புராணம்.

பொருவருந்தண் டகநாட்டு நின்றவூர்வாழ் பூசுரர்கோப் பூசலார் புந்தியாலே, யிருநிதியந் தேடியா லயமுமாக்கி யெழுந்தருளப் பண்ணுவதா வெண்ணுங்காலை, யரனதனைக் காடவர்கோற் கருளமன்னனந்நகரமணைந்தவ்வா றறிந்துதாழ, விரவுமனக் கோயிலுற விருத்தியங்கண் வேண்டுவகொண் டிறைஞ்சியருண் மேவினாரே.

(இ-ள்.) பொருவருந்தண்டகநாட்டுநின்றவூர்வாழ்=ஒப்பற்ற தொண்டைநாட்டின்கண் திருநின்றவூரில் வாழும்; பூசுரர்கோப்பூசலார்=மறையவர்குலமுதல்வராகிய பூசலார்நாயனார்; புந்தியாலேயிருநிதியந்தேடியாலயமுமாக்கி=மனசினாலே மிக்க பொருள்களைச் சம்பாதித்து அப்பொருளால் ஆலயத்தையுமமைத்து; எழுந்தருளப்பண்ணுவதா வெண்ணுங்காலை=அவ்விதயாலயத்துச் சிவபிரானைப் பிரதிட்டைசெய்ய நாள் நியமித்திருக்குங்காலத்து; அரனதனைக் காடவர்கோற்கருள=சிவபிரான் அவர் பிரதிட்டைசெய்யும் நாளைக் கச்சியிற் கல்லாலயமமைத்து அத்தினத்தில் பிரதிட்டைசெய்யக்கருதிய ஐயடிகள்காடவர்கோனுக் கருளிச்செய்ய; மன்னனந்நகரமணைந்தவ்வாறறிந்துதாழ=அக்காடவர்கோன் திருநின்றவூரையடைந்து அப்பூசலார்நாயனார் மனக்கோயிலமைத்த நிலைமையை அறிந்து வணங்க; விரவுமனக்கோயிலுறவிருத்தி=பின் மனசாலமைத்த இதயாலயத்தில் பிரதிட்டைசெய்து; அங்கண்வேண்டுவகொண்டிறைஞ்சியருண்மேவினார்=அவ்விடத்து வேண்டிய பூசோபகரணங்களை மனசாலமைத்து நாள்தோறும் பூசித்துத் திருவருளடைந்தார்.—எ-று. ஏ-அசை. (௭௦)

## மங்கையர்க்கரசியார்புராணம்.

மங்கையர்க்குத் தனியரசி வளவர்குலக்கொழுந்து மன்னவர்சூழ் தென்னவர்க்கு மாதேவியார்மண், சங்கைகெட வமண்சமயஞ் சாடவல்ல சைவசிகா மணிஞானத் தமிழிற்கோத்த, பொங்குதிரு வருளுடைய போதவல்லி பொருவினெடு மாறனார் புயமேல்வாழுஞ், செங்கலச முலையாட னருளாலின்பஞ் சேர்ந்தவரைப் புகழ்ந்தடியேன் வாழ்ந்தவாறே.

(இ-ள்.) மங்கையர்க்குத் தனியரசி வளவர்குலக்கொழுந்து=ஒப்பற்ற மங்கையர்க்கரசியும் சோழர்குலத்துதித்த ஓர்கொழுந்தும்; மன்னவர்சூழ்தென்னவர்க்குமாதேவியார்=அரசர்கள் சூழ்ந்துவணங்கும் நின்றசீர்நெடுமாறநாயனார் திருமனைவியும்; மண்சங்கைகெடவமண்சமயஞ்சாடவல்ல=நிலவுலகத்தில் ஐயமில்லாமல் சமணசமயத்தைக் கெடுக்கவல்ல; சைவசிகாமணிஞானத்தமிழிற்கோத்த=ஆளுடையபிள்ளையார் திருப்பதிகத்திற் சேர்த்தருளிய; பொங்குதிருவருளுடையபோதவல்லி=மிக்க திருவருளுடைய ஞானவல்லியும்; பொருவினெடுமாறனார் புயமேல்வாழும் செங்கலசமுலையாடனருளால்=ஒப்பற்ற அப்பாண்டியரது புயத்தில்வாழ்கின்ற சிவந்த பொற்கலசம்போலும் முலையையுடையவளுமாகிய அப்பாண்டிமாதேவி திருவருளினால்; இன்பஞ்சேர்ந்தவரைப் புகழ்ந்து=சிவானந்தவாழ்வடைந்த அடியார்களைத் துதித்து; அடியேன்வாழ்ந்தவாறு=அடியேனுய்ந்தமை.—எ-று. ஏ-அசை. (௭௧)

## நேசநாயனார்புராணம்.

சாலியர்கோக் காம்பீலித் தலைவர்மேன்மை தாவாத புகழ்நேசர் தஞ்சொலென்றுங், கோலியவைந் தெழுத்தோதிச் சிந்தையுன்னிக் கொண்டபொரு ளன்பர்கொளக் கொடுத்துவாழ்வார், சீலமிகுந் திருத்தொண்டர்க் குடையுங்கீளுந் திருந்தியவெண் கோவணமுஞ் சேரவீந்து, பாலனைய வொளிநீற்றான் பாதமேத்திப் பரலோக முழுதாண்ட பான்மையாரே.

(இ-ள்.) சாலியர்கோக்காம்பீலித்தலைவர்=சாலியர்குலத்தலைவரும் காம்பீலிதேசத்து முதல்வருமாகிய; மேன்மைதாவாதபுகழ்நேசர்=மேன்மை குன்றாத புகழையுடைய நேசநாயனார்; தஞ்சொலென்றுங்கோலியவைந்தெழுத்தோதிச்சிந்தையுன்னி=தமது திருவாக்கால் எந்நாளும் பொருந்தும்படிக்குத் திருவைந்தெழுத்தை ஓதி மனதால் சிவபிரானைச்சிந்தித்து; கொண்டபொருளன்பர்கொளக்கொடுத்துவாழ்வார்=தாம் சம்பாதித்த பொருளைச் சிவனடியார் கொள்ளும்படி கொடுத்து வாழ்கின்றவர் மேலும்; சீலமிகுந்திருத்தொண்டர்க்குடையும்=சிறப்பமைந்த திருவடியார்களுக்கு உடுத்தற்குரிய உடையையும்; கீளுந்திருந்தியவெண்கோவணமுஞ்சேரவீந்து=அரையிற்றரிக்கும் கீளையும் நல்ல வெள்ளிய கோவணத்தையும் ஒருங்குகொடுத்து; பாலனையவொளிநீற்றான் பாதமேத்தி=பால்போலும் வெள்ளிய நிறத்தையுடைய திருவெண்ணீறணிந்த சிவபிரான் திருவடிகளைத்துதித்து; பரலோகமுழுதாண்ட பான்மையார்=சிவலோகமுழுதும் ஆளப்பெற்ற முதன்மையுடையவர்.—எ-று. ஏ-அசை. (எ௨)

## கோச்செங்கட்சோழநாயனார்புராணம்.

வெண்ணாவ லிறைக்கொளிநூற் பந்தர்செய்த வியன்சிலம்பி யது வழித்த வெள்ளானைக்கை, யுண்ணாடிக் கடித்தவுட லொழியச்சோழ னுயர்குலத்துச் சுபதேவன் கமலத்தோங்கும், பெண்ணாகி யவள்வயிற்றில் வைகிச்செங்கட் பெருமானாய்த் தென்னவராய்ப் பெருங்கோயில்பலவுங், கண்ணார்வித் தூயர்தில்லை மறையவர்க்குமுறையுள் கனகமய மாக்கியருள் கைக்கொண்டாரே.

(இ-ள்.) வெண்ணாவலிறைக்கொளிநூற்பந்தர் செய்தவியன்சிலந்தி=திருவானைக்காவில் வெண்ணாவலின்கீழ் வாழும் சிவபிரானுக்கு ஒளிமயமான உரணைநூலால் சருகுவிழாது பந்தலிட்ட பெருமையினையுடைய சிலந்திப்பூச்சி; அதுவழித்தவெள்ளானைக்கை=அப்பந்தலைக்கெடுத்த வெள்ளானையினது துதிக்கையின்; உண்ணாடிக்கடித்தவுடலொழிய; உள்நுழைந்து கடித்து அவ் யானையால் தன்னுடம்பு நீங்க; சோழனுயர்குலத்துச்சுபதேவன்=உயர்ந்த சோழவமிசத்தில் சுபதேவனென்னும் அரசன் மனைவியாகிய; கமலத்தோங்கும்பெண்ணாகியவள்வயிற்றில்வைகி=கமலவதியின் திருவயிற்றிற்பிறந்து; செங்கட்பெருமானாய்த் தென்னவனாய்=கோச்செங்கட்சோழனென்னும் அபிடேகநாமம் பெற்றுப் பாண்டிநாட்டரசனுமிருந்து; பெருங்கோயில்பலவுங்கண்ணார்வித்து=பூர்வசன்ம உணர்ச்சியால் தாம் வழிபட்ட திருவானைக்காமுதலிய தலங்

களில் பெரிய ஆலயங்கள் பலவற்றையும் கண்ணுக்கு அலங்காரமாகச் செய்வி
த்து; உயர்தில்லைமறையவர்க்குமுறையுள்=உயர்ந்த தில்லை மறையவர்களுக்கும்
இருப்பிடம்; கனகமயமாக்கியருள்கைக்கொண்டார்=பொன்மயமாகச்செய்து
சிவபிரான் திருவருளடைந்தார்.—எ-று. ஏ-அசை. (௭௩)

## திருநீலகண்டயாழ்ப்பாணநாயனார்புராணம்.

பிறங்கெருக்கத் தம்புலியூர்வாழும் பேரியாழ் பேணுதிரு நீலக
ண்டப் பெரும்பாணனார்சீர், நிறந்தருசெம் பொற்பலகை யாலவாயி
னிமலன்பாற் பெற்றாரூர் நேர்ந்துசிவன்வாயி, றிறந்தருளும் வடதி
சையே சேர்ந்துபோற்றித் திருஞானசம்பந்தர் திருத்தாள் வாழ்த்தி,
யறந்திகழுந் திருப்பதிகம் யாழிலேற்றி யாசிறிருப் பெருமணஞ்சேர்
ந் தருள்பெற்றாரே.

(இ-ள்.) பிறங்கெருக்கத்தம்புலியூர்வாழும்=புகழ்விளங்கிய திருவெ
ருக்கத்தம்புலியூரில்வாழ்ந்த; பேரியாழ்பேணுதிருநீலகண்டப்பெரும்பாணனார்=
பாலையாழ்பயிலுந் திருநீலகண்டயாழ்ப்பாணநாயனார்; சீர்நிறந்தருசெம்பொற்ப
லகை=சிறந்த ஒளியினையுடைய செம்பொன்னாலாகிய பலகையை; ஆலவாயி
னிமலன்பாற்பெற்று=திருவாலவாயின்கண் வீற்றிருந்தருளும் சுந்தரேசரிடத்
தில் பெற்றுக்கொண்டு; ஆரூர்நேர்ந்துசிவன்வாயிறிறந்தருளும்வடதிசையேசே
ர்ந்துபோற்றி=திருவாரூரையடைந்து புற்றிடங்கொண்டார் வடதிசைக்கண்
திறந்தருளிய வேற்றுவாயில் வழியாகச்சென்று அவரைவணங்கி; திருஞானசம்
பந்தர்திருத்தாள்வாழ்த்தி=ஆளுடையபிள்ளையார் திருவடிகளைத்துதித்து; அறந்
திகழுந்திருப்பதிகம்யாழிலேற்றி=சிவதன்மங்கள் விளங்கிய அவர் திருப்பதிக
ங்களை யாழிற்சேர்த்து வாசித்து; ஆசிறிருப்பெருமணஞ்சேர்ந்தருள்பெற்றார்=
குற்றமற்ற திருப்பெருமணத்திற்சென்று திருவருள்பெற்றார்.—எ-று. ஏ-அசை.

## சடையநாயனார்புராணம்.

சங்கையிலா வரன்மறையோர் நாவலூர்வாழ் தவரதிபர் தம்பி
ரான் றோழராய, வெங்கள்பிரான் றவநெறிக்கோ ரிலக்குவாய்த்த வி
சைஞானி யார்தனய ரொண்ணார்சிங்க, மங்கையர்க டொழும்பரவை ம
ணவாளநம்பி வந்துதிக்க மாதவங்கள் வருந்திச்செய்தார், வெங்கண
ரா விளங்குமிளம் பிறைசேர்சென்னி விடையினா ரருள்சேர்ந்த ச
டையனாரே.

(இ-ள்.) சங்கையிலா வரன்மறையோர்=குற்றமற்ற சிவவேதியரும்;
நாவலூர்வாழ்தவரதிபர்=திருநாவலூரின்கண் வாழ்ந்த தவத்தினர்க்கு முதல்
வரும் ஆகிய; தம்பிரான்றோழராயவெங்கள்பிரான்றவநெறிக்கோரிலக்குவாய்
த்த=தம்பிரான்தோழரென்னும் திருப்பெயரையுடைய எமது முதல்வரும் தவ
மார்க்கத்துக்கு ஓரிலக்காயுள்ள; இசைஞானியார் தனயரொண்ணார்சிங்கம்=
இசைஞானியார் புதல்வரும் பகைவராயுள்ள வேற்றுமைச்சமயிகளாகிய யானை
கட்குச் சிங்கம்போல்வாரும்; மங்கையர்கடொழும்பரவைமணவாளநம்பி=மக
ளிர்களால் தொழத்தக்க சிறப்பினையுடைய பரவைநாச்சியாருக்கு மணவாளரு

மாகிய நம்பியாரூரர்; வந்துதிக்கமாதவங்கள்வருந்திச்செய்தார்=வந்தவதரிக்க ப்பெரிய தவத்தைவருந்தி முன்னே செய்தவர் யாரெனில்; வெங்கணராவிளங் குமிளம்பிறைசேர்சென்னி=தீக்கண்ணையுடைய பாம்புகள்வாழும் இளம்பிறை யணிந்த திருமுடியையுடைய; விடையினாரருள்சேர்ந்தசடையனார்=சிவபிரா னது திருவருளையடைந்த சடையநாயனார்.—எ-று. ஏ-அசை. (௭௫)

## இசைஞானியார்புராணம்.

நாவற் றிருப்பதிக்கோர் செல்வச்சைவ நாயகமாஞ் சடையனார் நயந்தவின்பப், பூவைக்குல மடந்தை பொற்பார்கொம்பு புனிதமிகு நீறணிந்து போற்றிசெய்தே, யாவிற்றி கழ்தலைவன் வலியவாண்ட வாரூரரவதரிக்க வருந்தவங்கள் புரிந்தார், யாவர்க்கு மெட்டாத வி சைந்தவின்ப விசைஞானி யெனஞான மெளிதாமன்றே.

(இ-ள்.) நாவற்றிருப்பதிக்கோர்செல்வச்சைவநாயகமாஞ்சடையனார்= திருநாவலூரென்னுந் திருப்பதிக்கு ஒப்பற்ற சிறப்பமைந்த சைவநாயகராகிய சடையநாயனார்; நயந்தவின்பப்பூவைக்குலமடந்தைபொற்பார்கொம்பு=இன்ப த்தைத்தரத்தக்க பூவைபோலும் குலமனைவியாரும் அழகார்ந்த பூங்கொம்புபோ ல்வாரும்; புனிதமிகுநீறணிந்துபோற்றிசெய்து=தூய்மைமிக்க திருவெண்ணீ ற்றையணிந்து சிவபிரானைத்துதிசெய்து; ஆவிற்றிகழ்தலைவன்வலியவாண்ட= இடபவாகனத்தையுடைய சிவபிரான் தடுத்தாட்கொண்டருளிய; ஆரூரரவ தரிக்கவருந்தவங்கள்புரிந்தார்=நம்பியாரூரர் தமக்குப் புத்திரராக அவதரிக் கும்படிக்கு அரிய தவத்தைச்செய்தவரும் ஆகிய; யாவர்க்குமெட்டாதவிசைந்த வின்பவிசைஞானியென=யாவர்க்கும் அடையக்கூடாத பேரின்பத்தை அடை ந்த இசைஞானியார் என்று சொல்ல; ஞானமெளிதாம்=சிவஞானம் தானே கிடைக்கும்.—எ-று. அன்று, ஏ-இரண்டும் அசை. (௭௬)

---

அத்தரடி யவர்கூட்டத் தில்லைவாழ மந்தணர்பொய் யடிமையி லாப் புலவராசில், பத்தர்முத லெழுவரோ டொன்பதின்மரோமொ ன் பதின்மர்தனிப் பேரொண்ணொன் பதின்மராய,வித்தொகையிற் றொ ண்டர்சீ ருரைத்தான்வைத்த வீரிரண்டா யிரத்திருநூற் றைம்பத்து மூன்று, முத்தமநல் விருத்தத்திற் பயனுஞ்செய்பு ளுலகெழுபத் தை ந்தெனவின் றுரைக்குமன்றே.

செல்வமிகு திருத்தொண்டத் தொகையிலுள்ளார் சிறந்ததனி ப் பெயராக வறுபதின்மேன்மூவர், மல்லன்மிகு கூட்டப்பே ரருள் சேர்ந்தார்கண் மாதவத்தோர் மும்மூன்று வகைபெற்றார்க, ளில்லறத் துந் துறவறத்து மிருந்துவாழ்ந்தே யியல்பாகச் சிவபதநான் கிசைந் தார்தம்மை, யல்லலறுத் தெனையாண்ட சைவசிகாமணியா ரருட்பு வியூ ருமாபதியா ரருள்செய்தாரே.

திருத்தொண்டர்புராணசார முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௭௫.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

திருத்தொண்டர்

# திருநாமக்கோவை.

மெய்யன்பர் நாமமெல்லாம் வெவ்வேறு போற்றிடவைங் கையன் திருவடியே காப்பு.

தில்லைவா ழந்தணர்கள் சீர்நீல கண்டனு
ரில்லை யளித்த வியற்பகையார் — தொல்லை
யிளையான் குடிமாறர் மெய்ப்பொருளா ரென்று
மிளையா விறன்மிண்ட ரின்ப — மளவுமமர்
நீதி யெறிபத்தர் நீண்டபுக ழேனாதி
நாதர்திருக் கண்ணப்பர் நற்கலயர் — மேதகுசீர்
மானக்கஞ் சாறரரிவாட்டாய ராணயர்
ஞானத் திருமூர்த்தி நாயனார் — மேன்மை
முருகர் பசுபதியார் முன்னுளைப் போவார்
துரிசி றிருக்குறிப்புத் தொண்டர் — மருவுமறைத்
தண்டீசர் வாகீசர் தக்க குலச்சிறையார்
கொண்ட மிழலைக் குறும்பனார் — தொண்டுசெயு
நீள்காரைக் காலம்மை யப்பூதி நீலநக்கர்
மூளு நமிநந்தி முத்தமிழை — யாளுந்
திருஞான சம்பந்தர் செய்ய கலிக்காம
ரருண்மூலர் தண்டி யடிகள் — வருமூர்க்கர்
சோமாசி மாறனர் சாக்கியனார் சூழாக்கூர்
நாமார் சிறப்புலியார் நற்றெண்டி — னேமச்
சிறுத்தொண்டர் சேரமான் செய்ய கணநாதர்
விறற்களந்தைக் கூற்றுவனார் விஞ்சைத் — திறத்துமிகும்
பொய்யடிமை யில்லாப் புலவர் புகழ்ச்சோழர்
மொய்கொணர சிங்க முனையரைய — ரையாதி
பத்தர் கலிக்கம்பர் கலியர் பகர்சத்தி
கைத்தபுலன் ஐயடிகள் காடவர்கோன் — மெய்த்தகணம்
புல்லனார் காரிநெடு மாறர்புகழ் வாயிலார்
நல்ல முனையடுவார் நாயனார் — மல்குகழற்

சிங்க ரிடங்கழியார் தஞ்சைச் செருத்துணையார்
கொங்கார் புகழ்த்துணையார் கோட்புலியா ரங்கணர்க்குப்
பத்தராய்த் தாழ்வார் பரமனையே பாடுவார்
சித்தத்தைச் சிவன்பாலே சேர்த்துள்ளார் நித்தமு
முத்தி நெறிகாட்டு முதல்வர் முழுதுணர்ந்தோர்
பித்தனுறை யாரூர்ப் பிறந்தார்க ளத்தனையே
முப்பொழுதுந் தீண்டுவார் முழுநீறு பூசுவா
ரப்பாலு மீச னடிச்சார்ந்தார் மெய்ப்பூசல்
மானியார் நேசனார் வாழ்செங்கட் சோழனார்
பான்மையார் நீலகண்டப் பாணனார் மேன்மைச்
சடையரிசை ஞானியிவர் தம்மையெல்லாஞ் சேர்த்துத்
தொடையாகப் பாடிய வன்றொண்ட ரடியிணைகள்
சிந்தனைசெய் இந்தத் திருநாமக் கோவைதனை
மந்திரமாக் கொண்டு மயிர்சிலிர்த்து நைந்துருகி
மெய்யன்பா லென்றும் விளம்பப் பெறுவார்கள்
கைதவமும் புல்லறிவுங் கற்பனையு மையலுந்தீர்ந்
தத்து விதாநந்த வகண்டபரி பூரணத்தி
னித்தியமா வாழ்வார் நிசம்.

திருச்சிற்றம்பலம்.

திருநாமக்கோவை முற்றிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருப்பதிகக்கோவை.

---

## வெண்பா.

ஒன்றுதி யோரொழுபத் தொன்றீறாய் மூவர்தமிழ்
சென்றார் சிவதலங்கள் செப்புதற்கு - நின்று
கடக்குஞ் சரமுகனேர் காய்விழியா னீன்ற
கடக்குஞ் சரமுகனே காப்பு.

பன்னுசிவ தலமொருநூற் றைம்பதிற்று மூன்று பதிகமொன்றா நாற்பத்தொன் பதுபதிக மிரண்டா, முன்னுமிரு பதிற்றெட்டு நகர்பதிகமூன்றா மொருபதினோர் தலம்பதிக மொருநான்கென் றுணர்க, மன்னுமிரு நான்குதல மோரைந்தே பதிக மற்றுமைந்து தலங்களுக்கு வருபதிகமாறும், பின்னுமைந்து வளர்நகர்க்குப் பெறும்பதிக மேழாம் பேசுமொரு நான்குதலம் பெறும்பதிக மெட்டே. (க)

பாவுமொரு நான்குதலம் பதினொன்றும் பதிகம் பன்னுமிரு த லம்பதிகம் பன்னிரண்டாப் பகரு, முறைசெயிரு தலம்பதிகம் பதி னெட்டா மிப்பா லொருமூன்று தலங்களுக்கிங் குறுபதிக மூனாக்கி, னிரவிவரு மறுநான்கு முப்பதிற்று நான்கு நீடெழுபத் தொன்று மென நிரனிரையா மாகக், கருதுசிவ தலமிருநூற் றெழுபதிற்று நா ன்கு கடைகாப்போ ரெழுநூற்று நாற்பதிற் றென்பானே. (உ)

திருப்பழுவூர் சேய்ஞலூர் திருமுல்லை வாச றிருவைகா கொடிமா டச் செங்குன்றூர் வியலூர், கருக்குடிதெங் கூர்பனந்தாள் கலிக்கா மூர் தலைச்சங் காமேயேந் திரப்பள்ளி கச்சினங்கன் றுப்பூர், குரக்கு க்கா பெரும்புலியூர் திருக்காட்டுப் பள்ளி * குடந்தைக்கீழக் கோட்ட மொடு குடந்தைக்கா ரோண, மெருக்கத்தம் புலியூர்வெண் டுறைக ண்ணார் கோயி லிலம்பையங்கோட் டேர்சிக்க லிராமனதீச் சரமே. (௩)

பள்ளியின்முக் கூடறிரு விரும்பூளை யாலூர்ப் பசுபதீச் சரம்பாலை த் துறைபருதி நியமங், கள்ளில்குரங் கணின்முட்டந் திருமுருகன் பூண்டி கஞ்சனூர் கச்சிநெறிக் காரைக்கா டோத்தூர், புள்ளமங்கை நாட்டியத்தான் குடிகலைய நல்லூர் புக்கொளியூ ரவிநாசி பூவனூர் து றையூர், கொள்ளிக்கா டிடைச்சுரமச் சிறுபாக்கம் விளமர் கொட் டையூர் கொடுங்குன்றங் கூடலையாற் றூரே. (௪)

நெல்வேலி திருவழுந்தூர் தருமபுரம் பயற்றூர் நெடுங்களம்வ க் கரையிரும்பை மாகாளம் வடுகூர், நெல்வெண்ணெய் வடகரைமா ந் துறைதிருவிற் கோல நீடூர்சக் கரப்பள்ளி யகத்தியான் பள்ளி, நெ ல்வாயில் பேணுபெருந் துறைநாலூர் மயான நெல்லிக்கா விற்குடிவீ ரட்டமதி முற்றம், வல்லமறை யணிநல்லூர் தலையாலங் காடு வாட் போக்கி திருநாவலூர் மயிலாப் பூரே. (௫)

திருவாரூர்ப் பரவையுண்மண் டளிசாத்த மங்கை சிற்றேமந் தெளிச்சேரி திருவுசாத் தானம், கரவீரந் திருவாலம் பொழில்வெ ண்ணெய் நல்லூர் கச்சியனே கதங்காவ தங்கோடிக் குழக,ரரசிலிதெ ன் குடித்திட்டை வடமுல்லை வாயி லம்பர்ப்பெருந் திருக்கோயில் வெண்பாக்கஞ் சுழியல், பெருமணமிந் திரநீலப் பருப்பதம் வேற்கா டு பேரெயில்பாற் றுறைமூக்கீச் சரமுண்டீச் சரமே. (௬)

பறியலூர் வீரட்டங் கானாட்டு முள்ளூர் பாதாளேச் சரமெதிர் கொள் பாடிவலி தாயஞ், சிறுகுடிகச் சூராலக் கோயில்கொள்ளம் பூ தூர் திருப்புறவார் பனங்காட்டூர் விளநகர்தண் டலைநீ, ணெறியர தைப் பெரும்பாழி யூறல்கரு வூரா னிலையிடும்பா வனங்கடுவாய்க்

* குடந்தை என்பது-கும்பகோணம்.

களைப்புத்தூர் கடம்பர், துறைதிருவே டகந்திருவஞ் சைக்களமா டானை சோபுரங்கற் குடிவடகு ரங்காடு துறையே. (எ)

திருமாணி குழிவேட்டக் குடிதிருவாப் பாடி திருந்துதே வன்குடிமா கறல்சத்தி முற்றந், திருவாப்ப னூர்மீயச் சூரவ்வூர் தன்னிற் றிகழ்ந்ததிரு விளங்கோயில் வெஞ்சமாக் கூடல், பெருநீலக் குடிமண்ணிப் படிக்கரைநன் னிலத்துப் பெருங்கோயி றிருநணு திருப்பட்ச் சரமே, திருவீங்கோய் மலைவன்பார்த் தான்பனங்காட் டூரோ திருப்புகலூர் வர்த்தமா னேச்சரம்பாம் புரமே. (அ)

கடைமுடியே யோணகாந் தன்றளிகோட் டூர்வை கன்மாடக் கோயிலிடை யாறுபழை யாறை, வடதளிநற் றிணைநகரம் * கோணமா மலைசீர் வன்னியூர் கருவிலிய னேகதங்கா வதநல், விடமேவு கடிக்குளநற் றிருக்களரென் றிவைகட் கிரும்பதிக மொவ்வொன்றென் றிசைத்திடுக விப்பாற், குடவாயில் புனவாயி றூங்கானை மாடங் கோழம்ப மவளிவணல் லூர்கோலக் காவே. (கூ)

குருகாவூர் திருவேள்விக் குடிவிசய மங்கை குற்றாலங் குடமூக்கு கோட்டாறு பனையூர், கருகாவூர் தூங்காடு துறையோமாம் புலியூர் கண்டியூர் வேதிகுடி கானூர்கோ கரணந், திருவாரூ ரரனெறியந் தணநல்லூர் நல்லந் திருக்கண்டீச் சரந்தேவூர் திருச்சிராப் பள்ளி, பெருவேளூர் கீழ்வேளூ ரெறும்பியூர் கானப் பேர்திருமங் கலக்குடியாக் கூர்கோவ லூரே. (க0)

திருப்பரங்குன் றந்திருப்பா திரிப்புலியூர் கொறுக்கை திருப்புத்தூர் மணஞ்சேரி பாச்சிலாச் சிராமங், கருப்பறிய லூர்கேதீச் சரந்திருக்கே தாரங் கச்சிமேற் றளிமேலைத் திருக்காட்டுப் பள்ளி, யருத்தியுறு பட்டினத்துப் பல்லவனீச் சரம்பே ரன்பிலா லந்துறைப ராய்த்துறைவேட் களமிங், குறைத்தசீ ரன்னியூ ரிவ்விரண்டாம் பதிகமுள்ளதலங் கடவூர்ம யானம்வாஞ் சியமே. (கக)

துருத்திதிரு நனிபள்ளி திருமருக றிருப்பூந் துருத்திபுறம் பயங்கடவூர் புள்ளிருக்கும் வேளூ, ரரத்துறைவாழ் கொளிபுத்தூர் வான்மியூர் பாசூ ரம்பர்மா காளமயி லாடுதுறை வாய்மூர், திருக்கழுக்குன் றம்பாண்டிக் கொடுமுடிரா மேச்சரஞ் செங்காட்டங் குடிவெண்ணி திருச்செம்பொன் பள்ளி, 0 பருப்பதம்புன் கூரரிசிற் கரைப்புத்தூர் சேறை பைஞ்ஞீலி கற்குடிமா மலைபதிக மூன்றே. (கஉ)

வலம்புரமா லங்காடு சிவபுரங்கா ளத்தி வலிவலஞ்சாய்க் காடுதிருக் கோடிகா நகரம், நலந்திகழும் பூவணங்கோ ளிலிநின்றி யூரு ந

* கோணமாமலை என்பது-திருக்கணமலையென வழங்குகின்றது.
0 பருப்பதம் என்பது-ஸ்ரீசைலம். இதுவே மல்லிகார்ச்சுனம்.

றையூர்ச்சித்திச்சரமு நான்காகும் பதிகம், வலஞ்சுழிநல் லூர்பழன மாமாத்தூ ரண்ணு மலைகடம்பூ ரின்னம்பர் நாரையூ ரைந்தா, நிலந் திகழ்நா கேச்சரமாற் பேறுமழ பாடி நெய்த்தானம் வெண்காடு நீள் பதிக மாறே. (கங)

கயிலாய மானைக்கா நள்ளாறு நாகைக் காரோணந் திருச்சோற் றுத் துறையேழு புகலூர், வயலாருங் கழிப்பாலை யொற்றியூர் திருவா வடுதுறையெட் டாந்தில்லை மறைக்காடு மதுரை, யியலாரு மூதுகுன் றம் பதினொன்று கச்சி யேகம்ப மிடைமருதீ ராறையா றதிகை, யய லீரொன் பான்விழி யாரூர்சீ காழி யறுநான்கு மூப்பானுன் கெழுப த்தொன் றுமே. (கச)

திருச்சிற்றம்பலம்.

திருப்பதிகக்கோவை முற்றிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருப்பதிக்கோவை.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கோயிதிரு வேட்களநெல் வாயில்கழிப் பாலை குலவுபெரு மண மயேந் திரப்பள்ளி முல்லை, வாயில்கலிக் காமூர்சாய்க் காடுதிருப் ப ல்ல வனீச்சரம்வெண் காடுவளர் திருக்காட்டுப் பள்ளி, தாயிலான் குருகாவூர் காழிகோ லக்கா தருக்கிளர் * புள் ளிருக்குவே ளூர்கண் ணூர் கோயின், ஞாயிலியற் கடைமுடியே நின்றியூர் புன்கூர் நாடியநீ ரேன்னி யூர்வேள்விக் குடியே. (க)

சருதெதிர்கொள் பாடிமணஞ் சேரிதிருக் கொறுக்கை கருப்பறி ய லூர்கதியே காட்டுகுரக் குக்கா, மருவும்வாழ் கொளிபுத்தூர் மண் ணிபடிக் கரையே வளருமோ மாம்புலியூர் காணுட்டு முள்ளூர், திரு நாரை யூர்கடம்பூர் பந்தணநல் லூர்பொன் திகழ்கஞ்ச னூர்கோடி கா மங்கலக் குடியே, திருப்பனந்தா ளாப்பாடி சேய்ஞலூர் திருந்து தே வன்குடி திருவியலூர் திருக்கொட்டை யூரே. (உ)

இன்னம்பர் திருப்புறம்ப யம்விசய மங்கை யியல்வைகா லூர்நல் வட குரங்காடு துறையே, பின்னமறு பழனமை யாறுநெய்த் தானம் பெரும்புலியூர் மழபாடி திருப்பழுவூர் கானூ, ரன்னவன்பி லாலந்து றை மாந்துறைபாற் றுறையே யானைக்கா பைஞ்ஞீலி பாச்சிலாச் சி

* புள்ளிருக்கு வேளூர் என்பது - வைத்தீச்சுரன்கோயில்.

ராம, மன்னுமீங் கோய்மலையி னோட்டுறுபான் மூன்றே வடகரையிற் ப
திதென்பால் ௦ வாட்போக்கி யாமே. (௩)

கடம்பந்துறை திருப்பராய்த்துறை கற்குடி † மூக் கீச்சரங், கரு
துதிருச் சிராப்பள்ளி திருவெறும்பியூரே, நெடுங்களமே லைக்காட்டு
ப் பள்ளியாலம் பொழில்சீர் நிகழ்திருப்பூந் துருத்திகண்டி யூர்சோ
ற்றுத் துறைமா, லடும்வேதி குடிதென்குடித் திட்டைபுள்ள மங்கை
யணியார்சக் கரப்பள்ளி யருங்கருகா வூரே, படர்பாலைத் துறைநல்லூ
ர் திருவாரூ ரதனிற் பசுபதீச் சரஞ்சத்தி முற்றம்பட் டீச்சரமே. (௪)

ஆறைவட தளிதிருவ லஞ்சுழியே ‡ குடமூக் கதனிற்கீழ்க் கோ
ட்டங்கா ரோணநா கேச்சரங், கூறுமிடை மருதுகுரங் காடுதுறை
நீலக் குடிவைகன் மாடக்கோயி னல்லங்கோ ழம்பஞ், சாறமரா வடு
துறைதண் டுருத்திதிரு வழுந்தூர் சகம்புகழ்மா யூரம்விள நகர்பறி
ய லூரே, வீறுசெம்பொன் பள்ளிநனி பள்ளிவலம் புரமே வியன்ற
லைச்சங் காடாக்கூர் விளங்கு கடவூரே. (௫)

திருக்கடவூர் மயானமொடு திருவேட்டக் குடியே தெளிச்சேரி
தருமபுர நள்ளாறு கோட்டா,றுரைக்குமம்பர்ப் பெருந்திருக் கோயி
ன்மாகாள முயர்மீயச் சூரிளங்கோ யிற்றிலதைப் பதிபூ, மருக்கமழ்
பாம் புரநற்சிறு குடிவீழி மிழலை வன்னியூர் கருவிலிமன் பேணுபெ
ருந் துறையென், கருத்துடைக்கு நறையூர்ச்சித் தீச்சரத்தோ டரி
சிற் கரைப்புத்தூர் சிவபுரமுங் கலையநல்லூர் காணே. (௬)

கருக்குடிவாஞ் சியந்திருநன் னிலத்துப்பெருங் கோயில் கவின்
கொண்டீச் சரம்பனையூர் விற்குடிதென் புகலூ, ரிருக்கும்வர்த்த மா
னேச்சர மிராமனதீச் சரமே யியல்பயற்றூர் செங்காட்டங் குடிமரு
க லிருளே, முருக்குதிருச் சாத்தமங்கை நாகைக்காரோண மூன்றிரு
ச்சிக் கற்றிருக்கீழ் வேளூர்தே வூரே, யரிக்கரியான் பள்ளியின்முக் கூ
ட்டிரு வாரூ ரனெறிமூ லட்டானம் பரவையுண்மண் டளியே. (௭)

மேலாகும் விளமர்கர வீரம்பெரு வேளூர் மிளிர்தலையா லங்கா
டு குடவாயில் சேறை, நாலூர்ம யானங்கடு வாய்க்கரைப் புத்தூர் ந
விலுமிரும் பூளைதிரு வரதைப்பெரும் பாழி, மாலூரு மவளிவணல்
லூர்பருதி நியமம் வாழ்வெண்ணி பூவனூர் பாதாளேச் சரநீர்ச், சே
லூருந் திருக்களர்சிற் றேமமுசாத் தானந் திருவிடும்பா வனத்தோடு
சேர்ந்தகடிக் குளமே. (௮)

தண்டலைநீ ணெறிகோட்டூர் வெண்டுறையோ டழகே தருகொ
ள்ளம் பூதூர்பே ரெயில்கொள்ளிக் காடு, கண்டருதெங் கூர்நெல்லி
க்கா நாட்டியத்தான் குடியே காறாயில் கன்றாப்பூர் வலிவலங்கச் சி
னத்தோ, டண்டர்பிரான் கோளிலிதென் றிருவாய்மூர் * மறைக்கா ட
கத்தியான் பள்ளி கோடிக் குழகருந்தென் கரையி, லெண்டருநூற் றி

---

௦ வாட்போக்கி என்பது-ரத்தினகிரி. † மூக்கீச்சரம் என்பது-உறையூர்.
‡ குடமூக்கு என்பது-கும்பகோணம். * மறைக்காடுஎன்பது-வேதாரணியம்.

ருபத்தே ழிப்பாலீழத்தி லிசைகோண மாமலைகே தீச்சரமென் றிர ண்டே. (கூ)

ஆலவா யாப்பனூர் பரங்குன்றே டகத்தோ டருங்கொடுங்குன் றந்திருப்புத் தூர்புனவா யிலினோ, டேலுமிரா மேச்சரமா டானை*கா னப்பே ரொழிற்றிருப்பூ வணஞ்சுழிய மின்புறுகுற் றாலம்,பாலலோ ச னன்றிருநெல் வேலியொடு பாண்டி பதினான்கு மலைநாட்டி லஞ்சைக் களமொன்றே, சீலமிகு மவிநாசி திருமுருகன் பூண்டி திருநணா 0 கொ டிமாடச் செங்குன்றூர் தானே. (க0)

வெஞ்சமாக் கூடல்கொடு முடிகருவூர் கொங்கின் மேவுமே ழர த்துறைவண் டுங்கானை மாட, மெஞ்சலில் கூடலையாற்றூ ரொருக்கத்த ம் புலியூ ரிணையகலுந் தினைநகர்சோ புரமதிகை புகழே, விஞ்சுதிரு நாவலூர் ¶ முதுகுன்றந் திருநெல் வெண்ணெய்திருக் கோவலூ ர றையணிநல் லூரே, மஞ்சுதிக ழிடையாறு வெண்ணெய்நல்லூர் து றையூர் வடுகூர்வீ டேயருளுந் திருமாணி குழியே. (கக)

தண்ணார்தண் டலைப்பாதி ரிப்புலியூர் முண்டீச் சரம்புறவார் ப னங்காட்டூர் திருவாமாத் தூரே, யெண்ணாரண் ணாமலையு நடுநாட்டி லிருபத் திரண்டாகு மிப்பாலே கம்பமேற் றளிவிண், கண்ணோங்கு ம திலோண காந்தன்றளி யனேக தங்காவ தங்கச்சி நெறிக்காரைக் கா டே, யுண்ணாடு குரங்கணின்முட் டந்திருமா கறலோத் தூர்வன்பார் த் தான்பனங்காட் டூர்வல்ல மாற்பேறே. (கஉ)

‡ஊறலிலம் பையங்கோட் டூர் † விற்கோல மாலங்கா டியர்பாசூ ர் வெண்பாக்கங் கள்ளில்கா ளத்தி, மாறிறிரு வொற்றியூர் * வலிதாய ம் பாலி வடமுல்லை வாயில்வேற் காடுதிரு மயிலை,யீறிறிரு வான்மியூ ர் கச்சூரா லக்கோயி லிடைச்சுரங் கழுக்குன்ற மச்சிறுபாக் கம்மே, மாறிறிரு வக்கரையே யரசிலிதொல் லிருப்பை மாகாளந் தொண்டை நன்னாட் டெண்ணின்முப்பா னிரண்டே. (கங)

கோகரணந் துளுவதே யத்திலொன்றே யிப்பாற் குலவுபருப் ப தநீலப் பருப்பதமம் பிகைதன், பாகருறை யனேகதங்கா வதந்திருக் கேதாரம் பகர் 0 நொடித்தான் மலைவடக்கிற் பதியைந்தே யிவற்றோ, டாகவிரு நூற்றெழுபா னான்கென்பர் மூவ ரருட்பதிக மிருக்குமூ ர திகமாம் வைப்பு, தாகமுட னினைப்போர்க்குந் துதிப்போர்க்கும் வி னைகள் சாராவாம் பிறப்பகலுஞ் சத்தியமுத் தியுமே. (கச)

திருச்சிற்றம்பலம்.

திருப்பதிக்கோவை முற்றிற்று.

---

* கானப்பேர் என்பது - காளையார்கோயில்.

0 கொடிமாடச் செங்குன்றூர்என்பது - திருச்செங்கோடு.

¶ முதுகுன்றம் என்பது-விருத்தாசலம். ‡ ஊறல் என்பது-தக்கோலம்.

† விற்கோலம் என்பது-கூவம். * வலிதாயம் என்பது-பாடி.

0 நொடித்தான்மலை என்பது-கைலை.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

அறுபத்துமூன்றுநாயன்மார்

# திருநட்சத்திரம்.

காப்பு.

நேரிசைவெண்பா.

ஒன்றகல வெட்டெட்டா மோதுமடி யாரன்பாற்
றன்றுமதி நாளினிது சொல்லவே - வென்றிதரும்
பொன்னிதிவி னாயகனார் பூமுடிமே லாடுதிருச்
சன்னிதிவி நாயகனார் தாள்.

நிலமண்டில ஆசிரியப்பா.

தில்லைவாழ்ந்தணர் திருவருளாலவர்
மல்குசீர்ப்பதத்தை மகிழ்வொடுவணங்கிக்
கடிதிருநீல கண்டர்தைவிசாகம்
வடிவியற்பகையார் மார்கழியுத்திரம்
வருமிளையான்குடி மாறராவணிமகங்
கருதுமெய்ப்பொருளார் கார்த்திகையுத்திரம்
விறன்மிண்டகண்டர் மேடமாதிரைநா
ளறனமர்நீதி யாணிப்பூரம்
மாணெறிபத்தர் மாசியிலத்தங்
காணுமேனாதியார் கன்னியுத்திராட
மலர்கண்ணப்பர் மகரமான்றலையிற்
குலவுகுங்குலியர் கோளரிமூலங்
தருமானக்கஞ் சாறர்விற்சுவாதி
யரிவாட்டாயர்தை யாதிரைநாளி
லானாயர்கார்த்திகை யத்தநாளிற்
கானமூர்த்தியார் கடகத்தாரன்
முருகரிடப மூலமதனி
லுருத்திரபசுபதி யுயர்கன்னிமுன்னாள்
பொருந்திருநாளைப் போவார்கன்னியிற்பார்
திருக்குறிப்படியார் சித்திரைச்சுவாதி
தண்டீசாரமவர் தையுத்திரத்திற்
றண்டமிழப்பர் தகரிற்சதயங்
குலச்சிறைநாயனார் கோளரியனுட்
மலகில்குறும்ப ராடியிற்சித்திரை

யருள்காரைக்கா லம்மைமீன்விளக்கா
மருகிலப்பூதிதை யதிந்சதயத்திற்
கமைநீலநக்கர் காளைமூலத்தி
னமிநந்தியடிக ணாள்விடைப்பூச
ஞானசம்பந்தர் நாள்விடைமூல
மானகலிக்காம ரானிரேவதியி
லருட்டிருமூல ரைப்பசிமுன்னாள்
வருதண்டியடிகள் வளர்மீன்சதயஞ்
சேமமாமூர்க்கர் தேண்மதிமூலஞ்
சோமாசிமாறர் தொழுவிடையரவிற்
சாக்கியநாயனார் தனுப்பூராடந்
தேக்கியசிறப்புலி தேட்பூராடஞ்
சேர்சிறுத்தொண்டர் சித்திரைப்பரணி
சேரமான்கடகஞ் சேர்ந்தசோதியினிற்
கணநாதர்மீனங் கலந்தவாதிரையிற்
குணமாங்கூற்றுவர் குளிர்மதியாதிரை
பொய்யடிமையில்லாப் புலவர்தாள்போற்றி
மெய்ப்புகழ்ச்சோழர் மிளிர்குளிரார
னரசிங்கமுனையார் நற்கன்னிசதயந்
திரவதிபத்தர் சிங்கவாயிலியங்
கலிக்கம்பர்மகரத் கடைநாளதனிற்
கலியராடியினிற் கலந்தவிந்திரனா
யேசிற்சத்தியார் துலாப்பூசத்தி
லையர்காடவர்கோ னைப்பசிமூலங்
கணம்புல்லநாயனார் கார்த்திகையங்கி
கணஞ்சேர்காரியார் கடம்பூராடந்
தூய்நெடுமாறர் துலாமதிப்பரணியில்
வாயிலார்நாயனார் மார்கழியிரேவதி
வெம்முனையடுவார் மீனப்பூசஞ்
செம்மைநாகங்கழற் சிங்கர்சேப்பரணி
மருவிடங்கழியார் மதிதுலாவாரல்
செருத்துணைநாயனார் சிங்கப்பூசஞ்
சேட்புகழ்த்துணையார் சிங்கவாயிலியங்
கோட்புலிநாயனார் குளிர்மதிகேட்டை
பத்தராய்த்தாழ்வார் பரமனைப்பாடுவார்
சித்தத்தைச்சிவன் பாலேசேர்த்துளா
ரப்புறுசெய்த்திரு வாரூர்ப்பிறந்தார்

முப்பொழுதுந்திரு மேனிதீண்டுவார்
முப்புவிதொழுமுழு நீறுபூசுவா
ரப்பாலுமடிச் சார்ந்தாரைவணங்கிப்
பூசலாரைப்பசி புகுமனுடத்தின்
மாசிலாமாணியார் மைம்மதியுரோகணி
மிகுசிவநேசர் மீனரோகணியிற்
றொகுபுகழ்ச்செங்கட் சோழர்குடக்குன்
றடுநீலகண்ட யாழ்ப்பாணர்சேமூலஞ்
சடையனார்மார்கழி சார்ந்தவாதிரையி
லிசைஞானிமேடந் திசைந்தசித்திரையில்
வசையிலாவிம்மதி மருவுமிந்நாளிற்
பரகதியடைந்த பத்தரைப்பாடிக்
கருதுவன்றொண்டர் கடகச்சுவாதி
குருபூசைநாளிற் குறைவிலாதிவர்க்கு
வருபூசைதந்தோர் மாநிலத்தோங்கித்
தவப்பயனெய்திச் சதுமறைக்கிரியிற்
சிவகதியடைத றிண்ணமுண்மையதே.

திருச்சிற்றம்பலம்.

## சமயாசாரியர் நால்வர் வயசு.

அப்பருக் கெண்பத்தொன் றருள்வாத வூரருக்குச்
செப்பிய நாலெட்டிற் றெய்வீக - மிப்புவியிற்
சுந்தரர்க்கு மூவாறு தொன்ஞான சம்பந்தர்க்
கந்தம் பதினா றறி.

சித்திரைச் சதயமப்பர் சிறந்தவை காசிமூல
மத்தரைப் பணிசம்பந்த ராணிமா மகத்திலந்த
மூத்தமிழ் வாதவூரர் முதியநல் லாடிதன்னிற்
சுத்தமாஞ் சோதிநாளிற் சுந்தரர் கயிலைசேர்ந்தார்.

பாடிய சம்பந்தர் வைகாசி மூலம் பயிலுமப்பர்
நீடிய சித்திரை மாதச் சதய நிறைவன்றொண்ட
ராடியிற் சோதி திருவாத வூரர்நல் லாணிமகந்
தேடிய சேக்கிழார் வைகாசிப் பூசஞ் சிறந்தனரே.

சித்திரை யத்த முமாபதி யாவணித் திங்கட்னி
லுத்திரஞ் சீர்கொண் மறைஞான சம்பந்த ரோதுகன்னிச்
சுத்தமெய்ப் பூர மருணந்தி யைப்பசிச் சோதிதனில்
வித்தக மெய்கண்ட தேவர் சிவகதி மேவினரே.

திருச்சிற்றம்பலம்.

திருநட்சத்திர முற்றிற்று.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சேக்கிழார் நாயனார்

## புராணம் மூலமும் உரையும்.

### பாயிரம்.

### விநாயகர் துதி.

விருத்தம்.

வானுலகு மண்ணுலகும் வாழமறை வாழப்
பான்மைதரு செய்யதமிழ் பார்மிசை விளங்க
ஞானமத வைந்துகர மூன்றுவிழி நால்வா
யானைமுக னைப்பரவி யஞ்சலிசெய் கிற்பாம்.

(இ-ள்.) வானுலகுமண்ணுலகும்வாழ=விண்ணுலகத்தாரும் மண்ணுலகத்தாரும் வாழ்வடையவும்; மறைவாழ=வேதாகமங்கள் நிலைபெறவும்; பான்மைதரு செய்யதமிழ்=உயிர்க்குறுதியைத்தருகின்ற திருநெறித்தமிழ்வேதம்; பார்மிசைவிளங்க=உலகின்கண்விளங்கவும்; ஞானமதவைந்துகரமூன்றுவிழிநால்வாய்=ஞானமாகியமதத்தைப்பொழிகின்ற துதிக்கையோடுகூடிய ஐந்து திருக்கரங்களையும் மூன்றுகண்களையும் நான்றவாயினையுமுடைய; ஆனைமுகனைப்பரவியஞ்சலிசெய்கிற்பாம்=ஆனைமுகக்கடவுளைவாழ்த்திக் கைகூப்புவாம்.— எ-று. (க)

நால்வாய் - நாலென்னும் எண்ணுப்பொருளவாயும் நின்றது. மும்மதங்களுள்-கைமதம் ஞானமாதலில் ஞானமதம் என்றாரென்க. ஈண்டு விக்கினகருத்தா என்னும் முறைபற்றிப் பொதுமையில் வணங்கப்பட்டது. பின்வரும் வணக்கம் சிவபிரானுக்குப் புத்திரனென்னும் முதன்மைபற்றிவணங்கப்பட்டது. இவ்வாறு இருவகைவணக்கம் புராணங்களுள் வருதல்காண்க.

### சபாநாதர் துதி.

சீராருஞ் சதுமறையுந் தில்லைவா ழந்தணரும்
பாராரும் புலிமுனியும் பதஞ்சலியுந் தொழுதேத்த
வாராருங் கடல்புடைசூழ் வையமெலா மீடேற
வேராரு மணிமன்று ளெடுத்ததிரு வடிபோற்றி.

(இ-ள்.) சீராருஞ்சதுமறையும்=சிறப்பமைந்த நான்கு வேதங்களும்; தில்லைவாழந்தணரும்=தில்லைமூவாயிரவரும்; பாராரும்புலிமுனியும்=தில்லைப்பதிக்கண்வாழும் வியாக்கிரபாதரும்; பதஞ்சலியுந்தொழுதேத்த=பதஞ்சலிமுனிவரும் வணங்கித்துதிக்கவும்; வாராருங்கடல்புடைசூழ்=நீர்நிறைந்த கடலானது அருகிற்சூழ்ந்த; வையமெலாமீடேற=உலகின்கண்வாழும் உயிர்களெல்லாங்கடத்தேறவும்; ஏராருமணிமன்றுள்=திருவருண்ஞானம் நிறைந்துள்ள அழகியதிருவம்பலத்தின்கண்; எடுத்ததிருவடிபோற்றி=நடேசப்பிரானது குஞ்சிதபாதத்தைத்துதிக்கின்றேன்.—எ-று. (உ)

வையமென்பது-ஈண்டு உயிர்கண்மேனின்றது. போற்றியென்னுந் தொழிற்பெயர் ஈண்டு முற்றாய்நின்றது. போற்றியென்றது துதித்தலை.

## சிவகாமசுந்தரிதுதி.

பரந்தெழுந்த சமண்முதலாம் பரசமய விருணீங்கச்
சிரந்தழுவு சைவநெறித் திருநீற்றி னொளிவிளங்க
வரந்தைகெடப் புகலியர்கோ னமுதுசெயத் திருமுலைப்பால்
சுரந்தளித்த சிவகாம சுந்தரிபூங் கழல்போற்றி.

(இ-ள்.) பரந்தெழுந்த=உலகமுழுதும்பரவியெழுந்த; சமண்முதலாம் பரசமயவிருணீங்க=அருகம்முதலான புறச்சமயங்களாகிய அந்தகாரம்நீங்கவும்; சிரந்தழுவுசைவநெறி=எவ்வகைமதங்கட்குந் தலைமையாயுள்ள சைவநெறிக்குரிய; திருநீற்றினொளிவிளங்க=திருநீற்றினொளியெங்கும்பெருகவும்; அரந்தைகெட=உயிர்களதுபிறவித்துன்பமொழியவும்; புகலியர்கோனமுதுசெய=சீகாழியிலவதரித்தருளிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் அமுதுசெய்யும்படிக்கு; திருமுலைப்பால்சுரந்தளித்த=திருமுலைப்பாலைச்சுரந்துகொடுத்தருளிய; சிவகாமசுந்தரிபூங்கழல்போற்றி=சிவகாமியம்மையின் அழகுள்ளதிருவடிகளைவணங்குவாம்.—எ-று. (௩)

## கற்பகவிநாயகர்துதி.

மலரயனுந் திருமாலுங் காணாமை மதிமயங்கப்
புலிமுனியும் பதஞ்சலியுங் கண்டுதொழப் புரிசடையார்
குலவுநடந் தருந்தில்லைக் குடதிசைக்கோ புரவாயி
னிலவியகற் பகக்கன்றி னிரைமலர்த்தா ளிணைபோற்றி.

(இ-ள்.) மலரயனுந்திருமாலுங்காணாமை மதிமயங்க=தாமரைமலரின்கண்வாழும் பிரமனுந்திருமாலும் முடியையும் அடியையும் காணாமையினால் அறிவுமயங்கவும்; புலிமுனியும் பதஞ்சலியுங்கண்டுதொழ=வியாக்கிரபாதரும் பதஞ்சலிமுனிவரும் தரிசித்துவணங்கவும்; புரிசடையார்=முறுக்கப்பட்டசடைமுடியையுடைய நடேசப்பிரான்; குலவுநடந்தரும்=ஐந்தொழிலும்விளங்குதற்கேதுவாகிய திருநடனஞ்செய்யும்; தில்லைக்குடதிசைக்கோபுரவாயினிலவிய=தில்லையின்மேற்குக்கோபுரவாயிலில் விளங்காநின்ற; கற்பகக்கன்றினிரைமலர்த்தாளிணைபோற்றி=கற்பகவிநாயகருடைய வரிசையாகவைத்த இரண்டுசெந்தாமரைமலர்போன்ற திருவடிகளைத்துதிசெய்வாம்.—எ-று. (௪)

## சுப்பிரமணியசுவாமிதுதி.

பாறுமுக மும்பொருந்தப் பருந்துவிருந் துணக்கழுகு
நூறுமுக மாயணைந்து நூழில்படு களம்புகுத
மாறுமுகந் தருநிருதர் மடியவடி வேலெடுத்த
ஆறுமுகன் றிருவடித்தா மரையிணைக ளவைபோற்றி.

(இ-ள்.) பாறுமுகம்பொருந்த=பகைவர்முதுகுகாட்டியோடுதல்பொருந்தவும்; பருந்துவிருந்துண=பருந்துகள் விருந்துண்ணவும்; கழுகுநூறுமுகமாயணைந்து=கழுகுகள் அநேகஇடங்களினின்றும்வந்து; நூழில்படுகளம்புகுத=கொல்லப்பட்டயுத்தகளத்திற்சேரவும்; மாறுமுகந்தருநிருதர்மடிய=மாறுபட்டமுகங்களையுடைய அவுணர்களிறக்கும்படி; வடிவேலெடுத்த ஆறுமுகன்=வேலினையெடுத்தருளிய சுப்பிரமணியக்கடவுள்; திருவடித்தாமரையிணைகளவைபோற்றி=திருவடித்தாமரைகளை வணங்குவாம்.—எ-று. (௫)

உம்-அசை. நூழில் என்பதற்குச் சேறுபட்ட எனினும் அமையும். அவை-பகுதிப்பொருள்விகுதி.

## சைவசமயாசாரியர்துதி.

பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல்போற்றி
யாழிமிசைக் கன்மிதப்பி லணைந்தபிரா னடிபோற்றி
வாழிதிரு நாவலூர் வன்றொண்டர் பதம்போற்றி
யூழிமலி திருவாத வூரர்திருத் தாள்போற்றி.

(இ-ள்.) பூழியர்கோன்வெப்பொழித்த=கூன்பாண்டியன்சுரத்தைத்தணித்த; புகலியர்கோன்கழல்போற்றி=சம்பந்தசுவாமிகளுடைய திருவடிகளைப்போற்றிசெய்வாம்; ஆழிமிசைக்கன்மிதப்பிலணைந்த=சமுத்திரத்திற்கருங்கல்லாகிய தெப்பத்தின்மீதுவந்த; பிரானடிபோற்றி=அப்பர்சுவாமிகளுடையதிருவடிகளைப்போற்றிசெய்வாம்; திருநாவலூர்வன்றொண்டர்=திருநாவலூரில்திருவவதாரஞ்செய்த சுந்தரமூர்த்திசுவாமிகளுடைய; பதம்போற்றி=திருவடிகளைப்போற்றிசெய்வாம்; ஊழிமலிதிருவாதவூரர்=ஊழிகாலத்திலும் அழியாததிருவாதவூரரென்னும் மாணிக்கவாசகசுவாமிகளுடைய; திருத்தாள்போற்றி=திருவடிகளைப்போற்றிசெய்வாம்.—எ-று. (௬)

வாழி-அசை.

## திருத்தொண்டர்-சேக்கிழார்நாயனார்துதி.

தில்லைவா ழந்தணரே முதலாகச் சீர்படைத்த
தொல்லையதாந் திருத்தொண்டத் தொகையடியார் பதம்போற்றி
யொல்லையவர் புராணகதை யுலகறிய விரித்துரைத்த
செல்வமலி குன்றத்தூர்ச் சேக்கிழா ரடிபோற்றி.

(இ-ள்.) சீர்படைத்ததொல்லையதாம்=சிறப்புத்தங்கிய பழமையாகிய; திருத்தொண்டத்தொகை=திருத்தொண்டத்தொகையிற் கூறிய; தில்லைவாழந்தணர்முதலாக அடியார்=தில்லைவாழந்தணர்கள்முதலாகிய அடியார்கள்;

பதம்போற்றி—திருவடிகளைத்துதிசெய்வாம்; ஒல்லையவர்புராணகதை—ஆதியில் அந்த அடியார்கள்புராணத்தை; உலகறியவிரித்துரைத்த—உலகத்தார்தெரிந்துகொள்ளும்படிவிரிவாகக்கூறியருளிய; செல்வமலிகுன்றத்தூர்ச்சேக்கிழார்—செல்வம்நிறைந்தகுன்றத்தூரில் திருவவதாரஞ்செய்த சேக்கிழார்நாயனருடைய; அடிபோற்றி—திருவடிகளைப்போற்றிசெய்வாம்.—எ-று. (எ)

ஏ-அசை.

## நூற்பெயர்.

தாய்மலர்ந்த முகத்தினளாய்த் தழுவிமுலை தரவந்த
நோய்மலர்ந்த பிறவிதொறு நுழையாம லுலகுய்யத்
தீமலர்ந்த சடைக்கூத்தர் திருவருளாற் சேக்கிழார்
வாய்மலர்ந்த புராணத்தின் வரலாறு விரித்துரைப்பாம்.

(இ-ள்.) தாய்மலர்ந்தமுகத்தினளாய்த்தழுவி—தாயானவள் மகிழ்ச்சியான்மலர்ந்தமுகத்தையுடையவளாகித் தன்மார்போடணைத்துக்கொண்டு; முலைதரவந்த நோய்மலர்ந்தபிறவிதொறு நுழையாமல்—முலைப்பால்கொடுத்தற்கேதுவாய்வந்த துயர்மிக்கபிறவிகளிற்செல்லாமல்; உலகுய்ய—உலகத்தார்பிழைத்துக் கடத்தேறும்பொருட்டு; தீமலர்ந்தசடைக்கூத்தர் திருவருளால்—நெருப்புப்போல் பிரகாசியாநின்ற சடாபாரத்தையுடைய நடேசப்பிரான் திருவருளினால்; சேக்கிழார்வாய்மலர்ந்தபுராணத்தின்வரலாறு—சேக்கிழார்நாயனார் திருவாய்மலர்ந்தருளிய திருத்தொண்டர்புராண வரலாற்றை; விரித்துரைப்பாம்—விரிவாகக்கூறுவாம்.—எ-று. (அ)

வரலாறு என்றதனால் ஆக்கியோன்சிறப்பும் நூல்வந்தவழியும் அதை அரங்கேற்றும்முறையும் முதலியனகொள்க. வரலாறு என்றது சிறப்புப்பாயிரத்தை.

## அவையடக்கம்.

ஊர்க்கடலை யிவனெனவந் துதித்தநா னோங்குதமிழ்
நூற்கடலைக் கரைகண்டு நுவலநினைக் குமதுதிருப்
பாற்கடலைச் சிற்றெறும்பு பருகநினைப் பதுபோலு
நீர்க்கடல்சூழ் மண்ணுலகை நிறுக்கநினைக் குமதொக்கும்.

(இ-ள்.) ஊர்க்கடலையிவனெனவந்துதித்தநான்—இவன் இவ்வுலகத்திற்குச் சாம்பற்புழுதியென்று சொல்லும்படிபிறந்தநான்; ஓங்குதமிழ்நூற்கடலைக்கரைகண்டுநுவலநினைக்குமது—மிகுந்தசிறப்போடு விளங்குகின்ற பெரியபுராணம் என்னும் சமுத்திரத்தின் அளவைக்கண்டு கூறத்தொடங்குவது (எவ்வாறெனில்); திருப்பாற்கடலைச் சிற்றெறும்பு பருகநினைப்பது—திருப்பாற்கடலைச்சிற்றெறும்பானது உண்ணநினைப்பதையும்; நீர்க்கடல்சூழ்மண்ணுலகை—நீர்நிறைந்த சமுத்திரஞ்சூழ்ந்த இப்பூமியை; நிறுக்கநினைக்குமதொக்கும்—நிறுப்பதற்கு நினைப்பதையும் ஒப்பாகும்.—எ-று. போலும் - அசை (கூ)

நீண்டுத் தமிழ்நூலென்றது பெரியபுராணத்தை.

தேவுடனே கூடியசொற் செழுந்தமிழோர் தெரிந்துரைத்த
பாவுடனே கூடியவென் பருப்பொருளும் விழுப்பொருளாங்
கோவுடனே கூடிவருங் குருட்டாவு மூர்புகுதும்
பூவுடனே கூடியநார் புனிதர்முடிக் கணியாமால்.

(இ-ள்.) கோவுடனேகூடிவரும்=பசுக்களுடனே கூடிக்கொண்டுவருகின்ற; குருட்டாவுமூர்புகுதும்=குருட்டுப்பசுவும் ஊரிற்செல்லும்; பூவுடனேகூடியநார்=மலரோடுசேர்ந்தநாரும்; புனிதர்முடிக்கணியாம்=சிவபிரான்திருமுடிக்கு மாலையாகும் (அதுபோல); தேவுடனேகூடியசொல்=தெய்வத்தன்மைபொருந்திய சொல்லமைந்த; செழுந்தமிழோர் தெரிந்துரைத்த=செழுமையாகிய தமிழையுடைய சேக்கிழார்நாயனார் நன்றாகவாராய்ந்து அருளிச்செய்த; பாவுடனேகூடிய=திருத்தொண்டர்புராணத்தோடுகூடிய; என்பருப்பொருளும் விழுப்பொருளாம்=என்னுடைய அற்பமாகியபொருளும் மேன்மையாகியபொருளாகும்.—எ-று. ஆல்-அசை. (௧0)

பாயிரம் முற்றிற்று.

---

## நூல்.

பாலாறு வளஞ்சுரந்து நல்கமல்கும் பாளைவிரி மணங்கமழ்பூஞ் சோலைதோறுங், காலாறு கோலியிசை பாடநீடு களிமயினின் றாடுமியற் றொண்டைநாட்டு,நாலாறு கோட்டத்துப் புலியூர்க்கோட்ட நன்றிபுனை குன்றைவள நாட்டுமிக்க, சேலாறு கின்றவயற் குன்றத்தூரிற் சேக்கிழார் திருமரபு சிறந்ததன்றே.

(இ-ள்.) பாலாறுவளஞ்சுரந்துநல்க=பாலாறானது நீர்வளத்தைப்பெருக்கிக்கொடுக்க அதனால்; மல்கும்பாளை விரிமணங்கமழ்பூஞ்சோலைதோறும்=விருத்தியடையும்கமுகம்பாளைகள்விரிந்து வாசனைபரிமளிக்கா நின்ற மலர்ச்சோலைகள்தோறும்; காலாறுகோலியிசைபாட=வண்டுகள்சூழ்ந்து இசைபாட; நீடுகளிமயினின்றாடுமியற்றொண்டைநாட்டுள்=மிக்கமயில்கள் களிப்புடனே ஆடும்படியான தொண்டைநாட்டில்; நாலாறுகோட்டத்துப்புலியூர்க்கோட்டம்=இருபத்துநான்குகோட்டத்துளொன்றாகிய புலியூர்க்கோட்டத்தில்; நன்றிபுனைகுன்றைவளநாட்டு=நன்மைமிகுந்த எழுபத்தொன்பதுநாடுகளுள் ஒன்றாகிய குன்றைவளநாட்டின்கண்; மிக்கசேலாறுகின்றவயற்குன்றத்தூரில் = எண்ணிறந்த சேற்கெண்டைகள் இளைப்பாறுகின்ற வயலினையுடைய குன்றத்தூரில்; சேக்கிழார்திருமரபுசிறந்தது=சேக்கிழார்நாயனாரது மரபு சிறப்புற்றுவிளங்கியுள்ளது.—எ-று. அன்று ஏ-அசை. (௧௧)

நாடெங்குஞ் சோழன்முனந் தெரிந்தேயேற்று நற்குடிநாற் பத்தெண்ணா யிரத்துவந்த, கூடல்கிழான் புரிசைகிழான் குலவுசீர்வெண் குளப்பாக்கி ழான்வரிசைக் குளத்துழான்முன், றேடுபுக ழாரிவருஞ் சிறந்துவாழச் சேக்கிழார் குடியிலிந்தத் தேசமுய்யப், பாடல்புரி யருண்மொழித்தே வரும்பினந்தம் பாலரு வாயரும்வந் துதித்துவாழ்ந்தார்.

(இ-ள்.) நாடெங்குஞ்சோழன்முனந்தெரிந்தேற்றும்=தொண்டைநாடு
முழுதும் கரிகாற்சோழன் முற்காலத்தில் தன்னாடுமுதலிய நாடுகளினின்றுந்தெ
ரிந்தெடுத்துக் குடியேற்றிய; நற்குடிநாற்பத்தெண்ணாயிரத்துவந்த=நல்லகுடிக
ளாகிய நாற்பத்தெண்ணாயிரங்குடிகளுள்வந்த; கூடல்கிழான் புரிசைகிழான்
=கூடல்கிழானென்றும் புரிசைகிழானென்றும்; குலவுசீர்வெண்குளப்பாக்கி
ழான்வரிசைக்குளத்தூழான்=விளங்கியசிறப்புள்ள வெண்குளப்பாக்கிழானெ
ன்றும் மேன்மைதங்கியகுளத்தூழானென்றும்; முன்றேடுபுகழாரிவருஞ்சிறந்து
வாழ=தொன்றுதொட்டபுகழ்சம்பாதித்தவர்களாகிய இவர்களும் சிறப்புற்று
வாழ; சேக்கிழார்குடியிலிந்தத்தேசமுய்ய=சேக்கிழார்குடியில் இவ்வுலகத்தா
ர்கடைத்தேறும்படி; பாடல்புரி யருண்மொழித்தேவரும்=பெரியபுராணத்தை
யோதியருளிய அருண்மொழித்தேவரும்; பினந்தம்பாலறுவாயரும் வந்துதித்
துவாழ்ந்தார்=பின்பு அவர்தம்பியாகிய பாலறுவாயரும் திருவவதாரஞ்செய்
து வாழ்ந்திருந்தனர்.—எ-று. ஏ-அசை. (கஉ)

பசுங்குடிபன்னீராயிரத்தினும் நற்குடிசிறந்தமையின் நற்குடிநாற்பத்
தெண்ணாயிரத்துள்என்றாரென்க. பின்னம்என்றது பிணம்என விகாரமாயிற்று.

இமயமலை யரையன்மக டழுவக்கச்சி யேகம்பர் திருமேனி குழை
ந்தஞான்று, சமயமவை யாறினுக்குத் தலைவிக்கீசர் தந்தபடி யெட்டு
ழக்கீ ராழிநெல்லு, முமைதிருச்சூ டகக்கையாற் கொடுக்கவாங்கி யுழ
வுதொழி லாற்பெருக்கி யுலகமெல்லாந், தமதுகொழு மிகுதிகொடு
வளர்க்கும்வேளாண் டலைவர்பெரும் புகழுலகிற் றழைத்ததன்றே.

(இ-ள்.) இமயமலையரையன்மகடழுவ=மலையரையன் புத்திரியாகி
ய உமாதேவியார்தழுவ; கச்சியேகம்பர் திருமேனிகுழைந்தஞான்று=காஞ்சி
நகரத்திலெழுந்தருளிய ஏகாம்பரநாதர் திருமேனிகுழைந்த அக்காலத்தில்; சம
யமவையாறினுக்குந் தலைவிக்கு=சமயங்களாறினுக்குந் தலைவியாகிய உமா
தேவியார்க்கு; ஈசர்தந்தபடியெட்டுழக்கீராழிநெல்லும்=சிவபிரான்கொடுத்தரு
ளிய நிமந்தமாகிய எட்டுழக்குக்கொண்ட ஈராழிநெல்லினையும்; உமைதிருச்சூட
கக்கையாற்கொடுக்கவாங்கி=உமாதேவியார்வளையலணிந்ததமது திருக்கையாற்
கொடுக்க அதைப்பெற்றுக்கொண்டு; உழவுதொழிலாற்பெருக்கி=உழவுதொழி
லாலதைவிருத்திசெய்து; உலகமெல்லாந்தமதுகொழுமிகுதிகொடுவளர்க்கும்=
இவ்வுலகத்தையெல்லாந் தம்முடைய ஏர்வளத்தின்மிகுதியினால் வளர்க்காநின்
ற; வேளாண்டலைவர்பெரும்புகழுலகிற்றழைத்தது=வேளாளர்களின் பெரிய
புகழானது இவ்வுலகத்திற் சிறப்புற்றுநின்றது.—எ-று. அன்று-ஏ அசை.(கங)

ஏர்வளத்தின்மிகுதியினால் வளர்த்தல்=நெல்முதலியதானியங்களில் எ
ஞ்சியவற்றால் விருத்தியடையச்செய்தல். அதாவது-தன்பங்குநீக்கியமிகுதியா
ல் பிறரைப்பாதுகாத்தல்.

விளைகழனி பூலோக முழுதுமேரி விரிதிரைநீர்க் கடல்வருணன்
கம்புகட்டி, கிளர்கலப்பை தருசுமையாள் சுவேதராமன் கிடாமறலி
வசத்தீசன் வசத்தானென்றிங், களவறிந்தாண் டாண்டுதோறும் வி
தைதப்பாம லளக்குமவள் கச்சியறம் வளர்த்தமாதா, வொளிபெருகு
கொழுமிகுதி யெறும்பீறான வுயிரனைத்துந் தேவருமுண் டுவப்பத
ன்றே.

(இ-ள்.) பூலோகமுழுதும் விளைகழனி=பூலோகமுழுதும்விளைநிலமாக
வும்;விரிதிரைநீர்க்கடல்வரி=விரிந்த அலையையுடைய நீர்நிறைந்தகடல்வரியாகவு
ம்;வருணன்கம் புகட்டி=வருணராசன் மடைமாறுகின்றவனாகவும்; கிளர்கல
ப்பைதரு=பிரகாசியாநின்ற கலப்பையானது கற்பகதருவாகவும்; சுமையாள்சு
வேதராமன்=பலபத்திரராமன் கலப்பைசுமக்கும் ஆளாகவும்; கிடாமறலிவச
த்து=எருமைக்கடா எமனிடத்தும்; ஈசன்வசத்தானென்று=இடபம் சிவனி
டத்துமாக என்று; இங்களவறிந்தாண்டாண்டுதொறும்=இவ்விடத்துப் பிரமா
ணமறிந்து வருடந்தோறும்; விதைதப்பாமலளக்குமவள்=விதைகள்தப்பாமல்
அளக்காநின்ற அம்மை; கச்சியறம்வளர்த்தமாதா=காஞ்சிநகரத்தில் முப்பத்தி
ரண்டறங்களையும்வளர்த்த உமாதேவியார்; ஒளிபெருகுகொழுமிகுதி=இவ்வா
று புகழ்பெருகுகின்ற கொழுவாலாகிய தானியமிகுதியை; எறும்பீறான வுயிர
னைத்தும்=மனிதர்முதல் எறும்பீறாய எல்லாவுயிர்களும்; தேவருமுண்டுவப்
பது=தேவர்களும் உண்டுமகிழ்ச்சியடைவது.—எ-று. (௧௪)

மிகுதி-எஞ்சியது.

மாறுகொடு பழையனூர் நீலிசெய்த வஞ்சனையால் வணிகனுயி
ரிழப்பத்தாங்கள், கூறியசொற் பிழையாது துணிந்துசெந்தீக் குழி
யிலெழு பதுபேரு முழுகிக்கங்கை, யாறணிசெஞ் சடைத்திருவா ல
ங்காட்டப்ப ரண்டமுற நிமிர்ந்தாடு மடியின்கீழ்மெய்ப். பேறுபெறு
ம் வேளாளர் பெருமையெம்மாற் பிறித்தளவிட் டிவளவெனப் பேச
லாமோ.

(இ-ள்.) மாறுகொடுபழையனூர்நீலிசெய்தவஞ்சனையால்=வஞ்சனையை
க்கருதிக்கொண்டு பழையனூர் * நீலியென்னும்பேய்மகள்செய்த மாறுபாட்டி
னால்; வணிகனுயிரிழப்ப=ஒருசெட்டியானவன் உயிரிழந்துவிட அதைக்கண்டு;
தாங்கள்கூறியசொல்பிழையாதுதுணிந்து=தாங்கள்முன்சொல்லிய வாய்மை
தப்பாமல்துணிவுகொண்டு; செந்தீக்குழியிலெழுபதுபேருமுழுகி=செந்நிறமாகி
யதீக்குழியில் எழுபதுபேரும்முழுகி; கங்கையாறணிசெஞ்சடைத்திருவாலங்கா
ட்டப்பர்=கங்காநதியைத்தரித்த சிவந்தசடாபாரத்தையுடைய திருவாலங்காட்
டிலெழுந்தருளியசிவபிரானது; அண்டமுறநிமிர்ந்தாடுமடியின்கீழ்= ஆகாயமு
கட்டினை அளாவும்படி நிமிர்ந்துநடனஞ்செய்கின்ற திருவடியின்கீழ்ச்சேர்ந்து;
மெய்ப்பேறுபெறும்வேளாளர்பெருமை=உண்மையான பேறுபெற்ற வேளா
ளர்களுடைய பெருமையானது; எம்மாற்பிறித்தளவிட்டிவளவெனப்பேசலா
மோ=எம்மால் தனித்து அளவுபடுத்தி இவ்வளவினதென்று கூறப்படு
மோ.—எ-று. (௧௫)

காராள ரணிவயலி லுழுதுதங்கள் கையார நட்டமுடி திருந்தி
லிந்தப், பாராளுந் திறலரசர் கவித்தவெற்றிப் பசும்பொன்மணி மு
டிதிருந்துங் கலப்பைபூண்ட, வேராலெண் டிசைவளர்க்கும் புகழ்
வேளாள ரேரடிக்குஞ் சிறுகோலாற் றரணியாளச், சீராரு முடியர
ச ரிருந்துசெங்கோல் செலுத்துவர்வே ளாளர்புகழ் செப்பலாமோ.

* நீலியென்னும்பேய்மகள்சரிதம் திருக்குறிப்புத்தொண்டநாயனார்புரா
ணம், ௩-வது திருவிருத்தவுரையிற்காண்க.

(இ-ள்.) காராளரணிவயலிலுழுது=வேளாளர்கள் செழுமையுள்ள வயலிலுழுது; தங்கள்கையாரநட்டமுடிதிருந்தில்=தங்கள்கையால் நிரம்பநட்டநாற்றுமுடிகளானவை செப்பமாக விளையுமானால்; இந்தப்பாராளுந்திறலரசர்கவித்த=இவ்வுலகத்தையாளவல்ல அரசர்கள்தரித்த; வெற்றிப்பசும்பொன்மணிமுடிதிருந்தும்=வெற்றியினையுடைய மாற்றுயர்ந்தபொன்னாலாகியமணிகள்பதித்தமுடியானது செப்பமாகஇருக்கும்; கலப்பைபூண்ட ஏராலெண்டிசைவளர்க்கும்புகழ்வேளாளர்=கலப்பைபூண்டஏரால் எட்டுத்திக்கினும் புகழைவளர்க்கும்வேளாளர்; ஏரடிக்குஞ் சிறுகோலால்தரணியாள=உழவுக்குண்டைகளை அடித்து ஓட்டுகின்ற சிறியதாற்றுக்கோலால் இவ்வுலகத்தையாள; சீராருமுடியரசிருந்து=சிறப்புள்ளமகுடவர்த்தனர்கள் வீற்றிருந்து; செங்கோல்செலுத்துவர்=செங்கோல்செலுத்துவார்கள் (ஆகையால்;) வேளாளர்புகழ்செப்பலாமோ=அவ்வேளாளரதுபுகழை இவ்வளவென்று வரையறுத்துச்சொல்லமுடியுமோ.—எ-று. (கசு)

அரசர்முடிதிருந்துதற்கு நாற்றுமுடிதிருந்தலேதுவாதலில் நட்டமுடிதிருந்திலென்றார்.

வாயிலார் சத்தியார் விறல்சேர்மிண்டர் வாக்கரையர் சாக்கியர் கோட் புலிகஞ்சாறர், ஏயர்கோன் கலிக்காமர் முளைவித்தாக்கு மிளையான்றன் குடிமாறர் மூர்க்கர்செங்கைத், தாயனார் செருத்துணையார் செருவில்வெம்போர் சாதித்த முனையடுவா ராகநம்பி, பாயிரஞ்சேரறுபதுபேர் தனிப்பேர்தம்மிற் பதின்மூவர் வேளாளர் பகருங்காலே.

(இ-ள்.) வாயிலார்சத்தியார்விறல்சேர்மிண்டர்=வாயிலார்நாயனார்சத்திநாயனார் விறன்மிண்டநாயனார்; வாக்கரையர்சாக்கியர் கோட்புலிகஞ்சாறர்=திருநாவுக்கரசுசுவாமிகள் சாக்கியநாயனார் கோட்புலிநாயனார் மானக்கஞ்சாறநாயனார்; ஏயர்கோன்கலிக்காமர்=ஏயர்கோன்கலிக்காமநாயனார்; முளைவித்தாக்குமிளையான்றன்குடிமாறர்=முளைத்தவித்தினை அரிசியாக்கி அமுதசமைத்த இளையான்குடிமாறநாயனார்; மூர்க்கர்செங்கைத்தாயனார்செருத்துணையார்=மூர்க்கநாயனார் செவ்விதானகையையுடைய அரிவாட்டாயநாயனார் செருத்துணைநாயனார்; செருவில்வெம்போர்சாதித்த முனையடுவாராக=போர்முனையில் கொடியபோரை வெற்றிகொண்ட முனையடுவார்நாயனாரும் என்னும்; நம்பிபாயிரஞ்சேரறுபதுபேர்தனிப்பேர்தம்மில்=சுந்தரமூர்த்திசுவாமிகள் திருத்தொண்டத்தொகையிலுள்ள அறுபதுதனியடியார்களுக்குள்; பதின்மூவர் வேளாளர் பகருங்கால்=சொல்லுமிடத்து வேளாளர் பதின்மூன்றுபேராம்.—எ-று. ஏ-அசை. (கஎ)

அத்தகைய புகழ்வேளாண் மரபிற்சேக்கி ழார்குடியில் வந்தவருண் மொழித்தேவர்க்குத், தந்துபரி வளவனுந்தன் செங்கோலோச்சுந் தலைமையளித் தவர்தமக்குத் தனதுபேரு,முத்தமச் சோழப்பல்லவன்றானென்று முயர்பட்டங் கொடுத்திடவாங் கவர்நீர்நாட்டு, நித்தனுறை திருநாகேசுரத்திலன்பு நிறைதலினான் மறவாத நிலைமைமிக்கார்.

தொண்டைநாட்டிற் குன்றத்தூரில் வேளாண்மரபில் சேக்கிழார்சுவாமிகளவதரித்து திருநாகேச்சர மாலயப்பிரதிஷ்டை செய்வித்து மடவளாகமுமமைத்து பதிபுண்ணியத்திலிருக்கையில், ஷை சுவாமிகள் தன்மையை சோழர்பெருமான் கேள்வியுற்று அவரை வருவிக்க அவர்பாற் சிலமுதியோர்களை அனுப்பினது.

(இ-ள்.) அத்தகையபுகழ்வேளாண்மரபில்=அத்தன்மையான புகழை யுடைய வேளாளர்மரபில்; சேக்கிழார்குடியில்வந்த=சேக்கிழார்குடியில் திருவ வதாரஞ்செய்தருளிய; அருண்மொழித்தேவர்க்கு=அருண்மொழித்தேவருக்கு; தத்துபரிவளவனும்=தாவிச்செல்லுங் குதிரைக்கூட்டத்தையுடைய அநபாய சோழனும்; தன்செங்கோலோச்சுந்தலைமையளித்து=தனதுசெங்கோல்செலுத் தும்படியான மந்திரியாம்முதன்மையைக்கொடுத்து; அவர்தமக்கு=அவருக்கு; தனதுபேரும்=தன்னுடையபெயரையும்; உத்தமச்சோழப்பல்லவனென்ன= உத்தமச்சோழப்பல்லவனென்று; உயர்பட்டங்கொடுத்திட= உயர்ந்தபட்டமா கக்கொடுத்திடப்பெற்றுக்கொண்டு; ஆங்கவர்நீர்நாட்டு=அவ்விடத்து அச்சோ ழரது நீர்வளமுடையதாகிய சோழநாட்டில்; நித்தனுறைதிருநாகேச்சுரத்தில்= சிவபிரான்வீற்றிருந்தருளும் திருநாகேச்சுரமென்னுந்தலத்தில்; அன்புநிறைதலி னால்=அன்பானது நிறைதலினால்; மறவாதநிலைமைமிக்கார்=மறவாதநிலைமை யை உடையவராயிருந்தனர்.—எ-று. தான்-அசை. (கஅ)

தம்பதிகுன் றத்தூரின் மடவளாகந் தானாக்கித் திருக்கோயி ரு பித்தங்கண், செம்பியர்கோன் றிருநாகேச்சுரம்போலீதுந் திருநாகே ச்சுரமெனவே திருப்பேர்சாற்றி, யம்புவியி லங்காங்க வைபவங்கட் கானபரி கலந்திருநாள் பூசைகற்பித், திம்பர்புகழ் வளவனர சுரிமை ச்செங்கோ லிமசேது பரியந்த மியற்றுநாளில்.

(இ-ள்.) தம்பதிகுன்றத்தூரில்=தமதூராகியகுன்றத்தூரில்; மடவ ளாகந்தானாக்கி=மடவளாகத்தைஏற்படுத்தி; திருக்கோயிருபித்து=(அதனுள்) திருக்கோயிலொன்றைப் பிரதிட்டைசெய்து; அங்கண்செம்பியர்கோன் றிருநா கேச்சுரம்போல்=அவ்வூரில் அநபாயசோழனுடைய திருநாகேச்சுரம்போல; ஈ துந்திருநாகேச்சுரமெனவேதிருப்பேர்சாற்றி=இதுவும் திருநாகேச்சுரமென்று திருப்பெயரிட்டு; அம்புவியிலங்காங்கவைபவங்கட்கானபரிகலம்=அத்திருநாகே ச்சுரத்தில் நித்தியபூசையும் அதற்கங்கமான திருவிழாவுமாகிய சிறப்புகளைச்செ ய்தற்குரிய பரிசனங்களையும்; திருநாள்பூசைகற்பித்து=திருவிழாவையும் நித்திய பூசையையும்ஏற்படுத்தி; இம்பர்புகழ்வளவனரசுரிமைச்செங்கொல்=இவ்வுலக த்தார்புகழும் அநபாயசோழனுக்குரிய செங்கோலினை; இமசேதுப்ரியந்தமியற் றுநாளில்=இமசேதுபரியந்தம் நடாத்திவரும்நாளில்.—எ-று. (கக)

மடவளாகம்=திருமதிலின்புறத்துள்ளவீதி. சிவாலயபூசைக்கு நித்திய மும் நைமித்தியமும் அங்கமாதலின் அங்காங்கமென்புழி நித்தியமும் அங்கமா யிற்று. அதனால் நித்தியம் நித்தியாங்கம், நைமித்தியம் நைமித்தியாங்கம் என் னும்நான்கையும் அங்காங்கமென இரண்டாயடக்கினர்.

கலகமிடு மமண்முருட்டுக் கையர்பொய்யே கட்டிநடாத் தியசிந் தா மணியைமெய்யென், றுலகிலுள்ளோர் சிலர்கற்று நெற்குத்து ண்ணு துமிக்குத்திக் கைவருந்திக் கறவைநிற்க, மலடுகறந் துளந்தள ர்ந்து குளிர்பூஞ்சோலை வழியிருக்கக் குழியில்விழுந் தளறுபாய்ந்து, விலைதருமென் கரும்பிருக்க விரும்பைமென்று விளக்கிருக்க மின்மி னித்திக் காய்ந்துநொந்தார்.

(இ-ள்.) கலகமிடுமமண்முருட்டுக்கையர்=கலகத்தையேசெய்கின்ற முருடர்களாகிய சமணவஞ்சகர்கள்; பொய்யேகட்டிநடத்திய சிந்தாமணியை=பொய்யினையே ஒருகாவியமாக ஏற்படுத்திவழங்கச்செய்த சிந்தாமணி என்னும்நூலை; மெய்யென்றுலகிலுள்ளோர்சிலர்கற்று=உண்மையென்றுகருதி இவ்வுலகத்திலுள்ளோர்சிலர்கற்றுக்கொண்டு; நெற்குத்துண்ணாதுமிக்குத்திக்கைவருந்தி=நெல்லினைக்குத்தியுண்ணாமல் உமியைக்குத்திக்கைவருந்தியும்; கறவைநிற்கமலடுகறந்துளந்தளர்ந்து=கறவைப்பசுவிருக்க மலட்டுப்பசுவைக்கறந்து மனந்தளர்ந்தும்; குளிர்பூஞ்சோலைவழியிருக்க=குளிர்ந்தமலர்ச்சோலை வழியிருக்க; குழியில்விழுந்தளறுபாய்ந்து=பள்ளத்தில்விழுந்து அதிலுள்ள சேற்றைப்பூசிக்கொண்டும்; விலைதருமென்கரும்பிருக்கவிரும்பைமென்று=மதிக்கத்தக்க கரும்பிருக்க இரும்பைத்தின்றும்; விளக்கிருக்கமின்மினித்தீக்காய்ந்துநொந்தார்=தீபமிருக்க மின்மினிப்பூச்சியைத் தீயென்றுகருதிக்குளிர்காய்ந்தும் (வீண்படுதல்போல) நொந்தார்கள்.—எ-று. இவ்விரண்டுங்குளகம். (௨௦)

உமிக்குத்தல் முதலிய தொழில்செய்தோர் தாம்கருதின பயனையடையாமல் வருந்ினமைபோலச் சிந்தாமணியைக் கற்றவர்களும் நல்லபயனையடையாது மனம்வருந்தினரென்பது கருத்து.

வளவனுங்குண் டமண்புரட்டுத் திருட்டுச்சிந்தா மணிக்கதையை மெய்யென்று வரிசைகூர, வுளமகிழ்ந்து பலபடப்பா ராட்டிக் கேட்க வுபயகுல மணிவிளக்காஞ் சேக்கிழார்கண், டிளவரசன் றனைநோக்கிச் சமணர்பொய்நூ லிதுமறுமைக் காகாதிம் மைக்குமற்றே, வளமருவு கின்றசிவ கதையிம் மைக்கு மறுமைக்கு முறுதியென வளவன்கேட்டு.

(இ-ள்.) வளவனுங்குண்டமண்புரட்டுத்திருட்டுச்சிந்தாமணிக்கதையை=அநபாயசோழனும் குண்டரான சமணர்கள் பொய்யாகிய, காப்பியம்போற்செய்த சிந்தாமணிக்கதையை; மெய்யென்றுவரிசைகூரவுளமகிழ்ந்து=உண்மையென்று சிறப்புமிகும்படி மனமகிழ்ந்து;பலபடப்பாராட்டிக்கேட்க=பலவாறுகப்பாராட்டிக்கேட்டுக்கொண்டிருக்க;உபயகுலமணிவிளக்காஞ்சேக்கிழார்கண்டு=தாய்தந்தையராகிய இருவர்மரபிற்கும் மாணிக்கதீபம்போன்ற சேக்கிழார்நாயனார்அறிந்து;இளவரசன்றனைநோக்கி=இளமையுடையனாகிய அநபாயசோழனைப்பார்த்து; சமணர்பொய்நூலிது=சமணர்களுடைய பொய்ம்மையாகிய சரித்திரமிது; மறுமைக்காகாதிம்மைக்குமற்றே=மேலும் இம்மைக்கும் மறுமைக்கும் உதவாது; வளமருவுகின்றசிவகதை=வளப்பமுள்ள சிவசரித்திரமானது; இம்மைக்குமறுமைக்குமுறுதியெனவளவன்கேட்டு=இம்மைக்கும் மறுமைக்கும் உறுதிப்பயனைக் கொடுப்பதாமென்று சொல்ல அநபாயசோழன் அதைக்கேட்டு—எ-று. (௨௧)

அதிற்கூறுஞ் சரிதம் மெய்ப்பயன்குறித்து நில்லாமையிற் புரட்டென்றும், சில வேதவிருத்தம்நீக்கிக் கொல்லாமை பொய்யாமை முதலிய அறங்கள் எமது புராண இதிகாசங்களில் உள்ளனவேயன்றி வேறன்று என்பார் திருட்டென்றுங் கூறினர்.

[1] அநபாயச்சோழர் சேக்கிழார்சுவாமிகளை முதன்மந்திரியாராகவும் உத்தமச்சோழப் பல்லவனெனனப் பிரபுத்துவப்பெயரளித்தது.

[2] சோழன் தினந்தோறும் சிந்தாமணி கதாப்பிரசங்கம் கேட்டுக்கொண்டிருந்ததைக்கண்ட சேக்கிழார்சுவாமிகள் இது இம்மை மறுமைப
[illegible] வென்றும் அவ்வாறு தூர்த்தக்கதை திருத்தொண்டர்புராணமென்றும் புகல அதை விரிவாகப் பாடிமுடிக்க வேண்டித்[illegible]
ற்கு வேண்டிய நிதி கொடுத்தனுப்பியது.

அவகதையாய்ப் பயனற்ற கதையீதாகி லம்மையுமிம் மையுமு
றுதி பயக்கத்தக்க, சிவகதையே ததுகற்ற திறமைப்பேரார் சீவகசிந்
தாமணிபோ லிடையில்வந்த, நவகதையோ புராதனமோ முன்னூ
லுண்டோ நானிலத்துச் சொன்னவரார் கேட்டபேரார், தவகதை
யோ தவம்பண்ணிப் பேறுபெற்ற தனிக்கதையோ வடைவுபடச் சா
ற்றுமென்றான்.

(இ-ள்.) அவகதையாய்ப்பயனற்றகதையீதாகில்—இது அவலமானதா
ய்ப் பிரயோசனமற்ற வீண்கதையாகில்; அம்மையுமிம்மையுமுறுதிபயக்கத்தக்
கசிவகதையேது—மறுமையும் இம்மையும் பயன்களைக் கொடுக்கத்தக்க சிவக
தையென்பது யாது; அதுகற்றதிறமைப்பேரார்—அதைக் கற்றுணர்ந்த திற
மையுடையவர் யாவர்; சீவகசிந்தாமணிபோலிடையில்வந்தநவகதையோ—இந்
தச் சீவகசிந்தாமணியைப்போல் மத்தியில்வந்த புதியகதையோ; புராதனமோ
முன்னூலுண்டோ—அல்லது பழமையானதோ அதற்கு முதனூலொன்றுண்
டோ; நானிலத்துச்சொன்னவரார்கேட்டபேரார்—அக்கதையை இவ்வுலகத்தி
ற் சொன்னவர்கள் யாவர் கேட்டவர்கள் யாவர்; தவகதையோதவம்பண்ணிப்
பேறுபெற்றதனிக்கதையோ—தவநெறியைக்கூறுங்கதையோ அல்லது தவத்
தைச்செய்து பேறுபெற்றாரது ஒப்பற்ற சரித்திரமோ; அடைவுபடச்சாற்றுமெ
ன்றான்—அதைமுறையாகச்சொல்லுமென்று அநபாயசோழன் கேட்டான்.—
எ-று. இவ்விரண்டுங் குளகம்.　　　　　(உஉ)

அம்மை என்பது ஈண்டுமறுமைகுறித்துநின்றது.

செம்பியர்பூ பதிமகிழ்ந்து வினவிக்கேட்கச் சேக்கிழார் குரிசி
லுரை செய்வார்ஞாலத், தம்பலவர் திருத்தொண்டர் பெருமையாரூ
ரடிகண்முத லடியெடுத்துக் கொடுக்கநாவ, னம்பிபதி னொருதிருப்
பாட் டாகச்செய்த நலமலிதொண் டத்தொகைக்கு நாரையூரிற், று
ம்பிமுகன் பொருளுரைக்க நம்பியாண்டார் சுருதிமொழிக் கலித்து
றையந் தாதிசெய்தார்.

(இ-ள்.) செம்பியர்பூபதிமகிழ்ந்து வினவிக்கேட்க—அநபாயசோழன்
மனமகிழ்ந்து வினாக்களாய்க்கேட்க; சேக்கிழார்குரிசிலுரைசெய்வார்—சேக்
கிழார்நாயனார் சொல்லுவாராயினார்; ஞாலத்தம்பலவர்திருத்தொண்டர்பெரு
மை—உலகத்தின்கண் சிவபிரானடியார்களது பெருமையைச்சொல்வதற்கு;
ஆரூரடிகண்முதலடியெடுத்துக்கொடுக்க—திருவாரூர்த் தியாகப்பெருமான் தி
ல்லைவாழந்தணரென்று முதலடியெடுத்துக் கொடுத்தருள; நாவனம்பிபதினொ
ருதிருப்பாட்டாகச்செய்த—திருநாவலூர்ச் சுந்தரமூர்த்திசுவாமிகள் பதினொ
ரு திருப்பாட்டாகப்பாடியருளிய; நலமலிதொண்டத்தொகைக்கு—நன்மைமி
க்க திருத்தொண்டத்தொகைக்கு; நாரையூரிற்றும்பிமுகன்பொருளுரைக்க—தி
ருநாரையூரில் வீற்றிருக்கின்ற பொல்லாப்பிள்ளையார் பொருளருளிச்செய்ய

அதனால்; நம்பியாண்டார்சுருதிமொழிக் கலித்துறையந்தாதிசெய்தார்=நம்பியாண்டார்நம்பி வேதவாக்கியமாகிய கலித்துறைத் திருவந்தாதியைச் செய்தனர்.—எ-று. (உரு)

ஆயுமறை மொழிநம்பி யாண்டார்நம்பி யருள்செய்த கலித்துறையந் தாதிதன்னைச், சேயதிரு முறைகண்ட ராசராச தேவர்சிவாலயதேவர் முதலாயுள்ள, ஏயகருங் கடல்புடைசூ ழுலகமெல்லா மெடுத்தினிது பாராட்டிற் றென்னவந்தத், தூயகதை யடைவுபடச் சொல்லீரென்று சோழனுரை செயக்கேட்டுக் குன்றைவேந்தர்.

(இ-ள்.) மறைமொழியாயு நம்பியாண்டார்நம்பி=வேதமொழியையுணர்ந்த நம்பியாண்டார்நம்பி; அருள்செய்தகலித்துறையந்தாதிதன்னை=அருளிச்செய்த கலித்துறைத்திருவந்தாதியை; சேயதிருமுறைகண்டராசராசதேவர்=செவ்விய திருமுறைகண்ட சோழராகிய அபயகுலசேகரனும்; சிவாலயதேவர் முதலாயுள்ள=சிவாலயதேவர் ஆதியாயுள்ள; ஏயகருங்கடல்புடைசூழுலகமெல்லாம்=பொருந்திய கடலாற்சூழப்பட்ட உலகத்தின்கணுள்ள அறிஞர் தொகுதி முழுதும்; எடுத்தினிதுபாராட்டிற்றென்ன=போற்றி யன்புடன்பாராட்டிக் கொண்டுவந்ததென்று சொல்ல; அந்தத்தூயகதையடைவுபடச்சொல்லீரென்று=அந்தத்தெய்வத்தன்மையுள்ள சரித்திரத்தை முறைமையாகச் சொல்லவேண்டுமென்று; சோழனுரைசெயக்கேட்டுச்குன்றைவேந்தர்=அநபாயசோழன்சொல்ல அதனைக்கேட்டுச் சேக்கிழார்நாயனார்.—எ-று. (உச)

ஈண்டு உலகமென்றது ஆகுபெயராய் அறிஞர்தொகுதியை உணர்த்தி நின்றது. ஆதலில் உலகம் பசித்ததென்றாற்போல அஃறிணைமுடிபேற்றது.

தில்லைவா ழந்தணரே முதற்பண் பாடு திருநீல கண்டத்துப் பாணரீறாச், சொல்லியதொண் டத்தொகைநூல் வகையந்தாதித் தொடர்ச்சியினை விரித்துரைக்க வளவன்கேட்டு, மெல்லியலாள் பங்கர்திரு வருளைநோக்கி வியந்தடிமைத் தொண்டுசெய்து பேறுபெற்ற, செல்கதியை நினைந்துருகி வளவர்கோமான் சேவையர்கா வலனைமுக நோக்கிச்சொல்வான்.

(இ-ள்.) தில்லைவாழந்தணர்முதல்=தில்லைவாழந்தணர் முதலாக; பண்பாடுதிருநீலகண்டத்துப்பாணரீறாச்சொல்லிய=யாழிற்பண்களைப்பாடுகின்ற திருநீலகண்டயாழ்ப்பாண ரீறாகக்கூறிய; தொண்டத்தொகைநூல்வகை=திருத்தொண்டத்தொகைப்பதிகத்திற்கு வகைநூலாகிய;அந்தாதித்தொடர்ச்சியினை=நம்பியாண்டார்நம்பி திருவந்தாதித்தொடர்பினை; விரித்துரைக்கவளவன்கேட்டு=விரிவாயெடுத்துச்சொல்ல அதனை அநபாயசோழன்கேட்டு; மெல்லியலாள்பங்கர்திருவருளைநோக்கிவியந்து=உமாதேவிபாகராகிய சிவபிரானது திருவருளைநோக்கி அதிசயித்து; அடிமைத்தொண்டுசெய்துபேறுபெற்ற=அடிமைத்தொண்டினைச்செய்து சிவபோகப்பேற்றினையடைந்த; செல்கதியைநினைந்துருகி=செல்லத்தக்கமுத்திநெறியைநினைந்து மனமுருகி; வளவர்கோமான்சேவை

யர்காயலனைமுகநோக்கிச்சொல்வான்=அநபாயசோழன் சேக்கிழார்நாயனார் திருமுகத்தைப்பார்த்துக் கூறுகின்றான்.—எ-று. (௨௫)

ஏ-அசை. இவ்விரண்டுங் குளகம்.

செல்கதி என்றது அறிஞர்கள் செல்லுதற்குரிய சிறப்புடைத்தென்பது குறித்துநின்றது. சேவூர் என்றது சேவையென மரீஇயவாறு. சேவூர்க்கிழார் என்னும் உடைப்பெயரும் சேக்கிழாரென மரீஇநின்றதென்க.

அவரவர்க ணாட்டவர்க ளிருந்தவூர்வந் தவதரித்த திருமரபு திருப்பேர்செய்த, சிவசமயத் திருத்தொண்டு முற்பிற்பாடு சிவனடிக்கீழுயர்பரம முத்திபெற்றோர், எவருமறி யச்சீவன் முத்தராயிங் கிருப்பவர்க ளினிமேலும் பிறப்போர்மண்மேல், அவர்களைச்சேர்ந் தருள்பெற்றோர் பகைத்துப்பெற்றோ ரவர்கள்பகை யாய்நரகி லடைந்தபேர்கள்.

(இ-ள்.) அவரவர்கணாட்டவர்களிருந்தவூர்=அந்தந்த அடியார்கள் அவதரித்த நாடுகளும் அவர்களிருந்த ஊர்களும்; வந்தவதரித்ததிருமரபுதிருப்பேர்=அவர்கள்வந்துதித்த திருமரபுகளும் திருநாமங்களும்; செய்தசிவசமயத்திருத்தொண்டு=சைவசமயத்தில் செய்துகொண்டிருந்த திருத்தொண்டும்; முற்பிற்பாடுசிவனடிக்கீழுயர்பரம முத்திபெற்றோர்=திருத்தொண்டத்தொகை யருளிச்செய்ததற்கு முற்காலத்திலும் பிற்காலத்திலும் சிவபிரானது திருவடிக்கீழ் சிறந்த பரமுத்தியைப் பெற்றவர்களும்; எவருமறியச்சீவன்முத்தராயிங்கிருப்பவர்கள்=யாவரும் அறியும்படி சீவன்முத்தர்களா யிங்கிருப்பவர்களும்; இனிமேலும்பிறப்போர்மண்மேல்=உலகின்கண் இனிப்பிறப்பவர்களும்; அவர்களைச்சேர்ந்தருள்பெற்றோர்=அம்முத்திபெற்ற அடியார்களை யடைந்து திருவருளைப்பெற்றவர்களும்; பகைத்துப்பெற்றோர்=அவர்களிடத்துப் பகைகொண்டு கதியடைந்தவர்களும்; அவர்கள்பகையாய்நரகிலடைந்தபேர்கள்=அவர்களுக்குப் பகைவராய் நரகமடைந்தவர்களும்—எ-று. (௨௬)

இல்லறத்தி லிருந்துநனி முத்திபெற்றோ ரில்லறத்திற் சிற்றின்ப வியல்பைநீக்கி, நல்லறமாந் துறவறத்தி னின்றுபெற்றோர் நற்பிரம சாரிகளா யருள்பெற்றுய்ந்தோர், செல்கதிசற் குருவருளாற் சென்றுசேர்ந்தோர் சிவபூசை செய்துபர முத்திபெற்றோர், புல்லறிவு தவிர்ந்துதிரு வேடமேமெய்ப் பொருளெனக்கொண் டரனடிக்கீழ்ப் பொருந்தப்புக்கோர்.

(இ-ள்.) இல்லறத்திலிருந்துநனிமுத்திபெற்றோர்=இல்லறநெறிக்கணின்று மிக்குயர்ந்த முத்தியையடைந்தவர்களும்; இல்லறத்திற்சிற்றின்பவியல்பைநீக்கி=இல்லறத்தின்கணிருந்தனுபவிக்கும் சிற்றின்பவாழ்வைநீக்கி; நல்லறமாந்துறவறத்தினின்றுபெற்றோர்=நல்ல அறமாகிய துறவறத்திலிருந்து முத்தியடைந்தவர்களும்; நற்பிரமசாரிகளாயருள்பெற்றுய்ந்தோர்=நல்ல பிரமசாரிகளாகவேயிருந்து அருள்பெற்றுக் கரையேறினவர்களும்; செல்கதிசற்குருவரு

ளாற்சென்றுசேர்ந்தோர்=தாம் அடையத்தக்க முத்திநெறியை ஞானாசாரியரது திருவருளாலடைந்து பெற்றவர்களும்; சிவபூசைசெய்துபரமுத்திபெற்றோர்=சிவபூசையைச்செய்து பரமுத்தியடைந்தவர்களும்; புல்லறிவுதவிர்த்துதிருவேடமேமெய்ப்பொருளெனக்கொண்டு=அஞ்ஞானம் நீங்கிச் சிவவேடமே யுண்மைப்பொருளென மனத்திற்கொண்டு; அரனடிக்கீழ்ப்பொருந்தப்புக்கோர்=சிவனடிக்கீழ்பொருந்தச் சென்றவர்களும்.—எ-று. (உஎ)

இப்படியே யடைவுபடப் பிரித்துக்கேட்டால் யாவருக்கு மேதரிக்கச் செவிநாநீட்ட, வொப்பரிய பொருடெரிந்து விளங்கித்தோன்ற வுவமையுடைத் தாயகதை கற்கநிற்கத், தப்பில்பெருங் காவியமாய் விரித்துச்செய்து தருவீரென் றவர்க்குவிடை கொடுத்துவேண்டுஞ், செப்பரிய திரவியமுங் கொடுக்கவாங்கிச் சேக்கிழார் குரிசிறிருத் தில்லைசேர்ந்தார்.

(இ-ள்.) இப்படியேயடைவுபடப்பிரித்துக்கேட்டால்=ஆகிய இவர்கள் சரித்திரத்தை இவ்வாறு கிரமமாகத் தனித்தனி கேட்கப்புகுங்கால்; யாவருக்குமேதரிக்கச்செவிநாநீட்ட=எல்லோருக்கும் மனதிற்றரிக்கவும் காதுகொடுத்துக்கேட்கவும் நாவினாற் பிறருக்குச்சொல்லவும்; ஒப்பரியபொருடெரிந்துவிளங்கித்தோன்ற=ஒப்பற்ற அப்பொருளானது அவரறிவுக்குப் புலப்பட்டு விளங்கித்தோன்றவும்; உவமையுடைத்தாயகதைகற்கநிற்க=தனக்குத்தானே ஒப்பான இச்சரித்திரம் யாவரும் கற்றுணரவும் என்றைக்கும் நிலைநிற்கவும்; தப்பில்பெருங்காவியமாய்விரித்துச்செய்துதருவீரென்றுஅவர்க்குவிடைகொடுத்து=குற்றமற்ற பெரிய காவியரூபமாக விரிவாயியற்றிக் கொடுத்தருள்வீரென் றுத்தரவுகொடுத்து; வேண்டுஞ்செப்பரியதிரவியமுங்கொடுக்கவாங்கி=அதற்கு வேண்டிய எண்ணிறந்த திரவியமுங்கொடுக்கப் பெற்றுக்கொண்டு; சேக்கிழார்குரிசில்திருத்தில்லைசேர்ந்தார்=சேக்கிழார்நாயனார் திருத்தில்லைக்கண்வந்து சேர்ந்தனர்.—எ-று. இம்மூன்றுங் குளகம். (உஅ)

வேறு.

தில்லையெல்லையில் வந்துவந்தெதிர் தெண்டனாகவிழுந்தெழுந்
தல்லிசேர்கம லத்தடத்தினின் மூழ்கியம்பல வாணர்முன்
ஒல்லைசென்று பணிந்துகைத்தல முச்சிவைத்துள முருகிநைந்
தெல்லைகாணரி தாயபேரொளி யின்பவாரியின் மூழ்கியே.

(இ-ள்.) தில்லையெல்லையில்வந்துவந்து=சிதம்பரத்தின் திருவெல்லையைச்சேர்ந்து மகிழ்ச்சியடைந்து; எதிர்தெண்டனாகவிழுந்தெழுந்து=எதிரில் அட்டாங்க பஞ்சாங்கமாக வணங்கி எழுந்து; அல்லிசேர்கமலத்தடத்தினில்மூழ்கி=அகவிதழுள்ள தாமரைமலர் நிறைந்த சிவகங்கையில் முழுகி; அம்பலவாணர்முன் ஒல்லைசென்றுபணிந்து=நடேசப்பிரான்திருமுன் விரைந்துசென்று வணங்கி; கைத்தலமுச்சிவைத்து=இரண்டு கைகளையுஞ் சிரசின்மேல் வைத்துக்கொண்டு; உளமுருகிநைந்து=மனமுருகிக்கசிந்து; எல்லைகாணரிதாய=அளவுகாணுதற்கரிதான; பேரொளியின்பவாரியின்மூழ்கி=பெரிய ஒளிப்பிழம்பான சிவானந்தக்கடலுள் மூழ்கி.—எ-று. ஏ-அசை. (உகூ)



சேக்கிழார்சுவாமிகள் நடேசர் எடுத்துக்கொடுத்த 'உலகெலா' மென்பதை முதலாகக்கொண்டு பாடிமுடிப்பதற்குள் சோழன் புராணம் எவ்வளவாயிற்று என்று தெரிந்துவரும்படி தூதரையும் ஒற்றரையும் அனுப்ப அவர்களில் சிலர் பாதிமுடிந்ததென்றும் சிலர் காலேமுடியுமென்றும் சிலர்புராணமுமுடிந்ததென்றும் வந்துகூற அவர்களுக்கெல்லாம் பரிசளித்தது.

அடையலார்புர நீறெழத்திரு நகைசெய்தன்றொரு மூவரைப்
படியின்மேலடி மைக்கொளும்பத பங்கயங்கள் பணிந்துநின்
றடிகளேயுன தடியர்சீரடி யேனுரைத்திட வடியெடுத்
திடர்கெடத்தரு வாயெனத்திரு வருளையெண்ணியி றைஞ்சினார்.

(இ-ள்.) அடையலார்புரநீறெழத்திருநகைசெய்து=தன்னை யடையாத வசுரர்கள் திரிபுரங்கள் நீறாகும்படி புன்னகைசெய்து; அன்றொருமூவரை= அந்நாளில் ஒரு மூன்றசுரரை; படியின்மேலடிமைக்கொளும் பதபங்கயங்கள் பணிந்துநின்று=நிலவுலகத்தில் அடிமைகொண்டருளும் சிவபிரான் திருவடித்தாமரைகளில் வணங்கிநின்று; அடிகளேயுனதடியர்சீரடியேனுரைத்திட= சுவாமீ உன்னடியார்கள் சிறப்பினை அடியேன் கூறுதற்கு; அடியெடுத்திடர்கெடத்தருவாயென=நூல் இடையூறின்றி இனிது முடிதற்பொருட்டு முதலடியெடுத்துத் தந்தருள்வாயென்று; திருவருளையெண்ணியிறைஞ்சினார்=சிவபிரான் திருவருளை நினைந்துவணங்கினர்.—எ-று. இவ்விரண்டுங் குளகம். (கo)

அலைபுனற்பனி ரதிநதிச்சடை யாடவாடர வாடநின்
றிலகுமன்றினி லாடுவார்திரு வருளினாலச ரீரிவாக்
குலகெலாமென வடியெடுத்துரை செய்தபேரொலி யோசைமிக்
கிலகுசீரடி யார்செவிப்புலத் தெங்குமாகி நிறைந்ததால்.

(இ-ள்.) அலைபுனற்பனிரதிநதிச்சடையாட=அலைகின்றநீரையுடைய கங்காநதிதங்கிய சடையாடவும்; ஆடரவாடநின்று=படம்விரித்தாடுகின்ற பாம்பணிகளாடவும் நின்று; இலகுமன்றினிலாடுவார்திருவருளினால்=விளங்காநின்ற சிற்சபையினிடத்து நடனஞ்செய்தருளுகின்ற நடேசப்பிரான் திருவருளினால்; அசரீரிவாக்குலகெலாமெனவடியெடுத்துரைசெய்த பேரொலியோசைமிக்கு=அசரீரிவாக்காக உலகெலாமென முதலடியெடுத்துக்கொடுத்தருளின பேரோசையானது அதிகரித்து; இலகுசீரடியார்செவிப்புலத்தெங்குமாகி நிறைந்தது=விளக்கமானசிறப்பினையுடைய (அங்கங்கிருக்கும்) அடியார்கள்செவிப்புலமெங்கும் நிறைந்தது.—எ-று. ஆல்-அசை. (கக)

தில்லைமாநகர் வாழவாழ்தவ சிந்தையந்தண ராறைஞ்ஞூ
றல்லதும்பல மடபதித்தவ ராசரிக்கையி லுள்ளபேர்
எல்லையில்லவ ரியாவருங்களி கொளவிளங்கச ரீரிவாக்
கொல்லைவந்தெழ வனைவருங்கர முச்சிவைத்துள முருகினார்.

(இ-ள்.) தில்லைமாநகர்வாழவாழ்தவசிந்தையந்தணராறைஞ்ஞூறல்லதும்=தில்லைமாநகரமானது வாழும்படி நிலைபெற்றுள்ள தவசிந்தையுடைய மறையவர்கள் மூவாயிரவர்களும் இவர்களல்லாமலும்=பலமடபதித்தவராசரிக்கையிலுள்ளபேரெல்லையில்லவரியாவரும்=அனந்தம் மடபதிகளும் தவாசிரமத்திலுள்ளவர்களுமாகிய எண்ணிறந்தவர் யாவரும்; களிகொளவிளங்கசரீரிவாக்கொல்லைவந்தெழ=களிப்படையும்படி வெளியேஎழுந்த அசரீரிவாக்கானது விரைவுடன் உண்டானபோது; அனைவருங்கரமுச்சிவைத்துளமுருகினார்=

யாவரும் இரண்டுகைகளையும் உச்சியின்மீது அஞ்சலியாகக் குவித்துக்கொண்டு மனமுருகினார்கள்.—எ-று. (கஉ)

உள்ளலார்புர நீறெழக்கணை யொன்றுதொட்டுயர் மன்றில்வாழ்
வள்ளலார்திரு மாலையுந்திரு நீறுமெய்ப்பரி வட்டமும்
எள்ளலாரல ரென்றுசேவையர் காவலர்க்கிவை யினிதளித்
தள்ளலார்வய னீடுதில்லையி லனைவருங்களி கொண்டபின்.

(இ-ள்.) உள்ளலார்புரநீறெழக்கணையொன்றுதொட்டு—பகைவர் புரங்கள் நீறாகும்படி ஒருகணையை எவி; உயர்மன்றில்வாழ்வள்ளலார்—சிறப்புள்ள சிற்சபையினிடத்து எழுந்தருளியிருக்கின்ற நடேசப்பிரானுக்கணிந்த; திருமாலையுந்திருநீறுமெய்ப்பரிவட்டமும் இவை—திருமாலையும் திருநீறும் மெய்ம்மையான திருப்பரிவட்டமும் ஆகிய இவைகளை; எள்ளலாரலரென்றுசேவையர்காவலர்க்கினிதளித்து—தரிப்பதற்குத்தக்கவரென்று சேக்கிழார்நாயனார்க்கு அன்புடனளித்து; அள்ளலார்வயனீடுதில்லையி லனைவருங்களிகொண்டபின்—சேறுபொருந்திய வயல் வளமிக்க அத்தில்லையின்கண் யாவரும் களிப்பினையடைந்த பின்னர்.—எ-று. (கக)

சேவைகாவலர் தொண்டர்சீருரை செய்வதற்குயர் செய்யுண்முன்
மூவரோதிய திருநெறித்தமி ழாதலால்வரன் முறைமையால்
யாவரும்புகழ் திருநெறித்தலை வரைவணங்கி யிணங்கிமெய்த்
தாவருஞ்சிவ சாதனங்க டரித்துநீறு பரித்தரோ.

(இ-ள்.) சேவைகாவலர்தொண்டர்சீருரைசெய்வதற்கு—சேக்கிழார் நாயனார் அடியார்களது சிறப்பை எடுத்துக்கூறுவதற்கு; உயர்செய்யுள்—உயர்ந்த முன்னூல்; முன்மூவரோதிய திருநெறித்தமிழாதலால்—முற்காலத்தில் திருஞானசம்பந்தசுவாமிகள் முதலிய மூவரும் ஓதியருளிய திருநெறித் தமிழ் வேதமாதலால்; வரன்முறைமையால்—வரலாற்று முறையே; யாவரும்புகழ்திருநெறித்தலைவரைவணங்கி—அனைவரும் துதிக்கின்ற அம்மூவரையும் வணங்கி; இணங்கி—அவ்வடியவர்களுக்கடிமைபூண்டு; மெய்த்தாவருஞ்சிவசாதனங்கடரித்துநீறுபரித்து—மெய்ம்மையோடு கேடின்றி விளங்கும் சிவசாதனங்களைத்தரித்துக்கொண்டு திருநீறணிந்து.—எ-று. அரோ-அசை. (கச)

சிவசாதனங்களாவன:—முண்டனம், குண்டலம், சிரமாலை, கரமாலை, தாழ்வடம் முதலியன.

வந்துசூழ நிரைத்தவையிரு நூறுகான்மணி மண்டபத்
தெந்தையார்திரு வருளையுன்னி யிருந்துசேவையர் காவலர்
செந்தமிழ்த்தொடை யால்விளங்கிய திருவிருத்த நிருத்தனார்
தந்தசொன்முத லாவெடுத்தனர் தாணுவான புராணநூல்.

(இ-ள்.) சூழநிரைத்தவையிருநூறுகால்மணி மண்டபத்துவந்து—சுற்றிலும் நிரைத்துள்ள ஆயிரக்கால்மண்டபத்தின்கண்வந்து; எந்தையார்திருவருளை

புண்ணியிருந்த—சிவபிரான் திருவருளை நினைந்து வீற்றிருந்த; சேவையர்காவலர்—சேக்கிழார்நாயனார்; செந்தமிழ்த்தொடையால் விளங்கியதிருவிருத்தம்—செவ்விய தமிழ்மாலையால் விளக்கமுற்ற திருவிருத்தத்தை; நிருத்தனார்தந்த சொன்முதலா—நடேசப்பிரான் எடுத்துக்கொடுத்தருளின சொல்லை முதலாகக்கொண்டு; எடுத்தனர்தானுவானபுராண நூல்—நிலைபேற்றின புராணஞ்செய்யத்தொடங்கினர்.—எ-று. இம்மூன்றுங்குளகம். (௯௫)

வேறு.

திருமறையோர் புராணமவை பதின்மூன்று சிவவே தியரரனை
வழிபட்ட புராணமோ ரிரண்டு,குரைகழன்மா மாத்திரரொன் றறுவ
ர்முடி மன்னர் குறுநிலமன் னவரைவர் வணிகர்குலத் தைவ, ரிருமை
நெறி வேளாளர் பதின்மூவ ரிடைய ரிருவர்சா லியர்குயவர் தயிலவி
னையாளர், பரதவர்சான் றார்வண்ணார் சிலைமறவர் நீசர் பாணரிவ
ரோரொருவ ராம்பகருங் காலை.

(இ-ள்.) பகருங்கால்—சொல்லுமிடத்து; திருமறையோர்புராணமவைபதின்மூன்று—(அடியார்அறுபத்தொன்பதின்மருள்) வைதிகமறையவர்களாகிய அடியார்புராணம்பதின்மூன்று; சிவவேதியரரனைவழிபட்டபுராணமோரிரண்டு—சிவபிரானுக்குத்தொண்டுசெய்துமுத்திபெற்ற ஆதிசைவமறையவர்புராணம் இரண்டு; குரைகழன்மாமாத்திரரொன்று—சத்திக்காநின்ற வீரகண்டையணிந்தமாமாத்திரரென்னும் மறையவர்குலத்தடியவர்புராணம் ஒன்று; அறுவர்முடிமன்னர்—அரசவமிசத்தராகிய அடியார்புராணம் ஆறு; குறுநிலமன்னவரைவர்—குறுநிலமன்னவராகிய அடியார்புராணம் ஐந்து; வணிகர்குலத்தைவர்—வணிகர்குலத்தினராகிய அடியார்புராணம் ஐந்து; இருமைநெறிவேளாளர்பதின்மூவர்—இம்மை மறுமைக்குரிய நல்லொழுக்கத்தையுடைய வேளாளமரபினராகிய அடியார்புராணம் பதின்மூன்று; இடையரிருவர்—இடையர்குலத்தவராகிய அடியார்புராணம் இரண்டு; சாலியர்குயவர்தயிலவினையாளர்பரதவர்சான்றார்—சாலியர்குயவர் செக்கார் பரதவர் சான்றார்; வண்ணார்சிலைமறவர்நீசர்பாணர்—வண்ணார்வில்லையுடையவேடர் நீசர்பாணர்; இவரோரொருவராம்—இம்மரபினராகிய அடியார்புராணம் தனித்தனி ஒவ்வொன்றும்.—எ-று. எனவே மரபறிந்தார் புராணம் ஐம்பத்தாறென உணர்க. ஏ-அசை. (௯௬)

புராணமீரிரண்டு என்பது பிறழ்ந்தபாடம்.

அறுதிபெறத் திருமரபு குறித்துரையாப் புராண மவைகளொ
ரு பதின்மூன்று திருக்கூட்டந் தன்னின், மறுவிலவர் பதியறிந்த க
தையிரண்டு வந்த மரபறிந்த கதையிரண்டு பேரறிந்த கதையொன்,
றுறுமரபு தெரியாப்பு ராணமவை யோரே ழூரறியாக் கதையேழு
பேரறியாக் கதையெட், டிறுதியிலக் கங்கண்ட திருக்கூட்ட மொன்
றெண் ணித்தனையென் றறியாத திருக்கூட்ட மெட்டே.

(இ-ள்.) அறுதிபெறத்திருமரபுகுறித்துரையாப்புராணமவைகளொருபதின்மூன்று—நிச்சயித்து மரபினைத் தெரிந்துசொல்லப்படாத அடியார்புராணம் பதின்மூன்று; திருக்கூட்டந்தன்னின்மறுவிலவர்பதியறிந்தகதையிரண்டு—தொகையடியார்களில் குற்றமற்ற அவரது நாடறிந்தபுராணம் இரண்டு; வந்த

மரபறிந்தகதையிரண்டு—அவர் திருவவதாரஞ்செய்த மரபுதெரிந்த புராணம் இரண்டு; பேரறிந்தகதையொன்று—அவர் திருப்பேர் தெரிந்த புராணம் ஒன்று; உறுமரபுதெரியாப்புராணமவையோரேழு—அவதரித்த மரபறியப்படாத அடியார்புராணம் ஏழு; ஊரறியாக்கதையேழு—ஊர்தெரியாத அடியார்புராணம் ஏழு; பேரறியாக்கதையெட்டு—அவர்கள் திருப்பேர்தெரியாத புராணம் எட்டு; இறுதியிலக்கங்கண்டதிருக்கூட்டமொன்று—முடிபுத்தொகைகண்ட திருக்கூட்டத்து அடியார்புராணம் ஒன்று; எண்ணித்தனையென்றறியாததிருக்கூட்டமெட்டு—இவ்வளவென்று எண்ணிக்கையறியப்படாத திருக்கூட்டத்தடியார்புராணம் எட்டு.—எ-று. ஏ-அசை. (௩௭)

தில்லைவாழந்தணர்புராணமும் திருவாரூர்ப்பிறந்தார்புராணமும் பதியறிந்தகதையென்றும், தில்லைவாழந்தணர்புராணமும் முப்பொழுதுந்திருமேனி தீண்டுவார்புராணமும் மரபறிந்தகதையென்றும், கபிலர் பரணர்முதலாக நாற்பத்தொன்பதின்மருக்கும் பெயர்கூறப்படுதலில், பொய்யடிமையில்லாதபுலவர் புராணம் பேரறிந்தகதையென்றும், மேற்குறித்த மரபறிந்த தொகையடியார் புராணம் இரண்டுநீக்கி ஏனைய தொகையடியார்புராணம் ஏழும் மரபறியாக்கதையென்றும், மேற்கூறிய பதியறிந்தகதை இரண்டுநீக்கி ஏனைய தொகையடியார்புராணம் ஏழும் ஊரறியாக்கதையென்றும், பொய்யடிமையில்லாதபுலவர் புராணம்நீக்கி ஏனைய தொகையடியார்புராணம் எட்டும் பேரறியாக்கதையென்றும், தில்லைமூவாயிரவர் எனத் தொகைகூறப்படுதலின் அவர்புராணம் இறுதியிலக்கங்கண்டபுராணம் என்றும், ஏனைய எட்டும் தொகைகாணாமையின் எண்ணித்தனையென்றறியாத திருக்கூட்டமெனவுங் கொள்க. கடைச்சங்கத்தார் நாற்பத்தொன்பதின்மரென்று இலக்கங்கூறப்படுதலின் அவரை இலக்கங்காணாத் தொகையோடு சேர்த்ததென்னெனின்: ஆண்டு சங்கமிருந்தாரேயன்றி அச்சங்கத்துச் சிவபிரான்மேல் பலபாடற்றிரட்டைப்பாடி அரங்கேற்றிய புலவரும் அடங்கலில் தொகைகூற அமையாமையினென்க.

தில்லைமறை யோர்கலயர் முருகர்பசு பதியார் சிறப்புலியார் கணநாதர் பூசலைசண் டேசர், கல்விநிறை சோமாசி மாறர்நமி நந்தி கவுணியனா ரப்பூதி நீலநக்க ராகச், செல்வமறை யோர்காதை பதின்மூன்று சிவவே தியர்காதை யிரண்டுபுகழ்த் துணையார்முப் போதும், வல்லபடி சிவனையருச் சிப்பார்கண் மாமாத் திரர்மரபிற் சிறுத்தொண்ட ரொருவர்முடி மன்னர்.

(இ-ள்.) தில்லைமறையோர்கலயர் முருகர்பசுபதியார்—தில்லைவாழந்தணர்கள் கலயநாயனார் முருகநாயனார் உருத்திரபசுபதிநாயனார்; சிறப்புலியார் கணநாதர்பூசலைசண்டேசர்—சிறப்புலிநாயனார் கணநாதநாயனார் பூசலைநாயனார் சண்டேசநாயனார்; கல்விநிறைசோமாசிமாறர்நமிநந்தி—ஞானமிக்க சோமாசிமாறநாயனார் நமிநந்தியடிகள்; கவுணியனாரப்பூதிநீலநக்கராக—திருஞானசம்பந்தசுவாமிகள் அப்பூதியடிகள் நீலநக்கநாயனாரொன்னும்; செல்வமறையோர்காதைபதின்மூன்று—செல்வமிக்க மறையவர்குலத்து அடியவர்புராணம் பதின்மூன்று; புகழ்த்துணையார்முப்போதும்வல்லபடிசிவனையருச்சிப்பார்கள்—புகழ்த்துணைநாயனார் தகுந்தவாறு திரிகாலங்களிலும் சிவபிரானை அருச்சனை செய்கின்ற முப்பொழுதுந் திருமேனி தீண்டுவாராகிய; சிவவேதியர்காதையிர

ண்டு—ஆதிசைவமறையவர்புராணம் இரண்டாம்;மாமாத்திரர்மரபிற்சிறுத்தொண்டரொருவர்—மாமாத்திர மறையவர்மரபில் திருவவதாரஞ்செய்தருளிய சிறுத்தொண்டநாயனார்புராணம் ஒன்றும்.—எ-று. (ஙஅ)

அறுவரெவ ரவர்செங்கட் சோழர்புகழ்ச் சோழ ரருண்மானியிடங்கழியார் நெடுமாறர் சேரர், குறுநிலமன் னவரைவர் நரசிங்கமுனையர் கூற்றுவனார் கழற்சிங்கர் மெய்ப்பொருளை யடிகண், முறைமைவணி சரிலைவர் காரைக்காலம்மை மூர்த்திகலிக் கம்பரமர் நீதியியற் பகையார், திறமைபுரி வேளாளர் பதின்மூவர் மூர்க்கர் செருத்துணையர் வாயிலார் கோட்புலியார் சத்தி.

(இ-ள்.) முடிமன்னரறுவரெவரவர்—மகுடந்தரித்த அரசராறுபேர் யாவரெனில்; செங்கட்சோழர்புகழ்ச்சோழர்—கோச்செங்கட்சோழநாயனார் புகழ்ச்சோழநாயனார்; அருண்மானியிடங்கழியார்நெடுமாறர்சேரர்—அருள்நிறைந்த மானியார் இடங்கழிநாயனார் நின்றசீர்நெடுமாறநாயனார் சேரமான்பெருமாள்நாயனார் ஆகிய இவர்கள்; நரசிங்கமுனையர்கூற்றுவனார்கழற்சிங்கர்—நரசிங்கமுனையரையர் கூற்றுவநாயனார் கழற்சிங்கநாயனார்; மெய்ப்பொருளையடிகள்—மெய்ப்பொருள்நாயனார் ஐயடிகள்காடவர்கோன்நாயனார் ஆகிய; குறுநிலமன்னவரைவர்—குலநிலமன்னவர்புராணம் ஐந்தாம்; காரைக்காலம்மைமூர்த்திகலிக்கம்பர்—காரைக்காலம்மையார் மூர்த்திநாயனார் கலிக்கம்பநாயனார்; அமர்நீதியியற்பகையார்—அமர்நீதிநாயனார் இயற்பகைநாயனாராகிய; முறைமைவணிகரிலைவர்—ஒழுக்கமுடைய வசியர்புராணம் ஐந்தாம்; திறமைவிரிவேளாளர்பதின்மூவர்—வல்லமையுடைய வேளாளர்கள்புராணம் பதின்மூன்று (அவை எவையெனின்;) மூர்க்கர்செருத்துணையார்வாயிலார்—மூர்க்கநாயனார் செருத்துணைநாயனார் வாயிலார்நாயனார்; கோட்புலியார்சத்தி—கோட்புலிநாயனார் சத்திநாயனார்.—எ-று. (ஙக)

மேற்செய்யுளினிறுதியிலுள்ள முடிமன்னரென்றதை ஈண்டுக்கூட்டியுரைக்கப்பட்டது.

தாயனா ரிளையான்றன் குடிமாற ரரசு சாக்கியர்கஞ் சாறர்விறன் மிண்டர்முனை யடுவா,ரேயர்கோன் கலிக்காமர் கோபாலர் மரபி லிருவர்திரு மூலனா ரானாயர் குயவர், சேயபுகழ்த் திருநீல கண்டனார் பாணர் திருமரபிற் றிருநீல கண்டத்துப் பாணர், மேயதிற லதிபத்தர் பரதவர் கண்ணப்பர் வேடர்மர பினிற்சான்றா ரேனாதி நாதர்.

(இ.ள்.) தாயனாரிளையான்றன்குடிமாறர்—அரிவாட்டாயநாயனார் இளையான்குடிமாறநாயனார்; அரசுசாக்கியர்கஞ்சாறர்—திருநாவுக்கரசுசுவாமிகள் சாக்கியநாயனார் மானக்கஞ்சாறநாயனார்; விறன்மிண்டர்முனையடுவார்—விறன்மிண்டநாயனார் முனையடுவார்நாயனார்; ஏயர்கோன்கலிக்காமர்—ஏயர்கோன்கலிக்காமநாயனார் ஆகிய இவர் புராணங்களாம்; திருமூலரானாயர்—திருமூலநாயனார் ஆனாயநாயனார் என; கோபாலமரபிலிருவர்—ஆயர்குலத்தவர்புராணம் இரண்டாம்; குயவர்—குயவர்குலத்தவராகிய; சேயபுகழ்த்திருநீலகண்ட

னார்=செவ்விதாகிய புகழையுடைய திருநீலகண்டநாயனார்; பாணர்திருமரபில்=பாணர்கள் சிறந்தமரபில்; திருநீலகண்டத்துப்பாணர்=திருநீலகண்டத்துப்பாணநாயனார்; பரதவர்=பரதவர்கள் குலத்தில்; மேயதிறலதிபத்தர்=வெற்றிபொருந்திய அதிபத்தநாயனார்; வேடர்மரபினில்=வேடர்கள்குலத்தில்; கண்ணப்பர்=கண்ணப்பநாயனார்; சான்றார்=சான்றார்குலத்தில்; ஏனாதிநாதர்=ஏனாதிநாதநாயனார்.—எ-று. (௪௦)

நேசனார் சாலியரிற் றிருநாளைப் போவார் நீசர்மர பினிலெங்கடிருக்குறிப்புத் தொண்டர், தூசொலிக்கு மேகாலி மரபுதில தயிலத் தொழின்மரபிற் கலியனார் மரபுகுறித் துரையாக், காசில்கதை பதின் மூன்று குலச்சிறையார் தண்டி கணம்புல்ல ரெறிபத்தர் காரியார் குறும்பர், தேசுடைய பத்தர்பர மனைப்பாடு வார்கள் சித்தத்தைச் சிவன்பால்வைத் தாராரூர்ப் பிறந்தார்.

(இ-ள்.) சாலியரினேசனார்=சாலியகுலத்தவராகிய நேசநாயனார்; நீசர்மரபினிற்றிருநாளைப்போவார்=பஞ்சமர் குலத்தவராகிய திருநாளைப்போவார் நாயனார்; தூசொலிக்குமேகாலிமரபு=கலைவெளுக்கும் வண்ணார்மரபினராகிய; எங்கடிருக்குறிப்புத்தொண்டர்=எமது திருக்குறிப்புத்தொண்டநாயனார்; திலதயிலத்தொழின்மரபில்=எண்ணெய்த்தொழிலையுடைய செக்கார்குலத்தவராகிய; கலியனார்=கலியநாயனார் (என்று இவர்கள்புராணம் தனித்தனி ஒவ்வொன்றும்;) மரபுகுறித்துரையாக்காசில்கதைபதின்மூன்று=மரபினைக் குறித்துச் சொல்லாத நல்லபுராணம் பதின்மூன்று (அவையாவன;) குலச்சிறையார்தண்டிகணம்புல்லர்=குலச்சிறைநாயனார் தண்டியடிகள்நாயனார் கணம்புல்லநாயனார்; எறிபத்தர்காரியார்குறும்பர்=எறிபத்தநாயனார் காரிநாயனார் பெருமிழலைக் குறும்ப நாயனார்; தேசுடையபத்தர்பரமனைப்பாடுவார்கள்=ஞானப்பிரகாசத்தையுடைய பத்தராய்ப்பணிவார் பரமனையேபாடுவார்; சித்தத்தைச்சிவன்பால்வைத்தாராரூர்ப்பிறந்தார்=சித்தத்தைச் சிவன்பால்வைத்தவர்கள் திருவாரூர்ப்பிறந்தவர்கள்.—எ-று. (௪௧)

செப்பரிய பொய்யடிமை யில்லாதார் மெய்யிற் றிருநீறு பூசுமுனி வர்களுலகு தன்னி, லப்பாலு மடிச்சார்ந்தா ரிவர்கடமிற் சிலபே ராய்ந்ததமிழ்ப் பேர்சிலபேர் மலையாளர் சிலபேர், தப்பாத தெலுங்கர்சிலர் மற்றுள தேசத்தோர் தவஞ்செய்து பரகதியை யடைந்தவர்கள் சிலபே, ரிப்போது மிருந்தரனை வழிபடுவோர் சிலபே ரினிமேலுந் திருமேனி கொடுவருவோர் சிலரே.

(இ-ள்.) செப்பரியபொய்யடிமையில்லாதார்=சொல்லுதற்கரிய பொய்யடிமையில்லாத புலவர்கள்; மெய்யிற்றிருநீறுபூசுமுனிவர்கள்=திருமேனிமுழுதுந் திருநீறுபூசும் முனிவர்கள்; உலகுதன்னிலப்பாலுமடிச்சார்ந்தார்=இவ்வுலகத்தில் அப்பாலுமடிச்சார்ந்தாராகிய இவர் புராணங்களாம்; இவர்கடமிற் சிலபேர்=இவர்களுட்சிலபேர்; தமிழ்ப்பேர்=தமிழ்நாட்டோர்; சிலபேர்மலையாளர்=சிலர் மலையாளதேயத்தோர்; சிலபேர்தப்பாததெலுங்கர்=சிலர் தவறாத

யில்லாத தெலுங்குதேயத்தோர்; சிலர்மற்றுளதேசத்தோர்=சிலர் மற்ற தேசத்திலுமுள்ளவர்களாம்; தவஞ்செய் துபரகதியையடைந்தவர்கள்சிலபேர்=தவத்தைச்செய்து பரமுத்தியையடைந்தவர்கள் சிலபேர்; இப்போதமிருந்தரனை வழிபடுவோர்சிலபேர்=இக்காலத்திலுமிருந்து சிவபிரானுக்குத் தொண்டுசெய்பவர்கள் சிலபேர்; இனிமேலுந்திருமேனிகொண்டுவருவோர்சிலர்=இனிமேலும் அவதாரஞ்செய்து வருபவர்கள் சிலபேர்களாம்.—எ-று. ஏ-அசை. இவ்வைந்துங்குளகம். (சஉ)

தொகையடியார்களில் முத்திபெற்றாரொழிய இப்பொழுதுமிருந் தரனைவழிபடுவோரும் இனிமேலுந்திருமேனி கொடுவருவோரும் தில்லைவாழந்தணர், பத்தராய்ப்பணிவார், பரமனையேபாடுவார், சித்தத்தைச் சிவன்பால் வைத்தார், திருவாரூர்ப்பிறந்தார், முப்பொழுதுந்திருமேனிதீண்டுவார், முழுநீறுபூசியமுனிவர், அப்பாலுமடிச்சார்ந்தார் என்னுமிவர்களேயாம்.

திருஞான சம்பந்தர் திருநாவுக் கரையர் திருமூலர் நெடுமாறர்
மங்கையருக் கரசி, கரைசேருங் குலச்சிறையார் யாழ்ப்பாணர் குறு
ம்பர் கணநாத ரப்பூதி சோமாசி மாற, ருரைசேரு மிவர்கள்பதி னொ
ருவர்குரு வருளா லுயர்முத்தி யடைந்தவர்க ளெறிபத்தர் கலயர்,
முருகனார் கண்ணப்ப ரானாயர் தாயர் மூர்த்தியார் சண்டேசர் திருநா
ளைப் போவார்.

(இ-ள்.) திருஞானசம்பந்தர்திருநாவுக்கரையர்=திருஞானசம்பந்தசுவாமிகளும் திருநாவுக்கரசுசுவாமிகளும்; திருமூலர்நெடுமாறர்மங்கையருக்கரசி=திருமூலநாயனாரும் நின்றசீர்நெடுமாறநாயனாரும் மங்கையர்க்கரசியாரும்;கரைசேருங்குலச்சிறையார்=முத்தியாகிய கரையையடைந்த குலச்சிறைநாயனாரும்; யாழ்ப்பாணர்குறும்பர்=திருநீலகண்டயாழ்ப்பாணரும்பெருமிழலைக்குறும்பநாயனாரும்; கணநாதரப்பூதிசோமாசிமாறர்=கணநாதநாயனாரும் அப்பூதியடிகளும் சோமாசிமாறநாயனாரும் ஆகிய; உரைசேருமிவர்கள் பதினொருவர்=புகழையுடைய இவர்கள்பதினொருவரும்; குருவருளாலுயர்முத்தியடைந்தவர்கள்=குருவருளினால் பரமுத்தியையடைந்தவர்கள்; எறிபத்தர்கலயர்முருகனார்கண்ணப்பர்=எறிபத்தநாயனாரும் குங்கிலியக்கலயநாயனாரும் முருகநாயனாரும் கண்ணப்பநாயனாரும்; ஆனாயர்தாயர்மூர்த்தியார்=ஆனாயநாயனாரும் அரிவாட்டாயநாயனாரும் மூர்த்திநாயனாரும்; சண்டேசர்திருநாளைப்போவார்=சண்டேசநாயனாரும் திருநாளைப்போவார்நாயனாரும்.—எ-று. (சங)

சேரனார் சாக்கியனார் கூற்றுவனார் தண்டி சிறப்புலியார் பசுபதி
யார் கலிக்காமர் கலியர், காரியா ரதிபத்தர் நீலநக்கர் பூசல் கணம்பு
ல்லர் கோட்புலியார் நமிநந்தி யடிகள், சீருடைய கழற்சிங்கர் வாயி
லார் தூய செருத்துணையார் புகழ்த்துணையார் காடவரை யடிகண்,
மூரிநெடு வேற்செங்கட் சோழனா ராக முப்பதுபேர் சிவலிங்கத் தா
ன்முத்தி யடைந்தோர்.

(இ-ள்.) சேரனார் சாக்கியனார் கூற்றுவனார்தண்டி—சேரமான்பெருமாணாயனாரும் சாக்கியநாயனாரும் கூற்றுவநாயனாரும் தண்டியடிகள்நாயனாரும்; சிறப்புலியார்பசுபதியார்கலிக்காமர்கலியர்—சிறப்புலிநாயனாரும் உருத்திரபசுபதிநாயனாரும் கலிக்காமநாயனாரும் கலியநாயனாரும்; காரியாரதிபத்தர்நீலநக்கர்பூசல்—காரிநாயனாரும் அதிபத்தநாயனாரும் நீலநக்கநாயனாரும் பூசலைநாயனாரும்; கணம்புல்லர்கோட்புலியார்நமிநந்தியடிகள்— கணம்புல்லநாயனாரும் கோட்புலிநாயனாரும் நமிநந்தியடிகள்நாயனாரும்; சீருடையகழற்சிங்கர்வாயிலார்—சிறப்பினையுடைய கழற்சிங்கநாயனாரும் வாயிலார்நாயனாரும்; தூயசெருத்துணையார்புகழ்த்துணையார்—சுத்தம்பொருந்திய செருத்துணைநாயனாரும் புகழ்த்துணைநாயனாரும்; காடவரையடிகள்—ஐயடிகள் காடவர்கோன்நாயனாரும்; மூரிநெடுவேற்செங்கட்சோழனாராக—வலிமையுள்ள வேலாயுதத்தையுடைய கோச்செங்கட்சோழநாயனாரும் என்று; முப்பதுபேர்சிவலிங்கத்தான் முத்தியடைந்தோர்—இம்முப்பதுபேர்களும் சிவலிங்கத்தால் முத்தியடைந்தவர்கள்.—எ-று. இவ்விரண்டுங்குளகம். (சச)

திருநீல கண்டனா ரியற்பகையார் மூர்க்கர் சிறுத்தொண்டர் திருக்குறிப்புத் தொண்டர்விறன் மிண்ட, ரருள்சேரு மிடங்கழியார் முனையடுவார் சத்தி யமர்நீதி மெய்ப்பொருளா ரேனாதி நாதர், கரைசேரும் புகழ்ச்சோழர் கஞ்சாறர் மாறர் காரைக்கா லம்மைநர சிங்கர்கலிக் கம்பர், வருநேச ராகவொரு பத்தொன்ப தடியார் மணிவேடத் தாரைவழி பட்டரனை யடைந்தோர்.

(இ-ள்.) திருநீலகண்டனாரியற்பகையார்மூர்க்கர்—திருநீலகண்ட நாயனாரும் இயற்பகைநாயனாரும் மூர்க்கநாயனாரும்; சிறுத்தொண்டர்திருக்குறிப்புத்தொண்டர்விறன்மிண்டர் — சிறுத்தொண்டநாயனாரும் திருக்குறிப்புத்தொண்டநாயனாரும் விறன்மிண்டநாயனாரும்; அருள்சேருமிடங்கழியார்முனையடுவார்சத்தி—அருளைப்பெற்ற இடங்கழிநாயனாரும் முனையடுவார்நாயனாரும் சத்திநாயனாரும்; அமர்நீதிமெய்ப்பொருளாரேனாதிநாதர்—அமர்நீதிநாயனாரும் மெய்ப்பொருள்நாயனாரும் ஏனாதிநாதநாயனாரும்; கரைசேரும்புகழ்ச்சோழர் கஞ்சாறர்மாறர்— முத்தியாகிய கரையையடைந்த புகழ்ச்சோழநாயனாரும் மானக்கஞ்சாறநாயனாரும் நின்றசீர்நெடுமாறநாயனாரும்; காரைக்காலம்மைநரசிங்கர்கலிக்கம்பர்—காரைக்காலம்மையாரும் நரசிங்கமுனையரையரும். கலிக்கம்பநாயனாரும்; வருநேசராகவொருபத்தொன்பதடியார்—மெய்யன்பு கைவந்த நேசநாயனாருமாகிய இப்பத்தொன்பது நிலைமையானபேர்களும்; மணிவேடத்தாரைவழிபட்டரனையடைந்தோர்—சிவனடியார்க்குத் தொண்டுசெய்து முத்தியடைந்தவர்கள்.—எ-று. (சரு)

கவுணியர்நா வுக்கரசர் பேயா ரிம்மூவர் கற்குழிய விசைவல்லோ ரிசைத்தமிழ்நூல் வல்லோர், பவமணுகாத் திருநாளைப் போவாரா னுயர் பாணர்பர மனைப்பாடு வாராக நால்வர், புவனிபுக ழையடிக டிருமூலர் காரி பொய்யடிமை யில்லாத தமிழ்ப்புலவர் சேரர், நவமுடைய விவரைவ ரியல்வல்லோர் நின்ற நாயன்மார் தவம்புரிந்து நற்கதியை யடைந்தோர்.

(இ-ள்.) கவுணியர்நாவுக்கரசர்பேயாரிம்மூவர்=திருஞானசம்பந்தசுவாமிகளும் அப்பர்சுவாமிகளும் காரைக்காலம்மையாருமாகிய இம்மூவர்கள்; கற்குமியலிசைவல்லோர்=கற்கும்படியான இயற்றமிழிலும் இசைத்தமிழிலும் வல்லவர்களாம்; பவமணுகாத்திருநாளைப்போவாராரானுயர்=பிறவித்தமொற்றத்தையடையாத திருநாளைப்போவார்நாயனாரும் ஆனாயநாயனாரும்; பாணர்பரமனைப்பாடுவாராகநால்வர்=திருநீலகண்டயாழ்ப்பாணரும் பரமனைப்பாடுவார்களுமாகிய இந்நால்வர்; இசைத்தமிழ்நூல்வல்லோர்=இசைத்தமிழில் வல்லவர்களாம்; புவனிபுகழையடிகள்திருமூலர்காரி=உலகத்தார் புகழாநின்ற ஐயடிகள் காடவர்கோன்நாயனாரும் திருமூலநாயனாரும் காரிநாயனாரும்; பொய்யடிமையில்லாததமிழ்ப்புலவர்சேரர்=பொய்யடிமையில்லாத தமிழ்ப்புலவரும் சேரமான்பெருமாள்நாயனாருமாகிய; நவமுடையவிவரைவரியல்வல்லோர்=சிறப்பையுடைய இவ்வைவர் இயற்றமிழில் வல்லவர்களாம்; நின்றநாயன்மார்தவம்புரிந்துநற்கதியையடைந்தோர்=மற்ற நாயன்மார்கள் திருத்தொண்டுசெய்து மேலான முத்தியையடைந்தவர்கள்.—எ-று. (சுசு)

இல்லறத்தி னின்றவர்க டிருநீல கண்ட ரியற்பகையா ருள்ளிட் டோர் மூர்த்தியா ரப்பர், நல்லதுற வறம்பிரம சாரிகள்சண் டேசர் நானிலத்தி லரனடியார் தங்களுடன் சேர்ந்து, செல்கதிபெற் றவர் ஞான சம்பந்த ருடனே திருமணத்தி லொருமணமாய்ச் சேர்ந்தவர்க ளனேகர், பல்வளஞ்சே ராரூர ருடன்சேரர் கையிற் பரியுகைக்க வுடன்சென்ற பரிசனமெண் ணிறந்தோர்.

(இ-ள்.) திருநீலகண்டரியற்பகையாருள்ளிட்டோர்=திருநீலகண்டர் இயற்பகையார் இன்னுஞ்சிலர்; இல்லறத்தினின்றவர்கள்=இல்லறத்திலிருந்து முத்தியடைந்தவர்களாம்; மூர்த்தியாரப்பர்நல்லதுறவறம்=மூர்த்திநாயனார் திருநாவுக்கரசுசுவாமிகள் நல்ல துறவறத்திலிருந்து முத்தியடைந்தவர்களாம்; பிரமசாரிகள்சண்டேசர்=சண்டேசநாயனார் பிரமசரிய ஆச்சிரமத்திலிருந்து முத்தியடைந்தவராம்; நானிலத்திலரனடியார்தங்களுடன்சேர்ந்துசெல்கதிபெற்றவர்=உலகத்தில் சிவனடியார்களுடன் கூடி முத்தியடைந்தவர்கள்(சிலர் அவர்கள் யாரெனில்); ஞானசம்பந்தருடனேதிருமணத்திலொருமணமாய்ச்சேர்ந்தவர்களனேகர்=திருஞானசம்பந்தசுவாமிகளுடைய திருமணத்தில் அவருடன் முத்தியடைந்தவர் அனேகம்பேர்; பல்வளஞ்சேராரூரருடன்=பலவளப்பங்களையுள்ள நம்பியாரூரரென்னும் சுந்தரசுவாமிகளுடன்; சேரர்கையிற்பரியுகைக்க=சேரமான்பெருமாள்நாயனார் குதிரையேறிக்கொண்டு கயிலைக்குச்செல்ல; உடன்சென்றபரிசனமெண்ணிறந்தோர்=அப்போது அவருடன்சென்று முத்தியடைந்தவர்கள் அளவிறந்தோர்கள்.—எ-று. (சஎ)

தனியடியார்களில் பிரமசரியத்தும் துறவறத்தும் நின்ற மூவர்நீக்கி ஏனையோர் இல்லறத்தினராதலின் உள்ளிட்டார் என்றார்.

சிவனடியா ருடன்பகையாய் முத்தியடைந் தவர்கள் சேய்ஞ லூர்ச் சண்டேசர் பிதாவெச்ச தத்தன், கவர்புகழ்சேர் கோட்புலியா ருரைத்ததிரு விரையாக் கலிபிழைத்த கிளைபகைத்து நரகினைச்

சென் றடைந்தோர், தவரான மூர்த்தியா ரிறைவனுக்குச் சாத்துஞ் சந்தனக்காப் பினைவிலக்கி யமண்சமயச் சார்வாய்ப், புவிபுரந்த கரு நடமன் னவன்முத லனேகர் புராணகதை யினைப்பிறித்துப் புகலவெ ளி தலவே.

(இ-ள்.) செய்ஞலூர்ச்சண்டேசர்பிதாவெச்சதத்தன்—திருச்செய்ஞலூரில் அவதரித்த சண்டேசர் பிதாவாகிய எச்சதத்தனென்பவனும்; கவர்புகழ்சேர்கோட்புலியாருரைத்த—பரந்த புகழ்சேர்ந்த கோட்புலிநாயனார் சொல்லிய; திருவிரையாக்கலிபிழைத்தகிளை—திருவாணையைக்கடந்த சுற்றத்தாரும்; சிவனடியாருடன்பகையாய்முத்தியடைந்தவர்கள்—சிவனடியார்களைப்பகைத்து முத்தியடைந்தவர்கள்; தவரானமூர்த்தியாரிறைவனுக்குச்சாத்தும்—தவசிரேட்டராகிய மூர்த்திநாயனார் சிவபிரானுக்குச் சாத்துகின்ற; சந்தனக்காப்பினைவிலக்கி—சந்தனக்குறடு கிடையாதபடி விலக்கி; அமண்சமயச்சார்பாய்ப்புவிபுரந்த—சமண்சமயச்சார்பினனாகி யுலகத்தையாண்ட; கருநடமன்னவன்முதலனேகர்—கருநடதேசத்தரசன்முதலிய அனேகர்; சிவனடியாருடன்பகைத்துநரகினைச்சென்றடைந்தோர்—சிவனடியார்களைப்பகைத்து நரகத்தையடைந்தவர்கள்; புராணகதையினைப்பிறித்துப்புகலவெளிதல—இவ்வாறு புராணசரித்திரத்தை யளவிட்டுச்சொல்லுதல் அரிதாம்.—எ-று. ஏ-அசை. (சஅ)

ஆரூரர் திருத்தொண்டத் தொகையுரைத்த நாளி லடித்தொண் டு செய்ததொண்டர் சிலரவர்க்கு முன்னே, பேரூர்மெய்த் தொண்டு செய்த பேர்சிலபே ரவர்க்குப் பிறகுதிருத் தொண்டுசெயும் பேர்சில பே ராகச், சீரூருந் திருத்தொண்டர் புராணத்திற் சேர்த்துச் சே வையர்கோன் சேர்வைசெயுந் தொண்டரள விறந்தோர், காரூரு ம ணிகண்டர்க் கவரவர்கள் செய்த கைத்தொண்டி னிலைகரைகண் டுரை க்கவெளி தலவே.

(இ-ள்.) ஆரூரர்திருத்தொண்டத்தொகையுரைத்தநாளில்—சுந்தரமூர்த்திசுவாமிகள் திருத்தொண்டத்தொகையோதிய அக்காலத்தில்; அடித்தொண்டு செய்ததொண்டர்சிலர்—திருவடித்தொண்டு செய்துகொண்டிருந்த அடியார்கள்சிலர்; அவர்க்குமுன்னேபேரூர்மெய்த்தொண்டுசெய்தபேர்சிலபேர்—சுந்தரமூர்த்திசுவாமிகள்காலத்திற்குமுன் பெருமைமிக்க உண்மையாகிய திருத்தொண்டுசெய்தவர்கள் சிலர்; அவர்க்குப்பிறகுதிருத்தொண்டுசெயும்பேர்சிலபேராக—அவர்க்குப் பிற்காலத்தில் திருத்தொண்டுசெய்கின்றவர்கள் சிலர் இவ்வாறாக; சீரூருந்திருத்தொண்டர்புராணத்தில்—சிறப்புப்பொருந்திய திருத்தொண்டர்புராணத்தில்; சேவையர்கோன்சேர்த்துச்சேர்வைசெயுந்தொண்டரளவிறந்தோர்—சேக்கிழார்சுவாமிகள் சேர்த்துச் சேர்வைசெய்த அடியார்கள் அனேகம் பேர்களாம்; காரூருமணிகண்டர்க்கவரவர்கள்செய்தகைத்தொண்டினிலை—காளகண்டராகிய சிவபெருமானுக்கு அந்தந்த அடியார்கள்செய்த கைத்தொண்டினது நிலைமையை; கரைகண்டுரைக்கவெளிதல—அளவுகண்டுசொல்ல எளிதல்ல.—எ-று. ஏ-அசை. (சக)

ஓருலகோ வொருதிசையோ வொருபதியோ தம்மி லொருமரபோ வொருபெயரோ வொருகாலந் தானோ, பேருலகி லொருமைநெறி தருங்கதையோ பன்மைப் பெருங்கதையோ பேரொன்றோ வல்லவே யிதனை, யேருலகெ லாமுணர்ந்தோ தற்கரிய வன்னென் றிறைவன்முத லடியெடுத்துக் கொடுத்தருளக் கொண்டு, பாருலகி னாமகணின் றெடுத்துக்கை நீட்டப் பாடிமுடித் தனர்தொண்டர் சீர்பரவ வல்லார்.

(இ-ள்.) ஓருலகோவொருதிசையோவொருபதியோ=(அத்திருத்தொண்டர்க்குரியவை) ஒருநாடோ ஒருதிக்கோ ஒரூரோ; தம்மிலொருமரபோவொருபெயரோவொருகாலந்தானோ=தங்களுள் ஒருமரபோ ஒருவரோ ஒரேகாலமோ; பேருலகிலொருமைநெறிதருங்கதையோ=பெரியவுலகத்தில் ஒருவமிசமான சரித்திரத்தைச்சொல்லுங் கதையோ; பன்மைப்பெருங்கதையோபேரொன்றோவல்லவே=பலவமிசச்சரிதங்கூறும் பெருங்கதையோ ஒருபெயரோ இவைகளல்ல (ஆனால்;) இதனையேருலகெலாமுணர்ந்தோதற்கரியவனென்று=இதனை மேன்மையாகிய உலகெலாமுணர்ந்தோதற்கரியவனென்று; இறைவன்முதலடியெடுத்துக் கொடுத்தருளக்கொண்டு=சிவபிரான் முதலடியெடுத்துக் கொடுத்தருள அதை முதலாகக்கொண்டு; பாருலகினாமகணின்றெடுத்துக்கை நீட்ட=இவ்வுலகில் நாமகள் சொற்களை எடுத்துக்கொடுக்க; தொண்டர்சீர்பரவவல்லார்பாடிமுடித்தனர்=அடியார்களது சிறப்பைத் துதிசெய்யவல்லவராகிய சேக்கிழார்நாயனார்புராணமாகப் பாடிமுடித்தனர்.—எ-று. (ருo)

ஓர் வமிசபரமாய் அதனைத் தொடர்ந்துவாராது பலபடவருதலின் ஒருமைநெறிதருங் கதையாகாதென்றும், பலமரபுகுறித்துப் பலவாய்வரினும் தொண்டர்புராணமென ஒன்றாய்நிற்றலின் பன்மைப்பெருங்கதை யாகாதென்றுங் கூறினரெனக்கொள்க.

கருங்கடலைக் கைநீத்துக் கொளவெளிது முந்நீர்க் கடற்கரையி னெய்மணலை யெண்ணியள விடலாம், பெருங்கடன்மேல் வருந்திரையை யொன்றிரண்டென் றெண்ணிப் பிரித்தெழுதிக் கடையிலக்கம் பிரித்துவிட லாகுந், தருங்கடலின் மீனையள விடலாகும் வானத் தாரகையை யளவிடலாஞ் சங்கரன்று டமது, சிரங்கொடிருத் தொண்டர்புரா ணத்தையள விடநஞ் சேக்கிழார்க் கெளிதலது தேவர்க்கு மரிதே.

(இ-ள்.) கருங்கடலைக்கைநீத்துக்கொளவெளிது=கருங்கடலைக் கையினால் நீந்திக் கரையேறுதல் எளிதாம்; முந்நீர்க்கடற்கரையினெய்மணலையெண்ணியளவிடலாம்=முந்நீரென்னும் கடற்கரையிற் பொருந்திய நுண்ணிய மணலையும் இவ்வளவென்றளவிட்டுச் சொல்லலாம்; பெருங்கடன்மேல்வருந்திரையை=பெரிய கடலில் மறித்துமறித்து வருகின்ற அலைகளையும்; ஒன்றிரண்டென்றெண்ணிப்பிரித்தெழுதி=ஒன்று இரண்டு என்று எண்ணிப் பிரிவாகளெழுதி; கடையிலக்கம்பிரித்துவிடலாகும்=மொத்தத்தொகை கூட்டிச்சொல்

லலாம்; தருங்கடலின்மீனையளவிடலாகும்—வளப்பங்களைக்கொடுக்குங் கடல் மீனையும் இவ்வளவென்றளவிடலாம்; வானத்தாரகையையளவிடலாம்—ஆகாயத்தின்கண் விண்மீன்களையும் அளவிடலாகும்; சங்கரன்றடமதுசிரங்கொடிருத்தொண்டர்புராணத்தையளவிட—சிவபிரான் திருவடிகளைத் தமது சிரசில் தரித்த திருத்தொண்டர்கள்புராணத்தை அளவிட்டுச்சொல்ல; நஞ்சேக்கிழார்க்கெளிதல்லதுதேவர்க்குமரிது—நமது சேக்கிழார்நாயனாருக்கு எளிதன்றித்தேவர்களுக்கு மருமையானதாகும்.—எ-று. ஏ-அசை. (௫௧)

அறுபதுபேர் தனித்திருப்பேர் திருக்கூட்ட மொன்ப தாகவறு பத்தொன்ப தாரனடியார் கதையை, மறுவிறிரு நாவலூர்ச் சிவமறையோர் குலத்து வருசடைய னார்மனைவி யிசைஞானி வயிற்றி, லுறுதிபெற வவதரித்த வாரூரர் முன்னா னுரைசெய்த திருத்தொண்டத் தொகைப்பதிகத் தடைவே, நறைமலிபூம் பொழில்புடைசூழ் திருநாரை யூரி னம்பியாண் டார்திருவந் தாதிகடைப் பிடித்து.

(இ-ள்.) தனித்திருப்பேர்அறுபதுபேர்—தனியடியார்கள் அறுபதின்மரும்; திருக்கூட்டமொன்பது—தொகையடியார் ஒன்பதின்மரும்; ஆகவறுபத்தொன்பதானடியார்கதையை— ஆக அறுபத்தொன்பதென்னும் சிவனடியார்களது சரித்திரத்தை; மறுவிறிருநாவலூர்ச்சிவமறையோர்குலத்து—குற்றமில்லாத திருநாவலூர்ச் சைவவேதியர்குலத்தில்;வருசடையனார்மனைவியிசைஞானிவயிற்றில்—அவதரித்த சடையநாயனார் மனைவியாராகிய இசைஞானியார் திருவயிற்றில்;உறுதிபெறவவதரித்தவாரூரர்—இவ்வுலகின்கணுள்ளார் நன்னிலைமையடையும்படி திருவவதாரஞ்செய்தருளிய சுந்தரமூர்த்திசுவாமிகள்; முன்னுரைசெய்ததிருத்தொண்டத்தொகைப்பதிகத்தடைவே— முற்காலத்திற்சொல்லிய திருத்தொண்டத்தொகையாகிய பதிகத்தின்முறைப்படி; நறைமலிபூம்பொழில்புடைசூழ்திருநாரையூரில்— வாசனைகமழ்கின்ற மலர்ச்சோலைசூழ்ந்த திருநாரையூரில் அவதரித்த; நம்பியாண்டார்திருவந்தாதிகடைப்பிடித்து—நம்பியாண்டார்நம்பிசெய்தருளிய திருவந்தாதியை ஆதாரமாகவைத்துக்கொண்டு—எ-று. (௫௨)

பெயரொன்றது பேரொனமருவிநின்றது. ஈண்டுப்பெயரொன்றது பொருளை.

காண்டமிரண் டாவகுத்துக் கதைப்பரப்பைத் தொகுத்துக் கருதரிய சருக்கங்கள் பதின்மூன்று நிலையிட், டீண்டுரைத்த புராணத்திற் றிருவிருத்த நாலா யிரத்திருநூற் றைம்பத்து மூன்றாக வமைத்துச், சேண்டகைய திருத்தொண்டர் புராணமெனப் புராணத் திருமுறைக்குத் திருநாமஞ் சீர்மைபெற வமைத்திட், டாண்டகைமை பெறவெழுதி மைக்காப்புச் சாத்தி யழகுபெறக் கவளிகையு மமைத்ததில் வைத் ததன்பின்.

(இ-ள்.) காண்டமிரண்டாவகுத்து—(செய்யத்தொடங்கியபுராணத்தை) இரண்டுகாண்டங்களாகப்பிரித்து; கதைப்பரப்பைத்தொகுத்து—சரித்திரத்தின் விரிவைத் தொகுப்பாகச்செய்து;கருதரியசருக்கங்கள்பதின்மூன்றுநிலையிட்டு—நினைத்தற்கரியசருக்கங்கள் பதின்மூன்றாகவைத்து;ஈண்டுரைத்தபுராணத்தில்—

இவ்வாறியற்றின புராணத்தை; நாலாயிரத்திருநூற்றைம்பத்துமூன்றாகத்திரு
விருத்தமமைத்து=நாலாயிரத்திருநூற்றைம்பத்துமூன்று திருவிருத்தங்களால்
நிறைத்து; சேண்டகையதிருத்தொண்டர்புராணமென=பெருஞ்சிறப்பினைப்பெ
ற்ற திருத்தொண்டர்புராணமென்று; திருமுறைக்குத்திருநாமஞ்சீர்மைபெறவ
மைத்திட்டு=இப்புராணத்திருமுறைக்கு மேன்மைபொருந்தத் திருப்பெயரிட்
டு; ஆண்டகைமைபெறவெழுதி=நன்றாக ஏட்டிலெழுதி; மைக்காப்புச்சாத்தி=
மைக்காப்பிட்டு; அழகுபெறக் கவளிகையுமமைத்து=அழகுபொருந்தப் புத்த
கக்கவளிகை யொன்றையுஞ்செய்து; அதில்வைத்ததன்பின்=அதனுள்வைத்த
பின்னர்.—எ-று. (ருங)

வேறு.

சேவைகாவலர் புராணகாதைதொகை செயநினைந்தெமை யக
ன்றபின், யாவர்தாமரு கிருந்தபேர்கள்கதை சென்றதெவ்வள வி
ருந்ததெங், காவதென்னிவைக ளறியவேண்டும தறிந்துவாருமென
வளவர்கோ, னேவினானுரிய தூதர்தூதரறி யாமலொற்றரையு மேவி
னான்.

(இ-ள்.) சேவைகாவலர்புராணகாதைதொகைசெயநினைந்தெமையகன்
றபின்=சேக்கிழார்நாயனார் புராணக்கதையைப்பிரித்துத் தொகைசெய்ய நினை
த்து எம்மைவிட்டு நீங்கினபின்பு; யாவரருகிருந்தபேர்கள்=அவரருகி லிருந்தவர்
கள் யாவர்; கதைசென்றதெவ்வளவிருந்ததெங்கு=இதுவரைக்கும் புராணம்
எவ்வளவாயிற்று எங்கேயிருந்து புராணத்தை இயற்றுகின்றனர்; ஆவதென்னி
வைகளறியவேண்டும்=இனி ஆகவேண்டியது யாது அவைகளை நான் தெரிந்
துகொள்ளவேண்டுமாதலால்; அதறிந்துவாருமென=அதுதெரிந்து வருகவென்
று; வளவர்கோன்=அநபாயசோழன்; உரியதூதரேவினான்=உரிமையான தூ
தர்களை அனுப்பினான்; தூதரறியாமலொற்றரையுமேவினான்=அத்தூதுவர்கள்
அறியாமல் ஒற்றர்களையும் அனுப்பினான்.—எ-று. (ருச)

தாம் - அசை. இம்மூன்றுங்குளகம்.

வென்றிவேல்வளவ னளவறிந்துவர விட்டகாளையர் புராணநூ,
லொன்றுபாதிகதை சென்றதென்றுசில ரோடினார்சில ருவந்துசெ
ன், றின்றுநாளைமுடி யும்புராணமினி யென்றுரைத்திட விறைஞ்சி
னான், சென்றுநற்கதை முடிந்ததென்றுசிலர் செம்பியற்குறுதி செப்
பினார்.

(இ-ள்.) வென்றிவேல்வளவன்=வெற்றிபொருந்திய வேற்படையையு
டைய அநபாயசோழன்; அளவறிந்துவரவிட்டகாளையர்=புராணம் எவ்வள
வாயிற்றென்று அறிந்துவரும்படி ஏவிய தூதுவருள்; ஒன்றுகதைபாதிசென்ற
தென்றுசிலரோடினார்=அப்புராணத்திலடங்கிய சரித்திரம் பாதியாயிற்றென்
று சிலர் விரைந்துவந்து சொல்லினர்; சிலருவந்துசென்று=சிலர் மிகுந்த ம
கிழ்ச்சியுடன் சென்று; புராணம் இனியின்றுநாளைமுடியுமென்றுரைத்திட=
புராணம் இனி இன்றைக்குள் நாளைக்குள் முடிவுபெறுமென்று சொல்லக்கேட்டு;
இறைஞ்சினான்=அத்திசையைநோக்கி வணங்கினன்; சிலர்சென்றுநற்கதைமு
டிந்ததென்று=அதன்பின் சிலர்சென்று நன்மைபொருந்திய அப்புராணம் நி

றைவேறியதென்று; செம்பியற்குறுதிசெப்பினர்=அநபாயசோழனுக்கு உறுதி
யாகச்சொல்லினர்.—எ-று. (ருரு)

வந்துசொன்னவர்க ளனைவருக்குநவ மணிகளுந்துகிலு மம்பொ
னுஞ், சிந்தியள்ளியு முவந்துவீசியுயர் செம்பொனம்பல மருங்கில்
வா, ழந்திவண்ணர்நட மும்பணிந்துமுத லடியெடுத்தவர் கொடுத்
திடப், புந்திசெய்துமகிழ் சேவைகாவலர் புராணமுந்தொழுவ னா
னெனா.

(இ-ள்.) வந்துசொன்னவர்களனைவருக்கும்=இவ்வாறு வந்தசொல்லி
ய தூதுவர்களுக்கெல்லாம்; நவமணிகளுந்துகிலுமம்பொனும்=நவரத்தினங்க
ளையும் நல்லாடைகளையும் அழகிய பொன்னையும்; சிந்தியள்ளியுமுவந்துவீ
சி=மிகுந்த மகிழ்ச்சியுடன் எடுத்தெடுத்துக்கொடுத்து; உயர்செம்பொனம்ப
லமருங்கில்வாழ்=மாற்றுயர்வாகிய பொன்மயமான சிற்சபையில் வீற்றிருக்கி
ன்ற; அந்திவண்ணர்நடமும்பணிந்து=செவ்வானநிறத்தையொத்த திருமேனி
யையுடைய நடேசப்பிரானது நடனத்தையும் வணங்கி; முதலடியெடுத்தவர்
கொடுத்திட=அந்நடேசப்பிரான் முதலடியெடுத்துக் கொடுத்தருள; புந்திசெய்
துமகிழ்சேவைகாவலர்=அதை முதலாகவைத்துக்கொண்டு பாடி மகிழ்ச்சியுற்
ற சேக்கிழார்நாயனார் அருளிய; புராணமுந்தொழுவனானெனா=புராணத்தை
யும் நான்றொழுவேனென்று யத்தனித்து.—எ-று. (ருசு)

வீதிவீதிக டொறுந்தொறும்பயண மென்றுவென்றிமணி முர
சறைந், தோதிவேதியர்க ளெண்ணியிட்டவுயர் நாளுமோரையுமு
கூர்த்தமும், போதநாடிவரை புரைகடக்களிறு புரவிதேர்கருவி யா
டரச், சாதுரங்கமுட னேசெலப்பிளிறுதந்திமேல்கொடுநடந்தனன்.

(இ-ள்.) பயணமென்று=சிதம்பரத்திற்குப் பயணம் புறப்படவேண்டு
மென்று; வீதிவீதிகடொறுந்தொறும்=வீதிவீதிகள்தோறும்; வென்றிமணிமுரச
றைந்து=வெற்றிபொருந்திய பெரிய பேரிகைமுழக்கி; ஓதிவேதியர்களெண்
ணியிட்ட=நல்ல கணிதசாத்திரிகள் தெரிந்து கணித்துச்சொல்லிய; உயர்நாளு
மோரையுமுகூர்த்தமும்போதநாடி=சுபதினமும் இலக்கினமும் முகூர்த்தமும்
நன்றாய்த் தெரிந்துகொண்டு; வரைபுரைகடக்களிறுபுரவிதேர்கருவியாள் சா
துரங்கமுடனேதரச்செல=மலையையொத்த மதயானை குதிரை தேர் காலாள்
என்னும் சதுரங்கசேனைகளும் தம்முடன் சூழவரும்படி; பிளிறுதந்திமேல்கொ
டுநடந்தனன்=அநபாயசோழன் முழங்குகின்ற பட்டத்துயானைமீதேறிச்சென்
றனன்.—எ-று. இவ்விரண்டுங்குளகம். (ருஎ)

தேர்முழக்கொலி மழைக்கடக்கரட் சிந்துரக்களிறு பிளிறுசீ,
ரார்முழக்கொலி பரிச்செருக்கொலி பதாதிவந்தெதி ரடர்ந்தெழும்,
போர்முழக்கொலி சழக்கிலாதுயர் படைக்கலன்புணரு மோசையே
ழ், கார்முழக்கொலியி னெட்டிரட்டிநிறை கடன்முழக்கென முழக்
கெழ.

(இ-ள்.) தேர்முழக்கொலி=இரதம்ஒலிக்கின்ற ஒலியும்; மழைக்கடக் கரடசிந்துரக்களிறு=மேகத்தைப்போலமதம்பொழிகின்றசிந்தூரமெழுதியயானைகள்; பிளிறுசீரார்முழக்கொலி=பிளிறொலிசெய்கின்ற பெரிய ஓசையும்; பரிச்செருக்கொலி=குதிரைகள்கனைக்கின்றஒலியும்; பதாதிவந்தெதிரடர்ந்தெழும் போர்முழக்கொலி=பதாதிகள் ஒருவர்க்கொருவர் எதிரில்வந்து நெருங்கிச் செர்ச்சிக்காநின்ற பேரொலியும்; சழக்கிலாதுயர்படைக்கலன்புணருமோசை=குற்றமில்லாத கூரிய ஆயுதங்கள் ஒன்றுடனொன்று தாக்குதலாலுண்டாகின்ற ஓசையும்; ஏழ்கார்முழக்கொலியினெட்டிரட்டிநிறை=சத்தமேகங்களின் ஒலியைப்பார்க்கிலும் பதினாறுபங்கு அதிகமாக நிறைந்த; கடன்முழக்கெனமுழக்கெழ=கடல்முழக்கம்போல முழங்க.—எ-று. (௫௮)

வளவர்கோன்வர வறிந்துதில்லைமறை யோரும்வண்மைமட பதிகளும், பிளவுகொண்டமதி நுதன்மடந்தையரு மற்றுமுள்ளபெரி யோர்களுங், களவிலாதமொழி கொடுபுராணகதை செய்தகங்கைகுல திலகருந்,தளவமாலையப யனையெதிர்ந்தினிய சாரவாசிபலசாற் றினர்.

(இ-ள்.) வளவர்கோன்வரவறிந்து=அநபாயசோழன் வரவினை அவ்வோசையினால் தெரிந்து; தில்லைமறையோரும்வண்மைமடபதிகளும்=தில்லைவாழந்தணர்களும் வளப்பமிகுந்த மடாதிபதிகளும்; பிளவுகொண்டமதிநுதன்மடந்தையரும்=பாதிமதிபோலும் நெற்றியினையுள்ள மாதர்களும்; மற்றுமுள்ளபெரியோர்களும்=இன்னுமுள்ள பெரியோர்களும்; களவிலாதமொழிகொடு=வெளிப்பட்ட அசரீரிவாக்கைக்கொண்டு; புராணகதைசெய்தகங்கைகுலதிலகரும்=திருத்தொண்டர்புராணமாகிய கதையை இயற்றிய சேக்கிழார்நாயனாரும்; தளவமாலையபயனையெதிர்ந்து=முல்லைமலர் மாலையையுடைய அநபாய சோழனை எதிர்கொண்டு; இனியசாரவாசிபலசாற்றினர்=இனியபயனைத் தராநின்ற ஆசிமொழிகள் பலவாகச்சொன்னார்கள்.—எ-று. இவ்விரண்டுங் குளகம். (௫௯)

முண்டமானதிரு முடியுமிட்டதிரு முண்டமுங்கவச முந்துணைக்
குண்டலங்களு மிரண்டுகாதினும் வடிந்தலைந்தகுழை யுந்திருக்
கண்டமாலைகர மாலையுஞ்சிரசு மாலையுங்கவின் விளங்கவே
தொண்டர்சீர்பரவு வானணைந்தசுப சரிதைசோழனெதிர்கண்டனன்

(இ-ள்.) முண்டமானதிருமுடியும்=முண்டிதமாகிய திருமுடியும்; இட்டதிருமுண்டமுங்கவசமும்=திரிபுண்டரமாகத்தரித்த விபூதியும் உருத்திராக்கங்களும்; துணைக்குண்டலங்களும்=இணையாகிய குண்டலமும்; இரண்டுகாதினும்வடிந்தலைந்தகுழையும்=இரண்டுகாதினிடத்துந் தொங்கி யசைந்துகொண்டிராநின்ற கண்டிகையும்; திருக்கண்டமாலை=கழுத்திலணியும் உருத்திராக்க கண்டிகையும்; கரமாலையுஞ்சிரசுமாலையுங்கவின்விளங்க=கைக்கட்டும் சிரத்தின்மாலையும் அழகுபொருந்த; தொண்டர்சீர்பரவுவானணைந்த=திருத்தொண்டர்புராணத்தை நிறைவேற்றிய சேக்கிழார்நாயனார் வந்தருளிய; சுபசரிதைசோ

ழனெதிர்கண்டனன்=மங்கலகரமானசெயலை அநபாயசோழன் கண்ணினால் எதிராகக்கண்டான்.—எ-று. ஏ-அசை. (௬௦)

குண்டலம்=ஆறுஉருத்திராக்கங்கள் சேர்த்தமைத்த காதணி. குழை=மணியிழைத்து வட்டமாய்ச் சதுரப்படவியற்றிய காதணி. கண்டமாலையென்றதனால் இனம்பற்றி உரமாலையும், கரமாலையென்றதனால் இனம்பற்றிப் புயமாலையுங்கொள்க. ஈண்டுச் சரிதையென்றது செயலை.

கண்டபோதுள மகிழ்ந்துதன்னையறி யாதுகைகட்லை மீதுறக்,
கொண்டவேடமர னடியர்வேடமிது குறைவிலாததவ வேடமென்,
றண்டவாணர்திரு வருளையுன்னியவ ரடிமைகொண்டபெரு மை
யைநினைந், தெண்டயங்கரச ரேறுசேவையர் குலாதிபாதுகை யிறை
ஞ்சினான்.

(இ-ள்.) கண்டபோதுளமகிழ்ந்து=கண்டவுடன் உள்ளமகிழ்ந்து; தன்னையறியாதுகைகடலைமீதுற=தன்னையறியாமல் இரண்டுகைகளும் அஞ்சலியாகச் சிரசின்மீது பொருந்த; கொண்டவேடமரனடியர்வேடம்=இவர்கொண்டிருக்கும் வேடம் சிவனடியார்வேடமே; இதுகுறைவிலாததவவேடமென்று=மேலும் இது குறைவில்லாத தவவேடமேயென்று; அண்டவாணர்திருவருளையுன்னி=தேவதேவனாகிய சிவபிரான் கிருபையை நினைந்து; அவரடிமைகொண்டபெருமையைநினைந்து=அவர் அடிமையாகக்கொண்ட பெருமையையுஞ் சிந்தித்து; எண்டயங்கரசரேறு=யாவரொண்ணத்தும் வீற்றிருக்கும் அரசராகிய யானைகளுக்கு ஆண்சிங்கத்தையொத்த அநபாயசோழன்; சேவையர்குலாதிபாதுகையிறைஞ்சினான்=சேக்கிழார்நாயனாரது திருவடிப்பாதுகையில் வணங்கினன்.—எ-று. (௬௧)

தான் அரசன் இவர் மந்திரியென்னும் பகுப்பின்றித் தன்னையிழந்து வணங்குதலில் தன்னையறியாதுகைகடலைமீதுற என்றும், அரன்வேடமே அரனடியார்க்குரிய வேடமாமென்னும் சிறப்புநோக்கிக்கொண்ட வேட மரனடியர் வேடமென்றும், இவர்வேடம் வேடமாத்திரமன்றிச் சிவபிரானையுணரும் மெய்ப்பத்தியோடு சேர்ந்துநிற்றலில் குறைவிலாத தவவேடமென்றுங் கூறினர்.

இறைஞ்சியம்பலவர் பாததாமரை யிறைஞ்சவெண்ணிவரன்
முறைமையா, லறஞ்சிறந்தமுனி சேவைகாவலனு மாறைஞ்ஞூறும
றை யோர்களுந், துறஞ்சிறந்தமட பதிகளுந்தொடர வந்துமன்னன
ரிபிரமர்பான், மறைஞ்சுநின்றபொருள் வெளிப்படக்கனக மன்றினி
ன்றபடி கண்டனன்.

(இ-ள்.) இறைஞ்சியம்பலவர்பாததாமரையிறைஞ்சவெண்ணி=வணங்கிக்கொண்டு நடேசப்பிரான் திருவடித்தாமரைகளை வணங்கநினைந்து; வரன்முறைமையாலறஞ்சிறந்தமுனிசேவைகாவலரும் = வரன்முறையாகச் சைவமார்க்கத்திற்சிறந்த முனிவராகிய சேக்கிழார்நாயனாரும்; ஆறைஞ்ஞூறுமறை

யோர்களும்=தில்லைவாழந்தணர்மூவாயிரவர்களும்; துறஞ்சிறந்தமடபதிகளுந் தொடரவந்து=துறவறத்திற்சிறந்த மடாதிபதிகளும் தம்மைத்தொடர்ந்துவர வந்து; மன்னன்அரிபிரமர்பால்மறைஞ்சுநின்றபொருள்=அநபாயசோழன் திருமால் பிரமனென்னும் இவர்களிடத்தில் மறைந்துநின்ற பரம்பொருளான சிவபிரான்; வெளிப்பட்டக்கனகமன்றினின்றபடிகண்டனன்=வெளியாகச்சிற்சபையில் நடனஞ்செய்துநின்றருளுந் திருக்கோலத்தைத் தெரிசித்தனன்.-எ-று.

துறவறம்-என்பது துறமெனத்திரிந்து நின்றது. வரன்முறைமையால் என்றதனால் அநபாயசோழனும் சேக்கிழார்நாயனாரும் அவரோடு தில்லைவாழந்தணர்களும் அவர்பின் மடபதிகளும் எனக்கூறியவாறு கொள்க.

கண்டகண்ணருவி தாரைகொள்ளவிரு கைகளஞ்சலி கொளக்கசிந், தெண்டரும்புளக ரோமகூபமெழ வின்பவாரிகரை புரளவாய், விண்டதூமொழிகள் குழறவன்பினொடு விம்மிவிம்மியருண் மேலிடத், தெண்டனாகமுன் விழுந்தெழுந்துநனி செம்பியன்பரவ வெம்பிரான்.

(இ-ள்.) கண்டகண்ணருவிதாரைகொள்ள=தெரிசித்தகண்ணினின்றும் சொரிகின்ற நீர்த்துளியாகிய அருவியானது இடையீடின்றிப்பொழியவும்; இருகைகளஞ்சலிகொள=இருகைகளும் அஞ்சலிகொள்ளவும்; கசிந்தெண்டரும்புளகரோமகூபமெழ=மனமுருகி எண்ணத்தக்க புளகாங்கிதமாக மயிர்சிலிர்க்கவும்; இன்பவாரிகரைபுரள=ஆனந்தவெள்ளமானது பெருக்கெடுக்கவும்; வாய்விண்டதூமொழிகள்குழற=வாக்கினின்றும்உதித்த தூயசொற்கள் குழறவும்; அன்பினொடுவிம்மிவிம்மியருண்மேலிட=அன்புடனே யதிகவிம்மிதமடைந்து திருவருள்மேலீடாய்; தெண்டனாகமுன்விழுந்தெழுந்து=திருமுன்னர் அட்டாங்கபஞ்சாங்கமாக வணங்கி எழுந்திருந்து; நனிசெம்பியன்பரவவெம்பிரான்=அநபாயசோழன் மிகத்துதிக்க எமதுபிரானாகிய நடேசர்.—எ-று()

சேக்கிழானமது தொண்டர்சீர்பரவ நாமகிழ்ந்துலக மென்றுநம், வாக்கினாலடி யெடுத்துரைத்திட வரைந்துநூல்செய்து முடித்தனன், காக்கும்வேல்வளவ நீயிதைக்கடிது கேளெனக்கனகவெளியிலே, யூக்கமானதிரு வாக்கெழுந்தது திருச்சிலம்பொலியு முடனெழ.

(இ-ள்.) காக்கும்வேல்வளவ=உலகுயிர்களைக்காக்கும் வேற்படையையுடைய சோழனே; சேக்கிழானமதுதொண்டர்சீர்பரவ=சேக்கிழான் நமது அடியார்கள்சிறப்பைத் துதிசெய்ய; நாமகிழ்ந்துநம்வாக்கினால்=நாம்மகிழ்வுற்று நமதுவாக்கினால்;உலகமென்றடியெடுத்துரைத்திடவரைந்து=உலகெலாமென்று முதலடியெடுத்துக் கொடுக்கக்கொண்டு; நூல்செய்துமுடித்தனன்=புராணஞ்செய்து நிறைவேற்றினன்; நீயிதைக்கடிதுகேளென=அதை நீவிரைவிற் கேட்கவென்று; கனகவெளியிலேயூக்கமானதிருவாக்கெழுந்தது=கனகசபையின்கண் யாவர்க்கும் மகிழ்ச்சிவிளைக்கும்படியான ஒருஅசரீரிவாக்கு உண்டாயிற்று; திருச்சிலம்பொலியுமுடனெழ=அவ்வோசையுடன் குஞ்சிதபாதத்திருச்சிலம்பினோசையுங்கூடவுண்டாக.—எ-று. (௬௪)

மன்றுளாடிதிரு வாய்மலர்ந்தமொழி யுஞ்சிலம்பொலியு மன்றிலே
நின்றமானிடர் செவிப்புலன்புக நிறைந்ததன்றியு நிலத்தின்மே
லொன்றிநின்றுயர் சராசரங்களடை யக்கசிந்துருகி யோலிடக்
குன்றிலங்குதிர டோணரேந்திரபதி குதுகுலித்துள மகிழ்ந்தனன்.

(இ-ள்.) மன்றுளாடிதிருவாய்மலர்ந்தமொழியுஞ் சிலம்பொலியும் = நடேசப்பிரான் திருவாய்மலர்ந்தருளிய அசரீரிவாக்கும் திருச்சிலம்பினுசுமும்; மன்றிலேநின்றமானிடர்செவிப்புலன்புகநிறைந்ததன்றியும் = சிற்சபையின்கண்ணின்றிருந்த அடியார்களுடைய காதுகளில்கேட்க நிறைந்ததல்லாமலும்; நிலத்தின்மேலொன்றிநின்றுயர்சராசரங்களடைய = இவ்வுலகத்தின்கண் பொருந்திநின்ற உயர்ந்தசராசரங்களெல்லாம்; கசிந்துருகியோலிட = மனம் நெக்குவிட்டுருகி யாரவாரிக்க; குன்றிலங்குதிரடோணரேந்திரபதி = மலைபோற்றிரண்டதோளையுடைய அநபாயசோழனும்; குதுகுலித்துளமகிழ்ந்தனன் = குதூகலங்கொண்டுள்ளம் மகிழ்ச்சியடைந்தனன். —எ-று. இம்மூன்றுங்குளகம். (௬௫)

அந்நாதம் பரத்தலால் ஓரறிவுயிரும் கசிந்துருகிற்றென்க. மகிழ்ச்சியாலோலிடல்ஓரறிவுயிர்க்கின்மையின் ஏற்றபடிகொள்க; குதுகுலித்தல் = வியப்பினால் உண்டாகும் உடம்பின்பூரிப்பு. உரோமாஞ் சிதமுமாம்.

தொண்டர்தொண்டுசெய் புராணகாதைமதி சூடுநாதர்திருவருளினால், விண்டநீதிபுனை சேக்கிழார்முனி விரித்துரைத்தகதை கேட்பதற், கண்டவாணரடி யாரெலாங்கடுக வருகவென்றுதிசை திசைதொறு, மெண்டயங்கரச னேடெடுத்தெழுதி யாளுமோலைகளு மேவினான்.

(இ-ள்.) விண்டநீதிபுனைசேக்கிழார்முனி = மநுச்சக்கிர வர்த்தியினால் சொல்லிய நீதியைத்தெரிந்த சேக்கிழார் நாயனார்; தொண்டர்தொண்டுசெய் புராணகாதை = அடியார் திருப்பணிசெய்த சரித்திரக் கதையாகிய; மதிசூடுநாதர்திருவருளினால் = இளம்பிறையைத் தரித்த நடேசப்பிரான் திருவருளினால்; விரித்துரைத்தகதைகேட்பதற்கு = விரிவாகச்சொல்லிய திருத்தொண்டர்புராணத்தைக் கேட்பதற்கு; அண்டவாணரடியாரெலாம் = சிவனடியார்கள்யாவரும்; கடுகவருகவென்று = விரைவாய் வரக்கடவர்கள் என்று; எண்டயங்கரசன் = எத்திக்கினும் தன்கீர்த்தியைப் பரவச்செய்த அநபாயசோழன்; திசைதிசைதொறுமேடெடுத்தெழுதி = திக்குகள்தோறுந் திருமுகம் எழுதி; ஆளுமோலைகளுமேவினான் = தூதுவர்களையும் அத்திருமுகத்தையும் அனுப்பினான். எ-று.

வேறு.

கவச மணிந்த சனங்களு மிங்கித முங்கம்பித்
தவச முறுஞ்சிவ சிந்தையு மன்பக லாமேன்மைத்
தவச ரிதத்தொழி லுஞ்சிவ சாதன முஞ்சாரச்
சிவச மயத்தவர் யாவரும் வந்து திரண்டார்கள்.

(இ-ள்.) கவசமணிந்தசனங்களும்—விபூதி உருத்திராக்கமாகிய கவசத்தையணிந்த அடியார்களும்; இங்கிதமுங்கம்பித்தவசமுறுஞ்சிவசிந்தையும்—ஒருவர்க்கொருவர் இனிமைபாராட்டுங்குணமும் உடம்பு நடுக்குற்றுப் பரவசமடையும்படியான சிவசிந்தையினையும்; அன்பகலாமேன்மை—அன்புநீங்காதமேன்மையினையும் உடைய; தவசரிதத்தொழிலும்—சிவனடிமைத் தொண்டும்; சிவசாதனமுஞ்சார—முண்டனம் சடைமுதலிய சிவசாதனங்களும்பொருந்தும்படி; சிவசமயத்தவர்யாவரும்—சைவசமயிகள் யாவரும்; வந்துதிரண்டார்கள்—வந்து கூடினர்.—எ-று. (ருஎ)

வேதியர் வேத முழக்கொலி வேதத் தைத்தமிழா
லோதிய மூவர் திருப்பதி கத்தொலி யோவாமற்
பூதி யணிந்தர கரவென வன்பர் புகழ்ந்தோதுங்
காதியல் பேரொலி காரொலி போலொலி கைத்தேற.

(இ-ள்.) வேதியர்வேதமுழக்கொலி—மறையவர்கள் வேதமோதும் ஓசையும்: வேதத்தைத்தமிழாலோதியமூவர்திருப்பதிகத்தொலி — அந்தவேதத்தைத்தமிழாற்கூறிய மூவர்கள் தேவாரத்தினோசையும்;ஓவாமற்பூதியணிந்து—நீங்காமல் திருவெண்ணீறணிந்து; அன்பர்அரகரவெனப்புகழ்ந்தோதும்—அடியார்கள் அரகரவென்று புகழ்ந்துதுதிக்கும்; காதியல்பேரொலி—செவிக்கினிய பெரியஓசையும்; காரொலிபோலொலிகைத்தேற—மேகத்தினொலிபோலொலித்து அதையும்அடக்கி மேலிட.—எ-று. (ருஅ)

பூசிப் பவர்சிலர் பூசித் தன்பொடு புனிதன்று
ணேசிப் பவர்சிலர் பிறவா வரமரு ளிமலவென்
றியாசிப் பவர்சிலர் திருமுறை யெழுதிக் களிகூர
வாசிப் பவர்சில ராக விருந்து மகிழ்ந்தார்கள்.

(இ-ள்.) திருமுறையெழுதி—அவ்வடியார்களுள் திருத்தொண்டர்புராணத்தையெழுதி; பூசிப்பவர்சிலர்—சிவபூசைசெய்கின்றவர்கள் சிலபேரும்; பூசித்தன்பொடுபுனிதன்றுணேசிப்பவர்சிலர்—அவ்வாறுபூசித்து நடேசப்பிரான் திருவடிகளைத் தியானிக்கின்றவர்கள் சிலபேரும்; பிறவாவரமருளிமலவென்றியாசிப்பவர்சிலர்—நடேசப்பிரானே அடியேம் இறந்துபிறவாவரம் அருளென்று கேழ்க்கின்றவர்கள் சிலபேரும்; களிகூரவாசிப்பவர்சிலராக—அத்திருமுறையை விருப்பமுறவாசிக்கின்றவர்கள் சிலபேருமாக;இருந்துமகிழ்ந்தார்கள்—இருந்து மகிழ்ச்சியடைந்தார்கள்.—எ-று. இவ்விரண்டுங்குளகம். (ருகூ)

தெள்ளு திரைக்கடன் மீது மிதந்த திருத்தோணி
வள்ளலை யன்புசெ யன்பர் மடங்க டொறும்பாலர்
மெள்ள விருந்து மிழற்று புராண விருத்தத்தைக்
கிள்ளைகள் பாடி யுரைப்பன கேட்பன மெய்ப்பூவை.

(இ-ள்.) தெள்ளுதிரைக்கடன்மீதுமிதந்த—தெள்ளிய அலையோடுகூடிய கடலில் ஊழிகாலந்தோறுமிதந்த; திருத்தோணிவள்ளலை யன்புசெய்—சீகாழியில் திருவவதாரஞ்செய்த திருஞானசம்பந்தமூர்த்திகளுக்கு அன்புசெய்கின்ற; அன்பர்மடங்கடோறும்—தேவாரத்திருமுறையோதும் அடியவர்கள்மடங்கள்தோறும்; பாலர்இருந்துமெள்ளமிழற்றுபுராணவிருத்தத்தை—அவர்சிறுவர்கள் அமைவாகவிருந்து வாசித்துப்பொருளுரைக்குந் திருத்தொண்டர் புராணவிருத்தத்தை; கிள்ளைகள்பாடியுரைப்பன—கிளிப்பிள்ளைகளும் கற்றுக்கொண்டு பாடிப்பொருள்சொல்வன; மெய்ப்பூவைகேட்பன—அழைத நாகணவாய்ப்புட்கள் கேட்பன.—எ-று. (௭௦)

கிள்ளைகளும் என்னும் இழிவு சிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது.

மற்றது கண்டு களித்த நலத்த மனத்தோடு
சுற்றிய மந்திரி மாரொடு தந்திரி மார்சூழத்
தெற்றென வந்து திரண்டு முரண்டரு சீர்நாடு
பெற்றது செல்வ மெனத்தனி யோகை பெருத்தார்கள்.

(இ-ள்.) அதுகண்டுகளித்த—அதனைக்கண்டுகளிப்படைந்த; நலத்தமனத்தோடுசுற்றிய—நன்மையமைந்தவுள்ளத்தோடுஞ் சுற்றிவந்திருக்கின்ற; மந்திரிமாரொடுதந்திரிமார்சூழ—மந்திரிகளுடன் சேனாதிபதிகளுஞ்சூழ; தெற்றெனவந்துதிரண்டு—விரைந்துவந்துகூடி; முரண்டருசீர்நாடுபெற்றதுசெல்வமென—காவலையுடையநிலையுள்ள இவ்வுலகமானது செல்வத்தைப்பெற்றதென்று; தனியோகைபெருத்தார்கள்—பேரானந்த வாழ்வடைந்தார்கள்.—எ-று. மற்று. அசை. (௭௧)

பாடினர் தும்புரு நாரதர் நீடிசை பாடாநின்
றாடினர் வானி லரம்பைய ரஞ்சலி யெஞ்சாமற்
சூடினர் மண்ணின் மடந்தைய ரெந்தை துணைப்பாதந்
தேடினர் மாலய னன்பர் நடந்தரி சித்தார்கள்.

(இ-ள்.) தும்புருநாரதர்பாடினர்—தும்புருநாரதர்கானம்பாடினார்கள்; வானிலரம்பையர்நீடிசைபாடாநின்றாடினர்—விண்ணில்அரம்பையர்கள் மிக்க இசைபாடிக்கொண்டு ஆடினார்கள்; மண்ணில்மடந்தையரெஞ்சாமலஞ்சலிசூடினர்—இவ்வுலகத்தின்கண்வாழும் மகளிர்கள் குறைபாடின்றிக் கரங்களைச்சிரசின்மேற்குவித்துத் தொழுதார்கள்; எந்தைதுணைப்பாதமாலயன்றேடினர்—எமதுதந்தையாகிய நடேசப்பிரான் திருவடிகளிரண்டையும் திருமாலும் பிரமனும் முன்அறியாதுமயங்கினர்; அன்பர்நடந்தரிசித்தார்கள்—இப்பொழுது அடியார்கள் எளிதாகஆனந்தநிருத்தத்தைத் தரிசனஞ்செய்தார்கள்.—எ-று. (௭௨)

திருமால் பிரமன்என்னும் இருவரும் முன்திருவருளின்மையால் காணாதுமயங்கினரென்றும், அடியார்கள் திருவருளுடைமையால் கண்டுதரிசித்தனரென்றுங் கொள்க.

சங்கொடு பேரி கறங்கிசை வீணை தனித்தாளம்
வங்கிய காள மிடக்கை தக்கை மணிக்காளம்
பொங்கிய பம்பை வலம்புரி கண்டை முதற்பொற்பார்
மங்கல தூரிய மெங்கு முழங்கி வனப்பெய்த.

(இ-ள்.) சங்குபேரிகறங்கிசைவீணை=சங்குகள் பேரிகைகள் சத்திக்காநின்ற இசையையுடைய வீணைகள்; தனித்தாளம்=ஒப்பற்றதாளங்கள்; வங்கியகாளமிடக்கைகள்=வேய்ங்குழல்கள் எக்காளங்கள் உடுக்குகள்; தக்கைமணிக்காளம்=தக்கைகள் அழகிய திருச்சின்னங்கள்; பொங்கியபம்பைவலம்புரிகண்டைமுதல்=ஒலிக்காநின்றபம்பைகள் வலம்புரிச்சங்கங்கள் கைம்மணிகள் இவைமுதலாகிய; பொற்பார்மங்கலதூரியம்=அழகுநிறைந்த மங்கலவாத்தியங்கள்; எங்குமுழங்கிவனப்பெய்த=எங்கும் சத்தித்துச் சிறப்பெய்தவும்.—எ-று. ஒடு, இசைநிறை. (௭௩)

வேதியர் வேள்வி நெடும்புகை யாலய மெங்கெங்கும்
காதிய குங்குலி யப்புகை நீடு கருப்பாலைச்
சோதி நெடும்புகை தோரண வீதி தொறுந்தோறு
மாதர் புகைக்கு மகிற்புகை யெங்கும் வனப்பெய்த.

(இ-ள்.) வேதியர்வேள்விநெடும்புகை=மறையவர்கள்புரிகின்ற யாகத்திலுண்டாகிற மிகுந்த புகையும்; ஆலயமெங்கெங்குங்காதியகுங்குலியப்புகை=தேவாலயங்கள்தோறும் அடியவர்களிடும் பொடிசெய்த குங்குலியப்புகையும்; நீடுகருப்பாலைச்சோதிநெடும்புகை=நீண்ட கரும்பின்சாற்றைக் காச்சுதலாலுண்டாகின்ற ஒளிமிகுந்த புகையும்; தோரணவீதிதொறுந்தோறம்=தோரணங்கள்கட்டிய வீதிகள்தோறும்; மாதர்புகைக்குமகிற்புகை=மாதர்கள் ஊட்டுகின்ற அகிற்புகையும்; எங்கும்வனப்பெய்த=எங்கும் பரிமளிக்கவும்.—எ-று. ()

ஆடக நாடக சாலைகண் முத்தணி யத்தாணி
மேடை வரங்கு களங்க மிலாத வெளிக்கூட
மாட மதிட்கன மாளிகை சூளிகை யெங்கெங்குந்
தோடவிழ் மாலைகள் பொன்னரி மாலைகள் சூழ்வித்தார்.

(இ-ள்.) ஆடகநாடகசாலைகள்=பொன்னாலாகிய நாடகசாலைகளிலும்; முத்தணியத்தாணி=முத்துக்களால் அலங்கரித்திருக்கும் பெரியமண்டபங்களிலும்; மேடையரங்கு=மேடைகளிலும் சபைகளிலும்; களங்கமிலாதவெளிக்கூடம்=குற்றமில்லாத நிலாமுற்றங்களிலும்; மாடமதிட்கனமாளிகைசூளிகை=வீடுகளிலும் மதில்களையுடைய பெரியமாளிகைகளிலும் அவற்றின் சிகரங்களிலும்; எங்கெங்கும்=மற்ற எல்லாவிடங்களிலும்; தோடவிழ்மாலைகள்=இதழ்களுடன் மலர்ந்த மலர்மாலைகளையும்; பொன்னரிமாலைகள்சூழ்வித்தார்=பொன்னரிமாலைகளையும் அலங்காரஞ்செய்தார்கள்.—எ-று. இம்மூன்றுங்குளகம். (௭௫)

பொன்னரிமாலை=பொன்னை மலரிதழ்போலரிந்து தொடுத்தமாலை,

பழுதக லத்திரு வலகு விருப்பொடு பணிமாறிக்
குழைவு பெறத்திகழ் கோமய நீர்குளி ரச்செய்து
தழைபொதி தோரண முங்கொடி யுந்துகி லுஞ்சார்வித்
தழகு பெறததிரு வீதி புதுக்கி யதன்பின்பு.

(இ-ள்.) பழுதகலவிருப்பொடுதிருவலகுபணிமாறி—குற்றநீங்க விருப்பத்துடனே திருவலகிட்டு; குழைவுபெறத்திகழ்கோமயநீர்குளிரச்செய்து—குழம்பாக விளங்குகின்ற கோமயங்கரைத்தநீரைத்தெளித்து; தழைபொதிதோரணமுங்கொடியுந்துகிலுஞ்சார்வித்து—தழைநெருங்கிய மலர்த்தோரணங்களும் கொடிகளும் மேல்விதானங்களும் அலங்கரித்து; அழகுபெறத்திருவீதிபுதுக்கியதன்பின்பு—அழகுபொருந்த வீதிகளை அலங்காரஞ்செய்து அதன்பின்பு.—எ-று. (எ௬)

வேறு.

திருநெறித்தமிழ் வல்லபேர்கள் சிவாகமங்கள் படித்தபேர்
கருநெறிப்பகை ஞானநூல்பல கற்றபேர்மறை கற்றபேர்
குருநெறிக்குரி யோரிலக்கண லக்கியங்கள் குறித்தபேர்
பெருநெறிப்பல காவியங்கதை பேசவல்லவரனைவரும்.

(இ-ள்.) திருநெறித்தமிழ்வல்லபேர்கள்—தேவாரத்திருமுறைகளில் வல்லவர்களும்; சிவாகமங்கள்படித்தபேர்—சிவாகமங்களை ஓதியுணர்ந்தவர்களும்; கருநெறிப்பகைஞானநூல்பலகற்றபேர்—பிறவிவரும்வழிக்குப் பகையாகிய பல ஞானநூல்களைக் கற்றுணர்ந்தவர்களும்; மறைகற்றபேர்—வேதவித்துக்களாகிய மறையவர்களும்; குருநெறிக்குரியோர்—குருஉபதேசிக்கும் பாரம்பரிய நெறியில் நிற்பவர்களும்; இலக்கணலக்கியங்கள்குறித்தபேர்—இலக்கண இலக்கியங்களைக் கற்றவர்களும்; பெருநெறிப்பலகாவியங்கதை—நன்னெறியையுடைய பல காப்பியங்களையும் புராணங்களையும்; பேசவல்லவரனைவரும்—எடுத்துச்சொல்ல வல்லவர்களும் ஆகிய இவர்களெல்லாரும்.—எ-று. (எஎ)

வேறு.

வள்ளலார் திருநடஞ்செய் மன்றின் முன்றின் மறையவர்கோமயசலத்தான் மெழுகித் தாபித், தெள்ளரும்வெண் சுதையொழுக்கி யறுகாற் பீட மிட்டதன்மேற் பசும்பட்டு விரித்து மீதே, வெள்ளைமடித் திட்டுமது மலருந் தூவி விரைநறுந்தூ பங்கொடுத்தா தனங்கற்பித்துத், தெள்ளுதமிழ்ச் சேக்கிழார் புராணஞ் செய்த திருமுறையை யதன்மேல்வைத் திறைஞ்சிப் போற்றி.

(இ-ள்) வள்ளலார்திருநடஞ்செய்மன்றின்முன்றில்—நடேசப்பிரான் நடனஞ்செய்கின்ற சிற்சபைக்குமுன்னே; மறையவர்கோமயசலத்தான்மெழுகித்தாபித்து—தில்லைவாழந்தணர்கள் கோமயங்கரைத்த நீரால் திருமெழுக்கிட்டு; எள்ளரும்வெண்சுதையொழுக்கி—அழகானகோலமிட்டு; அறுகாற்பீடமிட்டு—ஆறுகாற்பீடமமைத்து; அதன்மேற்பசும்பட்டுவிரித்து—அதன்மேல் மிருதுவானபட்டை விரித்து; மீதுவெள்ளைமடித்திட்டு—அதன்மீது வெண்பட்டு மடித்து

சோழர் தில்லையையடைந்து நடேசரையும் சேக்கிழார்சுவாமிகளையும் தரிசித்துச் சிலம்பொலியைக்கேட்டுப் பரவசமடைந்து திருத்தொண்டர்புராணங்கேட்கும்படி சிவனடியார்கள் யாவரும் வரும்படி திருமுகத்தோடு தூதரையனுப்பி அவர்கள் வந்தபின் சிதம்பரம் ஆயிரக்கால் மண்டபத்தில் திருத்தொண்டர்புராணத்தைச் சித்திரைமதி திருவாதிரையில் ஆரம்பித்து மறுசித்திரை திருவாதிரையில் அரங்கேற்றி முடித்தது.

அலங்காரமாகவைத்து; மதுமலருந்தூவி—தேனிறைந்தமலர்களையும்பரப்பி; ஆதனங்கற்பித்து—இவ்வாறாகப் பிரணவாசனம் பூசித்து; தெள்ளுதமிழ்ச்சேக்கிழார்செய்த—தெள்ளியதமிழில்வல்ல சேக்கிழார்நாயனார் திருவாய்மலர்ந்தருளிய; புராணத்திருமுறையை— திருத்தொண்டர்புராணத்திருமுறையை; அதன்மேல்வைத்து—அதன்மேல்வைத்து அருச்சித்து; விரைநறுந்தூபங்கொடுத்து—மணம்பொருந்திய நல்லதூபதீபங்கொடுத்து; இறைஞ்சிப்போற்றி—வணங்கித்துதித்து.—எ-று. ஏ-அசை. (௭௮)

வாழிதிருத் தொண்டர்புரா ணத்தை நீரே வாசித்துப் பொருளருளிச் செய்வீ ரென்று, சோழர்பெரு மான்முதலா மடிய ரெல்லாஞ் சொலக்கேட்டுக் குன்றைமுனி மன்று ளாடுந், தாழ்சடையா னடியெடுத்துத் தரத்தாஞ் செய்த சைவகதை யினைவிளங்க விரித்துச் சொல்லச், சூழவிருந் தம்பலவ ரடியா ரெல்லாஞ் சுருதிமொழி யிதுவெனக்கை தொழுது கேட்டார்.

(இ-ள்.) திருத்தொண்டர்புராணத்தை—திருத்தொண்டர் புராணமாகிய இதை; நீரேவாசித்துப்பொருளருளிச்செய்வீரென்று—தேவரீரே வாசித்து இதன்பொருளை அருளிச்செய்வீராகவென்று; சோழர்பெருமான்முதலாமடியரெல்லாஞ்சொலக்கேட்டு—அநபாயசோழன்முதலாகிய அடியவர்களெல்லாம் பிரார்த்திக்க அதை அங்கீகரித்து: குன்றைமுனி—சேக்கிழார் நாயனார்; மன்றுளாடுந்தாழ்சடையானடியெடுத்துத்தர—சிற்சபையினிடத்து நடனஞ்செய்கின்ற தாழ்ந்த சடையையுடைய நடேசப்பிரான் முதலடியெடுத்துக்கொடுக்க; தாஞ்செய்தசைவகதையினை—தாம்செய்ததிருத்தொண்டர்புராணத்தை; விளங்கவிரித்துச்சொல்ல—யாவருக்குந்தெரியும்படி விரிவாகப்பொருளருளிச்செய்ய; அம்பலவரடியாரெல்லாஞ்சூழவிருந்து—நடேசப்பிரான் அடியார்களெல்லாம் சூழ்ந்திருந்து; இதுசுருதிமொழியெனக்கைதொழுதுகேட்டார்—இதுவேவேதவாக்கியமென்று அஞ்சலியாகக் கைகூப்பிச் சிரவணஞ்செய்தார்கள்.—எ-று. வாழி - அசை. இந்நான்குங்குளகம்.

தாளுடைய திருச்சிலம்பு புலம்பநடம் புரியுந் தன்மையர னுக்கிசைந்த பேர்வழியி னாளு, மாளுடைய பிள்ளையா ரவதரித்த நாளு மவரமுது திருஞான மமுதுசெய்த நாளுந், சூளுடையா திரைநாளாஞ் சித்திரையா திரைநா டொடங்கி யெதிராமாண்டு சித்திரையாதிரையி, னாளுடைய கதைமுடிப்ப மெனக்குன்றை வேந்தர் நடத்தவனை வருமிருந்து கேட்டனர் நாடோறும்.

(இ-ள்.) தாளுடையதிருச்சிலம்புபுலம்ப—திருவடிகளிற்பொருந்திய சிலம்பானது சத்திக்க; நடம்புரியுந்தன்மையரனுக்கிசைந்தபேர்வழியினாளும்—நடனஞ்செய்யும் நடேசப்பிரானது திருநாமத்துக்குரிய திருநாளும்; ஆளுடையபிள்ளையாரவதரித்தநாளும்—திருஞானசம்பந்தசுவாமிகள் திருவவதாரஞ்செய்த திருநாளும்; அவரமுதுதிருஞானமமுதுசெய்தநாளும்—அவர் அமுது ஞானப்பாலுண்டருளிய திருநாளும்: சூளுடையாதிரைநாளாம்—பெருமைபொருந்

தியதிருவாதிரைத் திருநாளாம் ஆதலால்; சித்திரையாதிரைநாடொடங்கி=சீ
கழுஞ் சித்திரைமாதத் திருவாதிரைத் திருநாளில்தொடங்கி; எதிராமாண்டுசித்
திரையாதிரையினுள்=மறுவருடம் சித்திரைமாதம் திருவாதிரைத் திருநாளில்;
உடையகதைமுடிப்பமென=இப்புராணத்தை நிறைவேற்றுவோமென்று; கு
ன்றைவேந்தர்நடத்த=சேக்கிழார் நாயனார் புராணத்தை அரங்கேற்றல்செய்
ய; அனைவருமிருந்துகேட்டனர்நாடோறும்=அடியார்கள் யாவரும் மிகுந்தப
த்தியுடனிருந்து நாடோறுங் கேட்டுக்கொண்டு வந்தனர்.—எ-று. (அ0)

சிறப்புடையர் மூவர்முத லிகடிருவாய் மலர்ந்த திருநெறிய த
மிழ்மூலர் திருமந்திர மாலை, யறப்பயனாங் காரைக்காற் பேயிரட்டை
மாலை யந்தாதி மூத்தபதி கங்கழறிற் றறிவார், மறப்பரிய பொன்வண்
ணத் தந்தாதி திருமும் மணிக்கோவை தெய்வவுலா வையடிகள்வெ
ண்பா, வுறுப்பாகத் திருவிருத்த முடலாகப் பொருட்கோ ளுயிராக
நாலடியா னடந்ததுல கெல்லாம்.

(இ-ள்.) சிறப்புடையமூவர்முதலிகடிருவாய்மலர்ந்த=புகழையுடைய
திருஞானசம்பந்த சுவாமிகள்முதலிய மூவர் முதலிகள் திருவாய்மலர்ந்தரு
ளிய; திருநெறியதமிழ்=திருநெறித் தமிழ்வேதமாகிய திருமுறைகள் ஏழும்;
மூலர்திருமந்திரமாலை=திருமூலர் திருமந்திரமாலை யொன்றும்; அறப்பயனாங்
காரைக்காற்பேயிரட்டைமாலை=தருமத்தின்பயனாகிய காரைக்காலம்மையார்
அருளிச்செய்த இரட்டைமணிமாலை யொன்றும்; அந்தாதிமூத்தபதிகம்=அற்
புதத் திருவந்தாதியொன்றும் மூத்ததிருப்பதிகம் இரண்டும் ஆக நான்குபிரப
ந்தங்களும்; கழறிற்றறிவார்=சேரமான் பெருமாணாயனார் திருவாய்மலர்ந்
தருளிய; மறப்பரியபொன்வண்ணத்தந்தாதி=மறத்தற்கரிய பொன்வண்ணத்த
ந்தாதி யொன்றும்; திருமும்மணிக்கோவை=திருவாரூர் மும்மணிக்கோவை
யொன்றும்; தெய்வவுலா=ஆதியுலா ஒன்றும் ஆகியமூன்று பிரபந்தமும்; ஐய
டிகள்வெண்பா=ஐயடிகள் காடவர்கோன் திருவாய்மலர்ந்தருளிய முத்தித்தி
ருவெண்பாவென்னும் பிரபந்தம் ஒன்றும் ஆகிய இவைகள்; உறுப்பாக=அவ
யவங்களாகவும்; திருவிருத்தமுடலாக=திருவிருத்தங்கள் சரீரமாகவும்; பொ
ருட்கோளுயிராக=அவற்றின் பொருள்கோள் ஆன்மாவாகவும்; நாலடியானட
ந்ததுலகெல்லாம்=நாலடியால் உலகெலாமென்னும் அடியுடைய பிரபந்தம்நட
ந்தது.—எ-று. (அக)

மேற்கூறிய திருமுறைகளில் ஆளுடையபிள்ளையார் முதலாயினோர் சரித
ம் விளக்குதற்குக் கருவியாய்த்திருப்பதிகங்கள் ஆங்காங்குநிற்றலில்உறுப்பாயெ
ன்றும், அவற்றின்பொருள்கள் இப்புராணத்துள் அமைக்கப்படுதலின் உயிரா
யென்றுங்கூறினர். அவற்றின் பொருள்கள் அமைக்கப்படுதல் ஆளுடையபிள்
ளையார்புராணத்துத்தோடுடைய செவியன் என்னுந் திருப்பதிகத்திற்குச் சம்பந்
தம் அமைத்திருத்தலும்திருமுகப்பாசுரத்திற்குப்பொருள் கூறியிருத்தலும் முத
லியன. ஏனையவும் இவ்வாறேகொள்க.

அன்றுமுத னாடோறு நாடோறு மண்ணு லடியரள விறந்தபெ
யர் வந்தவர்க ளெல்லாஞ், சென்னுறையுத் திருமடங்க டிருமடங்க

டோறுந் திருவிளக்கங் கவர்சாத்த வுள்ளுடைமேற் போர்வை, துன்றியசெந் நெலினடிசில் கன்னனறுங் கனிகடுயவறு சுவைக்கறிநெய் தயிர்திரண்ட பாறேற, னன்றுதிருப் பண்ணியந்தண் ணீரமுத மடைக்காய் நரபதியே வலினமைச்சர் நாடோறு நடத்த.

(இ-ள்.) அன்றுமுதனாடோறுநாடோறும்=அன்றுமுதலாகநாள்தோறும் நாள்தோறும்; அண்ணலடியாரளவிறந்தபெயர்வந்தவர்களெல்லாம்=புராணங்கேட்கவந்தஅளவிறந்தசிவனடியார்களெல்லாம்; சென்றுறையத் திருமடங்கள்=ஆங்காங்குச்சென்றுவசித்தற்குத் திருமடங்களும்; மடங்கடோறுந்திருவிளக்கு=அம்மடங்கள்தோறும் விளக்குகளும்; அவர்சாத்தவுள்ளுடைமேற்போர்வை=அவர்கள் தரித்துக்கொள்ளஉள்ளுடைகளும் போர்த்துக்கொள்ளப்போர்வைகளும்; துன்றியசெந்நெலினடிசில்=பொருந்திய சம்பாநெல்லரிசியாலாகியதிருவமுதும்; கன்னனறுங்கனிகடுயவறுசுவைக்கறி=கற்கண்டுஇனியபழவருக்கம் தூய்மையாகிய அறுசுவையோடுகூடிய கறியமுதும்; நெய்தயிர்திரண்டபாறேன்=நறுநெய் கட்டித்தயிர் திரட்டுப்பால் தேன்; நன்றுதிருப்பண்ணியந்தண்ணீரமுதமடைக்காய்=நல்லபணியார வருக்கங்களும் தண்ணீரமுதம் பாக்குவெற்றிலைமுதலிய முகவாசங்களும் ஆகிய இவைகளையெல்லாம்; நரபதியேவலின்=அநபாயசோழன் உத்தரவினால்; அமைச்சர்நாடோறுநடத்த=மந்திரிகள் நாடோறும் நடத்திக்கொண்டுவர.—எ-று. அங்கு - அசை. (௮௨)

நலமலியுந் திருத்தில்லை மன்றினினின் றாடு நடராசற் கன்றுமு தன் மகபூசை நடத்தி, யலகில்புகழ்த் தில்லைவா ழந்தணர்க்கும் வெவ்வே றமுதுபடி கறியமுது முதலான வெல்லா, நலமலிசெங் கோல்வளவன் றப்பாமே நாளு நடத்திவர வரனடியார் நிறைந்துபதஞ் சலியும், புலிமுனியுந் தவஞ்செய்த பெரும்பற்றப் புலியூர் பூலோக சிவலோக மெனப்பொலிந்து தோன்ற.

(இ-ள்.) நலமலியுந்திருத்தில்லை=நன்மைமிகுந்த தில்லைமாநகரத்தின்கணுள்ள; மன்றினினின்றாடுநடராசற்கு=சிற்சபையினிடத்து ஆனந்த நிருத்தஞ்செய்தருளும் நடேசப்பிரானுக்கு; அன்றுமுதன்மகபூசைநடத்தி=அன்றுமுதல் மகாபூசைகளைநடத்தி; அலகில்புகழ்த்தில்லைவாழந்தணர்க்கும்=அளவில்லாதபுகழையுடைய தில்லைவாழந்தணர்களுக்கும்; வெவ்வேறமுதுபடிகறியமுதுமுதலானவெல்லாம்=வெவ்வேறாகத் திருவமுதமைத்தற்கு அமுதுபடி கறியமுதுமுதலிய பொருள்களையெல்லாம்; நலமலிசெங்கோல்வளவன்=மேன்மைபொருந்திய செங்கோலையுடைய அநபாயசோழன்; தப்பாமேநாளுநடத்திவர=தவறாமல் நாடோறும் நடத்திக்கொண்டுவர; அரனடியார்நிறைந்து=சிவனடியார்கள்நிறைந்து; பதஞ்சலியும்புலிமுனியுந்தவஞ்செய்த=பதஞ்சலி முனிவரும் வியாக்கிரபாதமுனிவரும் தவஞ்செய்த; பெரும்பற்றப்புலியூர்=பெரும்பற்றப்புலியூரென்னும்சிதம்பரமானது; பூலோகசிவலோகமெனப்பொலிந்துதோன்ற=பூலோகசிவலோகமென்று சொல்லும்படி பிரகாசிக்க.—எ-று. (௮௩)

மருவுதிரு முறைசேர்ப்பா ரெழுதுவா ரிருந்து வாசிப்பார் பொருளுரைப்பார் கேட்டிருப்பார் மகிழ்ந்து, சிரமசைத்துக் கொண்டாடிக் குதுகலிப்பார் சிரிப்பார் தேனிப்பார் குன்றைமுனி சேக்கிழார் செய்த, வரியதவத் தினைநினைப்பா ரம்பலவர் முன்னா ளடியெடுத்துக் கொடுக்கவிவர் பாடினரென் றுரைப்பார், பெரியபுரா ணங்கேட்ட வளவர்பிரான் செவிக்குப் பிடிக்குமோ வினிச்சிந்தா மணிப்புரட்டென் றுரைப்பார்.

(இ-ள்.) மருவுதிருமுறைசேர்ப்பாரெழுதுவார்=பொருந்தியதிருமுறையெழுதப் புத்தகம் சேர்ப்பவர்களும் எழுதுபவர்களும்; இருந்துவாசிப்பார்பொருளுரைப்பார்=இருந்து அதைவாசிப்பவர்களும் அதற்குப் பொருள்சொல்வோர்களும்; மகிழ்ந்துகேட்டிருப்பார்=அப்பொருளைக் களிப்படைந்து கேட்டுக்கொண்டிருப்பவர்களும்; சிரமசைத்துக்கொண்டாடிக்குதுகலிப்பார்=சிரக்கம்பனஞ்செய்துகொண்டாடி மகிழ்ச்சியடைபவர்களும்; சிரிப்பார்தேனிப்பார்=ஆனந்தத்தினல் நகைகொள்பவர்களும் தேனிக்கின்றவர்களும்; குன்றைமுனிசேக்கிழார்செய்த=குன்றைமுனிஎன்னுஞ் சேக்கிழார் நாயனார்செய்தருளிய; அரியதவத்தினைநினைப்பார்=அருமையாகிய தவத்தைக்குறித்துப் பெரிதாகக்கருதுவோர்களும்; அம்பலவர்முன்னாளடியெடுத்துக்கொடுக்க=நடேசப்பிரான் முன்னாள் முதலடிஎடுத்துக்கொடுக்க; இவர்பாடினரென்றுரைப்பார்=சேக்கிழார்நாயனார் பாடிமுடித்தனரென்று புகழ்பவர்களும்; பெரியபுராணங்கேட்ட=இந்தப்பெரியபுராணத்தைக்கேட்ட; வளவர்பிரான்செவிக்கு=அநபாயசோழன்செவிக்கு; இனிப்பிடிக்குமோசிந்தாமணிப்புரட்டென்றுரைப்பார்=இனி சிந்தாமணியாகிய வெறுங்கதையேற்குமோவென்று சொல்பவர்களுமாய்.—எ-று. (அ௪)

தேனித்தல்-தேன்முதலிய உண்டான்போல் களிப்பால் நாவைச்சுவைத்தல்.

இத்தகைய சிறப்புடனே திருத்தொண்டர் புராண மிருந்தன்பர் பாராட்ட நடந்தெதிரா மாண்டு, சித்திரையா திரைநாளின் முடியவதுகண்டு திருத்தொண்ட ரரவெனும்பே ரொலியெழுந்து பொங்கக், கத்துதிரைக் கடலொலியை விழுங்கிமுழங் கோரேழ் கடலொலியைக் கீழ்ப்படுத்திப் பிரமாண்ட வெளியைப், பொத்தியிமையவர் செவியை நிறைத்துயரப் பொங்கிப் பொன்னுலகுக் கப்பாலும் புகழ்பொலிந்த தன்றே.

(இ-ள்.) இத்தகையசிறப்புடனே=இத்தன்மையாகிய சிறப்புடனே; திருத்தொண்டர்புராணம்=திருத்தொண்டர்புராணத்தை; அன்பரிருந்துபாராட்டநடந்து=அன்பர்களிருந்து பாராட்டுதல்செய்ய அதுநடந்து; எதிராமாண்டுசித்திரையாதிரைநாளில்=மறுவருடம் சித்திரைமாதம் திருவாதிரைத்திருநாளில்; முடியவதுகண்டு=நிறைவேற அதனையறிந்து; திருத்தொண்டர்=சிவனடியார்கள் துதிக்கும்; அரவெனும்பேரொலியெழுந்துபொங்க=அரகரவென்

னும்பேரோசையானது மேலோங்கி அதிசரித்து; கத்துதிரைக்கடலொலியைவிழுங்கி—ஒலிக்காநின்றஅலையையுடைய பெரும்புறக்கடலின் ஒலியையடக்கி; முழங்கோரேழ்கடலொலியைக்கீழ்ப்படுத்தி—சத்திக்கின்ற எழுகடலின்ஒலியையும் அடக்கி; பிரமாண்டவெளியைப்பொத்தி—பிரமாண்டத்தின் இடை வெளியைமூடி; இமையவர்செவியைநிறைத்துயரப்பொங்கி—தேவர்கள் செவியைநிறைத்து மேலே எழுந்து; பொன்னுலகுக்கப்பாலும்புகப்பொலிந்தது—தேவலோகத்துக்கப்பாலும்போ யூடுருவிப்பொலிந்தது.—எ-று. அன்று ஏ-அசை. (௮௫)

திருத்தொண்டர் புராணமெழு தியமுறையை மறையோர் சிவ
மூல மந்திரத்தா லருச்சனைசெய் திறைஞ்சி, யிருக்குமுதன் மறை
நான்கி னின்றுமுத லாக விதுவுமொரு தமிழ்வேத மைந்தாவ தெ
ன்று,கருத்திருத்தி யமுதடைக்காய் நறுந்தூப தீபங்கவரிகுடை கண்
ணாடி யாலத்தி நீறு, பரித்தளவு செயக்கண்டு வளவர்பிரான் முறை
யைப் பசும்பட்டி னற்சூழ்ந்து பொற்கலத்தி லிருத்தி.

(இ-ள்.) திருத்தொண்டர்புராணமெழுதியமுறையை — திருத்தொண்டர்புராணத்தையெழுதிய திருமுறையை; மறையோர்சிவமூலமந்திரத்தாலருச்சனைசெய்திறைஞ்சி—தில்லைவாழந்தணர்கள் மூர்த்திமந்திரத்தாலும் மூலமந்திரத்தாலும் அருச்சனைசெய்துவணங்கி; இருக்குமுதன்மறைநான்கின்—இருக்குமுதலாகிய நான்குவேதங்களுடன்; இன்றுமுதலாகவிதுவுமொருதமிழ்வேதமைந்தாவதென்றுகருத்திருத்தி—இன்றுமுதல் இதுவும் ஐந்தாவதுதமிழ்வேதமென்று கருத்திற்கொண்டு; அமுதடைக்காய்நறுந்தூபதீபம்—திருவமுது தாம்பூலம் நல்லதூபதீபங்கள்; கவரிகுடைகண்ணாடியாலத்திநீறுபரித்து—சாமரை குடைகண்ணாடி ஆலத்தி விபூதி இவைகளையெல்லாம்எடுத்துக்கொண்டு; அளவு செயக்கண்டு—உபசாரஞ்செய்ய அதனைத்தரிசித்துப்பின்;வளவர்பிரான்முறையைப்பசும்பட்டினற்சூழ்ந்துபொற்கலத்திலிருத்தி—அநபாயசோழன் திருமுறையைப் பொற்பட்டினாற் சூழ்வித்துப் பொற்றட்டில் வைத்து.எ-று. (௮௬)

கண்ணாடி குடை முதலியன பூசைக்குரிய சோடசோபசாரங்களுள் ஒன்றாதலின் உடன்கூறினர். மந்திரமென்றதுபிரித்துமுன்னுங் கூட்டப்பட்டது.

செறிமதயா னைச்சிரத்திற் பொற்கலத்தோ டெடுத்துத் திருமு
றையை யிருத்தியபின் சேவையர்கா வலரை, முறைமைபெற வேற்றி
யர சனுங்கூட வேறி முறைமையினு பிணைக்கவரி துணைக்கரத்தால்
வீச, மறைமுழங்க விண்ணவர்கள் கற்பகப்பூ மாரி மழைபொழியத்
திருவீதி வலமாக வரும்போ, திறைவர்திரு வருளைநினைந் தடலரசர்
கோமா னிதுவன்றோ நான்செய்த தவப்பயனென் றிசைத்தான்.

(இ-ள்.) செறிமதயானைச்சிரத்தில்—மதத்தையுடைய பட்டத்துயானையின் பிடரில்; பொற்கலத்தோடெடுத்துத்திருமுறையையிருத்தியபின்—பொற்றட்டுடனெடுத்துத் திருமுறையைவைத்தபின்; முறைமைபெறச் சேவையர்காவலரையேற்றி—முறைமையாகச் சேக்கிழார் நாயனாரை யானையின்மேல் எழு

ந்தருளச்செய்து; அரசனுங்கூடவேறி—தாமும் கூட அதில் ஏறி; மறைமையி னுலிணைக்கவரிதுணைக்கரத்தால்வீச—இது இவர்க்குத் தான்செய்யத்தகும் என்னும் கருத்தோடு தமது இரண்டுகைகளாலும் இரண்டுசாமரைகளைவீச; மறைமுழங்க—வேதங்கள் முழங்கவும்; விண்ணவர்கள்கற்பகப் பூமாரிமழை பொழிய—தேவர்கள் கற்பகமலர்களைப் பெரிய மழையைப்போலப் பொழியவும்; திருவீதிவலமாகவரும்போது—திருவீதியைவலமாக வருங்கால்; இறைவர்திருவருளைநினைந்து—நடேசப்பிரான் திருவருளை நினைந்து; அடலரசர்கோமான்—பெரியஅரசர்பிரானாகிய அநபாயசோழன்; இதுவன்றோநான்செய்ததவப்பயனென்றிசைத்தான்—நான்செய்த தவப்பயன் இதுவல்லவோவென்று ஆனந்தித்துச் சொல்லினன். எ-று. இவ்வாறுங் குளகம். (அஎ)

வாரணத்தி லிவரைவரக் கண்டதிரு வீதி மறுகுதொறுந் தூய்மைசெய்து வாழைகளு நாட்டிப், பூரணகும் பமுமமைத்துப் பொரியுமிகத் தூவிப் பொன்னரிமா லையுநறும்பூ மாலைகளுந் தூக்கித், தோரணங்க ணிரைத்துவிரை நறுந்தூப மேந்திச் சுடர்விளக்கு மேற்றியணி மணிவிளக்கு மேந்தி, யாரணங்கள் விரித்தோதி மாமறையோ ரெதிர்கொண் டறுகெடுப்ப வாழ்த்தெடுத்தா ரரம்பையர்க ளெல்லாம்.

(இ-ள்.) வாரணத்திலிவரைவரக்கண்டதிருவீதிமறுகுதொறும்—சேக்கிழார்நாயனார் அரசனுடன் யானையின்மீது பவனிவரக்கண்ட வீதிகள்தோறும்; தூய்மைசெய்துவாழைகளுநாட்டி—திருவலகிட்டுநீர்தெளித்து வாழைமரங்களையும்நிறுத்தி; பூரணகும்பமுமமைத்து—நிறைகுடங்களையும்வைத்து; பொரியுமிகத்தூவி—பொரிகளையும் அதிகமாக இறைத்து; பொன்னரிமாலையுநறும்பூமாலைகளுந்தூக்கி—பொன்னரிமாலைகளையும் மணமுள்ள மலர்மாலைகளையுந்தொங்கவிட்டு; தோரணங்கணிரைத்து—தோரணங்களையும்வரிசையாகக்கட்டி; விரைநறுந்தூபமேந்தி—வாசனை கமழ்கின்ற நல்லதூபத்தையும்எடுத்து; சுடர்விளக்குமேற்றியணிமணிவிளக்குமேந்தி—ஒளிதரும் தீபங்களும் ஏற்றி அழகியமாணிக்க தீபங்களும்வைத்து; ஆரணங்கள்விரித்தோதி—வேதங்களைவிரிவாக ஓதி; மாமறையோரெதிர்கொண்டறுகெடுப்ப—மறையவர்கள்எதிர்கொண்டுவந்து அறுகினால் ஆலாத்திசெய்ய; வாழ்த்தெடுத்தாரரம்பையர்களெல்லாம்—அரமாதர்கள் மங்களம்பாடினார்கள். எ-று. (அஅ)

வேறு.

காவல னிவர் தவரிவர் காவலர் கவரி யிடத்தகு மோவென் பார், சேவையர் காவல னார்சிவ மான சிறப்பிது நல்ல சிறப்பென் பார், தேவரு மெழுதவொ ணாமறை யைத்தமிழ் செய்து திருப்பதி கம்பாடு, மூவரு மொருமுத லாயுல கத்து முளைத்த முதற்பொரு ளாமென்பார்.

(இ-ள்.) காவலனிவர்தவரிவர்—இவர்அரசர்இவர்தவசி; காவலர்கவரியிடத்தகுமோவென்பார்—அரசர் சாமரைபோடத் தகுமோவென்று சிலர்சொல்லுவார்கள்; சேவையர்காவலனார்சிவமானசிறப்பிது நல்லசிறப்பென்பார்—சேக்



1. சேக்கிழார்சுவாமிகள்.

2. சோழர்பெருமான்.

சேக்கிழார்சுவாமிகள் திருமுறையுடன் சோழர்பெருமான் சாய்மரம்வீச யானைமீதிற் பவனிவந்தது.

கிழார்நாயனார் சிவவேடங்கொண்ட சிறப்பாகிய இது மேம்பட்ட சிறப்பாயிருந்ததென்று சிலர்சொல்லுவார்கள்; தேவருமெழுதவொணுமறையைத்தமிழ்செய்து—தேவரும் எழுதுதற்கரிய வேதத்தைத்தமிழ்செய்து; திருப்பதிகம்பாடுமூவருமொருமுதலாய்—திருப்பதிகம்பாடியருளிய மூவர் முதலிகளும் சேக்கிழார்நாயனாரென ஒருமூர்த்தியாய்; உலகத்துமுளைத்தமுதற்பொருள்என்பார்—இவ்வுலகத்தில் திருவவதாரஞ்செய்த முதன்மையான பொருளேயென்று சிலர் சொல்லுவார்கள். தான்-அசை. (௮௯)

மின்மழை பெய்தது மேக வொழுங்குகள் விண்ணவர் கற்பக விரைசேர்பூ, நன்மழை பெய்தனர் சேவையர் காவலர் நாவல ரின்புற நாவாரச், சொன்மழை பெய்தன ரிரவலர் மிடிகெட வள்ளி முகந்தெதிர் சோளேசன், பொன்மழை பெய்தன னுருகிய நெஞ்சொடு கண்மழை யன்பர் பொழிந்தார்கள்.

(இ-ள்.) மேகவொழுங்குகள்மின்மழைபெய்தது—மேகசாலங்கள் மின்னலுடனே மழைத்துளிகளைப்பெய்தன; விண்ணவர்கற்பகவிரைசேர்பூநன்மழைபெய்தனர்—தேவர்கள் கற்பகதருவின் வாசனைபொருந்திய மலர்மாரி பெய்தனர்; நாவலர்சேவையர்காவலரின்புறநாவாரச்சொன்மழைபெய்தனர்—கவிவாணர்கள் சேக்கிழார்நாயனார் இன்புறும்படி நாவுக்கிசையப்பாடலாகிய மழைபெய்தனர்; சோளேசனிரவலர்மிடிகெடவெதிர்வள்ளிமுகந்துபொன்மழைபெய்தனன்—அநபாயசோழன் யாசகரது வறுமையான கோடை நீங்கும்படி அள்ளியள்ளி எடுத்துப் பொன்மழைபெய்தனன்; அன்பருருகியநெஞ்சொடுகண்மழைபொழிந்தார்கள்—அடியார்கள் உருகிய மனமுடன் ஆனந்தக்கண்ணீர்மழை பெய்தனர்—எ-று. (௯௰)

பொன்மழையென்றதனால் வறுமைகோடையாக உரைக்கப்பட்டது.

மதுர விராமா யணகதை யுரைசெய்த வான்மிக பகவனு மொப்பல்ல, விதிவழி பாரத முரைசெய்து கரைசெய்த வேத வியாதனு மொப்பல்ல,சிதைவற வாயிர நாவுட னறிவுள சேட விசேடனு மொப்பல்ல,பொதிய மலைக்குறு முனிவனு மொப்பல புகழ்புனை குன்றை முனிக்கென்பார்.

(இ-ள்.) புகழ்புனைகுன்றைமுனிக்கு—புகழ்மாலைபூண்ட சேக்கிழார்நாயனாருக்கு; மதுரவிராமாயணகதையுரைசெய்த—மதுரமாகிய இராமாயணகாவியத்தைச்செய்த; வான்மிகபகவனுமொப்பல்ல—வான்மிகமுனிவரும் ஒப்பல்ல; விதிமுறைபாரதமுரைசெய்துகரைசெய்த—கிரமமாகப் பாரதத்தைக் காவியமாகச்செய்து நீதிகளை வரையறுத்த; வேதவியாசரும்ஒப்பல்ல—வேதவியாசமுனிவரும் ஒப்பல்ல; சிதைவறவாயிரநாவுடனறிவுள—பழுதற்ற ஆயிரநாவோடு அறிவின்மேம்பட்ட; சேடவிசேடனும்ஒப்பல்ல—ஆதிசேடனாகிய மகானும் ஒப்பல்ல; பொதியமலைக்குறுமுனிவனுமொப்பல—பொதியமலையில் வீற்றிராநின்ற அகத்தியமுனிவரும் ஒப்பல்ல; என்பார்—என்று சொல்லுவார்கள்.—எ-று. அற்ற என்பது அற என விகாரமாயிற்று. (௯௧)

மெய்யுள சிவசா தனமும் வெளிப்பட வெண்ணீ றெழுதிய கண்ணேறுங், கையுந் திகழ்மணி கண்டமு மொளிதரு கவளிகை யும்புத்தகவேடு, மையுந் திருவுள மழியுந் தொறுமர கரவெனு நாமமு நாமெல்லா, முய்யும் படியருள் கருணையு மழகி தெனத்தொழு தனருலகவரெல்லாம்.

(இ-ள்.) மெய்யுளசிவசாதனமும்—சேக்கிழார்நாயனார் திருமேனியிற் பூண்ட சிவசாதனங்களும்; வெளிப்படவெண்ணீறெழுதியகண்ணேறும்—யாவர்க்குந் தெரியும்படி விபூதிதரித்திருக்கும் காட்சியும்; கையுந்திகழ்மணிகண்டமும்—அஞ்சலியத்தமும் ஒளிவீசுகின்ற உருத்திராக்கமணிந்த கண்டமும்; ஒளிதருகவளிகையும்புத்தகவேடும்—விளக்கமுள்ள புத்தகக்கவளிகையும் புத்தக ஏடும்; மையுந்திருவுளமழியுந்தொறும்—கனிந்த உள்ளமானது உருகுந்தோறும்; அரகரவெனுநாமமும்—அரகரவென்கிற திருநாமமும்; நாமெல்லாமுய்யும்படியருள்கருணையும்—நாமெல்லாம் பிறவித்துயமொற்றத்தினின்றும் பிழைக்கும்படியருளும் கருணைநோக்கமும்; அழகிதெனத்தொழுதன ருலகவரெல்லாம்—அழகுள்ளனவென்று சொல்லி உலகத்தாரெல்லாம் தொழுதனர்.—எ-று. (கஉ)

பூவை மறந்தனள் வெண்டா மரைமயில் புகல்தரு சங்கப் புலவோர்சொற், பாவை மறந்தனள் தேச சுபாடித பயனை மறந்தனள் பதுமத்தோ, னாவை மறந்தனள் பொதிய மலைத்தலை நண்ணிய புண்ணிய முனிவனெனுங், கோவை மறந்தனள் சேவையர் காவல னார்திரு நாவிற் குடிகொண்டாள்.

(இ-ள்.) வெண்டாமரைமயில்—வெள்ளியதாமரையில் வீற்றிருக்கும்மயில்போலுஞ் சாயலையுடைய நாமகள்; பூவைமறந்தனள்—வெண்டாமரைப்பூவை மறந்தனள்; புகல்தருசங்கப்புலவோர்சொற்பாவைமறந்தனள்—புகழும்படியான சங்கத்தார்களுடைய சொல்நிறைந்த காவியங்களை மறந்தனள்; தேசசுபாடிதபயனைமறந்தனள்—தேயத்திலுள்ளோரிடத்து நிகழும் இனிய சொற்திரளின் பொருணயத்தினை மறந்தனள்; பதுமத்தோனாவைமறந்தனள்—பிரமனுடைய நாவை மறந்தனள்; பொதியமலைத்தலைநண்ணிய—பொதியமலையில் வீற்றிருக்கும்; புண்ணியமுனிவனெனுங் கோவைமறந்தனள்—சிவபுண்ணியமிக்க தமிழாசிரியரான அகத்தியமுனிவரை மறந்தனள்; சேவையர்காவலனார்—சேக்கிழார்நாயனாருடைய; திருநாவிற்குடிகொண்டாள்—திருநாவினிடத்துவந்து குடியாயிருந்தனள்.—எ-று. (கங)

இப்படி யிப்படி தன்னில் விதிப்படி யிம்பரு மும்பரு மேனோரு, மப்படி சூழ வரத்திரு வீதி வலஞ்செய் தணைந்தம் பலமுன்றிற், றப்பற யானையி னின்று மிழிந்தர சனுமுறை செறிசே வையர்கோவு, முப்புரி நூன்மறை யோரொ டணைந்தெழு தியமுறை யைத்திரு முன்வைத்தார்.

(இ-ள்.) இப்படியிப்படிதன்னில்விதிப்படி—இவ்வாறு இவ்வுலகத்தின்கண் முறையாக; இம்பருமும்பருமேனோருமப்படிசூழ்வர—மனிதர்களும் தே

வர்களும் மற்றையரும் அத்தன்மையாய்ச் சொல்லித்துதித்துக்கொண்டு சூழ்ந்துவர; திருவீதிவலஞ்செய்தணைந்து—திருவீதியை வலஞ்செய்துவந்து; அம்பலமுன்றிற்றப்பறயானையினின்றுமிழிந்து—சிற்சபையின் திருவாய்தலின்கண் தவறுநிகழாமல் யானையினின்றுமிழிந்து; அரசனுமுனைசெறி சேவையர்கோவும்—அநபாயசோழனும் மேன்மையுள்ள சேக்கிழார்நாயனாரும்; முப்புரிநூன்மறையோரொடணைந்து—முப்புரிநூலணிந்த தில்லைவாழந்தணர்களுடன் உள்ளேசென்று; எழுதியமுறையைத்திருமுன்வைத்தார்—எழுதிய திருமுறையை நடேசர் சந்நிதியின்கண் வைத்தனர்.—எ-று. (கச)

வேறு.

அண்டவாணரெதிர் தெண்டனுகவனை வரும்விழுந்துபி னெழுந்துசீர், கொண்டசேவைகுல திலகருக்கனைவ ருங்குறித்தெதிர் கொடுத்தபேர்,தொண்டர்சீர்பரவு வாரெனப்பெயர் சுமத்திஞானமுடி சூட்டிமுன்,மண்டபத்தினி லிருத்திமற்றவரை வளவர்பூபதிவணங்கினன்.

(இ-ள்.) அண்டவாணரெதிர்—பல்லாயிரகோடி அண்டங்களினும் பரிபூரணராய் நிறைந்துள்ள தேவதேவராகிய நடேசப்பிரான் சந்நிதியில்; தெண்டனுகவனை வரும்விழுந்துபினெழுந்து—அட்டாங்க பஞ்சாங்கமாக யாவரும் வணங்கி எழுந்து; சீர்கொண்டசேவைகுலதிலகருக்கு—சிறப்பமைந்த சேக்கிழார் நாயனாருக்கு; அனைவருங்குறித்தெதிர்கொடுத்தபேர்—யாவரும் கூடிக்கொடுத்த பேராக; தொண்டர்சீர்பரவுவாரெனப்பெயர்சுமத்தி—தொண்டர்சீர்பரவுவாரெனப் பெயர்கொடுத்து; ஞானமுடி.சூட்டி—ஞானமாகிய மகுடத்தைதத்தரித்து; முன்அவரைமண்டபத்தினிலிருத்தி—முற்பட அவரை மண்டபத்தில் எழுந்தருளியிருக்கச்செய்து; வளவர்பூபதிவணங்கினன்—அநபாயசோழன் சேவித்துக்கொண்டனன்.—எ-று. (கரு)

அரசர்க்குப் பட்டங்கொடுத்து முடிசூட்டல்போல இவர்க்குப் பட்டங்கொடுத்துச் சிவஞானச்செல்வரென்று யாவரும் மதிக்கச்செய்தலையே உருவகமாக ஞானமுடிசூட்டியென்றார்.

மூவரோதுதிரு முறைகளேழுதிரு வாதவூரர்முறை யொன்றிசைப், பாவரைந்தமுறை யொன்றுமூலர்முறை யொன்றுபாசுரமதாதியாக், கோவைசெய்தமுறை யொன்றுசேவையர் குலாதிநீதிமுறை யொன்றுடன், பாவைபாகர்திரு வருள்சிறந்தமுறை பன்னிரண்டென வகுத்தபின்.

(இ-ள்.) மூவரோதுதிருமுறைகளேழு—திருஞானசம்பந்தசுவாமிகள்முதலாகிய மூவர் அருளிச்செய்த திருமுறைகள் ஏழு; திருவாதவூரர்முறையொன்று—மாணிக்கவாசகசுவாமிகள் அருளிச்செய்த திருமுறை ஒன்று; இசைப்பாவரைந்தமுறையொன்று—திருவிசைப்பா என்னுந் திருமுறையொன்று; மூலர்முறையொன்று—திருமூலநாயனார் அருளிச்செய்த திருமந்திரமாலையென்னுந் திருமுறையொன்று; பாசுரமதாதியாக்கோவைசெய்தமுறையொன்று—சோமசுந்தரக்கடவுள் திருவாய்மலர்ந்தருளிய திருப்பாசுரமுதலாகச் சேர்க்கப்பட்டுள்ள பிரபந்தத்திருமுறை யொன்று; சேவையர்குலாதிநீதிமுறையொன்றுடன்—சேக்கிழார்நாயனார் அருளிச்செய்த திருத்தொண்டர்புராணமாகிய திருமுறை

யொன்றுடன்; பாவைபாகர்திருவருள்சிறந்தமுறை=உமாதேவிபாகராகிய சிவபிரானது திருவருள் நிறைந்திருக்கும் திருமுறைகள்; பன்னிரண்டெனவகுத்தபின்=பன்னிரண்டாக ஏற்படுத்தியபின்னர்.—எ-று. (௧௬)

ஆளுடையபிள்ளையார் திருமுறை - ௩, ஆளுடையவரசு திருமுறை-௩, ஆளுடையநம்பிகள் திருமுறை - ௧. ஆ ௭-ம், திருவாதவூரடிகள் திருவாசகம் திருச்சிற்றம்பலக்கோவையார் சேர்ந்த திருமுறை - ௧-ம், திருமாளிகைத்தேவர் - கருவூர்த்தேவர் - நம்பிகாடவர்கோன். கண்டராதித்தர் - வேணாட்டடிகள் - திருவாலியமுதனார் - புருடோத்தமர் - சேதிராயராகிய இவ்வெண்மர் அருளிச்செய்த திருவிசைப்பாத் திருப்பதிகங்களிருபத்தெட்டும், சேந்தனாருளிச்செய்த திருப்பல்லாண்டு ஒன்றும் ஆக ௨௯-ம் சேர்ந்த திருமுறை-௧-ம், திருமூலர் ஆண்டுக்கொரு திருமந்திரமாக மூவாயிரம்ஆண்டளவும் அருளிச்செய்த திருமந்திரமாலைத்திருமுறை-௧-ம், திருவாலவாயுடையார் சேரமான்பெருமாணாயனாருக்கு அருளிச்செய்த திருமுகப்பாசுரம். காரைக்காலம்மையார் அருளிச்செய்த திருவாலங்காட்டு மூத்ததிருப்பதிகம் இரண்டு, திருவிரட்டைமணிமாலை, அற்புதத்திருவந்தாதி. ஐயடிகள்காடவர்கோன்நாயனார் அருளிச்செய்த திருவெண்பா. சேரமான்பெருமாணாயனார் அருளிச்செய்த பொன்வண்ணத்தந்தாதி, திருவாரூர் மும்மணிக்கோவை, திருக்கயிலாய ஞானவுலா. நக்கீரதேவர் அருளிச்செய்த கைலைபாதி காளத்திபாதி யந்தாதி, திருவீங்கோய்மலை யெழுபது, திருவலஞ்சுழி மும்மணிக்கோவை, திருவெழுகூற்றிருக்கை, பெருந்தேவபாணி, கோபப்பிரசாதம், காரெட்டு, போற்றித்திருவகவல், திருமுருகாற்றுப்படை, திருக்கண்ணப்பதேவர் திருமறம். கல்லாடனார் அருளிச்செய்த திருக்கண்ணப்பதேவர் திருமறம். கபிலதேவர் அருளிச்செய்த மூத்தநாயனார் திருவிரட்டைமணிமாலை, சிவபெருமான் திருவிரட்டைமணிமாலை, சிவபெருமான் திருவந்தாதி. பரணதேவர் அருளிச்செய்த சிவபெருமான் திருவந்தாதி. இளம்பெருமானடிகள் அருளிச்செய்த சிவபெருமான் திருமும்மணிக்கோவை. அதிராவடிகள் அருளிச்செய்த மூத்தபிள்ளையார் திருமும்மணிக்கோவை. பட்டணத்துப்பிள்ளையார் அருளிச்செய்த கோயினான்மணிமாலை, திருக்கழுமலமும்மணிக்கோவை, திருவிடைமருதூர் மும்மணிக்கோவை, திருவேகம்பமுடையார் திருவந்தாதி, திருவொற்றியூர்த்தொகை. நம்பியாண்டார்நம்பி அருளிச்செய்த திருநாரையூர்ப் பொல்லாப்பிள்ளையார் திருவிரட்டைமணிமாலை, கோயிற்பண்ணியர்விருத்தம், திருத்தொண்டர் திருவந்தாதி, ஆளுடையபிள்ளையார் திருவந்தாதி, திருச்சண்பைவிருத்தம், திருமும்மணிக்கோவை, திருவுலாமாலை, திருக்கலம்பகம், திருத்தொகை, திருநாவுக்கரசுதேவர் திருவேகாதசமாலை, ஆக பிரபந்தங்கள் ௪௰-ம் சேர்ந்த திருமுறை - ௧-ம் ஆகிய பதினொன்றுடன் திருத்தொண்டர் புராணமென்னும் பெரியபுராணம் ஒன்றும் சேர்த்துப் பன்னிரண்டு திருமுறையாக வகுத்தனரென்க.

தோடுசெய்ததிரு நெறியசெந்தமிழொ டொக்குமென்றுரை
தொடர்ந்துசெப், பேடுசெய்துநட ராசர்சந்நிதியி லேற்றினார்களிது
பர்விசூழ், நாடுசெய்ததவ நீடுகுன்றைவள நகரிசெய்ததவ நிகரிலாப்,
பீடுசெய்தபகி ரதிகுலத்திலகர் சேக்கிழார்செய்த பெருந்தவம்.



சேக்கிழார்சுவாமிகளுக்கு ஞானமுடிசூட்டி சோழர்வணங்கி இவர்தன்மை இவ்வாறாயிற்றென்று அவர் தம்பி பாலறாவாயனை வருவித்து தொண்டைமானெனப் பெயர்தந்து இதுமுதல் இவரே மந்திரியென்று புகல பின்பு அவர்களுக்குத் தொண்டைமண்டலவசாகத பெருமானென்று பெயருண்டாயிற்று.

1. சேக்கிழார்சுவாமிகள். 2. சோழர் 3. அவர் தம்பி பாலறாவாயனை

(இ-ள்.) தோடுசெய்ததிருநெறியசெந்தமிழொடொக்குமென்று—தோடுடைய செவியனென்று ஆளுடையபிள்ளையார் முற்பாசுரமெடுத்தோதியருளிய தேவாரத்திருமுறையோடு இஃதும் ஒப்பாகுமென்று; உரைதொடர்ந்துசெப்பேடுசெய்து—யாவரும் எடுத்துக்கூறி செப்பேட்டிலெழுதி; நடராசர்சந்நிதியிலேற்றினார்கள்—நடேசப்பிரான் சந்நிதியில் வைத்தார்கள்; இதுபாலிசூழ்நாடுசெய்ததவம்—இவ்வாறுசெய்தது பாலாறுசூழ்ந்த தொண்டைநாடுசெய்த தவம்; வளநீடுகுன்றைநகரிசெய்ததவம்—வளமிக்க குன்றத்தூரென்னும் நகரம் செய்த தவம்; நிகரிலாப்பீடுசெய்தபகிரதிகுலத்திலகர்—ஒப்பில்லாத பெருமை பொருந்திய கங்கைகுலதிலகராகிய; சேக்கிழார்செய்தபெருந்தவம்—சேக்கிழார் மரபினர்செய்த பெரியதவம்.—எ-று. (கஎ)

ஆயவேலையன பாயனிந்நிலைமை யாதலாலனுசர் பாலரு
வாயரெங்குள ரெனப்பணிந்திரு மருங்குநின்றவர் விளம்புவார்
தூயகுன்றைநகர் மீதுதம்பெயர் துலங்கவோர்குள மமைத்தபி
னேயநாகைய ரனார்திருப்பணி யியற்றியவ்விடை யிருந்தனர்.

(இ-ள்.) ஆயவேலையநபாயன்—அப்பொழுது அநபாயசோழன்; இந்நிலைமையானதால்—சேக்கிழார்நாயனார் தன்மை இவ்வாறு தவவேடம்பூண்டு சிவஞானச்செல்வராயிருத்தலால்; அநுசர்பாலறுவாயரெங்குளரென—இவர்க்கிளைஞராகிய பாலறுவாய ரெங்கிருக்கின்றனரென வினவ; இருமருங்குநின்றவர் பணிந்துவிளம்புவார்—இருபக்கத்திலுமிருந்தவர்கள் வணங்கிச் சொல்லுவார்கள்; தூயகுன்றைநகர்மீதுதம்பெயர்துலங்க—மேன்மைமிக்க குன்றத்தூரில் தமதுபெயர் விளங்கும்படி; ஓர்குளமமைத்தபின்—பாலறுவாயன் கேணியென்று ஒருதடாகம் அமைத்தபின்பு; ஏயநாகையரனார்—பொருந்தும்படி திருநாகேச்சுரத்து; திருப்பணியியற்றியவ்விடையிருந்தனர்—* ஆலயத்திருப்பணியுஞ் செய்துகொண்டு அவ்விடத்திலிருக்கின்றனர்.—எ-று. (கஅ)

என்றுசொல்லவவர் தமையழைத்தரச னிவரமைச்சரிவர் பட்டமு, மன்றன்மாலைபுனை தொண்டைமானென வகுத்தபின்றமது மண்டல, மன்றுவற்பம்வர வந்தடைந்தவரை யாற்றல்செய்துதொண்டை மண்டல, நின்றுகாத்தபெரு மானெனத்தமது பெயரையெங்கணு நிறுத்தினார்.

(இ-ள்.) என்றுசொல்லவரசனவர்தமையழைத்து—என்றுசொல்ல அநபாயசோழன் அவரை வரவழைத்து; இவரமைச்சரிவர்பட்டமுமன்றன்மாலைபுனைதொண்டைமானெனவகுத்தபின்—(இதுமுதல்) இவரேமந்திரி இவருக்குப் பட்டப்பெயரும் நறுமணங்கமழும் மாலையணிந்த தொண்டைமானென்று சொல்லியபின்பு; தமதுமண்டலமன்றுவற்பம்வர—தமது தொண்டைநாட்டில் அக்காலத்தில் கருப்புவர; வந்தடைந்தவரையாற்றல்செய்து—அங்கிருந்துவந்து சேர்ந்தவர்களையெல்லாம் ஆதரணைசெய்து; தொண்டைமண்டலநின்றுகாத்தபெருமானென—தொண்டைமண்டலங்காத்த பெருமானென; தமதுபெயரையெங்கணுநிறுத்தினார்—தமதுபெயரை எட்டுத்திக்கிலும் நிலைநிறுத்தினர்.—எ-று.

இவ்விரண்டுங்குளகம்.

---

* அவ்வாலயம் முன் அங்குச் சேக்கிழார்நாயனார் பிரதிட்டைசெய்ததென்க.

தொண்டர்சீர்பரவு சேக்கிழார்குரிசி றூயதில்லைநகர் தன்னிலே
பண்டுமூவர்பதி கத்துவந்தவறு பத்துமூவர்கதை தனையுணர்ந்
தண்டவாணரடி யார்களுடன்மு டருந்தவந்தனி லிருந்துபி
னிண்டைவைத்தசடை யம்பலத்தவ ரெடுத்தபாதநிழ லெய்தினார்.

(இ-ள்.) தொண்டர்சீர்பரவுசேக்கிழார்குரிசில்—அடியார்கள் சிறப்பினைத் துதிசெய்த சேக்கிழார்நாயனார்; தூயதில்லைநகர்தன்னில்—தூய்மையாகிய தில்லைமாநகரத்தில்; பண்டுமூவர்பதிகத்துவந்த—பழமையான மூவர்களுடைய திருப்பதிகத்திற்சொல்லிய; அறுபத்துமூவர்கதைதனையுணர்ந்து—அறுபத்துமூவர் சரித்திரத்தைத் தியானஞ்செய்துகொண்டு; அண்டவாணரடியார்களுடன்—சிவனடியார்களுடன்; அருந்தவந்தனிலிருந்துபின்—அருமையாகிய தவத்திலிருந்து பிறகு; இண்டைவைத்தசடையம்பலத்தவர்—இண்டைமாலையைத்தரித்த நடேசப்பிரான்; எடுத்தபாதநிழலெய்தினார்—குஞ்சிதபாத நிழலிலடைந்தனர்.—எ-று. ஏ-அசை. (௧௦௦)

வாழிதில்லைமணி மன்றுளென்றுநட மாடுமங்கணர் மலர்ப்பதம்
வாழிகாழிநகர் வாழவந்ததிரு நெறியராதிபதி வள்ளறாள்
வாழியன்பர்திரு நீறுமிட்டதிரு முண்டமுந்துவய கவசமும்
வாழிகுன்றைமுனி சேவையாதிதிரு வாய்மலர்ந்தருள் புராணமே.

(இ-ள்.) தில்லைமணிமன்றுளென்றுநடமாடும்—தில்லையின்கண் அழகிய சிற்சபையினிடத்துச் சதா நடனஞ்செய்தருளும்; அங்கணர்மலர்ப்பதம்வாழி—நடேசப்பிரான் மலர்த்திருவடிகள் வாழ்க; காழிநகர்வாழவந்த—சீகாழியானது வாழும்படி திருவவதாரஞ்செய்தருளிய; திருநெறியராதிபதிவள்ளல்தாள்வாழி—திருநெறித்தலைவராகிய திருஞானசம்பந்தசுவாமிகள் முதலாகப் பதித்தன்மையடைந்த அடியார்களது திருவடிகள் வாழ்க; அன்பரிட்டதிருநீறுந்திருமுண்டமும்—அடியார்க்குரிய விபூதியும் திரிபுண்டரமும்; துவயகவசமும்வாழி—உத்தூளனம் உருத்திராக்கமும் வாழ்க; குன்றைமுனிசேவையாதி—குன்றத்தூரில் அவதரித்துள்ள சேக்கிழார்நாயனார்; திருவாய்மலர்ந்தருள்புராணம்வாழி—திருவாய்மலர்ந்தருளிய திருத்தொண்டர்புராணம் வாழ்க.—எ-று. ()
ஏ - அசை.

தேசிலங்குமுகில் குன்றையாதிபதி தொண்டர்சீர்பரவு சேக்கிழார்
வாசலன்றுமுத லின்றுகாறுமினி மேலும்வாழையடி வாழையாய்
வீசுதென்றன்மணி மண்டபத்தரசு வீற்றிருக்குமுடி மன்னருக்
கீசனன்பர்கள் புராணமுஞ்சொலி யமைச்சுமாகிநல மெய்துமால்.

(இ-ள்.) தேசிலங்குமுகில்குன்றையாதிபதி—ஒளியுடனே விளங்குகின்ற கவிமேகமாகிய குன்றைநகர்த்தலைவரான; தொண்டர்சீர்பரவுசேக்கிழார்வாசல்—அடியார்கள் சிறப்பினைப்பாடியருளிய சேக்கிழார்நாயனார் மரபு; அன்றுமுதலின்றுகாறுமினிமேலும்—அந்நாள்முதல் இந்நாள்வரையும் இனிமேலும்; வாழையடிவாழையாய்—வாழையடிவாழையாயோங்க; தென்றல்வீசுமணிமண்டபத்து—தென்றற்காற்று வீசும்படி இரத்தினமண்டபத்தில்; அரசுவீற்றிருக்குமுடிமன்னருக்கு—வீற்றிருக்கின்றசோழர்களுக்கு; ஈசனன்பர்கள்புராணமுஞ்சொலி—திருத்தொண்டர்புராணமுஞ்சொல்லிக்கொண்டு; அமைச்சுமாகிநலமெய்தும்—மந்திரிகளுமாகி நன்மைபெற்றிருக்கும்.—எ-று. ஆல்-அசை.(௧௦௨)

அண்டவாணர்தொழு தில்லையம்பலவ ரடியெடுத்துலகெ லாமெனத்
தொண்டர்சீர்பரவு சேக்கிழான்வரிசை துன்றுகுன்றைநக ராதிபன்
றண்டகாதிபதி திருநெறித்தலைமை தங்குசெங்கைமுகில் பைங்கழற்
புண்டரீகமலர் தெண்டனிட்டுவினை போக்குவார்பிறவி நீக்குவார்.

(இ-ள்.) அண்டவாணர்தொழுதில்லையம்பலவர்—தேவர்கள் யாவருந் தொழுகின்ற நடேசப்பிரான்; உலகெலாமெனஅடியெடுத்து—உலகெலாமென்று முதலடியெடுத்துக் கொடுத்தவாற்றால்; தொண்டர்சீர்பரவுசேக்கிழான்—அடியார்கள் சிறப்பினைத்துதிசெய்த சேக்கிழாரென்பவரும்; வரிசைதுன்றுகுன்றைநகராதிபன்—சிறப்புமிக்க குன்றைநகருக்கதிபரும்; தண்டகாதிபதி—தண்டகநாட்டுத் தலைவருமாகிய; திருநெறித்தலைமைதங்கு—திருநெறித்தலைமை நிலைபெற்ற; செங்கைமுகில்பைங்கழற்புண்டரீகமலர்—வள்ளன்மைமிக்க மேகத்தையொத்த அருண்மொழித்தேவரது திருவடித்தாமரைகளுக்கு; தெண்டனிட்டுவினைபோக்குவார்பிறவிநீக்குவார்—தெண்டனிட்டு தீவினைகளை நீக்கிக்கொள்கின்றவர்களே பிறவியையும் நீக்கிக்கொள்பவராவர்.—எ-று. (கOரு)

வேறு.

## சிறப்புப்பாயிரம்.

திருக்கிளருங் கயிலைமலைக் காவல்பூண்ட செல்வமலி திருநந்தி மரபில்வந்து, கருக்குழியி லெமைவீழா தெடுத்தாட்கொள்ளுங் கருணைமிகு மெய்கண்ட தேவர்தூய, மருக்கிளர்தாள் பரவுமரு ணந்திதேவர் மகிழுமறை ஞானதே வருக்கன்பாகி, யிருக்குமுமா பதிதேவர் சேக்கிழார்த மிசைப்புரா ணம்முரைத்தா ரென்பமாதோ.

(இ-ள்.) திருக்கிளருங்கயிலைமலைக்காவல்பூண்ட—முத்திச்செல்வம் விளங்குகின்ற திருக்கயிலாயத்தைக் காவல்செய்யும்; செல்வமலிதிருநந்திமரபில்வந்து—அதிகாரமிக்க நந்திதேவர் பரம்பரையில் அவதாரஞ்செய்து; கருக்குழியிலெமைவீழாதெடுத்தாட்கொள்ளும்—பிறவிக்குழியில் வீழாவண்ணம் அடியோங்களை எடுத்தாட்கொள்ளும்; கருணைமிகுமெய்கண்டதேவர்—கிருபைமிகுந்த மெய்கண்டதேவரது; தூயமருக்கிளர்தாள்பரவுமருணந்திதேவர்மகிழும்—தூய்மையாகிய வாசனைமிக்க திருவடியைத்துதிக்கும் அருணந்திதேவர் மகிழும்படியான; மறைஞானதேவருக்கன்பாகியிருக்குமுமாபதிதேவர்—மறைஞானசம்பந்த சிவாசாரியருக்கு அன்பாய் வீற்றிருக்கும் உமாபதிசிவாசாரியர்; சேக்கிழார்தமிசைப்புராணமுரைத்தாரென்ப—சேக்கிழார்நாயனார் திருவாய்மலர்ந்தருளிய திருத்தொண்டர் புராணவரலாற்றை விரித்துச்சொல்லினர் என்று சொல்லுவார்கள்.—எ-று. மாதூ-ஓ-அசை. (கOச)

மரபென்றது ஈண்டு உபதேசபரம்பரையை.

சந்தானசாரியர் நால்வருளொருவராகிய உமாபதிசிவாசாரியர்

அருளிச்செய்த

## சேக்கிழார்நாயனார்புராணம்என்னும்

## திருத்தொண்டர்புராணவரலாறு முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கOச.

*எ*

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# நம்பியாண்டார் நம்பி
## கலித்துறைத்திருவந்தாதி.

### துதிகவி.

பொன்னி வடகரை சேர்நாரை யூரிற் புழைக்கைமுக
மன்ன னறுபத்து மூவர் பதிதே மரபுசெயல்
பன்னவத் தொண்டத் தொகைவகை பல்குமந் தாதிதனைச்
சொன்ன மறைக்குல நம்பிபொற் பாதத் துணைதுணையே.

(இ-ள்.) பொன்னிவடகரைசேர்நாரையூரில்=காவிரியின் வடகரையினுள்ள திருநாரையூரில் வீற்றிருந்தருளும்; புழைக்கைமுகமன்னன்=யானைமுகத்தையுடைய பொல்லாப்பிள்ளையார்; அறுபத்துமூவர்பதிதேமரபுசெயல்பன்ன=அறுபத்துமூன்றுநாயன்மார்களுடைய ஊரையும் தேசத்தையும் குலத்தையும் திருத்தொண்டையும் அருளிச்செய்ய; அத்தொண்டத்தொகைவகைபல்குமந்தாதிதனை=சிவபிரான் அடியெடுத்துக்கொடுக்க நம்பியாரூரர் பாடியருளும் அச்சிறப்பினையுடைய திருத்தொண்டத்தொகைக்கு வகையாகவிளங்கும் இக்கலித்துறைத்திருவந்தாதியை;சொன்னமறைக்குலநம்பி=பாடியருளிய மறையவர்குலத்து அவதரித்த நம்பியாண்டார்நம்பியினது;பொற்பாதத்துணைதுணை=அழகிய இரண்டு திருவடிகளும் எமக்குப் பிறவிநோயை நீக்குதற்குத்துணையாம்.—எ-று. ஏ-அசை.

### தில்லைவாழந்தணர்.

செப்பத் தகுபுகழ்த் தில்லைப் பதியிற் செழுமறையோ
ரொப்பப் புவனங்கண் மூன்றினு மும்பரி னூரெரித்த
அப்பர்க் கமுதத் திருநடர்க் கந்திப் பிறையணிந்த
துப்பர்க் குரிமைத் தொழில்புரி வோர்தமைச் சொல்லுதுமே.

(இ-ள்.) செப்பத்தகுபுகழ்த்தில்லைப்பதியிற்செழுமறையோர்=யாவரும் எடுத்துக்கூறும் கீர்த்தியையுடைய திருத்தில்லையின்கண்வாழும் செப்பமான மறையவர்களாகிய; ஒப்பப்புவனங்கண்மூன்றினும்=மூவுலகத்தாரும் கொண்டாடும்படி; உம்பரினூரெரித்தஅப்பர்க்கு=விண்ணின்கண் சஞ்சரிக்கும் முப்புரத்தையும் எரித்தருளிய முதல்வரும்; அமுதத்திருநடர்க்கு=ஆனந்தநிருத்தஞ் செய்தருள்வாரும் ஆகிய; அந்திப்பிறையணிந்ததுப்பர்க்கு=மாலைக்காலத்துதிக்கும் இளம்பிறையைத் திருமுடியிற்சூடிய பவளவண்ணத்தையுடைய சிவபிரானுக்கு; உரிமைத்தொழில்புரிவோர்தமைச்சொல்லுதும்=உரிமைத்தொண்டைச்செய்யும் தில்லைமூவாயிரவரையும் யாம் நாவால் நாள்தோறும் வழுத்துதும்.—எ-று. ஏ - அசை. (க)

## திருநீலகண்டநாயனார்.

சொல்லச் சிவன்றிரு வாணைதன் றூமொழி தோணசையா
லொல்லைத் துறந்துரு மூத்ததற் பின்னுமை கோனருளால்
வில்லைப் புரைநுத லாளோ டிளமைபெற் றின்பமிக்கான்
றில்லைத் திருநீல கண்டக் குயவனுஞ் செய்தவனே.

(இ-ள்.) சொல்லச்சிவன்றிருவாணைதன்றூமொழிதோணசையால்=தின்மனைவியார் தோளைத் தான் விரும்பினமையால் சிவபிரான் திருவாணையை அவர் எடுத்துக்கூற; ஒல்லைத்துறந்துருமூத்ததற்பின்=விரைவாக அம்மனையாரின்பத்தையுந்துறந்து உடம்பு மூப்படைந்த பின்பு; உமைகோனருளால்=சிவபிரான் திருவருளினால்; வில்லைப்புரைநுதலாளோடிளமைபெற்றின்பமிக்கான்=விற்போலும் நெற்றியையுடைய அம்மனையாளோடு சிவபதத்தில் என்றும் நீங்கா இளமையை அடைந்து இன்பமுற்றவர் யாரெனில்; தில்லைத்திருநீலகண்டக்குயவனுஞ்செய்தவன்; திருத்தில்லைக்கண் அவதரித்த திருநீலகண்டக்குயவனென்னும் தவமுடையோர்.—எ-று. ஏ-அசை. (உ)

## இயற்பகைநாயனார்.

செய்தவர் வேண்டிய தியாதுங் கொடுப்பச் சிவன்றவனுய்க்
கைதவம் பேசிநின் காதலி யைத்தரு கென்றலுமே
மைதிகழ் கண்ணியை யீந்தவன் வாய்ந்த பெரும்புகழ்வந்
தெய்திய காவிரிப் பூம்பட் டினத்து ளியற்பகையே.

(இ-ள்.) செய்தவர்வேண்டிய தியாதுங்கொடுப்ப=சிவனடியார்கள் விரும்பிய பொருள்கள் யாதேனும் மறாது கொடுத்திருக்குங்காலத்து; சிவன்றவனுய்க்கைதவம்பேசி=சிவபிரான் ஓர் அடியராய் வேடங்கொண்டு வஞ்சமாற்றங்கூறி; நின்காதலியைத்தருகென்றலும்=உன் மனையாளைக் கொடு என்று கேட்கவும்; மைதிகழ்கண்ணியையீந்தவன்=தன்மனையாளைக் கொடுத்தவன் யாரெனில்; வாய்ந்தபெரும்புகழ்வந்தெய்திய=வாய்ப்பான பெரிய புகழடையப்பெற்ற; காவிரிப்பூம்பட்டினத்துளியற்பகை=காவிரிப்பூம்பட்டினத்துள் வாழ்ந்த இயற்பகைநாயனார்.—எ-று. ஏ-இரண்டும்-அசை. (ங)

தருக என்றது தருகென ஈறுகுறைந்து நின்றது.

## இளையான்குடிமாறநாயனார்.

இயலா விடைச்சென்ற மாதவர்க் கின்னமு தாவிதைத்த
வயலார் முளைவித் துவாரி மனையலக் கால்வறுத்துச்
செயலார் பயிர்விழுத் தீங்கறி யாக்கு மவன்செழுநீர்க்
கயலா ரிளையான் குடியுடை மாறனெங் கற்பகமே.

(இ-ள்.) இயலாவிடைச்சென்றமாதவர்க்கு=வறுமையுற்றகாலத்துத் தம்மிடத்து உணவுவிரும்பிவந்த அடியாருக்கு; இன்னமுதாவிதைத்தவயலார்முளைவித்துவாரி=இனிய திருவமுதாக வயலில் பகல் விதைத்த நாற்றுவிளாயை வாரிக்கொண்டுவந்து; மனையலக்கால்வறுத்து=தம்மனையிலுள்ள வரிச்சினால் தீயுண்டாக்கி வறுத்து; செயலார்பயிர்விழுத் தீங்கறியாக்குமவன்=தொழில

மைந்த புன்செய்ப்பயிர்களை மேலான மதுரமுள்ள கறியாகச்சமைத்தவர் யாரெனில்; செழுநீர்க்கயலாரிளையான் குடியுடைமாறனெங்கற்பகம்=செழுமையான நீரின்கண் கயல்மீன்கள் வாழும் இளையான்குடி என்னும் ஊரையுடைய மாறநாயனுரென்னும் எனக்குக் கற்பகம்போல்வார்.—எ-று. ஏ-அசை. (ச)

## மெய்ப்பொருணயனுர்.

கற்றநன் மெய்த்தவன் போலொரு பொய்த்தவன் காய்சினத்தாற்
செற்றவன் றன்னை யவனைச் செறப்புக லுந்திருவாய்
மற்றவன் றத்தா நமரே யெனச்சொல்லி வானுலகம்
பெற்றவன் சேதிபன் மெய்ப்பொரு ளாமென்று பேசுவரே.

(இ-ள்.) கற்றநன்மெய்த்தவன்போலொருபொய்த்தவன்=வீட்டுநூலை ஓதிய நல்ல மெய்த்தவனைப்போல ஒரு பொய்வேடமுடையனுய்; காய்சினத்தாற்செற்றவன்றன்னை=கடிய கோபத்தாற் றன்னைக்கொன்ற; அவனைச்செறப்புகலும்=அம்முத்தநாதனை (வாயிலாளன்) கொல்லப்புகுங்கால்; திருவாய்மற்றவன்றத்தா நமரேயெனச்சொல்லி=திருவாயினல் அப்பொய்வேடமுடையானைத் தத்தனே நமரென்று கூறி; வானுலகம்பெற்றவன்=சிவபதத்தையடைந்தவர் யாரெனில்; சேதிபன்=சேதிநாட்டுக்கரசராகிய; மெய்ப்பொருளாமென்று பேசுவர்=மெய்ப்பொருணயனுரென்று அறிஞர் கூறுவர்.—எ-று. (ரு)
ஏ - அசை.

## விறன்மிண்டநாயனுர்.

பேசும் பெருமையவ் வாரூ ரனையும் பிரானவனு
மீசன் றனையும் புறகுதட் டென்றவ் வீசனுக்கே
நேச னெனக்கும் பிரான்மனைக் கேபுக நீடுதென்றல்
வீசும் பொழிற்றிருச் செங்குன்ற மேய விறன்மிண்டனே.

(இ-ள்.) பேசும்பெருமையவ்வாரூரனையும்=யாவராலும் எடுத்துக்கூறும் பெருமையையுடைய அந்நம்பியாரூரனையும்; பிரானவனுமீசன்றனையும்புறகுதட்டென்றவன்=அவரைத் தடுத்தாண்ட முதல்வராகிய சிவபிரானையும் அடியார்க்குப் புறம்புசெய்யென்று கூறினவரும்; ஈசனுக்குநேசனெனக்கும்பிரான்=அச்சிவபிரானுக்கு அன்பரும் அடியேனுக்கும் பிரானுயுள்ளவரும் யாரெனில்; மனைக்குப்புகநீடுதென்றல்வீசும்பொழில்=மனையிடத்துப் புகும்படி மிக்க தென்றற்காற்றுவீசும் சோலைசூழ்ந்த; திருச்செங்குன்றமேயவிறன்மிண்டன்=திருச்செங்குன்றூரில் அவதரித்த விறன்மிண்டநாயனுர்.—எ-று.ஏ -மூன்றும்-அசை.

## அமர்நீதிநாயனுர்.

மிண்டும் பொழிற்பழை யாறை யமர்நீதி வெண்பொடியின்
முண்டந் தரித்த பிராற்குநல் லூரின்முன் கோவணநேர்
கொண்டிங் கருளென்று தன்பெருஞ் செல்வமுந் தன்னையுந்தன்
றுண்ட மதிநுத லாளையு மீந்த தொழிலினனே.

(இ-ள்.) மிண்டும்பொழிற்பழையாறையமர்நீதி=நெருங்கிய சோலைசூழ்ந்த பழையாறையென்னும் ஊரில் அவதரித்த அமர்நீதிநாயனுர்; வெண்பொடியின்முண்டந்தரித்தபிரார்கு=வெள்ளிய திருநீற்றுத் திரிபுண்டரமணிந்த சி

வபிரானுக்கு; நல்லூரின்முன்கோவண நேர்கொண்டிங்கருளென்று=திருநல்லூரின்கண் நீர் முன் என்னிடத்துவைத்த கோவணத்துக்கு நேராக நிறையுள்ள கோவணத்தை இங்கு வாங்கிக்கொண்டருளுமென்று; தன்பெருஞ்செல்வமுந்தன்னையும்=தன் பெருஞ்செல்வத்தையும் தன்னையும்; தன்றுண்டமதிநுதலாளையும்=தன்னுடைய கீற்றுமதிபோலும் நெற்றியையுடைய தன் மனையாளையும்; ஈந்ததொழிலினன்=அக்கோவணத்திற்கிடையாக நிறுத்துக்கொடுத்த தொழிலையுடையவர்.—எ-று. ஏ-அசை. (௭)

## சுந்தரமூர்த்திசுவாமிகள் துதி.

தொழுதும் வணங்கிய மாலயன் றேடருஞ் சோதிசென்றங்
கெழுதுந் தமிழ்ப்பழ வாவணங் காட்டி யெனக்குன்குடி
முழுது மடிமைவந் தாட்செ யெனப்பெற்ற வன்முரறே
னொழுகு மலரினற் றொம் பிரானம்பி யாரூரனே.

(இ-ள்.) தொழுதும்வணங்கியு மாலயன்றேடருஞ் சோதிசென்றங்கு=கையாற்றொழுதும் சாட்டாங்கமாய் நிலமுறவணங்கியும் திருமாலும் பிரமனும் தேடுதற்கரிய சிவபிரான் அத்திருமணத்தில் எழுந்தருளி; எழுதுந்தமிழ்ப்பழவாவணங்காட்டி=தமிழால் முன் எழுதப்படும் பழைய அடிமையோலையைக் காட்டி; எனக்குன்குடிமுழுதுமடிமை=எனக்கு உன் தாதை மூதாதை முதலியோரும் நீயும் அடிமை; வந்தாட்செயெனப்பெற்றவன்=வந்து அடிமை செய் என்று தடுத்தாட்கொள்ளப்பெற்றவர் யாரெனில்; முரறேனொழுகுமலரினற்றொம்பிரானம்பியாரூரன்=ஒலிக்கின்ற தேன்வண்டுகள் சஞ்சரிக்கும் நல்ல மலர்மாலையையணிந்த எமது முதல்வராகிய நம்பியாரூரர்.—எ-று.ஏ-அசை.

## எறிபத்தநாயனர்.

ஊர்மதின் மூன்றட்ட வுத்தமர்க் கென்றொ ருயர்தவத்தோன்
றார்மலர் கொய்யா வருபவன் றண்டின் மலர்பறித்த
வூர்மலை மேற்கொளும் பாக ருடறுணி யாக்குமவ
னேர்மலி மாமதில் சூழ்கரு வூரி லெறிபத்தனே.

(இ-ள்.) ஊர்மதின்மூன்றட்டவுத்தமர்க்கென்று=வானின்கண் திரிகின்ற முப்புரங்களை எரித்தருளிய சிவபிரானுக்கென்று; ஒருயர்தவத்தோன்=ஒரு உயர்ந்த தவத்தையுடைய சிவகாமியாண்டார்; தார்மலர்கொய்யாவருபவன்=திருப்பள்ளித்தாமத்திற்குரிய மலரைக்கொய்து திருப்பூங்கூடையில் கொண்டு வரும்; தண்டின்மலர்பறித்தவூர்மலை=தண்டினின்றும் அம்மலரைப்பறித்த பட்டத்து யானையையும்; மேற்கொளும்பாகருடறுணியாக்குமவன்=அதன்மேற் கொண்ட பாகரது உடம்பையும் வெட்டினவர் யாரெனில்; ஏர்மலிமாமதில்சூழ்கருவூரிலெறிபத்தன்=அழகுமிகுத்த பெரிய மதில்சூழ்ந்த திருக்கருவூரின்கண் வாழ்ந்த எறிபத்தநாயனர்.—எ-று. ஏ-அசை. (௯௦)

## ஏனாதிநாதநாயனர்.

பத்தனை யேனாதி நாதனைப்பார்நீ டெயினி தன்னு
ளத்தனைத் தன்னோ டமர்மலைந் தானெற்றி நீறுகண்டு
கைத்தனி வாள்வீ டொழிந்தவன் கண்டிப்ப நின்றருளு
நித்தனை யீழக் குலதீப னென்பரிந் நீணிலத்தே.

(இ-ள்.) பத்தனையேனாதிநாதனை—மெய்ப்பத்தியிற் சிறந்தவராகிய ஏனாதிநாதநாயனாரை; பார்நீடெயினிதன்னுளத்தனை—நிலவுலகத்தின்கணுயர்ந்த எயினனூரில் வாழ்ந்த முதல்வராகிய; தன்னொடமர்மலைந்தானெற்றிநீறுகண்டு—தன்னுடன் போர்செய்த அதிசூரன்நெற்றியில் திருவெண்ணீற்றைக்கண்டு; கைத்தனிவாள்வீடொழிந்து—தன் கையிலிருக்கும் ஒப்பற்ற வாட்படையை விடாமல்; அவன்கண்டிப்பநின்றருளுநித்தனை—அவ்வதிசூரன் தன்னை வெட்டும்படி நின்றருளிய நித்தியனை; ஈழக்குலதீபனென்பரிந்நீணிலத்து—இந்த அகன்ற நிலவுலகத்து ஈழக்குலத்துக்குத் தீபம்போன்றவனென்று சொல்லுவார்கள்.—எ-று. ஏ-அசை. (௧௦)

## கண்ணப்பநாயனார்.

நிலத்திற் றிகழ்திருக் காளத்தி யார்திரு நெற்றியின்மே
னலத்திற் பொழிதரு கண்ணிற் குருதிகண் டுண்ணடுங்கி
வலத்திற் கடுங்கணை யாற்றன் மலர்க்கண் ணிடந்தப்பினான்
குலத்திற் கிராதனங் கண்ணப்ப னாமென்று கூறுவரே.

(இ-ள்.) நிலத்திற்றிகழ்திருக்காளத்தியார்திருநெற்றியின்மேல்—நிலவுலகின்கண் விளங்காநின்ற திருக்காளத்தியப்பரது திருநெற்றியின்கீழ்; நலத்திற்பொழிதருகண்ணிற்குருதிகண்டுண்ணடுங்கி—தம் தொண்டர்பத்தியை வெளிப்படுத்துங் காரணத்தால் கண்ணினின்றும் சொரியும் உதிரநீரைக்கண்டு உள்ளத்தில் அச்சமுற்று; வலத்திற்கடுங்கணையாற்றன்மலர்க்கணிடந்தப்பினான்—கடிய அம்பினால் தன் வலப்பாலிலுள்ள மலர்போலுங் கண்ணைத் தோண்டியெடுத்துச் சாத்தினவர் யாரெனில்; குலத்திற்கிராதனங்கண்ணப்பனாமென்றுகூறுவர்—குலத்தில் வேடுவராகிய கண்ணப்பநாயனாரென்று அறிஞர் சொல்லுவர்.—எ-று. ஏ-அசை. (௧௧)

மேல் என்றது கீழிற்குப் பந்தலின்கீழிருந்தானைப் பந்தல்மேலிருந்தானென வழங்கும் சிறுவரவிற்றாய வழக்கு அன்றி இலக்கணையெனினும் அமையும்.

## குங்குலியக்கலயநாயனார்.

ஏய்ந்த கயிறுதன் கண்டத்திற் பூட்டி யெழிற்பனந்தாட்
சாய்ந்த சிவனிலைத் தானென்பர் காதலி தாலிகொடுத்
தாய்ந்தநற் குங்குலி யங்கொண்ட னற்புகை காலனைமுன்
காய்ந்த வரற்கிட்ட தென்கட வூரிற் கலயனையே.

(இ-ள்.) காதலிதாலிகொடுத்தாய்ந்தநற்குங்குலியங்கொண்டு—மனையாளது திருமங்கிலியத்தை மாற்றித் தெளிவான நல்ல குங்குலியத்தை வாங்கிக்கொண்டு; அனற்புகைகாலனைமுன்காய்ந்தவரற்கிட்ட—அனலினுண்டாக்கிய அக்குங்குலியத்தூபத்தை முன்னாளில் மார்க்கண்டேயர்க்காகக் கூற்றையுதைத்த சிவபிரானுக்கு இட்ட; தென்கடவூரிற்கலயனை—தெற்கின்கணுள்ள திருக்கடவூரில் அவதரித்த கலயநாயனாரை; ஏய்ந்தகயிறுதன்கண்டத்திற்பூட்டி—பொலிவமைந்த பூங்கச்சைத் தன் கழுத்திற்பூட்டி; எழிற்பனந்தாட்சாய்ந்தசிவனிலைத்தானென்பர்—அழகிய திருப்பனந்தாளிற் றிருமுடிவளைந்த சிவபிரானை நேராகச்செய்தவனென்று அறிஞர்கள் கூறுவர்.—எ-று. ஏ-அசை. (௧௨)

## மானக்கஞ்சாறநாயனார்.

கலச முலைக்கன்னி காதற் புதல்வி கமழ்குழலை
நலசெய் தவத்தவன் பஞ்ச வடிக்கிவை நல்கெனலும்
அலசு மெனக்கரு தாதவள் கூந்த லரிந்தளித்தான்
மலைசெய் மதிற்கஞ்சை மானக்கஞ் சாற னெனும்வள்ளலே.

(இ-ள்.) கலசமுலைக்கன்னிகாதற் புதல்விகமழ்குழலை—கும்பத்தையொத்த முலைகளையுடைய கன்னியாகிய தன்னால் விரும்பப்பட்ட புத்திரியின் மணங்கமழ்கின்ற அளகத்தைநோக்கி; நலசெய்தவத்தவன்பஞ்சவடிக்கிவைநல்கெனலும்—நன்மைமிக்க தவவேடத்தையுடையராய் வந்த சிவபிரான் மயிர்ப்பூணூலுக்கு இவ்வளகத்தைக் கொடு என்று கேட்கவும்; அலசுமெனக்கருதாது—அப்புதல்வி வருந்துவாளென்று தம் உளத்தில் நினையாமல்; அவள்கூந்தலரிந்தளித்தான்—அவள் அளகத்தை அரிந்துகொடுத்தவர் யாரெனில்; மலைசெய்மதிற்கஞ்சைமானக்கஞ்சாறனெனும்வள்ளல்—மலையையொத்த மதில்சூழ்ந்த கஞ்சாறூரில் அவதரித்த மானக்கஞ்சாறநாயனாரென்னும் கொடையுடையோர்.—எ-று. ஏ-அசை. (௧௫)

## அரிவாட்டாயநாயனார்.

வள்ளற் பிராற்கமு தேந்தி வருவோ னுகலுமிங்கே
வெள்ளச் சடையா யமுதுசெய் யாவிடி லென்றலைத்
தள்ளத் தகுமென்று வாட்பூட் டியதடங் கையினன்கா
ணள்ளற் பழனக் கணமங் கலத்தரி வாட்டாயனே.

(இ-ள்.) வள்ளற்பிராற்கமுதேந்திவருவோனுகலும்—வள்ளற்றன்மையுடைய சிவபிரானுக்குத் திருவமுதுக்குரிய படித்தரங்களைச் சிரசிற்றாங்கிக்கொண்டு வருகின்றவர் உடம்பின்மெலிவால் கால்தவறிக் கமரிற்சிந்தவும்; இங்கேவெள்ளச்சடையாயமுதுசெய்யாவிடில்—இக்கமரில் கங்கைநீர் பெருக்கெடுக்கும் சடையையுடையவரே இதனைத் திருவமுதுசெய்யாவிடத்து; என்றலைத்தள்ளத்தகுமென்று—என்னுடைய தலையை அரிவாளால் அரிந்து வீழ்த்தப்படுமென்று; வாட்பூட்டியதடங்கையினன்—அரிவாளைக் கழுத்தின்மாட்டிய பெருமையான கையையுடையவர் யாரெனில்; அள்ளற்பழனக்கணமங்கலத்தரிவாட்டாயன்—சேறுதங்கிய வயல்சூழ்ந்த கணமங்கலத்தில் அவதரித்த அரிவாட்டாயநாயனார்.—எ-று. காண்-ஏ-அசை. (௧௬)

## ஆனாயநாயனார்.

தாயவன் யாவுக்குந் தாழ்சடை மேற்றனித் திங்கள்வைத்த
தூயவன் பாதந் தொடர்ந்துதொல் சீர்துளை யாற்பரவும்
வேயவன் மேன்மழ நாட்டு விரிபுனன் மங்கலக்கோன்
ஆயவ னானய னென்னையு வந்தாண் டருளினனே.

(இ-ள்.) யாவுக்குந்தாயவன்—எல்லா உயிருக்கும் தாயொத்தவனாய்; தாழ்சடைமேற்றனித்திங்கள்வைத்ததூயவன்பாதந்தொடர்ந்து—தாழ்ந்த சடைமுடியின்மேல் ஒப்பற்ற இளம்பிறையைச்சூடிய தூயோனது திருவடிகளை மனதால்பற்றி; தொல்சீர்துளையாற்பரவும்வேயவன்—பழமையான திருநாமமாகி

ய திருவைந்தெழுத்தைத் துளைவழியால் துதிக்கும் புள்ளாங்குழலையுடையவரு
ம்; மேன்மழநாட்டுவிரிபுனன்மங்கலக் கோனாயவன்=மேன்மழநாட்டின்கண்
விரிந்த புனல்சூழ்ந்த திருமங்கலமென்னும் திருப்பதியில் அவதரித்த முதல்வ
ரும் ஆகிய; ஆனாயனென்னையுவந்தாண்டருளினன்=ஆனாயநாயனார் அடியே
னைத் திருவுள்ளங் களிகூர்ந்து அடிமைக்கொண்டவர்.—எ-று. ஏ-அசை.(௧௫)

## சுந்தரமூர்த்திசுவாமிகள் துதி.

அருட்டுறை யத்தர்க் கடிமைப்பட் டேனினி யல்லனென்னும்
பொருட்டுறை யாவதென் னேயென்ன வல்லவன் பூங்குவளை
யிருட்டுறை நீர்வய னாவற்பதிக் கும்பிரா னடைந்தோர்
மருட்டுறை நீக்கிநல் வான்வழி காட்டிட வல்லவனே.

(இ-ள்.) அருட்டுறையத்தர்க்கடிமைப்பட்டேன்=திருவருட்டுறை ஆல
யத்தில் வீற்றிருந்தருளும் சிவபிரானுக்கு ஆட்பட்டேன்; இனியல்லனென்னும்
பொருட்டுறையாவ தென்னேயென்னவல்லவன்=இனிமேல் அடியனல்லேன்
என்று கூறும் பொருள்நிலைமையாவது எவ்வாறென்று திருப்பதிகத்தில் ஓதியரு
ள வன்மையுடைய நம்பியாரூரர்; பூங்குவளையிருட்டுறைநீர்வயனாவற்பதிக்கும்
பிரான்=பொலிவமைந்த குவளைமலர்களின் கருநிறமானது தங்கிய நீர்சூழ்ந்த
வயல்களையுடைய திருநாவலூருக்கு முதல்வர்; அடைந்தோர்மருட்டுறைநீக்கிந
ல்வான்வழிகாட்டிடவல்லவன்=தம்மை அடைந்தவர்களது மயக்கவழியை நீக்
கி நல்ல முத்திவழியைக் காட்டவல்லவர்.—எ-று. ஏ-அசை. (௧௬)

## மூர்த்திநாயனார்.

அவந்திரி குண்டம ணாவதின் மாள்வனென் றன்றாலவாய்ச்
சிவன்றிரு மேனிக்குச் செஞ்சந் தனமாச் செழுமுழங்கை [ர்
யுவந்தொளிர் பாறையிற் றேய்த்துல காண்டவொண் மூர்த்திதன்னூ
நிவந்தபொன் மாட மதுரா புரியென்னு நீள்பதியே.

(இ-ள்.) அவந்திரிகுண்டமணாவதின்மாள்வனென்று=வீணே திரிகின்ற
குண்டராகிய சமணராவதினும் உயிர்விடுவேனென்று; அன்றாலவாய்ச்சிவன்றி
ருமேனிக்குச்செஞ்சந்தனமா=அன்றைக்குத் திருவாலவாயின்கணுள்ள சிவபி
ரான் திருமேனிக்குச் சிவந்த சந்தனமாக; செழுமுழங்கையுவந்தொளிர்பா
றையிற்றேய்த்து=செழுவிய முழங்கையை விரும்பி விளங்குகின்ற சந்தனச்
சாணையில் தேய்த்து; உலகாண்டவொண்மூர்த்திதன்னூர்=நிலவுலகத்தை அர
சாண்ட ஒள்ளிய மூர்த்திநாயனாரது ஊர் யாதெனில்; நிவந்தபொன்மாடமது
ராபுரியென்னுநீள்பதி=ஓங்கிய பொன்னாலாகிய மாடங்களையுடைய மதுராபு
ரியென்று சொல்லும் பெரிய ஊராம்.—எ-று. ஏ-அசை. (௧௭)

## முருகநாயனார்.

பதிகந் திகழ்தரு பஞ்சாக் கரம்பயி னாவினன்சீர்
மதியஞ் சடையார்க் கலர்தொட் டணிபவன் யான்மகிழ்ந்து
துதியுங் கழற்சண்பை நாதற்குத் தோழன்வன் றொண்டரம்பொன்
னதிகம் பெறும்புக லூர்முரு கன்னெனு மந்தணனே.

(இ-ள்.) பதிகந்திசழ்தரு பஞ்சாக்கரம்பயின்னாவினன் = ஆளுடையபிள்ளையார் திருப்பதிகத்தில் விளங்க அருளிய திருவைந்தெழுத்து தங்கிய நாவையுடையவரும்; சீர்மதியஞ்சடையார்க்கலர்தொட்டணிபவன் = சிறப்பமைந்த இளம்பிறைவாழும் சடைமுடியையுடைய சிவபிரானுக்கு மலர்மாலையைத் திருமேனியைத் தீண்டிச்சாத்தும் முறைமையுடையவரும்; யான்மகிழ்ந்துதுதியுங்கழற்சண்பைநாதறகுத்தோழன் = நான் மகிழ்ச்சியடைந்து துதிசெய்யும் திருவடிகளையுடைய ஆளுடையபிள்ளையார்க்கு நண்பரும் யாரெனில்; வன்றொண்டரம்பொனதிகம்பெறும்புகலூர் = நம்பியாரூரர் அழகிய பொன்னை அதிகமாகப் பெற்றுக்கொண்ட திருப்புகலூரின்கண் அவதரித்த; முருகனெனுமந்தணன் = முருகநாயனாரென்னும் மறையவர்.—எ-று. ஏ-அசை. (கஅ)

## உருத்திரபசுபதிநாயனார்.

அந்தாழ் புனறன்னி லல்லும் பகலுநின் றோதரத்தா
லுந்தாத வன்பொ டுருத்திரஞ் சொல்லிக் கருத்தமைந்த
பைந்தா ருருத்திர பசுபதி தன்னற் பதிவயற்கே
நந்தார் திருத்தலை யூரொன் றுரைப்பரிந் நானிலத்தே.

(இ-ள்.) அந்தாழ்புனறன்னில் = அழகுடைய ஆழ்ந்தசலத்தில்; அல்லும்பகலுமாதரத்தால்நின்று = இரவும் பகலும் ஒதுங்காலந் தவறாமல் விருப்போடுநின்று; உந்தாதவன்பொடுருத்திரஞ்சொல்லி = வழுவாத பேரன்பால் உருத்திரத்தையோதி; கருத்தமைந்தபைந்தாருருத்திரபசுபதிதன்னற்பதி = மனமொருப்பட்ட பசிய தாமரைமாலையையுடைய உருத்திரபசுபதிநாயனாரது நல்ல திருப்பதி யாதெனில்; வயற்குநந்தார்திருத்தலையூரொன்றுரைப்பரிந்நானிலத்து = வயலினிடத்துச் சங்குகள் தங்கிய திருத்தலையூரொன்று விரிந்த இந்நிலவுலகத்தில் அறிஞர் கூறுவர்.—எ-று. ஏ-இரண்டும்-அசை. (கக)

## திருநாளைப்போவார்நாயனார்.

நாவார் புகழ்த்தில்லை யம்பலத் தானருள் பெற்றுநாளைப்
போவா னவனும் புறத்திருத் தொண்டன்றன் புன்புலைபோய்
மூவா யிரவர்கை கூப்ப முனியாய வன்பதிதான்
மாவார் பொழிறிக ழாதனூ ரென்பரிம் மண்டலத்தே.

(இ-ள்.) நாவார்புகழ்த்தில்லையம்பலத்தானருள்பெற்று = அறிஞர்கள் நாவில் துதிக்கும் புகழையுடைய தில்லையம்பலத்தின்கணுள்ள நடேசப்பிரான் திருவருளைப்பெற்று; தன்புன்புலைபோய் = தன்னுடைய சிறுமையான புலைத்தன்மை நீங்கி; மூவாயிரவர்கைகூப்ப = தில்லைமூவாயிரவர்கள் கைகூப்பிவணங்க; முனியாயவன் = மறைமுனிவரான; நாளைப்போவானவனும் = திருநாளைப்போவாரென்னும்; புறத்திருத்தொண்டன்பதி = புறத்தொண்டரது ஊராவது யாதெனில்; மாவார்பொழிறிகழாதனூரென்பரிம்மண்டலத்து = வண்டுகள் ஒலிக்கின்ற சோலைசூழ்ந்த ஆதனூரென்று இந்நிலவுலகத்தில் அறிஞர் கூறுவர்.—எ-று. தான்-ஏ-அசை. (உ0)

## திருக்குறிப்புத்தொண்ட நாயனுர்.

மண்டும் புனற்சடை யான்றமர் தூசெற்றி வாட்டும்வகை
விண்டு மழைமுகில் வீடா தொழியின்யான் வீவனென்று
மிண்டும் படர்பாறை முட்டு மெழிலார் திருக்குறிப்புத்
தொண்டன் குலங்கச்சி யேகா லியர்தங்க டொல்குலமே.

(இ-ள்.) மண்டும்புனற்சடையான்றமர்தூசெற்றிவாட்டும்வகைவிண்டு= கங்கைநீர் நிறைந்த சடையையுடைய சிவபிரான் அடியாரது கந்தையைக் கல்லில் அழுக்கறுத்து உலர்த்திக்கொடுக்கும் முறைமையாகக்கூறி வாங்கி; முகில் மழைவீடாதொழியின்யான்வீவனென்று= அப்பொழுது மேகங்கள் பொழியும் மழையை விடாதொழிந்தால் யான் உயிர்விடுவேனென்று; மிண்டும்படர்பாறை முட்டும்= நெருங்கியிருக்கும் பெரிய துறைக்கல்லில் தன் தலையை மோதும்; எழிலார்திருக்குறிப்புத்தொண்டன்குலம்= அழகிய திருக்குறிப்புத்தொண்டநாயனுரது குலம் யாதெனில்; கச்சியேகாலியர்தங்கடொல்குலம்= காஞ்சிநகரத்தின்கணுள்ள வண்ணார்களது பழைய குலமாம்.—எ-று. ஏ-அசை. (உக)

## சண்டேசுர நாயனுர்.

குலமே றியசேய்ஞ லூரிற் குரிசில் குளைகடல்சூழ்
தலமே றியவிறற் றண்டிகண் டீர்தந்தை தாளிரண்டும்
வலமே றியமழு வாலெறிந் தீசன் மணிமுடிமே
னலமே றியபால் சொரிந்தலர் சூட்டிய நன்னிதியே.

(இ-ள்.) குலமேறியசேய்ஞலூரிற்குரிசில்=உயர்குலத்து மறையவர்கள் வாழும் திருச்சேய்ஞலூரில் அவதரித்த முதல்வராகிய; தந்தைதாளிரண்டும்வலமேறியமழுவாலெறிந்து=பிதாவினது காலிரண்டையும் வெற்றிமிக்க மழுவாயுதத்தால் வெட்டி; ஈசன்மணிமுடிமேனலமேறியபால்சொரிந்து=சிவபிரான் திருமுடியின்மேல் நன்மைமிக்க ஆவின்பாலைத் திருமஞ்சனமாட்டி; அலர்சூட்டியநன்னிதி=மலர்களைச்சூட்டி வழிபட்ட நல்ல நிதிபோல்வார்; குளைகடல்சூழ்தலமேறியவிறற்றண்டிகண்டீர்=ஒலிக்குங் கடல்சூழ்ந்த நிலவுலகத்தில் விளங்கிய பத்திவலியையுடைய சண்டேசுரநாயனுரொன்று அறிஞர்களே அறிந்துகொள்ளுங்கள்.—எ-று. ஏ-அசை. (உஉ)

## சுந்தரமூர்த்திசுவாமிகள் துதி.

நிதியார் துருத்திதென் வேள்விக் குடியாய் நினைமறந்த
மதியேற் கறிகுறி வைத்துப் புகர்பின்னை மாற்றிடென்று
துதியா வருள்சொன்ன வாறறிவா ரிடைப் பெற்றவன்கா
ணதியார் புனல்வய லுவலர் கோனென்னு நற்றவனே.

(இ-ள்.) நிதியார்துருத்திதென்வேள்விக்குடியாய்=செல்வம்நிறைந்த திருத்துருத்தியிலும் தெற்கின்கணுள்ள திருவேள்விக்குடியிலும் பகலிலும் இரவிலும் முறையேவாழும் முதல்வரே; நினைமறந்தமதியேற்கு=உம்மை மறந்த மதியையுடைய எனக்கு; அறிகுறிவைத்துப்புகர்பின்னைமாற்றிடென்றுதுதியா= உம்மை அறியும் குறியை முன்னே அருளிப்பின் உடம்பின்கணுள்ள பிணியை

நீக்கென்று துதித்து; அருள்சொன்னவாறறிவாரிடைப்பெற்றவன்=அவ்விருத லத்திற்கும் ஒருவராய் வீற்றிருக்கும் சொன்னவாறறிவாரென்னும் சிவபிரானி டத்துத் திருவருள்பெற்றவர் யாரெனில்; நதியார்புனல்வயனாவலர்கோனென் னுநற்றவன்=ஆற்றின்கணுள்ள நீரானது பாய்கின்ற வயல்சூழ்ந்த திருநாவலூ ரரென்னும் நல்லதவத்தினர்.—எ-று. காண்-ஏ-அசை. (உங)

## திருநாவுக்கரசுசுவாமிகள்.

நற்றவ னல்லூர்ச் சிவன்றிருப் பாதந்தன் சென்னிவைக்கப்
பெற்றவன் மற்றிப் பிறப்பற வீரட்டர் பெய்கழற்கு
ளுற்றவ னுற்ற விடமடை யாரிட வொள்ளமுதாத்
துற்றவ னாரூரி னாவுக்கர செனுந் தூமணியே.

(இ-ள்.) நற்றவனல்லூர்ச்சிவன்றிருப்பாதம்=நல்ல தவத்தினையுடை யோரும் திருநல்லூரில் வீற்றிருக்கும் சிவபிரான் திருவடிகளை; தன்சென்னி வைக்கப்பெற்றவன்—தன் சிரசில் சூட்டியருளப்பெற்றோரும்; மற்றிப்பிறப்ப றவீரட்டர்பெய்கழற்குளுற்றவன்=அதன்றி இப்பிறவி நீங்கும்படி வீரட்டேச ரது வீரக்கழலணிந்த திருவடியைப்புகலாக அடைந்தோரும்; உற்றவிடமடை யாரிடவொள்ளமுதாத்துற்றவன்=அமுதோடு விரவிய நஞ்சைச் சமணர்களிட அவ்விடத்தை ஒள்ளிய அமுதமாகத் திருவமுது செய்தோரும் யாரெனில்; ஆரூரினாவுக்கரசெனுந்தூமணி=திருவாரூரின்கண் அவதரித்த திருநாவுக்கரசெ ன்னுந் தூயமணிபோல்வார்.—எ-று. ஏ-அசை. (உச)

மணியினை மாமறைக் காட்டு மருந்தினை வண்மொழியாற்
றிணியன நீள்கத வந்திறப் பித்தன தெண்கடலிற்
பிணியன வன்கன் மிதப்பித்த சைவப் பெருநெறிக்கே
யணியன நாவுக் கரையர்பி ரான்ற னருந்தமிழே.

(இ-ள்.) நாவுக்கரையர்பிரான்றனருந்தமிழ்=திருநாவுக்கரையராகிய பிரானாரது அரிய திருப்பதிகங்கள்; மணியினைமாமறைக்காட்டுமருந்தினை=சிந் தாமணிபோலும் திருமறைக்காட்டின்கண் வீற்றிருந்தருளும் பிறவிநோய்க்கு மருந்தாயுள்ள சிவபிரானை; வண்மொழியாற்றிணியனநீள்கதவந்திறப்பித்தன= வளவிய சொன்னயத்தால் திண்ணிய நீண்ட கதவைத் திறக்கச்செய்வித்தன; தெண்கடலிற்பிணியனவன்கன்மிதப்பித்த=தெள்ளிய கடலினிடத்துப் பிணி க்கப்பட்ட வலிய கல்லை மிதக்கச்செய்தன; சைவப்பெருநெறிக்குஅணியன= சைவமாகிய நன்மார்க்கத்துக்கு அலங்காரமாயுள்ளன.—எ-று. (உரு)

ஏ-இரண்டும்-அசை.

## குலச்சிறைநாயனார்.

அருந்தமி ழாகரன் வாதி லமணைக் கழுநுதிமே
லிருந்தமிழ் நாட்டிடை யேற்றுவித் தோனெழிற் சங்கம்வைத்த
பெருந்தமிழ் மீனவன் றன்னதி காரி பிரசமல்கு
குருந்தவிழ் சாரன் மணமேற் குடிமன் குலச்சிறையே.

(இ-ள்.) அருந்தமிழாகரன்வாதில்=ஆளுடையபிள்ளையார் வாதில் தோ ற்ற; அமணைக்கழுநுதிமேலிருந்தமிழ்நாட்டிடையேற்றுவித்தோன்=சமணர்க

ளைப் பெரிய பாண்டிநாட்டின்கண் கழுவிலேற்றுவித்தவரும்; எழிற்சங்கம்வைத்தபெருந்தமிழ்மீனவன்றன்னதிகாரி—அழகிய தமிழ்ச்சங்கத்தை ஓங்கச்செய்த பெருமையினையுடைய தமிழையுணர்ந்த கூன்பாண்டியன் மந்திரியும் யாரெனில்; பிரசமல்குகுருந்தவிழ்சாரன்மணமேற்குடிமன்குலச்சிறை—தேன்நிறைந்த குருந்தமரங்கள் அலர்ந்த நெய்தனிலத்தில் மணமேற்குடியில் அவதரித்த முதல்வராகிய குலச்சிறைநாயனார்.—எ-று. ஏ-அசை. (உ௬)

## பெருமிழலைக்குறும்பநாயனார்.

சிறைநன் புனற்றிரு நாவலூ ராளி செழுங்கயிலைக்
கிறைநன் கழனுளை யெய்து மிவனருள் போற்றவின்றே
பிறைநன் முடிய னடியடை வேனென் றுடல்பிரிந்தா
னறைநன் மலர்த்தார் மிழலைக் குறும்ப னெனுநம்பியே.

(இ-ள்.) சிறைநன்புனற்றிருநாவலூராளி—கரையோடுகூடிய நல்ல நீர்சூழ்ந்த திருநாவலூரர்; செழுங்கயிலைக்கிறைநன்கழனுளையெய்தும்—செழுமையான நொடித்தான்மலைக்கு முதல்வராகிய சிவபிரான் திருவடியை நாளைத்தினத்தில் அடைவார் அதனால்; இவனருள்போற்றப்பிறைநன்முடியனருள்—இந்நாவலூரரது திருவருளைத் துதிக்கும்படி நல்ல பிறையணிந்த திருமுடியையுடைய சிவபிரான் திருவருளை; இன்றேயடைவேனென்றுடல்பிரிந்தான்—இன்றைக்கே அடைவேனென்று உடம்பைவிட்டுச்சென்றார் யாரெனில்; நறைநன்மலர்த்தார்மிழலைக்குறும்பனெனுநம்பி—வாசனைகமழும் நல்ல மலர்மாலையையணிந்த பெருமிழலைக்குறும்பநாயனாரென்னும் பெருமையிற்சிறந்தோர்.—எ-று.(உ௭)

ஏ - அசை.

## காரைக்காலம்மையார்.

நம்பன் றிருமலை நான்மிதி யேனென்று தாளிரண்டு
மும்பர் மிசைத்தலை யானடந் தேற வுமைநகலுஞ்
செம்பொன் னுருவனென் னம்மை யெனப்பெற் றவள்செழுந்தேன்
கொம்பி னுகுகாரைக் காலினின் மேய குலதனமே.

(இ-ள்.) நம்பன்றிருமலைநான்மிதியேனென்று—சிவபிரான் வீற்றிருந்தருளும் நொடித்தான்மலையை யான் மிதிக்கமாட்டேனென்று; தாளிரண்டும்பர்மிசைத்தலையானடந்தேற—தன் இரண்டு திருவடிகளும் மேலாகத் தலையானடந்து செல்ல; உமைநகலும்—உமையம்மை வியப்புநகை செய்யவும்; செம்பொன்னுருவனென்னம்மையெனப்பெற்றவள்—அப்பொழுது சிவந்த பொன்போலும் திருமேனியையுடைய சிவபிரான் என் அம்மையேயென்று அழைக்கப்பெற்றவர் யாரெனில்; செழுந்தேன்கொம்பினுகு—செழுவிய தேனானது மரக்கொம்பினின்றுஞ் சிந்தாநின்ற; காரைக்காலினின்மேயகுலதனம்—காரைக்காலென்னும் ஊரில் அவதரித்த எமது குலத்துக்கு ஒருமுதல்வி.—எ-று.(உ௮)

## அப்பூதியடிகணாயனார்.

தனமா வதுதிரு நாவுக்கரசின் சரணமென்னு
மனமார் புனற்பந்தர் வாழ்த்திவைத் தாங்கவன் வண்டமிழ்க்கே
யினமாத் தனது பெயரிடப் பெற்றவ னெங்கள்பிரா
னனமார் வயற்றிங்க ளூரினில் வேதிய னப்பூதியே.

(இ-ள்.) தனமாவதுதிருநாவுக்கரசின்சரணமென்று=எமக்குச்செல்வமாவது ஆண்டவரசின் திருவடிகளே என்று; மனமார்புனற்பந்தர்வாழ்த்திவைத்து=கண்டார் மனதுக்கு நிறைவமைந்த தண்ணீர்ப்பந்தரைத் துதித்துவைத்து; ஆங்கவன்வண்டமிழ்க்கினமா=அத்திருநாவுக்கரசின் திருப்பதிகத்திற்கு உறுப்பாக; தனதுபெயரிடப்பெற்றவன்=தன் திருப்பெயரைவைத்துப் பாடப்பெற்றவர் யாரெனில்;எங்கள்பிரானும்=எங்கள்பிரானுகிய;அனமார்வயற்றிங்களூரினில்=அன்னங்கள் சஞ்சரிக்கும் வயல்களுடைய திங்களூரில் அவதரித்த;வேதியனப்பூதி=மறையவருமாகிய அப்பூதியடிகள்.—எ-று. ஏ-இரண்டும்-அசை.

## திருநீலநக்கநாயனார்.

பூதிப் புயத்தர் புயத்திற் சிலந்தி புகலுமஞ்சி
யூதித் துமிந்த மனைவியை நீப்பவுப் பாலவெல்லாம்
பேதித் தெழுந்தன காணென்று பிஞ்ஞகன் காட்டுமவ
னீதித் திகழ்சாத்த நீலநக் கன்னெனும் வேதியனே.

(இ-ள்.) பூதிப்புயத்தர்புயத்திற்சிலந்திபுகலும்=விபூதியணிந்த திருப்புயங்களையுடைய சிவபிரான் திருத்தோளில் சிலந்திப்பூச்சியானது விழவும்; அஞ்சியூதித்துமிந்தமனைவியைநீப்ப=அதனால் அச்சமுற்று வாயாலூதி எச்சில் உமிழ்ந்த மனையாளை விலக்க; உப்பாலவெல்லாம்பேதித்தெழுந்தனகாணென்று=ஊதித்துமியாத இடமெல்லாம் சிலந்தியின் விடவேகத்தால் கொப்பளித்தெழுதலை நீ பாரென்று; பிஞ்ஞகன்காட்டுமவன்=சிவபிரானால் காட்டப்படும் பெருமையுடையவர் யாரெனில்; நீதிதிகழ்சாத்தநீலநக்கனெனும்வேதியன்=ஒழுக்கமமைந்த சாத்தனூரின்கண் வாழ்ந்த திருநீலநக்கநாயனாரென்னும் மறையவர்.—எ-று. ஏ-அசை. (௩௦)

## நமிநந்தியடிகணாயனார்.

வேத மறிக்கரத் தாரூ ரரற்கு விளக்கு நெய்யைத்
தீது செறியமண் கையரட் டாவிடத் தெண்புனலா
லேத முறுக வருகவொன் றன்று விளக்கெரித்தா
னாத னெழிலேமப் பேறூ ரதிப னமிநந்தியே.

(இ-ள்.) வேதமறிக்கரத்தாரூரரற்கு=வேதவடிவான மான்கன்றை ஏந்திய திருக்கரத்தையுடைய திருவாரூரின்கண் வீற்றிருந்தருளும் அரனெறியாருக்கு; விளக்குநெய்யை=திருவிளக்கிடுதற்குரிய எண்ணெயை; தீதுசெறியமண்கையரட்டாவிட=குற்றம்நிறைந்த சமணராகிய இழிந்தவர்கள் விடாதொழிய; தெண்புனலாலேதமுறுகவருகவொன்றன்றுவிளக்கெரித்தான்=தெளிந்த நீரினால் சமணர்கள் கலக்கமடைக என்று அந்நாளில் திருவிளக்கேற்றினார் யாரெனில்; நாதனெழிலேமப்பேறூரதிபனமிநந்தி=எமக்கு முதல்வரும் அழகிய ஏமப்பேறூர் அதிபரும் ஆகிய நமிநந்தியடிகணாயனார்.—எ-று. ஏ-அசை. (௩௧)

## சுந்தரமூர்த்திசுவாமிகள் துதி.

நந்திக்கு நம்பெரு மாற்குநல் லாரூரி னயசற்குப்
பந்திப் பரியன செந்தமிழ் பாடப் படர்புனலிற்
சிந்திப் பரியன சேவடி பெற்றவன் சேவடியே
வந்திப் பவன்பெயர் வன்றொண்ட னென்பரிவ் வையகத்தே.

(இ-ள்.) நல்லாரூரினாயகற்கு—நல்ல திருவாரூரில் வீற்றிருந்தருளும் முதல்வரும்; நந்திக்குநம்பெருமாற்கு—நந்தியென்னுந் திருப்பெயருடையவரும் ஆகிய நமது சிவபிரானுக்கு; படர்புனலிற்பந்திப்பரியனசெந்தமிழ்பாட—பரம்பிய புனலினொழுக்கம்போல் செய்யுட்குற்றமில்லாத செந்தமிழ்த்திருப்பதிகத்தைப் பாடும்படிக்கு; சிந்திப்பரியன சேவடிபெற்று—புலவுணர்ச்சியைப்போலச்சுட்டி யுணர்தற்கரிய திருவருளைப்பெற்று; அவன்சேவடியேவந்திப்பவன்பெயர்—அச்சிவபிரான் திருவடியையே வழிபாடுசெய்யும் அவரது திருப்பெயர்; இவ்வையகத்துவன்றொண்டனென்பர்—இந்நிலவுலகத்துள்ள அறிஞர்கள் வன்றொண்டனென்று கூறுவர்—எ-று. ஏ-அசை. புனலிற்பாடப்பெற்றன இயையும்.

படர்புனலிலென்றதற்குப் பரம்பிய புனல்போலும் தட்பத்தையுடைய திருவருளெனினு மமையும். அடி என்பதும் அருள் என்பதும் ஒருபொருளவாதல் அடிசேர்ந்தார் அருள்சேர்ந்தார் என்னும் வழக்குநோக்கியுணர்க.

## திருஞானசம்பந்தசுவாமிகள்.

வைய மகிழயாம் வாழ வமணர் வலிதொலைய
வையன் பிரம புரத்தரற் கம்மென் குதலைச்செவ்வாய்
பைய மிழற்றும் பருவத்துப் பாடப் பருப்பதத்தின்
றைய லருள்பெற் றனனென்பர் ஞானசம் பந்தனையே.

(இ-ள்.) ஞானசம்பந்தனை—ஆளுடையபிள்ளையாரை; வையமகிழயாம்வாழ—உலகத்தார் மகிழ்ச்சியடையவும் யாமெல்லாம் வாழவும்; அமணர்வலிதொலைய—சமணர்களுடைய கொள்கை வலிகெடவும்; ஐயன்பிரமபுரத்தரற்கு—எமது முதல்வராகிய பிரமபுரத்தில் வீற்றிருந்தருளும் தோணியப்பாருக்கு; அம்மென்குதலை—அழகிய மிருதுவான மழலைவார்த்தையை; செவ்வாய்பையமிழற்றும்பருவத்துப்பாட—சிவந்த திருவாயினால் மெல்லப்பேசும் மூன்றுவயதில் பாடும்படிக்கு; பருப்பதத்தின்றையலருள்பெற்றனனென்பர்—உமாதேவியாரது திருவருளைப் பெற்றானென்று சொல்வர்.—எ-று. ஏ-அசை. (௯௩)

பந்தார் விரலியர் வேள்செங்கட் சோழன் முருகனல்ல
சந்தா ரகலத்து நீலநக் கன்பெயர் தான்மொழிந்து
கொந்தார் சடையர் பதிகத்தி லிட்டடி யேன்கொடுத்த
வந்தாதி கொண்ட பிரானருட் காழியர் கொற்றவனே.

(இ-ள்.) பந்தார்விரலியர்வேள்செங்கட்சோழன்—மங்கையர்க்கரசியார் குலச்சிறைநாயனார் கோச்செங்கட்சோழர்; முருகனல்லசந்தாரகலத்துநீலநக்கன்பெயர்மொழிந்து—முருகநாயனார் நல்ல சந்தனக்குழம்பணிந்த மார்பையுடைய திருநீலநக்கநாயனார் என்னும் இவர்கள் திருப்பெயரைப்புகழ்ந்து; கொந்தார்சடையர்பதிகத்திலிட்டு—கூட்டமான சடையையுடைய சிவபிரானது திருப்பதிகத்திலோதி; அடியேன்கொடுத்தவந்தாதிகொண்ட—அடியேன் சாத்திய அந்தாதி என்னும் பாமாலையைச் சூடிக்கொண்டருளிய முதல்வர் யாரெனில்; அருட்காழியர்கொற்றவன்—அருளையடைந்த ஆளுடைய பிள்ளையார்.—எ-று. தான்-ஏ-அசை. (௯௪)

## ஏயர்கோன்கலிக்காமநாயனார்.

கொற்றத் திறலெந்தை தந்தைதன் றந்தையெங் கூட்டமெல்லாந்
தெற்றச் சடையாய் நினதடி யேந்திகழ் வன்றொண்டனே
மற்றிப் பிணிதவிர்ப் பானென் றுடைவா ளுருவியந்நோய்
செற்றுத் தவிர்கலிக் காமன் குடியேயர் சீர்க்குடியே.

(இ-ள்.) கொற்றத்திறலெந்தைதந்தைதன்றந்தை=வெற்றிமிக்க வலியினையுடைய என்பிதாவும் அவர் பிதாவும் அவர் பிதாவும் ஆகிய; எங்கூட்டமெல்லாந்தெற்றச்சடையாய்நினதடியேம்=எமது மூன்று சுற்றமுதல் எல்லாரும் நெருங்கிய சடையையுடையவரோ உம்முடைய அடியேங்கள் அவ்வாறாக; திகழ்வன்றொண்டனேயிப்பிணிதவிர்ப்பானென்று=விளங்கிய நம்பியாரூரனா இந்நோயை நீக்கவல்லவனென்று; உடைவாளுருவியந்நோய்செற்றுத்தவிர்=உடைவாளை உறையினின்றுங் கழித்துத் தன்னுயிர்நீக்கி அச்சூலைநோய் நீங்கிய; கலிக்காமன்குடியேயர்சீர்க்குடி=கலிக்காமநாயனாரது குடி யாதெனில் ஏயர்கோக்குடி.—எ-று. மற்று-ஏ-அசை. (௬௫)

## திருமூலநாயனார்.

குடிமன்னு சாத்தனூர்க் கோக்குல மேய்ப்போன் குரம்பைபுக்கு
முடிமன்னு கூனற் பிறையாளன் றன்னை முழுத்தமிழின்
படிமன்னு வேதத்தின் சொற்படி யேபர விட்டெனுச்சி
யடிமன்ன வைத்த பிரான்மூல னாகின்ற வங்கணனே.

(இ-ள்.) குடிமன்னுசாத்தனூர்க் கோக்குலமேய்ப்போன் குரம்பைபுக்கு=உயர்குடிகள் நிலைபெற்ற சாத்தனூரின்கணுள்ள பசுக்கூட்டங்களை மேய்க்கும் இடையனது உடலிற்புகுந்து; முடிமன்னுகூனற்பிறையாளன்றன்னை=திருமுடியின்கண்வாழும் இளம்பிறையையுடைய சிவபிரானை; முழுத்தமிழின்படிமன்னுவேதத்தின்சொற்படியேபரவிட்டு=நிறைந்த தமிழில்அமைந்த மறைமொழியால் துதித்து; எனுச்சியடிமன்னவைத்தபிரான்=என் சிரசின்கண் தன் திருவடி எந்நாளும் நிலைபெறவைத்தவர் யாரெனில்; மூலனாகின்றவங்கணன்=திருமூலநாயனாரென்னும் பெருங்கருணையையுடையவர்.—எ-று.ஏ-அசை.

## தண்டியடிகணாயனார்.

கண்ணார் மணியொன்று மின்றிக் கயிறு பிடித்தரற்குத்
தண்ணார் புனற்றடந் தொட்டலுந் தன்னை நகுமமணர்
கண்ணுங் கிழப்ப வமணர் கலக்கங்கண் டம்மலர்க்கண்
விண்ணா யகனிடைப் பெற்றவ னாரூர் விறற்றண்டியே.

(இ-ள்.) கண்ணார்மணியொன்றுமின்றிக்கயிறுபிடித்து=கண்ணினுள்ள கருமணி ஒன்றேனுமில்லாமற் குளந்தொடுங்காற் கோலிற்கட்டிய கயிற்றைப் பிடித்துக்கொண்டு; அரற்குத்தண்ணார்புனற்றடந்தொட்டலும்=சிவபிரானுக்குக் குளிர்ந்த நீரையுடைய வாவியொன்றை எடுக்கவும்; தன்னைநகுமமணர்கண்ணுங்கிழப்ப=அதுகண்டு தன்னைக் குருடனென்றிகழும் சமணர்கள் அவ்விடத்துக் கண்ணிழந்துபோக; அமணர்கலக்கங்கண்டு=அவர்களைக் கலங்கச்செய்து; அம்ம

லர்க்கண்விண்ணுயகனிடைப்பெற்றவன்—அந்த மலர்போலுங் கண்ணைச் சிவபி ரானிடத்துப் பெற்றுக்கொண்டவர் யாரெனில்; ஆரூர்விறற்றண்டி—திருவாரூ ரில் அவதரித்த பத்திவலியையுடைய தண்டியடிகணுயனூர்.—எ-று. ஏ-அசை.

### மூர்க்கநாயனார்.

தண்டலை சூழ்திரு வேற்காட் டேர்மன்னன் றருகவற்றூற்
கொண்டவல் லாயம்வன் சூதனை வென்றுமுன் கொண்டபொருண்
முண்டநன் னீற்ற னடியவர்க் கீபவன் மூர்க்கனென்பர்
நண்டலை நீரொண் குடந்தையின் மேவுநற் சூதனையே.

(இ-ள்.) தண்டலைசூழ்திருவேற்காட்டேர்மன்னன்=சோலைசூழ்ந்த திரு வேற்காடு என்னும் ஊரில் அவதரித்த முதல்வரும்; தருகவற்றூற்கொண்டவல் லாயம்வன்சூதனைவென்று—தக்க சூதாடுதற்கு நியமித்த வல்லுப்பலகையுள்ள இடத்தில் வலிய சூதாடுமவர்களை வெற்றிகொண்டு; முன்கொண்டபொருண்மு ண்டநன்னீற்றனடியவர்க்கீபவன்—தான் முன்கொண்ட பொருளைத் திரிபுண் டரமாக அணிந்த நல்ல நீற்றையுடைய சிவபிரான் அடியார்க்குக் கொடுக்கின் றவரும் ஆகிய; நண்டலைநீரொண்குடந்தையின்மேவுநற்சூதனை—நண்டுகள் ச ஞ்சரிக்கின்ற நீர்வளம்பொருந்திய ஒள்ளிய குடந்தைக்கண் சென்றிருந்த நல்ல சூதாட்டில் வல்லவரை; மூர்க்கனென்பர்—மூர்க்கநாயனுரென்று கூறுவர்.— எ-று. ஏ-அசை. (௩௮)

### சோமாசிமாறநாயனார்.

சூதப் பொழிலம்ப ரந்தணன் சோமாசி மாறனென்பான்
வேதப் பொருளஞ் செழுத்தும் விளம்பியல் லான்மொழியா
னீதிப் பரன்மன்னு நித்த நியமன் பரவையென்னு
மாதுக்குக் காந்தன் வன்றொண்டன் றனக்கு மகிழ்துணையே.

(இ-ள்.) சூதப்பொழிலம்பரந்தணன்—தேமாம்பொழில்சூழ்ந்த திருவ ம்பரென்னுந் திருப்பதியில் அவதரித்த மறையவராகிய; சோமாசிமாறனென் பான்—சோமாசிமாறநாயனுரென்று சொல்லப்படுவோர்; வேதப்பொருளஞ் செழுத்தும்—வேதத்தின்பொருளாகிய திருவைந்தெழுத்தையும்; விளம்பியல் லான்மொழியான்—ஓதியன்றிப் பிறவார்த்தைகள் ஒன்றுஞ்சொல்லாதவரும்; நீதிப்பரன்மன்னுநித்தநியமன்—ஒழுக்கத்திற்சிறந்தவரும் நிலைபேருக அனவர தமும் யாகம்முதலிய நியமங்களையுடையவரும்; பரவையென்னுமாதுக்குக்காந் தன்வன்றொண்டன்றனக்குமகிழ்துணை—பரவையாரென்னும் பெண்ணுக்குக் க ணவராகிய நம்பியாரூரருக்கு மகிழ்தற்குரிய நண்பருமாயுள்ளவர்.—எ-று.(௩௯)

ஏ - அசை.

### சுந்தரமூர்த்திசுவாமிகள் துதி.

துணையு மளவுமில் லாதவன் றன்னரு ளேதுணையாக்
கணையுங் கதிர்நெடு வேலுங் கறுத்த கயலிணையும்
பிணையு நிகர்த்தகட் சங்கிலி போமைத் தோளிரண்டு
மணையு மவன்றிரு வாரூர னுகின்ற வற்புதனே.

(இ-ள்.) துணையுமளவுமில்லாதவன்றன்னருளே துணையா—ஒப்பும் உயர்வும் இல்லாத சிவபிரான் திருவருளே துணையாக; கணையுங்கதிர்நெடுவேலுங் கறுத்தகயலிணையும்—அம்பும் ஒள்ளிய நீண்ட வேலும் கரிய இணைக்கயலும்; பிணையுநிகர்த்தகட்சங்கிலி—மானோக்கும் ஒத்த கண்ணையுடைய சங்கிலிநாச்சியாரது; பேரமைத்தோளிரண்டுமணையுமவன்—பெரிய மூங்கில்போலும் தோளிரண்டையும் அணைகின்றவர் யாரெனில்; திருவாரூரனாகின்றவற்புதன்—நம்பியாரூரரென்னும் திருப்பெயரையுடைய அற்புதர்.—எ-று. (௬௰)

ஏ-அசை.

## சாக்கியநாயனார்.

தகட்ன வாடையன் சாக்கியன் மாக்கற் றடவரையின்
மகடனந் தாக்கக் குழைந்ததிண் டோளர்வண் கம்பர்செம்பொன்
றிகழ்தரு மேனியிற் செங்க லெறிந்து சிவபுரத்துப்
புகழ்தரப் புக்கவ னூர்சங்க மங்கை புவனியிலே.

(இ-ள்.) மாக்கற்றடவரையின்மகடனந்தாக்கக்குழைந்ததிண்டோளர்—பெரிய கற்பாறைகளோடுகூடிய விசாலமான மலையரையன் புத்திரியாகிய உமாதேவியார் தனமானது தழுவக்குழைந்த திண்ணிய தோளையுடையவராகிய; வண்கம்பர்செம்பொன்றிகழ்தருமேனியில்செங்கலெறிந்து—வளவிய ஏகாம்பரநாதர் சிவந்த பொன்போல் ஒளிரும் திருமேனியினிடத்துச் செங்கல் துண்டுகளை எறிந்து; சிவபுரத்துப்புகழ்தரப்புக்கவன்—சிவலோகத்தின்கண் யாவரும் புகழும்படி அடைந்தவரும்; தகடனவாடையன்சாக்கியனூர்—இலைபோல் மிருதுவான துவராடையையுடையவருமாகிய சாக்கியநாயனார் ஊர் யாதெனில்; புவனியில்சங்கமங்கை—நிலவுலகத்தின்கணுள்ள சங்கமங்கையாம்.—எ-று. ஏ - அசை. (௬௧)

## சிறப்புலிநாயனார்.

புவனியிற் பூதியுஞ் சாதன மும்பொலி வார்ந்துவந்த
தவநிய மர்க்குச் சிறப்புச்செய் தத்துவ காரணனு
மவனியிற் கீர்த்தித் தென்னக்கூ ரதிப னருமறையோன்
சிவனிய மந்தலை நின்றதொல் சீர்நஞ் சிறப்புலியே.

(இ-ள்.) புவனியிற்பூதியுஞ்சாதனமும்—நிலவுலகின்கண் திருவெண்ணீறும் உருத்திராக்கம் முதலிய சிவவேடமும்; பொலிவார்ந்துவந்ததவநியமர்க்கு—பொலிவடையப்பெற்றுத் தன்னிடத்துவந்த தவநியமங்களையுடைய சிவனடியார்களுக்கு; சிறப்புச்செய்தத்துவகாரணனும்—திருவமுது செய்வித்தல் முதலிய உபசாரங்களைச்செய்கின்ற மெய்யுணர்ச்சி உதித்தற்கிடமாயுள்ளவர் யாரெனில்; அவனியிற்கீர்த்திதென்னக்கூரதிபன்—பூமியில் புகழ்விளங்கிய திருவாக்கூரின்கண் அவதரித்த முதல்வரும்; அருமறையோன்—அரிய மறையவர்குலத்தினரும் ஆகிய; சிவனியமந்தலைநின்ற—சைவநெறிக்கண் முற்பட்டு நின்ற; தொல்சீர்நஞ்சிறப்புலி—பழைய சிறப்பமைந்த நமது சிறப்புலிநாயனார். —எ-று. ஏ-அசை. (௬௨)

## சிறுத்தொண்டநாயனார்.

புலியி னதளுடைப் புண்ணியற் கின்னமு தாத்தனதோ
ரொலியின் சதங்கைக் குதலைப் புதல்வ னுடறுணித்துக்
கலியின் வலிகெடுத் தோங்கும் புகழ்ச்சிறுத் தொண்டன்கண்டீர்
மலியும் பொழிலொண் செங்காட்டங் குடியவர் மன்னவனே.

(இ-ள்.) மலியும்பொழிலொண்செங்காட்டங்குடியவர்மன்னவன்=நெருங்கிய சோலைசூழ்ந்த ஒள்ளிய திருச்செங்காட்டங்குடியிலுள்ளார்க்கு முதல்வனை; புலியினதளுடைப்புண்ணியர்க்கின்னமுதா=புலித்தோலை ஆடையாகவுடைய சிவபிரானுக்கு இனிய திருவமுதாக; தனதோரொலியின்சதங்கைக்குதலைப்புதல்வனுடறுணித்து=தன்னுடைய ஒரு ஒலியுள்ள சதங்கையணிந்த மழலைமொழிப்புதல்வனது உடலத்தை அரிந்து; கலியின்வலிகெடுத்தோங்கும்புகழ்ச்சிறுத்தொண்டன்கண்டீர்=அஞ்ஞானத்தின்வலியை அழித்து மிக்க புகழையுடைய சிறுத்தொண்டநாயனார் என்று அறிஞர்களே நீவிர் அறிந்துகொள்ளுங்கள்.—எ-று. ஏ-அசை. (௪௩)

## சேரமான்பெருமாணாயனார்.

மன்னர் பிரானெதிர் வண்ணா னுடலுவ ரூறியநீற்
றன்ன பிரான்றமர் போல வருதலுந் தான்வணங்க
வென்ன பிரானடி வண்ணா னெனவடிச் சேரனென்னுந்
தென்னர் பிரான்கழ றிற்றறி வோனெனுஞ் சேரலனே.

(இ-ள்.) மன்னர்பிரானெதிர்=அரசர்க்குப் பிரானாகிய தன்னெதிரில்; வண்ணானுடலுவரூறியநீற்றன்ன பிரான்றமர்போலவருதலும்=வண்ணானவன் தன்னுடம்பின்கண் உவர்மண்நனைந்து ஊறிய நீற்றினால் அவ்வெண்ணீறணிந்த சிவபிரான் அடியார்போல் வரவும்; தான்வணங்க=தான் எதிர்சென்று வணங்குங்கால்; என்னபிரானடிவண்ணானென=பிரானே இது என்ன அடியேன் வண்ணானென்று அவன்கூற; அடிச்சேரனென்னும்=அடிமை சேரனென்று சொல்லும்; தென்னர்பிரான்=பாண்டியர்க்கும் முதல்வராயுள்ளவர் யாரெனில்; கழறிற்றறிவோனெனுஞ்சேரலன்=கழறிற்றறிவார்நாயனார் என்னும் சேரவமிசத்தரசர்.—எ-று. ஏ-அசை. (௪௪)

சேரற்குத் தென்னா வலர்பெரு மாற்குச் சிவனளித்த
பாரக் கடகரி முன்புதன் பந்தி யிவுளிவைத்த
வீரற்கு வென்றிக் கருப்புவில் வீரனை வெற்றிகொண்ட
சூரற் கெனதுள்ள நன்றுசெய் தாயின்று தொன்றுபட்டே.

(இ-ள்.) சேரற்குத்தென்னாவலர்பெருமாற்கு=சேரமான்பெருமாணாயனாரும் திருநாவலூரின்கண் அவதரித்த நம்பியாரூரருக்கு; சிவனளித்தபாரக்கடகரிமுன்பு=சிவபிரான் கொடுத்தருளிய பருத்தமதந்தங்கிய யானையின்முன்பு; தன்பந்தியிவுளிவைத்தவீரற்கு=தன்பந்தியிலுள்ள குதிரையைச்செலுத்திய வீரரும் ஆகிய; வென்றிக்கருப்புவில்வீரனை=வெற்றியுள்ள கருப்புவில்லேந்திய காமனை; வெற்றிகொண்டசூரற்கு=சயங்கொண்ட சூரருக்கு; இன்றுதொன்றுபட்டு=இன்று பழ அடிமையாய்; எனதுள்ளநன்றுசெய்தாய்=என்மனமே நீ நன்குசெய்தாய்.—எ-று. ஏ-அசை. (௪௫)

## கணநாதநாயனார்.

தொண்டரை யாக்கி யவரவர்க் கேற்ற தொழில்கள்செய்வித்
தண்டர்தங் கோனைக் கணத்துக்கு நாயகம் பெற்றவன்காண்
கொண்டல்கொண் டேறிய மின்னுக்குக் கோல மடல்கடொறுங்
கண்டல்வெண் சோறளிக் குங்கடற் காழிக் கணநாதனே.

(இ-ள்.) தொண்டரையாக்கி=தன்னிடத்துவந்த அடியார்களைத் திருத்தொண்டுக்குரியராகச்செய்து; அவரவர்க்கேற்றதொழில்கள்செய்வித்து=அவரவர்களுக்கேற்ற பணிகளைச்செய்வித்து; அண்டர்தங்கோனைக்கணத்துக்குநாயகம்பெற்றவன்=தேவர்க்கதிபராகிய சிவபிரானது சிறந்த சிவகணங்கட்கு நாயகராம் முதன்மையைப்பெற்றவர் யாரெனில்; கொண்டல்கொண்டேறியமின்னுக்கு=மேகங்களைத் தனக்கிடமாகக்கொண்டு வளர்கின்ற மின்னலாகிய புதல்விக்கு; கோலமடல்கடொறுங்கண்டல்வெண்சோறளிக்கும்=அழகிய பூவிதழ்தோறும் தாழைகள் வெள்ளிய சோற்றைக்கொடுக்கும்; கடற்காழிக்கணநாதன்=கடற்கரையையுடைய சீகாழியில் அவதரித்த கணநாதநாயனார்.—எ-று. ஏ - அசை. (சுசு)

அவரவர்க்குரிய பணிகளாவன:—திருவிளக்கு, திருமாலை, திருநந்தனம் சமைத்தல்முதலியன.

## கூற்றுவநாயனார்.

நாதன் றிருவடி யேமுடி யாகக் கவித்துநல்ல
போதங் கருத்திற் பொறித்தமை யாலது கைகொடுப்ப
வோதந் தழுவிய ஞாலமெல்லா மொரு கோலின்வைத்தான்
கோதை நெடுவேற் களப்பாள னாகிய கூற்றுவனே.

(இ-ள்.) நாதன்றிருவடியேமுடியாகக்கவித்து=சிவபிரான் சூட்டிய திருவடியையே தமக்கு முடியாகச்சூட்டிக்கொண்டு; நல்லபோதங்கருத்திற்பொறித்தமையால்=நல்ல சிவஞானத்தைத் தம் திருவுள்ளத்தில் நிலைபெறச்செய்தமையால்; அதுகைகொடுப்ப=அச்சிவஞானமே தமக்குத்துணையாக; ஓதந்தழுவியஞாலமெல்லாம்=கடல்சூழ்ந்த நிலவுலகம் முழுதும்; ஒருகோலின்வைத்தான்=ஒரு செங்கோலின்கீழ் அடங்கிநிற்கச்செய்தார் யாரெனில்; கோதைநெடுவேற்களப்பாளனாகியகூற்றுவன்=மாலையணிந்த நெடிய வேற்படையை யேந்திய களந்தைக்கோனாகிய கூற்றுவநாயனார்.—எ-று. ஏ-அசை. (சுஎ)

## சுந்தரமூர்த்திசுவாமிகள்துதி.

கூற்றுக் கெவனோ புகறிரு வாரூரன் பொன்முடிமே
லேற்றுத் தொடையலு மின்னடைக் காயு மிடுதருமக்
கோற்றொத்து கூனனுங் கூன்போய்க் குருடனுங் கண்பெற்றமை
சாற்றித் திரியும் பழமொழி யாமித் தரணியிலே.

(இ-ள்.) கூற்றுக்கெவனோபுகல்=இயமனுக்கு எம்மிடத்துச் சம்பந்தம் யாதிருக்கின்றது நீசொல்; திருவாரூரன்பொன்முடிமேல்=நம்பியாரூரர் திருமுடிமேல்; ஏற்றுத்தொடையலுமின்னடைக்காயுமிடுதரும்=சூடுதற்குரிய மாலையும் இனிய முகவாசத்தையும் தினங்கொடுத்துவந்த; அக்கோற்றொற்றுகூன

னுங்கூன்போய்—விளக்கமான கோலையூன்றிச் செல்லும் கூனனும் கூன் நீங்கி; குருடனுங்கண்பெற்றமை—அவ்வாறான குருடனும் கண்ணைப் பெற்றுக்கொண்டது; சாற்றித்திரியும்பழமொழியாமித்தரணியில்—இந்நிலவுலகத்தில் யாவரும் எடுத்துச்சொல்லும் பழமொழியாக இருக்கும் அதனால்.—எ-று ஏ-அசை.()

இவ்வாறான நம்பியாரூரரை வழிபடும் எமக்கும் கூற்றுக்கும் இயைபில்லையென்பது கருத்து. பரவையார் திருமாளிகையில் நம்பியாரூரர்க்கு முன்னாளில் திருமாலையும் அடைக்காயும் கொடுத்துவந்த கூனனும் குருடனும் சிவபிரான் தூதுசென்று பரவையார் பிணக்குத்தீர்த்தநாளில் நம்பியாரூரர் திருவருளால் அவ்விருவருங் கூனுங் குருடும் நீங்கி உய்ந்தனரென்பது சரிதம்.

## பொய்யடிமையில்லாதபுலவர்.

தரணியிற் பொய்மை யிலாத்தமிழ்ச் சங்க மதிற்கபிலர்
பரணர் நக்கீரர் முதனாற்பத் தொன்பது பல்புலவோ
ரருணமக் கீயுந் திருவால வாயரன் சேவடிக்கே
பொருளமைத் தின்பக் கவிபல பாடும் புலவர்களே.

(இ-ள்.) அருணமக்கீயுந்திருவாலவாயரன்சேவடிக்கே—திருவருளை எமக்குத்தரும் திருவாலவாயின்கண் வீற்றிருந்தருளும் சிவபிரான் சிவந்த திருவடிக்கே; பொருளமைத்தின்பக்கவிபலபாடும்புலவர்களே—தாம் கூறும் பொருளையமைத்த இன்பத்தைத்தரும் பல பிரபந்தங்களைப் பாடுகின்ற கவிஞர்களே; தரணியில்தமிழ்ச்சங்கமதில்—நிலவுலகின்கண் பாண்டியனது தமிழ்ச்சங்கத்தில்; கபிலர்பரணர்நக்கீரர்முதல்—கபிலரும் பரணரும் நக்கீரரும் முதலாக; நாற்பத்தொன்பதுபொய்மையிலாப்பல்புலவோர்—பொய்மையில்லாத நாற்பத்தொன்பது புலவர்களென்று சொல்லப்படுவோர்.—எ-று. (சகூ)

## புகழ்ச்சோழநாயனார்.

புலமன் னியமன்னைச் சிங்கள நாடு பொடிபடுத்த
குலமன் னியபுகழ்க் கோகன நாதன் குலமுதலோ
னலமன் னியபுகழ்ச் சோழன தென்பர் நகுசுடர்வாள்
வலமன் னியவெறி பத்தனுக் கீந்ததொர் வண்புகழே.

(இ-ள்.) நகுசுடர்வாள்வலமன்னியவெறிபத்தனுக்கீந்ததொர்வண்புகழ்—விளக்கமான ஒளியையுடைய உடைவாளை வெற்றிமிக்க எறிபத்தநாயனார் கையில் என்னையுங் கொல்லுமென்று கொடுத்த ஒரு வண்மையான கீர்த்தியை; புலமன்னியமன்னை—அயற்புலத்துள்ள அரசர்களையும்; சிங்களநாடுபொடிபடுத்து—சிங்களநாட்டரசனையும் அழித்த; குலமன்னியபுகழ்க்கோகனநாதன்குலமுதலோன்—குலத்தில் நிலைபெற்ற புகழையுடைய கோகனநாதன் என்னும் சோழனது வமிசத்தில் அவதரித்த முதல்வராகிய; நலமன்னியபுகழ்ச்சோழனதென்பர்—நன்மைமிக்க புகழ்ச்சோழநாயனாரதென்று அறிஞர் கூறுவர்.—எ-று.

ஏ - அசை. (ருo)

## நரசிங்கமுனையரையநாயனார்.

புகழும் படியெம் பரமே தவர்க்குநற் பொன்னிடுவோ
னிகழும் படியோர் தவன்மட வார்புனை கோலமெங்கு

நிகழும் படிகண் டவற்கன் றிரட்டிபொன் னிட்டவனி
திகழு முடிநர சிங்க முனையர சன்றிறமே.

(இ-ள்.) தவர்க்குநற்பொன்னிடுவோன்=சிவனடியார்களுக்கு நல்ல பொன் கொடுக்கின்றபொழுது; இகழும்படியோர்தவன்மடவார்புனைகோலம்=யாவரும் இகழ்ச்சிசெய்யும்படி ஒரு தவவேடமுடையானிடத்து மகளிர்களால் செய்யப்பட்ட நகக்குறிமுதலிய கோலமானது; எங்கும்நிகழும்படிகண்டன்றவற்கு=உடம்புமுழுதும் இருப்பதைக்கண்டு அத்தினத்தில் அவனுக்கு; இரட்டிபொன்னிட்டு=இருமடங்கு பொன்கொடுத்து; அவனிதிசழுமுடிநரசிங்கமுனையரசன்றிறம்=நிலவுலகத்தின்கண் கீர்த்திவிளங்கும் முடிசூடிய நரசிங்கமுனையரென்னும் அரசனது நிலைமையை; புகழும்படியெம்பரமே=எடுத்துச்சொல்லும் முறைமை எம்வசத்ததா அன்று.—எ-று. (ருக)

## அதிபத்தநாயனார்.

திறமமர் மீன்படுக் கும்பொழு தாங்கொரு மீன்சிவற்கென்
றுறவமர் மாகடற் கேவிடு வோனொரு நாட்கனக
நிறமமர் மீன்பட நின்மலற் கென்றுவிட் டோன்கமலம்
புறமமர் நாகை யதிபத்த னாகிய பொய்யிலியே.

(இ-ள்.) திறமமர்மீன்படுக்கும்பொழுது=தம் சாதிக்கு அமைந்த வலை படுக்குமிடத்து; ஆங்கொருமீன்சிவற்கென்றுற=அவ்விடத்து ஒருமீனைச் சிவபிரானுக்கென்று பொருந்த; அமர்மாகடற்கேவிடுவோன்=அம்மீனிருக்குங் கடலிலேயே நாள்தோறும் விடுகின்றவரும்; ஒருநாட்கனகநிறமமர்மீன்பட=ஒருதினத்தில் பொன்மயமான மீனானது தன்வலையில் அகப்பட; நின்மலற்கென்றுவிட்டோன்=அதையும் சிவபிரானுக்கென்று விட்டவரும் யாரெனில்; கமலம்புறமமர்நாகை=நகர்ப்புறம்பே தாமரைமலர்கள் விளங்கியிருக்கும் திருநாகையில் அவதரித்த; அதிபத்தனாகியபொய்யிலி=அதிபத்தநாயனாரென்னும் திருப்பெயருடைய மெய்யர்.—எ-று. ஏ-அசை. (ருஉ)

## கலிக்கம்பநாயனார்.

பொய்யைக் கடிந்துநம் புண்ணியர்க் காட்பட்டுத் தன்னடியான்
சைவத் திருவுரு வாய்வரத் தானவன் றாள்கழுவ
வையத் தவர்முன்பு வெள்கிநீர் வாரா விடமனைவி
கையைத் தடிந்தவன் பெண்ணா கடத்துக் கலிக்கம்பனே.

(இ-ள்.) தன்னடியான்=தனக்கு அடியாராயிருந்த ஒருவர்; பொய்யைக்கடிந்துநம்புண்ணியர்க்காட்பட்டு=உலகவாழ்க்கையைத்துறந்து நமது முதல்வருக்கு அடிமைப்பட்டு; சைவத்திருவுருவாய்வர=சைவவேடங்கொண்டு தன் மனைக்கு அடியார்களோடு எழுந்தருள; தானவன்றாள்கழுவ=தான் அவ்வடியாருடைய பாதங்களை விளக்க; வையத்தவர்முன்புவெள்கிநீர்வாராவிட=மனையாள் உலகத்தாருக்கு நாணமடைந்து கரகநீர் விடாதொழிய; மனைவிகையைத்தடிந்தவன்=அம்மனையாளது கையை வெட்டினவர் யாரெனில்; பெண்ணாகடத்துக்கலிக்கம்பன்=திருப்பெண்ணாகடத்தில் அவதரித்த கலிக்கம்பநாயனார்.—எ-று. ஏ-அசை. (ருங)

## கலியநாயனுர்.

கம்பக் கரிக்குஞ் சிலந்திக்கு நல்கிய கண்ணுதலோ
னும்பர்க்கு நாதற் கொளிவிளக் கேற்றற் குடலிலனுய்க்
கும்பத் தயிலம்விற் றுஞ்செக் குழன்றுங்கொள் கூலியினு
னம்பற் கெரித்த கலியொற்றி மாநகர்ச் சக்கிரியே.

(இ-ள்.) கம்பக்கரிக்குஞ்சிலந்திக்குநல்கியகண்ணுதலோன்=கட்டுத்தறியை முனியும் யானைக்கும் சிலந்திப்பூச்சிக்கும் அருள்புரிந்த நெற்றிக்கண்ணையுடையோராகிய; உம்பர்க்குநாதற்கொளிவிளக்கேற்றற்கு=சிவபிரானுக்கு விளக்கமான திருவிளக்கை ஆலயத்தில் இடுவதற்கு; உடலிலனுய்க்கும்பத்தயிலம்விற்றும்=பொருளில்லாதவராய்க் குடத்தில் எண்ணெய் விற்றும்; செக்குழன்றும்கொள்கூலியினுல்=செக்கோட்டியும் தான்பெற்ற கூலியினுல்; நம்பற்கெரித்தகலியொற்றிமாநகர்ச்சக்கிரி=அப்பிரானுக்குத் திருவிளக்கெரித்தவர் யாரெனில் கலியநாயனுர் என்னும் திருவொற்றியூரில் அவதரித்த செக்கார்குலத்தினர்.—எ-று. ஏ-அசை. ஈண்டு உடலென்றது பொருளை. (ருச)

## சத்திநாயனுர்.

கிரிவில் லவர்தம் மடியனைத் தன்முன்பு கிழ்மைசொன்ன
திருவில் லவனையந் நாவரி வோன்றிருந் தானைவெல்லும்
வரிவில் லவன்வயற் செங்கழு நீரின் மருவுதென்ற
றெருவில் விரைகம ழுந்தென் வரிஞ்சைத் திகழ்சத்தியே.

(இ-ள்.) கிரிவில்லவர்தம்மடியனை=மேருவில்லையுடைய சிவபிரான் திருவடியாரை; தன்முன்புகீழ்மைசொன்னதிருவில்லவர்=தம்முன்பு குற்றங்கூறிய கேடுடையாரது; அந்நாவையரிவோன்=அந்நாவை யரிகின்றவரும்; திருந்தானைவெல்லும்வரிவில்லவன்=பகைவரை வெற்றிகொள்ளும் வரிந்துகட்டிய வில்லையுடையவரும் யாரெனில்; வயற்செங்கழுநீரின்மருவுதென்றல்=வயலினிடத்துள்ள செங்கழுநீர் மலரிற்றங்கிவருகின்ற சிறுதென்றலானது; தெருவில்விரைகமழும்=வீதியில் மணங்கமழ்கின்ற; தென்வரிஞ்சைத்திகழ்சத்தி=தெற்கின்கணுள்ள வரிஞ்சைநகரத்தில் வாழ்ந்த சத்திநாயனுர்.—எ-று. ஏ-அசை.
ஐயுருபு பிரித்துக்கூட்டப்பட்டது. (ருரு)

## ஐயடிகள்காடவர்கோன்நாயனுர்.

சத்தித் தடக்கைக் குமரனற் றுதைதன் றானமெல்லா
முத்திப் பதமொரோர் வெண்பா மொழிந்து முடியரசா
மத்திற்கு மும்மைகன் றுலாற் காவைய மேற்றலென்னும்
பத்திக் கடலை யடிகளா கின்றநம் பல்லவனே.

(இ-ள்.) சத்தித்தடக்கைக்குமரனற்றுதைதன்றானமெல்லாம்=வேற்படையேந்திய நீண்ட திருக்கரத்தையுடைய முருகக்கடவுளின் தாதையாகிய சிவபிரான் வீற்றிருந்தருளுந் தலங்கள்தோறும்; முத்திப்பதமோரோர்வெண்பாமொழிந்து=வீட்டு நெறிப்பொருளையுடைய ஓரோர் வெண்பாவை அருளிச்செய்து; அரற்காவையமேற்றல்=முற்றத்துறந்து சிவபிரான்திருப்பணிக்கு ஐயமேற்றல்;

முடியரசாமத்திற்குமும்மைமன்றுலென்னும்—முடிகவித்த அரசராதலினும் மும்மடங்கதிகம் என்றருளிச்செய்யும்; பத்திக்கடல்—பத்திக்கு ஓர்கடல் போன்றவர் யாரெனில்; ஐயடிகளாகின்றநம்பல்லவன்—ஐயடிகள்காடவர்கோன் நாயனார் என்னும் நமது பல்லவச்சோழர்.—எ-று. ஏ-அசை. (ருசு)

பதம் என்றது - ஈண்டுப்பொருளை.

## சுந்தரமூர்த்திசுவாமிகள் துதி.

பல்லவை செங்கதி ரோனைப் பறித்தவன் பாதம்புகழ்
சொல்லவன் றென்புக லூரரன் பாற்றுய்ய செம்பொன்கொள்ள
வல்லவ னாட்டியத் தான்குடி மாணிக்க வண்ணனுக்கு
நல்லவன் றன்பதி நாவலூ ராகின்ற நன்னகரே.

(இ-ள்.) பல்லவைசெங்கதிரோனைப் பறித்தவன்பாதம்புகழ்சொல்லவன்—சூரியனது வாயிற் பற்களைநெரித்த சிவபிரான் திருவடிகளைப் புகழ்கின்ற சொல்லையுடையவரும், தென்புகலூரரன்பால்துய்யசெம்பொன்கொள்ளவல்லவன்—தெற்கின்கணுள்ள திருப்புகலூரரிடத்து அன்பினால் தூய்மையான சிவந்தபொன்னைப் பெற்றுக்கொள்ளவல்லவரும்; நாட்டியத்தான்குடிமாணிக்கவண்ணனுக்குநல்லவன்றன்பதி—திருநாட்டியத்தான்குடியில் வீற்றிருந்தருளும் மாணிக்கவண்ணருக்கு நல்லவரும் ஆகிய நம்பியாரூரரது ஊர் யாதெனில்; நாவலூராகின்றநன்னகர்—திருநாவலூரென்னும் திருப்பதி.—எ-று. ஏ-அசை.(ருஎ)

அவை பகுதிப்பொருள் விகுதி· ஐயுருபு பிரித்துக்கூட்டப்பட்டது.

## கணம்புல்நாயனார்.

நன்னக ராய விருக்குவே ளூர்தனி னல்குரவாய்ப்
பொன்னக ராயநற் றில்லை புகுந்து புலீச்சரத்து
மன்னவ ராய வரற்குநற் புல்லால் விளக்கெரித்தான்
கன்னவி றோளெந்தை தந்தை பிரானெங்க ணம்புல்லனே.

(இ-ள்.) நன்னகராயவிருக்குவேளூர்தனினல்குரவாய்—நல்ல நகரமாகிய இருக்குவேளூரில் அவதரித்துப் பின்வறுமையடைந்து; பொன்னகராயநற்றில்லைபுகுந்து—திருமகள் உறையுளாகிய நல்ல திருத்தில்லையின்கண்சென்று; புலீச்சரத்துமன்னவராயவரற்கு—திருப்புலீச்சரத்தில் வீற்றிருக்கும் முதல்வராகிய சிவபிரானுக்கு; நற்புல்லால்விளக்கெரித்தான்—நல்ல கணம்புல்லினால் விளக்கேற்றினார் யாரெனில்; கன்னவிறோளெந்தைதந்தைபிரான்—திரண்ட கற்போலும் தோள்களையுடைய என்பிதாவுக்கும் தாதை தாதைக்கும் முதல்வராகிய; எங்கணம்புல்லன்—எங்கள் கணம்புல்லநாயனார்.—எ-று. ஏ-அசை. (ருஅ)

## காரிநாயனார்.

புல்லன வாகா வகையுல கத்துப் புணர்ந்தனவுஞ்
சொல்லின வுந்நய மாக்கிச் சுடர்பொற் குவடுதனி
வில்லனை வாழ்த்தி விளங்குங் கயிலைபுக் கானென்பராற்
கல்லின மாமதில் சூழ்கட வூரினிற் காரியையே.

(இ-ள்) கல்லினமாமதில்சூழ்—மணித்திரள்கள் அழுத்திய பெரிய மதில் சூழ்ந்த; கடவூரினிற்காரியை—திருக்கடவூரில் வாழ்ந்த காரிநாயனாரை; புல்லனவாகாவகையுலகத்து—தான்செய்யும் நூல்கள் உலகத்து அற்பமாகாவண்ணம்; புணர்ந்தனவுஞ்சொல்லினவுநயமாக்கி—சொற்பொருளமைந்த அந்நூலையும் அந்நூல் அரங்கேற்றுழிச்சொல்லும் உரையையும் அவையினுள்ளார்க்கு நயப்புடையனவாகச்செய்து; சுடர்பொற்குவடுதனிவில்லனைவாழ்த்தி—ஒளிவீசுகின்ற மேருவாகிய ஒப்பற்ற வில்லையுடைய சிவபிரானைத்துதித்து; விளங்குங்கயிலைபுக்கானென்பர்—விளக்கமான திருக்கயிலையை அடைந்தாரென்று அறிஞர் கூறுவர்.—எ-று. ஆல்-ஏ-அசை. (ருக)

## நின்றசீர்நெடுமாறநாயனார்.

கார்த்தண் முகிற்கைக் கடற்கா ழியர்பெரு மாற்கெதிரா
யார்த்த வமண ரழிந்தது கண்டுமற் றங்கவரைக்
கூர்த்த கழுவி னுதிவைத்த பஞ்சவ னென்றுரைக்கும்
வார்த்தை யதுபண்டு நெல்வேலி யில்வென்ற மாறனுக்கே.

(இ-ள்) கார்த்தண்முகிற்கை—கரிய தட்பமான மேகம்போலும் வண்மைதங்கிய கையையுடைய; கடற்காழியர்பெருமாற்கெதிராய்—கடல்சூழ்ந்த காழிநாட்டாருக்கு முதல்வராகிய ஆளுடையபிள்ளையாருக்கு எதிராய்; ஆர்த்தவமணரழிந்ததுகண்டு—வாதுகூறிய சமணர்கள் தோற்றதைக்கண்டு; ஆங்கவரைக்கூர்த்தகழுவினுதிவைத்த பஞ்சவனென்று—அம்மதுரையில் அச்சமணர்களைக் கழுநுதியில் ஏற்றிய பாண்டியனென்று; உரைக்கும்வார்த்தையது—கூறும் புகழானது; பண்டுநெல்வேலியில்வென்றமாறனுக்கு—முன்னாளில் திருநெல்வேலியில் வந்தெதிர்த்த மாற்றாரை வெற்றிகொண்ட நின்றசீர்நெடுமாறநாயனாருடையது.—எ-று. மற்று-ஏ-அசை. (சுO)

## வாயிலார்நாயனார்.

மாறா வருளரன் றன்னை மனவா லயத்திருத்தி
யாறா வறிவா மொளிவிளக் கேற்றி யகமலராம்
வீறா மலரளித் தன்பெனு மெய்யமிர் தங்கொடுத்தான்
வீறார் மயிலையுள் வாயிலா னென்று விளம்புவரே.

(இ-ள்.) மாறாவருளரன்றன்னை—தம்முயிருள் நீங்காத திருவருளையுடைய சிவபிரானை; மனவாலயத்திருத்தி—மனமாகிய திருக்கோயிலுள் தாபனஞ்செய்து; ஆறாவறிவாமொளிவிளக்கேற்றி—தணியாத உணர்வென்கின்ற ஒளியையுடைய திருவிளக்கேற்றி; அகமலராம்வீறாமலரளித்து—அகமலரென்றுசொல்லும்பெருமையுடைய ஆன்ம புட்பங்களைச்சாத்தி; அன்பெனுமெய்யமிர்தங்கொடுத்தான்—பேரன்பென்னும் மெய்ம்மையான திருவமுதை நிவேதித்தருளினர் யாரெனில்; வீறார்மயிலையுள்—பெருமைநிறைந்த திருமயிலாப்பூரில் அவதரித்த; வாயிலானென்றுவிளம்புவர்—வாயிலார்நாயனாரென்று அறிஞர்கள் கூறுவர்.—எ-று. ஏ-அசை. (சுக)

மல்லிகை முதலிய புறமலராகிய அட்டபுட்பத்திற்கு வேறுதலின் அகமலரென்றும் அவை கொல்லாமை இந்திரியநிக்கிரகம் முதலிய விசேடகுணங்களெட்டாதலின் வீறுமலரென்றுங் கூறினர்.

## முனையடுவார் நாயனார்.

என்று விளம்புவர் நீடூ ரதிபன் முனையடுவோ
னென்று மமரு ளழிந்தவர்க் காக்கூலி யேற்றெறிந்து
வென்ற பெருஞ்செல்வ மெல்லாங் கனகநன் மேருவென்னுங்
குன்றம் வளைத்த சிலையான் றமர்க்குக் கொடுத்தனனே.

(இ-ள்.) நீரேதிபன்முனையடுவோன்=திருநீடேரின்கண் அவதரித்த முதல்வராகிய முனையடுவார்நாயனாரை; என்றுமமருளழிந்தவர்க்காக்கூலியேற்று= எந்நாளும் போரில் தோற்றவர்களுக்காகக் கூலிவாங்கிக்கொண்டு; எறிந்துவென்றபெருஞ்செல்வமெல்லாம்=அவர் மாற்றாரைக்கொன்று வெற்றிகொண்டு அதனால் வந்த மிக்க செல்வம் முழுதையும்; கனகநன்மேருவென்னுங்குன்றம்= பொன்மயமாகிய நல்ல மேருவென்னும் மலையை; வளைத்தசிலையான்=வில்லாகவளைத்த சிவபிரானது; தமர்க்குக்கொடுத்தனனென்றுவிளம்புவர்=அடியார்க்குக் கொடுத்தவரென்று அறிஞர்கள் கூறுவர்.—எ-று. ஏ-அசை. (சுஉ)

## சுந்தரமூர்த்திசுவாமிகள் துதி.

கொடுத்தான் முதலைகொள் பிள்ளைக் குயிரன்று புக்கொளியூர்த்
தொடுத்தான் மதுர கவியவி நாசியை வேடர்சுற்றம்
படுத்தான் றிருமுரு கன்பூண் டியினிற் பராபரத்தேன்
மடுத்தா னவனென்பர் வன்றொண்ட னாகின்ற மாதவனே.

(இ-ள்.) முதலைகொள்பிள்ளைக்குயிரன்று கொடுத்தான்=முதலையுண்ட பிள்ளைக்கு உயிரைக்கொடுத்தவரும்; புக்கொளியூரவிநாசியைமதுரகவிதொடுத்தான்=அதற்காகத் திருப்புக்கொளியூர் அவிநாசியில் மதுரமமைந்த திருப்பதிகம் பாடியருளினவரும்; திருமுருகன்பூண்டியினில்வேடர்சுற்றம்படுத்தான்=திருமுருகன்பூண்டியில் தம்மைச்சூழ்ந்த வேடர்களைக்கெடுத்தவரும்; பராபரத்தேன்மடுத்தான்=மேலான ஞானானந்த வமுதைப் பருகினவரும் யாரெனில்; வன்றொண்டனாகின்றமாதவனவனென்பர்=வன்றொண்டரென்னும் பெரியதவத்தையுடையோரென்று அறிஞர்கள் கூறுவர்.—எ-று. ஏ-அசை. (சுங)

## கழற்சிங்கநாயனார்.

மாதவத் தோர்தங்கள் வைப்பினுக் காரூர் மணிக்குவைத்த
போதினைத் தான்மோந்த தேவிதன் மூக்கை யரியப்பொற்கை
காதிவைத் தன்றோ வரிவதென் றாங்கவள் கைதடிந்தா
னாதமொய்த் தார்வண்டு கிண்டுபைங் கோதைக் கழற்சிங்கனே.

(இ-ள்.) மாதவத்தோர்தங்கள்வைப்பினுக்கு=பெரிய தவமுடையார்களது வைப்பும்; ஆரூர்மணிக்குவைத்தபோதினை=திருவாரூரின்கண்ணுள்ள சிந்தாமணியுமாகிய சிவபிரானுக்குத் திருப்பள்ளித்தாமம் அமைக்கும்படி வைத்திருந்த மலரை; தான்மோந்ததேவிதன்மூக்கையரிய=தானெடுத்துமோந்த தன் மனையாளது மூக்கைச் செருத்துணைநாயனார் அரிய அதனைக்கண்டு; பொற்கைகாதிவைத்தன்றோவரிவதென்று=மலரெடுத்த அழகிய கையை வெட்டியன்றோ மூக்கரியத்தக்கதென்று; ஆங்கவள்கைதடிந்தான்=அவ்விடத்து அவள்கையை வெட்டினார் அவர் யாரெனில்; நாதமொய்த்தார்வண்டுகிண்டு=

ஒலியோடுவீழ்ந்து ஆரவாரிக்கும் வண்டுகள் கொழுதுகின்ற; பைங்கோதைக்கழற்சிங்கன்=பசியமாலையை அணிந்தகழற்சிங்கநாயனர்.—எ-று. ஏ-அசை.

வைப்பு=ஆபத்துக்கு உதவும்படி சேமித்துவைத்த நிதி.

## இடங்கழிநாயனர்.

சிங்கத் துருவனைச் செற்றவன் சிற்றம் பலமுகடு
கொங்கிற் கனக மணிந்தவா தித்தன் குலமுதலோன்
றிங்கட் சடையர் தமரதென் செல்வ மெனப்பறைபோக்
கெங்கட் கிறைவ னிருக்கு வேளூர்மன் னிடங்கழியே.

(இ-ள்.) சிங்கத்துருவனைச்செற்றவன்=நரசிங்க உருவங்கொண்ட திருமாலின் செருக்கைச் சரபமாய் அழித்த நடேசப்பிரானது; சிற்றம்பல முகடு கொங்கிற்கனகமணிந்த—திருவம்பலத்து முகட்டைக் கொங்கின்கண் மாற்றுயர்ந்த பொன்னல் அலங்கரித்த; ஆதித்தன்குலமுதலோன்—சோழகுலத்துக்கு முதலாயுள்ளவரும்; திங்கட்சடையன்ற மரதென்செல்வமென—என்னுடைய செல்வம் இளம்பிறையணிந்த சடையையுடைய சிவபிரான் அடியாரதென்று; பறைபோக்கெங்கட்கிறைவன்=பறையறைவிக்கும் எங்கள் முதல்வராயுள்ளவரும் யாரெனில்; இருக்குவேளூர்மன்னிடங்கழி=இருக்குவேளூரில் அவதரித்த தலைவராகிய இடங்கழிநாயனர்.—எ-று. ஏ-அசை. (சுரு)

## செருத்துணைநாயனர்.

கழிநீள் கடனஞ்ச யின்றூர்க் கிருந்த கடிமலரை
மொழிநீள் புகழ்க்கழற் சிங்கன்றன் றேவிமுன் மோத்தலுமே
யெழினீள் குமிழ்மலர் மூக்கரிந் தானென் றியம்புவராற்
செழுநீர் மருகனன் னாட்டமர் தஞ்சைச் செருத்துணையே.

(இ-ள்.) செழுநீர்மருகனன்னாட்டமர்=செழுமையான நீர்வளமுடைய மருகனாட்டிலுள்ள; தஞ்சைச்செருத்துணை—தஞ்சாவூரின்கண் அவதரித்தசெருத்துணைநாயனாரை; கழிநீள்கடனஞ்சயின்றூர்க்கு=மிக நீண்ட பாற்கடலினுதித்த ஆலாலத்தை அமுதுசெய்த சிவபிரானுக்கு; இருந்தகடிமலரை=திருப்பள்ளித்தாமத்திற்காக வைத்திருந்த வாசனைகமழும் பூவை; மொழிநீள்புகழ்க்கழற்சிங்கன்றன்றேவி=யாவரும் எடுத்துக்கூறும் பெருங்கீர்த்தியை யுடைய கழற்சிங்கநாயனர் மனைவி; முன்மோத்தலும்=சாத்துதற்கு முன் எடுத்து மோந்தவுடன்; எழினீள்குமிழ்மலர் மூக்கரிந்தானென்றியம்புவர்=அழகுமிக்க குமிழம்பூவைப் போலும் அவள் மூக்கை அரிந்தவரென்று அறிஞர்கள் கூறுவர்.—எ-று. ஏ-இரண்டும்-ஆலும்-அசை. (சுசு)

திருப்பள்ளித்தாமம் அமைக்கவைத்த மலருள் அங்கு நழுவிய மலரும் ஒன்றுதலில் அதனையும் இருந்த மலரொன்றூர் அதனை மோத்தல்வைத்த மலருக்கும் பழுதுண்டாக்கலிற் குற்றமாயிற்றென்க.

## புகழ்த்துணைநாயனர்.

செருவிலி புத்தூர்ப் புகழ்த்துணை வையஞ் சிறுவிலைத்தா
யுருவலி கெட்டுண வின்றி யுமைகோனை மஞ்சனஞ்செய்

தருவதோர் போதுகை சோர்ந்து கலசம் விழத்தரியா
தருவரை வில்லி யருளி னிதியது பெற்றனனே.

(இ-ள்.) செருவிலிபுத்தூர்ப்புகழ்த்துணை—செருவிலிபுத்தூரில் அவதரித்த புகழ்த்துணைநாயனார்; வையஞ்சிறுவிலைத்தாய்—அந்தநாட்டில் தானியங்களின் அளவுகுறைந்த பஞ்சகாலமாய்; உருவலிகெட்டுணவின்றி—அதனால் உணவில்லாமல் திருமேனி (இளைத்து) வலிகுன்றி; உமைகோனைமஞ்சனஞ்செய்தருவதோர்போது—சிவபிரானைத் திருமஞ்சனம் ஆட்டும்பொழுது; கைசோர்ந்துகலசம்விழத்தரியாது—தன் கைசோர்ந்து அபிடேககலசம் சிவபிரான் திருமுடியில் விழத் திருவுள்ளத்தில் அதுபொறாமல் வருந்தி; அருவரைவில்லியருளினிதியதுபெற்றனன்—அரிய மேருவை வில்லாகவுடைய அச்சிவபிரான் திருவருளினால் படிக்காசு பெற்றார்.—எ-று. ஏ-அசை. (௬௭)

## கோட்புலிநாயனார்.

பெற்ற முயர்ந்தோன் விரையாக் கலிபிழைத் தோர்தமது
சுற்ற மறுக்குந் தொழிற்றிரு நாட்டியத் தான்குடிக்கோன்
குற்ற மறுக்குநங் கோட்புலி நாவற் குரிசிலருள்
பெற்ற வருட்கட லென்றுல கேத்தும் பெருந்தகையே.

(இ-ள்.) பெற்றமுயர்த்தோன்விரையாக்கலிபிழைத்தோர்—இடபத்தைக்கொடியாக எடுத்தவரது திருவிரையாக்கலி என்னும் திருவாணையைப் பிழைத்தவர்களாகிய; தமதுசுற்றமறுக்குந்தொழில்—தமது சுற்றத்தாரை வாளால் வெட்டுந் தொழிலைப்பூண்ட; திருநாட்டியத்தான்குடிக்கோன்—திருநாட்டியத்தான்குடி என்னும் திருப்பதியில் அவதரித்தமுதல்வரும்; குற்றமறுக்குநங்கோட்புலி—நமது குற்றங்களை நீக்கியருளும் கோட்புலி என்னும் திருநாமமுடையவரும் யாரெனில்; நாவற்குரிசிலருள்பெற்றவருட்கடலென்று—நம்பியாரூரரது திருவருளைப் பெற்ற கருணைக்கடலென்று; உலகேத்தும்பெருந்தகை—உலகினுள்ளார் துதிக்கும் பெருமையுடையோர்.—எ-று. ஏ-அசை. (௬௮)

## சுந்தரமூர்த்திசுவாமிகள் துதி.

தகுமகட் பேசினோன் வீயவே நூல்போன சங்கிலிபாற்
புகுமணக் காதலி னொற்றி யூருறை புண்ணியன்றன்
மிகுமலர்ப் பாதம் பணிந்தரு ளாலிவ் வியனுலக
நகும்வழக் கேநன்மை யாப்புணர்ந் தானாவ லூரரசே.

(இ-ள்.) தகுமகட்பேசினோன்வீய—தக்க மகட்பேசிவிடுத்த கணவன் இறக்க அதனால்; நூல்போனசங்கிலிபால்—வைதவ்வியம் அடைந்த சங்கிலிநாச்சியாரிடத்து; புகுமணக்காதலினால்—தம்மிடத்துதிக்கும் மணவிருப்பால்; ஒற்றியூருறைபுண்ணியன்றன்—திருவொற்றியூரின்கண் வீற்றிருந்தருளும் சிவபிரானது; மிகுமலர்ப்பாதம்பணிந்து—மேலான தாமரைமலர்போலும் திருவடிகளை வணங்கி; அருளாலிவ்வியனுலகம்நகும்வழக்கே—அவர் திருவருளினால் இந்த அகன்ற நிலவுலகத்திலுள்ளார் நகுதற்குரிய ஒழுக்கத்தையே; நன்மையாப்புணர்ந்தான்—நன்மையாகக்கொண்டு அந்நாச்சியாரைத் திருமணம்புரிந்தவர்யாரெனில்; நாவலூரரசு—திருநாவலூரின்கண் அவதரித்த நம்பியாரூரர்.—எ-று. ஏ-இரண்டும்-அசை. (௬௯)

மகட்பேசலென்றது பெண்பேசலென்னும் பொருள்பட்டு நின்றது. தந்தைதாயர் கொடுப்ப தற்குக் குறித்த மணமகன் இறத்தல் அம்மணமகட்கு வைதவ்வியமாதலில் நூல்போன சங்கிலியென்றும், அவளை மணத்தல் இழிவாதலில் நரும்வழக்கென்றும், அவ்விழிவும் சிவபிரான் திருவருள் வழிக்கொண்டஅவர்க்கு நன்காயிற்றென்னுங் கருத்தால் நன்மையாப் புணர்ந்தானென்றுங் கூறினர்.

## பத்தராய்ப்பணிவார்கள்.

அரசினை யாரூ ரமரர் பிரானை யடிபணிந்திட்
டுரைசெய்த வாய்தடு மாறி யுரோம புளகம்வந்து
கரசர ணாதி யவயவங் கம்பித்துக் கண்ணருவி
சொரிதரு மங்கத்தி னோர்பத்த ரென்று தொகுத்தவரே.

(இ-ள்.) அரசினையாரூரமரர்பிரானை=இறைவராகிய திருவாரூரின்கண் வீற்றிருந்தருளும் தேவபிரானை; அடிபணிந்திட்டுரைசெய்தவாய்தடுமாறி=வணங்கித் துதிக்கும் வாய்குழறி; உரோமபுளகம்வந்து=மயிர்க்கூச்செறிந்து; கரசரணாதியவயவங்கம்பித்து=கைகால்முதலிய அங்கங்கள் விதிர்விதிர்த்து; கண்ணருவிசொரிதருமங்கத்தினோர்=ஆனந்தக்கண்ணீர் சொரிகின்ற திருமேனியையுடையவர்கள்; பத்தரென்று தொகுத்தவர்=பத்தரென்று சொல்லப் பட்டவர்.—எ-று. ஏ-அசை. (எ0)

## பரமனையேபாடுவார்.

தொகுத்த வடமொழி தென்மொழி யாதொன்று தோன்றியதே
மிகுத்த வியலிசை யவ்வகை யாலவ்விண் டோயுநெற்றி
வகுத்த மதிற்றில்லை யம்பலத் தான்மலர்ப் பாதங்கண்மே
லுகுத்த மனத்தொடும் பாடவல் லோரொன்ப ருத்தமரே.

(இ-ள்.) தொகுத்தவடமொழிதென்மொழி=நூல்களிற் சிறப்புடைத்தென்று கூறப்பட்ட வடமொழியும் தென்மொழியும் ஆகிய இவைகளுள்; யாதொன்றுதோன்றியதே=எது தன்னிடத்துள்ளதோ அதை; மிகுத்தவியலிசையவ்வகையால்=மேலான இயலும் இசையும் ஆகிய அக்கூறுபாட்டால்; விண்டோயுநெற்றிவகுத்தமதில்=விண்ணளவும் உயர்ந்த உச்சியையுடைய மதில்சூழ்ந்த; தில்லையம்பலத்தானம்மலர்ப்பாதங்கண்மேல்=சிதம்பரசபாநாதரது சிறந்த தாமரைமலர்போலும் திருவடிகளின்மேல்; உகுத்தமனத்தொடும்பாடவல்லோரொன்பருத்தமர்=செலுத்திய மனதுடன் பாடவல்லவரை உத்தமரொன்று அறிஞர்கள் கூறுவர்.—எ-று. ஏ-அசை. (எக)

## சித்தத்தைச்சிவன்பாலேவைத்தார்.

உத்தமத் தானத் தறம்பொரு ளின்ப மொடியெறிந்து
வித்தகத் தானத் தொருவழிக் கொண்டு விளங்கச்சென்னி
மத்தம்வைத் தான்றிருப் பாத கமல மலரடிக்கீழ்ச்
சித்தம்வைத் தாரொன்பர் வீடுபே றெய்திய செல்வர்களே.

(இ-ள்.) வீடுபேறெய்தியசெல்வர்கள்—இம்மையில் வீட்டின்பமடைந்த சிவஞானச்செல்வர்களை; உத்தமதானத்தறம்பொருளின்பமொடியெறிந்து—உத்தமமாகிய சிவபுண்ணியத்தினால் அறம்பொருளின்பமாகிய காட்டை யொடித்தெறிந்து; வித்தகத்தானத்தொருவழிக்கொண்டு—மேன்மையான இதயம் கண்டம் நாவிண்டி புருவமத்தியம் பிரமரந்திரம் என்னும் ஐந்துதானங்களினுள்ள கமலங்களுக்கு மேலானமார்க்கத்தில் சுழுமுனைதிறந்து கும்பிக்கும் அப்பியாசத்தாற்சென்று; விளங்கச்சென்னிமத்தம் வைத்தான்திருப்பாதகமலமலரடிக்கீழ்—விளங்கும்படி சிரசில் மத்தம்பூவை முடித்த சிவபிரானது திருவடித்தாமரைகளென்னும் பராவியாபகத்துள் அடங்கி; சித்தம்வைத்தாரென்பர்—சித்தத்தை ஒருக்கிநின்றவர்கள் என்று அறிஞர்கள் கூறுவர்.—எ-று. ஏ-அசை.

தானமென்றது ஈண்டு அறமெனும் பொருள்பட நின்றது அன்றிச் சர்வசங்கபரித்தியாகம் எனினுமொக்கும். உத்தமத்தானம் என்புழித்தகரம் எதுகை நோக்கி விரிந்தது.

## திருவாரூர்ப்பிறந்தார்.

செல்வந் திகழுதிரு வாரூர் மதில்வட்டத் துட்பிறந்தார்
செல்வன் றிருக்கணத் துள்ளவ ரேயத னாற்றிகழச்
செல்வம் பெருகுதென் னாரூர்ப் பிறந்தவர் சேவடியே
செல்வ நெறியுறு வார்க்கணித் தாய செழுநெறியே.

(இ-ள்.) செல்வந்திகழ்திருவாரூர்மதில்வட்டத்துட்பிறந்தார்—செல்வம் விளங்கிய திருவாரூர்த் திருநகர் மதில்வட்டத்துட்பிறந்தவர்கள்; செல்வன்திருக்கணத்துள்ளவரேயதனால்—சிவபிரான் திருக்கணத்திற் சேர்ந்தவர்கள் அதனால்; திகழச்செல்வம்பெருகுதென்னாரூர்ப்பிறந்தவர்சேவடியே—விளங்கிய உயர்ந்த வளம் மிக்க தெற்கின்கணுள்ள அத்திருவாரூர்ப்பிறந்தவர்களுடைய திருவடியே; செல்வநெறியுறுவார்க்கணித்தாயசெழுநெறி—வீட்டுநெறியை அடைவார்க்குச் சமீபித்த நல்லமார்க்கம்.—எ-று. ஏ-அசை. (எ௩)

## முப்பொழுதுந்திருமேனிதீண்டுவார்.

நெறிவார் சடையனைத் தீண்டிமுப் போதுநீ டாகமத்தி
னறிவால் வணங்கியர்ச் சிப்பவர் நம்மையு மாண்டமரர்க்
கிறையாய்முக் கண்ணுமெண் டோளுந் தரித்தீறில் செல்வத்தொடு
முறைவார் சிவபெரு மாற்குறை வாய வுலகினிலே.

(இ-ள்.) நெறிவார்சடையனை—நெறித்த நீண்ட சடையையுடைய சிவபிரானை; முப்போதுந்தீண்டிநீடாகமத்தினறிவால்—மூன்றுகாலமும் பரிசித்து உயர்ந்த சிவாகம உணர்வினால்; வணங்கியர்ச்சிப்பவர்—வணங்கி யர்ச்சித்து வழிபாடு செய்கின்றவர்; நம்மையுமாண்டமரர்க்கிறையாய்—எம் தரத்தினரையும் அடிமைக்கொண்டு தேவர்களுக்கு முதல்வராய்; முக்கண்ணுமெண்டோளுந்தரித்து—மூன்று கண்களையும் எட்டுப்புயங்களையும் தாங்கி; சிவபெருமாற்குறைவாயவுலகினில்—சிவபிரான் வசித்தற்குரிய சிவலோகத்தில்; ஈறில்செல்வத்தொடுமுறைவார்—அழியாத செல்வத்தோடும் வசிப்பர்.—எ-று. ஏ-அசை.

## முழுநீறுபூசியமுனிவர்.

உலகங் கலங்கினு மூழி திரியினு முள்ளொருகால்
விலஃகுத வில்லா விதியது பெற்றநல் வித்தகர்கா
ணலகில் பெருங்குணத் தாரூரமர்ந்த வரனடிக்கீ
ழிலகுவெண் ணீறுதம் மேனிக் கணியு மிறைவர்களே.

(இ-ள்.) உலகங்கலங்கினுமூழிதிரியினும்=உலகம் சலப்பிரளயத்தால் கலக்கமடைந்தாலும் ஊழிகாலத்தால் மாறுபடினும்; உள்ளொருகால்விலகுதவில்லா=தம்முடைய சித்தம் ஒருகாலத்தும் வேறுபடாத; விதியதுபெற்றநல்வித்தகர்=நியமவிதியைப்பெற்ற நல்லறிவினையுடையவர் யாரெனில்; அலகில்பெருங்குணத்து=அளவுபடாப் பெரிய எண்குணங்களையுடைய; ஆரூரமர்ந்தவரனடிக்கீழ்=திருவாரூரின்கண் வீற்றிருந்தருளும் சிவபிரான் திருவடிநிழலின்கீழ்; இலகுவெண்ணீறுதம்மேனிக்கணியுமிறைவர்கள்=விளங்கிய திருவெண்ணீற்றை விதிப்படி தம் திருமேனியிற்றரிக்கும் முதன்மையையுடையோர்.—எ-று. காண்-ஏ-அசை. (எரு)

## அப்பாலுமடிச்சார்ந்தார்.

வருக்க மடைத்துநன் னாவலூர் மன்னவன் வண்டமிழாற்
பெருக்க மதுரத் தொகைபிறை சூடிதன் பெய்கழற்கே
யொருக்கு மனத்தொடப் பாலடிச் சார்ந்தவ ரென்றுலகிற்
றெரிக்கு மவர்சிவன் பல்கணத் தோர்நஞ் செழுந்தவரே.

(இ-ள்.) வருக்கமடைத்துநன்னாவலூர்மன்னவன்=அடியார்களை வரிசையாகவைத்துத் திருநாவலூரில் அவதரித்த நம்பியாரூரர்; ஒருக்குமனத்தொடு=ஒருப்பட்ட மனதுடன்; பிறைசூடிதன்பெய்கழற்கு=இளம்பிறையைச்சூடிய சிவபிரானது திருவடிக்கு; வண்டமிழான்மதுரத்தொகைபெருக்க=வளவிய தமிழினால் மதுரமிக்க திருத்தொண்டத்தொகை அருளிச்செய்யுமிடத்து; அப்பாலடிச்சார்ந்தவரென்று=அப்பாலுமடிச்சார்ந்தவரென்று; உலகிற்றெரிக்குமவர்=உலகிற் கூறப்பட்டவர்கள் யாரெனில்; சிவன்பல்கணத்தோர்நஞ்செழுந்தவர்=சிவபிரான் பல கணங்களுள் உள்ளிட்டாராகிய நமது உயர்ந்த தவத்தையுடையவர்கள்.—எ-று. ஏ-இரண்டும்-அசை. (எசு)

உலகில் அருளிச்செய்யுமிடத்துக் கூறப்பட்ட எனக்கூட்டுக.

## சுந்தரமூர்த்திசுவாமிகள் துதி.

செழுநீர் வயன்முது குன்றினிற் செந்தமிழ் பாடிவெய்ய
மழுநீள் தடக்கைய னீந்தபொன் னங்குக்கொள் ளாதுவந்தப்
பொழினீ டருதிரு வாரூரில் வாசியும் பொன்னுங் கொண்டோன்
கெழுநீள் புகழ்த்திரு வாரூர னென்றுநாங் கேட்பதுவே.

(இ-ள்.) செழுநீர்வயன்முதுகுன்றினில்=செழுமையாகிய நீர்வளந்தங்கிய வயல்சூழ்ந்த திருமுதுகுன்றில்; செந்தமிழ்பாடி=செப்பமான திருப்பதிகம்பாடி; வெய்யமழுநீள்தடக்கையன்=கொடிய மழுப்படை தங்கிய நீண்ட திருக்கரத்தையுடைய சிவபிரான்; ஈந்தபொன்னங்குக்கொள்ளாது=கொடுத்த பொன்னை அத்திருமுதுகுன்றத்தில் தாம் பெற்றுக்கொள்ளாமல்; வந்தப்பொ

மினீடருதிருவாரூரில்—மணிமுத்தாற்றில் இட்டுச் சோலைகள் உயர்ந்த அந்தத் திருவாரூரில் வந்து; வாசியும்பொன்னுங்கொண்டோன்—தாம் இட்ட பொன்னுக்கு மாற்றுக்குறையுங்கால தன் வாசியையும் பொன்னையுங் குறையாமற்கொண்டவர்; கெழுநீள்புகழ்த்திருவாரூரனென்றுநாங்கேட்பது—மிக்க புகழினையுடைய நம்பியாரூரனென்று நாம் கேள்விப்பட்டது.—எ-று. ஏ-அசை. (எஎ)

## பூசலார்நாயனார்.

பதுமநற் போதன்ன பாதத் தரற்கொரு கோயிலையான்
கதுமெனச் செய்குவ தென்று கொலாமென்று கண்டுயிலா
ததுமனத்தே யெல்லி தோறு நினைந்தருள் பெற்றதென்பர்
புதுமணத் தென்ற லுலாநின்ற வூர்தனிற் பூசலையே.

(இ-ள்.) புதுமணத்தென்றலுலாம்—புதிய மலர்மணத்தை யளைந்த தென்றற்காற்று சஞ்சரிக்கின்ற; நின்றவூர்தனிற்பூசலை—திருநின்றவூரில் அவதரித்த பூசலைநாயனார்; அருள்பெற்றது—திருவருளைப்பெற்றது; பதுமநற்போதன்ன பாதத்தாற்கு—நல்ல செந்தாமரைமலரையொத்த திருவடிகளையுடைய சிவபிரானுக்கு; ஒருகோயிலையான்கதுமெனச்செய்குவது—ஒரு திருக்கோயிலை நான் விரைவிற் செய்துமுடிப்பது; என்றுகொலாமென்றுகண்டுயிலாது—என்றைக்கு ஆகுமோ என்று உறங்காது; அதுமனத்தேயெல்லிதோறுநினைந்தென்பர்—அவ்வாலயத்திருப்பணியைத் தமது இதயத்தில் இரவுதோறுஞ்செய்வதாய் நினைந்தருளி என்று அறிஞர் கூறுவர்.—எ-று. ஏ-அசை. (எஅ)

## மங்கையர்க்கரசியார்.

பூச லயிற்றென்ன னார்க்கன லாகப் பொறாமையினல்
வாச மலர்க்குழற் பாண்டி மாதேவியாமாணிகண்டீர்
தேசம் விளங்கத் தமிழா கரர்க்கறி வித்தவரா
னாசம் விளைத்தா ளருகந் தருக்குத்தென் னாட்டகத்தே.

(இ-ள்.) பூசலயிற்றென்னனார்க்கனலாகப்பொறாமையினல்—பகைவர் மாட்டுப் போர்செய்தற்குரிய அயிற்படையையுடைய நின்றசீர்நெடுமாறநாயனார்க்குத் தீச்சுரம் உண்டாக அதற்குத் தான் சகிக்காமையால்; வாசமலர்க்குழற்பாண்டிமாதேவியாமாணி—வாசனைகமழும் மலர்களை முடித்த அளகத்தையுடைய பாண்டிமாதேவியென்னும் பிராட்டியார்; தேசம்விளங்கத்தமிழாகரர்க்கறிவித்து—உலகத்திலுள்ளார் அறியும்படி ஆளுடையபிள்ளையாருக்கு அந்நோயைத்தெரிவித்து; அவரால்அருகந்தருக்குத்தென்னாட்டகத்துநாசம்விளைத்தாள் கண்டீர்—அப்பிள்ளையாரால் பாண்டிநாட்டில் அருகருக்குக் கேட்டை விளைத்தவள் என்று அறியுங்கள்.—எ-று. ஏ-அசை. (எசு)

## நேசநாயனார்.

நாட்டமிட் டன்றரி வந்திப்ப வெல்படை நல்கினர்தந்
தாட்டரிக் கப்பெற்ற வனென்பர் சைவத் தவரரையிற்
கூட்டு மகப்படக் கோவண நெய்து கொடுத்துநன்மை
யீட்டுமக் காம்பிலிச் சாலிய நேசனை யிம்மையிலே.

(இ-ள்.) சைவத்தவரரையிற்கூட்டுமெகப்பட=சிவனடியார்களது திருவரையிற்றரிக்குங் கீளோடுகூட; கோவணநெய்துகொடுத்து=கோவணத்தையும் நெய்துகொடுத்த; நன்மையீட்டுமெக்காம்பீலிச்சாலியநேசனை யிம்மையில்=சிவபுண்ணியத்தைச் சம்பாதித்த அந்தக்காம்பீலி என்னும் ஊரில் அவதரித்த சாலியர்குலமுதல்வராகிய நேசநாயனாரை இவ்வுலகத்தில்; நாட்டமிட்டன்றரிவந்திப்ப=அந்நாளில்கண்ணை யிடந்தருச்சித்துத் திருமால் வழிபாடுசெய்ய; வெல்படைநல்கினர்தம்=அசுரர்களை வெல்லத்தக்க சக்கரப்படையைக் கொடுத்தருளிய சிவபிரானது; தாட்டரிக்கப்பெற்றவனென்பர்=திருவடிகளைத் தன் இதயத்துத் தியானிக்கப்பெற்றவனென்று அறிஞர்கள் கூறுவர்.—எ-று. ஏ-அசை.(௮0)

## கோச்செங்கட்சோழநாயனார்.

மைவைத்த கண்ட னெறியன்றி மற்றோர் நெறிகருதாத்
தெய்வக் குடிச்சோழன் முன்பு சிலந்தியாய்ப் பந்தர்செய்து
சைவத் துருவெய்தி வந்து தரணிநீ டாலயங்கள்
செய்வித் தவன்றிருக் கோச்செங் கணானெனுஞ் செம்பியனே.

(இ-ள்.) மைவைத்தகண்டனெறியன்றி=கருமைதங்கிய திருமிடற்றையுடைய சிவபிரான் அருளிய சைவநெறியேயன்றி; மற்றோர்நெறிகருதா=வேறொருசமயநெறியை மனதில் நினையாத; தெய்வக்குடிச்சோழன்=தெய்வீகமுள்ள சோழர்குடியில் அவதரித்தவரும்; முன்புசிலந்தியாய்ப்பந்தர்செய்து=முற்பிறப்பில் சிலந்திப்பூச்சியாய்த் திருவானைக்காவலிற் பந்தர்செய்து; சைவத்துருவெய்திவந்து=பின் சைவராக அவதரித்து; தரணிநீடாலயங்கள்செய்வித்தவன்=நிலவுலகின்கண் மிக்க சிவாலயங்களில் திருப்பணிசெய்வித்தவரும் யாரெனில்; திருக்கோச்செங்கணானெனுஞ்செம்பியன்=செல்வம் மிக்க கோச்செங்கட்சோழநாயனார்.—எ-று. ஏ-அசை. (௮௧)

செம்பொ னணிந்து சிற்றம் பலத்தைச் சிவலோகமெய்தி
நம்பன் கழற்கீ ழிருந்தோன் குலமுத லென்பர்நல்ல
வம்பு மலர்த்தில்லை யீசனைச் சூழ மறைவளர்த்தா
னிம்ப நறுந்தொங்கற் கோச்சங்க ணானெனு நித்தனையே.

(இ-ள்.) நல்லவம்புமலர்த்தில்லையீசனைச்சூழ=நல்ல வாசம் வீசும் மலர்களையுடைய சோலைசூழ்ந்த தில்லையின்கண் நடேசப்பிரானைச் சூழும்படி; மறைவளர்த்தான்=தில்லைமூவாயிரவர்க்குத் திருமாளிகைகள் செய்வித்தவராகிய; நிம்பநறுந்தொங்கல்=நறுவிய வேப்பம்பூமாலையையணிந்த; கோச்செங்கணானெனுநித்தனை=கோச்செங்கட்சோழநாயனாரென்னும் முத்திநெறியடைந்தவரை; சிற்றம்பலத்தைச்செம்பொனணிந்து=சிதம்பரசபையைப் பொன்னால் அலங்கரித்து; சிவலோகமெய்திநம்பன்கழற்கீழிருந்தோன்=சிவலோகத்தை யடைந்து சிவபிரான் திருவடிநிழலின்கட்சென்ற இரணியவன்மச்சோழனது; குலமுதலென்பர்=குலத்தில் அவதரித்த முதல்வனென்று அறிஞர்கள் கூறுவர்.—எ-று. ஏ-அசை. (௮௨)

பாண்டிதேசத்திற்கும் அரசராயிருந்தமைதோன்ற நிம்பநறுந்தொங்கற் கோச்செங்கணான் என்றார்.

## திருநீலகண்டயாழ்ப்பாணநாயனார்.

தனையொப் பருமெருக் கத்தம் புலியூர்த் தரும்புகழோ
னினையொப் பருந்திரு நீலகண் டப்பெரும் பாணனைநீள்
சினையொப் பலர்பொழிற் சண்பையர் கோன்செந் தமிழொடிசை
புனையப் பரனருள் பெற்றவ னென்பரிப் பூதலத்தே.

(இ-ள்.) தனையொப்பருமெருக்கத்தம்புலியூர்த்தரும்புகழோன்=தனக்கொப்பில்லாத திருவெருக்கத்தம்புலியூரில் அவதரித்த பெரும்புகழையுடையோராகிய; நினையொப்பருந்திருநீலகண்டப்பெரும்பாணனை=நினைவுக்கடங்காத பத்திவலியினையுடைய திருநீலகண்டயாழ்ப்பாணநாயனாரை; நீள்சினையொப்பலர்பொழில்=நீண்ட கிளைகள் ஒத்து மலர்கின்ற சோலையையுடைய; சண்பையர்கோன்செந்தமிழொடு=சீகாழியில் அவதரித்த ஆளுடையபிள்ளையார் திருப்பதிகங்கள் பாடுந்தோறும்; இசைபுனையஇப்பூதலத்துப்பரனருள்பெற்றவனென்பர்=பண்ணமைய யாழில் வாசிக்க இந்நிலவுலகத்தில் சிவபிரான் திருவருளைப் பெற்றவனென்று அறிஞர்கள் கூறுவர்.—எ-று. ஏ-அசை. (அங)

## சடையநாயனார்.

தலம்விளங் குந்திரு நாவலூர் தன்னிற் சடையனென்னுங்
குலம்விளங் கும்புக ழோனை யுரைப்பர் குவலயத்தி
னலம் விளங் கும்படி நாம்விளங் கும்படி நற்றவத்தின்
பலன்விளங் கும்படி யாரூ ரனைமுன் பயந்தமையே.

(இ-ள்.) தலம்விளங்குந்திருநாவலூர்தன்னில்=நிலவுலகத்தில் விளங்கிய திருநாவலூரில் அவதரித்த; சடையனென்னுங்குலம்விளங்கும்புகழோனை=குலத்தாற்சிறந்த சடையனாரென்னும் புகழுடையவரை; நலம்விளங்கும்படிநாம்விளங்கும்படி=உலகத்தில் தவநெறிகள் விளங்கும்பொருட்டும் அதனால் நாமெல்லாம் நன்னெறி யடையும்பொருட்டும்; நற்றவத்தின்பலன்விளங்கும்படி=நல்ல தவத்தாலாய பயன் விளங்கும்பொருட்டும்; ஆரூரனைமுன்பயந்தமை=நம்பியாரூரரை முன்னாளிற்பெற்ற காரணத்தால்; உரைப்பர்குவலயத்தில்=நிலவுலகத்தில் அறிஞர்கள் புகழ்ந்து கூறுவார்கள்.—எ-று. ஏ-அசை. (அச)

## இசைஞானியார்.

பயந்தாள் கறுவுடைச் செங்கண்வெள்ளைப் பொள்ள னீள்பணைக்கைக்
கயந்தா னுகைத்த நற்காளையை யென்றுங் கபாலங்கைக்கொண்
டயந்தான் புகுமர னாரூர்ப் புனிதவ ரன்றிருத்தா
ணயந்தா டனதுள்ளத் தென்று முரைப்பது ஞானியையே.

(இ-ள்.) கறுவுடைச்செங்கண்வெள்ளை=கறுவுதலையுடைய சிவந்த கண்களையும் வெள்ளைநிறத்தையும்; பொள்ளனீள்பணைக்கை=உட்டுளையுள்ள பனைபோலும் நீண்ட துதிக்கையினையும் உடைய; கயமுகைத்தநற்காளையைப்பயந்தாளென்றும்=யானையைத் திருக்கயிலைக்கு நடாத்திய நல்ல நம்பியாரூரரைப் பெற்றனளென்றும்; கபாலங்கைக்கொண்டு=கபாலத்தைத் திருக்கரத்திற் றாங்கிக்கொண்டு; அயந்தான்புகுமரன்=ஐயத்தைத் தானேற்றுண்ணும் முதல்வராகிய; ஆரூர்ப்புனிதவரன்திருத்தாள்=திருவாரூரின்கண் வீற்றிருந்தருளும் சிவபிரா

ன் திருவடிகளை; நயர்தாடனதுள்ளத்தென்றுஞானியையுரைப்பது—தனது இதயத்து எந்நாளும் தியானிக்கின்றவனென்றும் இசைஞானியாரை அறிஞர்கள் கூறுவர்.—எ-று. தான்-ஏ-அசை. (அரு)

## சுந்தரமூர்த்திசுவாமிகள்துதி.

ஞானவ வாரூ ரரசனை யல்லது நாமறியோ
மானவ வாக்கை யொடும்புக் கவனை வளரொளிப்பூண்
வானவ ராலு மறிதற் கரிய வடகயிலைக்
கோனவன் கோயிற் பெருந்தவத் தோர்தங்கள் கூட்டத்திலே.

(இ-ள்.) வளரொளிப்பூண்வானவராலுமறிதற்கரிய—பரம்பிய ஒளியையுடைய ஆபரணங்களையணிந்த தேவர்களாலும் அறிதற்கருமையான; வடகயிலைக்கோனவன்கோயில்—வடகயிலைக்கணுள்ள சிவபிரானது கோயிலில் வாழும்; பெருந்தவத்தோர்தங்கள்கூட்டத்தில்—பெரிய தவத்தையுடைய அடியார் திருக்கூட்டத்தில்; ஞானவவாரூரரசனையல்லது—சிவஞானமிக்க நம்பியாரூரனையல்லாது; மானவவாக்கையொடும்புக்கவனைநாமறியோம்—மனுடவுடம்புடன் போனவனை நாமறியோம்.—எ-று. ஏ-அசை. (அசு)

## திருத்தொண்டத்தொகையிலுள்ள கூட்டவடியார்கள்

### தனியடியார்கள்.

கூட்டமொன் பானொ டறுபத்து மூன்று தனிப்பெயரா
யீட்டும் பெருந்தவத் தோரொழு பத்திரண் டாம்வினையை
வாட்டுந் தவத்திருத் தொண்டத் தொகைபதி னொன்றின்வகைப்
பாட்டுந் திகழ்திரு நாவலூ ராளி பணித்தனனே.

## திருத்தொண்டத்தொகைப்பதிகக்கவிகளின்

### முதனிணைப்பு.

பணித்தநற் றொண்டத் தொகைமுதற் றில்லை யிலைமலிந்த
வணித்திகழ் மும்மைத் திருநின்ற வம்பரு வார்கொண்டதோ
ரிணைத்திகழ் பொய்யடி மைக்கறைக் கண்டன் கடல்சூழ்ந்தபின்
மணித்திகழ் சொற்பத்தர் மன்னிய சீர்மறை நாவனொடே.

### பலனருள்கவி.

ஓடிடும் பஞ்சேந் திரியமொடுக்கி யென் னுள்வினைகள்
வாடிடும் வண்ணநின் றெத்தவஞ் செய்தனன் வானினுள்ளோர்
சூடிடுஞ் சீர்த்திருப் பாதத்தர் தொண்டத் தொகையிலுள்ள
சேடர்தஞ் செல்வப் பெரும்புக ழந்தாதி செப்பிடவே.

திருச்சிற்றம்பலம்.

நம்பியாண்டார்நம்பி அருளிச்செய்த
கலித்துறைத்திருவந்தாதி முற்றிற்று.

உ

கணபதிதுணை.

# முகவுரை.



வேதாகமங்களானும் புராண இதிகாசங்களானும் மிருதிகளானும் முதற் கடவுளெனக் கூறப்படும் சிவபிரானைப், பத்திஞானங்களாலடைந்து வீடுகூடினோர் திருத்தொண்ட ரெனப்படுவர்.

பத்தியாவது பஞ்சகஞ்சுகனாய் உடம்பினுள் நிற்கும் ஜீவான்மா, அஞ்ஞானவசத்தால் சரீரம் நான், இதுசுகம், இதுதுக்கம், இதுமோகமென வினையின் வழி முதல்வனாணையால் மயங்கி, விபரீதமான சுகரூபியாயும், துக்கரூபியாயும் மோகரூபியாயும், நின்று வினைப்பயன் நுகர்வுழி இருவினையொப்பும் மலபரிபாகமும் சத்திநிபாதமும் பிறந்து அதனாலஞ்ஞானம் சிறிது நீங்கத்தம்மோடுடனாய் நிற்கும் முதல்வனிடத்து எவ்வகைப்பற்றும் தன்னை நீங்க அம்முதல்வனையடைய வேண்டுமென்று தோன்றும் அன்பேயாம்.

ஞானமாவது அவ்வன்பு காரணமாக முதல்வனை யுள்ளவா றுணரும் உணர்வேயாம். அவ்வன்பு, தீவிரதரம், தீவிரம், மந்ததரம், மந்தம் என்னும் சத்தி பதிதற்கேற்ப நான்கு வேறுபாடுடையது. அன்புவழித்தாய் முதல்வனை நாடி உணர்தலால் இவ்வன்பு சிவஞானத்துக்குக் காரணமாய் அதனின் வேறெனவும் அவ்வன்பே முதல்வனின் வேறாகாது நிற்கின் சிவஞானமாகவும் கூறப்படும். இதனை அநந்நியபத்தி என்பர். இது சிவஞானத்தின் வேறாகாமை "அன்பு சிவமிரண் டென்ப ரறிவிலார், அன்பே சிவமாவதியாரு மறிந்திலர், அன்பே சிவமாவதியாரு மறிந்தபின், அன்பே சிவமா யமர்ந்திருப்பாரே" என்னுந் திருமந்திர மாலையானுங் காண்க. "சார்புணர்ந்து சார்புகெட ஒழுகின்" என்னுந் திருக்குறளும் இக்கருத்துடையதேயாம். இவ்வன்புதிக்குங்கால் தமக்குப்பற்றாயுள்ள பொருள்போலிருந்த யாவும் பற்றில்லனவாகத் தாம்பற்றும் பொருளாகிய சிவபிரான் வடிவெனப்படும் குருலிங்க சங்கமங்களே பொருளெனத் தோன்றும்.

இப்பத்தி அந்தரங்க பத்தியும் பகிரங்க பத்தியும் என இருவகைப்படும். அந்தரங்க பத்தியாவது, சிவபிரானைப் பலகாற் சிந்தித்தல், உள்ளங்குளிர்தல், உரோம முகிழ்த்தல், ஆனந்தக் கண்ணீர் விடல், கண்டம் வியர்த்தல், மொழிதடுமாறல், குருலிங்க சங்கமங்களைத் தரிசித்த மாத்திரத்தில் பேரவா வுறுதல் முதலியன.

பகிரங்க பத்தியாவது - திருவைந் தெழுத்தோதல், அதித்தல், பூசித்தல்,
திருநந்தன்ஞ் செய்தல், திருப்பள்ளித் தாமமமைத்தல், குருபணிசெய்தல், அடி
யார்பணி செய்தல் முதலியன. இது அந்தரங்க பத்திக்கு அங்கமாம். இவ்வந்த
ரங்க பத்தி யுடையார்க்குச் சிவபிரான் அவருள்ளத்துத் திருவருள் ஞானத்தால்
வெளிப்பட் டருள்வது போலப் புறத்தும் வெளிப்பட்டு அவர் துன்பகற்றுவர்.
அது திருக்குறிப்புத் தொண்டர்க்குக் கல்லினும் அரிவாட்டாயனுர்க்குக் கமரி
னும் கண்ணப்பருக்கு இலிங்க மூர்த்தியினும் வெளிப்பட்டமையாற் காண்க.

அத்திருத் தொண்டர் சாம்சித்தரும், வைநயிகரும் என இருவகையர்.
சாம்சித்தராவார் வேதசிவாகமங்களில் விதிக்குஞ் சிவபுண்ணியங்களையும்
சாலம்ப யோகங்களையும் அநுட்டித்து, அதனுல் நின்மலமான அந்தக் கரணங்
களை யுடையராய் அத்தேகம் விட்டும் அவ்வாசனை நீங்காது பூமியில் அவ
தரித்துத் தீவிரதரம், தீவிரம் என்னும் சத்திநிபாத முடையராய்ப் பத்தி ஞானங்
களை அடைந்தவர். வைநயிகராவார் மந்ததரம், மந்தம் என்னும் மலபரி பாகத்
தால் வேதாகமங்களை ஓதியுணர்ந்து குரு உபதேசத்தால் பத்தி ஞானங்களை
அடைந்தவர். இவருள் சாம்சித்தர் உத்தம பத்தியுடைய ரென்றும், வைநயிகர்மத்
திம பத்தியுடைய ரென்றுங் கூறப்படுவர். அவருள் சாம்சித்தரே சிறப்புடை
யோரென்பது "பண்டைநற் றவத்தாற் றோன்றிப் பரமனைப் பத்தி பண்ணுந்,
தொண்டரைத் தானே தூய கதியினிற் றெருப்பன்." என்னும் சிவஞான சித்தித்
திருவிருத்தத்தானுங்காண்க. இச்சாம்சித்தர் சத்வகுணுதிக்கமான முன்மூன்று
யுகங்களினும் சனகாதி யோகியர், காசிபமுனிவர், பரத்துவாசமுனிவர், ததீசி
முனிவர், காத்தியாயனமுனிவர், சாமதக்கினிமுனிவர், துர்வாசமுனிவர், வியாக்
கிரபாதமுனிவர், பதஞ்சலிமுனிவர், பராசரமுனிவர், உபமன்னியுமுனிவர் முத
லிய அநேகர் புராணங்களில் விதந்து கூறப்பட்டாருளர். தமோகுணுதிக்கமான
இக்கலியுகத்தில் கலிமலின சித்தர்களாயிருக்கும் எங்களை அடிமைகொள்ளும்
பொருட்டுத் திருவாரூரில் புற்றிடங்கொண்டார் "தில்லைவாழந்தண" ரென்று
அடியெடுத்துக் கொடுக்க, திருத்தொண்டத்தொகை பாடியருளிய சுந்தரமூர்த்தி
சுவாமிகளோடு அத்திருத்தொண்டத்தொகையிலடங்கிய திருவடியார் அறுபத்
து மூவரும் உத்தமமான பத்திஞானங்களை யடைந்த சாம்சித்தரேயாம். இந்தச்
சாம்சித்தராகிய தனியடியார் அறுபத்துமூவர் சரித்திரத்தையும் தொகையடி
யார் இயல்பையும் திருக்கைலாயமலைக்கு சுந்தரமூர்த்திசுவாமிகள் எழுந்தருளுங்
கால் அரபத்தமுனிவர் முதலியோர்க்கு உபமன்னியு மகாமுனிவர் அருளிச்செய்
தார்.

அன்றியும் அத்திருத் தொண்டத் தொகையைத் திருநாரையூரில் பொல்
லாப் பிள்ளையார் திருவருள்பெற்ற நம்பியாண்டார்நம்பி கலித்துறை யந்தாதி
யாக வகுத்து அபயகுல சேகரசோழ மகாராஜனுக்கு அருளிச்செய்தார். அத்
திருவந்தாதியைச் சேக்கிழார் நாயனு ரிடத்துக் கேட்ட அநபாய சோழமகா
ராஜா வானவர் உத்தமோத்தமமான இத்திருத்தொண்டர் சரிதத்தை யாவரும்
கேட்டுய்யும்படி புராண ரூபமாய் விரித்துப்பாடி அருளுக என்று அந்நாய

னுரைக்கேட்க அவர் தில்லையை யடைந்து நடேசப்பிரானை வணங்கி ஆனந்த பரவசராய் "உமது அடியர்சீரை அடியேன்பாட அடியெடுத்துக் கொடுக்க" எனப்பிரார்த்திக்குங்கால் அவர்க்கு "உலகெலா" மென அடியெடுத்துக் கொடுக்க இத்திருத் தொண்டர் புராணத்தை விரித்துப் பாடி யருளினர்.

இதனை விரித்துப்பாடுதற்கு வல்லப முடையார் இந்நாயனுரோ யென்பது.

"கருங்கடலைக் கைநீத்துக் கொளவெளிது முந்நீர்க் கடற்கரையி னுண்மணலை யெண்ணியள விடலாம், பெருங்கடன்மேல் வருந்திரை யை யொன்றிரண்டென் றெண்ணிப் பிரித்தெழுதிக் கடையிலக்கம் பிரி த்துவிடலாகும், தருங்கடலின் மீனை யளவிடலாகும் வானத் தாரகை யை யளவிடலாஞ் சங்கரன்று டமது, சிரங்கொடிருத் தொண்டர்புரா ணத்தையளவிட நஞ் சேக்கிழார்க் கெளிதலது தேவர்க்குமரிதே."

என உமாபதிசிவாசாரியர் அருளிய செய்யுளானுமுணர்க.





தில்லைநடராஜர் சேக்கிழாருக்கு "உலகெலாம் என்னும்" அருண்மொழி
அளித்தது.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

திருத்தொண்டர் புராணமென்னும்

# பெரியபுராணம்.

## முதற்காண்டம்.

### பாயிரம்.

நடேசர் துதி.

உலகெ லாமுணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதிய னம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்.

இதனது பதப்பொருள்.

உலகெலா முணர்ந் தோதற் கரியவன்=அறிஞர்கள் யாவரும் (தமக்குக்* காட்டாக நின்றுணர்த்தும் திருவருட்குறிச் சிவஞானத்தால் இவ்வியல்பினனென) உணர்ந்தும்(அவ்வியல்பை) எடுத்தோதுதற்கரியவனும்; நிலவுலாவிய நீர்மலிவேணியன்=இளம்பிறை தவழும் கங்கை நீர்மிக்க சடையையுடையவனும்; அலகில் சோதியன்=அளவுபடாத ஒளிப்பிழம்பான திருமேனியை யுடையவனுமாகிய; அம்பலத்தாடுவான்=திருவம்பலத்தின்கண் ஆனந்த நிருத்தஞ்செய்தருளுகின்ற நடேசப்பிரானது; மலர்சிலம்படி வாழ்த்திவணங்குவாம்=மலராகின்ற திருச்சிலம்பணிந்த குஞ்சிதபாதத்தைத் துதித்து (யாம்) வணங்குவாம் - எ-று.

விசேடணம் விசேடியத்தை யடையுமென்னும் நியாயத்தால் அரியவன், வேணியன், சோதியன், என்னும் விசேடணங்கள் ஆடுவானென்னும் விசேடியத்தை ஏற்று நின்றன.

உலகமென்னும் பலபொருள் ஒருசொல் ஈண்டு அறிஞரை உணர்த்தி நின்றது. எல்லாமென்னும் விரவுப்பெயர் உணர்தற்குரிய அறிஞர் எல்லாரையுந் தழுவிநின்றது. சித்தசிவயோகி சாத்தியசிவயோகி என்னும் இவ்வறிஞர்களால்

* காட்டு=விளக்கும்கருவி கண்ணுக்கு விளக்குமுதலியனபோல.

நடேசப்பிரானது சொரூப இயல்பு உணரப்படாதேல் அது முயற்கோடுபோல இல்பொருளாய்ப் பயன்படாதாம். அதனுல் உணர்ந்தென்றும், உணர்ந்தவாறுரைதற்கு அவ்வுணர்ச்சி பொருள்மாத்திரமாய் உணரும் இந்திரியப்பிரத்தியட்சமென்னும் நிருவிகற்பஞானத்துக்கும் பொருள், கன்மம், குணம், சாதி, பெயர், என்னும் ஐந்தனோடு விசேடித்துணரும் மானசப் பிரத்தியட்சமென்னும் சவிகற்பஞானத்துக்கும் வேறாய் இந்திரியங்களையும் அந்தக்கரணங்களையும் அபேட்சியாத நிருவிகற்பஞானமாதலின் ஓதுதல் பொருந்தாது; அதனுல் ஓதற்கரியவனென்றுங் கூறினர். அந்த ஞானமாவது - தத்துவசுத்தியின் வழித்தாய் ஆன்மசுத்தி செய்த சிவயோகிகள் சிவசத்தி விளக்கு விளக்கிய ஆன்மசிற்சத்தியால் நிருவிகற்பமாக முதல்வ னியல்பைச் சிந்தித்துணர்வது. இதில் சித்தத்தின் தமோகுணவிருத்தியையும் ரசோகுணவிருத்தியையும் அடக்கி மேற்பட்ட ஏகாக்கிரமென்னும் சத்துவகுணவிருத்தியும் அவர்க்கு அக்காலத்து ஒடுங்கிநிற்கும். அதனுல் நிருவிகற்பமாயிற்று - இதனை யோகநூலார் அசம்பிரக்ஞா சமாதி என்பர். சைவசித்தாந்திகள் நிராலம்ப சிவயோக சமாதி என்பர். திருக்கோவையாருள் "உணர்ந்தார்க் குணர்வரியோ" னெனக் கூறியதும் இக்கருத்தேயாமென்பது அவ்வுரையானுங் காண்க. நிலவு - பண்பாகுபெயர். உலாவிய - என்னும் பெயரெச்சம் வேணி என்னும் இடப்பெயர்கொண்டது. உலாவிய வேணியன்என இயையும். "நிலவுலாவிய நீர்மலிவேணியன்" என்பதற்கு, நிலவு உலாவுதற்குக் காரணமாய்க்கங்கை நீர்மலிந்தவேணியனென்றுரைத்தலுமொன்று. அவ்வாறு கூறுமிடத்து உலாவிய என்னுங் காரியப்பொருட்டாகிய எதிர்காலச் செயவெனெச்சம் - மலி என்னுந் தன்காரணமாகிய பிறவினைகொண்டதென்க. தக்கன் சாபத்தாற் றளர்ந்து சரணடைந்த பிறையை வாழ்வித்ததனுல் சார்ந்தாரைக்காக்கும் அலுப்தசத்தியென்னும் பேரருளுடைமையும், திருமால் பிரமன் முதலிய யாவராலும் அடக்கற்கரிய குடிலைகங்கையின் செருக்கை அடக்கி அதனைத் தரித்ததனுல் எல்லாத் தேவர்க்கும் மேலாம் அனந்த சத்தியென்னும் அளவிலாற்றலுடைமையுந் தோன்ற, நிலவுலாவிய நீர்மலிவேணியனென்றார். சுதந்தரனென்னுந் தன்வயத்தனுதலும் விசுத்த தேகமென்னுந் தூயவுடம்பினனுதலும் ஈண்டே அடங்கும். அடங்கவே கூறாது சித்திக்கும் அநாதிபோதமென்னும் இயல்பாகவேபாசங்களினீங்குதலும் நிராமயான்மாவென்னும் இயற்கை உணர்வுடைமையும் சர்வஞ்ஞத்துவமென்னும் முற்றுணர்வுடைமையும் திர்ப்தி என்னும் வரம்பிலின்பமுடைமையும்பெற்றும். அலுப்த சத்திமுதல் விசுத்ததேகம் இறுவாய் நான்கு குணங்களும் கிரியாசத்தியின் தன்மமெனவும், அநாதிபோதம் முதல் திர்ப்தி இறுவாய் நான்கும் ஞானசத்தியின் தன்மமெனவும் கூறுவர். இவ்வாறு எண்குணமுடையனென்பது. "எட்டுவான் குணத்தீசனெம்மான்" என்றும் "இறையவனை மறையவனை யெண்குணத்தினனை" என்றுங் கூறிய திருவாக்குகளானுமுணர்க. ஒளியுள்ள பொருள்களாகிய சூரியன், சந்திரன், அக்கினி என்னும் புறவொளிகட்கும். இந்திரியம், மனசு, ஆன்மபோதம் என்னும் அகவொளிகட்கும் ஒளிகொடுக்கும் பொருளாய் சுயஞ்சோதியாய் நிற்றலில் அலகில் சோதியனென்றும், அவ்வித மேன்மையையுடையனேனும் யாவருங்காண அருட்படிவங்கொ

ண்டு கனகசபையின்கண் ஆனந்த கிருத்தஞ் செய்தருளுகின்றாரென்பது தோன்ற அம்பலத்தாடுவானென்றுங் கூறினர் பக்குவான்மாக்கள் உள்ளத்தில் மேலாம் அதிசயகுணங்களோடு மலர்தலில் மலர்சிலம்படி என்றார். அம்பலம் விராட்புருடனது இதயதாமரையின்கணுள்ள பரமாகாசத்தில் வியாபகமான சிதாகாசம். அது சதாசிவர் முதலான மூர்த்திகள் ஐவரும் உதித்தொடுங்குதற்குக் காரணமான தகராகாசமென்று அறிஞர் கூறுவர். ஆடல் தூலபஞ்ச கிருத்தியங்கட்கும் சூட்சுமபஞ்சகிருத்தியங்கட்கும் காரணமான ஆனந்தநிருத்தம். சிலம்பு பராநாதமென்க. வாழ்த்திவணங்குவாமென்றதனால் வாழ்த்தும் வணக்கமுமாகிய இருவகைமங்களமும் பெற்றாம். யாம் என்னும் எழுவாய் மறைந்து நின்றது. வணங்குவாமென்பது உயர்வின்கண்வந்த தனித்தன்மைப் பன்மை வினைமுற்று. ஈண்டாசிரியர் சேக்கிழார்நாயனார் அறுபத்துமூன்று நாயன்மாரும் ஞானம், யோகம், கிரியை, சரியை என்னும் நாற்பாதங்களையும் அநுட்டித்தவரென்பதுதோன்ற, உலகெலாமுணர்ந்தோதற்கரியவனென்றதனால் ஞானதரிசனமும், அலகில்சோதியனென்றதனால் சுயஞ்சோதிக்கிடனான விந்துச்சோதியுங் கொள்ளப்படுதலின் யோகதரிசனமும், அம்பலத்தாடுவான் என்றதனால் தியானித்துப் பூசிக்கும் மந்திரமய சரீரமும் பெறப்படுதலிற் கிரியாபூசையும், வாழ்த்திவணங்குவாமென்றதனால் சரியைத்தொண்டும், தொகுத்துக்கூறியவாறுகாண்க. இவ்வாறு நூனுதலிய பொருளைத்தொகுத்துக்காட்டுதல் மங்கலவாழ்த்திற் கிலக்கணமென்றுணர்க. (க)

ஊனடைந்த வுடம்பின் பிறவியே
தானடைந்த வுறுதியைச் சாருமால்
தேனடைந்த மலர்ப்பொழிற் றில்லையுண்
மானடஞ்செய் வரதர்பொற் றாடொழ.

(இ-ள்.) ஊனடைந்த உடம்பின் பிறவியே=மாமிசம்பொருந்திய உடம்பாலுய மக்கட்பிறப்பே ; தானடைந்த உறுதியைச் சாரும்=தான் நிலவுலகத்திற் பிறந்தபயனை அடையும்; தேனடைந்த மலர்ப்பொழிற் றில்லையுள்=தேன் பொருந்திய மலர்களையுடைய சோலைசூழ்ந்த சிதம்பரமென்னுந் திருப்பதியின்கண் ; மாநடஞ்செய் வரதர்பொற்றாடொழ = பெரிய ஆனந்த நிருத்தஞ் செய்தருளும் நடேசப்பிரானது அழகிய குஞ்சிதபாதத்தைத் தரிசித்தால்—எ-று. ()

வரதர்பொற்றாடொழப் பிறவி அடைந்த உறுதியைச் சாருமெனக் கூட்டுக. பயன்படாது கழிந்த பிறவிகளினின்றும் பிரித்தமையின் ஏகாரம் பிரிநிலை. மக்கட் பிறப்பு புருடார்த்தங்களுட் சிறந்த வீடுபேற்றிற்குக் காரணமாதலில், தானடைந்த என்றும், தரிசித்தல் காரணமாய் வீடுபேறடைதலில் உறுதியைச் சாருமென்றுங் கூறினர். ஆல், அசை. தொழ, என்னும் செயவெனெச்சம் ஏதுப்பொருட்டாய்நின்றது. ஊனுலாய உடம்பின் பிறப்பென உடம்போடுயிர்க்கு ஒற்றுமை நயம்படக்கூறினர். கூறினாரேனும் பயனடைவது உயிரென்பது கருத்

தாகக்கொள்க. இது திருத்தில்லையில் ஆனந்த நடந்தரிசித்தல் நேரே வீடடையும் நெறியெனக் குறிப்பித்து நின்றது.

விநாயகர் துதி.

எடுக்கு மாக்கதை யின்றமிழ்ச் செய்யுளாய்
நடக்கு மேன்மை நமக்கருள் செய்திடத்
தடக்கை யைந்துடைத் தாழ்செவி நீண்முடிக்
கடக்க ளிற்றைக் கருத்து ளிருத்துவாம்.

(இ-ள்.) எடுக்கு * மாக்கதை இன்றமிழ்ச் செய்யுளாய்=பாடத்தொடங்கும் பெருமைபொருந்திய இத்திருத்தொண்டர் புராணம் இனியதமிழ்ப் பாடலினால்; நடக்குமேன்மை நமக்கருள் செய்திட=நன்குமுடியும் மேன்மையை அடியேற்கருள்செய்யும்படி; தடக்கை யைந்துடைத் தாழ்செவி நீண்முடி=பெரிய திருக்கரங்களைந்துடன் தூங்குகின்ற இரண்டு திருச்செவிகளையும் நீண்ட திருமுடியையும் உடைய; கடக்களிற்றைக் கருத்து ளிருத்துவாம்=மதம்பொருந்திய விநாயகமூர்த்தி என்னும் யானையை எமதுள்ளத்தின்கண் பொருந்தத் தியானஞ்செய்வாம்—எ-று. (௩)

இந்நூலாசிரியர் இத்திருத்தொண்டர் புராணம் இடையூறின்றி இனிது முடியும்பொருட்டு அடி எடுத்துக்கொடுக்கவென நடேசப்பிரானைப் பிரார்த்திக்குங்கால் அதைத் திருவுளம்பற்றி நடேசப்பிரான் அவ்வாறு அடி எடுத்துக்கொடுத்தமையால் இந்நூற்கு இடையூறு சிறிதும் இன்றாயினும் ஈண்டு ஆன்றோர் ஆசாரம் பாதுகாத்தற்பொருட்டு விநாயகவணக்கம் முற்கூறாது அத்துதியின்பிற் கூறினரென்க.

திருக்கூட்டப் புகழ்ச்சி.

வேறு.

மதிவளர் சடைமுடி மன்று ளாரைமுன்
றுதிசெயு நாயன்மார் தூய சொன்மலர்
பொதிநல னுகர்தரு புனிதர் பேரவை
விதிமுறை யுலகினில் விளங்கி வெல்கவே.

(இ-ள்.) மதிவளர் சடைமுடி மன்றுளாரை=இளம்பிறை வளர்கின்ற சடைமுடியை யுடைய நடேசப்பிரானை; முன்றுதிசெயு நாயன்மார் தூய சொன்மலர்=முன்னுளில்வழிபடுந் திருத்தொண்டர்களது சரிதமென்னுங் குற்றமற்ற சொல்லாகிய மலர்களி னிடத்து; பொதிநல நுகர்தரு புனிதர் பேரவை=பொருந்திய சுவை என்னுந் தேனைப் பானஞ் செய்கின்ற பரிசுத்தர்களது பெருமை பொருந்திய அவைக்களமானது; விதிமுறை யுலகினில் விளங்கி வெல்கவே = அறநூல் கூறியவாறு உலகின்கண் பிரகாசித்து மேம்பட—எ-று. (௪)

---

* மாக்கதை - என்றதனல் பெரியபுராணமெனப் பொருள்படுதலின் இதனையும் ஓர் பெயராகப் பிற்காலத்தார் வழங்கினரென்க.




சைவ சமயாசாரியர்கள் நால்வர்.

விதியாவது, இன்னவருணத்தார் இவ்வாறெழுகக் கடவரெனக்கூறு முறை விளங்கல். அவ்வாறெழுகுதல், வெல்லல், பத்திஞானங்களில் மேம்படல், இது இந்நூல் நின்று நிலவுதற்பொருட்டு இதனையோதும் அடியார்கூட்டத்தை வாழ்த்தியது. நலம்=பத்திரசம். ஈண்டு, சுவையென்றது, பத்திரசத்தை இந்நூலுள் உவம அணிமுதலிய அணிபற்றியும் அகத்திணைப்பொருள் புறத்திணைப் பொருள்பற்றியும் சுவையென்னும் மெய்ப்பாடுகுறித்து ஆங்காங்கு நகையும் அழுகையும் இளிவரலும் மருட்கையும் அச்சமும் பெருமிதமும், வெகுளியும், உவகையுமாய் அவ்வப்பொருள் பற்றிச் சுவைபல உளவேனும், ஈண்டு சுவையென்றது வீட்டுநூலிற் கேற்ற சுவைகளையேயாம். அதாவது சிவபிரான் திருவருட்கு அடிமை பூண்டு நிற்கும் அடியார் பெருமை குறிக்குங்கால், வியப்பும், அதனை வெளிப்படுத்தப் புறத்து நிகழும் வியப்புமொழியும், அப்பத்திமை நோக்கித்தான் அவர்க்கு அடிமை பூண்டு நிற்கும் இளிவரலும் அதுபற்றிப் புறத்து நிகழும் தன்னை இழித்த சொல்லும் பிரானுர் திருவருள் அவர்க்குக் கைவந்து நிற்கும் பேறுபற்றி உவகையும் அதுபற்றிநிகழும், உவகைக் கண்ணீரும், உவகைநகையும், ரோமமுகிழ்ப்பும், அஞ்சலியும், ஆவலிப்புமொழியும் என்னும் புறக்குறியும் ஆகிய இவைகள் கொள்ளப்படும் என்க. அவ்வாறு பத்திரசத்தை நுகர்தலின் அவர் பெருமை தோன்றப் புனித ரென்றும் அவர் அவைக்களத்தைப் பேரவையென்றுங் கூறினர். அகத்து நிகழும் மெய்ப்பாட்டை வெளிப்படுத்துங் குணத்தை அதனோடொற்றுமைப்பட்ட தேகத்தின் தொழிலாகிய சத்துவமென்பர். சத்துவமாவதுவேம்பென்னும் சுவைப்பொருளை நாவழி யுணர்ந்தான் அச்சுவையால் தன்னுள் வெறுப்பென்னும் மெய்ப்பாடு தோன்றுழி அதனை வெளிப்படுத்தும் தலையசைப்புப் போல்வன. இவ்வாறு கேட்போர் வாழ்க என்றலின் அதிகாரிகளும், நாயன்மார் தூயசொன்மலர் என்றதனுல் முதலிய பொருளும் போந்தவாறு காண்க. அதிகாரிகள்=சிவபத்தர்.

## அவையடக்கம்.

அவை - என்றது சபை, அடக்கம் - என்றது அடக்குதல், அவையையடக்குதல் என்றும். அதாவது, அரங்கேற்றும் அவையினுள்ளார் அடங்குமாறு இனியவை கூறி அவரைப் புகழ்தல்.

> அளவி லாத பெருமைய ராகிய
> அளவிலா வடியார்புகழ் கூறுகேன்
> அளவுகூட வுரைப்பரி தாயினும்
> அளவிலாசை துரப்ப வறைகுவேன்.

(இ-ள்.) அளவிலாத பெருமையராகிய=யாவராலு மளத்தற்கரிய பெருமையையுடையராகிய; அளவிலா அடியார் புகழ்கூறுகேன் = எண்ணிறந்த அடியவர்களது சரிதத்தைக் கூறுகின்றயான்; அளவுகூட வுரைப்பரிதாயினும்= அதனை அளவுபடுத்திச் சொல்லுதல் எனக்குக் கூடாதாயினும்; அளவிலாசை துரப்பவறைகுவேன்=அடங்காத பேராசையானது என்னைச்செலுத்த அதனுற் சொல்லத் தொடங்கினேன்—எ-று. (ரு)

இது, என்றால் அளவுபடுத்தற்கரிய இச்சரிதத்தை ஆசைமிகுதியாற் கூறினேனென்று அவையடக்கிற்று.

தெரிவரும்பெரு மைத்திருத் தொண்டர்தம்
பொருவருஞ்சீர் புகலலுற் றேன்முற்றப்
பெருகுதண்கட லூற்றும் பெருநசை
யொருசுணங்கனை யொக்குந் தகைமையேன்.

(இ-ள்.) தெரிவரும்பெருமைத் திருத்தொண்டர்தம்=அறிதற்கரிய பெருமையையுடைய நாயன்மார்களது; பொருவருஞ்சீர் புகலலுற்றேன்=ஒப்பற்ற சரிதத்தைச் சொல்லத்தொடங்கினேன்; முற்றப்பெருகுதண்கடல் ஊற்றும் பெருநசை=முழுதும் பெருகுகின்ற குளிர்ந்தகடலைக்கவிழ்க்கும் பெரிய இச்சையையுடைய; ஒருசுணங்கனை யொக்குந்தகைமையேன்=ஒருநாயையொத்த தகுதியையுடையயான்—எ-று. தகைமையேன் புகலலுற்றேனெனக்கூட்டுக. (சு)

இது, ஆசைமிகுதியாற் கூறினேனென்றதைவற்புறுத்த மாண்பமைந்த இதனைக் கூறவல்லனல்லேனாயினுங் கூறத்தொடங்கினேனென உவமை முகத்தாற் றன்னை யிழித்துக்கூறி அவையடக்கிற்று.

செப்பலுற்ற பொருளின் சிறப்பினால்
அப்பொருட்குரை யாவருங் கொள்வரால்
இப்பொருட் கென் னுரை சிறிதாயினு
மெய்ப்பொருட்குரி யார்கொள்வர் மேன்மையால்.

(இ-ள்.) செப்பலுற்ற பொருளின்சிறப்பினால்=ஒருவன் கூறும் பொருளினது சிறப்புநோக்கி; அப்பொருட்குரை யாவருங்கொள்வரால் = அப்பொருளை வருத்தற்குரிய மொழியை யாவரும் ஏற்றுக்கொள்வர் அதுபோல; இப்பொருட்கென் னுரைசிறிதாயினும்=இத்திருத்தொண்டர் சரிதத்தை வருத்தற்கு அடியேன் சொல் அற்பமா இருப்பினும்; மெய்ப்பொருட்குரி யார்கொள்வர் மேன்மையால்=மெய்ப்பொருளை வருத்து உணர்தற்குரிய அறிஞர்கள் பொருள் மேன்மைகாரணமாக இவ்வுரையையும் கொள்வார்கள்—எ-று. (எ)

இது, இந்நூலுட்சொல்வழுவாயினும் வீடுபேறடைந்த பெரியோர் சரிதமென்னும் பொருள்பற்றி அறிஞர் அங்கீகரிப்பரென்று அவையடக்கிற்று.

மேயவிவ்வுரை கொண்டு விரும்புமாஞ்
சேயவன்றிருப் பேரம்பலஞ் செய்ய
தூயபொன்னணி சோழ னீடுழிபார்
ஆயசீ ரநபாய னரசவை.

(இ-ள்.) மேயஇவ்வுரை கொண்டுவிரும்பும்=மேன்மை பொருந்திய இப்புராணத்தைத் தான் கைக்கொண்டு விருப்பமடையும்; சேயவன்றிருப் பேரம்பலம்=சிவந்ததிரு மேனியையுடைய நடேசப்பிரானது கனகசபையை; செய்யது

யபொன் னணிசோழன்=செந்நிறம்பொருந்திய தூய்மையான பொன்னால் அல ங்கரித்த திருநீற்றுச் சோழனென்னும் அபிடேக நாமமுடைய ; நீடூழிபாராயசீர் அநபாயனரசவை=நீடித்த கற்பமளவும் நிலவுலகத்தில் நிறைந்த கீர்த்தியையு டைய அநபாயச் சக்கிரவர்த்தியினது அரசுரிமைச்சபை—எ-று. (அ)

அவை யென்றது தொகுதி ஒருமை. சபையினுள்ளாரை யுணர்த்திநின் றது. அவைவிரும்புமென இயையும். இது, அறிஞர் பொருள் நயம்பற்றிக்கொ ள்வரேனும் சொல்வழுஉளவேல் நூல்பயன்படாதென்னும் ஆசங்கைநீக்க இப் புராணத்துள்ள சொல்வழுக்களை அமைதிப்பாற்படுத்தி அநபாயனவைக் களத் தார் கொள்வர். அதற்கு நானுரியனல்லேனென்று அவை யடக்கிற்று. கனகசபை யையும் திருமாளிகைப்பத்தியையும் திருமதிலையும் அநபாயன்பொற் றகட்டால் மரீஇயினமையிற் * "பொன்னணிசோழ" னென்றார். இதனால்அநபாயன் நூல் செய்யக் கேட்டாதனலின் நூல்செய்தற்குக் காரணமும் அவனதவைக் களத் தரங்கேற்றினமையுங் கூறினாராயிற்று. ஆம்-அசை.

அருளினீர்மைத் திருத்தொண்ட றிவருந்
தெருளினீரிது செப்புதற் காமெனின்
வெருளின் மெய்ம்மொழி வானிழல்கூறிய
பொருளினாகு மெனப் புகல்வாமன்றே.

(இ-ள்.) அருளினீர்மைத் திருத்தொண்டறிவரும் = திருவருட்டன்மை பெற்ற நாயன்மாரது திருத்தொண்டினியல்பை அறியத்தக்க ; தெருளினீரிது செப்புதற் காமெனின்=தெளிந்த மெய்யுணர்வில்லாத நீர் இச்சரிதத்தைச் சொல் லுதற்குக் கூடுமோவென்று நீர் வினவில்; வெருளில் மெய்ம்மொழிவான்=மயக்க மில்லாத வேதநூலை அருளிச்செய்த நடேசப்பிரான்; நிழல்கூறியபொருளில்= அசரீரியாக (யாவருமறிய) அடியெடுத்துக் கொடுத்தகாரணத்தால் ; ஆகுமெனப் புகல்வாம்=ஆமென்று யாம் கூறுவாம்—எ-று. அன்று - ஏ - அசை. (க)

மெய்ம்மொழிவான் - வினையாலணையும் பெயர். வெருளின் மெய்ம்மொழி வா னிழல் கூறியபொருளினாகு" மென்றற்கு ஐயமற்ற உலகெலாமென அடியெ டுத்துக்கொடுத்த மெய்ம்மையாகிய மொழியை வானின்கண் அசரீரி எடுத்தோ திய காரணத்தால் ஆமெனப்புகல்வாமென் றுரைத்தலுமொன்று,

இது, திருவருளின் வழித்தாய நாயன்மார்செய்த திருத்தொண்டை அத் திருவருளில்லாத நீர் எவ்வாறு கூறுவீரென்று ஆசங்கித்து, நடேசப்பிரான் அசரீ ரியாய் அடியெடுத்துக்கொடுத்த காரணத்தால் அவர் கிருபாவசத்தனாய்க் கூறுகி ன்றேன் தன்னியல்பாய்க் கூறுகின்றேன் அல்லேனென்று அவையடக்கிற்று.

---

* பொன்னணிசோழனென்றதற் குதாரணம்- கோயிற்புராணம். ஒன்றி யசீரரவிகுலமுவந்தருளி யுலகுய்யத், தின்றுபுகழ்த்திருநீற்றுச் சோழனெனமுடி சூடி, மன்றினடந்தொழுதெல்லை வளர்கனகமயமாக்கி, வென்றிபுனை யநபாயன் விளங்கிய பூங்கழல்போற்றி.

## நூற்பெயர்.

வேறு.

இங்கித னாமங்கூறி னிவ்வுல கத்துமுன்னாட்
டங்கிரு ளிரண்டின்மாக்கள் சிந்தையுட் சார்ந்துநின்ற
பொங்கிய விருளையேனைப் புறவிருள் போக்குகின்ற
செங்கதி ரவன்போனீக்குந் திருத்தொண்டர் புராணமென்பாம்.

(இ-ள்.) இங்கிதனாமங்கூறின்=இவ்விடத்து இப்புராணத்தினது திருப்பெயரைச் சொல்லப்புகுங்கால்; இவ்வுலகத்து முன்னாள் தங்கிருளிரண்டின்=இந்நிலவுலகத்து ஆதிகாலந்தொட்டு நிலைபெற்ற புறவிருளும் அகவிருளும் ஆகிய இரண்டனுள்; மாக்கள்சிந்தையுட் சார்ந்துநின்ற பொங்கியஇருளை=மனிதர்களது உள்ளத்தின்கண் விரவிநிற்கின்ற பொலிவுபொருந்திய அஞ்ஞானவிருளை; ஏனைப்புறவிருள்போக்குகின்ற செங்கதிரவன்போல்=மற்றகட்புலன்களை மறைக்கும் பூதவிருளைநீக்கும் சிவந்த கிரணத்தையுடைய சூரியனைப்போல; நீக்குந் திருத்தொண்டர் புராணமென்பாம்=நீக்குகின்ற திருத்தொண்டர்புராணமென்று சொல்லுவாம்—எ-று. (கo)

புறவிருளைப் போக்குகின்ற செங்கதிரவன்போல், அகவிருளை நீக்குந் திருத்தொண்டர் புராணமெனக்கூட்டுக. இதனால் நூற்பெயரும் பயனும் போந்தவாறு. பயன், வீடுபேறு. அகஇருளை நீக்கி ஞானத்தைக் கொடுக்கும் என்றலின், இப்பாயிரம் சிறப்புப்பாயிரம். வழிமேற்கூறுகின்றார்.

## பாயிரம் முற்றிற்று.

---

## திருமலைச்சிறப்பு.

பொன்னின் வெண்டிரு நீறுபுனைந்தெனப்
பன்னுநீள்பனி மால்வரைப் பாலது
தன்னையார்க்கு மறிவரியா னென்றும்
மன்னிவாழ் கயிலைத் திருமாமலை.

(இ-ள்.) பொன்னின் வெண்டிரு நீறுபுனைந்தென=பொன்மலையினிடத்து வெள்ளிய விபூதியை அணிந்தாற்போல; பன்னுநீள்பனி மால்வரைப்பாலது=நூல்களாற் சிறப்பித்துக்கூறும் நீண்ட இமயமலையின் பக்கத்திலுள்ளது; தன்னை யார்க்கு மறிவரியானென்றும்=தன்னியல்பை (அன்பரன்றி) எவ்வகையார்க்கும் அறிதற்கரிய சிவபிரான் எந்நாளும்; மன்னிவாழ்கைலைத் திருமாமலை=நிலைபெற்று வீற்றிருந்தருளும் பெருமைபொருந்திய திருக்கைலாயமலை—எ-று.()

பொன்மலையாகிய இமயத்திற்கோர்பால் வெள்ளிமலையாகிய திருக்கயிலை நிற்றலில் இமயத்தின்கணுள்ள பொன்மையும் திருக்கயிலையின்கணுள்ள வெண்

மையுந்தோன்ற பொன்னின் வெண்டிருநீறு புனைந்தெனவேன் றுவமைகூறினர். புனைந்தென என்றது உவமைப்பொருளில்வந்த எனவெனெச்சம், பலநூலாசிரியரால் தேவர்க்கிடனென்றும் சஞ்சீவிமுதலிய மருந்துடையதென்றும் புகழப்படுதலில்பன்னுமென்றும், நீட்சியும் பெருமையுந்தோன்ற நீள்பனிமாமலை என்றுங்கூறினர். புனைந்தெனப்பனிமால்வரைப்பாலதெனவினையையும். பாலது என்பது ஏழாம்வேற்றுமை இடப்பொருண்மைக்கண்வந்த குறிப்பு வினைமுற்று. பாலதெனவே தன்கண்வாழும்மனிதர்க்குக் கிருதயுகம் முதல் நான்கு யுகங்களினும் அறிவு, வலிமை, ஆயுள், அழகு, சரீரம், முதலியவற்றை முன்யுகம்போலாது மற்றை யுகங்கட்கு வேறுபடக்கொடுப்பதாய் வேறு வேறு சாதிகளை உடைத்தாயிருக்கும். கன்மபூமியென்னும் இப்பரதகண்டத்தின் எல்லையாகிய பாரதவருடத்தில் கிழக்குமேற்குச் சமுத்திரங்களைப்பொருந்திப் பூமிக்களவுகோல்போன்று ஒன்பதினாயிரம்யோசனை நீட்சியுடைத்தாய் பனிமயமாய் இருக்கும் இமயத்தின் வடகீழ்ப்பாலில் * பாதுகாஞ்சனம், சிந்தாமணி முதலிய சித்திப்பொருள்களையும் அடைந்தார்க்குப் பயம், பகை, அவமிருத்து, இவைகளைநீக்கிப் பிறவாமற்செய்யும் விசேடங்களையும் உடையதிருவெல்லைக்கண் அத்திருக்கயிலை நிற்குமென்றாராயிற்று. இத்திருக்கயிலையின்படிகம்போலும் வெள்ளிய சோதி சிகரத்தில் மேருவின்கணுள்ள சோதிட்கமென்னும் சிகரத்திலும் மிக்கபிரியத்தால் இமவான்செய்த பெருந்தவங் காரணமாயும் உமாதேவியார்க்குத் தந்தையென்னும் முறையான் மாதுலனெனக்கொண்டபெருங்கருணையினாலும்சித்தர்,காந்தருவர், கின்னரர், எந்நாளுஞ் சேவைசெய்யவும் உருத்திரர்கட்கும், பிரம விஷ்ணு முதலிய தேவர்கட்கும் நியாமகராய் நந்தி முதலிய கணநாதர்களும் முப்பத்துமுக்கோடி தேவர்களும் முனிகணங்களுந்தம்மைச் சேவிக்கக் காட்சிகொடுத்து மணிமயமான திருக்கோயிலில் இரத்தின சிம்மாசனத்தில் உலகமாதாவாகிய உமாதேவியாருடன் சிவபிரான் வீற்றிருந்தருளுவர். அதனால் என்றும் மன்னிவாழ் கயிலைத் திருமாமலை என்றார். இவ்வாறு பூகயிலை இமயத்தின்க ணிருக்குமென ஸ்ரீ மதங்காகமத்துங் கூறப்படும். சனகாதியோகிகட்கு உபதேசித்ததும் காமனையெரித்ததும் பார்த்தற்குப் பாசுபதமீந்ததும் இத்திருக்கயிலையின்கணென்க. இதில் கவுசிகர் முதலிய ஐந்து சைவரிஷிகட்கு ஆமர்த்தகம் முதலிய ஐந்து திருமடமும் உண்டென்க. திருக்கயிலை இமயமலையின் வடகீழ்ப்பாலில் கிம்புருட கண்டத்தின்கண் உளதெனச் சிறிதிடத்திற் கூறப்பட்டதேயெனின் அது இமயமலையின் வடகீழ்ப்பாலெல்லை கிம்புருடகண்டத்துச்சென்று நிற்குமென்னுங் கருத்தாற் கூறலில் மாறுபடுதலின்று.

அண்ணல்வீற்றிருக் கப்பெற்ற தாதலி
னண்ணுமூன்றுல குந்நான் மறைகளும்
எண்ணின்மாதவஞ் செய்யவந் தெய்திய
புண்ணியந்திரண் டுள்ளது போல்வது.

---

* பாது காஞ்சனம் என்பது, மூலிகை விசேடம். சிந்தாமணி, சுரம், விஷம் முதலிய தீங்குகள் வராமற்காக்கும் இரத்தின விசேடம். சுரருலகத்திருக்கும் மணிஅன்று.

(இ-ள்.) அண்ணல்வீற்றிருக்கப்பெற்ற தாதலின் = சிவபிரான் எழுந்தருளி இருக்க எக்காலமும் பெற்றுக்கொண்ட தாதலின்; நண்ணுமூன்றுலகும் = நிலைபெற்றபூமி அந்தரம் சுவர்க்கம் என்னும் மூவுலகத்திலுள்ளாரும்; நான்மறைகளும் = இருக்குமுதலிய நான்குவேதங்களும்; எண்ணின்மா தவஞ்செய்ய = அளவுபடாத பெரிய தவத்தைச் செய்யுங்கால்; வந்தெய்திய புண்ணியம் = அதனால் வந்தடைந்த பெரும் புண்ணியங்களெல்லாம்; திரண்டுள்ளது போல்வது = ஒருங்குசேர்ந்திருந்தாற்போலுந் தோற்றமுடையது அத்திருக்கயிலை—எ-று. (உ)

திரண்டிருத்தல் மண் சாடி தூதை ஆனாற்போல் பரிணமித்திருத்தல், சிவபிரான் திருவருள் வடிவாகிய திருக்கயிலையை வேதங்களும் மூவுலகத்திலுள்ளாரும் செய்தவத்தாற் றோன்றிய எண்ணில் புண்ணியங்களெல்லாம் ஒருங்குதிரண்டு ஓருருவானாற் போன்றதென வடிவுவமங் கூறினார். அவ்வாறு கூறுதற்கு ஏது, புண்ணியமுதல்வர் வீற்றிருத்தற்குரிய இடம் புண்ணியவடிவாயிருத்தல் வேண்டும் என்பார், "அண்ணல் வீற்றிருக்கப்பெற்ற தாதலின் என்றார். பயனில் சிறுவரும் ஓர்பயன்கருதித் தொழில்செய்வராதலில் வேதங்கள் தவஞ்செய்தற்கும் உலகர் தவஞ்செய்தற்கும் காரணம் இரண்டுளது அவற்றை ஊகித்துக்கொள்க எனவுங் கூறினாராயிற்று. அவை வருமாறு, வேதங்கள் தம்மாற் கூறப்படும் முதல்வர் வெளிப்பட்டிருந்தாலன்றித்தாங்கூறும் புருடார்த்தங்களை உலகரறிந் தநுட்டியார் என்னுங் கருத்தும் உலகம் அவ்வாறு வெளிப்பட்டிருந்தா லன்றித் தாமநுட்டிக்கும் புருடார்த்தமும் அதன்பயனுங் கைகூடா என்னுங் கருத்தும் காரணங்களாமென்க.

நிலவுமெண்ணி றலங்களு நீடொளி
யிலகுதண்டளி ராக வெழுந்ததோர்
உலகமென்னு மொளிமணி வல்லிமேன்
மலரும்வெண்மலர் போல்வதம் மால்வரை.

(இ-ள்.) நிலவுமெண்ணில் தலங்களும் = விளங்குகின்ற எண்ணிறந்த சிவதலங்களும்; நீடொளி இலகு தண்டளிராக = மிக்க ஒளிவிளங்கும் குளிர்ந்த தளிராக; எழுந்ததோர் உலகமென்னும் ஒளிமணி வல்லிமேல் = எழுகின்ற ஒரு உலகமென்கின்ற ஒளிபொருந்திய அழகிய வல்லிக்கொடியின்மேல்; மலரும் வெண்மலர்போல்வ தம்மால்வரை = மலராநின்ற வெள்ளியபூவை யொத்தது அப்பெருமைபொருந்திய திருக்கைலாயமலை—எ-று. (ங)

உலகத்தைக் கொடியாகவும் தலங்களைத் தளிராகவும் திருக்கயிலையை அக்கொடியின் வெண்மலராகவும் உருவகித்தமையால் திருக்கயிலை எல்லாத் தலங்கட்கும் மேலாய சிறப்புடைத் தென்பது கூறினாராயிற்று.

மேன்மைநான்மறை நாதமும் விஞ்சையர்
கானவீணையி னோசையுங் காரெதிர்

தானமாக்கண் முழக்கமுந் தாவில்சீர்
வான்துந்துபி யார்ப்பு மருங்கெலாம்.

(இ-ள்.) மேன்மைநான்மறை நாதமும்=மேன்மைபொருந்திய நான்கு வேதங்களின் ஓசையும்; விஞ்சையர்கான வீணையின் ஓசையும்=கின்னரர்கள் கானஞ்செய்கின்ற வீணையினது ஒலியும்; காரொதிர்தானமாக்கள் முழக்கமும்=மேகத்தோடு மாறாக மதம்பொழிகின்ற யானைகளின் முழக்கொலியும்; தாவில்சீர்வானதுந்துபியார்ப்பும்=குறைவற்ற சிறப்பினையுடைய தேவதுந்துபிகளின் ஆரவாரமும் ஆகியஇவைகள் ; மருங்கெலாம்=அத்திருக்கயிலையின் பக்கங்களெல்லாம் உண்டாயிருந்தன—எ-று. (ச)

விஞ்சையர் என்றதனால் சாதிபற்றிக் குதிரைமுகமுடைய கின்னரர்முதலியோரையுங் கொள்க. காரொலிக்குங்கால் அதுகேட்டு யானைகளும் பிளிறொலி செய்தலின், காரொதிர்தானமாக்கள் முழக்கமும் என்றார். காரொதிர்தானமாக்கள் என்புழி காரொடு மாறுபட்டு மதத்தைச்சொரிகின்ற யானையென் றுரைத்தலு மொன்று.

பனிவிசும்பி லமரர் பணிந்துசூழ்
அனிதகோடி யணிமுடி மாலையும்
புனிதகற்பகப் பொன்னரி மாலையு
முனிவரஞ்சலி மாலையு முன்னெலாம்.

(இ-ள்.) பனிவிசும்பி லமரர் பணிந்துசூழ்=குளிர்ச்சிபொருந்திய விண்ணுலகத்தின்கண் வாழும் தேவர்கள் வணங்கிச் சூழ்ந்துநிற்கும்; அனிதகோடி அணிமுடிமாலையும் = எண்ணில்கோடி அழகிய முடிவரிசையும்; புனிதகற்பகப் பொன்னரிமாலையும்=அத்தேவர் முடிமேற்றொங்கும் பரிசுத்தமான கற்பகவிருட்சத்தின் மலரால் தொடுக்கப்பட்ட பொன்னரிமாலைகளும்; முனிவர் அஞ்சலி மாலையும் முன்னெலாம்=முனிவர்கள் அஞ்சலியாகக் குவித்தகைகளின் வரிசையும் ஆகியஇவைகள் ; முற்பக்கங்களெல்லாம் விளங்குகின்றன.—எ-று. (ரு)

அஞ்சலி=கைகுவித்தல்; மாலை=வரிசை; அனிதம் = அளவுபடாமை.

நீடுதேவர் நிலைகளும் வேண்டிடி
னூடுமைம்பெரும் பூதமு நாட்டுவ
கோடிகோடி குறட்சிறு பூதங்கள்
பாடியாடும் பரப்பது பாங்கெலாம்.

(இ-ள்.) நீடுதேவர் நிலைகளும்=உயர்ந்ததேவர்கள் வாழும் பதங்களும்; வேண்டிடில் நாடுமைம்பெரும் பூதமுநாட்டுவ=விரும்பினால் அறியத்தக்க பஞ்சமாபூதங்களையும் உண்டாக்கவல்லன; கோடிகோடிகுறட்சிறுபூதங்கள்=அனேககோடி குறள்வடிவினையுடைய சிறியபூதங்கள்; பாடியாடும் பரப்பது பாங்கெ

லாம் = பாடிச்கூத்தாடும் பரந்தஇடத்தையுடையது அம்மலைப்பக்கங்களெல்லாம்,—எ-று. (சு)

மாபூதமைந்தும் ஐம்பொறிக்கு விடயமாதலில் நாமைம் பெரும்பூதமென்றும், பூதங்களுக்கு உடம்பி னளவிற்கேற்ற கால்கைக ளமையாமையின் அவைகளைக் குறளென்றும் சிறுபூதமென்றுங் கூறினர்.

நாயகன்கழல் சேவிக்க நான்முகன்
மேயகால மலாமையின் மீண்டவன்
றூயமால்வரைச் சோதியின் மூழ்கியொன்
றுயவன்னமுங் காணு தயர்க்குமால்.

(இ-ள்.) நாயகன்கழல்சேவிக்கநான்முகன்=சிவபிரானது திருவடிகளைத் தரிசிக்கும்படி பிரமனுனவன்; மேயகால மலாமையில் மீண்டவன்=தரிசித்தற்குரிய சமையமல்லா திருத்தலில் திரும்பிவந்து; தூயமால்வரைச் சோதியில் மூழ்கி=பரிசுத்தமான பெருமைபொருந்திய திருக்கைலாயமலையின் வெள்ளிய பிரகாசத்தில் குளித்து; ஒன்றுய்அன்னமுங் காணுதயர்க்குமால்=வேறுபாடின்றி இருக்கும் அன்னவாகனத்தையுங் காணமல் வருந்துவன்.—எ-று. (எ)

அன்னமும் என்ற உம்மை சிவபிரானைக் காணுமையையும் தழுவுதலில் இறந்தது தழீஇய எச்சம். அன்னம் அவ்வெள்ளொளியிற் கலந்தொன்றுயிருத்தலில் யாண்டையதோஎன வருந்தின னென்பார் அயர்க்குமென்றுர்.

வேறு.

இது வெள்ளிபாடல்.

காதில்வெண்குழையோன் கழறெழுநெடியோன் காலம்பார்த்திருந்ததுமறியான், சோதிவெண் கயிலைத் தாழ்வரை முழையிற் றுதிக்கையோனூர்தியைக்கண்டு, மீதெழும் பண்டைச்செஞ்சுடரின்று வெண்சுடரானதென்றதன்கீ, ழாதியேனமதா யிடக்கலுற்று னென்றதனை வந்தணைதருங்கலுழன்.

(இ-ள்.) காதில்வெண்குழையோன் = திருக்காதில் வெள்ளிய சங்கக்குழையைத்தரித்த சிவபிரானது; கழறெழுநெடியோன்காலம் பார்த்திருந்ததுமறியான்=திருவடிகளை வணங்கும்படி திருமாலானவர் சமயம்பார்த்து இருப்பதையும்அறியாமல்; சோதிவெண் கயிலைத்தாழ் வரைமுழையில் = ஒளிபொருந்திய வெள்ளிய திருக்கைலாயத்தினது அடிவாரத்திலுள்ள குகையில்; துதிக்கையோன் ஊர்தியைக்கண்டு=விநாயகமூர்த்தியின் வாகனமான பெருச்சாளியைப் பார்த்து; மீதெழும் பண்டைச் செஞ்சுடர்=முன்னுளில் மேற்கொண்டெழுந்த சிவந்த சோதியானது; இன்று வெண்சுடரானதென்று=இந்நாளில் வெள்ளியசோதியாய் உதித்ததென்று; அதன்கீழ் ஆதி ஏனமதாய்=அச்சோதியினடியில் ஆதி

வராகரூபமாய்; இடக்கலுற்றுனென்று=பூமியை அகழ்ந்து செல்லுகின்றுனென்று; அதனை வந்தணைதருங்கலுழன்=அப்பெருச்சாளியைக் கலுழன் வந்தடைவன்.—எ-று. (அ)

அரம்பையராடன் முழவுடன் மருங்கி னருவிக ளெதிரெதிர்முழங்க, வரம்பெறுங் காதன் மனத்துடன்றெய்வ மதுமல ரிருகையு மேந்தி, நிரந்தரமிடைந்த விமானசோபான நீடுயர் வழியினுலேறிப், புரந்தரன் முதலாங் கடவுளர்போற்றப் பொலிவதத் திருமலைப்புறம்பு.

(இ-ள்.) அரம்பையராடல் முழவுடன் = தெய்வப்பெண்கள்நிருத்தஞ்செய்யுங்கால்அதற்கேற்ப ஒலிக்கும் மத்தள ஓசையுடன்; மருங்கினருவிகள் எதிரெதிர்முழங்க=அம்மலை யருகிலுள்ள அருவிகளும் ஒன்றோடொன்று மாறுபட்டு ஒலிக்கும்படி;வரம்பெறுங்காதல் மனத்துடன்=சிவபிரானிடத்து வரத்தைத் தாம் பெறவேண்டு மென்கிற ஆசையுடைய மனத்தோடு; தெய்வ மதுமலரிருகையுமேந்தி=கற்பகதருவின் தேன்பொருந்திய பூக்களை இருகரத்துந் தாங்கிக்கொண்டு; நிரந்தரமிடைந்த விமானசோபான நீடுயர் வழியினுலேறி=இடையீடின்றி நெருங்கிய * கோபுரவிமானங்களின் கீழுள்ள படியென்னும் மிக்குயர்ந்த வழியால் ஏறிச்சென்று; புரந்தரன் முதலாம் கடவுளர்போற்ற=இந்திரன் முதலிய தேவர்கள் துதிக்கும்படி ; பொலிவதத் திருமலைப்புறம்பு = பொலிவடைந்துள்ளது அத்திருக் கயிலையின் பக்கம்.—எ-று. (க)

திருமலைப்புறம்பு பொலிவதென இயையும். எதிரெதிர்முழங்கல் மத்தளம் ஒலிக்குஞ் சதிக்கு அருவிகளும் ஒத்து ஒலித்தல்.

வேதநான்முகன் மால்புரந்தரன்முதலாம் விண்ணவ ரெண்ணிலார்மற்றுங், காதலான்மிடைந்த முதற்பெருந்தடையாங்கதிர்மணிக்கோபுரத்துள்ளார், பூதவேதாளப் பெருங்கணநாதர் போற்றிடப்பொதுவினின்றுடு, நாதனுராதி தேவனுர்கோயி னுயகனந்தியெம் பெருமான்.

(இ-ள்.) வேதநான்முகன் மால்புரந்தரன் முதலாம்=வேதங்களை யுணர்ந்த பிரமனும்,திருமாலும், இந்திரனும்,முதலிய; விண்ணவர் எண்ணிலார்மற்றும்=எண்ணிறந்த தேவர்களும் தேவச்சாதியர்களும்; காதலால்மிடைந்த முதற்பெருந்தடையாம்=விருப்புடன் நெருங்கிய பெரிய முதற்றடையாகிய; கதிர்மணிக்கோபுரத்துள்ளார்=ஒளிபொருந்திய அழகிய திருக்கோபுரத்தின்கண் உள்ளார் (அவர் யாரெனில்); பூதவேதாளப் பெருங்கணநாதர்போற்றிட=பூத வேதாளங்களென்னும் பெரிய சிவகணத் தலைவர்கள் துதிக்க; பொதுவில் நின்றுடும்=கனக சபையின்கண் நின்று ஆனந்த நிருத்தஞ்செய்யும்; நாதனுர் ஆதிதேவனுர் கோயில் நாயகன் நந்தி எம்பெருமான்=தலைவரும் முதற்கடவுளும் ஆகிய சிவபிரானது திருக்கோயிலுக்குக் காக்குந் தலைமைபூண்ட திருநந்திதேவர்.—எ-று. (கo)

---

* கோபுர விமானங்களாவன மலையடிவாரத்திலிருந்து ஏறும் வழிகளில் அலங்காரமாய் கட்டிவிட்டிருக்கும் சிறியவிமானங்களாம்.

பூதவேதாளம் இருபெயரொட்டுப் பண்புத்தொகை. உள்ளார் நந்தியெம் பெருமானென வியையும். அவரால் இவ்வாறு காக்கப்படுவதென மேற் கூறுகின்றார்.

நெற்றியிற்கண்ணர் நாற்பெருந்தோளர் நீறணிமேனிய ரநேகர், பெற்றமேற்கொண்ட தம்பிரானடியார் பிஞ்ஞகன்றன்னருள் பெறுவார், மற்றவர்க்கெல்லாந் தலைமையாம்பணியு மலர்க்கையிற் சுரிகையும் பிரம்புங், கற்றைவார் சடையானருளினாற் பெற்றான்காப்பதக் கயிலைமால் வரைதான்.

(இ-ள்.) நெற்றியிற் கண்ணர் நாற்பெருந்தோளர் = நெற்றிக்கண்ணையுடையவர்களும் நான்கு பெரிய திருப்புயங்களையுடையவர்களும்; நீறணிமேனிய ரநேகர் = விபூதியையணிந்த திருமேனியையுடையவர்களுமாய் எண்ணிறந்த; பெற்றமேல்கொண்ட தம்பிரானடியார் = இடபத்தை வாகனமாகக்கொண்ட சிவபிரானடியவர்களும்; பிஞ்ஞகன் தன்னருள் பெறுவார் = அச்சிவபிரானது திருவருளைப்பெற்றவர்களும் ஆகிய; அவர்க்கெல்லாந் தலைமையாம்பணியும் = அவர்கட்கெல்லாம் முதன்மையாய் இருக்கும் பணிவிடையையும்; மலர்க்கையிற் சுரிகையும் பிரம்பும் = செந்தாமரை மலர்போலுந் திருக்கரத்தில் உடைவாளையும் பிரம்பையும்; கற்றைவார் சடையான் அருளினாற் பெற்றான் = கூட்டமாய் நீண்டசடைமுடியையுடைய சிவபிரான் திருவருளினால் பெற்று அத்திருநந்திதேவரால்; காப்பதக்கைலை மால்வரைதான் = காக்கப்படுவது பெருமைபொருந்திய அத்திருக்கைலாயமலை.—எ-று. (௧௧)

மற்று-அசை. பெற்று அவராற் காக்கப்படுவதென வியையும்.

கையின்மான்மழுவர் கங்கைசூழ்சடையிற் கதிரிளம்பிறை நறுங் கண்ணி, யையர்வீற்றிருக்குந் தன்மையினாலு மளப்பரும் பெருமையினாலு, மெய்யொளிதழைக்குந் தூய்மையினாலும் வென்றிவெண் குடையநபாயன், செய்யகோலபயன் றிருமனத்தோங்குந் திருக்கயிலாயநீள் சிலம்பு.

(இ-ள்.) கையின் மான்மழுவர் = இடக்கரத்தில் மானையும் வலக்கரத்தில் மழுவையும் உடையவராய்; கங்கைசூழ் சடையிற்கதிரிளம்பிறை நறுங் கண்ணியையர் = கங்காநதி பெருக்கெடுக்கின்ற சடைமுடியில் ஒளிபொருந்திய இளம்பிறையையும் நறுமணம்பொருந்திய கொன்றைப்பூமாலையையும் சூட்டாகக்கொண்ட சிவபிரான்; வீற்றிருக்குந் தன்மையினாலும் = எழுந்தருளியிருக்கும் தகுதியினாலும்; அளப்பரும் பெருமையினாலும் = இவ்வளவினதென்று அளவிடக்கூடாத பெருமையினாலும்; மெய்யொளி தழைக்குந் தூய்மையினாலும் = சத்துவகுணமான வெள்ளிய ஒளிவீசும் பரிசுத்த முடைமையினாலும்; வென்றிவெண் குடையநபாயன் = வெற்றிபொருந்திய வெள்ளைக்குடையினையுடைய அநபாயனென்னும்; செய்யகோலபயன் = செங்கோல் செலுத்தும் சோழவம்சத்தரச




ஸ்ரீ கண்ணன் உபமன்னியரை சிவதீட்சை செய்யும்படிப் பிரார்த்தித்தது.



1. உபமன்னியர்
2. ஸ்ரீகண்ணன்

உபமன்னியர் ஸ்ரீகண்ணனுக்குத் தமது திருவடியைச் சென்னிமீதிற் சூட்டிச் சாம்பவதீட்சை செய்தது

னது; திருமனத்தோங்கும் = திருவுள்ளம்போல விளங்கும்; திருக்கயிலாயநீள் சிலம்பு=நீண்ட திருக்கைலாயமலை.—எ-று. (கஉ)

திருக்கயிலாயமென்னுஞ் சிலம்பு திருமனத்தோங்குமெனக் கூட்டுக.

மெய் - என்றது - சத்துவகுணத்தை. அபயன்-பயமில்லாதவன். பிறை நறுங்கண்ணி என்புழி பிறையும் நறுங்கண்ணியு மென்னுமல் பிறையாகிய நறுமணம்பொருந்திய கண்ணி எனக்கூறினு மமையும். கண்ணி - கொண்டைமாலை.

வேறு.

அன்னதன்றிருத் தாழ்வரை யின்னிடத்
தின்னதன்மைய னென்றறியாச் சிவன்
றன்னையேயுணர்ந் தார்வந் தழைக்கின்ருன்
உன்னருஞ்சீ ருபமன் னியமுனி.

(இ-ள்.) அன்னதன் திருத்தாழ்வரை யின்னிடத்து = அத்தன்மையையுடைய திருக்கயிலாயமலையின் அடிவாரத்து; இன்னதன்மையன் என்றறியாச் சிவன் தன்னையே=இத்தன்மையனென (யாவராலும்) அறியக்கூடாத சிவபிரானையே; உணர்ந்து ஆர்வந்தழைக்கின்றன்=தியானித்து அவரிடத்துப் பத்தியை வளர்க்கின்றார்; (அவர் யாரெனில்)-உன்னருஞ்சீர் உபமன்னியமுனி=(யாவராலும்) நினைத்தற்கரிய திருபுகழையுடைய உபமன்னியமுனிவர்.—எ-று. (கங)

தழைக்கின்றன் உபமன்னியமுனி எனவியையும் அவர் இத்தன்மையரென மேற்கூறுகின்றார்.

யாதவன்றுவரைக் கிறையாகிய
மாதவன்முடி மேலடிவைத்தவன்
பூதநாதன் பொருவருந் தொண்டினுக்
காதியந்த மிலாமை யடைந்தவன்.

(இ-ள்.) யாதவன் றுவரைக்கிறை யாகிய=எதுகுலத்திற் பிறந்தவரும் துவாரகைக்கு அரசருமாகிய; மாதவன் முடிமேல் அடிவைத்தவன் = கண்ணபிரானது திருமுடியின்மேல் திருப்பாதத்தைச் சூட்டினவரும்; பூதநாதன் பொருவருந் தொண்டினுக்காதி=பூதகணங்கட்கு முதல்வராகிய சிவபிரானது திருத்தொண்டை விளக்குதற்கு முதல்வரும்; அந்தமிலாமை யடைந்தவன்=(கற்பங்களினுந்தாம்) அழியாதநிலைமையைப் பெற்றவரும்—எ-று. (கச)

மாதவன்-இலக்குமிக்குநாயகன் - துவாரகை - துவரையென மரீஇயிற்று. அக்கண்ணபிரானுக்கு உபமன்னியமுனிவர் சிவசிற்சத்திவிளக்கிய ஆன்மசிற்சத்தி மனச்சிறப்பு நோக்கால் பாசங்கழலப்பார்த்துத் திருவடிசூட்டிச் சிவகுணம் விளக்கும் சாம்பவிதீட்சையால் தீட்சைசெய்தவரென்பது தோன்ற முடிமேலடி வைத்தவனென்றும், சிவமான்மியம் விளக்க அவதரித்தவராதலின் தொண்டினுக்கு ஆதி என்றுங்கூறினர். கண்ணபிரான் யமுனையாற்றின்கரையில் சிவதீக்ஷையின்றி வைதிகமார்க்கமாய்ச் சிவபூசைசெய்யுங்கால் அவர் பூசித்த மலர்கள் அவ்

வாற்றின் வழிசெல்ல அதனை உபமன்னியமுனிவரெடுத்துச் சிவபூசைசெய்தனர். அப்பொழுது அவர்சீடர்கள் "சுவாமீ, இம்மலர்கள் கண்ணன் பூசித்தநின் மாலியம்" என்றுகூறினர் அதைக்கேட்ட அம்முனிவர் "கண்ணன் சிவதீட்சையின்றிப் பூசித்த மலர்களாதலின் நின்மாலியதோடம் இன்று" என்று கூறி அம்மலர்களாற் பூசித்தனர். அதுகேட்ட கண்ணபிரான் இதுகாறும் செய்தசிவபூசை பயன்படாதொழிந்ததென்று பரிதாபத்தால் அம்முனிவரை அடைந்து சிவதீட்சைசெய்துகொண்டார் என்று மகாபாரதத்துக் கூறப்பட்டது.

அத்தர்தந்த வருட்பாற் கடலுண்டு
சித்தமார்ந்து தெவிட்டி வளர்ந்தவன்
பத்தராய முனிவர் பல்லாயிரர்
சுத்த யோகிகள் சூழவிருந்துழி.

(இ-ள்.) அத்தர்தந்த அருட்பாற் கடலுண்டு = நடேசப்பிரான் (தமக்குப் பசிப்பிணி நலியாமற்) கட்டளையிட்ட திருப்பாற்கடலைப் பானம்பண்ணி; சித்தம் ஆர்ந்து தெவிட்டி வளர்ந்தவன் = அதனாற் களிப்புற்றுத் தேக்கிவளர்ந்தவருமாகிய அம்முனிவர்; பத்தராய முனிவர் பல்லாயிரர் = (தமக்குத் தொண்டு பூண்டொழுகும்) அடியவர்களாகிய அநேகமுனிவர்களும்; சுத்தயோகிகள் சூழ விருந்துழி = (அவாவறுத்தல் முதலிய) தூயகுணங்களையுடைய சிவயோகிகளும் தம்மைச் சூழும்படி எழுந்தருளியிருந்தவிடத்து.—எ-று. (கரு)

அங்கணோரொளி யாயிர ஞாயிறு
பொங்குபேரொளி போன்றுமுன் றோன்றிடத்
துங்கமாதவர் சூழ்ந்திருந் தாரெலாம்
இங்கிதென்கொ லதிசய மென்றலும்.

(இ-ள்.) அங்கண் ஓரொளி = அவ்விடத்தில் ஒரு ஒளிப்பிழம்பானது; ஆயிர ஞாயிறு = ஆயிரஞ் சூரியர் திரண்ட; பொங்குபேரொளி போன்றுமுன் தோன்றிட = மிக்க பேரொளியையொத்துத் (தெற்குத் திக்கில்) அவர் எதிரே தோற்ற; துங்கமாதவர் சூழ்ந்திருந்தாரெலாம் = உயர்ந்த பெரியதவத்தினையுடைய சிவயோகரும் தம்மைச்சூழ்ந்த சிவநேசமுடையமுனிவர்களும் ஆகிய எல்லாரும்; இங்கிது என்கொல் அதிசயம் என்றலும் = இவ்விடத்துத் தோன்றுகின்ற ஒளிப்பிழம்பு யாது? ஆச்சரியமுடையதாயிருக்கின்றது என்று வினவவும்.-எ-று.

இவ்வாறே தெய்வீகம்பெற்ற தேவர்கள் முனிவர்கள் சரீரமும் நெடுந்தூரத்து ஒளிப்பிழம்பாய்த்தோன்றும் முறைமையை ஏனையபுராண சரிதங்களானும் இந்நூலாசிரியர் "ஐந்துமாறடக்கியுள்ளா ரரும்பெருஞ்சோதியாலும் எந்தையார் திருக்காளத்தி மலையினி லிரவொன்றில்லை" எனக் கண்ணப்பநாயனர் புராணத்திற்கூறியவாற்றானுங்காண்க. கொல் அசைநிலை.

அந்திவான்மதி சூடிய வண்ணருள்
சிந்தியாவுணர்ந் தம்முனி தென்றிசை



ஸ்ரீகைலாயத்தில் உபமன்னியர் தம்மைச்சூழ்ந்தவர்கட்கு ஆலால சுந்தரரது வாலாற்றைக் கூறியது.

வந்தநாவலர் கோன்புகழ் வன்றொண்டன்
எந்தையா ரருளா லணைவானென.

(இ-ள்.) அந்திவான்மதி சூடிய அண்ணல்தாள் = மாலைப்பொழுதில் ஆகாயத்திற் றோன்றுகின்ற (மூன்றாம்) பிறையைச்சூடிய சிவபிரானது திருவடிகளை; சிந்தியா உணர்ந்து அம்முனி = தியானஞ்செய்து (அத்தியானரூபம் உறைத்த சமாதிநெறியால் அவர்கேட்ட வினாப்பொருளின் காரணத்தை) அறிந்து அந்த உபமன்னியமாமுனிவர்; தென்றிசைவந்த நாவலர்கோன் புகழ்வன்றொண்டன் = தெற்குத்திக்கி லவதரித்த திருநாவலூரனென்னும் புகழையுடைய வன்றொண்டப்பெருமான்; எந்தையார் அருளால் அணைவானென = எமது பிதாவாகிய சிவபிரானது திருவருளால் மீண்டு இத்திருக்கயிலைக்கு எழுந்தருளுகின்றானென்றுசொல்லி.—எ-று. (கள)

சிந்தியா உணர்ந்தென்றதனால் தியானமுதிர்ச்சியாலாய சமாதிநெறியால் உணர்ந்தென்பது பெற்றாம்.

கைகள்கூப்பித் தொழுதெழுந் தத்திசை
மெய்யிலானந்த வாரி விரவிடச்
செய்ய நீள்சடை மாமுனிசெல்வுழி
ஐயநீங்க வினவுவோ ரந்தணர்.

(இ-ள்.) அத்திசை கைகள்கூப்பித் தொழுதெழுந்து = அத்திக்கை நோக்கித் திருக்கரங்களைக்குவித்து (நிலமுற) வணங்கி எழுந்து; மெய்யில் ஆனந்த வாரிவிரவிட = திருமேனியில் ஆனந்தக்கண்ணீர் பெருகும்படி; செய்யநீள்சடை மாமுனிசெல்வுழி = செந்நிறம்பொருந்திய நீண்ட சடையினையுடைய உபமன்னியமாமுனிவர் செல்லுமிடத்து; ஐயநீங்க வினவுவோர் அந்தணர் = (தமக்குண்டாகிய) சந்தேகநீங்கும்படி அம்முனிவர்கள் வினவுவாராயினார்.—எ-று. (கஅ)

யாதவன் என்னுஞ் செய்யுண் முத லிதுகாறைந்து செய்யுளுங்குளகம்.

சம்புவின்னடித் தாமரைப் போதலால்
எம்பிரா னிறைஞ்சா யிஃதென்னெனத்
தம்பிரானைத் தன்னுள்ளந் தழீஇயவ
னம்பியாரூர னாந்தொழுந் தன்மையான்.

(இ-ள்.) சம்புவின் அடித் தாமரைப் போதலால் = சிவபிரானது திருவடித்தாமரை மலர்களேயன்றி; எம்பிரான் இறைஞ்சாய் இஃதென்னென = எமது முதல்வரே பிறிதோர் கடவுளை வணங்கமாட்டீர் ஈண்டுவணங்கிய காரணம் யாதென்றுவினவ; தம்பிரானைத் தன்னுள்ளந் தழீஇயவன் நம்பியாரூரன் = சிவபிரானைத் தமது திருவுள்ளத்தில் பொருந்தும்படி செய்தவராகிய நம்பியாரூரரென்னுந் திருநாமத்தையுடையவர்; நாம்தொழும் தன்மையான் = எம்மால் தொழத்தக்க தகுதியையுடையவர்.—எ-று. (கக)

பொருந்தத்தியானிக்கும் உணர்ச்சியுடையாரென்பது தோன்றத் தழீஇய வன் என்றார்.

என்றுகூற விறைஞ்சி யியம்புவார்
வென்றபேரொளி யார்செய் விழுத்தவம்
நன்றுகேட்க விரும்பு நசையினேம்
இன்றெமக்குரை செய்தரு ளென்றலும்.

(இ-ள்.) என்றுகூற=(வணங்கியதற்குக் காரணம் இது) என்று (அவர்) சொல்ல; இறைஞ்சி இயம்புவார்=(அம்முனிவர்கள்) அவரை வணங்கிச்சொல்லுவார்; வென்றபேரொளியார்செய் விழுத்தவம்=(பிற ஒளிகளின்) மேம்பட்ட பேரொளியையுடையராய் வருகின்ற நம்பியாரூரர் செய்த பெரியதவத்தை; நன்றுகேட்க விரும்பு நசையினேம்=நன்றாக ஆராய்ச்சிசெய்யவிரும்பிய இச்சையையுடையோம்; இன்று எமக்கு உரைசெய்தருள் என்றலும்=இப்பொழுது எங்களுக்கு (அதனை) அருளிச்செய்யவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்யவும்.

உள்ளவண்ண முனிவ னுரைசெய்வான்
வெள்ளநீர்ச்சடை மெய்ப்பொரு ளாகிய
வள்ளல்சாத்து மதுமலர் மாலையும்
அள்ளுநீறு மெடுத்தணை வானுளன்.

(இ-ள்.) உள்ளவண்ணம் முனிவன் உரைசெய்வான்=உபமன்னியமுனிவர் (அம்முனிவர்களுக்கு) உள்ளவாறு அருளிச்செய்கின்றார்; வெள்ளநீர்ச்சடை மெய்ப்பொருள் ஆகிய=பெருக்குப்பொருந்திய கங்காநதியைத்தரித்த சடையையுடைய மெய்க்கடவுளாகிய; வள்ளல்சாத்து மதுமலர் மாலையும் = சிவபிரான் (திருமேனியில்) தரிக்கின்ற தேன்பொருந்திய மலரால்தொடுத்த திருமாலையும்; அள்ளுநீறு மெடுத்தணை வானுளன்=(தரித்தற்குத் திருவிரலால்) அள்ளுகின்ற திரு வெண்ணீற்றினையும் எடுத்துக்கொண்டு திரு அணுக்கனாய் நிற்கும் ஒருவர் இருந்தார்.—எ-று. (உக)

அன்னவன்பெய ராலால சுந்தரன்
முன்னமாங்கொரு நாண்முதல் வன்றனக்
கின்னவாமெனு நாண்மலர் கொய்திடத்
துன்னினனந் தனவனச் சூழலில்.

(இ-ள்.) அன்னவன்பெயர் ஆலாலசுந்தரன் = அத்திருத்தொண்டரது திருநாமம் (யாதெனில்) ஆலாலசுந்தரரென்று சொல்லுவர்; முன்னம் ஆங்கொருநாள்=அவர் முன்னாளில் அத்திருக்கயிலாயமலையில் ஒருதினம்; முதல்வன்றனக்கு இன்னவாமெனு நாண்மலர்கொய்திட=சிவபிரானுக்கு இன்னமலர்கள் உரியன என்று சைவாகமங்களிற் கூறும் அப்புதியமலர்களைக் கொய்யும்படி; துன்னினன் நந்தன வனச்சூழலில்=திரு நந்தனவனத்திலுள்ள சோலையிற்சென்றருளினர்.—எ-று. (உஉ)

சைவாகமங்கள் சிவபிரானுக்கு இன்னமலர்கள் ஆம் இன்னமலர்கள் ஆகாவெனவிதித்தும் விலக்கியும் கூறியவற்றுள், விதித்தவற்றைஎன்பார் "இன்னவாமெனுநாண்மல" ரென்றார்-முற்காலத்தில் திருக்கயிலாயமலையில் கண்ணாடியைச் சிவபிரான் நோக்குழி, அச்சாயை இனிதாயிருக்க, அதைப்பார்த்துச் சிவபிரான் வாவென்றழைக்க, அச்சாயைதிரண்டு, சுந்தரரூபமாய் வந்ததனால் "சுந்தர" ரென்றும், திருமால் பிரமன்முதலிய தேவர்கள் ஆலாலத்தால் வருந்திப்புகலடையுங்கால் அச்சுந்தரரை "ஆலாலத்தைஅடக்கிக்கொண்டுவருக" என்றுகட்டளையிட அவ்வாறதனைக்கொண்டுவந்து கொடுத்ததனால் ஆலாலசுந்தரரென்றும், சுந்தரமூர்த்திசுவாமிகளுக்குமுன் திருப்பெயரென்க.

அங்குமுன்னரோ யாளுடை நாயகி
கொங்குசேர்குழற் காமலர் கொய்திடத்
திங்கள்வாண்முகச் சேடிய ரெய்தினார்
பொங்குகின்ற கவினுடைப் பூவைமார்.

(இ-ள்.) அங்குமுன்னர் ஆளுடைநாயகி = அத்திருநந்தனவனத்திலுள்ள சோலையில் (ஆலாலசுந்தரர்வருதற்கு) முன் (நம்மை)அடிமையாகவுடைய உமாதேவியாரது; கொங்குசேர்குழற் காமலர்கொய்திட=(இயற்கை)மணம்வீசும் கூந்தலுக்குரிய பூக்களைக்கொய்யும்படி; திங்கள்வாண்முகச் சேடியரெய்தினார் = பூரணசந்திரன்போலும் ஒளிபொருந்திய முகத்தினையுடைய தோழிப்பெண்கள் வந்தார்கள்; பொங்குகின்ற கவினுடைப்பூவைமார்=மிக்கஅழகினையுடைய நாகணவாய்ப்புட்போலுஞ் சொல்லினையுடையவர்கள்.—எ-று. ஏ-அசை. (உரு)

அங்குமுன்னரை என்றுபாடமாயின் ஐகாரத்தைச்சாரியையாக்குக.பூவைமாராகிய சேடியரெய்தினாரென்க.

அந்தமில்சீ ரனிந்திதை யாய்குழற்
கந்தமாலைக் கமலினி யென்பவர்
கொந்துகொண்ட திருமலர் கொய்வுழி
வந்து வானவ ரீசரருளென.

(இ-ள்.) அந்தமில்சீர் அனிந்திதை = அழிவில்லாத சிறப்பினையுடைய அனிந்திதைஎன்றும் ; ஆய்குழற்கந்தமாலைக்கமலினியென்பவர் = வகிர்ந்து சிக்கெடுக்கப்பட்ட கூந்தலினிடத்து வாசனைபொருந்திய மலர்மாலையை முடித்தகமலினிஎன்றும் சொல்லப்படும் இருவரும் ; கொந்துகொண்டதிருமலர்கொய்வுழி= கொத்துக்களாயுள்ள மலர்களைக் கொய்யுமிடத்து ; வந்துவானவரீசர் அருளென= (ஆலாலசுந்தரர்) வந்து தேவர்க்கு முதல்வரான சிவபிரானது திருவருள் (இவ்வாறிருந்ததென்று) கருதி.—எ-று. (உசு)

எனவெனெச்சம் வருஞ்செய்யுளிற் போக்கிடஎன்னும் வினைகொண்டது இதுகாறுந் தம்முள்ளத்து நிகழாத நிகழ்ச்சி இப்பொழுது புதிதாகநிகழ்ந்தமையின் ஈசர்திருவருளென்று கருதினாரென்க. இனிஇவ்வாறன்றிவந்து வானவ ரீசர்

அருளென என்றதற்கு வானவரீசர் அருளெனவந்தெனக்கூட்டி, என. என்பதை உவமப்பொருளில்வந்தனவெனச்சமாக்கி அருள்போல வந்துவருஞ்செய்யுளிற் போதுவாரென் பதனோடு முடித்துரைத்தலுமொன்று; அவ்வாறுரைக்குங்கால் திருத்தொண்டத்தொகை தரப்போதுவா ரென்றதற்கேற்க அவர் அங்குவருதல் நாமெல்லாம் ஈடேறுதற்குக் காரணமாதலின் ஈசனருள்போலவந்தென்றாரென்க.

மாதவஞ்செய்த தென்றிசை வாழ்ந்திடத்
தீதிலாத்திருத் தொண்டத் தொகைதரப்
போதுவாரவர் மேன்மனம் போக்கிடக்
காதன்மாதருங் காட்சியிற் கண்ணினார்.

(இ-ள்.) மாதவஞ்செய்த தென்றிசைவாழ்ந்திட=பெரியதவத்தைச் செய்த தெற்குத்திக்கானது வாழ்வையடையவும்; தீதிலாத்திருத்தொண்டத் தொகைதர= குற்றமற்ற திருத்தொண்டத்தொகை என்னும் திருப்பதிகத்தை அருளிச்செய்யவும்; போதுவார் அவர்மேன்மனம்போக்கிட=போகின்ற ஆலாலசுந்தரர் அப்பெண்களிடத்துத் தமதுமனதைச்செலுத்த; காதன்மாதரும் காட்சியிற் கண்ணினார்=(அவர்மேல்) ஆசைகொண்ட அப்பெண்களும் தமதுகட்பொறியினாற் பொருந்தநோக்கினார்கள்.—எ-று. (உரு)

முன்னமாங்கவர் மொய்ம்முகை நாண்மலர்
என்னை யாட்கொண்ட வீசனுக்கேய்வன
பன்மலர்கொய்து செல்லப் பனிமலர்
அன்னமன்ன வருங்கொண் டகன்றபின்.

(இ-ள்.) முன்னம் ஆங்கவர்=முன்னே அவ்வாலாலசுந்தரர்; மொய்ம்முகைநாண்மலர்=நெருங்கிய முகையோடுகூடிய புதியமலர்களுள்; என்னைஆட்கொண்ட = என்னை அடிமையாகக்கொண்ட; ஈசனுக்குஏய்வன=சிவபிரானுக்குப் பொருந்துவனவாகிய; பன்மலர்கொய்துசெல்ல = பலமலர்களை எடுத்துச் செல்லுங்கால்; அன்னம் அன்னவரும்=அன்னம்போலும் நடையையுடைய அம்மகளிரிருவரும்; பனிமலர்கொண்டு அகன்றபின்=(பிராட்டியார்க்குரிய) குளிர்ந்தமலர்களை எடுத்துக்கொண்டு போனபின்பு.—எ-று. (உசு)

நாண்மலர்களுள் ஏய்வனவாகிய பன்மலரை எனக்கூட்டுக.

ஆதிமூர்த்தி யவன்றிற நோக்கியே
மாதர்மேன்மனம் வைத்தனை தென்புவி
மீதுதோன்றியம் மெல்லிய லாருடன்
காதலின்பங் கலந்தணை வாயென.

(இ-ள்.) ஆதிமூர்த்தி அவன்திறம்நோக்கியே=முதற்கடவுளாகிய சிவபிரான் அப்பெண்கள்மேல் மனதைச்செலுத்தி வருகின்ற அவ்வாலாலசுந்தரரதுவரவைப்பார்த்து: மாதர்மேல் மனம்வைத்தனை=கமலினி அனிந்திதை என்னும்



பூலோகத்திற் பிறக்கும்படி சிவபெருமான் ஆக்ஞாபிக்க ஆலாலசுந்தரர் குறையிறந்தது.

மகளிர்களிடத்து இச்சைவைத்தாய் (அதனால்) ; தென்புவிமீதுதோன்றி= பரத கண்டத்திற் றென்றிசைக்கண் பிறந்து ; அம்மெல்லியலாருடன்=அம்மகளிர்களுடன் ; காதலின்பங்கலந்து அணைவாய்என = விருப்போடுகூடிய இன்பத்தை அவருடன்கலந்து அநுபவித்து மீண்டு இவ்விடத்துவருவாயாக என்றுகட்டளையிட.—எ-று. (உஎ)

எனவென்றது என்னென்னும் வினையடியாகப்பிறந்த நிகழ்காலச் செயவெனெச்சம்.

கலந்தணைவாயென்றதற்கு ஒருசொன் னீர்மைப்பட அநுபவித்திருவெனக்கூறின் மீட்டு இங்குவாராதொழிக வெனப் பொருள்படுதலி னஃதுரையன்மையறிக. திறம்-கூறுபாடு. ஈண்டு வருதல்மேற்று.

கைகளஞ்சலி கூப்பிக் கலங்கினன்
செய்யசேவடி நீங்குஞ் சிறுமையேன்
மையன்மா னிடமாய்மயங் கும்வழி
யையனேதடுத் தாண்டருள் செய்யென.

(இ-ள்.) கைகள்அஞ்சலிகூப்பிக் கலங்கினன்= திருக்கரங்களை அஞ்சலியாகச் சிரசின்மேற்குவித்து வணங்கிக் கலக்கமடைந்த அவ்வாலாலசுந்தரர்; செய்யசேவடிநீங்கும் சிறுமையேன் = சிவந்ததிருவடிகளை இச்சைகாரணமாய் நீங்கிச்செல்லும் குற்றத்தையுடைய அடியேன் ; மையல்மானிடமாய் மயங்கும் வழி=அறியாமைபொருந்திய மானிடவடிவமெடுத்து மயங்குங்கால் ; ஐயனேதடுத்து ஆண்டுஅருள்செய்என = சுவாமீ தடுத்து அடிமைகொண்டு கிருபைசெய்யவேண்டுமென்று விண்ணப்பஞ் செய்ய.—எ-று. (உஅ)

மானிடப்பிறப்பில் இதுசெய்வது இதுதகாததென்று அறியாது மயங்கலில் மானிடமாய் மயங்கும்வழி என்றார். மயங்குதல் ஒன்றேடொன்று வேறுபாடுணராது நிற்றல். செய்யசேவடி என்றது பயனில் விசேடணமாய் செக்கச்சிவந்த என்றாற்போலஒருசொல் நீர்மைத்தாய் நின்றது.

அங்கணாள னதற்கருள் செய்தபி
னங்கைமாருட னம்பிமற் றத்திசை
தங்குதோற்றத்தி லின்புற்றுச் சாருமென்
றங்கவன் செயலெல்லா மறைந்தனன்.

(இ-ள்.) அங்கணாளன் அதற்குஅருள்செய்தபின்=சிவபிரான் அவர்கேட்டவரத்திற்கு (அவ்வாறாகுக) என அருள்செய்தபின்பு; நங்கைமாருடன் நம்பி =அக்கமலினி அனிந்திதை என்னும் இருபெண்களோடும் அவ்வாலாலசுந்தரர்; அத்திசை தங்குதோற்றத்தில்=மேற்கூறிய அத்தென்றிசைக்கண் அவதரித்த மானிடப்பிறப்பில் ; இன்புஉற்றுச்சாரும் என்று=(அப்பெண்களோடு) இன்பம் நுகர்ந்து ஈண்டுவருகின்றார் என்று; அங்கவன்செயல் எல்லாம் அறைந்தனன்= அவருடையசெய்திகளை யெல்லாம் அருளிச்செய்தார்.—எ-று. (உகூ)

மற்று-அசை, முன்னமாங்கவன் என்னுஞ் செய்யுண் முதலிதுகாறுநான் குசெய்யுளுங் குளகம். அங்கணளன்=அழகிய கருணையையுடையவன்.

அந்தணாளரு மாங்கது கேட்டவர்
பந்தமானிடப் பாற்படு தென்றிசை
இந்தவான்றிசை யெட்டினு மேற்பட
வந்தபுண்ணிய மியாதென மாதவன்.

(இ-ள்.) அந்தணாளரும் ஆங்கதுகேட்டு=(உபமன்னிய முனிவர்) அருளிச்செய்ததை (அரபத்தர்முதலிய) முனிவர்களுங்கேட்டு; அவர்பந்தமானிடப் பாற்படுதென்றிசை = அவ்வாலாலசுந்தரர் பந்தத்தையுடைய மானிடப்பிறவியில் அவதரித்த தென்றிசையானது; இந்தவான்றிசை எட்டினும்மேற்பட = இந்தப் பெருமைபொருந்திய எட்டுத் திசைகளினும் மேலாம்படி; வந்தபுண்ணியம் யாதென மாதவன் = இருந்தபுண்ணியம் யாதென்றுகேட்க (உபமன்னிய)முனிவர் (கூறுகின்றார்).—எ-று. உம்மை உயர்வு சிறப்பு. (௩௦)

இந்த வான்றிசைஎட்டினும் அவர்பந்தமானிடப் பாற்படுதென்றிசை மேற்படவந்தபுண்ணியம் யாதென இயையும். இந்த வான்றிசையெட்டினும் என்றது கூட்டிப்பிரித்தல் அவர் அவதரித்த தென்றிசையின் சிறப்புமேற்கூறுகின்றார்.

பொருவருந் தவத்தான் புலிக்காலனும்
அருமுனியெந்தை யர்ச்சித்து முள்ளது
பெருமைசேர் பெரும்பற்றப் புலியூரென்
றொருமையாளர் வைப்பாம்பதி யோங்குமால்.

(இ-ள்.) பொருவருந்தவத்தான்=ஒப்பற்ற தவத்தையுடைய; புலிக்காலனும் அருமுனி எந்தை=வியாக்கிர பாதரென்னும் என்பிதாவாகிய அரிய முனிவர்; அர்ச்சித்துள்ளது= பூசித்தது; பெருமைசேர்பெரும் பற்றப்புலியூரென்று = (அக்காரணத்தாற்) பெருமைபெற்ற பெரும்பற்றப் புலியூரென்று; ஒருமையாளர்வைப் பாம்பதிஓங்கும் = ஒருவழிப்படுத்திய கரணங்களையுடைய சீவன் முத்தர்களுக்கு இடமாம் ஒரு திருப்பதி விளங்கியிருக்கும்.—எ-று. (௩௧)

உம்-ஆல்-அசை. பெரும்பற்றப்புலியூர் பெரும்பற்றையுடைய புலியூர். அதாவது எல்லாப்பற்றும் அற்றாரது உள்ளத்துப்பற்றுடையதாய்ப் பற்றப்படுவது. சீவன்முத்திபுரமென் றாராயிற்று.

அத்திருப்பதி யின்னமை யாளுடை
மெய்த்தவக்கொடி காண விருப்புட
னித்தனீடிய வம்பலத் தாடுமற்
றித்திறம்பெற லாந்திசை யெத்திசை.

(இ-ள்.) அத்திருப்பதியில் = அத்திருப்பதியின்கண்; நமையாளுடை மெய்த்தவக்கொடிகாண = நம்மையாளாகவுடைய சிவகாமவல்லி காணும்படி;

விருப்புடன்நித்தன் நீடியஅம்பலத்தாடும் = விருப்பத்தோடு சிவபிரான் பெரிய திருவம்பலத்தின்கண்ணே ஆனந்த நிருத்தஞ்செய்யும்; இத்திறம்பெறலாந்திசை எத்திசை = இவ்வாறான மேன்மையைப் பெறும்படியான திக்குயாது.—எ-று.

இதனால் அதுதென்றிசை என்றாரென்க. மெய்த்தவக்கொடியென்னு மன் மொழித்தொகை மெய்ம்மையான தவத்துக்குக் காரணமான கொடிபோல்வாள் எனவிரியும் அது சிவகாமவல்லி என்றபடி. ஆல்-அசை.

பூதமியாவையி னுள்ளலர் போதென
வேதமூலம் வெளிப்படு மேதினிக்
காதன்மங்கை யிதய கமலமா
மாதொர்பாகனு ராரூர் மலர்ந்ததால்.

(இ-ள்.) வேதமூலம்வெளிப்படும் பூதம்யாவையினுள்ளலர்போதென = பிரணவம் வெளிப்படுதற்கிடமான ஆன்மகோடிக ளெல்லாவற்றுள்ளும் அலர்கின்ற இதயதாமரைபோல; வேதமூலம் வெளிப்படும் மேதினிக்காதன்மங்கை யிதயகமலமாம்=பிரணவம்வெளிப்படும் விரும்பத்தக்க பூமிதேவிக்கு இதயதாமரையாயிருக்கும்; மாதொர்பாகனுர் ஆரூர்மலர்ந்ததால் = உமாதேவிபாகராகிய புற்றிடங்கொண்டார் வீற்றிருந்தருளும் திருவாரூர் என்னுந் திருப்பதியானது அத்தென்றிசைக்கண் விளங்கியிருந்தது.—எ-று. (கூகூ)

வேதமூலம் வெளிப்படும் என்னும் பொருளடை உவமையினுஞ் சென்றியைந்தது. இதயத்தும் பிரணவம் வெளிப்படுதலில்; வேதமூலம்வெளிப்படும் மேதினிக்காதன் மங்கையிதயகமலமா மாதொர்பாகனுர் ஆரூர்பூதம் யாவையினுள்ள லர்போதென மலர்ந்தது என இயையும். இதயதாமரை பார்த்திபமாய்ப் பிரணவம் வெளிப்படுதற் கிடமானாற்போலப் பூமிதேவியின் இதயதாமரையாகிய ஆரூரும்பார்த்திபமாய்ப் பிரணவம் வெளிப்படுதற்கிடமாய் இருக்குமெனப் போந்தவாறு காண்க.

எம்பிராட்டி யிவ்வேழுல கீன்றவள்
தம்பிரானைத் தனித்தவத்தா லெய்திக்
கம்பையாற்றில் வழிபடு காஞ்சியென்
றும்பர்போற்றும் பதியு முடையது.

(இ-ள்.) எம்பிராட்டி இவ்வேழுலகு ஈன்றவள்=எமது சிவபிரான் தேவியும் இந்த ஏழுலகத்தையும் பெற்ற மாதாவுமாகிய (காமாட்சியார்); தம்பிரானைத் தனித்தவத்தால் எய்தி=திருவேகம்பரை ஒப்பற்ற தவஞ்செய்தகாரணமாய் அடைந்து; கம்பையாற்றில் வழிபடுகாஞ்சி என்று = கம்பாநதியின் கரையில் பூசித்த காஞ்சீபுரமென்று; உம்பர்போற்றும்பதியும் உடையது=தேவர்கள் துதிக்கும் திருப்பதியையும் அத்தென்றிசையானது உடைத்தாயிருக்கின்றது.—எ-று.

நங்கணுதனு நந்தி தவஞ்செய்து
பொங்குநீடரு ளெய்திய பொற்பது

கங்கைவேணி மலரக்கனன்மலர்
செங்கையாள ரையாறுந் திகழ்வது.

(இ-ள்.) நங்கள்நாதனும் நந்திதவஞ்செய்து=எமக்கெல்லாம் முதல்வராகிய திருநந்திதேவர் தவத்தைச்செய்து; பொங்கு நீடருள் எய்திய பொற்பது= உயர்ந்த பெரியதிருவருளைப்பெற்ற சிறப்பினை யுடைத்தாயிருக்கின்ற; கங்கை வேணிமலர்=சங்கைநதியானது சடையில்விளங்க; கனல்மலர் செங்கையாளர்= அக்கினியானது பிரகாசிக்கின்ற இடக்கரத்தையுடைய சிவபிரான் (வீற்றிருந்தருளும்); ஐயாறுந் திகழ்வது = திருவையாறென்னுந் திருப்பதியும் (அத்தென்றிசைக்கண்) விளங்கியுள்ளது.—எ-று. (ருடு)

பொற்பது என, வினைமுற்றுப்பெயரெச்சமாயிற்று. நந்திபிரான் மானிடப்பிறப்பிற் செய்தவங்காரணமாய் அம்மானிட சரீரத்தைக் கணநாதருருவாகப் பெற்றுக் கயிலையைக்காக்குந் தலைமைபூண்டமையின் "பொங்குநீடருளெய்திய பொற்பது" என்றார்.

தேசமெல்லாம் விளக்கிய தென்றிசை
யீசர்தோணி புரத்துட னெங்கணும்
பூசனைக்குப் பொருந்து மிடம்பல
பேசிலத்திசை யொவ்வா பிறதிசை.

(இ-ள்.) தேசமெல்லாம் விளக்கிய தென்றிசை=எல்லாத்தேசங்களையுந் தன்மகிமையினால் விளங்கச்செய்த தென்றிசையின்கண்; ஈசர்பூசனைக்குப் பொருந்தும் இடம்=சிவபிரான் அடியார்செய்யும் பூசையின்பொருட்டு எழுந்தருளியிருக்கும் இடங்கள்; தோணிபுரத்துடன் எங்கணும்பல = திருத்தோணிபுரத்துடன் எவ்விடத்தும் பலதிருப்பதிகள் உள்ளன (அதனால்); பேசில்பிறதிசை அத்திசையொவ்வா=(ஆராய்ந்து) சொல்லுமிடத்துப் பிறதிசைகள் அத்தென்றிசையோ டொவ்வா.—எ-று. (ருசு)

என்றுமாமுனி வன்றொண்டர் செய்கையை
அன்றுசொன்ன படியா லடியவர்
துன்றுசீர்த்திருத் தொண்டத் தொகைவிரி
யின்றெனுதர வாலிங் கியம்புகேன்.

(இ-ள்.) என்றுமாமுனி = இவ்வாறு (உபமன்னிய) மகாமுனிவர்; வன்றொண்டர்செய்கையை = நம்பியாரூரர் சரிதத்தை; அன்றுசொன்னபடியால்= அந்நாளில் (திருக்கயிலையின்கண் அரபத்தர்முதலிய முனிவர்கள்பொருட்டு) அருளிச்செய்த காரணத்தால்; அடியவர்துன்று சீர்த்திருத்தொண்டத்தொகைவிரி= அடியார்களது மிக்கசரிதமென்னும் திருத்தொண்டத்தொகையின் விரியை; இன்றுஎனுதரவா லிங்கியம்புகேன் = இப்பொழுது என்விருப்பங்காரணமாகச் சொல்லத்தொடங்கினேன்.—எ-று. (ருஎ)

சரிதமென்னும் விரியை இயம்புகேன் எனக்கூட்டுக. நம்பியாரூரர் தென்றிசையில் அவதரித்ததும், சிவபிரான் அவரைத் தடுத்தாட்கொண்டதும், தேவாரத்திருப்பதிகம் அருளிச்செய்ததும், பல அற்புதங்கள்செய்ததும் ஆகிய சரிதங்களையெல்லாம் அவர்க்காங்கருளிச்செய்தாரென்னுங் கருத்தால் "அன்றுசொன்ன படியா" லென்றார். புராணநூல்கள் இன்னார் அருளிச்செய்ய இன்னார்கேட்டாரென்னும் மரபுவழி கூறுக்கால் தொன்மையான ஆரிடமெனப்படா; அதனால் உபமன்னியமுனிவர் அருளிச்செய்ய அரபத்தர்முதலிய முனிவர்கள் திருக்கயிலையின்கண் நம்பியாரூரர் சரிதமுள்படத் திருத்தொண்டத்தொகை அடியாரியல்பையுங் கேட்டாரென்று தாங்கூறும் விரிக்கு மரபுவழியாக ஆரிடங்கூறி அம்முறைவைத்துக் கூறுகின்றேனென்பார் திருத்தொண்டத்தொகைக்கு விரிசெய்கின்றேனெனக் கூறினர். இவ்வாறு ஆரிடமாகிய மரபுவழிகூறுக்கால் புதிதாய் வந்த சரிதத்தைக்கூறும் புராணமெனப்படுமென்க. அம்முறைவைத்துக்கூறுதலாவது சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவவதாரம்முதல் திருக்கயிலைக் கெழுந்தருளிய சரித மீறுகக் கூறுதல். இவ்வாறு மரபுவழிகூறித் தாங்கூறும் விரிக்குத் தொகை ஈதென மேற்கூறுகின்றார்.

மற்றிதற்குப் பதிகம்வன் றொண்டர்தாம்
புற்றிடத்தெம் புராண ரருளினாற்
சொற்றமெய்த்திருத் தொண்டத் தொகையெனப்
பெற்றநற்பதி கந்தொழப் பெற்றதால்.

(இ-ள்.) இதற்குப்பதிகம்=அச்சரிதத்தடங்கிய பதிகத்துள் நான்விரிசெய்தற்குக் காரணமாய் உரியதிருப்பதிகம்; வன்றொண்டர்தாம் புற்றிடத் தெம்புராணரருளினால்=நம்பியாரூரர் திருவாரூரில் புற்றிடங்கொண்ட சிவபிரானரது திருவருளினால்; சொற்றமெய்த் திருத்தொண்டத்தொகை யெனப்பெற்ற = அருளிச்செய்த மெய்ம்மைபொருந்திய திருத்தொண்டத்தொகையென்று திருப்பெயர் பெற்ற; நற்பதிகந்தொழப்பெற்றது=நல்ல திருப்பதிகமானது எம்மால்வணங்கப் பெற்றதாயுள்ளது.—எ-று. மற்று - ஆல் - அசை. (கூஅ)

தொழப்பெற்றது என்றதனால் அதன்பொருளறிந்து விரிகூறவல்லனல்லேனென்றாராயிற்று. திருத்தொண்டத்தொகை - என்றது, திருத்தொண்டரது தொகுத்தலையுடையதென அன்மொழித்தொகையாய் அத்திருப்பதிகத்திற்காயது. ஈண்டுத் தொகுத்தலென்றது-ஒருமுதனூலினின்றுந் தொகுத்ததன்று; பின், புற்றிடங்கொண்டார் அடியெடுத்துக்கொடுக்க அவர் திருவருள்பெற்ற நம்பியாரூரர், தேவாசிரியன் என்னுந் திருமண்டபத்தின்கண் எழுந்தருளியிருந்த அடியார்களையும், முன்னுள்ள அடியார்களையும் அக்காலத்துப் பிற இடங்களிலிருந்த அடியார்களையும் இப்பொழுதுள்ள அடியார்களையும் இனிமேல்வரும் அடியார்களையும் அடக்கித் தொகுத்ததென்க. மேல் தாம்கூறிய விரிக்கு வகையாகிய முதனூல் இதுவென்ப துணர்த்துகின்றார்.

அந்தமெய்ப்பதி கத்தடி யார்களை
நந்தநாதனு நம்பியாண்டார் நம்பி

புந்தியாரப் புகன்ற வகையினால்
வந்தவாறு வழாமை யியம்புவாம்.

(இ-ள்.) அந்தமெய்ப்பதிகத்து அடியார்களை = அந்தமெய்ம்மைபொருந்திய திருப்பதிகத்தில் தொகுத்த அடியார்களை; நந்தம்நாதனும் நம்பியாண்டார் நம்பி=நமக்கெல்லாம் முதல்வராகிய நம்பியாண்டார் நம்பியென்னும் பெரியோர்; புந்தியாரப் புகன்றவகையினால்=நமதுபுத்திக்கு அத்திருப்பதிகப் பொருள்பொருந்தும்படி பொல்லாப்பிள்ளையார் திருவருளால் வகுத்தருளிச் செய்தவகை யால்காரணமாக; வந்தவாறு வழாமலியம்புவாம் = (அத்திருவந்தாதியில்) வந்தபடி நமது விரியில்வழுவாமல் சொல்லுவாம்.—எ-று. (௩௯)

வந்தவாறென்றதனால் தில்லைவாழந்தணர் சருக்கம்முதலாகப் பதிகப்படி நம்பியாண்டார்நம்பி வகுத்த முறைவழாமலென்றாரென்க. எனவே இவ்விரண்டும் தாஞ்செய்யும் விரிக்கு முதனூலென அதன் வழிகூறினாராயிற்று.

உலகமுய்யவுஞ் சைவநின் றோங்கவும்
அலகில்சீர்நம்பி யாரூரர் பாடிய
நிலவுதொண்டர் தங்கூட்ட நிறைந்துறை
குலவுதண்புன னாட்டணி கூறுவாம்.

(இ-ள்.) உலகமுய்யவும்=உலகத்தின்கண்வாழும் மானிடர் வீடடையவும்; சைவநின்றோங்கவும்=சைவசமயமானது நிலைபெற்றோங்கவும்; அலகில்சீர்= அளவுபடாத மிக்கபுகழையுடைய; நம்பியாரூரர்பாடிய=நம்பியாரூரர் தம்பதிகத்துள் அருளிச்செய்த; நிலவுதொண்டர்தம் கூட்டம் = விளங்கிய அடியார் திருக்கூட்டம்; நிறைந்துறை = நிறைந்துவாசஞ்செய்த; குலவுதண் புனனாட்டணிகூறுவாம்=விளங்கிய குளிர்ச்சிபொருந்திய சோழநாட்டினது சிறப்பைச் சொல்லுவாம்.—எ-று. (௪௰)

## திருமலைச்சிறப்பு முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௫௰.

## திருநாட்டுச்சிறப்பு.

பாட்டியற் றமிழுரை பயின்ற வெல்லையுட்
கோட்டுயர் பனிவரைக் குன்றி னுச்சியிற்
சூட்டிய வளர்புலிச் சோழர் காவிரி
நாட்டியல் பதனையா னவில லுற்றனன்.

(இ-ள்.) பாட்டியல்தமிழுரை பயின்றஎல்லையுள்=பெருமைபொருந்திய இயற்றமிழ் மொழிவழங்கிய எல்லையின்கண் உள்ள; கோட்டுயர் பனிவரைக்குன்றினுச்சியில் = சிகரங்களால் உயர்ந்த இமயமென்னும் மலையின் உச்சியின்கண்; சூட்டியவளர்புலிச்சோழர்=கட்டப்பட்ட நீண்ட புலிக்கொடியையுடைய சோழவம்சத் தரசர்களது; காவிரிநாட்டியல் பதனையான்நவில லுற்றனன்=புனனாட்டினுடைய வளத்தை யான் இங்குச்சொல்லலுற்றேன்.—எ-று. (௧)

எல்லையுட்காவிரிநாடெடன இயையும். தமிழுணாபயின்ற எல்லையாவது வடக்கின்கண் வடுகுநாடும் கிழக்குத் தெற்கு மேற்கு என்னும் மூன்றில் கடலும் ஆகிய எல்லை என்க. சோழர்கள் தம் எல்லையையன்றிப் புறநாட்டரசர்களது எல்லையையும் தந்நாடாகக்கொண்டு பரதகண்டமுழுதும் தம்மாணை செலுத்தினாரென்பது தோன்ற "பனிவரைக்குன்றி னுச்சியிற்சூட்டிய வளர்புலிச்சோழ" ரென்றார். புலி ஆகுபெயர். பனிவரைக்குன்று இருபெயரொட்டுப் பண்புத்தொகை. கவேரமுனியின் புத்திரியாதலிற் காவேரிஎன்றும் அது சிதைந்து காவிரியென நின்றது முன்னாளில் அகத்தியமுனிவர் சையபருவத்தில் கவேரமுனிவர் ஆச்சிரமத்தில் சிவபிரானிடத்துத்தாள் பெற்று, கமண்டலத்துள் அடக்கிவந்த இந்நதியைக் கமண்டலத்தோ டங்குவைத்துச் சிவபூசைக்குப் புட்பமெடுக்கும்படி செல்ல, விநாயகமூர்த்தி வாயசரூபமாய் அக்கமண்டலத்தைக் கவிழ்த்தனர். அப்பொழுது அக்கமண்டலத்தினின்றும் அத்தீர்த்தம் நதிரூபமாய்ப் பிரவாகித்தது. கவேரமுனிவர் அதிபரிசுத்தமான அந்நதியை எனதுஆச்சிரமத்தில் நதிரூபமடைந்தமையால் என்னுடையபுத்திரியாகுக எனச்சொன்னார். அதனால் அப்பெயர்பெற்றதென்க.

> ஆதிமா தவமுனி யகத்தியன் றரும்
> பூதநீர்க் கமண்டலம் பொழிந்த காவிரி
> மாதர்மண் மடந்தைபொன் மார்பிற் றாழ்ந்ததோர்
> ஓதநீர்நித்திலத் தாமமொக்குமால்.

(இ-ள்.) ஆதிமாதவமுனி யகத்தியன்தரும்=முதன்மைபொருந்திய பெரியதவத்தையுடைய அகத்தியமுனிவர் கொண்டுவரப்பட்ட; பூதநீர்க்கமண்டலம்=பரிசுத்தமான நீரையுடைய கமண்டலத்தினின்றும்; பொழிந்தகாவிரி=சொரிந்த காவிரிநதியானது; மாதர்மண்மடந்தை=அழகிய பூதேவியினுடைய; பொன்மார்பில் தாழ்ந்தது = பொன்னிறம்பொருந்திய திருமார்பில் தாழ்ந்து விளங்கிய; ஓதநீர் நித்திலத்தாமம் ஒக்கும்=பெருக்குப்பொருந்திய நீரில் உதித்த முத்துமாலையை யொத்திருக்கும்.—எ-று. ஓர்-ஆல்-அசை. (உ)

அக்கமண்டலநீர் எல்லாத்தீர்த்தமயமாய் அதிபரிசுத்த முடைமையின் பூதநீர்-என்றார். நீர் நித்திலத்தாமம் என்றதனால் நிலத்துதிக்கும் கரும்பு மூங்கில் முதலிய முத்துக்கள் விலக்கப்பட்டன; முத்து தலசம் சலசம் என இருவகைப்படுதலி னென்க.

> சையமால் வரைபயி றலைமை சான்றது
> செய்யபூ மகட்குநற் செவிலி போன்றது
> வையகம் பல்லுயிர் வளர்த்து நாடொறும்
> உய்யவே சுரந்தளித் தூட்டு நீரது.

(இ-ள்.) சையமால்வரை பயில்தலைமைசான்றது=பெருமைபொருந்திய சையமலையினிடத்துத் தோன்றிய முதன்மையுள்ளது; செய்யபூமகட்குநற்செவிலிபோன்றது=செப்பமான பூமியென்னும் மகளுக்கு நல்லசெவித்தாய்போன்றது; வையகம்பல்லுயிர் வளர்த்துநாடொறும்=நிலவுலகின்கணுள்ள பல ஆன்மகோடி

களையும் நாடோறும்வளர்த்து; உய்யவேயளிசுரந் தூட்டும்நீரது=அவ்வான்மகோடிகளுய்யும்பொருட்டு அவற்றின்மேல் கிருபை சுரந்து உண்பிக்கும் நீர்மையுடையது. அக்காவிரிநதி.—எ-று. (௩)

பலவளங்களோடப் பூமகள் வளர்தற்கு இந்நதிகைத்தாய்போலிருந்து வளர்த்தலிற் "செவிலிபோன்ற" தென்றார். உயிர்க்களி சுரந்தூட்டல் தன்னுலுண்டாகிய வளம்பொருந்திய பலபண்டங்களோடு தானும் உணவாதல்.

மாலினுந் திச்சுழி மலர்தன் மேல்வருஞ்
சால்பினுற் பல்லுயிர் தருதன் மாண்பினுற்
கோலநற் குண்டிகை தாங்குங் கொள்கையாற்
போலுநான் முகனையும் பொன்னி மாநதி.

(இ-ள்.) மாலினுந்திச்சுழி மலர்தன்மேல் வருஞ்சால்பினுல் = மிகப்பெருகி நீர்ச்சுழியையும் மலர்களையுந் தன்னிடத்துத் தாங்கிவருகின்ற பெருமையினுலும் சிலேடைவகையால் திருமாலினுடைய நாபிகமலத்தில் உதித்த பெருமையினுலும்; பல்லுயிர்தருதல் மாண்பினுல் = பலஆன்மகோடிகளையும் வளர்க்குங் குணத்தினுலும் சிலேடைவகையால் சிருட்டிக்குங் குணத்தினுலும்; கோலநற்குண்டிகை தாங்குங்கொள்கையால் = அழகிய கமண்டலமானது தன்னைத்தாங்குஞ் சிறப்பினுலும் சிலேடைவகையால் கமண்டலத்தைத் தாங்குங் குணத்தினுலும்; பொன்னிமாநதி நான்முகனையும்போலும் =காவிரிநதியானது பிரமனையுமொக்கும்.—எ-று. உம்மை எதிரது தழீஇயது. (௪)

திங்கள் சூடியமுடிச் சிகரத்துச்சியிற்
பொங்குவெண் டலைநுரை பொருதுபோதலால்
எங்கணுயகன்முடி மிசைநின் றேய்ந்திழி
கங்கையாம் பொன்னியாங் கன்னிநீத்தமே.

(இ-ள்.) திங்கள்சூடிய முடிச்சிகரத்துச்சியில்=இளம்பிறைதவழ்கின்ற கொடுமுடிகளை உடைய சையமலையின் உச்சிச்சிகரத்தில் சிலேடைவகையால் சந்திரனைத்தரித்த சிவபிரான் திருமுடியென்னுஞ் சிகரத் துச்சியினின்றும்; பொங்குவெண்டலை நுரைபொருதுபோதலால்=பெருகி வெள்ளியதலைபோலும் நுரைகளை வீசிக்கொண்டு போதலினுல் சிலேடைவகையால் பொலிவினையுடைய நகுவெண்டலையில் நுரைகளைவீசிக்கொண்டு போதலினுல்; பொன்னியாங்கன்னி நீத்தம்=காவிரிஎன்கிற அழிவில்லாத நதியானது; எங்கணுயகன் முடிமிசை நின்றேய்ந்து இழிகங்கையாம்=எமது முதல்வராகிய சிவபிரானது திருமுடியில் நின்றும் பகீரதன்பொருட்டு பூமியில் வந்து இழிந்த கங்காநதியையொக்கும். எ-று. ஏ - அசை. (௫)

எக்காலத்தும் இடையருது செல்லும்பெருமை தோன்றக்கன்னி நீத்தம் என்றார். கன்னி=அழிவின்மை.

வண்ணநீள் வரைதர வந்த மேன்மையால்
எண்ணில்பே ரறங்களும் வளர்க்கு மீகையால்
அண்ணல்பா கத்தையா ளுடைய நாயகி
உண்ணெகிழ் கருணையி னொழுக்கம் போன்றது.

(இ-ள்.) வண்ணநீள்வரைதர வந்தமேன்மையால் = அழகுடைத்தாய் நீண்டசையமலை உதிப்பிக்கவந்த பெருமையினாலும் சிலேடைவகையால் இமவான்புத்திரியாகப் பெறவந்த மேன்மையினாலும்; எண்ணில்பேரறங்களும் வளர்க்கும் ஈகையால்=எண்ணிறந்த பெரிய அறங்களை விருத்திசெய்யும்கொடையினாலும்; அண்ணல் பாகத்தையாளுடைய நாயகி=சிவபிரானது இடப்பாகத்தைத் தமக்கு ஒருகூறாகக் கொண்ட உமாதேவியாரது; உண்ணெகிழ்கருணையி னொழுக்கம் போன்றது=திருவுள்ளத்திற் கனிந்த கருணையினது செலவையும் அந்நதியானது ஒத்தது.—எ-று. (சு)

வேறு.

வம்புலாமலர் நீரால் வழிபட்டுச்
செம்பொன்வார்கரை யெண்ணில் சிவாலயத்
தெம்பிரானை யிறைஞ்சலி னீர்ம்பொன்னி
உம்பர்நாயகர்க் கன்பரு மொக்குமால்.

(இ-ள்.) வம்புலாமலர் நீரால்வழிபட்டு=வாசனைகமழ்கின்ற மலர்களினாலும் நீரினாலும் வழிபாடுசெய்து; செம்பொன்வார்கரை எண்ணில் சிவாலயத்து=சிவந்த பொற்பொடிகளையுடைத்தாய் நீண்ட இருகரையிலும் இராநின்ற அளவற்ற சிவாலயங்களில்; எம்பிரானை இறைஞ்சலில்=(வீற்றிருந்தருளும்) எமது சிவபிரானை வணங்குதலால்; ஈர்ம்பொன்னி=குளிர்ச்சிபொருந்திய காவிரி நதியானது; உம்பர்நாயகர்க் கன்பருமொக்கும்=தேவர்க்கதிபராகிய சிவபிரானது அடியார்களையும் ஒத்திருக்கும்.—எ-று. ஆல்-அசை. ஈரமென்பதில் அகரந்தொக்கது. சிலேடைவகையால் அடியர்பரத்தும் செம்பொருளே கொள்க. (எ)

வாசநீர்குடை மங்கையர் கொங்கையிற்
பூசுகுங்கும மும்புனை சாந்தமும்
வீசுதெண்டிரை மீதழித் தோடுநீர்
தேசுடைத் தெனினுந் தெளிவில்லதே.

(இ-ள்.) வாசநீர்குடை மங்கையர் கொங்கையில் = வாசனைபொருந்திய நீராடும் மகளிர்கள் தம்முடைய தனங்களினிடத்து; பூசுகுங்குமமும் புனைசாந்தமும்=பூசியகுங்குமக்குழம்பையும் அணிந்த சந்தனக்குழம்பையும்; வீசுதெண்டிரைமீது அழித்தோடுநீர்=வீசுகின்ற தெள்ளிய அலைகளினால் தன்னிடத்திற் கரைத்துக்கொண்டு பெருகுகின்ற அந்நதியானது; தேசுடைத்தெனினுந் தெளிவில்லது=மிக்கவெண்மைநிறமுடையதேனும்தெளிவில்லாதிருந்தது.—எ-று.ஏ-ஈற்றசை.

மாவிரைத்தெழுந் தார்ப்ப வரைதரு
பூவிரித்த புதுமதுப் பொங்கிட
வாவியிற் பொலிநாடு வளந்தரக்
காவிரிப்புனல் கால்பரந் தோங்குமால்.

(இ-ள்.) மா இரைத்தெழுந்தார்ப்ப=வண்டுகள் ஆரவாரித்தெழுந்து ஒலிக்கவும்; வரைதருபூவிரித்த புதுமதுப்பொங்கிட=மலையினிடத்து வருகின்ற பூக்கள் மலர்தலின லுண்டான புதியதேன்கள் பொங்கும்படிக்கும்; வாவியிற்பொலிநாடுவளந்தர=வாவிகளிஞற் சிறந்த நாடுகள் வளத்தைக்கொடுக்கும்படிக்கும்; காவிரிப்புனல் கால்பரந்தோங்கும்=காவிரியாற்றின் நீரானது அநேகங்கால் வழி பரம்பிச் செல்லும்.—எ-று. ஆல் - அசை. ஆர்ப்பப் பொங்கிட வளந்தரப் புனல் கால்பரந்தோங்கும் எனஇயையும். (௯)

ஒண்டுறைத்தலை மாமத கூடுபோய்
மண்டுநீர்வய லுட்புக வந்தெதிர்
கொண்டமள்ளர் குரைத்தகை யோசைபோய்
அண்டர்வானத்தி னப்புறஞ் சாருமால்.

(இ-ள்.) ஒண்டுறைத்தலை மாமதகூடுபோய்=ஒள்ளியகரையின்கணுள்ள பெரியமதகின் வழிச்சென்று; மண்டு நீர்வயலுட்புக=மிக்க நீரானது வயல்களிடத்துச் செல்லுதலால்; வந்தெதிர் கொண்ட மள்ளர் = அக்கரையில் வந்து (அந் நீரைக் கால்வழிக்கொண்டு செல்ல) எதிர்வந்த மள்ளர்கள்; கைகுரைத்த ஓசைபோய்=(மகிழ்ச்சியாற்) கைதட்டிய ஓசையானது சென்று; அண்டர்வானத்தின் அப்புறம்சாரும்=தேவர்கள் வாழ்கின்ற விண்ணுலகத்திற்கும் அப்பாற்செல்லும். எ-று. ஆல்-அசை. குரைத்தல்=ஒலித்தல். கைகுரைத்தலோசை என இயையும்.(௧0)

மாதர்நாறு பறிப்பவர் மாட்சியுஞ்
சீதநீர்முடி சேர்ப்பவர் செய்கையும்
ஓதையார் செய்யுழுந ரொழுக்கமுங்
காதல்செய்வதோர் காட்சி மலிந்தவே.

(இ-ள்.) மாதர்நாறுபறிப்பவர் மாட்சியும்=அழகியநாற்றைப் பறிக்கின்றகடைசியர்களது சிறப்பும்; சீதநீர் முடிசேர்ப்பவர் செய்கையும்=குளிர்ந்த நீரினிடத்து நாற்றுமுடிகளைச் சேர்க்கின்றவர்களது செயலும்; ஓதையார் செய்யுழுநரொழுக்கமும்=ஒலிபொருந்தியவயலை உழுகின்றமள்ளர்களது வரிசையும்(ஆகிய இவைகள்); காதல்செய்வதோர் காட்சிமலிந்த=கண்டார்க்கு விருப்பத்தைக் கொடுக்கத்தக்க தோற்றத்தால் விளங்கின.—எ-று. ஏ-ஈற்றசை. (௧௧)

வயலுக்கு நீர் சங்கு முதலியவற்றானுய ஓசையுண்மையின் ஓதையார் செய் என்றார்.

உழுந்சான்மிக வூறித் தெளிந்தசே
றிழுதுசெய்யினு ளிந்திரத் தெய்வதந்
தொழுதுநாறு நடுவார் தொகுதியே
பழுதில்காவிரி நாட்டின் பரப்பெலாம்.

(இ-ள்.) உழுதசால் மிகவூறித் தெளிந்தசேறு = உழவர்களால் உழப்பட்ட படைச்சாலில் மிகவும் ஊறித்தெளிந்த சேறுனது; இழுது செய்யினுள் = நெய்த்தன்மை அடைந்திருக்கும் வயல்களில்; இந்திரத்தெய்வதந்தொழுது=(மருதத்துக்குத் தெய்வமாகிய) இந்திரனைவணங்கி ; நாறுநடுவார் தொகுதியே = நாற்றுநடுகின்ற கடைசியர்களது கூட்டமே; பழுதில்காவிரி நாட்டின்பரப்பெலாம்=குற்றமற்ற காவிரிநாட்டின் வயலிடங்களெல்லாம் மிகுந்துள்ளது.—எ-று.()

பிறவில்லை யெனப்பிரித்தலில் ஏகாரம் பிரிநிலை. நடுவார்தொகுதி பரப்பெலாம் (உள்ள)தென இயையும்.

வேறு.

மண்டுபுனல் பரந்தவயல் வளர்முதலின் சுருள்விரியக்
கண்டுழவர் பதங்காட்டக் களைகளையுங் கடைசியர்கள்
தண்டரளஞ் சொரிபணில மிடறியிடை தளர்ந்தசைவார்
வண்டலையுங் குழலலைய மடநடையின் வரம்பணைவார்.

(இ-ள்.) மண்டுபுனல்பரந்த வயல்=மிகுந்த நீர்பரந்த வயல்களில்; வளர்முதலின் சுருள்விரியக்கண்டு=வளர்கின்ற நெற்பயிர்களின் சுருள்கள் விரியும் பக்குவத்தைக் கண்டு; உழவர் பதங்காட்ட=மள்ளர்கள் களைகடும் பருவத்தைக் காட்டும்பொழுது; களைகளையுங்கடைசியர்கள்=அதன் களைகளைப்பறிக்கின்றஆற்றுக்காலாட்டியர்கள்; தண்டரளஞ்சொரி பணிலம் இடறி=குளிர்ந்த முத்துக்களைச் சொரிகின்ற சங்குகள் காலின்கண் இடறி; இடைதளர்ந்து அசைவார்=(அதனால்) இடைதள்ளாடி வருந்துவாராய் ; வண்டலையுங் குழல் அலைய=(பின் அவர்கள்) வண்டுகள்தேன் நசையால் சுற்றுகின்ற தங்கள் அளகங்கள் அவிழ்ந்தசையும்படி; மடநடையின் வரம்பணைவார்=மிருதவான நடையோடு வரம்பினிடத்துச் செல்வாராயினார்.—எ-று. (௧௩)

செங்குவளை பறித்தணிவார் கருங்குழன்மேற் சிறைவண்டை
யங்கைமலர் களைக்கொடுகைத் தயல்வண்டும் வரவழைப்பார்
திங்கணுதல் வெயர்வரும்பச் சிறுமுறுவ றளவரும்பப்
பொங்குமலர்க் கமலத்தின் புதுமதுவாய் மடுத்தயர்வார்.

(இ-ள்.) கருங்குழன்மேற் செங்குவளை பறித்தணிவார்=(ஆற்றுக்காலாட்டிப் பெண்களுள் சிலர்) கரியகூந்தலினிடத்து சிவந்த குவளை மலர்களைக் கொய்து சூடிக்கொள்வார்கள் ; கருங்குழன்மேற் சிறைவண்டை=(சிலர்) கரிய கூந்தலின்மேல் விழுகின்ற சிறகினையுடைய வண்டுகளை; அங்கை மலர்களைக் கொடுகைத்து=(தமது) அழகிய கையாகிய தாமரை மலர்களைக்கொண்டு ஓட்டி;

அயல்வண்டும் வரவழைப்பார்=அயலிலிருக்கும் வண்டுகளையும் வரும்படி அழைப்பார்கள்; திங்கள்நுதல்வெயர்வு அரும்ப = (சிலர்) பிறைபோலும் தமதுநெற்றியில் வெயர்வை உண்டாகவும்; சிறுமுறுவல் தளவு அரும்ப=புன்னகை யாகிய முல்லையரும்புகள் மலரவும் ; பொங்குமலர்க் கமலத்தின்=பொலிவு பொருந்திய தாமரைமலரிடத்துள்ள; புதும்துவாய் மடுத்தயர்வார்=புதியதேனையுண்டு (அதனால்) மயங்குவார்—எ-று. (௧௪)

> கரும்பல்ல நெல்லென்னக் கமுகல்ல கரும்பென்னச்
> சுரும்பல்லி குடைநீலத் துகளல்ல பகலெல்லாம்
> அரும்பல்ல முலையென்ன வமுதல்ல மொழியென்ன
> வரும்பல்லா யிரங்கடைசி மடந்தையர்கள் வயலெல்லாம்.

(இ-ள்.) பகலெல்லாம்=பகன்முழுதும் (காண்பார்க்கு); கரும்பல்லநெல்லென்ன=(இவை) கரும்புகள் அல்ல நெற்பயிர்கள் என்றுசொல்லவும்; கமுகல்ல கரும்பென்ன=(இவை)கமுகமரம் அல்ல கரும்பென்றுசொல்லவும்; சுரும்பு அல்ல அல்லிகுடை நீலத்துகள்=(இவை)வண்டுகள் அல்ல அவ்வண்டுகள் நீலமலரின் அகவிதழைக்குடைந்த கரியபொடி என்றுசொல்லவும்; அரும்பல்ல முலையென்ன=(இவை)பூ அரும்பு அல்ல முலையென்று சொல்லவும் ; அமுதல்ல மொழியென்ன=(இவை) அமுதம் அல்ல வார்த்தையென்று சொல்லவும் ; வரும்பல்லாயிரங் கடைசி மடந்தையர்கள் வயலெல்லாம்=வருகின்ற பல ஆயிரம் ஆற்றுக்காலாட்டிப் பெண்கள் வயலிடங்களெல்லாம் உளர்.—எ-று. (௧௫)

களைகடுஞ்செயலால் - நெல்லென்னும் வேறுபாடும், பிடுங்கி ஆலைசேர்க்குஞ் செயலாற் கரும்பென்னும் வேறுபாடும், பிடுங்கிக் கரையிற்சேர்த்தலால் துகளுதிர்தலின் அல்லிகுடை நீலத் துகளென்னும் வேறுபாடும், களைகடுகின்றதமக்கு உறுப்பாகிற்றலில் முலையென்னும் வேறுபாடும், தம்வாயினின்றும் வருதலால் மொழியென்னும் வேறுபாடும், காண்பார்க்குத்தோன்ற அம்மகளிர்கள் வருதலின் இவ்வாறுகூறினரென்க.

> கயல்பாய்பைந் தடநந்தூன் கழிந்தபெருங் கருங்குழிசி
> வியல்வாய்வெள் வளைத்தரள மலர்வேரி யுலைப்பெய்தங்
> கயலாமை யடுப்பேற்றி யரக்காம்ப னெருப்பூதும்
> வயன்மாதர் சிறுமகளிர் விளையாட்டு வரம்பெல்லாம்.

(இ-ள்.) கயல்பாய் பைந்தட நந்தூன்கழிந்தநந்து=கெண்டைமீன்கள் பாய்ந்து விளையாடுகின்ற பசியவாவிகளிலுதித்த தசைநீங்கியசங்குகள்; பெருங்கருங்குழிசி=பெரிய கருமை பொருந்திய பானையாகவும், வியல்வாய் வெள்வளைத்தரளம்=அகன்ற வாயையுடைய வெள்ளிய சங்குகளீன்ற முத்துக்களாகிய (அரிசியை); மலர்வேரியுலைப்பெய்து=அப்பானையில்வார்க்கும் பூந்தேனாகிய உலையினிடத்து இட்டு; அங்கு அயலாமையடுப்பேற்றி=அவ்விடத்து அயலின்கணுள்ள ஆமையோடாகிய அடுப்பினிடத்துஏற்றி; அரக்காம்பல் நெருப்பூதும்=செங் குமுதங்க

யாகிய நெருப்பை அதன்கீழ்வைத்தூதுகின்ற; வயல்மாதர் சிறுமகளிர்=ஆற்றுக் கர லாட்டியர்களின் பெண்குழந்தைகளுடைய; விளையாட்டு வரம்பெல்லாம்= விளையாட்டானது வரம்பிடங்களெல்லாம் இருந்தது.—எ-று. (௧௬)

காடெல்லாங் கழைக்கரும்பு காவெல்லாங் குழைக்கரும்பு
மாடெல்லாங் கருங்குவளை வயலெல்லா நெருங்குவளை
கோடெல்லா மடவன்னங் குளமெல்லாங் கடலன்ன
நாடெல்லா நீர்நாடு தனையொவ்வா நலமெல்லாம்.

(இ-ள்.) காடெல்லாங் கழைக்கரும்பு=(அம்மருத நிலத்தின்கணுள்ள) காடெல்லாம் கழைக்கரும்புகள் உள்ளன; காவெல்லாங்குழைக்கரும்பு=சோலை களெங்கும் குழையோடு கூடியஅரும்புகள் உள்ளன; மாடெல்லாங்கருங்குவளை= பக்கங்களெல்லாம் நீலோற்பல மலர்கள் உள்ளன; வயலெல்லா நெருங்குவளை= வயலிடங்களெல்லாம் நெருங்கிய சங்குகள்உள்ளன; கோடெல்லாம் மடவன்னம் =வாவிக்கரைகளெல்லாம் மடமை பொருந்திய அன்னங்கள் உள்ளன; குளமெ ல்லாம்கடலன்ன=வாவிகளெல்லாங் கடலையொத்தன; (அதனால்)நலமெல்லாம்= எல்லாநலங்களாலும்; நீர்நாடுதனை நாடெல்லாமொவ்வா=புனனாட்டை ஏனைய நாடுகளெல்லாம் ஒவ்வா.—எ-று. கழைக்கரும்பு இருபெய ரொட்டுப் பண்புத் தொகை. கழையாகிய கரும்பென விரியும். அது வேழக்கரும்பென்று பொருள்.

குழைக்கு அரும்பு என்பது உருபுமயக்கம். குழைக்கரும்பு என்புழி குழைக்கும் அரும்பு என்பதில் மகரந்தொக்கதாகக்கொண்டு முகிழ்க்கும் அரும் பென்றுரைத்தலு மொன்று.

வேறு.

ஆலைபாய்பவ ரார்ப்புறு மோலமுஞ்
சோலைவாய் வண்டிரைத்தெழு சும்மையும்
ஞாலமோங்கிய நான்மறை யோதையும்
வேலையோசையின் மிக்கு விரவுமால்.

(இ-ள்.) ஆலைபாய்பவர் ஆர்ப்புறும் ஓலமும் = ஆலைகளிடத்துக் கரும்பு களைப் பாயச்செய்கின்றவர்கள் ஆரவாரிக்கும் ஒலியும்; சோலைவாய் வண்டிரைத் தெழுசும்மையும்=சோலைகளிடத்து வண்டுகள் ஆரவாரித்து எழாநின்ற ஒலியும்; ஞாலமோங்கிய நான்மறையோதையும்=நிலவுலகின்கண் உயர்ந்த நான்குவேதங் களின் பாராயண ஒலியும் (ஆகிய இவைகள் ஒருங்குசேர்ந்து); வேலையோசை யின் மிக்குமுழங்கும்=சமுத்திரத்தொலியினும் மிகமுழங்கும்.—எ-று. (௧௭)

ஆல்-அசை. பாய்ப்பவர் என்றது, பாய்பவர் எனத்தொக்குநின்றது.

அன்னமாடு மகன்றுறைப் பொய்கையிற்
றுன்னுமேதி படியத் துதைந்தெழு
கன்னிவாளை கமுகின்மேற் பாய்வன
மன்னும்வான்மிசை வானவிற் போலுமால்.

(இ-ள்.) அன்னமாடும் அகன்றுறைப்பொய்கையில்=அன்னங்கள்விளையாடுகின்ற அகன்றகரையையுடைய வாவிகளில்; துன்னும்மேதிபடிய=அங்கிலத்துள்ள எருமைகள்முழுக; துதைந்தெழுகன்னிவாளை = (அவ்வாவிகளினின்றும்) நெருங்கிமேலெழுகின்ற இளமைபொருந்திய வாளைமீன்கள்; கமுகின்மேற்பாய்வன=கமுகமரத்தின்மேற் பாயுந்தோற்றம்; மன்னும்வான்மிசை வானவிற்போலும்=ஆகாயத்தின்கண் நிலைபெறும் இந்திரவில்லை யொக்கும்.—எ-று.(௧௯)

ஆல்-அசை. பாய்வன என்றது வினைமுற்றுத் தொழிற்பெயர். பாய்வனவாகிய வாளையெனினும் அமையும்.

காவினிற் பயிலுங்களி வண்டினம்
வாவியிற் படிந்துண்ணு மலர்மது
மேவியத்தட மீதெழப் பாய்கயல்
தாவியப்பொழி லின்கனி சாடுமால்.

(இ-ள்.) காவினிற் பயிலுங் களிவண்டினம்=சோலைகளில் சஞ்சரிக்கின்ற களிப்பையுடைய வண்டின் கூட்டங்கள்; வாவியிற் படிந்துண்ணும் மலர்மது=பொய்கைகளிடத்து விழுந்து அம்மலர்த்தேனை யுண்ணும்; மேவியத்தடம் மீதெழப்பாய்கயல்=அவ்வாவிகளிற் பொருந்தி மேலெழுந்து பாய்கின்ற கயல்மீன்கள்; அப்பொழிலின் கனிதாவிச்சாடும் = அச்சோலைகளி லுள்ளபழங்களைத் தாவிச்சிதறும்.—எ-று. ஆல்-அசை. (௨௦)

சோலைக்கண்ணுள்ள வண்டுகள் காரணமின்றித் தாம்வாழும் வாவிக்கட்சென்று மலர்மதுவையுண்டமையால் கயல்கள் அதுகாரணமாய் வண்டுகள் வாழுஞ்சோலைக்கட்பாய்ந்து பழங்களையுதிர்த்தன எனக்குறிப்பித்து நின்றது. இதனால் வாவி சோலைகள் ஒன்றற்கொன்று அணிமையுடைத்தென்று கூறியதாம்.

வேறு.

சாலிநீள் வயலினோங்கித் தன்னிக ரின்றிமிக்கு
வாலிதாம் வெண்மையுண்மைக் கருவினும் வளத்தவாகிச்
சூன்முதிர் பசலைகொண்டு சுருள்விரித் தரனுக்கன்பர்
ஆலின சிந்தைபோல வலர்ந்தன கதிர்களெல்லாம்.

(இ-ள்.) சாலிநீள்வயலினோங்கி = நெற்பயிர்கள் நீண்ட வயலினிடத்து வளர்ந்து; தன்னிகரின்றி மிக்கு=தனக்குப் பிறவிடத்துச் சாலிகள் ஒப்பாகாது உயர்ந்து; வாலிதாம் வெண்மை யுண்மைக்கருவின்=தூய்மைபொருந்திய வெண்மையைத் தன்னுள்ளே யுள்ளகருவினால்; ஆம்வளத்தஆகி = ஆகின்ற வளத்தையுடையனவாய்; சூன்முதிர்பசலைகொண்டு=அவ்வெண்கரு முதிர்தலாலாய பசப்பைத் தன்புறத்தே காட்டி; சுருள்விரித்து=கதிர்ச்சுருளை விரித்து; அரனுக்கன்பர் ஆலினசிந்தைபோல=சிவபிரானிடத்து அன்புடைய அடியார்களது அலர்ந்த இதயம்போல; கதிர்களெல்லாம் அலர்ந்தன=கதிர்களையெல்லாம் மலர்ந்தன. எ-று. சாலிகதிர்களையெல்லாம் அலர்ந்தன எனக்கூட்டுக. (௨௧)

பத்தியின் பாலராகிப் பரமனுக் காளாமன்பர்
தத்தமிற் கூடினர்க டலையினல் வணங்குமாபோன்
மொய்த்தநீள் பத்தியின்பான் முதிர்தலை வணங்கிமற்றை
வித்தகர் தன்மைபோல விளைந்தன சாலியெல்லாம்.

(இ-ள்.) பத்தியின்பாலராகிப் பரமனுக்காளாம் அன்பர்=பத்திவழிப்பட்டாராய்ச்சிவபிரானுக்குத்தொண்டுபூண்டொழுகும் அடியார்கள்;தத்தமிற் கூடினர்கள்=தம்முட்டாமே கூடினவர்களாய்; தலையினல் வணங்குமாபோல்=ஒருவரையொருவர் தலைதாழ்த்தி வணங்குவதுபோல; மொய்த்தநீள் பத்தியின்பால் முதிர்தலைவணங்கி=திரண்டு நீண்ட வரிசையோடு பால்முதிர்ந்த கதிர்த்தலைவணங்கி; மற்றைவித்தகர்தன்மைபோல=மேற்கூறிய அடியார்களுடைய பத்திஞானங்களாகிய உள்ளீடுபோல; விளைந்தன சாலியெல்லாம்=நெற்பயிர்களெல்லாம் விளைந்தன.—எ-று. சாலியெல்லாம் வணங்குமாபோல் தலைவணங்கி தன்மைபோல் விளைந்தன என இயையும். (உ௨)

அரிதரு செந்நெற்சூட்டி னடுக்கிய வடுக்கல்சேர்ப்பார்
பரிவுறத் தடிந்தபன்மீன் படர்நெடுங் குன்றுசெய்வார்
சுரிவளை சொரிந்தமுத்தின் சுடர்ப்பெரும் பொருப்புயர்ப்பார்
விரிமலர்க் கற்றைவேரி பொழிந்திழி வெற்புவைப்பார்.

(இ-ள்.) அரிதருசெந்நெல் சூட்டின்=மள்ளர்களுள் (சிலர்) அரியப்பட்ட அரிகளாகிய சூடுகளினல்; அடுக்கிய அடுக்கல்சேர்ப்பார்=அடுக்கப்பட்ட தாட்போர்களை மலைபோலக் குவிப்பார்கள்; பரிவுறத் தடிந்தபன்மீன்=(சிலர்) தமக்கு விருப்போடு பிடித்த பலவகைப்பட்ட மீன்களையும்; படர்நெடுங்குன்று செய்வார்=பரந்த பெரியமலைபோலக் குவிப்பார்கள்; சுரிவளைசொரிந்த முத்தின்=(சிலர்) சுரிபொருந்திய சங்குகளீன்ற முத்துக்களாலாய; சுடர்ப்பெரும் பொருப்புயர்ப்பார்=ஒளிபொருந்திய பெரிய மலையை உயரச்செய்வார்கள்; விரிமலர்க்கற்றை வேரிபொழிந்திழி வெற்புவைப்பார்=(சிலர்) விரிந்த மலர்த்தொகுதிகளால் தேனாகிய அருவிபொழிந்து பெருகும்மலையைச் செய்வார்கள்.—எ-று. (உ௩)

சுரிவளை - சுரித்த வளையெனவிரியும். அதாவது முகத்தின்கண்வட்டவடிவாய்க் கொம்பெழுத்துப்போல் இருத்தல். இவை மருதத்திற்குரிய கருப்பொருளேயாதலின் ஈண்டுக் கூறினர். சூடு=அறுத்தகதிரோடு கூடிய நெற்றாள்களின் குவியல். அவைகளாலாயபோர் தாட்போரென்பர்.

சாலியின் கற்றைதுற்ற தடவரை முகடுசாய்த்துக்
காலிரும் பகடுபோக்கும் கரும்பெரும் பாண்டிலீட்டம்
ஆலிய முகிலின்கூட்ட மருவரைச் சிமயச்சாரல்
மேல்வலங் கொண்டுசூழுங் காட்சியின் மிக்கவன்றே.

(இ-ள்.) சாலியின் கற்றை துற்ற=நெல்லரியின் தொகுதிகள் துறுதலால்ஆகிய; தடவரைமுகடு சாய்த்து=பெரிய (நெற்போரென்னும்) மலையினது உச்

சிலையச் சரித்து; காலிரும் பகடுபோக்கும்=(அப்போரைமிதிக்கும்படி) கால்களை யுடையபெரிய எருமைக்கடாக்களுடன் இசைத்து நடத்தும்; கரும்பெரும் பாண்டிலீட்டம்=கருமைபொருந்திய பெரிய எருதுகளின் தொகுதி; ஆலியமுகிலினீட்டம்=நீர் ஆலங்கட்டிகளை யுடைத்தாயிருக்கின்ற மேகங்களின் தொகுதி; அருவரைச்சிமயச்சாரல்மேல் = அரிய மலையினது உச்சியின் மேல்வாரத்தில்; வலங்கொண்டு சூழுங் காட்சியின் மிச்கஅன்றே=வலமாகச் சூழ்கின்ற தோற்றத்தினும் மிக்கிருந்தது.—எ-று. (௨௪)

ஆலியமுகில் - அசைகின்றமுகில் என்றலுமொன்று. சிமயம்=மலையின் உச்சி. முகில்கள் சூழ்தற்குரிய இடம் அதுவாதலில் சிமயச் சாரல் என்றார்.

வைதெரிந் தகற்றியாற்றி மழைபெயன் மானத்தூற்றி
செய்யபொற் குன்றும்வேறு நவமணிச் சிலம்புமென்னக்
கைவினை மள்ளர்வானங் கரக்கவாக் கியநெற்குன்றான்
மொய்வரை யுலகம்போலு முளரிநீர் மருதவைப்பு.

(இ-ள்.) வைதெரிந் தகற்றி யாற்றி=(நெற்போர் மிதித்தவுடன்)வைக்கோல்களை ஆராய்ந்து நீக்கி (அவ்வைக்கோலின் துகள்போக முறத்தால்வீசி); மழைபெயன் மானத்தூற்றி=(அந்நெல்லின்கணுள்ள பதர்போம்படி) மழைத்திவலைகள் துளிப்பதுபோல் தூற்றி; செய்ய பொற்குன்றும்=சிவந்த பொன்மலையும்; வேறுநவமணிச் சிலம்பும்என்ன=(அதற்கு) வேறான நவரத்தினங்களாலாயமலைகளும்போல; கைவினைமள்ளர்=கைத்தொழிலில் வல்ல உழவர்கள்; வானங்கரக்க ஆக்கிய நெற்குன்றால்=விண்ணுலகம் மறையும்படி உயர்த்திய நென்மலைகளால்; மொய்வரை யுலகம்போலும் முளரிநீர் மருதவைப்பு=நெருங்கிய மலைகளையுடைய குறிஞ்சிநிலத்தையொக்கும் தாமரைமலர்களை யுடைத்தாய் நீர்வளம் பொருந்திய மருத நிலமானது.—எ-று, மருதவைப்பு வரையுலகம் போலும் எனஇயையும். (௨௫)

செந்நெல்லாலாய குவியலைப்பொற் குன்றென்றும், வெண்ணெல் கருநெல் முதலியவற்றாலாய குவியல்களை நவமணிக்குன்றென்றுங் கூறினார். வைதெரிந் தகற்றி யாற்றி-என்றதற்கு வைக்கோலைத் தெரிந்துநீக்கி அதனையுதறி யென்றுரைப்பாருமுளர்.

அரசுகொள் கடன்களாற்றி மிகுதிகொண் டறங்கள்பேணிப்
பரவருங் கடவுட்போற்றிக் குரவரும் விருந்தும்பண்பின்
விரவிய கிளையுந்தாங்கி விளங்கிய குடிகளோங்கி
வரைபுரை மாடநீடி மலர்ந்துள பதிகளெங்கும்.

(இ-ள்.) அரசுகொள் கடன்களாற்றி=(அவ்வாறு தொகுத்த நெற்களுள்) அரசனுக்குரிய ஆறிலொரு பங்கைக்கொடுத்து; மிகுதிகொண் டறங்கள் பேணி=மிகுந்த ஐந்து பங்குகளையுந் தாமெடுத்துக்கொண்டு ஓர்பங்கில் தருமங்களைச்செய்து ; பரவருங்கடவுட்போற்றி=(ஏனைய நான்கு பங்கில்) வணங்கத்

தக்க தெய்வங்களைப் பூசித்து; குரவரும் விருந்தும் பண்பின் விரவிய கிளையுந் தாங்கி=பிதிரர்களையும் விருந்தினரையுங் குணத்தாலமைந்த சுற்றத்தாரையும் பேணி; விளங்கியகுடிகளோங்கி = (அதுகாரணமாய்ப் புகழ்பெற்று) விளக்கமடைந்த குடிகள்மிக்கு; வரைபுரைமாடநீடி=மலைபோலும் மாளிகைகள் உயர்ந்து; மலர்ந்துளபதிகளெங்கும்=விளங்கியிருந்தன அந்நாடெங்கும்.—எ-று, எங்கும்-என்பது - இடப்பன்மையை யுணர்த்தும் ஓரிடைச்சொல். (உசு)

வறிஞர் முதலாயினார்க் கீதலும் நீர்ச்சாலை அறச்சாலை முதலிய அறங்களும் தன்னைப்பேணுதலும் அடங்க அறங்கள்பேணி என்றார். தானுளனாயிருந்து அறஞ்செய்ய வேண்டுதலின் தன்னையோம்புதலும் அறமாயிற்று.

கரும்படு களமராலை கமழ்நறும் புகையோமாதர்
சுரும்பெழ வகிலாவிட்ட தூமமோயூப வேள்விப்
பெரும்பெயர்ச் சாலைதோறும் பிறங்கிய புகையோவானின்
வருங்கரு முகிலோசூழ்வ மாடமுங் காவுமெங்கும்.

(இ-ள்.) கரும்படுகளமராலை கமழ்நறும் புகையோ = கருப்பஞ்சாற்றைக் காய்ச்சுகின்ற மள்ளர்களது ஆலையிருக்குமிடத்திலிருக்கும் மணம் வீசுகின்ற நல்லபுகையோ; மாதர்சுரும்பெழ அகிலாவிட்ட தூமமோ=மகளிர்கள் (தம்கேசங்களுக்கு) (வண்டுகளெழும்படி ஊட்ட) அகிற்றுண்டுகளால் இடப்பட்ட புகையோ; யூபவேள்விப்பெரும் பெயர்ச்சாலைதோறும் பிறங்கியபுகையோ=யூபங்களை நிறுத்திய பெரிய யாகசாலைகளிலுண்டாகின்ற புகையோ; வானின் வருங்கருமுகிலோ=ஆகாயத்தின்கண் சஞ்சரிக்கின்ற கரிய மேகமோ; மாடமுங்காவு மெங்குஞ்சூழ்வ = மண்டபங்களினுஞ் சோலைகளினுஞ் சூழ்வன. ஈதின்னதென்று வேறுபாடுணர நின்றில.—எ - று. கரும்பு - ஆலை - ஆகுபெயர். (உஎ)

மாடமுங்காவுமெங்குஞ் சூழ்வன புகையோ முகிலோ எனவியையும். ஓகாரம் ஐயம். இவ் ஐயம் ஒருபொருளின்கண் ஒருபொருளின் ஒப்புத்தோன்றுழி இது சிப்பியோ வெள்ளியோ எனத்தோற்றும் ஐயம்போலாது இருபொருளுமுளவாக இவை மரையோ பசுவோ எனத்தோற்றும் ஐயமாமென்க இருபொருளுமுள ஆதலின்.

நாளிகே ரஞ்செருந்தி நறுமலர் நரந்தமெங்கும்
கோளிசா லந்தமாலங் குளிர்மலர்க் குரவமெங்குந்
தாளிரும் போந்துசந்து தண்மலர் நாகமெங்கு
நீளிலை வஞ்சிகாஞ்சி நிறைமலர்க் கோங்கமெங்கும்.

(இ-ள்.) நாளிகேரஞ்செருந்தி = தென்னமரங்களுஞ் செருந்திமரங்களும்; நறுமலர் நரந்தமெங்கும்=நல்லபூக்களையுடைய நாரத்தமரங்களும் எவ்விடத்துமுள்ளன; கோளிசாலந்தமாலம் = பூவாதுகாய்க்குமரங்களும் ஆச்சாமரங்களும் பச்சிலைமரங்களும்; குளிர்மலர்க்குரவமெங்கும்=குளிர்ந்த பூக்களையுடைய குராமரங்களும் எவ்விடத்துமுள்ளன; தாளிரும்போந்து சந்து = அடிபருத்த

பனைமரங்களும் சந்தனமரங்களும்; தண்மலர்நாகமெங்கும் = குளிர்ந்த பூக்களையுடைய குங்குமமரங்களும் எவ்விடத்து முள்ளன; நீளிலைவஞ்சிகாஞ்சி=நீண்ட இலைகளையுடைய வஞ்சிமரங்களும் காஞ்சிமரங்களும்; நிறைமலர்க்கோங்க மெங்கும்=நிறைந்தமலர்களையுடைய கோங்குமரங்களும் எவ்விடத்துமுள்ளன.-எ-று. குரா-என்பது, குரவெனக் குறுகி அம்முப்பெற்றுநின்றது. (உஅ)

சூதபா டலங்களெங்குஞ் சூழ்வழை ஞாழலெங்குஞ்
சாதிமா லதிகளெங்குந் தண்டளிர் நறவமெங்கும்
மாதவி சரளமெங்கும் வகுளசண் பகங்களெங்கும்
போதவிழ் கைதையெங்கும் பூகபுன் னாகமெங்கும்.

(இ-ள்.) சூதபாடலங்களெங்கும்=மாமரங்களும் பாதிரிமரங்களும்எவ்விடத்துமுள்ளன; சூழ்வழைஞாழலெங்கும் = சூழ்ந்த சுரபுன்னைமரங்களும் ஞாழல்களும் எவ்விடத்துமுள்ளன; சாதிமாலதிகளெங்கும் = சிறுசண்பகங்களும் மல்லிகைகளும் எவ்விடத்துமுள்ளன; தண்டளிர் நறவமெங்கும் = குளிர்ந்த தளிரையுடைய அனிச்சங்களும் எவ்விடத்துமுள்ளன; மாதவிசரளமெங்கும்=குருக்கத்திக்கொடிகளும் சரளமரங்களும் எவ்விடத்துமுள்ளன; வகுளசண்பகங்களெங்கும்=மகிழமரங்களும் சண்பகமரங்களும் எவ்விடத்துமுள்ளன; போதவிழ்கைதையெங்கும்=பூக்கள்விரிந்த தாழைமரங்களும் எவ்விடத்துமுள்ளன; பூகபுன்னாகமெங்கும் = கமுகமரங்களும் புன்னைமரங்களும் எவ்விடத்துமுள்ளன.—எ-று. சாதிமாலதி-கொடிச்சாதி. நறவம்-செடிச்சாதி. (உகூ)

மங்கல வினைகளெங்கு மணஞ்செய்கம் பலைகளெங்கும்
பங்கய வதனமெங்கும் பண்களின் மழலையெங்கும்
பொங்கொளிக் கலன்களெங்கும் புதுமலர்ப் பந்தரெங்குஞ்
செங்கயற் பழனமெங்குந் திருமக ளுறையுளெங்கும்.

(இ-ள்.) மங்கல வினைகளெங்கும்=மங்கலத்தொழில்கள் எவ்விடத்துமுள்ளன; மணஞ்செய் கம்பலைகளெங்கும்=விவாகஞ்செய்தலினா லுண்டாகின்ற வாத்தியத்தினொலிகள் எவ்விடத்துமுள்ளன; பங்கயவதனமெங்கும் = மகளிர்களுடைய தாமரைமலர்போலும் முகங்கள் எவ்விடத்துமுள்ளன; பண்களின் மழலையெங்கும் = அம்மகளிர்களுடைய பண்ணோடியைந்த மிருதுவான சொற்கள் எவ்விடத்துமுள்ளன; பொங்கொளிக் கலன்களெங்கும்=மிக்க ஒளிவீசுகின்ற ஆபரணங்கள் எவ்விடத்துமுள்ளன; புதுமலர்ப்பந்தரெங்கும்=புதியமலர்களால் அலங்கரித்தபந்தல்கள் எவ்விடத்துமுள்ளன; செங்கயற் பழனமெங்கும்= சிவந்த கெண்டைமீன்கள் உலாவும் வயல்கள் எவ்விடத்துமுள்ளன; திருமகளுறையுளெங்கும்=இலக்குமி வாசஞ்செய்யத்தக்க இடங்கள் எவ்விடத்துமுள்ளன.

மங்கல வினைகளாவன:— வேள்வியின்முதலிலும் விவாகத்தின் முதலிலும் செய்யும் முளைப்பாலிகை வைத்தல் கௌதுக பந்தனஞ்செய்தல் முதலிய சடங்குகள்.

மேகமுங் களிறுமெங்கும் வேதமுங் கிடையுமெங்கும்
யாகமுஞ் சடங்குமெங்கு மின்பமு மகிழ்வுமெங்கும்
யோகமுந் தவமுமெங்கு மூசலு மறுகுமெங்கும்
போகமும் பொலிவுமெங்கும் புண்ணிய முனிவரெங்கும்.

(இ-ள்.) மேகமுங்களிறு மெங்கும்=முகிற்கூட்டங்களும் யானைகளும் எவ்விடத்துமுள்ளன; வேதமுங் கிடையுமெங்கும்=வேதத்தினொலியும் அதனை யோதுங் குழாங்களும் எவ்விடத்துமுள்ளன; யாகமுஞ் சடங்குமெங்கும்=வேள்விகளும் அதற் கங்கமான கிரியைகளும் எவ்விடத்துமுள்ளன; இன்பமும் மகிழ்வுமெங்கும் = உவகையும் அதனாலாய மகிழ்ச்சியும் எவ்விடத்து முள்ளன; யோகமுந்தவமுமெங்கும்=அட்டாங்கயோகமும் விரதமுதலிய தவங்களும் எவ்விடத்துமுள்ளன; ஊசலும் மறுகுமெங்கும் = ஊஞ்சலும் அவைகளையுடைய வீதிகளும் எவ்விடத்து முள்ளன; போகமும் பொலிவு மெங்கும்=இன்பமனுபவித்தலும் அதனாலடையும் பொலிவும் எவ்விடத்துமுள்ளன ; புண்ணிய முனிவரெங்கும் = புண்ணியத்தையுடைய முனிவரர்களும் எவ்விடத்துமுளர்.—எ-று.

யாகம், சோமயாகம் முதலியன. சடங்கு அதனங்கங்களாயுள்ளன. ஓர் யாகத்திற்குஅங்கங்கள் வேறாய்ப் பலவுண்மையின் சடங்கெனவேறு பிரித்துக் கூறினர். போகமாவது:—ஐம்பொறிவாயிலாக ஐம்புலவிடயங்களை பொருந்தத்துய்க்குந்தொழில். பொலிவாவது:—அதனால் உடம்பிற்றோன்றும் விருத்தி. இன்பமாவது:—போகந்துய்ப்புழி தோன்றும் உவகை. அதனாற் றோன்றுங்குணம், மகிழ்ச்சி. இன்பம் குறித்துணரும் குணமன்று. மகிழ்ச்சி காரணமாய் ஊகிக்கும் குணமென்க. ஒன்றோடொன்று இயைபுடைமையின் உடன்வைத்தார்.

பண்டரு விபஞ்சியெங்கும் பாதசெம் பஞ்சியெங்கும்
வண்டறை குழல்களெங்கும் வளரிசைக் குழல்களெங்குந்
தொண்டர்த மிருக்கையெங்குஞ் சொல்லுவ திருக்கையெங்குந்
தண்டலை பலவுமெங்குந் தாதகி பலவுமெங்கும்.

(இ-ள்.) பண்டருவிபஞ்சியெங்கும் = (நிலத்திணைக்கேற்ற) பண்களைப்பாடுதற்குரிய வீணைகளெவ்விடத்து முள்ளன ; பாதசெம் பஞ்சியெங்கும்=(மகளிர்களது) கால்களிலூட்டிய செம்பஞ்சுகள் எவ்விடத்துமுள்ளன ; குழல்களெங்கும் வண்டறை=(அம்மகளிர்களது) கேசங்களெல்லாம் வண்டுகளொலித்தலுள்ளன ; வளரிசைக்குழல்களெங்கும் = வளர்கின்ற இசையையுடைய புள்ளாங்குழல்கள் எவ்விடத்துமுள்ளன ; தொண்டர்தம் மிருக்கையெங்கும்=அடியார்களது திருமடங்கள் எவ்விடத்துமுள்ளன ; எங்குஞ்சொல்லுவது இருக்கு=(அந்நாட்டில்)எவ்விடத்தும் ஓதுவதுவேதங்களாம்; தண்டலைபலவுமெங்கும்=பலசோலைகளும் எவ்விடத்துமுள்ளன ; தாதகிபலவுமெங்கும்=ஆத்திமரமும் பலாமரமும் எவ்விடத்துமுள்ளன.—எ-று. அறை - முதனிலைத்தொழிற்பெயர். இருக்கையென்புழி ஐ-சாரியை. (௩௨)

விபஞ்சி-வீணை. வேறு வேறான இசைகளைப் பகுத்தலின் விபஞ்சியெனப் படும். அது யாழின்பேதமெனினு மொக்கும்.

மாடுபோ தகங்களெங்கும் வண்டுபோ தகங்களெங்கும்
பாடுமம் மனைகளெங்கும் பயிலுமம் மனைகளெங்கும்
நீடுகே தனங்களெங்கு நிதிநிகே தனங்களெங்குந்
தோடுசூழ் மாலையெங்குந் துணைவர்சூழ் மாலையெங்கும்.

(இ-ள்.) மாடுபோதகங்களெங்கும் = பக்கங்களெங்கும் யானைக்கன்றுக ளுள்ளன; வண்டுபோதகங்களெங்கும்=வண்டுகள் மலரிடங்களெங்கும் உள் ளன; பாடுமம்மனைகளெங்கும் = பாடுவார்பாடுகின்ற அவ்வீடுகள் எங்கும் உள் ளன; பயிலுமம்மனைகளெங்கும்=பழகுகின்ற அம்மானைகள் எவ்விடத்துமுள் ளன; நீடுகேதனங்களெங்கும்=நீண்ட கொடியாடைகள் எவ்விடத்துமுள்ளன; நிதிநிகேதனங்களெங்கும் = நிதிவைத்திருக்கின்ற கருவூலங்களெவ்விடத்துமுள் ளன; தோடுசூழ் மாலையெங்கும்=இதழ்சூழ்ந்த மலர்மாலைகளெவ்விடத்துமுள் ளன; துணைவர்சூழ் மாலையெங்கும்=ஆடவர்கள் சூழ்ந்து நிற்கும் வரிசை எவ்வி டத்துமுள்ளன.—எ-று. (௩௩)

வீதிகள் விழவினார்ப்பும் விரும்பினர் விருந்தினார்ப்புஞ்
சாதிக ணெறியிற்றப்பா தநயரு மனையிற்றப்பா
நீதிய புள்ளுமாவு நிலத்திருப் புள்ளுமாவு
மோதிய வெழுத்தாமஞ்சு முறுபிணி வரத்தாமஞ்சும்.

(இ-ள்.) வீதிகள் விழவினார்ப்பும்=வீதிகளில் திருவிழாவினா லுண்டாகி ன்ற ஆரவாரமும்; விரும்பினர் விருந்தினார்ப்பும்=தம்மைவிரும்பிவந்த அதிதி களுக்கு விருந்திடுதலினாலாய ஆரவாரமும் ஆகிய (இவ்விரண்டும் உள்ளன); சா திகள் நெறியிற்றப்பா = அந்தணர்முதலிய சாதிகள் தமக்குரிய ஒழுக்கநெறியிற் றப்பாதிருந்தன; தநயரும் மனையிற்றப்பா=சிறுவர்களும் அம்மனைகளில் தப்பா திருந்தார்; நீதிய புள்ளும்மாவும்=பறவைகளும் விலங்குகளும் பகையின்றி உற வாயிருந்தன; நிலத்திருப்புள்ளுமாவும் = அந்நாட்டில் வாசஞ்செய்தலை விரும் பும் இலக்குமியும்; ஓதியஎழுத்தாமஞ்சும்=அந்நாட்டுள்ளார்களால் ஓதப்படுவன திருவைந்தெழுத்துமேயாம் (அதனால்); உறுபிணிவரத்தாமஞ்சும்=மிக்கபிணியா னது அவரை அடைய அஞ்சும்.—எ-று. (௩௪)

நிலத்திருப்புள்ளுமாவும் - என்பதற்கு காமதேனுவும் அந்நாட்டு வாசஞ் செய்ய விரும்புமென்று கூறுவாருமுளர். சாதி குடிமை முதலிய சொற்போலப் பொருளால் உயர்திணையாய் அஃறிணை முடிபேற்றது. தநயரும் மனையிற்றப் பார் என்பதில் பிராசம் நோக்கி ரகரந்தொக்கது.

நற்றமிழ் வரைப்பினோங்கு நாம்புகழ் திருநாடென்றும்
பொற்றடந் தோளால்வையம் பொதுக்கடிந் தினிதுகாக்குங்

கொற்றவ னநபாயன்பொற் குடைநிழற் குளிர்வதென்றான்
மற்றதன் பெருமைநம்மால் வரம்புற விளம்பலாமோ.

(இ-ள்.) நற்றமிழ் வரைப்பினோங்கும் = செந்தமிழ் நாட்டின்கண்ணே விளங்கும்; நாம்புகழ் திருநாடென்றும்=நம்மால் புகழப்பட்ட சோழநாடானது எந்நாளும்; பொற்றடந்தோளால்=அழகிய விசாலமான தோளினால்; வையம் பொதுக்கடிந்து = நிலவுலகத்தைப்பிற அரசர்க்கு உரித்தாகும் பொதுமையை நீக்கி; இனிது காக்குங் கொற்றவன் அநபாயன் = இனிதாகக் காக்கின்ற அரசனாகிய அநபாயனது; பொற்குடை நிழற்குளிர்வதென்றால்=அழகியவெண்கொற்றக் குடையினது நிழலால் தண்ணளியடையுமெனின்; மற்றதன்பெருமை= அச்சோழநாட்டினது மகிமையை; நம்மால் வரம்புற விளம்பலாமோ=நம்மால் அளவுபடுத்திக் கூறல் அமையாது.—எ-று. (கூரு)

தோளின்வலியைத் தோளாகவைத்தும் அரசன் தண்ணளியைக் குடைநிழலாகவைத்துங் கூறுவது ஓரிலக்கணை. உபசாரவழக்கெனினு மொக்கும். வடநூலாரும் விட்ட விலக்கணை விடாதவிலக்கணை விட்டுவிடாதவிலக்கணை முதலியவற்றை உபசாரமென்பர். ஆமோ என்பதில் ஓகாரம் எதிர்மறைப் பொருளில் வந்தது.

திருநாட்டுச்சிறப்பு முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-அரு.

## திருவாரூர்ச்சிறப்பு.

சொன்னநாட்டிடைத் தொன்மையின் மிக்கது
மன்னுமாமல ராள்வழி பட்டது
வன்னியாறு மதிபொதி செஞ்சடைச்
சென்னியார் திருவாரூர்த் திருநகர்.

(இ-ள்.) சொன்னநாட்டிடை=மேற்கூறிய சோழநாட்டின்கண்; தொன்மையின்மிக்கது=பழமையாற்சிறந்ததாயும்; மன்னுமாமலராள் வழிபட்டது= நிலைபெற்ற இலக்குமிதேவி வழிபாடு செய்ததாயும்; வன்னியாறு மதிபொதி செஞ்சடைச்சென்னியார்=வன்னிப்பத்திரமுங் கங்கை நதியும் இளம்பிறையும் பொதிந்த சிவந்த சடையோடு கூடிய திருமுடியையுடைய தியாகேசர் (வீற்றிருந்தருளும்);திருவாரூர்த் திருநகர்=திருவாரூரென்னும் திருப்பதி(உளது).—எ-று.()

உளதென்பது சொல்லெச்சம். திருவாரூர்த் திருநகர்தொன்மையின் மிக்கது மலராள் வழிபட்டது எனத்தனித்தனி முடித்தலுமொன்று.

தொன்மையின் மிக்கது என்றதனால் சோழவம்சத்தரசர்கள் பழமையாய் அரசுசெய்தற்குரிய இடமென்பதும் அப்பர்சுவாமிகள் திருத்தாண்டகத்துள் பழமைதோன்றக் கூறியதிருப்பதி என்பதும் பெற்றாம். சோழவம்சத்தரசர்கள் பழமையாய் அரசுசெய்தற்குரிய இடமென்பது மனுநீதிகண்ட சோழ சரி

தத்தாலும் அபயகுலசேகர சோழசரிதத்தாலுங்காண்க. அப்பர்சுவாமிகள் பழமைதோன்றக்கூறிய திருத்தாண்டகமாவது "ஒருவனுயுலகேத்தநின்ற நாளோ ஒருருவே மூவுருவமானநாளோ திருவாரூர்க்கோயிலாக்கொண்டநாளே" என்றற்றொடக்கத்தன. திருமகள் வழிபடுதற்குக் காரணம், திருமால் பாற்கடலின்கண் அநந்தசயனத்தில் நெடுங்காலம் தமதுளத்தில் சிவபிரானையும் கந்தரையும் தேவியாரையும் தியானித்து மூவுலகையும் வெல்லும் மிக்க அழகினையும் பூஅம்பையும் உடைய ஓர் புதல்வனை விரும்பித் தவஞ்செய்தனர். அவர் தவங்காரணமாய் சிவபிரான் வெளிப்பட்டுத் தம்மை வணங்கிநின்ற திருமாலுக்கு அவர் கேட்ட வரத்தைக்கொடுத்தனர். அருகிருந்த தேவியார் தம்மை வணங்காத காரணத்தால் முனிந்து அப்புதல்வன் இப்பிரானுரது நெற்றிவிழியாற் சாம்பராகுக எனச்சபித்தனர். அஃதுணர்ந்த திருமகள் மனம்வருந்திச் சிவபிரானையும் பிராட்டியாரையும் வணங்கி அப்புத்திரனிறந்தாலுந் திரும்ப உயிர்வாழ்வானுயிருக்க வரந்தரவேண்டுமென்று வேண்டிக்கொண்டு அவன் சாம்பராயினபின்பு திருவாரூர்த் திருநகரையடைந்து அங்குபுற்றிடங் கொண்டாரைப் பூசித்ததென்க.

வேதவோசையும் வீணையி னோசையுஞ்
சோதிவானவர் தோத்திர வோசையு
மாதராடன் மணிமுழ வோசையுங்
கீதவோசையு மாய்க்கிளர் வுற்றதே.

(இ-ள்.) வேத ஓசையும் வீணையினோசையும் = அந்நகரிடத்து வேதங்களின் ஓசையும் வீணையினது ஓசையும்; சோதிவானவர் தோத்திர ஓசையும் = ஒளியினையுடைய தேவர்கள்செய்யுந் தோத்திரங்களாலாய ஓசையும்; மாதராடல் மணிமுழவோசையும் = நாடகக்கணிகையரது கூத்திற்கிசைந்த அழகிய மத்தளஓசையும்; கீதஓசையு மாய்க்கிளர்வுற்றது = அம்மகளிர்களது கீதப்பாட்டின் ஒலியும் ஆகிய இவ்வொலித்தொகுதி ஒன்முய் ஒலித்தது.—எ-று. ஏ-அசை. (உ)

பல்லியங்கள் பரந்த வொலியுடன்
செல்வவீதிச் செழுமணித் தேரொலி
மல்லல்யானை யொலியுடன் மாவொலி
எல்லையின்றி யெழுந்துள வெங்கணும்.

(இ-ள்.) பல்லியங்கள் பரந்த ஒலியுடன் = பலவகை வாத்தியங்களினின்றும் பரவிய ஒலியோடு; செல்வவீதிச் செழுமணித் தேரொலி = செல்வம்மிக்க வீதிகளில் செழுமையாகிய மணிகளழுத்திய தேரினது ஒலியும்; மல்லல்யானையொலியுடன் மாவொலி = வளத்தினையுடைய யானையினது ஒலியோடுகுதிரையினது ஒலியும் (ஆகிய இவ்வொலியின்தொகுதி); எல்லையின்றி எழுந்துள எங்கணும் = அந்நகரத்தினிடமெங்கும் அளவின்றி மிக்கொலித்தன.—எ-று. (ங)

கொட்டுவன, ஊதுவன, இயக்குவன, தட்டுவன, ஆகிய நால்வகையும் அடங்கப் பல்லியம், என்றார்.

மாடமாளிகை சூளிகை மண்டபம்
கூடசாலைகள் கோபுரந் தெற்றிகள்
நீடுசாளர நீடரங் கெங்கணும்
ஆடன்மாத ரணிசிலம் பார்ப்பன.

(இ-ள்.) மாடமாளிகை சூளிகை மண்டபம் = மேல்மாடங்களையுடைய மாளிகைகளும் செய்குன்றுகளும் மண்டபங்களும்; கூடசாலைகள் கோபுரந்தெற்றிகள் = கூடங்களையுடைய வீடுகளும் கோபுரவாசல்களும் திண்ணைகளும்; நீடுசாளர நீடரங்கெங்கணும் = நீண்ட பலகணிகளையுடைய பெரியசபைகளும் ஆகிய எவ்விடத்தும்; ஆடல்மாதர் அணிசிலம்பார்ப்பன = நாட்டியஞ்செய்கின்ற மகளிர்களது அழகிய சிலம்புகள்ஆரவாரிக்கும்.—எ-று. (ச)

அங்குரைக்கென் னளவப் பதியிலார்
தங்கண்மாளிகை யின்னொன்று சம்புவின்
பங்கினுடிருச் சேடிப் பரவையா
மங்கையாரவ தாரஞ்செய் மாளிகை.

(இ-ள்.) அங்கு என்னளவு உரைக்கு=அத்திருவாரூரில் அதன்பெருமையின் அளவை எவ்வாறுயான் கூறுகேன்; அப்பதியிலார்தங்கள் மாளிகையினொன்று=அந்நகரத்தில் நாயகனில்லாத உருத்திரகணிகையர்களது மாளிகைகளிலொன்று; சம்புவின் பங்கினுள் = சிவபிரானது இடப்பாகத்தில் வீற்றிருந்தருளும் உமாதேவியாரது; திருச்சேடிப்பரவையாம் மங்கையார்=தோழிகளில் ஒருத்தியாகிய கமலினியென்னும் பரவையார்; அவதாரஞ் செய்மாளிகை=அவதரித்த திருமாளிகையானால்.—எ-று. (ரு)

அங்குமாளிகையினொன்று பரவையார் அவதாரஞ்செய்மாளிகையானால் என்னளவு உரைக்கு என இயையும். உரைக்கென்னளவென்னுங்கால் அது அளவுபடுத்தற்கமையாதென் றுரைப்பினு மமையும். இது பரவையார் திருமாளிகைச் சிறப்புக்கூறிற்று.

படர்ந்தபேரொளிப் பன்மணி வீதிபார்
இடந்தவேனமு மன்னமுந் தேடுவார்
தொடர்ந்துகொண்டவன் றொண்டர்க்குத் தூதுபோய்
நடந்தசெந்தா மரையடி நாறுமால்.

(இ-ள்,) படர்ந்தபேரொளிப் பன்மணிவீதி=பரம்பிய பேரொளியையுடைய பலமணிகளால் அலங்கரித்த அந்நகரத்து மாடவீதிகளுளொன்று; பார் இடந்த ஏனமும் அன்னமுந்தேடுவார்=பூமியைக் கீண்ட திருமாலாகிய பன்றியும்மேற்பறந்தபிரமனாகிய அன்னமும் அடியையும் முடியையும் தேடிய தியாகப்பிரான் ;தொடர்ந்துகொண்டவன் றொண்டர்க்கு=தம்மைத்தொடர்ந்து பெரும்பற்றுகப்பற்றிய நம்பியாரூரர்பொருட்டு; தூதுபோய்நடந்த=தூதாகப் பரவை

யாரிடத்திற்சென்ற ; செந்தாமரையடி நாறும் = செந்தாமரைமலர்போலுந் திருவடிகள் கமழும்.—எ-று. ஆல்-அசை. (சு)

தொடர்ந்துகொண்ட வன்றொண்டரென்புழி தாமேவலியவந்து தடுத்தாட்கொண்ட வன்றொண்டரென்றுரைப்பினு மமையும். இது பரவையார் திருமாளிகையின் வீதிச்சிறப்புக் கூறிற்று.

செங்கண்மாதர் தெருவிற் றெளித்தசெங்
குங்குமத்தின் குழம்பை யவர்குழற்
பொங்குகோதையிற் பூந்துகள் வீழ்ந்துடன்
அங்கண்மேவி யளறு புலர்த்துமால்.

(இ-ள்.) செங்கண்மாதர் = சிவந்த கண்களையுடைய மகளிர்கள்; தெருவிற்றெளித்த செங்குங்குமத்தின் குழம்பை = வீதியினிடத்துத் தெளித்த சிவந்தகுங்குமக்குழம்பை; அவர்குழற் பொங்குகோதையிற் பூந்துகள்வீழ்ந்து =அம்மகளிர்களது கூந்தலில் முடிக்கப்பட்ட மாலையின்கணுள்ள பராகங்கள் விழுந்து; உடன் அங்கண்மேவி = உடனே அதனோடு விரவி; அளறுபுலர்த்தும்= அக்குழம்பாகிய சேற்றை உலரச்செய்யும்.—எ-று. ஆல்-அசை. (எ)

இது மற்றையவீதிகளின் சிறப்புக்கூறிற்று.

உள்ளமாருரு காதவ ரூர்விடை
வள்ளலார்திரு வாரூர் மருங்கெலாந்
தெள்ளுமோசைத் திருப்பதி கங்கள்பைங்
கிள்ளைபாடுவ கேட்பன பூவைகள்.

(இ-ள்.) உள்ளமாருருகாதவர் = அந்தக்கரணத்தில் திருப்பதிகங்களையோதித் தம்முள்ளம் பத்திவழியாலுருகாதவர் யாருளர்; ஊர்விடைவள்ளலார்திருவாரூர் மருங்கெலாம் = இடபத்தை வாகனமாகக்கொண்டருளுந் தியாகேசரது திருவாரூரின் பக்கங்களெல்லாம்; தெள்ளுமோசைத் திருப்பதிகங்கள்=இனியவோசையையுடைய திருப்பதிகங்களை; பைங்கிள்ளைபாடுவ=பசியகிளிப்பிள்ளைகள்பாட; கேட்பன பூவைகள்=நாகணவாய்ப்புட்கள் கேட்கின்றன (அதனால்). எ-று.(அ)

அதனு லுள்ளமாருருகாதவ ரெனஇயையும். இதனால் திருப்பதிகங்கள் ஓதும்அடியார் மிகுதிகூறப்பட்டது.

விளக்கமிக்க கலன்கள் விரவலாற்
றுளக்கில்பேரொலி யாற்றுன்னு பண்டங்கள்
வளத்தொடும்பல வாறு மடுத்தலால்
அளக்கர்போன்றன வாவண வீதிகள்.

(இ-ள்.) விளக்கமிக்க கலன்கள் விரவலால்=ஒளிமிக்க ஆபரணங்கள் நெருங்கி யிருத்தலினாலும் சிலேடைவகையால் மரக்கலங்கள் நெருங்கி யிருத்தலினாலும்; துளக்கில் பேரொலியால்=நீங்காதபேரொலியினாலும் ; துன்னுபண்

டங்கள் வரைத்தொடும்பல ஆறுமடுத்தலால்=நெருங்கியபலபண்டங்கள் பலவளங்களோடு பலவழியால் தன்னுட் சேர்தலினாலும் சிலேடைவகையால் நெருங்கிய பலபண்டங்களைட் பலவளத்துடன் பலநதிகள் தன்னுட்சேர்த்தலினாலும்; ஆவண வீதிகள் அளக்கர் போன்றன = கடை வீதிகள்கடலையொத்தன.—எ-று. (கூ)

ஆரணங்களே யல்ல மறுகிடை
வாரணங்களு மாறி முழங்குமால்
சீரணங்கிய தேவர்க ளேயலாற்
றோரணங்களிற் றமமுஞ் சூழுமால்.

(இ-ள்.) ஆரணங்களே யல்லமறுகிடை=வேதங்களல்லாமல் வீதியினிடத்து; வாரணங்களும் மாறி முழங்கும்=யானைகளும் (அதனோடு) மாறுபட்டு ஒலிக்கும்; சீரணங்கிய தேவர்களேயலால் = சிறப்பால் அழகிய தேவர்களே யன்றி; தோரணங்களிற் றமமுஞ்சூழும் = தோரணங்களிடத்து மாலைகளுஞ் சூழ்ந்திருக்கும்.—எ-று. ஆல்-இரண்டும்-அசை. ஏகாரம் இரண்டும் இசை நிறை உம்மை இரண்டும் எச்சம். (க0)

வேதங்களை யெடுத்துச்சொல்லும் * முதற்சுரமானது யானையின் ஒலி போலிருத்தலில் அதுகேட்ட யானைபகைமையால்மாறு கொண்டொலிக்கும் என்பதுதோன்ற மாறி முழங்கும் என்றார்.

தாழ்ந்தவேணியர் சைவர் தபோதனர்
வாழ்ந்தசிந்தை முனிவர் மறையவர்
வீழ்ந்தவின்பத் துறையில் விரவுவார்
சூழ்ந்தபல்வே றிடத்ததத் தொன்னகர்.

(இ-ள்.) தாழ்ந்த வேணியர் சைவர் தபோதனர் = தாழ்ந்த சடையினையுடைய சைவராகிய தவத்திகளும்; வீழ்ந்த வின்பத்துறையில் விரவுவார் = விரும்பிய இல்லற நெறியில் நிற்பவராகிய; வாழ்ந்த சிந்தை முனிவர் மறையவர் = பேரின்ப வாழ்வடைந்த முனிவர்களென்னும் மறையவரும்; சூழ்ந்தபல் வேறிடத்ததத் தொன்னகர் = சூழ்ந்திருக்கின்ற பல வேறுவேறான இடத்தை யுடையது அப்பழமையாகிய திருநகர்.—எ-று. (கக)

தாழ்ந்த வேணியர் சைவர் - என்றதனால் நாலுவருணத்துச் சடையுள்ள நைட்டிகப் பிரமசரியரென்னும் விரத்தர்களும், அந்தணர் முதல்மூன்று வருணத்துச்சடையுடைய சன்னியாசிக ளென்னும் விரத்தர்களும், இன்பத்துறையில் விரவுவார் முனிவர் மறையவர் என்றதனால் வைதிக சைவ நெறியில் சிரௌத மார்க்கமுடைய முனிவர்களென்னும் இல்வாழ்வாரும், சைவ நெறியில் அபிடேகம்பூண்டொழுகும் முனிவர்களென்னும் இல்வாழ்வாரும் அடங்கியவாறு. இல்வாழ்வாருட் சிறப்பினையுடைய மரபினரைக்கூறவே ஏனையரும் அடங்குவர்.

---

* முதற்சுரம் - நிஷாதம்.

மூவருணத்துச் சன்னியாசிகளுக்கும் நாலுவருணத்துப் பிரமசாரியருக்கும் சடையுண்மை பெறப்பட்டது யூகித்துணர்க.

நிலமகட் கழகார்தரு நீணுதற்
றிலகமொப்பது செம்பியர் வாழ்பதி
மலர்மகட்குவண் டாமரை போன்மலர்ந்
தலகில்சீர்த் திருவாரூர் விளங்குமால்.

(இ-ள்.) நிலமகட்கு=பூமிதேவிக்கு; அழகார்தரு நீணுதல்=அழகுநிறைந்த நீண்ட நெற்றியிலிட்ட ; திலகமொப்பது=திலகத்தை நிகர்த்தது; செம்பியர் வாழ்பதி=சோழர்கள்வாழும்நாடு (அந்நாட்டில்); மலர்மகட்குவண் டாமரை போன்மலர்ந்து=திருமகளுக்கு உறையுளானவளத்தையுடைய செந்தாமரைமலர் போல மலர்ந்து; அலகில்சீர்த் திருவாரூர் விளங்கும்=அளவில்லாத சிறப்பினையுடைய திருவாரூரென்னுந் திருநகரமானது விளங்கியிருக்கும்.-எ-று.ஆல்-அசை

சோழநாடு ஏனையநாடெல்லாவற்றினுஞ் சிறந்ததென்பது தோன்றத் திலக மொப்பதென்றும், அச்சோணாட்டின்கணுள்ள நகரங்களெல்லாவற்றினுந் திருவாரூர்த்திருநகர் சிறந்ததென்பதுதோன்ற மலர்மகட்கு வண்டாமரைபோன் மலர்ந்தென்றுங் கூறினர்.

அன்னதொன்னக ருக்கர சாயினான்
றுன்னுசெங்கதி ரோன்வழித் தோன்றினான்
மன்னுசீ ரநபாயன் வழிமுதன்
மின்னுமாமணிப் பூண்மனு வேந்தனே.

(இ-ள்.) அன்னதொன் னகருக்கரசாயினான்=அத்தன்மையை யுடைய பழையதிருநகரத்திற்கு அரசனாயிருந்தவன் யாரெனில்; துன்னுசெங்கதிரோன் வழித்தோன்றினான் = நெருங்கிய சிவந்த கிரணங்களையுடைய ஆதித்தன்மரபில் உதித்தவனும்; மன்னுசீ ரநபாயன்வழிமுதல்=நிலைபெற்ற புகழினையுடைய அநபாயச்சோழனது குலத்திற்கு முதலாயுள்ளவனும் ஆகிய; மின்னுமாமணிப்பூண் மனுவேந்தன்=விளங்குகின்ற பெரிய இரத்தினாபரணங்களையணிந்தமனுவென்னுந் திருநாமத்தினையுடைய அரசன்.—எ-று. ஏ-அசை. (கரு)

மனுவேந்தன் அரசாயினனென்ன இயையும்.

மண்ணில்வாழ்தரு மன்னுயிர் கட்கெலாங்
கண்ணுமாவியு மாம்பெருங் காவலான்
விண்ணுளார்மகிழ் வெய்திட வேள்விகள்
எண்ணிலாதன மாண வியற்றினான்.

(இ-ள்.) மண்ணில்வாழ்தரும் மன்னுயிர்கட்கெலாம்=(அவ்வரசன்) நிலவுலகின்கண் வாழ்கின்ற நிலைபெற்றமக்களுயிர்கட்கெல்லாம்; கண்ணுமாவியுமாம் பெருங்காவலான்=கண்ணையும் உயிரையும்போலும் பெரியகாவலையுடையவன் ;

விண்ணுளார்மகிழ்வெய்திட=விண்ணுலகத்துள்ளார்மனமகிழும்படி; வேள்விகள் எண்ணிலாதன மாணவியற்றினுன்=அளவில்லாத யாகங்களை (விதிப்படி) பொருந்த இயற்றினவன்.—எ-று. (கச)

மன்னுயிரென்றது மக்கட்டொகுதியை, உடம்போடுகூடிய மகனுக்குக் கண் ஒருபொருளை இதுஈதென உணர்த்திநிற்க உயிர்இதுநன்கு இதுதீது எனவரைந்து விதிக்குமாறுபோல் அரசனும் இவ்வாறுள்ளதறமெனவுணர்த்தி அதில்வழுவாதொழுகு வீரென்றுவிதித்துக்காத்தலில் கண்ணுமாவியுமாம் பெருங்காவலனென்றும், தன்பயன்கருதாது தெய்வங்கள் களிப்படையவும் உலகத்தார்க்கு மழைவளங்கருதியும்செய்தலில் விண்ணுளார்மகிழ்வெய்திடவேள்விகளென்றும், காமியமான தரிசபூரணமாசம் அசுவமேதம் முதலியபலவுமடங்க எண்ணிலாதன என்றும்,விதிவழுவாதுசெய்தமைதோன்றமாணவியற்றினுனென்றுங்கூறினுர்.

கொற்றவாழி குவலயஞ் சூழ்ந்திடச்
சுற்றுமன்னர் திறைகடை சூழ்ந்திடச்
செற்றநீக்கிய செம்மையின் மெய்ம்மனுப்
பெற்றநீதியுந் தன்பெய ராக்கினுன்.

(இ-ள்.) கொற்ற ஆழிகுவலயஞ்சூழ்ந்திட=(அவ்வரசன்) வெற்றியினையுடைய தன் ஆணையென்னுஞ்சக்கரமானது நிலவுலகம் முழுதும்சுற்றவும்; சுற்றுமன்னர் திறைகடைசூழ்ந்திட = தன்ஆளுகைக்குள் அடங்கியிருக்கின்ற அரசர்களது கப்பமானது தன்முதல்வாய்தலிற் சூழவும்; செற்றநீக்கிய செம்மையின் மெய்ம்மனு=பகைமையைக்கெடுத்த செப்பமான குணத்தையுடைய மெய்ம்மையுடைத்தாகிய மனுவென்னும் அரசனுல்; பெற்றநீதியுந்தன்பெய ராக்கினுன்= உலகத்தாரடைந்த அறநூலையும் தன்பெயராகச்செய்தவன்.—எ-று. (கடு)

ஈண்டு - மனுவென்றது, சூரியனின் புத்திரனை வைவச்சுவதமனுவை அவரால்பெற்ற நீதியாவது, மனுநூல்-அதனைத் தன்பெயராக்குதல். மனுநீதிச்சோழனெனப் பெயருடையனுதல். உம்மை-உயர்வுச்சிறப்பு. திறை=அரசிறை.

பொங்குமாமறைப் புற்றிடங் கொண்டவர்
எங்குமாகி யிருந்தவர் பூசனைக்
கங்கண்வேண்டு நிமந்தமா ராய்ந்துளான்
துங்கவாகமஞ் சொன்ன முறைமையால்.

(இ-ள்.) பொங்குமாமறைப் புற்றிடங்கொண்டவர்=(அவ்வரசன்) பொலிவினையுடையபெரிய வேதவடிவாகிய புற்றை இடமாகக்கொண்டவராயும்; எங்குமாகியிருந்தவர் = (அதுவன்றி) எவ்விடத்தும் வியாபக வடிவராயும்இருக்கின்ற (வன்மீகநாதரது); பூசனைக்கு = பூசைக்கு; அங்கண்வேண்டு நிமந்தம் ஆராய்ந்துளான்=அவ்விடத்து வேண்டிய படித்தரங்களை ஆராய்ந்தவன்; துங்கவாகமஞ்சொன்ன முறைமையால்=உயர்ந்த காமிகம்முதலிய ஆகமங்கள் விதித்த

முறைநமைவழுவாமல்.—எ-று. முறைமையால் ஆய்ந்துளானென இயையும். பூசனை-நித்திய நைமித்தியங்கள். (௧௬)

வேறு.

அறம்பொரு ளின்பமான வறநெறி வழாமற்புல்லி
மறங்கடிந் தரசர்போற்ற வையகங் காக்குநாளிற்
சிறந்தநற் றவத்தாற்றேவி திருமணி வயிற்றுமைந்தன்
பிறந்தன னுலகம்போற்றப் பேரரிக் குருளையன்னான்.

(இ-ள்.) அறம்பொரு ளின்பமான அறநெறி=அறம் பொருள் இன்பம் என்று வகுக்கப்பட்ட அறநூலின் விதியை; வழாமற்புல்லி=உலகர் தவறுமற் புல்லிவித்து; மறங்கடிந்து அரசர்போற்ற = பகைவரைஅழித்து (நெறிதவறுத) அரசர்கள் தம்மைத்துதிக்க; வையகங்காக்குநாளில் = நிலவுலகத்தைக்காவல் செய்யும் அந்நாளில்; சிறந்த நற்றவத்தால்=சீரிதாகிய நல்ல தவங்காரணமாய்; தேவிதிருமணிவயிற்று = (இரத்தின மாலையென்னும்) மனைவியாரது திருவயிற்றினின்றும்; மைந்தன் பிறந்தனன்=ஓர் புத்திரன் பிறந்தான்; உலகம்போற்றப் பேரரிக்குருளையன்னான் = உலகத்தார் துதிக்கும்படி பெரிய சிங்கக்குட்டியையொத்தவனாய்.—எ-று. (௧௭)

பேரரிக்குருளையன்னான் மைந்தன் பிறந்தனனென இயையும். புல்லி-என்புழி விவ்விகுதி தொக்கு நின்றது. பொருளும் இன்பமும் அறத்தின் வழிப்பட்டன ஆதலின் அவற்றையும் அறநெறி யென்றார்.

தவமுயன் றரிதிற்பெற்ற தனியிளங் குமரனுளுஞ்
சிவமுயன் றடையுந்தெய்வக் கலைபல திருந்தவோதிக்
கவனவாம் புரவியானை தேர்படைத் தொழில்கள்கற்றுப்
பவமுயன் றதுவும்பேறே யெனவரும் பண்பின்மிக்கான்.

(இ-ள்.) தவமுயன்று=(மனுச்சோழர்)தவஞ்செய்து; அரிதிற்பெற்றதனியிளங்குமரன்=அருமையாகப்பெற்ற ஒப்பற்ற இளமையினையுடைத்தாகிய புத்திரன்; நாளுஞ்சிவமுயன்றடையும்=நாடோறும் நன்மையை முயற்சித்து அடைதற்குக்காரணமான; தெய்வக்கலைபலதிருந்தவோதி = செய்வத்தன்மையுடைய பலகலைஞானங்களையுந் தெளிவாக ஓதி; கவனவாம்புரவி = வேகத்தோடு பாய்கின்ற குதிரையேற்றமும்; யானைதேர்படைத்தொழில்கள்கற்று=யானையேற்றமும் தேரூர்தலும் ஆயுதப்பயிற்சியும்(ஆகிய)இவைகளைக் கற்று; பவமுயன்றதுவும் பேறெனவரும்=மானிடதேகமெடுத்துப் பிறத்தலும் ஓர்பெரும்பயனே யென்று யாவருஞ்சொல்லும்படியான; பண்பின்மிக்கான்=நற்குணங்களால்மேம்பட்டவன்.

கலைபல என்றதனால் பதினெண்குவித்தைகளையும் ஆயுர்வேதம் தனுர்வேதம் காந்தருவவேதம் சிற்பம் இவைகளையும் முறையே ஓதியெனக்கொள்க. உம்மை-இழிவுசிறப்பு.

அளவிறெல் கலைகண்முற்றி யரும்பெறற் றந்தைமிக்க
வுளமகிழ் காதல்கூர வோங்கிய குணத்தானீடி
யிளவர சென்னுந்தன்மை யெய்துதற் கணியனாகி
வளரிளம் பரிதிபோன்று வாழுநா ளொருநாண்மைந்தன்.

(இ-ள்.) அளவில்தொல்கலைகண்முற்றி=எண்ணிறந்த பழையவேதமும் வேதாங்கமுமாகிய நூல்களை ஓதி முடித்து; அரும்பெறற்றந்தை=(தனக்குப்) பெறுதற்கரிய பொருளாகவுள்ள (மனுச்சோழரென்னுந்) தந்தையினது; மிக்கவுளமகிழ்காதல்கூர=மேம்பட்ட மனமகிழ்தற்குக் காரணமான விருப்பம்மிக; ஓங்கியகுணத்தானீடி=உயர்ந்த நற்குணங்களால் சிறந்து; இளவரசென்னுந் தன்மையெய்துதற்கணியனாகி=இளவரசென்று சொல்லுதற்குரிய பருவத்தை யடைதற்யொருக்சமீபித்தவனாய்; வளரிளம்பரிதிபோன்று=வளர்கின்ற இளஞ்சூரியனைத்து; வாழுநாளொருநாள் மைந்தன் = வாழ்கின்ற நாளில் ஒருநாள் அப்புதல்வன்.—எ-று. (கக)

திங்கள்வெண் கவிகைமன்னன் றிருவளர் கோயினின்று
மங்குறோய் மாடவீதி மன்னிளங் குமரர்சூழக்
கொங்கலர் மாலைதாழ்ந்து குங்குமங் குலவுதோளான்
பொங்கிய தானைசூழத் தேர்மிசைப் பொலிந்துபோந்தான்.

(இ-ள்.) திங்கள்வெண் கவிகைமன்னன்=சந்திரன்போலும் வெள்ளிய குடையையுடைய மனுநீதிகண்டசோழனது; திருவளர்கோயினின்றும்=அழகிய திருக்கோயிலினின்றும் (புறப்பட்டு); மங்குறோய் மாடவீதி=மேகமண்டலத்தை யளாவிய மண்டபங்களையுடைய வீதியின்கண்; மன்னிளங்குமரர்சூழ=இராஜகுமாரர்கள் தன்னைச்சூழவும்; கொங்கலர் மாலைதாழ்ந்து = வாசனை கமழ்கின்ற மலர்மாலைகள் மார்பில்தாழும்படி அணிந்து; குங்குமங்குலவுதோளான்=குங்குமக்குழம்பு பிரகாசிக்கின்ற தோளையுடைய அப்புத்திரன்; பொங்கியதானைசூழ = மிக்கசேனைகள் தன்னைச்சூழ்ந்துவரவும்; தேர்மிசைப்பொலிந்து போந்தான் = தேரின்மேல் பொலிவடைந்து பவனிவந்தான்.—எ-று. (உ௦)

பரசுவந் தியர்முன்சூதர் மாகத ரொருபாற்பாங்கர்
விரைநறுங் குழலார்சிந்தும் வெள்வளை யொருபான்மிக்க
முரசொடு சங்கமார்ப்ப முழங்கொலி யொருபால்வென்றி
அரசிளங் குமரன்போது மணிமணி மாடவீதி.

(இ-ள்.) பரசுவந்தியர்முன்=துதிக்கின்ற மங்கலப்பாடகர் முன்னேசெல்லவும்; சூதர்மாகதரொருபால்=சூதர்களும் மாகதர்களும் ஒருபக்கத்தில்வரவும்; பாங்கர்விரைநறுங்குழலார் சிந்தும் வெள்வளைஒருபால்=அருகில் விரையூட்டிய நல்லகூந்தலையுடைய மகளிர்கள் சிந்தும் வெள்ளிய வளைகள் ஒருபக்கலில்(சிதறியிருக்கவும்); மிக்கமுரசொடு சங்கமார்ப்ப முழங்கொலியொருபால்=(ஒலிமிக்க) முரசப்பறையோடு சங்குகளாரவாரிக்க அதனால் உண்டாகும் ஓசையானது ஒரு

பக்கத்தில் ஒலிக்கவும்; வென்றியரசிளங்குமரன் போதுமணிமணிமாடவீதி=வெற்றியுடைத்தாகிய அரசுரிமைக்குரிய இளையகுமாரன் செல்கின்ற அழகிய இரத்தினங்களழுத்திய மாடவீதி (இவ்வாறு சிறப்புடைத்தாயிருந்தது.)—எ-று. (௨௧)

வந்தியர்கள் மங்கலமான பாடல்களைப்பாடிச் செல்கின்றவர்கள், சூதர் அரசர்க்குத் தொன்றுதொட்டுத் துயிலெழுப்புங்காலத்தும் பிற இடங்களினும் பாடுகின்றவர்கள், மாகதர் அவர்வீரத்தைப்புகழ்ந்து பாடுவோர், அதனால் வந்தியர் முன்என்றும் சூதர்மாகதர் ஒருபால் எனவுங்கூறினர், உலாவருங்கால் மகளிர்க்கு உள்ளுதல் மெலிதல் அதனால் வெயர்வுற்று உடம்புமெலிந்து வளைநெகிழ்தல் முதலியன கூறல் காப்பியவழக்காதலில் ஈண்டு உடம்புமெலிந்து வளைசிந்துதலுங் கூறினர்.

தனிப்பெருந் தருமந்தானோர் தயாவின்றித் தானைமன்னன்
பனிப்பில்சிந் தையினினுண்மைப் பான்மை சோதித்தாலென்ன
மனித்தர்தன் வரவுகாணு வண்ணமோர் வண்ணநல்லான்
புனிற்றிளங் கன்றுதுள்ளிப் போந்ததம் மறுகினூடே.

(இ-ள்.) தனிப்பெருந்தருமம்=ஒப்பற்ற பெரிய அறக்கடவுள்; ஓர்தயாவின்றித் தானைமன்னன்=எவ்வளவுந் தண்ணளியில்லாமல் நால்வகைச் சேனைகளையுமுடைய மனுநீதிச்சோழனது; பனிப்பில் சிந்தையினில் = ஒன்றாலுஞ் சலியாததிண்மையோடுகூடிய மனதிலுள்ள; உண்மைப்பான்மைசோதித்தாலென்ன= உண்மைக்குணத்தைச் சோதிக்கவந்தாற்போல; மனித்தர் தன்வரவுகாணுவண்ணம்=மனிதர்கள் தன்வரவை அறியாமலிருக்கும்படி; ஓர்வண்ணநல்லான்புனிற்றிளங்கன்று=ஒரு அழகுடைத்தாகிய நல்ல பசுவினுடைய ஈன்றணிமைத்தாகிய இளங்கன்று; துள்ளிப்போந்த தம்மறுகினூடே=துள்ளிச்சென்றது அவ்வீதியினிடத்து.—எ-று. புனிறு=ஈன்றணிமை. தான் - அசை. (௨௨)

அறக்கடவுட்கு ஒப்புக்கூறும் பொருளின்மையின் தனிப்பெருந்தருமம் என்றும், அது அரும்பெறற் குமரனைத்தேர்க்கா லூர்விக்கவந்தமையின் தயாவின்றி என்றும், தனக்கும்பிறர்க்கும் பகைவரால் இடுக்கண் நேரிடுங்கால் அதைத் தடுத்தற்குரிய அங்கங்களுடையன் ஆதலில் தானைமன்னன் என்றும், பகைவரால் வருந்துயரிற்கும் பிறதுயரங்களுக்கும் தான்கலங்கா நிலைமையையுடையன் என்பது தோன்றப் பனிப்பில்சிந்தை என்றும், அச்சிந்தையின்கண் கோடாத நீதியுண்மை வெளிப்படுத்தற்கு அவ்வாறு வந்ததென்பதுதோன்ற உண்மைப் பான்மை சோதித்தாலென்ன என்றும், அக்கன்றின் செலவைத்தகைதற்கு அநேகருளராகவும் அவரெல்லாம் அறியாமல் ஓர்மாயமாக வந்ததென்பது தோன்ற மனித்தர் தன்வரவுகாணுவண்ணம் என்றுங்கூறினர்.

அம்புனிற் றாவின்கன்றே ரபாயத்தி னூடுபோகிச்
செம்பொனின் றேர்க்கான்மீது விசையினுற் செல்லப்பட்டே
யும்பரி னடையக்கண்டங் குருகுதா யலமந்தோடி
வெம்பிடு மலறுஞ்சோரு மெய்ந்நடுக் குற்றுவீழும்




மநுச்சோழன் மைந்தன் தோழர்சூழ இரதமூர்ந்துசெல்லும்போது ஓர்தலையீற்றுப் பசுவின்கன்று துள்ளித்தேர்ச்சக்கரத்தி லறைபட தாய் அத்துயரம் ஆற்றாது தன்கோட்டில் ஆராய்ச்சிமணியை துளக்கி அரசற்கறிவித்தது*

(இ-ள்.) அம்புனிற்றுவின்கன்று=அழகினையுடைய ஈன்றணிமைத்தாகிய அப்பசுக்கன்றானது; ஓரபாயத்தினூடுபோகி = ஒரு அபாயவழியில் வீதிக்கிடையே ஓடி; செம்பொனின்றேர்க்கான்மீது=சிவந்த பொன்னாலாய தேர்க்காலானது தன்மீது; விசையினாற்செல்லப்பட்டு=வேகத்தினாற் செல்லப்பட்டு; உம்பரினடையக்கண்டு=இறக்க அதைக்கண்டு; அங்கு உருகுதாயலமந்தோடி=அவ்விடத்தில்மனமுருகுகின்றதாய்ப் பசுவானது தெருமந்து ஓடி; வெம்பிடு மலறுஞ்சோரும்=(கன்று இறந்த சோகத்தால்) அழுது அலறிச்சோர்வடையும், பின்; மெய்நடுக்குற்றுவீழும்=உடம்பு நடுக்குற்று நிலத்தில் விழும்.—எ-று. (௨௩)

கன்றைச்சிறிது காணாவிடத்து உருகு நீர்மையுடைய அப்பசு, கன்றை இழந்துழி உருகு முருக்கத்திற்கோர் வரம்பின்மையின், உருகுதாய் என்றார்.

மற்றது கண்டுமைந்தன் வந்ததிங் கபாயமென்று
சொற்றடு மாறிநெஞ்சிற் றுயருழந் தறிவழிந்து
பெற்றமுங் கன்றுமின்றெ னுணர்வெனும் பெருமைமாளச்
செற்றவென் செய்கேனென்று தேரினின் றிழிந்துவீழ்ந்தான்

(இ-ள்.) மற்றதுகண்டுமைந்தன் = அப்பசுவின் துயரத்தைப்பார்த்து அம்மனுவின் குமாரன்; வந்ததிங்கபாயமென்று=ஆபத்து இவ்விடத்து நேரிட்டதென்று; சொற்றடுமாறி=உரைதடுமாறி; நெஞ்சிற்றுயருழந்து=தன்மனதில் துக்கமுற்று; அறிவழிந்து = அறிவுசோர்ந்து; பெற்றமுங்கன்றும்=இப்பசுவுங் கன்றும்; இன்றெனுணர்வெனும் பெருமைமாளச்செற்ற = இன்றைக்கு என்னுடைய உணர் வாகியபெருமை கெடும்படி செய்தன; என்செய்கேனென்று= என்செய்வேனென்று; தேரினின்றிழிந்து வீழ்ந்தான்=தேரினின்றும் நழுவி நிலத்தில் விழுந்தான்.—எ-று. (௨௪)

கல்வியுடைமை, ஒழுக்கமுடைமை, கொடையுடைமை, புகழுடைமை, முதலிய காரணங்களால் தான் அடைந்த பெருமையை இக்கோக்கொலை காரணமாய் இழத்தலின் பெருமைமாள என்றும், அப்பெருமை நல்லுணர்வின் வயத்ததாதலின் உணர்வோடதனிடை வேற்றுமையின்மைதோன்ற உணர்வெனும்பெருமை என்றுங்கூறினார்.

அலறுபே ராவைநோக்கி யாருயிர் பதைத்துச்சோரு
நிலமிசைக் கன்றைநோக்கி நெடிதுயிர்த் திரங்கிநிற்கு
மலர்தலை யுலகங்காக்கு மனுவெனு மென்கோமானுக்
குலகிலிப் பழிவந்தெய்தப் பிறந்தவா வொருவனென்பான்.

(இ-ள்.) அலறுபே ராவைநோக்கி=(அப்புத்திரன்கன்றிறந்தமைகாரணமாய்) அழுகின்றபெருமையுடைத்தாகிய பசுவைப்பார்த்து; ஆருயிர் பதைத்துச்சோரும்=நிறைவினையுடைய தன்னுயிர்பதைபதைத்துச்சோர்வான்; நிலமிசைக் கன்றைநோக்கி=பூமியின்மேல் இறந்துகிடக்குங் கன்றைப்பார்த்து; நெடிதுயிர்த் திரங்கிநிற்கும்=பெருமூச்சுவிட்டு அழுது நிற்பான்; மலர்தலை யுலகங்காக்கும்=

பரந்த இடத்தையுடைய நிலவுலகத்தைக் காவல்செய்கின்ற; மனுவேனு மென் கோமானுக்கு=மனுவென்னும்பெயரையுடைய எனதுஅரசனுக்கு; உலகிலிப்பழி வந்தெய்த=உலகின்கண் இவ்வாறான பழிமொழிவர; பிறந்தவா ஒருவனென்பா ன்=யாவனொருவன்பிறந்தவண்ணமென்று சொல்வான்.—எ-று. (௨௫)

பிறந்தவாறென்பது பிறந்தவாவென-ஈறு குறைந்துநின்றது.

வந்தவிப் பழியைமாற்றும் வகையினை மறைநூல்வாய்மை
அந்தணர் விதித்தவாற்றா லாற்றுவ தறமேயாகில்
எந்தையீ தறியாமுன்ன மியற்றுவ னென்றுமைந்தன்
சிந்தைவெந் துயரந்தீர்ப்பான் றிருமறை யவர்முன்சென்றான்

(இ-ள்.) வந்தவிப் பழியை=(இப்பொழுது என்னை) அறியாதுவந்த இப் பாவத்தை; மாற்றும்வகையினை=நீக்குதற்குரிய தீர்வை; மறைநூல்வாய்மை யந்த ணர்விதித்தவாற்றால்=வேதநூலின் மெய்ம்மையுணர்ந்த மறையவர்கள் நியமித்த அறநூல்வழியால்; ஆற்றுவதறமேயாகில்=பாவபரிகாரம்செய்வது தருமமானால்; எந்தையீதறியாமுன்ன மியற்றுவனென்று=எனதுதந்தையாகிய மனுநீதிச்சோழ ன்இச்செய்தி தெரியாமுன்னம் (பிராயச்சித்தத்தைச்) செய்வேனென்று; மைந் தன் சிந்தைவெந் துயரந்தீர்ப்பான் = அம்மனுவின்புத்திரன் தனது மனத்தின் கணுள்ள மிக்கதுயரத்தை நீக்கிக்கொள்வானாய்; திருமறையவர்முன்சென்றான்= சிறப்பினையுடைய மறையவர்க ளிடத்திற்போனான்.—எ-று. (௨௬)

அறியாதுசெய்த பாவத்திற்குத் தீர்வுண்டாதலில் - வந்தவிப்பழியைமாற் றும்வகையினை என்றும், அதுவும் அந்தணரைமுன்னிட்டு அவர்கூறியவாற்றால் செய்யவேண்டுதலில் அந்தணர்விதித்தவாற்றா லாற்றுவதென்றும், அவ்வாறு அற நூல்கூறுதல்மரபாதலில் அறமேயாகிலென்றுங்கருதினானென்க.

தன்னுயிர்க் கன்றுவீயத் தளர்ந்தவாத் தரியாதாகி
முன்னெருப் புயிர்த்துவிம்மி முகத்தினிற் கண்ணீர்வார
மன்னுயிர் காக்குஞ்செங்கோன் மனுவின்பொற் கோயில்வாயிற்
பொன்னணி மணியைச்சென்று கோட்டினாற் புடைத்ததன்றே.

(இ-ள்.) தன்னுயிர்க்கன்றுவீய = தன்னுயிர்போலுங் கன்றானதுஇறக்க; தளர்ந்தவாத்தரியாதாகி = அதனால்வருந்திய பசுவானது அத்துயரத்தை ஆற்றா தாய்; முன்னெருப்புயிர்த்துவிம்மி=முன்னேநெருப்பெழும்படியாகப் பெருமூச் சுவிட்டுஅழுது; முகத்தினிற்கண்ணீர்வார=தன்முகத்தினின்றுங் கண்ணீரானது சிந்த; மன்னுயிர்காக்குஞ் செங்கோன்மனுவின்=நிலைபெற்றஆன்மகோடிகளைக்கா க்கின்றசெங்கோலினையுடைய மனுச்சோழனது; பொற்கோயில்வாயில்=அழகிய * வேந்திருக்கையின்வாயிலில்; பொன்னணி மணியை=பொன்னால் அலங்கரித்த அழகிய ஆராய்ச்சிமணியை; சென்று கோட்டினாற்புடைத்தது=போய்த் தன்னு டைய கொம்பினால்அடித்தது.—எ-று. அன்று-ஏ-அசை. (௨௭)

* - வேந்திருக்கை - அத்தாணிமண்டபம்

பழிப்பறை முழக்கோவார்க்கும் பாவத்தி னொலியோவேந்தன்
வழித்திரு மைந்தனாவி கொளவரு மறலியூர்தி
கழுத்தணி மணியினார்ப்போ வென்னத்தன் கடைமுன்கேளாத்
தெழித்தெழு மோசைமன்னன் செவிப்புலம் புக்கபோது.

(இ-ள்.) பழிப்பறை முழக்கோ=பழிவரும்போது ஒலிக்கும் ஓர் பறையினது ஒலியோ (அல்லது); ஆர்க்கும் பாவத்தினொலியோ=பாவமானது வடிவெடுத்து ஆரவாரித்தலாலாகிய ஓசையோ; வேந்தன் வழித்திரு மைந்தன்=மனுவென்னும் அரசனது சந்ததியில் அவதரித்த புத்திரனது; ஆவிகொளவரும்=உயிரைக்கொள்ள வருகின்ற; மறலியூர்தி கழுத்தணி மணியினார்ப்போ என்ன=யமனது ஊர்தியாகிய எருமைக்கடாவின் கழுத்திற்கட்டிய கண்டையினது ஆரவாரமோ எனக்கேட்டார் சொல்லும்படி; தன்கடை முன்கேளாத் தெழித்தெழு மோசை=தன்முதல்வாயிலில் இதுகாறுங்கேளாத மிக்கெழும் மணியோசையானது; மன்னன் செவிப்புலம் புக்கபோது=மனுநீதிச்சோழனது காதினிடத்துப் புகுங்கால்.—எ-று. ஓகாரங்கள் ஐயநிலை உவமையாய் நின்றன. (௨௮)

கேளாத-என்னும் எதிர்மறைப் பெயரெச்சம் ஓசையென்னும் பொருட்பெயர்கொண்டது. தெழித்தெழுமென்னும் பெயரெச்சம் இடைநிலையாய் வந்தது. பெயரெச்சம் ஒருவாய்பாட்டால் அடுக்கிவருதல் மரபாதலின், பழியும் பாவமுமாயிருத்தல் பற்றியும், இதுகாரணமாய் அரசன் தன்புதல்வனைக் கொல்வானென்னுந்துணிவுபற்றியும், கேட்டார் இவ்வாறு சொல்லவென்க.

ஆங்கது கேட்டவேந்த னரியணை யிழிந்துபோந்து
பூங்கொடி வாயினண்ணக் காவல ரெதிரேபோற்றி
ஈங்கிதோர் பசுவந்தெய்தி யிறைவநின் கொற்றவாயிற்
றூங்கிய மணியைக்கோட்டாற் றுளக்கிய தென்றுசொன்னார்.

(இ-ள்.) ஆங்கது கேட்ட வேந்தன்=அவ்வொலியைக்கேட்ட மனுநீதிச்சோழன்; அரியணை யிழிந்து போந்து=சிங்காசனத்தினின்று மிறங்கிச்சென்று; பூங்கொடி வாயினண்ண = பொலிவினையுடைய கொடியாடைகள் கட்டியிருக்கின்ற வாயிலை அடைய; காவலரெதிரே போற்றி=அவ்வாயில் காவலாளர் அவ்வரசனெதிரே வணங்கி; ஈங்கிதோர் பசுவந்தெய்தி=இவ்விடத்து இப்பசுவந்து; இறைவநின் கொற்றவாயில்=அரசனே உன்னுடைய வெற்றியினையுடைய அத்தாணி மண்டபத்தின் வாயிலில்; தூங்கிய மணியை = தூக்கி யிருக்கின்ற ஆராய்ச்சிமணியை; கோட்டாற் றுளக்கியதென்று சொன்னார்=கொம்பின் நுனியால் அசைத்ததென்று சொன்னார்கள்.—எ-று. (௨௯)

மன்னவ னதனைக்கேளா வருந்திய பசுவைநோக்கி
என்னிதற் குற்றதென்பா னமைச்சரை யிகழ்ந்துநோக்க
முன்னுற நிகழ்ந்தவெல்லா மறிந்துளான் முதிர்ந்தகேள்வித்
தொன்னெறி யமைச்சன்மன்னன் றளிணை தொழுதுசொல்வான்.

(இ-ள்.) மன்னவ னதனைக்கேளா=அவ்வரசன் வாயிலாளர்கூறிய அவ் வார்த்தையைக்கேட்டு ; வருந்திய பசுவை நோக்கி=வருந்துகின்ற அப்பசுவைப் பார்த்து ; என்னிதற்குற்ற தென்பான் = என்ன தீங்கு இதற்கு நேர்ந்ததென்று வினவுவானாய் ; அமைச்சரை இகழ்ந்து நோக்க=மந்திரிகளை இழிவர வாய்ப் பார்க்க ; முன்னுற நிகழ்ந்த வெல்லாம் அறிந்துளான்=முன்னே நடந்த செய்தி களையெல்லாம் அறிந்தவனாகிய ; முதிர்ந்தகேள்வித் தொன்னெறி யமைச்சன்= அறநூலின் துறைபோய கேள்வியையும் பழயநீதி நிலையில்வழுவாத முறைமை யினையுமுடைய ஒரு மந்திரியானவன் ; மன்னன்றாளினை தொழுது சொல்வா ன்=அவ்வரசனது பாதங்களை வணங்கிச் சொல்வானாயினான்.—எ-று, (ருo)

வளவநின் புதல்வனுங்கோர் மணிநெடுந் தேர்மேலேறி
யளவிறேர்த் தானைசூழ வரசுலாந் தெருவிற்போங்கா
லிளையவான் கன்றுதேர்க்கா லிடைப்புகுந் திறந்ததாகத்
தளர்வுறு மித்தாய்வந்து விளைத்ததித் தன்மையென்றான்.

(இ-ள்.) வளவநின்புதல்வன்=மனுநீதிச்சோழனே உனது புத்திரன்; ஆ ங்கோர்மணிநெடுந்தேர் மேலேறி=அம்மாடவீதியினிடத்து மணிகள் கட்டிய நெ டிய ஒரு தேரின்மேலேறி; அளவில் தேர்த்தானைசூழ=அளவில்லாத தேர்களும் சேனைகளும் தன்னைச்சூழ்ந்துவர; அரசுலாந்தெருவிற்போங்கால்=இராசவீதியில் போகும்பொழுது; இளையவான்கன்று=இளைய ஓர்பசுவின் கன்றானது; தேர்க்கா லிடைப்புகுந்திறந்ததாக = அந்தத் தேர்ச்சக்கரத்தினிடையே சென்று இறக்க; தளர்வுறுமித்தாய்=(அதனால்) தளர்ச்சியடைந்த இத்தாய்ப்பசுவானது; வந்துவி ளைத்ததித் தன்மையென்றான் = இவ்விடத்து வந்துஇம்மணியை யசைத்ததெ ன்றான்.—எ-று. (ருக)

அவ்வுரை கேட்டவேந்த னாவுறு துயரமெய்தி
வெவ்விடந் தலைக்கொண்டாற்போல் வேதனை யகத்துமிக்கிங்
கிவ்வினை விளைந்தவாவென் றிடருறு மிரங்குமேங்குஞ்
செவ்விதென் செங்கோலென்னுந் தெருமருந் தெளியுந்தேறான்.

(இ-ள்.) அவ்வுரைகேட்டவேந்தன்=அந்தமந்திரியின்சொல்லைக்கேட்ட அரசனானவன்; ஆவுறு துயரமெய்தி=அப்பசுவானது அடைந்த துன்பத்தைத் தானுமடைந்து; வெவ்விடந் தலைக்கொண்டாற்போல் = கொடியவிடமானது தலைக்கொண்டாற்போல; வேதனையகத்துமிக்கு=துயரமானது மனதில் அதிகப் பட்டு; இவ்வினை விளைந்தவாவென்றிடருறும்=இப்பழி இவ்வண்ணமாயிற்றென்று வருந்துவான்; இரங்கும் ஏங்கும்=இரக்கமுற்று ஏங்குவான்; செவ்விதென்செங் கோலென்னும்=என்செங்கோல் நன்கிருந்ததென்பான்; தெருமருந்தெளியுந்தே றான்=இதற்குத்தீர்வு என்செய்வோமெனத் தெளிந்து தேறாதவனாய் மனஞ்சுழ லுவான்.—எ-று. (ருஉ)

விளைந்தவாறென்பது - விளைந்தவாவெனஈறுகுறைந்து நின்றசெய்யுண்மு டிபு. தன்னுயிர்போல் மன்னுயிரைக்காக்கும் அவனதருட்குணந்தோன்ற ஆவு

றுதுயரமெய்தி என்றார். விடவேகந்தலைக்கோடல் = விடவேகந்தலைமேற்கொள்ளுதல். செவ்விதென் செங்கோலென்றது -செங்கோல்கோடிற்றென்று குறிப்பித்து நின்றது. செங்கோலென்றது-அரசன்நீதியைக் கோல்மேல்வைத்துக்கூறும் ஒருபசாரவழக்கு.

**மன்னுயிர் புரந்துவையம் பொதுக்கடிந் தறத்தினீடு**
**மென்னெறி நன்றாலென்னு மென்செய்தாற் றீருமென்னுந்**
**தன்னிளங் கன்றுகாணுத் தாய்முகங் கண்டுசோரும்**
**அந்நிலை யரசனுற்ற துயரமோ ரளவிற்றன்றால்.**

(இ-ள்.) மன்னுயிர்புரந்து=நிலைபெற்ற ஆன்மவர்க்கங்களைக் காத்து; வையம்பொதுக்கடிந்து=நிலவுலகத்தைப் பகைவர்மாட்டுள்ளபொதுவில் நீக்கித்தன்னதாக்கி; அறத்தினீடு மென்னெறி = தருமவழியில் ஒழுகுகின்ற என்னுடைய அரசாட்சியானது; நன்றாலென்னும் =நன்கிருந்ததென்று கூறுவன்; என்செய்தாற் றீருமென்னும்=இப்பாவம் என்னபரிகாரம் செய்தால் நீங்கும் என்பன்;தன்னிளங்கன்றுகாணு=தன்னுடைய இளமையாகிய கன்றைக்காணாத; தாய்முகங்கண்டுசோரும்=தாய்ப் பசுவின்முகத்தைப் பார்த்துச் சோர்வடைவன்; அந்நிலையரசனுற்றதுயரம்=அச்சமயத்து அவ்வரசனடைந்த துன்பமானது; ஓரளவிற்றன்று=மிகப்பெரிதாயிருந்தது.—எ-று. ஆல் - அசை. (ருரு)

**மந்திரிக ளதுகண்டு மன்னவனை யடிவணங்கிச்**
**சிந்தைதளர்ந் தருளுவது மற்றிதற்குத் தீர்வன்றால்**
**கொந்தலர்தார் மைந்தனைமுன் கோவதைசெய் தார்க்குமறை**
**யந்தணர்கள் விதித்தமுறை வழிநிறுத்த லறமென்றார்.**

(இ-ள்.) மந்திரிகளதுகண்டு=அவ்வாறு அரசனடைந்த துயரத்தை மந்திரிமார்கள்பார்த்து; மன்னவனை யடிவணங்கி=மனுச்சோழனுடைய பாதத்தை வணங்கி; இதற்குச் சிந்தைதளர்ந்தருளுவது தீர்வன்று = இதற்கு நீர்மனந்தளர்வதுபரிகாரமன்று; கொந்தலர்தார் மைந்தனை =கொத்தாக அலர்ந்தபூமாலையையுடையஉமதுபுத்திரனை; முன் கோவதைசெய்தார்க்கு=முன்னாளில் கோக்கொலைசெய்த பாவிகட்குத்தீர்வாக; மறையந்தணர்கள் விதித்த=வேதமுணர்ந்தமறையவர்களால் விதிக்கப்பட்ட; முறைவழிநிறுத்த லறமென்றார்=விதிவழி பிராயச்சித்தத்தில் நிறுத்துதல் நீதியென்று கூறினர்.—எ-று. (ருசு)

மற்று - ஆல் - அசை.

கோவதைசெய்தார்க்கு விதித்தமுறையாவது:—கோவதைசெய்தான் சிகையோடுமுண்டனஞ்செய்து கோமூத்திரத்தில்முழுகித் தான்கொன்றகோவின் தோலைப்போர்த்து உப்பின்றியோர்பொழுதுண்டு பசுக்கட்குநோயாலும் பசியாலும் பிறஉயிர்களாலும் துன்பம்வாராமற் 'பாதுகாத்துஇதஞ்செய்து ஆறுமாசமளவுங் கோமந்தையில் வசித்திருத்தல்.

வழக்கென்று நீர்மொழிந்தா னமற்றதுதான் வலிப்பட்டுக்
குழக்கன்றை யிழந்தலறுங் கோவுறுநோய் மருந்தாமோ
இழக்கின்றேன் மைந்தனையென் றெல்லீருஞ் சொல்லியவிச்
சழக்கின்று நானிசைந்தாற் றருமந்தான் சலியாதோ.

(இ-ள்.) வழக்கென்றுநீர்மொழிந்தால் = கோவதைசெய்தார் மறையவர் முகத்தால் தீர்வுசெய்துகொள்ளுதல் உலகவழக்கமென்று நீவிர்கூறினால்; அதுதான் = அத்தீர்வுதான்; குழக்கன்றையிழந்து வலிப்பட்டுஅலறும் = தன் இளங்கன்றினையிழந்து மனம்வருந்தியலறுநின்ற; கோவுறுநோய்மருந்தாமோ = பசுவடைந்ததுன்பத்திற்குமருந்தாகாது(அதனால்); இழக்கின்றேன்மைந்தனையென்று = புத்திரனையான் இழக்கின்றேனென்று; எல்லீருஞ்சொல்லிய = நீவிரெல்லாங்கூறிய; இச்சழக்கின்றுநானிசைந்தால் = இப்பொய்மொழிக்கு இன்றைக்கு நானுடன்பட்டால்; தருமஞ்சலியாதோ = அறக்கடவுள்சலிப்படையும்.—எ-று. (௩௫)

மற்று, தான் - அசை. ஓகாரம் இரண்டும் எதிர்மறை.

அறநூலுட்கூறுங் கோக்கொலைப்பிராயச்சித்தம் இவ்வாறுதுயருறுங்கோவின் துயரத்தைநீக்காது ஆதலில், கோவுறுநோய்மருந்தாமோ என்றும், இதற்கு நான்மைந்தனையே இறக்கச்செய்வேனென்பதுணர்ந்து அதைத்தடுக்க நீவிர்கூறினீரென்னுங்கருத்தால் இழக்கின்றேன்மைந்தனை என்றும், நீவிர்கூறுவது இதற்குத்தீர்வன்று என்னுங்கருத்தால் சழக்கின்றுநானிசைந்தாலென்றும், அரசன்கூறினனென்க.

மாநிலங்கா வலனாவான் மன்னுயிர்காக் குங்காலைத்
தானதனுக் கிடையூறு தன்னாற்றன் பரிசனத்தால்
ஊனமிகு பகைத்திறத்தாற் கள்வரா லுயிர்தம்மால்
ஆனபய மைந்துந்தீர்த் தறங்காப்பா னல்லனோ.

(இ-ள்.) மாநிலங் காவலனாவான் = பெரிய நிலவுலகத்துக்கு அரசனாவான்; மன்னுயிர்காக்குங்காலை = நிலைபெற்றஆன்மகோடிகளைக் காக்குங்காலத்து; அதனுக்கிடையூறு = அவ்வுயிர்களுக்கு இடுக்கண்; தன்னால் தன்பரிசனத்தால் = தன்காரணமாயும் தன்பரிசனங்காரணமாயும்; ஊனமிகு பகைத்திறத்தால் = குற்றத்தை விளைக்கும்பகைவர்கள் காரணமாயும்; கள்வரால் உயிர்தம்மால் = கள்வர் காரணமாயும் பிறஉயிர்கள் காரணமாயும்; ஆனபயமைந்துந் தீர்த்து = ஆகிய அச்சமைந்தையும் நீக்கி; அறங்காப்பானல்லனோ = அறத்தைவழுவாமற்காப்பவனே.—எ-று. (௩௬)

தான்-சாரியை. ஓகாரம்-எதிர்மறை. மாநிலங்காவலனாவான் காப்பவனே என இயையும். தன்னால் அச்சம் நிகழாமைக்காத்தல்:—தான்குடியிறையை வலிந்துகொள்ளாமை, மிகக்கொள்ளாமை, வழக்குநெறியில்வழுவிக்கூறாமை, முதலியன. தன்பரிசனத்தால் அச்சம் நிகழாமைக்காத்தல்:—மந்திரிமுதலாயினார் அரசன்வழிப்பட்டோமென்னுஞ் செருக்கால் குடிகளை நலிவிக்காமை. பகைத்திறத்

தால் அச்சம் நிகழாமைக்காத்தல்:—அயற்புலத்தரசர் தன்னாட்டிற்சென்று நிரைகளைக்கவர்ந்தும் பலவளங்களைக்கவர்ந்தும் குடிகளை அலைக்காமை. கள்வரால் அச்சம் நிகழாமைக்காத்தல்:—கள்வர்கன்னமிடலும், கைப்பொருள்கவர்தலும், ஆறலைத்தலும், குடிகள் மாட்டுச்செய்யாமைத்தகைதல். பிறவுயிரால் அச்சம் நிகழாமைக்காத்தல்:—வள்ளெயிற்றரிமா, வாள்வரிவேங்கை, முதலிய கொடுவிலங்குகளையழித்திடையூறுநீக்கல். ஐந்துந்தீர்த்தறங்காப்பானென்றதனால், தன்மகனுந் தன் பரிசனமாதலின் அவனால் நிகழ்ந்தபழிக்குத் தண்டிப்பதே கருமமென்பது குறிப்பெச்சம்.

என்மகன்செய் பாதகத்துக் கிருந்தவங்கள் செயவிசைந்தேன்
அன்னியனோ ருயிர்கொன்று லவனைக்கொல் வேனானாற்
றொன்மனுநூற் றொடைமனுவாற் றுடைப்புண்ட தெனும்வார்த்தை
மன்னுலகிற் பெறமொழிந்தீர் மந்திரிகள் வழக்கென்றான்.

(இ-ள்.) என்மகன்செய்பாதகத்துக்கு = என்னுடைய புதல்வன்செய்த கோக்கொலையாகிய இப்பாவத்திற்கு; இருந்தவங்கள்செயவிசைந்தேன்=உயிர்க்கொலைசெய்யாது பெருமையாகிய நியமவிரதங்களென்னுந் தீர்வைச்செய்ய உடன்பட்டு; அன்னியனோருயிர்கொன்றால்=வேறொருவன் ஒருயிரைக்கொலைசெய்தால்; அவனைக்கொல்வேனானால்=அதற்குத் தீர்வுகுறியாது உயிர்க்கொலையாகிய தீர்வையேகுறித்து அவனையான் கொல்வேனெனில்; தொன்மனுநூற்றொடை= தொன்றுதொட்டுவந்த மனுநூலில் விதித்த ஒழுக்கமானது; மனுவாற்றுடைப்புண்டதெனும்வார்த்தை=இம்மனுச்சோழனால் கெடுக்கப்பட்டதென்னுஞ்சொல்; மன்னுலகிற்பெறமொழிந்தீர்=நிலைபெற்ற நிலவுலகத்தில்வழங்கும்படி இவ்வாறு கூறினீர்; மந்திரிகள் வழக்கென்றான் = இவ்வாறுபிறழக்கூறுதல்மந்திரிகளுக்கு வழக்கமென்றுசொன்னான்.—எ-று. (௬௭)

இக்கொலை - முன்னோர்காலும் நிகழாதபுதுமையுடைத்தென்பதுணராது அறநூல்கூறும் பொதுவிதியைத் தீர்வுகுறித்தாரென்பது நோக்கி இவ்வாறிகழ்ந்துரைத்தானென்க.

என்றரச னிகழ்ந்துரைப்ப வெதிர்நின்ற மதியமைச்சர்
நின்றநெறி யுலகின்க ணிதுபோன்மு னிகழ்ந்ததாற்
பொன்றுவித்தன் மரபன்று மறைமொழிந்த வறம்புரித
றென்றுதொடு நெறியன்றே தொன்னிலங் காவலவென்றார்.

(இ-ள்.) என்றரசனிகழ்ந்துரைப்ப = இவ்வாறு மனுச்சோழன் மந்திரிகளை இகழ்ந்துகூற; எதிர்நின்றமதியமைச்சர்=அவ்வரசன் முன்பு நின்ற ஊகத்தையுடைய மந்திரிகள்; நின்றநெறி உலகின்கண் = நிலைபெற்ற அறநூல் கூறிய வழியில் ஒழுகுகின்ற நிலவுலகத்தில்; இதுபோன்முன் நிகழ்ந்ததால்=இதுபோலக்கோக்கொலைகள் முற்காலத்து நிகழ்ந்திருத்தலால்; பொன்றுவித்தன்மரபன்று=அதுகாரணமாய் அப்புதல்வனை இறக்கச்செய்தல்முறைமையன்று (அதேனெனில்); மறைமொழிந்த அறம்புரிதல் = வேதங்கள்கூறிய அறத்தைவிரும்பி

யொழுகல்; தொன்றுதொடுநெறியன்றே = தொன்றுதொட்டுவந்த ஒழுக்கமன்றோ; தொன்னிலங்காவலனென்றார்=பழமையாகிய நிலவுலகத்தைக்காக்கின்ற அரசனே என்றார்கள்.—எ-று. (கஅ)

அவ்வண்ணந் தொழுதுரைத்த வமைச்சர்களை முகநோக்கி
மெய்வ்வண்ணந் தெரிந்துணர்ந்த மனுவென்னும் விறல்வேந்தன்
இவ்வண்ணம் பழுதுரைத்தீ ரென்றெரியி னிடைத்தோய்ந்த
செவ்வண்ணக் கமலம்போன் முகம்புலர்ந்து செயிர்த்துரைப்பான்.

(இ - ள்.) அவ்வண்ணந்தொழுதுரைத்த = அவ்வாறு வணங்கிக்கூறிய; அமைச்சர்களை முகநோக்கி = மந்திரிகளுடைய முகத்தைப்பார்த்து; மெய்வண்ணந்தெரிந்துணர்ந்த=நீதியின் உண்மையை உய்த்தறிந்த; மனுவென்னும் விறல்வேந்தன் = மனுவென்னும் பெயரையுடைய வலியசோழராசன்; இவ்வண்ணம் பழுதுரைத்தீரென்று=இவ்வாறு பழுதுபடச்சொன்னீரென்று; எரியினிடைத்தோய்ந்த=நெருப்பினிடத்து வாட்டிய; செவ்வண்ணக்கமலம்போல் = சிவந்த நிறத்தையுடைய தாமரைமலர்போல; முகம்புலர்ந்துசெயிர்த்துரைப்பான்=முகம்வாடிக் கோபித்துச்சொல்வான்.—எ-று. (கக)

அவ்வுரையில் வருநெறிக ளவைநிற்க வறநெறியின்
செவ்வியவுண் மைத்திறநீர் சிந்தைசெயா துரைக்கின்றீர்
எவ்வுலகி லெப்பெற்ற மிப்பெற்றித் தாமிடரால்
வெவ்வுயிர்த்துக் கதறிமணி யெறிந்துவிழுந் ததுவிளம்பீர்.

(இ-ள்.) அவ்வுரையில் வருநெறிகளவைநிற்க = நீவிர்கூறும் அவ்வாக்கியங்களில் அதனியைபால் தோற்றுகின்ற பொருள்கள்நிற்க; அறநெறியின்செவ்விய உண்மைத்திறம்=தருமநெறியினது செப்பமான உண்மைப்பகுதியை; நீர் சிந்தைசெயாதுரைக்கின்றீர்=நீவிர் கருதாமல் சொல்கின்றீர்; எவ்வுலகிலெப்பெற்ற மிப்பெற்றித்தாமிடரால் = எந்தநாட்டில் எந்தப்பசுவானது கன்றையிழந்தமைகாரணமாய் உதிக்குந்துன்பத்தால்; வெவ்வுயிர்த்துக்கதறி=பெருமூச்சு விட்டு அழுது; மணியெறிந்துவிழுந்தது=மணியை அடித்துவிழுந்தது; விளம்பீர்=சொல்லுங்கள்.—எ-று. (உ0)

அவர்கூறிய நெறியைமறுத்தற்கு நெறிகளவைநிற்க என்றும், இதிலோரறமிருக்கின்றதென்பதுதோன்ற - உண்மைத்திறஞ் சிந்தைசெயாதுரைக்கின்றீரென்றும், அவ்வுண்மையிதுவென்பதுதோன்ற-எவ்வுலகிலெப்பெற்ற மிப்பெற்றித்தாமிடராற்கதறி மணியெறிந்ததென்றும், இது நூதனமாயிருந்ததென்பது தோன்ற விளம்பீரென்றுங், கூறினனென்க.

போற்றிசைத்துப் புரந்தரன்மா லயன்முதலோர் புகழ்ந்திறைஞ்ச
வீற்றிருந்த பெருமானார் மேவியுறை திருவாரூர்த்
தோற்றமுடை யுயிர்கொன்றா லதனினுற் றுணிபொருடான்
ஆற்றவுமற் றவற்கொல்லு மதுவேயா மெனநினைமின்.

(இ-ள்.) போற்றிசைத்துப்புரந்தரன் மாலயன்முதலோர் புகழ்ந்திறைஞ்ச=வந்தனஞ்சொல்லி இந்திரன் திருமால் பிரமன்முதலியதேவர்கள் புகழ்ந்து வணங்க; வீற்றிருந்தபெருமானார்=திருக்கைலேயின்கண் வீற்றிருந்தருளுஞ் சிவபிரானார்; மேவியுறைதிருவாரூர்=எழுந்தருளியிராகின்ற திருவாரூரில்; தோற்றமுடையுயிர்கொன்ற ளுதலினல் = தோற்றிய உயிரைக்கொன்றான் அதனால்; துணிபொருள்தான்=நிச்சயிக்கப்படும்பொருளாவது; ஆற்றவும் மற்றவற்கொல்லுமதுவே யாமெனநினைமின்=மிகவும் அப்புதல்வனைக்கொல்லுவதேயாமென்று நினையுங்கள்.—எ-று. ஆற்றவும் என்றதைத் துணிபொருளென்பதனோடு கூட்டுக. உம்மை உயர்வு சிறப்பு. (சுக)

திருமேனிவெளிப்பட்டு இருத்தற்குரிய இடம் திருக்கைலேயாதலில் வீற்றிருந்த என்பதற்குத் திருக்கைலேயில் எனவருவிக்கப்பட்டது. பெருமானார்மேவியுறை திருவாரூர் என்றதனால், கந்தரோடும் பிராட்டியாரோடும் பிரானார்திருவாரூரின்கண் கைலேபோல் வீற்றிருந்தருள்வரென்பது பெற்றாம். அத்திருவாரூரிற்பிறந்த வுயிர்கள் அப்பிறப்புப்பற்றிச் சிவகணத்தோடொக்குமென்னும் விசேடந்தோன்றத் தோற்றமுடை உயிரென்றும், அதைக்கொன்றபாவமும் மிகப்பெரிதென்பது தோன்றக் கொன்றானென்றுங் கூறினன்.

எனமொழிந்து மற்றிதனுக் கினியிதுவே செயலிவ்வான்
மனமழியுந் துயரகற்ற மாட்டாதேன் வருந்துமிது
தனதுறுபே ரிடர்யானுந் தாங்குவதே கருமமென
அனகனரும் பொருடுணிந்தா னமைச்சருமஞ் சினரகன்றார்.

(இ-ள்.) எனமொழிந்து = (மனுச்சோழர்) இவ்வாறுகூறி; இதனுக்கினியிதுவேசெயல்=இப்பாவத்திற்குக் கொன்றபிள்ளையைக் கொல்வதேகாரியம்; இவ்வான்மனமழியுந் துயரகற்றமாட்டாதேன்யானும்=இப்பசுவானது மனம்வருந்துதற்கு ஏதுவான துன்பத்தை நீக்கமாட்டாதவனாகிய யானும்; வருந்தும் இதுதனது=வருந்தும் இப்பசுவினது; உறுபேரிடர்தாங்குவதே கருமமென=மிகப்பெரியதுயரத்தை யடைவதே கருமமென்று; அனகனரும் பொருள்துணிந்தான்=அம்மனுநீதிச் சோழன் அரியபொருளை நிச்சயித்தான்; அமைச்சருமஞ்சினரகன்றார்=மந்திரிகளும் அச்சமுற்று அவ்விடத்தினின்றும் நீங்கினர்.—எ-று. ()

யானும்-என்பதில் உம்மை, இழிவு சிறப்பு. அமைச்சரும் என்ற உம்மை இறந்தது தழீஇயது.

இதற்கிது தீர்வெனத்தான் நிச்சயித்தும் மந்திரிமாரோடு உசாவலில் காலம் நீட்டித்தமைபற்றி அகற்றமாட்டாதேன் என்றான். அவ்வரசனது தூயகுணந்தோன்ற அனகன் என்றும், அவ்வறத்தின் உண்மை தோன்ற அரும்பொருள் துணிந்தான் என்றுங், கூறினர்.

மன்னவன்றன் மைந்தனையங் கழைத்தொருமந் திரிதன்னை
முன்னிவனை யவ்வீதி முரண்டேர்க்கா லூர்கவென

அன்னவனு மதுசெய்யா தகன்றுதன்னு ருயிர்துறப்பத்
தன்னுடைய குலமகனைத் தான்கொண்டு மறுகணைந்தான்.

(இ-ள்.) மன்னவன்றன்மைந்தனை யங்கழைத்து = மனுச்சோழர் தன் புதல்வனை அவ்விடத்து வரவழைத்து; ஒருமந்திரிதன்னை = ஓர்மந்திரியைநோக்கி; முன்னிவனை யவ்வீதி முரண்டேர்க்காலூர்கவென = விரைவில் இப்புத்திரனை அந்தவீதியின்கண் வலியதேர்க்காலில் செலுத்துக என்றுகூற; அன்னவனு மதுசெய்யாதகன்று = அம்மந்திரியும் அச்செய்கையைத்தான் செய்யாது அங்குநின்றும்போய்; தன்னுருயிர்துறப்ப=தன்னுடைய உயிரைவிட; தன்னுடையகுலமகனைத்தான் கொண்டு மறுகணைந்தான் = தனது குலத்திற்குரிய புதல்வனைத் தான் அழைத்துக்கொண்டு வீதியிடத்திற் சென்றார்.—எ-று. (௪௩)

முன் - விரைவுப்பொருளுணர்த்தவந்த இடைச்சொல்.

தன்னோடு தன்குலமாகிய மூவேழ்சுற்றப் பிதிரரையும் நல்லுலகடைவிப்போனுதலிற் றன்னுடைய குலமகனென்றார்.

ஒருமைந்தன் றன்குலத்துக் குள்ளானென் பதுமுணரான்
றருமந்தன் வழிச்செல்கை கடனென்று தன்மைந்தன்
மருமந்தன் றேராழி யுறவூர்ந்தான் மனுவேந்தன்
அருமந்த வரசாட்சி யரிதோமற் றெளிதோதான்.

(இ-ள்.) ஒருமைந்தன் தன் குலத்துக்குள்ளானென்பது முணரான்= தன்குலத்திற்குரிய அரசுரிமை நடத்தற்கு ஒருபுத்திரன் உளனென்பதையும் அறியாமல்; தருமந்தன் வழிச்செல்கை கடனென்று=அறத்தின்வழியே நடப்பது தனக்கு முறைமையென்று ; தன்மைந்தன் மருமந்தன்றேராழியுற வூர்ந்தான் மனுவேந்தன்=தன்புதல்வனது மார்பைத்தன் தேர்க்காலானது பொருந்த நடத்தினன் மனுச்சோழன் ; அருமந்த அரசாட்சி அரிதோ எளிதோ = நல்ல அரசாட்சியானது அரியதேயன்றி எளிதன்று.—எ-று. மற்று தான்-அசை. (௪௪)

தண்ணளிவெண் குடைவேந்தன் செயல்கண்டு தரியாது
மண்ணவர்கண் மழைபொழிந்தார் வானவர்பூ மழைபொழிந்தார்
அண்ணலவன் கண்ணெதிரே யணிவீதி மழவிடைமேல்
விண்ணவர்க டொழநின்றான் வீதிவிடங் கப்பெருமான்.

(இ-ள்.) தண்ணளிவெண்குடைவேந்தன் = உயிர்கண்மேல்வைத்த கிருபையாகிய வெள்ளைக்குடையினையுடைய அரசனது; செயல்கண்டுதரியாது=செய்கையைக்கண்டு ஆற்றாதவர்களாய் ; மண்ணவர் கண்மழைபொழிந்தார்=நிலவுலகின்கணுள்ள மனிதர்கள் கண்ணீரைச்சொரிந்தார்கள்; வானவர்பூமழைபொழிந்தார்=ஆச்சரியத்தால் தேவர்கள் பூமழையைப்பொழிந்தார்கள்; அண்ணலவன் கண்ணெதிரே=சிறந்த பெருமையையுடையவனாகிய அவ்வரசனது கண்ணுக்கெதிரே; அணிவீதிமழவிடைமேல் = அழகிய திருவீதியின்கண் இளமையினையுடை




சோழன் தன்குமாரனைத் தேர்க்காலி லிடறுவிப்பாயென மந்திரியை யேவ அவர் அதுபொறாது தாமுயிர்நீத்தது.




சோழன் தன்புதல்வனைத் தேர்க்காலிலிடரிவிக்கவும் வீதிவிடங்கர் தோன்றியருள ஆவின்கன்று அமைச்சன் அரசிளங்குமரன் உயிர்பெற்றெழ தாய்ப்பசு பால்சுரந்து சொரிந்தது.

யதன்மவிடையின்மீது; வீதிவிடங்கப்பெருமான் = தியாகேசர்; விண்ணவர்கள் தொழநின்றான்=தேவர்கள் தொழும்படி காட்சிகொடுத்தருளினார்.—எ-று.(சடு)

வீதிவிடங்கப்பெருமானாகிய அண்ணலெனக்கூட்டி யுரைத்தலுமொன்று.

சடைமருங்கி லிளம்பிறையுந் தனிவிழிக்குந் திருநுதலும்
இடமருங்கி லுமையாளு மெம்மருங்கும் பூதகணம்
புடைநெருங்கும் பெருமையுமுன் கண்டரசன் போற்றிசைப்ப
விடைமருவும் பெருமானும் விறல்வேந்தற் கருள்கொடுத்தான்.

(இ-ள்.) சடைமருங்கிலிளம்பிறையும்=சடையின்கண் விளங்கும் மூன்றாம்பிறையினையும்; தனிவிழிக்குந்திருநுதலும்=ஓர்காலத்தில் விழிக்காநின்ற அக்கினிக்கண்ணையுடைய நெற்றியினையும்; இடமருங்கிலுமையாளும்=இடப்பாகத்தில் உமாதேவியாரையும்; எம்மருங்கும் பூதகணம் புடைநெருங்கும் பெருமையும்= எவ்விடங்களினும் பூதகணங்கள் அருகில் நெருங்கியிராநின்ற பெருமையையும்; முன்கண்டரசன் போற்றிசைப்ப=தன்னெதிரேகண்டு மனுச்சோழர் துதித்து நிற்க; விடைமருவும்பெருமானும் = இடபத்தை வாகனமாகக்கொண்டருளும் அவ்வீதிவிடங்கப் பெருமானாரும்; விறல்வேந்தர்க்கருள்கொடுத்தார் =வலிமையினையுடைய அச்சோழருக்குக் கிருபைசெய்தார்.—எ-று. (சசு)

நின்ற பெருமானும் எனவியைதலின், உம்மை இறந்தது தழீஇயது.

அந்நிலையே யுயிர்பிரிந்த வான்கன்று மவ்வரசன்
மன்னுரிமைத் தனிக்கன்று மந்திரியு முடனெழலும்
இன்னபரி சானனென் றறிந்திலன்வேந் தனும்யார்க்கு
முன்னவனே முன்னின்றான் முடியாத பொருளுளதோ.

(இ-ள்.) அந்நிலையே = அப்படிகாட்சிகொடுத்தபொழுதே; உயிர்பிரிந்த ஆன்கன்றும்=உயிர்நீங்கிக்கிடந்த பசுக்கன்றும்; அவ்வரசன் மன்னுரிமைத் தனிக்கன்றும்=அந்த மனுச்சோழரது அரசுரிமைக்குரிய ஒப்பற்ற புதல்வனும்; மந்திரியும்=(அப்புதல்வன் காரணமாய்த் தன்னுயிர்நீத்த) மந்திரியும்; உடனெழலும்=ஒருங்கே எழுதலும்; வேந்தனும் இன்னபரிசானனென்றறிந்திலன்=அதைக் கண்டமனுச்சோழனும் இவ்வாறு (ஆனந்தத்தால்) பரவசமடைந்தானென்று கூற அறியேன்; யார்க்கும்முன்னவனே முன்னின்றால் = அவனவ்வாறாதற்கு எல்லார்க்கும் முதல்வனாகியசிவபிரானே முற்பட்டுநின்றால்; முடியாத பொருளுளதோ=அவரால் முடியாதபொருளில்லை.—எ-று. ஓகாரம், எதிர்மறை. (சஎ)

இன்னபரிசானனென் றறிந்திலனென்னுமிடத்து தன்மையில்படர்க்கை வந்ததாகக்கொண்டு இவ்வாறு நானேனென்றுகூற அரசனுமறிந்திலனென்றுரைத்தலு மொன்று.முடியாததையும் முடிப்பிக்கும்முதன்மைதோன்ற முன்னவனே முன்னின்றால் என்றார். அரசன் கன்றென உயர்வினால் உயர்திணை யஃறிணையாயிற்று.

அடிபணிந்த திருமகனை யாகமுற வெடுத்தணைத்து
நெடிதுமகிழ்ந் தருந்துயர நீங்கினு னிலவேந்தன்
மடிசுரந்து பொழிதீம்பால் வருங்கன்று மகிழ்ந்துண்டு
படிநனைய வரும்பசுவும் பருவரனீங் கியதன்றே.

(இ-ள்.) அடிபணிந்த திருமகனை=தம்முடைய பாதங்களில்வணங்கின திருக்குமாரனை; ஆகமுற எடுத்தணைத்து = மார்பிற்பொருந்த எடுத்துத்தழுவி; நெடிதுமகிழ்ந்து=மிகமகிழ்ந்து; அருந்துயரம் நீங்கினன் நிலவேந்தன்=தனக் குண்டாயிருந்த மிக்கதுயரத்தினின்றும் நீங்கினன் நிலவுலகையாளும் மனுச் சோழன் ; மடிசுரந்து பொழிதீம்பால்=மடியானது சுரந்து பொழியாநின்ற இனி யபாலை; வருங்கன்றும் மகிழ்ந்துண்டு படிநனைய=உயிர்பெற்றெழுந்த பசுக்கன் றும் மகிழ்ச்சியாலுண்டு (அதனால்) பூமியைநனைக்க; வரும் பசுவும் பருவரல் நீங்கியது=கன்றிழந்த காரணமாகவந்த அப்பசுவும் தன்துயரத்தினின்றும் நீங் கிற்று.—எ - று. அன்று, ஏ, அசை. (௬௪)

பொன்றயங்கு மதிலாரூர்ப் பூங்கோயி லமர்ந்தபிரான்
வென்றிமனு வேந்தனுக்கு வீதியிலே யருள்கொடுத்துச்
சென்றருளும் பெருங்கருணைத் திறங்கண்டு தன்னடியார்க்
கென்றுமெளி வரும்பெருமை யேழுலகு மெடுத்தேத்தும்.

(இ-ள்.) பொன்றயங்கு மதிலாரூர்=பொன்மயமாய் விளங்குகின்ற மதி ல்சூழ்ந்த திருவாரூரில்; பூங்கோயிலமர்ந்தபிரான்=பூங்கோயிலில் வீற்றிருந்தரு ளுகின்றவீதிவிடங்கர்; வென்றிமனுவேந்தனுக்கு = வெற்றியினையுடைய மனுச் சோழனுக்கு; வீதியிலேயருள்கொடுத்து = அவ்வீதியின்கண்ணே காட்சிகொடுத் து; சென்றருளும் பெருங்கருணைத் திறங்கண்டு=மறைந்தருளும் பெரியகிருபை யினது கூறுபாட்டையறிந்து ; தன்னடியார்க்கென்று மெளிவரும்பெருமை= தமது அடியவர்கட்கெந்நாளும் எளிவருங்கருணையின் பெருமையை; ஏழுலகமும் எடுத்தேத்தும்=ஏழுலகமும் எடுத்துத் துதிக்கும்.—எ-று. (௬௫)

உம்மை இரண்டும் முற்றும்மை.

இனையவகை யறநெறியி லெண்ணிறந்தோர்க் கருள்புரிந்து
முனைவரவர் மகிழ்ந்தருளப் பெற்றுடைய மூதூர்மேற்
புனையுமுரை நம்மளவிற் புகலலாந் தகைமையதோ
அனையதனுக் ககமலரா மறவனூர் பூங்கோயில்.

(இ-ள்.) இனையவகையற நெறியில்=இவ்வாறு தருமவழியில்; எண்ணி றந்தோர்க் கருள்புரிந்து = அளவில்லாத அடியார்களுக்குக் கிருபைசெய்து ; முனைவரவர் மகிழ்ந்தருளப் பெற்றுடைய மூதூர்மேல்=வீதிவிடங்கர் மகிழ்ந்து வீற்றிருந்தருளுந் திருவாரூரை; புனையுமுரை = அலங்கரித்துக் கூறுஞ்சிறப்பு. நம்மளவிற் புகலலாந் தகைமையதோ=நம்மால் எடுத்துக்கூற அடங்குந் தகை மையுடையதன்று; அனையதனுக்கு=அத்திருநகரத்திற்கு; அகமலராம்=இதயகம

லத்தை ஒக்கும்; அறவனார் பூங்கோயில்=புற்றிடங்கொண்டார் எழுந்தருளியிருக்கும் பூங்கோயில்.—எ-று. ஓகாரம், எதிர்மறை. (ரு0)

மூதூர்மேற் புனையுமுரை என்றது, இரண்டாவதன் இயற்றப்படுபொருட்கண் ஏழாவது மயங்கிற்று.

பூங்கோயில் என்பது, ஆலயத்தின் திருப்பெயர்.

திருவாரூர்ச்சிறப்பு முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-கசரு.

---

## திருக்கூட்டச்சிறப்பு.

பூதநாயகர் புற்றிடங் கொண்டவர்
ஆதிதேவ ரமர்ந்தபூங் கோயிலிற்
சோதிமாமணி நீள்சுடர் முன்றில்சூழ்
மூதெயிற்றிரு வாயின்முன் னுயது.

(இ-ள்.) பூதநாயகர் புற்றிடங்கொண்டவர் = பூதகணங்கட்கு முதல்வரும் வன்மீகநாதரும்; ஆதிதேவர்=முதற்கடவுளும் ஆகியசிவபிரானார்; அமர்ந்த பூங்கோயிலில்=எழுந்தருளியிருக்கும் பூங்கோயிலினிடத்து; சோதிமாமணி நீள் சுடர் முன்றில்சூழ்=ஒளியினையுடைத்தாகிய மாணிக்கங்களின் பெரியகிரணங்களையுடைய திருமுற்றத்தைச்சூழ்ந்த; மூதெயிற்றிரு வாயில்முன்னுயது=பழையமதிற்றிருவாயிலின் முன்னுயுள்ளது. (யாதெனில்:)—எ-று. (க)

பூவார்திசைமுக னிந்திரன் பூமிசை
மாவாழகலத்து மான்முதல் வானவர்
ஓவாதெவரு நிறைந்துறைந் துள்ளது
தேவாசிரிய னெனுந்திருக் காவணம்.

(இ-ள்.) பூவார்திசைமுக னிந்திரன்=தாமரைமலரில் வாழ்கின்ற பிரமனும் இந்திரனும்; பூமிசை மாவாழகலத்து மான்முதல்வானவர் = பூவின்கண் இருக்கும் இலக்குமிதேவிவாழ்கின்ற மார்பினையுடைய திருமால்முதலான தேவர்களும்; (ஆகிய) எவரும் ஓவாது நிறைந்துறைந்துள்ளது=எல்லாரும் நீங்காமல் நிறைந்துறைந்துள்ளதாகிய; *தேவாசிரியனெனுந் திருக்காவணம்=தேவாசிரியனென்னுந் திருப்பெயரையுடைய திருக்காவணம்.—எ-று. (உ)

திருக்காவணம் என்பது மண்டபம், எனவே தேவர்களிருத்தற்கிடமாதல் பற்றித்தேவாசிரிய மண்டபமென்ருயிற்று. நிறைந்துறைந்துள்ளதா யிருக்கின்ற திருக்காவணம் முன்னுயது, எனமேற்செய்யு ளிறுதிவினையோடு முடிக்க.

---

* தேவாசிரியனென்பது - ஆயிரக்கால்மண்டபம்.

அரந்தைதீர்க்கு மடியவர் மேனிமேல்
நிரந்தநீற்றொளி யானிறை தூய்மையாற்
புரந்தவஞ்செழுத் தோசை பொலிதலாற்
பரந்தவாயிரம் பாற்கடல் போல்வது.

(இ-ள்.) அரந்தை தீர்க்கு மடியவர் மேனிமேல் = (அத்தேவாசிரிய மண்டபமானது) துன்பத்தை நீக்கிய அடியார்கள் திருமேனியில்; நிரந்த நீற்றொளியால் = நிரவப்பூசிய விபூதியின் ஒளியாலும்; நிறை தூய்மையால் = நிறைந்த தூய்மையாலும்; புரந்த வஞ்செழுத்தோசை பொலிதலால் = (தன்னை உச்சரிக்கின்ற வர்களைக்) காப்பாற்றுதற்குரிய திருவைந்தெழுத்தின் ஒலியானது பொலிந்து தோன்றுதலினாலும்; பரந்த வாயிரம் பாற்கடல் போல்வது = பரம்பிய ஆயிரம் பாற்கடலை யொத்தது.—எ-று. (௩)

அகிலகாரணர் தாள்பணி வார்கடாம்
அகிலலோகமு மாடற் குரியரென்
றகிலலோகத்து ளார்க ளடைதலின்
அகிலலோகமும் போல்வ ததனிடை.

(இ-ள்.) அகில காரணர் தாள்பணி வார்கள் = எப்பொருட்குந் தான் காரணராக இருக்கின்றவீதிவிடங்கரது திருவடியைத் தொழுகின்றவர்கள்; தாம் அகிலலோகமு மாள்தற்குரியரென்று = தாம் எல்லா உலகங்களையும் ஆளுதற்குரியராவரென்று; அகில லோகத்துளார்க ளடைதலின் = எல்லா உலகின்கண்ணும் வாழுந்தேவர் முனிவர் முதலிய யாவரும் அங்குவந்து வசித்தலால்; அகில லோகமும்போல்வ ததனிடை = எல்லா உலகத்தையும் ஒத்திருந்தது அம்மண்டபத்தின் நடு இடம்.—எ-று. (௪)

அத்தர்வேண்டிமுன் னாண்டவ ரன்பினான்
மெய்த்தழைத்து விதிர்ப்புறு சிந்தையார்
கைத்திருத்தொண்டு செய்கடப் பாட்டினார்
இத்திறத்தவ ரன்றியு மெண்ணிலார்.

(இ-ள்.) அத்தர்வேண்டிமுன் னாண்டவர் = உலகிற்குப்பிதாவாயும் தம்மைவிரும்பி முன்னே அடிமைகொண்டவருமாகிய சிவபிரானிடத்து; அன்பினால் மெய்த்தழைத்து விதிர்ப்புறுசிந்தையார் = அன்புகாரணமாய்விரும்பி அழைத்துத் திருமேனி விதிர்ப்புறுகின்ற சிந்தையையுடையவரும்; கைத்திருத்தொண்டு செய்கடப்பாட்டினார் = தம்முடைய திருக்கரங்களாற் செய்யுந் திருத்தொண்டுகளைச் செய்தலே கடனாகக்கொண்டவரும் ஆகிய; இத்திறத்தவரன்றியுமெண்ணிலார் = இவ்வாறான பத்தியுடையவர்களேயன்றியும் வேறுவகையால் அன்புபூண்டொழுகும் அடியார்களும் (அம்மண்டபத்தில்) அநேகருளர்.—எ-று. (௫)

அன்பினால் மெய்த்தழைத்தலாவது:—ஆன்கன்றுதாயைநாடி அழைத்தல் போலஅன்போடு திருநாமங்களைக்கூறி அழைத்தல். விதிர்ப்புறுதலாவது:—அவ்



தேவாசிரியமண்டபம்.

வாறு அழைக்குங்கால் உரோமம்முகிழ்த்து உடம்புசிறிதுகம்பித்தல், இவ்விரண்டும் வாக்கினிடத்தும் மெய்யினிடத்தும் உள்ளனவேனும் சிந்தைவழித்தாய் நிற்றலிற் சிந்தையார் என்ருர் கைத்திருத்தொண்டு:—திருவிளக்கு, திருப்பள்ளித்தாமம் அமைத்தல்முதலியன. கைத்தொண்டுசெய்தல் கற்புடையாளுக்குக் கணவன்மாட்டுச் செய்பணியேயன்றிப் பிறிதொன்றும் பொருளாகாமைபோல் தம்மையாண்ட முதல்வன்மாட்டுடையர் என்பதுதோன்றக் கடப்பாட்டினர் என்ருர். செபம், தவம், தியானம், விரதம் முதலிய சீலங்களினும் தியானயோகம் முதலிய நெறிகளினும் நிற்போரும் அடங்க எண்ணிலார் என்ருர். அவர்கள் இத்தன்மையரென மேற்கூறுகின்ருர்.

மாசிலாத மணிதிகழ் மேனிமேற்
பூசுநீறுபோ லுள்ளும் புனிதர்கள்
தேசினுலெத் திசையும் விளக்கினர்
பேசவொண்ணுப் பெருமை பிறங்கினர்.

(இ-ள்.) மாசிலாத மணிதிகழ் மேனிமேல் = (அவர்கள்) குற்றமில்லாத உருத்திராக்க மணிவிளங்குகின்ற திருமேனியினிடத்து; பூசும் மாசிலாதநீறுபோல்=பூசுகின்ற குற்றமில்லாத விபூதிபோல; உள்ளும் புனிதர்கள் = தமதுள்ளத்துந் தூய்மையுடையவர்கள்; தேசினுலெத் திசையும்விளக்கினர்=தமதுஞானப் பிரகாசத்தால் எத்திக்குகளையும் விளக்குகின்றவர்கள் (அதனுல்); பேசவொண்ணுப் பெருமை பிறங்கினர்=யாவரும் இவ்வியல்பினரென எடுத்தோதுதற்கரிய பெருமையால் விளங்கினர்.—எ-று. (சு)

உள்ளும் என்பதில் உம்மை எதிரதுதழீஇய எச்சம். திசையும் என்பதில் உம்மை முற்றும்மை.

சிவபிரான் திருக்கண்ணில் நின்றும் உதித்த கண்ணீரில் தோன்றிய தூய்மை பற்றியும் பாவத்தைப்போக்கும் இயல்பு குறித்தும் உருத்திராக்க மணியை மாசிலாதமணி என்ருர். தூய இடத்துதித்துப் பாவத்தைப் போக்குதல் திருநீற்றிற்கு முண்மையின் மாசிலா என்னும் அடை அதற்குங் கூட்டப்பட்டது. உவமேயத்திற்கு உவமை சிறப்பு மிகுதி தோன்றப்பூசுநீறுபோல் என்ருர். உள்ளத்திற்குப் புனிதமாவது:—அவா, வெகுளி, மயக்கம், முதலியகுணமில்லாமை. தேசினுலெத்திசையும்விளக்கலாவது:—இவர்சிவஞானச்செல்வர், இவர்பத்திவிசிட்டர், என எத்திக்கினுமுள்ளாருள்ளத்தும் தம்மியல்பு விளங்கநிற்றல். பேச ஒண்ணுப் பெருமையாவது:—தம்பத்திஞானங்களி னியல்பு வரையறுக்கப்படாமை.

பூதமைந்து நிலையிற் கலங்கினும்
மாதொர்பாகர் மலர்த்தாண் மறப்பிலார்
ஓதுகாத லுறைப்பி னெறிநின்ருர்
கோதிலாத குணப்பெருங் குன்றனுர்.

(இ-ள்.) பூதமைந்தும் = (அவர்கள்) ஐம்பூதங்களும்; நிலையிற் கலங்கினும்=தத்தம் நிலையினின்று ஒடுங்குங்காலும்; மாதொர் பாகர் மலர்த்தாள் மறப்

பிலார் = சிவபிரானரது தாமரை மலர்போலுந் திருவடிகளை மறத்தலில்லாத வர்கள்; ஓதுகாதலுறைப்பி னெறிநின்றார் = எடுத்தோதுதற்குரிய பத்தியுறைப் பின் வழியில் நிலைபெற்றவர் (அதனால்); கோதிலாத குணப்பெருங் குன்றனார்= குற்றமற்ற குணங்களால் பெரியமலையை ஒத்தவர்கள்.—எ-று. ஐந்தும் என் பதில் உம்மை முற்றும்மை. (எ)

பூதமைந்தும் நிலையிற் கலங்கலாவது:—மகாப்பிரளயத்துத் சத்தங்கார ணமாகிய தன்மாத்திரைகளில் ஒடுங்குதல். எப்பொருளும் நிலைகலங்குதற்குரிய அப்பிரளயத்துந் தந்நிலைகலங்காதவ ரென்பதைச் சிறப்பித்து நிற்றலில், உம்மை சிறப்பும்மை, காதலுறைப்பின் நெறிநிற்றலாவது:—பத்திவழுவாச் சமநிலையில் நிற்றல், சமநிலைசலியாமனிற்கும் நிலை, அதாவதுபிறர் தம்முடம்பை வலிந்துவரு த்தினும், சந்தனம் மாலைமுதலியன புனைந்து உபசரிக்கினும், தந்நிலைமைகுன்று மை இச்சலியாமையாகிய சமநிலை மேற்கூறும் அறுபத்துமூன்று நாயன்மாரிட த்தும் பத்தியுறைத்துநின்ற சரிதங்கள் வருமிடத்து ஆங்காங்கு குறித்துணர்க பத்திஞானங்களின் சலியாமையும் பெருமையும் தோன்ற குணப்பெருங் குன் றன்னார் என்றார்.

> கேடுமாக்கமுங் கெட்ட திருவினார்
> ஓடுஞ்செம்பொனு மொக்கவே நோக்குவார்
> கூடுமன்பினிற் கும்பிட லேயன்றி
> வீடும்வேண்டா விறலின் விளங்கினார்.

(இ-ள்.) கேடுமாக்கமுங் கெட்டதிருவினார் = தமக்கொருபொருளிழத் தலால்வருங்கேடும் வளர்தலால் வருமாக்கமு மில்லாமையாகிய செல்வத்தை யுடையவர்கள்; ஓடுஞ்செம்பொனு மொக்கவே நோக்குவார்=ஓட்டையும் பொ ன்னையும் ஒருங்குநோக்கும் இயல்புடையவர்கள்; கூடுமன்பினிற் கும்பிடலே யன்றி = தம்மிடத்துதிக்கின்ற அன்புகாரணமாய்ச் சிவபிரானை வணங்குதலே யன்றி; வீடும்வேண்டா விறலின்விளங்கினார்=மோட்சத்தையும் விரும்பாத பத் திவலியால் விளங்குகின்றவர்கள்.—எ-று. (அ)

ஒன்றின்கண் விழைவுள்வழி அதாக்கமாயும் அதுகெட்டவழிகேடாயுந் தோன்றும், அது அவிச்சையுள் வழித்தோன்றும் போத்திரித்துவமாம், அவ்வவிச் சை அவர்க்கின்மையின் ஓர்பொருளை விழைந்து ஆக்கமாக்கலும், அதனிழப்பை க்கேடாக்கலும் ஆகிய இவ்விரண்டையும் நீக்கித்தாங்கொண்ட சமநிலையென்னும் அநன்னியபத்தியையே அழியாத்திருவாகக் கொண்டமையின் கேடுமாக்கமுங் கெட்டதிருவினார் என்றார். அவ்வாறுணர்வார்க்கு ஆக்கப்பொருளும் ஆக்கமில் பொருளும் வேறறச்சமமாய்த் தோன்றுதலில், ஓடுஞ்செம்பொனு மொக்கவே நோக்குவாரென்றார். முதல்வனைத்தாம் தம்மியல்பால் உதித்த அன்புகாரணமாய் வழிபடுதலேயன்றி வீட்டையேனும் பயனாகக்கருதி வழிபடில் அதுபயன்குறித் ததாம் ஆதலின் வீடும் வேண்டா என்றார். இம்மை மறுமைகளாகிய இவ்விரண் டற்கும் மேலாய் நித்தியமாயிருக்கு மியல்புடையதென அதனைச் சிறப்பித்து நிற் றலில் உம்மை சிறப்பும்மை.

ஆரங்கண்டிகை யாடையுங் கந்தையே
பாரமீசன் பணியல தொன்றிலார்
ஈரவன்பினர் யாதுங் குறைவிலார்
வீரமென்னால் விளம்புந் தகையதோ

(இ-ள்.) ஆரங்கண்டிகை=தாம்தரித்தற்குரிய ஆரமாவது உருத்திராக்கக்கண்டிகையேயாம்; ஆடையுங்கந்தையே=உடுத்தற்குரிய உடையுங்கந்தையேயாம்; பாரமீசன் பணியலதொன்றிலார்=தாம்செய்யத்தக்கது சிவபிரானது திருத்தொண்டேயன்றி வேறொன்றில்லாதவர்கள்; ஈரவன்பினர்=தண்ணென்னுங் குணத்தோடுகூடிய அன்புடையவர்கள்; யாதுங்குறைவிலார் = எப்பொருள்களாலுங் குறைவில்லாதவர்கள்; வீரமென்னால் விளம்புந்தகையதோ = அத்தன்மையரான அவ்வடியார்களது பத்திவலியானது என்னால் அளவுபடுத்திக்கூறுந் தகைமையுடையதன்று.—எ-று. (க)

பதக்கம் முத்துமாலைமுதலிய அணிகளை விரும்பாது முத்திசாதனமான கண்டிகையையே விரும்பியணிவாரென்பது தோன்ற ஆரங்கண்டிகை என்றும், பிற உடைகளில் விருப்பில்லார் என்பது விளக்க ஆடைகந்தை என்றும், பிற தொழில் எத்தொழிலுஞ் செய்யாரென்பது தோன்றப் பாரமீசன்பணியலதொன்றிலார் என்றும், உள்ளங்கனிந்துநிற்கும் அன்பினியல்புதோன்ற ஈர அன்பினர் என்றும், எப்பொருளினும் அவாவின்மையுடையராய்க்கிடைத்த அளவில் இன்பமெய்துதலில் யாதுங் குறைவிலாரென்றுங்கூறினர்.

வேண்டமாறு விருப்புறும் வேடத்தர்
தாண்டவப்பெரு மான்றனித் தொண்டர்க
ணீண்டதொல்புக ழார்தந் நிலைமையை
ஈண்டுவாழ்த்துகே னென்னறிந் தேத்துகேன்.

(இ-ள்.) வேண்டமாறு விருப்புறும்வேடத்தர் = அடியார்பொருட்டுப் பலவேடங்கொண்டருளும்; தாண்டவப்பெரு மான்றனித்தொண்டர்கள்=தியாகப்பிரானது ஒப்பற்றதொண்டர்களாகிய; நீண்ட தொல்புகழார் தந்நிலைமையை=நீட்டித்த பழமையான புகழுடையார்களது தன்மையை; ஈண்டுவாழ்த்துகேனென்னறிந்தேத்துகேன்=இவ்விடத்துத் துதிக்கின்ற யான் அவர் பெருமையை எவ்வாறறிந்து துதிப்பேன்.—எ - று. வாழ்த்துகேனென்னறிந்தேத்துகேனென இயையும். என்னாலறிந்து வரையறுத்தல் கூடாதென்பது குறிப்பெச்சம்.

வேண்டமாறு விருப்புறும் வேடத்தராதல், 'பலபலவேடமாகும் பரநாரிபாகன்' என்னுந் திருக்கடைக்காப்பானுணர்க. வேண்டமாறு விருப்புறும் வேடத்தர் என்பதற்குத் தாம் விரும்பிய அறநெறிக்கேற்ற திருவேடத்தையுடையவர்கள். என்று அடியார்களுக்கு விசேடணமாக்குவாரும் உளர். அவ்வேடமாவது:—சிவயோகிக்குக்கூறிய, கவசம், கண்டிகை, முண்டனம், திருவெண்ணீறும், விரத்தர்க்குக்கூறிய திருவெண்ணீறு, சடை, முதலியனவுங்கொள்க.

இந்தமாதவர் கூட்டத்தை யெம்பிரான்
அந்தமில்புக ழாலால சுந்தரன்
சுந்தரத்திருத் தொண்டத் தொகைத்தமிழ்
வந்துபாடியு வண்ண முரைசெய்வாம்.

(இ-ள்.) இந்தமாதவர்கூட்டத்தை = இவ்வாறான பெருமையுடைத்தாகிய அடியார்களது திருக்கூட்டத்தை; எம்பிரான்அந்தமில்புகழ் ஆலாலசுந்தரன் = எமது முதல்வராகிய அளவுபடாப் புகழுடைய ஆலாலசுந்தரரானவர்; சுந்தரத்திருத்தொண்டத் தொகைத்தமிழ் = அழகிய திருத்தொண்டத்தொகையென்னுந் தமிழ்ப்பதிகத்தை; வந்துபாடிய வண்ணம்உரைசெய்வாம் = திருக்கைலையினின்றுந் திருநாவலூரி லவதரித்துப் பாடியருளிய வகைமையைச் சொல்லத்தொடங்குவாம்.—எ-று. (கக)

திருக்கூட்டச்சிறப்பு முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-கடுசு.

---

## தடுத்தாட்கொண்டபுராணம்.

வேறு.

கங்கையு மதியும்பாம்புங் கடுக்கையு முடிமேல்வைத்த
அங்கண ரோலைகாட்டி யாண்டவர் தமக்குநாடு
மங்கையர் வதனசீத மதியிரு மருங்குமோடிச்
செங்கயல் குழைகளுடுந் திருமுனைப் பாடிநாடு.

(இ-ள்.) கங்கையும்மதியும்பாம்பும் = கங்காநதியினையும் இளம்பிறையையும் பாம்பையும்; கடுக்கையும் முடிமேல்வைத்த அங்கணர் = கொன்றைப்பூமாலையையுந் திருமுடியின்மேல் சூட்டாகவைத்த சிவபிரான்; ஓலைகாட்டி யாண்டவர்தமக்குநாடு = ஆவணஓலையைக்காட்டி அடிமைகொண்ட நம்பியாரூரருக்கு நாடாவது (யாதெனில்); மங்கையர்வதனசீதமதி = மகளிர்களுடைய முகமாகிய குளிர்ந்த சந்திரனுடைய; இருமருங்குஞ்செங்கயலோடி = இருபக்கத்தும் அவர்கண்களாகிய கயல்மீன்கள் தாவி; குழைகளுடும் = அவர்காதுகளை அடையும்; திருமுனைப்பாடிநாடு = திருமுனைப்பாடி நாடாம்.—எ-று. (க)

பெருகிய வளத்தான்மிக்க பெருந்திரு நாடுதன்னில்
அருமறைச் சைவமோங்க வருளினு லவதரித்த
மருவிய தவத்தான்மிக்க வளம்பதி வாய்மைகுன்றுத்
திருமறை யவர்களீடுந் திருநாவ லூராமன்றே.

(இ-ள்.) பெருகிய வளத்தால்மிக்க பெருந்திருநாடுதன்னில் = நிறைந்த பலவளங்களால் மேம்பட்ட பெரிய அத்திருமுனைப்பாடிநாட்டில்; அருமறைச் சைவம் ஓங்க = அருமையாகிய வேதத்தின் சாரமான சைவசமயம் விருத்தியடைய; அருளினுலவதரித்த = சிவபிரான் திருவருளினுல் (ஆலாலசுந்தரர்)அவதரித்த

ற்கிடமான; மருவியதவத்தால் மிக்கவளம்பதி=மேன்மைபொருந்திய தவத்தாற் சிறந்த வளத்தையுடைய ஊரானது (யாதெனில்); வாய்மைகுன்றாத் திருமறைய வர்கள்=மெய்ந்நெறியினின்றும் வழுவாத மறையவர்கள்; நீடுந்திருநாவலூராம்= மிக்கிருக்குந் திருநாவலூரென்று சொல்லப்படும்.—எ-று. அன்று-ஏ-அசை. (உ)

வேதம் எல்லாநூலுக்கும் முதன்மையுடையதென்பதும் சைவம் அதிற் கூறப்படும் மதங்கட்கெல்லாஞ் சிறந்த வேதசாரம் என்பதுந் தோன்ற அரும றைச் சைவம் என்றார். அருமறைச்சைவம் என்புழி அருமறையினது சாரமாகிய சைவம் என விரியும்.

மாதொரு பாகனார்க்கு வழிவழி யடிமைசெய்யும்
வேதியர் குலத்துட்டோன்றி மேம்படு சடையனாருக்
கேதமில் கற்பின்வாழ்க்கை மனையிசை ஞானியார்பாற்
றீதகன் றுலகமுய்யத் திருவவ தாரஞ்செய்தார்.

(இ-ள்.) மாதொருபாகனார்க்கு=உமாதேவியை ஒருபாகமாகக்கொண்ட சிவபிரானுக்கு; வழிவழி அடிமைசெய்யும்=பாரம்பரியத்தில் அகத்தடிமைசெய் தொழுகும்; வேதியர் குலத்துட்டோன்றி = ஆதிசைவ மறையவர் குலத்திலுதி த்து; மேம்படுசடையனாருக்கு = மேம்பட்ட சடையனாரென்னுஞ் சிவமறை யவருக்கு; ஏதமில்கற்பின்வாழ்க்கைமனை = குற்றமற்றகற்பினையுடைய இல்வா ழ்க்கைநிலைக்குரிய மனையாளாகிய; இசைஞானியார்பால்=இசைஞானியார் திரு வயிற்றில்; உலகந்தீதகன்றுய்ய=உலகத்தார் தீநெறியினின்றும் நீங்கி நன்னெ றியை அடைய; திரு அவதாரஞ் செய்தார்=ஓர் புத்திரர் திருவவதாரஞ் செய் தருளினார்.—எ-று. (௩)

சைவாகமங்கள்கூறும் நித்திய பூசை முதலிய அகம்படித் தொண்டை இம்மறையவர்களே செய்தற்குரியார் என்பது தோன்ற, வழிவழி யடிமைசெய் யும் வேதியர்குலம் என்றும், அறத்தின் வழுவாதகற்பின் நிலைமைதோன்ற, ஏத மில்கற்பின் வாழ்க்கைமனை என்றும், புறச்சமயங்களாகிய தீநெறியில் நீங்கி நன்னெறியாகிய சைவத்தை அடைந்து உலகம் உய்ய ஆலாலசுந்தரர் அவதரி த்தலில், தீதகன்றுலகம் உய்ய என்றுங்கூறினர்.

தம்பிரா னருளினாலே தவத்தினான் மிக்கார்பெற்று
நம்பியா ரூரரென்றே நாமமுஞ் சாற்றிமிக்க
ஐம்படைச் சதங்கைசாத்தி யணிமணிச் சுட்டிசாத்திச்
செம்பொனா ணரையின்மின்னத் தெருவிற்றே ருருட்டுநாளில்.

(இ-ள்.) தம்பிரானருளினாலே = சிவபிரான் திருவருளினாலே; தவத்தி னான் மிக்கார்பெற்று=தவங்காரணமாய் மேன்மையடைந்த முதியோர்கள் ஒருங் குசேர்ந்து; நம்பியாரூரரென்று நாமமுஞ்சாற்றி=அப்புத்திரருக்கு நம்பியாரூர ரென்று திருநாமத்தையுங்கூறி; மிக்கஐம்படைச் சதங்கைசாத்தி=மேன்மைமிக்க பஞ்சாயுதத்தையும் சதங்கையையும் முறையே மார்பிலும் காலிலும் தரித்து; அணிமணிச்சுட்டிசாத்தி=அழகிய இரத்தினச்சுட்டியை நெற்றியிற்றாழச் சிரசி

லணிந்து ; செம்பொனுணரையின்மின்ன = சிவந்த பொன்னரைஞாணனது இடையில் விளங்க ; தெருவிற்றேருருட்டுநாளில்=வீதியிற் சிறுதேருருட்டி விளையாடுநாளில் (ஓர்நாள்).—எ-று. (ச)

ஐம்படையாவது:—திருமாலினது பஞ்சாயுதங்களின் வடிவாய்ச்செய்து சிறுவர்கட்கு மார்பிற்கோத்தணியும் ஓராபரணம். அது "ஐம்படையின்பூட்டார மார்பிற் சிறிய மறைப்புதல்வன்" எனத் திருநின்ற சருக்கத் திறுதியில் இந்நூலாசிரியர் கூறியவாற்றானும், "ஐம்படை மார்பிற்காணேன்" எனத் திருவிளையாடலிற்கூறிய வாற்றானுமுணர்க. ஐம்படை சதங்கை எனப்பாடம் ஓதுவாருமுளர். ஐம்படைச்சதங்கை, உம்மைத்தொகை. ஐம்படையும் சதங்கையும் எனவிரியும்.

நரசிங்க முனையரென்னு நாடுவா ழரசர்கண்டு
பரவருங் காதல்கூரப் பயந்தவர் தம்பாற்சென்று
விரவிய நண்பினாலே வேண்டினர் பெற்றுத்தங்கள்
அரசிளங் குமரர்க்கேற்ப வன்பினான் மகன்மைகொண்டார்.

(இ-ள்.) நரசிங்கமுனையரென்னும் நாடுவாழரசர்கண்டு = அந்நாட்டில் அரசாட்சிசெய்து வாழ்கின்ற நரசிங்கமுனையரென்னும் அரசர் அந்நம்பியாரூரரைப்பார்த்து; பரவருங்காதல்கூர = எடுத்துச்சொல்லக்கூடாத ஆசை மிகுதியால் ; பயந்தவர்தம்பாற்சென்று=அவர் தந்தையாகிய சடையனாரிடத்திற்போய் ; விரவியநண்பினாலே வேண்டினர்பெற்று=தனக்கு, அவரிடத்து முன்னுண்டாயிருந்த சிநேகத்தின் மிகுதியால் (அந்நம்பியாரூரரைப் புத்திரராகக்கொடுக்கக்) கேட்டுப் பெற்றுக்கொண்டு ; தங்களரசிளங்குமரர்க்கேற்ப=தங்கள் வம்சத்திற்பிறந்த இளமையாகிய அரசகுமாரர்க்கு இசைய; அன்பினான்மகன்மைகொண்டார்=அன்போடு மகனாகக்கொண்டார்.—எ-று. (ரு)

பெருமைசா லரசர்காதற் பிள்ளையாய்ப் பின்னுந்தங்கள்
வருமுறை மரபின்வைகி வளர்ந்துமங் கலஞ்செய்கோலத்
தருமறை முந்நூல்சாத்தி யளவில்றொல் கலைகளாய்ந்து
திருமலி சிறப்பினோங்கிச் சீர்மணப் பருவஞ்சேர்ந்தார்.

(இ-ள்.) பெருமைசாலரசர்காதற் பிள்ளையாய்=பெருமைமிக்க நரசிங்கமுனையரது அபிமான புத்திரராய்; பின்னுந்தங்கள் மரபின் வருமுறை வைகி வளர்ந்து=அதன்பின்னுந் தம்முடைய சாதியில் அநுட்டிக்கும் ஒழுக்கத்தின்படி தாமும் அநுட்டித்து வளர்ந்து ; மங்கலஞ்செய்கோலத் தருமறைமுந்நூல் சாத்தி = உபநயனஞ்செய்யும் பருவத்து மங்கலகரமான கோலத்தோடு அரிய மறை விதிப்படி பூணூல்சாத்தப்பட்டு ; அளவில்தொல் கலைகளாய்ந்து=அதன் பின் அங்கமும் வேதமும் ஆய எண்ணிறந்த நூல்களை ஆராய்ந்து; திருமலி சிறப்பினோங்கி=செல்வ மிகுதியினாலாய சிறப்பால் வளர்ச்சி யடைந்து ; சீர்மணப் பருவஞ் சேர்ந்தார்=சிறப்பினை யுடைய திருமணப் பருவமடைந்தார்.—எ-று.()

தங்கள் வருமுறை மரபின் வைகலாவது:—தஞ்சுற்றத்தாராகிய பரிசனங்கள்கொடுக்க உண்ணுதலே யன்றிப் பிறரிடத்துப் புசியாமை முதலியன.

தந்தையார் சடையனார்தந் தனித்திரு மகற்குச்சைவ
அந்தணர் குலத்துட்டங்க ளரும்பெரு மரபுக்கேற்ப
வந்ததோர் சிறப்பிற்புத்தூர்ச் சடங்கவி மறையோன்றன்பாற்
செந்திரு வனையகன்னி மணத்திறஞ் செப்பிவிட்டார்.

(இ-ள்.) தந்தையார் சடையனார் = தந்தையாராகிய சடைய நாயனார்; தந்தனித்திருமகற்கு=தம்முடைய ஒப்பற்ற புத்திரனுக்கு; சைவஅந்தணர் குலத்துள்=ஆதிசைவ மறையவர் குலத்தில்; தங்களரும் பெருமரபுக்கேற்ப வந்ததோர் சிறப்பில் = தமது அரிய பெருமையுடைத்தாகிய கோத்திரத்திற்குப் பொருந்த வந்த சிறப்பினையுடைய; புத்தூர்ச்சடங்கவி மறையோன் றன்பால்=புத்தூரில் வாழும் சடங்கவி சிவாசாரியரிடத்து; செந்திரு வனையகன்னி=இலக்குமிக் கொப்பான அவர்கன்னிகையை; மணத்திறஞ் செப்பி விட்டார்=திருமணஞ் செய்தற்குக் கேட்டனுப்பினார்.—எ-று. (எ)

"அரும்பெருமரபுக்கேற்பவந்த" என்றதனால் தம்போல் ஒழுக்கத்தானும் செல்வம்முதலியவற்றானும் உயர்ந்தகுலத்திற் சிறந்தார் என்பதும், விவாகஞ்செய்தற்குரிய கோத்திரமுடையரென்பதும் பெற்றாம்.

குலமுத லறிவின்மிக்கார் கோத்திர முறையுந்தேர்ந்தார்
நலமிகு முதியோர்சொல்லச் சடங்கவி நன்மையேற்று
மலர்தரு முகத்தனாகி மணம்புரி செயலின்வாய்மை
பலவுடன் பேசியொத்த பண்பினா லன்புநேர்ந்தான்.

(இ-ள்.) குலமுதலறிவின்மிக்கார் = இவர் இன்னகுலத்தினரென்றுணரும் பாரம்பரிய உணர்வின்மிக்கவரும்; கோத்திரமுறையுந்தேர்ந்தார்=கோத்திரங்களின் வரலாற்றையும் நன்குணர்ந்தவரும் (ஆகிய); நலமிகுமுதியோர்சொல்ல=நன்மைமிக்க தமது சுற்றத்தாருள் முதுமையுடைய மறையவர்சொல்ல; சடங்கவிநன்மையேற்று=சடங்கவிசிவாசாரியர் அம்மகட்கொடையை நன்மையென்று அங்கீகரித்து; மலர்தருமுகத்தனாகி=மகிழ்ச்சியால் மலர்ந்தமுகமுடையவராய்; மணம்புரிசெயலின்வாய்மை பலவுடன்பேசி=விவாகஞ்செய்தற்குரிய முறைமை பலவற்றையும் ஒருங்குபேசிமுடித்து; ஒத்தபண்பினாலன்பு நேர்ந்தான்=மனமொருப்பட்ட குணத்தால் நம்பியாரூரருக்குத் தன்புதல்வியை அன்போடுகொடுக்க உடன்பட்டார்.—எ-று. (அ)

குலமாவது:—ஒழுக்கத்தாற் சிறந்துவரு மியல்புடைமை. முதல் என்றதனால் செல்வங் கல்விகளாலாய சிறப்புங்கொள்ளப்படும். சிவமறையோர்க்குரிய கோத்திரங்களாவன:—கௌசிகர், காசிபர், பரத்துவாசர், கௌதமர், அகத்தியர், என்னும் ஐந்துசைவ இருடிகளின் கோத்திரமும் அக்கோத்திரம் ஒவ்வொன்றிற்றோன்றிய கிளைக்கோத்திரங்களுமாம். வருணமுடையரேனும் அதற்கேற்ற ஒழுக்கம் பிறழ்ந்தனரேல் அவ்வருணத்தை இழிவுபடுத்தும் ஆதலிற் குலமுதலறிவின் மிக்காரென்றும், ஐந்து சைவ இருடிகளின் கோத்திரங்களும் அவரது கிளைக் கோத்திரங்களும் ஒத்த பிரவரமாயில் விவாகஞ்செய்தல் கூடாமையின் கோத்திர

முறையுந் தேர்ந்தாரென்றுங் கூறினர். மணம்புரிசெயலின் வாய்மையாவது:—பொருத்தம், நன்னிமித்தம், முதலியன ஒத்திருத்தல்.

மற்றவ னிசைந்தவார்த்தை கேட்டவர் வள்ளறன்னைப்
பெற்றவர் தம்பாற்சென்று சொன்னபின் பெருகுசிந்தை
யுற்றதோர் மகிழ்ச்சியெய்தி மணவினை யுவந்துசாற்றிக்
கொற்றவர் திருவுக்கேற்பக் குறித்தநா ளோலைவிட்டார்.

(இ-ள்.) மற்றவனிசைந்த வார்த்தைகேட்டவர்=சடங்கவி சிவாசாரியர் மகட்கொடுக்க உடன்பட்டுக்கூறிய வார்த்தையைக் கேட்டவர்கள்; வள்ளல்தன்னைப் பெற்றவர்தம்பாற்சென்று சொன்னபின் = நம்பியாரூரரைப்பெற்ற தந்தையாராகிய சடையனரிடத்திற்போய்ச் சொன்னபின்பு; பெருகுசிந்தை யுற்றதோர்மகிழ்ச்சியெய்தி=முன்னமே மகிழ்ச்சிமீக்கூரும் மனதின்கண் பின்னும் உதித்த ஒப்பற்றமகிழ்ச்சியை அடைந்து; மணவினை யுவந்துசாற்றி=மணச்செயலை விரும்பிச் சுற்றத்தாருடன்கூறி; கொற்றவர் திருவுக்கேற்ப=அரசர் செல்வத்திற்கிசைய; குறித்தநா ளோலைவிட்டார் = முகூர்த்தநாளை நிச்சயித்துத் திருமண ஓலையை அனுப்பினர்:—எ-று. (க)

கொற்றவர் திருவுக்கேற்ப என்றது, நரசிங்கமுனையர் செல்வத்திற்கிசையமிக்கவிமரிசையாய் மங்கலங்கோடலை.

மங்கலம் பொலியச்செய்த மணவினை யோலையேந்தி
யங்கயற் கண்ணினரு மாடவர் பலருமீண்டிக்
கொங்கலர்ச் சோலைமூதூர் குறுகின ரெதிரேவந்து
பங்கய வதனிமாரு மைந்தரும் பணிந்துகொண்டார்.

(இ-ள்.) மங்கலம் பொலியச்செய்த = மங்கலமானது மிகும்படிஎழுதிய; மணவினை யோலையேந்தி=கலியாணஓலையை எடுத்துக்கொண்டு; அங்கயற் கண்ணினரும்=அழகியகயல்போலுங் கண்ணையுடையமகளிரும்; ஆடவர்பலருமீண்டி=பலஆடவர்களும் ஒருங்குகூடி; கொங்கலர்ச்சோலைமூதூர் குறுகினர்=வாசனையுடைத்தாகிய மலர்களையுடைய சோலைசூழ்ந்த புத்தூருக்குச் சென்றார்கள்; எதிரேவந்து பங்கயவதனிமாரும் மைந்தரும் பணிந்துகொண்டார்=(அத்திருமுகத்தை) எதிர்கொண்டுவந்து (சடங்கவிசிவாசாரியரது பந்துக்களான) தாமரைமலர்போலும் முகத்தையுடைய பெண்களும் ஆடவர்களும் வணங்கி வாங்கிக்கொண்டார்கள்.—எ-று. (கo)

மங்கலம் பொலியச்செய்தல், வாத்தியங்களொலிக்கப் பொற்பாத்திரத்தில் வைத்துப் பூம்பட்டால் மூடிமஞ்சட்பூசுதல்முதலியன.

மகிழ்ச்சியான் மணமீக்கூறி மங்கல வினைகளெல்லாம்
புகழ்ச்சியாற் பொலிந்துதோன்றப் போற்றிய தொழிலராகி
யிகழ்ச்சியொன் றுனுமின்றி யேந்துபூ மாலைப்பந்தர்
நிகழ்ச்சியின் மைந்தரீண்டி நீண்முளை சாத்தினர்கள்.

(இ-ள்.) மகிழ்ச்சியான்மணமீக்கூறி = மகிழ்ச்சிகாரணமாய் விவாகத்தையாவரும் அறிய எடுத்துக்கூறி; மங்கலவினைகளெல்லாம் புகழ்ச்சியாற்பொலிந்துதோன்ற = மங்கலத்தொழில்களெல்லாம் புகழ்ச்சியோடு பொலிந்துவிளங்க; போற்றியதொழிலராகி = பேணுகின்ற தொழிலையுடையவர்களாய்; இகழ்ச்சி யொன்றுனுமின்றி = ஒன்றுலுங்குறைவின்றி; ஏந்துபூமாலைப்பந்தர்=தூக்கிய பூமாலைகளையுடைய பந்தலினிடத்து; நிகழ்ச்சியின்மைந்தரீண்டி நீண்முளைசாத்தினுர்கள் = மனக்கிளர்ச்சியோடு மறையவர்களெல்லாரும் ஒருங்குகூடி முளைகளுண்டாகும்படி அங்குரார்ப்பணஞ்செய்தார்கள்.—எ-று. (கக)

அங்குரார்ப்பணமாவது - மங்கலங்களுக்குத் தொடக்கமாகச் சந்திரனை அதிதெய்வமாக வைத்த கும்பத்தினருகில் பாலிற்கலந்த நவதானியங்களை மந்திரத்தோடுபாலிகைகளிடத்திற் பெய்து மண்ணிட்டுவளர்த்தல்.

மணவினைக் கமைந்தசெய்கை மாதினைப் பயந்தார்செய்யத்
துணர்மலர்க் கோதைத்தாமச் சுரும்பணை தோளினுரைப்
புணர்மணத் திருநாண்முன்னுட் பொருந்திய விதியினுலே
பணைமுர சியம்பவாழ்த்திப் பைம்பொனுண் காப்புச்சேர்த்தார்.

(இ-ள்.) மணவினைக்கமைந்தசெய்கை=(இவ்வாறு) விவாகச்சடங்கிற்கு அமைந்தசெயல்களை; மாதினைப்பயந்தார்செய்ய=சடங்கவிசிவாசாரியரும் அவர் சுற்றத்தாருஞ் செய்ய; சுரும்பணைதுணர் மலர்க்கோதைத்தாமத்தோளினுரை= வண்டுகள்விழுகின்ற கொத்தாக அலர்ந்தமலர்களால் கட்டப்பட்ட கோதையென்னும் மாலையையணிந்த தோளையுடைய நம்பியாரூரரை; புணர்மணத்திருநாண் முன்னுள்=மணஞ்செய்கின்ற திருநாளுக்குமுன்னுளில்; பொருந்தியவிதியினுலே=அறநூலுக்கிசைந்த விதிப்படி; பணைமுரசியம்பவாழ்த்தி = பருத்தமுரசவாத்தியம் ஒலிக்கும்படி வாழ்த்துதல்செய்து;பைம்பொனுண்காப்புச்சேர்த்தார்= சமாவர்த்தனஞ்செய்து விவாகத்தின்பொருட்டுப் (பசியபொன்னுலாகிய நாணை) இரட்சையாகக் கையிற்கட்டினுர்கள்.—எ-று. (கஉ)

மாமறை விதிவழாமன் மணத்துறைக் கடன்களாற்றித்
தூமறை மூதூர்க்கங்குன் மங்கலந் துவன்றியார்ப்பத்
தேமரு தொடையன்மார்பன் றிருமணக் கோலங்காணக்
காமுறு மனத்தான்போலக் கதிரவ னுதயஞ்செய்தான்.

(இ-ள்.) மாமறைவிதிவழாமல்=பெருமையினையுடைய வேதவிதிதவறுமல்; மணத்துறைக்கடன்களாற்றி=இவ்வாறு விவாகத்திற்குரிய சமாவர்த்தனம் இரட்சாபந்தனம் முதலியதொழில்களைச்செய்து; தூமறைமூதூர்=தூய்மையான வேதங்களொலிக்கும் பழமையினையுடைய அத்திருநாவலூரில்; கங்குன்மங்கலந்துவன்றியார்ப்ப=முதனுளிரவில் மங்கலகரமான வாத்தியங்கள் சேர்ந்து ஆரவாரிக்க; தேமருதொடையன்மார்பன் = தேன்பொருந்திய மாலையையணிந்தமார்பையுடைய நம்பியாரூரரது; திருமணக்கோலங்காண=திருமணக்கோலத்தைத் தான்காணும்படி; காமுறுமனத்தான்போல=ஆசைகொண்ட மனமுடையவன் போல; கதிரவனுதயஞ்செய்தான்=சூரியனுதித்தான்.—எ-று. (கூ)

சமாவர்த்தனம்முதலியன முதனுளிரவிற்செய்தலில் கங்குன்மங்கலந்துவன்றியார்ப்ப என்றும், அக்காலத்தில் வேதங்கள் மிகவோதுதலில் தூமறைமூதூர் என்றுங்கூறினர்.

காலைசெய் வினைகண்முற்றிக் கணிதநூற் புலவர்சொன்ன
வேலைவந் தணையுமுன்னர் விதிமணக் கோலங்கொள்வா
னூலசைந் திலங்குமார்ப னுணங்கிய கேள்விமேலோன்
மாலையுந் தாரும்பொங்க மஞ்சனச் சாலைபுக்கான்.

(இ-ள்.) காலைசெய்வினைகண்முற்றி=அன்று உதயகாலத்திற் செய்கின்ற சந்தியாவந்தனம் முதலிய நித்தியகன்மங்களைமுடித்து; கணிதநூற்புலவர்சொன்ன=சோதிடநூலார் நியமித்த; வேலைவந்தணையுமுன்னர்=முகூர்த்தகாலம் வருமுன்னே; விதிமணக்கோலங்கொள்வான்=விவாகவிதிக்குரிய மணக்கோலங்கொள்ளும்பொருட்டு; நூலசைந்திலங்குமார்பன் = பூணூலசைந்து விளங்குகின்ற மார்பினையுடையவரும்; நுணங்கிய கேள்விமேலோன்=நுட்பமான கேள்வியின் மிக்குயர்ந்தவருமாகிய நம்பியாரூரர்; மாலையுந்தாரும்பொங்க = மணிமாலையும் மலர்மாலையும் விளங்க; மஞ்சனச்சாலைபுக்கான்=திருமஞ்சனச்சாலையை அடைந்தார்.—எ-று. (கச)

வாசநெய் யூட்டிமிக்க மலர்விரை யடுத்ததூநீர்ப்
பாசனத் தமைந்தபாங்கர் பருமணிப் பைம்பொற்றிண்கால்
ஆசனத் தணிநீராட்டி யரிசனஞ் சாத்தியன்பால்
ஈசனுக் கினியார்மேனி யெழில்பெற விளக்கினார்கள்.

(இ-ள்.) வாசநெய்யூட்டி = மணங்கமழ்கின்ற நெய்ப்புகையூட்டப்பட்டு; மிக்கமலர்விரையடுத்ததூ நீர்ப்பாசனத்து=உயர்ந்த மலர்களின் மணம்விரவிய தூய்மையான நீரையுடைய பாத்திரத்தின்; பாங்கர் அமைந்த = அருகில் வைத்த; பருமணிப்பைம் பொற்றிண்கால் ஆசனத்து=பருத்தமணிகளையழுத்திய பசியபொன்னாலாகிய வலியகால்களையுடைய பீடத்தின்மீதிருத்தி; அணிநீராட்டி=அழகாக நீரால் முழுக்காட்டி; அரிசனஞ்சாத்தி=மஞ்சள்விரவிய கலவைப்பொடியைப்பூசி; அன்பாலீசனுக் கினியார்மேனி=அன்போடு சிவபிரானுக்கு இனியதொண்டராம் நம்பியாரூரர் திருமேனியை; எழில்பெற விளக்கினார்கள்=(சுற்றத்தார்) அழகுண்டாகும்படி ஸ்நானஞ்செய்வித்தார்கள்.—எ-று. (கரு)

நெய்-ஆகுபெயர். ஊட்டியடுத்த நீர்ப்பாசனம் என இயையும்.

மிக்கமலர்களாவன:—நீர்க்குவாசனையூட்டும் மலர்கள் பாதிரி, சண்பகம், முதலியன வாசநெய்யூட்டி என்பதற்குத் தயிலந்தேய்த்தென்றுரைப்பாருமுளர்.

அகில்விரைத் தூபமேய்ந்த வணிகொள்பட் டாடைசாத்தி
முகினுழை மதியம்போலக் கைவலான் முன்கைசூழ்ந்த
துகில்கொடு குஞ்சியீரம் புலர்த்தித்தன் றூயசெங்கை
யுகிர்நுதி முறையிற்போக்கி யொளிர்நறுஞ் சிகழியார்த்தான்.

(இ-ள்.) அகில்விரைத்தூபமேய்ந்த = அகிலந்துண்டுகளாலமைத்த வாசனையையுடைய புகையூட்டிய; அணிகொள்பட்டாடைசாத்தி = அழகியபட்டாடையையுடுத்தி; முகினுழைமதியம்போல=முகிலினிடைநுழைகின்ற சந்திரனைப்போல; கைவலான்முன்கைசூழ்ந்ததுகில்கொடு = அலங்கரிக்குந்தொழிலில் வல்லவன் தனது முன்கையினிடத்துச் சுற்றிய ஆடையால்; குஞ்சியீரம் புலர்த்தி=குடுமியினீரத்தை உலரச்செய்து; தன்தூயசெங்கை யுகிர்நுதிமுறையிற்போக்கி = தன்னுடைய தூய்மையான சிவந்த கையினிடத்துள்ள நகநுனிகளை முறையேபோக்கிப் (பிணிப்பறுத்து); ஒளிர்நறுஞ்சிகழியார்த்தான் =விளங்குகின்ற நறுநாற்றத்தையுடைய குடுமியை முடித்தான்.—எ-று. (கசு)

கைவலான் ஆர்த்தான் என இயையும், குடுமியின் கருமையும் துகிலின் வெண்மையுந்தோன்ற முகினுழைமதியம்போல என்றார். முன்கைசூழ்தல்-முன்கையை மூடிச்சூழ்தல்.

தூநறும் பசுங்கர்ப்பூரச் சுண்ணத்தால் வண்ணப்போதில்
ஆனதண் பனிநீர்கூட வமைத்தசந் தனச்சேறூட்டி
மான்மதச் சாந்துதோய்ந்த மங்கலக் கலவைசாத்திப்
பான்முறை முந்நூன்மின்னப் பவித்திரஞ் சிறந்தகையான்.

(இ-ள்.) தூநறும்பசுங் கர்ப்பூரச்சுண்ணத்தால் = (அக்கைவலானுல்) தூய்மையான நறுமணத்தையுடைய பச்சைக்கர்ப்பூரத்தின் பொடியோடு; வண்ணப்போதிலான = அழகிய பலவகைப்பூக்களில் உண்டான; தண்பனிநீர்கூட அமைத்த சந்தனச்சேறூட்டி = குளிர்ந்த பனிநீரைச்சேர்த்தமைத்த சந்தனக்குழம்பால் ஆட்டப்பட்டு; மான்மதச்சாந்துதோய்ந்த மங்கலக்கலவைசாத்தி=கத்தூரிக்குழம்புசேர்த்த மங்கலகரமான கலவைச்சாந்தைச் சாத்தப்பட்டு; பான்முறை முந்நூன்மின்னப் பவித்திரஞ்சிறந்தகையான்=தரிக்கும் முறைமையமைந்த உபவீதம் மார்பில் விளங்கத் தருப்பையாலாகிய பவித்திரஞ்சிறந்து விளங்கும் கையையுடைய நம்பியாரூரர்.—எ-று. (கஎ)

பான்முறை-அணிதற்கு இன்றியமையாச் சிறப்பிற்றென்னும் விதி.

தூமலர்ப் பிணையன்மாலை துணரிணர்க் கண்ணிகோதை
தாமமென் றினையவேறு தகுதியா லமையச்சாத்தி
மாமணி யணிந்ததூய வளரொளி யிருள்கால்சீக்கு
நாமநீள் கலன்கள்சாத்தி நன்மணக்கோலங் கொண்டார்.

(இ-ள்.) தூமலர்ப்பிணையன்மாலை = தூய்மையாகிய மலர்களாற்றொடுத்த பிணையல்மாலையும்; துணரிணர்க்கண்ணிகோதை = நல்லபூங்கொத்துகளாலமைத்த கொண்டைமாலையும் மாலையும்; தாமமென்று=பத்திமாலையும் என்று; இனைய வேறு தகுதியாலமையச்சாத்தி = இத்தன்மையவான வேறுபாட்டையுடைய மாலைகளை அவைகளுக்குரிய விடங்களிற் சிறப்போடு பொருந்த அலங்கரிக்கப்பட்டு; மாமணியணிந்த=மாணிக்கங்களழுத்திய; தூயவளரொளியிருள்கால்சீக்கும்=தூய்மையுடைத்தாகிய கிரணத்தினுல் இருளையோட்டும்; நாமநீள்கலன்

கள்சாத்தி=பெயர்பெற்ற உயர்ந்த ஆபரணங்களைத்தரிக்கப்பட்டு; நன் மணக்கோலங்கொண்டார்=நல்ல திருமணக்கோலங்கொண்டார்.—எ - று. (கஅ)

இவ்விரண்டுங் குளகம். பவித்திரஞ் சிறந்த கையான் கைவலாஞற் சாத்தப்பட்டுக் கோலங்கொண்டானென இயையும்.

பிணையல்மாலை என்பது:—மலர்களின் தாளிரண்டையும் ஒருங்குசேர்த்துப் பிணைக்கும் சரம். கண்ணி என்பது:—கொண்டைமாலை. இண்டைமாலைக்கும் கொண்டைமாலைக்கும் மிக்க வேறுபாடின்று. ஆயினும், கொண்டைமாலையின்மேல் வட்டவடிவாய்ச்சுருங்க இறுகக்கட்டிச் சாத்துவது இண்டையென்பது போதரும். கோதை என்பது:—பொதுமையால் நீட்டாகக்கட்டும் மாலை, கண்ணிக்கோதை எனப்பாடமாயின் கண்ணியாகிய கோதையெனக்கூட்டி யுரைத்தலுமொன்று. தாமம் என்பது:—மலர்களை வேறுவேறு பத்தியாகவைத்துக்கட்டும் பத்திமாலை, எனவே கொண்டைமாலையைக் குடுமியிற் சூழச்சாத்தியும் தாமம் பிணையல் மாலை இவைகளைத் தோளினும் மார்பினும் முறையே பொருந்தச் சாத்தியும்அலங்கரிக்கப்பட்டாரென்பது பெற்றும்.

மன்னவர் திருவுந்தங்கள் வைதிகத் திருவும்பொங்க
நன்னகர் விழவுகொள்ள நம்பியா ரூரர்நாதன்
றன்னடி மனத்துட்கொண்டு தகுந்திரு நீறுசாத்திப்
பொன்னணி மணியார்யோகப் புரவிமேற் கொண்டுபோந்தார்.

(இ-ள்.) மன்னவர்திருவும் = நரசிங்கமுனையரையர்செல்வமும்; தங்கள் வைதிகத்திருவும்பொங்க=தம்முடைய வேதநெறிக்குரிய செல்வமும் பொலிவடைய; நன்னகர்விழவுகொள்ள=நல்ல திருநாவலூர் திருமணத்திற்குரிய விழாவைக்கொள்ள; நம்பியாரூரர் நாதன் றன்னடி மனத்துட்கொண்டு = நம்பியாரூரர் சிவபிரானுடைய திருவடிகளை மனதிற்தியானித்துக்கொண்டு; தகுந்திரு நீறுசாத்தி=மேன்மையுடைத்தாகிய திருநீற்றைத் திருமேனியில்தரித்து; பொன்னணிமணியார்=பொன்னுபரணங்களாலும் முத்து முதலிய மணிகளினுலும் அலங்கரிக்கப்பட்ட; யோகப்புரவிமேற்கொண்டு போந்தார்=செல்வத்தைவிளைக்கும் குதிரையின்மேல் எழுந்தருளிச்சென்றுர்.—எ-று. (கக)

மன்னவர் திருவென்றது:—வெண்கொற்றக்குடை, வெற்றிமுரசு, யானை, தேர், குதிரை முதலிய சிறப்புக்களை. வைதிகத்திருவென்றது:—மறையவர்க்கேற்ற அணி, ஆடை, முதலிய சிறப்புக்களை. தெய்வமணி சீவற்சம் முதலிய நற்சுழிகளும் நல்லிலக்கணமும் உடையபுரவிசெல்வஏதுவாதலில் யோகப்புரவியென்றுர்

இயம்பல துவைப்பவெங்கு மேத்தொலி யெடுப்பமாதர்
நயந்துபல் லாண்டுபோற்ற நான்மறை யொலியிஞேங்க
வியந்துபார் விரும்பவந்து விரவினர்க் கின்பஞ்செய்தே
யுயர்ந்தவா கனயானங்கண் மிசைக்கொண்டா ருழையராஞர்.

(இ-ள்.) இயம்பலதுவைப்ப = பலவாத்தியங்கள் ஒலிக்க; எங்குமேத்தொலியெடுப்ப = எவ்விடங்களிலும் ஸ்துதிபாடகர்கூறும் தோத்திர ஓசை உண்

டாகவும்; மாதர்நயந்து பல்லாண்டுபோற்ற = பெண்கள்விரும்பிப் பல்லாண்டு கூறவும்; நான்மறையொலியிறேங்க=நான்குவேதங்களும் இசையோடு ஒலிக்கவும்; வியந்துவந்துபார் விரவினர்க்குவிரும்ப இன்பஞ்செய்து = திருமணத்தை வியந்துவந்து நிலவுலகின்கண் கூடினவர்களுக்கு அவர்விரும்பும்படி உபசாரஞ்செய்து; உயர்ந்தவாகனயானங்கண்மிசைக்கொண்டா ருழையராஞர் = பரிசனங்கள்யானை குதிரை முதலிய உயர்ந்தவாகனங்களிலும் சிவிகை முதலிய யானங்களிலும் ஏறிக்கொண்டார்கள்.—எ-று. (உ௦)

மங்கல கீதநாத மறையவர் குழாங்களோடு
தொங்கலும் விரையுஞ்சூழ்ந்த மைந்தருந் துவன்றிச்சூதும்
பங்கய முகையுஞ்சாய்த்துப் பணைத்தெழுந் தணியின்மிக்க
குங்கும முலையினரும் பரந்தெழு கொள்கைத்தாகி.

(இ-ள்.) மங்கலகீதநாத மறையவர்குழாங்களோடு=மங்கலமாகிய கீதப்பாட்டைப்பாடுகின்ற மறையவர்களது தொகுதியோடு; தொங்கலும் விரையுஞ்சூழ்ந்தமைந்தரும் = மலர்மாலைகளையும் வாசனைக்கலவைகளையும் தரித்துக்கொண்ட ஆடவர்களும்; துவன்றிச்சூதும் பங்கயமுகையுஞ்சாய்த்து=(ஈர்க்குமிடைசெல்லாமல்) நெருங்கிச் சூதாடுகருவியையும் தாமரையரும்பையுந் தோற்கச்செய்து; பணைத்தெழுந்து=அடிபருத்தெழுந்து; அணியின் மிக்ககுங்கும முலையினரும்=அழகால் மிகுந்த குங்குமக்குழம்பு பூசிய முலையையுடைய மகளிரும்; பரந்தெழுகொள்கைத்தாகி=பரவிவருகின்ற சிறப்பையுடைத்தாய்.—எ-று. (உக)

அருங்கடி யெழுந்தபோதி ஞர்த்தவெள் வளைகளாலும்
இருங்குழை மகரத்தாலு மிலங்கொளி மணிகளாலு
நெருங்கிய பீலிச்சோலை நீனிறத் தரங்கத்தாலுங்
கருங்கடல் கிளர்ந்ததென்னக் காட்சியிற் பொலிந்ததன்றே.

(இ-ள்.) அருங்கடியெழுந்தபோதின்=அருமையானதிருமணம் இவ்வாறெழுந்த சமயத்து; ஆர்த்தவெள்வளைகளாலும்=முழங்குகின்றவெள்ளியசங்குகளாலும்; இருங்குழைமகரத்தாலும்=பெரியகாதணிகளிலிருக்கும்சுறுவேற்றாலும்; இலங்கொளிமணிகளாலும் = விளங்குகின்ற ஒளியினையுடைய ஆபரணங்களிற்பொருந்திய முத்துமுதலிய மணிகளினாலும்; நெருங்கிய பீலிச்சோலை நீனிறத்தரங்கத்தாலும் = நெருங்கியிருக்கும் மயிற்பீலிக்கற்றைகளாகிய சோலையென்னுங்கருநிறத்தையுடைய அலைகளினாலும் (அம்மணவெழுச்சி) ; கருங்கடல் கிளர்ந்ததென்னக் காட்சியிற்பொலிந்தது=கரியகடல்பெருகிப் பிரவாகிக்கின்றதென்னுந்தோற்றத்தாற் பொலிவடைந்தது.—எ-று. அன்று, ஏ, அசை. கடி - கொள்கைத்தாகி எழுந்தபோதின் என இயையும் இவ்விரண்டும்குளகம். (உஉ)

நெருங்குதூ ரியங்களேங்க நிரைத்த சாமரைகடோரைப்
பெருங்குடை மிடைந்துசெல்லப் பிறங்குபூங் கொடிகளாட
அருங்கடி மணம்வந்தெய்த வன்றுதொட் டென்றுமன்பில்
வருங்குல மறையோர்புத்தூர் மணம்வந்த புத்தூராமால்.

(இ-ள்.) நெருங்குதூரியங்களேங்க = மிக்கபேரிகைமுதலிய வாத்தியங்கள் ஒலிக்கவும்; நிரைத்தசாமரைகள் = (வீசி) வரிசையாகப்பிடித்த சாமரங்களும்; தோரைப்பெருங்குடைமிடைந்துசெல்ல = மணிக்குஞ்சங்கள் கட்டிய பெரிய குடைகளும் ஆகிய இவைகள்நெருங்கிச்செல்லவும்; பிறங்கு பூங்கொடிகளாட = விளங்குகின்ற பொலிவினையுடைய கொடியாடைகள் அசையவும்; அருங்கடிமணம்வந்தெய்த = அருமையாகிய சிறப்பினையுடைய மணம் அவ்வூரில் வர; அன்றுதொட்டென்றும் = (அக்காரணத்தால்) அன்றுமுதல் எந்நாளும்; அன்பில்வருங் குலமறையோர்புத்தூர் = அன்பால் மிக்க குலத்திற்சிறந்த ஆதிசைவமறையவர்களது புத்தூரானது; மணம்வந்த புத்தூராம் = மணம்வந்த புத்தூரெனப் பெயர் பெறும்.—எ-று. ஆல், அசை. (உரு)

தோரை - மணிக்கோவைக்குஞ்சம். கடி விளக்கம் இதுகாறும் வராதபுதுமையையுடைய மணம் என்றுரைத்தலுமொன்று. "நிரைத்தசாமரைகளோங்க" எனப்பாடமாயின், வரிசையாகப்பிடித்த சாமரங்கள் வீசுதலால் மேற்கிளர்ந்து விளங்க எனப்பொருளுரைத்துக்கொள்க.

நிறைகுடந் தூபதீப நெருங்குபா லிகைகளேந்தி
நறைமல ரறுகுசுண்ண நறும்பொரி பலவும்வீசி
யுறைமலி கலவைச்சாந்தி னுறுபுன றெளித்துவீதி
மறையவர் மடவார்வள்ளன் மணமெதிர் கொள்ளவந்தார்

(இ-ள்.) நிறைகுடந் தூபதீபம் = பூரணகும்பங்களையும் தூபதீபங்களையும்; நெருங்குபாலிகைகளேந்தி = நெருங்கிய முளைப்பாலிகைகளையும் கையிற்றாங்கிக்கொண்டு; நறைமலரறுகுசுண்ணம் = வாசனைகமழ்கின்ற பூக்களும் அறுகும் வாசனைப்பொடியும்; நறும் பொரிபலவும்வீசி = நல்லபொரியும் ஆகிய பல பொருள்களையும் வீசி; உறைமலிகலவைச்சாந்தி னுறுபுனறெளித்துவீதி = திவலையாக மிக்க கலவைச்சாந்தினின்றுந் தெளிந்த நீரைவீதியிற்றெளித்து; மறையவர் மடவார்வள்ளல் மணமெதிர் கொள்ளவந்தார் = பார்ப்பனிகள் நம்பியாரூரரது திருமணவெழுச்சியை எதிர்கொள்ளும்படி வந்தார்கள்.—எ-று. (உ௪)

கண்களெண் ணிலாதவேண்டுங் காளையைக் காணவென்பார்
பெண்களி லுயரநோற்றாள் சடங்கவி பேதையென்பார்
மண்களி கூரவந்த மணங்கண்டு வாழ்ந்தோமென்பார்
பண்களி னிறைந்தகீதம் பாடுவா ராடுவார்கள்.

(இ-ள்.) கண்களெண்ணிலாதவேண்டுங் காளையைக்காணவென்பார் = (மணமெதிர்கொள்ளவந்த மடவார்களுள்) மணமகனைப்பார்க்க எண்ணிறந்தகண்கள்வேண்டுமென்று சொல்லுவார் (சிலர்); பெண்களிலுயரநோற்றாள் சடங்கவி பேதையென்பார் = இச்சடங்கவி சிவாசாரியரது புத்திரி (இம்மணமகனைப்பெறுதற்கு மற்றைமகளிர்களிலும்) அதிகம் தவஞ்செய்தாளென்பார் (சிலர்); மண்களி கூரவந்த மணங்கண்டு வாழ்ந்தோமென்பார் = உலகத்தார் களிப்படையவந்த மணக்கோலத்தைக்கண்டு யாம் வாழ்வடைந்தோம் என்பார்கள் (சிலர்); பண்களி

னிறைந்தகீதம் பாடுவாராடுவார்கள் = இசையால் நிறைவுபெற்ற சங்கீதத்தைப் பாடிக்கொண்டு ஆனந்தக்கூத்தாடுவார்கள் (சிலர்).—எ-று. (உடு)

ஆண்டகை யருளினோக்கின் வெள்ளத்து ளலைந்தோமென்பார்
தாண்டிய பரியுநம்பாற் றகுதியி னடைந்ததென்பார்
பூண்டயங் கிவனேகாணும் புண்ணிய மூர்த்தியென்பார்
ஈண்டிய மடவார்கூட்ட மின்னன விசைப்பச்சென்றார்.

(இ-ள்.) ஆண்டகையருளினோக்கின் வெள்ளத்துளலைந்தோமென்பார் = இம்மணமகனது கண்களினின்றுதிக்குங்கருணைநோக்கென்னும் வெள்ளத்துள் அலைவுபட்டோமென்பார்கள் (சிலர்); தாண்டிய பரியுநம்பாற் றகுதியி னடைந்த தென்பார் = தாவிச்செல்லுங் குதிரையும்(எண்ணத்திற்கேற்ப)நம்மிடத்து மெல்ல வருகின்றதென்று சொல்லுவார்கள் (சிலர்); பூண்டயங்கிவனே புண்ணியமூர்த்தி யென்பார் = ஆபரணம் விளங்குகின்ற இவ்வாண்டகையே புண்ணியம் ஓருருவாய்த்திரண்ட வுருவினையுடைய னென்று சொல்லுவார்கள் (சிலர்) ; ஈண்டியமடவார்கூட்டம் = மணவெழுச்சியை எதிர்கொள்ளவந்த மடவார்கூட்டம் ; இன்னன விசைப்பச்சென்றார் = இவ்வாறு சொல்ல நம்பியாரூரர் எழுந்தருளினார்.—எ-று. காணும், அசை.

வருமணக் கோலத்தெங்கள் வள்ளலார் தெள்ளும்வாசத்
திருமணப் பந்தர்முன்பு சென்றுவெண் சங்கமெங்கும்
பெருமழைக் குலத்தினார்ப்பப் பரிமிசை யிழிந்துபேணும்
ஒருமணத் திறத்தினங்கு நிகழ்ந்தது மொழிவேனுய்ந்தேன்,

(இ-ள்.) வருமணக்கோலத்தெங்கள் வள்ளலார் = இவ்வாறு வருகின்ற மணக்கோலத்தையுடைய எங்கள் நம்பியாரூரர்; தெள்ளும்வாசத் திருமணப்பந்தர்முன்புசென்று = தெள்ளிதாகிய வாசனைகமழும் திருமணப்பந்தலினிடத்து எழுந்தருளி ; வெண்சங்கமெங்கும் பெருமழைக்குலத்தினார்ப்ப = வெள்ளியசங்குகள் எவ்விடத்தும் பெரிய முகிற்றொகுதிபோல முழங்க; பரிமிசையிழிந்து = குதிரையினின்றும் இறங்கி ; பேணும்ஒருமணத்திறத்தின் = தாம்செய்யவிரும்பும் ஒருவிவாகச்செயலில் ; அங்குநிகழ்ந்தது மொழிவேனுய்ந்தேன் = அவ்விடத்து நிகழ்ந்த செய்தியைச்சொல்லுவேனாய் அதனால் யான் உய்ந்தேன்-எ-று. திருவருள்ஞானத்தைச் சைவசமயிகட்குக் கொடுத்தலில் வள்ளலார்என்றார். (உஎ)

வேறு.

ஆலுமறை சூழ்கயிலை யின்கணருள் செய்த
சாலுமொழி யால்வழி தடுத்தடிமை கொள்வான்
மேலுற வெழுந்துமிகு கீழுற வகழ்ந்து
மாலுமிரு வர்க்குமரி யாரொருவர் வந்தார்.

(இ-ள்.) ஆலுமறைசூழ்கயிலையின்கண் = வேதங்கள் சூழ்ந்து ஒலிக்கும் திருக்கைலாயமலையில் ; அருள்செய்தசாலுமொழியால் = அருளிச்செய்த மேன்

மை மிக்க திருவாக்கின்படி; வழிதடுத்தடிமைகொள்வான்=(அவ் வாலாலசுந்தர ரென்னும் நம்பியாரூரரை) வழித்தொண்டாய் மணஞ்செய்யாதுதடுத்து அடிமை கொள்ளும்பொருட்டு; மேலுறவெழுந்தும்=அன்னரூபமாய் மேற்கொண்டுகிளம் பியும்; மிகுகீழுறவகழ்ந்தும்=வராகரூபமாய் மிகக்கீழாகப் பூமியைத்தோண்டி யும்; மாலுமிருவர்க்கு மரியாரொருவர்வந்தார்=(அடியையும் முடியையும் அறியா மல்) மயங்கும் திருமால் பிரமன் என்னும் இருவருக்கும் அரியராயிருந்த சிவபிரா ன் அங்கு ஓர் திருமேனிகொண்டெழுந்தருளிவந்தார்.—எ-று. (உஅ)

தடுத்தடிமைகொள்ளுதல்=மயக்கம்பற்றிப் பிறவிக்கேதுவாய்வரும் இரு வினைவழிச்செல்லும் உயிரை அவ்வழிச்செல்லாது தடுத்துத் தன்னடிமையாக் குதல். தனக்கு வேறொரு முதல்வரில்லாமையின் ஒருவர் என்றார். ஒருவர் அடி மைக்கொள்வான் வந்தாரென இயையும்.

கண்ணிடை கரந்தகதிர் வெண்பட மெனச்சூழ்
புண்ணிய நுதற்புனித நீறுபொலி வெய்தத்
தண்மதி முதிர்ந்துகதிர் சாய்வதென மீதே
வெண்ணரை முடித்தது விழுந்திடை சழங்க.

(இ-ள்.) சூழ்கண்ணிடைகரந்த கதிர்வெண்படமென=சூழ்ந்து நெற்றிக் கண்ணை இடையில் மறைத்த வெள்ளிய துகில்போல; புண்ணியநுதற்புனித நீறு பொலிவெய்த=புண்ணிய ரூபமான தூய திருநீறானது நெற்றியில்விளங்கவும்; தண்மதிமுதிர்ந்து கதிர்சாய்வதென = (திருமுடியினிடத்துவாழும்) இளம்பிறை யானது முதிர்ந்து அதனால் அதன் கிரணங்கள் கீழேசெல்வதுபோல; மீதேவெ ண்ணரைமுடித்தது = உச்சியின்மீது ஒருங்குசேர்த்து முடித்தவெண்ணரையா னது; விழுந்திடைசழங்க=இடையிடையில்விழுந்து அசையவும்.—எ-று. (உகூ)

வெண்ணரைமுடித்தது என்றதனாலும் பின்வரும் செய்யுளில் கோவண வுடை என்றதனாலும் வானப்பிரத்தராய் மறையவர்வேடங்கொண்டு வந்தாரெ ன்றுகொள்க.

காதிலணி கண்டிகை வடிந்தகுழை தாழச்
சோதிமணி மார்பின்மிசை நூலினொடு தோளின்
மீதுபுனை யுத்தரிய வெண்டுகி லுடங்க
ஆதப மறைக்குடை யணிக்கரம் விளங்க.

(இ-ள்.) வடிந்தகாதிலணிகண்டிகைக்குழைதாழ = வடிந்த காதினிடத் தணிந்தஉருத்திராக்கத்தாலாகிய குண்டலமானது தொங்கவும்; சோதிமணிமார் பின்மிசை=ஒளியினையுடைய உருத்திராக்கமாலையணிந்த திருமார்பில்; நூலினொ டுதோளின்மீது புனையுத்தரியவெண்டுகிலுடங்க=உபவீதத்தோடு திருத்தோளின் மேலணிந்த உத்தரியமாகிய வெள்ளிய ஆடை அசையவும்; ஆதபமறைக்குடை யணிக்கரம்விளங்க = வெய்யிலைமறைக்கின்ற குடையானது அழகிய திருக்கரத் தில் விளங்கவும்—எ-று. (௩௦)

கண்டிகையென்பது, உருத்திராக்கமாலை. அதற்காம் இயைபுபற்றி உருத்திராக்கமும் கண்டிகையெனவழங்கப்படும். அஃதோரிலக்கணை. "நூலினோடு தோளின்மீது புனையுத்தரியம் மார்பின்மிசைநுடங்க" என இயையும்.

பண்டிசரி கோவண வுடைப்பழமை கூரக்
கொண்டதொர் சழங்கலுடை யார்ந்தழகு கொள்ள
வெண்டுகி லுடன்குசை முடிந்துவிடு வேணுத்
தண்டொருகை கொண்டுகழ றள்ளுநடை கொள்ள.

(இ-ள்.) பண்டிசரிகோவணவுடைப்பழமைகூரக்கொண்ட = வயிற்றின் கீழ் சரிய உடுத்தகோவணவுடையாகிய பழமை மிகக்கொண்ட; ஓர்சழங்கலுடையார்ந்தழகுகொள்ள=ஒரு நழுவிய உடையானது திருவரையின்கண் பொருந்தி அழகுசெய்ய; வெண்டுகிலுடன்குசை முடிந்துவிடுவேணுத்தண்டு = வெள்ளிய துகிலோடு தருப்பையைக் கூடச்சேரமுடித்துவிடும் மூங்கிற்றண்டத்தை; ஒரு கைகொண்டுகழறள்ளுநடைகொள்ள = ஒரு திருக்கரத்திற்கொண்டு திருவடிகள் தளர்ந்த நடைகொள்ளவும்.—எ-று. து-சாரியை. (௩௧)

நாபிக்குக்கீழன்றி மேலே உடையுடுத்தல் கூடாமையில், பண்டிசரிகோவணவுடை என்றார். கோவணவுடையாகிய சழங்கலுடையென இயையும். நீராடுங்கால் மாற்றுடையும் தருப்பணத்திற்குத் தருப்பையும் இன்றியமையாமையிற் கொள்ளவைத்தாரென்பது தோன்ற, வெண்டுகிலுடன் குசைமுடிந்து விடுவேணுத்தண்டென்றார்.

மொய்த்துவளர் பேரழகு மூத்தவடி வேயோ
அத்தகைய மூப்பெனு மதன்படிவ மேயோ
மெய்த்தநெறி வைதிகம் விளைத்த முதலேயோ
இத்தகைய வேடமென வையமுற வெய்தி.

(இ-ள்.) மொய்த்துவளர்பேரழகு மூத்தவடிவேயோ = சேர்ந்துவளர்கின்ற பேரழகானது இளமையினின்றும் முதிர்ந்த ஓர்வடிவமோ; அத்தகைய மூப்பெனு மதன்படிவமேயோ=அத்தன்மையவாய் ஒன்றாய்ச்சேர்ந்து வளர்ந்து முதிர்ந்த மூப்பினது வடிவந்தானோ; மெய்த்தநெறிவைதிகம் விளைத்தமுதலேயோ=மெய்ம்மையுடைத்தாயிருக்கின்ற வைதிகவிதிகளை முற்றச்செய்த முதல்வரோ; இத்தகையவேடமென வையமுறவெய்தி=இத்தன்மையையுடைய திருவுருவமென்று கண்டார் ஐயுறும்படி எழுந்தருளி.—எ-று. (௩௨)

பேரழகுடையார்க்கும் மூப்புவந்துழி அழகுகுன்றும் அவ்வாறு குன்றாது மிக்கிருத்தலில் பேரழகு மூத்தவடிவேயோ என்றையுற்றாரென்றும், அழகுமூத்ததுபோல வார்த்திகமும் மிகமுதிர்ந்து தோன்றலில் அத்தகையமூப்பெனுமதன் படிவமேயோ என்றையுற்றாரென்றும், வைதிகத்தில் விதித்ததன்மங்களையெல்லாம் முற்றச்செய்த பொலிவுடையராய்த் தோன்றலில் வைதிகம் விளைத்தமுதலேயோ என்றையுற்றாரென்றுங் கூறினர். வைதிகம் விளைத்தமுதல் என்புழி சிவபிரான் என்னுந் தொனிப்பொருளும் போதரும்.

வந்துதிரு மாமறை மணத்தொழி றொடங்கும்
பந்தரிடை நம்பியெதிர் பன்னுசபை முன்னின்
றிந்தமொழி கேண்மினெதிர் யாவர்களு மென்றான்
முந்தைமறை யாயிர மொழிந்ததிரு வாயான்.

(இ-ள்.) திருமாமறைமணத்தொழிறொடங்கும் பந்தரிடைவந்து = அழகிய பெருமையுடைத்தாகிய வேதவிதிப்படி திருமணஞ்செய்யத்தொடங்கும் மணப்பந்தலினிடத்து இவ்வாறெழுந்தருளிவந்து; நம்பியெதிர்பன்னுசபைமுன்னின்று=நம்பியாரூரருக்குமுன் (யாவராலும்) புகழத்தக்க சபையாருக்கு எதிரேநின்று; இந்தமொழிகேண்மி னெதிர்யாவர்களுமென்றான் = எனக்கெதிரில் நிற்கும் சபையார் யாவரும் யான்சொல்லும் இவ்வார்த்தையைக்கேளுங்களென்றருளிச்செய்தார்(அவர்யாரெனில்); முந்தைமறையாயிர மொழிந்ததிருவாயான்= முற்காலத்தில் அளவுபடாத வேதங்களை அருளிச்செய்த திருவாயினையுடைய சிவபிரான்.—எ-று. (௩௩)

என்றுரைசெ யந்தணனை யெண்ணின் மறையோரு
மன்றல்வினை மங்கல மடங்க லனையானு
நன்றுமது நல்வரவு நங்கடவ மென்றே
நின்றதிவ ணீர்மொழிமி னீர்மொழிவ தென்றார்.

(இ-ள்.) என்றுரைசெயந்தணனை யெண்ணில்மறையோரும் = இவ்வாறெடுத்துக்கூறும் மறையவரைஎண்ணிறந்த மற்ற வேதியர்களும்; மன்றல்வினைமங்கல மடங்கலனையானும் = திருமணத்தின்பொருட்டு மங்கலக்கோலங்கொண்டிருக்கும் சிங்கம்போலும் திறலினை யுடையநம்பியாரூரரும்; நன்றுமது நல்வரவு=உமதுவரவு எங்கட்குமிக நன்றாயிருந்தது; நங்கடவமென்றேநின்றது= அதுயாங்கள் செய்ததவமாகவேயிருந்ததென்றுகூறி; இவணீர்மொழிமின்நீர் மொழிவதென்றார் = இவ்விடத்துநீர் சொல்லுவதைச்சொல்லும் என்று சொன்னார்கள்.—எ-று. (௩௪)

பிஞ்ஞகனு நாவலர் பெருந்தகையை நோக்கி
என்னிடையு நின்னிடையு நின்றவிசை வால்யான்.
முன்னுடைய தோர்பெரு வழக்கினை முடித்தே
நின்னுடைய வேள்வியினை நீமுயறி யென்றான்.

(இ-ள்.) பிஞ்ஞகனும் = (இவ்வாறு சபையார்சொன்னபின்) சிவபிரானாகிய மறையவரும்; நாவலர்பெருந்தகையைநோக்கி=நம்பியாரூரரைப்பார்த்தருளி; என்னிடையு நின்னிடையு நின்றவிசைவால்=என்னிடத்தும் உன்னிடத்தும் இருக்கின்ற இசைவுபற்றி; யான்முன்னுடையதோர் பெருவழக்கினைமுடித்து = யான்முன்னுடைத்தாயிருக்கும் ஒருபெரிய விவகாரத்தைமுடிவுசெய்து; நின்னுடையவேள்வியினை நீமுயறியென்றான் = உன்னுடையமணத்தை நீ நடத்தென்றருளிச்செய்தார். ஏ, அசை.—எ-று. (௩௫)

ஆண்டானென்னு மியைபு என்னிடத்தும் அடிமையென்னுமியைபுநின்னிடத்தும் உள்ளனவென்பதுதோன்ற, என்னிடையு நின்னிடையு நின்றவினைசவாலென்றும், அக்காரணத்தால் அவ்வழக்குத் தொன்றுதொட்டனவேயன்றிப் புதிதன்று என்பதுதோன்ற முன்னுடையதோர் பெருவழக்கென்றுங்கூறினரென்க.

நெற்றிவிழி யான்மொழிய நின்றநிக ரில்லா
னுற்றதோர் வழக்கெனிடை நீயுடைய துண்டேன்
மற்றது முடித்தலது யான்வதுவை செய்யேன்
முற்றவிது சொல்லுகென வெல்லைமுடி வில்லான்.

(இ-ள்.) நெற்றிவிழியான்மொழிய=நெற்றிக்கண்ணையுடைய சிவபிரான் இவ்வாறு அருளிச்செய்ய; நின்றநிகரில்லான்=அங்கு நின்ற நிகரற்றநம்பியாரூரர்; உற்றதோர்வழக்கெனிடைநீயுடையதுண்டேல்=முன்தொடுத்து இயைபாய் உள்ள ஒருவழக்கை என்னிடத்து நீர் உடைத்தாயிருத்தல் உண்மையானால்; அதுமுடித்தலதுயான் வதுவைசெய்யேன்=அந்தவழக்கை முடித்தன்றியான் மணஞ்செய்துகொள்ளேன்; முற்றவிதுசொல்லுகென எல்லைமுடிவில்லான்=முடிய இவ்வழக்கைச்சொல்வீராக என்று கூறத் தன்பெருமையை வரையறுத்தற்கு அளவுபடாதவராகிய சிவபிரான் (கூறுகின்றார்). மற்று, அசை. (ருசு)

அவ்வழக்கைக் குறைவின்றிக் கூறுக என்னுங்கருத்தால் முற்றவிதுசொல்லுக என்றார். சொல்லுக என்றது ஈறுகுறைந்து நின்றது.

ஆவதிது கேண்மின்மறை யோரெனடி யானிந்
நாவலவ ரூரனிது நான்மொழிவ தென்றான்
றேவரையு மாலயன் முதற்றிருவின் மிக்கோர்
யாவரையும் வேறடிமை யாவுடைய வெம்மான்.

(இ-ள்.) ஆவதிதுகேண்மின் மறையோர்=மறையவர்களே நான்சொல்லத்தக்க இதனைக்கேளுங்கள்; என்னடியானிந்நாவலவரூரன் = என்னுடைய அடியவன் இத்திருநாவலூரன்; இதுநான்மொழிவதென்றான்=இதுநான் சொல்லத்தக்கது என்று அருளிச்செய்தார்; தேவரையும்=இந்திரன்முதலிய தேவர்களையும்; மாலயன் முதற்றிருவின் மிக்கோர்யாவரையும்=திருமால்பிரமன்முதல் ஐசுவரியத்தில் மிக்க எவர்களையும்; வேறடிமையாவுடைய வெம்மான்=தனித்தனி அடிமையாகவுடைய சிவபிரான்.—எ-று. (ருஎ)

திருவின்மிக்கோர் யாவரையுமென்றதனால் முனிவர் சித்தர்முதலியோரையுங் கொள்க. திரு ஐசுவரியம், அதாவது போகசாதனமும் போகமும். இத்திரு தேவரினும் அதிகம் திருமால்பிரமனிடத்தும் அவரின் வேறு ஆக முனிவர் முதலாயினரிடத்தும் கொள்ளப்படும். இவ்வாறு வேறுபட்ட திருவுடையாரையெல்லாம் தான் ஆளாக உடைமையின் உடையான் உடைப்பொருளை ஆக்கவும் அழிக்கவும் வல்லன் என்பது தோன்ற வேறடிமையாவுடைய வெம்மான் என்றார். வேறடிமையாவுடைய வெம்மானென்றதற்கு அணுக்க அடிமைக்கு வேறான சிறப்பிலடிமையாகவுடைய எம்மானென்றுரைத்தலுமொன்று.

வேறு.

என்று னிறையோ னிதுகேட்ட வரெம்மருங்கு
நின்று ரிருந்தா ரிவனென்னினைந் தான்கொலென்று
சென்றார் வெகுண்டார் சிரித்தார் திருநாவலூரர்
நன்றாண்மறை யோன்மொழி யென்றெதிர் நோக்கிநக்கார்.

(இ-ள்.) என்றானிறையோன்=சிவபிரான் இவ்வாறுகூறினார்; இதுகேட்டவரெம்மருங்குநின்றாரிருந்தார்=இதைக் கேட்டவர்களாய் எவ்விடத்திலும் நின்றவர்களும் இருந்தவர்களுமாகிய யாவரும்; இவனென்னினைந்தான்கொலென்று சென்றார் வெகுண்டார் சிரித்தார்=இம்மறையவர்யாது செய்ய நினைந்தாரென்று அவர்சமீபத்திற் சென்றார்கள் கோபித்தார்கள் சிரித்தார்கள்; திருநாவலூரர் நன்றான்மறையோன்மொழியென்றெதிர்நோக்கி நக்கார்=நம்பியாரூரர் இம்மறையவரதுசொல் நன்றாயிருந்ததென்று அவரை எதிரேபார்த்துச் சிரித்தார்.—எ-று.

மருங்குசூழ்ந்தார் மணம் விலக்கிக்கேடு விளைத்தலில் வெகுளிச் சிரிப்பும், நாவலூரர் மறையவர் பேதைமைபற்றி எள்ளற்சிரிப்புஞ்செய்தாரென்க.

நக்கார்முக நோக்கிநடுங்கி நுடங்கி யார்க்கு
மிக்கான்மிசை யுத்தரியத்துகி லாங்கி மேற்சென்
றக்காலமுன் றந்தைதன் றந்தையா ளோலையீதால்
இக்காரியத்தைநீ யின்று சிரித்ததென் னேடவென்றான்.

(இ-ள்.) நக்கார்முகநோக்கி=தம்மை இழிவுபடுத்திச் சிரித்த நம்பியாரூரரது திருமுகத்தைப்பார்த்து; நடுங்கி நுடங்கியார்க்குமிக்கான்=(திருமேனி) நடுக்குற்று விசனத்தால் நுணுகி யாவர்க்கும்மேலாகிய சிவபிரான்; மிசையுத்தரியத்துகிலாங்கிமேற்சென்று=நழுவிய உத்தரியத்தை விழாமல் கையாற்றாங்கிக்கொண்டு அவர்சமீபத்திற்சென்று; அக்காலமுன்றந்தைதன் றந்தையாளோலையீது=அந்நாளில் உன்னுடைய பாட்டன் எனக்கு எழுதிக்கொடுத்த அடிமைச்சீட்டு இதுவாகும்; இக்காரியத்தை நீ யின்றுசிரித்ததென்னேடவென்றான்=எட அவ்வாறாக இச்செய்கையைக்குறித்து இன்றைக்கு நீ இகழ்ந்து சிரித்ததுயாதுபற்றிஎன்றருளிச்செய்தார்.—எ-று. ஆல், அசை. எடவென்றது ஏடவென விகாரமாயிற்று.

உன்தந்தையும் உன்தந்தைதன்றந்தையும் அடிமையாதல் ஆவணத்தால் பெறப்படுமென்பது தோன்ற ஆளோலை யீதென்றும், அவரவ்வாறாக உன்னை யான் அடியானென்றல் பொருது சிரித்தது யாதென்னுங் கருத்தால் இக்காரியத்தை நீ இன்று சிரித்ததென்என்றும் அடிமையை அழைக்கும் முறைமைதோன்ற எட என்றுங்கூறினரென்க.

வேறு.

மாசிலாமரபில்வந்த வள்ளல்வே தியனைநோக்கி
நேசமுன் கிடந்தசிந்தை நெகிழ்ச்சியாற் சிரிப்புநீங்கி
யாசிலந் தணர்கள்வேறா ரந்தணர்க் கடிமையாதல்
பேசவின் றுன்னைக்கேட்டோம் பித்தனோ மறையோனென்றார்.

(இ-ள்.) மாசிலாமரபில்வந்த வள்ளல்வேதியனை நோக்கி = குற்றமற்ற ஆதிசைவகுலத்தில் அவதரித்த நம்பியாரூரர் சிவபிரானாகிய மறையவரைப்பார்த்து; நேசமுன்கிடந்த சிந்தைநெகிழ்ச்சியாற் சிரிப்புநீங்கி = அவரிடத்து நேசமானது தொன்றுதொட்டிருந்த உள்ளத்தின் கசிவால் சிரிப்பினின்றும் நீங்கி; ஆசிலந்தணர்கள் வேறோரந்தணர்க்கடிமையாதல் = குற்றமில்லாத மறையவர்கள்வேறொரு மறையவர்களுக்கு அடிமையாதலை; பேசவின்றுன்னைக் கேட்டோம்பித்தனோமறையோனென்றார் = சொல்ல இன்றைக்கு உன்னிடத்திற் கேட்டோம் மறையவனே நீ பித்தனோஎன்று கூறினர்.—எ-று. (சo)

நம்பியாரூரர்க்குச் சிவபிரானிடத்துப் பண்டுள்ள நேசம் ஒருவாறு ஆண்டுச் சிறிதுதித்ததென்பதுதோன்ற நேசமுன்கிடந்தசிந்தை நெகிழ்ச்சியாற்சிரிப்புநீங்கி என்றார். ஆண்டுநேசமுதித்ததேல் பின்பித்தனோ என்று மருராக உதித்ததென்ற தென்னையெனின் நன்றுசொன்னாய் அலரும்பருவத்தரும்பிடத்து அலருங்கணத்து முற்கணங்களில்ஒரு சிறிது விகசிதமும் மணமுந்தோன்றினும்முற்ற அலர்ந்தபின்புபோல் முழுதுந்தோன்றா. அவ்வாறொருசிறிதுதித்தலின் மாறுபடுதலின்று. பித்தனென்னுஞ்சொல்லைக் குற்றமாக்காது நன்காக்கித்தன்னைப் பித்தனென்று வைத்துப்பாடுகவென்றதூஉம் இக்கருத்தானென்க.

பித்தனு மாகப்பின்னும் பேயனு மாகநீயின்
றெத்தனை தீங்குசொன்னு யாதுமற் றவற்றுனுணேன்
அத்தனைக் கென்னையொன்று மறிந்திலை யாகினின்று
வித்தகம் பேசவேண்டா பணிசெய வேண்டுமென்றார்.

(இ-ள்.) பித்தனுமாகப் பின்னும்பேயனுமாக=(நம்பியாரூரர் வார்த்தையைக்கேட்ட சிவபிரானாகிய மறையவர்) நான்பித்தனானுலுமாகுக பின்பேயனானுலுமாகுக; நீயின்றெத்தனை தீங்குசொன்னாய் = நீஇப்பொழுது எவ்வளவு குற்றமொழிகளைச் சொல்லினை (ஆயினும்); யாதுமவற்றானுணேன்=அச்சொற்களால் எவ்வளவும் நான் நாணமாட்டேன்; அத்தனைக்கென்னையொன்று மறிந்திலையாகில்=அவ்வளவுக்கு என்னை ஒருவகையாலும் இன்னவனென்றறியவில்லை ஆனாலும்; நின்றுவித்தகம்பேசவேண்டா = எனக்கெதிராகநின்று உன்திறமையைச் சொல்லவேண்டா; பணிசெயவேண்டுமென்றார் = எனக்குத் தொண்டுசெய்யவேண்டுமென்றருளிச்செய்தார்.—எ-று. மற்று, அசை. (சக)

இவ்வாறு இகழ்ச்சிமொழிக்கு நாணுது என்னிடத்துநினக்கு உள்ள ஒரியையபு காரணமாய் யான் வந்தேனென்பதை நீயொன்று மறிந்திலையென்பது தோன்ற அத்தனைக்கென்னையொன்று மறிந்திலையென்றும் அவ்வியைபு தொண்டனாய்ப்பணிசெய்வதே பிறிதன்று என்பதுதோன்ற வித்தகம் பேசவேண்டா பணிசெய்யவேண்டுமென்றுங் கூறினர்.

கண்டதோர் வடிவாலுள்ளங் காதல்செய் துருகாநிற்குங்
கொண்டதோர் பித்தவார்த்தை கோபமு முடனேயாக்கு
முண்டொரா ளோலையென்னு மதனுண்மை யறிவேனென்று
தொண்டனு ரோலைகாட்டு கென்றனர் துணைவனுரை.

(இ-ள்.) கண்டஓர்வடிவாலுள்ளங் காதல்செய்துருகாநிற்கும்=என்றுற் காணப்பட்ட ஒப்பற்ற இம்மறையவரது திருவுருவத்தால் என்மனது இவரிடத்து அன்புவைத்துருகும்; கொண்டஓர்பித்தவார்த்தை = இவர்தனக்கும் எனக்கும் அடிமைஉண்டென்று கொண்டஒருபயித்தியமொழி; கோபமுமுடனேயாக்கும்= கோபத்தையும் உடனேவிளைக்கும் (அதனால்); உண்டொராளோலையென்னும் அதனுண்மையறிவேனென்று; அடிமையோலை ஒன்று உண்டென்று சொல்லும் அச்சொல்லினது உண்மையை அறிவேனென்று; தொண்டனுரோலைகாட்டுகெ ன்றனர் துணைவனுரை=நம்பியாரூரர் அடிமையோலையைக் காட்டுமென்றுசொ ன்னார் சிவபிரானாகிய மறையவரைநோக்கி.—எ-று. (௬௨)

இவர்வடிவுபெருவிருப்புண்டாக்கலும் இவர் பித்தவார்த்தை கோபமுண் டாக்கலும் ஆகிய இவ்விரண்டும் உடனிகழ்தலில் அவ்வையநீங்க ஆளோலை யுண் டென்னும் உண்மையறிவேனென்னுங்கருத்தால் காட்டுகென்றனரென்க. உயிர் க்கருந்துணையாய் நிற்றலில் துணைவனுரென்றார். து, இரண்டும் சாரியை.

ஓலைகாட் டென்றுநம்பி யுரைக்கநீ யோலைகாணற்
பாலையோ வவைமுன்காட்டப் பணிசெயற் பாலையென்ற
வேலையி னுவலூரர் வெகுண்டுமேல் விரைந்துசென்று
மாலயன் றொடராதானை வலிந்துபின் றொடரலுற்றார்.

(இ-ள்.) ஓலைகாட்டென்று நம்பியுரைக்க = நம்பியாரூரர் அடிமையோ லையைக்காட்டுமென்றுசொல்ல; நீயோலைகாணற்பாலையோ=(அதற்குச் சிவபிரா னாகிய மறையவர்) நீ அவ்வோலையைப்பார்த்துணரவல்லையோ; அவைமுன்காட் டப்பணிசெயற்பாலையென்றவேலையில்=இச்சபைமுன் யாவரும் அறியக்காட்டிய பின் அடிமைசெய்தற்குரியையென்று கூறியவளவில்; நாவலூரர்வெகுண்டுமேல் விரைந்துசென்று=நம்பியாரூரர்கோபித்து மேல் விரைவாய்ச்சென்று; மாலயன் றொடராதானை = திருமால்பிரமன் தொடர்ந்தறியக்கூடாத சிவபிரானை; வலி ந்து பின்றொடரலுற்றார் = வலிசெய்து அவரோடுங்கால்பின் தொடர்ந்துசென் றார்.—எ-று. (௬௩)

திருமால் பிரமன் என்னும் இருவரும் தொடராதார் இவர்க்கெளிவருத லில் வலிந்துபின் தொடரலுற்றார் என்றார்.

ஆவணம் பறிக்கச்சென்ற வளவினி லந்தணாளன்
காவணத் திடையேயோடக் கடிதுபின் றொடர்ந்துநம்பி
பூவணத் தவரையுற்று ரவரலாற் புரங்கள்செற்ற
ஏவணச் சிலையினாரை யார்தொடர்ந் தெட்டவல்லார்.

(இ-ள்.) ஆவணம்பறிக்கச்சென்றவளவினில்= அடிமையோலையைப்பறி க்கப்போம்பொழுது; அந்தணாளன்காவணத்திடையேயோட = சிவபிரானாகிய மறையவர்பந்தலின்கீழ் ஓட; கடிதுபின்தொடர்ந்துநம்பி=அவரை நம்பியாரூரர் விரைவாகப் பின்னே தொடர்ந்து; பூவணத்தவரையுற்றார்=திருப்பூவணத்திலெ ழுந்தருளிய சிவபிரானாகிய அம்மறையவரைக்கிட்டினார்; அவரலால் = அந்ந



சுந்தரமூர்த்திசுவாமிகள் திருமணத்தில் சிவபெருமான் விருத்தப்பிராமணராகத்தோன்றி படியோலையைக்காட்டித் திருமணத்தைத் தடுத்தது.

ம்பியாரூரரல்லாமல்; புரங்கள்செற்ற ஏவண் அச்சிலேயிஞரை=முப்புரங்களையெரித்த அம்போடுசேர்ந்த மேருவாகிய வில்லேயுடையவரை ; யார்தொடர்ந்தெட்ட வல்லார்=யார்தொடர்ந்துகிட்டவல்லவர்கள்.—எ-று. (சுச)

இவர் அணுக்கவன்ருெண்டராகிய ஆலாலசுந்தரர் ஆதலில் இவரே தொடர்ந்துகிட்டவல்லவரென்பது குறிப்பெச்சம்.

மறைகளாயின முன்போற்றி மலர்ப்பதம் பற்றிநின்ற
இறைவனைத் தொடர்ந்துபற்றி யெழுதுமா ளோலேவாங்கி
யறைகழ லண்ணலாளா யந்தணர் செய்தலென்ன
முறையெனக் கீறியிட்டான் முறையிட்டான் முடிவிலாதான்.

(இ-ள்.) மறைகளாயின முன்போற்றி=வேதங்களானவை முற்படுத்தித் துதிசெய்து ; மலர்ப்பதம்பற்றிநின்ற இறைவனை=தாமரைமலர்போலுந் திருவடிகளைத்தொடர்ந்து நிற்கின்ற சிவபிரானை; தொடர்ந்துபற்றி=தொடர்ந்துபிடித்து; எழுதுமாளோலேவாங்கி=எழுதப்பட்டிருக்கும் அடிமையோலையைவாங்கி; அறைகழலண்ணல்=ஒலிக்கின்ற வீரக்கழலினையுடைய நம்பியாரூரர் ; ஆளாய் அந்தணர்செய்தலென்னமுறையெனக் கீறியிட்டான் = அடிமையாய் மறையவர்கள் பணிசெய்தல் எந்தநூலிற்கூறும் முறைமையென்று கிழித்தார் ; முறையிட்டான் முடிவிலாதான்=ஈறில்லாத சிவபிரான் இதுமுறையோ என்று முறையிட்டருளினர்.—எ-று. (சரு)

மறைகள் இருக்குமுதலியன. அவை எவ்விடத்தும் சிவபிரானையே முன்னிட்டுத் துதித்தலில் முன்போற்றியென்றும், பரவித்தையென்னும் உபநிடதப் பகுதியாற்ருங்கூறும் பொருள் சிவபிரானேயென வரையறுத்துரைத்தலில் மலர்ப்பதம்பற்றிநின்ற இறைவனென்றுங்கூறினர். முறையீடாவது தனக்கு நேரிடும் ஆபத்தை நீக்கும்பொருட்டுப் பலரறிய இதுமுறையோ என்றலறுவது.

அருமறை முறையிட்டின்ன மறிவதற் கரியான்பற்றி
யொருமுறை முறையோவென்ன வுழைநின்ருர் விலக்கியிந்தப்
பெருமுறை யுலகிலில்லா நெறிகொண்டு பிணங்குகின்ற
திருமறை முனிவரேநீ ரெங்குளீர் செப்புமென்ருர்.

(இ-ள்.) அருமறைமுறையிட்டின்ன மறிவதற்கரியான் = அரியவேதங்கள் முறையிட்டு இதுவரையும் இவ்வியல்பினரென்று தெரிதற்கரியவராகிய சிவபிரான் ; பற்றிஒருமுறைமுறையோவென்ன = நம்பியாரூரரைத் திருக்கரத்தாற்பிடித்துக்கொண்டு ஒருதரம் இதுமுறையோவென்றுகூற ; உழைநின்ருர்விலக்கி=அருகில்நின்றவர்கள் இருவரையும்விலக்கி; இந்தப்பெருமுறையுலகிலில்லா நெறிகொண்டு பிணங்குகின்ற திருமறைமுனிவரே=இந்த உலகத்தில் இல்லாவழக்காகிய பெருவழக்குக்கொண்டு அதை முடிக்கவேண்டுமென்று பிணக்குச்செய்கின்ற மேன்மை மிக்க வேதமுனிவரே ; நீரெங்குளீர்செப்புமென்ருர்=நீரெவ்விடத்திருக்கின்றவர் சொல்லுமென்றுகேட்டார்கள்.—எ-று. (சகு)

அருமறைமுறையிடுதலாவது:—இவ்வித இயல்புடையோன் இவ்விதஇயல்புடையோனென எடுத்துக்கூறுதல். அவ்வாறெடுத்துக்கூறியும் இயல்பாகிய இலக்கணம் மனவாக்குகட்கெட்டாது அவாச்சியம் என நிற்றலில் அறிவதற்கரியான் என்றார். முன்மலர்ப்பதம்பற்றிநின்ற வென்றலில் ஈண்டு அறிவதற்கரியானென்றல் மாறுபடுமெனின் சொரூபவியல்பும் தடத்தவியல்புமாய்ப் பரம்பொருளெனப் பற்றிநிற்கு மியல்புந் தடத்தவியல்பு நீக்கிச் சொரூபவியல்பு அவாச்சியமெனக்கூறி அடங்கிநிற்கு மியல்பும் அதனிடத்துண்மையின் மாறுபடுதலின்றென்க. வழக்கல்லாவழக்காகலில் இந்தப்பெருமுறையென்றார். பிணங்குதல்=பிடித்ததுவிடாமற்கூறுதல்.

என்றலு நின்றவைய ரிங்குளே னிருப்புஞ்சேய்த்த
தன்றிந்த வெண்ணெநல்லூ ரதுநிற்க வறத்தாறின்றி
வன்றிறல் செய்தென்கையி லாவணம் வலியவாங்கி
நின்றிவன் கிழித்துத்தானே நிரப்பினு னடிமையென்றான்.

(இ-ள்.) என்றலுநின்றவையர்=(விலக்கிய மறையவர்கள்) இவ்வாறுகேட்கவும் அதைக்கேட்டுநின்ற சிவபிரானாகிய மறையவர்; இங்குளேனிருப்புஞ்சேய்த்தன்று = இவ்விடத்திலிருக்கும் என்னுடைய ஊரும் தூரமன்று; இந்த வெண்ணெநல்லூர் = இந்தத் திருவெண்ணெநல்லூரேயாம்; அதுநிற்க = அவ்வாறிருக்க; அறத்தாறின்றிவன்றிறல்செய்து = நீதிநெறியின்றி வலியசவுரியஞ்செய்து; என்கையிலாவணம் வலியவாங்கிநின்று=எனதுகையிலிருக்கின்ற அடிமைச்சீட்டை வலியப்பறித்து; இவன்கிழித்துத்தானே நிரப்பினனடிமையென்றான்=இந்நாவலூரன் கிழித்துத்தானே எனக்கு அடிமையென்பதை நிரப்புவித்தானென்றருளிச்செய்தார்.—எ-று. (சஎ)

சபையாரைப்பிரித்து நிற்றலில் ஏகாரம் பிரிநிலை.

குழைமறை காதினானைக் கோதிலா ரூரர்நோக்கிப்
பழையமன் றாடிபோலு மிவ்னென்று பண்பின்மிக்க
விழைவுறு மனமும்பொங்க வெண்ணெநல் லூராயேலுன்
பிழைநெறி வழக்கையாங்கே பேசநீ போதாயென்றார்.

(இ-ள்.) குழைமறைகாதினானை=சங்கக்குழைமறைந்த காதினையுடைய சிவபிரானை; கோதிலாரூரர்நோக்கி=குற்றமற்ற நம்பியாரூரர்பார்த்து; பழையமன்றாடிபோலுமிவனென்று=பழமையினையுடைய நியாயசபையின்கண் வழக்காடி போலுமிவரென்று குறிப்பால் பழமையினையுடைய கனகசபையின்கண் ஆடுகின்ற முதல்வர்போலுமிவரென்று; பண்பின்மிக்க விழைவுறு மனமும்பொங்க=அன்பினால் மிக்கவிருப்புறும் மனமும் பொலிவடைய; வெண்ணெநல்லூராயேல் = திருவெண்ணெநல்லூரிலிருப்பவரானால்; உன்பிழை நெறிவழக்கையாங்கேபேசநீபோதாயென்றார் =உம்முடைய குற்றவழியாக வந்தவழக்கை அவ்விடத்துப் பேசும்படி வாருமென்றருளிச்செய்தார்.—எ-று. (சஅ)

விழைவுறு மனமும்பொங்க என்றதனால் அவரிடத்துதிக்கும் அன்பும் மேற்கூறியவாறு சிறிது சிறிதாய் ஓங்க என்றும், மன்முடிபோலும் என்றதனால் சிவபிரானென்றும் வழக்காடி யென்றும் நியமம்பெறுமல் உணர்வுதித்ததென்றும் போந்தவாறறிக.

வேதிய னதனைக்கேட்டு வெண்ணைநல் லூரிலேநீ
போதினு நன்றுமற்றைப் புனிதநான் மறையோர்முன்னர்
ஆதியின் மூலவோலை காட் டிநீ யடிமையாதல்
சாதிப்ப னென்றுமுன்னே தண்டுமுன் றூங்கிச்சென்றான்.

(இ-ள்.) வேதியனதனைக்கேட்டு=சிவபிரானுகிய மறையவர் அவ்வார்த்தையைக்கேட்டு; வெண்ணைநல்லூரிலே நீபோதினுநன்று = திருவெண்ணைநல்லூரிலே நீசென்றாலும் நல்லது; மற்றைப்புனிதநான் மறையோர்முன்னர்= அவ்வூரிலிருக்கின்ற பரிசுத்தமான நான்குவேதங்களை ஓதியுணர்ந்த மறையவர் முன்னே; ஆதியின்மூலவோலைகாட்டி = முன்னாளிலெழுதிய மூலசாதனத்தைக் காட்டி; நீயடிமையாதல் சாதிப்பனென்று = நீயெனக்கு அடிமை யென்பதைச் சாதிப்பனென்று சொல்லி; முன்னேதண்டு முன்தாங்கிச்சென்றான் = அவர்க்குமுன்னகத் தம்முடைய தண்டத்தை முன்னேயூன்றிக்கொண்டு திருவெண்ணை நல்லூருக்கெழுந்தருளினுர்.—எ-று.　　(சுக)

போகாதிருப்பினும் நன்றென்று மறுத்துநிற்றலில் உம்மை எதிர்மறை. முன்னே தண்டினைத்தாங்கிச் சென்றாரென்றும் பாடம். நீயடிமையாதலைச்சாதித்தற்குச் சாதனங் கிழிபட்டதனல் விரம்பாதென்று துணியற்க, என்னுங்கருத்தால் மூலவோலைகாட்டியென்றார்.

செல்லுநான் மறையோன்றன்பின் றிரிமுகக் காந்தஞ்சேர்ந்த
வல்லிரும் பணையுமாபோல் வள்ளலுங் கடிதுசென்றான்
எல்லையில் சுற்றத்தாரு மிதுவென்னு மென்றுசெல்ல
நல்லவந் தணர்கள்வாழும் வெண்ணைநல் லூரைநண்ணி.

(இ-ள்.) செல்லுநான் மறையோன்றன்பின்=திருவெண்ணைநல்லூரை நோக்கிச்செல்கின்ற சிவபிரானுகிய மறையவரின்பின்பு; திரிமுகக்காந்தஞ்சேர்ந்த வல்லிரும்பணையுமாபோல் = வேறுபடுத்தும் முகத்தையுடைய காந்தத்தின் சந்நிதிப்பட்ட இரும்பு பற்றுவதுபோல; வள்ளலுங் கடிதுசென்றார் = நம்பியாரூரரும் அவர்பின் விரைந்துசென்றார்; எல்லையில் சுற்றத்தாரும் = எண்ணிறந்த பந்துசனங்களும்; இதுவென்னுமென்று செல்ல = இது எவ்வாறுமென்று பின்தொடர்ந்துசெல்ல; நல்லவந்தணர்கள்வாழும் வெண்ணை நல்லூரைநண்ணி= நல்லமறையவர்கள் வாழ்கின்ற திருவெண்ணைநல்லூரை யடைந்து.—எ-று.(ருo)

காந்தமுகத்தின்கண் ணிருக்குஞ்சத்தி அயத்தைத் திரிக்குமாதலில் திரிமுகக் காந்தம் என்றாயிற்று. நம்பியாரூரர் ஒருவாறு சிவபிரான் திருவருள்வசத்தராய்ப்பின்தொடர்ந்தாரென்னுங் குறிப்புத்தோன்றக் காந்தஞ்சேர்ந்த வல்லிரும்பணையுமாபோல் என்றார்.

வேதபா ரகரின்மிக்கார் விளங்குபே ரவைமுன்சென்று
நாதனு மறையோன்சொல்லு நாவலூ ராரூரன்றான்
காதலென் னடியானென்னக் காட்டிய வோலைகீறி
மூதறி வீர்முன்போந்தா னிதுமற்றென் முறைப்பாடென்றார்.

(இ-ள்.) வேதபாரகரின்மிக்கார் விளங்குபேரவைமுன்சென்று=மறையவர்களுள் சிறந்தவர்கள் விளங்குகின்ற பெரிய சபைமுன்னே போய்; நாதனு மறையோன்சொல்லும்=சிவபிரானாகிய மறையவர் சொல்லுவார்; நாவலூராரூரன்றான்=திருநாவலூரின்கண்வாழும் இந்நம்பியாரூரன்; காதலென்னடியானென்னக்காட்டியவோலைகீறி = விரும்புதற்குரிய என்னடியவனென்று யான்காட்டிய அடிமையோலையைக் கிழித்து ; மூதறிவீர் முன்போந்தான்=முதிய அறிவினையுடையமறையவர்களே உங்களிடத்து வந்தான்; இது என்முறைப்பாடென்றான்= இதுஎன்னுடைய முறைப்பாடென்றருளிச்செய்தார்.—எ-று. மற்று,அசை.(ருக)

அந்தண ரவையின்மிக்கார் மறையவ ரடிமையாதல்
இந்தமா நிலத்திலில்லை யென்சொன்னு யையாவென்றார்
வந்தவா றிசைவேயன்றே வழக்கிவன் கிழித்தவோலை
தந்தைதன் றந்தைநேர்ந்த தென்றனன் றனியாய்நின்றான்.

(இ-ள்.) அந்தணரவையின்மிக்கார் = அச்சபையின் மிக்கிருப்பாராகிய மறையவர்கள் ; மறையவரடிமையாதலிந்தமாநிலத்திலில்லை = வேதியர்கள்அடிமையாதல் இந்த உலகத்தில் வழக்கமில்லை; என்சொன்னுயையாவென்றார் = ஐயாநீர் என்னபொருந்தாவழக்குச் சொன்னீர் என்றார்கள்; வந்தவாறிசைவேயன்றே வழக்கு=யான்வந்த வழக்குப்பொருத்தமுடையதல்லவா ; இவன்கிழித்தவோலை=இவன்கிழித்த அடிமையோலை; தந்தைதன்தந்தைநேர்ந்ததென்றனன்= இவன்பாட்டன் எழுதிக்கொடுத்ததென்று அருளிச்செய்தார் ; தனியாய்நின்றான்=ஒருவராய்நிற்குஞ்சிவபிரானாகிய மறையவர்.—எ-று. (ருஉ)

இசைவினு லெழுதுமோலை காட்டினு னாகில்இன்று
விசையினல் வலியவாங்கிக் கிழிப்பது வெற்றியாமோ
தசையெலா மொடுங்கமூத்தான் வழக்கினைச் சாரச்சொன்னான்
அசைவிலா ரூரரெண்ண மென்னென்று ரவையின்மிக்கார்.

(இ-ள்.) இசைவினுலெழுதுமோலை காட்டினனாகில் = உடன்பாட்டால் எழுதப்படும் அடிமையோலையை இம்மறையவர் எல்லாரு மறியக்காட்டினரேயாகில் (அதை); இன்றுவிசையினல் வலியவாங்கிக்கிழிப்பது வெற்றியாமோ= இன்று விரைவாய் வலியவாங்கிக்கிழித்தல் உமக்கு வெற்றியைவிளைக்காது; தசையெலாமொடுங்கமூத்தான் = உடம்பிலுள்ள தசைகளெல்லாம் வற்றும்படி மூப்படைந்த இம்மறையவர் ; வழக்கினைச் சாரச்சொன்னான்=தம்முடைய வழக்கை யாவருக்கும் பொருந்தும்படிசொன்னார் ; அசைவிலாரூரரெண்ண மென்னென்றாரவையின்மிக்கார் = மனக்கவலையற்ற நம்பியாரூரரது கருத்து யாதென்று வினவினார்கள் அச்சபையிலுள்ள உயர்ந்தோர்.—எ-று. ஓகாரம்-எதிர்மறை.

குறைவற்ற செல்வமிகுதியால் இதுகாறும் ஒரு சிறிதுங்கவலையடைந்தா ரல்லர் என்பது தோன்ற அசைவிலாரூரரென்றார்.

அனைத்துநூ லுணர்ந்தீரா திசைவனென் றறிவீரென்னைத்
தனக்குவே றடிமையென்றிவ் வந்தணன் சாதித்தானேல்
மனத்தினு லுணர்தற்கெட்டா மாயையென் சொல்லுகேன்யான்
எனக்கிது தெளியவொண்ணு தென்றன னெண்ணமிக்கான்.

(இ-ள்.) அனைத்துநூலுணர்ந்தீர் = வேதாகமபுராணங்களாகிய எல்லா நூலையும் உணர்ந்தவர்களே ; ஆதிசைவனென்றறிவீரென்னை = என்னை ஆதிசைவ மறையவனென்று நீவிர் அறிந்திருக்கின்றீர் ; தனக்குவேறடிமையென்றிவ்வந்தணன் சாதித்தானேல் = இம்மறையவன் உலகவழக்கிற்கு வேறாகத் தன்னடிமையென்று சாதிப்பானேயானால் ; மனத்தினாலுணர்தற்கெட்டா மாயையென் சொல்லுகேன்யான் = மனதினாலறியப்படாத ஈதோர்மாயையாயிருக்கின்றது இதற்கு யான் என்னசொல்லுவேன் ; எனக்கிதுதெளியவொண்ணு தென்றன னெண்ண மிக்கான் = எனக்கு இவ்வழக்கு நிச்சயிக்கக்கூடாததாயிருந்ததென்று சொன்னார் சூட்சியில் வல்லவராகிய நம்பியாரூரர்.—எ-று. (ருச)

அவ்வுரை யவையின்முன்பு நம்பியா ரூரர்சொல்லச்
செவ்விய மறையோர்நின்ற திருமறை முனியைநோக்கி
இவ்வுல கின்கணீரின் றிவரைநும் மடிமையென்ற
வெவ்வுரை யெம்முன்பேற்ற வேண்டுமென் றுரைத்துமீண்டும்.

(இ-ள்.) அவ்வுரையவையின்முன்பு நம்பியாரூரர்சொல்ல = அவ்வாறான மொழியை அச்சபையார் முன்பு நம்பியாரூரர் எடுத்துச்சொல்ல ; செவ்விய மறையோர் = நடுவுநிலைமையையுடைய மறையவர்கள் ; நின்றதிருமறைமுனியை நோக்கி = அங்குநிற்கின்ற சிவபிரானாகிய மறையவரைப்பார்த்து ; இவ்வுலகின்க ணீரின்று = இந்த உலகத்தில் இன்றைக்குநீர் ; இவரைநும்மடிமையென்றவெவ் வுரை = இந்நம்பியாரூரரை உம்முடைய அடியானென்றுசொன்ன தீமொழியை ; எம்முன்பேற்ற வேண்டுமென்றுரைத்துமீண்டும் = எங்களுக்குமுன்னே உறுதிப் படுத்தவேண்டுமென்று சொல்லிப்பின்னும் சொல்லுவார்.—எ-று. (ருரு)

ஆட்சியி லாவணத்தி லன்றிமற் றயலார்தங்கள்
காட்சியின் மூன்றிலொன்று காட்டுவா யென்னமுன்னே
மூட்சியிற் கிழித்தவோலை படியோலை மூலவோலை
மாட்சியிற் காட்டவைத்தே னென்றனன் மாயைவல்லான்.

(இ-ள்.) ஆட்சியிலாவணத்திலன்றி = ஆட்சியேதுவும் ஆவணமேதுவும் அல்லாமல் ; அயலார்தங்கள் காட்சியில் = அயலார்சொல்லும் சாட்சி ஏதுவுமாகிய ; மூன்றிலொன்று காட்டுவாயென்ன = இம்மூன்றிலொன்றை (இந்நம்பியாரூரர் உமக்கடிமையென்பதற்குக்) காட்டுமென்றுசொல்ல ; மாயைவல்லான் =

மாயையில்வல்ல அச்சிவபிரானாகிய மறையவர்; முன்னே மூட்சியிற் கிழித்த ஓலைபடியோலை = முன்பு இவன் கோபத்தாற் கிழித்த ஓலையானது மூலஓலையைப்பார்த்தெழுதியபடி யோலையாம்; மூலவோலைமாட்சியிற் காட்டவைத்தேனென்றனன் =மூலசாசனம் என்னும் ஆவணத்தைப் பெருமையோடு காட்டும்படி வைத்திருக்கின்றேனென் றருளிச்செய்தார்.—எ-று. மற்று, அசை. (ருசு)

விவகாரம் நிச்சயித்தற்குரிய இம்மூன்றனுள் ஒன்றுவதிருந்தாலன்றி அந்நிச்சயம் கூடாமையின் மூன்றிலொன்று காட்டுவாயென்றார். இல், ஈண்டு எண்ணின்கண்வந்தசாரியை. இம்மூலசாசனத்தால் விவகாரநிச்சயஞ்செய்யுங்களென்பது குறிப்பெச்சம்.

> வல்லையேற் காட்டிங்கென்ன மறையவன் வலிசெய்யாமற்
> சொல்லநீர் வல்லீராகிற் காட்டுவே னென்றுசொல்லச்
> செல்வநான் மறையோர்நாங்க டீங்குற வொட்டோமென்றார்
> அல்லநீர்த் தாளநின்று ராவணங்கொண்டு சென்றார்.

(இ-ள்.) வல்லையேற்காட்டிங்கென்ன = (அச்சபையிலுள்ள மறையவர்கள் சிவபிரானாகிய மறையவரைப்பார்த்து மூலசாசனத்தைக்காட்ட) வல்லபமுடையையேல் இங்குகாட்டுவாயென்று சொல்ல; மறையவன் வலிசெய்யாமற் சொல்லநீர்வல்லீராகிற் காட்டுவேனென்றுசொல்ல=இந்தநம்பியாரூரன் இம்மூலஓலையையும் பறித்துக் கிழிக்காமலிருக்கும்படி சொல்ல நீங்கள் வல்லவர்களானால் அதைக்காட்டுகின்றேனென்றுகூற; செல்வநான்மறையோர்நாங்கள் தீங்குறவொட்டோமென்றார்=செல்வமிக்க அம்மறையவர்கள் அவ்வாறு அதைத் தீங்குவராமல் நாங்கள் பாதுகாப்போமென்று சொன்னார்; அல்லநீர்த்தாளநின்றுராவணங்கொண்டுசென்றார்=நம்பியாரூரரைப் பிறவித்துன்பத்தினின்றுந் தடுத்தாட்கொள்ளும்படி மறையவர்வேடங்கொண்டு நின்ற சிவபிரான் ஆவணஓலையை எடுத்துக்கொண்டுவந்தார்.—எ-று. (ருஎ)

> இருண்மறை மிடற்றோன்கையி லோலைகண் டவையோரேவ
> அருள்பெறு கரணத்தானு மாவணந் தொழுதுவாங்கிச்
> சுருள்பெறு மடியைநீக்கி விரித்ததன் றொன்மைநோக்கித்
> தெருள்பெறு சவையோர்கேட்ப வாசகஞ்செப்பு கின்றான்.

(இ-ள்.) இருண்மறைமிடற்றோன்கையில் ஓலைகண்டவையோரேவ=கருநிறத்தை மறைத்த கண்டத்தினையுடைய சிவபிரான் திருக்கரத்தில் இருக்கும் ஓலையைப்பார்த்துச் சபையிலுள்ளவர்கள் கட்டளையிட; அருள்பெறு கரணத்தானும்=அவரனுமதியைப்பெற்ற கணக்கனும்; ஆவணந்தொழுதுவாங்கி = அவ்வாவணஓலையை வணங்கிக்கையில் வாங்கிக்கொண்டு; சுருள்பெறுமடியைநீக்கிவிரித்து=சுருளாயிருக்கின்ற மடிப்பை நீக்கிவிரித்து; அதன்தொன்மைநோக்கி = அதனது பழமையைப்பார்த்து; தெருள்பெறுசவையோர்கேட்ப வாசகஞ்செப்புகின்றான்=(அறநூலுணர்ச்சியாற்) றெளிவடைந்த சபையார்கேட்கும்படி அதிலெழுதிய வாசகத்தை வாசிக்கத்தொடங்கினான்.—எ-று. (ருஅ)



சிவபெருமான் சபையார்க்குமுன் மூலவோலையைக்காட்டி சுந்தரர் தமக்கு அடிமையென தாபித்தது.

இவ்வாவணம் தொன்மையதா புதிதா என்னும் ஐயத்தைச் சபையார்க்கு விளக்குங்காரணமாய் நோக்கினனென்பது தோன்ற அதன்றொன்மைநோக்கி என்றார்.

அருமறை நாவலாதி சைவனு ரூரன்செய்கை
பெருமுனி வெண்ணைநல்லூர்ப் பித்தனுக் கியானுமென்பால்
வருமுறை மரபுளோரும் வழித்தொண்டு செய்தற்கோலை
இருமையா லெழுதிநேர்ந்தே னிதற்கிவை யென்னெழுத்து.

(இ-ள்.) அருமறை நாவலாதிசைவனூரன் செய்கை=அரியவேதத்தை யுணர்ந்த திருநாவலூரிலிருக்கும் ஆதிசைவமறையவனாகிய ஆரூரன் உடன்பாடு; பெருமுனிவெண்ணை நல்லூர்ப்பித்தனுக்கு = பெரியமுனி வரனாகிய திருவெண்ணை நல்லூரில்வாழும் (பித்தனென்னும்) மறையவனுக்கு; யானுமென்பால் வருமுறைமரபுளோரும்=யானும் என்மரபில் வருகின்ற சந்ததியாரும்; வழித்தொண்டுசெய்தற்கு=வழிவழி அடிமைசெய்தற்கு ; ஓலைஇருமையாலெழுதிநேர்ந்தேன்=இவ்வாவணத்தை உள்ளும்புறம்பும் ஒத்து எழுதிக்கொடுத்தேன்; இதற்கிவை என்னெழுத்து = இப்படிக்கு இவையென் கையெழுத்தாம்.—எ-று.(ருகூ)

உடன்பாடு=உடன்படிக்கை. ஆரூரன்-என்பது பாட்டன் பெயராதலின் நம்பியாரூரருக்கும்அப்பெயரேஇட்டனரென்க. வழிவழி அடிமையாவது:—மூதாதைசெய்ததுபோல் தாதையும் தாதைசெய்ததுபோல் தநயனும்செய்தல்.

வாசகங் கேட்டபின்னர் மற்றுமே லெழுத்திட்டார்கள்
ஆசிலா வெழுத்தைநோக்கி யவையொக்கு மென்றபின்னர்
மாசிலா மறையோரையா மற்றுங்கள் பேரனார்தந்
தேசுடை யெழுத்தேயாகிற் றெளியப்பார்த் தறிதியென்றார்.

(இ-ள்.) வாசகங்கேட்டபின்னர்=இவ்வாறெழுதிய வாசகத்தைக்கேட்டபின்பு ; மற்றுமேலெழுத் திட்டார்கள்=வாசகவெழுத்தல்லாத சாட்சியெழுத்திட்டவர்கள்; ஆசிலா வெழுத்தைநோக்கி = குற்றமில்லாத தங்களெழுத்தைப் பார்த்து ; அவையொக்குமென்றபின்னர்=அவைகள் ஒத்திருக்கின்றன என்று கூறியபின்பு; மாசிலாமறையோர் = குற்றமற்ற அம்மறையவர்கள் ; ஐயா=நம்பியாரூரரே; உங்கள்பேரனார்தந்தேசுடையெழுத்தேயாகில்=உம்முடைய பாட்டனரது மெய்ம்மையான எழுத்தா யிருக்குமாகில் ; தெளியப்பார்த் தறிதியென்றார் = நன்றாகப்பார்த்துணர்வீ ரென்றார்கள்.—எ-று. மற்று, இரண்டும் முன்னையது பிறிதென்னும்பொருளும் பின்னையது அசையுமாய் நின்றன. (கூ0)

அந்தணர் கூறவின்னு மாளோலை யிவனேகாண்பான்
றந்தைதன் றந்தைதான்வே றெழுதுகைச் சாத்துண்டாகில்
இந்தவா வணத்ினோடு மெழுத்துநீ ரொப்புநோக்கி
வந்தது மொழிமினென்றான் வலியவாட் கொள்ளும்வள்ளல்.

(இ-ள்.) அந்தணர்கூற = அச்சபையிலுள்ள மறையவர்கள் இவ்வாறு சொல்ல; இன்னுமாளோலை யிவனேகாண்பான்=இன்னமும் அடிமையோலையை

இந்நம்பியாரூர ஓகாணவல்லவன் ; தந்தைதன் றந்தைதான் வேறெழுதுகைச் சாத்துண்டாகில்=இவன்பாட்டன் இதுவன்றிவேறே எழுதியிருக்கும் கைச்சாத்து கள் இருக்குமாகில்; இந்தவாவணத்தினோடு மெழுத்துநேரொப்புநோக்கி = இந்த ஆவண ஓலையோடு எழுத்துக்கள்நேராக ஒத்துப்பார்த்து; வந்தது மொழியினென் றன்=ஒக்கும் ஒவ்வாதென்று உங்கள்மனதில் உதித்த நியாயத்தைச் சொல்லுங் களென்றுசொன்னார்; வலியவாட்கொள்ளும் வள்ளல்=அடியார்களை வலியவந்து தடுத்தாட்கொள்ளுங் காருண்ணியமுடைய கடவுள்.—எ-று. (கூக)

இன்னும் என்பதில் உம்மை முன்ஆவணம் கிழித்தானென்பதைத் தழுவி நிற்றலில் இறந்ததுதழீஇநின்றது. சிறவனுதலில் பாட்டன்கையெழுத்தை அறி யானென்பது தோன்ற இவனேகாண்பானென்றார். கைச்சாத்து கையெழுத்தெ னினும் கைச்கணக்கெனினு மொக்கும்.

திரண்டமா மறையோர்தாமுந் திருநாவ லூரர்கோமுன்
மருண்டது தெளியமற்றை மறையவ னெழுத்தாலோலை
யரண்டரு காப்பில்வேறொன் றழைத்துட னொப்புநோக்கி
இரண்டுமொத் திருந்ததென்னே யினிச்செய லில்லையென்றார்.

(இ-ள்.) திரண்டமாமறையோர்தாமும்=கூடியிருக்கும் பெருமையுடை த்தாகிய அச்சபையிலுள்ள மறையவரும்; திருநாவலூரர்கோமுன் = நம்பியா ரூரர் முன்பு ; மருண்டதுதெளிய=சந்தேகந்தெளியும்படி; மற்றைமறையவனெ ழுத்தால் = அப்பாட்டனுடைய எழுத்தால்; அரண்டருகாப்பில் ஓலைவேறொன் றழைத்து=அவர்வீட்டில் காவலான இடத்தில் வைத்திருக்கும் கைச்சாத்துள் வேறொன்றை அழைப்பித்து; உடன்ஒப்புநோக்கி=இத்துடன் ஒத்துப்பார்த்து; இரண்டுமொத்திருந்ததென்னே இனிச்செயலில்லையென்றார்=பின்இரண்டும் ஒத் திருக்கின்றது இது என்னஆச்சரியம் (உமக்கு மறுத்தற்கு) இனிச்செயலில்லையெ ன்று சொன்னார்கள்.—எ-று, (கூஉ)

நான்மறை முனிவனார்க்கு நம்பியா ரூரர்தோற்றீர்
பான்மையி னேவல்செய்தல் கடனென்று பண்பின்மிக்க
மேன்மையோர் விளம்பநம்பி விதிமுறை யிதுவேயாகில்
யானிதற் கிசையேனென்ன விசையுமோ வென்றுநின்றார்.

(இ-ள்.) நான்மறைமுனிவனார்க்கு=நான்குவேதங்களையுமுணர்ந்த இம்ம றையவருக்கு; நம்பியாரூரர்தோற்றீர்=நம்பியாரூரே நீர்வழக்கில் தோற்றுவிட் டீர் (அதனால்); பான்மையினேவல் செய்தல் கடனென்று = அவர்கூறியவாறு பணிசெய்வதே உமக்குக்கடனென்று; பண்பின்மிக்க மேன்மையோர்விளம்ப= நற்குணங்களால் மிக்கமேன்மையினையுடைய அச்சபையார்கூற; நம்பிவிதிமுறை யிதுவேயாகில்=அதைக்கேட்டநம்பியாரூரர் ஊழ்முறையிவ்வாறாயின்; யானிதற் கிசையே னென்னவிசையுமோவென்று நின்றார் = யானிதற்கு உடன்படேனெ ன்று மறுக்கக்கூடாதென்று உடன்பாடு கூறிநின்றார்.—எ-று. (கூங)

திருவெண்ணெய்நல்லூர் திருவருட்டுறைக்கு வழிகாட்டிவந்த விருத்தப்பிராமண வேடங்கொண்ட எம்பெருமான்.
மறைய சுந்தரர் பண்டையுணர்ச்சியை யுணர்ந்து வருந்த சிவபெருமான் இடபாரூடராய் தரிசனங்கொடுத்தது.

விதிமுறை என்றதனால் ஊழேயன்றி இவர்க்குயான் அடிமைசெய்தல்தொன்றுதொட்ட முறையென்பதும், நின்றார் என்றதனால் ஒருவாறுடன்பட்டாரென்பதும் போந்தவாறு காண்க.

திருமிகு மறையோர்நின்ற செழுமறை முனியைநோக்கி
அருமுனி நீர்முன்காட்டு மாவண மதனிலெங்கள்
பெருமைசேர் பதியேயாகப் பேசிய துமக்கிவ்வூரில்
வருமுறை மனையுநீடு வாழ்க்கையுங் காட்டுகென்றார்.

(இ-ள்.) திருமிகு மறையோர்நின்ற செழுமறை முனியைநோக்கி = செல்வமிக்க அம்மறையவர்கள் அங்குநிற்கும் சிவபிரானாகிய மறையவரைப் பார்த்து; அருமுனி நீர்முன்காட்டு மாவணமதனில் = அரிய மறைமுனிவரே நீர் முன்னேகாட்டிய ஆவண ஓலையில்; எங்கள் பெருமைசேர் பதியேயாகப்பேசியது = (உம்முடைய ஊர்) எங்கள் திருவெண்ணெ நல்லூரென்று காட்டப்பட்டது (அதனால்); உமக்கிவ்வூரில்வருமுறைமனையு நீடுவாழ்க்கையுங்காட்டுகென்றார் = உமக்கு இந்த ஊரில் தலைமுறையாகவந்த மனையையும் நிலைமையான காணியாட்சி முதலிய வாழ்வையுங் காட்டுமென்று கூறினார்.—எ-று. (கசச)

வாழ்க்கை என்பது, வாழ்க்கைக்குரிய பொருள்களையுணர்த்திற்று.

பொருவரும் வழக்கால்வென்ற புண்ணிய முனிவரென்னை
யொருவரு மறியீராகிற் போதுமென் றுரைத்துச்சூழ்ந்த
பெருமறை யவர்குழாமு நம்பியும் பின்புசெல்லத்
திருவருட் டுறையேபுக்கார் கண்டிலர் திகைத்துநின்றார்.

(இ-ள்.) பொருவரும்வழக்கால்வென்ற புண்ணியமுனிவர் = ஒப்பற்றவழக்கினால் வெற்றிகொண்ட புண்ணியமேவடிவமாகக்கொண்ட சிவபிரானாகிய மறையவர்; என்னையொருவருமறியீராகிற் போதுமென்றுரைத்து; (இவ்வளவு முதியோர்களில்இவ்வூரில் மனையும்நீடுவாழ்க்கையுமுடைய என்னை) ஒருவரும் அறியாமலிருப்பீரானால் (காட்டுகின்றேன்) வாருங்களென்றுசொல்லி; சூழ்ந்தபெருமறையவர்குழாமும் நம்பியும்பின்பு செல்ல = தம்மைச்சூழ்ந்த பெருமையுடைத்தாகிய மறையவர்கூட்டமும் நம்பியாரூரரும் பின்னேசெல்லும்படி; * திருவருட்டுறையேபுக்கார் கண்டிலர்திகைத்துநின்றார் = (அவ்வூரிலுள்ள) திருவருட்டுறையென்னும் ஆலயத்தட்புகுந்தார் (அதன்பின்பு) அவர்கள் அவரைக்காணாமல் திகைத்து நின்றார்கள்.—எ-று. (கசரு)

எம்பிரான் கோயினண்ண விலங்குநூன் மார்பனெங்க
ணம்பர்தங் கோயில்புக்க தென்கொலோ வென்றுநம்பி
தம்பெரு விருப்பினோடு தனிதொடர்ந் தழைப்பமாதோ
டும்பரின் விடைமேற்றோன்றி யவர்தமக் குணர்த்தலுற்றார்.

(இ-ள்.) எம்பிரான்கோயினண்ண = (மறையவர் வடிவங்கொண்டுவந்த) சிவபிரான் அத்திருக்கோயிலுக்குட்சென்று (மறைந்தருள); இலங்குநூன்மார்ப

* திருவருட்டுறை - என்பது அவ்வூராலயத்தின்பெயர்.

ன்=(நம்மை அடிமையென்றுசாதித்த) விளங்குகின்ற பூணூலையுடைத்தாகிய மார்பினையுடையமறையவர்; எங்கணம்புர்தங்கோயில் புக்கதென்கொலோ வென்று நம்பி=எமதுபிரானர் வீற்றிருக்கும் ஆலயத்துட்புகுந்தது என்னஆச்சரியமென்று நம்பியாரூரர் ; தம்பெருவிருப்பினோடும்=தம்மிடத்துதித்த பெருவிருப்போடும் ; தனிதொடர்ந்தழைப்ப=தனியேசென்றழைக்குங்கால்;மாதோடும்பரின் விடைமேற்றோன்றி=சிவபிரான் உமாதேவியாரோடு இடபவாகனத்தின்மேலெழுந்தருளி; அவர்தமக்குணர்த்தலுற்றார்= அந்நம்பியாரூரருக்கு அருளிச்செய்கின்றார்.-எ-று.

சிவபிரானாகிய மறையவரைக்கண்டதுமுதல் ஒருசிறிதாய் ஐயப்பாட்டாற்றகையப்பட்டு உதித்துள்ள அன்பு அத்தகைவின்றிப் பேரன்பாயுதித்தலில் தம்பெருவிருப்பினோடு மென்றும், உடன்வந்த ஏனையமறையவர்கள் அவரைத்தரிசிக்கும் புண்ணியமுடையரேனும் அச்சிவபிரான் திருவருளுக்குப் பாத்திரரல்லராதலில் நம்பி தனிதொடர்ந்தழைப்ப என்றுங் கூறினரென்க. முன் ஐயமும் அன்பும் ஒருங்குநிகழ்ந்ததென்னெனின் அருளுதிப்பாலன்பும் திரோதானம்முற்றும் நீங்காமையால் ஐயமும் நிகழ்ந்ததென்க.

முன்புநீ நமக்குத்தொண்டன் முன்னிய வேட்கைகூரப்
பின்புநம் மேவலாலே பிறந்தனை மண்ணின்மீது
துன்புறு வாழ்க்கைநின்னைத் தொடர்வறத் தொடர்ந்துவந்து
நன்புல மறையோர்முன்னர் நாந்தடுத் தாண்டோமென்றார்.

(இ-ள்.) முன்புநீ நமக்குத்தொண்டன் = முற்பிறப்பில் நீ நமக்கு அடியனாய் இருந்தாய் ; முன்னிய வேட்கைகூர=மாதரைக்கருதிய விருப்பு மிகுதியால் ; பின்புநம் மேவலாலே பிறந்தனை மண்ணின்மீது=பின் நம்முடைய அநுமதியினால் பூமியிலே பிறந்தாய் (அதனால்); துன்புறு வாழ்க்கை நின்னைத்தொடர்வற=துன்பத்தை விளைக்கும் இல்வாழ்க்கையானது உன்னைத்தொடராமல்; நாம் தொடர்ந்துவந்து=நாமே வலியத்தொடர்ந்துவந்து ; நன்புல மறையோர் முன்னர்=நல்லுணர்வினையுடைய மறையவர்களுக்கு முன்னே; தடுத்தாண்டோமென்றார்=தடுத்தாட் கொண்டோமென் றருளிச்செய்தார்.—எ-று. (௬௭)

என்றெழு மோசைகேளா வீன்றவான் கனைப்புக்கேட்ட
கன்றுபோற் கதறிநம்பி கரசர ணாதியங்கந்
துன்றிய புளகமாகத் தொழுதகை தலைமேலாக
மன்றுளீர் செயலோவந்து வலியவாட் கொண்டதென்றார்.

(இ-ள்.) என்றெழு மோசைகேளா=இவ்வாறு சிவபிரானருளிச்செய்த திருவாக்கைக்கேட்டு; ஈன்றவான்கனைப்புக் கேட்ட கன்றுபோற்கதறி நம்பி = தன்னையீன்ற பசுவினது உங்காரத்தைக்கேட்ட கன்றைப்போல நம்பியாரூரர் அலறி; கரசரணாதியங்கந்துன்றிய புளகமாக = கைகால்முதலிய அவயவங்களில் நெருங்கி யெழுந்த மயிர்க்கூச்சானது உண்டாக ; தொழுதகைதலை மேலாக= குவித்தெடுத்த கரங்கள் சிரசின்மேலேற ; மன்றுளீர் செயலோவந்து வலியவாட்கொண்ட தென்றார் = அம்பலத்தில் ஆனந்த நிருத்தஞ்செய்தருளும் பிரானே

உம்முடைய செய்கையோ இவ்வாறு வலியவந்து தடுத்தாட்கொண்டதென்று விண்ணப்பஞ்செய்தார்.—எ-று. (கூஅ)

எண்ணிய வோசையைந்தும் விசும்பிடை நிறையவெங்கும்
விண்ணவர் பொழிபூமாரி மேதினி நிறைந்துவிம்ம
மண்ணவர் மகிழ்ச்சிபொங்க மறைகளு முழங்கியார்ப்ப
அண்ணலை யோலைகாட்டி யாண்டவ ரருளிச்செய்வார்.

(இ-ள்.) எண்ணிய ஓசையைந்தும் விசும்பிடை நிறைய=யாவரும் அறியும்படி ஐந்து துந்துபிகளின் ஓசையும் ஆகாயத்தில் நிறையவும்; எங்கும் விண்ணவர் பொழிபூமாரி மேதினிநிறைந்து விம்ம=எவ்விடத்தும் தேவர்கள் சொரிகின்ற மலர்மழையானது பூமியில் நிறைந்து மேற்படவும்; மண்ணவர் மகிழ்ச்சி பொங்க=மண்ணுலகத்தார் மகிழ்ச்சியடையவும்; மறைகளு முழங்கியார்ப்ப=வேதங்களும் மிகுதியாக ஆரவாரிக்கவும்; அண்ணலை யோலைகாட்டி யாண்டவ ரருளிச்செய்வார்=நம்பியாரூரரை ஆவண ஓலைகாட்டித் தடுத்தாட்கொண்ட சிவபிரான் இவ்வாறருளிச்செய்வாராயினர். (கூகூ)

மற்றுநீ வன்மைபேசி வன்றொண்ட னென்னுநாமம்
பெற்றனை நமக்குமன்பிற் பெருகிய சிறப்பின்மிக்க
அர்ச்சனை பாட்டேயாகு மாதலான் மண்மேனம்மைச்
சொற்றமிழ் பாடுகென்றார் தூய்மறை பாடும்வாயார்.

(இ-ள்.) மற்றுநீவன்மைபேசி வன்றொண்டனென்னுநாமம் பெற்றனை=அதுவன்றிப் பின்னும் நீ என்னுடன்வன்மையான வாதைச்சொல்லி வன்றொண்டனென்னும் பெயரையடைந்தாய்; நமக்குமன்பிற்பெருகிய சிறப்பின்மிக்க அர்ச்சனைபாட்டேயாகும் ஆதலால்=நமக்கும் அன்பினால் செய்யும் பெருஞ்சிறப்பாகிய ஆராதனைகளிலும் மேலான அர்ச்சனையாவது துதிரூபமான செய்யுள்களேயாம் ஆதலால்; மண்மேனம்மைச் சொற்றமிழ்பாடுகென்றார்=பூமியில் நம்மைச்செய்யுட்கமைந்த சொற்களையுடைய தமிழினால்பாடென்றருளிச்செய்தார்; தூய்மறைபாடும்வாயார்=தூய்மையான வேதங்களை ஆதிகாலத்தில் அருளிச்செய்த திருவாக்கினையுடைய சிவபிரான்.—எ-று. பாடுகவென்றது குறைந்துநின்றது.

தேடிய வயனுமாலுந் தெளிவுறா தைந்தெழுத்தும்
பாடிய பொருளாயுள்ளான் பாடுவாய் நம்மையென்ன
நாடிய மனத்தராகி நம்பியா ரூரர்மன்றுள்
ஆடிய செய்யதாளை யஞ்சலி கூப்பிநின்று.

(இ - ள்.) தேடியவயனுமாலுந்தெளிவுறாது = முன்னாளில் முடியையும் அடியையுந்தேடிய அயனும் மாலுங்காணாமல் (மறைந்து); ஐந்தெழுத்தும்பாடிய பொருளாயுள்ளான் = திருவைந்தெழுத்துங் கூறும் வாச்சியப்பொருளாயுள்ள சிவபிரான்; பாடுவாய்நம்மையென்ன = நம்மைப்பாடுவாயென்றருளிச்செய்ய; நாடியமனத்தராகி=சிவபெருமான் திருவருளைப்பற்றுங் கருத்துடையராய்; நம்பி

யாரூரர்மன்று ளாடியசெய்யதாளை யஞ்சலிகூப்பிநின்று = நம்பியாரூரர் திருவம்பலத்தின்கண் நிருத்தஞ்செய்தருளும் சிவந்த திருவடிகளைக் கைகுவித்து வணங்கிநின்று.—எ-று. (௭௧)

ஐந்தெழுத்தும்பாடியபொருளாவன:—தூலசூக்குமகாரணமென்னுந் திருவைந்தெழுத்தின் பகுதிக்குரிய பொருள்கள். சுத்தமெனினும் காரணமெனினு மொக்கும்.

வேதிய னாகியென்னை வழக்கினால் வெல்லவந்த
ஊதிய மறியாதேனுக் குணர்வுதந் துய்யக்கொண்ட
கோதிலா வமுதேயின்றுன் குணப்பெருங் கடலைநாயேன்
யாதினை யறிந்தென்சொல்லிப் பாடுகே னெனமொழிந்தார்.

(இ - ள்.) வேதியனாகி என்னைவழக்கினால்வெல்லவந்த = மறையவனாய் அடியேனை வழக்குக்கூறி வெல்லவந்த; ஊதியமறியாதேனுக்கு=இலாபத்தை அறியாத அடியேனுக்கு; உணர்வுதந்து=பண்டையுணர்வைக்கொடுத்து; உய்யக்கொண்ட கோதிலாவமுதே = உலகவாழ்வினின்றும் பிழைக்கும்படி தடுத்தாட்கொண்ட குற்றமற்ற அமுதம்போல்வாரே; இன்றுன்குணப்பெருங்கடலை=இன்றைக்கு உம்முடைய நிரதிசயகுணமாகிய பெரியகடலை; நாயேன்யாதினையறிந்தென்சொல்லிப்பாடுகேனெனமொழிந்தார் = நாய்க்கொப்பான யான் எக்குணத்தையறிந்து எவ்வண்ணம்பாடுவேனென்று விண்ணப்பஞ்செய்தார்.—எ-று. (௭௨)

சிவபிரான் மானிடவடிவங்கொண்டெழுந்தருளிய பெருமைதோன்ற வேதியனாகி என்றும், தான் ஒன்றுக்கும் பற்றாத சிறியனென்பதுதோன்ற என்னை என்றும், அவ்வித சிறுமையுடைய தன்னைத் தடுத்தாட்கொள்ளவந்த பெருங்கருணைதோன்ற ஊதியமறியாதேனுக்கென்றும், பண்டையுணர்வுதந்து தடுத்தாட்கொண்டமையின் உணர்வுதந்துய்யக்கொண்ட என்றும், பேரின்பம்விளைத்து உயிர்க்குறுதிபயத்தலில் அமுதினும் உயர்வுதோன்றக் கோதிலாவமுதென்றும், முன் இழித்துக்கூறினேனென்பதுதோன்ற இன்றென்றும், உலகத்தைக்காக்கும் பேரருளுடைமைமுதலியதோன்றக் குணப்பெருங்கடலென்றும், அவ்வநேக குணங்களுள் ஒன்றையேனும் என்னாலறிந்துசொல்லக்கூடாது என்பதுதோன்ற யாதினையறிந்தென்றும், அறியாது பாடக்கூடாமையின் என்சொல்லிப்பாடுகேனென்றுங்கூறினரென்க.

அன்பனை யருளினோக்கி யங்கண ரருளிச்செய்வார்
முன்பெனைப் பித்தனென்றே மொழிந்தனை யாதலாலே
என்பெயர் பித்தனென்றே பாடுவா யென்றார்நின்ற
வன்பெருந் தொண்டராண்ட வள்ளலைப் பாடலுற்றார்.

(இ-ள்.) அன்பனையருளினோக்கி=தமது அடியவராகிய நம்பியாரூரரைக்கிருபையோடுபார்த்து; அங்கணரருளிச்செய்வார்=அழகிய காருண்ணியத்தையுடைய சிவபிரான் அருளிச்செய்கின்றார்; முன்பெனைப்பித்தனென்றே மொழிந்தனையாதலாலே = முன்னே எம்மைப்பித்தனென்றுசொன்னாய் அதனால்;

என்பெயர்பித்தனென்றே பாடுவாயென்றார்=என்பெயர்பித்தனென்றே பாடெ ன்றருளிச்செய்தார்; நின்றவன்பெருந்தொண்டர்=அங்கு நின்ற பெருமையினை யுடைய வன்றொண்டர்; ஆண்டவள்ளலைப்பாடலுற்றார் = தம்மைத் தடுத்தாட் கொண்டபிரானைப் பாடத்தொடங்கினார்.—எ - று. (எரு)

சிவபிரானுக்குப் பித்தாவது— அடியவரைக்காக்கும் பெருங்கருணை யேயென்க.

வேறு.

கொத்தார்மலர்க் குழலாளொரு கூறாயடி யவர்பால்
மெய்த்தாயினு மினியானையவ் வியனாவலர் பெருமான்
பித்தாபிறை சூடியெனப் பெரிதாந்திருப் பதிகம்
இத்தாரணி முதலாவுல கெல்லாமுய வெடுத்தார்.

(இ-ள்.) கொத்தார்மலர்க் குழலாளொருகூறாய் = கொத்தாகமலர்ந்த மலர்களை முடித்தகூந்தலையுடைய உமாதேவியாரை (இடப்பாகத்தில்) ஒருகூறாய டக்கி; அடியவர்பால் மெய்த்தாயினுமினியானை = அடியவர்களிடத்து மெய்ய ன்புடையதாயினும் இனிய சிவபிரானை; அவ்வியனாவலர்பெருமான்=இடமகன்ற திருநாவலூரினுள்ளார்க்கு முதல்வராகிய அவ்வன்றொண்டர்; பித்தாபிறைசூடி யெனப் பெரிதாந் திருப்பதிகம்=பித்தாபிறைசூடியென்னும் முதலையுடைய பெ ருமையுடைத்தாகிய திருப்பதிகத்தை; இத்தாரணிமுதலாவுலகெல்லாமுய எடுத் தார் =இந்த நிலவுலகமுதலாகிய எல்லாவுலகத்தாரும் கதியடையும்பொருட்டு எடுத்தருளினார்.—எ-று. (எச)

முறையால்வரு மருத்தத்துடன் மொழியிந்தள முதலிற்
குறையாநிலை மும்மைப்படி கூடுங்கிழ மையினா
னிறைபாணியி னிசைகோள்புணர் நீடும்புகல் வகையால்
இறையான்மகி ழிசைபாடின னெல்லாநிக ரில்லான்.

(இ-ள்.) முறையால் வருமருத்தத்துடன்=ஒன்றன்பின் ஒன்றாய் உதித் துப்பின் ஒருங்கி ஓர்காலத்துதிக்கும் வாக்கியப்பொருளோடு; முதலில்மொழியிந் தளம்=முதலிலேஎடுத்துப்பாடுகின்ற இந்தளமென்னும் பண்ணையுடைய அத்தி ருப்பதிகத்தை; மும்மைப்படி குறையாநிலை கூடுங்கிழமையினால் = நலிதல்படுத் தல் எடுத்தல் என்னும் இசைவேறுபாடு குறையாமற் பொருந்தும் முறைமையினா லும்; நிறைபாணியினிசைகோள்புணர் நீடும்புகல் வகையால்=நிறைந்த தாளத் தில் இசையின்பகுதி புணர்ந்து மிக அமையும் வகைமையானும்; இறையான்மகி ழிசைபாடினன்=சிவபிரான் மகிழ்தற்குக் காரணமாக இசையோடுபாடினர்; எல் லாநிகரில்லான்=எல்லாமேன்மையினாலும் தமக்குப் பிறரொப்பில்லாத வன்றொ ண்டர்.—எ-று. (எரு)

கண்டவாக்கியப் பொருளின்பின்பு அகண்டவாக்கியப்பொருள் களகவுத நியாயத்தால் ஒருங்குதித்தலில், முறையால் வருமருத்தத்துடன் என்றார். குறை யாநிலையாவது:—இராகத்திற்கேற்க எடுத்தல்படுத்தல் முதலிய ஓசைகளிற் குறை

யாமை. பாணி=தாளம். இசைகோள்=இசையின்கொள்கை. தாளத்திற்கிசையப் பண்ணமைதலில் பாணியின் இசைகோள் என்றார்.

---

திருவெண்ணெய் நல்லூர் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

பித்தாபிறை சூடிபெரு மானேயரு ளாளா
வெத்தான்மற வாதேநினைக் கின்றேன்மனத் துன்னை
வைத்தாய்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறையு
ளத்தாவுனக் காளாயினி யல்லேனென லாமே. (க)

நாயேன்பல நாளுநினைப் பின்றிமனத் துன்னைப்
பேயாய்த்திரிந் தெய்த்தேன்பெற லாகாவருள் பெற்றேன்
வேயார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறையு
ளாயாவுனக் காளாயினி யல்லேனென லாமே. (உ)

மன்னேமற வாதேநினைக் கின்றேன்மனத் துன்னைப்
பொன்னேமணி தானேவயி ரம்மேபொரு துந்தி
மின்னார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறையு
ளன்னேயுனக் காளாயினி யல்லேனென லாமே. (ங)

முடியேனினிப் பிறவேன்பெறின் மூவேன்பெற்ற மூர்தி
கொடியேன்பல பொய்யேயுரைப் பேனைக்குறிக் கொண்ணீ
செடியார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறையு
ளடிகேளுனக் காளாயினி யல்லேனென லாமே. (ச)

பாதம்பணி வார்கள்பெறு பண்டம்மது பணியா
யாதன்பொரு ளானேனறி வில்லேனரு ளாளா
தாதார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறையு
ளாதீயுனக் காளாயினி யல்லேனென லாமே. (ரு)

தண்ணார்மதி சூடிதழல் போலுந்திரு மேனி
யெண்ணார் புரமூன்றுமெரி யுண்ணநகை செய்தாய்
மண்ணார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறையு
ளண்ணாவுனக் காளாயினி யல்லேனென லாமே. (சா)

ஊனாயுயி ரானாயுட லானாயுல கானாய்
வானாய்நில னானாய்கட லானாய்மலை யானாய்
தேனார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறையு
ளானாயுனக் காளாயினி யல்லேனென லாமே. (எ)

ஏற்றூர்புர மூன்றுமெரி யுண்ணச்சிலை தொட்டாய்
தேற்றாதன சொல்லித்திரி வேனோசெக்கர் வானீ
ரேற்றாய்பெண்ணைத் தென்பால்வெண்ணை நல்லூரருட் டுறையு
ளாற்றாவுனக் காளாயினி யல்லேனென லாமே. (அ)

மழுவாள்வல னேந்திமறை யோதிமங்கை பங்கா
தொழுவாரவர் துயராயின தீர்த்தலுன தொழிலே
செழுவார்பெண்ணைத் தென்பால்வெண்ணை நல்லூரருட் டுறையு
ளழகாவுனக் காளாயினி யல்லேனென லாமே. (கூ)

காரூர்புன லெய்திக்கரை கல்லித்திரைக் கையாற்
பாரூர்புக ழெய்தித்திகழ் பன்மாமணி யுந்திச்
சீரூர்பெண்ணைத் தென்பால்வெண்ணை நல்லூரருட் டுறையு
ளாரூரனெம் பெருமாற்கா ளல்லேனென லாமே. (கஂ)

திருச்சிற்றம்பலம்.

சொல்லார்தமி ழிசைபாடிய தொண்டன்றனை யின்னும்
பல்லாறுல கினினம்புகழ் பாடென்றுறு பரிசி
னல்லார் வெண்ணை நல்லூரருட் டுறைமேவிய நம்பன்
எல்லாவுல குய்யப்புர மெய்தானருள் செய்தான்.

(இ-ள்.) சொல்லார்தமிழிசைபாடிய = சொற்களால் நிறைந்த தமிழ்ப் பதிகத்தை இசையோடுபாடியருளிய; தொண்டன்றனை = வன்றொண்டப்பெருமானை; இன்னும்பல்லாறுலகினினம் புகழ்பாடென்றுறுபரிசில் = இன்னும்பலவகையால் நிலவுலகத்தின்கண் நமதுபுகழைப் பாடுவாயாக என்று மிக்க கருணையினால்; எல்லாவுலகுய்யப் புரமெய்தான் = எல்லாவுலகத்தாரும் உய்யும்படி திரிபுரங்களை யெரித்தருளியவராகிய; நல்லார்வெண்ணை நல்லூரருட்டுறைமேவிய நம்பன் = மெய்யன்பர்கள் வாழும் திருவெண்ணைநல்லூரில் திருவருட்டுறையில் வாழும் சிவபிரான்; அருள்செய்தான்=கட்டளையிட்டார்.—எ-று. (எசு)

அயலோர்தவ முயல்வார்பிற ரன்றேமண மழியுஞ்
செயலானிகழ் புத்தூர்வரு சிவவேதியன் மகளும்
உயர்நாவலர் தனிநாதனை யொழியாதுணர் வழியிற்
பெயராதுயர் சிவலோகமு மெளிதாம்வகை பெற்றாள்.

(இ-ள்.) அன்றேமணமழியுஞ்செயலால் = நம்பியாரூரரைத் தடுத்தாட்கொண்ட அத்தினத்திலே மணமழிந்தகாரணத்தால்; நிகர்புத்தூர்வருசிவவேதியன் மகளும்=தனக்குத்தானே நிகரானபுத்தூரில் வாழும் சடங்கவி சிவாசாரியர் குமாரியும்; உயர்நாவலர் தனிநாதனை=உயர்ந்த நாவலர்கோனாகிய நம்பியாரூரரை; ஒழியாதுணர்வழியிற்பெயராது = நீங்காமல் சிந்தித்துவரும் முறைமையினின்றுந் தவறாமல்; உயர்சிவலோகமும்=உயர்வாகிய சிவலோகத்தையும்; எளி

தாம்வகைபெற்ருள்=எளிதாகப்பெற்றுக் கொண்டாள்; பிறர் அயலோர் தவமுயல்வார்=அவ்வாறு பெறுதற்குப் பிறராயின் அயலிற்சென்று செபவிரதமுதலிய தவங்களைச் செய்வார்கள்.—எ-று. (எஎ)

ஏகாரம் தேற்றம். உம்மையிரண்டில் முன்னையது இறந்ததுதழீஇயது. பின்னையது உயர்வு சிறப்பு. ஓர்தவம்=சாதியொருமை. பிறர்க்குமணம் நேர்ந்து மணக்தவிர்ந்த மாதர்பிறர், தவமுயன்று அடையும் சிவபதத்தை இவள் நம்பியாரூரரையுணரும் வாயில்வழியாய் எளிதிலடைந்தாளென்பது கருத்து. அன்று, ஏ, அசையாகவுரைப்பினு மமையும்.

வேறு.

நாவலர்கோ ஞரூரன் றனைவெண்ணெ நல்லூரின்
மேவுமருட் டுறையமர்ந்த வேதியராட் கொண்டதற்பின்
பூவலருந் தடம்பொய்கைத் திருநாவ லூர்ப்புகுந்து
தேவர்பிரான் றனைப்பணிந்து திருப்பதிகம் பாடினார்.

(இ-ள்.) நாவலர்கோனாரூரன்றனை = திருநாவலூரரென்னும் நம்பியாரூரரை; வெண்ணெநல்லூரின்மேவு மருட்டுறையமர்ந்த= திருவெண்ணெநல்லூரின்கணுள்ள திருவருட்டுறையென்னும் ஆலயத்தில் வீற்றிருந்தருளும்; வேதியராட்கொண்டதற்பின்=மறையவர் தடுத்தாட்கொண்டதன்பின்பு; பூவலருந்தடம் பொய்கைத்திருநாவலூர்ப்புகுந்து=நீர்ப்பூக்களாகிய தாமரைமுதலிய மலர்தற்கிடமாயிருக்கும் பெருமையுடைத்தாகிய தடாகங்கள் சூழ்ந்த திருநாவலூரையடைந்து; தேவர்பிரான்றனைப்பணிந்து=சிவபிரானைவணங்கி; திருப்பதிகம்பாடினார்=அங்கு திருப்பதிகம்பாடியருளினார்.—எ-று. (எஅ)

---

திருவெண்ணெநல்லூரும் - திருநாவலூரும் - பண் - நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

கோவலனான்முகன் வானவர்கோனுங் குற்றேவல்செய்ய
மேவலர்முப்புரந் தீயெழுவித்தவ னோரம்பினு
லேவலனார்வெண்ணெ நல்லூரில்வைத்தென்னை யாளுங்கொண்ட
நாவலனார்க்கிட மாவதுநந்திரு நாவலூரே.

நாதனுக்கூர்நமக் கூர்நரசிங்க முனையரைய
ஞதரித்தீசனுக் காட்செயுமூரணி நாவலூரென்
றோதநற்றக்கவன் றொண்டனாரூர னுரைத்ததமிழ்
காதலித்துங்கற்றுங் கேட்பவர்தம்வினை கட்டறுமே.

திருச்சிற்றம்பலம்.

---

சிவனுறையுந் திருத்துறையூர் சென்றணைந்து தீவினையால்
அவநெறியே செல்லாமே தடுத்தாண்டா யடியேற்குத்
தவநெறிதந் தருளென்று தம்பிரான் முன்னின்று
பவநெறிக்கு விலக்காகுந் திருப்பதிகம் பாடினார்.

(இ-ள்.) சிவனுறையுந் திருத்துறையூர் சென்றணைந்து = சிவபிரான் வீற்றிருந்தருளும் திருத்துறையூரென்னுந் திருப்பதியை யடைந்து; தீவினையால் அவநெறியே செல்லாமே தடுத்தாண்டாய்=தீவினைகாரணமாய் பாவவழியில் செல்லாமல் தடுத்தாட்கொண்டவரே; அடியேற்குத் தவநெறிதந்தருளென்று=அடியேனுக்குத் தவமார்க்கத்தைக் கட்டளையிட்டருளுமென்று; தம்பிரான் முன்னின்று பவநெறிக்கு விலக்காகுந் திருப்பதிகம்பாடினார்=சிவபிரான் திருமுன்னே நின்று பிறவிக்கு மாறாகுந் திருப்பதிகத்தைப் பாடியருளினார்.—எ-று. (எக)

செல்லாமே என்பது மோஈற்று எதிர்மறைவினையெச்சம். தடுத்தாண்டான் என்னும் ஆனீற்றுவினையாலணையும்பெயர் ஆயாய்விளியேற்றது.

---

திருத்துறையூர் - பண் - தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

மலையாரரு வித்திரண் மாமணி யுந்திக்
குலையா ரக்கொணர்ந் தெற்றியோர் பெண்ணை வடபாற்
கலையா ரல்குற் கன்னியாடுந் துறையூர்த்
தலைவாவுனை வேண்டிக் கொள்வேன் றவநெறியே.

செய்யார் கமலம் மலர்நாவலர் மன்னன்
கையாற்றொழு தேத்தப்ப டுந்துறை யூர்மேற்
பொய்யாத் தமிழூர னுரைத்தன வல்லார்
மெய்யே பெறுவார்க டவநெறி தானே.

திருச்சிற்றம்பலம்.

---

புலனைன்றும் படிதவத்திற் புரிந்தநெறி கொடுத்தருள
அலர்கொண்ட நறுஞ்சோலைத் திருத்துறையூ ரமர்ந்தருளு
நிலவுந்தண் புனலுமொளிர் நீள்சடையோன் றிருப்பாத
மலர்கொண்டு போற்றிசைத்து வந்தித்தார் வன்றொண்டர்.

(இ-ள்.) புலனைன்றும்படி = ஐம்புலன்களும் தன்வசப்பட்டடங்கும் படி; தவத்திற்புரிந்தநெறிகொடுத்தருள=தவநெறியில் அவர்விரும்பியவழியைக் கொடுக்க; அலர்கொண்டநறுஞ்சோலைத் திருத்துறையூ ரமர்ந்தருளும் = மலர்களைத்தன்னிடத்துத் தாங்கிய நறுமணங்கமழுஞ் சோலைசூழ்ந்த திருத்துறையூரில் வீற்றிருந்தருளும்; நிலவுந்தண்புனலுமொளிர் நீள்சடையோன்=இளம்பிறையும் குளிர்ச்சியினையுடைத்தாகிய கங்காநதியும் விளங்காநின்ற நீண்டசடையினையுடைய சிவபிரானது; திருப்பாதமலர்கொண்டு போற்றிசைத்து=திருப்பாதங்களை மலரால் அருச்சித்து; வந்தித்தார் வன்றொண்டர்=தோத்திரஞ்செய்தார் நம்பியாரூரர்.—எ-று. (அ0)

ஈண்டு போற்றிசைத்தென்பது வழிபடுதலென்னும் பொருட்டாய் அருச்சித்தன்மேனின்றது.

திருத்துறையூர் தனைப்பணிந்து சிவபெருமா னமர்ந்தருளும்
பொருத்தமா மிடம்பலவும் புக்கிறைஞ்சிப் பொற்புலியூர்
நிருத்தனார் திருக்கூத்துத் தொழுவதற்கு நினைவுற்று
வருத்தமிகு காதலினால் வழிக்கொள்வான் மனங்கொண்டார்.

(இ-ள்.) திருத்துறையூர்தனைப்பணிந்து=திருத்துறையூரென்னுந் திருப்பதியைவணங்கி; சிவபெருமானமர்ந்தருளும் = சிவபிரான்வீற்றிருந்தருளும் ; பொருத்தமாமிடம்பலவும் புக்கிறைஞ்சி = தகுதியையுடைத்தாயிருக்கும் பலதலங்களிலுஞ் சென்று வணங்கி; பொற்புலியூர் நிருத்தனார் திருக்கூத்துத் தொழுவதற்கு நினைவுற்று=அழகினையுடைத்தாகிய புலியூரின்கண் நிருத்தஞ்செய்தருளும் நடேசப்பிரானது ஆனந்தநிருத்தத்தைத்தொழுங்காரணமாய் தம்திருவுள்ளத்திற்கொண்டு; வருத்தமிகுகாதலினால்=ஆராமைமிக்க பேரன்போடு; வழிக்கொள்வான் மனங்கொண்டார் = செல்லும்படிக்குத் திருவுள்ளத்துக் கொண்டருளினார்.—எ-று. (அக)

மலைவளர்சந் தகில்பீலி மலர்பரப்பி மணிகொழிக்கும்
அலைதருதண் புனற்பெண்ணை யாறுகடந் தேறியபி
னிலவுபசும் புரவிநெடுந் தேரிரவி மேல்கடலிற்
செலவணையும் பொழுதணையத் திருவதிகைப் புறத்தணைந்தார்.

(இ-ள்.) மலைவளர்சந்து=மலையிலுதித்த சந்தனமரங்களும்; அகில்பீலி மலர்பரப்பி=அகில்மரங்களும் மயிற்பீலிகளும் மலர்களும் (ஆகிய இவைகளைத்) தன்மீதுபரவச்செய்து; மணிகொழிக்கும் அலைதருதண்புனற்பெண்ணை யாறுகடந்தேறியபின் ; முத்துக்களைக் கரையிலே கொழியாநிற்கும் அலைகளையுடைத்தாகிய குளிர்ந்த நீரையுடைய பெண்ணையாற்றினைக்கடந்து கரையேறினபின்பு; நிலவுபசும் புரவிநெடுந்தேரிரவி=விளங்குகின்ற பசிய குதிரைபூட்டிய நெடிய தேரினையுடைய சூரியன் ; மேல்கடலிற் செலவணையும் பொழுதணைய = மேற்றிசைக்கடலிற் செல்லவரும் சாயங்காலம்வர; திருவதிகைப்புறத்தணைந்தார்= திருவதிகையின் புறத்துவந்தருளினார்.—எ-று. (அஉ)

உடையவர சுலகேத்து முழவாரப் படையாளி
விடையவர்க்குக் கைத்தொண்டு விரும்புபெரும் பதியைமிதித்
தடையுமதற் கஞ்சுவனென் றந்நகரிற் புகுதாதே
மடைவளர்தண் புறம்பணையிற் சித்தவட மடம்புகுந்தார்.

(இ-ள்.) உலகேத்தும் உழவாரப்படையாளி = உலகத்தார் துதிக்கின்ற திருவுழவாரப்படையை உடையவராகிய ; உடையவரசு=ஆண்டவரசு ; விடையவர்க்கு=சிவபிரானுக்கு ; கைத்தொண்டு விரும்புபெரும்பதியை=கைத்தொண்டுசெய்து விரும்பியெழுந்தருளிய பெருமையினையுடைத்தாகிய திருப்பதியை ; மிதித்தடையுமதற்கு = மிதித்துச்செல்வதற்கு ; அஞ்சுவனென்று = அடியேன் பயப்படுவேனென்று ; அந்நகரிற்புகுதாதே = அத்திருவதிகை வீரட்டானமென்




சித்தவடமடத்தில் சிவபெருமான் விருத்தப்பிராமணவடிவங்கொண்டெழுந்தருளி சுந்தரமூர்த்திசுவாமிகளுக்குத் திருவடிதீட்சை செய்தது.

னுந் தலத்திற்புகாது; மடைவளர்தண் புறம்பணையில் = நீர்மடைகளையுடைய குளிர்ந்த மருதநிலத்தில் உள்ள; சித்தவடமடம்புகுந்தார் = சித்தவடமடத்தை யடைந்தருளினார்.—எ-று. (அரு)

மடையென்றது=நீர்பாய்ச்சத்திறக்கும் இடம். மடைவளர் என்பதற்கு வரம்புயர்ந்த என்று பொருளுரைப்பினுமமையும்.

வரிவளர்பூஞ் சோலைசூழ் மடத்தின்கண் வன்றொண்டர்
விரிதிரைநீர்க் கெடிலவட வீரட்டா னத்திறைதாள்
புரிவுடைய மனத்தினராய்ப் புடையெங்கு மிடைகின்ற
பரிசனமுந் துயில்கொள்ளப் பள்ளியமர்ந் தருளினார்.

(இ-ள்.) வரிவளர்பூஞ்சோலை=வண்டுகளின் கீதம்மிக்கொலிக்கும் பூஞ் சோலைசூழ்ந்த; மடத்தின்கண் வன்றொண்டர் = சித்தவடமடத்தில் நம்பியாரூ ரர்; விரிதிரைநீர்க்கெடிலவட வீரட்டானத்து=விரிந்த அலைகளையுடைய நீர்மிக்க கெடிலநதிக்கு வடபுறத்திருக்கும் திருவீரட்டானத்தில்வாழும்; இறைதாள்புரி வுடைய மனத்தினராய்=சிவபிரான் திருவடிகளை விரும்பிய மனமுடையவராய்; புடையெங்குமிடைகின்ற=தம்மருங்கு எவ்விடத்தும் நெருங்கிய; பரிசனமுந் துயில்கொள்ளப் பள்ளியமர்ந்தருளினார்=பரிசனங்களும் நித்திரைசெய்யத்தா மும் பள்ளிகொண்டருளினார்.—எ-று. (அசு)

உம்மை எதிரதுதழீஇயது. வரிவளரென்றதற்கு ஆகுபெயரால் வண்டு கள் வாழ்கின்ற சோலையென்றுரைப்பினுமமையும்.

அதுகண்டு வீரட்டத் தமர்ந்தருளு மங்கணரு
முதுவடிவின் மறையவராய் முன்னொருவ ரறியாமே
பொதுமடத்தி னுட்புகுந்து பூந்தாரான் றிருமுடிமேற்
பதுமமலர்த் தாள்வைத்துப் பள்ளிகொள்வார் போற்பயின்றார்.

(இ-ள்.) அதுகண்டுவீரட்டத்தமர்ந்தருளுமங்கணரும்=அவ்வாறு நம்பி யாரூரர் துயில்செய்தலைத் திருவீரட்டானத்தில் வீற்றிருந்தருளும் சிவபிரானும் அறிந்து; முதுவடிவின் மறையவராய் = வார்த்திகமடைந்தவடிவினையுடைய மறையவராய்; முன்னொருவரறியாமே=முதலில் ஒருவரும் அறியாமல்; பொது மடத்தினுட்புகுந்து=பொதுவாயிருக்கும் அத்திருமடத்தினுட்புகுந்தருளி; பூந் தாரான்திருமுடிமேல் = மலர்மாலையையணிந்த நம்பியாரூரரது திருமுடியின்மே ல்; பதுமமலர்த்தாள்வைத்து=தாமரைமலர்போலுந் திருவடிகளைச்சூட்டி; பள் ளிகொள்வார்போற்பயின்றார்=தாமும் துயில்கொள்பவர்போல் இருந்தார்.-எ-று.

அங்கிலையா ரூரனுணர்ந் தருமறையோ யுன்னடியென்
சென்னியில்வைத் தனையென்னத் திசையறியா வகைசெய்த
தென்னுடைய மூப்புக்கா ணென்றருள வதற்கிசைந்து
தன்முடியப் பால்வைத்தே துயிலமர்ந்தான் றமிழ்நாதன்.

(இ-ள்.) அங்கிலையாரூரனுணர்ந்து=அவ்வாறுதிருவடிகளைச் சிரசில்வை த்தவகைமையை நம்பியாரூர ரறிந்து; அருமறையோயுன்னடியென் சென்னி

யில்வைத்தனையென்ன=அருமையாகிய வேதத்தையுணர்ந்த மறையவரே உம்முடையபாதங்களை என் சிரசின்மேல் வைத்தீரென்றுகூற ; திசையறியாவகை செய்த தென்னுடையமூப்பு என்றருள =(அதற்குச் சிவபிரானாகிய) மறையவர் நீர்துயிலுந்திக்கை அறியாமற் காலைவைத்தது எனது வார்த்திகமென்றருளிச்செய்ய ; அதற்கிசைந்துதன் முடியப்பால்வைத்துத் துயிலமர்ந்தான் தமிழ்நாதன்= அதற்கவருடன்பட்டுத் தம்முடைய திருமுடியை வேறுதிக்கில்வைத்துக்கொண்டு நித்திரைசெய்தார் தமிழ்த்தலைவராகிய நம்பியாரூரர்.—எ-று. (அசு)

காண்-அசை

அங்குமவன் றிருமுடிமேன் மீட்டுமவர் றாணீட்டச்
செங்கயல்பாய் தடம்புடைசூழ் திருநாவ லூராளி
யிங்கென்னைப் பலகாலு மிதித்தனைநீ யாரென்னக்
கங்கைசடைக் கரந்தபிரா னறிந்திலையோ வென்னக்கரந்தான்.

(இ-ள்.) அங்குமவன்திருமுடிமேல்=அவ்விடத்தும் அந்நம்பியாரூரரது திருமுடியின்மீது; மீட்டுமவர்தாணீட்ட=பின்னும் அம்மறையவர் திருவடிகளை நீட்டியருள ; செங்கயல்பாய்தடம்புடைசூழ் திருநாவலூராளி = செவ்விதாகிய கயல்மீன்கள்பாய்ந்து விளையாடுகின்ற வாவிகள் புறத்திற்சூழாநின்ற திருநாவலூரிலவதரித்த நம்பியாரூரர் ; இங்கென்னைப் பலகாலுமிதித்தனை நீயாரென்ன= இவ்விடத்தில் என்னைப் பலதரமும் மிதித்தாய் நீயாரென்று வினவ ; கங்கை சடைக்கரந்தபிரான்=கங்கையைச் சடையில் ஒருகூற்றில் கரக்கச்செய்த சிவபிரானாகியமறையவர் (அப்பொழுது) ; அறிந்திலையோவெனக்கரந்தான்=என்னை அறியாயோவென மறைந்தருளினார்.—எ-று. (அஎ)

செம்மாந்திங் கியானறியா தென்செய்தே னெனத்தெளிந்து
தம்மானை யறியாத சாதியா ருளரேயென்
றம்மானைத் திருவதிகை வீரட்டா னத்தமர்ந்த
கைம்மாவி னுரியானைக் கழல்பணிந்து பாடினார்.

(இ-ள்.) செம்மாந்து இங்கியானறியாது=இவ்விடத்து இறுமாப்படைந்து நான் அறியாமல் ; என்செய்தேனெனத்தெளிந்து = யாதுசெய்தேனென்று (கலங்கித்) தெளிவடைந்து; அம்மானைத்திருவதிகை வீரட்டானத்தமர்ந்த=பெருமையுடையவராகிய திருவதிகைத் திருவீரட்டத்து வீற்றிருந்தருளிய; கைம்மாவினுரியானைக் கழல்பணிந்து=யானைத்தோலைப் போர்வையாகக்கொண்ட வீரட்டேசரைவணங்கி ; தம்மானையறியாத சாதியாருளரேயென்றுபாடினார்=தம்மானை யறியாத சாதியாருளரேயென முதலெடுத்துத் திருப்பதிகத்தைப்பாடியருளினார்.—எ-று. (அஅ)

திருவதிகைவீரட்டானம்-பண்-கொல்லிக்கௌவாணம்.

திருச்சிற்றம்பலம்.

தம்மானை யறியாத சாதியா ருளரே சடைமேற்கொள் பிறையானை விடைமேற்கொள் விகிர்தன், கைம்மாவி னுரியானைக் கரிகாட்டிலாட லு

டையானை விடையானைக் கறைகொண்ட கண்டத், தெம்மான்ற னடிக் கொண்டென் முடிமேல்வைத் திடுமென்னு மாசையால் வாழ்கின்ற வறி விலா நாயே, னெம்மானை யெறிகெடில வடவீரட் டானத் துறைவானை யிறைபோது மிகழ்வன்போ லியானே. (௧)

முன்னேயெம் பெருமானை மறந்தென்கொன் மறவா தொழிந்தென் கொன் மறவாத சிந்தையால் வாழ்வேன், பொன்னேநன் மணியேவெண் முத்தேசெம் பவளக் குன்றமே யீசனென் றுன்னையே புகழ்வேன், அன் னேயென் னத்தாவென் றமரரா லமரப் படுவானை யதிகைமா நகருள்வா ழ்பவனை, யென்னேயென் னெறிகெடில வடவீரட் டானத் துறைவானை யிறைபோது மிகழ்வன்போ லியானே. (௨)

விரும்பினேற் கெனதுள்ளம் விடகிலா விதியே விண்ணவர்தம் பெ ருமானே மண்ணவர்நின் றேத்துங், கரும்பேயென் கட்டியென் றுள்ள த்தா லுள்கிக் காதல்சேர் மாதராள் கங்கையா ணங்கை, வரும்புனலுஞ் சடைக்கணிந்து வளராத பிறையும் வரியரவு முடன்றுயில வைத்தாரு மெந்தை, யிரும்புனல்வந் தெறிகெடில வடவீரட் டானத் துறைவானை யிறைபோது மிகழ்வன்போ லியானே. (௩)

நாற்றானத் தொருவனை நானாய பரனை நள்ளாற்று நம்பியை வெ ள்ளாற்று விதியைக், காற்றானைத் தீயானைக் கடலானை மலையின் றலையா னைக் கடுங்கலுழிக் கங்கைநீர் வெள்ள, வாற்றானைப் பிறையானை யம்மா னை யெம்மான் றம்மானை யாவர்க்கு மறிவரிய செங்கண், ஏற்றானை யெ றிகெடில வடவீரட் டானத் துறைவானை யிறைபோது மிகழ்வன்போ லியானே. (௪)

சேந்தாய மலைமங்கை திருநிறமும் பரிவு முடையானை யதிகைமா நகருள்வாழ் பவனைக், கூந்தல்தாழ் புனல்மங்கை குயிலன்ன மொழியாள் நசடையிடையிற் கயலினங்கள் குதிகொள்ளக் குலாவி, வாய்ந்தநீர் வர வுந்தி மராமரங்கள் வணக்கி மறிகடலை யிடங்கொள்வான் மலையார வாரி, யேந்துநீ ரெறிகெடில வடவீரட் டானத் துறைவானை யிறைபோது மிக ழ்வன்போ லியானே. (௫)

மைம்மான மணிநீல கண்டத்தெம் பெருமான் வல்லேனக் கொம் பணிந்த மாதவனை வானோர், தம்மானைத் தலைமகனைத் தண்மதியும் பாம் புந் தடுமாறுஞ் சடையானைத் தாழ்வரைக்கை வென்ற, வெம்மான மதக ரியி னுரியானை வேத விதியானை வெண்ணீறு சண்ணித்த மேனி, யெம் மானை யெறிகெடில வடவீரட் டானத் துறைவானை யிறைபோது மிகழ் வன்போ லியானே. (௬)

வெய்தாய வினைக்கடலிற் றடுமாறு முயிர்க்கு மிகவிரங்கி யருள்புரிந்து வீடுபே றுக்கம், பெய்தானைப் பிஞ்ஞகனை மைஞ்ஞவிலுங் கண்டத் தெண்டோளெம் பெருமானைப் பெண்பாக மொருபாற், செய்தானைச் செக்கர்வா னொளியானைத் தீவா யரவாடு சடையானைத் திரிபுரங்கள் வேவ; எய்தானை யெறிகெடில வடவீரட் டானத் துறைவானை யிறைபோது மிகழ்வன்போ லியானே. (எ)

பொன்னானை மயிலூர்தி முருகவேள் தாதை பொடியாடு திருமேனி நெடுமாறன் முடிமேற், றென்னானைக் குடபாலின் வடபாலின் குணபாற் சேராத சிந்தையான் செக்கர்வா னந்தி, யன்னானை யமரர்கடம் பெருமானைக் கருமா னுரியானை யதிகைமா நகருள் வாழ்பவனை, யென்னானை யெறிகெடில வடவீரட் டானத் துறைவானை யிறைபோது மிகழ்வன்போ லியானே. (அ)

திருந்தாத வாளவுணர் புரமூன்றும் வேவச் சிலைவளைவித் தொரு கணையாற் றொழில்பூண்ட சிவனைக், கருந்தாள மதக்களிற்றி னுரியானைப் பெரிய கண்மூன்று முடையானைக் கருதாத வரக்கன், பெருந்தோள்கள் நாலைந்து மீரைந்து முடியு முடையானைப் பேயுரு மூன்றுர மலைமே, லிருந்தானை யெறிகெடில வடவீரட் டானத் துறைவானை யிறைபோது மிகழ்வன்போ லியானே. (கூ)

என்பினையே கலனாக வணிந்தானை யெங்க ளெருதேறும் பெருமானை யிசைஞானி சிறுவன், வன்பனைய வளர்பொழில்சூழ் வயனாவ லூர்க்கோன் வன்றொண்ட னாரூரன் மதியாது சொன்ன, அன்பனை யாவர்க்கு மறிவரிய வத்தர் பெருமானை யதிகைமா நகருள்வாழ் பவனை, யென் பொன்னை யெறிகெடில வடவீரட் டானத் துறைவானை யிறைபோது மிகழ்வன்போ லியானே. (க௦)

திருச்சிற்றம்பலம்.

---

பொன்றிரளு மணித்திரளும் பொருகரிவெண் கோடுகளு
மின்றிரண்ட வெண்முத்தும் விரைமலரு நறுங்குறடும்
வன்றிரைக ளாற்கொணர்ந்து திருவதிகை வழிபடலாற்
றென்றிசையிற் கங்கையெனுந் திருக்கெடிலந் திளைத்தாடி.

(இ-ள்.) பொன்றிரளுமணித்திரளும்=பொற்பொடிகளின் தொகுதியையும் மணிகளின் தொகுதியையும்; பொருகரிவெண்கோடுகளும் = பொராநின்ற யானைகளின் வெள்ளிய கோடுகளையும்; மின்றிரண்டவெண்முத்தும்=ஒளிமிக்க வெண்மையாகிய முத்துக்களையும்; விரைமலருநறுங்குறடும்=வாசனையுடைத்தாகிய மலர்களையும் சந்தனக்கட்டைகளையும்; வன்றிரைகளாற்கொணர்ந்து=வலிய

அலையென்னுங் கரங்களாற்கொண்டுவந்து; திருவதிகைவழிபடலால் = திருவதிகை என்னுந் திருப்பதியை வழிபாடுசெய்தலால்; தென்றிசையிற் கங்கையெனுந்திருக்கெடிலந் திளைத்தாடி=தெற்கின்கட் கங்கையென்று அறிஞர்கூறும் திருக்கெடிலநதியிற்படிந்து முழுகி.—எ-று. (அகூ)

வழிபடலால் என்றதற்குத் திருவதிகையின் வழிச்செல்லுதலால் எனத் தொனிப்பொருளுங்கொள்க.

அங்கணரை யடிபோற்றி யங்ககன்று மற்றந்தப்
பொங்குநதித் தென்கரைபோய்ப் போர்வலித்தோண் மாவலிதன்
மங்கலவேள் வியிற்பண்டு வாமனனாய் மண்ணிரந்த
செங்கணவன் வழிபட்ட திருமாணி குழியடைந்தார்.

(இ-ள்.) அங்கணரையடிபோற்றி=வீரட்டேசர் திருவடிகளில்வணங்கி; அங்ககன்று=அங்குநின்றும் நீங்கி; அந்தப்பொங்குநதித்தென்கரைபோய்=பொங்குகின்ற நீரையுடைய அந்நதியின் தென்கரைவழியேசென்று; போர்வலித்தோண்மாவலிதன் = போர்செய்தலில் வலியுடைத்தாகிய தோளையுடைய மாவலிச்சக்கிரவர்த்தியின்; மங்கலவேள்வியில் = மங்கலகரமானயாகத்தில்; பண்டுவாமனனாய்மண்ணிரந்த=முன்னாளில் குறளுருவாய்ச்சென்று மூவடி மண் இரந்த; செங்கணவன்வழிபட்ட=திருமால்வழிபாடுசெய்த; திருமாணிகுழியடைந்தார்= திருமாணிகுழியென்னுந் திருப்பதியை அடைந்தருளினார்.—எ-று. (கூ0)

பரம்பொருளைப் பணிந்துதாள் பரவிப்போய்ப் பணிந்தவர்க்கு
வரந்தருவான் றினைநகரை வணங்கினர்வண் டமிழ்பாடி
நரம்புடையா ழொலிமுழவி னாதவொலி வேதவொலி
யரம்பையர்தங் கீதவொலி யறாத்தில்லை மருங்கணைந்தார்.

(இ-ள்.) பரம்பொருளைப்பணிந்து தாள்பரவிப்போய் = அத்திருமாணிகுழியில் வீற்றிருந்தருளும் மாணிக்கவரதரைவணங்கி அங்குநின்றும்போய்; பணிந்தவர்க்குவரந்தருவான் றினைநகரை வணங்கினர்வண்டமிழ்பாடி = வணங்கும் அடியார் வேண்டியவரத்தைக் கொடுக்குஞ் சிவபிரான் எழுந்தருளுந் திருத்தினைநகரைவணங்கி வளத்தினையுடைய திருப்பதிகத்தைப்பாடி; நரம்புடையாழொலி=நரம்பினையுடைய யாழ்களின் ஓசையும்; முழவின் நாதவொலிவேதவொலி= மத்தளத்தின் இனிய ஓசையும் வேதங்களின் ஓசையும்; அரம்பையர்தங்கீதவொலி=தெய்வமகளிர்களது சங்கீதத்தின் ஒலியும் (ஆகிய இவைகள்); அறாத்தில்லை மருங்கணைந்தார்=எக்காலமும் நீங்காதிருக்கும் சிதம்பரத்தின் சமீபத்தை அடைந்தருளினார்.—எ-று. (கூக)

---

திருத்தினைநகர் - பண்-தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

நீறுதாங்கிய திருநுதலானை நெற்றிக்கண்ணனை நிரைவளைமடந்தை
கூறுதாங்கிய கொள்கையினானைக் குற்றமில்லியைக் கற்றையஞ்சடைமே
லாறுதாங்கிய வழகனையமரர்க் கரியசோதியை வரிவராலுகளுஞ் [னே.
சேறுதாங்கிய திருத்தினைநகருட் சிவக்கொழுந்தினைச் சென்றடைமன

நீடுபோக்கையிற் பிறவியைப்பழித்து நீங்கலாமென்று மனத்தினைத்தெருட்டிச், சேடுலாம்பொழிற் றிருத்தினைநகருட் சிவக்கொழுந்தினைத்திருவடியிணைத்தா, ளுடைலாம்புகழ் நாவலூராளி நம்பிவன்றொண்டனூரனுரைத்த, பாடலாந்தமிழ் பத்திவைவல்லார் முத்தியாவது பரகதிப்பயனே.

திருச்சிற்றம்பலம்.

வேறு.

தேமலங்கலணி மாமணிமார்பிற் செம்மலங்கயல்கள் செங்கமலத்தண்
பூமலங்கவெதிர் பாய்வனமாடே புள்ளலம்புதிரை வெள்வளைவாவித்
தாமலங்குக டடம்பணைசூழுந் தன்மருங்குதொழு வார்கடமும்மை
மாமலங்களற வீடருடில்லை மல்லலம்பதியி னெல்லைவணங்கி.

(இ-ள்.) தேமலங்க லணிமாமணிமார்பிற் செம்மல்=தேனையுடைய மலர்மாலையும் அழகிய மாணிக்கமாலையும் அணிந்த மார்பினையுடைய நம்பியாரூரர்; மாடு=அருகில்; புள்ளலம்பு திரைவெள்வளைவாவி = புட்களொலிக்குந் திரையோடுகூடிய வெண்மையான சங்குகளையுடைத்தாகிய வாவியினிடத்துள்ள; செங்கமலத்தண்பூமலங்க=குளிர்ந்த செந்தாமரைமலர்கள் அசையும்படி; அங்கயல்கள் எதிர்பாய்வன=அழகிய கயல்மீன்கள் பாய்தற்கேதுவாக; மலங்குகடடம்பணைசூழுந்தன்மருங்கு = மலங்குமீன்கள் விசாலமாகிய வயல்களில் சூழ்கின்ற அத்தில்லையின்பக்கத்து ; தொழுவார்கடமும்மை மாமலங்களற=வணங்குவோருடைய மும்மலங்களுங்கெட; வீடருள்=வீட்டைக்கொடுக்கும்; தில்லைமல்லலம்பதியினெல்லைவணங்கி=சிதம்பரமென்னும் வளத்தினையுடைய அழகிய திருப்பதியின் திருவெல்லையை வணங்கி.—எ-று. (கஉ)

பாய்வன என்றது சொற்றிரியினும் பொருடிரியாவினைக் குறையாய் வந்த முற்றெச்சம். மாடுள்ளவாவிச் செங்கமலங்கள் மலங்கக்கயல்கள் பாயும்படி மலங்குகள் சூழும் மருங்கு என இயையும். ஏ, தாம், அசை.

நாகசூதவகு ளஞ்சரளஞ்சூழ் நாளிகேரமில வங்கநரந்தம்
பூகஞாழல்குளிர் வாழைமதூகம் பொதுளும்வஞ்சிபல வெங்குநெருங்கி
மேகசாலமலி சோலைகளாகி மீதுகோகில மிடைந்துமிழற்றப்
போகபூமியினு மிக்குவிளங்கும் பூம்புறம்பணை கடந்துபுகுந்தார்.

(இ-ள்.) நாகசூதவகுளஞ்சரளம் = புன்னைமரமும் மாமரமும் மகிழமரமும் சரளமரமும் ; சூழ்நாளிகேரமிலவங்கநரந்தம் = சூழ்ந்திருக்கின்ற தென்னமரமும் இலவங்கமரமும் நாரத்தமரமும்; பூகஞாழல் குளிர்வாழைமதூகம்=கமுகமரமும் குங்குமமரமும் குளிர்ந்த வாழைமரமும் இருப்பைமரமும் ; பொதுளும் வஞ்சிபலவெங்குநெருங்கி=நெருங்கிய வஞ்சிமரமும் ஆகிய பலமரங்கள் எவ்விடத்து நெருக்கமுடைத்தாய் ; மேகசாலமலிசோலைகளாகி = மேகத்தொகுதிகள் மிக்கிருக்கும் சோலைகளையுடைத்தாய் ; மீதுகோகிலமிடைந்துமிழற்ற = தன்னி

டத்துக் குயில்கள் நெருங்கிக்கூவ ; போகபூமியினுமிக்குவிளங்கும் = போகபூமியினுஞ் சிறந்துவிளங்கும் ; பூம்புறம்பணைகடந்துபுகுந்தார்=பொலிவினையுடைத்தாகிய மருதநிலத்தைக்கடந்து தில்லையின் திருவெல்லையுட்சென்றருளினார்.எ-று.

செம்மல்வணங்கிப் புகுந்தாரென இயையும். இவ்விரண்டுங்குளகம். போகபூமியென்பது பரதகண்டத்திற்குப் புறம்பாயுள்ள கிம்புருடகண்டம்முதலியன.

வன்னிகொன்றைவழை சண்பகமார மலர்ப்பலாசொடு செருந்திமந்தா [ரங்
கன்னிகாரங்குர வங்கமழ்புன்னை கற்புபாடலங் கூவிளமோங்கித்
துன்னுசாதிமரு மாலதிமௌவ றுதைந்தநந்திகர வீரமிடைந்த [ன்.
பன்மலர்ப்புனித நந்தவனங்கள் பணிந்துசென்றனன் மணங்கமழ்தாரா

(இ-ள்.) வன்னிகொன்றை வழைசண்பகமாரம்=வன்னிமரமும் கொன்றைமரமும் சுரபுன்னைமரமும் சண்பகமரமும் சந்தனமரமும்; மலர்ப்பலாசொடு செருந்திமந்தாரம்=பூக்களையுடைய பலாசமரத்தோடு செருந்திமரமும் மந்தாரமரமும் ; கன்னிகாரங்குரவங் கமழ்புன்னை=கோங்குமரமும் குராமரமும் மணங்கமழ்கின்ற புன்னைமரமும் ; கற்புபாடலங் கூவிளமோங்கி=கற்பினையுடைய பாதிரிமரமும் வில்வமரமும்(ஆகிய இவைகளால்) ஓங்கப்பட்டு; துன்னுசாதி மருமாலதிமௌவல்=நெருங்கிய சிறுசண்பகமும் வாசனையையுடைய முல்லையும் மல்லிகையும் ; துதைந்தநந்தி கரவீரமிடைந்த = இதழ்துன்றிய நந்தியாவர்த்தமும் அலரியும் (ஆகிய கொடியுஞ் செடியும்) நெருங்கிய ; பன்மலர்ப்புனிதநந்த வனங்கள்பணிந்துசென்றனன் = பலபூக்களையுடைய சுத்தமான திருநந்தவனங்களை வணங்கிச்சென்றார்; மணங்கமழ்தாரான்=வாசனைகமழ்கின்ற மாலையையுடைய நம்பியாரூரர்.—எ-று. (கூ௪)

வாய்நீருமிழ்தல் முதலிய தூய்மையின்மை செய்யத்தகாத இடம் ஆதலின் புனிதநந்தவனம் என்றும், சிவபிரானுக் காயதூய திருநந்தவனமும் சிவபிரான் வடிவாதலின், பணிந்துசென்றனரென்றுங் கூறினர்.

இடமருங்குதனி நாயகிகாண வேழ்பெரும்புவன முய்யவெடுத்
து, நடநவின்றருள் சிலம்பொலிபோற்று நான்மறைப்பதியை நாளும்
வணங்கக், கடல்வலங்கொள்வது போற்புடைசூழுங் காட்சிமேவிமிகு
சேட்செலவோங்குந், தடமருங்குவளர் மஞ்சிவரிஞ்சித் தண்கிடங்கை
யெதிர் கண்டுமகிழ்ந்தார்.

(இ-ள்.) இடமருங்குத்னி நாயகிகாண=இடப்பாகத்தில்நின்று ஒப்பற்ற உமாதேவியார் தரிசிக்கவும் ; ஏழ்பெரும் புவனம்உய்ய = பெருமையுடைத்தாகிய ஏழுலகத்தாரும் உய்யவும்; எடுத்துநடநவின்றருள் சிலம்பொலிபோற்றும்= தூக்கி ஆனந்தநிருத்தஞ்செய்தருளுகின்ற (குஞ்சிதபாதத்தின்) திருச்சிலம்போசையை யாவருந்துதிக்கும்; நான்மறைப்பதியை நாளும்வணங்க=நான்குவேதங்களும் (வாழ்கின்ற) அத்திருத்தில்லையை நாள்தோறும் வணங்குதற்குக் காரணமாக ; கடல்வலங்கொள்வதுபோல்=புறக்கடல்சூழ்ந்து கிடப்பதுபோல; புடைசூழுங்காட்சிமேவி=அந்நகரத்தைச் சூழ்ந்திருக்குந் தோற்றமுடைத்தாய் ; மிகு

சேட்செலவோங்கும்=மிகநெடுந்தூரம் உயர்ந்திருக்கும்; தடமருங்குவளர்மஞ்சி வரிஞ்சித்தண்கிடங்கை=விசாலமுடைத்தாய்த் தன்னருகில்வளர்ந்த மேகங்கள் தவழும் மதிலைச்சூழ்ந்த குளிர்ந்த அகழியை; எதிர்கண்டுமகிழ்ந்தார்=(நம்பியாரூரர்) தம்மெதிரேகண்டு மகிழ்ச்சியடைந்தார்.—எ-று. (கரு)

காட்சிமேவி இஞ்சியைச்சூழ்ந்த கிடங்கென இயையும்.

மன்றுளாடுமது வின்னசையாலே மறைச்சுரும்பறை புறத்தின் மருங்கே, குன்றுபோலுமணி மாமதில்சூழுங் குண்டகழ்க்கமல வண்டலர்கைதை, துன்றுநீறுபுனை மேனியவாகித் தூயநீறுபுனை தொண்டர்களென்னச், சென்றுசென்றுமுரல் கின்றனகண்டு சிந்தையன்பொடு திளைத்தெதிர் சென்றார்.

(இ-ள்.) மன்றுளாடும் மதுவின்னசையாலே=கனகசபையில் ஆனந்த நிருத்தஞ்செய்தருளுங் (குஞ்சிதபாதமாகிய தாமரைமலரின்கணுள்ள) ஆனந்தத் தேனைத் (தாம் உண்ணவேணுமென்கின்ற) ஆசையினாலே; மறைச்சுரும்பறை=வேதங்களாகிய வண்டுகள் முழங்குகின்ற; புறத்துமருங்கே=சுற்றுப்பக்கத்தையுடைய அத்தில்லையின்மருங்குள்ள; குன்றுபோலு மணிமாமதில்சூழும்=மலைபோலுயர்ந்த அழகிய பெருமையினையுடைய மதிலைச்சூழ்ந்த; குண்டகழ்க்கமல வண்டு=ஆழமாகிய அகழியிலிருக்கும் தாமரைமலர்களில் வண்டுகளானவை; அலர்கைதை=அதனருகில்அலர்ந்ததாழம்பூவில்; துன்றுநீறு புனைமேனியவாகி=செறிந்திருக்கின்ற வெள்ளியபராகமென்னும் பூதியைப்பூசிய உடம்பினையுடையனவாய்; தூயநீறு புனைதொண்டர்களென்ன = தூய்மையாகிய விபூதியையணிந்த அடியார்களென்று சொல்லும்படி; சென்றுசென்று முரல்கின்றனகண்டு=போய்ப்போய் ஊதுவதைக்கண்டு; சிந்தையன்பொடு திளைத்தெதிர்சென்றார்=மனதிலுதித்த அன்போடு பத்தியில் முழுகி எதிராகச்சென்றார்.—எ-று. (கசு)

கமலங்களில் வண்டுகளானவை கைதை நீறுமேனி புனைவனவாகத் தொண்டர்கள்போற்சென்று சென்று முரல்கின்றனகண்டு என இயையும்.

பார்விளங்கவளர் நான்மறைநாதம் பயின்றபண்புமிக வெண்கொடியாடுஞ், சீர்விளங்குமணி நாவொலியாலுந் திசைகணான்கெதிர் புறப்படலாலுந், தார்விளங்குவரை மார்பினயன்பொற் சதுர்முகங்களென லாயினதில்லை, ஊர்விளங்குதிரு வாயில்கணான்கி னுத்தரத்திசையின் வாயின்முனெய்தி.

(இ-ள்.) பார்விளங்கவளர்=உலகத்தார் அறநெறியினையடைந்து விளங்குதற்கேதுவாக வளர்கின்ற; நான்மறைநாதம்=நான்குவேதங்களின் சுரவொலி; பயின்றபண்புமிக = அத்தியயனஞ்செய்கின்ற இயல்போடு மிக்கிருக்க; வெண்கொடியாடும்=வெள்ளியகொடிகளினிடத்துக் கட்டப்பட்டு அசையும்; சீர்விளங்குமணிநாவொலியாலும் = சிறப்பினையுடைய நல்லமணிநாவின் ஒலியினாலும்; திசைகள் நான்கெதிர் புறப்படலாலும்=நான்கு திசைகளுக்கு எதிர்ப்பட்டு வாயில் நான்கால் அவ்வோசை புறப்படுதலினாலும்; தார்விளங்கு வரைமார்பினய

ன்=மாலையையணிந்த மலைபோலும் மார்பினையுடைய பிரமனது; பொற்சதுர் முகங்களெனலாயின = அழகிய நான்குமுகங்கள்போலிருக்கும்; தில்லையூர்விள ங்கு திருவாயில்களுள்கின்=சிதம்பரத்தின் விளங்காநின்ற நான்குதிருவாயில்க ளுள்; உத்தரத்திசையின்வாயின்முனெய்தி = வடக்குவாயிலின் முன் அடைந் து.—எ-று. (கஎ)

சிலேடைவகையால் பிரமன்பரத்தில் வெண்கொடியாடுஞ் சீர்விளங்க மணிநாவொலியால் என்னுங்கால் வெள்ளியகொடிபோலும் நாமகள் விளையாடு தற்கிடமான சிறப்பினையுடைய அழகிய நாவில்நின்றும் வரும் ஓசையினுலெ ன்று பொருளுரைத்துக்கொள்க. ஏனையசெம்பொருள்.

அன்பின்வந்தெதிர் கொண்டசீரடியா ரவர்களோநம்பி யாரூரர் தாமோ, முன்பிறைஞ்சின ரியாவரென்றறியா முறைமையாலெதிர் வ ணங்கிமகிழ்ந்து, பின்புகும்பிடும் விருப்பினிறைந்து பெருகுநாவனக ரார்பெருமானும், பொன்பிறங்குமணி மாளிகைநீடும் பொருவிறந்ததிரு வீதிபுகுந்தார்.

(இ-ள்.) அன்பின்வந்தெதிர்கொண்ட சீரடியாரவர்களோ=(நம்பியாரூர ரை) அன்பினுற்காணும்படி விரும்பிவந்தெதிர்கொண்ட சிறப்பினையுடைய அடி யார்களோ; நம்பியாரூரர்தாமோ=அல்லது சுந்தரமூர்த்திசுவாமியோ; முன்பி றைஞ்சினர் யாவரென்றறியாமுறைமையால்=மூற்பட்டு வணங்கினவர்கள் இன் னாரென்றறியக்கூடாத முறைமையோடு; எதிர்வணங்கிமகிழ்ந்து = எதிரெதிர் வணங்கி மகிழ்ச்சியடைந்து; பின்புகும்பிடும் விருப்பினிறைந்து=பின் நடேசப் பிரானைத் தரிசிக்கும் பேரவாவால் தமதுள்ளம்நிறைந்து; பெருகுநாவனகரார் பெருமானும்=அவ்வன்புபெருக்கெடுக்கும் நம்பியாரூரரும்; பொன்பிறங்குமணி மாளிகைநீடும்=பொன்மயமாய் விளங்குகின்ற அழகிய திருமாளிகைகள் மிக்கி ருக்கும்; பொருவிறந்த திருவீதிபுகுந்தார் = ஒப்பற்ற திருவீதியிற் சென்றருளி னர்.—எ-று. ஓகாரங்கள் ஐயம். இவ்விரண்டுங் குளகம். (கஅ)

அங்கண்மாமறை முழங்குமருங்கே யாடரம்பைய ரரங்குமுழங்கு, மங்குல்வானின்மிசை யைந்துமுழங்கும் வாசமாலைகளின் வண்டுமுழங் கும், பொங்குமன்பருவி கண்பொழிதொண்டர் போற்றிசைக்குமொலி யெங்குமுழங்குந், திங்கடங்குசடை கங்கைமுழங்குந் தேவதேவர்புரியுந் திருவீதி.

(இ-ள்.) திங்கடங்குசடை கங்கைமுழங்கும் தேவதேவர்புரியுந் திரு வீதி=இளம்பிறைவாழும் சடையின் ஓர்கூற்றில் கங்காநதியானது ஒலிக்கின்ற தேவர்க்கதிபராகிய நடேசப்பிரான் விரும்பும் அத்திருவீதியினிடத்து; அங்கண் மாமறைமுழங்கு மருங்கே=சிறந்த அழகிய சாகைகளையுடைய வேதங்கள் ஒலிக் கும் அதன்பக்கத்தில்; ஆடரம்பையர் அரங்குமுழங்கும்=நாட்டியஞ்செய்கின்ற தெய்வப்பெண்களது சபையானது ஒலிக்கும்; மங்குல்வானின்மிசையைந்துமுழ ங்கும்=மேகங்கள் உலாவாநின்ற ஆகாயத்தில் ஐந்து துந்துபிகளும் ஒலிக்கும்;

வாசமாலைகளில் வண்டுமுழங்கும்=வாசனைகமழ்கின்ற மலர்மாலைகளில் வண்டுகள்ஒலிக்கும்; பொங்குமன்பருவிகண்பொழிதொண்டர் = மிகுகின்ற ஆனந்தக் கண்ணீரைக் கண்களில் நின்றும் பொழியாநின்ற அடியார்கள்; போற்றிசைக்குமொலிஎங்கு முழங்கும்=துதிக்கும் ஒலியானது எவ்விடத்தும் ஒலிக்கும்.—எ-று.

போகநீடுநிதி மன்னவன்மன்னும் புரங்களொப்பன வரம்பிலவோங்கி
மாகமுன்பருகு கின்றனபோலு மாளிகைக்குல மிடைந்தபதாகை
யோகசிந்தைமறை யோர்கள்வளர்க்கு மோமதூம முயர்வானிலடுப்ப
மேகபந்திகளின் மீதிடையெங்கு மின்னுடங்குவன வென்னவிளங்கும்.

(இ-ள்.) போகநீடு நிதிமன்னவன் மன்னும் புரங்களொப்பன = சுகப்பொருள்களின் அநுபவநுகர்வாற்சிறந்த குபேரன்வாழும் அந்தப்புரங்களையொத்த; மாளிகைக்குலம்=திருமாளிகைகளிடத்து; வரம்பிலவோங்கி = எண்ணிறந்துயர்ந்து; மாகமுன்பருகுகின்றனபோலும்=மேகமண்டலத்தின் முற்பட்டு அந்நீரைப்பருகுகின்ற தோற்றம்போலும்; மிடைந்தபதாகை = நெருங்கிய கொடியாடைகள்; யோகசிந்தைமறையோர்கள்=தியானநெறியில் ஒருங்கிய சிந்தையையுடைய மறையவர்கள்; வளர்க்குமோமதூமமுயர்வானிலடுப்ப=ஆகுதியால் வளரச்செய்யும் ஓமப்புகை உயர்ந்த வானையடைய (அதனால்); மேகபந்திகளின்மீது= மேகங்களின் வரிசையிடத்து; இடையெங்கு மின்னுடங்குவன வென்னவிளங்கும்=இடையிடையே மின்னல்தோன்றி மறைவனபோலப் பிரகாசிக்கும்.-எ-று.

ஆடுதோகைபுடை நாசிகடோறு மரணிதந்தசுட ராகுதிதோறு, மாடுதாமமணி வாயில்கடோறு மங்கலக்கலசம் வேதிகைதோறுஞ், சேடுகொண்டவொளி தேர்நிரைதோறுஞ் செந்நெலன்னமலை சாலைகடோறு, நீடுதண்புனல்கள் பந்தர்கடோறு நிறைந்ததேவர்கண நீளிடைதோறும்.

(இ-ள்.) ஆடுதோகைபுடை நாசிகள்தோறும்=ஆடுகின்ற மயில்கள்கோபுரநாசியின் பக்கங்களினுள்ளன; அரணிதந்த சுடராகுதிதோறும்=ஆகுதிசெய்தற்கிடமாகிய யாகசாலைகள்தோறும் (தீக்கடைக்கோலினாற்கடைந்த அக்கினிகள்) உள்ளன; மாடுதாம மணிவாயில்கள்தோறும்=அருகில் கட்டப்பட்ட மாலைகள் அழகிய வாயிலிடங்கள்தோறும் உள்ளன; மங்கலக்கலசம் வேதிகைதோறும்= மங்கலகரமான கும்பங்கள் வேதிகைகள்தோறும் உள்ளன; சேடுகொண்டவொளிதேர் நிரைதோறும்=பெருமையுடைத்தாகிய ஒளிகள் தேர்வரிசைகள்தோறும் உள்ளன; செந்நெலன்ன மலைசாலைகள்தோறும்=செந்நெல் அரிசியாலாக்கிய அன்னமலைகள் அன்னசாலைகள்தோறும் உள்ளன; நீடுதண்புனல்கள் பந்தர்கள்தோறும்=மிக்ககுளிர்ந்த நீர்கள் தண்ணீர்ப்பந்தல்கள்தோறும் உள்ளன; நிறைந்ததேவர்கண நீளிடைதோறும்=நெருங்கிய தேவகணங்கள் நீண்ட வீதியிடங்களெல்லாம் உள்ளன.—எ-று. (கoக)

எண்ணில்பேருலக னைத்தினுமுள்ள வெல்லையில்லழகு சொல்லிய வெல்லா, மண்ணிலிப்பதியில் வந்தனவென்ன மங்கலம்பொலி வளத்த

னவாகிப், புண்ணியப்புனித வன்பர்கண்முன்பு புகழ்ந்துபாடல்புரி பொற்பின்விளங்கும், அண்ணலாடுதிரு வம்பலஞ்சூழ்ந்த வம்பொன்வீதியினை நம்பிவணங்கி.

(இ-ள்.) எண்ணில் பேருலகனைத்தினுமுள்ள=அளவுபடுத்தற்கரிய உலகங்கள் எல்லாவற்றினும் உள்ள; எல்லையில்லழகுசொல்லிய வெல்லாம்=வரையறைப்படாத சிறப்பென்று சொல்லப்பட்டனவெல்லாம்; மண்ணிலிப்பதியில் வந்தனவென்ன=நிலவுலகத்துள்ள இத்திருத்தில்லையின்கண் வந்தனவென்று சொல்லும்படி; மங்கலம்பொலிவளத்தனவாகி=மங்கலங்களால் பொலிவடைந்த வளங்களையுடையனவாய்; புண்ணியப்புனித அன்பர்கள்=புண்ணியமிக்க தூய்மையுடையராகிய அடியார்கள்; முன்புகழ்ந்துபாடல் புரிபொற்பின்விளங்கும்=முன்னுளில் துதித்துத் திருப்பாடல்களைச்செய்த சிறப்பினுல் விளங்கியிருக்கும்; அண்ணலாடு திருவம்பலஞ்சூழ்ந்த = சிவபிரான் ஆனந்தத்தாண்டவஞ் செய்தருளும் திருவம்பலத்தைச்சூழ்ந்த; அம்பொன்வீதியினை நம்பிவணங்கி=அழகிய பொன்மயமான தேரோடுந் திருவீதியை நம்பியாரூரர் வணங்கி.—எ-று. (கoஉ)

மாலயன்சத மகன்பெருந்தேவர் மற்றுமுள்ளவர்கண் முற்றுநெருங்கிச், சீலமாமுனிவர் சென்றுமுன்றுன்னித் திருப்பிரம்பினடி கொண்டுதிளைத்துக், காலநேர்படுதல் பார்த்தயனிற்பக் காதலன்பர்கண நாதர்புகும்பொற், கோலநீடுதிரு வாயிலிறைஞ்சிக் குவித்தசெங்கைதலை மேற்கொடுபுக்கார்.

(இ-ள்.) மாலயன்சதமகன் பெருந்தேவர்=திருமால் பிரமன் இந்திரன் முதலிய பெரியதேவர்களும் ; மற்றுமுள்ளவர்கண் முற்றுநெருங்கி=அவரல்லாத பிறரும் முழுதும் நெருங்கி ; சீலமாமுனிவர்சென்று முன்துன்னி=தவஒழுக்கத்தையுடைய பெரியமுனிவர்களும் முற்பட்டு நெருங்கி; திருப்பிரம்பினடிகொண்டு திளைத்து = திருநந்திதேவரது திருப்பிரம்படியைப் பெற்றுக்கொண்டு அதனுல் வருந்தி; காலநேர்படுதல்பார்த் தயல்நிற்ப = சென்று தரிசித்தற்குரிய காலம்வருதலைப்பார்த்து அருகில்நிற்ப; காதலன்பர் கணநாதர்புகும்=மிக்க அன்பினையுடைய அடியார்களும் கணநாதர்களுந் தடையின்றிச்செல்லும்; கோலநீடுதிருவாயிலிறைஞ்சி=அழகுமிக்க அலங்காரங்களால் நிறைந்த திருக்கோபுரவாயிலைவணங்கி; குவித்தசெங்கை தலைமேற்கொடுபுக்கார்=குவித்த திருக்கரங்களைச் சிரசின்மேலேறக்கொண்டு புகுந்தருளினுர்.—எ-று. (கoரு)

வேறு.

பெருமதில் சிறந்த செம்பொன்மா ளிகைமின் பிறங்குபே ரம்பலமேரு, வருமுறை வலங்கொண் டிறைஞ்சிய பின்னர் வணங்கிய மகிழ்வொடும் புகுந்தார், அருமறை முதலி னடுவினிற் கடையி லன்பர்தஞ் சிந்தையி லலர்ந்த,திருவளர் ரொளிசூழ் திருச்சிற்றம் பலமுன் றிருவணுக் கன்றிரு வாயில்.

(இ-ள்.) பெருமதில்சிறந்த=பெரியமதிலால் சிறப்படைந்த ; செம்பொன்மாளிகை = சிவந்தபொன்னாலாகிய திருமாளிகைப்பத்தியுள் ; மின்பிறங்குபேரம்பலமேரு=ஒளிவீசுகின்ற பேரம்பலமாகிய மேருவை; வருமுறைவலங்கொண்டிறைஞ்சியபின்னர்=வலம்வரும் முறைப்படி வலமாகவந்து வணங்கியபின்பு ; வணங்கியமகிழ்வொடும் புகுந்தார்=வணங்கும்படிக்கு மகிழ்ச்சியோடும் புகுந்தருளினார் (யாண்டெனில்) ; அருமறைமுதலினடுவினிற் கடையிலன்பர்தஞ்சிந்தையிலலர்ந்த=அருமையாகிய வேதங்களின் முதலிலும் இடையிலும் இறுதியிலும் அடியார்களது இதயதாமரையிலும் வெளிப்பட்டிருக்கும்; திருவளரொளிசூழ்திருச்சிற்றம்பலமுன் திருவணுக்கன்திருவாயில்=அழகுவளரும் ஒளிசூழ்ந்த திருச்சிற்றம்பலத்தின் முன்னுள்ள திருவணுக்கனென்னுந் திருவாயிலினிடத்து.

மேருபோலிருத்தலில் மேருஎன்றார். பிரணவப்பொருளாகிய திருவம்பலம் மறையின்முதல் இடை கடை என்னும் மூன்றிடத்தும் இருத்தலில் அருமறைமுதலினடுவினிற் கடையில் என்றும், அதையே அன்பர்களும் தகரவித்தையென உபாசிப்பார்கள் ஆதலில் அன்பர் தஞ்சிந்தையிலலர்ந்த என்றுங்கூறினர். அலர்ந்த திருச்சிற்றம்பலம் என இயையும். சத்தி ஒளி அதற்குண்மையின் திருவளரொளிசூழ் என அடைகொடுத்துரைத்தார். இவ்வாறு திருச்சிற்றம்பலப் பொருள் பிரணவப்பொருளாயிருத்தலில் தமிழ்வேதமோதுங்கால் முதலிலும் கடையிலும் சாந்தியாகப் பிரணவத்தைக் கூறுதல்போல ஓதவைத்தனரென்க. அவ்வாறோதாக்கால் எழுத்துப்பிறழ்வு இசைப்பிறழ்வு முதலிய குற்றங்கள் போகாவென்க.

**வையகம் பொலிய மறைச்சிலம் பார்ப்ப மன்றுளே மாலயன் றேட, ஐயர்தாம் வெளியே யாடுகின் றாரை யஞ்சலி மலர்த்திமுன் குவித்த, கைகளோ திளைத்த கண்களோ வந்தக் கரணமோ கலந்தவன் புந்தச், செய்தவம் பெரியோன் சென்றுதாழ்ந் தெழுந்தான் றிருக்களிற் றுப்படி மருங்கு.**

(இ-ள்.) மாலயன்றேட = திருமால்பிரமன் என்னும் இருவரும் முன்னாளிற்றேட அவர்க்கெட்டாமல்; வையகம்பொலிய = மண்ணுலகத்துள்ளார் தரிசித்துக் களிப்படைய ; மறைச்சிலம்பார்ப்ப=வேதங்களாகிய சிலம்பு ஒலிக்க ; வெளியே மன்றுளாடுகின்றார் ஐயரை = வெளிப்பட்டுநின்று கனகசபையின்கண் ஆனந்தநிருத்தஞ் செய்தருள்பவராகிய நடேசப்பிரானை ; அஞ்சலி மலர்த்திமுன் குவித்தகைகளோ=அஞ்சலியாகப்பிடித்துத் திருமுன்குவித்த கைகள்தாமோ ; திளைத்தகண்களோ=திருமேனியைத் தரிசித்து அதனிடத்துக் கலந்தகண்கள்தாமோ ; அந்தக்கரணமோ=கண்வழிச்சென்று அவ்வாறான அந்தக்கரணங்கள் தாமோ ; தன்னிடத்துக் கலந்தவன்புந்த=கலப்பான அன்பின்வழியாய்ச் செலுத்தப்பட; செய்தவம்பெரியோன் = முன்செய்யப்பட்ட தவத்தாற் பெரியராகிய நம்பியாரூரர்; திருக்களிற்றுப்படி மருங்குசென்று தாழ்ந்தெழுந்தான்=திருக்களிற்றுப்படியின் அருகில்சென்று வணங்கி எழுந்தார்.—எ-று. ()

ஒகாரங்கள் ஐயம். எல்லாம் அன்பின்வழியாய்ச் செலுத்தப்பட்டன என்பதுபொருள். அஞ்சலிமலர்த்திருமுன் குவித்தகைகளோ என்றதற்கு அஞ்சலியாகத்திருமுன் குவித்தகைகளை விரித்துச் சிரசின்மேலேறக் குவித்தென்று பொருள் கூறுவாருமுளர். இவ்வாறு அன்புமேம்படத்தரிசித்து பின் அன்பின்விளைவால் திருவருள் ஞானத்தில் ஓங்கித்தரிசிக்கும் முறைமை மேற்கூறுகின்றார்.

ஐந்துபே ரறிவுங் கண்களே கொள்ள வளப்பருங் கரணங்க ணான்குஞ்
சிந்தையே யாகக் குணமொரு மூன்றுந் திருந்துசாத் துவிகமே யாக
இந்துவாழ் சடையா னாடுமா னந்த வெல்லையி றனிப்பெருங் கூத்தின்
வந்தபே ரின்பவெள்ளத்துட் டிளைத்து மாறிலா மகிழ்ச்சியின் மலர்ந்தார்.

(இ-ள்.) ஐந்துபேரறிவும்=ஐந்தாகப்பெயர்ந்த புலவுணர்வைந்தையும்; கண்களேகொள்ள=கண்ணாலாகிய காட்சியுணர்வொன்றுமேகொள்ள; அதிற்படு கரணங்கணான்கும் = அவ்வானந்த வுருவிற்கலந்த நின்மலமான அந்தக்கரணங்கள் நான்கும்; சிந்தையேயாக=அவற்றுளொன்றாகிய சித்தமேயாக; குணமொரு மூன்றும்=கரணங்களை வியாபாரப்படுத்தும் முக்குணங்களும்; திருந்துசாத்துவிகமேயாக=அவற்றுளொன்றாகிய சுத்த சாத்துவிககுணமாக ஒருங்க; இந்துவாழ்சடையானாடு மெல்லையிலானந்தத் தனிப்பெருங்கூத்தின்=இளம்பிறை தவழ்கின்ற சடையினையுடைய நடேசப்பிரான் செய்தருளுகின்ற அளவில்லாதஆனந்தத்தைவிளைக்கும் ஒப்பற்ற திருக்கூத்தால்; வந்தபேரின்பவெள்ளத்துட் டிளைத்து=தம்மிடத்துதித்த பேரானந்தவெள்ளத்தில் முழுகி; மாறிலாமகிழ்ச்சியின் மலர்ந்தார்=நீங்காத பெருங்களிப்பால் திருமேனிபூரித்தார்.—எ-று. (கoசு)

பேரறிவென்னும் வினைத்தொகை இறந்தகாலத்தால் விரிக்கப்பட்டு அறிவென்னும் பண்புப்பெயர் கொண்டது. பெயர்தல்-பிரேரக அவத்தையில் மனத்தோடுகூடிய ஆன்மவுணர்ச்சி ஐம்பொறிவழியால் விடயங்களைப்பற்றி நிற்றல். விடயம் ஐந்தாதலில் உணர்ச்சியும் ஐந்தாயிற்று. கண்ணாலாகிய காட்சியைக் கண்ணென்றது உபசாரம். கரணம் நான்காவன:—மனசு, சித்தம், அகங்காரம், புத்தி, என்பன. மனமாவது:—ஒன்றைப் பொதுமையால் பொறிவழி இதுவென்று சுட்டியுணர்வது. சித்தமாவது:—அக்கருதியபொருளை அம்மனமே சித்தமாய்ப்பரிணமித்துச் சந்தேகமாய்ச் சங்கற்பிப்பது. அகங்காரமாவது:—சங்கற்பித்தஅப்பொருளை நிச்சயமாய் நான் அறிவேன் நான் அறியாநிற்கின்றேன் நான் பண்ணுவேன் நான் பண்ணுநிற்கின்றேன் என அகங்கரித்தலைச்செய்வது. புத்தியாவது:—அகங்காரத்தின்பின்இவள் வனிதை, இதுமாலை,இதுசந்தனம், இதுவிடம், இது சிங்காதம், எனநிச்சயிப்பது. மனசும் இந்திரியமுங்கூடி உணர்வது நிருவிகற்பக்காட்சியென்றும் சித்தம் சங்கற்பித்தபின் அகங்காரத்தினால் அபிமானிக்கப்பட்டு புத்தியால் நிச்சயித்துவரும் உணர்வு சவிகற்பக்காட்சியென்றும் சொல்லப்படும்.குணம்மூன்றுவன:—சத்துவகுணம், ரசோகுணம், தமோகுணம், என இவை. சத்துவகுணம் உணர்வு விளக்கத்திற்கேதுவாயும், ரசோகுணம் ஒன்றிற் பிரவிர்த்திசெய்தற்கேதுவாயும், தமோகுணம் அதிலழுந்தச்செய்தற்கேதுவாயும், நிற்கும். உம்மைகள்

மூன்றும் இளைத்தென்றறிபொருட்கண்வந்தன. ஐந்துபேரறிவுங் கண்களேகொள்ள என்றதனால் நடேசப்பிரான் திருவுரு கட்பொறிக்குவிடயமாயினும் சித்துருவாதலின் ரூபம் முதலிய விடயவுணர்வு அல்லவென்றும் அதனால் அக்காட்சியில் ஐம்புலனும் ஒருங்கிநின்றன என்றும் அதிற்படுகரணங்கணான்கும் சிந்தையேயாக என்றதனால் அத்திருவுருவில் கண்வழித்தாய்ச்சேர்ந்து சவிகற்பமாய் உணர்ந்துநின்ற நான்குகரணமும் தமக்கு வாயிலாய்நின்ற கட்பொறியை நிருவிகற்பமாய்ச் சுட்டாதுசுட்டி நிற்கச்செய்து தாமும் தமக்குப் பிரேரகமாய் நிற்கும் பிரணவகலைகளோடு சித்தமாய் ஒருங்கி நிருவிகற்பசிந்தனங்காட்டி நின்றனவென்றும் அவற்றிற்கு விளக்கமாய் நின்ற குணங்களும் அவ்வந்தக்கரணங்கள் போல் சுத்தசாத்துவிகமாய் ஒருங்கிநின்றனவென்றும் போந்தவாறறிக. ஈண்டு சித்துருவென்றது அதிட்டித சைதன்னியத்தை. அடங்கிநின்றன என்பது தோன்றக் கொள்ள என்றும் ஒன்றிலொன்று கலந்து ஒருங்கி நின்றன என்பது தோன்ற ஆக என்றுங் கூறினர். தனிப்பெருங்கூத்தின் வந்த பேரின்பவெள்ளத்துள் திளைத்து என்றதனால் இவ்வாறு திருவருள்ஞானத்தால் நின்மலசாக்கிராதீதத்தை அடைந்து நிருத்தானந்தவெள்ளத்தில் மூழ்கி மகிழ்ச்சியடைந்தாரென்பதும் போந்தவாறறிக.

தெண்ணிலா மலர்ந்த வேணியா யுன்றன் றிருநடங் கும்பிடப் பெற்று
மண்ணிலே வந்த பிறவியே யெனக்கு வாலிதா மின்பமா மென்று
கண்ணிலா னந்த வருவிநீர் சொரியக் கைம்மல ருச்சிமேற் குவித்துப்
பண்ணினா னீடி யறிவரும் பதிகம் பாடினார் பரவினார் பணிந்தார்.

(இ-ள்.) தெண்ணிலாமலர்ந்த வேணியாய்=தெள்ளிய இளம்பிறைதங்கிய சடைமுடியையுடையாய்; உன்றன்றிருநடங்கும்பிடப்பெற்று = உன்னுடைய ஆனந்தநிருத்தத்தைத் தரிசிக்கப்பெற்று; மண்ணிலேவந்த பிறவியே= நிலவுலகத்தில்வந்த மானிடப்பிறவியே; எனக்குவாலிதா மின்பமாமென்று= எனக்குமேலான இன்பமென்று; கண்ணிலானந்த வருவிநீர்சொரிய=கண்களினின்றும் ஆனந்த வருவிசொரிய; கைமலருச்சிமேற் குவித்து=கரகமலங்களைச் சிரசின்மேலேறக்குவித்து; பண்ணினானீடியறிவரும்பதிகம் = இசையோடுகூடி அறியத்தக்க திருப்பதிகத்தை; பாடினார் பரவினார் பணிந்தார்=பாடித்துதித்து வணங்கினார்.—எ-று. (க௦எ)

தடுத்துமுன் னாண்ட தொண்டனார் முன்பு தனிப்பெருந் தாண்டவம் புரிய, எடுத்தசே வடியா ரருளினாற் றரள மெறிபுனன் மறிதிரைப் பொன்னி, மடுத்தநீள் வண்ணப் பண்ணையா ரூரில் வருகநம் பாலென வானில், அடுத்தபோ தினில்வந் தெழுந்ததோர் நாதங் கேட்டலு மது வுணர்ந் தெழுந்தார்.

(இ-ள்.) தடுத்துமுன்னாண்ட தொண்டனார்முன்பு=(இவ்வாறு ஆனந்த நிருத்தந்தரிசித்து அங்கு வசித்திருக்கும்) தாம் முன் தடுத்தாட்கொண்ட நம்பியாரூரர் எதிராக; தனிப்பெருந் தாண்டவம்புரிய எடுத்தசேவடியார்=ஒப்பற்ற பெரு

மையுடைத்தாகிய ஆனந்தநிருத்தஞ் செய்தற்குத் தூக்கிய சிவந்த குஞ்சிதபாதத்தையுடைய நடேசப்பிரான் திருவருளால்; தரளமெறிமறிதிரைப்புனற்பொன்னி=அலையினால் முத்துக்களை வீசும் நீரையுடைய காவிரியாறானது; மடுத்த நீள்வண்ணப் பண்ணையாரூரில்=பாய்கின்ற அழகிய வயல்சூழ்ந்த திருவாரூரில்; வருகநம்பாலெனவானில்=நம்மிடத்து நீவரக்கடவையென்று ஆகாயத்தில்; அடுத்தபோதினில் வந்தெழுந்ததோர் நாதங்கேட்டலும் = அப்பொழு துதித்தெழுந்த ஓரசரீரி வாக்குக்கேட்டவுடன்; அதுவுணர்ந்தெழுந்தார்=அப்பொருளையறிந்து திருவாரூருக்குச் செல்லும்படி எழுந்தருளினார்.—எ-று. (க0அ)

ஆடுகின் றவர்பே ரருளினா னிகழ்ந்த வப்பணி சென்னிமேற் கொண்டு, சூடுதங் கரங்க ளஞ்சலி கொண்டு தொழுந்தொறும் புறவிடை கொண்டு, மாடுபே ரொளியின் வளருமம் பலத்தை வலங்கொண்டு வணங்கினர் போந்து, நீடுவான் பணிய வுயர்ந்தபொன் வரைபோ னிலையெழு கோபுரங் கடந்து.

(இ-ள்.) ஆடுகின்றவர் பேரருளினானிகழ்ந்த=நடேசப்பிரான் திருவருளால் நிகழ்ந்த; அப்பணிசென்னிமேற்கொண்டு=அக்கட்டளையைச் சிரசின்மேலே வகித்துக்கொண்டு; சூடுதங்கரங்க ளஞ்சலிகொண்டு = சிரமேற்குவித்துச் சூடிய திருக்கரங்களை எடுத்து அஞ்சலியாகப் பிடித்துக்கொண்டு; தொழுந்தொறும் புறவிடைகொண்டு=வணங்குந்தோறும் தாம் புறம்பே போதற்குரிய அநுமதியை வேண்டிக்கொண்டு; மாடுபேரொளியின் வளருமம்பலத்தை வலங்கொண்டு=தன்மாட்டுப்பேரொளியோடு வளர்ந்திருக்கும் திருவம்பலத்தை வலமாக வந்து; வணங்கினர்போந்து=திருவம்பலத்துக்கெதிரே வணங்கிப் புறம்பேசென்று; நீடுவான்பணியவுயர்ந்த=நீண்ட மேகமண்டலமும் தாழும்படி உயர்ந்த; பொன்வரைபோனிலை யெழுகோபுரங்கடந்து=மேருவரைபோலும் ஏழுநிலைகளையுடைத்தாகிய தெற்கின்கணுள்ள கோபுரத்தைக்கடந்துசென்று.—எ-று.(க0௯)

நின்றுகோ புரத்தை நிலமுறப் பணிந்து நெடுந்திரு வீதியை வணங்கி, மன்றலார் செல்வ மறுகினூ டேகி மன்னிய திருப்பதி யதனிற், றென்றிசை வாயில் கடந்துமுன் போந்து சேட்படு திருவெல்லை யிறைஞ்சிக், கொன்றைவார் சடையா னருளையே நினைவார் கொள்ளிடத் திருநதி கடந்தார்.

(இ-ள்.) நின்றுகோபுரத்தை நிலமுறப்பணிந்து=அங்குநின்று அத்திருக்கோபுரத்தைச் சாட்டாங்கமாகவணங்கி; நெடுந்திருவீதியைவணங்கி=அதன்மேல் தேரோடுந் திருவீதியைவணங்கி; மன்றலார்செல்வ மறுகினூடேகி=வாசனை கமழ்கின்ற செல்வம் நிறைந்த ஆவணவீதிவழியேசென்று; மன்னிய திருப்பதியதனிற் றென்றிசைவாயில் கடந்துமுன்போந்து=நிலைபெற்ற அத்திருப்பதியின்கணுள்ள தெற்குவாயிலைக்கடந்து முன்னே எழுந்தருளி; சேட்படுதிருவெல்லையிறைஞ்சி=தூரத்தில் இருக்கும் அத்திருவெல்லையைவணங்கி; கொன்றை

வார்சடையா னருளேயேநினைவார்=கொன்றைமலர்களாலாகிய மாலையை முடித்த நீண்ட சடைமுடியையுடைய சிவபிரான் திருவருளையே சிந்தித்தொழுகும் நம்பியாரூரர்; கொள்ளிடத்திருநதிகடந்தார்=கொள்ளிடமென்னுந் திருநதியைக் கடந்து சென்றருளினார்.—எ-று. இவ்விரண்டுங்குளகம். (கக0)

இதனால் தெற்கெல்லை கொள்ளிடநதி என்றறிரென்க. பிறவெல்லைகள் மேற்கே நாகசேரியும் வடக்கே மணிமுத்தாநதியும் கிழக்கே கடலும் ஆமென்க.

வேறு.

புறந்தருவார் போற்றிசைப்பப் புரிமுந்நூ லணிமார்பர்
அறம்பயந்தா டிருமுலைப்பா லமுதுண்டு வளர்ந்தவர்தாம்
பிறந்தருளும் பெரும்பேறு பெற்றதென முற்றுலகிற்
சிறந்தபுகழ்க் கழுமலமாந் திருப்பதியைச் சென்றணைந்தார்.

(இ-ள்.) புறந்தருவார்போற்றிசைப்ப = தம்மைச்சூழ்ந்த பரிசனங்கள் துதிசெய்ய; புரிமுந்நூலணிமார்பர்=மூன்று புரியினையுடைய உபவீதத்தை யணிந்த மார்பினையுடைய நம்பியாரூரர்; அறம்பயந்தாள்=எல்லா அறங்களையும் வளர்த்த மாதாவாகிய உமாதேவியாரது; திருமுலைப்பாலமு துண்டுவளர்ந்தவர்= திருமுலைப்பாலை அமுதாகவுண்டு வளர்ந்த ஆளுடையபிள்ளையார்; பிறந்தருளும் பெரும் பேறுபெற்றதென = அவதரித்தற்கு ஏதுவான பெரியபேற்றை இத் திருப்பதிபெற்றதென்று; முற்றுலகிற்சிறந்த புகழ்க்கழுமல மாந்திருப்பதியைச் சென்றணைந்தார்=உலகத்தின்கண் நிறைந்த புகழாற்சிறந்த சீகாழியென்னுந் திருப்பதியை அடைந்தருளினார்.—எ-று. தாம்-அசை. (கககு)

பிள்ளையார் திருவவதா ரஞ்செய்த பெரும்புகலி
யுள்ளுநான் மிதியேனென் றூரெல்லைப் புறம்வணங்கி
வள்ளலார் வலமாக வரும்பொழுது மங்கையிடங்
கொள்ளுமால் விடையானு மெதிர்காட்சி கொடுத்தருள.

(இ-ள்.) பிள்ளையார்திரு வவதாரஞ்செய்த பெரும்புகலியுள்ளும்=ஆளுடையபிள்ளையார் திருவவதாரஞ் செய்தற்கிடமான பெருமையாகிய சீகாழியென்னும் இத்திருப்பதியினெல்லையினும்; நான்மிதியேனென்று=நான் மிதிக்கமாட்டேனென்று; ஊரெல்லைப்புறம்வணங்கி = அத்திருப்பதியின் புறவெல்லையைச் சூழ்ந்துவணங்கி; வள்ளலார்வலமாகவரும்பொழுது = நம்பியாரூரர் சீகாழியை வலமாகவருமிடத்து; மங்கையிடங்கொள்ளுமால்விடையானும்=உமாதேவியை இடப்பாகத்தில் வைத்தருளிய தோணியப்பரும்; எதிர்காட்சிகொடுத்தருள= அவரெதிராக எழுந்தருளித் தரிசனங்கொடுத்தருள.—எ-று. (ககஉ)

மண்டியபே ரன்பினால் வன்றொண்டர் நின்றிறைஞ்சித்
தெண்டிரை வேலையின்மிதந்த திருத்தோணி புரத்தாரைக்
கண்டுகொண்டேன் கயிலையினில் வீற்றிருந்த படியென்று
பண்டருமின் னிசைபயின்ற திருப்பதிகம் பாடினார்.

(இ-ள்.) மண்டியபேரன்பினால் வன்றொண்டர்நின்றிறைஞ்சி=நிறைந்த பேரன்போடு நம்பியாரூரர் (காட்சிகொடுத்த) சிவபிரான் திருமுன்னேநின்று வணங்கி; தெண்டிரைவேலையின் மிதந்ததிருத்தோணிபுரத்தாரை = தெள்ளிய அலையினையுடைய கடலில் (கற்பகாலத்து) மிதந்த திருத்தோணிபுரத்தையுடைய சிவபிரானை; கண்டுகொண்டேன் கயிலையினில் வீற்றிருந்தபடியென்று= திருக்கயிலையின்கண் வீற்றிருந்தருளிய திருக்கோலமாக இங்குத் தரிசித்துக் கொண்டேனென்று; பண்டருமின்னிசை பயின்றதிருப்பதிகம் பாடினார்=பண்ணமைந்த இனிய இசையோடுகூடிய திருப்பதிகத்தைப் பாடியருளினார்.—எ-று.

திருக்கழுமலம் - பண் - தக்கேசி.

திருச்சிற்றம்பலம்.

சாதலும் பிறத்தலுந் தவிர்த்தெனை வகுத்துத் தன்னரு டந்தவெந் தலைவனை மலையின், மாதினை மதித்தங்கோர் பால்கொண்ட மணியை வருபுனல் சடையிடை வைத்தவெம் மானை, யேதிலேன் மனத்துக்கோ ரிரும்புண்ட நீரை யெண்வகை யொருவனை யெங்கள் பிரானைக், காதில் வெண் குழையனைக் கடல்கொள மிதந்த கழுமல வளநகர்க் கண்டுகொ ண்டேனே.

செழுமலர்க் கொன்றையுங் கூவிள மலரும் விரவிய சடைமுடி யடிகளை நினைந்திட், டழுமலர்க் கண்ணிணை யடியவர்க் கல்லா லறிவரி தவன்றிரு வடியிணை யிரண்டுங், கழுமல வளநகர்க் கண்டுகொண் டூரன் சடையன்றன் காதலன் பாடிய பத்துந், தொழுமல ரெடுத்தகை யடியவர் தம்மைத் துன்பமு மிடும்பையுஞ் சூழகி லாவே.

திருச்சிற்றம்பலம்.

இருக்கோல மிடும்பெருமா னெதிர்நின்று மெழுந்தருள
வெருக்கோளுற் றதுநீங்கி யாரூர்மேற் செலவிரும்பி
பெருக்கோதஞ் சூழ்புறவப் பெரும்பதியை வணங்கிப்போய்த்
திருக்கோலக் காவணங்கிச் செந்தமிழ் மாலைகள்பாடி.

(இ-ள்.) இருக்கோல மிடும்பெருமான் = வேதங்கள் உணரமாட்டாமல் முறையிடுகின்ற தோணியப்பர்; எதிர்நின்றுமெழுந்தருள=நம்பியாரூரர் எதிரில் நின்றும் மறைந்தருள; வெருக்கோளுற்றதுநீங்கி=அதனால் வெருக்கொண்டு அதனினின்றும் நீங்கி; ஆரூர்மேற்செலவிரும்பி=திருவாரூரையடையவிரும்பி; பெருக்கோதஞ்சூழ்புறவப் பெரும்பதியைவணங்கிப்போய்=பெருக்கினையுடைய கடல்சூழ்ந்த சீகாழியென்னுந் திருப்பதியை வணங்கிச்சென்று; திருக்கோலக் காவணங்கிச் செந்தமிழ்மாலைகள்பாடி=திருக்கோலக் காவென்னுந் திருப்பதியை வணங்கிச் செப்பமாகிய தமிழ்ப்பதிகத்தைப்பாடியருளி.—எ-று. (கககசு)

தேனார்க்கு மலர்ச்சோலைத் திருப்புன்கூர் நம்பர்பால்
ஆனாப்பே ரன்புமிக வடிபணிந்து தமிழ்பாடி
மானார்க்குங் கரதலத்தார் மகிழ்ந்தவிடம் பலவணங்கிக்
கானார்க்கு மலர்த்தடஞ்சூழ் காவிரியின் கரையணைந்தார்.

(இ-ள்.) தேனார்க்குமலர்ச்சோலைத் திருப்புன்கூர் நம்பர்பால்=வண்டுகள் ஆரவாரிக்கும் மலர்களையுடைய சோலைசூழ்ந்த திருப்புன்கூரென்னுந் திருப்பதியில் எழுந்தருளிய சிவலோகநாதரிடத்து; ஆனாப்பேரன்புமிக வடிபணிந்து தமிழ்பாடி=அடங்காத பேரன்பானது மிக்குவளர அவரது திருவடிகளில் வணங்கித் தமிழ்ப்பதிகம்பாடி; மானார்க்குங் கரதலத்தார் மகிழ்ந்தவிடம் பலவணங்கி=மான்கன்று ஒலித்துக்கொண்டிருக்கும் திருக்கரத்தையுடைய சிவபிரான் வீற்றிருந்தருளும் திருநீடூர் முதலிய பல திருப்பதிகளையும் வணங்கி; கானார்க்கு மலர்த்தடஞ்சூழ் காவிரியின்கரையணைந்தார்=வாசனைதங்கிய மலர்களையுடைய தடாகங்கள்சூழ்ந்த காவிரியின்கரையை அணைந்தார்.—எ-று. (ககரு)

வம்புலா மலரலைய மணிகொழித்து வந்திழியும்
பைம்பொன்வார் கரைப்பொன்னிப் பயிறீர்த்தம் படிந்தாடித்
தம்பிரான் மயிலாடு துறைவணங்கித் தாவில்சீ
ரம்பர்மா காளத்தி னமர்ந்தபிரா னடிபணிந்தார்.

(இ-ள்.) வம்புலாமலரலைய=வாசனை வீசுகின்ற பூக்கள் அலைந்துசெல்ல; மணிகொழித்துவந்திழியும்=முத்துமுதலிய மணிகளைக் கரையில் கொழித்துக்கொண்டுவந்து பாய்கின்ற; பைம்பொன்வார்கரைப் பொன்னிப்பயிறீர்த்தம் படிந்தாடி=பசிய பொற்பொடிகளை யுடைத்தாகி நீண்ட கரையினையுடைய காவிரியென்றுசொல்லப்படும் தீர்த்தத்தில் படியும்படிமுழுகி; தம்பிரான்மயிலாடு துறைவணங்கி=மாயூரநாதர் வீற்றிருந்தருளுந் திருமயிலாடுதுறையை வணங்கி; தாவில்சீரம்பர் மாகாளத்தி னமர்ந்தபிரா னடிபணிந்தார்=அங்குநின்றுமெழுந்தருளித் திருவம்பர் மாகாளத்தில் வீற்றிருந்தருளும் காளகண்டேசரை வணங்கியருளினார்.—எ-று. (ககசா)

மின்னார்செஞ் சடையண்ணல் விரும்புதிருப் புகலூரை
முன்னாகப் பணிந்தேத்தி முதல்வன்ற னருணினைந்து
பொன்னாரு முத்தரியப் புரிமுந்நூ லணிமார்பர்
தென்னாவ லூராளி திருவாரூர் சென்றணைந்தார்.

(இ-ள்.) மின்னார்செஞ்சடை யண்ணல்விரும்பு திருப்புகலூரை=மின்னையொத்த சிவந்த சடைமுடியையுடைய சிவபிரான் விரும்பியருளும் திருப்புகலூரை; முன்னாகப்பணிந்தேத்தி முதல்வன்ற னருணினைந்து=முற்பட்டு வணங்கித் துதித்துச் சிவபிரான் திருவருளைநினைந்து; பொன்னாருமுத்தரியப் புரிமுந்நூலணிமார்பர் தென்னாவலூராளி=பீதாம்பர உத்தரியத்தை யுடைத்தாகிய முப்

புரிநூலணிந்த மார்பினையுடையவராகிய நம்பியாரூரர்; திருவாரூர் சென்றணைந்தார்=திருவாரூரின் திருவெல்லையை அடைந்தருளினர்.—எ-று. (கக௭)

தேராரு நெடுவீதித் திருவாரூர் வாழ்வாருக்
காராத காதலினம் மாரூர னுமழைக்க
வாராநின் றானவனை மகிழ்ந்தெதிர்கொள் வீரென்று
நீராருஞ் சடைமுடிமே னிலவணிந்தா ரருள்செய்தார்.

(இ-ள்.) தேராருநெடுவீதித் திருவாரூர்வாழ்வாருக்கு = தேரால் அழகுடைத்தாகிய வீதியையுடைய திருவாரூரின்கண் வாழும் அடியார்களுக்கு; ஆராதகாதலினம்மாரூரன் = அடங்காத பத்திமையினால் நம்முடைய நம்பியாரூரன்; நாமழைக்கவாராநின்றான்=நாம் அழைத்தகாரணத்தால் இவ்விடத்திற்கு வருகின்றான்; அவனைமகிழ்ந்தெதிர் கொள்வீரென்று=அந்நம்பியாரூரனை யாவரும் மகிழ்ச்சியோடு எதிர்கொள்வீர்களாக என்று; நீராருஞ்சடைமுடிமேனிலவணிந்தாரருள்செய்தார்=கங்காநதி பெருக்கெடுக்குஞ் சடைமுடியின்மேல் இளம்பிறையையணிந்த புற்றிடங்கொண்டார் சொற்பனத்திற் பணித்தருளினர்-எ-று.

தம்பிரா னருள்செய்யத் திருத்தொண்ட ரதுசாற்றி
யெம்பிரா னரருடா னிருந்தபரி சிதுவானு
னம்பிரா னராவா ரவரன்றே யெனுநலத்தால்
உம்பர்நா டிழிந்ததென வெதிர்கொள்ள வுடனெழுந்தார்.

(இ-ள்.) தம்பிரானருள்செய்ய=சிவபிரா னிவ்வாறருளிச்செய்ய; திருத்தொண்டரதுசாற்றி=திருத்தொண்டர்கள் அவ்வுத்தரவை யாவரிடத்தும் எடுத்துச்சொல்லி; எம்பிரானரருடானிருந்த பரிசிதுவானுல்=எமது பிரானரது திருவருளிருந்தபடி இவ்வாறானால்; நம்பிரானராவாரவரன்றே யெனுநலத்தால்= நமது பிரானவார் அந்நம்பியாரூரரே என்று கருதும் அன்போடு; உம்பர்நாடிழிந்ததென வெதிர்கொள்ளவுடனெழுந்தார்=தேவருலகம் நிலவுலகத்தில் வந்ததென்று சொல்ல அவரை யெதிர்கொள்ளும்படி யாவரும் ஒருங்குசேர்ந்தெழுந்தார்கள்.—எ-று. (கக௯)

மாளிகைகண் மண்டபங்கண் மருங்குபெருங் கொடிநெருங்கத்
தாளினெடுந் தோரணமுந் தழைக்கமுகுங் குழைத்தொடையும்
நீளிலைய கதலிகளு நிறைந்தபசும் பொற்றசும்பும்
ஒளிநெடு மணிவிளக்கு முயர்வாயி றொறுநிரைத்தார்.

(இ-ள்.) மாளிகைகண்மண்டபங்கண் மருங்குபெருங்கொடிநெருங்க= மாளிகைகளிலும் மண்டபங்களிலும் பெரிய கொடியாடைகள் நெருங்கியிருக்க; தாளினெடுந்தோரணமும்=கால்களிற் கட்டப்பட்ட நெடிய தோரணங்களையும்; தழைக்கமுகுங் குழைத்தொடையும்=தழைத்த கமுகமரங்களையும் மாவிலைமுதலிய தழைகளால் கட்டிய தோரணங்களையும்; நீளிலையகதலிகளும் = நீண்ட இலைகளையுடைய வாழைமரங்களையும்; நிறைந்தபசும்பொற்றசும்பும்=நீர்நிறைந்த

பசியபொன்னாலாகிய பூரணகும்பங்களையும்; ஒளிநெடுமணிவிளக்கும் = ஒழுங்காக நீண்டிருக்கும் அழகிய இரத்தினவிளக்குகளையும்; உயர்வாயிற்றோறுநிரைத்தார் = உயர்ந்த வாயில்கள்தோறும் வரிசையாகவைத்தார்கள்.—எ-று. (கஉ0)

தாளினெடுந்தோரணமென்றதற்கு. பனை தென்னை முதலியவற்றின் குருத்து இதழ்களாலாகிய தோரணமென்றுரைத்தலுமொன்று.

சோதிமணி வேதிகைகடோய்நறுஞ்சாந் தணிநீவிக்
கோதில்பொரி பொற்சுண்ணங் குளிர்தரள மணிபரப்பித்
தாதவிழ்பூந் தொடைமாலைத் தண்பந்தர் களுஞ்சமைத்து
வீதிகணுண் டுகளடங்க விரைப்பனிநீர் மிகத்தெளித்தார்.

(இ-ள்.) சோதிமணிவேதிகைகள் = ஒளியினையுடைத்தாகிய மணிகள் பதித்த திண்ணைகளில்; தூய்நறுஞ்சாந்தணிநீவி = தூய்மையாகிய நறிய சந்தனக் குழம்பை அழகாகமெழுகி (அதன்மீது); கோதில்பொரி பொற்சுண்ணங் குளிர்தரளமணிபரப்பி = குற்றமற்ற பொரியும் பொற்சுண்ணமும் குளிர்ந்த முத்தும் மணிகளும் ஆகிய இவைகளைப்பரப்பி; தாதவிழ்பூந்தொடைமாலைத் தண்பந்தர்களுஞ்சமைத்து = மகரந்தங்களைச்சொரிந்து அலர்ந்த மலராற்றொடுத்த மாலைகளால் குளிர்ந்த பூம்பந்தல்களையும்செய்து; வீதிகணுண்டுகளடங்க விரைப்பனிநீர்மிகத்தெளித்தார் = தெருவீதிகளிடத்து நுண்ணிய துகள்கள் அடங்கும்படி வாசனைகமழ்கின்ற பனிநீரை நன்றாகத்தெளித்தார்கள்.—எ-று. (கஉக)

மங்கலகீ தம்பாட மழைநிகர்தூ ரியமுழங்கச்
செங்கயற்கண் முற்றிழையார் தெற்றிதொறு நடம்பயில
நங்கள்பிரான் றிருவாரூர் நகர்வாழ்வார் நம்பியைமுன்
பொங்கெயினீ டிருவாயிற் புறமுறவந் தெதிர்கொண்டார்.

(இ-ள்.) மங்கலகீதம்பாட = மங்கலகரமான கீதங்கள்பாடவும்; மழைநிகர்தூரியமுழங்க = மேகத்தின் முழக்கையொத்த பேரிகை முதலிய வாத்தியங்கள் முழங்கவும்; செங்கயற்கண்முற்றிழையார் தெற்றிதொறுநடம்பயில = சிவந்த கயல்மீன்போலும் கண்களையுடைய செய்தொழின்முற்றிய ஆபரணங்களையணிந்த மகளிர்கள் நாட்டியஞ்செய்தற்குரிய மேடைகள்தோறும் நிருத்தஞ்செய்யவும்; நங்கள்பிரான்றிரு வாரூர்நகர்வாழ்வார் = எங்கள்பிரானாகிய தியாகேசர் எழுந்தருளியிருக்கும் திருவாரூரில்வாழும் அடியார்கள்; நம்பியைமுன்பொங்கெயி னீடிருவாயிற்புறமுறவந்தெதிர்கொண்டார் = நம்பியாரூரரை முற்பட்டு பொலிவினையுடைத்தாகிய நகர்ப்புறத்துள்ள நீண்ட மதிற்றிருவாயிலின்புறத்தே வந்து எதிர்கொண்டார்கள்.—எ-று. (கஉஉ)

வேறு.

வந்தெதிர் கொண்டு வணங்குவார்முன் வன்றொண்ட ரஞ்சலி கூப்பிவந்
சிந்தை களிப்புற வீதியூடு செல்வார் திருத்தொண்டர் தம்மைநோக்கி[து
யெந்தை யிருப்பது மாரூரவ ரெம்மையு மாள்வரோ கேளீரென்னுஞ்
சந்த விசைப்பதி கங்கள்பாடித் தம்பெரு மான்றிரு வாயில்சார்ந்தார்.

(இ-ள்.) வந்தெதிர்கொண்டு வணங்குவார்முன்=தம்மை எதிர்கொண்டு வந்து வணங்கும் திருவடியார்களுக்குமுன்; வன்றொண்டரஞ்சலிகூப்பிவந்து= நம்பியாரூரரும் திருக்கரங்களை அஞ்சலியாகக்குவித்து வணங்கி அவரெதிரே வந்து; சிந்தைகளிப்புற வீதியூடுசெல்வார்=திருவுள்ளக்களிப்போடு திருவீதியினிடத்துச்செல்லுகின்றவர்; திருத்தொண்டர்தம்மைநோக்கி = அத்திருவடியார்களைப்பார்த்து; எந்தையிருப்பது மாரூரவரெம்மையுமாளாள்வரோகேளீரென்னும் = எந்தையிருப்பது மாரூரவரெம்மையு மாள்வரோகேளீரென்னும் வினாப்பொருளையுடைய; சந்தவிசைப்பதிகங்கள்பாடி=சந்தம் நிறைந்த இசையோடு கூடியதிருப்பதிகத்தைப் பாடியருளி; தம்பெருமான்திருவாயில்சார்ந்தார்=தமது முதல்வராகிய புற்றிடங்கொண்டார் திருக்கோயிலின் திருவாயிலை அடைந்தருளினார்.—எ-று. (கஉரு)

திருவாரூர் - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

கரையுங் கடலு மலையுங் காலையு மாலையு மெல்லா
முரையில் விரவி வருவா னொருவ னுருத்திர லோகன்
வரையின் மடமகள் கேள்வன் வானவர் தானவர்க் கெல்லா
மரைய னிருப்பது மாரூ ரவ ரெம்மையு மாள்வரோகேளீர். (க)

தனியனென் றெள்கி யறியேன் றம்மைப் பெரிது முகப்பன்
முனிபவர் தம்மை முனிவன் முகம்பல பேசிமொழியேன்
கனிகள் பலவுடைச் சோலைக் காக்குலை யீன்றகமுகி
னினிய னிருப்பது மாரூ ரவ ரெம்மையு மாள்வரோகேளீர். (உ)

சொல்லிற் குலாவன்றிச் சொல்லேன் றொடர்ந்தவர்க் குந்துணை யல்லேன்
கல்லில் வலிய மனத்தேன் கற்ற பெரும்புல வாண
ரல்லல் பெரிது மறுப்பா னருமறை யாறங்க மோது
மெல்லை யிருப்பது மாரூ ரவ ரெம்மையு மாள்வரோகேளீர். (ங)

நெறியு மறிவுஞ் செறிவு நீதியு நான்மிகப் பொல்லேன்
மிறையுந் தறியு முகப்பன் வேண்டிற்றுச் செய்து திரிவன்
பிறையு மரவும் புனலும் பிறங்கிய செஞ்சடை வைத்த
விறைவ னிருப்பது மாரூ ரவ ரெம்மையு மாள்வரோகேளீர். (ச)

நீதியி லொன்றும் வழுவே னிற்கண்ட கஞ்செய்து வாழ்வேன்
வேதியர் தம்மை வெகுளேன் வெகுண்டவர்க் குந்துணை யாகேன்
சோதியிற் சோதியெம் மானைச் சுண்ணவெண் ணீறணிந் திட்ட
வாதி யிருப்பது மாரூ ரவ ரெம்மையு மாள்வரோகேளீர். (ரு)

அருத்தம் பெரிது முகப்ப னல்லலே யேனலந்தார்க
ளொருத்தற் குதவியே னல்லே னுற்றவர்க் குந்துணை யல்லேன்
பொருத்தமே லொன்று மிலாதேன் புற்றெடுத் திட்டிடங்கொண்ட
வருத்த னிருப்பது மாரூ ரவ ரெம்மையு மாள்வரோகேளீர். (௬)

சந்தம் பலவறுக் கில்லேன் சார்ந்தவர் தம்மடிச் சாரேன்
முந்திப் பொருவிடை யேறி மூவுல குந்திரி வானே
கந்தங் கமழ்கொன்றை மாலைக் கண்ணியன் விண்ணவ ரேத்து
மெந்தை யிருப்பது மாரூ ரவ ரெம்மையு மாள்வரோகேளீர். (எ)

நெண்டிக்கொண் டேயுங்கி லாய்ப்ப னிச்சய மேயிது திண்ண
மிண்டர்க்கு மிண்டலாற் பேசேன் மெய்ப்பொரு ளன்றி யுணரேன்
பண்டங் கிலங்கையர் கோனைப் பருவரைக் கீழடர்த் திட்ட
வண்ட னிருப்பது மாரூ ரவ ரெம்மையு மாள்வரோகேளீர். (அ)

நமர்பிற ரென்ப தறியே னான்கண்ட தேகண்டு வாழ்வேன்
றமரம் பெரிது முகப்பன் றக்கவா றென்று மிலாதேன்
குமரன் றிருமால் பிரமன் கூடிய தேவர் வணங்கு
மமர னிருப்பது மாரூ ரவ ரெம்மையு மாள்வரோகேளீர். (௯)

ஆசை பலவறுக் கில்லே னாரையு மன்றி யுரைப்பேன்
பேசிற் சழக்கலாற் பேசேன் பிழைப்புடை யேன்மனந் தன்னு
ளோசை பெரிது முகப்பா னொலிகட னஞ்சமு துண்ட
வீச னிருப்பது மாரூ ரவ ரெம்மையு மாள்வரோகேளீர். (௧௦)

எந்தை யிருப்பது மாரூ ரவ ரெம்மையு மாள்வரோவென்று
சிந்தை செயுந்திறம் வல்லான் றிரு மருவுந்திர டோளன்
மந்த முழவ மியம்பும் வளவய லூரன் (௧௧)
சந்த மிசையொடும் வல்லார் தாம்புக ழெய்துவர் தாமே.

திருச்சிற்றம்பலம்.

---

வானுற நீடிரு வாயிலைநோக்கி மண்ணுற வைந்துறுப் பால்வணங்கித்
தேனுறை கற்பக வாசமாலைத் தேவா சிரியன் றொழுதிறைஞ்சி
யூனு முயிரு முருக்குமன்பா லுச்சி குவித்தசெங் கைகளோடுந் [ர்.
தூநறுங் கொன்றையன் மூலத்தானஞ் சூழ்திரு மாளிகை வாயில்புக்கா

(இ-ள்.) வானுறநீடிரு வாயினைநோக்கி=விண்ணுலகளவும் உயர்ந்து நீண்ட திருவாயிலைத் தரிசித்து ; மண்ணுறவைந்துறுப் பால்வணங்கி=நிலத்திலேபொரு ந்தப்பஞ்சாங்கவிதிப்படி வணங்கி; தேனுறைகற்பகவாசமாலைத் தேவாசிரியன் தொழுதிறைஞ்சி=தேன்தங்கிய கற்பகமலர்களால் தொடுத்த வாசனையுடைத்தா

கிய மாலைகள் தூக்கியிருக்கும் தேவாசிரியமண்டபத்தை வணங்கித் தொழுது; ஊனுமுயிரு முருக்குமன்பால்=உடம்பையும் உயிரையும் உருகச்செய்யும் அன்பி னால்; உச்சிகுவித்த செங்கைகளோடும்=சிரமேற்குவித்த சிவந்த திருக்கரங்களு டன்; தூநறுங்கொன்றையன் மூலத்தானஞ்சூழ் திருமாளிகை வாயில்புக்கார்= தூய்மையானநறுமணங்கமழும் கொன்றைப் பூமாலையையணிந்த தியாகப்பிரா னது பூங்கோயிலைச்சூழ்ந்த திருமாளிகையின் வாயிலை அடைந்தருளினார்,—எ-று.

புற்றிடங் கொண்ட புராதனனைப் பூங்கோயின் மேய பிரானையார்க் கும், பற்றிட மாய பரம்பொருளைப் பார்ப்பதி பாகனைப் பங்கயத்தாள், அர்ச்சனை செய்ய வருள்புரிந்த வண்ணலை மண்மிசை வீழ்ந்திறைஞ்சி, நற்றமிழ் நாவலர் கோனுடம்பா னன்மையின் றன்மையை மெய்ம்மை பெற்றார்.

(இ-ள்.) புற்றிடங்கொண்ட புராதனனை=புற்றை இடமாகக்கொண்ட பழமையுடையவரை; பூங்கோயில் மேயபிரானை=பூங்கோயிலின்கண் வீற்றிருந் தருள்பவரை; யார்க்கும்பற்றிடமாய பரம்பொருளை=யாவர்க்கும் பற்றுதற்குரிய இடமான பரம்பொருளை; பார்ப்பதிபாகனை=உமாதேவியைப் பாகத்தில் உடைய வரை; பங்கயத்தாள் அர்ச்சனைசெய்ய வருள்புரிந்த அண்ணலை=தாமரைமலரின் கண் வாழும் இலக்குமிதேவி பூசிக்க அவட்கு அருள்செய்த முதல்வரை; மண் மிசைவீழ்ந்திறைஞ்சி = நிலமுறச் சாட்டாங்கமாய் விழுந்து வணங்கி; நற்றமிழ் நாவலர்கோன்=நல்ல தமிழ்ப்புலமை நிறைந்த நம்பியாரூரர்; உடம்பானன்மை யின் றன்மையை மெய்ம்மைபெற்றார்=உடம்பெடுத்ததனாலாய பயனின்விளைவை மெய்ம்மையாகப் பெற்றுக்கொண்டார்.—எ-று. (கஉ௫)

உடம்பெடுத்தார்க்கு உறுதிப்பயனாவது:—இறைவனடியை வணங்கி இன் புறுதல். அப்பயனை அவர் உள்ளவாறடைதலின் மெய்ம்மைபெற்றார் என்றார். மலர்மகள் வழிபட்ட சரிதம் திருவாரூர்ச்சிறப்பில் "மன்னுமாமலராள் வழிபட் டது" என்னும் திருவிருத்தத்திற் கூறப்பட்டது.

அன்பு பெருக வுருகியுள்ள மலைய வட்டாங்க பஞ்சாங்கமாக
முன்பு முறைமையி னால்வணங்கி முடிவிலாக் காதன் முதிரவோங்கி
நன்புல னாகிய வைந்துமொன்றி நாயகன் சேவடி யெய்தப்பெற்ற
இன்பவெள் ளத்திடை மூழ்கிநின்றே யின்னிசை வண்டமிழ் மாலைபாட..

(இ-ள்.) அன்புபெருக வுருகியுள்ளமலைய = அன்பானது தன்னுள்ளே பெருக்கெடுக்க அதனால் மனங்கசிந்துருகி அவ்வன்புவழித்தாய்ச் சஞ்சரித்துநிற்க; அட்டாங்கபஞ்சாங்கமாக=அட்டாங்கமுறையும் பஞ்சாங்கமுறையும் பொருந்த; முன்பு முறைமையினால் வணங்கி=முன்னே முறைப்படிவணங்கி; முடிவிலாக் காதல் முதிரவோங்கி= அளவுபடாத பெருவிருப்பானது மேற்பட அதனால் உயர்வடைந்து; நன்புலனாகியவைந்துமொன்றி=நல்லவிடய உணர்வாகிய ஐந் தும் ஒருங்கப்பெற்று; நாயகன்சேவடி யெய்தப்பெற்ற இன்பவெள்ளத்திடை மூழ்கி நின்று=புற்றிடங்கொண்டார் திருவடிகளைத் தாம் அடைந்ததனால் உண்

டாகிய பேரின்பவெள்ளத்தில் முழுகி நின்று ; இன்னிசைவண்டமிழ் மாலைபாட=இனிய இசையோடு கூடிய திருப்பதிகத்தைப் பாடியருள.—எ-று. ஏ-அசை.

அன்பு மேம்பட்டாலன்றி மனமுருகி யதன்வழித்தாகா தென்னுங்கருத்தால் அன்பு பெருகவுருகியுள்ளமலைய என்றும், புலனுங் கரணமு மொருங்கிஞலன்றிச் சிவானந்த மெய்தக்கூடாதென்பது தோன்ற ஒன்றி யெய்தப்பெற்ற இன்பவெள்ளமென்றுங் கூறிஞரென்க.

வாழிய மாமறைப் புற்றிடங்கொண் மன்னவ ஞருரு ளாலோர்வாக்குத்
தோழமை யாக வுனக்குநம்மைத் தந்தன நாமுன்பு தொண்டுகொண்ட
வேள்வியி லன்றுநீ கொண்டகோல மென்றும்புனைந்துநின் வேட்கைதீர
வாழிமண் மேல்விளை யாடுவாயென் ருரூரர் கேட்க வெழுந்ததன்றே.

(இ-ள்.) மாமறைப்புற்றிடங்கொண் மன்னவனுரருளால் = பெருமையுடைத்தாகிய பிரணவருபமான புற்றை இடமாகக்கொண்டு வீற்றிருந்தருளும் தியாகப்பிரானது திருவருளினுல் ; ஓர்வாக்குத் தோழமையாக வுனக்கு நம்மைத் தந்தனம்=ஓரசரீரிவாக்கானது நம்மை உனக்குத்தோழனுக இருத்தலைக்கொடுத்தோம்; நாமுன்புதொண்டுகொண்டவேள்வியில்=நாம் முன் உன்னைத் திருநாவலூரில் தடுத்தாட்கொண்ட திருமணத்தில்; அன்றுநீகொண்டகோல மென்றும்புனைந்து=அன்றைக்கு நீ தரித்துக்கொண்டகோலத்தை எந்நாளுந் தரித்துக்கொண்டு; நின்வேட்கைதீர ஆழிமண்மேல் விளையாடுவாயென்று=உன்னுடைய விருப்பம் அனுபவித்துத் தொலையும்படி கடல்சூழ்ந்த நிலவுலகத்து விளையாடுவாயாக என்று ; ஆரூரர் கேட்கஎழுந்தது=நம்பியாரூரர் கேட்கும்படி எழுந்தது.—எ-று.

வாழிய, அன்று, ஏ, அசை.

கேட்க விரும்பிவன் றெண்டரென்றுங் கேடிலாதானை யிறைஞ்சி நின்றே
யாட்கொள வந்த மறையவனே யாரூ ரமர்ந்த வருமணியே
வாட்கயல் கொண்டகண் மங்கைபங்கா மற்றுன் பெரிய கருணையன்றே
நாட்கம லப்பதந் தந்ததின்று நாயினே னைப்பொரு ளாகவென்றுர்.

(இ-ள்.) கேட்கவிரும்பி வன்றெண்டர் = (அவ்வசரீரி) கேட்டவுடன் நம்பியாரூரர் விருப்பமுற்று ; என்றுங் கேடிலாதானை இறைஞ்சி நின்று=எக்காலத்தும் அழிவில்லாத சிவபிரானை வணங்கி நின்று ; ஆட்கொளவந்த மறையவனே=என்னை அடிமைக்கொள்ள எழுந்தருளிய வேதியனே ; ஆரூரமர்ந்த வருமணியே=திருவாரூரில் வீற்றிருந்தருளும் அரிய மாணிக்கம்போல்வாரே; வாட்கயல்கொண்டகண்மங்கைபங்கா=ஒளியினையுடைய கயல்மீன்போலுங் கண்களையுடைய உமாதேவியாரைப் பாகத்திலுடையவரே ; உன்பெரிய கருணையே = உன்னுடைய பெருங்கருணையே ; இன்று நாயினேனைப் பொருளாக நாட்கமலப்பதந்தந்தது என்றுர்=நாய்க்கொப்பான அடியேனை இன்றைக்குப் பொருளாக மதித்து அன்றலர்ந்த தாமரைமலர்போலுந் திருவடிகளைப் புகலாகக்கொடுத்ததென்று விண்ணப்பஞ்செய்தார்.—எ-று. (கஉஅ)

அன்று, மற்று, அசை. ஏகாரமிரண்டில் முன்னையது அசை. பின்னையது தேற்றம். ஈண்டு நாட்கமலப்பதம் என்றது சிவபிரான் திருவருளென்னுந் துணையாய் நின்றது.

என்று பலமுறை யால்வணங்கி யெய்திய வுள்ளக் களிப்பினோடும்,
வென்றி யடல்விடை போனடந்து வீதி விடங்கப் பெருமான்முன்பு,
சென்று தொழுது துதித்துவாழ்ந்து திருமா ளிகைவலஞ் செய்துபோந்
தார், அன்று முதலடி யார்களெல்லாந் தம்பிரான் றோழனென் றேயழைந்தார்.

(இ-ள்.) என்றுபலமுறையால்வணங்கி=இவ்வாறுகூறிப் பலதரம் சாட்டாங்கமாய்வணங்கி; எய்திய உள்ளக்களிப்பினோடும் = தம்முள்ளத்து நிகழ்ந்த பெருமகிழ்ச்சியுடன்; வென்றியடல்விடைபோனடந்து = வெற்றியினையுடைய வலிய இடபேறுபோல்நடந்து; வீதிவிடங்கப்பெருமான் முன்புசென்று=தியாகப்பிரான் திருமுன்புபோய்; தொழுது துதித்துவாழ்ந்து = வணங்கித்துதித்து அதனால் வாழ்வடைந்து; திருமாளிகை வலஞ்செய்துபோந்தார்=ஆலயத்தைச் சூழ்ந்த திருமாளிகைப்பத்தியை வலமாகவந்து புறப்பட்டார்; அன்றுமுதலடியார்களெல்லாந் தம்பிரான்றோழ னென்றே யழைந்தார் = அந்நாள்முதல் திருக்கூட்டத்தாரெல்லாம் தம்பிரான்றோழரென்று திருநாமமிட்டு வழங்கினார்கள்.—எ-று.

மைவளர் கண்ட ரருளினாலே வண்டமிழ் நாவலர் தம்பெருமான்,
சைவ விடங்கி னணிபுனைந்து சாந்தமு மாலையுந் தாருமாகி, மெய்வளர்
கோல மெலாம்பொலிய மிக்க விழுத்தவ வேந்தரென்னத், தெய்வ மணி
ப்புற்று ளாரைப்பாடித் திளைத்து மகிழ்வொடுஞ் செல்லாநின்றார்.

(இ-ள்.) மைவளர்கண்ட ரருளினாலே=கரியகண்டத்தையுடைய சிவபிரான் திருவருளால்; வண்டமிழ்நாவலர்தம்பெருமான் = வளவிய தமிழ்வல்லவரான திருநாவலூரர்; சைவவிடங்கி னணிபுனைந்து=சைவமறையவர்க்குரிய சுந்தரவேடத்தைத் தாங்கிக்கொண்டு; சாந்தமுமாலையுந் தாருமாகி = சந்தனமும் முத்துமாலையும் மலர்மாலையும் அணிந்தவராய்; மெய்வளர் கோலமெலாம்பொலிய=தமது திருமேனியின்கண் மிகச்சிறந்த அலங்காரமெல்லாம் பொலிந்திருக்க; மிக்க விழுத்தவ வேந்தரென்ன=மேன்மை மிகச்சிறந்த தவவேந்தரென்று சொல்லும்படி; தெய்வமணிப் புற்றுளாரைப்பாடி=தெய்வீகம்நிறைந்த அழகிய புற்றிடங்கொண்டாரைப் பதிகங்கள்பாடி; திளைத்து மகிழ்வொடுஞ் செல்லாநின்றார்=சிவானந்தத்தில் முழுகி மகிழ்ச்சியோடு நாள்தோறுந் தரிசித்துச் செல்வாராயினார்.—எ-று. (கரு௦)

வேறு.

இதற்குமுன் னெல்லையில்லாத் திருநக ரிதனுள்வந்து
முதற்பெருங் கயிலையாதி முதல்வர்தம் பங்கினாட்குப்
பொதுக்கடிந் துரிமைசெய்யும் பூங்குழற் சேடிமாரிற்
கதித்தபூ ணேந்து கொங்கைக் கமலினி யவதரித்தாள்.

(இ-ள்.) இதற்குமுன்=நம்பியாரூரர் திருவாரூருக்கு எழுந்தருளுதற்கு முன்னே; எல்லையில்லாத்திருநக ரிதனுள்வந்து=அளவுபடாத சிறப்பினையுடைய இத்திருவாரூரிடத்து வந்து; முதற்பெருங்கயிலை=முதன்மையுடைத்தாகிய பெருமையினையுடைய திருக்கயிலையின்கண் வீற்றிருந்தருளும்; ஆதிமுதல்வர்தம் பங்கினாட்கு=ஆதிகாரணரான சிவபிரானது பாகத்தையுடைய உமாதேவியாருக்கு; பொதுக்கடிந்துரிமைசெய்யும்=சிறப்பாய் உரிமைத்தொண்டுசெய்யும்; பூங்குழற்சேடிமாரில்=பூக்களைமுடித்த அளகத்தையுடைய கமலினி அனிந்திதையென்னும் இரண்டு சேடியர்களுள்; கதித்தபூணேந்து கொங்கைக்கமலினி யவதரித்தாள்=ஒளியினையுடைத்தாகிய ஆபரணங்களைத்தாங்கிய தனங்களையுடைய கமலினியென்னும் சேடி திருவவதாரஞ் செய்தாள்.—எ-று. (கஙக)

கதிர்மணி பிறந்ததென்ன வுருத்திர கணிகைமாராம்
பதியிலார் குலத்திற்றோன்றிப் பரவையா ரென்னுநாமம்
விதியுளி விளக்கத்தாலே மேதகு சான்றோரான்ற
மதியணி புனிதனன்னாண் மங்கல வணியாற்சாற்றி.

(இ-ள்.) கதிர்மணிபிறந்ததென்ன=(சிப்பியினிடத்து) ஒளியினையுடைய் முத்துப்பிறந்தாற்போல்; உருத்திரகணிகைமாராம் பதியிலார்குலத்திற்றோன்றி=நாயகனையில்லாத உருத்திரகணிகையர் குலத்தி லவதரித்து; விதியுளிவிளக்கத்தாலே=ஊழ்விளக்கவந்த விளக்கத்தால்; மேதகுசான்றோர்=மேன்மைமிக்க பெரியோர்களால்; ஆன்றமதியணிபுனிதனன்னாள்=சிறந்த இளம்பிறையையணிந்த சிவபிரானது திருவாதிரை நட்சத்திரத்தில்; பரவையாரென்னுநாமம் மங்கலவணியாற்சாற்றி=மங்கலகரமான சிறப்பால் பரவையாரென்னும் திருநாமம் சாற்றப்பட்டு.—எ-று. (கஙஉ)

உருத்திரகணிகையர்:— வேசியர்க்கு வேறாய்மணமின்றி உயர்ந்த சாதியர்களில் ஒருவனைக்கணவனாகக்கொண்டு பூசாகாலத்தில் சுத்தநிருத்தஞ்செய்யும் மகளிர்கள்.

பரவினர் காப்புப்போற்றிப் பயில்பெருஞ் சுற்றந்திங்கள்
விரவிய பருவந்தோறும் விழாவணி யெடுப்பமிக்கோர்
வரமலர் மங்கையிங்கு வந்தன ளென்றுசிந்தை
தரவரு மகிழ்ச்சிபொங்கத் தளர்நடைப் பருவஞ்சேர்ந்தார்.

(இ-ள்.) பயில்பெருஞ்சுற்றம் பரவினர்காப்புப்போற்றி = தமக்கு இனமாகப்பயின்ற மிக்க சுற்றத்தார்கள் தெய்வங்களைப் பராயினவர்களாய்க் காவலைப் பேணி; திங்கள்விரவிய பருவந்தோறும் விழாவணியெடுப்ப=தால் செங்கீரைமுதலிய பருவங்களிற் செய்யப்பட்ட விழாவணிகளைச்செய்ய; மிக்கோர் வரமலர்மங்கையிங்கு வந்தனளென்று=அறிஞர்கள் மேன்மையாகிய திருமகள் இவ்விடத்துவந் தவதரித்தாளென்று; சிந்தைதரவரு மகிழ்ச்சிபொங்க=தங்களுள்ளத்தின்கண் உதிக்கவரும் மகிழ்ச்சிமேம்பட; தளர்நடைப்பருவஞ் சேர்ந்தார் = தளர்நடைப்பருவத்தை யடைந்தார்.—எ-று. (கஙங)

தாலப்பருவம் ஐந்தாமாதமும், செங்கீரைப்பருவம் ஏழாமாதமும், சப்பாணிப்பருவம் ஒன்பதாமாதமுமாகப் பருவங்கள் மாதவரையறையாய் வருதலால் திங்கள் விரவிய பருவம் என்றார்.

மானிளம் பிணையோதெய்வ வளரிள முகையோவாசத்
தேனிளம் பதமோவேலைத் திரையிளம் பவளவல்லிக்
கானிளங் கொடியோதிங்கட் கதிரிளங் கொழுந்தோகாமன்
றானிளம் பருவங்கற்குந் தனியிளந் தனுவோவென்ன.

(இ-ள்.) மானிளம்பிணையோ=இளமையாகிய ஓர்பெண்மானோ; தெய்வவளரிளமுகையோ=தெய்வத்தன்மை யுடைத்தாகிய கற்பகதருவின் வளரும் பருவத்தையுடைய இளமையான ஓரரும்போ; வாசத்தேனிளம்பதமோ=வாசனையுடைத்தாகிய கற்பகமலர்த்தேனினது ஓரிளம்பதமோ; வேலைத்திரை யிளம்பவளவல்லிக்கானிளங்கொடியோ=அலைவீசுகின்ற கடலில் உதித்த இளமையான பவளக்கொடிகளென்னுங் காட்டுள் ஓரிளங்கொடியோ; திங்கட்கதி ரிளங்கொழுந்தோ=ஒளியினையுடைய சந்திரனது ஓரிளங்கலையோ; காமன்இளம்பருவங்கற்கும்=மன்மதன் இளம்பருவத்தில் கற்றற்குரிய; தனியிளந்தனுவோவென்ன=ஒப்பற்ற இளமையான ஓர்கருப்புவில்லோ அல்லது பூவில்லோ எனக்கண்டார் கூற.—எ-று. ஓகாரங்கள் ஐயம். தான், அசை. (கருச)

நாடுமின் பொற்புவாய்ப்பு நாளுநாள் வளர்ந்துபொங்க
ஆடுமென் கழங்கும்பந்து மம்மனை யூசலின்ன
பாடுமின் னிசையுந்தங்கள் பனிமலை வல்லிபாதங்
கூடுமன் புருகப்பாடுங் கொள்கையோர் குறிப்புத்தோன்ற.

(இ-ள்.) நாடுமின்பொற்புவாய்ப்பு=எல்லாராலும் கருதத்தக்க இனிய அழகினது சிறப்பானது; நாளுநாள்வளர்ந்துபொங்க=நாள்தோறும் நாள்தோறும் வளர்ந்து பொலிவடைய; ஆடுமென்கழங்கும்பந்தும்=எடுத்தாடுகின்ற மிருதுவாகிய கழற்காயும்பந்தும்; அம்மனையூசலின்ன=அம்மனையும் ஊசலாட்டும் ஆகிய இவை போலுமிடங்களில்; பாடுமின்னிசையும்=பாடுகின்ற இனிய இசையும்; தங்கள்பனிமலைவல்லிபாதம்=தங்கள் முதல்வியாகிய பார்வதிதேவியாரது திருவடிகளை; கூடுமன்பு=கூடுதற்குக் காரணமான அன்போடு; உருகப்பாடுங்கொள்கையோர்குறிப்புத்தோன்ற=மனமுருகப்பாடுகின்ற கொள்கையாகிய ஒரு குறிப்பும் அவரிடத்து உதிக்கவும்.—எ-று. (கருரு)

பிள்ளைமைப் பருவமீதாம் பேதமைப் பருவநீங்கி
யள்ளுதற் கமைந்தபொற்பா லனங்கன்மெய்த் தனங்களீட்டங்
கொள்ளமிக் குபர்வபோன்று கொங்கைகோங் கரும்பைவீழ்ப்ப
உள்ளமெய்த் தன்மைமுன்னை யுண்மையுந் தோன்றவுய்ப்பார்.

(இ-ள்.) பிள்ளைமைப்பருவமீதாம் பேதைமைப்பருவம்நீங்கி = குழந்தைப் பருவமாகிய ஐந்துவயதுக்குமேல் பேதைப்பருவத்தினின்றும் நீங்கி; அள்ளுதற்

கமைந்தபொற்பால் = அள்ளிக்கொள்வதற் கமைந்த அழகினால்; அனங்கன் மெய்த்தனங்கள்ஈட்டம்=மன்மதன்தேடிய மெய்மையான திரவியக்குவையை; கொள்ளமிக்குயர்வ போன்று = தாம்கொள்ளும்படி நாள்தோறும் உயர்வன போல; கொங்கை கோங்கரும்பை வீழ்ப்ப=தனங்கள் கோங்கரும்புகளைத் தோற்கச் செய்ய; உள்ளமெய்த் தன்மைமுன்னே யுண்மையும் = தமக்குள்ளமெய்ம்மைத் தன்மையாகிய உமாதேவியாருக்குத் தோழியாயிருக்குந் தன்மையையும்; தோன்றஉய்ப்பார்=யாவருக்குந்தோன்றும்படி குறிப்பிப்பாராயினார் பரவைநாச்சியார்.—எ-று. இம்மூன்றுங்குளகம் (கஙசு)

கொங்கையிரண்டும் தங்கட்குப் போகத்தைவிளைவிக்கும் உருவத்திற்சிறந்த மாரன்தேடும் அரும்பொருள்வைத்தற்குரிய செப்புமிக்க அழகுள்ளதாயிருத்தல்வேண்டுதலில் தாம் அச்செப்பாய் அப்பொருள்களைக் கொள்வோமென்னும் ஆசையால் உயர்வனபோல் உயர்ந்தன என்பது தோன்ற அனங்கன்மெய்த்தனங்களீட்டங் கொள்ள மிக்குயர்வபோன்று என்றார்.

பாங்கியர் மருங்குசூழப் படரொளி மறுகுசூழத்
தேங்கமழ் குழலின்வாசந் திசையெலாஞ் சென்றுசூழ
ஓங்குபூங் கோயிலுள்ளா ரொருவரை யன்பினோடும்
பூங்கழல் வணங்கவென்றும் போதுவா ரொருநாட்போந்தார்.

(இ-ள்.) பாங்கியர்மருங்குசூழ=தோழியர்கள் அருகில்சூழ்ந்துவரவும்; படரொளிமறுகுசூழ=பரம்பிய தேககாந்தியானது வீதியிற்சூழவும்; தேங்கமழ் குழலின்வாசந் திசையெலாஞ் சென்றுசூழ = பூந்தேன்கமழும் கூந்தலின் நறுமணமானது திக்குகளெல்லாம் பரம்பிச்சூழவும்; ஓங்குபூங் கோயிலுள்ளாரொருவரை=உயர்ந்தபூங்கோயிலில் வீற்றிருந்தருளும் ஒப்பற்ற புற்றிடங்கொண்டவரை; அன்பினோடும் பூங்கழல்வணங்க=அன்போடு பொலிவினையுடைத்தாகிய திருவடிகளில் வணங்க; என்றும் போதுவார்=நாள்தோறுஞ் செல்கின்றவராகிய பரவைநாச்சியார்; ஒருநாட்போந்தார்=ஒருநாள் அப்பூங்கோயிலுக்குச் சென்றார்.—எ—று. (கஙஎ)

அணிசிலம் படிகள்பார்வென் றடிப்படுத் தனமென்றார்ப்ப
மணிவளர் காஞ்சியல்குல் வரியரா வுலகைவென்ற
துணிவுகொண் டார்ப்பமஞ்சு சுரிகுழற் கழியவிண்ணும்
பணியுமென் றினவண்டார்ப்பப் பரவையார் போதும்போதில்.

(இ-ள்.) அடிகளணிசிலம்பு = பாதங்களிலணிந்த சிலம்புகள்; பார்வென்றடிப்படுத்தனமென்றார்ப்ப=நிலவுலகத்தின் மாதர்களை யாம்வென்றோமென்று ஆரவாரிக்கவும்; மணிவளர்காஞ்சி வரியரவல்குல் = முத்துமுதலிய மணிகளால் கோக்கப்பட்ட எழுகோவைமணியானது புள்ளிகளையுடைத்தாகிய பாம்பின்படம்போலும் நிதம்பம்; உலகைவென்ற துணிவுகொண்டார்ப்ப=ஆடவர்களைவென்றதென்னும் நிச்சயத்தைக்கொண்டு ஆரவாரிக்கவும்; சுரிகுழற்கு மஞ்சு அழிய=சுரித்த அளகத்திற்கு மேகமானது தோற்றகாரணத்தால்; விண்ணும்பணியு

மென்றினவண்டார்ப்ப = விண்ணுலகத்தாரும் இவரை மேல்வணங்குவரென்று கூறுவதுபோலக் கூட்டமானவண்டுகள் ஆரவாரிக்கவும்; பரவையார்போதும் போதில்=பரவைநாச்சியார் போம்போதில்.—எ-று. (கஙஅ)

புற்றிடம் விரும்பினாரைப் போற்றினர் தொழுதுசெல்வார்
சுற்றிய பரிசனங்கள் சூழவா ளுடையநம்பி
நற்பெரும் பான்மைகூட்ட நகைபொதிந் திலங்குசெவ்வாய்
விற்புரை நுதலின்வேற்கண் விளங்கிழை யவரைக்கண்டார்.

(இ-ள்.) சுற்றிய பரிசனங்கள்சூழ=நெருங்கிய பரிசனங்கள் தம்மைச் சூழ; புற்றிடம்விரும்பினாரைப் போற்றினர் தொழுதுசெல்வார்=புற்றையிடமாகக்கொண்ட பிரானாரைத் துதித்து வணங்கிச்செல்பவராகிய; ஆளுடையநம்பி= நம்மை யாளாகவுடைய நம்பியாரூரர்; நற்பெரும்பான்மைகூட்ட = நல்லபெருமையாகிய சிவபிரான் திருவருள்சேர்க்க; நகைபொதிந் திலங்குசெவ்வாய் = மகிழ்ச்சிநகையைத் தன்னுள்ளடக்கி விளங்குகின்ற சிவந்தவாயையும்; விற்புரை நுதலின்வேற்கண் விளங்கிழை யவரைக்கண்டார்=விற்போலும் புருவங்களையும் வேல்போலுங் கண்களையுமுடைத்தாகிய விளங்கிய ஆபரணத்தையணிந்த பரவை நாச்சியாரைக்கண்டார்.—எ-று. இவ்விரண்டுங் குளகம். (கஙகூ)

போற்றினர், தொழுது, என்னுஞ் செய்தெனெச்சங்கள் உண்டுவருவான் என்றாற்போல இறந்தகாலப்பொருள் சிதையாமல் எதிர்காலத்து வந்தன. வணங்கிவருபவரென்பது பொருள். அது அவ்வாறுதல் "கருவார் கச்சியேகம்பர் கனகமணிமாளிகை சூழ்ந்தவருவார்," "சென்னியுறப்பணிந்தெழுந்து செங்கண்விடைத்தனிப்பாகர் மன்னுமலை மிசையேறி வலங்கொண்டு வணங்குவார்," "அப்பதிபோற்றியணைவார்," என்று திருநாவுக்கரசு நாயனார்புராணத்தும் ஆளுடைய பிள்ளையார்புராணத்தும் வருந்திருவிருத்தங்களானுணர்க. கண்டார் என்பது காட்சி. காட்சியாவது:—ஈண்டுத் தலைமகனுந் தலைமகளுந் தம்முட் கண்ணுறுவது.

வேறு.

கற்பகத்தின் பூங்கொம்போ காமன்றன் பெருவாழ்வோ
பொற்புடைய புண்ணியத்தின் புண்ணியமோ புயல்சுமந்து
விற்குவளை பவளமலர் மதிபூத்த விரைக்கொடியோ
அற்புதமோ சிவனருளோ வறியேனென் றதிசயித்தார்.

(இ-ள்.) கற்பகத்தின் பூங்கொம்போ = கற்பகதருவின் பொலிவினையுடைய கொம்போ; காமன்றன் பெருவாழ்வோ = மன்மதனது பெரியவாழ்க்கைக்குரிய இரதிதேவியோ; பொற்புடையபுண்ணியத்தின் புண்ணியமோ=உயர்வினையுடைத்தாகிய புண்ணியத்தினின்றுந் தோன்றிய ஓர்புண்ணியவடிவோ; புயல்சுமந்துவிற்குவளை பவளமலர்மதிபூத்த விரைக்கொடியோ=மேகத்தைச்சுமந்து வில்லினையும் குவளைப்பூவையும் பவளத்தினையும் பிறபூக்களையும் சந்திரனையும் தன்னிடத்து மலரப்பெற்ற வாசனையுடைத்தாகிய ஓர்கொடியோ; அற்புதமோ சிவனருளோ=அதிசயந் திரண்டவடிவமோ அல்லது சிவனருளால்வந்த

ஒருருவமோ; அறியேனென்றதிசயித்தார் = நான் அறியேனென்று அதிசயம் அடைந்தார்.—எ-று. (கசo)

ஓகாரங்கள் ஐயம். ஐயமாவது:—கண்ணுற்ற பொருளிடத்துத் தோற்றும் இருபொருளின் பொதுமையால் இது யாதோ என ஐயுறுவது.

ஓவியநான் முகனெழுத வொண்ணாமை யுள்ளத்தான்
மேவியதன் வருத்தமுற விதித்ததொரு மணிவிளக்கோ
மூவுலகின் பயனாகி முன்னின்ற தெனநினைந்து
நாவலர்கா வலர்நின்றார் நடுநின்றார் படைமதனார்.

(இ-ள்.) நான்முகன் ஓவிய மெழுதவொண்ணாமை=பிரமனானவன் (பேரழகுள்ள ஓர் மாதைப் படைக்கக் கருதித் தான்கருதியவாறு ஒரு) சித்திரப்படம் எழுதமுடியாமையால்; மேவியதன்வருத்தமுற=தான் அடைந்த வருத்தமிகுதியால்; உள்ளத்தால் விதித்ததொரு மணிவிளக்கோ=தன்மனசால் உண்டாக்கிய ஒரு இரத்தினதீபமோ; மூவுலகின்பயனாகி முன்னின்றதென நினைந்து=மூவுலகத்தினுள்ளாருங் கண்டுகளிப்படையுங் காரணமாய் என்முற்பட்டு நிற்கின்றதென்று வியந்துள்ளி; நாவலர்காவலர் நின்றார்=நம்பியாரூரர் நின்றருளினார்; நடுநின்றார் படைமதனார்=பஞ்சபாணங்களையுடைய மன்மதனும் (பரவைநாச்சியாருக்கும் நம்பியாரூரருக்கும் விகாரம்விளைக்கும் ஏதுவாக) இடையே நின்றார்.—எ-று.

கைத்தொழிலா லியற்றல் கூடாமையின் உள்ளத்தால்விதித்த உருவம் போலிருத்தலில் விதித்ததொரு மணிவிளக்கோ என்றும், மூவுலகத்தார் காட்சிக்கும் அதிசயம் விளைத்தலின் மூவுலகின் பயனாகி என்றுங் கூறினர். நடுநிற்றல் இருவர்க்கும் ஒருவர்மாட்டொருவர் சிறப்புவகையால் விகாரமுண்டாக்கற் கேதுவாய்ப் பொதுவாய்நிற்றல். இவை ஐயநிலை உவமைகள்.

தண்டரள மணித்தோடுந் தகைத்தோடுங் கடைபிறழுங்
கெண்டைநெடுங் கண்வியப்பக் கிளரொளிப்பூ ணுரவோனை
யண்டர்பிரான் றிருவருளா லயலறியா மணம்விரும்பிப்
பண்டைவிதி கடைகூட்டப் பரவையாருங் கண்டார்.

(இ-ள்.) தண்டரளமணித்தோடுந் தகைத்தோடும்=குளிர்ந்த முத்துக்களினாலும் மணிகளினாலும் அமைத்தகாதணிகளையும் நெருக்கி அதன்புறத்தும் செல்லும்; கடைபிறழுங் கெண்டைநெடுங்கண் வியப்ப=கட்கடையளவும் பிறழாநின்ற சேல்போலும் நெடியகண்கள் வியக்கும்படி; கிளரொளிப்பூணுரவோனை=விளங்குகின்ற ஒளியினையுடைத்தாகிய ஆபரணங்களையணிந்த அறிஞராகிய நம்பியாரூரரை; அண்டர்பிரான்றிருவருளால்=தேவர்க்கெல்லாம் முதல்வராகிய புற்றிடங்கொண்டார் திருவருளால்; அயலறியா மணம்விரும்பி=பிறரால் அறியப்படாத காந்தருவர் ஒழுக்கமென்னும் களவுப் புணர்ச்சியைத் தாமும்விரும்பி; பண்டைவிதிகடைகூட்டப்பரவையாருங்கண்டார்=முன்னாளில் அமைந்த ஊழானது புணர்விக்கப் பரவைநாச்சியாரும் நம்பியாரூரரைப்பார்த்தார்.—எ-று. ()

அயலறியாமணம்:— இயற்கைப்புணர்ச்சியின் பாற்பட்ட களவொழுக்கம்.

கண்கொள்ளாக் கவின்பொழிந்த திருமேனி கதிர்விரிப்ப
விண்கொள்ளாப் பேரொளியா னெதிர்நோக்கு மெல்லியலுக்
கெண்கொள்ளாக் காதலின்முன் பெய்தாத தொருவேட்கை
மண்கொள்ளா நாண்மடமச் சம்பயிர்ப்பை வலிந்தெழலும்.

(இ-ள்.) கண்கொள்ளாக்கவின்பொழிந்த திருமேனிகதிர்விரிப்ப=கண்பார்வைக்கு அடங்காத அழகினைப்பொழிந்த திருமேனியானது ஒளியைப்பரப்ப அதனால்; விண்கொள்ளாப் பேரொளியான்=ஆகாயமும் இடம்பெறாதென்று சொல்லப்பரவியபேரொளியையுடையநம்பியாரூரருக்கு; எதிர்நோக்கும் மெல்லியலுக்=எதிரில்பார்க்கும் மிருதுவான நடையினையுடைய பரவைநாச்சியாருக்கு; எண்கொள்ளாக்காதலின்=அளவுபடுத்தற்கரிய ஆசையினால்; முன்பெய்தாததொருவேட்கை=முன் ஓர்காலமும் ஒருவர்மாட்டும் வராத ஒருபேராசையானது; மண்கொள்ளா நாண்மடமச்சம் பயிர்ப்பைவலிந்தெழலும்=நிலவுலகமும் இவ்வாசையைக்கொள்ளாதென்று சொல்லும்படி நாணம் மடம் அச்சம் பயிர்ப்பு என்னும் மகளிர்க்குரிய குணம் நான்கையும் ஒருவாறு கீழ்ப்படுத்தி உதிக்கவும்.—எ-று.(கசஙு)

வேட்கை என்பது:—உணர்வை வேறுபடுத்தித் தன்வசமாக்கி நிற்குங் காதல் மிகுதி.

முன்னேவந் ததிர்தோன்று முருகனோ பெருகொளியாற்
றன்னேரின் மாரனோ தார்மார்பின் விஞ்சையனோ
மின்னேர்செஞ் சடையண்ணல் மெய்யருள்பெற் றுடையவனோ
என்னேயென் மனந்திரித்த விவன்யாரோ வெனநினைந்தார்.

(இ-ள்.) முன்னேவந்ததிர்தோன்றுமுருகனோ = எனக்கு முற்பட்டு வந்து என் எதிரில் தோன்றுகின்ற முருகக்கடவுளோ; பெருகொளியாற்றன்னேரின்மாரனோ=மிக்ககாந்தியினால் தனக்கொப்பில்லாத மன்மதனோ; தார்மார்பின்விஞ்சையனோ=மாலையையணிந்த மார்பினையுடைய வித்தியாதரனோ; மின்னேர்செஞ்சடையண்ணல்=மின்னையொத்த சிவந்த சடையினையுடைய சிவபிரானது; மெய்யருள்பெற்றுடையவனோ=மெய்ம்மையான திருவருளைப்பெற்றவனோ; என்னேயென்மனந்திரித்த = இது யாதுகாரணமாயிருக்கலாம் என்மனதைத்தன்வசமாகவிகாரப்படுத்திய; இவன்யாரோவெனநினைந்தார் = இவன்யாரோ அறியேனென்று நினைந்தார்.—எ-று. (கசச)

ஓகாரங்கள் ஐயம். காட்சியின்பின் நிகழும் ஐயம் தலைமகட்குமுண்மையின் ஈண்டு ஐயம் கூறப்பட்டது மெய்யருள்பெற்றான் மேற்றுணிபொருளாதலின் இறுதிக்கண்வந்தது.

அண்ணலவன் றன்மருங்கே யளவிறந்த காதலினால்
உண்ணிறையுங் குணநான்கு மொருபுடைசாய்ந் தனவெனினும்
வண்ணமலர்க் கருங்கூந்தன் மடக்கொடியை வலிதாக்கிக்
கண்ணுதலைத் தொழுமன்பே கைக்கொண்டு செலவுய்ப்ப.

(இ-ள்.) அண்ணலவன்றன்மருங்கு=பெருமையிற் சிறந்தோராகிய அந் நம்பியாரூரரிடத்து; அளவிறந்தகாதலினால்=அளவுபடாத வேட்கைமிகுதியால்; உண்ணிறையுங்குணநான்கும்=தன்னுண்ணிறைந்த நாணம் முதலிய நான்குகுணங்களும்; ஒருபுடைசாய்ந்தனவெனினும்=ஒருபுறத்தில் விலகினவாயினும்; வண்ணமலர்க்கருங்கூந்தல் மடக்கொடியைவலிதாக்கி=அழகிய மலர்களை முடித்தகரிய கூந்தலையுடைய இளங்கொடிபோல்வாளைத்தேற்றி; கண்ணுதலைத்தொழுமன்பே கைக்கொண்டுசெலவுய்ப்ப=சிவபிரானைத் தொழுதற்குக் காரணமான அன்பே தன்வசமாக்கித் திருக் கோயிலுக்குச்செல்லும்படி செலுத்த.—எ-று. ஏ-அசை.

குணம்நான்காவன:—நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு, என்பன. அவற்றுள் நாணம் என்பது:— மகளிர்க்கியல்பாயுள்ளதோர் தன்மை. மடம் என்பது:— குரவருணர்த்தக்கொண்டு கொண்டதுவிடாமை. அச்சம் என்பது:— பெண்டன்மையால் தான்காணப்படாததோர் பொருள் கண்டவிடத்து அஞ்சுவது. பயிர்ப்பு என்பது:— பயிலாத பொருட்கண் அருவருத்து நிற்கும் நிலைமை. ஒருபுடைசாய்தல்:— நீர்ச்செலவிற்சாய்ந்த கோரைபோல் ஒருவாறுசாய்தல்.

பாங்கோடிச் சிலைவளைத்துப் படையனங்கன் விடுபாணந்
தாங்கோலி யெம்மருங்குந் தடைசெய்ய மடவரலுந்
தேங்கோதை மலர்க்குழன்மேற் சிறைவண்டு கலந்தார்ப்பப்
பூங்கோயி லமர்ந்தபிரான் பொற்கோயில் போய்ப்புக்காள்.

(இ-ள்.) பாங்கோடிச்சிலைவளைத்து = அருகில் ஓடிக் கருப்புவில்லைவளைத்து; படையனங்கன்விடுபாணம் = தென்றல் முதலிய நாலங்கச்சேனையையுடைய மன்மதன் விடும்பூவம்புகள்; கோலியெம்மருங்குந்தடைசெய்ய = வளைந்து நான்குபுறத்திலுந் தடைசெய்யவும்; மடவரலுந்தேங்கோதை மலர்க்குழன் மேற்சிறைவண்டுகலந்தார்ப்ப=பரவைநாச்சியாரும் வாசனையுடைத்தாகிய மலராற்றொடுத்த மாலையையணிந்த கேசத்தினிடத்துச் சிறகினையுடைய வண்டுகள் கலந்து ஆரவாரிக்க; பூங்கோயிலமர்ந்தபிரான் பொற்கோயில்போய்ப்புக்காள்= பூங்கோயிலின்கண் வீற்றிருந்தருளும் பிரானுரது அழகிய ஆலயத்துட்சென்றாள்.—எ-று. தாம்-அசை. (௧௪௯)

வன்றொண்ட ரதுகண்டென் மனங்கொண்ட மயிலியலின்
இன்றொண்டைச் செங்கனிவா யிளங்கொடிதான் யாரென்ன
அன்றங்கு முன்னின்றா ரவர்நங்கை பரவையார்
சென்றும்பர் தரத்தார்க்குஞ் சேர்வரியா ரெனச்செப்ப.

(இ-ள்.) வன்றொண்டரதுகண்டு=பரவைநாச்சியார் கோயிலுட் புகுந்தமையை நம்பியாரூரர்கண்டு; என்மனங்கொண்ட=என்னுடைய மனதைத் தன்னிடத்துக் கவர்ந்துகொண்டு சென்ற; மயிலியலினின்றொண்டைச் செங்கனிவாயிளங்கொடியாரென்ன = மயில்போலும் சாயலையும் இனியகொவ்வையினது சிவந்த கனிபோலும் வாயினையுமுடைய இளமையாகிய கொடிபோலும் இப்பெண் யாரென்று வினவ; அன்றங்குமுன்னின்றார்=அப்போது அவ்விடத்தில் நிற்




திருவாரூரில் தியாகராஜப்பெருமானைத் தரிசிக்க பரவையார் ஆலயத்துட்சென்றபோது சுந்தரரைக்கண்டு பரவையாரும் பரவையாரைக்கண்டு சுந்தரரும் மோகித்து பசுபதியால் விண்ணப்பஞ்செய்து கொண்டது

இன்றவர்கள்; அவர்நங்கைபரவையார்=இவர் பெண்களிற்சிறந்த பரவையாரென்னும் பெயரையுடையவர்; உம்பர்தரத்தார்க்குஞ்சென்று சேர்வரியாரெனச்செப்ப=தேவர்களுக்கும் கிட்டிச் சேர்தற்கரியவரென்றுகூற.—எ-று. (கசஎ)

தான் - அசை. உம்மை உயர்வுசிறப்பு.

உம்பர்தரத்தார்க்குஞ் சேர்வரியாரென்றது:—இவர் உருத்திரகணிகையர்களில் அவதரிக்கு மியல்புடையரல்லரென்பதும் பத்தியினுலும் ஒழுக்கத்தினுலும் தெய்வத்தன்மையுடையரென்பதும் அதனுல் யாவரும் மணஞ்செய்தற் கச்சமுற்று நின்றனரென்பதுங் குறிப்பித்து நின்றது.

பேர்பரவை பெண்மையினிற் பெரும்பரவை விரும்பல்கு
லார்பரவை யணிதிகழு மணிமுறுவ லரும்பரவை
சீர்பரவை யாயினு டிருவுருவின் மென்சாயல்
ஏர்பரவை யிடைப்பட்ட வென்னுசை யெழுபரவை.

(இ-ள்.) பேர்பரவை=பெயர்பரவையென்று சொல்லப்படுவது; பெண்மையினில்=அவளுடைய பெண்டன்மையாகிய இலக்கணங்களால் குறிக்குமிடத்து; பெரும்பரவைவிரும்பல்குலார்பரவை=பெரிய தேவர்கூட்டம்விரும்புகின்ற திலோத்தமை முதலிய மாதர்கள் துதிசெய்யத்தக்க தெய்வமாம்; அணிதிகழுமணிமுறுவலரும்பரவை = அழகு விளங்குகின்ற முத்துக்களையொக்கும் பற்கள் முல்லையரும்புகளையொக்கும்; சீர்பரவையாயினுள்=ஆடற்சீரால் இலக்குமியின் கூத்தையொத்தவளது; திருவுருவின்மென்சாயலேர்பரவையிடைப்பட்ட=திருவுருவத்தின் மெல்லிய மேன்மையினையுடைய அழகாகியகடலினிடத்துத்தங்கிய; என்னுசையெழுபரவை = என்னுடைய ஆசையானது ஏழுகடலையும் ஒத்திருக்கின்றது.—எ-று. (கசஅ)

பெண்மையினிற் பெரும்பரவை யென்றதற்கு, அவ்வையென்பது அவையென விகாரமாயிற்றெனக்கொண்டு பெரு உம்பர் அவ்வை எனப்பிரித்து பெண்மையினுல் தேவர்களுக்கெல்லாம் தாய்போன்றவள் என்றும், விரும்பல்குலார் பரவையென்றதற்கு, விரும்பு, அல்குல், ஆர்பு, அரவு, ஐ, எனப்பிரித்து விரும்புகின்ற அல்குலினுடைய நிறைவானது ஆதிசேடன் படத்தின் அழகை ஒக்குமென்றும், சீர்பரவையாயினுள் என்றதற்கு, சீர், பரவு, ஐ, எனப்பிரித்து இலக்குமி துதிசெய்யத்தக்க அழகையுடையவளது என்றும் பொருளுரைத்தலுமொன்று. முன் ஐ=இறை, பின் ஐ=அழகு, சீர் = இலக்குமி, அரவை, முதலாகு பெயர்.

என்றினைய பலவுநினைந் தெம்பெருமா னருள்வகையான்
முன்றொடர்ந்து வருங்காதன் முறைமையினுற் றொடக்குண்டு
நன்றெனையாட் கொண்டவர்பா னண்ணுவனென் றுண்மகிழ்ந்து
சென்றுடைய நம்பியும்போய்த் தேவர்பிரான் கோயில்புக.

(இ-ள்.) என்றினையபலவுநினைந்து=இவைபோல்வன பலவற்றையுந் தம் மனத்தே கருதி; எம்பெருமானருள்வகையால்=எமது பிரானுகிய புற்றிடங்கொ

ண்டாரது திருவருட்டன்மையால்; முன்ளுெடர்ந்து வருங்காதல் முறைமையி ஞற்ளுெடக்குண்டு = முற்பிறப்பில் தம்மைப் பந்தித்துவருகின்ற வேட்கைவழி யால் தாம் பந்திக்கப்பட்டு அதைக்கூட்டுதற்குக் காரணமாக; நன்றெனையாட் கொண்டவர்பா னண்ணுவனென்றுண்மகிழ்ந்து சென்று=நன்கு விரும்பி என்னை அடிமைக்கொண்ட பிரானுரை அடைவேனென்று தமதுள்ளம் மகிழ்ச்சியடை ந்து சென்று; உடையநம்பியுந்தேவர்பிரான்கோயில்போய்ப்புக=நம்மையாளாக வுடைய நம்பியாரூரரும் புற்றிடங்கொண்டாரது கோயிலுட்செல்ல,—எ-று. உம்மை-இறந்தது தழீஇயது. (கசக)

பரவையார் வலங்கொண்டு பணிந்தேத்தி முன்னரே
புரவலனர் கோயிலினின் ளுெருமருங்கு புறப்பட்டார்
விரவுபெருங் காதலினன் மெல்லியலார் தமைவேண்டி
யரவிஞ ரம்புனைந்தா ரடிபணிந்தா ராரூரர்.

(இ-ள்.) பரவையார்வலங்கொண்டு பணிந்தேத்தி = அப்பொழுது பர வைநாச்சியார் வலமாகவந்து புற்றிடங்கொண்டாரை வணங்கித்துதித்து; முன் னரே புரவலனர்கோயிலினின்று ஒருமருங்குபுறப்பட்டார்=நம்பியாரூரர் போ வதற்குமுன்னமே தரிசித்துக்கொண்டு சிவபிரான் சந்நிதியினின்றும் ஒருபக்க மாகப் புறப்பட்டார்; விரவுபெருங்காதலினல் மெல்லியலார்தமைவேண்டி=தா மடைந்த பேராசையினல் பரவைநாச்சியாரைச் சேரவிரும்பி; அரவிஞரம்புனை ந்தா ரடிபணிந்தாராரூரர்=நம்பியாரூரர் சர்ப்பத்தை ஆரமாகத் தரித்த புற்றிடங் கொண்டார் திருவடிகளை வணங்கினர்,—எ-று. (கருo)

அவ்வாறு பணிந்தேத்தி யணியாரூர் மணிப்புற்றின்
மைவ்வாழுந் திருமிடற்று வானவன்பா னின்றும்போந்
தெவ்வாறு சென்ருளென் னின்னுயிரா மன்னமெனச்
செவ்வாய்வெண் ணகைக்கொடியைத் தேடுவா ராயினர்.

(இ-ள்.) அவ்வாறுபணிந்தேத்தி=அவ்விதமாகப் பரவையாரைக்கொடு க்கும்படி வணங்கித்துதித்து; அணியாரூர்மணிப்புற்றின்=திருவாரூரின்கணுள்ள அழகிய புற்றை இடமாகக்கொண்ட; மைவாழுந்திருமிடற்று வானவன்பானின் றும்போந்து=நீலநிறந்தங்கிய திருமிடற்றினையுடைய சிவபிரானிடத்தில் நின் றும் நீங்கி; எவ்வாறுசென்ருளென்னின்னுயிராமன்னமென = எந்தவழியாகச் சென்ருள் என்னுடைய இனிய உயிர்போலும் பெண்ணென்று; செவ்வாய்வெ ண்ணகைக்கொடியைத் தேடுவாராயினர்=சிவந்த வாயினையும் வெண்மையாகிய பற்களையுமுடைய பரவைநாச்சியாரைத் தேடுகின்றவராஞர்,—எ-று. (கருக)

வேறு.

பாச மாம்வினைப் பற்றறுப் பான்மிகும்
ஆசை மேலுமொ ராசை யளிப்பதோர்
தேசின் மன்னியென் சிந்தை மயக்கிய
ஈச ஞரரு ளெந்நெறிச் சென்றதே.

(இ-ள்.) பாசமாம்வினைப்பற்றறுப்பான்மிகும்ஆசைமேலும் = பாசசம் பந்தத்தால்வரும் இருவினையினது தொடர்பை அறுத்தருளும் சிவபிரானிடத் துண்டாகிய மிக்க ஆசையின்மேலும்; ஓராசையளிப்பதோர் தேசின்மன்னி= ஒரு விருப்பைக்கொடுக்கத்தக்க ஒளியால்விளங்கி; என்சிந்தைமயக்கிய ஈசனு ரருள்=என்து மனதை மயங்கச்செய்த சிவபிரானது திருவருளானது; எந்நெ றிச்சென்றது=எவ்வழியாகச்சென்றது.—எ-று. ஏ - அசை. (கருஉ)

மலபாகம்வருவித்துக் கன்மசாமியம் பிறந்துழி இருவினையின்தொடர்பை உயிர்கட் கறுத்தருள்பவர் என்பது தோன்ற வினைப்பற்றறுப்பான் என்றும், அவ் வினை அஞ்ஞானத்தால் உதிப்பதென்பது தோன்றப் பாசமாம்வினையென்றுங் கூறினர். முதல்வனைப் பற்றும்பற்று எப்பொருளின்பற்றும் அறப்பற்றப்படுத லின் மிகும் ஆசை என்றார். உம்மை அதன்சிறப்பையுணர்த்தலில் உயர்வுசிறப்பு. அவ்வாசையின்மேல் ஆசையளித்தற்குரிய பிறபொருள் தமக்கொன்றின்றாகவும் இவளாசையளித்தது வியப்பாயிருக்கின்றதென்பது தோன்ற ஆசையளிப்ப தோர் தேசின்மன்னியென்றும், இறைவனருள் வழித்தாகிய தன்சிந்தையை மய க்குதற்கு அவ்வருளன்றி இயலாமையின் ஈசனாருளென்றுங்கூறினர். அரு ளால்வந்தாளை அருளென்றது உபசாரவழக்கு. பாசம் என்பது:—ஆணவமலத்தை.

> உம்பர் நாயகர் தங்கழ லல்லது
> நம்பு மாறறி யேனை நடுக்குற
> வம்பு மால்செய்து வல்லியி னொல்கியின்
> றெம்பி ரானரு ளெந்நெறிச் சென்றதே.

(இ-ள்.) உம்பர்நாயகர் தங்கழலல்லது=தேவர்களுக்கு நாயகராகிய சிவ பிரானது வீரக்கழலையணிந்த திருவடிகளையல்லாமல்; நம்புமாறறியேனை = வே றொன்றையும் ஓர்பொருளென்று விரும்பும் வகையறியாத அடியேனை; நடுக் குற=வருத்துதற்கேதுவாய்; வம்புமால்செய்து = நிலையில்லாத விருப்பத்தைக் கொடுத்து; வல்லியினொல்கி = கற்பகக்கொடிபோல் நுடங்கி; இன்றெம்பிரா னருளெந்நெறிச்சென்றது=இன்றைக்கு எமது பிரானது திருவருளானது எவ் வழியாகச்சென்றது.—எ-று. ஏ - அசை. (கருங)

நம்பு=நசை. நம்பும் என்பது உரிச்சொல்லடியாகப்பிறந்தசெய்யும் என் னும் வாய்பாட்டுப்பெயரெச்சம். அப்பற்றே தமக்குரியதென்பது தோன்ற நம்பு மாறறியேனென்றார். வம்பு=நிலையின்மை. அதனநித்தியம் உணர்ந்தாராதலின் வம்புமால் என்றார்.

> பந்தம் வீடுதரும்பர மன்கழல்
> சிந்தை யாரவு முன்னுமென் சிந்தையை
> வந்து மால்செய்து மானென வேவிழித்
> தெந்தை யாரரு ளெந்நெறிச் சென்றதே.

(இ-ள்.) பந்தம்வீடுதரும்பரமன்கழல்=உடம்போ டுயிரைக்கூட்டும் பந் தத்தையும் அவற்றின் நீக்கமாகிய வீட்டையுங்கொடுக்கும் சிவபிரானுடைய திரு

வடிகளை ; சிந்தையாரவுமுன்னுமென்சிந்தையை = உள்ளங்களிக்கத் தியானிக்கின்ற என்மனதை ; வந்துமால்செய்து=வந்துமயக்கி; மானெனவேவிழித்து= மான்போல்விழித்து (ஆசையை மேம்படுத்திய); எந்தையாரருளெந்நெறிச்சென்றது=எமது சிவபிரான் திருவருள் எவ்வழியிற்சென்றது.—எ-று. (கருச)

ஏ-அசை. முப்பத்தொரு தத்துவங்களாய் எண்பகுப்பாயிருக்கும் புரியட்டகவுடம்பை ஒரு உடம்பிற்சேர்த்து இருவினைகளை நுகரச்செய்தல் பந்தமெனவும் அப்பந்தத்தை நீக்கியருளல் வீடெனவுஞ்சொல்லப்படும். காசாதிதோடமுள்ளகண்ணுக்கு மருத்துவன் உரித்தல் அஞ்சனம்பூசல் முதலிய பந்தங்கள் செய்து தூய்மையாக்கல்போல அஞ்ஞானத்தைநீக்கி உயிர்கட்கு வீடுகொடுக்கும் நிமித்தமே பந்தஞ்செய்தனரென்க.

என்று சாலவு மாற்றல ரென்னுயிர்
நின்ற தெங்கென நித்திலப் பூண்முலை
மன்றல் வார்குழல் வஞ்சியைத் தேடுவான்
சென்று தேவா சிரியனைச் சேர்ந்தபின்.

(இ-ள்.) என்றசாலவுமாற்றலர் = இவ்வாறுகூறி மிகவும் விரகத்தைப் பொறுக்காதவராய்; என்னுயிர்நின்றதெங்கென=என்னுடைய உயிரானது எங்கு நிற்கின்றதென்று ; நித்திலப்பூண்முலை மன்றல்வார்குழல் வஞ்சியைத்தேடுவான் சென்று=முத்துமாலையையணிந்த முலையினையும் நறுமணங்கமழும் நீண்ட கூந்தலினையும் உடைய அப்பரவைநாச்சியாரைத் தேடும்படிக்கு ஆலயத்தினின்றும் புறப்பட்டு ; தேவாசிரியனைச்சேர்ந்தபின்=தேவாசிரியமண்டபத்தை அடைந்த பின்பு.—எ-று. (கருரு)

காவி நேர்வருங் கண்ணிமை நண்ணுவான்
யாவ ரோடு முரையியம் பாதிருந்
தாவி நல்குவ ராரூரை யாண்டவர்
பூவின் மங்கையைத் தந்தெனும் போழ்தினில்.

(இ-ள்.) காவிநேர்வருங் கண்ணியைநண்ணுவான்=நீலோற்பல மலரையொத்த கண்களையுடைய பரவைநாச்சியாரைச் சேரும்பொருட்டு ; யாவரோடு முரையியம்பாதிருந்து=தம்பரிசனமுதலிய யாவரிடத்தும் இம்மாற்றத்தைஉரையாடாதிருந்து ; ஆவிநல்குவர்=என்னுயிரைக்கொடுப்பர் ; ஆரூரையாண்டவர்= திருவாரூரை அரசாளும் தியாகப்பிரான் ; பூவின்மங்கையைத் தந்தெனும் போழ்தினில் = திருமகள்போன்ற பரவையாரைக்கொடுத்து எனக்கருதியிருக்கும் சமயத்தில்.—எ-று. (கருசு)

நாட்டு நல்லிசை நாவலூரன் சிந்தை
வேட்ட மின்னிடை யின்னமு தத்தினைக்
காட்டு வன்கட லைக்கடந் தென்பபோற்
பூட்டு மேழ்பரித் தேரோன் கடல்புக.

(இ-ள்.) நாட்டுநல்லிசை நாவலூரன்=நிலைபெற்ற நல்ல புகழினையுடைய நம்பியாரூரர்; சிந்தைவேட்டமின்னிடையின்னமுதத்தினை = தம்முள்ளத்து விரும்பிய மின்போலும் இடையினையுடைத்தாகிய இனிய அமுதம்போலும் பரவை நாச்சியாரை; காட்டுவன்கடலைக் கடந்தென்பபோல்=அவர்க்கு இப்பொழுது கடலைக்கடந்து சென்று வந்து நாளை காட்டுவேனென்று சொல்லுதல் போல; பூட்டுமேழ்பரித்தேரோன்கடல்புக=பூட்டிய ஏழ்பரியினையுடைத்தாகிய தேரையுடைய சூரியன் கடலில் மறைய.—எ-று. (கருஎ)

ஏழ்பரி:— ஏழ் என்னும் பெயரையுடைய குதிரை அதாவது சப்த்தா என்னும் பெயரையுடைய குதிரையென்றும். மறுநாளுதயத்து விவாகம் நடத்தலிற்கடலைக்கடந்து காட்டுவனென்பபோல என்றார். என்பது என்னுந், தொழிற்பெயர் என்ப என விகாரமாயிற்று.

எய்து மென்பெடை யோடிரை தேர்ந்துண்டு
பொய்கை யிற்பகல் போக்கிய புள்ளினம்
வைகு சேக்கைகண் மேற்செல வந்தது
பையுண் மாலை தமியோர் பனிப்புற.

(இ-ள்.) எய்துமென்பெடையோடிரைதேர்ந்துண்டு=தம்முடன்பிரியாதிருக்கும் மிருதுவாகிய தன்மையையுடைய பெடையோடு நல்ல இரைகளை ஆராய்ந்துண்டு; வைகுசேக்கைகண்மேற்செல=தாம் வாழும் கூடுகளில் செல்லும்படிக்கும்; தமியோர்பனிப்புற=பிரிவுற்ற நாயகனும் நாயகியும் ஆகிய இருவர்களும் வேதனைப்படும்படிக்கும்; பையுண்மாலைவந்தது=துன்பத்தை விளைக்கும் மாலைக்காலமானது வந்தது.—எ-று. (கருஅ)

மேற்செலப் பனிப்புற மாலைவந்தது என இயையும்.

பஞ்சின் மெல்லடிப் பாவைய ருள்ளமும்
வஞ்ச மாக்கட்டம் வல்வினை யும்மரன்
அஞ்செ ழுத்து முணரா வறிவிலோர்
நெஞ்சு மென்ன விருண்டது நீண்டவான்.

(இ-ள்.) பஞ்சின்மெல்லடிப் பாவையருள்ளமும்=செம்பஞ்சின் குழம்பூட்டிய மிருதுவாகிய அடியினையுடைய பெண்களது மனமும்; வஞ்சமாக்கட்டம் வல்வினையும் = பட்டிமையொழுக்கமுடையாரது கொடிய தீவினையும்; அரன் அஞ்செழுத்துமுணரா அறிவிலோர்நெஞ்சுமென்ன = சிவபிரான் திருவைந்தெழுத்தையும் உணராத அறிவிலிகளது மனமும் என்று சொல்லும்படி; இருண்டது நீண்டவான்=நீண்ட ஆகாயமானது இருளடைந்தது.—எ-று. (கருகூ)

மகளிருள்ளம் பேதமை மிக்கிருத்தலானும் வஞ்சமுடையாரது தீவினை நீங்காது மயக்கம் விளைத்தலினானும் அஞ்செழுத்துணராதார்க்கு மெய்யுணர்வின்மையானும் அவ்வாறு கூறினரென்க. வஞ்சமாக்கட்டம் வல்வினையும் என்புழி வல்வினைமாக்கட்டம் வஞ்சமும் என உம்மையைப் பிரித்துக்கூட்டி வஞ்சவிருளும்

என்றுரைத்தலுமொன்று. அஞ்செழுத்தும் என்பதில் உம்மை முற்றும்மை ஏனைய எண்ணும்மைகள்.

மறுவில் சிந்தைவன் றொண்டர் வருந்தினல்
இறு மருங்குலார்க் கியார்பிழைப் பாரென்று
நறு மலர்க்கங்கு னங்கைமுன் கொண்டபுன்
முறுவ லென்ன முகிழ்த்தது வெண்ணிலா.

(இ-ள்.) மறுவில்சிந்தை வன்றொண்டர்வருந்தினல்=குற்றமற்ற சிந்தையினையுடைய நம்பியாரூரரே வருத்தமுற்றால்; இறுமருங்குலார்க் கியார்பிழைப் பாரென்று=(முலையின்பாரத்தால்) வளைகின்ற இடையினையுடைய மாதராகையி னின்றும் யாவர் உய்வார்களென்று; நறுமலர்க்கங்குனங்கை=நறுமணங்கமழும் மலர்களை முடித்த கூந்தலையுடைய இரவாகிய பெண்ணனவள்; முன்கொண்ட புன்முறுவலென்ன=முற்பட்டுத் தான்செய்த புன்சிரிப்புப்போல; முகிழ்த்தது வெண்ணிலா=வெள்ளியசந்திரன் உதயமாயிற்று.—எ-று. (கசுo)

அரந்தை செய்வார்க் கழுங்கித் தம்மாருயிர்
வரன்கை தீண்ட மலர்குல மாதர்போற்
பரந்த வெம்பகற் கொல்கிப் பனிமதிக்
கரங்க டீண்ட வலர்ந்த கயிரவம்.

(இ-ள்.) அரந்தைசெய்வார்க்கழுங்கி=தம்மை விரும்பித் துன்பஞ்செய்யும் அன்னிய நாயகர்களுக்குப் பயந்துவருந்தி; தம்மாருயிர்வரன்கைதீண்ட=தம்முடைய நிறைவாகிய உயிர்போன்ற நாயகர்கள் கையைத் தீண்டுதலால்; மலர்குலமாதர்போல்=முகமலர்ச்சியடையும் குலமகளிர்போல்; பரந்தவெம்பகற்கொல்கி = பரம்பிய வெம்மையாகிய கிரணத்தையுடைய சூரியனுக்குமலராமற்சுருங்கி; பனிமதிக்கரங்கடீண்ட வலர்ந்தகயிரவம்=குளிர்ந்த சந்திரன்துகிரணங்களாகிய கைகள் தீண்டுதலால் ஆம்பல்கள் மலர்ந்தன.—எ-று. (கசுக)

தோற்று மன்னுயிர் கட்கெலாந் தூய்மையே
சாற்று மின்பமுந் தண்மையுந் தந்துபோ
யாற்ற வண்ட மெலாம்பரந் தண்ணல்வெண்
ணீற்றின் பேரொளி போன்றது நீணிலா.

(இ-ள்.) தோற்றுமன்னுயிர்கட்கெல்லாம் = நிலவுலகில் உதிக்கும் நிலைபெற்ற ஆன்மகோடிகளுக்கெல்லாம்; தூய்மையேசாற்றுமின்பமுந் தண்மையுந் தந்துபோய்=தூய்மையையும் யாவராலும் புகழத்தக்க இன்பத்தையுந் தண்ணளியையுங்கொடுத்துச்சென்று=ஆற்றவண்டமெலாம்பரந்து=மிகவும் அண்டத்தின் பரப்பெல்லாம் பரவி; அண்ணல் வெண்ணீற்றின்பேரொளிபோன்றதுநீணிலா= சிவபிரானது வெள்ளியவிபூதியின்பேரொளியை யொத்தது பரம்பியநிலா.-எ-று.

தூய்மையே என்பதில் ஏகாரம் உம்மைப் பொருட்கண்வந்தது. உவமானத்தின் குணங்களை உவமேயத்தினுங் காண்க.

வாவிப் புள்ளொலி மாற்றிய மாலையி
னாவ லூரரு நங்கை பரவையாம்
பாவை தந்த படர்பெருங் காதலு
மாவி சூழ்ந்த தனிமையு மாயினர்.

(இ-ள்.) வாவிப்புள்ளொலிமாற்றியமாலையில்=வாவிகளில் இரைதேரும் புட்களது ஒலியை நீக்கிய மாலைக்காலத்தில்; நாவலூரரும் = நம்பியாரூரரும்; நங்கைபரவையாம் பாவைதந்த படர்பெருங் காதலும்=பெண்களிற் சிறந்த பரவையென்னும் பெயரினையுடைய பெண்ணானவள் கொடுத்த மிகப்பெரிய வேட்கையும்; ஆவிசூழ்ந்த தனிமையுமாயினர்=தன்னுயிரை நீங்காது கலந்திருக்கும் சிவபிரான் திருவருளுமே யன்றி வேறொன்றுமில்லாதவராயினர்.—எ-று. (௧௬௩)

நாவலூரரும் என்பதில் உம்மை உயர்வுசிறப்பு. பரவையார்வேட்கையும் அதைமுடித்தற்குரிய திருவருளையுமே யன்றிப் பிறரோடு உரையாடுதன்முதலிய செய்யாதிருந்தாரென்பது தோன்றப் பெருங்காதலு மாவிசூழ்ந்த தனிமையு மாயினரென்றார்.

தந் திருக்கண் ணெரிதழ லிற்பட்டு
வெந்த காமன் வெளியே யுருச்செய்து
வந்தென் முன்னின்று வாளி தொடுப்பதே
யெந்தை யாரரு ளிவ்வண்ண மோவென்பார்.

(இ-ள்.) தந்திருக்கண்ணெரி தழலிற்பட்டு=சிவபிரானது நெற்றிக்கண்ணிலுண்டாகிய அக்கினியி லகப்பட்டு; வெந்தகாமன் வெளியேயுருச்செய்து வந்து=முன்னாளில் எரிந்து விழுந்த மன்மதன் இப்பொழுது உருவமெடுத்து வெளியேவந்து; என்முன்னின்று வாளிதொடுப்பதே=என்னெதிரில் நின்று பாணங்களைத் தொடுக்கலாமா; எந்தையாரருளிவ் வண்ணமோவென்பார் = எமதுபிரானார் திருவருள் இருந்தவண்ணம் இவ்வாறோ என்றுசொல்வார்.—எ-று. (௧௬௪)

ஆர்த்தி கண்டுமென் மேனின் றழற்கதிர்
தூர்ப்ப தேயெனைத் தொண்டுகொண் டாண்டவர்
நீர்த் தரங்க நெடுங்கங்கை நீண்முடி
சாத்தும் வெண்மதி போன்றிலை தண்மதி.

(இ-ள்.) ஆர்த்திகண்டுமென்மேலழற்கதிர் நின்று தூர்ப்பதே=யான்பரவை விகாரத்தினாற்படுந் துன்பத்தைக்கண்டும் என்னிடத்து அழலைவீசும் கிரணத்தை நீ நின்று தூர்க்கலாமா (அதனால் நீ); எனைத் தொண்டுகொண்டாண்டவர்=என்னை அடிமையாகக் கொண்டு ஆண்ட சிவபிரான்; நீர்த்தரங்க நெடுங் கங்கை நீண்முடி=வெள்ளநீருடைத்தாய் அலைவீசுகின்ற கங்காநதியை அணிந்த நீண்ட சடைமுடியில்; சாத்தும் வெண்மதிபோன்று=அணிந்திருக்கின்ற வெண்மையாகிய மதியை ஒத்து; தண்மதியிலை=தண்மதியாக இல்லை.—எ-று. (௧௬௫)

வருந்துவானை வருத்துதல் மிக்கதீது என்பதுதோன்ற ஆர்த்திகண்டும் என்றார். ஆர்த்தி=துன்பம். உம்மை இழிவுசிறப்பு. திருமுடியில் கங்கையோடு

சேர்ந்த வெண்மதியாயில் மிகத்தண்ணளிசெய்வை அவ்வாறு செய்யாது சுடுத லின் வேறுமதிபோலு மென்றாரென்க.

அடுத்து மேன்மே லலைத்தெழு மாழியே
தடுத்து முன்னெனை யாண்டவர் தாமுணக்
கடுத்த நஞ்சுன் றரங்கக் கரங்களால்
எடுத்து நீட்டுநீ யென்னையின் றென்செயாய்.

(இ-ள்.) அடுத்துமேன்மேலலைத்தெழுமாழியே = இடைவிடாது ஒன்ற ன்மேலொன்றாய் அலையை வீசி எழாநின்றகடலே; தடுத்து முன்னெனையாண் டவர்தாமுண = தீநெறியிற்செல்லாது தடுத்து முன்னே என்னை அடிமைக்கொ ண்ட சிவபிரான் அமுதுசெய்ய; கடுத்தநஞ்சுன்றரங்கக் கரங்களாலெடுத்துநீட் டுநீ = கொடுமையுடைத்தாகிய விடத்தை உன்னுடைய அலைகளாகிய கைகளால் (சற்றும் இரங்காது) எடுத்துக்கொடுத்த நீ; என்னை யின்றென்செயாய் = அவர்க்கு அடிமைபூண்ட என்னை இன்றைக்கு யாதுசெய்யாய்.—எ-று. (கசுசு)

உணநஞ்செடுத்து நீட்டுநீ என இயையும். இவ்வித இயல்புடைய உன் னை நோவவேண்டுவதில்லை என்றாராயிற்று.

பிறந்த தெங்கள் பிரான்மல யத்திடைச்
சிறந் தணைந்தது தெய்வநீர் நாட்டணி
புறம் பணைத்தடம் பொங்கழல் வீசிட
மறம் பயின்ற தெங்கோ தமிழ்மாருதம்.

(இ-ள்.) தமிழ்மாருதம் = தமிழோடு பழகிய சிறுதென்றற்காற்றே; பிற ந்த தெங்கள்பிரான்மலயத்திடை = நீபிறந்தது எங்கள்முதல்வர் வீற்றிருந்தருளும் மலயாசலத்தில்; சிறந்தணைந்தது = அங்கு நின்றும் சிறப்பாய்வந்து சேர்ந்தஇடம்; தெய்வநீர் நாட்டணிபுறம்பணைத்தடம் = தெய்வத்தன்மையுடைத்தாகிய சோழ நாட்டிலுள்ள அழகிய மருதநிலங்களில் உள்ள தடாகங்கள் (இவ்வாறாக); பொங் கழல்வீசிடமறம்பயின்றதெங்கு = (சீதமுடைமை மணமுடைமை மெல்லவரு தல் என்னுங் குண[illegible] கொடுக்காமல்) வெம்மையே கொடுக்கப்பழகியது எவ் விடத்து என்[illegible] (கசுஎ)

ஓ-அசை. இழிபிறப்பானுஞ் சார்பானுந் தீக்குணமுண்டாத லியல்பு. உன க்கஃதின்மையின் நீ இத்தீக்குணம் பயின்ற தெச்சார்பானென்றாரென்க.

இன்ன தன்மைய பின்னு மியம்புவான்
மன்னு காதல னாகிய வள்ளல்பாற்
றன் னரும்பெற னெஞ்சு தயங்கப்போம்
அன்ன மன்னவள் செய்கை யறைகுவாம்.

(இ-ள்.) இன்னதன்மைய பின்னுமியம்புவான் = (காமன் மதி கடல் காற் றுமுதலிய பொருள்களையன்றிப் பின்னும் வெறுத்தற் குரியனவாகிய) குயில்முத லியவைகளையும் வெறுத்துக் கூறுநின்ற; மன்னுகாதலனாகிய வள்ளல்பால் = நிலை

பெற்ற காதலுடையவராகிய நம்பியாரூரரிடத்து; தன்னரும்பெற னெஞ்சுநயங்
கப்போம்=தன்னுடைய பெறுதற்கருமையாகிய மனமானது சென்று மீளாது
வருந்த மாளிகைக்குச் செல்லும்; அன்னமன்னவள் செய்கையறைகுவாம்=
அன்னத்தின் நடைபோலும் நடையினையுடைய பரவைநாச்சியாரது செய்கை
யைச் சொல்வாம்.—எ-று. (கசுஅ)

நெஞ்சு நயங்கப்போம் என்றதனால் நெஞ்சுமீளாது மறுகத் தான் தனி
யேபோம் பரவையென்றாராயிற்று.

வேறு.

கனங்கொண்ட மணிகண்டர் கழல்வணங்கிக் கணவனைமுன் பெ
றுவாள் போல, இனங்கொண்ட சேடியர்கள் புடைசூழ வெய்துபெருங்
காத லோடுந், தனங்கொண்டு தளர்மருங்குற் பரவையும்வன் றொண்டர்
பாற் றனித்துச் சென்ற, மனங்கொண்டு வரும்பெரிய மயல்கொண்டு
தன்மணிமா ளிகையைச் சார்ந்தாள்.

(இ-ள்.) கனங்கொண்ட மணிகண்டர் கழல்வணங்கி = உயர்வாகிய நீல
மணிபோலும் திருமிடற்றினையுடைய சிவபிரானது திருவடிகளைவணங்கி; கண
வனைமுன்பெறுவாள்போல=தான்விரும்பிய நாயகராகிய நம்பியாரூரரை இனி
மேல் பெறுவாளைப்போல; இனங்கொண்டசேடியர்கள் புடைசூழ = கூட்டமா
கிய தோழியர்கள் மருங்கிற்சூழ்ந்துவர; தனங்கொண்டு தளர்மருங்குற் பரவை
யும்=தனங்களைத்தாங்கி அதனால் தளர்வடைந்த இடையினையுடைய பரவைநாச்
சியாரும்; எய்துபெருங்காதலோடும் = தானடைந்த பெரியவேட்கையோடும்;
வன்றொண்டர்பாற்றனித்துச் சென்றமனங்கொண்டு=நம்பியாரூரரிடத்துத் தனி
யேபோன மனதை ஒருவகையாக வலிந்து கொண்டு; வரும்பெரிய மயல்கொ
ண்டு தன் மணிமாளிகையைச் சார்ந்தாள்=தன்னிடத்து விகாரத்தால் வரும்மய
க்கத்தைத் தாங்கிக்கொண்டு தனதுமணிமயமான உபரிகையைஅடைந்தாள்.-எ-று.

அன்று அவள் வணங்கிச்சென்றது நம்பியாரூரரைக் கணவனாகமேலேபெ
றுதற்குப் போலுமென்பது தோன்றக் கணவனை முன்பெறுவாள்போலென்றார்.

சீறடிமே னூபுரங்க ளறிந்தனபோற் சிறிதளவே யொலிப்ப முன்
னர், வேறொருவ ருடன்பேசாண் மெல்லவடி யொதுங்கிமா ளிகையின்
மேலால், ஏறிமர கதத்தூணத் திலங்குமணி வேதிகையி னலங்கொள்
பொற்கான், மாறின்மலர்ச் சேக்கைமிசை மணிநிலா முன்றின்மருங்
கிருந்தாள் வந்து.

(இ-ள்.) சீறடிமேனூபுரங்களறிந்தனபோற்சிறிதளவே யொலிப்ப=சிறி
யபாதங்களில் தரிக்கப்பட்ட சிலம்புகள் இவர் ஆசைகொண்டதை அறிந்தாற்
போல மெல்லவொலிக்க; முன்னர்வேறொருவருடன் பேசாள் மெல்லவடியொது
ங்கி=தமக்குமுன்னே நிற்கும் மற்றைமாதர்களொருவரோடும் பேசாதவராய்ப்
பாதங்களைப் பையவைத்து நடந்து; மாளிகையின்மேலாலேறி=மாளிகையின்
மேல் வீட்டிலேறி; மரகதத்தூணத்திலங்கும்=மரகதரத்தினத்தூண்களால் விள

க்கும்; மணிவேதிகையில்=இரத்தினவேதிகையின்கண்; நலங்கொள் பொற்கால்=அழகுடைத்தாகிய பொற்கால்களையுடைய; மாறின்மலர்ச் சேக்கைமிசை= குற்றமில்லாத மலரணையின்மேல்; மணிநிலாமுன்றில் மருங்கிருந்தாள் வந்து= அழகினையுடைய நிலாமுற்றத்தில் வந்திருந்தாள்.—எ-று. (கஎ௦)

அவ்வளவி லருகிருந்த சேடிதனை முகநோக்கி யாரூ ராண்ட
மைவ்விரவு கண்டரைநாம் வணங்கப்போ மறுகெதிர்வந் தவரா ரென்ன
இவ்வுலகி லந்தணரா யிருவர்தே டொருவர்தா மெதிர்நின் றாண்ட
சைவமுதற் றிருத்தொண்டர் தம்பிரான் றோழனார் நம்பி யென்றாள்.

(இ-ள்.) அவ்வளவிலருகிருந்த சேடிதனைமுகநோக்கி= அச்சமயத்துத் தம்மருகிருந்த ஒருதோழியினது முகத்தைப்பார்த்து; ஆரூராண்டமைவிரவு கண்டரை=திருவாரூரில் வீற்றிருந்தருளும் கருநிறம் விரவிய கண்டத்தையுடைய சிவபிரானை; நாம்வணங்கப்போ மறுகெதிர்வந்தவராரென்ன=யாம் வணங்கும்படிக்குச்செல்லும் வீதி எதிரில்வந்தவர் யாரென்று கேட்க (அதற்கவள் உத்தரமாக); இவ்வுலகிலந்தணராயிருவர்தேடொருவர் = இவ்வுலகத்தின்கண் திருமால்பிரமன் என்னும் இருவர்களும் தேடிக்காணாத ஒப்பற்ற முதல்வராகிய சிவபிரான்; எதிர்நின்றாண்ட=எதிரேநின்று தடுத்தாட்கொண்ட; சைவமுதற்றிருத்தொண்டர்=ஆதிசைவகுல முதல்வராகிய திருத்தொண்டர்; தம்பிரான்றோழனார் நம்பியென்றாள்=தம்பிரான்தோழர் என்னும் பெயரையுடைய நம்பியாரூரர் என்றுசொன்னாள்.—எ-று. தாம்-அசை. (கஎக)

என்றவுரை கேட்டலுமே யெம்பிரான் றமரேயோ வென்னா முன்னம், வன்றொண்டர் பால்வைத்த மனக்காத லளவின்றி வளர்ந்து பொங்க, நின்றநிறை நாண்முதலாங் குணங்களுட னீங்கவுயி ரொன்றுந் தாங்கி, மின்றயங்கு நுண்ணிடையாள் வெய்துயிர்த்து மெல்லணைமேல் வீழ்ந்த போது.

(இ-ள்.) என்றவுரைகேட்டலுமே = என்று சேடிசொல்லியவார்த்தையைக் கேட்டமாத்திரத்தே; எம்பிரான்றமரேயோ = எமது பிரானார் தடுத்தாட்கொண்ட அடியவரேயோ; என்னாமுன்னம் = என்றுசொல்வதற்குமுன்னே; வன்றொண்டர்பால்வைத்த = வன்றொண்டரிடத்துத் தான்வைத்த; மனக்காதலளவின்றிவளர்ந்துபொங்க = மனத்தின்கட் காதலானது அளவைக் கடந்து வளர்ந்துமேம்பட; நின்றநிறைநாண்முதலாங்குணங்களுடனீங்க = தன்னோடு கூடிநின்ற நன்னெறியில் நிறுத்தி நிற்கும் குணமும் நாணம் முதலாகிய நான்கு குணங்களும் ஒருங்குநீங்க; உயிரொன்றுந்தாங்கி=தன்னுயிரொன்றையுந் தாங்கிக்கொண்டு; மின்றயங்குநுண்ணிடையாள்=மின்போல விளங்குகின்ற நுண்ணிய இடையினையுடைய பரவைநாச்சியார்; வெய்துயிர்த்துமெல்லணைமேல் வீழ்ந்தபோது=பெருமூச்செறிந்து மிருதுவாகிய மலரணையின்மேல் சோகத்தால் மயங்கி விழுந்தசமயத்து.—எ-று. (கஎஉ)

தமரேயோ என்பதில் ஏகாரம் தேற்றம். ஓகாரம் உணர்ந்து கோடற்பொருட்கண் வினாவாட்வந்தது. நிறையாவது:—காப்பனகாத்துக் கடிவனகடிந்தொழுகுங்குணம் சால்பெனினுமொக்கும்.

ஆரநறுஞ் சேறாட்டி யரும்பனிநீர் நறுந்திவலை யருகு வீசி
யீரவிளந் தளிர்குளிரி படுத்துமட வார்செய்த விவையு மெல்லாம்
பேரழலி னெய்சொரிந்தா லொத்தனமற் றதன்மீது சமிதை யென்ன
மாரனுந்தன் பெருஞ்சிலையின் வலிகாட்டி மலர்வாளி சொரிந்தான் வந்து.

(இ-ள்.) ஆரநறுஞ்சேறாட்டி=நறுமணங்கமழுஞ் சந்தனக்குழம்பை உடம்பிற்பூசி; அரும்பனிநீர்நறுந்திவலையருகுவீசி=அருமையாகிய நறிய பனிநீர்த்திவலைகளை அருகில் நின்றுந் தெளித்து; ஈரவிளந்தளிர்குளிரிபடுத்து = குளிர்ந்த இளமையான தளிர்களையும் நீர்க்குளிரியையும்பரப்பி; மடவார்செய்தவிவையுமெல்லாம்=பாங்கியர்கள்செய்த இவ்வுபசாரமும் இவையல்லாத பிற உபசாரமும் ஆகிய எல்லாம்; பேரழலினெய்சொரிந்தாலொத்தன=பெரிய நெருப்பினிடத்து நெய்யைச்சொரிந்தாலொத்து மிக்க வெம்மைகொடுத்திருந்தன; அதன்மீதுசமிதையென்ன=அந்நெருப்பின்மேல் சமிதையென்றுசொல்லும்படி; மாரனுந்தன் பெருஞ்சிலையின்வலிகாட்டி=மன்மதனுந் தன்னுடைய பெரியவில்லின் வலியைக்காட்டி; மலர்வாளிவந்துசொரிந்தான்=மலரம்புகளை எய்தான்.—எ-று. (க௭௩)

குளிரி=நீர்க்குளிரி என்னும் ஓர்கொடி. உம்மை இரண்டில் முன்னையது எதிரது தழீஇயது பின்னையது இறந்தது தழீஇயது. மற்று, அசை. விரகமுடையார்க்கு அத்தாபம் உடம்பை மெலிவிக்காது பாங்கியர் சைத்தியோபசாரங்களைச் செய்வர் அவ்வாறு செய்வுழி சந்தனம் மலர் முதலியன போக்கியப்பொருளாதலில் அதுபோகத்துக்குச் சாதனமாய் மேன்மேல் விரகத்தைவளர்க்கும் அதனால் அழலினெய்சொரிந்தாற்போலென்றும் மாரனம்பு அவ்வழல்தணியாது ஓங்கச் செய்தற்குச் சாதனமாதலின் சமிதையென்றுங் கூறினர். சமிதை=ஓம்விறகு.

மலரமளித் துயிலாற்றாள் வருந்தென்றன் மருங்காற்றாண் மங்குல்
வானி, னிலவுமிழுந் தழலாற்றா ணிறையாற்றும் பொறையாற்றா ணீர்
மை யோடுங், கலவமயி லெனவெழுந்து கருங்குழலின் பரமாற்றாக் கை
ய ளாகி, யிலவவிதழ்ச் செந்துவர்வாய் நெகிழ்ந்தாற்றா மையின்வறிதே
யின்ன சொன்னாள்.

(இ-ள்.) மலரமளித்துயிலாற்றாள்=மலரணையின்மீது துயில்செய்யாதவளாயும்; வருந்தென்றல்மருங்காற்றாள் = தன்மேல்வீசும் சிறுதென்றற்காற்றைச் சகியாதவளாயும்; மங்குல்வானினிலவுமிழுந்தழலாற்றாள் = முகில்கள்சூழ்கின்ற வானின்கண் சந்திரன்சொரிகின்ற நிலாவாகிய நெருப்பை ஆற்றாதவளாயும்; நிறையாற்றும்பொறையாற்றாள் = நிறைசெய்யும் பாரத்தை யாற்றாதவளாயும்; நீர்மையோடுங்கலவமயிலெனவெழுந்து=இக்குணங்களோடு கலாபத்தையுடைய மயில்போல எழுந்து; கருங்குழலின்பரமாற்றாக்கையளாகி=கரிய அளகத்தின்

பாரத்தை ஆற்றாத குணமுடையளாய்; இலவவிதழ்ச்செந்துவர்வாய்நெகிழ்ந்து= செவ்விலவம்பூவினது இதழையொத்துச் சிவந்த பவளம்போலும் வாயைத்திறந்து; ஆற்றாமையின்வழிதேயின்னசொன்னாள்=ஆற்றாமையால் புலப்பமாக இவ்வாறு சொல்லுவாளாயினாள்.—எ-று. (கஎச)

நிறைசெய்யும் பாரமாவது:—நிறைக்குணந் தன்னியல்பினின்று நீங்குங்கால் அதனை முன்போல நீங்காது நிறுத்துதலால் வருந்துன்பம். ஆற்றா நீர்மையோடு என்று பாடமோதுவாருமுளர்.

வேறு.

கந்தங் கமழ்மென் குழலீ ரிதுவென் கலைவாண் மதியங் கனல்வானெனையிச், சந்தின் றழலைப் பனிநீ ரளவித் தடவுங் கொடியீர் தவிரீர் தவிரீர், வந்திங் குலவி நிலவும் விரையார் மலயா னிலமு மெரியாய் வருமால், அந்தண் புனலு மரவும் விரவுஞ் சடையா னருள்பெற் றுடையாரருளார்.

(இ-ள்.) கந்தங்கமழ்மென்குழலீர் = மணங்கமழ்கின்ற மிருதுவாகிய கூந்தலினையுடைய பெண்களே; இதுவென்கலைவாண்மதியங்கனல்வானெனை= கலைநிறைந்த ஒளியினையுடைத்தாகிய சந்திரன் என்னைச் சுடுதல் யாது கருதி; இச்சந்தின்றழலைப்பனிநீரளவித்தடவுங்கொடியீர் = இச்சந்தினின்றுந் தேய்த்த குழம்பாகிய நெருப்பைப் பனிநீரோடு விரவிப்பூசுகின்ற கொடியவர்களே; தவிரீர்தவிரீர்=இதனைத் தவிருங்கள் தவிருங்கள்; வந்திங்குலவிநிலவும் விரையார் மலயானிலமும்=இங்குவந்து சஞ்சரித்து வீசுகின்ற வாசனையுடைத்தாகிய சிறுதென்றற்காற்றும்; எரியாய்வரும்=நெருப்பாகவரும் (அவ்வாறிருந்தும்); அந்தண்புனலுமரவும்விரவுஞ்சடையான் = அழகிய தண்மையுடைத்தாகிய கங்காநதியும் அரவும்பும் விரவியிருக்குஞ் சடைமுடியையுடைய சிவபிரானது; அருள்பெற்றுடையாரருளார்=திருவருளைப்பெற்ற நம்பியாரூரர் நமக்கு அருள்செய்கின்றாரில்லை.—எ-று. ஆல்-அசை. (கஎரு)

புலரும் படியன் றிரவென் னளவும் பொறையுந் நிறையு மிறையுந் தரியா, உலருந் தனமு மனமும் வினையே னொருவே னளவோ பெருவாழ் வுரையீர், பலரும் புரியுந் துயர்தா னிதுவோ படைமன் மதனார் புடைநின் றகலார், அலருந் நிலவு மலரு முடியா ரருள்பெற் றுடையா ரவரோ வறியார்.

(இ-ள்.) புலரும்படியன்றிரவென்னளவும் = என்னளவுக்கும் இவ்விரவானது விடியும் தரமுடைத்தன்று; பொறையுநிறையுமிறையுந்தரியா=என்னுடைய பொறைக்குணமும் சால்பும் இறைப்பொழுதுந்தங்கவில்லை; உலருந்தனமும்மனமும்=வெப்பத்தால் மாலை சந்தனம் முதலியவற்றை உலரச்செய்கின்ற தனங்களும் வாடுகின்ற மனமும்; வினையேனொருவேனளவோ = தீவினையுடைய ஒருத்தியளவோ; பெருவாழ்வுரையீர்=(இவ்வாறுவருந்துதலோ) பெரியவாழ்வு சொல்லுங்கள்; பலரும்புரியுந்துயர்தானிதுவோ=பலருங்கூடி விளைக்கும் துய

ரம் இதுவோ; படைமன்மதனுர்புடைநின்றகலார்=பஞ்சபாணத்தையுடைய காமனுர் என்மருங்குநின்று நீங்காராயினர்; அலருந்நிலவு மலரும்முடியார்=மலர்களும் இளம்பிறையும் விளங்கியிருக்கும் திருமுடியையுடைய சிவபிரானது; அருள்பெற்றுடையா ரவரோவறியார் = திருவருளைப்பெற்றுடைய நம்பியாரூரரோ இவ்வருத்தத்தை யறியார்.—எ-று. (கஎசு)

பொறையாவது:—தன்னாலும் பிறராலும் வருந் துயரத்தைப்பொறுத்தல். பெருவாழ்வுரையீர் என்றதற்கு உயிர்பிழைக்கும் நெறியையுரையா திருக்கின்றீரென்றுரைத்தலுமொன்று.

தேருங் கொடியு மிடையு மறுகிற் றிருவா ரூரர் நீரே யல்லால்,
ஆரொன் றுயர மறிவா ரடிக ளடியே னயரும் படியோ விதுதா, னீரும்
பிறையும் பொரிவா ளரவி னிரையுந் நிரைவெண் டலையின் புடையே,
யூருஞ் சடையீர் விடைமேல் வருவீ ருமதன் பிலர்போ லியானோ வுறு
வேன்.

(இ-ள்.) தேருங்கொடியுமிடையும் மறுகிற்றிருவாரூரர்நீரேயல்லால்= தேர்களும் கொடிகளும் நெருங்கிய மறுகினையுடைய திருவாரூரில் வீற்றிருந்தருளும் முதல்வரே நீரேயன்றி; ஆரென்றுயரமறிவார்=யாவர் என்னுடைய விரகவேதனையை அறியவல்லவர்கள்; அடிகளடியேனயரும்படியோவிது = சுவாமீ இவ்விரகம் அடியேன் வருந்தும்படியோவந்தது; நீரும்பிறையும்பொரிவாளரவின்னிரையும்=கங்கையும் இளம்பிறையும் புள்ளிகளையுடைத்தாகிய ஒளியினையுடைய பாம்பின் வரிசையும் ஆகிய இவைகள்; நிரைவெண்டலையின்புடையேயூருஞ்சடையீர்=நிரைத்த வெள்ளிய சிரமாலையின் பக்கலில் ஊர்ந்துசெல்லுஞ் சடையையுடையவரே; விடைமேல்வருவீர் = இடபத்தின்மேல் இவர்ந்து வருபவரே; உமதன்பிலர்போல்யானோவுறுவேன்=தேவரீரிடத்து அன்பில்லாதவர்கள்போல யானோவருந்துவேன்.—எ-று. தான்-அசை. (கஎஎ)

என்றின் னனவே பலவும் புகலு மிருளா ரளகச் சுருளோ தியை
யும், வன்றொண் டரையும் படிமேல் வரமுன் பருள்வா னருளும் வகை
யார் நினைவார், சென்றும் பர்களும் பணியுஞ் செல்வத் திருவா ரூர்வாழ்
பெருமா னடிகள், அன்றங் கவர்மன் றலைநீர் செயுமென் றடியா ரறி
யும் படியா லருளி.

(இ-ள்.) என்றின்னனபலவும்புகலும் = என்று இவ்வாருகப் பலவற்றையும் எடுத்துச்சொல்லும்; இருளாரளகச் சுருளோதியையும் = இருள்போலுங் கருநிறத்தையுடைத்தாகிய அளகமாகிய சுருண்ட கூந்தலையுடைய பரவைநாச்சியாரையும்; வன்றொண்டரையும் படிமேல்வர=நம்பியாரூரரையும் நிலவுலகத்தில்(மானிட வடிவமெடுத்துப்) பிறக்கும்படி; முன்பருள்வான்=முன்னே கட்டளையிட்டருளிய சிவபிரான்; அருளும்வகையார் நினைவார்=(அவர்க்கு அவ்விருப்பத்தைக்கூட்டி முடிக்க) அருள்செய்யும் வகையை யார் அறிவார்கள் (அதனல்); சென்றும்பர்களும்பணியுஞ்செல்வத் திருவாரூர்வாழ்பெருமானடிகள் =

தேவர்களும்வந்து வணங்கும் செல்வம்நிறைந்த திருவாரூரில் வீற்றிருந்தருளும் பிரானாகிய கடவுள்; அன்றங்கவர் மன்றலைநீர்செயுமென்று=அத்தினத்தில் நம்பியாரூரர் பரவைநாச்சியார் என்னும் அவ்விருவர்களது மணத்தை நீங்கள் செய்விராக என்று; அடியாரறியும்படியருளி = அடியார்களறியும்படி கட்டளையிட்ருளி,—எ-று. (கஎஅ)

அருள்வார் அறிந்து கூட்டுவதேயன்றி அதனைப் பிறர்கூட்ட அறியாரென்பது தோன்ற யார் நினைவாரென்றார். ஏகாரம்-ஆல்-அசை.

மன்னும் புகழ்நா வலர்கோன் மகிழ மங்கை பரவை தன்னைத் தந்தோம், இன்ன வகைநம் மடியா ரறியும் படியே யுரைசெய் தனமென்றருளிப், பொன்னின் புரிபுன் சடையன் விடையன் பொருமா கரியினுரிவை புனைவான், அன்னந் நடையாள் பரவைக் கணிய தாரூ ரன்பான் மணமென் றருள.

(இ - ள்.) மன்னும்புகழ் நாவலர்கோன்மகிழ = நிலைபெற்ற புகழினையுடைய நம்பியாரூரர் மகிழும்படி (அவரிடத்து); மங்கைபரவைதன்னைத்தந்தோம்= பரவையென்னும் பெண்ணை உனக்குக்கொடுத்தோம்; இன்னவகைநம்மடியா ரறியும்படி யுரைசெய்தனமென்றருளி = பரவையை உனக்குக்கொடுத்தவகைமையை நம்மடியவர்கள் அறியும்படிக்கு அருளிச்செய்தோம் என்றுகூறி; பொன்னின்புரி புன்சடையன் விடையன்=பொன்போலும் முறுக்கினையுடைய புல்லிய சடையினையுடையவரும் இடபத்தை வாகனமாகவுடையவரும்; பொருமாகரியினுரிவைபுனைவான்=பொராநின்ற பெருமையினையுடைத்தாகிய யானையின் உரியைப்புனைந்தவரும் ஆகிய சிவபிரான்; அன்னநடையாள் பரவைக்கு=அன்னம் போலும் நடையினையுடைய பரவைநாச்சியாருக்கும்; அணியதாரூரன்பான் மென்றருள=நம்பியாரூரனது மணம் உனக்குச் சமீபித்ததென் றருளிச்செய்ய. எ-று. ஏ - அசை. (கஎகூ)

காமத் துயரிற் கவல்வார் நெஞ்சிற் கரையில் லிருளுங் கங்குற் கழிபோம் யாமத் திருளும் புலரக் கதிரோ னெழுகா லையில்வந் தடியார்கூடிச்[ழுத் சேமத் துணையா மவர்பே ரருளைத் தொழுதே திருநா வலர்கோன் மகிதாமக் குழலாள் பரவை வதுவை தகுநீர் மையினா னிகழச் செய்தார்.

(இ-ள்.) காமத்துயரிற் கவல்வார் நெஞ்சில் கரையில்லிருளும்=வேட்கை நோயால்வருந்தும் நம்பியாரூரர் பரவைநாச்சியார்என்னும் இவ்விருவர்களது நெஞ்சில் அடங்காத இருளும்; கங்குற்கழிபோம்யாமத்திருளும் புலர=அவர்க்கு அன்று மிகநீட்டித் திருந்த இரவிருளும் விடிய; கதிரோனெழுகாலையில்வந்து=உதயகாலத்தில்வந்து; அடியார்கூடி=அடியார்கள் யாவரும் ஒருங்குகூடி; சேமத்துணையாமவர் பேரருளைத் தொழுது=தமக்குச் சேமநிதிபோலும் துணையாகிய அச்சிவபிரானது பெருமையான திருவருளைவணங்கி; திருநாவலர்கோன்மகிழ=நம்பியாரூரர் மகிழும்படி; தாமக்குழலாள் பரவைவதுவை=மாலையணிந்த அளகத்தையுடைய பரவைநாச்சியாரது திருமணத்தை; தகுநீர்மையினானிகழச்



தியாகராஜப்பெருமான் திருவாரூரிலுள்ள ஆதிசைவப்பிராமணர் கனவிற்றோன்றி சுந்தரருக்கும் பரவையாருக்கும் திருமணஞ்செய்ய கட்டளைச்செய்தருளியது.

செய்தார் = தக்கவாறு மங்கலங்கள் நிகழும்படி செய்வித்தார்கள்.—எ - று. ஏ - அசை. (கஅ௦)

தகுநீர்மையினால் என்றதனால் உருத்திரகணிகையர்க்குச் செய்யும் முறைப்படி என்றாரென்க. அதாவது தத்தஞ்செய்தல் மங்கிலியந்தரித்தல் முதலிய தொழிலின்றி ஏற்பனசெய்தல்.

வேறு.

தென்னாவ லூர்மன்னன் றேவர்பிரான் றிருவருளால்
மின்னாருங் கொடிமருங்குற் பரவையெனு மெல்லியறன்
பொன்னாரு முலையோங்கற் புணர்குவடே சார்வாகப்
பன்னாளும் பயில்யோக பரம்பரையின் விரும்பினார்.

(இ-ள்.) தென்னாவலூர்மன்னன் = தென்றிசைக்கண்ணுள்ள திருநாவலூருக்கு முதல்வராகிய நம்பியாரூரர்; தேவர்பிரான் திருவருளால் = தேவர்க்கு முதல்வராகிய புற்றிடங்கொண்டார் திருவருளினால்; மின்னாருங்கொடிமருங்குற் பரவையெனு மெல்லியறன் = ஒளியினையுடைத்தாகிய கொடிபோலும் இடையினையுடைய பரவைநாச்சியாரென்னும் பெண்ணின்; பொன்னாரும் முலையோங்கற் புணர்குவடே சார்வாக = பொன்போலும் தனங்களென்னும் மலையினுச்சியே தனக்குச் சாருமிடமாக; பன்னாளும்பயில்யோக பரம்பரையின்விரும்பினார் = பல்நாளும் பயில்கின்ற சையோகபரம்பரையில் விருப்பமுடையவரானார்.—எ-று. (கஅக)

யோகமென்னும் பொதுச்சொல்லால் சிவயோகநெறியில் பயில்வார் மலையினுச்சியைத் தமக்கிடமாகக்கொண்டு பயிறல்போல முலை ஓங்கற்குவடுசார்வாகப்பெற்ற சிற்றின்பமே பேரின்பமாகக்கொண்டு மெய்யுணர்ச்சியால் சிவயோகபரம்பரையிற் பயின்றாரென்றும் பொருள்போந்தவாறுணர்க. பெற்றசிற்றின்பமே பேரின்பமாகக்கொண்டு நிற்றலாவது:—தமக்குரிய பேரின்பானுபவம் தத்துக்குறைவின்றி நிகழ வாசனையால் சிற்றின்பமும் உபபோகமின்றி யனுபவித்தல். உபபோகமாவது:—இது சுகம் இது துக்கம் எனத்தோன்றினும் நான் சுகி நான் துக்கி என உணர்வுதியாமை.

தன்னையா ளுடையபிரான் சரணார விந்தமலர்
சென்னியினுஞ் சிந்தையினு மலர்வித்துத் திருப்பதிகம்
பன்னுதமிழ்த் தொடைமாலை பலசாத்திப் பரவையெனு
மின்னிடையா ளுடன்கூடி விளையாடிச் செல்கின்றார்.

(இ-ள்.) தன்னையாளுடைய பிரான்சரணாரவிந்தமலர் = தன்னையாளாகக்கொண்ட பிரானாது திருவடியாகிய தாமரைமலர்களை; சென்னியினுஞ் சிந்தையினுமலர்வித்து = தமது திருமுடியின்மேலும் உள்ளத்தும் மலரும்படி செய்து; திருப்பதிகம் பன்னுதமிழ்த்தொடைமாலைபலசாத்தி = திருப்பதிகமாகிய தமிழால் தொடுத்தமாலைகள் பலவற்றைச்சூட்டி; பரவையெனு மின்னிடையாளுடன்கூடி = பரவைநாச்சியாரென்னும் மின்போலும் இடையினையுடையாளோடு கூடி; விளையாடிச் செல்கின்றார் = விளையாடிக்கொண்டு செல்கின்றாராயினார்.எ-று

காலந்தோறும் ஆலயத்திற்சென்று பணியும் முறைமைதோன்றச் சென்னியில் மலர்வித்தென்றும் தம்முள்ளத்து நீங்காத அனன்னியபாவனை உடையரென்பது தோன்றச் சிந்தையில் மலர்வித்தென்றுங் கூறினர்.

மாதுடன் கூடவைகி மாளிகை மருங்குசோலைப்
போதலர் வாவிமாடு செய்குன்றின் புடையோர்தெற்றி
சீதளத் தரளப்பந்தற் செழுந்தவி சிழிந்துதங்க
ணுதர்பூங் கோயினண்ணிக் கும்பிடும் விருப்பானம்பி.

(இ-ள்.) மாளிகைமருங்குசோலை = திருமாளிகையிலும் சோலைகளிலும்; போதலர் வாவிமாடு = தாமரைப்பூக்கள் மலராகின்ற வாவியினருகிலும்; செய்குன்றின்புடைதெற்றி = செய்குன்றிலும் திண்ணைகளிலும்; மாதுடன்கூடவைகி = பரவைநாச்சியாரோடு இருந்து விளையாடிப்பின்; சீதளத்தரளப் பந்தற்செழுந்தவி சிழிந்து = குளிர்ந்தமுத்துப்பந்தலின்கீழிட்டிருக்கும் செழுமையாகிய மலரணையினின்று மிறங்கி; தங்கணுதர்பூங் கோயினண்ணிக் கும்பிடும் விருப்பானம்பி = தமதுமுதல்வராகிய புற்றிடங்கொண்டாரது திருக்கோயிலையடைந்து சிவபிரானைத்தொழும் விருப்பத்தினால் நம்பியாரூரர் ஓர்நாள்.—எ-று. ஓர்-அசை. ()

அந்தரத் தமரர்போற்று மணிகிள ராடைசாத்திச்
சந்தனத் தளறுதோய்ந்த குங்குமக் கலவைசாத்திச்
சுந்தரச் சுழியஞ்சாத்திச் சுடர்மணிக் கலன்கள்சாத்தி
இந்திரத் திருவின்மேலா மெழின்மிக விளங்கித்தோன்ற.

(இ-ள்.) அந்தரத்தமரர்போற்றும் = விண்ணுலகின்கண்வாழும் தேவர்களும் துதிக்கத்தக்க; அணிகிளராடைசாத்தி = அழகு விளங்குகின்ற பட்டாடையை உடுத்தி; சந்தனத்தளறுதோய்ந்த = சந்தனக்குழம்புகலந்த; குங்குமக்கலவைசாத்தி = குங்குமச்சாந்தைப்பூசி; சுந்தரச்சுழியஞ்சாத்தி = (அழகிய திருமுடியின்கண்) கிரீடந்தரித்து; சுடர்மணிக்கலன்கள்சாத்தி = ஒளியைவீசும் இரத்தினாபரணங்களையுந்தரித்து; இந்திரத்திருவின்மேலா மெழின்மிகவிளங்கித்தோன்ற = தேவேந்திரசெல்வத்திற்கும் மேம்பட்ட செல்வச்சிறப்பு பொருந்தும்படி பிரகாசித்துத்தோன்ற.—எ-று. (கஅச)

சுழியம் என்பது சூளியம் என்னும் வடசொற்றிரிபு. "மெய்வளர் கோலமெலாம்பொலிய மிக்கவிழுத்தவவேந்தரென்ன." என்று முற்கூறுதலினாலும் அரச குமாரர்க்குரிய முடியே சூழியமாமென்க. செல்வத்துளெல்லாம் சிறந்ததென்பது தோன்ற இந்திரத்திருவென்றும் அதனினும் சிறந்ததென்பது தோன்ற மேலாமென்றுங் கூறினர்.

கையினிற் புனைபொற் செண்டுங் காதினி லிலங்குதோடு
மெய்யினிற் றுவளுநூலு நெற்றியின் விளங்குநீறும்
ஐயனுக் கழகிதாமென் றுயிழை மகளிர்போற்றச்
சைவமெய்த் திருவின்கோலந் தழைப்பவீ தியினைச்சார்ந்தார்.

(இ-ள்.) கையினிற்புனைபொற்செண்டும்=கையினிடத்து அலங்காரமாகப் புனைந்துசெய்த அழகிய பூச்செண்டும்; காதினிலிலங்குதோடும் = காதில் விளங்குகின்ற பொன்னாலாகிய தோடும்; மெய்யினிற்றுவளுநூலும் = தோளினின்றுந் திருமேனியில் துவள்கின்ற உபவீதமும்; நெற்றியில்விளங்குநீறும்= நெற்றியின்கண் விளங்குகின்ற விபூதியும் ஆகிய இக்கோலம்; ஐயனுக்கழகிதாமென்று=இவ்வையருக்கு அழகாயிருக்கின்றதென்று; ஆயிழைமகளிர்போற்ற= ஆராய்ந்துசெய்த ஆபரணங்களையணிந்த மாதர்கள்புகழ; சைவமெய்த் திருவின் கோலந்தழைப்ப = மெய்மையான சைவத்திருக்கோலமானது தழைக்கும்படி; வீதியினைச்சார்ந்தார்=வீதியில் எழுந்தருளினார்.—எ-று. இம்மூன்றுங்குளகம். ()

கையினிற்புனைபொற் கோலென்றும் பாடம்.

நாவலூர் வந்தசைவ நற்றவக் களிறேயென்றும்
மேவலர் புரங்கள்செற்ற விடையவர்க் கன்பவென்றுந்
தாவில்சீர்ப் பெருமையாரூர் மறையவர் தலைவவென்றும்
மேவின ரிரண்டுபாலும் வேறுவே றுயம்போற்ற.

(இ-ள்.) நாவலூர்வந்தசைவ நற்றவக்களிறேயென்றும் = திருநாவலூரிலவதரித்த நல்ல தவக்குஞ்சரமேயென்றும்; மேவலர்புரங்கள்செற்ற விடையவர்க்கன்பவென்றும் = பகைவரது முப்புரங்களை அழித்த சிவபிரானுக்கு அடியவரேயென்றும்; தாவில்சீர்ப்பெருமையாரூர்=கெடாத சிறப்பினையுடைய திருவாரூரில்வாழும்; மறையவர் தலைவஎன்றும் = மறையவர்களுக்கு முதல்வரேயென்றும்; மேவினரிரண்டுபாலும்வேறு வேறுயம்போற்ற = இருமருங்கிலும் பொருந்தினவர்களாய் வேறுவேறுகமகளிர் கூட்டம் துதிக்க.—எ-று. (கஅசு)

கைக்கடா குரங்குகோழி சிவல்கவு தாரிபற்றிப்
பக்கமுன் போதுவார்கள் பயின்மொழி பயிற்றிச்செல்ல
மிக்கபூம் பிடகைகொள்வோர் விரையடைப் பையோர்சூழ
மைக்கருங் கண்ணினார்கண் மறுகநீண் மறுகில்வந்தார்.

(இ-ள்.) கைக்கடாகுரங்குகோழி=கையினிடத்து ஆட்டுக்கடாவும் குரங்கும் கோழியும்; சிவல்கவுதாரிபற்றி=காடையும் கவுதாரியும் ஆகிய இவைகளைப் பிடித்துக்கொண்டு; பக்கமுன்போதுவார்கள் =இருமருங்கிலும் முன்னும் செல்கின்றவர்கள்; பயின்மொழிபயிற்றிச்செல்ல=(போர்செய்தலுக்கும் ஆடுதலுக்கும் உரிய) குறிப்பு மொழிகளைப்பயிற்றி (அத்தொழில்களைச் செய்யும்படி செய்து) போக; மிக்கபூம்பிடகைகொள்வோர்=மேலான பூக்களைவைத்திருக்கும் கூடையைத்தாங்கி வருகின்றவர்களும்; விரையடைப்பையோர்சூழ = நறுமணங்கமழும் அடைப்பையைத் தாங்கினவர்களுஞ் சூழ்ந்துவர; மைக்கருங்கண்ணினார் கண் மறுகநீண்மறுகில்வந்தார் = மைதீட்டிய கரியகண்களையுடைய மாதர்கள் மையலுறத்திருவீதியில் எழுந்தருளினார்.—எ-று. (கஅஎ)

பயில்மொழி = பயிலாகக்கூறும் மொழி. அதாவது அவ்வவற்றிற்குரிய தொழில்செய்யும்படி பயிலாகக்கூறுதல். பயில் = குறிப்பு. பிடகை = கூடை.

அடைப்பை:— பாக்கு வெற்றிலை சாதிக்காய் ஏலம் முதலிய முகவாசங்கள் வைத்திருக்கும் பை.

பொலங்கலப் புரவிபண்ணிப் போதுவார் பின்புபோத
இலங்கொளி வலயப்பொற்றோ ளிடையிடை மிடைந்துதொங்க
லலங்கிளர் நீழல்சூழ நான்மறை முனிவரோடும்
அலங்கலந் தோளினான்வந் தணைந்தன னண்ணல்கோயில்.

(இ - ள்.) பொலங்கலப்புரவிபண்ணி = பொன்னாலாகிய ஆபரணங்களால் அலங்கரித்த குதிரையைப் பண்ணுறுத்தி; போதுவார்பின்புபோத=கொண்டுசெல்கின்றவர்கள் தமக்குப் பின்னாகவரவும்; இலங்கொளிவலயப்பொற்றோளிடையிடைமிடைந்து; விளங்குகின்ற வாகுவலயங்களையணிந்த அழகிய தோள்களின் இடையிடையே நெருங்கி; தொங்கலலங்கிளர்நீழல்சூழ = பீலிக்குஞ்சங்களின் நிழல்பத்தி பாயவும்; நான்மறைமுனிவரோடும் = நான்குவேதங்களையுணர்ந்த மறையவர்களோடும்; அலங்கலந்தோளினான் வந்தணைந்தனனண்ணல்கோயில்=மாலையையணிந்த அழகிய தோள்களையுடைய நம்பியாரூரர் புற்றிடங்கொண்டார் திருக்கோயிலைவந்தடைந்தார்.—எ-று. (கஅஅ)

கண்ணுதல் கோயிற்றேவா சிரியனுங் காவணத்து
விண்ணவ ரொழியமண்மேன் மிக்கசீ ரடியார்கூடி
யெண்ணிலா ரிருந்தபோதி லிவர்க்கியா னடியேனாகப்
பண்ணுநா ளெந்நாளென்று பரமர்தாள் பரவச்சென்றார்.

(இ-ள்.) கண்ணுதல்கோயிற்றேவாசிரியனுங்காவணத்து=நெற்றிக்கண்ணையுடைய சிவபிரானது கோயிலின்கணுள்ள தேவாசிரியனென்னுந் திருமண்டபத்தில்; விண்ணவரொழிய=தேவர்கள்தவிர; மண்மேல்மிக்கசீரடியார் எண்ணிலார்கூடி யிருந்தபோதில் = நிலவுலகத்தில்வாழும் மிக்க சிறப்பினையுடைய எண்ணிறந்த அடியவர்கள்கூடியிருந்தசமயத்தில்; இவர்க்கியானடியேனாக=இவ்வடியார்களுக்குயான் அடியவனாக; பண்ணுநாளெந்நாளென்று=செய்யுங்காலம் எக்காலமென்று தம் உளத்துக்கருதி; பரமர்தாள் பரவச்சென்றார்=சிவபிரான் திருவடிகளை வணங்கப்போயினார்.—எ-று. (கஅகூ)

விண்ணவர்கள் சிவபிரானுக்கு அடியராயினும் நம்பியாரூரர் அடைதற்குரிய அகப்பாட்டடியரல்லராதலில் விண்ணவரொழிய என்றார்.

அடியவர்க் கடியனாவே னென்னுமா தரவுகூரக்
கொடிநெடுங் கொற்றவாயில் பணிந்துகை குவித்துப்புக்கார்
கடிகொள்பூங் கொன்றைவேய்ந்தா ரவர்க்கெதிர் காணக்காட்டும்
படியெதிர் தோன்றிநிற்கப் பாதங்கள் பணிந்துபூண்டு.

(இ-ள்.) அடியவர்க்கடியனாவே னென்னுமாதரவுகூர = அடியவர்களுக்கு யான் அடியேனாவேனென்னும் அன்புமிக; கொடிநெடுங்கொற்றவாயில்

பணிந்துகைகுவித்துப்புக்கார் = வெற்றியினையுடைத்தாகிய கொடிகள் கட்டிய நீண்ட திருவாயிலைவணங்கிக் கைகுவித்து உள்ளே புகுந்தருளினார்; கடிகொள் பூங்கொன்றைவேய்ந்தார் = வாசனையுடைத்தாகிய கொன்றைப்பூமாலையைத் தரித்த புற்றிடங்கொண்டார்; அவர்க்கெதிர்காணக்காட்டும்படி = தன்னை நம்பியாரூரருக்கு எதிரில் காணுதற்குக் காரணமாகக்காட்டும்படி; எதிர்தோன்றிநிற்க = எதிராகத்தோன்றித் தரிசனங்கொடுக்க; பாதங்கள்பணிந்துபூண்டு = அவரது திருவடிகளைவணங்கிச் சிரசின்மேல்சூடிக்கொண்டு.—எ-று. (கககo)

வேறு.

மன்பெ ருந்திரு மாமறை வண்டுசூ
ழன்பர் சிந்தை யலர்ந்த செந்தாமரை
நன்பெ ரும்பர மானந்த நன்மது
என்ற ரத்து மளித்தெதிர் நின்றன.

(இ-ள்.) மன்பெருந்திருமாமறைவண்டுசூழ் = நிலைபெற்ற பெருமையாகிய வேதங்களென்னும் வண்டுகள்சூழ்ந்த; அன்பர்சிந்தையலர்ந்தசெந்தாமரை = அடியார்களுடைய இதயதாமரைக்கண் (ஊறும்); நன்பெரும்பரமானந்தநன்மது = நல்ல பெருமையினையுடைத்தாகிய பரமானந்தமென்னுந் தேனை; என்றரத்துமளித்தெதிர்நின்றன = சிறியேனளவுக்குங் கொடுத்து வெளிப்பட்டுநின்றன. எ—று. வண்டு சூழ்மதுவென இயையும். (கககக)

இதயதாமரைக்கண் பரமானந்தமது அதன் தன்மமாயூற்றெடுத்து நிற்குமென்பது தோன்றச் செந்தாமரை நன்மதுவென்றும், அவ்வானந்த தாரதம்மியத்தை மனுடானந்தம் தேவானந்தமாய்வகுத்து அவ்வானந்தங்கள் பரமானந்த இலேசமென மறைகூறுமாதலின் மாமறைவண்டுசூழ்மது என்றுங் கூறினர். ஆனந்தம் எல்லாவிடங்களினும் நிறைந்தவின்பம். மன்பெருந்திருமாமறை வண்டுசூழ்ந்தென்று பாடமோதி சூழ்ந்தலர்ந்த திருவடியாகிய தாமரை பரமானந்த மதுவையளித்து நின்றனவென்று முடித்துக் கூறுவாருமுளர்.

ஞால முய்ய நடமன்று ளாடின
கால னாருயிர் மாளக் கறுத்தன
மாலை தாழ்குழன் மாமலை யாள்செங்கை
சீல மாக வருடச் சிவந்தன.

(இ-ள்.) ஞாலமுய்ய நடமன்றுளாடின = உலகத்தார் பிழைக்கும்படி கனகசபையின்கண் ஆனந்த நிருத்தத்தைச்செய்தருளின; காலனாருயிர் மாளக் கறுத்தன = யமனுடைய உயிர் உடலினின்றும் நீங்கும்படி அவனைக் கோபித்தன; மாலைதாழ்குழன் மாமலையாள் = மாலையையணிந்த தாழ்ந்த கூந்தலினையுடைய உமாதேவியார்; செங்கைசீலமாகவருடச்சிவந்தன = தம்முடைய சிவந்த திருக்கரங்களால் மிருதுவாக நீவ அதனாற் சிவப்படைந்தன.—எ-று. (ககஉ)

கறுப்பு = கோபம் "கறுப்புஞ் சிவப்பும் வெகுளிப்பொருள" என்றார் தொல்காப்பியனாருமென்க.

நீதி மாதவர் நெஞ்சிற் பொலிந்தன
வேதி யாதவர் தம்மை வேதிப்பன
சோதி யாயெழுஞ் சோதியுட் சோதிய
ஆதி மாலயன் காணு வளவின.

(இ-ள்.) நீதிமாதவர் நெஞ்சிற்பொலிந்தன = (தாம்நிற்கும் அறநெறியில் நின்றும்) தவறாத பெருமையாகிய தபோதனர்களது இதயத்தில் எப்பொழுதும் பிரகாசித்திருக்கின்றன; வேதியாதவர்தம்மைவேதிப்பன = தம்மைத் தியானஞ் செய்யாத அபக்குவர்களைப் பிறவித்துன்பத்தில் வருந்தச்செய்வன; சோதியாயெழுஞ் சோதியுட்சோதிய = அந்தரங்கப்பிரகாசமாய் எழாநின்ற விந்துச்சோதிக்கு உட்சோதியாய் விளங்குவன; ஆதிமாலயன் காணுவளவின = ஆதியாகியதிருமால்பிரமன் என்னும் இருவரும் காணக்கூடாத எல்லையையுடையன.—எ-று.

வேதி = உணர்வோன். வேதியாதவர் = உணராதவர். அவரை வேதித்தலாவது:—ஓர்நகரியைக்காப்பான் பாடி காவலிட்டாற்போல அவர்க்கே சுதந்தரங் கொடுத்து அவர்செய்யும் புண்ணியபாவங்களைத் தன்னதாக்காது அவரதாக்கிப் பிறவித்துன்பத்தில் அழுத்தல். பாடிகாவலாவது:—கள்வனது களவறிந்த ஊர் காவலன் அவனையே அக்களவிற்குப் பாதுகாப்பாகவைத்துக் களவுநடந்துழி அவனையேதண்டித்தல் "கோடிகாவனைக்கூறாத நாளெல்லாம் பாடிகாவலுட் பட்டுக்கழிவரே" என்னுந் திருநாவுக்கரசுநாயனார் தேவாரத்தானுமுணர்க. திருமால்பிரமன் என்னு மிருவரும் இயற்றுதற் கர்த்தாக்களாதலின் ஆதிமாலயனென்றார். ஆதிமாலயன் என்புழி முற்காலத்துத் திருமால்பிரமனென்னு மிருவருங் காணு வென்றுரைத்தலுமொன்று. (கசுரு)

வேத வாரண மேற்கொண் டிருந்தன
பேதை யேன்செய் பிழைபொறுத் தாண்டன
ஏத மானவை தீர்க்க விசைந்தன
பூத நாதநின் புண்டரி கப்பதம்.

(இ-ள்.) வேதவாரண மேற்கொண்டிருந்தன = வேதங்களாகிய குதிரைகளின் மேலாகவிருந்தன; பேதையேன்செய்பிழை பொறுத்தாண்டன = அடியேன்செய்த குற்றங்களைப் பொறுத்து ஆட்கொண்டன; ஏதமானவை தீர்க்கவிசைந்தன = அடியார்களது துன்பத்தைத் தீர்க்கும்படி எந்நாளும் சம்மதமுடையன; பூதநாதநின் புண்டரிகப்பதம் = பூதகணங்கட்கு முதல்வரே தேவரீரது செந்தாமரைமலர்போலுந் திருவடிகள்.—எ-று. (கசுசு)

இவ்வெழுவாய் தனித்தனி "மன்பெருந்திருமாமறை" என்னுஞ் செய்யுளளவும் மேற்சென்றியைந்து நின்றது. பேதையேன்செய்பிழை பொறுத்தென்றது:—நாயனார் செயலெல்லாம் சிவபிரான் தன்செயலாகக்கொண்டு நின்றமை குறித்தது. ஏதமானவை தீர்க்கவிசைந்தன என்றதனால் அடியார்துயரத்தை அவர்க்குக் களைகணாய் நின்று நீக்குமுறைமை குறித்துநின்றது. பூதங்கள் என்றது தாருகாவனத்தில் முனிவர்கள்செய்த ஆபிசாரவேள்வியில் உதித்த மந்திர

வடிவங்களான கணங்களை. இருளினாற் குவிந்து கதிர்வரவால் மலருங்கமலம் போல் அஞ்ஞானவிருளாற் குவிந்து திருவருளுதயத்தால் விகசித்தலிற் புண்டரிகப்பதமென்றார்.

வேறு.

இன்னவா றேத்துநம்பிக் கேறுசே வகனுர்தாமும்
அந்நிலை யவர்தாம்வேண்டு மதனையே யருளவேண்டி
மன்னுசீ ரடியார்தங்கள் வழித்தொண்டை யுணரநல்கிப்
பின்னையு மவர்கடங்கள் பெருமையை யருளிச்செய்வார்.

(இ-ள்.) இன்னவாறேத்து நம்பிக்கு=இவ்விதமாகத் துதிக்கும் நம்பியாரூருக்கு; ஏறுசேவகனுர்தாமும்=இடபத்தை யூர்ந்துசெல்லும் முதல்வராகிய சிவபிரானும்; அந்நிலையவர்தாம்வேண்டு மதனையேயருளவேண்டி = அப்பொழுது அவர் விரும்பிய அடியார்க்கடியராந் தன்மையை அருள்செய்யக்கருதி; மன்னுசீரடியார்தங்கள் வழித்தொண்டை யுணரநல்கி=நிலைபெற்ற சிறப்பினையுடைய அடியார்களது வழிவழியாகவரும் தொண்டை அவர் உணரும்படிசெய்து; பின்னையுமவர்கடங்கள் பெருமையையருளிச்செய்வார் = பின்னும் அவர்களுடைய மகிமையையும் அருளிச்செய்வாராயினர்.—எ-று. (கசுரு)

வழித்தொண்டாவது:—அடியார்பாரம்பரியமாய்த் தொன்றுதொட்டுவருவது.

பெருமையாற் றம்மையொப்பார் பேணலா லெம்மைப்பெற்றார்
ஒருமையா லுலகைவெல்வா ரூனமே லொன்றுமில்லார்
அருமையா நிலையினின்றா ரன்பினு லின்பமார்வார்
இருமையுங் கடந்துநின்றா ரிவரைநீ யடைவாயென்று

(இ-ள்.) பெருமையாற்றம்மையொப்பார்=இவர் பெருமையை ஒப்பிடுமிடத்துத் தமக்குத் தாமே யொப்பானவர்; பேணலாலெம்மைப்பெற்றார்=தொண்டுபூண்டொழுகும் குணத்தால் எம்மை யடைந்தவர்கள்; ஒருமையாலுலகை வெல்வார்=பத்தியின் ஒருமைப்பாட்டால் உலகத்தாரை வெல்பவர்; ஊனமேலொன்றுமில்லார்=தமக்கு மேல்வருங் குறைவொன்றுமில்லாதவர்கள்; அருமையாநிலையினின்றார்=யாவரும் செய்தற்கரிய நிலைமையில் நின்றவர்கள்; அன்பினுலின்பமார்வார்=அன்புகாரணமாக இன்பத்தை யனுபவிக்கின்றவர்கள்; இருமையுங்கடந்துநின்றார்=இம்மை மறுமையென்னும் இவ்விரண்டின்பங்களையுங் கடந்து நின்றவர்கள்; இவரைநீயடைவாயென்று=இத்தன்மையரை நீ அடைவாயாக வென்றருளி.—எ-று. (கசுசு)

இதனால் இம்மை மறுமை இன்பங்களைவெறுத்து உலகியலைக்கடந்த பத்திஞானங்களையுடைய மெய்யடியாருக்கு நீ யடிமையாவாயென்று அருளிச்செய்தவாறுணர்க.

நாதனு ரருளிச்செய்ய நம்பியா ரூரர்நானிங்
கேதந்தீர் நெறியைப்பெற்றே னென்றெதிர் வணங்கிப்போற்ற
நீதியா லவர்கடம்மைப் பணிந்துநீ நிறைசொன்மாலை
கோதிலா வாய்மையாலே பாடென வண்ணல்கூற.

(இ-ள்.) நாதனாருளிச்செய்ய = புற்றிடங்கொண்டார் இவ்வாறருளிச்செய்ய; நம்பியாரூரர் = சுந்தரமூர்த்திநாயனார்; நானிங்கேதந்தீர் நெறியைப்பெற்றேனென்று = அடியேனிவ்விடத்து குற்றமற்ற நன்னெறியைப் பெற்றுக்கொண்டேனென்று; எதிர்வணங்கிப்போற்ற = அப்பிரானாரது திருமுன் வணங்கித் துதிக்க; நீதியாலவர்கடம்மைப் பணிந்து = முறைமையால் அவ்வடியார்களைவணங்கி; நிறைசொன்மாலை = பொருள்நிறைந்த பாமாலையாய்; கோதிலாவாய்மையாலே பாடென = குற்றமற்ற மெய்ம்மைக்குணத்தோடு பாடுவாயாக என்று; அண்ணல்கூற = புற்றிடங்கொண்டார் அருளிச்செய்ய.—எ-று. (கசுஎ)

தன்னையா ளுடையநாதன் றானருள் செய்யக்கேட்டுச்
சென்னியால் வணங்கிநின்ற திருமுனைப் பாடிநாடர்
இன்னவா றின்னபண்பென் றேத்துகே னதற்கியானார்
பன்னுபா மாலைபாடும் பரிசெனக் கருள்செய்யென்ன.

(இ-ள்.) தன்னையாளுடையநாதனருள்செய்யக்கேட்டு = தம்மையாளாகவுடைய சிவபிரான் இவ்வாறருளிச்செய்ய அதைக்கேட்டு; சென்னியால்வணங்கிநின்ற திருமுனைப்பாடிநாடர் = அவர் திருவடிகளில் சிரசால் வணங்கிநின்ற சுந்தரமூர்த்திநாயனார்; இன்னவாறின்னபண்பென் றேத்துகேன் = அடியேன் அவ்வடியாரியல்பு இவ்வித சரிதத்தையுடையது இவ்வித பத்தியையுடையதென்று எவ்வாறு துதிப்பேன்; அதற்கியானார் = அவ்வாறு துதித்தற்கு அடியேன் யார் (அதனால்); பன்னுபாமாலைபாடும் பரிசெனக்கருள்செய்யென்ன = அவர் புகழைச் சொல்லுதற்குரிய திருப்பதிகத்தைப் பாடும் வகையை அடியேனுக்குக் கட்டளையிட்டருள்வீரென்று கேட்க.—எ-று. தான்-அசை. (கசுஅ)

வேறு.

தொல்லைமால் வரைபயந்த தையலாடன் றிருப்பாகன்
அல்லறீர்ந் துலகுய்ய மறையளித்த திருவாக்காற்
றில்லைவா ழந்தணர்த மடியார்க்கு மடியேனென்
றெல்லையில் வண்புகழாரை யெடுத்திசைப்பா மொழியென்றான்.

(இ-ள்.) தொல்லைமால்வரைபயந்த தையலாடன்றிருப்பாகன் = பழமையான பெருமையினையுடைத்தாகிய இமயமலை யரையன்பெற்ற உமாதேவியாரைப் பாகத்திலுடைய சிவபிரான்; அல்லறீர்ந்துலகுய்ய = பிறவித்துயரினின்றும்நீங்கி அதனால் உலகத்தார் கதியடைதற்கேதுவாய்; மறையளித்த திருவாக்கால் = வேதங்களையருளிச்செய்த திருவாக்கினால்; தில்லைவாழந்தணர்த மடியார்க்குமடியேனென்றெடுத்து = தில்லைவாழந்தணர்த மடியார்க்குமடியேனென்றெடுத்து; எல்லையில்வண்புகழாரை = அளவுபடாத பெரியபுகழையுடைய அடியார்களை; இசைப்பாமொழியென்றான் = இசையோடுகூடிய பதிகத்தைப் பாடென்று கட்டளையிட்டருளினார்.—எ-று. (கசுகூ)

உலகுய்ய அடியார்க்கடியேனென்றெடுத்து மொழியென்றாரெனவினையும். உலகியல்கடந்த பத்திஞானங்களையுடைய இவ்வடியார் சரிதம் உலகத்தார்க்

1 நம்பியாரூரர்
2 புற்றிடங்கொண்டார்

நம்பியாரூரர் தேவாசிரியமண்டபத்திற் கூடியிருந்த அடியார்மீது பதிகம்பாடத் திருவுளங்கொண்டபோது "தில்லைவாழந்தணரென" முதலடியைப் புற்றிடங்கொண்டாரருளியது.

குப் பிறவித்துயர்தீர்த்துக் கதியடைவித்தற்குக் காரணமாதலில் உலகுய்ய என்ருர். முன்னாளில் மறையை அருளிச்செய்து அதற்கு உபபிருங்கணமாகப் புராணங்களை அருளிச்செய்ததுபோல் இச்சரிதமும் அம்மறைக்கு உபபிருங்கணமாகத் தமிழில் அடியெடுத்துக்கொடுத்தாரென்னுங் கருத்தால் மறையளித்த திருவாக்கால் எடுத்தென்ருர். இந்நான்குங் குளகம்.

மன்னுசீர் வயலாரூர் மன்னவரை வன்றொண்டர்
சென்னியுற வடிவணங்கித் திருவருண்மேற் கொள்பொழுதின்
முன்னமா லயனறியா முதல்வர்தா மெழுந்தருள
அந்நிலைகண் டடியவர்பாற் சார்வதனுக் கணைகின்ருர்.

(இ-ள்.) மன்னுசீர்வயலாரூர் மன்னவரை=நிலைபெற்ற சிறப்பினையுடைய வயல்சூழ்ந்த திருவாரூரின்கண் வீற்றிருந்தருளும் புற்றிடங்கொண்டாரை; வன்றொண்டர் சென்னியுற வடிவணங்கி = சுந்தரமூர்த்திநாயனர் சிரசுறும்படி திருவடிகளில்வணங்கி; திருவருள்மேற்கொள்பொழுதில் = அவர் திருவருளை மேற்கொண்டிருக்குஞ்சமயத்தில்; முன்னமாலயனறியா முதல்வர்தாமெழுந்தருள=முன்னாளில் திருமால்பிரமன் என்னுமிருவரும் அறியாமல் நின்ற சிவபிரானர் தாம் மறைந்தருள; அந்நிலைகண்டடியவர்பாற் சார்வதனுக்கணைகின்ருர் = அவ்வாறு மறைந்தருளிய நிலைமையைக்கண்டு தேவாசிரியனிடத்து வீற்றிருக்கும் அடியார்களைச் சாரும்படி செல்கின்ருராயினர்.—எ-று. (உ00)

மேற்கொண்டிருத்தல்=அத்திருவருளின் வழியாய் நிற்றல். அடியவர்பாற் சார்வதனுக்கு என இரண்டாம்வேற்றுமைப் பொருட்கண் ஏழாவது வந்தது.

தூரத்தே திருக்கூட்டம் பலமுறையாற் ருெழுதன்பு
சேரத்தாழ்ந் தெழுந்தருகு சென்றெய்தி நின்றழியா
விரத்தா ரெல்லார்க்குந் தனித்தனிவே றடியேனென்
ருர்வத்தாற் றிருத்தொண்டத் தொகைப்பதிக மருள்செய்வார்.

(இ-ள்.) தூரத்தேதிருக்கூட்டம் பலமுறையாற்ருெழுது=(அவர்) அவர்கள் திருவுரு தமக்குப் புலமாக நன்கு தோன்றுந் தூரத்திலேயே அத்திருக்கூட்டத்தைப் பலதரம்வணங்கி; அன்புசேரத் தாழ்ந்தெழுந்து=அன்புமிக நிலமுறச் சாட்டாங்கமாகப் பணிந்தெழுந்து; அருகுசென்றெய்தி நின்று = அவரருகிற் போய்நின்று; அழியாவிரத்தாரெல்லார்க்குந் தனித்தனிவேறடியேனென்று = அழியாத பத்திவலியையுடைய அடியார்களுக்கெல்லாந் தனித்தனியே ஒவ்வொருவருக்கும் வேருக அடியேனென்று; ஆர்வத்தாற்றிருத்தொண்டத் தொகைப்பதிகமருள்செய்வார்=பெருவிருப்போடு திருத்தொண்டத்தொகை என்னுந் திருப்பதிகத்தை அருளிச்செய்வாராயினர்.—எ-று. (உ0க)

அவரோடு தாமொருபொருளாய் மதிக்கப்பெருச் சிறியேனென்னுங் கருத்துடையாரென்பது தோன்றத் தூரத்தேதொழுது என்ருர். அழியாவிரம் = எக்காலத்துங் கலங்காத ஓரியல்பானபத்தி.

தம்பெருமான் கொடுத்தமொழி முதலாகத் தமிழ்மாலைச்
செம்பொருளாற் றிருத்தொண்டத் தொகையான திருப்பதிகம்
உம்பர்பிரான் றானருளு முணர்வுபெற வுலகேத்த
எம்பெருமான் வன்றொண்டர் பாடியவ ரெதிர்பணிந்தார்.

(இ-ள்.) தம்பெருமான் கொடுத்தமொழிமுதலாக = தமது பிரானாகிய புற்றிடங்கொண்டார் அடியெடுத்துக்கொடுத்த "தில்லைவாழந்தணர்த மடியார்க் குமடியேன்" என்னுந் தொடர்மொழியை முதலாகவைத்து; செம்பொருளாற் றிருத்தொண்டத் தொகையான தமிழ்மாலைத் திருப்பதிகம்=செப்பமான பொருளோடு திருத்தொண்டத்தொகையென்னுந் தமிழ்மாலையாகிய திருப்பதிகத்தை; உம்பர்பிரான்றானருளு முணர்வுபெறவுலகேத்த=சிவபிரான் அடியவர் பெருமையைத் தமக்கருளிய உணர்வுண்டாக உலகத்தார் துதிக்க; எம்பெருமான்வன்றொண்டர் பாடியவரெதிர்பணிந்தார்=எமது பிரானாகிய நம்பியாரூரர்பாடி அவ்வடியாரெதிரேவணங்கியருளினார்.—எ-று. (உ0உ)

திருத்தொண்டத்தொகை - பண் - கொல்லிக்கௌவாணம்,

திருச்சிற்றம்பலம்.

தில்லைவா ழந்தணர்த மடியார்க்கு மடியேன்
றிருநீல கண்டத்துக் குயவனார்க் கடியே
னில்லையே யென்னாத வியற்பகைக்கு மடியே
னிளையான்றன் குடிமாற னடியார்க்கு மடியேன்
வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருளுக் கடியேன்
விரிபொழில்சூழ் குன்றையார் விறன்மிண்டர்க் கடியே
னல்லிமென் முல்லையந்தா ரமர்நீதிக் கடியே
னாரூர னாரூரி லம்மானுக் காளே. (க)

இலைமலிந்த வேனம்பி யெறிபத்தர்க் கடியே
னேனாதி நாதன்ற னடியார்க்கு மடியேன்
கலைமலிந்த சீர்நம்பி கண்ணப்பர்க் கடியேன்
கடவூரிற் கலயன்ற னடியார்க்கு மடியேன்
மலைமலிந்த தோள்வள்ளன் மானக்கஞ் சாற
னெஞ்சாத வாட்டாய னடியார்க்கு மடியே
னலைமலிந்த புனன்மங்கை யானயனார்க் கடியே
னாரூர னாரூரி லம்மானுக் காளே. (உ)

மும்மையா லுலகாண்ட மூர்த்திக்கு மடியேன்
முருகனுக்கு முருத்திர பசுபதிக்கு மடியேன்
செம்மையே திருநாளைப் போவார்க்கு மடியேன்

திருக்குறிப்புத் தொண்டர்தம் மடியார்க்கு மடியேன்
மெய்ம்மையே திருமேனி வழிபடா நிற்க
வெகுண்டெழுந்த தாதையை மழுவினா லெறிந்த
வெம்மையா னடிச்சண்டிப் பெருமானுக் கடியே
னாரூர னாரூரி லம்மானுக் காளே (ங)

திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட
திருநாவுக் கரையன்ற னடியார்க்கு மடியேன்
பெருநம்பி குலச்சிறைத னடியார்க்கு மடியேன்
பெருமிழலைக் குறும்பர்க்கும் பேயார்க்கு மடியே
னொருநம்பி யப்பூதி யடியார்க்கு மடியே
னொலிபுனல்சூழ் சாத்தமங்கை நீலநக்கர்க் கடியே
னருநம்பி நமிநந்தி யடியார்க்கு மடியே
னாரூர னாரூரி லம்மானுக் காளே. (ச)

வம்பறா வரிவண்டு மணநாற மலரு
மதுமலர்நற் கொன்றையா னடியலாற் பேணா
வெம்பிரான் சம்பந்த னடியார்க்கு மடியே
னேயர்கோன் கலிக்காம னடியார்க்கு மடியே
னம்பிரான் திருமூல னடியார்க்கு மடியே
னாட்டமிகு தண்டிக்கு மூர்க்கர்க்கு மடியே
னம்பரான் சோமாசி மாறனுக்கு மடியே
னாரூர னாரூரி லம்மானுக் காளே. (ரு)

வார்கொண்ட வனமுலையா ளுமைபங்கன் கழலே
மறவாது கல்லெறிந்த சாக்கியர்க்கு மடியேன்
சீர்கொண்ட புகழ்வள்ளல் சிறப்புலிக்கு மடியேன்
செங்காட்டங் குடிமேய சிறுத்தொண்டர்க் கடியேன்
கார்கொண்ட கொடைக்கழறிற் றறிவார்க்கு மடியேன்
கடற்காழிக் கணநாத னடியார்க்கு மடியே
னார்கொண்ட வேற்கூற்றன் களந்தைக்கோ னடியே
னாரூர னாரூரி லம்மானுக் காளே. (சா)

பொய்யடிமை யில்லாத புலவர்க்கு மடியேன்
பொழிற்கருவூர்த் துஞ்சிய புகழ்ச்சோழற் கடியேன்
மெய்யடியார் நரசிங்க முனையரையற் கடியேன்
விரிதிரைசூழ் கடனாகை யதிபத்தர்க் கடியேன்
கைதடிந்த வரிசிலையான் கலிக்கம்பன் கலியன்

கழற்சத்தி வரிஞ்சையர்கோ னடியார்க்கு மடியே
னேயடிகள் காடவர்கோ னடியார்க்கு மடியே
னாரூர னாரூரிலம்மானுக் காளே. (எ)

கறைக்கண்டன் கழலடியே காப்புக்கொண் டிருந்த
கணம்புல்ல நம்பிக்குங் காரிக்கு மடியே
னிறைக்கொண்ட சிந்தையா னெல்வேலி வென்ற
நின்றசீர் நெடுமாற னடியார்க்கு மடியேன்
றுறைக்கொண்ட செம்பவள மிருள்கற்றுஞ் சோதித்
தொன்மயிலை வாயிலா னடியார்க்கு மடியே
னறைக்கொண்ட வேனம்பி முனையடுவார்க் கடியே
னாரூர னாரூரி லம்மானுக் காளே. (அ)

கடல்சூழ்ந்த வுலகெலாங் காக்கின்ற பெருமான்
காடவர்கோன் கழற்சிங்க னடியார்க்கு மடியேன்
மடல்சூழ்ந்த தார்நம்பி யிடங்கழிக்குந் தஞ்சை
மன்னவனாஞ் செருத்துணைத னடியார்க்கு மடியேன்
புடைசூழ்ந்த புலியதண்மே லரவாட வாடி
பொன்னடிக்கே மனம்வைத்த புகழ்த்துணைக்கு மடியே
னடல்சூழ்ந்த வேனம்பி கோட்புலிக்கு மடியே
னாரூர னாரூரி லம்மானுக் காளே. (கூ)

பத்தராய்ப் பணிவார்க ளெல்லார்க்கு மடியேன்
பரமனையே பாடுவா ரடியார்க்கு மடியேன்
சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்க்கு மடியேன்
றிருவாரூர்ப் பிறந்தார்க ளெல்லார்க்கு மடியேன்
முப்போதுந் திருமேனி தீண்டுவார்க் கடியேன்
முழுநீறு பூசிய முனிவர்க்கு மடியே
னப்பாலு மடிச்சார்ந்த வடியார்க்கு மடியே
னாரூர னாரூரி லம்மானுக் காளே. (க0)

மன்னியசீர் மறைநாவ னின்றவூர்ப் பூசல்
வரிவளையாண் மானிக்கு நேசனுக்கு மடியேன்
றென்னவனா யுலகாண்ட செங்கணார்க் கடியேன்
றிருநீல கண்டத்துப் பாணனார்க் கடியே
னென்னவனா மரனடியே யடைந்திட்ட சடைய
னிசைஞானி காதலன் றிருநாவ லூர்க்கோ



தில்லைவாழந்தணர் நடேசப்பெருமானை யருச்சித்தது.

னன்னவனு மாரூர னடிமைகேட் டுவப்பா
ராரூரி லம்மானுக் கன்பரா வாரே. (கச)

திருச்சிற்றம்பலம்.

---

உம்பர்நாயக ரடியார்பே ருவகை தாமெய்த
நம்பியாரூரர் திருக் கூட்டத்தி னடுவணைந்தார்
தம்பிரான்றோழ ரவர்தா மொழிந்த தமிழ்முறையே
யெம்பிரான் றமர்கள் திருத்தொண்டேத்த லுறுகின்றேன்.

(இ-ள்.) உம்பர்நாயகரடியார் பேருவகையெய்த = சிவபிரான் திருவடியார்கள் மிக்க மகிழ்ச்சியடைய (அதனால்) ; நம்பியாரூரர் திருக்கூட்டத்தினடுவணைந்தார் = சுந்தரமூர்த்திநாயனார் அடியார் திருக்கூட்டத்தின் நடுவேதான் அவர்க்கடியராகவிருந்தார் ; தம்பிரான்றோழரவர் தாமொழிந்ததமிழ்முறையே = சிவபிரான் தோழராகிய வன்றொண்டப் பெருமான் மொழிந்த திருத்தொண்டத்தொகையென்னுந் திருப்பதிக முறைப்படி ; எம்பிரான்றமர்கள் திருத்தொண்டேத்தலுறுகின்றேன் = எமது பிரானாது தமர்களாகிய அடியார்களது திருத்தொண்டினியல்பைத் துதிக்கத்தொடங்கினேன்.—எ-று. தாம்-அசை. (உ0ரு)

தமிழ்முறையே என்றதனால் அம்முறையே சருக்கமாகவைத்துக் கூறுகின்றேனென்றாராயிற்று. சுந்தரமூர்த்திநாயனார் சரிதங்கூறிக்கூறினமையின் இது அனுவாதம்.

தடுத்தாட்கொண்டபுராணம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-ருசகூ.

---

முதலாவது

## தில்லைவாழந்தணர்சருக்கம்.

## தில்லைவாழந்தணர்புராணம்.

ஆதியாய் நடுவுமாகி யளவிலா வளவுமாகிச்
சோதியா யுணர்வுமாகித் தோன்றிய பொருளுமாகிப்
பேதியா வேகமாகிப் பெண்ணுமா யாணுமாகிப்
போதியா நிற்குந்தில்லைப் பொதுநடம் போற்றிபோற்றி.

(இ-ள்.) ஆதியாய்நடுவுமாகி = எல்லாப்பொருள்களையும் ஆதிகாலத்தில் சிருட்டிக்கும் சிருட்டிக் கடவுளாயும் அப்பொருள்களையெல்லாங் காக்கும் திதிக் கடவுளாயும் ; அளவிலாவளவுமாகி = இவ்வளவிற்றென வரையறுக்கப்படாத வியாபகமுடைத்தாயும் ; சோதியாய் = சுயஞ்சோதியெனச் சுருதிகூறும் ஞானப்பிரகாசமாயும் ; உணர்வுமாகி = ஆன்மாக்கட்கு உயிர்க்குயிராய்நின்று கருவிகரணங்களைக்கூட்டி யுணர்த்தும் உணர்வாயும் ; தோன்றியபொருளுமாகி = தம்மால்

தோற்றுவித்த சித்துசடமென்னும் இருவகைப்பொருளுள்ளும் விரவி அதுவது வாயும்; பேதியாவேகமாகி = காரியவேறுபாட்டால் அதிட்டேயத்தில் வேறுபடாத ஒன்றாயும்; பெண்ணுமாயாணுமாகி=அப்பேதம்பற்றிவரும் பெண் ஆண் என்னும் வேறுபாடுடைத்தாயும்; போதியாநிற்கும்=சுருதிசிவாகமங்களால் இலக்கணங்கூறப்படும்; தில்லைப்பொதுநடம் போற்றிபோற்றி=சிதாகாசசபையினிடத்துச்செய்யும் ஆனந்த நிருத்தம் துதிக்கப்படுவது துதிக்கப்படுவது.—எ-று. (க)

ஒடுங்கிய சங்காரக்கடவுளிடத்து எல்லாப் பிரபஞ்சமும் உதிக்குமென்னும் முறைபற்றி ஆதியாயென்றார். சங்காரக்கடவுள் சிருட்டிக்கடவுள் திதிக்கடவுள் என்னும் இயல்பேயன்றி உபலக்கணையால் திரோதானக்கடவுள் அனுக்கிரகக்கடவுளுங்கொள்க. சித்தசித்தாகிய காரிய காரணப்பொருள்கள் ஒன்றற்கொன்றுவியாபகமுடைமையின் அவற்றின் மிக்க வியாபகமுடைமைதோன்ற அளவிலாவளவுமாகி என்றார். தன்மூர்த்திகளில் தன்னின் வேறுபாடு தனக்கின்மையின் அதிட்டேயபேதத்தால் வேறுபட்ட இலயபோகாதிகாரங்களாகிய மூர்த்திபேதங்களைக் கடந்து நிற்கும் என்பதுதோன்றப் பேதியாவேகமென்றார். பேதியா ஏகமென்றதனால் நித்திய ஈபுஞ்சகமாய்ச் சுருதிகூறுஞ் சிவப்பிரமப் பொருளென்றாரென்க. சுத்தமாயையை அதிட்டித்துப் பொருட்பிரபஞ்சம் சொற்பிரபஞ்சம் ஆகிய எல்லாவற்றையும் காரியப்படுத்துநிமித்தம் இந்திரதனுப்போல் நீல நிறமும் பொன்னிறமுமாய் இடப்பாகம் ஆதிசத்தியம்சமும் வலப்பாகம் தன் அம்சமுமாக நிற்கும்முறைமை தோன்றப் பெண்ணுமாயாணுமாகி என்றார். அவ்வாறு பிரபஞ்ச காரணரூபமாகிய சிவபரம்பொருள் சத்திசிவான்மகமாய் நிற்றல் பெண் ஆணுயுங் குணகுணிமுதலியவாயும் பீடலிங்கரூபமாயும் நிற்கும் முறைமையாற்காண்க.

கற்பனை கடந்தசோதி கருணையே யுருவமாகி
அற்புதக் கோலநீடி யருமறைச் சிரத்தின்மேலாஞ்
சிற்பர வியோமமாகுந் திருச்சிற்றம் பலத்துணின்று
பொற்புட னடஞ்செய்கின்ற பூங்கழல் போற்றிபோற்றி.

(இ-ள்.) கற்பனைகடந்தசோதி = உபாதிபேதங்களானபொதுவியல்பைக்கடந்த நிருத்தச்சோதியானது; கருணையேயுருவமாகி=தனது காருண்ணியத்தால் திருமேனிகொடுத்து; அற்புதக்கோலநீடி=யாவர்க்கும் அற்புதம்விளைக்கும் திருக்கோலத்தாற்சிறந்து; அருமறைச்சிரத்தின்மேலாம்=அரிய உபநிடத உச்சியின்மேலாய் விளங்கும்; சிற்பரவியோமமாகும்=சித்தென்னும் மேன்மையான சிதாகாச சொரூபமாகிய; திருச்சிற்றம்பலத்துணின்று=ஞானசபையின்கணின்று; பொற்புடனடஞ்செய்கின்ற = அழகோடு ஆனந்தநிருத்தஞ்செய்தருளும்; பூங்கழல்போற்றிபோற்றி = பொலிவினையுடைத்தாகிய குஞ்சிதபாதந் துதிக்கப்படுவது துதிக்கப்படுவது.—எ-று. (உ)

பரைமுதலிய பஞ்சசத்திகளின் பத்திலொருகூற்றில் உதிக்கும் சகளநிட்களரூபமாகிய சதாசிவரூபமும் அதில் ஆயிரத்திலொருகூறாயுதிக்கும் சகளரூபமா

கிய மயேசுரரூபமும் ஆகிய மூர்த்திபேதங்களைக்கடந்து நிற்றலில் கற்பனைகடந்த என்றும், அது தன் கருணையால் வெளிப்பட்டுச் சகளநிருத்தத்தின்பொருட்டு திருமேனிதாங்கி நிற்றலிற் கருணையே யுருவமாகி என்றும், அவ்வுருவம் ஆனந்தத்தை விளைக்கும் அதிசயவுருவாதலின் அற்புதக்கோல நீடி என்றுங் கூறினர். மேல் நிட்களநிருத்தமாயும் ஈண்டு சகளநிருத்தமாயுந் துதிக்கப்பட்டது. போற்றி என்றது சிறிதிடத்து எதிர்கால முன்னிலை வினைமுற்றாய் நீ காத்தல் செய்யாய் என்னும் பொருள்தந்தும், தொழிற்பெயர் முற்றாய்நின்று செயப்பாட்டு வினையாய்ப் போற்றப்படுவது எனப்பொருள்தந்தும் நிற்றலில் ஈண்டுசெயப்பாட்டு வினைமுற்றாய்ப் பொருள் கூறப்பட்டது. சிறிதிடத்து வியங்கோட் பொருளாயும் வருமென்க. வியங்கோட்பொருட்டாய் வருங்கால் பெரும்பான்மை ஈற்றகரங்கெட்டும் சிறுபான்மை கெடாதும் வருமென்க. *

> போற்றிநீ டில்லைவாழந் தணர்திறம் புகலலுற்றே
> னீற்றினா னிறைந்தகோல நிருத்தனுக் குரியதொண்டாம்
> பேற்றினார் பெருமைக்கெல்லை யாயினார் பேணிவாழும்
> ஆற்றினார் பெருகுமன்பா லடித்தவம் புரிந்துவாழ்வார்.

(இ-ள்.) போற்றிநீடில்லைவாழந்தணர் திறம்புகலலுற்றேன் = இவ்வாறு வணங்கிச் செல்வம் மிக்க தில்லைவாழந்தணரது சரிதத்தைச்சொல்லத்தொடங்கினேன்; நீற்றினானிறைந்தகோல நிருத்தனுக்குரிய தொண்டாம்பேற்றினார் = (அவரெத்தன்மையரெனில்) பரவப்பூசிய விபூதியினால் நிறைந்த திருக்கோலத்தையுடைய நடேசப்பிரானுக்குரிய பணிவிடைத்தொழில் செய்தலாகிய பெரும்பேற்றினையுடையவர்கள்; பெருமைக்கெல்லையாயினார் = பெருமையின் வரம்பிற்கு ஒரெல்லையாயிருக்கின்றவர்கள்; பேணிவாழுமாற்றினார் = தாம் பேணிவாழ்தற்குரிய நல்லொழுக்கங்களையுடையவர்கள்; பெருகுமன்பாலடித்தவம் புரிந்துவாழ்வார் = மிக்க அன்பினால் நடேசப்பிரான் திருவடியைச் சிந்திக்கும் மாதவத்தைச் செய்து வாழ்கின்றவர்கள்.—எ-று. (ரு)

எத்தவத்தினுந் திருவடியைச் சிந்தித்தல் பெருந்தவமென்பது தோன்ற அடித்தவம்புரிந்து வாழ்வாரென்றார்.

> பொங்கிய திருவினீடும் பொற்புடைப் பணிகளேந்தி
> மங்கலத் தொழில்கள்செய்து மறைகளாற் றுதித்துமற்றுந்
> தங்களுக் கேற்றபண்பிற் றரும்பணி தலைநின்றுய்த்தே
> யங்கணர் கோயிலுள்ளா வகம்படித் தொண்டுசெய்வார்.

(இ-ள்.) பொங்கியதிருவினீடும் பொற்புடைப்பணிகளேந்தி = மிக்க திருவினையுடைத்தாகிய திருவாபரணம் திருப்பரிவட்டம் முதலிய பணிப்பொருள்க

---

* "எந்தாய்போற்றி யெமைப்புரக்கு மிறைவாபோற்றி யெவ்வுலகுந், தந்தாய்போற்றி யென்பசைக்குந் தாராய்போற்றி தமியனெதிர், வந்தாய் போற்றியுயிர்க்குயிராய் வருவாய்போற்றி தொண்டருறுஞ், சிந்தாகுலந் தீர்த் தருள்புரியுஞ் சிவனேபோற்றி போற்றியவே" இவ்வுபதேசகாண்டச்செய்யுளில் போற்றியென்பது வாழ்த்துப்பொருளாய் அகரவிகுதி கெட்டுங் கெடாதும் வந்தமைகாண்க.

ளைத் தாங்கிக்கொண்டு; மங்கலத்தொழில்கள்செய்து=நடேசப்பிரானை அலங்கரித்தல் ஆராதித்தல் முதலிய மங்கலமான தொழில்களைச்செய்து; மறைகளாற்றுதித்து = இருக்குமுதலிய வேதங்களாற்றுதிசெய்து; மற்றுந்தங்களுக்கேற்ற பண்பிற்றகும்பணிதலைநின்றுய்த்து = இவையல்லாத தங்களுக்குரிய பண்பமைந்த அனுக்கராய்ச்செய்யும் பிறபணிகளையுஞ் செய்துநின்று; அங்கணர்கோயிலுள்ளா வகம்படித்தொண்டுசெய்வார்=நடேசப்பிரானது திருக்கோயிலுள்ளாக இவ்வித அகம்படித் தொண்டைச்செய்கின்றவர்கள்.—எ-று. ஏ-அசை. (௪)

மற்று - பிறிதென்னும் பொருளில்வந்தது. மங்கலத்தொழில் என்றதனால் நித்தியபூசையன்றி விழாச்சிறப்புங்கொள்க. மற்றும்பணியாவன:— சாமரம், கட்டியம், விசிறி, முதலிய பணி.

வருமுறை யெரிமூன்றோம்பி மன்னுயி ரருளான்மல்கத்
தருமமே பொருளாக்கொண்டு தத்துவ நெறியிற்செல்லும்
அருமறை நான்கினோடா றங்கமும் பயின்றுவல்லார்
திருநடம் புரிவார்க்காளாந் திருவினுற் சிறந்தநீரார்.

(இ-ள்.) அருமறை நான்கினோடா றங்கமும் பயின்று=அரிய நான்கு வேதங்களோடு அதன் அங்கம் ஆறையும்பயின்று (அதனால்); வருமுறை யெரிமூன்றோம்பி=வேதத்தில்கூறிய விதிவழியே ஆகவனீயம், காருகபத்தியம், தக்கணாக்கினி, என்னும்மூன்றையும் வளர்த்து; மன்னுயிரருளான்மல்க=உலகத்தின்கண்வாழும் ஆன்மகோடிகள் தங்கருணையினால்வளரும்படி; தருமமேபொருளாக்கொண்டு=கருமமீமாங்சைகூறும்வேள்வியையே பொருளாகக்கொண்டுசெய்து; தத்துவநெறியிற் செல்லும் = அவ்வனுட்டானத்தோடு உத்தரமீமாங்சைகூறும் பிரம உபாசனைநெறியிலும் செல்லுகின்ற; வல்லார்=வல்லவர்கள்; திருநடம்புரிவார்க்காளாந் திருவினுற்சிறந்தநீரார் = நடேசப்பிரானுக்கு அடிமை யென்னும் செல்வத்திற்சிறந்தவர்கள். (௫)

எரிமூன்றில் ஆகவனீயம் நாற்சதுரமாய் வடக்கின்கண் வைக்கப்பட்டு தேவர்கட்கு அவிகொடுத்தற்குரியது. காருகபத்தியம் முச்சதுரமாய் அக்கினியுண்டாக்குவதற்காக அதன்தெற்கில் வைக்கப்படுவது. தக்கணாக்கினி அதன்தெற்கில் பிதிரர்களுக்குப்பலி ஓமம் முதலிய கன்மங்கள் செய்தற்குரியதாய் அமைப்பது. காருகபத்தியம் என்னும் அக்கினியே ஏனைய இரண்டக்கினிக்கும் காரணமாய் நடுவில் வைக்கப்படும். இவை சிரௌதாக்கினிகள். ஈண்டு தருமமென்றது மீமாங்சைமதம்பற்றியாகாதிகளை. தருமமாவது நன்குவிளைத்தற்குக் கருவியாய்ச் சுருதியுள் விதிக்கப்பட்டது என்றும் அது யாகாதிகளென்றும் அந்நூலார் கூறுவர். நித்தியமாகிய அக்கினிகோத்திரத்தையும் கிருது இட்டி முதலிய நைமித்திகங்களையும் தாம் கன்மநாசம் பிறந்து சித்தசுத்தி வழியாய்த் தத்துவநெறியிற் செல்லுதலால் அவ்வேதநெறியைப் பிறர் அநுட்டித்து உய்யுநிமித்தம் அநுட்டித்தனரென்பது தோன்ற மன்னுயிரருளான் மல்கத்தருமமே பொருளாக்கொண்டு என்றார். தத்துவமென்றது சிவபிரானாகிய பரம்பொருளை. நெறியெ

ன்றது வேதாந்த சூத்திரத்தை. அதனையுணர்ந்து பிரமப்பொருளிற் செல்கின்ற வல்லாரென இயையும். இதனால் வேதங்களையோதிக் கருமமீமாங்சையுணர்ந்து அதிற்கூறும் யாகாதிகளைச்செய்தலேயன்றிப் பிரமமீமாங்சையும் உணர்ந்து தத்துவ நெறியிற் றலைப்பட்ட முனிவரெனப் போந்தவாறறிக. அவரவர் வருணத்திற்கேற்ற தன்மங்களை யனுட்டித்தற்குரியர்மக்களாதலில் ஈண்டுமென்னுயிரென்றது மக்கட்டொகுதியை. அருமறை நான்காவன, தைத்திரியமும், பௌடியமும், தலவகாரமும், சாமமும், என மூன்யுகத்திற் பெயர்பெற்றுத் துவாபரயுகத்தில் வியாசராற்பகுத்த இருக்குமுதலிய நான்குமாம்.

மறுவிலா மரபின்வந்து மாறிலா வொழுக்கம்பூண்டார்
அறுதொழி லாட்சியாலே யருங்கலி நீக்கியுள்ளார்
உறுவது நீற்றின்செல்வ மெனக்கொளு முள்ளமிக்கார்
பெறுவது சிவன்பாலன்பாம் பேறெனப் பெருகிவாழ்வார்.

(இ-ள்.) மறுவிலாமரபின்வந்து=குற்றமற்ற மறையவர்குலத்தி லவதரித்து; மாறிலாவொழுக்கம்பூண்டார்=தங்குலவொழுக்கத்திற்கு மாறுபடாத ஒழுக்கத்தையே கொண்டொழுகுகின்றவர்கள்; அறுதொழிலாட்சியாலே=அறுதொழிலைத்தாம் செய்தலினால்; அருங்கலிநீக்கியுள்ளார் = உலகத்தில்வரும் நோய் பசி முதலிய துன்பங்களை நீக்கினவர்கள்; உறுவது நீற்றின்செல்வ மெனக்கொளுமுள்ளமிக்கார்=பயனுயுள்ளது விபூதிச்செல்வமேயென்று கொள்ளும் உள்ளக்கருத்தால் மேன்மையுடையவர்கள்; பெறுவது சிவன்பாலன்பாம் பேறெனப் பெருகிவாழ்வார் = நாம் பெறத்தக்கது சிவபிரானிடத்து அன்பென்னும்பேறே யென்று அதனால் (தம்மனக்காதல்) பெருகிவாழ்கின்றவர்கள்.—எ-று. (சு)

மாறிலாஒழுக்கம்=தங்குலத்து ஆன்றோர் செய்தவாறொழுகும் பாரம்பரிய ஒழுக்கம். அவர்க்குரிய தொழிலுடைமை தோன்ற அறுதொழிலாட்சியால் கலிநீக்கினாரெனக் கூறினாரேனும் "கற்றாங்கெரியோம்பிக் கலியை வாராமே செற்றார்" என்றருளியபடி கலிநீக்குதற்குரியது வேட்டற்றொழிலே என்பது கொள்க. அவர்கலிநீக்குதலாவது:—அவர்கொடுக்கும் அவிகளைத்தேவர்கள் ஏற்று மகிழ்ந்து அதனால் உலகத்திற்கு நோய், பசி, முதலியவாராமற்காத்தல்.

ஞானமே முதலாநான்கு நவையறத் தெரிந்துமிக்கார்
தானமுந் தவமும்வல்லார் தகுதியின் பகுதிசார்ந்தார்
ஊனமே லொன்றுமில்லா ருலகெலாம் புகழ்ந்துபோற்று
மானமும் பொறையுந்தாங்கி மனையறம் புரிந்துவாழ்வார்.

(இ-ள்.) ஞானமுதலாநான்கு நவையறத்தெரிந்துமிக்கார் = சைவாகமங்களிற் கூறும் ஞானம்முதலாகிய நான்கு பாதப்பொருள்களையும் ஐயந்திரிபற ஆராய்ந்து அதனால் மிக்கவர்; தானமுந் தவமும்வல்லார்=வேள்விகளுக்கு அங்கமான தானங்களிலும் அதில் அநுட்டிக்கும் விரதங்களிலும் வல்லவர்; தகுதியின்பகுதி சார்ந்தார்=மேன்மையான பகுதியிற்சார்ந்தவர்கள்; ஊனமேலொன்

றமில்லார் = தம்மைக்குறித்து மேல்வருந்துன்பம் ஒன்றும் இல்லாதவர்கள்; உலகெலாம் புகழ்ந்துபோற்றும் = எல்லாவுலகத்தாரும் புகழ்ந்து துதிக்கும்; மானமும் பொறையுந்தாங்கி = மானத்தையும் பொறையையுந்தாங்கிக்கொண்டு; மனையறம் புரிந்துவாழ்வார் = இல்லறதருமத்தைச் செய்துவாழ்கின்றவர்கள். எ-று.

ஏ-அசை. ஈண்டு ஊனமென்றது தாபத்திரயங்களை. தாபத்திரயங்களாவன:—தன்னைப்பற்றி வருவனவும், பிறவுயிரைப்பற்றி வருவனவும், தெய்வத்தைப்பற்றி வருவனவுமாகிய இவைகள். இத்துயரம் கன்மோபாசனையின் நிறைவினாலும் பிரமோபாசனையின் நிறைவினாலும் ஒரு சிறிதுந் தமக்கிலரென்பது தோன்ற ஊனமேலொன்று மில்லாரென்று கூறினர்.

அறுதொழில் கூறுமிடத்துத் தானத்தைப்பொதுமையாற் கூறி வேள்விக்கு அங்கமாஞ் சிறப்பால் ஈண்டுக் கூறுதலில் தானம் அநுவாதம். தில்லைமூவாயிரவர் வைதிகமறையோரெனக் கூறுதலில் பரார்த்த பூசையைச் சிவதீட்சைபெற்றுச் செய்தலும், சிவதீட்சையின்றிச் செய்தலும் அமையாது. ஏனெனின் வைதிகமறையோர் இயல்பாயேனும் சிவதீட்சையுடையராயேனும் பரார்த்தந் தீண்டற் கருகரல்லரெனச் சைவாகமங் கூறுதலினென்க. அற்றாக, சிவாகம நூலோதலும் பரார்த்தம் பூசைசெய்தலும் எவ்வாறெனின் இவர்கேவலம் சுமார்த்தவைதிக மறையோர்போலாது நிருட்டபாசுபதமென்னுஞ் சித்தாந்தசைவத்தோடொத்த வைதிகசைவமறையோராதலில் வைதிகசாம்பவி தீட்சையால் அத்துவசுத்தி செய்யப்பெற்று திருவைந்தெழுத்தும் உபதேசிக்கப்பெற்றார் ஆதலில் உபநிடதத்தோடு அவிருத்தமாயிருக்கும் பாடியம்போன்ற சைவாகமங்களை யோதுதற் கருகராயினமையானும் புராணங்களில் வைதிகசைவமார்க்கத்தார் முற்காலங்களில் வைதிக விதிப்படி பூசித்ததாகக் கூறப்படும் விதிபற்றிஇவரும் வைதிக சைவமார்க்கத்தராய்த் தொன்றுதொட்டுப் பூசித்து வருதலினானும் மாறுபடுதலின்றென்க. அவ்வாறு புராணங்களேயன்றி ஆளுடையபிள்ளையார்முதல் சமயாசாரியர் வைதிகமுறைப்படி வழிபட்டாரைத் திருப்பதிகங்களில் எடுத்து விதந்துகூறும் முறைபற்றியும் உணர்க. ஈண்டு விரிக்கிற்பெருகும்.

செம்மையாற் றணிந்தசிந்தைத் தெய்வவே தியர்களானார்
மும்மையா யிரவர்தாங்கள் போற்றிட முதல்வனாரை
யிம்மையே பெற்றுவாழ்வா ரினிப்பெறும் பேறொன்றில்லார்
தம்மையே தமக்கொப்பான நிலைமையாற் றலைமைசார்ந்தார்.

(இ-ள்.) செம்மையாற்றணிந்த சிந்தை = (இவ்வாறு எடுத்துக்கூறும்) சிறப்போடு அடங்கிய சிந்தையினையுடைய; தெய்வவேதியர்களானார் = தெய்வத்தன்மை நிறைந்த மறையவர்கள்; மும்மையாயிரவர் = மூவாயிரவர்; தாங்கள் போற்றிட முதல்வனாரை இம்மையேபெற்றுவாழ்வார் = அவர்கள் நடேசப்பிரானைத் துதிக்க இவ்வுலகத்திலேயே பெற்று வாழ்கின்றவர்கள்; இனிப்பெறும் பேறொன்றில்லார் = தமக்கு மேல்பெறும் பேறாகியபொருள் வேறொன்றில்லாதவர்கள்; தம்மையே தமக்கொப்பான நிலைமையாற்றலைமைசார்ந்தார் = ஒப்பிடுங்கால்

தமக்குத்தாமே ஒப்பாகக் கூறும் தலைமையாகிய நிலைமையை அடைந்தவர்கள். (அதனால்).—எ-று. (அ)

கொடுமை முதலிய விருத்திகளின்றி ஒருப்பட்டசாந்த விருத்தியே தமக்கு இயல்பாயுள்ளவரென்பது தோன்றத்தணிந்த சிந்தைவேதியரென்றும். பரமுத்திக்கண் அநுபவிக்கும் நிருத்தானந்தத்தை இம்மைக்கண் தரிசித்து அநுபவிக்கும் சீவன்முத்தர் என்பதுதோன்ற இம்மையே பெற்றவாழ்வாரென்றுங்கூறினர்.

இன்றிவர் பெருமையெம்மா லியம்பலா மெல்லைத்தாமோ
தென்றமிழ்ப் பயனாயுள்ள திருத்தொண்டத் தொகைமுன்பாட
அன்றுவன் றொண்டர்தம்மை யருளிய வாரூரண்ணல்
முன்றிரு வாக்காற்கோத்த முதற்பொரு ளானாரென்றால்.

(இ-ள்.) இன்றிவர் பெருமையெம்மா லியம்பலா மெல்லைத்தாமோ=இப்பொழுது இவரது பெருமை எம்மால் எடுத்துச்சொல்லுதற் கரிய அளவினையுடையதோ; தென்றமிழ்ப் பயனாயுள்ள=அழகிய தமிழ்ப்பொருளாயுள்ள; திருத்தொண்டத்தொகை முன்பாட = திருத்தொண்டத்தொகையை முன்னேபாடும்படிக்கு; அன்றுவன்றொண்டர்தம்மை யருளியவாரூரண்ணல்=அந்நாளில் நம்பியாரூரருக்கு அருளிச்செய்த புற்றிடங்கொண்டார்; முன்றிருவாக்காற் கோத்தமுதற்பொருளானாரென்றால்=முன்னே தமது திருவாக்கால் எடுத்துக்கொடுத்தமுதலடியார்களானாரெனின்.—எ-று. (௯)

அகலிடத் துயர்ந்ததில்லை யந்தண ரகிலமெல்லாம்
புகழ்திரு மறையோரென்றும் பொதுநடம் போற்றிவாழ
நிகழ்திரு நீலகண்டக் குயவனார் நீடுவாய்மை
திகழுமன் புடையதொண்டர் செய்தவங் கூறலுற்றாம்.

(இ-ள்.) அகலிடத்துயர்ந்ததில்லையந்தணர்=நிலவுலகத்தின்கண் மேன்மையடைந்ததில்லைவாழந்தணர்கள்; அகிலமெல்லாம் புகழ்திருமறையோர்= எல்லாவுலகத்தாராலும் புகழத்தக்க திருமறையவர்கள்; என்றும் பொதுநடம் போற்றிவாழ = அவர் எந்நாளும் திருச்சிற்றம்பலத்தின்கண் ஆனந்தநிருத்தந் தரிசித்தவாழ்வுடைய; நிகழ்திரு நீலகண்டக் குயவனார்=நிகழாநின்ற திருநீலகண்டக் குயவனாரென்னும்; நீடுவாய்மைதிகழு மன்புடையதொண்டர்=மிக்க மெய்மைவிளங்கிய அன்பினையுடைய திருத்தொண்டர்; செய்தவங்கூறலுற்றாம்=செய்ததவத்தைச்சொல்லுவாம்.—எ-று. (௰)

இத்தொகையடியார் திருத்தொண்டத்தொகை செய்தகாலத்தேயன்றிப் பிற்காலத்துந் தொண்டுசெய்து வருபவராதலின் என்றும் பொதுநடம்போற்றிவாழ என்றார்.

தில்லைவாழந்தணர்புராணம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் - ௩௹௩.



## திருநீலகண்டநாயனார்புராணம்.

---

வேதியர் தில்லைமூதூர் வேட்கோவர் குலத்துவந்தார்
மாதொரு பாகநோக்கி மன்னுசிற் றம்பலத்தே
யாதியு முடிவுமில்லா வற்புதத் தனிக்கூத்தாடு
நாதனார் கழல்கள்வாழ்த்தி வழிபடு நலத்தின்மிக்கார்.

(இ-ள்.) வேதியர் தில்லைமூதூர் = (மேற்கூறிய சிறப்பினையுடைய) தில்லைமூவாயிர மறையவர்கள் வாழும் பழமையான சிதம்பரத்தின்கண்; வேட்கோவர் குலத்துவந்தார் = குயவர்குலத்தில் அவதரித்தவர்; மாதொருபாகநோக்கி = தமதிடப்பாகத்து நிருத்தந் தரிசித்து நிற்கும் உமாதேவியாரைப் பார்த்துக்கொண்டு; மன்னுசிற்றம்பலத்தே = நிலைபெற்ற சிதம்பரசபையின்கண்ணே; ஆதியுமுடிவுமில்லா = முதலும் ஈறுமில்லாத; அற்புதத் தனிக்கூத்தாடும் = அதிசயம் விளைக்கும் ஒப்பற்ற திருக்கூத்தினை யாடியருளும்; நாதனார்கழல்கள் வாழ்த்தி = நடேசப்பிரானது கழல்களணிந்த திருவடிகளைத் துதித்து; வழிபடுநலத்தின் மிக்கார் = வழிபாடுசெய்யும் பத்தியால் சிறந்தவர்.—எ-று. (௧)

பஞ்சகிருத்திய நிருத்தம் நித்தியமாதலின் ஆதியும் முடிவுமில்லா என்றும், தரிசித்தார்க்குப் பேரானந்தம் விளைத்தலில் அற்புதத் தனிக்கூத்தென்றுங் கூறினார்.

பொய்கடிந் தறத்தின்வாழ்வார் புனற்சடை முடியார்க்கன்பர்
மெய்யடி யார்கட்கான பணிசெயும் விருப்பினின்றார்
வையகம் போற்றுஞ்செய்கை மனையறம் புரிந்து வாழ்வார்
சைவமெய்த் திருவின்சார்வே பொருளெனச் சாருநீரார்.

(இ-ள்.) பொய்கடிந் தறத்தின்வாழ்வார் = பொய்மையினை முற்றக்கடிந்து அதனால் தருமநெறியில் வாழ்கின்றவர்; புனற்சடை முடியார்க்கன்பர் = கங்கைநதி பெருக்கெடுக்குஞ் சடை முடியையுடைய சிவபிரானுக்கு அன்பினையுடையவர்; மெய்யடியார்கட்கானபணிசெயும் விருப்பினின்றார் = மெய்மை நிறைந்த திருத்தொண்டர்க்குரிய தொண்டுகளைச் செய்கின்ற விருப்பத்தையுடையவர்; வையகம்போற்றும் செய்கை = மண்ணுலகத்தாரால் புகழத்தக்க செய்கையினையுடைத்தாகிய; மனையறம்புரிந்துவாழ்வார் = இல்லற தருமத்தைச்செய்து வாழ்கின்றவர்; சைவமெய்த்திருவின்சார்வே பொருளெனச் சாருநீரார் = சைவநெறிக்கண்வாழும் மெய்ம்மையான செல்வத்தை யடைதலே தமக்குரிய பொருளென்று அதனை யடைந்தொழுகும் குணத்தையுடையார்.—எ-று. (௨)

மெய்த்திரு = மெய்மையாகியதிரு. புறநெறிக்கண்வாழும் திருவாலாயபயன் புல்லிதாகப் பெரும்பயன் கொடுத்தலில் மெய்த்திரு என்றார்.

அளவிலா மரபின்வாழ்க்கை மட்கல மமுதுக்காக்கி
வளரிளந் திங்கட்கண்ணி மன்றுளா ரடியார்க்கென்றும்
உளமகிழ் சிறப்பின்மல்க வோடளித் தொழுகுநாளில்
இளமைமீ தூரவின்பத் துறையினி லெளியரானார்.

(இ-ள்.) மரபின்வாழ்க்கை=தமது மரபின் வாழ்க்கைக்குத்தக்க; அளவிலாமட்கல மமுதுக்காக்கி=அளவில்லாத மட்கலங்களை அமுதுசெய்யும் நிமித்தம் அமைத்து; வளரிளந்திங்கட்கண்ணி = வளர்கின்ற இளமையினையுடைய மூன்றாம்பிறையாகிய கொண்டைமாலையைத்தரித்த; மன்றுளாரடியார்க்கு= நடேசப்பிரானது அடியார்களுக்கு; என்று முளமகிழ் சிறப்பின்மல்க=எந்நாளும் அவர்திருவுள்ளம் மகிழ்தற்குக் காரணமான சிறப்பால் விளங்க; ஓடளித்தொழுகுநாளில்=திருவோடுகொடுத்துவரும்நாளில்; இளமைமீதூர = இளமைப்பருவம்மீக்கூர; இன்பத்துறையினிலெளியரானார்=சிற்றின்பநெறியில் விருப்புடையவரானார்.—எ-று. (௫)

அவர்தங்கண் மனைவியாரு மருந்ததிக் கற்பின்மிக்கார்
புவனங்க ளுய்யவையர் பொங்குநஞ் சுண்ணயாஞ்செய்
தவமின்று தடுத்ததென்னத் தகைந்துதான் றரித்ததென்று
சிவனெந்தை கண்டந்தன்னைத் திருநீல கண்டமென்பார்.

(இ-ள்.) அவர்தங்கண்மனைவியாரும் அருந்ததிக் கற்பின்மிக்கார்=அந்நாயனாருடைய திருமனைவியாரும் அருந்ததியை யொத்தகற்பிற் சிறந்தவர்; புவனங்களுய்யவையர்=(அந்நாயனார்)சிவபிரான் உலகமெல்லாம் பிழைக்கும்பொருட்டு; பொங்குநஞ்சுண்ண=(பாற்கடலிலே) உதித்த ஆலாகலத்தை அமுதுசெய்ய; யாஞ்செய்தவமின்று தடுத்ததென்ன=நாமெல்லோருஞ்செய்த தவமானது அங்குநின்று தடுத்தாற்போல; தகைந்துதான் றரித்ததென்று=தகைவுசெய்து தானே அவ்விடத்தைத் தரித்துக்கொண்டதிதுவென்று; சிவனெந்தைகண்டந்தன்னை= எமது முதல்வராகிய சிவபிரானது கண்டத்தை எந்நாளும்; திருநீலகண்டமென்பார்=திருநீலகண்டமென்று சொல்லுவார்.—எ-று (௬)

உம்மை - இறந்தது தழீஇயது.

ஆனதங்கேள்வரங்கோர் பரத்தைபா லணைந்துநண்ண
மானமுன் பொருதுவந்த வூடலான் மனையின் வாழ்க்கை
ஏனைய வெல்லாஞ்செய்தே யுடனுறை விசையாரானார்
தேனலர் கமலப்போதிற் றிருவினு முருவமிக்கார்.

(இ-ள்.) ஆனதங்கேள்வர்=அவ்வாறு எடுத்துக்கூறும் இயல்பினையுடையராகிய தமதுகணவர்; அங்கோர்பரத்தைபா லணைந்துநண்ண=அவ்வூரில் ஒரு விலைமாதை யணைந்து தம்முடையவீட்டிற்குவர; (அதைக்கண்டு)மானமுன்பொருதுவந்த வூடலால்=மானத்தை முன்னிட்டு அதனைப் பொறுக்காமல் தம்மிடத்துதித்த ஊடலினால்; மனையின்வாழ்க்கை ஏனையவெல்லாஞ்செய்து=இல்வா

ழக்கைக்குரிய திருவமுதமைத்தல் முதலிய பிறதொழில்களையெல்லாம் செய்து; உடனுறைவிசையாரானார் = மெய்யுறு புணர்ச்சியொன்றிற்கும் உடன்படாதவராயினார்; தேனலர்கமலப்போதிற் திருவினுமுருவமிக்கார் = தேனோடு மலர்ந்த செந்தாமரை மலரின்கண்வாழும் திருமகளினுஞ்சிறந்த அழகினையுடைய அவர்.—எ-று. (ரு)

கற்புடையார்க்குத் தங்கணவன் பரத்தைபாற்சேறல் மானத்தை விளைத்தலில் அதனால் இவர்க்கு ஊடல் நேர்ந்ததென்பது தோன்ற மானமுன்பொருதுவந்த ஊடல் என்றார். இவ்விரண்டிங்குளகம். என்பாரான கேள்வர் என இயையும்.

மூண்டவப் புலவிதீர்க்க வன்பனார் முன்புசென்று
பூண்டயங் கிளமென்சாயற் பொற்கொடி யனையார்தம்மை
வேண்டுவ விரந்துகூறி மெய்யுற வணையும்போதிற்
றீண்டுவீ ராயினெம்மைத் திருநீல கண்டமென்றார்.

(இ-ள்.) மூண்டவப்புலவிதீர்க்க = மனைவியாருள்ளத்துதித்த ஊடலைத் தீர்க்கும்பொருட்டு; அன்பனார் முன்புசென்று = திருநீலகண்டநாயனார் அவரிடத்திற்போய்; பூண்டயங்கிளமென்சாயற் பொற்கொடியனையார்தம்மை = ஆபரணங்கள் விளங்காநின்ற இளமையான மெல்லிய சாயலையுடைய பொற்கொடிபோலும் அம்மனைவியாரை; வேண்டுவவிரந்துகூறி = அவர் பிணக்குதீர்த்தற்குரிய மொழிகளை இரந்துசொல்லி; மெய்யுறவணையும்போதில் = அவர் திருமேனியைப் பொருந்தத்தழுவும்போது; தீண்டுவீராயினெம்மைத் திருநீலகண்டமென்றார் = அவர் பிணங்கி நீர் எம்மைத் தீண்டினால் திருநீலகண்டமென்று திருவாணை கூறினார்.—எ-று. (சு)

ஆதியார் நீலகண்டத் தளவுதாங் கொண்டவார்வம்
பேதியா வாணைகேட்ட பெரியவர் பெயர்ந்துநீங்கி
ஏதிலார் போலநோக்கி யெம்மையென் றதனான்மற்றை
மாதரார் தமையுமென்றன் மனத்தினுந் தீண்டேனென்றார்.

(இ-ள்.) ஆதியார்நீலகண்டத்தளவு = முதல்வராகிய சிவபிரானது திருநீலகண்டத்தில்; தாங்கொண்டவார்வம்பேதியா = தாம்வைத்த பெருவிருப்பினின்றும் ஒரு சிறிதும் வேறுபடாத; ஆணைகேட்ட பெரியவர் = அத்திருவாணையைக் கேட்ட திருநீலகண்டநாயனார்; பெயர்ந்துநீங்கி = அவரைத்தீண்டாமல் அங்குநின்றகன்று; ஏதிலார்போலநோக்கி = அயலார் மனைவிபோல அவரைப்பார்த்து; எம்மையென்றதனால் = எம்மையென்று தன்மைப் பன்மையாகக்கூறியதனால்; மற்றைமாதரார் தமையும் = இவரையேயன்றி வேற்றுமாதர்களையும்; என்றன் மனத்தினுந்தீண்டேனென்றார் = என்காயத்தாலேயன்றி மனத்தாலுந் தொடமாட்டேனெனப் பதிக்கைபண்ணினார்.—எ-று. (எ)

பேதியாத பெரியவரென இயையும். உலகைக்காக்குங் கருணைக்குறியாகிய திருநீலகண்டத்தில் தாம் வைத்த ஆர்வம் பெருவிருப்பாதலில் அதைப் பேதியாமல் மனைவியாரிடத்துத் தாம்வைத்த இணைவிழைச்சுக் காரணமான காதலை




சிவபெருமான் சிவயோகியாய்வந்து திருநீலகண்ட நாயனாரிடம் திருவோடளிக்க அவர் அதைச்சேமித்தது.

1. சிவயோகி.
2. திருநீலகண்ட நாயனார்.
3. திருவோடு.

அத்திருவாணை கேட்டமாத்திரத்து பேதித்தாரென்பது தோன்ற ஆர்வம் பேதியாவாணைகேட்ட பெரியவரென்றார். உம்மை இரண்டும் இறந்தது தழீஇயது. தாங்கொண்ட மாதரார்விழைவை ஆர்வம் பேதியாதிலைமையால் பற்றற முற்ற விடுத்தாராதலின் மனத்தினுந்தீண்டேனென்றார்.

கற்புறு மனைவியாருங் கணவனார்க் கானவெல்லாம்
பொற்புற மெய்யுறுமற் பொருந்துவ போற்றிச்செய்தே
இற்புறம் பொழியாரங்க ணிருவரும் வேறுவைகி
யற்புறு புணர்ச்சியின்மை யயலறி யாமைவாழ்ந்தார்.

(இ-ள்.) கற்புறுமனைவியாரும் = அறக்கற்பினையுடைய அவர்மனைவியாரும்; கணவனார்க்கானவெல்லாம் = தங்கணவர்க்கு வேண்டிய பணிவிடைகளையெல்லாம்; பொற்புறமெய்யுறுமற் பொருந்துவபோற்றிச்செய்து = அழகாக அவர் திருமேனியில் தம்முடம்பு தீண்டாமல் செய்தற்குரியனவற்றைப் பேணிச்செய்து; இற்புறம்பொழியார் = தமது இல்லின்புறம்பேசெல்லாதவராய்; அங்கணிருவரும்வேறுவைகி = ஆங்கு அவ்விருவரும் வேறு வேறிருந்து; அற்புறுபுணர்ச்சியின்மை = விழைவுகாரணமாய் வருகின்ற இணைவிழைச்சின்மையை; அயலறியாமைவாழ்ந்தார் = அயலாரறியாதிருக்கும்படி வாழ்ந்திருந்தார்கள்.—எ - று.
ஏ-அன ச. (ஃ)

இளமையின் மிக்குளார்க ளிருவரு மறியநின்ற
அளவில்சீ ராணைபோற்றி யாண்டுகள் பலவுஞ்செல்ல
வளமலி யிளமைநீங்கி வடிவுறு மூப்புவந்து
தளர்வொடு சாய்ந்துமன்பு தம்பிரான் றிறத்துச்சாயார்.

(இ - ள்.) இளமையின்மிக்குளார்களிருவரும் = இளமைப்பருவத்தால் சிறந்துள்ளவர்களாகிய அத்திருநீலகண்ட நாயனாரும் அவர் மனைவியாரும்; அறியநின்றவளவில் சீராணைபோற்றி = (பிறரறியாமல்) தாம் இருவரும் அறியும்படி நின்ற அளவில்லாத சிறப்பினையுடைய திருவாணையைப்பேணி; ஆண்டுகள்பலவுஞ்செல்ல = பலவருடங்களுஞ்செல்ல; வளமலியிளமைநீங்கி = வளம் மிக்க இளமைப்பருவம்போய்; வடிவுறுமூப்புவந்து = உடம்பின்கண் மிக்க முதுமைப்பருவம்வந்து; தளர்வொடுசாய்ந்தும் = தளர்ச்சியோடு சாய்வடைந்தும்; அன்புதம்பிரான்றிறத்துச்சாயார் = தாம் சிவபிரானிடத்தில்வைத்த அன்பினின்றும் நீங்காராயினர்.—எ-று. (கூ)

காமவேட்கையை முற்றத்துறந்த அவர் பருவத்தின் சிறப்புத்தோன்ற இளமையின் மிக்குளார்கள் என்றும், அந்நியமத்தைப் பிறரறியில் வேறுபடுத்துவரென்னுங் கருத்தால் மறைத்துவைத்தனரென்பது தோன்ற இருவருமறிய என்றும், அவ்வாணையின்பெருமைதோன்ற அளவில் சீராணையென்றும், அவர் அன்பின் பெருமைதோன்றச் சாய்ந்தும் அன்பு சாயார் என்றுங்கூறினர். வடிவுறு வளமலி இளமையென்று மாற்றிக்கூறுதலுமொன்று.

இந்நெறி யொழுகுநாளி லெரிதளிர்த் தென்னநீண்ட
மின்னொளிர் சடையோன்றானுந் தொண்டரை விளக்கங்காண
நன்னெறி யிதுவாமென்று ஞாலத்தோர் விரும்பியுய்யும்
அந்நெறி காட்டுமாற்றா லருட்சிவ யோகியாகி.

(இ-ள்.) இந்நெறியொழுகுநாளில்=இவ்வாறு திருவாணைபோற்றி அன்புடையராய் ஒழுகும்நாளில்; எரிதளிர்த்தென்னநீண்ட மின்னொளிர்சடையோனும்=நெருப்பு தளிர் விட்டாற்போலச் சிவந்து நீட்சியுடைத்தாகிய மின்போல் விளங்குஞ் சடையினையுடைய சிவபிரானும்; தொண்டரைவிளக்கங்காண=தமதன்பராகிய திருநீலகண்டநாயனார் மகிமையை யாவரும் அறியும்படிக்கும்; நன்னெறியிதுவாமென்று=இவ்வாறு தன்னிடத்துச் சாயா அன்புடையராயிருத்தலே நன்னெறியாகுமென்று; ஞாலத்தோர்விரும்பியுய்யும் அந்நெறிகாட்டுமாற்றால்=உலகத்தார் விரும்பி உய்தற்குக்காரணமான அவ்வழியைக் காட்டுநிமித்தமாயும்; அருட்சிவயோகியாகி=அருளால் சிவயோகிவடிவமெடுத்து.—எ-று. (கo)

தான் - அசை.

தொண்டர் பெருமையை உலகத்தாருக்கு விளக்கி அந்நெறியை உய்நெறியாக அவர்க்குக்காட்டுதல் சிவபிரான் இயல்பாதலில் அருட்சிவயோகியாகி என்றார்.

வேறு.

கீளொடு கோவணஞ் சாத்திக் கேடிலா
வாள்விடு நீற்றொளி மலர்ந்த மேனிமேற்
றோளொடு மார்பிடைத் துவளு நூலுட
னீளொளி வளர்திரு முண்ட நெற்றியும்.

(இ-ள்.) கீளொடுகோவணஞ்சாத்தி = கீளுடனே கோவணத்தையுந்தரித்து; கேடிலாவாள்விடு நீற்றொளிமலர்ந்தமேனிமேல்=குறையாத ஒளியைவீசுகின்ற திருவெண்ணீற்றின் ஒளிபரப்பிய திருமேனியின்கண்; தோளொடுமார்பிடைத் துவளுநூலுடன்=வலத்தோளோடு சேர்ந்து மார்பில் அசைகின்ற பூணூலுடனே; நீளொளிவளர் திருமுண்ட நெற்றியும்=மிக்க ஒளிவீசுகின்ற திரிபுண்டரந்தீட்டிய நெற்றியும்.—எ-று. (கக)

கீள்=கடிசூத்திரத்திற்குப்பதிலாய் நூலால் செய்யப்பட்டது. ஈண்டு முண்டமென்றது திரிபுண்டர மென்னும் வடமொழிச்சிதைவு.

நெடுஞ்சடை கரந்திட நெறித்த பம்மையும்
விடுங்கதிர் முறுவல்வெண் ணிலவு மேம்பட
இடும்பலிப் பாத்திர மேந்து கையராய்
நடந்துவேட் கோவர்த மனையி னண்ணினார்.

(இ-ள்.) நெடுஞ்சடை கரந்திட நெறித்த பம்மையும் = நெடியசடை மறையும்படி நெறிப்பாய் வளர்ந்திருக்கின்ற பம்மையும்; விடுங்கதிர் முறுவல் வெண்ணிலவு மேம்பட = ஒளிவீசுகின்ற பற்களினின்றுந் தோன்றும் வெள்ளிய

நிலவும் அதிகப்பட; இடும்பலிப் பாத்திரமேந்து கையராய்=பிச்சையிடுதற்குரிய பாத்திரத்தை ஏந்திய வலது திருக்கரமுடையவராய்; நடந்துவேட்கோவர் தம்மனையி னண்ணினார்=எழுந்தருளித் திருநீலகண்டநாயனார் மனையில்வந்தார்.-எ-று. இம்மூன்றுங்குளகம். (கஉ)

நெறித்தபம்பை=சுருண்டு கீழ்விழாமல் மேற்சென்ற தலைப்புறத்துமயிர். முகமலர்ச்சியோடு குறுநகைதோன்ற வருதலில் முறுவல் வெண்ணிலவு மேம்பட என்றார்

நண்ணிய தவச்சிவ யோக நாதரைக்
கண்ணுற நோக்கிய காத லன்பர்தாம்
புண்ணியத் தொண்டரா மென்று போற்றிசெய்
தெண்ணிய வகையினா லெதிர்கொண் டேத்தினார்.

(இ-ள்.) நண்ணிய தவச்சிவ யோகநாதனை = அவ்வாறு எழுந்தருளிய தவத்தினையுடைய சிவயோகியாகிய சிவபிரானை; கண்ணுற நோக்கிய காதலன்பர்=தம்முடைய கண்களால் நன்றாகத்தரிசித்த பேரன்பினையுடைய திருநீலகண்டநாயனார்; புண்ணியத் தொண்டராமென்று போற்றிசெய்து=இவர் புண்ணியவடிவத்தையுடைய ஓர் சிவனடியாரென்று கருதித்துதித்து; எண்ணிய வகையினா லெதிர்கொண்டேத்தினார்=மதிக்கத்தக்க உபசாரங்களோடு எதிர்கொண்டுதுதித்தார்.—எ-று. தாம்-அசை. (கங)

எண்டு வகை உபசாரம், அது முகமன்பலவாக எடுத்துக்கூறுதல். எண்ணிய வுவகையா லென்றும்பாடம்.

பிறைவளர் சடைமுடிப் பிரானைத் தொண்டரென்
றுறையுளி லணைந்து பேருவகை கூர்ந்திட
முறைமையின் வழிபட மொழிந்த பூசைக
ணிறைபெரு விருப்பொடு செய்து நின்றபின்.

(இ-ள்.) பிறைவளர் சடைமுடிப்பிரானை = இளம்பிறை வளர்கின்ற சடைமுடியினை யுடைய சிவபிரானை; தொண்டரென்று = அவரடியாரென்று கருதி; உறையுளி லணைந்து=அவரை அழைத்துக்கொண்டு தம்முடைய வீட்டிற்சென்று; பேருவகை கூர்ந்திட=பெருமகிழ்ச்சிமிக; வழிபடமொழிந்த பூசைகள்=(சிவனடியார்களை) வழிபடும்படி நூல்களில் விதித்த பூசைகளை; முறைமையின் நிறைபெரு விருப்பொடு செய்து நின்றபின்=முறைமையினால் தம்முள்ளத்து நிறைந்த பெருவிருப்போடு செய்து அவர் நின்றபின்பு.—எ-று. (கச)

பூசைகளை முறைமையினாற்செய்து நின்றபின் என இயையும். மொழிந்த பூசைகளாவன:— பாதம் விளக்கி அர்ச்சித்துத் தூபதீபங்கொடுத்து வணங்கல்.

எம்பிரான் யான்செயும் பணியெ தென்றனர்
வம்புலா மலர்ச்சடை வள்ள றொண்டனார்
உம்பர்நா யகனுமிவ் வோடுன்பால் வைத்து
நம்பிநீ தருகநாம் வேண்டும் போதென்று.

(இ-ள்.) எம்பிரான் யான்செயும்பணி யெதென்றனர் = எங்கள் முதல்வரே அடியேன் தேவரீருக்குச்செய்யத்தக்க பணிவிடை யாதென்று வினவினார்; வம்புலா மலர்ச்சடை வள்ளறொண்டனார் = வாசனைகமழும் மலர்களைமுடித்த சடையினையுடைய சிவபிரானது அடியராகிய திருநீலகண்டநாயனார்; உம்பர் நாயகனும்=சிவபிரானாகிய சிவயோகியும்; இவ்வோடுன்பால் வைத்து=இத்திருவோட்டை உன்னிடத்தில் வைத்திருந்து; நம்பிநீதருக நாம் வேண்டும்போதென்று=சிறந்த தொண்டனே நாம் கேட்டபொழுது நீ கொடுப்பாயாக என்று சொல்லி.—எ-று. (கரு)

ஈண்டு நம்பி என்றது ஆணைச்சிறப்பிக்கும் பெயராய்த் தொண்டனென்னும் பொருள்பட வந்தது.

> தன்னையொப் பரியது தலத்துத் தன்னுழைத்
> துன்னிய யாவையுந் தூய்மை செய்வது
> பொன்னினு மணியினும் போற்ற வேண்டுவ
> தின்னதன் மையதிது வாங்கு நீயென.

(இ-ள்.) தன்னையொப்பரியது = (இப்பலிப் பாத்திரம்) ஒப்பிடுங்கால் தனக்குத்தானே ஒப்பானது; தலத்துத் தன்னுழைத் துன்னிய யாவையுந் தூய்மைசெய்வது=இவ்வுலகத்தில் தன்னிடத்திற் சேர்ந்த அன்னங்கறி முதலியவைகளையெல்லாம் பரிசுத்தம் ஆக்குவது(அதனால்); பொன்னினு மணியினும் போற்ற வேண்டுவது=பொன்னைப்பார்க்கிலும் மணிகளைப்பார்க்கிலும் போற்றத்தக்கது; இன்னதன்மையது இதுவாங்குநீயென = இத்தன்மையையுடைய இதனை நீ வாங்குவையென்று கொடுக்க.—எ-று. (கசு)

அடியார்களுக்கு உரியதென வேதாகமங்களில் சிறப்பித்துக்கூறுதலில் தன்னை யொப்பரியதென்றும், தூய்மைகுறைந்த அன்னம் கறியமுது முதலியவற்றை அதிற்செய்யும் மந்திரத்தின் செயற்கையாலாகிய சுத்தியால் பரிசுத்தமாக்குதலில் யாவையுந் தூய்மைசெய்வதென்றும், ஓடுஞ்செம்பொன்னும் ஒப்பாகக்கொண்டார் இதனையோர் பொருளாகக்கொள்ளுதலில் பொன்னினு மணியினும் போற்ற வேண்டுவதென்றுங் கூறினர். யாவையுந் தூய்மைசெய்தலாவது:—அன்னங்கறிமுதலியன பாண்டசேடமாயினும் பழையனவாயினும் அப்பாத்திரத்திற் சேர்ந்தனவேல் நிவேதனத்திற்கருகமாதல்.

> தொல்லைவேட் கோவர்தங் குலத்துட் டோன்றிய
> மல்குசீர்த் தொண்டனார் வணங்கி வாங்கிக்கொண்
> டொல்லையின் மனையிலோர் மருங்கு காப்புறும்
> எல்லையில் வைத்துவந் திறையை யெய்தினார்.

(இ-ள்.) தொல்லைவேட்கோவர் தங்குலத்துட்டோன்றிய=பழமையாகிய குயவர்களது குலத்தில் அவதரித்த; மல்குசீர்த்தொண்டனார்=நிறைந்த புகழினையுடைய திருநீலகண்டநாயனார்; வணங்கிவாங்கிக்கொண்டு=அத்திருவோட்டைத் தொழுது வாங்கிக்கொண்டு; ஒல்லையில் மனையிலோர்மருங்கு=விரை

வாகத் தம்வீட்டில் ஓரிடத்து; காப்புறமெல்லையில் வைத்து வந்திறையையெய்தினார்=காவலான ஓரிடத்தில் பேணிவைத்து வந்து சிவபிரானாகிய சிவயோகியாரையடைந்தார்.—எ-று. இந்நான்குங் குளகம். (கஎ)

வைத்தபின் மறையவ ராகி வந்தரு
ளித்தனார் நீங்கிட நின்ற தொண்டரும்
உய்த்துடன் போய்விடை கொண்டு மீண்டனர்
அத்தர்தா மம்பல மணைய மேவினார்.

(இ-ள்.) வைத்தபின்மறையவராகிவந்தருள்=அப்பாத்திரத்தைச் சேமத்தில் வைத்தபின்பு மறையவர் வேடங்கொண்டு வந்தருளிய; நித்தனார்நீங்கிட=சிவபிரான் எழுந்தருளுங்கால்; நின்றதொண்டரும்=அங்கு நின்ற திருநீலகண்டநாயனாரும்; உய்த்துடன்போய் விடைகொண்டு மீண்டனர்=அவரை முன்போக்கித் தாமும் அவர்பின்னேபோய் அனுமதிபெற்றுக்கொண்டு வீட்டுக்கு மீண்டு வந்தார்; அத்தர்அம்பலமணைய மேவினார்=சிவபிரானுந் திருவம்பலத்தையடைந்தார்.—எ-று. தாம்-அசை. (கஅ)

அடியார்கள் தம்மனைக்குவந்து எழுந்தருளுங்கால் அவருடன் பின்னே சென்று அவரனுமதிபெற்று மீளுதல் ஆன்றோரொழுக்கமாதலின் உய்த்துடன் போய் விடைகொண்டு மீண்டனரென்றார்.

வேறு.

சாலநாள் கழிந்தபின்பு தலைவனார் தாமுன்வைத்த
கோலமா ரோடுதன்னைக் குறியிடத் தகலப்போக்கிச்
சீலமார் கொள்கையென்றுந் திருந்துவேட் கோவர்தம்பால்
வாலிதா நிலைமைகாட்ட முன்புபோன் மனையில்வந்தார்.

(இ-ள்.) சாலநாள் கழிந்தபின்பு=அவ்வோடு கொடுத்துப் பலநாட் சென்றபின்பு; தலைவனார் தாமுன்வைத்த=சிவபிரானார் தாம்முன்னே அவரிடத்துவைத்த; கோலமா ரோடுதன்னை=அழகிய திருவோட்டை; குறியிடத் தகலப்போக்கி=அவர் குறித்துவைத்திருந்த இடத்தினின்றும் மறையச்செய்து; சீலமார் கொள்கையென்றுந் திருந்து வேட்கோவர் தம்பால்=சிறப்பமைந்த பத்தியினால் எந்நாளுந் திருந்திய குணத்தையுடைய திருநீலகண்ட நாயனாரிடத்துள்ள; வாலிதா நிலைமை காட்ட முன்புபோல் மனையில்வந்தார்=தூய்மையாகிய அப்பத்தி நிலைமையைப் பிறர்க்குணர்த்தும்படி முன்போல அவர்மனையில் வந்தருளினார்.—எ-று. (கக)

அவர் எந்நாளும் ஓரியல்பாய்ப் பத்திநெறியில் ஒழுகுவோ ரென்பது தோன்ற என்றுந்திருந்திய என்றும், அப்பத்திகாரணமாய் முனிவராலும் பேதித்தற்கரிய மாதர்வேட்கையை ஒருசிறிதும் இல்லாது பேதித்து நின்ற அவரது அவாவின்மையாகிய தூயகுணத்தின் சிறப்புத்தோன்ற வாலிதா நிலைமை என்

லும், இவ்வரியகுணத்தை யாவர்க்கும் அறிவிக்க என்பது தோன்றக்காட்ட என்றுங்கூறினர்.

வந்தபின் றொண்டனாரு மெதிர்வழி பாடுசெய்து
சிந்தைசெய் தருளிற்றெங்கள் செய்தவ மென்றுநிற்ப
முந்தைநா ளுன்பால்வைத்த மொய்யொளி விளங்குமோடு
தந்துநில் லென்றானெல்லாந் தான்வைத்து வாங்கவல்லான்.

(இ-ள்.) வந்தபின் தொண்டனாரு மெதிர்வழி பாடுசெய்து=அவ்வாறு சிவபிரான் தம்மனைக்கு எழுந்தருளியபின் திருநீலகண்ட நாயனாரும் எதிராகச் சென்று வழிபட்டு; சிந்தைசெய் தருளிற்றெங்கள் செய்தவ மென்று நிற்ப=திருவுளங்கொண்டு இவ்விடத்திற் கெழுந்தருளியது நாங்கள்செய்த தவமென்று சொல்லி நிற்க; முந்தைநா ளுன்பால்வைத்த மொய்யொளி விளங்குமோடு=முன்னாள் உன்னிடத்தில் யான்வைத்த மிக்க ஒளியால் விளங்குகின்ற பாத்திரத்தை; தந்துநில்லென்றான்=எனக்குக்கொடுத்துப் பின்பு நிற்பாயாக என்றருளிச்செய்தார்; எல்லாந்தான் வைத்து வாங்கவல்லான்=எல்லாப் பொருள்களையும் ஆக்கி அழிக்க வல்லமையுடைய முதல்வர்.—எ—று. (௨௦)

என்றவர் விரைந்துகூற விருந்தவ ரேந்தவோடு
சென்றுமுன் கொணர்வான்புக்கார் கண்டிலர் திகைத்துநோக்கி
நின்றவர் தம்மைக்கேட்டார் நேடியுங் காணார்மாயை
யொன்றுமங் கறிந்திலார்தா முரைப்பதொன் றின்றிநின்றார்.

(இ-ள்.) என்றவர்விரைந்துகூற=இவ்வாறு அச்சிவயோகியாகிய சிவபிரான் விரைவாய்ச்சொல்ல; இருந்தவ ரேந்தவோடு=அவர் கொடுத்த அத்திருவோட்டை; சென்றுமுன் கொணர்வான்புக்கார்=முன்னே மனையிற்சென்று கொண்டுவரும்படி புகுந்த திருநீலகண்டநாயனார்; கண்டிலர்திகைத்துநோக்கி=அத்திருவோட்டைக்காணாமல் திகைத்துப்பார்த்து; நின்றவர்தம்மைக்கேட்டார் = அங்குநின்றாரை அத்திருவோட்டை எடுத்தீர்களா என்று வினவி; நேடியுங்காணார் = பிறவிடங்களில் தேடியுங்காணாதவராய்; மாயையொன்றுமங்கறிந்திலார்=சிவபிரான்மறைத்தமாயை ஒன்றையும் அறியாமல்; தாம்உரைப்பதொன்றின்றி நின்றார்=தாம் சிவயோகியாருக்கு உத்தரஞ்சொல்ல ஒன்றுந்தெரியாமல் நின்றார்.—எ-று. (௨௧)

மறையவ னாகிநின்ற மலைமகள் கேள்வன்றானும்
உறையுளிற் புக்குநின்ற வொருபெருந் தொண்டர்கேட்ப
இறையிலிங் கெய்தப்புக்காய் தாழ்த்ததென் னென்னவந்து
கறைமறை மிடற்றினானைக் கைதொழு துரைக்கலுற்றார்.

(இ-ள்.) மறையவனாகிநின்ற=மறையவர்வேடங்கொண்டு எழுந்தருளி நிற்கின்ற; மலைமகள்கேள்வன்றானும்=உமாதேவியார்க்குக் கணவனாகிய சிவபிரானும்; உறையுளிற்புக்குநின்ற=வீட்டிற்புகுந்துவருதற்குத் தாழ்த்துநின்ற; ஒரு

பெருந் தொண்டர்கேட்ப=ஒப்பற்றபெருமையினையுடையஅடியார்கேட்கும்படி; இறையிலிங்கெய்தப்புக்காய் தாழ்த்ததென்னென்ன=இவ்விடத்து நொடிப்பொழுதில் வருகின்றேனென்று புகுந்த நீ நெடுநேரமாய் தாழ்த்ததென்னென்று சொல்ல; வந்துகறைமறைமிடற்றினனைக் கைதொழுதுரைக்கலுற்றார்=அவரிடத்துவந்து நீலகண்டத்தைமறைத்த திருமிடற்றையுடைய சிவபிரானைக் கரங்களாற்றொழுது சொல்லத்தொடங்கினார்.—எ-று. (உஉ)

இழையணி முந்நூன்மார்பி னெந்தைநீர் தந்துபோன
விழைதரு மோடுவைத்த வேறிடந் தேடிக்காணேன்
பழையமற் றதனினல்ல பாத்திரந் தருவன்கொண்டிப்
பிழையினைப் பொறுக்கவேண்டும் பெருமவென் றிறைஞ்சிநின்றார்.

(இ-ள்.) இழையணிமுந்நூன் மார்பினெந்தை = இழையாகப்பிரிந்து தோன்ற அழகிய முந்நூலையணிந்த மார்பினையுடைய எமது முதல்வரே; நீர்தந்துபோன விழைதருமோடு=தேவரீர் என்னிடத்துக் கொடுத்துவைத்துச் சென்ற விருப்பைத்தரும் அப்பாத்திரம்; வைத்த வேறிடந் தேடிக்காணேன்=வைத்தவிடத்தும் வேறிடத்தும் தேடிக்கண்டிலேன்; பழையமற்றதனினல்ல பாத்திரந்தருவன்=தேவரீரது பழையபாத்திரத்தைப்பார்க்கிலும் புதிதான நல்லபாத்திரத்தைத் தருகின்றேன்; கொண்டிப்பிழையினைப் பொறுக்கவேண்டும்=அதனைத் திருவுளங்கொண்டு ஏற்று இப்பிழையைப் பொறுத்தருளவேண்டும்; பெருமவென்றிறைஞ்சிநின்றார் = பெருமானே யென்றுவணங்கி விண்ணப்பித்து நின்றார்.—எ-று. (உங)

வேறிடம் பொதுஇடத்திற்கு வேறான காப்பான இடம் என்றுரைப்பாருமுளர். பழையதற்குப் புதியது வாங்குதல் சிறந்ததென்னுங் கருத்தாலும் புதியதும் அதனிற் சிறந்ததாக வாங்குதல் நன்கென்னும் கருத்தாலும் பழையமற்றதனினல்லபாத்திரந்தருவனென்றும், அவ்வாறு கொடுப்பினும் பெரியோர்பாத்திரத்தைக் கெடுத்தபிழை மிகப்பெரிதாதலின் அதனைப் பொறுத்தருளவேண்டுமென்னுங் கருத்தால் பிழையினைப்பொறுத்தல் வேண்டுமென்றுங் கூறினர்.

சென்னியால் வணங்கிச்சொன்ன தொண்டரைச் செயிர்த்துநோக்கி
யென்னிது மொழிந்தவாநீ யான்வைத்த மண்ணோடன்றிப்
பொன்னினா லமைத்துத்தந்தா யாயினுங் கொள்ளேன்போற்ற
முன்னைநான் வைத்தவோடே கொண்டுவா வென்றான்முன்னோன்.

(இ-ள்.) சென்னியால்வணங்கிச்சொன்ன தொண்டரைச்செயிர்த்து நோக்கி=சிரசால்வணங்கி இவ்வாறு தம்மைவேண்டிக்கொண்ட திருநீலகண்டநாயனாரைக் கோபித்துப்பார்த்து; என்னிதுமொழிந்தவாநீ=என்னகாரணத்திற்காக இவ்வாறு நீ சொன்னது; யான்வைத்தமண்ணோடன்றி = யான் உன்னிடத்தில் வைத்த மண்மயமான பாத்திரமேயல்லாமல்; பொன்னினாலமைத்துத்தந்தாயாயினுங் கொள்ளேன்=பொன்னாற்செய்து ஒன்றைக்கொடுத்தாயாயினும் யான் அதனைக்கொள்ளமாட்டேன்; போற்றமுன்னை நான்வைத்த வோடே கொண்டுவா

வென்றான் முன்னேன் = பாதுகாப்பாக உன்னிடத்து முன்னேவைத்த திருவோட்டையேகொண்டு வருவாயாக வென்று சிவபிரான் அருளிச்செய்தார்.—எ-று.

கேடிலாப் பெரியோயென்பால் வைத்தது கெடுதலாலே
நாடியுங் காணேன்வேறு நல்லதோ ரோடுசால
நீடுசெல் வதுதானொன்று தருகின்றே னெனவுங்கொள்ளா
தூடிநின் றுரைத்ததென்ற னுணர்வெலா மொழித்ததென்ன.

(இ - ள்.) கேடிலாப் பெரியோய் = ஓர் குறைவுமில்லாத பெரியோரே; என்பால்வைத்தது கெடுதலாலே = நீர் என்னிடத்துவைத்த திருவோடு கெட்டுப்போனபடியால்; நாடியுங்காணேன் = அதனை எவ்விடத்துந் தேடியும் யான் காணேன்; வேறுநல்லதோரோடு = அதனின் வேறான நல்ல ஒரு திருவோடு; சாலநீடுசெல்வது ஒன்று = மிகநெடுங்காலம் நீட்டித்திருக்கத்தக்கது ஒன்றை; தருகின்றேனெனவுங்கொள்ளாது = கொடுக்கின்றேனென்று சொல்லவும் அதனை அங்கிகரியாது; ஊடிநின்றுரைத்தது = கோபித்து அதனையே கொடுவென்று தேவரீர் கூறியது; என்றனுணர்வெலா மொழித்ததென்ன = என்னறிவுமுழுதையுங்கெடுத்ததென்று சொல்ல.—எ-று. தான் - அசை. (௨௫)

ஆவதெ னின்பால்வைத்த வடைக்கலப் பொருளைவெளவிப்
பாவகம் பலவுஞ்செய்து பழிக்குநீ யொன்றுநாணாய்
யாவருங் காணவுன்னை வளைத்துநான் கொண்டேயன்றிப்
போவதுஞ் செய்யேனென்றான் புண்ணியப் பொருளாய்நின்றான்.

(இ - ள்.) ஆவதென் = இனி உன்னாலாகவேண்டியதென்ன; நின்பால் வைத்தவடைக்கலப்பொருளைவெளவி = உன்னிடத்து அடைக்கலமாக யான்வைத்த பொருளைக் கவர்ந்துகொண்டு; பாவகம்பலவுஞ்செய்து = அதை மறைத்தற்குரிய சில பத்திப்போலியான அபிநயம் பலவற்றையுங்காட்டி; பழிக்குநீயொன்றுநாணாய் = பழியானகாரியத்திற்கு நீ சிறிதும் நாணாதவனாயிருக்கின்றாய் (அதனால்; யாவருங்காணவுன்னை வளைத்து = இந்நகரத்திலுள்ள எல்லாரும் அறியும்படி உன்னைப் பற்றிக்கொண்டு; நான்கொண்டேயன்றிப் போவதுஞ்செய்யேன் = அத்திருவோட்டை நான் வாங்கிக்கொண்டேயன்றிப் போகவும் மாட்டேன்; என்றான்புண்ணியப்பொருளாய்நின்றான் = என்றருளிச்செய்தார் புண்ணியமே திரண்டு ஒருருவமாய்நின்ற சிவபிரான்.—எ-று. (௨௬)

போகவும் என்றவும்மையால் உச்சிக்கடன்களையுங் கழியேனென்றாராயிற்று. பழி என்றது யாவராலும் எடுத்துச்சொல்லுங்குற்றம். ஈண்டு ஓர் சிவயோகியின் ஓட்டைக் கவர்ந்தாரென்று யாவரும் எடுத்துச்சொல்ல நிற்றல்.

வளத்தினான் மிக்கவோடு வெளவினே னல்லேனொல்லை
யுளத்திலுங் களவிலாமைக் கென்செய்கே னுரையுமென்னக்
களத்துநஞ் சொளித்துநின்றான் காதலுன் மகனைப்பற்றிக்
குளத்தினின் மூழ்கிப்போவென் றருளினான் கொடுமையில்லான்.

(இ-ள்.) வளத்தினான்மிக்கவோடு வௌவினேனல்லேன்=தூய்மைமுதலிய வளத்தால் மிக்க அத்திருவோட்டைக் கவர்ந்துகொண்டேனல்லேன்; என்றன் உளத்தினுங்களவிலாமைக் கென்செய்கேனெல்லையுரையுமென்ன=என்மனத்தினிடத்துங் கள்ளமில்லாமையைத் தெரிவிக்கிறதற்கு யான் ஏதுசெய்வேன் விரைவிற் சொல்லுமென்றுகேட்க; களத்துநஞ்சொளித்துநின்றான் கொடுமையில்லான்=திருமிடற்றின்கண் உள்ள ஆலாகலத்தை மறைத்துநின்ற சிவபிரானாகிய கொடுமையில்லாத சிவயோகியானவர்; காதலுன்மகனைப்பற்றி=விருப்பத்தையுடைய உனது புதல்வனைப் பிடித்துக்கொண்டு; குளத்தினின்மூழ்கிப்போவென்றருளினான்=குளத்தில் முழுகி நானெடுக்கவில்லையென்று சொல்லிப்போவென்று அருளிச்செய்தார்.—எ-று. (உஎ)

உம்மை இறந்தது தழீஇயது.

அவரது பெருமையை விளக்கவந்த கருணை உடையராதலிற் கொடுமையில்லானென்றார்.

ஐயர்நீ ரருளிச்செய்த வண்ணம்யான் செய்வதற்குப்
பொய்யில்சீர்ப் புதல்வனில்லை யென்செய்கேன் புகலுமென்ன
மையறு சிறப்பின்மிக்க மனையவ டன்னைப்பற்றி
மொய்யலர் வாவிபுக்கு மூழ்குவா யெனமொழிந்தார்.

(இ-ள்.) ஐயர்நீரருளிச்செய்த வண்ணம்யான்செய்வதற்கு=சுவாமீ நீர் அருளிச்செய்தபிரகாரம் அடியேன்செய்தற்கு; பொய்யில்சீர்ப்புதல்வனில்லை = குற்றமற்ற சிறப்பினையுடைய புத்திரனில்லை; என்செய்கேன் புகலுமென்ன= யான்அதற்கு என்னசெய்வேன் அருளிச்செய்யுமென்று விண்ணப்பஞ்செய்ய; மையறுசிறப்பின்மிக்க=குற்றமற்ற சிறப்பாலுயர்ந்த; மனையவடன்னைப்பற்றி = மனையவள் கையைப் பிடித்துக்கொண்டு; மொய்யலர்வாவிபுக்கு = நெருங்கிய மலர்களையுடைய வாவியின்கண் புகுந்து; மூழ்குவாயெனமொழிந்தார்=முழுகிச் சொல்லென்றார்.—எ-று. (உஅ)

வேறு.

கங்கைநதி கரந்தசடை கரந்தருளி யெதிர்நின்ற
வெங்கண்விடை யவரருள வேட்கோவ ருரைசெய்வார்
எங்களிலோர் சபதத்தா லுடன்மூழ்க விசைவில்லை
பொங்குபுன லியான்மூழ்கித் தருகின்றேன் போதுமென.

(இ-ள்.) கங்கைநதிகரந்த சடைகரந்தருளி = கங்காநதியானது மறைந்திருக்குஞ் சடைமுடியை மறைத்தருளி; எதிர்நின்றவெங்கண் விடையவரருள= தன்முன் எதிராக எழுந்தருளிநின்ற கோபக்கண்ணையுடைய இடபத்தை வாகனமாகக்கொண்டருளும் சிவபிரான் இவ்வாறருளிச்செய்ய; வேட்கோவருரைசெய்வார்=திருநீலகண்டநாயனார் உத்தரஞ்சொல்லுவாராய்; எங்களிலோர் சபதத்தாலுடன்மூழ்கவிசைவில்லை=எம்மிருவருள்ளும் ஒரு சபதத்தால் கையைத்தீண்டி மூழ்குதற்குடன்பாடில்லை; பொங்குபுனல் யான்மூழ்கித் தருகின்றேன் போது

மென = மிக்க நீரில் நானே முழுகிச் சத்தியஞ்செய்கின்றேன் வாருமென்று சொல்ல.—எ-று. (உக)

தந்ததுமுன் றாராதே கொள்ளாமைக் குன்மனைவி
யந்தளிர்ச்செங் கைப்பற்றி யலைபுனலின் மூழ்காதே
சிந்தைவலித் திருக்கின்றாய் தில்லைவா ழந்தணர்கள்
வந்திருந்த பேரவையின் மன்னுவனியா னெனச்சென்றார்.

(இ-ள்.) தந்ததுமுன்றாராது = நான் முன்கொடுத்ததைக் கொடுக்காமலும்; கொள்ளாமைக்கு = எடுத்துக்கொள்ளவில்லையென்றதற்கறிகுறியாக; உன்மனைவி அந்தளிர்ச்செங்கைபற்றி அலைபுனலின்மூழ்காது=உன் மனைவியினுடைய அழகிய தளிர்போன்ற சிவந்தகையைப்பிடித்து அலையைவீசுகின்ற நீரில் முழுகிச்சொல்லாமலும்; சிந்தைவலித்திருக்கின்றாய்=மனத்தை உறுதி செய்து கொண்டிருக்கின்றாய்; தில்லைவாழந்தணர்கள் வந்திருந்தபேரவையில் = தில்லையின்கண் வாழும் மறையவர்கள் வந்து கூடியிருந்த பெரிய சபையின்கண்; மன்னுவன் யானெனச்சென்றார்=நின்று சொல்லுவன் இவ்விவகாரத்தையென்று அருளிச்செய்தார்.—எ-று. ஏ-இரண்டும் அசை. இவ்விரண்டுங்குளகம். (௩௦)

நல்லொழுக்கந் தலைநின்றார் நான்மறையின் றுறைபோனார்
தில்லைவா ழந்தணர்கள் வந்திருந்த திருந்தவையின்
எல்லையிலான் முன்செல்ல விருந்தொண்ட ரவர்தாமு
மல்குபெருங் காதலினால் வழக்குமேல் விட்டணைந்தார்.

(இ-ள்.) நல்லொழுக்கந்தலைநின்றார்=நல்லொழுக்கத்தின் முதலில் நின்றவர்களும்; நான்மறையின்றுறைபோனார் = நான்குவேதங்களாகிய கடலின் கரையைக் கண்டவர்களும் ஆகிய; தில்லைவாழந்தணர்கள் வந்திருந்த = தில்லை மூவாயிரவரென்னும் மறையவர்கள் கூடியிருந்த; திருந்தவையில்=திருத்தமான சபையினிடத்து; எல்லையிலான்முன்செல்ல = அளவுபடாத குணங்களையுடைய சிவபிரான் முன்னே எழுந்தருள; இருந்தொண்டரவர்தாமும்=பெருமையினையுடைத்தாகிய திருநீலகண்டநாயனாரும்; மல்குபெருங்காதலினால்=நிறைந்த பேரன்போடு; வழக்கு மேலிட்டணைந்தார்=வழக்கைமேற்கொண்டு சென்றார்.—எ-று.

அவர் தன்னுண்மையை மறுத்துக்கூறியுந் தன் பிழைக்கே பரிந்து அவர் மேல்வைத்த பேரன்புகுறையாமல் சென்றாரென்பதுதோன்ற மல்குபெருங்காதலினாலென்றார்.

அந்தணனு மெந்தைபிரா னருமறையோர் முன்பகர்வான்
இந்தவேட் கோவன்பால் யான்வைத்த பாத்திரத்தைத்
தந்தொழியான் கெடுத்தானேற் றன்மனைவி கைப்பற்றி
வந்துமூழ் கியுந்தாரான் வலிசெய்கின் றானென்றார்.

(இ-ள்.) அந்தணனு மெந்தைபிரான்=மறையவர் வேடங்கொண்டெழுந்தருளிய சிவபிரான்; அருமறையோர்முன் பகர்வான்=அரிய வேதங்களையுணர்ந்

த தில்லைமூவாயிரவருக்குமுன்னே இவ்வாறு அருளிச்செய்வார்; இந்த வேட்கோவன்பால்=இந்த திருநீலகண்டக்குயவரிடத்தில்; யான் வைத்த பாத்திரத்தை=யான்கொடுத்துவைத்த பலிப்பாத்திரத்தை; தந்தொழியான்=எனக்குக்கொடுக்காமலிருக்கின்றான்; கெடுத்தானேல்=(அதனைவைத்தஇடத்தில்)இழந்துவிட்டானாகில்(அதை உறுதிஆக்குதற்கு);தன்மனைவிகைப்பற்றி=தன்மனையாள்கையைப்பிடித்துக்கொண்டு; வந்துமூழ்கியுந்தாரான்=குளத்தில் முழுகிச்சொல்லென்றால் அதுவுஞ்செய்யான்; வலிசெய்கின்றானென்றார்=மனதை உறுதிப்படுத்தி யிருக்கின்றானென்று அருளிச்செய்தார்.—எ-று. (கூஉ)

தந்துவிடாமலும் மூழ்கிச்சொல்லாமலும் இருத்தலில் வலிசெய்கின்றானெனக்கூறினர்.

நறைகமழுஞ் சடைமுடியு நாற்றோளு முக்கண்ணும்
கறைமருவுந் திருமிடறுங் கரந்தருளி யெழுந்தருளு
மறையவனித் திறமொழிய மாமறையோ ருரைசெய்வார்
நிறையுடைய வேட்கோவர் நீர்மொழியும் புகுந்ததென.

(இ-ள்.) நறைகமழுஞ் சடைமுடியும்=வாசனைகமழுஞ் சடைமுடியினையும்; நாற்றோளு முக்கண்ணும் = நான்கு திருப்புயங்களையும் மூன்றுகண்களையும்; கறைமருவுந் திருமிடறும்=நீலநிறத்தினையுடைய அழகிய கண்டத்தையும்; கரந்தருளி யெழுந்தருளும்=மறைத்துக்கொண்டு எழுந்தருளிவந்த; மறையவனித் திறமொழிய=சிவபிரானாகிய மறையவர் இவ்வாறுகூற; மாமறையோருரை செய்வார்=பெருமையினை யுடைத்தாகிய தில்லைமூவாயிரவர்கள் வழக்கு கூறுவாராய் நிறையுடைய வேட்கோவர் = சால்பமைந்த திருநீலகண்டரே; நீர்மொழியும் புகுந்ததென=நடந்த விவகாரத்தை நீர் சொல்லுமென்று கூற.—எ-று. (கூகூ)

நீணிதியா மிதுவென்று நின்றவிவர் தருமோடு
பேணிநான் வைத்தவிடம் பெயர்ந்துகரந் ததுகாணேன்
பூணணிநூன் மணிமார்பீர் புகுந்தபரி சிதுவென்று
சேணிடையுந் தீங்கடையாத் திருத்தொண்ட ருரைசெய்தார்.

(இ-ள்.) நீணிதியாமிதுவென்று = பெரியநிதிக்கொப்பான திதுவென்று சொல்லி; நின்ற விவர்தருமோடு=நிற்கின்ற இப்பெரியவரால் முன்கொடுக்கப்பட்ட அப்பாத்திரம்; பேணிநான்வைத்தவிடம் பெயர்ந்துகரந்ததுகாணேன்=பாதுகாத்து நான்வைத்த இடத்தினின்றும் மறைந்துவிட்டது(அதனால்) அப்பாத்திரத்தைத்தேடிக்கண்டிலேன்; பூணணிநூன்மணிமார்பீர்=ஆபரணமாக அணிந்த உபவீதத்தையுடைய அழகிய மார்பினையுடையவர்களே; புகுந்தபரிசிதுவென்று=இது நிகழ்ந்தவாறென்று; சேணிடையுந்தீங்கடையாத் திருத்தொண்ட ருரைசெய்தார்=தீங்கென்பது நெடுந்தூரத்தும் தம்மையடையாத திருநீலகண்டநாயனர் இவ்வாறுகூறினார்.—எ-று. (கூச)

உம்மை சிறப்பும்மை, எதிரது தழீஇயதுமாம். இவ்விரண்டுங் குளகம்.

வேறு.

திருவுடை யந்தணாளர் செப்புவார் திகழ்ந்தநீற்றின்
உருவுடை யிவர்தாம்வைத்த வோட்டினைக் கெடுத்தீராகற்
றருமிவர் குளத்தின்மூழ்கித் தருகவென் றுரைத்தாராகின்
மருவிய மனைவியோடு மூழ்குதல் வழக்கேயென்றார்.

(இ-ள்.) திருவுடையந்தணாளர் செப்புவார்=ஞானச்செல்வத்தையுடைய தில்லைமூவாயிரம் மறையவர் நிச்சயம் சொல்வார்களாய்; திகழ்ந்தநீற்றினுருவுடையிவர்வைத்த=விபூதியினால் விளங்கிய வடிவத்தையுடைய இச்சிவயோகியார் கொடுத்த; ஓட்டினைக்கெடுத்தீரானால்=திருவோட்டை வைத்தவிடத்து இழந்தீரானால்; தருமிவர்=உம்மிடத்துக்கொடுத்த இவர்; குளத்தின்மூழ்கித் தருகவென்றுரைத்தாராகில்=குளத்தின் முழுகித் தருவீராக என்றுசொன்னால்; மருவியமனைவியோடுமுழுகுதல்வழக்கேயென்றார்=இல்வாழ்க்கைக் கமைந்த மனையாளோடு முழுகிச் சொல்லுதல் முறைமையே என்று சொன்னார்கள்—எ - று. தாம்-அசை. (௫௫)

அருந்தவத் தொண்டர்தாமு மந்தணர் மொழியக்கேட்டுத்
திருந்திய மனைவியாரைத் தீண்டாமை செப்பமாட்டார்
பொருந்திய வகையான்மூழ்கித் தருகின்றேன் போதுமென்று
பெருந்தவ முனிவரோடும் பெயர்ந்துதம் மனையைச்சார்ந்தார்.

(இ-ள்.) அருந்தவத்தொண்டரும்=அருமையாகிய தவத்தினையுடைய திருநீலகண்டநாயனாரும்; அந்தணர் மொழியைக்கேட்டு=தில்லைவாழந்தணர்கள் இவ்வாறு கூறக்கேட்டு; திருந்திய மனைவியாரைத் தீண்டாமைசெப்பமாட்டார்=மனையறத்தில் வழுவாத தம்மனைவியரைத் தீண்டாம விருத்தற்குக்காரணத்தை அங்குச் சொல்லாதவராய்; பொருந்திய வகையான்மூழ்கித் தருகின்றேன் போதுமென்று=பொருந்தியவாற்றால் நீர்மூழ்கிச் சொல்கின்றேன் என்னுடன் வருவீராகவென்று; பெருந்தவமுனிவரோடும்=பெரியதவத்தையுடைய சிவயோகியாரோடு தாமும்; பெயர்ந்துதம் மனையைச்சார்ந்தார்=அங்குநின்றும் தம்முடைய வீட்டையடைந்தார்.—எ-று. தாம் - அசை. (௫௬)

மனைவியார் தம்மைக்கொண்டு மறைச்சிவ யோகியார்முன்
சினவிடைப் பாகர்மேவுந் திருப்புலீச் சரத்துமுன்னர்
நனைமலர்ச் சோலைவாவி நண்ணித்தம் முண்மைகாப்பார்
புனைமணி வேணுத்தண்டி னிருதலை பிடித்துப்புக்கார்.

(இ-ள்.) மனைவியார் தம்மைக்கொண்டு=தம்மனைவியாரை அழைத்துக்கொண்டு; மறைச்சிவ யோகியார்முன்=மறையவர் வேடங்கொண்டு நிற்குஞ்சிவபிரானாகிய சிவயோகியார் முன்பு; சினவிடைப் பாகர்மேவும்=கோபத்தையுடைய இடபத்தை வாகனமாகக்கொண்ட சிவபிரான் வீற்றிருந்தருளும்; திருப்புலீச்சரத்துமுன்னர்=திருப்புலீச்சரமென்னும் ஆலயத்தின் முன்னுள்ள; நனைமலர்




1. திருநீலகண்டநாயனர்
2. மனைவி
3. சிவயோகி

சிவயோகியார் மீண்டுவந்து திருவோடுகேட்டதும் நாயனர் அதைக்காணுதவராகி வேறென்றளித்தற்கிசைந்ததும் அதைமறுத்து யோகியார் நாயனரை மனைவியோடு தடாகத்தில் முழுகிச் சத்தியஞ் செய்யப்பணித்ததும் அதனல் இருவரும் இளமைபெற்றதும் யோகியார்மறைந்து இடபாரூடராய்க் காட்சியருளியது.

ச்சோலைவாவிகண்ணி=அரும்புகளோடு மலர்களையுடைத்தாகிய சோலை சூழ்ந்த அத்தீர்த்தத்தின் சமீபத்தில்வந்து ; தம்முண்மைகாப்பார்=தாம் மனைவியாரை த்தீண்டாமலிருக்கும் உண்மையைக் காக்கும்படி; புனைமணிவேணுத்தண்டி னிரு தலை பிடித்துப்புக்கார்=மணிகளிழைத்த மூங்கிற்றண்டினுடைய இருபுறத்தும் தாமும் மனைவியாருமாக பிடித்துக்கொண்டு வாவியிற்புகுந்தார்கள்.—எ-று.(கஎ)

தண்டிரு தலையும்பற்றிப் புகுமவர் தம்மைநோக்கி
வெண்டிரு நீற்றுமுண்ட வேதியர் மாதைத்தீண்டிக்
கொண்டுடன் மூழ்கீரென்னக் கூடாமை பாரோர்கேட்கப்
பண்டுதஞ் செய்கைசொல்லி மூழ்கினார் பழுதிலாதார்.

(இ-ள்.) தண்டிருதலையும்பற்றி=ஒருவரையொருவர் தீண்டாது மூங்கி ற்றண்டி னிருபுறத்தையும் பிடித்துக்கொண்டு ; புகுமவர்தம்மைநோக்கி = வாவி யில் முழுகச்செல்லும் அத்திருநீலகண்ட நாயனாரைப்பார்த்து ; வெண்டிருநீற்று முண்ட வேதியர் = வெண்மையினையுடைய திருநீற்றாலாகிய புண்டரத்தையு டைய சிவயோகியார் ; மாதைத்தீண்டிக்கொண் டுடன்மூழ்கீரென்ன=உம்மனை யாள் கையைப்பிடித்துக்கொண்டு முழுகுமென்றுசொல்ல ; கூடாமைபாரோர் கேட்க=தாம் மனைவியாரைத்தீண்டி முழுகக் கூடாமலிருத்தலை உலகத்தார்கே ட்கும்படி ; பண்டுதஞ்செய்கைசொல்லி மூழ்கினார் பழுதிலாதார்=முன்னாளில் நிகழ்ந்த தம்முடைய சபதத்தை எடுத்துச்சொல்லி வாவியில் முழுகினார் குற்றமி ல்லாத திருநீலகண்டநாயனார்.—எ-று. (கஅ)

வாவியின் மூழ்கியேறுங் கணவரு மனைவியாரு
மேவிய மூப்புநீங்கி விருப்புறு மிளமைபெற்றுத்
தேவரு முனிவர்தாமுஞ் சிறப்பொடு பொழியுந்தெய்வப்
பூவின்மா மழையின்மீள மூழ்குவார் போன்றுதோன்ற.

(இ-ள்.) வாவியின்மூழ்கியேறுங் கணவருமனைவியாரும்=தடாகத்தில் முழுகிக் கரையேறுகின்ற திருநீலகண்டநாயனாரும் அவருடையமனைவியாரும்; மேவியமூப்புநீங்கி=தாமடைந்த முதுமைப்பருவம்நீங்கி ; விருப்புறு மிளமைபெ ற்று=யாவரும் விரும்பத்தக்க இளமைப்பருவத்தையடைந்து ; தேவருமுனிவ ரும் = தேவர்களும் முனிவர்களும் ; சிறப்பொடுபொழியும் = சிறப்போடுபொ ழிகின்ற ; தெய்வப்பூவின் மாமழையில்=தெய்வத்தன்மையுடைய பெரிய மலர் மழையில் ; மீளமூழ்குவார்போன்றுதோன்ற = பின்னும் முழுகுகின்றவர்கள் போலப் பொலிவடைந்துதோன்ற.—எ-று. (ககூ)

தாம் - அசை

அங்கிலை யவரைக்காணு மதிசயங் கண்டாரெல்லா
முன்னிலை நின்றவேத முதல்வரைக் கண்டாரில்லை
இங்கிலை யிருந்தவண்ண மென்னென மருண்டுநின்றார்
துன்னிய விசும்பினூடு துணையுடன் விடைமேற்கண்டார்.

(இ - ள்.) அந்நிலையவரைக்காணு மதிசயங்கண்டாரெல்லாம்=நீரின்மூழ்கி இளமைப்பருவமடைந்த அவ்விருவரையும் காணுதலாகிய அதிசயத்தைக் கண்டவர்கள் யாவரும்; முன்னிலைநின்றவேத முதல்வரைக்கண்டாரில்லை=தமக்கு எதிரில்நின்ற வேதகாரணராகிய சிவபிரானைக் காணவில்லை; இந்நிலையிருந்த வண்ண மென்னெனமருண்டுநின்றார் = இவ்வாறிருந்தது யாதுகாரணமென்று ஐயுற்றுநின்ற திருநீலகண்டநாயனார்; துன்னிய விசும்பினூடு துணையுடன்விடைமேற்கண்டார்=ஆகாயத்தின்கண் விடையின்மீது உமாதேவியாரோடு சிவபிரான் எழுந்தருளக்கண்டார்.—எ-று. இவ்விரண்டுங் குளகம். (சo)

கண்டனர் கைகளாரத் தொழுதனர் கலந்தகாதல்
அண்டரு மேத்தினார்க ளன்பர்தம் பெருமைநோக்கி
விண்டரும் பொலிவுகாட்டி விடையின்மேல் வருவார்தம்மைத்
தொண்டரு மனைவியாருந் தொழுதுடன் போற்றிநின்றார்.

(இ-ள்.) கண்டனர்கைகளாரத் தொழுதனர் = அவ்வாறு எழுந்தருளியதைக்கண்ட திருநீலகண்டநாயனார் கைகளால் பொருந்தவணங்கினார்; அன்பர்தம்பெருமைநோக்கி = அவரது அதிசயமான செய்கையால் நிகழ்ந்த பெருமையைப்பார்த்து; கலந்தகாதலண்டருமேத்தினார்கள் = சிவபிரானிடத்து ஒருப்பட்ட அவர்பத்தியைத் தேவர்களும் துதித்தார்கள்; விண்டரும்பொலிவுகாட்டி= ஆகாயத்திற் காணப்படும் திருக்கோலப்பொலிவைத் தமக்குத் தரிசிப்பித்து; விடையின்மேல்வருவார்தம்மை=இடபத்தை வாகனமாகக்கொண்டு எழுந்தருளும் சிவபிரானை; தொண்டருமனைவியாருந் தொழுதுடன்போற்றிநின்றார்= திருநீலகண்டநாயனாரும் அவர் மனைவியாரும் ஒருங்கு வணங்கி துதித்து நின்றார்கள்.—எ-று. (சக)

மன்றுளே திருக்கூத்தாடி யடியவர் மனைகடோறுஞ்
சென்றவர் நிலைமைகாட்டுந் தேவர்க டேவர்தாமும்
வென்றவைம் புலனான்மிக்கீர் விருப்புட னிருக்கநம்பால்
என்றுமிவ் விளமைநீங்கா தென்றெழுந் தருளினாரே.

(இ-ள்.) மன்றுளே திருக்கூத்தாடி = திருவம்பலத்தின்கண்ணே ஆனந்ததிருத்தஞ்செய்து; அடியவர்மனைகடோறுஞ்சென்று = அடியார்களது வீடுகள்தோறு மெழுந்தருளி; அவர்நிலைமைகாட்டுந் தேவர்கடேவரும் = அவர்களன்பின் நிலைமையை யாவரும் அறியும்படிகாட்டியருளும் தேவர் தேவராகிய சிவபிரானும்; வென்றவைம்புலனான்மிக்கீர்=ஐம்புல உணர்வை வென்றதனால் சிறப்படைந்தவர்களே; நம்பால்விருப்புடன் என்றுமிவ்விளமைநீங்கா திருக்க என்றெழுந்தருளினார்=நம்மிடத் அன்போடு நீங்களிருவரும் எந்நாளும் இவ்விளமைப்பருவம் நீங்காமல் இருக்கக்கடவீரென்று அருளிச்செய்து மறைந்தருளினார்.—எ-று. தாம்-ஏ-அசை. (சஉ)

உம்மை இரண்டில் முன்னையது இறந்தது தழீஇயது. பின்னையது முற்றும்மை.

விறலுடைத் தொண்டனாரும் வெண்ணகைச் செவ்வாய்மென்றோள்
அறலியற் கூந்தலாளா மனைவியு மருளினார்ந்த
திறலுடைச் செய்கைசெய்து சிவலோக மதனையெய்திப்
பெறலரு மிளமைபெற்றுப் பேரின்ப முற்றாரன்றே.

(இ-ள்.) விறலுடைத்தொண்டனாரும் = பத்திவலிமையையுடைய திருநீலகண்டநாயனாரும்; வெண்ணகைச்செவ்வாய்மென்றோள் = வெள்ளிய மூரலையும் சிவந்தவாயையும் மிருதுவானதோளையும்; அறலியற்கூந்தலாளா மனைவியும் = கருமணல்போலும் கூந்தலையுமுடையவளாகிய அவர்மனைவியும்; அருளினார்ந்த திறலுடைச்செய்கைசெய்து = சிவபிரான் திருவருளினால் மிக்க யாவருஞ் செய்தற்கரிய செய்கையைச்செய்து; சிவலோகமதனையெய்தி = சிவலோகத்தையடைந்து; பெறலருமிளமைபெற்று = யாவரும் பெறுதற்கரிய இளமையைப் பெற்று; பேரின்பமுற்றார் = பேரின்பத்தையடைந்தார்கள்.—எ-று. அன்று, ஏ-அசை. (சந)

செய்கைசெய்து அருளினா லிளமைபெற்றுச் சிவலோகமெய்திப் பேரின்பமுற்றாரென வியையும்.

அயலறி யாதவண்ண மண்ணலா ராணையுய்த்த
மயலில்சீர்த் தொண்டனாரை யானறி வகையால்வாழ்த்திப்
புயல்வளர் மாடநீடும் பூம்புகார் வணிகர் பொய்யில்
செயலியற் பகையார்செய்த திருத்தொண்டு செப்பலுற்றேன்.

(இ-ள்.) அயலறியாதவண்ணம் = அயலிலுள்ளவர்கள் அறியாதிருக்கும்படி; அண்ணலாராணையுய்த்த = சிவபிரானது திருநீலகண்டத்தின் திருவாணையைப் பாதுகாத்த; மயலில்சீர்த்தொண்டனாரை = மயக்கமற்ற சிறப்பினையுடைய திருநீலகண்டநாயனாரை; யானறிவகையால்வாழ்த்தி = யான் அறிந்தவாறு துதித்து; புயல்வளர்மாடநீடும் = மேகங்கள் வளர்கின்ற மாளிகைகள் மிக்க; பூம்புகார்வணிகர் = பொலிவினையுடைத்தாகிய காவிரிப்பூம்பட்டினத்தில் வணிகர் குலத்தில் அவதரித்திருந்த; பொய்யில்செயலியற்பகையார்செய்த திருத்தொண்டு செப்பலுற்றேன் = மெய்ப்பத்தியினையுடைய இயற்பகைநாயனார் செய்த திருத்தொண்டைச் சொல்லத்தொடங்கினேன்.—எ-று. (சச)

திருநீலகண்டநாயனார்புராணம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-சOரு.



## இயற்பகைநாயனார்புராணம்.

சென்னி வெண்குடை நீடநபாயன் றிருக்குலம்புகழ் பெருக்கிய சிறப்பின், மன்னு தொல்புகழ் மருதநீர்நாட்டு வயல்வளந்தர வியல்பி னளித்துப், பொன்னி நன்னதி மிக்கநீர்பாய்ந்து புணரிதன்னையும் புனிதமாக் குவதோர், நன்னெடும் பெருந்தீர்த்த முன்னுடைய நலஞ்சி றந்தது வளம்புகார் நகரம்.

(இ-ள்.) சென்னிவெண்குடைநீடநபாயன்=சோழவம்சத்தில் அவதரி த்த வெண்கொற்றக் குடையையுடைய அநபாயச்சோழரது; திருக்குலம்புகழ் பெருக்கியசிறப்பில்=செல்வம்மிக்க வம்சத்தரசர்கள் தங்கள்கீர்த்தியை விளங்க ச்செய்தற்குக் காரணமாகிய சிறப்பினால்; மன்னுதொல்புகழ் மருதநீர்நாட்டு= நிலைபெற்றபழமையாகிய புகழினையுடைய மருதநிலஞ்சூழ்ந்த சோழநாட்டின்க ணுள்ள; வயல்வளந்தரப்பொன்னி நன்னதியியல்பினிலளித்து=வயல்கள் வளத் தைத்தருதற்குக் காரணமாய்க் காவிரிநதியானது காலங்களிற் பிறழாமற் கொடு த்து; மிக்கநீர்பாய்ந்து=சேடித்தநீரானது பாய்ந்து; புணரிதன்னையும் புனிதமா க்குவதோர்=கடலையுந் தூய்மையாகச்செய்கின்ற ஒரு; நன்னெடும்பெருந்தீர்த் தம்=நல்ல உயர்ந்த பெருமையினையுடைத்தாகிய காவிரிசங்கமமென்னுந் தீர்த்தத் தை; முன்னுடைய நலஞ்சிறந்தது வளம்புகார்நகரம்=தனக்கு முன்னாகவுடை யதன்மையால் சிறந்துள்ளது வளத்தினையுடைய காவிரிப்பூம்பட்டினம்.-எ-று. (க)

சென்னி=சோழன். நீர்நாடு=சோழநாடு. அநபாயச்சோழர் இந்நூல் செ ய்யும்படிகேட்டார் ஆதலில் அவர்பெருமைவிளக்கிய அநபாயன் திருக்குலமென் றார். முல்லை நெய்தல் முதலிய நிலத்தினை உளவேனும் மிக்கது மருதமென்பது தோன்ற மருதநீர் நாடென்றார். பொன்னிநன்னதிவளந் தரவளித்து மிக்கநீரென இயையும். புணரி தீர்த்தத்துளொன்றாய் உயர்வுடைத்தேனும் இச்சங்கம தீர்த் தத்தால் காவிரிசங்கமமெனப் பெயர்பெற்று எந்நாளும் நீராடற்கேற்ற உயர் வடைந்ததென்பது தோன்றபுணரிதன்னையும் புனிதமாக்குவதோர் தீர்த்தமெ ன்றார். உம்மை உயர்வுசிறப்பு.

அக்குலப்பதிக் குடிமுதல் வணிக ரளவில்செல்வத்து வளமை யினமைந்தார், செக்கர்வெண் பிறைச் சடையவ ரடிமைத் திறத்தின் மிக் கவர் மறைச்சிலம்படியார், மிக்கசீரடி யார்கள் யாரேனும் வேண்டும் யாவையு மில்லை யென்னாதே, இக்கடற்படி நிகழமுன் கொடுக்கு மியல் பி னின்றவ ருலகி யற்பகையார்.

(இ-ள்.) அப்பதிக்குலக்குடிமுதல்வணிகர்=அந்தகாவிரிப்பூம்பட்டினத் தின்கண்வாழும் குலத்தாற்சிறந்த வணிகக்குடிகளுள் முதன்மைபெற்ற வணிகர்; அளவில்செல்வத்து வளமையினமைந்தார்=மிக்க செல்வத்தாலாகிய வளத்திற் சிறந்தவர்; செக்கர்வெண்பிறைச்சடை யவரடிமைத்திறத்தின்மிக்கவர்=செக்கர்

வான்போலும் சிறந்த வெண்மையாகிய இளம்பிறையினை யணிந்த சடையை யுடைய சிவபிரானுக்குரிய அடிமைத்திறத்தால் மேம்பட்டவர்; மறைச்சிலம்படி யார்மிக்க சீரடியார்கள்யா ரேனும் = வேதச்சிலம்பினையணிந்த திருவடியினையு டைய சிவபிரானது மிக்க சிறப்பினையுடைய திருவடியார்கள் எவரேனும்; வே ண்டும்யாவையுமில்லை யென்னாது = விரும்பிய பொருள்கள் எல்லாவற்றையும் இல்லையென்னாமல்; இக்கடற்படிநிகழ முன்கொடுக்குமியல்பினின்றவர்=கடல்சூ ழ்ந்த இவ்வுலகத்தில் புகழ்விளங்கும்படி தடையின்றிக் கொடுக்குமுறைமையி னையுடையவர் (அவர்திருநாமம்யாதெனில்); உலகியற்பகையார் = உலகியலைப் பகைத்தகாரணத்தால் இயற்பகையார் என்றுகூறப்பட்டவர்.—எ-று. (உ)

ஏ - அசை.

குலஒழுக்கங்கள் குன்றிய அன்பரையும் பேணிக்கொடுத்தார் என்பது தோன்ற யாரேனும் என்றும், தம்முதல்வனடியாரை முதல்வன்போற் றம்மினு மினியராய்க்கொண்டு தம்பொருள்களைக்கொடுக்கு மியல்புடையாரென்பதுதோ ன்ற யாவையுமில்லையென்னாதே என்றுங் கூறினர். தம்மினுமினியராய்க்கோ டல்:—தாமின்புறுவதினும் அவரின்புறுதலே தமக்கினிமையாகக் கோடல் அதா வது சுற்றத்தாரினும் மனையாள் புதல்வரினும் தம்மினும்அவரின்புறுதலையே சிறப் பாகக்கொள்ளுதல்.

ஆறுசூடிய வையர்மெய்யடிமை யளவிலாததோ ருளநிறையருளா
னீறுசேர்திரு மேனியர்மனத்து நினைத்தயாவையும் வினைப்படமுடித்து
மாறிலாதநன் னெறியினில்விளங்கு மனையறம்புரி மகிழ்ச்சியின்வந்த
பேறெலாமவ ரேவினசெய்யும் பெருமையேயெனப் பேணிவாழ்நாளில்.

(இ-ள்.) ஆறுசூடிய வையர்மெய்யடிமை=கங்கைநதியைத்தரித்த சிவ பிரானுக்கு மெய்யடிமைசெய்தற்குக் காரணமாய்; அளவிலாததோ ருளநிறை யருளால்=அளவுபடாமல் ஒப்பற்ற தமது திருவுள்ளத்து நிறைந்ததிருவருளின் வழித்தாய்; நீறுசேர்திருமேனியர்மனத்து=விபூதியினையணிந்த திருமேனியையு டைய அடியார்கள் தம்திருவுள்ளத்தில்; நினைத்தயாவையும் வினைப்படமுடி த்து=கருதிய கருமங்களையெல்லாம் அவர் எண்ணம்முற்றும்படி செய்து; மாறி லாத நன்னெறியினில் விளங்கும் = மாறுபடுதலில்லாத ஒழுக்கநெறியில் நிலை பெற்று விளங்கும்; மனையறம்புரிமகிழ்ச்சியின்வந்தபேறெலாம்=இல்லறத்தை நடத்துகின்ற இன்பத்தால்வந்த பெரும்பேறெல்லாம்; அவரேவினசெய்யும்பெரு மையேயெனப்பேணிவாழ் நாளில்=அவ்வடியார்கள்ஏவியபணிவிடைகளைச்செய் யும் பெருமையேயென்று அதனைவிரும்பி நடத்திவாழ்கின்றகாலத்தில்.—எ-று.

அளவிலாததாய் நிறைந்த திருவருளென இயையும். இல்வாழ்க்கைநிலைக் குரிய பிறர்க்குப் பகுத்துண்டல்முதலான பொதுவறங்களினும் அடியார்பணிசெ ய்தலே சிறந்த தாகக்கொண்டவர் என்பது தோன்றப் பேறெலாமவரேவின செய்யும்பெருமையே யெனக்கூறினர். ஆறு சூடியவையர் மெய்யடிமையளவி லாததோருள நிறையருளால் என்னுமிடத்து ஆறுசூடியவையர் மெய்யடிமை

யினும் அளவுபடாதிருக்கின்ற தமது ஒப்பற்ற உள்ளத்து நிறைந்த அன்பினு லும் என்றுரைத்தலுமொன்று.

ஆயுநுண்பொரு ளாகியும்வெளியே யம்பலத்துநின் றுடுவாரும்பர், நாயகிக்குமஃதறியவோபிரியா நங்கைதானறி யாமையோவறியோந்,தூய நீறுபொன் மேனியில்விளங்கத் தூர்த்தவேடமுந் தோன்றவேதியராய், மாயைவண்ணமே கொண்டுதந்தொண்டர் மறுதவண்ணமுங் காட்டுவா ன்வந்தார்.

(இ - ள்.) ஆயுநுண்பொருளாகியும்வெளியே யம்பலத்துநின்றுடுவார் = அறிஞர்கள் ஆராயும் நுண்பொருளாயிருந்தும் யாவருங் காணத் திருவம்பலத் தின்கண் வெளிப்பட்டுநின்று ஆனந்தநிருத்தஞ்செய்தருளும் பிரானுர்; உம்பர் நாயகிக்கு மஃதறியவோ = தேவர்கட்கெல்லாம் முதல்வியாகிய உமாதேவியாருக் கும் இவ்வரவை அறியும்படியோ (அல்லது); பிரியாநங்கைஅறியாமையோ = பிரி யாத அப்பிராட்டியார் அறியாமலோ; அறியோம் = யாம்அறியமாட்டோம்; தூய நீறுபொன் மேனியில்விளங்க = தூய்மையான திருவெண்ணீறு பொன்போலுந் திருமேனியில்பிரகாசிக்க; தூர்த்தவேடமுந் தோன்றவேதியராய் = அதனோடு தூர்த்தர்க்குரிய வேடப்பொலிவும் காணும்படி மறையவராய்; மாயைவண்ணங் கொண்டு = பிறர்தம்மை அறியக்கூடாத மாயையினையுடைய ஓர் திருவுருவங் கொண்டு; தந்தொண்டர்மறுதவண்ணமுங் காட்டுவான்வந்தார் = தம் அடியாரா கிய அவ்வியற்பகைநாயனுர் அடியார்கள் கேட்டபொருளை மறுக்காமற் கொடுக் கும் இயல்பையும் (அவர் பத்தியையும்) காட்டும்படி வந்தருளினுர்.—எ-று. தான், ஏ-அசை. (ச)

அணுவுக்கணுவாய்நிற்குஞ் சூக்கும முடைமையால் நுண்பொருளென் றும், நாயகியாரறிந்தாற் பிணங்குவராதலில் அறியாமையோ என்றும், அந்நாயகி யார் அவருடன் பிரியாதொரு கூற்றிலிருத்தலில் அறியாமல் வருதல் கூடாமை யின் அறியவோ என்றும், இவ்விரண்டும் நிச்சயிக்கப்படாமையின் அறியோம் என்றும் கூறினர். தூர்த்தவேடம்:—வேசியர்களது மஞ்சள், ஆடையிலும் கல வைப்பூச்சு நகக்குறி முதலிய, உடம்பிலும் தோன்றநிற்றல். நாயகிக்கும் என்ற உம்மை உயர்வுசிறப்பு. மறுதவண்ணமும் என்ற உம்மை இறந்தது தழீஇயது.

வந்துதண்புகார் வணிகர்தமறுகின் மருங்கியற்பகை யார்மனைபுகுத, எந்தையெம்பிரா னடியவரணைந்தா ரென்றுநின்றதோ ரின்பவாதரவாற், சிந்தையன்பொடு சென்றெதிர்வணங்கிச் சிறப்பின்மிக்கவர்ச் சனைகண் முன்செய்து, முந்தையெம்பெருந் தவத்தினுலென்கோ முனிவரிங்கெ ழுந் தருளியதென்றுர்.

(இ-ள்.) வந்துதண் புகார்வணிகர்த மறுகின்மருங்கு = (நீர்வளத்தாற்)கு ளிர்ச்சியினையுடைய காவிரிப்பூம்பட்டினத்துள்ள வணிகர் வீதியினிடத்துவந்து; இயற்பகையார்மனைபுகுத = இயற்பகைநாயனுர் வீட்டிற்கு எழுந்தருள; எந்தை

யெம்பிரானடியவ ரணைந்தாரென்று=எம்முதல்வராகிய சிவபிரானடியவர் எழுந்தருளினாரென்று; சிந்தைநின்றதோ ரின்பவாதரவால் = தம்முள்ளத் துதித்த மகிழ்ச்சியோடுகூடிய ஒப்பற்ற பெருங்காதலினால்விளைந்த; அன்பொடுசென்றெதிர்வணங்கி=பேரன்பால் அவரெதிரேசென்று வணங்கி; சிறப்பின்மிக்கவர்ச்சனைகண்முன்செய்து = சிறப்பினால் மிக்க பாதபூசைமுதலிய வழிபாடுகளை முன்னேசெய்து; முந்தையெம்பெருந்தவத்தினாலென்கோ=முற்பிறப்பில் யாங்கள்செய்த பெருந்தவங் காரணமாக என்றுசொல்லுகேனோ; முனிவரிங்கெழுந்தருளியதென்றார்=தவமுனிவராகிய மறையவர் இவ்விடத்து எழுந்தருளிவந்தது என்றுசொன்னார்.—எ-று. (ரு)

சிந்தைக்கண் ஆதரவாலுதித்த அன்பென இயையும். அடியாரென இவரிடத்துதித்த விருப்பு கள்ளமின்றி பெருவிருப்பா யுதித்தலில் இன்பவாதரவாலென்றும், அவ்விருப்புக்காரணமாய் உள்ளிருந்த அன்பானது பெருகிவளர்தலில் சிந்தையன்போடென்றுங்கூறினர். ஆதரவாலுதித்த அன்பு என்புழிமூன்றுமுருபு காரணகாரியப்பொருள் தந்துநின்றது.

என்றுகூறிய வியற்பகையார்மு னெய்திநின்றவக் கைதவமறை
யோர், கொன்றைவார்சடை யாரடியார்கள்குறித்துவேண்டின குணமெ
னக்கொண்டே, ஒன்றுநீரெதிர் மறுதுவந்தளிக்கு முண்மைகேட்டுநும்
பாலொன்றுவேண்டி, இன்றுநானிங்கு வந்தனனதனுக் கிசையலாமெனி
லியம்பலாமென்றார்.

(இ - ள்.) என்றுகூறியவியற்பகையார்முன் = இவ்வாறு கூறிய இயற்பகைநாயனார்முன்பு; எய்திநின்றவக் கைதவமறையோர் = எழுந்தருளிநின்ற வஞ்சனையையுடைய அவ்வேதியர்; கொன்றைவார்சடையாரடியார்கள் = கொன்றைப்பூமாலையையணிந்த நீண்டசடையினையுடைய சிவபிரானடியவர்கள்; குறித்துவேண்டின குணமெனக்கொண்டு=தம்முள்ளத்துக் கருதிவேண்டியவைகளை நன்காகக்கருதி; ஒன்றுநீரெதிர்மறுதுவந்தளிக்குமுண்மைகேட்டு = ஒன்றையும் நீர் அவரெதிர்மறுக்காமல் விரும்பிக்கொடுக்கின்ற உண்மையான நிலைமையைக் கேள்வியுற்று; நும்பாலொன்று வேண்டியின்று நானிங்குவந்தனன்= உம்மிடத்தோர் பொருளைவிரும்பி இன்றைக்குநான் உம்மனைக்குவந்தேன்; அதனுக்கிசையலாமெனி லியம்பலா மென்றார்=நான் கேட்கும்பொருளை மறுதுகொடுத்தற்கு உடன்படுவீராயில் அதனை ஈதென்று சொல்லலாமென் றருளிச்செய்தார்.—எ-று. ஏ-அசை. (சு)

உம்மை-முற்றும்மை.

வஞ்சமாய் மறைத்துக் கேட்கின்றாராதலிற் கைதவமறையோரென்றார். யான்கேட்பதனையுங் குணமாகக்கொண்டு மறுது கொடுப்பீரென்னுங்கருத்தால் ஒன்று நீர்மறுதுவந்தளிக்கு முண்மைகேட்டென்றும், பிறர்கொடுத்தற்குரியரல்லர் நீரேகொடுப்பீரென்னுங் கருத்தால் நும்பாலென்றும், ஈவானெண்ணமுணராது இரப்போன் இரக்கும் பொருளை ஈதென முற்குறிக்கில் அவ்விரவு நாவிற்கு இழிவுபயக்குமாதலில் ஒன்றுவேண்டி என்றும், நாம் முன்னோர்காலத்தும் ஈங்கு

வந்ததில்லை என்னுங்கருத்தால் இன்றென்றும், இசைந்தாலல்லது கூறுதல் கூடா தென்னுங்கருத்தால் இசையலாமெனி லியம்பலாமென்றுங்கூறினர்.

என்னவவ்வுரை கேட்டியற்பகையார் யாதுமொன்று மென்பக்கலு ண்டாகில், அன்னதெம்பிரா னடியவருடைமை யையமில்லைநீ ரருள்செய் யுமென்ன, மன்னுகாதலுன் மனைவியைவேண்டி வந்ததிங்கென வங்கண ரெதிரே, சொன்னபோதிலு முன்னையின்மகிழ்ந்து தூயதொண்டனர் தொழுதுரைசெய்வார்.

(இ-ள்.) என்னவவ்வுரை கேட்டியற்பகையார்=என்று இவ்வாறு மறையவர்கூறிய அவ்வார்த்தையை இயற்பகைநாயனர்கேட்டு; யாதும் ஒன்றும் என்பக்கலுண்டாகில்=எவ்வித உயர்வுடையதாயிருப்பினும் அது ஒன்றுயிருப்பினும் என்னிடத்திருக்குமாகில்; அன்னதெம்பிரா னடியவருடைமை = அது எமது சிவபிரானடியவர்களது உடைமையாம்; ஐயமில்லைநீரருள்செய்யுமென்ன=(அதற்குச்) சந்தேகம் ஒருசிறிதும் இல்லை நீர் அருளிச்செய்யுமென்றுகேட்க; மன்னுகாதலுன் மனைவியைவேண்டிவந்த திங்கென=நிலைபெற்ற அன்பினையுடைய உன்மனையாளை எனக்குத் தரும்படிவிரும்பி இவ்விடத்து யான்வந்ததென்று; அங்கணரெதிரேசொன்னபோதிலும்=சிவபிரானகிய மறையவர் அவரெதிர் (சொல்லக்கூடாதமொழியைச்) சொன்னபொழுதும் (வெகுளாது); முன்னையின்மகிழ்ந்து=முன்னையினும் மிகமகிழ்ச்சியடைந்து; தூயதொண்டனர் தொழுதுரைசெய்வார்=மனந்தூயரான அத்திருநீலகண்டநாயனர் வணங்கிச்சொல்வாராயினர்.—எ-று. (எ)

யாதும் என்ற உம்மை உயர்வுசிறப்பு, ஒன்றும் என்றஉம்மை முற்றும்மை, சொன்னபோதிலும் என்ற உம்மை எதிர்மறை, முன்னையின் என்புழி சிறப்பும்மை விகாரத்தாற்றெக்கது. ஒருவன்தகாதது கூறுங்கால் மறைந்துகூறினுஞ் சகித்தலரிது உலகநடைக்கும் வேதநெறிக்கும் வேறுகச் சகிக்கலாற்றுமொழியை எதிர்நின்று சொன்னரென்பதுதோன்ற எதிரே என்றும், எதிர்நின்றுசொல்லியும் அதனல் ஒரு சிறிதும் வெகுளாது தன்னிடத்துள்ளதையே கேட்டாரென மிகமகிழ்ந்தாரென்பது தோன்ற முன்னையின்மகிழ்ந்தென்றும், அவரவ்வாறு நிற்றற்குக்காரணம் தாம்பற்றும்பொருளாகிய அடியாரிடத்துவைத்த பேரன்பால் தமக்குரியபொருளிடத்து வைத்த அவாவறுத்தலாகிய தூயகுணமே என்பதுதோன்றத் தூய தொண்டனரென்றுங் கூறினர்.

இதுவெனக்குமுன் புள்ளதேவேண்டி யெம்பிரான்றந்த பேறெனக்கென்னக், கதுமெனச்சென்று தம்மனைவாழ்க்கைக் கற்பின்மேம்படு காதலியாரை, விதிமணக்குல மடந்தையின்றுனையிம் மெய்த்தவர்க்கு நான் கொடுத்தனனென்ன, மதுமலர்க்குழன் மனைவியார்கலங்கி மனந்தெளிந்தபின் மற்றிதுமொழிவார்.

(இ-ள்.) இதுவெனக்கு முன்புள்ளதேவேண்டி = இவ்வாறுபணித்தது அடியேனிடத்து முன்னே உள்ளதனையேவிரும்பி; எனக்கெம்பிரான் றந்தபேறெ




சிவபிரான் விடப்பிராமணனாக இயற்பகை நாயனார்முன்தோன்றி மனைவியைக்கேட்க அவரீந்து மனைவிபால்விளம்ப அம்மாது அடியாரை வணங்கிநிற்க நாயனார் அழைத்துபோகும்படி பிரார்த்தித்தது.

ன்னு=அடிமையைத் தேவரீர்கற்பித்த பேருயிருந்ததெனக்கூறி ; கதுமெனச்செ ன்று=விரைந்து அம்மனையிற்போய் ; தம்மனை வாழ்க்கைக்கற்பின் மேம்படுகோத லியாரை=தமது மனையறத்திற்குரிய கற்பிற்சிறந்த மனைவியாரை ; விதிமணக்கு லமடந்தை=என்னால் விதிப்படி மணஞ்செய்யப்பட்ட நற்குலத்திற்பிறந்தமாதே; இன்றுனையிம்மெய்த்தவர்க்கு நான்கொடுத்தனனென்ன = இன்றைக்கு உன்னை மெய்ம்மையினையுடைத்தாகிய இத்தபோதனருக்கு நான்கொடுத்துவிட்டேனெ ன்றுசொல்ல (அதைக்கேட்ட); மதுமலர்க்குழன் மனைவியார்கலங்கி = தேன் நிறைந்தமலர்களைமுடித்த கூந்தலையுடைய மனைவியார் கலக்கமடைந்து ; மனந் தெளிந்தபின் இதுமொழிவார்=மனந்தெளிவடைந்தபின்பு இவ்வாறு கூறுவாரா யினர்.—எ-று. மற்று - அசை. (அ)

இல்லதனைக் கொடுவெனப்பணித்தால் அதனைக்கொடுக்க இயலாமை யின் பேதிலியாவேன் அவ்வாறாகாது உள்ளதனைக் கொடுவெனப்பணித்தலிற் பேறுடையனாயினேன் என்னுங்கருத்தால் உள்ளதே வேண்டித்தந்தபேறென் றார். மனைவியார் தகாதமொழி கேட்டாராதலிற் கலங்கியும் பின்கணவன்கருத் தின்படி நடத்தலே கற்புடையார்க்குக்கடனென்னும் முறைமைபற்றித்தெளிந்துய் நின்றாரென்க.

இன்றுநீரென்னை யருள்செய்ததிதுவே லென்னுயிர்க்கொரு நாத
நீருரைத்த, தொன்றைநான்செயு மத்தனையல்லா லுரிமைவேறுளதோ
வெனக்கென்று, தன்றனிப்பெருங் கணவனைவணங்கத் தாழ்ந்துதொண்
டனார் தாமெதிர்வணங்கச், சென்றுமாதவன் சேவடிபணிந்து திகைத்து
நின்றன டிருவினும்பெரியாள்.

(இ-ள்.) இன்றுநீரெனக் கருள்செய்ததிதுவேல்=இன்றைக்கு நீர் அடி மைக்கருளியது இவ்வாறாயின்; என்னுயிர்க்கொருநாத=என்னுடைய உயிருக்குத் தனித்துணையாகிய முதல்வரே ; நீருரைத்ததொன்றை நான்செயுமத்தனை யல்லா ல்=நீர்கூறியகட்டளை ஒன்றை நான் செய்தலேயன்றி ; உரிமைவேறுளதோ=உரி த்தாகச்செய்யத்தக்க காரியம் வேறொன்றுண்டோ; எனக்கென்று=எனக்கென்று கூறி; தன்றனிப்பெருங் கணவரைவணங்க=தன்னுடைய ஒப்பற்ற நாயகரைவ ணங்க ; தாழ்ந்துதொண்டனார்தா மெதிர்வணங்க = நிலமுறச் சாட்டாங்கமாய் மனைவியாரை நாயனாரும் தாம் வணங்கிநிற்ப (அப்பொழுது கணவனார் கருத்தின் படி); சென்றுமாதவன் சேவடிபணிந்து=(அங்கெழுந்தருளியிருந்த சிவபிரானா கிய மறையவரிடஞ்) சென்று அவர் திருவடிகளைவணங்கி ; திகைத்துநின்றனள் திருவினும்பெரியாள்=சீதேவியினும் சிறந்த பெருமையினையுடைய அவர் மனை வியார் திகைப்படைந்து நின்றார்.—எ-று. (கூ)

தன்மனையாளென்னும் பாவனையை விடுத்தாரென்னுங்கருத்தால் எதிர்வ ணங்க என்றும், கற்புடையார்க்குப் பயிலாதவற்றி லருவருப்புண்மையின் திகை த்து நின்றனளென்றுங் கூறினர்

மாதுதன்னைமுன் கொடுத்தமாதவர்தா மனமகிழ்ந்து பேருவகை
யின்மலர்ந்தே, யாதுநானினிச் செய்பணிதா னென்றிறைஞ்சி நின்றவர்

தம்மெதிர்நோக்கிச், சாதிவேதிய ராகியதலைவர் தையறன்னையான் றனி கொடுபோகக், காதன்மேவிய சுற்றமும்பதியுங் கடக்கநீதுணை போதுக வென்றார்.

(இ-ள்.) மாதுதன்னைமுன் கொடுத்தமாதவர்=தன்மனைவியாரை அவ் வடியார்கேட்டவுடனே தடையின்றிக்கொடுத்த இயற்பகைநாயனார்; மனமகிழ்ந்துபெருவகையின் மலர்ந்து=(இவ்வடியார்க்கிது கொடுக்கப்பெற்றேனே யென்னுங் கருத்தால் வந்த) மனக்களிப்போடு முகமலர்ச்சியடைந்து; நானினிச்செய்பணியாதென்று = இனிமேல் அடியேன்செய்யும்பணி யாதென்று வினவி; இறைஞ்சிநின்றவர்தம்மெதிர்நோக்கி=வணங்கிநிற்கும் அந்நாயனாரை எதிராகப் பார்த்து; சாதிவேதியராகியதலைவர்=வேதியர்குல முதல்வராகிய (சிவபிரான்); தையறன்னையான் தனிகொடுபோக=இப்பெண்ணையான் தனியேஅழைத்துக்கொண்டுபோகும்படிக்கும்; காதன்மேவிய சுற்றமும் பதியுங்கடக்க=இவளிடத்து விருப்புடையராகிய சுற்றத்தாரையும் இவ்வூரையுங்கடந்து செல்லும்படிக்கும்; நீ துணைபோதுகவென்றார்=நீ துணையாக வரவேண்டு மென்றருளிச்செய்தார்.—எ-று. தாம், தான் - அசை. (௧௦)

மெய்ப்பொருளாகிய அடியார் பத்தி ஒன்றையேகொண்டு அகம்புறமாகிய எவ்வகைப்பற்றையும் நீக்கிக்கொண்டமையின் மாதவர் என்றார். முற்றத் துறந்த முனிவர்க்கும் இச்செயலரிதென்பது தோன்றற்கென்க. யாதுநானினிச் செய்பணியென்றது, இவ்வாறடியார் வேண்டினகொடுத்து மேற்குறையுளவோ வெனவினவும் அவரியல்பு கருதியென்க.

வேறு.

என்றவ ரருளிச்செய்ய யானேமுன் செய்குற்றேவல்
ஒன்றிது தன்னையென்னை யுடையவ ரருளிச்செய்ய
நின்றது பிழையாமென்று நினைந்துவே றிடத்துப்புக்குப்
பொன்றிக ழறுவைசாத்திப் பூங்கச்சுப் பொலியவீக்கி.

(இ-ள்.) என்றவரருளிச்செய்ய=இவ்வாறு சிவபிரானாகிய மறையவர் பணித்தருள(அதுகேட்ட நாயனார்); யானேமுன்செய்குற் றேவலொன்றிதுதன்னை=அடியேனே கட்டளையிடுமுன் செய்யவேண்டிய இக்குற்றேவல் ஒன்றை; என்னையுடையவரருளிச்செய்ய நின்றதுபிழையாமென்றுநினைந்து = என்னையாளாகவுடைய இவ்வடியார் பணித்தருளும்படி தாழ்த்து நின்றது அடியேன் குற்றமாமென்று நினைந்து; வேறிடத்துப்புக்கு = வேறோரிடத்துச்சென்று; பொன்றிகழறுவைசாத்தி =பீதாம்பரத்தையணிந்து (அதன்மேல்); பூங்கச்சுப்பொலிய வீக்கி=பொலிவினையுடைத்தாகிய அரைக்கச்சைஇறுகப்பிணித்து.—எ-று. (௧௧)

வாளொடு பலகையேந்தி வந்தெதிர் வணங்கிமிக்க
ஆளரி யேறுபோல்வா ரவரைமுன் போக்கிப்பின்னே
தோளிணை துணையேயாகப் போயினார் துன்னினாரை
நீளிடைப் படமுன்கூடி நிலத்திடை வீழ்த்தநேர்வார்.

நாயனார்போர்க்கோலந்தாங்கிவர,அடியார் சுற்றவர்களைக்கண்டு,மாதுமுகநோக்க,நாயனார்அவர்களைக்கண்டித்து விடைபெற்றுச்செல்ல,அடியார் திருச்சாய்க்காடுக்கருகிற்சென்றபோது,நாயனாரை அழைக்க,போவதற்குள், அடியாரைக்காணாது,மனைவியைகண்டதிசயிக்க,இடபாரூடராய்,காட்சி அருளியது).

(இ-ள்.) வாளொடுபலகையேந்தி=வாளுடன் கேடகத்தையுங் கையில் எடுத்துக்கொண்டு; வந்தெதிர்வணங்கி=சிவபிரான் எதிராகவந்து தொழுது; மிக்கஆளரியேறுபோல்வார்=மிகுந்த வலியினையுடைய மிருகராசனென்னும் சிங்கேறுபோலுந் தோற்றத்தினையுடைய இயற்பகைநாயனார்; அவரைமுன்போக்கி=அம்மறையவரையும் மனைவியாரையும் முன்போகச்செய்து; பின்னேதோளிணைதுணையேயாகப்போயினார்=அவர் பின்பு தன்னுடைய இரண்டுதோள்வலியேதமக்குத் துணையாகச்சென்றார்; தன்னினைரை நீளிடைப்படமுன் கூடிநிலத்திடைவீழ்த்தநேர்வார்=மனைவியார் காரணமாகத் தம்மோடெதிர்த்து வந்தவர்களைநெடுந்தூரத்தில்வரும்பொழுதே முற்பட்டு வளைந்து நிலத்தில் துணித்து விழுத்தும்படியாக இட்டமுள்ளவராய்.—எ-று. (௧௨)

ஆளரியேறுபோல்வார் வீழ்த்த நேர்வாராய்ப்போயினாரென இயையும். பலர் திரண்டுவருவராதலின் தான்கொடுத்த மனைவியாரை மறையவரினின்றும் பிரித்துக்கொண்டு போதலுங் கூடுமென்னுங்கருத்தால் அவரவ்வாறு செய்யுமுன் தூரத்தேதுணிக்குங் கருத்துடையராய்ச் சென்றாரென்பதுதோன்ற நீளிடைப்பட முன் கூடியென்றார்.

மனைவியார் சுற்றத்தாரும் வள்ளலார் சுற்றத்தாரும்
இனையதொன் றியாரேசெய்தா ரியற்பகை பித்தனானாற்
புனையிழை தன்னைக்கொண்டு போவதா மொருவனென்று
துனைபெரும் பழியைமீட்பான் றொடர்வதற் கெழுந்துசூழ்வார்.

(இ-ள்.) மனைவியார்சுற்றத்தாரும் = இயற்பகைநாயனார் மனைவியாருடைய உறவினரும்; வள்ளலார் சுற்றத்தாரும் = அந்நாயனாரது உறவினரும்; இனையதொன்றியாரேசெய்தார்=மனைவியைக் கொடுத்தலாகிய இச்செய்கையை இதுகாறும் யாவர்செய்தார் (ஒருவரும் செய்யவில்லை); இயற்பகைபித்தனானால்= இவ்வியற்பகை பித்துமேற்கொண்டவனானால்; புனையிழைதன்னைக் கொண்டுபோவதாமொருவனென்று=ஒருமறையவன் ஆபரணங்களையணிந்த இப்பெண்ணைக் கொண்டுபோதலைச் செய்வானுமென்று; துனைபெரும் பழியைமீட்பான்=தம் குடும்பத்தைத் தொடர்ந்த பெரும்பழியை நீக்கிக்கொள்ளும்படி; தொடர்வதற் கெழுந்துசூழ்வார்=மறையவரைத் தொடர்வதற்கு ஒருங்கெழுந்து சூழ்வாராயினார்.—எ-று. ஏகாரம்-எதிர்மறை. (௧௩)

அவன் பித்தனானாலும் நாம்வலியுடையோமாதலின் மறையவன் கொள்ள வொட்டோம் என்னுங்கருத்தால் போவதாமொருவனென்று கூறினர் என்க. ஆமென்றது நாம் வலியுடையோமாக வலியில்லாதான் எவ்வாறுகொண்டு செல்வானென்னும் பொருள் குறித்து நின்ற ஓரிடைச்சொல்.

வேலொடு வில்லும்வாளுஞ் சுரிகையு மெடுத்துமிக்க
காலென விசையிற்சென்று கடிநகர்ப் புறத்துப்போகிப்
பாலிரு மருங்குமீண்டிப் பரந்தவார்ப் பரவம்பொங்க
மால்கடல் கிளர்ந்ததென்ன வந்தெதிர் வளைத்துக்கொண்டார்.

(இ-ள்.) வேலொடுவில்லும்வாளுஞ் சரிகையுமெடுத்து=வேலுடன் வில்லையும் உடைவாளையும் சரிகையையும் எடுத்துக்கொண்டு; மிக்ககாலெனவிசையிற்சென்று = பெருங்காற்றுப்போல் விசையோடுநடந்து; கடிநகர்ப்புறத்துப்போகி = காவலினையுடைத்தாகிய அந்நகர்ப்புறத்துச்சென்று; இருபாலிருமருங்குமீண்டி=அவர் வலமிடமாகிய இருபாலினும் முன்னும் பின்னுமாகிய இருபக்கத்தும் நெருங்கி; பரந்தவார்ப்பரவம்பொங்க = பரம்பிய ஆரவாரம் அதிகரிக்க; மால்கடல்கிளர்ந்ததென்ன=பெருமையினையுடைத்தாகிய கடலெழுந்ததுபோல; வந்தெதிர்வளைத்துக்கொண்டார் = சிவபிரான் எதிரேவந்து சூழ்ந்துகொண்டார்கள்.—எ-று. (கச)

வழிவிடுந் துணைபின்போத வழித்துணை யாகியுள்ளார்
கழிபெருங் காதல்காட்டிக் காரிகை யுடன்போம்போதில்
அழிதகன் போகேலீண்ட வருங்குலக் கொடியைவிட்டுப்
பழிவிட நீபோவென்று பகர்ந்தெதிர் நிரைந்துவந்தார்.

(இ-ள்.) வழிவிடுந்துணைபின்போத = தம்மை வழிவிடுதற்குரிய துணையாக இயற்பகைநாயனார் பின்னேசெல்ல; வழித்துணையாகியுள்ளார்=ஆன்மாக்கள்செல்லும் முத்திநெறிக்குத் துணையாயுள்ள சிவபிரானாகிய மறையவர்; கழிபெருங்காதல்காட்டி=இயற்பகைநாயனார் மனைவியாருக்கு மிகப்பெரிய விருப்பத்தைத் தம்மிடத்திற் காட்டிக்கொண்டு; காரிகையுடன்போம்போதில் = அவருடன் போகும்பொழுது; அழிதகன்போகேல்=பெருமைகெட்டவனே நீ போகாதொழிவாய்; ஈண்டவருங்குலக்கொடியைவிட்டு = இவ்விடத்து அந்த இயற்பகையாரது குலத்திற்சிறந்த மனைவியாரைவிட்டு; பழிவிடநீபோவென்று=உன்னைத்தொடர்ந்த பழியானது விடும்படி நீபோவாயாகவென்று; பகர்ந்தெதிர் நிரைந்து வந்தார்=சொல்லிக்கொண்டு அவரெதிரே வரிசையாய் வந்தார்கள்.—எ-று.

தகவழிந்தவனென்பது அழிதகனெனமாறிநின்றது. எவ்வுயிர்க்கும் வழித்துணையாய் நிற்குஞ் சுவதந்திரமுடையார் அந்நாயனாரைத் துணையாகக்கொள்ளுங் காருணியத்தால் வழிவிடுந் துணைபின் போத என்றார்.

மறைமுனி யஞ்சினான்போன் மாதினைப் பார்க்கமாதும்
இறைவனே யஞ்சவேண்டா வியற்பகை வெல்லுமென்ன
அறைகழ லண்ணல்கேளா வடியனே னவரையெல்லாந்
தறையிடைப் படுத்துகின்றேன் றளர்ந்தருள் செய்யேலென்று.

(இ-ள்.) மறைமுனியஞ்சினான்போல்=சிவபிரானாகிய மறையவர்பயப்பட்டதைப்போலக்காட்டி; மாதினைப்பார்க்க=அவ்வியற்பகைநாயனார் மனைவியைப்பார்க்க; மாதுமிறைவனே யஞ்சவேண்டா வியற்பகைவெல்லுமென்ன = அம்மனைவியாரும் பயப்படவேண்டாம் இவ்வியற்பகையார் அவர்களைவெல்லுவாரென்று சொல்ல; அறைகழலண்ணல்கேளா=ஒலிக்கின்ற வீரக்கழலை யணிந்த இயற்பகைநாயனார் அதைக்கேட்டு; அடியனே னவரையெல்லாம் தறையிடைப்படுத்துகின்றேன்=அடியேன் ஈண்டுவந்தவர்களையெல்லாம் இறக்கச்செய்து

பூமியில் வீழ்த்துகின்றேன் இதற்காக; தளர்ந்தருள்செய்யேலென்று=தேவரீர் மனங்கலங்கவேண்டுவதில்லையென்று விண்ணப்பஞ்செய்து.—எ-று. (௧௬)

பெருவிற லாளியென்னப் பிறங்கெரி சிதறநோக்கிப்
பரிபவப் பட்டுவந்த படர்பெருஞ் சுற்றத்தாரை
ஒருவரு மெதிர்நில்லாமே யோடிப்போய்ப் பிழையுமன்றேல்
எரிசுடர் வாளிற்கூறாய்த் துடிக்கின்றீ ரென்றுநேர்ந்தார்.

(இ-ள்.) பரிபவப்பட்டுவந்த=அவமானமடைந்துவந்த; படர்பெருஞ்சுற்றத்தாரை=நெருங்கிய பெரிய உறவினரை; பெருவிறலாளியென்ன=மிக்க வலியினையுடைய சிங்கம்போல; பிறங்கெரிசிதறநோக்கி=கோபத்தீயினின்றும் விளங்குகின்ற தீப்பொறிகள் சிதறும்படிபார்த்து; ஒருவருமெதிர் நில்லாமேயோடிப்போய்ப் பிழையும்=நீங்களொருவரும் என்னெதிரில் நில்லாமல் ஓடிப்பிழையுங்கள்; அன்றேலெரிசுடர்வாளிற்கூறாய்த் துடிக்கின்றீரென்று நேர்ந்தார்=ஓடாதொழிவீரேல் ஒளிவீசுகின்ற வாளினால் இருகூறாய்ப் பூமியில்விழுந்து துடிப்பீர்களென்று அவரைக்கிட்டினார்.—எ-று. இவ்விரண்டுங் குளகம். (௧௭)

ஏடநீ யென்செய்தாயா லித்திற மியம்புகின்றாய்
நாடுறு பழியுமொன்னார் நகையையு நாணாயின்று
பாடவ முரைப்பதுன்றன் மனைவியைப் பனவற்கீந்தோ
கூடவே மடிவதன்றிக் கொடுக்கயா மொட்டோமென்றார்.

(இ-ள்.) ஏட நீயென் செய்தாய் = எட இயற்பகையே நீ இங்கு என்ன காரியஞ்செய்தாய்; இத்திற மியம்புகின்றாய் = இவ்வாறான வீரியமொழியைச் சொல்கின்றாய்; நாடுறு பழியுமொன்னார் நகையையுநாணாய்=நாட்டில் விளைந்த பழிக்கும் பகைவர்கள்செய்யும் நகைக்கும் நீநாணவில்லை; இன்றுபாடவ முரைப்பது = நீ இன்றைக்குச் சமத்துக்கூறுவது; உன்றன் மனைவியைப் பனவற்கீந்தோ=உன்னுடைய மனையாளை ஒரு மறையவனுக்குக் கொடுத்தா (அதனால்); கூடவே மடிவதன்றிக் கொடுக்கயா மொட்டோ மென்றார் = உன்னுடன்கூட நாங்களும் ஒருங்கு இறத்தலே யல்லாமல் இப்பெண்ணைக்கொடுக்க உடன்படோமென்றார்கள்.—எ-று. ஆல்-அசை. (௧௮)

மற்றவர் சொன்னமாற்றங் கேட்டலு மனத்தின்வந்த
செற்றமுன் பொங்கவுங்க ளுடற்றுணி யெங்குஞ்சிந்தி
முற்றுநும் முயிரையெல்லா முதல்விசும் பேற்றிக்கொண்டு
நற்றவர் தம்மைப்போக விடுவனென் றெழுந்தார்நல்லோர்.

(இ-ள்.) அவர்சொன்ன மாற்றங்கேட்டலும் = சுற்றத்தார்கூறிய அம்மொழியைக் கேட்டவுடனே; முன்மனத்தின்வந்த செற்றம்பொங்க=முன்னே மனசிலுதித்த கோபமானது அதிகப்பட; உங்களுடற்றுணி யெங்குஞ்சிந்தி= உங்களுடைய உடம்பின் துண்டுகளை எவ்விடத்துஞ்சிதறி; முற்றுநும்முயிரை யெல்லாம் முதல்விசும் பேற்றிக்கொண்டு =ஒழியாமல் உம்முடைய உயிர்களை

யெல்லாம் முதலில் விண்ணுலகடையச் செய்ததன்மேல் ; மற்றவர் தம்மைப் போக விடுவனென் றெழுந்தார் நல்லோர்=நல்ல தவத்தினையுடைய இம்மறைய வரைத் தடையில்லாமற் கொண்டுபோகும்படி செய்வேனென மேற்கொண்டெழுந்தார் இயற்பகை நாயனார்.—எ-று. மற்று-அசை. (கக)

நேர்ந்தவ ரெதிர்ந்தபோது நிறைந்தவச் சுற்றத்தாருஞ்
சார்ந்தவர் தம்முன்செல்லார் தையலைக் கொண்டுபெற்றம்
ஊர்ந்தவர் படிமேற்செல்ல வுற்றெதி ருடன்றுபொங்கி
ஆர்ந்தவெஞ் சினத்தான்மேற்சென் றடர்ந்தெதிர் தடுத்தாரன்றே.

(இ-ள்.) நேர்ந்தவ ரெதிர்ந்தபோது = (அவ்வியற்பகை நாயனார் இவ் வார்த்தைகளைச் சொல்லிக்) கிட்டி எதிர்த்த சமயத்து ; நிறைந்தவச் சுற்றத்தாரும்=(அவர் மனைவியாரை அழைத்துக்கொண்டுபோக வொட்டாமல்) திரளாக வந்த அவ்வுறவினரும்; சார்ந்தவர் தம்முன்செல்லார்=தம்மோடு மாறுபட்டுவரும் இயற்பகை நாயனாரை எதிர்க்காமல் ; தையலைக்கொண்டுபெற்றம் ஊர்ந்தவர் படிமேற்செல்ல=அவர் மனைவியாரை அழைத்துக்கொண்டு இடபத்தைவாகனமாகக் கொண்ட சிவபிரான் பூமியின்மேல் எழுந்தருள ; உற்றெதிரு டன்றுபொங்கி= அவரைக்கிட்டி எதிராக மாறுபட்டு மிக்கு ; ஆர்ந்தவெஞ் சினத்தான் மேற்சென்று=(தம்முள்ளத்து) நிறைந்த கொடியகோபத்தால்மேற்கொண்டுசென்று; அடர்ந்தெதிர் தடுத்தார்=நெருங்கி எதிராகக் (கொண்டுபோக வொட்டோமென்று சிவபிரானாகிய மறையவரைத்) தடுத்தார்கள்.—எ-று. அன்று,ஏ- அசை. (உ0)

சென்றவர் தடுத்தபோதி லியற்பகை யார்முன்சீறி
வன்றுணை வாளேயாகச் சாரிகை மாறிவந்து
துன்றினர் தோளுந்தாளுந் தலைகளுந் துணித்துவீழ்த்து
வென்றடு புலியேறென்ன வமர்விளை யாட்டின்மிக்கார்.

(இ-ள்.) சென்றவர் தடுத்தபோதில்=(இவ்வாறு) மேற்சென்று அவ்வுற வினர்கள் (சிவபிரானாகிய அம்மறையவரைத்) தடுத்தவிடத்து ; இயற்பகையார் முன்சீறி=(அதைக்கண்ட) இயற்பகைநாயனார் அவர்முன் வெகுண்டு; வன்றுணை வாளாக=தமக்குவலிய துணையானது வாட்படையாகக் கொண்டு; சாரிகை மாறிவந்து = வலமிடமாகச் சுற்றிவந்து ; துன்றினர் தோளுந்தாளும்=தம்மோ டெதிர்த்தவர்களது தோள்களையுங் கால்களையும்; தலைகளுந துணித்து வீழ்த்து= தலைகளையும் வெட்டி நிலமுறவிழுத்தி; வென்றடு புலியேறென்ன=ஏனையமிருகங் களைவென்று கொல்லும் புலிப்போத்துப்போல் ; அமர்விளையாட்டின் மிக்கார்= போராடற் றொழிலில் மிக்கு விளங்கினார்.—எ-று. ஏ-அசை. (உக)

சாரி=சரித்தல் ; கை=இடம். தான்நிற்கும் இடத்தினின்று வலமாயும் இடமாயும் சரித்தலில் சாரிகை என்றாயிற்று.

மூண்டுமுன் பலராய்வந்தார் தனிவந்து முட்டினார்கள்
வேண்டிய திசைகடோறும் வேறுவே றமர்செய்போழ்தில்

ஆண்டகை வீரர்தாமே யனைவர்க்கு மனைவராகிக்
காண்டகு விசையிற்பாய்ந்து கலந்துமுன் றுணித்துவீழ்த்தார்.

(இ-ள்.) மூண்டுமுன் பலராய்வந்தார் = போர் செய்யும்படி ஒருங்கு சேர்ந்து முன்னே இயற்பகை நாயனாரிடத்துப் பலராய்வந் தெதிர்த்தவர்களும்; தனிவந்து முட்டினார்கள் = தனியேவந்து எதிர்த்தவர்களுமாய்; வேண்டிய திசைகடோறும் = தாம் விரும்பிய திக்குகளெல்லாம்; வேறுவே றமர்செய் போழ்தில் = (அவர்களும் வாள்முதலிய ஆயுதங்களை எடுத்துக்கொண்டு) தனித்தனியே போர்செய்யுஞ் சமயத்தில்; ஆண்டகை வீரர்தாமே=ஆண் தன்மையிற் சிறந்த வீரத்தையுடைய இயற்பகை நாயனார் தாம் ஒருவரோ; அனைவர்க்கு மனைவராகி = அவரெல்லாருக்கும் அவ்வெல்லாருமாகி; காண்டகு விசையிற் பாய்ந்து=கண்டார் மதிக்கத்தக்க விசையோடு பாய்ந்து; கலந்துமுன் றுணித்து வீழ்த்தார்=அவரைக்கிட்டி முற்பட்டுவெட்டி வீழ்த்தினார்.—எ-று. (உஉ)

விசையிற்பாய்ந்து விரைவின்று தனித்தனி எதிர்த்தலில் அனைவர்க்கு மனைவராயினா ரென்பது கருத்து.

சொரிந்தன குடல்களெங்குந் துணிந்தன வுடல்களெங்கும்
விரிந்தன தலைகளெங்கு மிடைந்தன கழுகுமெங்கும்
எரிந்தன விழிகளெங்கு மெதிர்ப்பவ ரொருவரின்றித்
திரிந்தனர் களனிலெங்குஞ் சிவன்கழல் புனைந்தவீரர்.

(இ-ள்.) சொரிந்தனகுடல்களெங்கும் = (இயற்பகைநாயனார் வாளால் தமிக்குமிடத்துக்) குடல்களெங்குஞ் சொரிந்து கிடந்தன; துணிந்தனவுடல்களெங்கும்=உடம்புகள் எவ்விடங்களினும் வெட்டப்பட்டுக்கிடந்தன; விரிந்தன தலைகளெங்கும்=சிரசுகள் எவ்விடங்களினும் வெட்டுண்டு விரிந்துகிடந்தன; மிடைந்தனகழுகுமெங்கும் = கழுகுகளும் (பருந்துகளும்) எவ்விடங்களினும் நெருங்கின; எரிந்தனவிழிகளெங்கும்=கண்கள் கோபத்தால் எவ்விடங்களினுந் தீக்கனன்று கொண்டிருந்தன; சிவன்கழல் புனைந்தவீரர்=சிவபிரான் திருவடியைத் தம்மிதயத்து மறவாது சூடிக்கொண்ட இயற்பகைநாயனார்; எதிர்ப்பவ ரொருவரின்றி=தம்மோடெதிர்த்து வருவா ரொருவருமில்லாமல்; களனிலெங் குந்திரிந்தனர்=போர்க்களத்தில் எவ்விடத்துஞ் சஞ்சரித்தனர்.—எ-று. (உ௩)

கோபத்தா லெதிர்ந்தாரது சிரங்கள் துணிக்கப்பட்டுழி அதனிடத்துள்ள கண்கள் கோபம் ஆறுதிருத்தலைக்காட்டலில் எரிந்தனவிழிகளெங்கும் என்றார்.

மாடலை குருதிபொங்க மடிந்தசெங் களத்தினின்றும்
ஆடுறு செயலின்வந்த கிளைஞரோ டணைந்தார்தம்மில்
ஓடினா ருள்ளாருய்ந்தா ரொழிந்தவ ரொழிந்தேமாண்டார்
நீடிய வாளுந்தாமு நின்றவர் தாமேநின்றார்.

(இ-ள்.) மாடலைகுருதிபொங்க = பக்கங்களில் அலையைவீசிக்கொண்டு இரத்தவெள்ளமானது பொங்கியோடும்படி; மடிந்த செங்களத்தினின்றும்=

(எதிர்த்த சுற்றத்தார்களெல்லாரும்) இறந்தசெந்நிறமான அப்போர்க்களத்தினின்றும்; ஆறுசெயலின்வந்த கிளைஞரோடு=வெற்றியடையுஞ்செயல் காரணமாய் வந்த உறவினரோடு; அணைந்தார்தம்மில் = கூடவந்தவர்களில்; ஓடினுருள்ளாருய்ந்தார் = ஓடினவர்கள் பிழைத்தார்கள்; ஒழிந்தவரொழிந்தேமாண்டார்= ஓடாது எதிர்த்தவர்கள் ஒருவருந் தவறுமலே இறந்தார்கள்; நீடியவாளுந்தாமுநின்றவர்தாமேநின்றார்=நீண்ட வாளாயுதமுந் தாமுமாகவந்து நின்ற இயற்பகைநாயனார் ஒருவருமே நின்றார்.—எ-று. (உ௪)

ஏகாரமிரண்டில் முன்னையது தேற்றம் பின்னையது பிரிநிலை.

திருவுடை மனைவியாரைக் கொடுத்திடைச் செறுத்துமுன்பு
வருபெருஞ் சுற்றமெல்லாம் வாளினுற் றுணித்துமாற்றி
அருமறை முனியைநோக்கி யடிகணீ ரஞ்சாவண்ணம்
பொருவருங் கானநீங்க விடுவனென் றுடனேபோந்தார்.

(இ-ள்.) திருவுடைமனைவியாரைக்கொடுத்து = சிறப்பினையுடைய தம் மனைவியாரை(மறையவருக்குக்)கொடுத்து; இடைச்செறுத்துமுன்பு வருபெருஞ் சுற்றமெல்லாம் = அது காரணமாய் இடையே கோபித்துத் தம்முன் எதிர்த்து வரும் மிக்க உறவினரையெல்லாம்; வாளினுற்றுணித்துமாற்றி=வாட்படையால் வெட்டி இறக்கச்செய்து; அருமறைமுனியைநோக்கி=அரிய வேதங்களையுணர்ந்த மறையவர் வேடங்கொண்ட சிவபிரானைப்பார்த்து; அடிகணீரஞ்சாவண்ணம்=சுவாமியே நீர்பயப்படாதிருக்கும்படி; பொருவருங்கானநீங்க விடுவனென்று=ஒப்பற்ற இக்காட்டைக்கடந்து செல்லும்படி துணையாக உம்மோடுவந்து அனுப்புகின்றேனென்று; உடன்போந்தார்=அவருடன்போனார்.—எ-று. (உ௫)

ஏ - அசை.

இருவரா லறியவொண்ணு வொருவர்பின் செல்லுமேழை
பொருதிறல் வீரர்பின்பு போதமுன் போகும்போதில்
அருமறை முனிவன்சாய்க்கா டதன்மருங் கணையமேவித்
திருமலி தோளினுனை மீளெனச் செப்பினுரே.

(இ-ள்.) இருவராலறியவொண்ணு ஒருவர்பின் செல்லுமேழை=திருமால்பிரமன் என்னும் இருவராலுந் தேடி அறியக்கூடாமல் ஒளித்து நின்ற சிவபிரான் பின்பு நடக்கின்ற அவ்வியற்பகைநாயனாரின் மனைவியார்; பொருதிறல்வீரர்பின்பு போத = போர்செய்யும் வலியினையுடைய இயற்பகைநாயனார் பின்னேசெல்ல; முன்போகும்போதில் = தாம் முன்னேசெல்லும்போதில்; அருமறைமுனிவர்=அரிய வேதமுனிவராகிய சிவபிரான்; சாய்க்காடதன்மருங் கணையமேவி=காவிரிப்பூம்பட்டினத்தின்கணுள்ள திருச்சாய்க்காடென்னுந் தலத்தின் சமீபத்தை அடைந்து; திருமலிதோளினுனை=அழகுநிறைந்த தோள்களையுடைய இயற்பகைநாயனாரை; மீளெனச்செப்பினுரே=வீட்டிற்குத் திரும்பிப்போம் என்று அருளிச்செய்தார்.—எ-று. (உ௬)

தவமுனி தன்னைமீளச் சொன்னபின் றலையாலார
அவன்மலர்ப் பதங்கள்சூடி யஞ்சலி கூப்பிநின்று
புவனமூன் றுய்யவந்த பூசுரன் றன்னையேத்தி
இவனருள் பெறப்பெற்றேனென் றியற்பகை யாருமீண்டார்.

(இ-ள்.) தவமுனிதன்னைமீளச் சொன்னபின்=தவத்தினையுடைய அம் மறையவர் தன்னை வீட்டிக்கு மீண்டுபோவென்றருளிச்செய்தபின்பு; தலையாலார அவன்மலர்ப்பதங்கள்சூடி=சிரசினுற் பொருந்தும்படி மலர்போன்ற அவர் திருவடிகளைவணங்கி; அஞ்சலிகூப்பிநின்று=அஞ்சலிசெய்து நின்றுகொண்டு; புவனமூன்றுய்யவந்த = மூவுலகத்தாரும் உய்யும்படி எழுந்தருளிய; பூசுரன் றன்னையேத்தி = அம்மறையவரைத்துதித்து; இவனருள் பெறப்பெற்றேனென்று=இவர் திருவருளைப்பெறுதற்கு அடியேன் பெற்றுக்கொண்டேனென்று; இயற்பகையாருமீண்டார் = (மறையவருஞ்செல்ல) இயற்பகைநாயனாரும் தம் மனைக்குத் திரும்பினார்.—எ-று. (உஎ)

உம்மை. இறந்தது தழீஇயது.

செய்வதற் கரியசெய்கை செய்தநற் றொண்டர்போக
மைதிகழ் கண்டனெண்டோண் மறையவன் மகிழ்ந்துநோக்கிப்
பொய்தரு முள்ளமில்லான் பார்க்கிலன் போனுனென்று
மெய்தரு சிந்தையாரை மீளவு மழைக்கலுற்றார்.

(இ-ள்.) செய்வதற்கரியசெய்கைசெய்த=யாவருஞ் செய்தற்கருமையாகிய செய்கையைச்செய்த; நற்றொண்டர்போக = நன்மையினையுடைய இயற்பகைநாயனார் செல்ல; மைதிகழ் கண்டனெண்டோண் மறையவன் மகிழ்ந்து நோக்கி=நீலநிறம்விளங்கிய கண்டத்தையும் எட்டுத்திருப்புயங்களையும் உடைய சிவபிரானுகிய மறையவர் மகிழ்ச்சியடைந்து பார்த்து; பொய்தருமுள்ளமில்லான்=பொய்யில்லாத மனத்தினையுடையவனுதலின் (இவ்வியற்பகைதன் மனைவியைக்கொடுத்து); பார்க்கிலன்போனுனென்று=திரும்பிப்பாராமல் போகின்றுனென்று; மெய்தருசிந்தையாரை=மெய்ம்மைநிறைந்த திருவுள்ளத்தையுடைய அவ்வியற்பகைநாயனாரை; மீளவுமழைக்கலுற்றார் = அனுப்பியபின்னும் அழைக்கின்றார்.—எ-று. உம்மை இறந்தது தழீஇயது. (உஅ)

இயற்பகை முனிவாவோல மீண்டுநீ வருவாயோலம்
அயர்ப்பிலா தானேயோல மன்பனே யோலமோலஞ்
செயற்கருஞ் செய்கைசெய்த தீரனே யோலமென்றான்
மயக்கறு மறையோனிட்டு மாலயன் றேடநின்றான்.

(இ-ள்.) இயற்பகைமுனிவாவோலம் =இயற்பகைமுனிவனே அடைக்கலம்; ஈண்டுநீவருவாயோலம்=இவ்விடத்து விரைவில் நீ வருவாயாக உனக்கு அடைக்கலம்; அயர்ப்பிலாதானே யோலம் = சிவநேசர்களை என்றும் மறவாதவனே அடைக்கலம்; அன்பனே யோலமோலம்=என்மாட்டன்புடையவனே

உனக்கு அடைக்கலம் அடைக்கலம்; செயற்கருஞ் செய்கைசெய்த=செய்தற்கரிய காரியத்தைச்செய்த; தீரனே யோலமென்றார்=உறுதியான பத்தியுடையவனே அடைக்கல மென்றார்; மயக்கறு மறையோலிட்டுத்தேட=மயக்கத்தை யறுத்தற்குக் காரணமான வேதங்கள் தம்மைச்காணாது அலறித்தேடவும்; மாலயன் தேடநின்றான் = திருமால் பிரமன் என்னும் இருவரும் அடிமுடி யறியாமல் தேடவும் நின்ற சிவபிரான்.—எ-று. (உகூ)

ஓலிட்டு என்பதை செயவெனெச்சத் திரிபாகக்கொண்டு ஓலிடவும் மாலயன்தேடவும் நின்றவரென் றுரைத்தலு மொன்று. பிறர்பழிக்கு நாணாது மனையாளைக் கொடுத்தாராதலின் முனிவரென்றும், தன்னடியா ரிடத்துச்செய்த பத்தி தன்னதேயாகலின் அயர்ப்பிலாதானே என்றும், அவ்வாறு தம்மிடத்துப்போல அடியாரிடத்தும் ஒரியல்பான பத்தியுடைமையின் அன்பனே என்றுங் கூறினர். தீரனென்றது, அச்செய்கை காரணமாய் அவரது திட்ப முணர்த்தியது. மயக்கம்=ஐயம். பந்த வீடுகளின் இயல்பையும் பிற அறங்களி னியல்பையும் ஐயமற உணர்த்தலின் மயக்கறு மறையென்றார். ஓலமென்றது, அச்சம்நிகழுழி அதனைத் தீர்க்கக்கூறும் ஓர் விளிப்பொருளவாகிய இடைச்சொல்.

அழைத்தபே ரோசைகேளா வடியனேன் வந்தேன்வந்தேன்
பிழைத்தவ ருளரேலின்னும் பெருவலித் தடக்கைவாளின்
இழைத்தவ ராகின்றாரென் றியற்பகை யார்வந்தெய்தக்
குழைப்பொலி காதினானு மறைந்தனன் கோலங்கொள்வான்.

(இ-ள்.) அழைத்தபே ரோசைகேளா=இவ்வாறு சிவபிரானுகிய மறையவர் அழைத்த பெரிய ஓசையைக்கேட்டு; அடியனேன் வந்தேன் வந்தேன்= அடியேன் இவ்விடத்து வந்தேன் வந்தேன்; பிழைத்தவ ருளரேலின்னும்= உயிர்தாங்கி ஓடிப்பிழைத்த உறவினர்கள் உம்மைத் தீங்குசெய்தற்கு இருப்பாராயின் இன்னும் அவர்கள்; பெருவலித் தடக்கைவாளின் இழைத்தவராகின்றாரென்று = மிக்க வலிமையினையுடைய நீண்டகையிலிருக்கும் வாட்படையினால் தங்கள் ஆயுள் குறைந்தவராக ஆகின்றாரென்று சொல்லி; இயற்பகையார்வந்தெய்த = இயற்பகை நாயனார் விரைந்துகிட்ட; குழைப்பொலி காதினானும்= சங்கக்குழையால் பொலிவடைந்த காதினையுடைய மறையவராகிய சிவபிரானும்; கோலங்கொள்வான் மறைந்தனன்=அவர்க்குக் காட்சிகொடுத் தருளும்படி மறைந்தருளினார்.—எ-று. (௩௦)

உம்மை, இறந்தது தழீஇயது. வந்தேன் வந்தேன் என்பது விரைவுபற்றிய அடுக்கு. வந்தேன் என விரைவுபற்றி எதிர்காலம் இறந்தகால மாயிற்று.

சென்றவர் முனியைக்காணார் சேயிழை தன்னைக்கண்டார் [னத்
பொன்றிகழ் குன்றுவெள்ளிப் பொருப்பின்மேற் பொலிந்ததென்
தன்றுணை யுடனேவானிற் றலைவனை விடைமேற்கண்டார்
நின்றிலர் தொழுதுவீழ்ந்தார் நிலத்தினின் றெழுந்தார்நேர்ந்தார்.

(இ-ள்.) சென்றவர் முனியைக்காணார் = (மறையவரிடத்து விரைந்து) சென்ற இயற்பகைநாயனார் அம்மறையவரைக்காணுமல்; சேயிழை தன்னைக் கண்டார் = (அங்கு) மனைவியாரை மாத்திரங் கண்டார்; பொன்றிகழ்குன்று = (அப்பொழுது) பொன்மலையானது; வெள்ளிப் பொருப்பின்மேற் பொலிந்த தென்ன = வெள்ளி மலையின்மேல் இருந்து பிரகாசித்ததுபோல; தன்றுணையுடனேவானிற் றலைவனை விடைமேற் கண்டார் = தனது இடப்பாகத்தில் எழுந்தருளிய உமாதேவியாரோடு ஆகாயத்தின்கண் சிவபிரானை இடபவாகனத்தின் மேற்காட்சி கொடுத்தருளும்படி கண்டார்; நின்றிலர் தொழுது வீழ்ந்தார் = தரியாது நிலமுறச்சாட்டாங்கம் வணங்கினர்; நிலத்தினின் றெழுந்தார் நேர்ந்தார் = பூமியினின்று மெழுந்து வழிபட்டார்.—எ-று. கிட்டினரென்றலுமாம். (கூக)

வெள்ளிப்பொருப்பின்மேற் பொன்றிகழ்குன்று பொலிந்ததென்னத்தன்றுணையுடனே தலைவனை வானில் விடைமேற்கண்டாரென இயையும்.

சொல்லுவ தறியேன்வாழி தோற்றிய தோற்றம்போற்றி
வல்லைவந் தருளியென்னை வழித்தொண்டு கொண்டாய்போற்றி
எல்லையி லின்பவெள்ள மெனக்கருள் செய்தாய்போற்றி
தில்லையம் பலத்துளாடுஞ் சேவடி போற்றியென்ன.

(இ-ள்.) சொல்லுவதறியேன்வாழி = (இவ்வாறுவந்த கருணையின் பெருமையை) எடுத்துத்துதித்தற்கு அறியமாட்டேன் (அதனால் உன்பெருங் கருணை) வாழ்க்கடவது; தோற்றிய தோற்றம்போற்றி = இக்காட்சிகொடுத்ததிருக்கோலம் என்னால் துதிக்கப்படுவது; வல்லைவந்தருளி = விரைவாக எழுந்தருளி; என்னை வழித்தொண்டு கொண்டாய்போற்றி = அடியேனை வழியடியனுக அடிமைக்கொண்டவரே காத்தருளும்; எல்லையிலின்பவெள்ளம் = அளவுபடாத பேரானந்த வெள்ளத்தை; எனக்கருள்செய்தாய்போற்றி = என்னுள்ளே பெருகும்படி அருள்செய்தவரே காத்தருளும்; தில்லையம்பலத்துளாடும் = தில்லைபம்பலத்தின்கண் நிருத்தஞ்செய்தருளும்; சேவடிபோற்றி யென்ன = திருவடிவாழிய என்று துதிக்க. எ-று.

வாழி என்புழி வியங்கோள் விகுதியாகிய ஈற்றகரங்கெட்டது. சேவடி போற்றி என்புழியும் அவ்வாறுகொள்க.

விண்ணிடை நின்றவெள்ளை விடையவ ரடியார்தம்மை
எண்ணிய வுலகுதன்னி லிப்படி நம்பாலன்பு
பண்ணிய பரிவுகண்டு மகிழ்ந்தனம் பழுதிலாதாய்
நண்ணிய மனைவியோடு நம்முடன் போதுகென்று.

(இ - ள்.) விண்ணிடைநின்றவெள்ளை விடையவர் = ஆகாயத்தின்கண்காட்சிகொடுத்தருளியவெள்ளிய இடபவாகனத்தையுடைய சிவபிரான்; அடியார்தம்மை = அடியாராகிய இயற்பகைநாயனரைநோக்கி; எண்ணியவுலகுதன்னில் = யாவராலும் எண்ணும்படி இந்நிலவுலகத்தின்கண்; இப்படிநம்பாலன்பு பண்ணியபரிவு கண்டு = இவ்வாறு நம்மிடத்து அன்புசெய்த தொடர்பைப்பார்த்து; மகிழ்ந்த

னம்பழுதிலாதாய் = மகிழ்ச்சியடைந்தோம் குற்றமற்றவனே; நண்ணியமனைவியோடு=உனக்குரிய மனையாளோடு; நம்முடன்போதுகென்று = நம்முடனே வருக என்று அருளிச்செய்து.—எ-று. (௩௩)

திருவளர் சிறப்பின்மிக்க திருத்தொண்டர் தமக்குந்தேற்ற
மருவிய தெய்வக்கற்பின் மனைவியார் தமக்குந்தக்க
பெருகிய வருளினீடு பேறளித் திமையோரேத்தப்
பொருவிடைப் பாகர்மன்னும் பொற்பொது வதனுட்புக்கார்.

(இ-ள்.) திருவளர்சிறப்பின்மிக்க = முத்தித்திருவளர்தற்குக் காரணமான சிறப்பால் மேம்பட்ட; திருத்தொண்டர்தமக்கும் = இயற்பகைநாயனாருக்கும்; தேற்றம்மருவிய தெய்வக்கற்பின் மனைவியார்தமக்கும்=தெளிவுமிக்க தெய்வத்தன்மையான கற்பினையுடைய அவர்மனைவியாருக்கும்; தக்கபெருகியவருளினீடுபேறளித்து = தக்கவாறு பெருங்கருணையினால் உயர்ந்த பேற்றினைக்கொடுத்து; இமையோரேத்தப் பொருவிடைப்பாகர்=தேவர்கள் துதிக்கும்படி போர் செய்கின்ற இடபத்தை வாகனமாகவுடைய சிவபிரான்; மன்னும்பொற்பொதுவதனுட்புக்கார்=தாம்வாழும் கனகசபையின்கண் புகுந்தருளினார்.—எ-று. இம்மூன்றுங்குளகம். (௩௪)

அற இயல்பாற்றெளிந்த கற்பு என்பது தோன்றத்தேற்ற மருவியகற்பு என்றார்.

வானவர் பூவின்மாரி பொழியமா மறைகளார்ப்ப
ஞானமா முனிவர்போற்ற நலமிகு சிவலோகத்தில்
ஊனமி றொண்டர்கும்பிட் டுடனுறை பெருமைபெற்றார்
ஏனைய சுற்றத்தாரும் வானிடை யின்பம் பெற்றார்.

(இ-ள்.) வானவர் பூவின்மாரி பொழிய=தேவர்கள் மலர்மழை சொரிய; மாமறைகளார்ப்ப=பெருமையினை யுடைத்தாகிய வேதங்கள் துதிக்க; ஞானமாமுனிவர்போற்ற = சிவஞானத்தை யுடைத்தாகிய முனிவர்கள் துதிக்க; நலமிகு சிவலோகத்தில்=நன்மையைவிளைக்குஞ்சிவலோகத்தின்கண்; ஊனமில்தொண்டர்கும்பிட்டு = குற்றமில்லாத அவ்வியற்பகை நாயனார் சிவபிரானைத்தொழுது; உடனுறை பெருமைபெற்றார்=அவர்சமீபத்தில் வாழ்ந்திருக்கும் பெருமையைப் பெற்றுக்கொண்டார்; ஏனைய சுற்றத்தாரும்=(அவரோடு பகைத்த) மற்ற உறவினர்களும் (அவர் காரணமாய்); வானிடை யின்பம் பெற்றார்=வானுலகின்கண் சென்று இன்பம் அநுபவித்தார்கள்.—எ-று. (௩௫)

உம்மை, இறந்தது தழீஇயது.

இன்புறுந் தாரந்தன்னை யீசனுக் கன்பரென்றே
துன்புறு துதவுந்தொண்டர் பெருமையைத் தொழுதுவாழ்த்தி
அன்புறு மனத்தானாத னடியவர்க் கன்புநீடு
மன்புக ழிளைசைமாறன் வளத்தினை வழுத்தலுற்றேன்.

(இ-ள்.) இன்புறுந் தாரந்தன்னை=இன்பம் அனுபவித்தற்கு ஏதுவான மனையாளை; ஈசனுக்கன்பரென்றே = சிவபிரானை அவரடியாரென்றே கருதி; துன்புறு துதவுந்தொண்டர் = ஒரு சிறிதும் வருந்தாது கொடுக்கும் இயற்பகை நாயனாருடைய; பெருமையைத் தொழுது வாழ்த்தி=மகிமையை வணங்கித் துதித்து; அன்புறு மனத்தால்=அன்புமிக்க மனசினால்; நாதனடியவர்க் கன்பு நீடும்=சிவனடியார்களுக்கு அன்புகூரும்; மன்புக ழிளைசைமாறன்=நிலைபெற்ற புகழினையுடைய இளையான் குடிமாற நாயனாரது; வளத்தினை வழுத்தலுற்றேன்=பத்திநலத்தைத் துதிக்கத்தொடங்கினேன்.—எ-று. (௩௬)

இயற்பகைநாயனார்புராணம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௪௩௬.

திருச்சிற்றம்பலம்.

## இளையான்குடிமாறநாயனார்புராணம்.

வேறு.

அம்பொனீடிய வம்பலத்தினி லாடுவாரடி சூடுவார்
தம்பிரானடி மைத்திறத்துயர் சால்பின்மேன்மை தரித்துளார்
நம்புவாய்மையி னீடுசூத்திர நற்குலஞ்செய் தவத்தினால்
இம்பர்ஞாலம் விளக்கினா ரிளையான்குடிப்பதி மாறனார்.

(இ-ள்.) அம்பொனீடிய வம்பலத்தினில்=அழகிய பொன்னால் அலங்கரித்த திருவம்பலத்தின்கண்; ஆடுவாரடிசூடுவார்=ஆனந்த நிருத்தஞ்செய்தருளும் பிரானாரது திருவடிகளை எந்நாளுந் தமதிதயத்துத் தியானஞ் செய்கின்றவர்; தம்பிரானடிமைத்திறத்து = அந்நடேசப்பிரானுக்குரிய அடிமைத்தன்மையில்; உயர்சால்பின்மேன்மை தரித்துளார்=உயர்ந்த தகுதிப்பட்டால் மேன்மையடைந்தவர்; நம்புவாய்மையினீடு = நம்புதற்குரிய மெய்மையினால் உயர்ந்த; சூத்திர நற்குலஞ் செய்தவத்தினால்=வேளாளர்களது நல்லகுலத்தார் செய்ததவத்தால் அவதரித்து; இம்பர்ஞாலம் விளக்கினார் = இந்நிலவுலகத்தில் தம்புகழை விளங்கச்செய்தவர் (அவர்திருப்பெயர்யாதெனில்); இளையான்குடிப்பதிமாறனார்=இளையான்குடிமாற நாயனார்.—எ-று. (௧)

வாய்மை=பொய்கூறாமை. அதாவது:—மெய்சொல்லுதல், தமக்குப்பேரிடர்வரினும் பொய்கூறாமையின் நம்புவாய்மை என்றார்.

ஏரின்மல்கு வளத்தினால்வரு மெல்லையில்லதொர் செல்வமு
நீரின்மல்கிய வேணியாரடியார் திறத்து நிறைந்ததோர்
சீரின்மல்கிய வன்பின்மேன்மை திருந்தமன்னிய சிந்தையும்
பாரின்மல்க விரும்பிமற்றவை பெற்றநீடு பயன்கொள்வார்.

(இ-ள்.) ஏரின்மல்கு வளத்தினால்வரும்=உழவுதொழிலால் ஓங்கிய பயிர் வளத்தால் வருகின்ற; எல்லையில் செல்வமும்=அளவுபடாத நெல்முதலிய செல்வங்களும்; நீரின்மல்கிய வேணியாரடியார் திறத்து=கங்கைநீரினால் விளங்கிய

சடைமுடியையுடைய சிவபிரானது அடியாரிடத்து ; நிறைந்ததோர் சீரின்மல்கி யவன்பின்=நிறைவாயிருக்கும் ஒப்பற்ற சிறப்போடு பெருகிய அன்பினால் ; மேன்மைதிருந்த மன்னிய சிந்தையும்=பெருமை திருத்தமாக நிலைபெற்ற திருவுள்ளமும்; பாரின்மல்க=நிலவுலகத்தின்கண் தமக்கு உண்டாயிருக்க ; மற்றவை பெற்ற நீடுபயன் விரும்பிக்கொள்வார்=அவ்விரண்டனையும் பெற்றதனாலாய பயனைவிரும்பிக் கொள்வாராயினார்.—எ-று. (உ)

அது - பகுதிப்பொருள்விகுதி. ஓர் - அசை. ஓர்காலுதித்து ஓர்கால் வேறுபடும் இயல்பின்றி ஓரியல்பிற்றாதலின் சீரின்மல்கிய அன்பு என்றும், அவ்வன்பின் வழித்தாய்ப் பிறழாது செல்லலில் மேன்மைதிருந்த மன்னிய சிந்தை என்றுங் கூறினர். அவைபெற்ற நீடுபயனாவது:—அடியார்க்கமுதருத்தல். ஏனைய புண்ணியங்களினும் அதன் உயர்வுதோன்ற நீடுபயன் என்றார்.

ஆரமென்பு புனைந்தவையர்த மன்பரென்பதொர் தன்மையா
னேரவந்தவர் யாவராயினு நித்தமாகிய பத்திமுன்
கூரவந்தெதிர் கொண்டுகைகள் குவித்துநின்று செவிப்புலத்
தீரமென்ம துரப்பதம்பரி வெய்தமுன்னுரை செய்தபின்.

(இ-ள்.) ஆரமென்பு புனைந்தவையர்தம் = என்பினை ஆரமாகத்தரித்த சிவபிரானுடைய ; அன்பரென்பதொர் தன்மையால்=அடியார்களென்னும் ஓர் முறைமையால் ; நேரவந்தவர் யாவராயினும்=நேரும்படி தம்மிடத்துவந்தவர்கள் எவராயிருப்பினும்; நித்தமாகியபத்திமுன் கூரவந்து=தமக்கு இயல்பாயுள்ள பத்திமுற்படவந்து ; எதிர்கொண்டுகைகள் குவித்துநின்று=அவர்களை எதிர்கொண்டு கைகளைக்குவித்து வணங்கி நின்று ; செவிப்புலத்தீரமென்மதுரப்பதம் = அவர் திருச்செவிகளில் குளிர்ந்த மிருதுவான மதுரமொழிகளை; பரிவெய்த முன்னுரை செய்தபின்=அவர் பிரியப்படும்படி முன்னேசொன்னபின்பு.—எ-று. (௩)

உம்மை - முற்றும்மை.

கண்டிகைபூதி சாதனப்பொலிவோடு வருமவரெல்லாம் அடங்குதற்கு அன்பரென்பதொர் தன்மையாலென்றும், உயர்ந்தாரும் இழிந்தாருமாகிய எல்லோரும் அடங்க யாவராயினும் என்றும், அவரை எதிர்கொள்ளுங்கால் முகம் வேறுபடுதல் முதலிய குற்றமின்மை விளக்குதற்குப் பத்திமுன் கூரவந்தெதிர் கொண்டென்றும், அடியார்கள் மனைக்குவரின் ஒருவன் வணங்கவேண்டும் என்னும் விதியை அனுசரித்து வணங்குவரென்பது தோன்றக்கைகள் குவித்துநின்று என்றும், இவ்வாறு மனத்தானுங் காயத்தானும் ஒருப்பாடுடையரேயன்றி வார்த்தையானும் அவருள்ளங்கோணாது உபசரித்துக்கூறும் இனியமொழிகளை யுடையவரென்பது தோன்ற ஈரமென்மதுரப்பதம் என்றுங் கூறினர்.

கொண்டுவந்து மனைப்புகுந்து குலாவுபாதம் விளக்கியே
மண்டுகாதலி னாதனத்திடை வைத்தருச்சனை செய்தபின்
உண்டிநாலு விதத்திலாறு சுவைத்திறத்தினி லொப்பிலா
அண்டர்நாயகர் தொண்டரிச்சையி லமுதுசெய்ய வளித்துளார்.

(இ-ள்.) கொண்டுவந்து மனைப்புகுந்து=இவ்வாறு சிவனடியார்களை உபசரித்து அழைத்துக்கொண்டுவந்து தாமும் அவரோடு மனையிற்புகுந்து; குலாவு பாதம்விளக்கி=அவருடைய விளக்கமாகிய திருவடிகளை நீராற்கழுவி; மண்டுகாதலினுதனத் திடைவைத்து=நிறைந்த பெருவிருப்போடு அவர்களைப் பீடத்து எழுந்தருளும்படி செய்வித்து; அருச்சனைசெய்தபின்=பாதபூசைசெய்தபின்பு; உண்டிநாலுவிதத்தில் = உணவுகளை நான்குவகையினால்; ஆறுசுவைத்திறத்தினில்=அறுசுவையோடும்; ஒப்பிலா அண்டர்நாயகர்தொண்டர் = ஒப்பில்லாத தேவர்களுக்கு முதல்வராகிய சிவபிரானது அடியார்; இச்சையிலமுதுசெய்யவளித்துளார்=விருப்போடு அமுதுசெய்யும்படி நாள்தோறுங் கொடுத்தவர். எ - று. ஏ - அசை. (ச)

இவ்விரண்டுங் குளகம்.

உண்டிநான்கு வகையாவன:—நக்கல், பருகல், உண்டல், தின்றல், என இவை. அறுசுவையாவன:—கைப்பு, புளிப்பு, இனிப்பு, துவர்ப்பு, கார்ப்பு, உவர்ப்பு, என்பன. இச்சுவை ஆறும் பிருதிவியிலும் இனிப்பு ஒன்றும் சலத்திலும் இருக்கும்.

ஆளுநாயக ரன்பரானவ ரளவிலாருள மகிழவே
நாளுநாளு நிறைந்துவந்து நுகர்ந்ததன்மையி னன்மையா
னீளுமாநிதி யின்பரப்பு நெருங்குசெல்வ நிலாவியெண்
டோளினா ரளகைக்கிருத்திய தோழனாரென வாழுநாள்.

(இ-ள்.) ஆளுநாயகரன்பரானவர் = தம்மை அடிமையாகக் கொள்ளும் சிவபிரானுடைய அடியார்கள்; அளவிலாருளமகிழ=எண்ணிறந்தவர்கள் திருவுள்ளங்களிப்படைய; நாளுநாளு நிறைந்துவந்து=தினந்தோறுந் திரண்டுவந்து; நுகர்ந்ததன்மையி னன்மையால்=அமுதுசெய்த காரணத்தால் ஆகும் நன்மையினால்; நீளுமாநிதியின்பரப்பு=மிக்கபெருமையாகிய பொன்மணிமுதலிய நிதிகளின் தொகுதி; நெருங்குசெல்வம் நிலாவி=ஈண்டிய செல்வத்தால் விளங்கி; எண்டோளினாரளகைக்கிருத்திய=எட்டுத்திருப்புயங்களையுடைய சிவபிரான் அளகாபுரிக்கண் வைத்த; தோழனாரென வாழுநாள் = குபேரனென்னுந் தோழனையொத்து வாழ்ந்திருக்கும்நாளில்.—எ-று. ஏ - அசை. (ரு)

அடியார்பூசையால் செல்வம்பெருகும் என்னும் அறநூற்பயனை விளக்குதற்கு நுகர்ந்ததன்மையின் நன்மையால் நெருங்குசெல்வ நிலாவி என்றார்.

செல்வமேவிய நாளிலிச்செயல் செய்வதன்றியு மெய்யினால்
அல்லனல்குர வானபோதினும் வல்லரென்றறி விக்கவே
மல்லனீடிய செல்வமெல்ல மறைந்துநாடொறு மாறிவந்
தொல்லையில்வறு மைப்பதம்புக வுன்னினார் தில்லைமன்னினார்.

(இ-ள்.) செல்வமேவியநாளி லிச்செயல் செய்வதன்றியும்=தமக்குச்செல்வமுண்டாயிருந்தகாலத்தில் இவ்வாறு அடியார்பூசையைச் செய்வதேயன்றியும்; அல்லனல்குரவானபோதினும்=துன்பத்தைவிளைக்கும் வறுமை உண்டான

போதம்; மெய்யினல் வல்லரென்றறிவிக்க = மெய்ம்மைப்பத்தியால் இவ்வாறு செய்யத்தக்கவரென்று யாவருக்கும் அறிவிக்கும்படி; மல்லனீடியசெல்வம் = வளத்தாலுயர்ந்த இவர் செல்வமானது; மெல்லமறைந்து நாடொறுமாறிவந்து = மெல்லமெல்லக் குறைந்து தினந்தோறும் நிலைமைதிரிந்து; ஒல்லையில் வறுமைப் பதம்புக = விரைவில் வறுமையாம் நிலைமையை அடையும்படி; உன்னினர் தில்லை மன்னினர் = தில்லைக்கண்வாழும் சிவபிரான் திருவுளங்கொண்டருளி னர்.—எ-று. ஏ - அசை. (சு)

உம்மை இரண்டும் அச்செயலின் சிறப்பைக்கூறுதலின் உயர்வு சிறப்பு.

இன்னவாறு வளஞ்சுருங்கவு மெம்பிரானிளை யான்குடி
மன்னன்மாறன் மனஞ்சுருங்குத லின்றியுள்ளன மாறியுந்
தன்னைமாறி யிறுக்கவுள்ள கடன்கடக்கன கொண்டுபின்
முன்னைமாறி றிருப்பணிக்கண் முதிர்ந்தசெய்கைய ராயினர்.

(இ-ள்.) இன்னவாறு வளஞ்சுருங்கவும் = இவ்வாறு சிவபிரான் திருவருளால் தமது செல்வம் நாளுக்குநாள் குறையவும்; எம்பிரானிளையான் குடிமன்னன்மாறன் = எமது முதல்வராகிய இளையான்குடி என்னும் ஊரையுடைய அந்நாயனர்; மனஞ்சுருங்குதலின்றி = தம்மனசிலுள்ள பத்திகுறையாமல்; உள்ளனமாறியும் = தம்வீட்டிலுள்ள பொருள்களைவிற்றும்; தன்னைமாறி யிறுக்கவுள்ள = தன்னைவிற்றும் கொடுக்கத்தக்க; கடன்கடக்கனகொண்டுபின் = கடன்களைத் தக்கவாறு வாங்கிக்கொண்டும் பின்பு; முன்னைமாறில் திருப்பணிக்கண் = முன்பு போலக் குறைவின்றி அடியார்க்கமுது படைக்கும் திருத்தொண்டில்; முதிர்ந்த செய்கையராயினர் = மேம்பட்டொழுகும் செய்கையை யுடையராயினர்.—எ-று.

வளஞ்சுருங்கவும் மனஞ்சுருங்குதலின்றி என இயையும். மனஞ்சுருங்காது நிற்கும் அவரது இயல்பைச் சிறப்பித்தலின், உம்மை உயர்வுசிறப்பு. கொண்டென்புழி, எண்ணும்மை விகாரத்தாற் றொக்கது.

மற்றவன்செய லின்னதன்மைய தாகமாலய னனவக்
கொற்றவேனமு மன்னமுந்தெரி யாதகொள்கைய ராயினர்
பெற்றமூர்வது மின்றிநீடிய பேதையாளுட னின்றியோர்
நற்றவத்தவர் வேடமேகொடு ஞாலமுய்ந்திட நண்ணினர்.

(இ-ள்.) அவன்செயலின்னதன்மையதாக = அவ்விளையான் குடிமாறநாயனருடைய செய்கை இவ்வாறிருக்க; மாலயனனவக்கொற்றவேனமு மன்னமும் = திருமால்பிரமன் என்னும் வெற்றியினையுடைத்தாகியபன்றியும்அன்னமும்; தெரியாதகொள்கையராயினர் = தன் அடியையும் முடியையும் அறியாமல் மறைத்துநின்ற நிலைமையை யுடையவராகிய சிவபிரான்; பெற்றமூர்வது மின்றி = இடபத்தை ஊர்தியாகக்கொண் டருளாமலும்; நீடியபேதையாளுடனின்றி = தம்மொருகூற்றில் வீற்றிருக்கும் உமாதேவியா ரில்லாமலும்; ஓர்நற்றவத்தவர் வேடமேகொடு = தாமே ஒருநல்ல தவத்தினையுடைய அடியார் வேடந்தாங்கிக்




ஸ்ரீகைலாயபதி சைவராக ஓர் நடுராத்திரியில் இளையான்குடிமாற நாயனர் வீட்டிற் கதவைதட்ட திறந்துமழையினால் நனைந்ததிருமேனியை ஈரம்போக்கி ஆசனத்திலிருத்தி அமுதுபடைக்க விரும்பி வீட்டில்யாதமுதவாற்றால் அன்றுபகலில் விதைத்த நெல்முளையை வாரிவரும்படி மனையாள்கூடை அருளியது.

கொண்டு; ஞாலமுய்ந்திடநண்ணினர் = உலகத்தார் உய்யும்பொருட்டு எழுந்தருளினர்.—எ-று. மற்று-அசை. (அ)

வேறு.

மாரிக்காலத் திரவினில் வைகியோர்
தாரிப்பின்றிப் பசிதலைக் கொள்வது
பாரித்தில்ல மடைத்தபின் பண்புற
வேரித்தாரான் விருந்தெதிர் கொண்டனன்.

(இ-ள்.) மாரிக்காலத்து ஓரிரவினில்வைகி=மழைக்காலத்தில் ஓரிரவில் தனியே இருந்து; தாரிப்பின்றிப் பசிதலைக்கொள்வது=அடக்கக்கூடாமல் பசியானது மேற்கொள்ளுதலை; பாரித்து=அடக்கிக்கொண்டு; இல்லமடைத்தபின்=மனைவாசற்கதவைத் தாழ்க்கோலால் அடைத்தபின்பு; பண்புற=குணமுண்டாம்படி; வேரித்தாரான்=தேன்சிந்தும் உற்பலமாலையையுடைய அந்நாயனார்; விருந்தெதிர்கொண்டனன்=விருந்தாகவந்து அழைத்த சிவபிரானாகிய அவ்வடியாரை எதிர்கொண்டார்.—எ-று. (கூ)

கொள்வதுஎன்றது முற்றுத்தொழிற்பெயர். பரித்தல்=சகித்தல். பரித்து என்பது, பாரித்தென விகாரமாயிற்று. ஓர் தாரிப்பின்றி என்பதற்கு ஒருவரும் உபகரிப்பாரின்றி என்றுரைப்பாருமுளர். நல்ல இருளும்மழையும் உடைய அக்காலத்தில் யாவரும் விருந்தினரைப் புறந்தரார் என்பதை விளக்குதற்கு மாரிக்காலத்திரவென்றும், அவ்விருளில் வறுமையாற் பசிநலிய இருந்தாரென்பது தோன்ற வைகி என்றும், அப்பசியும் பலதினங்கழிந்தது என்பதுதோன்ற தாரிப்பின்றி என்றும், அதனை அடக்கிக்கொண்டிருந்தாரென்பது தோன்றப் பாரித்தென்றும், அவர் வருங்கால் இரவு நீட்டிற்றென்பது தோன்ற இல்லமடைத்தபின் என்றும், இவ்வாறிருந்தும் அவ்வடியாரை உபசரிக்குங்குணத்தில் ஒருசிறிதும் குறையாமல் எதிர்கொண்டாரென்பது தோன்றப் பண்புற என்றுங் கூறினர். இதனால் மிகு நல்குரவாலாயதன்பசி நலிவும்மனையாள்பசியும் நோக்காமல் மழையிருளில் உண்டி வேண்டிவந்த அடியாரைத் தம்மினுமினியவராய் மதித்து அவர்க்கன்னமருத்தும் தங்கிலைமையில் வேறுபடாது விருந்தெதிர்கொண்ட அவரது மயலற்ற அடியார் பத்திருதிப்பித்தவாறு காண்க.

ஈரமேனியை நீக்கி யிடங்கொடுத்
தார்வின்னமு தூட்டுதற் காசையாற்
றாரமாதரை நோக்கித் தபோதநர்
தீரவேபசித் தார்செய்வ தென்னென.

(இ-ள்.) ஈரமேனியைநீக்கி=மழையினால் நனைந்துவந்த அப்பிரானது திருமேனி ஈரத்தை ஆடையால் உலரச்செய்து; இடங்கொடுத்து=(அவர் வசிக்கத்தக்க) ஓரிடத்தைக்கொடுத்து; ஆரவின்னமுது = அவர்க்கு வயிறுநிற இனிய திருவமுதை; ஊட்டுதற்காசையால்=அருத்தும்படிக்குவிருப்பினால்; தாரமாதரைநோக்கி=தம்மனையறத்திற் கமைந்த சிறப்பினையுடைய மனைவியாரைப்பார்

த்து ; தபோதனர்தீரவே பசித்தார்=இத்திருவடியார் அறப்பசியுடையரா யிருக்கின்றார் ; செய்வதென்னென = இதற்கு யாதுசெய்வோமென்று கூறி (மேலுங் கூறுகின்றார்,)—எ-று. (கo)

நமக்குமுன் பிங் குணவிலை யாயினும்
இமக்குலக்கொடி பாகர்க் கினியவர்
தமக்குநா மின்னடிசி றகவுற
அமைக்குமா றெங்ஙனே யணங்கேயென.

(இ-ள்.) நமக்குமுன் பிங்குண விலையாயினும்=நம்வீட்டில் நாம் உண்ணுதற்குமுன்னமே உணவில்லை அவ்வாறனவறுமை இருப்பினும் ; இமக்குலக்கொடிபாகர்க்கு=மலையரையன் குலத்திலுதித்த புத்திரியாகிய உமாதேவியைப்பாகத்திலுடையசிவபிரானுக்கு ; இனியவர்தமக்கு நாமின்னடிசில்=தொண்டராகிய இவருக்கு நாம் ஊட்டுதற்கு இனிய திருவமுதை ; தகவுற அமைக்குமாறெங்ஙன் அணங்கேயென = மேன்மையாகச் சமைக்கும் வகை எவ்வாறு மாதே என்று வினவ.—எ-று. (கக)

உம்மை இழிவு சிறப்பு. நாயனர் கருத்தின்படி அமுதாக்கலும் அடியார்க்குப்பகுத்தூட்டலும் அம்மனைவியார்க் கியல்பாதலின் செய்வ தென்னென்று அவரை உசாவினரென்க.

மாதுகூறுவண் மற்றொன்றுங் காண்கிலேன்
ஏதிலாரு மினித்தரு வாரில்லை
போதுவைகிற்று போமிடம் வேறிலை
தீதுசெய்வினை யேற்கென் செயலென்று.

(இ-ள்) மாதுகூறுவண் மற்றொன்றுங் காண்கிலேன்=(இங்ஙனம் அவர் கேட்க) மனைவியார் சொல்லுவார் (அமுதாக்குதற்குரியவழி) பிறிதொன்றையும் யான் அறியேன் ; ஏதிலாரு மினித்தரு வாரில்லை=அயலாரும் இனிமேல் கடன் தருவாரில்லை ; போதுவைகிற்று போமிடம் வேறிலை = (கடன்வாங்க வெனினும்) இரவு நீட்டித்தது அதனுற் போதற்கு இடமும் வேறில்லை ; தீதுசெய்வினை யேற்கென் செயலென்று = கொடிதாகிய தீவினையையுடைய எனக்கு யாதுசெய விருக்கின்ற தென்றுகூறி.—எ-று. (கஉ)

செல்லனீங்கப் பகல்வித்திய செந்நெல்
மல்லனீர்முளை வாரிக் கொடுவந்தால்
வல்லவாறமு தாக்கலு மாகுமற்
றல்லதொன்றறி யேனென் றயர்வுற.

(இ-ள்.) செல்லனீங்கப் பகல்வித்திய செந்நெல்=நம்முடைய துன்பம் நீங்கும்படி இன்றுபகல் நாற்றிடுதற்கு விதைத்த சம்பாவின் ; மல்லனீர் முளைவாரிக்கொடுவந்தால்=வளத்தினையுடைய நீரிலூறிய முளையை ஓர் கூடையில் வாரிக் கொண்டு வந்தால் ; வல்லவா றமுதாக்கலு மாகும் = தெரிந்த அளவில் அமுது

சமைத்தலுமாம்; மற்றல்ல தொன்றறியே னென்றயர்வுற=அதன்றிப் பிறிதொன்றை அறியமாட்டேனென்று கூறிமனம்வருந்த.—எ-று. (கங)

செல்லனீங்க வாரிக்கொடு வந்தாளென இயையும். செல்லல்=துன்பம். ஈண்டு துன்பமாவது:— இவ்வடியார்க் கமுதருத்த ஒன்றுமில்லையே யெனக் கருதலினால் வருந்துயரம். ஆக்கலும், என்ற உம்மை அமுதாக்கற் குரியதல்லாததை ஆக்கலாமென வரையறுத்து நிற்றலில் ஆக்க உம்மை. உயர்வு சிறப்பெனினுமமையும்.

மற்றமாற்ற மனைவியார் கூறமுன்
பெற்றசெல்வ மெனப்பெரி துண்மகிழ்ந்
துற்றகாதலி னுலொருப் பட்டனர்
சுற்றுநீர்வயல் செல்லத் தொடங்குவார்.

(இ-ள்.) அம்மாற்ற மனைவியார்கூற = அவ்வாறான உறுதிமொழியைத் தம்மனைவியார்கூற ; முன்பெற்ற செல்வமெனப் பெரிதுண் மகிழ்ந்து = தாம் முன்னே அடைந்த செல்வம்போல அதைக்கேட்ட நாயனார்மிக மனமகிழ்ந்து ; உற்றகாதலி னுலொருப் பட்டனர்=தம்மிடத்துதித்த அன்போடு அவ்வாறுசெய்தற்கு மனமொருப்பட்டு ; சுற்றுநீர்வயல் செல்லத் தொடங்குவார் = நீர்சூழ்ந்த வயலினிடத்துச் செல்லும்படி புறப்படுவாராயினார்.—எ-று. (கச)

மற்று-அசை. இவ்வைந்துங்குளகம்

தாம் செல்வம்பெற்றகாலத்து மகிழ்ச்சியடைந்தாற்போல அடைந்தாரென்பதுதோன்ற முன்பெற்ற செல்வமென மகிழ்ந்தென்றார்.

பெருகுவானம் பிறங்க மழைபொழிந்
தருகுநாப்ப ணறிவருங் கங்குலுன்
கருகுமையிரு ளின்கனங் கட்டுவிட்
டுருகுகின்றது போன்ற துலகெலாம்.

(இ-ள்.) பெருகுவானம் பிறங்க மழைபொழிந்து=(இளையான்குடிமாறநாயனார் நென்முளை வாரிக்கொண்டுவர வயலுக்குப்போகும்பொழுது) மிக்கமேகங்கள் அதிகமாக மழைபெய்து (அதனால்) ; அருகு நாப்பணறி வருங்கங்குல்= வயலினது கரையும் நடுவும் அறியக்கூடாத அவ்விரவானது ; கருகுமை யிருளின்கனம்=கருமையாகிய இருளின் கூட்டங்கள் ; கட்டுவிட் டுருகுகின்றது போன்ற துலகெலாம் = உலோகக்கட்டி கட்டுவிட் டுருகினாற்போலப் பரம்பியிருந்தது உலகமுழுதும்.—எ-று. தான் - அசை. (கரு)

எண்ணுமிவ் வுலகத்தவர் யாவருந்
துண்ணெனும்படி தோன்றமுன் றோன்றிடில்
வண்ணநீடிய மைக்குழம்பா மென்று
நண்ணல்செய்யா நடுவிருள் யாமத்து.

(இ-ள்.) எண்ணுமிவ் வுலகத்தவர் யாவரும்=மதிக்கத்தக்க இவ்வுலகின் கணுள்ள யாவரும்; துண்ணெனும்படி தோன்றமுன் தோன்றிடில்=விரைவாக இருள் கண்ணுக்குப் புலப்பட அதன்முன்னே செல்வாராயின்; வண்ணநீடியமைச்குழம் பாமென்று = கருநிறம் மிக்கமையின் குழம்பு இதுவென்று; நண்ணல்செய்யா நடுவிருள் யாமத்து = அவர் அதை அடையாத இருளையுடைய நடுச்சாமத்தில்.—எ-று. (௧௬)

உள்ளமன்பு கொண்டேக்க வோர்பேரிடாக்
கொள்ளமுன் கவித்துக் குறியின்வழிப்
புள்ளுறங்கும் வயல்புகப் போயினார்
வள்ளலாரிளை யான்குடி மாறனார்.

(இ-ள்.) உள்ள மன்பு கொண்டேக்க = தம்மனத்தை அன்பானது பந்தித்துக்கொண்டு செலுத்த; ஓர்பேர் இடாக்கொள்ள முன்கவித்து=ஒருபெரிய கூடையைச்சிரசு அடங்கும்படி முன்னே மூடிக்கொண்டு; குறியின்வழிப் புள்ளுறங்கும் வயல்புகப் போயினார் = தாம் பண்டுபழகிய மனக்குறிப்பின்வழியே பறவைகள் துயிலும் வயலினிடத்துச் சென்றார்; வள்ளலாரிளை யான்குடி மாறனார்=கொடையிற் சிறந்தோராகிய இளையான்குடிமாற நாயனார்.—எ-று. (௧௭)

இவ்விரண்டுங்குளகம். இடா=கூடை.

காலினாற் றடவிச்சென்று கைகளாற்
சாலிவெண்முளை நீர்வழிச் சார்ந்தன
கோலிவாரி யிடாநிறை யக்கொண்டு
மேலெடுத்துச் சுமந்தொல்லை மீண்டனர்.

(இ-ள்.) காலினாற் றடவிச்சென்று=(முளைநாற்று விட்டிருக்கும் இடத்தைக்) காலாற்றடவிப்பார்த்து பின்புசென்று; கைகளாற்சாலிவெண்முளை நீர்வழிச் சார்ந்தன கோலிவாரி=கைகளினால் சம்பாநெல்லின் வெள்ளிய முளைகள் நீரின்வழியொதுங்கி இருந்தவற்றைச் சேர்த்துவாரி; இடா நிறையக்கொண்டு=கூடைநிறையக்கொண்டு; மேலெடுத்துச் சுமந்தொல்லை மீண்டனர் = சிரமேலெடுத்துச் சுமந்துகொண்டு விரைவாக மனைக்குமீண்டார்.—எ-று. (௧௮)

வேறு.

வந்தபின் மனைவியாரும் வாய்தலி னின்றுவாங்கிச்
சிந்தையில் விரும்பிநீரிற் சேற்றினை யலம்பியூற்றி
வெந்தழ லடுப்பின்மாட்ட விறகில்லை யென்னமேலோர்
அந்தமின் மனையினீடும் அலக்கினை யறுத்துவீழ்த்தார்.

(இ-ள்.) வந்தபின் மனைவியாரும்=(நாயனார் முளைவாரிக்கொண்டு வீட்டுக்கு) வந்தபின்பு அவர் மனைவியாரும்; வாய்தலி னின்றுவாங்கி=மனையின் வாயலினின்று அதனை வாங்கிக்கொண்டு; சிந்தையில் விரும்பி=தம்மனசில் விருப்பமுடையராய்; நீரிற் சேற்றினை யலம்பியூற்றி=நீரால் நெல்லிற்கலந்த சேற்றைக் கழுவியூற்றி; வெந்தழ லடுப்பின்மாட்ட விறகில்லையென்ன = அடுப்பினிடத்து

நெருப்பை மூட்டுதற்கு விறகில்லை யென்றுகூற; மேலோர் அந்தமின் மனையினீடும் = அவ்விளையான்குடிமாற நாயனார் பழங்கூரையா யிருக்குந் தம்மனையிலுள்ள; அலக்கினை யறுத்து வீழ்த்தார் = வரிச்சுக் கொம்புகளை அறுத்து விழுத்தினார்.—எ-று. (கக)

அந்தம்=அழகு.

முறித்தவை யடுப்பின்மாட்டி முளைவித்துப் பதமுன்கொள்ள
வறுத்தபின் னரிசியாக்கி வாக்கிய வுலையிற்பெய்து
வெறுப்பிலின் னடிசிலாக்கி மேம்படு கற்பின்மிக்கார்
கறிக்கினி யென்செய்கோமென் றிறைஞ்சினார் கணவனாரை.

(இ-ள்.) முறித்தவை யடுப்பின் மாட்டி=அம்மனை யலக்குகளை ஒடித்து அடுப்பிற்சேர்த்து; முளைவித்துப் பதமுன்கொள்ள=முளைத்தநெல் விதையானது அரிசியாகும் பக்குவத்தை முன்னே அடையும்படி; வறுத்தபின் னரிசியாக்கி= வறுத்தபின்பு அதனைக்குத்தி அரிசியாகச்செய்து; வாக்கிய உலையிற்பெய்து = அவ்வரிசியை நீர்வார்த்த உலையினிடத்து இட்டு; வெறுப்பிலின் னடிசிலாக்கி= விரும்பத்தக்க இனிய திருவமுதாகச் சமைத்து; மேம்படு கற்பின் மிக்கார்= யாவரினும் மேம்பட்ட கற்பிற்சிறந்த அவர்மனைவியார்; கறிக்கினி யென்செய்கோமென்று=கறியமுதக்கு இனிமேல்யாம் என்ன செய்வோமென்று; இறைஞ்சினார் கணவனாரை=அந்நாயனாரை வணங்கினார்.—எ-று. (உ0)

வழிவரு மிளைப்பினோடும் வருந்திய பசியினாலே
அழிவுறு மையனென்னு மன்பினிற் பொலிந்துசென்று
குழிநிரம் பாதபுன்செய்க் குறும்பயிர் தடவிப்பாசப்
பழிமுதல் பறிப்பார்போலப் பறித்தவை கறிக்குநல்க.

(இ-ள்.) வழிவரு மிளைப்பினோடும்=வழிநடந்து வந்ததனாலுண்டாகிய இளைப்புடன்; வருந்திய பசியினாலே = தம்மை வருத்துகின்ற பசியால்; அழிவுறு மையனென்னும்=எமது சுவாமி வருந்துவார் என்று கருதும்; அன்பினிற் பொலிந்து சென்று = அன்பினாற் பொலிவடைந்து போய்; குழிநிரம்பாத = குழிகளினின்றும் மேற்செல்லாத; புன்செய்க்குறும் பயிர்தடவி=புன்செய்களிலிருக்கும் சிறிய பயிர்களைத்தடவி; பாசப்பழிமுதல் பறிப்பார்போல = தமது பாசத்தின் இழிந்த வேரைமேற் களைவார்போல; பறித்தவை கறிக்குநல்க= அப்பயிர்களைப் பறித்துக் கறியமுதுக்குக் கொடுக்க.—எ-று. (உக)

புன்செய்ப் பயிரென்பது, குழிநிரம்பாத என்றதனாற் பூசினி முதலியவற்றை என்க.

மனைவியார் கொழுநர்தந்த மனமகிழ் கறிகளாய்ந்து
புனலிடைக் கழுவித்தக்க புனிதபாத் திரத்துக்கைம்மை
வினையினில் வேறுவேறு கறியமு தாக்கிப்பண்டை
நினைவினாற் குறையைநேர்ந்து திருவமு தமைத்துநின்று.

(இ-ள்.) மனைவியார் கொழுநர் தந்த = நாயனார் மனைவியார் அந்நாயனார்கொடுத்த ; மனமகிழ் கறிகளாய்ந்து = மனங்களிக்கத்தக்க பயிர்க்கறிகளைத் திருத்தி ; புனலிடைக்கழுவி = நீராற்கழுவி ; தக்க புனிதபாத்திரத்து = தகுதியான தூய்மையினையுடைய பாத்திரத்தில் ; கைம்மை வினையில் வேறு வேறு கறியமுதாக்கி = தமது கைத்தொழிலின் வல்லபத்தால் தனித்தனி அவைகளைக் கறியமுதாகச்செய்து ; பண்டை நினைவினுற் குறையைச்சேர்ந்து = முன்செல்வம் உண்டான நாளிற்செய்யும் பாகத்தின் நினைவால் தம்முளத்து ஓர் குறையை வைத்து ; திருவமு தமைத்து நின்று=திருவமுதாக்கி.—எ-று. (உஉ)

கணவனார் தம்மைநோக்கிக் கறியமு தானகாட்டி
இணையிலா தவரையீண்ட வமுதுசெய் விப்போமென்ன
உணர்வினு லுணரவொண்ணு வொருவனை யுணர்த்தவேண்டி
அணையமுன் சென்றுநின்றங் கவர்துயி லகற்றலுற்றார்.

(இ-ள்.) கணவனார் தம்மை நோக்கி=தம்முடைய நாயகனைப்பார்த்து; கறியமுது தானகாட்டி = சமைக்கப்பட்ட கறியமுதை அவருக்குக்காட்டி ; இணையிலா தவரையீண்ட வமுதுசெய் விப்போமென்ன = ஒப்பில்லாத இவ்வடியாரை முறைப்படி திருவமுது செய்விப்போ மென்றுகூற ; உணர்வினுலுணரவொண்ணு ஒருவனை=நாயனார் தமது உணர்வினுல் அறியக்கூடாத சிவபிரானாகிய அடியவரை ; உணர்த்தவேண்டி=துயிலெழுப்ப விரும்பி ; அணையமுன் சென்று நின்று = சமீபமாக அவர் திருமுன்னேபோய் நின்று ; அங்கவர் துயிலகற்ற லுற்றார்=அவர் நித்திரையை நீக்குவாராயினர்.—எ-று. (உங)

இம்மூன்றுங்குளகம்.

துயிலகற்றலாவது:—புலனுணர் வின்றித் துயின்றானைப் புலனுணர்வினராகச்செய்தல்.

அழுந்திய விடருணீங்கி யடியனே னுய்யவென்பால்
எழுந்தருள் பெரியோயீண்ட வமுதுசெய் தருள்கவென்று
தொழும்பனு ருரைத்தபோதிற் சோதியா யெழுந்துதோன்றச்
செழுந்திரு மனைவியாருந் தொண்டருந் திகைத்துநின்றார்.

(இ-ள்.) அழுந்திய விடருணீங்கி = பிறவிச்சேற்றில் மூழ்கிக்கிடக்கும் இடுக்கணினின்றும் நீங்கி ; அடியனே னுய்ய=அடியேன் பிழைக்கும் பொருட்டுத்திருவுளங்கொண்டு ; என்பா லெழுந்தருள் பெரியோய்=என்னிடத்து எழுந்தருளிய பெரியோனே ; ஈண்ட வமுதுசெய் தருள்க வென்று = திருவுளத்திற் கிசையத் திருவமுது செய்தருள வேண்டுமென்று ; தொழும்பனு ருரைத்த போதில்=இளையான்குடிமாற நாயனார் விண்ணப்பஞ் செய்தவிடத்து; சோதியா யெழுந்து தோன்ற=அடியார் வேடங்கொண்ட சிவபிரான் ஒளியுருவாய் மேலே எழுந்து விளங்கித்தோன்ற ; செழுந்திரு மனைவியாருந் தொண்டரும் = தட்பமான குணத்தினையுடைய மங்கலமமைந்த அம்மனைவியாரும் அந்நாயனாரும்; திகைத்து நின்றார் = அதிசயத்தால் திகைத்து நின்றார்கள்.—எ-று. (உச)

நாயனார்கூடைகொண்டு வயலில்மிதந்த முளைநெல்லை கூடையிற்பெய்து மனையாளிடங்கொடுத்து தீமூட்ட வீட்டின் வரிச்சல்களை அறுத்துதள்ள அமுதுசமைத்து புறக்கடையிலுற்ற சிறுபயிர்களை பலகறிவகையாக்கி சிவனடியாரை எழுப்ப ஜோதியாய் தோன்றி இடபாரூடராய் அனுக்கிரகித்தது.

1. சிவனடியார்.
2. நாயனார்
3. மனையாள்.

திகைப்பு=காணுப்பொருள் கண்டுழித்துணிவு பிறவாமையின் இது யாதோவென்னும் ஐயத்தால் மருண்டு நிற்குங்குணம்.

மாலயற் கரியநாதன் வடிவொரு சோதியாகச்
சாலவே மயங்குவார்க்குச் சங்கரன் றான்மகிழ்ந்தே
ஏலவார் குழலாடன்னோ டிடபவா கனனாய்த்தோன்றிச்
சீலமார் பூசைசெய்த திருத்தொண்டர் தம்மைநோக்கி.

(இ-ள்.) மாலயற் கரிய நாதன் = திருமால் பிரமன் என்னும் இருவரால் அறிதற்கரிய சிவபிரானது; வடிவொரு சோதியாக = திருவுருவம் ஓர் ஒளிப்பிழம்பாக (அதைக்கண்டு); சாலமயங்குவார்க்கு = மிகவும் ஐயுற்றுத் திகைத்து நிற்கும் அவ்விருவருக்கும்; சங்கரன் மகிழ்ந்து=சிவபிரான் மகிழ்கூர்ந்து; ஏலவார்குழலா டன்னோடு = மயிர்ச்சாந்தணிந்த நீண்ட கேசத்தையுடைய உமாதேவியாரோடு; இடபவாகன னாய்த்தோன்றி = இடபவாகனத்தின்மேற் காட்சிகொடுத்து; சீலமார் பூசைசெய்த = சிறந்த அடியார் பூசையைச்செய்த; திருத்தொண்டர் தம்மை நோக்கி=அத்திருவடியாரைப் பார்த்தருளி.—எ-று. (உரு)

ஏ, தான், அசை.

அன்பனே அன்பர்பூசை யளித்தநீ யணங்கினோடும்
என்பெருந் தலத்தையெய்தி யிருநிதிக் கிழவன்றானே
முன்பெரு நிதியமேந்தி மொழிவழி யேவல்கேட்ப
இன்பமார்ந் திருக்கவென்றே யருள்செய்தா னெவர்க்குமிக்கான்.

(இ-ள்.) அன்பனே = அடியவனே; அன்பர்பூசை யளித்தநீ யணங்கினோடும்=அடியார்களது பூசையைச்செய்த நீ உன்மனையாளோடும்; என்பெருந் தலத்தையெய்தி=என்னுடைய பெருமையாகிய சிவபதத்தை அடைந்து; இருநிதிக் கிழவன்தானே=குபேரன்தானே; முன்பெரு நிதியமேந்தி=உன்முன் பெரியசங்கநிதி பதுமநிதிகளையேந்திக்கொண்டு; மொழிவழி யேவல்கேட்க=உன் அனுமதிப்படி பணித்தவகைகளைக் கேட்க; இன்பமார்ந்திருக்கவென்று அருள்செய்தார் = இன்பத்தை யடைந்து இருக்கக் கடவையென்று அருளிச்செய்தார்; எவர்க்கு மிக்கான்=யாவர்க்கு மேலான சிவபிரான்.—எ-று. (உசு)

ஏகாரம் - தேற்றம்.

இப்பரி சிவர்க்குத்தக்க வகையினா லின்பநல்கி
முப்புரஞ் செற்றாரன்பர் முன்பெழுந் தருளிப்போனார்
அப்பெரி யவர்தந்தூய வடியிணை தலைமேற்கொண்டு
மெய்ப்பொருட் சேதிவேந்தன் செயலினை விளம்பலுற்றேன்.

(இ-ள்.) இப்பரிசிவர்க்கு=இவ்வாறு இந்நாயனாருக்கு; தக்கவகையினாலின்பநல்கி=தக்கவகைமையோடு சிவலோகத்தில் இன்பத்தைக் கொடுத்தருளி; முப்புரஞ்செற்றார் = திரிபுரங்களை எரித்த சிவபிரானார்; அன்பர்முன்பு எழுந்தருளிப்போனார்=அவர்முன்னே மறைந்தருளினார்; அப்பெரியவர்தம்=அவ்வித

மேம்பாட்டையுடைய இளையான்குடிமாற நாயனாரது ; தூயவடியிணைதலைமேற்கொண்டு=தூய்மைநிறைந்த திருவடிகளைச் சிரமேற்சூடி ; மெய்ப்பொருட் சேதிவேந்தன்=சேதிநாட்டரசராகிய மெய்ப்பொருணாயனாரது ; செயலினை விளம்பலுற்றேன் = திருத்தொண்டைச் சொல்லத்தொடங்கினேன்.—எ-று. (உஎ)

இளையான்குடிமாறநாயனார்புராணம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - சஎசு.

## மெய்ப்பொருணாயனார்புராணம்.

சேதிநன் னாட்டுநீடு திருக்கோவ லூரின்மன்னி
மாதொரு பாகரன்பின் வழிவரு மலாடர்கோமான்
வேதநன் னெறியின்வாய்மை விளங்கிட மேன்மைபூண்டு
காதலா லீசர்க்கன்பர் கருத்தறிந் தேவல்செய்வார்.

(இ-ள்.) சேதிநன்னாட்டுநீடு=நல்ல சேதிநாட்டின்கணுள்ள மேன்மைமிக்க ; திருக்கோவலூரின்மன்னி = திருக்கோவலூரின்கண் வாழ்ந்தருளி ; மாதொருபாகரன்பின் வழிவரும்=உமாதேவிபாகராகிய சிவபிரானது பத்திவழியேயொழுகும் ; மலாடர்கோமான்=மலையாளர்களுக்கு அரசர் ; வேதநன்னெறியின் வாய்மை விளங்கிடமேன்மைபூண்டு=நன்மையான வைதிகநெறியின் உண்மை உலகில்விளங்குதற்கேதுவாய் தகைமைக்குணத்தைத்தாங்கி ; காதலா லீசர்க்கன்பர்=பெருவிருப்போடு சிவபிரானடியார்களது ; கருத்தறிந்தேவல்செய்வார்= திருவுள்ளக்குறிப்புணர்ந்து பணிவிடைசெய்கின்றவர்.—எ-று. (க)

அவரது இயல்பாகிய பத்திதோன்ற அன்பின்வழிவரும் என்றும், குறுநிலமன்னராதலின் கோமான்என்றுங் கூறினர். வைதிகநெறியின் வாய்மையாவது ஒழுக்கம். மேன்மை=ஒழுக்கநெறியிற்றவறுமை. அவ்வொழுக்க நெறியில் ஒருசிறிதும் தவறாதவரென்பது விளக்கிய மேன்மைபூண்டென்றார்.

அரசிய னெறியின்வந்த வறநெறி வழாமற்காத்து
வரைநெடுந் தோளால்வென்று மாற்றலர் முனைகண்மாற்றி
உரைதிறம் பாதநீதி யோங்குநீர் மையினின்மிக்கார்
திரைசெய்நீர்ச் சடையானன்பர் வேடமே சிந்தைசெய்வார்.

(இ-ள்.) அரசியல்நெறியின்வந்த=அரசாட்சிக்குரிய வழியினின்றும் பாரம்பரியமாய் வந்த ; அறநெறி வழாமற்காத்து=அறநெறியைத் தவறாமற்பாதுகாத்து ; வரைநெடுந்தோளால்வென்று = மலைபோலும் நெடியதன் தோள்வலிமிகுதியால் பகைவரைவென்று ; மாற்றலர் முனைகண்மாற்றி = அப்பகைவரது படைமுனையை அழித்து ; உரைதிறம்பாத நீதியோங்கும்=மெய்கூறுதலினின்

றும் வேறுபடாத நீதி மிக்க ; நீர்மையினின்மிக்கார் = குணத்தால் உயர்ந்தவர் (அவர் திருநாமம் யாதெனில்) ; திரைசெய்நீர்ச்சடையான்=அலைவீசுகின்ற கங்காநதிதங்கிய சடைமுடியையுடைய சிவபிரானது ; அன்பர்வேடமே சிந்தைசெய்வார்=அன்பர் திருவேடத்தையே சிந்தைசெய்யுங் காரணத்தால் மெய்ப்பொருணாயனாரென்று கூறப்படுவோர்.—எ-று. (௨)

அரசன்வலியைத் தோள்மேல்வைத்துத் தோளால் என உபசரித்தார். ஏகாரந் தேற்றம். அதனையே மெய்ப்பொருளாகக் கொள்ளுதலினால் ஏனைய் பொருள்களை அவ்வாறு மதியாரென்றது குறித்து நின்றது.

மங்கையைப் பாகமாக வுடையவர் மன்னுங்கோயில்
எங்கணும் பூசைநீடி யேழிசைப் பாடலாடல்
பொங்கிய சிறப்பின்மல்கப் போற்றுதல் புரிந்துவாழ்வார்
தங்கணா யகருக்கன்பர் தாளலாற் சார்பொன்றில்லார்.

(இ-ள்.) மங்கையைப் பாகமாகவுடையவர்=உமாதேவியாரை ஒருகூற்றில் உடைய சிவபிரான் ; மன்னுங்கோயிலெங்கணும் பூசைநீடி = வீற்றிருந்தருளும் திருக்கோயிலுள்ள இடங்களெல்லாம் பூசைகள் குறையாது நடத்தி ; ஏழிசைப்பாடலாடல் பொங்கியசிறப்பின்மல்க = ஏழிசையோடுகூடிய பாடல்களும் ஆடல்களும் பொலிவினையுடைய விழாச் சிறப்போடு ஓங்க ; போற்றுதல் புரிந்துவாழ்வார் = அவைகளைப் பாதுகாத்து வாழ்கின்றவர் ; தங்கணாயகருக்கன்பர் தாளலால்=தமக்கு நாயகராகிய சிவபிரான் அடியார்களது திருவடிகளல்லாமல்; சார்பொன்றில்லார்=சார்பு வேறில்லாதவர்.—எ-று. (௩)

தேடிய மாடுநீடு செல்வமுந் தில்லைமன்றுள்
ஆடிய பெருமானன்பர்க் காவன வாகுமென்று
நாடிய மனத்தினோடு நாயன்மா ரணைந்தபோது
கூடிய மகிழ்ச்சிபொங்கக் குறைவறக் கொடுத்துவந்தார்.

(இ-ள்.) தேடிய மாடுநீடு செல்வமும்=(அவர்) தாம்தேடிய பொன்னும் வளர்ந்த மற்றைய செல்வங்களும் ; தில்லைமன்று ளாடிய பெருமான் = தில்லையின்கண் பொன்னம்பலத்தில் நடனஞ்செய்தருளுகின்ற பிரானாரது; அன்பர்க்காவன வாகுமென்று = அடியவர்களுக்கேஉரியனவாம் என்று ; நாடியமனத்தினோடு = விரும்பிய மனத்தினோடு ; நாயன்மா ரணைந்தபோது = திருவடியார்கள் தம்மிடத்துக்கு எழுந்தருளும்போது ; கூடிய மகிழ்ச்சி பொங்க = தன்னுள்ளத்து நிறைந்த அன்பால் மகிழ்ச்சிமிக ; குறைவறக் கொடுத்துவந்தார் = குறைவில்லாமல் வேண்டிய பொருள்களைக் கொடுத்து வந்தார்.—எ-று. (௪)

இன்னவா றொழுகுநாளி லிகற்திறம் புரிந்தோர்மன்னன்
அன்னவர் தம்மைவெல்லு மாசையா லமர்மேற்கொண்டு
பொன்னணி யோடையானை பொருபரி காலாள்மற்றும்
பன்முறை யிழந்துதோற்றுப் பரிபவப் பட்டுப்போனான்.

(இ-ள்) இன்னவா றொழுகுநாளில் = இவ்வாருக மெய்ப்பொருளுயைனூர் சிவனடியார்களை வழிபாடுசெய்து வரும்நாளில்; இகற்றிறம் புரிந்தோர் மன்னன் = அவரோடு பகைத்துநின்று ஓர் அரசன்; அன்னவர் தம்மைவெல்லு மாசையால் = அவரைத் தான் போரில் வெல்லுவேனென்று கருதும் ஆசை மிகுதியால்; அமர்மேற் கொண்டு = போர்செய்தலை மேற்கொண்டு; பொன்னணி யோடையானை = பொன்னாற்செய்த நெற்றிப்பட்டத்தையுடைய யானைகளையும்; பொருபரிகாலாள் = போர்செய்தற்குரிய குதிரைகளையும் பதாதிகளையும்; மற்றும் பன்முறை யிழந்துதோற்று = தேர்படைவீரர்முதலிய பலபொருள்களைப்பலகாலும் இழக்கக்கொடுத்துதோற்று; பரிபவப்பட்டுப்போனுன் = அவமான மடைந்து போனுன்.—எ-று. (ரு)

இப்படி யிழந்தமாற்ற னிகலினல் வெல்லமாட்டான்
மெய்ப்பொருள் வேந்தன்சீல மறிந்துவெண் ணீறுசாத்தும்
அப்பெரு வேடங்கொண்டே யற்றத்தில் வெல்வானுகச்
செப்பரு நிலைமையெண்ணித் திருக்கோவ லூரிற்சேர்வான்.

(இ-ள்.) இப்படி யிழந்தமாற்ருன் = இவ்வாறு தோல்வியடைந்த பகையரசனுனவன்; இகலினல் வெல்லமாட்டான் = தன்வலியினுல் வெல்லாதவனுகி; மெய்ப்பொருள் வேந்தன்சீல மறிந்து = மெய்ப்பொருளுயனுருடைய அடியார் பத்தியையுணர்ந்து; வெண்ணீறுசாத்தும் அப்பெருவேடங்கொண்டு = வெண்மையாகிய திருநீற்றைத்தரிக்கும் அவ்வடியார்களுடைய பெருமையான திருவேடத்தைக் கபடமாகத் தாங்கிக்கொண்டு; அற்றத்தில் வெல்வானுக = தன்கபடம் உணராதிருக்கும் சமயமறிந்து வெல்லுங் கருத்துடையவனுக (அதாவது) நித்திரைசெய்யுங்காலம் தனியே யிருக்குங்காலம்; செப்பரு நிலைமை யெண்ணி = சொல்லக்கூடாத தீமையைச் செய்யக்கருதி; திருக்கோவலூரிற் சேர்வான் = திருக்கோவலூரிற் செல்வானுயினுன்.—எ-று. (சு)

மெய்யெலா நீறுபூசி வேணிகண் முடித்துக்கட்டிக்
கையினிற் படைகரந்த புத்தகக் கவளியேந்தி
மைபொதி விளக்கேயென்ன மனத்தினுட் கறுப்புவைத்துப்
பொய்தவ வேடங்கொண்டு புகுந்தனன் முத்தநாதன்.

(இ-ள்.) மெய்யெலா நீறுபூசி = தன் தேகமுழுதும் விபூதியைத் தரித்துக்கொண்டு; வேணிகண் முடித்துக்கட்டி = சடைகளை ஒன்ருகச் சேர்த்துக் கட்டி; கையினிற் படைகரந்த புத்தகக் கவளியேந்தி = தன் கையினிடத்து உடைவாளை உள்ளே மறைத்த புத்தகக் கவளியைத் தாங்கிக்கொண்டு; மைபொதிவிளக்கேயென்ன = கருநிறத்தைத் தன்னுள்ளேவைத்த தீபம்போல; மனத்தினுட் கறுப்புவைத்து = தன் மனதினுள்ளே கோபத்தை வைத்துக்கொண்டு;

பொய்தவ வேடங்கொண்டு புகுந்தனன் = பொய்யாகிய ஓர் தவவேடத்தைக் கொண்டு சென்றான்; * முத்தநாதன்=மூடர்களுட்சிறந்த அவ்வரசன்.—எ-று. (௭)

கவளிகை என்றது கவளியெனக் குறைந்து நின்றது. கவளிகை யாவது புத்தகம் வைத்தற்காக அதனளவாய்ப்பட்டினால் தைத்த பை. இதுகருதி காட்டில் மறைந்து வாழ்ந்து வேணி வளர்த்தானாதலில் அது அவனுக்கு மூமத்தற்குச் சாதனமாயிற்று. விளக்கு தன்னுள்ளே சிறியகறுப்பை உள்ளடக்கி நிற்றலில் மைபொதிவிளக்கென்றார்.

மாதவ வேடங்கொண்ட வன்கணான் மாடந்தோறுங்
கோதைசூ ழளகபாரக் குழைக்கொடி யாடமீது
சோதிவெண் கொடிகளாடுஞ் சுடர்நெடு மறுகிற்போகிச்
சேதியர் பெருமான்கோயிற் றிருமணி வாயிற்சேர்ந்தான்.

(இ-ள்.) மாதவ வேடங்கொண்ட வன்கணான் = பெருமையினை யுடைத்தாகிய தவவேடத்தைத் தாங்கிக்கொண்டுவந்த கொடியனாகிய முத்தநாதன்; மாடந்தோறுங் கோதைசூழளகபாரக் குழைக்கொடியாட = மேல்மாளிகைகள் தோறும் மாலைகள்சூழ்ந்த அளகபாரத்தையுடைய குழைத்த கொடிபோலும் மகளிர்கள் கூத்தாட; மீதுசோதிவெண் கொடிகளாடும்=அதன்மேல் ஒளியினையுடைய வெண்மையான கொடியாடைகள் அசைகின்ற; சுடர்நெடுமறுகிற் போகி=ஒளிவீசுகின்ற நெடுமையாகிய வீதியிற்சென்று; சேதியர் பெருமான்= சேதிநாட்டரசராகிய மெய்ப்பொருணாயனாரது; கோயிற்றிருமணிவாயிற் சேர்ந்தான்=அழகிய மணிகளழுத்திய அரண்மனைவாயலில் அடைந்தான்.—எ-று.(அ)

பொய்த்தவ வேடமென்றது, பொய்தவ வேடமென விகாரமாயிற்று.

கடையுடைக் காவலாளர் கைதொழு தேறநின்றே
உடையவர் தாமேவந்தா ருள்ளெழுந் தருளுமென்னத்
தடைபல புக்கபின்பு தனித்தடை நின்றதத்தன்
இடைதெரிந் தருளவேண்டுந் துயில்கொளு மிறைவனென்றான்.

(இ-ள்.) கடையுடைக் காவலாளர்=வாயலிற் காவல்செய்கின்றவர்கள்; கைதொழு தேறநின்று=கைகுவித்து வணங்கித் தூரத்தில்நின்று; உடையவர் தாமே வந்தார்=நம்மை ஆட்கொள்ளும் சிவபிரான் அடியார் திருவுளக்கூர்ந்து வலிய எழுந்தருளினார் என்றுகூறி; உள்ளெழுந் தருளுமென்ன=உள்ளே எழுந்தருள வேண்டுமென்று பிரார்த்திக்க; தடைபல புக்கபின்பு = இவ்வாறு பல வாயில்களையுங்கடந்து உள்ளேசென்று பின்பு; தனித்தடை நின்றதத்தன் = நாயனார்க்கு உயிர்க்காவலாய்த்தனியே நின்றதத்த னென்பவன்; இடைதெரிந்

* முத்தநாதனென்றது அவன் பெயரன்று, அவனுக்கு அது பெயராயின் முன்னர் அவ்வாறு கூறாது ஓர் மன்னனெனக் கூறுதலின் முக்தன் என்னும் வடசொல் தமிழில் முத்தனெனவரும் முறைபற்றி மூடனெனத் தானே ஒருபெயர் கொடுத்துக் கூறினாரென்பது போதலில் முத்தநாதனென்ற பாடமே கொள்ளப் பட்டது. புத்திநாதனென்றும் முத்திநாதனென்றும் பாடபேதமும் உண்டு.

தருளவேண்டும்=சமயந்தெரிந்து தேவரீர் உள்ளே எழுந்தருளவேண்டும்; துயில் கொளு மிறைவனென்றான் = நம்முடைய அரசன் பள்ளிகொள்கின்றார் என்று கூறினன்.—எ-று. (கூ)

ஏகார மிரண்டில், முன்னையது அசை, பின்னையது தேற்றம்.

என்றவன் கூறக்கேட்டே யானிவற் குறுதிகூற
நின்றிடு நீயுமென்றே யவனையு நீக்கிப்புக்குப்
பொன்றிகழ் பள்ளிக்கட்டிற் புரவலன் றுயிலமாடே
மன்றலங் குழன்மென்சாயன் மாதேவி யிருப்பக்கண்டான்.

(இ-ள்.) என்றவன் கூறக்கேட்டு = இவ்வாறு தத்தனென்னும் தனிக் காவலன்சொல்ல அதனைக்கேட்டு; யானிவற்குறிதிகூற = யான் இவ்வரசனுக்கு உறுதி மொழியை உபதேசிக்க; நின்றிடு நீயென்று = நீ தடைசெய்யாது நில்லென்று; அவனையு நீக்கிப்புக்கு = அத்தத்தனையும் விலக்கிக்கொண்டு உள்ளே சென்று; பொன்றிகழ் பள்ளிக்கட்டில்=பொன்னாற் செய்யப்பட்டுவிளங்குகின்ற பள்ளியறைக் கட்டிலிலே; புரவலன்றுயில = மெய்ப்பொருணயனார் துயில் செய்யவும்; மாடே மன்றலங் குழல்மென்சாயல்=அவரருகில் வாசனையுடைத்தாகிய கூந்தலையும் மிருதுவான சாயலையுமுடைய; மாதேவி யிருப்பக்கண்டான்= அவர் பத்தினியார் இருக்கும்படிக்கும் பார்த்தான்.—எ-று. (க0)

நீயும் என்றதில், உம்மை அசை. பள்ளிக்கட்டில் என்புழி சயனஞ்செய் தற்குரிய கட்டில் என்று கூறினுமமையும்.

கண்டுசென் றணையும்போது கதுமென வெழுந்துதேவி
வண்டலர் மாலையானை யெழுப்பிட வுணர்ந்துமன்னன்
அண்டர்நா யகனார்தொண்ட ராமெனக் குவித்தசெங்கை
கொண்டெழுந் ததிரேசென்று கொள்கையின் வணங்கிநின்று.

(இ-ள்.) கண்டுசென் றணையும்போது=அவர் பத்தினியார் இருப்பதைக் கண்டு கிட்டிச்செல்லும்பொழுது; கதுமென வெழுந்துதேவி=விரைவாக எழுந்து அவர் பத்தினியார்; வண்டலர் மாலையானை யெழுப்பிட=வண்டுகள் மொய்க்கும்படியாக அலர்ந்த மாலையையுடைய மெய்ப்பொரு ணயனாரைத் துயிலெழுப்ப; உணர்ந்து மன்னன்=துயிலுணர்ந்து அந்நாயனார்; அண்டர் நாயகனார் தொண்டராமென = சிவபிரானார் திருவடியார் இவரென்று; குவித்தசெங்கை கொண்டெழுந் ததிரேசென்று = சிரசின்மேற் குவித்த சிவந்த திருக்கரங்களை யுடையராய்ப் பள்ளியினின்றும் எழுந்து அவனெதிராகட்போய்; கொள்கையின் வணங்கிநின்று=விதிப்படி முறைமையால் பணிந்துநின்று.—எ-று. (கக)

மங்கலம் பெருகமற்றென் வாழ்வுவந் தணைந்ததென்ன
இங்கெழுந் தருளப்பெற்ற தென்கொலோ வென்றுகூற
உங்கணா யகனார்முன்ன முரைத்தவாகம நூன்மண்மே
லெங்குமில் லாததொன்று கொடுவந்தே னியம்பவென்றான்.




மெய்ப்பொருளனாரால் போரிற்றோல்வியுற்ற முத்தநாதன் கபடமாயவனாவெல்லச் சிவவேடம்பூண் டுடைவாளைப் புத்தகக்கவளிபோற்றாங்கிவர நாயனர் நித்திரையிலிருப்பதாகத் தத்தன் தடுத்தும ஆகமமுணர்ப்பதாயட்புகுந்தெழுப்பி மனைவியை அப்புறப்படுத்தி வணங்கிநின்றவரை உபதேசிப்பவர்போற்குத்தியது.

(இ-ள்.) மங்கலம்பெருக=மங்கலமானது பெருகும்படிக்கு; என்வாழ் வுவந்தணைந்ததென்ன = என்னுடைய செல்வமானது ஒருருவெடுத்து வந்தாற் போல; இங்கெழுந் தருளப்பெற்ற தென்னோவென்றுகூற=இவ்விடத்து தேவரீர் எழுந்தருளியதுயாது கருதியோ என்றுவினவ; உங்கணாயகனார் முன்னமுனைத் தவாகமநூல்=உங்கள் பிரானார் முன்னாளில் அருளிச்செய்த சைவாகம நூலுள்; மண்மேலெங்கு மில்லாததொன்று=உலகத்தில் எவ்விடத்துமில்லாத அரிய ஒன் றை; கொடுவந்தே னியம்பவென்றான்=கொண்டு வந்தேன் உனக்கு உபதேசிக்க என்றான்.—எ-று. (கஉ)

மற்று, கொல், அசை.

பேறெனக் கிதன்மேலுண்டோ பிரானருள் செய்தவிந்த
மாறிலா கமத்தைவாசித் தருள்செய்ய வேண்டுமென்ன
நாறுபூங் கோதைமாது தவிரவே நானுநீயும்
வேறிடத் திருக்கவேண்டு மென்றவன் விளம்பவேந்தன்.

(இ-ள்.) பேறெனக் கிதன்மே லுண்டோ= இவ்வா றெழுந்தருளிக் கட் டளையிட்டதினும் உயர்ந்தபேறு அடியேனுக்கு உண்டோ இல்லை; பிரானருள் செய்தவிந்த மாறிலாகமத்தை = சிவபிரான் அருளிச்செய்த குற்றமற்ற இந்தச் சிவாகம நூலை; வாசித்தருள்செய்ய வேண்டுமென்ன = வாசித்து அதன்பொரு ளைவிளங்க அருளிச்செய்ய வேண்டுமென்று கேட்க; நாறுபூங்கோதைமாது தவிர = வாசனை கமழ்கின்ற மலர்மாலையைமுடித்த கூந்தலையுடைய உன்தேவி யல்லாமல்; நானுநீயும் வேறிடத் திருக்கவேண்டும் = நானும் நீயும் தனியிடத் திருக்க வேண்டும்; என்றவன் விளம்ப வேந்தன் = என்று அம்முத்த நாதன் சொல்ல மெய்ப்பொருணயனார்.—எ-று. (கங)

திருமக ளென்னநின்ற தேவியார் தம்மைநோக்கிப்
புரிவுடன் விரையவந்தப் புரத்திடைப் போகவேவித்
தருதவ வேடத்தானைத் தவிசின்மே லிருத்தித்தாமும்
இருநிலத் திருந்துபோற்றி யினியருள் செய்யுமென்றார்.

(இ-ள்.) திருமகளென்னநின்ற=இலக்குமிபோல அங்குநின்ற; தேவி யார் தம்மைநோக்கி = தமது பத்தினியாரைப்பார்த்து; புரிவுடன்விரைய=விரு ப்போடு விரைவாக; அந்தப்புரத்திடைப்போகவேவி = அந்தப்புரத்திலே போ கும்படி அனுப்பி; தருதவவேடத்தானை = மறைவாய்ப்பூண்ட தவவேடத்தை யுடைய முத்தநாதனை; தவிசின்மேலிருத்தி=ஆசனத்தின்மேலிருக்கச்செய்து; தாமும் இருநிலத்திருந்துபோற்றி=தானும் பெருமையாகிய நிலத்தில் ஆசனமின்றி இருந்து துதித்து; இனியருள்செய்யுமென்றார்=இனிமேல் அருள்செய்யவேண் டுமென்று கேட்டார்.—எ-று. (கச)

இவ்விரண்டுங் குளகம்.

கைத்தலத் திருந்தவஞ்சக் கவளிகை மடிமேல்வைத்துப்
புத்தக மவிழ்ப்பான்போன்று புரிந்தவர் வணங்கும்போதிற்
பத்திரம் வாங்கித்தான்மு னினைந்தவப் பரிசேசெய்ய
மெய்த்தவ வேடமேமெய்ப் பொருளெனத் தொழுதுவென்றார்.

(இ-ள்.) கைத்தலத்திருந்தவஞ்சக்கவளிகை = அவன்கையில் வைத்திருந்தவஞ்சகமான புத்தகக்கவளியை ; மடிமேல்வைத்து = தன்மடியின்மேல்வைத்து ; புத்தகமவிழ்ப்பான் போன்று = அதனுள்ளிருக்கும் புத்தகத்தை எடுத்து அவிழ்ப்பவனையொத்து ; புரிந்தவர் வணங்கும்போதில் = விரும்பி அந்நாயனார் வணங்குஞ் சமயத்து ; பத்திரம்வாங்கி = அதனுள்ளிருந்த உடைவாளை எடுத்து ; தான்முனினைந்தவப் பரிசேசெய்ய = தான்முன்கருதிய எண்ணப்படி செய்ய ; மெய்த்தவவேடமே = தாம் மெய்ம்மையான பொருளாகக்கொண்ட தவவேடத்தையே ; மெய்ப்பொருளெனத்தொழுது வென்றார்=மெய்ப்பொருளாகக்கருதி வணங்கிப் பிறவியை விளைக்கும் அஞ்ஞானப்பகையைக் கடிந்தார்.—எ—று. (கடு)

ஏகாரம் - தேற்றம்.

இவ்வாறுசெய்தவன் மாற்றானென உணர்ந்தும் தாம்கொண்ட கொள்கை சிவபிரான் திருவுருவாகிய தவவேடமே யாதலில் அக்கொள்கையிற் பிழையாது அதனையே பொருளாகக்கொண்டார் என்பதுதோன்ற மெய்த்தவவேடமே என்றும், அம்மெய்யுணர்ச்சியில் தவறாது அப்பொய்வேடத்தையும் வேடவொப்புமையால் பொருளாகக்கொண்டு தொழுதாரென்பது தோன்ற மெய்ப்பொருளெனத்தொழுதென்றும், அவ்வுணர்ச்சி வாயிலாய் அவ்வேடத்துக்குத் தன்பணியிழந்து நிற்றலில் அஞ்ஞானத்தை வென்றனரென்பதுதோன்ற வென்றாரென்றுங் கூறினர். மெய்ப்பொருளாகக்கோடல், போகம் அனுபவிக்கும் பொருளும் போகம் அனுபவித்தற்குச் சாதனமாகிய உடம்பும் ஆகிய இவை பொய்ப்பொருளாக வேறுபட அதனைக்கொள்ளல்.

மறைத்தவன் புகுந்தபோதே மனமங்கு வைத்ததத்தன்
இறைப்பொழு தின்கட்கூடி வாளினா லெறியலுற்றா
னிறைத்தசெங் குருதிசோர வீழ்கின்றார் நீண்டகையாற்
றறைப்படு மளவிற்றத்தா நமரெனத் தடுத்துவீழ்ந்தார்.

(இ-ள்.) மறைத்தவன் புகுந்தபோதே=வஞ்சனையாகப் பூண்ட சிவவேடத்தை யுடைய அம்முத்தநாதன் உள்ளே சென்றபொழுதே ; மனமங்குவைத்ததத்தன்=மனதை அங்குவைத்த தத்தனென்னும் தனிக்காவலன் ; இறைப்பொழு தின்கட்கூடி=ஒரு கணப்பொழுதிற்சென்று ; வாளினா லெறியலுற்றான் = வாட்படையால் எறியத்தொடங்கினான் ; நிறைத்தசெங் குருதிசோர வீழ்கின்றார் = (அப்பொழுது) தமது திருமேனியில் இரத்தம் சோரும்படி நிலத்தில் வீழ்கின்ற அந்நாயனார் ; நீண்டகையாற் றறைப்படுமளவில் = தனது முழங்காலளவும் நீண்ட சிறப்பினையுடைய கையினால் பூமியில் விழும்பொழுது ; தத்தா

நமரென்த் தடுத்து வீழ்ந்தார் = தத்தனே நம்பெரியவர் என்று தடுத்து வீழ்ந்தார்.—எ-று. (கசு)

வீழ்கின்றார் தடுத்து வீழ்ந்தார் என இயையும். மறைத்து அவன் புகுந்த போது என்று உரைத்தலு மொன்று. வீழ்கின்றார் தடுத்து வீழ்ந்தார் என்றத னால் தன் துயரம் நோக்காது அவ்வேட முடையார் துயருக்கே பரிந்தாரென்பது விளக்கியவாறு காண்க. இதனால் இந்நாயனார் தாங்கொண்ட அருட்குறியாகிய மெய்ப்பொருளின் கொள்கையால் உடம்பை அரிந்தழியும் அந்நிலையில் வேறுபடாது நின்ற பத்திவலிமையைவிளக்கியவாறு.

வேதனை யெய்திவீழ்ந்த வேந்தரால் விலக்கப்பட்ட
தாதனுந் தத்தன்றானுந் தலையினால் வணங்கித்தாங்கி
யாதுநான் செய்கேனென்ன வெம்பிரா னடியார்போக
மீதிடை விலக்காவண்ணங் கொண்டுபோய் விடுநீயென்றார்.

(இ-ள்.) வேதனை யெய்தி வீழ்ந்த = அம்முத்தநாதனால் வருத்தப்பட்டு நிலத்தில் விழுந்த ; வேந்தரால் விலக்கப்பட்ட = மெய்ப்பொருணாயனாரால் (நமர் தத்தா) என்று கூறித்தடுக்கப்பட்ட ; தாதனுந் தத்தன்றானும் = அவர் அடியானாகிய தத்த னென்பவனும்; தலையினால் வணங்கித்தாங்கி = அந்நாயனாரைச் சிரசால் வணங்கி அவர் சிரத்தைக் கையாற்றாங்கிக் கொண்டு ; யாதுநான் செய் கேனென்ன = அடியேன் செய்யும்பணி யாதென்று வினவ ; எம்பிரா னடியார் போக= எமது சிவபிரானது அடியாராகிய இவர் போகுமிடத்து ; மீதிடை விலக்கா வண்ணம் = மேற்கொண்டு இடையில் வாயிலாளர்கள் விலக்காம லிருக்கும்படி ; கொண்டுபோய் விடுநீ யென்றார் = இவரைக் கொண்டுபோய் விடுவா யென்று கட்டளை யிட்டார்.—எ-று. (கஎ)

அத்திற மறிந்தாரெல்லா மரசனைத் தீங்குசெய்த
பொய்த்தவன் றன்னைக்கொல்வோ மெனப்புடை சூழ்ந்தபோது
தத்தனு மவரையெல்லாந் தடுத்துடன் கொண்டுபோவான்
இத்தவன் போகப்பெற்ற திறைவன தாணையென்றான்.

(இ-ள்.) அத்திற மறிந்தா ரெல்லாம் = அம்முத்தநாதன் செய்த செய்கையை அறிந்தவர்க ளெல்லாரும் ; அரசனைத் தீங்குசெய்த = நம்மரசனுக்குத் தீங்குசெய்த ; பொய்த்தவன் றன்னைக் கொல்வோ மென = பொய்யாகிய தவ வேடத்தையுடைய இவனைக் கொல்வோ மென்று ; புடைசூழ்ந்தபோது = அருகிற்சூழ்ந்த பொழுது ; தத்தனு மவரையெல்லாந் தடுத்து = தத்தனென்பவனும் அவர்களை யெல்லாந் தடுத்து ; உடன்கொண்டு போவான் = தன்னுடன் அவனை அழைத்துக்கொண்டு போவதற்கு ; இத்தவன் போகப்பெற்றது = இந்தத்தவ வேடத்தை யுடையவன் தீங்கின்றிப் போகப் பெற்றுக்கொண்டது ; இறைவன தாணையென்றான் = நமதரசன் ஆணையென்று அவர்க்குக் கூறினான்.—எ-று. (கஅ)

அவ்வழி யவர்களெல்லா மஞ்சியே யகலநீங்கச்
செவ்விய நெறியிற்றத்தன் றிருநகர் கடந்துபோந்து
கைவ்வடி நெடுவாளேந்தி யாளுறுக் கானஞ்சேர
வெவ்வினைக் கொடியோன்றன்னை விட்டவன் மீண்டுபோந்தான்.

(இ-ள்.) அவ்வழி யவர்களெல்லா மஞ்சியகல நீங்க=தத்தன் வார்த்தையைக் கேட்ட அளவில்வந்து சூழ்ந்தவர்களெல்லாம் அரசன் ஆணைக்குப்பயந்து அங்கு நின்றும் தூரமாக நீங்கிப்போக; செவ்விய நெறியிற்றத்தன்=நல்வழியாகத்தத்தனென்பவன்; திருநகர் கடந்து போந்து=அந்நகரத்தைக் கடந்துபோய்; கைவடி நெடுவாளேந்தி=கையினிடத்துக்கூரிய நீண்ட வாளாயுதத்தை ஏந்திக்கொண்டு; ஆளுறுக் கானஞ்சேர = மனிதர் சஞ்சரிக்காத காட்டை யடையும்படி; வெவ்வினைக் கொடியோன் றன்னைவிட்டு = தீவினையாளனாகிய அக்கொடியவனை அனுப்பிவிட்டு; அவன் மீண்டு போந்தான் = தத்தனென்பவன் மீண்டு வந்தான்.—எ-று. (கக)

ஏகாரம் - அசை. அவனிருந்த இடங் காடாதலிற்கானஞ்சேரஎன்றார்.

மற்றவன் கொண்டுபோன வஞ்சனை வேடத்தான்மேற்
செற்றவர் தம்மைநீக்கித் தீதிலா நெறியில்விட்ட
சொற்றிறங் கேட்கவேண்டிச் சோர்கின்ற வாவிதாங்குங்
கொற்றவன் முன்புசென்றான் கோமகன் குறிப்பினின்றான்.

(இ-ள்.) அவன் கொண்டு போன = தத்தன் அழைத்துக் கொண்டுபோன; வஞ்சனை வேடத்தான்மேல் = வஞ்ச வேடத்தையுடைய முத்தநாதன்மேல்; செற்றவர் தம்மை நீக்கி=கோபித்து எதிர்த்தவர்களை விலக்கி; தீதிலாநெறியில்விட்ட=குற்றமில்லாத மார்க்கத்தில்விட்ட; சொற்றிறங் கேட்கவேண்டி=சொல்லின் வகைமையைக் கேட்கவிரும்பி; சோர்கின்ற வாவிதாங்கும்=தன்னைவிட்டு நீங்கும் பிராணனை நீங்காமல் தாங்கிக்கொண் டிருக்கும்; கொற்றவன் முன்பு = மெய்ப்பொருணாயனார் முன்னே; சென்றான் கோமகன் குறிப்பினின்றான் = அந்நாயனார் குறிப்பின்வழி நிற்குந் தத்தன்போய் நின்றான்.—எ-று. மற்று - அசை. (உ0)

சென்றடி வணங்கிநின்று செய்தவ வேடங்கொண்டு
வென்றவற் கிடையூறின்றி விட்டன னென்றுகூற
இன்றெனக் கையன்செய்த தியார்செய்ய வல்லாரென்று
நின்றவன் றன்னைநோக்கிநிறைபெருங்கருணைகூர்ந்தார்.

(இ-ள்.) சென்றடி வணங்கி நின்று=தத்தன் நாயனார் சமீபத்திற்போய் அவர் திருவடிகளில் நிலமுற வணங்கி நின்று; செய்தவ வேடங் கொண்டு = செய்யப்பட்ட தவவேடத்தைத் தாங்கி; வென்றவற் கிடையூறின்றி=தேவரீரை வென்றவனுக்கு யாதொரு இடையூறுமின்றி; விட்டன னென்றுகூற = அடியேன் விட்டனனென்று விண்ணப்பஞ்செய்ய; இன்றெனக் கையன்செய்தது=




நாயனார் விழக்கண்ட தத்தன் புத்தநாதனைச் சேதிக்க முயலத் தடுத்துத் துன்பமணுகாது அப்புறப்படுத்துவா யென அவ்வாறு செய்ததைக்கேட்ட நாயனார் ஸ்ரீநடராஜர் திருவடியடைந்தது.

=இன்றைக்கு எனக்கு ஐயா நீசெய்த உதவி; யார்செய்ய வல்லாரென்று=யாவர்செய்ய வல்லவர்களென்று; நின்றவன் றன்னை நோக்கி=தன்முன் நின்றதத்தனைப்பார்த்து; நிறைபெருங் கருணைகூர்ந்தார்=நிறைவாகிய பெருங்கருணைசெய்தார்.—எ-று. (உ௧)

அரசிய லாயத்தார்க்கு மழிவுறுங் காதலார்க்கும்
விரவிய செய்கைதன்னை விளம்புவார் விதியினாலே
பரவிய திருநீற்றன்பு பாதுகாத் துய்ப்பீரென்று
புரவலன் மன்றுளாடும் பூங்கழல் சிந்தைசெய்தான்.

(இ-ள்.) அரசிய லாயத் தார்க்கும்=அரசாளுதற்குரிய புதல்வர் சகோதரர்களுக்கும்; அழிவுறுங் காதலார்க்கும்=வருந்துகின்ற விருப்பத்தையுடைய மந்திரி முதலாயினாருக்கும்; விரவிய செய்கைதன்னை விளம்புவார்=தம்முள்ளத்திற் கலந்திருந்த கொள்கையைக் கூறுகின்றவராய்; விதியினாலே பரவிய திருநீற்றன்பு பாதுகாத் துய்ப்பீரென்று = விதிப்படி யாவராலும் பரவத்தக்க திருவெண்ணீற்றின் அன்பை எப்பொழுதும் பேணிவருவீர்களாக என்று உத்தரவு செய்து; புரவலன் மன்றுளாடும் பூங்கழல் சிந்தைசெய்தான் = அம்மெய்ப்பொருணாயனார் கனகசபையின்கண் ஆனந்த நிருத்தஞ் செய்தருளும் சிவபிரானது பொலிவினையுடைய வீரக்கழலையணிந்த திருவடியைத் தியானஞ்செய்தருளினார்.—எ-று. (உ௨)

விரவிய செய்கை என்றதனால் தாம் மெய்ப்பொருளாகக் கொண்ட கொள்கை என்றும், விதியினால் என்றதனால் சிவதீக்கை யுடையராய்த் திருவைந்தெழுத் தோதப்பெற்று என்றும், திருநீற்றன்பு பாதுகாத்துய்ப்பீ ரென்றதனால் திருவெண்ணீற்றை நீவிரும்தரித்து அதனைத்தரித்து வரும் மெய்யடியார்களையும் பத்திசெய்து ஒழுகுவீர் என்றும் உபதேசித்தாராயிற்று. நீற்றன்பு என்றதனால் உருத்திராக்கமுங் கொள்க.

தொண்டனார்க் கிமயப்பாவை துணைவனா ரவர்முன் றம்மைக்
கண்டவா றெதிரேநின்று காட்சிதந் தருளிமிக்க
அண்டவா னவர்கட்கெட்டா வருட்கழ னீழல்சேரக்
கொண்டவ ரிடையறாமற் கும்பிடுங் கொள்கையீந்தார்.

(இ-ள்.) தொண்டனார்க் கிமயப்பாவை துணைவனார்=அம்மெய்ப்பொருணாயனாருக்கு பார்வதிதேவிக்கு நாயகராகிய சிவபிரான்; அவர்முன் றம்மைக் கண்டவாறு = அந்நாயனார் தம்மை முன்தியானஞ்செய்த உருவமேயாக; எதிரே நின்று காட்சிதந்தருளி = அவர் முன்னிலையில் வெளிப்பட்டருளி; மிக்க அண்டவானவர்கட் கெட்டா=(அவரை) மேலான விண்ணுலகின்கண்வாழும் தேவர்களுக்கும் எட்டாத; அருட்கழ னீழல்சேரக் கொண்டு=திருவருள் வடிவான தமது திருவடி நீழலிற்கலந்து நிற்கும்படி அடக்கிக்கொண்டு; அவர் இடையறாமற் கும்பிடுங் கொள்கையீந்தார் = அவர் தம்மைஇடைவிடாது தொழுதிருக்கும் முறைமையைக்கொடுத்தருளினார்.—எ-று. (உ௩)

அடியார் அன்பாற்கருதிய திருவுருவாய்ச் சிவபிரான் வெளிப்படுதலில், கண்டவாறெதிர்நின்று காட்சிதந்தருளி என்றார்.

இன்னுயிர் செகுக்கக்கண்டு மெம்பிரா னன்பரென்றே
நன்னெறி காத்தசேதி நாதனார் பெருமைதன்னில்
என்னுரை செய்தேனாக விகல்விறன் மிண்டர்பொற்றாள்
சென்னிவைத் தவர்முன்செய்த திருத்தொண்டு செப்பலுற்றேன்.

(இ-ள்.) இன்னுயிர் செகுக்கக்கண்டும் = தம்முடைய இனிய உயிரை உடை வாளால் குத்தக்கண்டும்; எம்பிரா னன்பரென்று = எமது சிவபிரானுடைய அடியாரென்று; நன்னெறிகாத்த=திருவேடமே மெய்ப்பொருளெனத் தாங்கொண்ட நெறியைப் பாதுகாத்த; சேதிநாதனார் பெருமைதன்னில்=சேதி நாட்டதிபராகிய மெய்ப்பொருணாயனார் பெருமையில்; என்னுரை செய்தேனாக =இயன்றவாறு ஒரு சிறிது சொன்னேன் (மேல்); இகல்விறன் மிண்டர்பொற்றாள் = வலிமையினையுடைய விறன்மிண்ட நாயனாரது அழகிய திருவடிகளை; சென்னிவைத் தவர்முன்செய்த = சிரசின்மேலே வைத்துக்கொண்டு அந்நாயனார் முன்னேசெய்த; திருத்தொண்டு செப்பலுற்றேன் = திருத்தொண்டைச் சொல்லத்தொடங்கினேன்.—எ-று. ஏகாரம் - அசை. (உ௪)

மெய்ப்பொருணாயனார்புராணம்முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௪௲௦.

திருச்சிற்றம்பலம்.

---

## விறன்மிண்டநாயனார்புராணம்.

விரைசெய்நறும்பூந் தொடையிதழி வேணியார்தங் கழல்பரவிப்
பரசுபெறு மாதவமுனிவன் பரசிராமன் பெறுநாடு
திரைசெய்கடலின் பெருவளனுந் திருந்துநிலனின் செழுவளனும்
வரையின்வளனு முடன்பெருகி மல்குநாடு மலைநாடு.

(இ-ள்.) விரைசெய்நறும் பூந்தொடையிதழி=வாசனைகமழ்கின்ற நல்ல பொலிவினையுடைய கொன்றைப்பூமாலையை அணிந்த; வேணியார்தங் கழல்பரவி=சடையினையுடைய சிவபிரானது திருவடிகளைப் பூசித்து; பரசுபெறுமாதவ முனிவன்=மழுப்படையைப்பெற்ற பெரியதவத்தையுடைய முனிவராகிய; பரசி ராமன்பெறுநாடு = பரசிராமன் வருணனிடத்தில் பெற்ற நாடாயும்; திரைசெய் கடலின் பெருவளனும் = அலையைவீசுகின்ற கடலின்கணுள்ள முத்து பவளம் முதலிய வளங்களும்; திருந்துநிலனின் செழுவளனும்=திருத்தமாகிய செந்நெல்பயறு முதலிய நிலவளங்களும்; வரையின்வளனுமுடன்பெருகி = சந்தனம் யானைக்கோடு முதலிய மலையினிடத் துதிக்கும் வளங்களும் ஒருங்குசேர்ந்து; மல்குநாடுமலைநாடு=நிறைந்திருக்கும் நாடுமாகியுள்ளது மலைநாடு.—எ-று. (க)

கார்த்தவீரியன் அஞ்சாது தன்தந்தையாகிய சமதக்கினிமுனிவரைக் கொன்றதனால், அவனையும் அவன்மரபினரையும் கருவறுக்கவேண்டுமென்று விரதம் பூண்டு சிவபிரானைப்பூசித்து அவரிடத்து மழுப்படைபெற்றாரென்பது தோன்றப் பரசுபெறு மாதவமுனிவனென்றும், மழுப்படைபெற்றபின், அவனைக்கொன்று அவன் வம்சத்தரசரையும் நாடோறும் ஒழித்து குருச்சேத்திரத்தில் தன்பெயரானுண்டாக்கிய ஐந்து குண்டத்தில் அவ்வரசருதிரத்தால் பிதிர்தர்ப்பணஞ் செய்யுங்கால் வெளிப்படத்தோன்றிப் பிண்டமேற்ற பிதிரர்கள் மகிழ்வடைந்தபின் அவ்விரதமுடித்து மேல் அதனால்வந்த பழிநீங்கச் சிவப்பிரதிட்டை செய்ததுமன்றி, தான் ஓர்நாடு புதிதாயுண்டாக்கி மறையவர்க்கீய விரும்பி வருணனைவேண்டித் தென்றிசைக்கடற்கண் நின்று மழுவைவீசி அதுவீழ்ந்த இடமே எல்லையாகச்செய்து நாடுண்டாக்கி மறையவர்க்கீந்து குடியேறினராதலில், பரசிராமன்பெறுநாடு என்றார்.

சமதக்கினி முனிவரைக் கொல்லுதற்குக் காரணம்:—கார்த்தவீரியன்தான் இச்சித்தகாரணத்தால் சமதக்கினிமுனிவர் இரேணுகை என்னும் தன்பத்தினியைப் பரசிராமனாற் கொல்வித்தாரென்று வெகுண்டு அவரைக்கொன்றானென்க.

வாரிசொரியுங் கதிர்முத்தும் வயன்மென்கரும்பிற் படுமுத்தும்
வேரல்விளையுங் குளிர்முத்தும் வேழமருப்பி னொளிர்முத்து
மூரலெனச்சொல் வெண்முத்த நகையார்தெரிந்து முறைகோக்குஞ்
சேரர்திருநாட் டூர்களின்முன் சிறந்தமூதூர் செங்குன்றூர்.

(இ - ள்.) வாரிசொரியுங் கதிர்முத்தும் = கடற்றிரைகளால் கரையிலொதுக்கப்பட்ட ஒளிவீசுகின்றமுத்தமும்; வயன்மென்கரும்பிற் படுமுத்தும் = வயலிலுள்ள மென்மையாகிய கரும்புகளில் உதித்தமுத்தமும்; வேரல்விளையுங் குளிர்முத்தும் = மூங்கில்களில் விளைந்த குளிர்ந்தமுத்தமும்; வேழமருப்பினொளிர்முத்தும் = யானைக்கொம்பில்நின்றும் உதித்து விளங்குகின்ற முத்தமும் (ஆகிய இவைகளை); மூரலெனச்சொல்வெண்முத்த நகையார் = பல்லென்றுகூறும் வெள்ளியமுத்தின் ஒளியையுடைய பெண்கள்; தெரிந்துமுறைகோக்கும் = ஆராய்ந்தெடுத்து வேறுவேறு வரிசையாகக் கோக்கும் சிறப்பினையுடைய; சேரர்திருநாட்டூர்களில் = சேரர்களது செல்வமிக்க நாட்டிலுள்ள ஊர்களில்; முன்சிறந்தமூதூர் = முற்பட்டுச் சிறந்த ஊரானது. (௨)

இச்செய்யுளின்கணுள்ள செங்குன்றூர் என்பது வருஞ் செய்யுளுடன் சேர்த்துப் பொருளுரைக்கப்பட்டது.

என்னும்பெயரின் விளங்கியுல கேறும்பெருமை யுடையதுதான்
அன்னம்பயிலும் வயலுழவி னமைந்தவளத்தா லாய்ந்தமறை
சொன்னநெறியின் வழியொழுகுந் தூயகுடிமைத் தலைநின்றார்
மன்னுங்குலத்தின் மாமறைநூன் மரபிற்பெரியோர் வாழ்பதியாம்.

(இ-ள்.) செங்குன்றூர் என்னும் பெயரின் விளங்கி=செங்குன்றூரென்னும் பெயரால் விளக்கத்தையடைந்து; உலகேறும் பெருமை யுடையது = உலகத்தில் மதிக்கத்தக்க பெருமையை யுடையது; தான் அன்னம் பயிலும் வயலுழவின்=அப்பதியானது அன்னங்கள்வாழ்கின்ற வயல்களை உழவினுல்; அமைந்தவளத்தால்=அமைந்த பயிர்வளத்தினுல்; ஆய்ந்தமறைசொன்னநெறியின் வழியொழுகும் = தெளிந்தபொருள்களையுடைய வேதங்கள் சொன்னமுறைப்படி அனுட்டிக்கும்; தூயகுடிமைத் தலைநின்றார் = தூய்மையாகிய குடிப்பிறப்பினை உடையவர்களும்; மன்னுங்குலத்தின்=நிலைபெற்ற குலத்தினையுடைய; மாமறைநூன் மரபிற்பெரியோர்=பெருமையாகிய வேதநூல்வழியில் ஒழுகுகின்றவர்களுமாகிய பெரிய மறையவர்கள்; வாழ் பதியாம்=வாழ்கின்ற ஊராயிருக்கும்.எ-று.()

மலையாளர்களாகிய அம்மறையவர்களுக்கு அந்நாடு தானமாகக் கொடுக்கப் பட்டதனுல், வேளாளரைக்கொண்டு உழவுத்தொழில் செய்வித்து அவ்வளத்தைப்பெறுவார் என்பதுதோன்ற உழவினமைந்த வளம் என்றும், அதனுல் மறை கூறும் வழிவேள்வித்தொழில் செய்யு மொழுக்கமுடையவர் என்பதுதோன்ற மறைசொன்ன நெறியின் வழியொழுகும் என்றுங் கூறினர்.

அப்பொற்பதியி னிடைவேளாண் குலத்தைவிளக்க வவதரித்தார்
செப்பற்கரிய பெருஞ்சீர்த்திச் சிவனார்செய்ய கழல்பற்றி
எப்பற்றினையு மறவெறிவா ரெல்லைதெரிய வொண்ணுதார்
மெய்ப்பத்தர்கள்பாற் பரிவுடையா ரெம்பிரானுர் விறன்மிண்டர்.

(இ-ள்.) அப்பொற்பதியினிடை=அத்தன்மையினையுடைத்தாகிய அழகிய அவ்வூரின்கண்; வேளாண்குலத்தை விளக்கவவதரித்தார்=வேளாளர்களது குலத்தை விளக்குதற்குக் காரணமாக அவதாரஞ்செய்தவர்; செப்பற்கரிய பெருஞ்சீர்த்தி=சொல்லுதற்கரிய பெரிய சிறப்பினையுடைய; சிவனார் செய்யகழல் பற்றி=சிவபிரானுரது சிவந்த நிறத்தினையுடைய திருவடிகளை எப்பொழுதுஞ் சிந்தித்து; எப்பற்றினையு மறவெறிவார்=எவ்வகைப்பற்றையும் அறும்படிவேறுபடுத்துகின்றவர்; எல்லைதெரியவொண்ணுதார்=(அவர்பெருமையை)இவ்வளவென்று அளந்தறியக்கூடாதவர்; மெய்ப்பத்தர்கள் பாற்பரிவுடையார்=மெய்யடியார்களிடத்து அன்புடையவர் (அவர்யாரெனில்); எம்பிரானுர் விறன்மிண்டர்= எமதுபிரானுகிய விறன்மிண்டநாயனுர்.—எ-று. (௪)

உம்மை, முற்றும்மை.

அகப்பற்ருகிய யானென்பதையும், புறப்பற்ருகிய எனது என்பதையும், அறுத்துநிற்றலில் எப்பற்றினையு மறவெறிவார் என்றும், அவ்வாறுதித்த பத்தியின்வரம்பு யாவராலும் அறியக்கூடாமையின் எல்லைதெரியவொண்ணுதா ரென்றும், உண்மையடியாரிடத்து வைத்த பேரன்புடையரென்பதுதோன்ற மெய்ப்பத்தர்கள்பாற் பரிவுடையாரென்றுங் கூறினர். பத்திவலிமையின் மிகுதியால் இவர்க்கு விறன்மிண்டநாயனுரெனக் காரணப்பெயராயிற்று.



சிவதரிசனத்திற்குமுன் அடியார்களைவணங்கும் விறன்மிண்டர் திருவாரூர்த் தேவாசிரியமண்டபத்திலிருக்குமடியவர்களை நம்பியாரூரர் வணங்காதுசெல்ல அவரும் அவரை வலியவாட்கொண்ட பரமசிவமும் திருக்கூட்டத்திற்குப் புறம்பென்று நாயனார் சொல்ல சுந்தரர் திருத்தொண்டத்தொகை யோதிக்களிப்பிக்க அவரது பத்திவலிமையைக்கண்ட சிவபெருமான் சிவகணங்களுக்குத் தலைவராக்கியது.

1 விறன்மிண்டர்
2 சுந்தரர்

நதியுமதியும் புனைந்தசடை நம்பர்விரும்பி நலஞ்சிறந்த
பதிகளெங்குங் கும்பிட்டுப் படருங்காதல் வழிச்செல்வார்
முதிருமன்பிற் பெருந்தொண்டர் முறைமைநீடு திருக்கூட்டத்
தெதிர்முன்பரவு மருள்பெற்றே யிறைவர்பாதந் தொழப்பெற்றார்.

(இ-ள்.) நதியுமதியும் புனைந்த சடைநம்பர் = (அவர்) கங்கையையும் இளம்பிறையையும் தரித்த சடைமுடியையுடைய சிவபிரான்; விரும்பி நலஞ் சிறந்த பதிகளெங்கும் கும்பிட்டு = திருவுளங்கொண்டு எழுந்தருளி யிராநின்ற திருப்பதிகளெங்கும் வணங்கி; படருங்காதல் வழிச்செல்வார் = செல்கின்ற பெரு விருப்பின்வழியே செல்கின்றவர்; முதிருமன்பிற் பெருந்தொண்டர் = மிக்க பேரன்பாற் பெருமையடைந்த அடியார்கள்; முறைமைநீடு திருக்கூட்டத்து எதிர் = ஒழுக்கம்மிக்க திருக்கூட்டத்தின் முன்பு; முன்பரவு மருள் பெற்று = முன்னே வணங்கும் அருளைப்பெற்று; இறைவர்பாதம் தொழப் பெற்றார் = சிவபிரான் திருவடிகளைப் பின்பு வணங்கும் முறைமையை யுடையார்.—எ-று. ஏ - அசை. (ருo)

இவர் பொதுமையால் பலரையும் வேடத்தால் மாத்திரம் வணங்கு மியல் புடையரல்லர் என்பது தோன்ற முதிருமன்பிற் பெருந்தொண்டர் முறைமை நீடு திருக்கூட்டத்தெதி ரென்றும், அவர்களை முன் வணங்கிப்பின் சிவபிரானை வணங்கும் இயல்புடைய ரென்பது தோன்ற முன்பரவும் என்றும், அதுவும் அவர்க்குச் சிவபிரான் திருவருள் விளக்க, அதனால் பெற்றவரென்பது தோன்ற அருள்பெற்று என்றுங்கூறினர். அவர் முன்பரவுதற்குக்காரணம், சிவபிரானது திருமேனி மறைந்த இயல்பினையுடையது அடியார் வேடம் சிவபிரான் திருவருள் வெளிப்படுத்தற்குக் காரணமாய்க் கண்முன் தோன்றிய உருவமென் றென்க.

பொன்றாழருவி மலைநாடு கடந்துகடல்சூழ் புவியெங்குஞ்
சென்றாளுடையா ரடியவர்தந் திண்மையொழுக்க நடைசெலுத்தி
வன்றாண்மேருச் சிலைவளைத்துப் புரங்கள்செற்ற வைதிகத்தேர்
நின்றாரிருந்த திருவாரூர் பணிந்தார் நிகரொன்றில்லாதார்.

(இ-ள்.) பொன்றாழருவிமலைநாடுகடந்து = பொற்றிரளோடுகலந்துவிழு கின்ற அருவிகளையுடைய சேரநாட்டைக்கடந்து; கடல்சூழ்புவி யெங்குஞ்சென்று = கடல்சூழ்ந்த நிலவுலகத்தில் உள்ள எத்திருப்பதிகளினுஞ் சென்று; ஆளுடையாரடியவர்தம் = நம்மை யாளாகவுடைய சிவபிரான் அடியார்களது; திண்மையொழுக்க நடைசெலுத்தி = திட்பமான ஒழுக்கநெறியை வழுவாமல் நடக்கச் செய்து; வன்றாண்மேருச்சிலைவளைத்து = வலிய அடியினையுடையமேருவாகியவில் லைவளைத்து; புரங்கள்செற்ற வைதிகத்தேர் = முப்புரங்களை எரித்தற்குக் காரணமான வேதங்களாகிய குதிரைபூட்டிய பூமியாகிய தேரில்; நின்றாரிருந்த திருவாரூர் பணிந்தார் = நின்றருளிய சிவபிரான் வீற்றிருந்தருளும் திருவாரூரை வணங்கினார்; நிகரொன்றில்லாதார் = தனக்கு வேறொருவரும் நிகரில்லாதவர்-எ-று

நிகரொன்றில்லாதார் பணிர்தாரென் இயையும்.

வேதமாகிய குதிரைபூண்டிழுத்தலில் வைதிகத்தேரென்றும், வேதப் பொருட்கு முதல்வர் இவரே என்பதுதோன்ற நின்றா ரென்றாங் கூறினர். திண்மையொழுக்க நடைசெலுத்தி என்றது தாம்செல்லுமிடங்களில் உள்ள அடியார்களது வழுவைான்காகத் திருத்தியும், பாதுகாத்தும், வரும் இயற்கை விளக்கியவாறு.

திருவார்பெருமை திகழ்கின்ற தேவாசிரிய னிடைப்பொலிந்து
மருவாநின்ற சிவனடியார் தம்மைத்தொழுது வந்தணையா
தொருவாறொதுங்கும் வன்றொண்டர் புறகென்றுரைப்பச் சிவனருளாற்
பெருகாநின்ற பெரும்பேறு பெற்றார்மற்றும் பெறநின்றார்.

(இ-ள்.) திருவார் பெருமை திகழ்கின்ற = மங்கலத்தன்மை நிறைந்த பெருமை விளங்குகின்ற; தேவாசிரிய னிடைப்பொலிந்து=தேவாசிரிய னென்னுங் காவணத்திற் பொலிவடைந்து; மருவாநின்ற சிவனடியார் தம்மை = வீதிராநின்ற சிவபிரானது மெய்யடியாரை; தொழுதுவந் தணையா தொருவாறொதுங்கும் = புறத்து வணங்கிச் செல்லாமல் மனசால் இவர்க்கு அடியனாகும் நாளெந்நாளென்று வணங்கி ஒருவாறாக ஒதுங்கிச் செல்லும்; வன்றொண்டர் புறகென்றுரைப்ப=நம்பியாரூரர் இத்திருக்கூட்டத்திற்குப் புறம்பென்றுசொல்ல; சிவனருளாற் பெருகாநின்ற=சிவபிரானது திருவருளினால் வளராநின்ற; பெரும்பேறு பெற்றார் = பெரிய பேற்றினைப் பெற்றுக்கொண்டவர்; மற்றும் பெறநின்றார் = சிவபிரானையும் அவ்வாறு புறகென்று மேற்கூறும்படி நின்றவர்;—எ-று. மற்று-பிறிதென்னும் பொருளில்வந்தது. (எ)

சிவபிரானை அவர் புறகென்ற தென்னெனில் அடியாரை வணங்காத தொண்டரைத்தடுத்தாண்டமை கருதி என்க. அவரைப் புறகென்றல் தீங்கன்றோ வெனின் அடியார் பெருமையை வற்புறுத்த அவர் திருவருளாற் கூறினமையின் தீங்காகா. ஒருவாறொதுங்கும் வன்றொண்டர் புறகென்றுரைப்ப என்றதனால் புறகென்றுரைத்தது அவர் ஆலயத்தில் செல்லுங்காலத்து என்பது பெற்றாம்.

வன்றொண்டரையும் அவரைத் தடுத்தாண்ட பிரானையும் அவர் புறம்பெனக்கூறியதனை, ஈண்டுக்கூறி மேல்வரும் விருத்தத்தில் திருக்கூட்டம் இவ்விருவருக்கும் புறம்பென்று மேற்கூறிய பொருளைச் சிறப்பிக்கின்றார். திருக்கூட்டத்திற்கு இவர் புறம்பென்றாலும், திருக்கூட்டம் இவர்க்குப் புறம்பென்றாலும், அதற்கு இவர் வேறாதலும், அது இவர்க்கு வேறாதலும், ஆய் வேறுதல் ஒரு பொருளாதலின்.

சேணார்மேருச் சிலைவளைத்த சிவனாரடியார் திருக்கூட்டம்
பேணாதேகு மூரனுக்கும் பிரானுந்தன்மைப் பிறைசூடிப்
பூணாரரவம் புனைந்தார்க்கும் புறகென்றுரைக்க மற்றவர்பாற்
கோணாவருளைப் பெற்றார்மற் றினியார்பெருமை கூறுவார்.

(இ-ள்.) சேணார்மேருச் சிலைவளைத்த = விண்ணுலகளவும் உயர்ந்தமேருவை வில்லாகவளைத்த; சிவனாரடியார் திருக்கூட்டம்=சிவபிரானடியார் திருக்கூட்டமானது; பேணாதேகு மூரனுக்கும் = வணங்காது செல்கின்ற நம்பியாரூரருக்கும்; பிரானாந்தன்மைப் பிறைசூடிப் பூணாரவம் புனைந்தார்க்கும்=எல்லா அடியார்க்கும் முதல்வராந் தன்மையையுடைய இளம்பிறையைச்சூடிய சர்ப்பத்தையணிந்த தியாகப்பிரானுக்கும்; புறகென்றுரைப்ப=(பத்தியினால்) புறகென்றுசொல்ல; அவர்பாற் கோணா அருளைப்பெற்றார்=அத்தியாகப்பிரானிடத்தும் அந்நம்பியாரூரரிடத்தும் திருவுளப்பாங்காம் திருவருளைப்பெற்றார்; இனியார் பெருமைகூறுவார்=அவ்வாறாயின் அவர் பெருமையைக் கூறவல்லவர்யார்.—எ-று. ()

மற்று இரண்டும் அசை.

இவர் எம்மைப் புறம்பென்று கூறியது அடியார் மேல்வைத்த பத்தியாதலின் அவ்விருவரும் இது எமக்கு உடன்பாடென்று கருணை கூர்ந்தருளினரென்க. இதனால் இந்நாயனாரது அடியார்பத்தி மிகுதி வலியுறுத்தியவாறு.

ஞாலமுய்ய நாமுய்ய நம்பிசைவ நன்னெறியின்
சீலமுய்யத் திருத்தொண்டத் தொகைமுன்பாடச் செழுமறைகள்
ஓலமிட்டு முணர்வரியா ரடியாருட னாமுளதென்றால்
ஆலமமுது செய்தபிரா னடியார்பெருமை யறிந்தாரார்.

(இ-ள்.) ஞாலமுய்ய நாமுய்ய = உலகத்தார் கடைத்தேறவும் நாமெல்லாம் பிழைக்கவும்; நம்பிசைவ நன்னெறியின் சீலமுய்ய=நம்பியாரூரர் நல்ல சைவசமய நெறியின் ஒழுக்கம் வளர்ந்தோங்கவும்; திருத்தொண்டத் தொகை முன்பாட = திருத்தொண்டத் தொகையைப் பாடியருள; செழுமறைகளோலமிட்டு முணர்வரியா ரடியாருடன் = செழுமையினையுடைய வேதங்கள் இவ்வியல்பினதெனக்காணாது அலறியும் தேடியும் அறியக்கூடாத சிவபிரானது திருக்கூட்டத்தோடு; ஆம் உளதென்றால் = அவ்விருவரும் உடனாதல் உளதென்று சொன்னால்; ஆலமமுது செய்தபிரான் = ஆலாகலத்தை அமுதாகச்செய்த சிவபிரானுடைய; அடியார் பெருமை யறிந்தாரார் = இந்த விறன்மிண்ட நாயனாருடைய பெருமையை அறிந்தவர்யார் ஒருவருமில்லை.—எ-று. (௬)

இதனால் அவர்களை அடியார்க்குப் புறம்பென்று சொல்லவும்பாடியதன் மேல் அடியார்க்கு உடனென்று சொல்லவும்வல்ல பத்தியுடையரென்பது விளக்கியது.

ஒக்கநெடுநா ளிவ்வுலகி லுயர்ந்தசைவப் பெருந்தன்மை
தொக்கதலைமை நெறிபோற்றித் தொண்டுபெற்ற விறன்மிண்டர்
தக்கவகையாற் றம்பெருமா னருளினாலே தாணிழற்கீழ்
மிக்ககண நாயகராகுந் தன்மைபெற்று விளங்கினார்.

(இ-ள்.) ஒக்க நெடுநாள் = இவ்வாறு பொருந்தும்படி வெகுநாளளவும்; இவ்வுலகிலுயர்ந்த சைவப்பெருந்தன்மை தொக்க=இந்த நிலவுலகத்தின்

கண் உயர்வாகிய சைவசமயத்தின் மேன்மையுடைத்தாகிய; தலைமைநெறி போற்றி = முதன்மையான ஒழுக்கநெறியை இவ்வாறு பாதுகாத்து; தொண்டு பெற்ற விறன்மிண்டர் = அடிமையாந் தன்மையைப் பெற்றுக்கொண்ட விறன்மிண்டநாயனார்; தக்கவகையாற் றம்பெருமா னருளினாலே தாணிழற்கீழ் = பொருந்தும் முறைமையால் தமது முதல்வராகிய சிவபிரான் திருவருளினாலே திருவடி நிழற்கீழ்; மிக்ககண நாயகராகும் = மேலான கணநாயக ரென்னும்; தன்மைபெற்று விளங்கினார் = மேன்மையைப்பெற்று விளங்கினார்.—எ-று. (௧௦)

வேறுபிறிதென் றிருத்தொண்டத் தொகையாலுலகு விளங்கவரும்
பேறுதனக்குக் காரணராம் பிரானார் விறன்மிண்டரின்பெருமை
கூறுமளவென் னளவிற்றே யவர்தாள்சென்னி மேற்கொண்டே
யாறைவணிக ரமர்நீதி யன்பர்திருத்தொண் டறைகுவாம்.

(இ-ள்.) வேறுபிறிதென் = வேறாகச்சொல்லும் மகிமை பிறிதுயாது; திருத்தொண்டத் தொகையால் = திருத்தொண்டத்தொகை அருளிச்செய்யுங் காரணத்தால்; உலகுவிளங்க வரும்பேறு தனக்கு = உலகத்தார் பயனடைய வரும் பெரும் பேற்றிற்கு; காரணராம் பிரானார் = காரணராயிருக்கும் நமது முதல்வராகிய; விறன்மிண்டரின் பெருமை = விறன்மிண்ட நாயனாரது பெருமையானது; கூறுமள வென்னளவிற்றே = அதை அளவு படுத்திக்கூறும் முறைமை என்னளவினதன்று; அவர்தாள் சென்னிமேற்கொண்டு = (அதனால்) அவர் திருவடிகளை என்சிரசின்மேற்கொண்டு; ஆறைவணிகர் அமர்நீதி அன்பர் திருத்தொண் டறைகுவாம் = பழையாறை வணிகராகிய அமர்நீதி நாயனாரது திருத்தொண்டைச் சொல்லுவாம்.—எ-று. (௧௧)

ஏ - அசை.

இவரைக் காரணரென்ற தென்னெனில், நம்பியாரூரர் பூங்கோயிலிற்புகும் பொழுது இவ்வடியார்க்கு யான் என்று அடிமையாவேன் எனக்கருதிய எண்ணத்தின்படி சிவபிரான் அடி எடுத்துக்கொடுக்கத் திருத்தொண்டத் தொகையை அருளிச்செய்யவும் இவர் புறம்பென்று கூறியமொழி அவர் திருவுள்ளத்துப் புகுந்தமை அது செய்தற்குச் சககாரிகாரணமா யிருத்தலினென்க.

ஆ திருவிருத்தம் - ௫௦௧.

விறன்மிண்ட நாயனார்புராணம்முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

## அமர்நீதிநாயனார் புராணம்.

சீர்நீடிய செம்பியர் பொன்னிநன் னாட்டுக்
காரின்மேவிய களியளி மலர்ப்பொழில் சூழ்ந்து
தேரின்மேவிய செழுமணி வீதிகள் சிறந்து
பாரினீடிய பெருமைசேர் பதிபழை யாறை.

(இ-ள்.) சீரினீடிய செம்பியர் பொன்னிநன்னாட்டு=சிறப்பான்மிக்க சோழர்கள் அரசாளுதற்குரிய நல்லகாவிரிநாட்டில்; காரின்மேவிய களியளிமலர்ப்பொழில் சூழ்ந்து = மேகமண்டலமளவும் ஓங்கிய களிப்பினையுடைத்தாகிய வண்டுகள்வாழும் மலர்களையுடைய சோலைகளால் சூழப்பட்டு; தேரின்மேவிய செழுமணிவீதிகள் சிறந்து=தேரோடுகூடிய செழுமையான மணிகள் இழைத்த வீதிகளாற் சிறப்படைந்து; பாரினீடிய பெருமைசேர் பதிபழையாறை=உலகத்தில் நிலைபெற்ற பெருமையினையுடைய நகரமானது பழையாறை என்று சொல்லப்படும்.—எ-று. (க)

மன்னுமப்பதி வணிகர்தங் குலத்தினில் வந்தார்
பொன்னுமுத்துநன் மணிகளும் பூந்துகின் முதலா
எந்நிலத்தினு முள்ளன வருவளத் தியல்பால்
அந்நிலைக்கண்மிக் கவரமர் நீதியா ரென்பார்.

(இ-ள்.) அப்பதிமன்னும் வணிகர்தங்குலத்தினில் வந்தார்=அந்நகரத்தில் வாழும் நிலைபெற்ற வைசியர்குலத்தில் அவதரித்தவர்; பொன்னுமுத்துநன்மணிகளும் பூந்துகின்முதலா=பொன்களும் முத்துக்களும் நல்ல இரத்தினங்களும் அழகிய பட்டாடைகளும் இவைமுதலாக; எந்நிலத்தினு முள்ளனவருவளத் தியல்பால்=எந்நாட்டினுமுள்ளன வருதற்கேதுவான வாணிகத்தொழிலின் முறைமையால்; அந்நிலைக்கண் மிக்கவரமர்நீதியாரென்பார் = அவ்வாணிக நிலைமையிற் சிறந்தவர் அமர்நீதிநாயனாரென்று சொல்லப்படுவார்.—எ-று. (உ)

சிந்தைசெய்வது சிவன்கழ லல்லதொன் றில்லார்
அந்திவண்ணர்த மடியவர்க் கமுதுசெய் வித்துக்
கந்தைகீளுடை கோவணங் கருத்தறிந் துதவி
வந்தசெல்வத்தின் வளத்தினல் வரும்பயன் கொள்வார்.

(இ-ள்.) சிந்தைசெய்வது சிவன்கழலல்லதொன்றில்லார்=தாம் சிந்திப்பது சிவபிரான் திருவடிகளையன்றிப் பிறிதொன்றையும்சிந்தியாதவராகிய அவர்; அந்திவண்ணர்தமடியவர்க் கமுதுசெய்வித்து=செக்கர்வான்போலும் நிறத்தினையுடைய சிவபிரான் அடியார்களுக்கு அமுதுசெய்யும்படி செய்வித்து; கந்தைகீளுடை கோவணங் கருத்தறிந் துதவி = கந்தையையும் கீளையும் உடையையும் கோவணத்தையும் அவர் திருவுள்ளக்கருத்தறிந்து கொடுத்து; வந்தசெல்வத்தின் வளத்தினல்வரும் பயன்கொள்வார்=தமக்குவந்த செல்வச்சிறப்பினுல் அடையும் பிரயோசனத்தை நாள்தோறுங் கொள்வாராயினர்.—எ-று. (௩)

கந்தை=கிழிந்த பழைய ஆடை. உடை=உடுத்தற்குரிய ஆடை. சிலர்க்குக்கீளும் கோவணமும், சிலர்க்குக்கந்தையுங் கீளுங்கோவணமும், சிலர்க்குக் கோவணமும் கீளும் உடையும், இவைகளை அவ்வடியார் விரும்பியபடி கொடுத்தார் ஆதலிற் கருத்தறிந் துதவி என்றும், இவ்வாறு அத்திருவடியார்களது பசி நோய்க்கு அமுதும், உடற்பணிப்புக்கு ஆடையும், வசித்தற்குத் திருமடமாகிய ஓர்

உரையுளும் கொடுத்துபசரித்தலே செல்வத்தின்பயனாகக் கொண்டாராதலில், வந்தசெல்வத்தின் வளத்தினால் வருபயன் கொள்வார் என்றுங் கூறினர்.

முக்கணக்கரா முதல்வனா ரவர்திரு நல்லூர்
மிக்கசீர்வளர் திருவிழா விருப்புடன் வணங்கித்
தக்கவன்பர்க ளமுதுசெய் திருமடஞ் சமைத்தார்
தொக்கசுற்றமுந் தாமும்வந் தணைந்தனர் தூயோர்.

(இ-ள்.) முக்கணக்கரா முதல்வனாரவர்திரு நல்லூர் = மூன்றுகண்களை யுடைய நிருவாணியாகிய சிவபிரான் வீற்றிருந்தருளும் திருநல்லூர் என்னும் திருப்பதியில்; மிக்கசீர்வளர் திருவிழாவிருப்புடன் வணங்கி = மிகச்சிறப்போடு வளர்கின்ற திருவிழாவைப் பெரு விருப்போடு தொழுது; தக்கவன்பர்க ளமுதுசெய் திருமடஞ் சமைத்தார் = அங்குத் தகுதியுள்ள அடியார்கள் அமுதுசெய்தற்கு இடமான ஓர் திருமடத்தைச்செய்தார்; தொக்கசுற்றமுந் தாமும்வந்தணைந்தனர் தூயோர் = தம்மோடுசேர்ந்த உறவினரும் தாமும் ஆங்குச்சென்று தூயராகிய அமர்நீதிநாயனார் இருந்தார்.—எ-று. (ச)

இவர் அடியாரிடத்து வைத்த பெருவிருப்பேயன்றிப் பிறபொருளில் அவாவுடையரல்லரென்பது விளக்கிய தூயோர் என்றார்.

மருவுமன்பொடு வணங்கினர் மணிகண்டர் நல்லூர்த்
திருவிழாவணி சேவித்துத் திருமடத் தடியார்
பெருகுமின்பமோ டமுதுசெய் திடவருள் பேணி
உருகுசிந்தையின் மகிழ்ந்துறை நாளிடை யொருநாள்.

(இ-ள்.) மணிகண்டர்நல்லூர்த் திருவிழாவணி = நீலமணிபோலும் திருமிடற்றினையுடைய சிவபிரான் வீற்றிருந்தருளும் திருநல்லூரின் திருவிழாச்சிறப்பை; மருவுமன்பொடு வணங்கினர் சேவித்து = தன்னிடத்து நிலைபெற்ற பேரன்போடு வணங்கித்துதித்து; திருமடத்தடியார் பெருகுமின்பமோ டமுதுசெய் திடவருள்பேணி = அங்குத்தம்மாலாகிய திருமடத்தின்கண் திருவடியார்கள் மிக்க இனிமையோடு திருவமுதுசெய்யும்படி அவர் திருவருளை விரும்பிக்கொண்டு; உருகுசிந்தையின் மகிழ்ந்து = அதனால் அன்பால் கசிந்துருகும் திருவுள்ளத்தில் மகிழ்கூர்ந்து; உறைநாளிடை யொருநாள் = இருக்கும்நாளில் ஒருநாள்.—எ-று. (ரு)

அன்னங் கறிமுதலிய வேண்டியவாறு சுவைக்குறைவின்றித் தூய்மையும் இனிமையும் உடையனவாக அமைத்தலில் பெருகுமின்பமோ டமுதுசெய்திட என்றும், அவர்க்கு வாக்கானும் காயத்தானும் செய்யும் முகமன் வழிபாடுகளில் ஒரு சிறிதும் குறையாமை விளக்கிய அவரருள்பேணி என்றும், இவ்வாறு வழிபட்டொழுகும் பணியால் அவர் திருவுள்ளத்து மகிழ்ச்சியின் பெருமைவிளக்கிய உருகு சிந்தையின் என்றுங்கூறினர்.

பிறைத்தளிர்ச்சடைப் பெருந்தகைப் பெருந்திரு நல்லூர்க்
கறைக்களத்திறை கோவணப் பெருமைமுன் காட்டி
நிறைத்த வன்புடைத் தொண்டர்க்கு நீடருள்கொடுப்பான்
மறைக் குலத்தொரு பிரமசாரியின் வடிவாகி.

(இ-ள்.) தளிர்ச்சடைப் பிறைப்பெருந்தகை=தளிர்த்த சடையின்கண் பிறையை அணிந்த உயர்ந்த குணங்களையுடையராகிய; பெருந்திரு நல்லூர்க் கறைக்களத்திறை=பெரிய திருநல்லூரின்கண் வீற்றிருந்தருளும் கரிய கண்டத்தையுடைய சிவபிரான்; கோவணப் பெருமைமுன் காட்டி = அடியார்களுக்கு இந்நாயனார் கொடுக்கும் கோவணத்தின் பெருமையை உலகத்தார்முன் காட்டி; நிறைத்தவன்புடைத் தொண்டர்க்கு=தம்முள்ளத்து நிறைந்த அன்பினையுடைய அமர்நீதிநாயனாருக்கு; நீடருள் கொடுப்பான் = மிக்க திருவருளைச் செய்யும்படி; மறைக்குலத்தொரு பிரமசாரியின்வடிவாகி = மறையவர் குலத்துதித்த ஒரு பிரமசாரியின் வடிவத்தைத் தாங்கிக்கொண்டு.—எ-று. (௬)

பொன்மணி முதலியவற்றில் விருப்பில்லாத பெருமையுடைய அடியார் விரும்பிக்கொள்ளும் சிறப்புடைமையின் அதனிலும் கோவணம் கொடுத்தல் சிறந்ததென்பது விளக்கிய கோவணப் பெருமைமுன்காட்டி என்றார். பயன், கொள்வோன் பெருமை யளவிற்றல்லது பொருளளவிற்றன்று ஆதலின். பொருள்வாங்குவோரினும் கோவணம் வாங்குவோர் மிக்க உயர் வுடையாராதலின் விருப்புடையார்க்கு அநேகம்பொருளை வேண்டியவாறு கொடுத்தலினும் விருப்பில்லார்க்குக்கோவணம் கொடுத்தல் மிகப்பெரிதாயிற்று. இதனானன்றோ சற்பாத்திரத்தில் ஈயும் சிறியபொருள் பெரும்பயன் கொடுப்பதும் பாத்திர மல்லார்க்கீயும் பெரியபொருள் கேடுவிளைப்பதும் என்க.

செய்யபுன்சடை கரந்ததோர் திருமுடிச் சிகையுஞ்
சைவவெண்டிரு நீற்று முண்டத்தொளித் தழைப்பு
மெய்யில்வெண்புரி நூலுடன் விளங்குமான் றோலும்
கையின்மன்னிய பவித்திர மரகதக் கதிரும்.

(இ-ள்.) செய்யபுன்சடை கரந்ததோர் திருமுடிச்சிகையும்=செம்மையாகிய சடையைமறைத்த ஒப்பற்ற திருமுடிக்கண் முடித்தசிகையும்; சைவ வெண்டிருநீற்று முண்டத்தொளித் தழைப்பும் = சைவ நெறிக்குரிய வெள்ளிய திருநீற்றால் விளங்கும் திரிபுண்டர ஒளியின் விளக்கமும்; மெய்யில் வெண்புரி நூலுடன் = திருமேனியில் வெள்ளிய முப்புரி நூலோடு சேர்ந்து; விளங்குமான்றோலும் = விளங்குகின்ற கருமான்றோலும்; கையின்மன்னிய பவித்திர மரகதக்கதிரும்=திருக்கரத்துள்ள அணிவிரலினிடத்துத் தங்கிய பவித்திர முடிச்சாலாகிய பசிய ஒளியும்.—எ-று. (௭)

புன்சடை கரந்ததோர் திருமுடிச் சிகையாவது:— புன்சடை யில்லாமல் சிகையாகச்சேர்த்து முடித்தகுடுமி. நூலுடன் விளங்கு மான்றோல் என்றது:— ஓரங்குலத்தில் நூலளவாகக் கத்தரித்து அது மறையத்தரித்த மான்றோலை.

முஞ்சிநாணுற முடிந்தது சாத்திய வரையிற்
றஞ்சமாமறைக் கோவண வாடையின் றசைவும்
வஞ்சவல்வினைக் கறுப்பறு மனத்தடி யார்க
ணெஞ்சினீங்கிடா வடிமலர் நீணிலம் பொலிய.

(இ-ள்.) முஞ்சிநாணுற முடிந்தது சாத்திய வரையில்=முஞ்சி என்னுந் தருப்பையை நாணாக முடித்து அதனை நாபியின்கீழ் உதர பந்தனமாகக்கட்டிய திருவரையின்கண்; தஞ்சமாமறைக் கோவண வாடையின் றசைவும்=அரைஞாணைப்பற்றுக் கோடாகவுள்ள மறைவடிவான கோவண ஆடையினுடைய பிணிப்பும்; வஞ்ச வல்வினைக் கறுப்பறு மனத்தடியார்கள்=வஞ்சமாகிய வலிய தீவினை என்னும் களங்கத்தைஅறுத்த மனசினையுடைய திருவடியார்கள்; நெஞ்சினீங்கிடாவடிமலர் நீணிலம் பொலிய=திருவுள்ளத்தினிடத்து எக்காலமும் வசிக்கும் திருவடித்தாமரைகள் நீண்ட நிலத்தின்கண் பொருந்தும்படி.—எ-று. (அ)

கண்டவர்க்குறு காதலின் மனங்கரைந் துருகத்
தொண்டரன்பெனுந் தூநெறி வெளிப்படுப் பாராய்த்
தண்டின்மீதிரு கோவண நீற்றுப்பை தருப்பை
கொண்டுவந்தமர் நீதியார் திருமடங் குறுக.

(இ-ள்.) கண்டவர்க்குறுகாதலின் மனங்கரைந்துருக=அத்திருவுருவைப்பார்த்தவர்களுக்கு மிக்க விருப்பினால் அவர் மனசு கரைந்துருகவும்; தொண்டரன்பெனுந் தூநெறி வெளிப்படுப்பாராய் = அமர்நீதிநாயனாரது அன்பென்று கூறும் தூய்மையான அறநெறியை யாவர்க்கும் வெளிப்படுத்துகின்றவராய்; தண்டின்மீதிரு கோவணநீற்றுப்பை தருப்பைகொண்டு=தமது பலாசத்தண்டின்மேல் இரண்டு கோவணத்தையும் விபூதிப்பையையும் கட்டிக்கொண்டு; வந்தமர்நீதியார் திருமடங்குறுக = எழுந்தருளிவந்து அமர்நீதிநாயனார்வாழும் திருமடத்தையடைய.—எ-று. (க)

வடிவுகாண்டலு மனத்தினு முகமிக மலர்ந்து
கடிதுவந்தெதிர் வணங்கியிம் மடத்தினிற் காணும்
படியிலாதநீ ரணையமுன் பயிறவ மென்னோ
அடியனேன்செய்த தென்றன ரமர்நீதி யன்பர்.

(இ-ள்.) வடிவுகாண்டலு மனத்தினு முகமிகமலர்ந்து=அவர் திருவுருவத்தைக்கண்ட அளவில் மனதைப்பார்க்கினும் முகம் அதிகமாக மலர்ச்சியடைந்து; கடிதுவந்தெதிர்வணங்கி=விரைவாகவந்து அவர் திருமுன்னே வணங்கி; இம்மடத்தினிற் காணும்படி யிலாதநீரணைய = இத்திருமடத்தில் முன்னொருநாளும் வராதநீர் எழுந்தருள; முன்பயிறவமென்னோ அடியனேன் செய்தது= பழகப்பட்டதாய் அடியேன் முன்செய்த தவம்யாதோ; என்றன ரமர்நீதியன்பர்=என்று வினவினார் அமர்நீதிநாயனார்.—எ-று. (கo)



1 சிவபிரான் பிராமணபிரமசாரி
2 அமர்நீதிநாயனர்
3 கௌபீனம்

சிவபிரான் பிராமணவருணத்துப் பிரமசாரிவடிவமாக அமர்நீதிநாயனர் திருமடத்திற்குவர நாயனரெதிர்சென்று வணங்கித் தமது மடத்திலன்னமருந்தும்படி வேண்ட இசைந்து தண்டில் விபூதிப்பையுடன் கட்டியிருந்த கௌபீனமிரண்டிலொன்றைக்கொடுத்து இதன் மகிமைசொல்லொணது பாதுகாப்பாயாக நாமகாவேரிக்குப்போய் வருகின்றேமென்றுச்செல்ல நாயனரைச்சேமித்தது.

இவ்வாறுங்குளகம். காண்டலு மென்றது உம்மீற்று நிகழ்கால வினை எச்சம். உம்மை சிறப்பும்மை. அகம் இனிதாக மலர்ந்ததனைமுகம் இனிதாக மலர்ந்து முற்பட்டுக் காட்டுமாதலின் மனத்தினு முகமிக மலர்ந்தென்றார்.

பேணுமன்பரை நோக்கிநீர் பெருகிய வடியார்க்
கூணுமேன்மையி னூட்டிநற் கந்தைகீ ளுடைகள்
யாணர்வெண்கிழிக் கோவண மீதல்கேட் டும்மைக்
காணவந்தன மென்றனன் கண்ணுதற் கரந்தோன்.

(இ-ள்.) பேணுமன்பரைநோக்கி=தம்மைவணங்கி உபசரிக்கின்ற அமர்நீதிநாயனாரைப்பார்த்து; நீர்பெருகியவடியார்க்கு=நீர் திரளாக வருகின்ற அடியவர்களுக்கு; ஊணுமேன்மையினூட்டி=மேன்மையாகத் திருவமுதையும் ஊட்டி; நற்கந்தை கீளுடைகள்=நல்லகந்தையும் கீளும் உடையும் ஆகிய இவைகளோடு; யாணர்வெண்கிழிக்கோவணமீதல்கேட்டு=புதிதாய் வெள்ளிய கிழித்தகோவணத்தையும் கொடுத்தலைக்கேள்வியுற்று; உம்மைக்காணவந்தனமென்றனன்=உம்மைப்பார்க்க விரும்பிவந்தோமென் றருளிச்செய்தார்; கண்ணுதற்கரந்தோன்=நெற்றிக்கண்ணைமறைத்துவந்த சிவபிரானாகிய பிரமசாரியர்.—எ-று. (௧௧)

என்றுதம்பிரா னருள்செய வித்திரு மடத்தே
நன்றுநான்மறைப் பெருந்தவ ரமுதுசெய் தருளத்
துன்றுவேதியர் தூய்மையி னமைப்பது முளதால்
இன்றுநீருமிங் கமுதுசெய் தருளுமென் றிறைஞ்ச.

(இ-ள்.) என்றுதம்பிரானருள்செய=இவ்வாறு சிவபிரானாகிய பிரமசாரியர் அருளிச்செய்ய; இத்திருமடத்தே=இந்தத்திருமடத்தின்கண்; நன்றுநான்மறைநற்றவரமுதுசெய்தருள=நன்றாகநான்கு வேதங்களை உணர்ந்தநல்லதவத்தையுடையமறையவர்கள் திருவமுதுசெய்யும்படி; துன்றுவேதியர் தூய்மையினமைப்பதுமுளது=நெருங்கியமறையவர்கள் தூய்மையோடுசமைக்குந்திருவமுதும் உள்ளது; இன்று நீருமிங்கமுது செய்தருளுமென் றிறைஞ்ச=இன்றைக்குத் தேவரீரும் இத்திருமடத்தில் திருவமுது செய்தருளுமென்று வணங்க.—எ-று. (௧௨)

ஆல்—அசை.

வணங்குமன்பரை நோக்கி யம்மறையவ ரிசைந்தே
அணங்குநீர்ப் பொன்னி யாடிநான் வரமழைவரினும்
உணங்குகோவணம் வைத்துநீ தாருமென் றொருவெண்
குணங்கொள் கோவணந் தண்டினி லவிழ்த்தது கொடுப்பார்.

(இ-ள்.) வணங்குமன்பரைநோக்கி=திருவமுதுசெய்தருளுமென்றுவணங்கிநிற்கும் அமர்நீதிநாயனாரைப்பார்த்து; அம்மறையவ ரிசைந்து=அச்சிவபிரானாகியபிரமசாரியர் அதற்குத்திருவுள்ளம் இசைந்து; அணங்குநீர்ப்பொன்னியாடிநான்வரமழைவரினும்=தெய்வத்தன்மையுடைய நீர்நிறைந்தகாவிரிநதியில் நீராடிநான்வரமழைவந்தாலும்; உணங்குகோவணம்வைத்து நீர்தாருமென்று = உலர்ந்த இக்கோவணத்தை வைத்திருந்துநீர் கொடுமென்று; ஒருவெண்குணங்

கொள்கோவணம் = தண்டிற்கட்டியஇரண்டு கோவணத்துள் ஒருவெண்ணிறத்தையுடைய கோவணத்தை ; தண்டினிலவிழ்த்ததுகொடுப்பார் = தண்டினின்றும் அவிழ்த்து அதைக்கொடுப்பாராயினர்.—எ-று. (கரு)

உம்மை-எதிர்மறை. எதிரதுதழீஇயதுமாம். ஏ-அசை.

ஓங்குகோவணப் பெருமையை யுள்ளவா றுமக்கே
ஈங்குநான்சொல வேண்டுவ தில்லைநீ ரிதனை
வாங்கிநான்வரு மளவுமும் மிடத்திக ழாதே
ஆங்குவைத்துநீர் தாருமென் றவர்கையிற் கொடுத்தார்.

(இ-ள்.) ஓங்குகோவணப்பெருமையையுள்ளவாறுமக்கு=உயர்வாகியஇக்கோவணத்தின்பெருமையை மறைநூல் கூறியவாறு உமக்கு ; ஈங்குநான்சொல வேண்டுவதில்லை=இவ்விடத்துநான்எடுத்துக் கூறவேண்டுவதில்லை உமக்கேதெரியும்; நீரிதனைவாங்கிநான்வருமளவும்=நீர்இக்கோவணத்தை என்னிடத்தில் வாங்கிக்கொண்டுநான் நீராடிவருமளவும் ; உம்மிடத்திகழாது ஆங்குவைத்து=உம்மிடத்தில்இதோர் அற்பமென்று இகழாமல்சேமமான இடத்தில்வைத்திருந்து ; நீர்தாருமென்றவர் கையிற்கொடுத்தார் = நீர்கொடுமென்று அவர்கையிற் கொடுத்தருளினர்.—எ-று. ஏகாரம் இரண்டும் அசை. (கச)

இதனினும் நல்லகோவணம் பலஉள ஆதலின் அவ்வாறு பேணத்தக்கதல்லவென்று கருதிப்பேணுதொழியற்க என்னுங்கருத்தால் இகழாது என்றார்.

கொடுத்தகோவணங் கைக்கொண்டு கோதிலா வன்பர்
கடுப்பிலிங்கெழுந் தருளுநீர் குளித்தெனக் கங்கை
மடுத்ததும்பிய வளர்சடை மறைத்தவம் மறையோர்
அடுத்ததெண்டிரைப் பொன்னிநீ ராடுதற் ககன்றார்.

(இ-ள்.) கொடுத்தகோவணங்கைக்கொண்டு கோதிலாவன்பர்=சிவபிரானாற் கொடுக்கப்பட்ட கோவணத்தைக் குற்றமற்ற அமர்நீதிநாயனார் கையில் வாங்கிக்கொண்டு ; கடுப்பிலிங்கெழுந்தருளுநீர் குளித்தென = விரைவாக இவ்விடத்து எழுந்தருளுவீர் காவிரி நீராடி என்றுகூற ; கங்கைமடுத்ததும்பியவளர்சடை மறைத்தவம்மறையோர் = கங்கைநீர்பாய்ந்து ததும்புகின்ற நீண்டசடைமுடியை மறைத்துவந்த அப்பிரமசாரியர் ; அடுத்ததெண்டிரைப் பொன்னிநீராடுதற் ககன்றார்=அவ்வூருக்குச் சமீபமாயுள்ள தெள்ளிய திரைகளையுடைய காவிரி நீரை ஆடும்படிக்குச் சென்றார்.—எ-று. (கரு)

மடுத்து என்றும் வினையெச்சவீறு விகாரத்தாற் றொக்கது.

தந்தகோவணம் வாங்கிய தனிப்பெருந் தொண்டர்
முந்தையந்தணர் மொழிகொண்டு முன்புதாங் கொடுக்குங்
கந்தைகீளுடை கோவண மன்றியோர் காப்புச்
சிந்தைசெய்துவே றிடத்தொரு சேமத்தின் வைத்தார்.

(இ-ள்.) தந்தகோவணம் வாங்கிய தனிப்பெருந் தொண்டர் = பிரமசாரியர் கொடுத்த கோவணத்தை வாங்கிக்கொண்ட ஒப்பற்ற பெருமையினையுடைய

அமர்நீதிநாயனார்; முந்தையந்தணர் மொழிகொண்டு = அம்மறையவர்முன்னே கூறியவார்த்தையைப் பேணிக்கொண்டு; முன்புதாங்கொடுக்குங் கந்தை கீளுடை கோவணமன்றி=முன்னேதாம் அடியார்களுக்குக் கொடுக்கும் கந்தையுங்கீளும் உடையும் கோவணமும் ஆகிய இவைகளை வைத்திருக்குமிடமல்லாமல்; ஓர்காப்புச்சிந்தைசெய்து=ஓர்காவலான இடத்தைச் சிந்தித்து; வேறிடத்தொருசேமத்தின் வைத்தார் = தனியிடமாகிய ஒருசேமத்தில் வைத்தார்.—எ-று. (கசு)

போனவேதியர் வைத்தகோ வணத்தினைப் போக்கிப்
பானலந்துறைப் பொன்னிநீர் படிந்துவந் தாரோ
தூநறுஞ்சடைக் கங்கைநீர் தோய்ந்துவந் தாரோ
வானநீர்மழை பொழிந்திட நனைந்துவந் தணைந்தார்.

(இ-ள்.) போனவேதியர் வைத்தகோவணத்தினைப்போக்கி = நீராடுதற்குச்சென்ற அப்பிரமசாரியர் அமர்நீதிநாயனார் தனியிடத்துச் சேமமாகவைத்தஅக் கோவணத்தைமறைத்து; பானலந்துறைப்பொன்னிநீர் படிந்துவந்தாரோ=குவளைப்பூக்கள் மலர்ந்திருக்கும் அழகியகரையினையுடைய காவிரிநீரில் முழுகிவந்தாரோ அல்லது; தூநறுஞ்சடைக் கங்கைநீர் தோய்ந்து வந்தாரோ=தூய நறுமணங்கமழும் சடையின்கண் உள்ளகங்கைநதியில் முழுகிவந்தாரோ இவ்விரண்டும் அறியோம்; வானநீர்மழைபொழிந்திட நனைந்துவந்தணைந்தார்=(நீராடி) மேகமானது மழையைச்சொரிய அதில் நனைந்துகொண்டு அமர்நீதிநாயனார் திருமடத்திற்கு எழுந்தருளினார்.—எ-று. (கஎ)

ஓகாரங்கள் இரண்டும் ஐயம்.

கதிரிளம்பிறைக் கண்ணியர் நண்ணிய பொழுதின்
முதிருமன்புடைத் தொண்டர்தா முறைமையின் முன்னே
அதிகநன்மையி னறுசுவைத் திருவமு தாக்கி
எதிரெழுந்துசென் றிறைஞ்சிட நிறைந்தநூன் மார்பர்.

(இ-ள்.) கதிரிளம்பிறைக் கண்ணியர் நண்ணிய பொழுதில்=கிரணங்களைப்பரப்பும் மூன்றாம்பிறையாகிய கொண்டைமாலையையுடைய சிவபிரான் வந்த சமயத்து; முதிருமன்புடைத்தொண்டர்=முதிர்ந்த அன்பினையுடைய அமர்நீதிநாயனார்; முறைமையின் முன்னே = முறைப்படி எழுந்தருளுதற்கு முன்னே; அதிகநன்மையி னறுசுவைத்திருவமுதாக்கி = மிக்கபக்குவத்தோடு அறுசுவை கூடிய திருவமுதைச் சமைத்து; எதிரெழுந்துசென்றிறைஞ்சிட=அவரெதிரே சென்று திருவடிகளில் வணங்க; நிறைந்தநூன்மார்பர்=நிறைந்த பூணூலையணிந்த மார்பினையுடைய அப்பிரமசாரியர்.—எ-று. தாம் - அசை. (கஅ)

தொண்ட ரன்பெனுந் தூயநீராடுதல் வேண்டி
மண்டுதண்புனன் மூழ்கிய வீரத்தை மாற்றத்
தண்டின்மேலுள தீரநான் றந்தகோ வணத்தைக்
கொண்டுவாருமென் றுரைத்தனர் கோவணக் கள்வர்.

(இ-ள்.) தொண்டரன்பெனும்=அமர்நீதி நாயனாரது அன்பென்று சொல்லும்; தூயநீராடுதல்வேண்டி=தூய்மையாகிய நீரில் முழுகுதலைத் திருவுளங்கொண்டு; மண்டுதண்புனல் மூழ்கிய வீரத்தை மாற்ற = விரைந்து செல்கின்ற குளிர்ச்சியாகிய நீரில் முழுகிய ஈரக்கோவணத்தை நீக்கிக்கொள்ள; தண்டின்மேலுளதீரம் = இப்பலாசதண்டத்தின்மேற்கட்டிய கோவணம் மழையில்நனைந்தீரமாயிருக்கின்றது அதனால்; நான்றந்தகோவணத்தை=நான் உம்மிடத்து மாற்றுகக்கொடுத்த மற்றக்கோவணத்தை; கொண்டுவாருமென் றுரைத்தனர்=எடுத்துவாருமென்றுஅருளிச்செய்தார்; கோவணக்கள்வர்=அவர்வைத்த கோவணத்தை வேறிடத்துச்செல்லும்படி முன்னமே மறைத்த கள்வர்.—எ-று. (கசு)

ஈரத்தை என்புழிஈரம் ஆகுபெயர்.

ஐயர்கைதவ மறிவுறா தவர்கடி தணுக
எய்திநோக்குறக் கோவண மிருந்தவே றிடத்தின்
மையில்சிந்தையர் கண்டிலர் வைத்தகோ வணமுன்
செய்ததென்னென்று திகைத்தனர் தேடுவா ரானார்.

(இ-ள்.) ஐயர்கைதவ மறிவுறாது = சிவபிரானாகிய அப்பிரமசாரியர் கூறும் கபடத்தை அறியாமல்; அவர்கடிதணுக எய்திநோக்குற=கோவணம்வைத்தவிடத்திற்குச் சமீபமாக விரைவிற்சென்றுபார்க்க; கோவணமிருந்த வேறிடத்தில் = கோவணம்வைத்திருந்த தனியிடத்தில்; மையில்சிந்தையர் கண்டிலர் = குற்றமில்லாத மனசினையுடைய அந்நாயனார் காணாமல்; வைத்தகோவணமுன் செய்ததென் னென்று = தாம்முன்னேவைத்தகோவணம் சென்றது எவ்வாறென்று; திகைத்தனர் தேடுவாரானார்=மனந்திகைத்துத் தேடத்தொடங்கினார்.—எ-று. (உ0)

பொங்குவெண்கிழிக் கோவணம் போயின நெறிமேற்
சங்கையின்றியே தப்பின தென்றுதன் சரக்கில்
எங்குநாடியுங் கண்டில ரென்செய்வார் நின்றார்
அங்கண்வேதியர் பெருந்தொடக் கினிலகப் பட்டார்.

(இ-ள்.) பொங்குவெண்கிழிக்கோவணம்போயினநெறிமேல்= பொலிவினையுடையவெண்மையாகியகிழித்த இக்கோவணமானது போனவழிமேலேகருதுமிடத்து; சங்கையின்றியேதப்பினதென்று = ஐயமில்லாமல்தப்பிப்போயினதாமென்று; தன்சரக்கில் எங்குநாடியுங்கண்டிலர்நின்றார் = தான் விற்கும்படி வைத்திருக்கும் எல்லாச்சரக்குகளினும் தேடியுங்காணாதவராய்த்திகைத்துநின்றார்; என்செய்வார்=என்னசெய்வார்; அங்கண் வேதியர்பெருந்தொடக்கினிலகப்பட்டார்=அழகிய தண்ணளியையுடைய அப்பிரமசாரியரது பெரியவிவாதத்தில் அகப்பட்டஅமர்நீதிநாயனார்.—எ-று. (உக)

ஈண்டுபெருந்தொடக்தென்றது அம்மறையவர் தாங் கொடுத்த கோவணத்தை ஒளித்து மீட்டுவந்து அதனைக்கொடு என்றலே. உம்மை இரண்டில் முன்னையது முற்றும்மை, பின்னையது சிறப்பும்மை.

மனைவியாரொடு மன்னிய கிளைஞருந் தாமும்
இனையதொன்றுவந் தெய்திய தெனவிடர் கூர்ந்து
நினைவதொன்றிலர் வருந்தினர் நிற்கவு மாட்டார்
புனையவேறொரு கோவணங் கொடுபுறப் பட்டார்.

(இ-ள்.) மனைவியாரொடு மன்னிய கிளைஞருந்தாமும் = (அந்நாயனார்) தம்மனைவியாரொடு நிலைபெற்ற சுற்றத்தாரும் தாமுமாக; இனையதொன்று வந்தெய்தியதெனவிடர்கூர்ந்து = இவ்வாறான தீங்கு ஒன்று ஈங்குவந்து நேரிட்டதென்று துன்பப்பட்டு; நினைவதொன்றிலர் வருந்தினர்நிற்கவுமாட்டார் = தாம் அதனைநீக்குதற்குவேறொன்றையுங்கருதாமல்வருத்தமுற்று அங்குத்தரித்து நிற்றலும்செய்யாமல்; புனையவேறொருகோவணங்கொடுபுறப்பட்டார் = அப்பிரமசரியர் தரித்துக்கொள்ளும்படிக்கு வேறொருகோவணத்தை எடுத்துக்கொண்டுவெளியே புறப்பட்டார்.—எ-று. (உஉ)

நிற்கவும்மாட்டார் என்பதில் உம்மை இருத்தல்முதலிய பிறதொழிலும் செய்யாமல் எனப்பொருள்படுதலில் எதிரதுதழீஇயது.

அதுசென்றது மாயையாயிருத்தலில் நினைவதொன்றிலர் என்றும், அப்பிழைகாரணமாய் அவரடைந்த வருத்தமிகுதிதோன்ற வருந்தினரென்றும், நெடுநேரம் நின்றால் அவர் கோபிப்பாரென்னுங் கருத்தால் நிற்கவும்மாட்டாரென்றும், அவர் ஈரக் கோவணத்தோடிருக்கின்றாரென்னுங் கருத்தால்புனையவேறொருகோவணங்கொடுஎன்றுங்கூறினர்.

அத்தர்முன்புசென் றடிகணீர் தந்தகோ வணத்தை
வைத்திடத்துநான் கண்டிலன் மற்றுமோ ரிடத்தில்
உய்த்தொளித்தன ரில்லையஃ தொளித்தவா றறியேன்
இத்தகைத்தவே றதிசயங் கண்டிலே னென்று.

(இ-ள்.) அத்தர்முன்புசென்று = சிவபிரானாகிய பிரமசரியர் முன்னேவந்து; அடிகணீர்தந்த கோவணத்தை = சுவாமீ தேவரீர் கொடுத்தகோவணத்தை; வைத்திடத்து நான்கண்டிலன் = சேமமாகவைத்த இடத்தில் நான் காணவில்லை; மற்றுமோரிடத்திலுய்த்தொளித்தனரில்லை = அதைவேறோரிடத்தில் எடுத்து மறைத்துவைத்தவர்களுமில்லை; அஃதொளித்தவாறறியேன் = அது மறைந்தவழியை யான் அறியமாட்டேன்; இத்தகைத்தவேறதிசயங்கண்டிலேனென்று = இவ்வாறான வேறுஅதிசயத்தை அடியேன் பார்த்ததில்லை என்றுகூறி.—எ-று. (உங)

வேறுநல்லதோர் கோவணம் விரும்பிமுன் கொணர்ந்தேன்
கீறுகோவண மன்றுநெய் தமைத்தது கிளர்கொ
ணீறுசாத்திய நெற்றியீர்மற்றது கொளர்ந்து
மாறுசாத்தியென் பிழைபொறுப்பீரென வணங்க.

(இ-ள்.) வேறுநல்லதோர்கோவணம் = வேறொருநல்ல கோவணத்தை; விரும்பிமுன்கொணர்ந்தேன் = விருப்பத்தோடு தேவரீர்திருமுன்புகொண்டுவந்

தேன் ; கீறுகோவணமன்று=இது ஓர் ஆடையினின்றும் கிழித்தகோவணமன்று; நெய்தமைத்தது=இயல்பால் நெய்து உண்டாக்கியது ; ஙளர்கொணீறு சாத்திய நெற்றியீர் = விளக்கமாகிய விபூதியை அணிந்த நெற்றியையுடைய சுவாமீ ; அதுகளைந்து மாறுசாத்தி=(திருவுரையில் ஈரமாயிருக்கின்ற) அக்கோவணத்தை க்களைந்து அதற்கு மாற்றாக இக்கோவணத்தைத்தரித்து ; என்பிழைபொறுப்பீரெனவணங்க=அடியேன் செய்த குற்றத்தைப் பொறுத்தருள்வீரென்று பணிய.—எ-று. மற்று-அசை. (உ௪)

நின்றவேதியர் வெகுண்டமர் நீதியார் நிலைமை
நன்றுசாலவு நாளிடை கழிந்தது மன்றால்
இன்றுநான்வைத்த கோவணங் கொண்டதற் கெதிர்வே
றொன்றுகொள்கென வுரைப்பதேநீரென வுரையா.

(இ-ள்.) நின்றவேதியர்வெகுண்டு=அங்குநின்ற சிவபிரானாகிய மறையவர் அதைக்கேட்டுக் கோபங்கொண்டு ; அமர்நீதியார் நிலைமை நன்றுசாலவும்=அமர்நீதியாரே உம்முடைய நிலைமை மிகவும் நன்றாயிருந்தது ; நாளிடைகழிந்தது மன்று=நான்கொடுத்து ஒருநாள்இடையே கழியவுமில்லை ; இன்றுநான்வைத்த கோவணங்கொண்டு=இத்தினத்தில் நான் உம்மிடத்தில் வைத்த கோவணத்தைக்கொண்டு; அதற்கெதிர்வேறொன்று கொள்கென=அக்கோவணத்திற் கீடாக மற்றொருகோவணத்தை வாங்கிக்கொள்ளுமென்று ; உரைப்பதே நீரெனவுரையா=உரைக்கலாமா நீரென்றுசொல்லி.—எ-று. ஆல் – அசை. (உ௫)

சாலவும்நன்று என்பதில் உம்மை இழிவை உயர்வாகக் குறித்து நிற்றலின் இழிவுசிறப்பாயும். கழிந்ததும் என்பதில் உம்மை காலத்தின் சிறுமையை சிறப்பித்து நிற்றலில் இழிவுசிறப்பாயும் கொள்க.

நல்லகோவணங் கொடுப்பனென்று லகின்மே லுஞ்
சொல்லுவித்ததென் கோவணங் கொள்வது துணிந்தோ
ஒல்லையீங்குறு வாணிப மழகிதே யுமக்கென்
றெல்லையில்லவ னெரிதுள்ளி னாலென வெகுண்டான்.

(இ-ள்.) நல்லகோவணங் கொடுப்பனென்று=நீர் சிவனடியார்க்கு நல்லகோவணங்களைக் கொடுப்பேனென்று ; உலகின்மேலுஞ் சொல்லுவித்தது=உலகத்தில் நாள்தோறும் பறையறைவித்துச் சொல்லுவித்தது ; என்கோவணங் கொள்வது துணிந்தோ = என்னுடைய கோவணத்தை எடுத்துக்கொள்ளுதலைக் குறித்தோ ; ஒல்லையீங்குறு வாணிபமழகிதே உமக்கென்று=விரைவாக இங்கே செய்யும் வாணிகத்தொழில் உமக்கு அழகாக இருந்ததென்று ; எல்லையில்லவனெரிதுள்ளினாலென வெகுண்டான்=அளவுபடாத பெருமையினையுடைய சிவபிரானாகிய மறையவர் நெருப்பு ஓரிடத்தினின்றும்தாவினாற்போலக்கோபித்தார்.எ-று.

ஒல்லைவெகுண்டான் எனஇயையும், மற்றவாணிகத்தினும்வாங்கிஎடுத்துக் கொள்ளுதல்சுலபமாதலின் அழகிதேயெனவிகழ்ந்துகூறினர்.

மறிகரந்துதண் டேந்திய மறையவர் வெகுளப்
பொறிகலங்கிய வுணர்வின ராய்முகம் புலர்ந்து
சிறியவென்பெரும் பிழைபொறுத் தருளுவீ ரடியேன்
அறியவந்ததொன் றன்றென வடிபணிந் தயர்வார்.

(இ-ள்.) மறிகரந்துதண்டேந்திய மறையவர்வெகுள=திருக்கரத்துள்ள மானைமறைத்துத்தண்டினைத்தாங்கிவந்த பிரமசாரியர் கோபிக்க; பொறிகலங்கிய வுணர் வினராய்முகம்புலர்ந்து = ஐம்பொறிகளும்கலங்கிய உணர்வையுடையவ ராய்முகம்வாடி; சிறியவென்பெரும் பிழைபொறுத்தருளுவீர் = சிறியவனாகிய அடியேன்செய்த பெரியபிழையைப்பொறுத்தருள்செய்வீர்; அடியேன் அறிய வந்ததொன்றன்றென=அடியேன் அறியும்படி வந்தபிழையன்று இது அறியாது வந்ததென்று; அடிபணிந்தயர்வார்=திருவடிகளில்வணங்கிவருந்துவார்.—எ-று.

ஓர் கோவணம் போக்கிய பிழையைச்சிறிதெனக்கொள்ளாது பெரிதென க்கோடலில் பெரும்பிழையென்றும், அறியாது வந்தபிழைக்குத்தீர்வுண்டென் னுங்கருத்தால் அறியவந்ததொன்றன்றென்றும் கூறினர். இதனைப்பெரிதாகக்கொ ண்டதென்னெனின், அடியார்கள்வேண்டும்பொருள்களிற்சிறந்தபொருளாகத்தா ங்கொடுத்தலினாலும் சிவபிரானாகிய மறையவரும் அதனைத்தமக்குப்பெரும்பொரு ளாகக்கொண்டு கோபித்தலினாலுமென்க.

செயத்தகும்பணி செய்வனிக் கோவண மன்றி
நயத்தகுந்தன நல்லபட்டா டைகண் மணிகள்
உயர்த்தகோடிகொண் டருளுமென்றுடம்பினி லடங்காப்
பயத்தொடுங்குலைந் தடிமிசைப்பன்முறை பணிந்தார்.

(இ-ள்.) செயத்தகும்பணிசெய்வன்=இப்பிழைக்குத்தீர்வாகத் தேவரீரு க்குச்செய்யத்தக்க பணிவிடைகளை எல்லாஞ்செய்வேன்; இக்கோவணமன்றி நய த்தகுந்தனநல்ல பட்டாடைகள்=இக்கோவணமேயன்றி விரும்பத்தக்கதனங்க ளும் நல்லபட்டாடைகளும்; மணிகள்உயர்த்த கோடி கொண்டருளுமென்று= மணிகளும் இவைகளுள் மேன்மையான அனேகத்தை வாங்கிக்கொண்டு அடியே னுக்கு அருள்செய்யுமென்று; உடம்பினிலடங்காப்பயத்தொடுங்குலைந்து=தம துதிருமேனியிலே அடங்காதஅச்சத்தோடும் குலைகுலைந்து; அடிமிசைப்பன்மு றைபணிந்தார்=அவர்திருவடிகளில் பலதரம் வந்தனஞ்செய்தார்.—எ-று. (உஅ)

உம்மை பத்தியோடுமெனத்தழுவுதலில் எதிரதுதழீஇயது.

பணியுமன்பரை நோக்கியப் பரம்பொரு ளானார்
தணியுமுள்ளத்த ராயினர் போன்றுநீர் தந்த
மணியும்பொன்னுநல் லாடையு மற்றுமென் செய்ய
அணியுங்கோவண நேர்தர வமையுமென் றருள.

(இ-ள்.) பணியுமன்பரைநோக்கி=வணங்குகின்ற அமர்நீதிநாயனாரைப் பார்த்து; அப்பரம்பொருளானார்=சிவபிரானாகிய அப்பிரமசரியர்; தணியுமுள்

ளச்சுதராயினர்போன்று=கோபம் ஆறிய சிந்தையுடையவரைப்போல; நீர்தந்தமணியும் பொன்னும் = நீர்தருவதாகக்கூறிய இரத்தினங்களும் பொன்களும்; நல்லாடையு மற்றுமென்செய்ய=நல்லபட்டாடைகளும் பிறபொருள்களும் என்னபயனைத்தர பயன்படாது (அதனால்); அணியுங்கோவணநேர்தர = நான்தரித்தற்குரித்தாயிருக்கும் இக்கோவணத்தின் இடை ஒத்திருக்கக் கோவணம் கொடுத்தால்; அமையுமென்றருள=போதுமென்று அருளிச்செய்ய.—எ-று. (உகூ)

மலர்ந்தசிந்தைய ராகியவணிகரே றனையார்
அலர்ந்தவெண்ணிறக் கோவணமதற்குநே ராக
இலங்குபூந்துகில் கொள்வதற்கிசைந்தருள் செய்யீர்
நலங்கொள்கோவணந் தரும்பரிசியாதென நம்பர்.

(இ-ள்.) மலர்ந்தசிந்தையராகிய= (அவ்வாறு கூறிய மறையவர் மொழியைக்கேட்டு) விகசித்த உள்ளமுடையராகிய; வணிகரேறனையார் =வணிகருட்சிறந்த அமர்நீதிநாயனார்; அலர்ந்தவெண்ணிறக் கோவணமதற்குநேராக =விரிந்த வெள்ளிய நிறத்தையுடைய கோவணத்தின் நிறை ஒத்திருக்க; இலங்குபூந்துகில் கொள்வதற்கிசைந்தருள் செய்யீர் = விளக்கமான பொலிவினையுடைய பட்டாடைமுதலியவற்றை வாங்கிக்கொள்வதற்கு உடன்பட்டுக் கிருபைசெய்யாதிருக்கின்றீர் ஆயின்; நலங்கொள்கோவணந் தரும்பரிசியாதென நம்பர்=நன்மையான கோவணத்தின் இடைக்குக் கோவணங்கொடுக்க எக்கோவணத்தை இடையாக வைத்துக் கொடுப்பதென்று கேட்கச் சிவபிரான் கூறுகின்றார். ()

உடுத்தகோவண மொழியநா முங்கையிற் றரநீர்
கெடுத்ததாகமுன் சொல்லுமக் கிழித்தகோ வணநேர்
அடுத்தகோவண மிதுவென்று தண்டினி லவிழா
எடுத்துமற்றித னிடையிடுங் கோவண மென்றார்.

(இ-ள்.) உடுத்தகோவணமொழிய = ஈண்டுநான் தரித்தகோவணமல்லாமல்; நாமுங் கையிற்றரநீர் கெடுத்ததாக=நாம் உம்முடைய கையில் நீராடுதற்கு முன்கொடுக்க நீர் இழந்ததாக; முன்சொல்லுமக்கிழித்த கோவணநேர் = முன்னேகூறும் அந்தக்கிழித்த கோவணத்துக்கு ஒத்த; அடுத்தகோவண மிதுவென்று=இரண்டாவது கோவணம் ஈதென்று; தண்டினில விழாயெடுத்து = தன்னுடைய பலாசத்தண்டினின்றும் அவிழ்த்து எடுத்து ;இதனிடையிடுங் கோவணமென்றார்=இக்கோவணத்தினிடையாக வேறுகோவணம் நிறுத்துக்கொடுமென்று அருளிச்செய்தார்.—எ-று. மற்று - அசை. (ஙக)

நன்றுசாலவென் றன்பர்தா மொருதுலை நாட்டக்
குன்றவில்லியார் கோவண மொருதட்டி லிட்டார்
நின்றதொண்டருங் கையினி னெய்தகோ வணந்தட்
டொன்றிலேயிட நிறைநிலா தொழிந்தமை கண்டார்.

(இ-ள்.) நன்றுசாலவென் றன்பரொருதுலை நாட்ட=இதுமிகவும் நல்லதென்று அமர்நீதிநாயனார் ஒரு பெரியதராசைத்தூக்க; குன்றவில்லியார்=மேருவாகிய வில்லையுடைய சிவபிரான்; கோவணமொருதட்டிலிட்டார்=தாம்தண்டிலவிழ்த்த கோவணத்தை அத் தராசின் ஒரு தட்டில்வைத்தார்; நின்றதொண்டரும் = அங்குநின்ற அமர்நீதிநாயனாரும்; கையினி னெய்தகோவணம் = தம் கையிலே எடுத்துவந்த நெய்த ஓர் கோவணத்தை; தட்டொன்றிலேயிட = மற்றோர்தட்டிலேவைக்க; நிறைநிலாதொழிந்தமை கண்டார்=சிவபிரான்கோவணத்துக்கு நிறை சமம் நில்லாது ஒழிந்ததைப்பார்த்தார்.—எ-று. (௩௨)

தாம் - அசை. அன்பரும் என்றும் பாடம்.

நாடுமன்பொடு நாயன்மார்க் களிக்கமுன் வைத்த
நீடுகோவண மடையநே ராகவொன் றொன்றாக்
கோடுதட்டின்மீ திடவிடக் கொண்டெழுந் ததுகண்
டாடுசேவடிக் கடியரு மற்புத மெய்தி.

(இ-ள்.) நாடுமன்பொடு = சிவபிரான் திருவருளை நாடிநிற்கும் அன்போடு; நாயன்மார்க்களிக்க=அடியார்களுக்குக் கொடுக்கும்படி; முன்வைத்த நீடுகோவணமடைய = தான் முன்னேவைத்திருந்த நீண்டகோவணங்களை எல்லாம் முழுதும்; நேராக ஒன்றொன்றா=நிறைநிற்கும்படி ஒன்றொன்றாக; கோடுதட்டின்மீதிடவிட = வட்டமான அத்தராசுத்தட்டின்மேல் இட இட; கொண்டெழுந்ததுகண்டு=அக்கோவணங்களைத் தான் வாங்கிக்கொண்டு அத்தட்டு நிறைநில்லாமல் மேலே எழுந்ததைப்பார்த்து; ஆடு சேவடிக் கடியரு மற்புத மெய்தி=நிருத்தஞ்செய்தருளும் திருவடிக்கு அன்புபூண்டொழுகும் அந்நாயனாரும் ஆச்சரியமடைந்து—எ-று. (௩௩)

உலகிலில்லதோர் மாயையிக் கோவண மொன்றுக்
கலகில்கோவண மொத்தில வென்றதி சயித்துப்
பலவுமென்றுகில் பட்டொ டிடவிட வுயர
இலகுபூந்துகிற் பொதிகளை யெடுத்துமே லிட்டார்.

(இ-ள்.) உலகிலில்லதோர்மாயை = இது இவ்வுலகின்கண் இல்லாததாகிய ஓர் மாயை; இக்கோவணமொன்றுக்கு = இந்த ஒருகோவணத்திற்கு; அலகில்கோவண மொத்திலவென் றதிசயித்து = எண்ணிறந்த கோவணங்கள் நிறைநில்லாதிருந்தன என்று ஆச்சரியமடைந்து; பலவுமென்றுகில்பட்டொடு = பட்டாடைகளோடு மிருதுவான பல ஆடைகளையும்; இடவிடவுயர = அத்தட்டின்மேல் இடஇடத் தட்டுயர்ந்துசெல்ல (அதனால்); இலகுபூந்துகிற் பொதிகளை = விளங்குகின்ற பொலிவினையுடைத்தாகிய நல்லாடைப்பொதிகளை; எடுத்துமேலிட்டார்=எடுத்து அவ்வாடைகளின்மேலே இட்டார்.—எ-று. (௩௪)

முட்டிலன்பர்த மன்பிடுந் தட்டுக்கு முதல்வர்
மட்டுநின்றதட் டருளொடுந் தாழ்வுறும் வழக்காற்
பட்டொடுந்துகி லனேக கோடிகளிடப் பத்தர்
தட்டுமேற்படத் தாழ்ந்தது கோவணத் தட்டு.

(இ-ள்.) அன்பிடும் முட்டிலன்பர்தந்தட்டிக்கு=அன்பினை இடும் குறைபாடில்லாத அன்பர்களுடைய நிலைமைக்கு; முதல்வர்மட்டு நின்றதட்டு=சிவபிரானிடத்து நின்ற முதன்மைக் குணமென்னுந் தன்மையானது; அருளொடுந்தாழ்வுறும் வழக்கால் = அருளோடு தாழ்கின்ற முறைமையினால்; பட்டொடுந்துகிலனேககோடிகளிட=பட்டோடு அனேககோடி நல்லாடைகளையும் அதன்மேல்கொண்டுவந்து வைக்க; பத்தர்தட்டுமேற்பட=அமர்நீதிநாயனார் தட்டுமேலெழ; தாழ்ந்தது கோவணத்தட்டு=சிவபிரான் கோவணத்தட்டுதாழ்ந்தது.—எ-று. (ருரு)

முற்கூறிய இரண்டுதட்டினையும், தன்மை நிலைமைஎனத்தாற்பரியப் பொருளாகக்கொள்க. அமர்நீதிநாயனார் அன்பு மேம்படச் சிவபிரான் முதன்மைத் தன்மை அருளோடு எளிவந்து நின்றது எனச் சொற்சாதுரியந் தோன்றக்கூறியவாறு. என்னை, அவர்பட்டோடு அனேகந்துகில்களை இடுதல் சிவபிரான்மேல் வைத்த அன்பாதலினாலும், அவர் கோவணத்தைத் தாழ்த்தல் நாயனார் அன்பை வெளிப்படுத்தும் அருளாதலானுமென்க. இனி இவ்வாறன்றி தட்டுமேற்பட என்றதற்குப் பரிபாகம் மேற்படத் திருவருள் பதிந்ததெனச் சொற்சாதுரியப் பொருள்கூறினு மமையும்.

ஆனதன்மைகண் டடியவ ரஞ்சியந் தணர்முன்
றூநறுந்துகில் வர்க்கநூல் வர்க்கமே முதலா
மானமில்லன குவிக்கவுந் தட்டின்மட் டிதுவால்
ஏனையென்றன மிடப்பெற வேண்டுமென் றிறைஞ்ச.

(இ-ள்.) ஆனதன்மைகண் டடியவரஞ்சியந்தணர்முன் = அவ்விதமாயிருக்கும் இயல்பைக்கண்டு அமர்நீதிநாயனார் அச்சமுற்று அம்மறையவர் திருமுன்; தூநறுந்துகில்வர்க்கநூல் வர்க்கமேமுதலா=தூய நல்ல ஆடைப்பொதிகளும் நூல்வர்க்கங்களும் முதலாக; மானமில்லன குவிக்கவும்=எண்ணிறந்தபொருள்களை நிறைக்கவும்; தட்டின்மட்டிது = தட்டுநிறை ஒவ்வாமலே இருந்தது; ஏனைஎன்றனமிடப்பெறவேண்டுமென்றிறைஞ்ச=இன்னும் இவையல்லாதஎன்னுடைய பொன்மணி முதலிய தனங்களையும் இடும்படிக்குக் கட்டளையிடவேண்டுமென்று வணங்க.—எ-று. ஆல் - அசை. (ருசு)

மங்கைபாகரா மறையவர் மற்றதற் கிசைந்தே
யிங்குநாமினி வேறொன்று சொல்லுவ தென்கொல்
அங்குமற்றுங்க டனங்களி னாகிலு மிடுவீர்
எங்கள்கோவண நேர்நிற்க வேண்டுவ தென்றார்.

(இ-ள்.) மங்கைபாகராமறையவர் = உமாதேவியை ஓர்கூற்றில்வைத்த சிவபிரானாகிய பிரமசரியர்; அதற்கிசைந்து = அந்நாயனார் கூறியவார்த்தைக்கு உடன்பட்டு; இங்குநாமினி வேறொன்றுசொல்லுவதென் = இப்பொழுதுநாம் வேறொன்றைக் கூறுவதனால் யாதுபயன் ஒன்றுமில்லை; அங்குமற்றுங்கடனங்களினாகிலுமிடுவீர் = அத்தட்டுநிறை நிற்றற்கு உங்களுடைய பிறதனங்களி

லானும் இட்டு நிறைநிற்கச்செய்வீர்; எங்கள்கோவண நேர்நிற்கவேண்டுவ தென்றார்=எம்முடைய கோவணம் எவ்வாற்றானும் ஒத்தநிறையில் நிற்கவேண்டியது என்றருளிச்செய்தார்.—எ-று. (கஎ)

கொல் அசை. மற்று முன்னையது வினைமாற்று பின்னையது அசை. ஏ-அசை.

உம்மை வேண்டாததென்னும் இழிவைக்குறித்தலில் இழிவுசிறப்பு.

நல்லபொன்னொடும் வெள்ளியு நவமணித் திரளும்
பல்வகைத்திறத் துலோகமும் புணர்ச்சிகள் பலவும்
எல்லையில்பொருள் சுமந்தவ ரிடவிடக் கொண்டே
மல்குதட்டுமீ தெழுந்தது வியந்தனர் மண்ணோர்.

(இ-ள்.) நல்லபொன்னொடு வெள்ளியு நவமணித் திரளும்=மாற்றுயர்ந்த பொன்னோடு வெள்ளியும் இரத்தினக் குவியல்களும்; பல்வகைத்திறத்து லோகமும்=தாம்பிரம் முதலிய பலவகையான உலோகக்கட்டிகளும்; புணர்ச்சிகள் பலவும்=அவற்றைக்கலந்த வெண்கல முதலியனவும் ஆகிய; எல்லையில்பொருள் சுமந்து=அளவிறந்த பொருள்களை எடுத்து மேலேசுமத்தி; அவரிடவிடக்கொண்டு=அந்நாயனார் வைக்கவைக்க அப்பொருள்களை எல்லாந் தாங்கிக்கொண்டு; மல்குதட்டுமீதெழுந்தது=வளங்கள் நெருங்கிய அத்தராசுத்தட்டு மேலே எழுந்தது; வியந்தனர்மண்ணோர்=உலகத்தார் அதிசயமடைந்தார்.—எ-று.ஏ-அசை. ()

தவநிறைந்தநான் மறைப்பொரு ளூல்களாற் சமைந்த
சிவன்விரும்பிய கோவண மிடுஞ்செழுந் தட்டுக்
கவனிமேலமர் நீதியார் தனமெலா மன்றிப்
புவனம்யாவையு நேர்நிலா வென்பது புகழோ.

(இ-ள்.) தவநிறைந்த நான்மறைப்பொருணூல்களாற் சமைந்த=மேன்மையினையுடைய நான்கு வேதங்களின்பொருள்வடிவானநூல்களினால்அமைந்த; சிவன்விரும்பிய கோவணம்=சிவபிரானால் விரும்பப்பட்ட இக்கோவணத்தை; இடும்செழுந்தட்டுக்கு = இட்ட நல்லதராசுத்தட்டுக்கு; அவனிமேலமர் நீதியார் தனமெலாமன்றி=இந்த நிலவுலகத்தில் அமர்நீதிநாயனாருடைய பொருள்களெல்லாம் அல்லாமல்; புவனம் யாவையுநேர் நிலாவென்பது புகழோ; எல்லாவுலகங்களும் வைப்பினும் நிறையொத்து நிற்கமாட்டாதென்று சொல்வது புகழ்ச்சியோ? புகழ்ச்சியன்று.—எ-று. (கக)

நிலைமைமற்றிது நோக்கிய நிகரிலார் நேர்நின்
றுலைவில்பஃறன மொன்றொழி யாமையுய்த் தொழிந்தேன்
றலைவயானுமென் மனைவியுஞ் சிறுவனுந் தகுமேற்
றுலையிலேறிடப் பெறுவதுன் னருளெனத் தொழுதார்.

(இ-ள்.) நிலைமையிதுநோக்கிய நிகரிலார் = இவ்வாறு தானிட்டபொருள்கள் நிறைநில்லாது ஒழியும் இந்நிலைமையைப் பார்த்த ஒப்பில்லாத அமர்நீதிநாயனார்; நேர்நின்று=சிவபிரானாகிய மறையவர் திருமுன்னேநின்று; உலைவில்பஃறனம்=கெடுதலில்லாத பலதிரவியங்களையும்; ஒன்றொழியாமை யுய்த்தொழிந்

தேன்=ஒன்றுந்தவறுமல் இட்டுவிட்டேன்; தலைவயானுமென் மனைவியுஞ் சிறுவனும்=சுவாமீ அடியேனும் என்மனைவியும் என்புதல்வனும்; தருமேல்=நிறைக்குரியபொருளாகத் திருவுள்ளத்துக்கொண்டால்; துலையிலேறிடப்பெறுவ துன்னருளெனத்தொழுதார்=தராசுத்தட்டில் ஏறும்படி உன்னருள்பெறத் தக்கதென்று வணங்கினுர்.—எ-று. மற்று - அசை. (௬௦)

இவர்கோவணத்தின்பொருட்டு அடியர்சொற்றவறுது நின்று பிறபொருளையுந் தன்னையும் வெறுத்து உலகியலைப் பேதித்தவாறுகாண்க.

பொச்சமில்லடி மைத்திறம் புரிந்தவ ரெதிர்நின்
றச்சமுன்புற வுரைத்தலு மங்கண ரருளா
னிச்சயித்தவர் நிலையினைத் துலையெனுஞ் சலத்தால்
இச்சழக்கினின் றேற்றுவா ரேறுதற் கிசைந்தார்.

(இ-ள்.) பொச்சமில்லடிமைத் திறம்புரிந்தவர்=பொய்யில்லாத தொண்டைச்செய்த அந்நாயனுர்; எதிர்நின்றச்சமுன் புறவுரைத்தலும் = தன் எதிரே நின்று அச்சத்தோடு இவ்வாறு சொன்னமாத்திரத்து; அங்கணரருளானிச்சயித்தவர் நிலையினை=சிவபிரான் திருவருளினுல் அவரது உறுதிப்பாடான பத்தியை உலகத்தார்க்கு நன்குய்விளக்கி; துலையெனுஞ் சலத்தால் = துலையென்கிற வியாசத்தினுல்; இச்சழக்கினின் றேற்றுவார்=இவ்வுலகவாழ்வாகிய பொய்யினின்றும் கரையேற்றுங் கருத்துடையவராய்; ஏறுதற்கிசைந்தார் = அந்நாயனுர் தராசுத்தட்டிலேறுதற் குடன்பட்டார்.—எ-று. (௬௧)

இவர் கோவணங்காரணமாய்த் தம்பொருள்களையெல்லாம் கொடுத்தும் தன்பத்தி தவறுது தன்னையுங்கொடுக்க உடன்பட்டாரென்பதைத் திருவுள்ளத்துக்கொண்டாரென்பது விளக்கிய அவர்நிலையினை நிச்சயித்தென்றும், மேல் இவர்க்குத் தாங்கொண்ட அடியர் பத்தி ஒன்றே பொருளன்றிப் பொய்யாகிய தேகத்தும் போகப் பொருளிடத்தும் வாஞ்சையில்லாமையின் இவரை உடம்பெடுத்துழலும் பொய்வாழ்வில் வையாது மெய்வாழ்வில் வைக்கவேண்டுமென்னும் கருத்தைத் தந்திருவுள்ளத்துக் கொண்டருளினரென்பது தோன்றத் துலையெனுஞ் சலத்தாலென்றும், அதற்காகவே ஏறச்சொன்னுரென்பது விளக்கிய ஏற்றுவாரிசைந்தாரென்றுங் கூறினர்.

சலம் என்பது வடசொல், அதன்பொருள் வியாசம், அதாவது கருதியதை மறைத்து மற்றென்று செய்வது.

மனமகிழ்ந்தவர் மலர்க்கழல் சென்னியால் வணங்கிப்
புனைமலர்க்குழன் மனைவியார் தம்மொடு புதல்வன்
றனையுடன்கொடு தனித்துலை வலங்கொடு தகவால்
இனையசெய்கையி லேறுவார் கூறுவா ரெடுத்து.

(இ-ள்.) மனமகிழ்ந்தவர்மலர்க்கழல் = அம்மறையவர் அருளிய மொழியைக்கேட்டு மனம் களிகூர்ந்து அவர் திருவடிகளை; சென்னியால்வணங்கி=சிர

சால்வணங்கி ; புனைமலர்க்குழல் மனைவியார்தம்மொடு=மலர்களைமுடித்த அளக த்தையுடைய தம்மனைவியாரோடு ; புதல்வன்றனை யுடன்கொடு=புத்திரனையுங் கூட அழைத்துக்கொண்டு ; தனித்துலைவலங்கொடு=ஒப்பற்ற துலையை வலமாக வந்து ; தகவாலினைய செய்கையிலேறுவார்=தகுதியோடு இவ்விதசெய்கையினுல் ஏறுகின்ற அந்நாயனார் ; கூறுவாரெடுத்து = எடுத்து இவ்வாறு கூறுவாராயி னூர்.—எ-று. (௪௨)

இழைத்தவன்பினி லிறைதிரு நீற்றுமெய் யடிமை
பிழைத்திலோமெனிற் பெருந்துலை நேர்நிற்க வென்று
மழைத்தடம்பொழிற் றிருநல்லூ ரிறைவரை வணங்கித்
தழைத்தவஞ்செழுத் தோதினு ரேறினூர் தட்டில்.

(இ-ள்.) அன்பினில் இழைத்த = அன்பினுற்செய்துவந்த ; இறைதிரு நீற்று மெய்யடிமை = சிவபிரானது திருவெண்ணீறணிந்த திருவடியாரிடத்துச் செய்த மெய்ம்மையான அடிமைத்தன்மையில் நின்றும் ; பிழைத்திலோமெனிற் பெருந்துலை நேர் நிற்கவென்று=இதுகாறுந் தவறுமலிருந்தோமாகில் இப்பெரிய துலையானது சமமொத்துநிற்கக்கடவதென்று ; மழைத்தடம்பொழிற்றிருநல்லூ ரிறைவரை வணங்கி=மேகங்கள்வாழும் விசாலமாகிய சோலைசூழ்ந்த திருநல்லூ ரின்கண் வீற்றிருந்தருளும் சிவபிரானைத் தொழுது ; தழைத்தவஞ்செழுத்தோ தினுரேறினூர் தட்டில்=மேன்மைமிக்க திருவைந்தெழுத்தையும் உச்சரித்தாராய் அத்தட்டின்கண் ஏறியருளினூர்.—எ-று. (௪௩)

மண்டுகாதலின் மற்றவர் மகிழ்ந்துட னேற
அண்டர்தம்பிரான் றிருவரைக் கோவண மதுவுங்
கொண்டவன்பினிற் குறைபடா வடியவ ரடிமைத்
தொண்டுமொத்தலா லொத்துநேர் நின்றதத் துலைதான்.

(இ-ள்.) மண்டுகாதலினவர்மகிழ்ந்துடனேற=மிக்கவிருப்போடு அவ்வ மர்நீதிநாயனூர் மகிழ்ச்சியடைந்து புதல்வனேடும் மனைவியாரோடும் தட்டிலேற; அண்டர்தம்பிரான் திருவரைக்கோவணமதுவும்=தேவர்க்கு முதல்வராகிய பிரா னூரது திருவரைக்கண் சாத்தியகோவணமும்; கொண்டவன்பினிற் குறைபடா= தாங்கொண்ட பத்தியி னின்றும் ஒருசிறிதும் குறைவுபடாத ; அடியவரடிமைத் தொண்டும்=இந்நாயனூரது அடிமைத்தொண்டும் ; ஒத்தலாலொத்து நேர்நின்றதத் துலை=ஒத்திருத்தலால் அத்துலை ஒத்து நேராக நின்றது.—எ-று. (௪௪)

மற்று, தான் - அசை.

அக்கோவணம் அவரடிமைத் தொண்டை வெளிப்படுத்துதற்கு இடப்பட் டதாதலின் ஒருசிறிதும் பிறபொருளோடுஒவ்வாது நின்று பின் அந்நாயனூர் பிற பொருளோடு தன்னையும் தனக்குக்கொடுத்த அன்பின் வழித்தாய நிலைமைகண் டுழி அவ்வன்போடு ஒத்தலின் கோவணமுந் தொண்டு மொத்தலாலென்றூர்.

மதிவிளங்கிய தொண்டர் தம்பெருமையை மண்ணோர்
துதிசெய்தெங்கணு மதிசய முறவெதிர் தொழுதார்
கதிர்விசும்பிடை கரந்திட நிரைந்தகற் பகத்தின்
புதியபூமழை யிமையவர் மகிழ்வுடன் பொழிந்தார்.

(இ-ள்.) மதிவிளங்கிய தொண்டர்தம் பெருமையை=அறிவால் விளக்கமடைந்த அமர்நீதிநாயனருடைய மகிமையை; மண்ணோர்துதிசெய் தெங்கணும்=நிலவுலகின்கணுள்ள யாவரும் புகழ்ந்துகூறி எவ்விடத்தும்; அதிசயமுறவெதிர்தொழுதார்=ஆச்சரியமுண்டாக அவர் எதிரேவணங்கினார்கள்; கதிர்விசும்பிடை கரந்திட=ஒளிவிளங்குகின்ற ஆகாய வெளி மறையும்படி; நிரைந்தகற்பகத்தின் புதியபூமழை=வரிசையாயிருக்கின்ற கற்பகதருவினுண்டாகிய புதிய மலர் மழையை; இமையவர் மகிழ்வுடன் பொழிந்தார்=தேவர்கள் மகிழ்ச்சியோடு சொரிந்தார்கள்.—எ-று. (சரு)

நிரந்த எனப்பாடமாயின் நெருங்கிய எனப் பொருள்கொள்க.

அண்டர்பூமழை பொழிய மற்றதனிடை யொளித்த
முண்டவேதிய ரொருவழி யான்முத னல்லூர்ப்
பண்டுதாம்பயில் கோலமே விசும்பினிற் பாகங்
கொண்ட பேதையுந் தாமுமாய்க் காட்சிமுன் கொடுத்தார்.

(இ-ள்.) அண்டர் பூமழைபொழிய=தேவர்கள் மலர்மழைசொரிய; அதனிடை யொளித்த முண்டவேதியர்=அம்மலர்மழையினிடத்து மறைந்ததிரிபுண்டரத்தையணிந்த சிவபிரானாகிய மறையவர்; ஒருவழியான்முதனல்லூர் = ஓர் வழியினால் மறைந்து முதன்மையான திருநல்லூரென்னுந் திருப்பதியில்; பண்டு தாம்பயில் கோலமே=முன்னே தாம் எழுந்தருளியிருக்குந் திருக்கோலமாகவே; விசும்பினிற்பாகங்கொண்டபேதையுந்தாமுமாய்=ஆகாயத்தின்கண் தமது வாமபாகத்தை இடமாகக்கொண்ட உமாதேவியாரும் தாமுமாக; காட்சிமுன்கொடுத்தார்=தரிசனத்தை அவர்க்குமுன்னே கட்டளையிட்டருளினார்.—எ-று. (சசு)

ஏகாரம் தேற்றம். மற்று அசை.

தொழுது போற்றியத் துலைமிசை நின்றுநேர் துதிக்கும்
வழுவிலன்பரு மைந்தரு மனைவியார் தாமு
முழுதுமின்னருள் பெற்றுத்த முன்றொழு திருக்கும்
அழிவில்வான்பதங் கொடுத்தெழுந் தருளினா ரையர்.

(இ-ள்.) தொழுதுபோற்றியத்துலைமிசை நின்று=அத்திருக்கோலத்தைக்கைகூப்பி வணங்கி அத்தராசின்மேல் நின்று; நேர்துதிக்கும் வழுவிலன்பரும்=நேரேதுதிக்கின்ற குற்றமில்லாத அமர்நீதிநாயனரும்; மைந்தரும்மனைவியார்தாமும்=சிறுவனும் மனைவியாரும் ஆகியமூவரும்; முழுதுமின்னருள்பெற்று=முழுதும் இனியதிருவருளைப் பெற்று தம்முன்தொழுதிருக்கும் = தமது திருமுன்னேவணங்கி இருத்தற்கிடமான அழிவில்வான் பதங்கொடுத்து = அழிவில்லாதசிவபதத்தை அவர்க்குக்கொடுத்து; எழுந்தருளினாரையர் = சிவபிரான் மறைந்தருளினார்.—எ-று. (சஎ)

நாதர்தந்திரு வருளினு னற்பெருந் துலையே
மீதுகொண்டெழு விமானம தாகிமேற் செல்லக்
கோதிலன்பருங் குடும்பமுங் குறைவறக் கொடுத்த
ஆதிமூர்த்தியா ருடன்சிவ புரியினை யணைந்தார்.

(இ-ள்.) நாதர்தந்திருவருளினால்=சிவபிரான் திருவருளினால்; நற்பெருந்துலையே=நல்லபெருமையினையுடைய அத்தராசே; மீது கொண்டெழுவி மானமதாகிமேற்செல்ல=மேற்கொண்டெழுகின்ற விமானரூபமாய் மேலேசிவபதம் நோக்கிச்செல்ல; கோதிலன்பரும் குடும்பமும் = குற்றமற்ற அன்பினையுடைய அமர்நீதிநாயனாரும் மனைவியாரும் புத்திரனும்; குறைவறக்கொடுத்த=குறைவி ல்லாமல் திருவருள்செய்த; ஆதிமூர்த்தியாருடன் = சிவபிரானோடு; சிவபுரியி னையணைந்தார் = சிவலோகத்தை அடைந்தார்கள்.—எ-று. (சஅ)

வேறு.

மலர்மிசை யயனுமாலுங் காணுதற் கரியவள்ளல்
பலர்புகழ் வெண்ணைநல்லூ ராவணப் பழமைகாட்டி
உலகுய்ய வாண்டுகொள்ளப் பெற்றவர் பாதமுன்னித்
தலைமிசை வைத்துவாழுந் தலைமைநந் தலைமையாகும்.

(இ-ள்.) மலர்மிசையயனுமாலும் = தாமரைமலரின்கண் வாழும் பிரம னுந்திருமாலும்; காணுதற்கரியவள்ளல் = அடியையும் முடியையும் தேடி அறித ற்கரிய சிவபிரான்; பலர்புகழ்வெண்ணைநல்லூர் = யாவரும் புகழத்தக்க திருவெ ண்ணைநல்லூரின்கண்; ஆவணப்பழமைகாட்டி = கிழித்த ஆவணத்துக்குப்பழ மையான மூல ஓலையைக்காட்டி; உலகுய்யவாண்டுகொள்ளப் பெற்றவர் = உல கத்தார் ஈடேறும்படி தடுத்தாட்கொள்ளப் பெற்ற நம்பியாரூரரது; பாதமுன்னி த்தலைமிசைவைத்து வாழும் = திருவடிகளைத்தியானித்து அத்திருவடிகளை எந்நா ளும் சிரசின்மேல் சூடிக்கொண்டுவாழும்; தலைமைநந்தலைமையாகும்=மேன்மை யே நமக்கு உயர்ந்த சிறப்பாகும்.—எ-று. (சகூ)

ஆ. திருவிருத்தம் - ருரு0.

அமர்நீதிநாயனார் புராணம் முற்றிற்று.

தில்லைவாழ்ந்தணர்சருக்கம் முற்றியது.

திருச்சிற்றம்பலம்.

---

இலை மலி ந்த சருக்கம்.

## எறிபத்தநாயனார் புராணம்.

மல்லனீர் ஞாலந்தன்னுண் மழவிடை யுடையானன்பர்க்
கொல்லைவந் துற்றசெய்கை யுற்றிடத் துதவுநீரார்
எல்லையில் புகழின்மிக்க வெறிபத்தர் பெருமையெம்மாற்
சொல்லலாம் படித்தன்றேனு மாசையாற் சொல்லலுற்றாம்.

(இ-ள்.) மல்லனீர்ஞாலந்தன்னுள்=வளம்நிறைந்த கடலாற்சூழப்பட்ட நிலவுலகத்தின்கண்; மழவிடையுடையானன்பர்க்கு=இளமையான இடபத்தை வாகனமாகக் கொண்டருளும் சிவபிரான் அடியார்களுக்கு; ஒல்லைவந்துற்றசெய்கை = விரைந்துவந்து வேண்டுஞ்செய்கைகளை; உற்றிடத்துதவுநீரார் = ஆபத்துவந்த விடத்துச்செய்கின்ற குணத்தையுடையவர்; எல்லையில் புகழின்மிக்க= வரம்பிகந்த கீர்த்தியில்மேம்பட்ட; எறிபத்தர்பெருமை = எறிபத்தநாயனாரது பெருமையானது; எம்மாற்சொல்லலாம் படித்தன்றேனும் = நம்மாற்சொல்லப் படுந் தன்மையுடைத்தன்று அவ்வாறிருப்பினும்; ஆசையாற் சொல்லலுற்றும்= ஆசையாற் சொல்லத்தொடங்கினும்.—எ-று. (௧)

பொன்மலைப் புலிவென்றோங்கப் புதுமலை யிடித்துப்போற்றும்
அந்நெறி வழியேயாக வயல்வழி யடைத்தசோழன்
மன்னிய வநபாயன்சீர் மரபின்மா நகரமாகுந்
தொன்னெடுங் கருவூரென்னுஞ் சுடர்மணி வீதிமூதூர்.

(இ-ள்.) பொன்மலைப்புலிவென்றோங்க=இமயமலையி னிடத்துக்கட்டிய புலிக்கொடி பிறநாட்டரசர்களை வென்றுமேம்பட; மலையிடித்துப்போற்றும் = மலைகளையிடித்துத் தன்னால் உண்டாக்கப்படும்; புது அந்நெறிவழியேயாக = புதிதான அந்தவழியே செல்வோர்க்குமார்க்கமாக; அயல்வழியடைத்தசோழன் = முன்னிருந்த சுற்றுவழிகளை அடைத்த சோழவமிசத்தரசனாகிய; மன்னியவநபாயன் சீர்மரபின்=நிலைபெற்ற சிறப்பினையுடைய அநபாயச்சோழனது மரபினருக்கு; மாநகரமாகும்=பெரியநகரமாக இருக்கும் (அதுயாதெனில்); தொன்னெடுங் கருவூரென்னும்=பழமைமிக்க கருவூரென்னும்; சுடர்மணிவீதிமூதூர்= ஒளிவீசும் மணிகள்பதித்த வீதியையுடைய பழமையாகியவூர்.—எ-று (௨)

மலைகளைஇடித்து நேர்வழிஉண்டாக்குதல் அரசர்க்குச் சிறப்பாதலின் மலைகளை இடித்தென்றும், சுற்றுவழிகளை அடைத்தலில் அயல்வழியடைத்தென்றுங் கூறினர்.

மாமதின் மஞ்சுசூழு மாளிகை நிரைவிண்சூழுந்
தூமணி வாயில்சூழுஞ் சோலையில் வாசஞ்சூழுந்
தேமல ரளகஞ்சூழுஞ் சிலமதி தெருவுஞ்சூழுந்
தாமகிழ்ந் தமரர்சூழுஞ் சதமக னகரந்தாழ.

(இ-ள்.) மாமதின்மஞ்சுசூழும் = பெரியமதில்களில் மேகங்கள்சூழும்; மாளிகை நிரைவிண்சூழும் = மாளிகைகளின் வரிசைகள் மேகமண்டலத்தை அளாவியிருக்கும்; தூமணிவாயில்சூழும் = தூய்மையாகிய இரத்தினங்கள் வாயில்களிற் சூழ்ந்திருக்கும்; தேமலரளகஞ்சூழும் = தேன்கமழ்கின்ற மலர்கள் மாதர்களது அளகத்திற்சூழ்ந்திருக்கும்; சிலமதிதெருவுஞ்சூழும் = (அம்மகளிர் களதுமுகமாகிய) சிலமதிகள் தெருவிலே சூழும்; தாமகிழ்ந்தமரர்சூழும்=தேவர்கள் தாம்மகிழ்ந்துசூழ்கின்ற; சதமகனகரந்தாழ = இந்திரனது பொன்னுலகமும் இந்நகரச்சிறப்புக்குத் தாழ்ந்திருக்கும்படி.—எ-று (௩)

கடகரி துறையிலாடுங் களிமயில் புறவிலாடும்
அடர்மணி யரங்கிலாடு மரிவையர் குழல்வண்டாடும்
படரொளி மறுகிலாடும் பயில்கொடி கதிர்மீதாடுந்
தடநெடும் புவிகொண்டாடுந் தனிநகர் வளமையீதால்.

(இ-ள்.) கடகரிதுறையிலாடும் = மதத்தைப்பொழிகின்ற யானைகள் நதித்துறைகளில் விளையாடும்; களிமயில்புறவிலாடும் = முல்லைநிலத்தில் களிப்பினையுடைய மயில்கள் ஆடிக்கொண்டிருக்கும்; அடர்மணியரங்கிலாடும் = நெருங்கிய மணிகளழுத்திய அரங்கின்கண் நடிக்கின்ற; அரிவையர்குழல்வண்டாடும் = மாதர்கள் அளகத்தில்வண்டுகள் சஞ்சரிக்கும்; படரொளிமறுகிலாடும்=பரம்பிய ஒளியைவீசுகின்ற வீதியில் ஆடும்; பயில்கொடி கதிர்மீதாடும் = கட்டப்பட்ட கொடிகள் சூரியமண்டலத்தின்மேல் உயர்ந்துஆடும்; தடநெடும் புவிகொண்டாடும் = விசாலமாகிய நீண்ட நில்வுலகத்தார் கொண்டாடத்தக்க; தனிநகர் வளமையீது = ஒப்பற்ற அந்நகரத்தின் வளமானது இத்தன்மைத்தாயிருக்கும்.—எ-று. ஆல் - அசை. (௪)

களிப்புநோர்ந்துழி ஆடுதலில் களிமயிலென்றார்.

மன்னிய சிறப்பின்மிக்க வளநகர் தன்னின்மல்கும்
பொன்னியல் புரிசைசூழ்ந்து சுரர்களும் போற்றும்பொற்பாற்
றுன்னிய வன்பின்மிக்க தொண்டர்தஞ் சிந்தைநீங்கா
அந்நிலை யரனார்வாழ்வ தானிலை யென்னுங்கோயில்.

(இ-ள்.) மன்னிய சிறப்பின்மிக்க = நிலைபெற்ற சிறப்பினால் உயர்ந்த; வளநகர்தன்னின்மல்கும் = வளத்தினையுடைத்தாகிய அந்நகரத்தின்கண் இருக்கும்; பொன்னியல் புரிசைசூழ்ந்து = பொன்னாலாகிய மதிலைச்சுற்றி; சுரர்களும் போற்றும் பொற்பால் = தேவர்களும் துதிக்கத்தக்க சிறப்பினால்; துன்னியவன் பின்மிக்கதொண்டர் தஞ்சிந்தைநீங்கா = தம்முள்ளத்துக்கலந்தஅன்பாற் சிறந்த அடியார்களுடைய இதயத்தை நீங்காத; அந்நிலையரனார்வாழ்வது=அந்நிலைமையினையுடைய சிவபிரானார் வாழ்ந்திருப்பது; ஆனிலையென்னுங்கோயில் = திருக்கருவூர்த் திருவானிலையென்னுந் திருக்கோயில்.—எ-று. (௫)

வளநகர்தன்னில் அரனார்வாழ்வது ஆனிலையென்னுங் கோயின்மல்கும் என இயையும்.

பொருட்டிரு மறைகடந்த புனிதரை யினிதக்கோயின்
மருட்டுறை மாற்றுமாற்றால் வழிபடுந் தொழிலராகி
இருட்கடு வொடுங்குகண்டத் திறையவர்க் குரிமைபூண்ட
அருட்பெருந் தொண்டுசெய்வா ரவரெறி பத்தரானார்.

(இ-ள்.) பொருட்டிருமறைகடந்த=பொருளினையுடைய அழகியவேதங்களை அருளிச்செய்த; புனிதரை யினிதக்கோயில் = மலரகிதராகிய சிவபிரானை இனிதாகத் திருக்கருவூர்த் திருவானிலையென்னும் அவ்வாலயத்தில்; மரு

ட்டுநெறிமாற்று மாற்றால் = மயக்கநெறிகளை நீக்கும்வழியால்; வழிபடுந் தொழில ராகி=வழிபாடுசெய்கின்ற தொழிலையுடையவராய்; இருட்கடுவொடுங் குகண்ட த்திறையவர்க்கு = கருநிறத்தினையுடைய நஞ்சானது சேர்ந்திருக்கும் திருமி டற்றையுடைய முதல்வராகிய சிவபிரானுக்கு; உரிமைபூண்ட அருட்பெருந் தொண்டுசெய்வார் = உரிமையாகத்தாம் கொண்ட அருள்நிறைந்த பெரியதிருத் தொண்டைச் செய்கின்றவர்; அவரெறிபத்தராவார் = அவர்யாரெனில் எறிபத் தநாயனாரென்று சொல்லப்படுவார்.—எ-று. (சு)

மழைவள ருலகிலெங்கு மன்னிய சைவமோங்க
அழலவிர் சடையானன்பர்க் கடாதன வடுத்தபோது
முழையரி யென்னத்தோன்றி முரண்கெட வெறிந்துதீர்க்கும்
பழமறை பரசுந்தூய பரசுமுன் னெடுக்கப்பெற்றார்.

(இ-ள்.) மழைவளருலகிலெங்கும்=(அவர்) மேகங்கள் சஞ்சரிக்கும் நில வுலகின்கண் எவ்விடத்தும்; மன்னியசைவமோங்க = நிலைபெற்ற சைவசமயமா னது விருத்தியடைய; அழலவிர்சடையானன்பர்க்கு = தீப்போல் ஒளிர்கின்ற சடைமுடியையுடைய சிவபிரான் திருவடியார்களுக்கு; அடாதன வடுத்தபோ து=தீங்குகள்நேரிட்டபொழுது; முழையரியென்னத்தோன்றி=மலைமுழைக்கண் வாழும் சிங்கேறுபோல வெளிப்பட்டு; முரண்கெடவெறிந்து தீர்க்கும்=இடுக்க ண்செய்தாரது வலியழியும்படி அவர்களைத்துணித்து அவ்விடுக்கணைநீக்கும்; பழ மறைபரசும்=பழமையான வேதங்கள்துதிக்கும்; தூயபரசுமுன்னெடுக்கப் பெ ற்றார்=தூய்மையான மழுப்படையைத் தம்முடைய திருக்கரத்தில் தாங்கப்பெ ற்றவர்.—எ-று. (எ)

அடியார் துயரங்களைதல் பெரும்புண்ணியமென மறைகூறுதலைஅத்தொ ழினிகழ்த்துங் கருவிமேலேற்றிப் பரசுந்தூய பரசென்றுபசரித்தார். எங்கும் என்றதனால் தமிழ்நாடேயன்றிப் பிறநாடுகளினும் சென்று அடியார் துயரங்களை க்களைவரென்பது போந்தவாறு காண்க.

அண்ணலார் நிகழுநாளி லானிலை யடிகளார்க்குத்
திண்ணிய வன்புகூர்ந்த சிவகாமி யாண்டாரென்னும்
புண்ணிய முனிவனார்தாம் பூப்பறித் தலங்கல்சாத்தி
உண்ணிறை காதலோடு மொழுகுவா ரொருநாண்முன்போல்.

(இ-ள்.) அண்ணலார்நிகழுநாளில்=பெருமையிற்சிறந்த இவ்வெறிபத் தநாயனார் இவ்வாறு செய்தொழுகும் நாளில்; ஆனிலையடிகளார்க்கு=திருவா னிலையென்னும் திருக்கருவூ ராலயத்தில் வீற்றிருந்தருளும் பசுபதீசருக்கு; திண் ணியவன்புகூர்ந்த=திடமான அன்பால் மிக்க; சிவகாமி யாண்டாரென்னும்= சிவகாமி யாண்டா ரென்னும் திருப்பெயரையுடைய; புண்ணியமுனிவனார் = புண்ணியவடிவரான மறையவர்; தாம்பூப் பறித்தலங்கல்சாத்தி=தாம் மலர்களைக் கொய்துதிருப்பள்ளித் தாமங்களையணிந்து; உண்ணிறை காதலோடு மொழுகு வார் = தம்முள்ளத்துநிறைந்த பெருவிருப்போடு அந்நெறியில் நடக்கின்றவர்; ஒருநாண்முன்போல்=ஒருதினம் முன்னாளில் தாம்செய்வதுபோல.—எ-று. (அ)

வைகறை யுணர்ந்துபோந்து புனன்மூழ்கி வாயுங்கட்டி
மொய்மலர் நெருங்குவாச நந்தன வனத்துமுன்னிக்
கையினிற் றெரிந்துநல்ல கமழ்முகையலரும்வேலைத்
தெய்வநா யகர்க்குச்சாத்துந் திருப்பள்ளித் தாமங்கொய்து.

(இ-ள்.) வைகறையுணர்ந்துபோந்து=விடியற்காலத்தில் நித்திரைவிட்டெழுந்துபோய்; புனன்மூழ்கிவாயுங்கட்டி=நீரில்முழுகி வாயையுங்கட்டி; மொய்மலர்நெருங்கு=கூட்டமான மலர்கள்நெருங்கிய; வாசநந்தனவனத்துமுன்னி=வாசனைகமழும் திருநந்தனவனத்தை யடைந்து; கையினிற்றெரிந்து = கையினாலேஆராய்ந்து; நல்லகமழ்முகையலரும்வேலை = நல்ல பரிமளிக்கின்ற பூவரும்புகள் முகிழ்க்கும் சமயத்து; தெய்வநாயகர்க்குச்சாத்தும்=தெய்வங்களுக்கு நாயகராகிய சிவபிரானுக்குச் சாத்துதற்குரித்தாம்; திருப்பள்ளித் தாமங்கொய்து=திருப்பள்ளித் தாமத்துக்குரிய மலர்களைக் கொய்தெடுத்து.—எ-று. (௯)

திருப்பள்ளித்தாமம்-ஆகுபெயர்.

கோலப்பூக் கூடைதன்னை நிறைத்தனர் கொண்டுநெஞ்சில்
வாலிய நேசங்கொண்டு மலர்க்கையிற் றண்டுங்கொண்டங்
காலய மதனைநோக்கி யங்கணர்க் கமைத்துச்சாத்துங்
காலைவந் துதவவேண்டிக் கடிதினில் வாராநின்றார்.

(இ-ள்.) கோலப்பூக்கூடைதன்னை=அழகியதிருப்பூங்கூடையை; நிறைத்தனர்கொண்டு=நிறைத்துக்கொண்டு; நெஞ்சில்வாலிய நேசங்கொண்டு=தம்முள்ளத்தில் அழுக்கற்ற அன்பையுடையவராய்; மலர்க்கையிற் றண்டுங்கொண்டு=மலர்போலுந் திருக்கரத்தில் தண்டத்தையும் ஊன்றிக்கொண்டு; அங்காலயமதனைநோக்கி=அவ்விடத்துத் திருவாலயத்தைக் கருதி; அங்கணர்க்கமைத்துச் சாத்துங்காலை=சிவபிரானுக்குத் திருமாலைகட்டிச் சாத்துஞ்சமயத்து; வந்துதவவேண்டி=அம்மலர்களைக்கொண்டுவந்து கொடுக்க விரும்பி; கடிதினில் வாராநின்றார்=விரைந்துவந்தார்.—எ-று. (௧0)

இம்மூன் றுங்குளகம்.

மற்றவ ரணையவிப்பால் வளநகர் தன்னின்மன்னுங்
கொற்றவர் வளவர்தங்கள் குலப்புகழ்ச் சோழனார்தம்
பற்றலர் முனைகள்சாய்க்கும் பட்டவர்த் தனமாம்பண்பு
பெற்றவெங் களிறுகோலம் பெருகுமா நவமிமுன்னாள்.

(இ-ள்.) அவரணையவிப்பால்=அச்சிவகாமியாண்டாரென்னும் மறையவர் வரும்பொழுது இதன்மேல்; வளநகர் தன்னின்மன்னும்=வளத்தையுடைய அக்கருவூரில்வாழும்; கொற்றவர் வளவர்தங்கள் = அரசராகிய சோழர்களுடைய; குலப்புகழ்ச் சோழனார்தம்=குலத்தில் அவதரித்த புகழ்ச்சோழநாயனாருடைய; பற்றலர்முனைகள் சாய்க்கும்=பகைவரது போர்முனையை அழிக்கும்; பட்டவர்த்தனமாம் பண்புபெற்ற வெங்களிறு=பட்டவர்த் தனமென்னும் மேன்மையைப்பெற்ற கொடிய யானையானது; கோலம்பெருகுமா நவமிமுன்னாள்=

விழாக்கொண்டாடுதற்குரிய மகாநவமியின் முதல்நாளாகிய அட்டமியில்.—எ-று.

மற்று-அசை.

பட்டவர்த்தனம்=பட்டத்துயானை.

மங்கல விழவுகொண்டு வருநதித் துறைநீராடிப்
பொங்கிய களிப்பினோடும் பொழிமதஞ் சொரியநின்றார்
எங்கணு மிரியல்போக வெதிர்பரிக் காரரோடத்
துங்கமால் வரைபோற்றோன்றித் துண்ணென வணைந்ததன்றே.

(இ-ள்.) மங்கலவிழவுகொண்டு = மங்கலம்அமைந்த விழாவைக்கொள்ளப்பட்டு; வருநதித் துறைநீராடி = வருகின்ற காவிரிநதியின் கரையில் முழுக்காட்டப்பட்டு; பொங்கியகளிப்பினோடும்=மிகுந்த மனக்களிப்போடு; பொழிமதஞ்சொரிய=பொழியாநின்ற மதநீர்பெருக; நின்றாரெங்கணு மிரியல்போக=எதிரில்வராநின்றவர்கள் எவ்விடத்தும் ஓடிப்போக; எதிர்பரிக்காரரோட=தன்முன்னே குத்துக்கோற் காரர்கள்செல்ல; துங்கமால்வரைபோற்றோன்றி = உயர்ந்த பெருமையாகிய மலைபோலத் தோற்றப்பட்டு; துண்ணெனவணைந்தது=விரைவாகவந்தது.—எ-று. அன்று - ஏ அசை. (கஉ)

இவ்விரண்டுங் குளகம்.

வென்றிமால் யானைதன்னை மேல்கொண்ட பாகரோடுஞ்
சென்றொரு தெருவின்முட்டிச் சிவகாமியார் முன்செல்ல
வன்றனித் தண்டிற்றூங்கு மலர்கொள்பூக் கூடைதன்னைப்
பின்றொடர்ந் தோடிச்சென்று பிடித்துமுன் பறித்துச்சிந்த.

(இ-ள்.) வென்றிமால்யானை = வெற்றியினை யுடைத்தாகிய பெரியயானையானது; தன்னைமேல்கொண்ட பாகரோடுஞ்சென்று=தன்னிடத்திராநின்ற பாகர்களோடும் போய்; ஒருதெருவின்முட்டி=ஒருதெருவையடைந்து; சிவகாமியார்முன்செல்ல=அவ்வீதியில் சிவகாமியாண்டார் தன்முன்னேசெல்ல; வன்றனித்தண்டிற்றூங்கும்=வலிய ஒப்பற்ற தண்டினிடத்துத் தூங்காநின்ற; மலர்கொள் பூக்கூடைதன்னை = மலர்கள் அடங்கிய திருப்பூங்கூடையை; பின்றொடர்ந் தோடிச்சென்று=பின்னேதொடர்ந்து ஓடிப்போய்; பிடித்து முன்பறித்துச் சிந்த=பற்றிமுன்னே பறித்து நிலத்தில் சிந்த.—எ-று. (கங)

மேல்கொண்ட பாகர்கண்டு விசைகொண்ட களிறுசண்டக்
கால்கொண்டு போவார்போலக் கடிதுகொண் டகலப்போக
நூல்கொண்ட மார்பிற்றொண்டர் நோக்கினர் பதைத்துப்பொங்கி
மால்கொண்ட களிற்றின்பின்பு தண்டுகொண் டடிக்கவந்தார்.

(இ-ள்.) மேல்கொண்ட பாகர்கண்டு = அவ்யானையின்மேல் ஏறியிருக்கும் பாகர்கள் அதைக்கண்டு; விசைகொண்டகளிறு = வேகமாகச்செல்கின்ற யானையை; சண்டக்கால்கொண்டு போவார்போல=சண்டவாயுவை வசப்படுத்திக்கொண்டு செல்வானையொத்து; கடிதுகொண் டகலப்போக = (அவரைத்

நிங்குசெய்யாமல் விலக்கி) விரைவிலோட்டத்திக்கொண்டு அங்குநின்றும் தூரப் போக; நூல்கொண்ட மார்பிற்றொண்டர் நோக்கினர் = பூணூலணிந்த மார்பினையுடைய சிவகாமியாண்டார் அவ்யானையைப்பார்த்து; பதைத்துப்பொங்கி= மனம்பதைத்துக்கோபித்து; மால்கொண்ட களிற்றின்பின்பு=மயக்கங்கொண்ட அவ்யானையின் பின்னாக; தண்டுகொண் டடிக்கவந்தார்=தன்தண்டினால் அடிக்கும்படி பின்தொடர்ந்து வந்தார்.—எ-று. (கச)

இவ்விரண்டுங்குளகம்.

அப்பொழு தணையவொட்டா தடற்களி றகன்றுபோக
மெய்ப்பெருந் தொண்டர்மூப்பால் விரைந்துபின் செல்லமாட்டார்
தப்பினர் விழுந்துகையாற் றரையடித் தெழுந்துநின்று
செப்பருந் துயரநீடிச் செயிர்த்துமுன் சிவதாவென்பார்.

(இ-ள்.) அப்பொழுதணையவொட்டாது=அது சமயத்துச் சிவகாமியாண்டாரைக் கிட்டவொட்டாமல்; அடற்களி றகன்றுபோக = வலிமையினையுடைய யானையானது நீங்கிப்போக; மெய்ப்பெருந் தொண்டர் = மெய்ம்மையான பெருமையினையுடைய சிவகாமியாண்டார்; மூப்பால் விரைந்துபின் செல்லமாட்டார்=தம் வயோதிகத்தினால் விரைவாய் அதன்பின் போகக்கூடாதவராய்; தப்பினர் விழுந்து=யானையின்பின் செல்லாமல் நீங்கி நிலத்தில் விழுந்து; கையாற்றரையடித் தெழுந்து நின்று = கைகளினால் நிலத்தை அடித்துமேல் எழுந்து நின்றுகொண்டு; செப்பருந் துயரநீடி=சொல்லுதற்கரிய துயரம் அதிகரித்து; செயிர்த்துமுன் சிவதாவென்பார்=கோபித்து முன்னே சிவதாசிவதா வென்னும் இயல்பையுடைய சிவகாமியாண்டார்.—எ-று. (கரு)

சிவதா என்பது மங்கலத்தைச் செய்பவன் என்னும் விளிப்பொருள்பட அக்காலத்து அடியார்கள்கூறும் ஓர் திருநாமம். இவர் நாடோறும் அவ்வாறு உச்சரித்துவரும் வழக்குடைமையானன்றே ஆபத்து நேரிட்டுழி அவ்வாறு அழைத்தனரென்க.

வேறு.

களியா னையினீ ருரியாய் சிவதா
எளியார் வலியா மிறைவா சிவதா
அளியா ரடியா ரறிவே சிவதா
தெளிவா ரமுதே சிவதா சிவதா.

(இ-ள்.) களியானையி னீருரியாய்சிவதா = களிப்பினையுடைய யானையினின்றும் உரித்ததோலைப் போர்த்தவரே சிவதா; எளியார்வலியா மிறைவா சிவதா = எளியார்களுக்குத் துணையாக இருக்கும் இறைவனே சிவதா; அளியா ரடியாரறிவேசிவதா=அன்பு நிறைந்த மெய்யடியார்களது உயிர்க்குயிரேசிவதா; தெளிவாரமுதே சிவதாசிவதா=தெள்ளிதான அமுதமே சிவதாசிவதா.—எ-று.()

ஆறும் மதியும் மணியுஞ் சடைமேல்
ஏறும் மலரைக் கரிசிந் துவதே
வேறுந் நினைவார் புரம் வெந்தவியச்
சீறுஞ் சிலையாய் சிவதா சிவதா.

(இ-ள்.) ஆறும் மதிய மணியுஞ் சடைமேல் = கங்கையையும் இளம் பிறையையும் அணிந்த சடைமுடியின்மேல்; ஏறும்மலரைக் கரிசிந்துவதே = சாத்தும்பூவை இவ்யானை சிந்தலாமா; வேறுந்நினைவார் புரம்வெந்தவிய = பகைமையை நினைத்த அசுரர்களது திரிபுரங்களும் எரிந்தொழிய; சீறுஞ்சிலையாய் சிவதாசிவதா = கோபிக்கும் மேருவில்லையுடையவரே சிவதாசிவதா.—எ-று.

வேறுந்நினைவார் என்பதில் நகரம் விரித்தல் விகாரம்.

தஞ்சே சரணம் புகுதுந் தமியோர்
நெஞ்சேய் துயரங் கெடநேர் தொடரு
மஞ்சே யெனவீழ் மறலிக் கிறைநீள்
செஞ்சே வடியாய் சிவதா சிவதா.

(இ-ள்.) தஞ்சேசரணம் புகுதுந்தமியோர் = தம்மைத்துணையாகவே அடைக்கலம்புகுந்த மார்க்கண்டேயரது; நெஞ்சேய் துயரங்கெட = மனத்தின்கணுள்ள துன்பம்நீங்க; நேர்தொடரும் மஞ்சேயெனவீழ் = எதிர்த்துத்தொடரும் மேகம்போல வீழ்ந்த; மறலிக்கிறைநீள் = யமனுக்கு ஒருசிறிது நீண்டுதைத்த; செஞ்சேவடியாய் சிவதாசிவதா = செப்பமான சிவந்த திருவடியை யுடையவரே சிவதாசிவதா.—எ-று. ஏ-அசை. (க௯)

யமனை வெல்லுதற்கு ஒருசிறிது நீளுதலே அமைவுடைத்தென்று அத்திருவடியின் வலிமைதோன்ற இறைநீளென்றார்.

நெடியோ னறியா நெறியா ரறியும்
படியா லடிமைப் பணிசெய் தொழுகும்
அடியார் களில்யா னரா வணைவார்
முடியா முதலா ரெனவே மொழிய.

(இ-ள்.) நெடியோனறியா நெறியார் = திருமால்தேடி அறியக்கூடாமல் நின்ற நிலைமையை யுடையசிவபிரான்; அறியும்படியால் = தாம்உணரும்வழியால்; அடிமைப்பணிசெய்தொழுகும் = அவர்க்கு அடிமைத்தொழில்களைச்செய்து நடக்கும்; அடியார்களில்யானரா = அடியவர்களில் நான் எவ்வகையானென்று மதித்து (அழைக்குங்கால்); முடியாமுதலா ரணைவாரெனமொழிய = அழியாமுதல்வர் வருவாரென்றுவருந்திக்கூற.—எ-று. ஏ - அசை. (கக)

வேறு.

என்றவ ருரைத்தமாற்ற மெறிபத்த ரெதிரேவாரா
நின்றவர் கேளாமூளு நெருப்புயிர்த் தழன்றுபொங்கி
மன்றவ ரடியார்க்கென்றும் வழிப்பகை களிறேயன்றே
கொன்றது வீழ்ப்பனென்று கொலைமழு வெடுத்துவந்தார்.

(இ-ள்.) என்றவருரைத்தமாற்றம் = இவ்வாறு சிவகாமியாண்டார் சிவதா என முறையிட்டுக்கூறிய வார்த்தையை; எதிரேவாராநின்றவர் எறிபத்தர் கேளா = அவரெதிரில் வராநின்ற எறிபத்தநாயனார்கேட்டு; மூளுநெருப் புயிர்த்

தழன்றுபொங்கி=தன்னுள்ளுளுங் கோபத்தீயோடு பெருமூச்சுவிட்டு மனமழன்றுகோபித்து; மன்றவரடியார்க்கு=கனகசபையின்கண் நிருத்தஞ்செய்தருளும் பிரானாரடியவராகிய இவர்க்கு; என்றும்வழிப் பகைகளிறேயன்றே = எந்நாளும் வழிப்பகையாக உள்ளது இந்தயானையே ஆதலால்; கொன்றது வீழ்ப்பனென்று = அவ்யானையைக்கொன்று நிலத்தில் விழுத்துவேனென்று; கொலைமழுவெடுத்துவந்தார்=(தன்தோளில் தோட்கோப்புப்போல் இட்டிருந்த) கொலைக்கேதுவான மழுப்படையை எடுத்துக்கொண்டுவந்தார்.—எ-று. (உ0)

இவ்வாறுங்குளகம்.

வந்தவ ரழைத்ததொண்டர் தமைக்கண்டு வணங்கியும்மை
இந்தவல் லிடும்பைசெய்த யானையெங் குற்றதென்ன
எந்தையார் சாத்தும்பூவை யென்கையிற் பறித்துமண்மேற்
சிந்திமுன் பிழைத்துப்போகா நின்றதித் தெருவேயென்றார்.

(இ-ள்.) வந்தவ ரழைத்ததொண்டர் தமைக்கண்டு = வந்த எறிபத்தநாயனார் முறையிட்டுச் சிவதாவென்றுகூறும் சிவகாமியாண்டாரைக்கண்டு; வணங்கியும்மை இந்தவல்லிடும்பைசெய்த = தொழுது உமக்கு இக்கொடிய துயரத்தை விளைத்த; யானையெங் குற்றதென்ன = யானையானது எவ்விடத்துச் சென்றதென்றுவினவ; எந்தையார் சாத்தும்பூவை = எமது சிவபிரான் சாத்தும் மலர்களை; என்கையிற்பறித்து = என்கையிலிருக்கும் திருப்பூங் கூடையோடு பறித்து; மண்மேற்சிந்தி முன்பிழைத்து = நிலத்திற்சிதறி முன்னேதப்பி; போகாநின்றதித் தெருவேயென்றார் = ஓடாநின்றது இவ்வீதியின்கண் என்றுகூறினார்.—எ-று. (உக)

உம்மை யென்பது நான்காமுருபின் பொருட்கண் இரண்டாமுருபு வந்தது.

இங்கிது பிழைப்பதெங்கே யினியென வெரிவாய்சிந்தும்
அங்கையின் மழுவுந்தாமு மனலும் வெங்காலுமென்னப்
பொங்கிய விசையிற்சென்று பொருகரி தொடர்ந்துசெல்லுஞ்
செங்கண்வா ளரியிற்கூடிக் கிடைத்தனர் சீற்றமிக்கார்.

(இ-ள்.) இங்கிதுபிழைப்ப தெங்கேயினியென=இவ்விடத்து இவ்யானை உயிர்தாங்கி இனிச்செல்வது எங்கே என்று; எரிவாய்சிந்து மங்கையின் மழுவுந்தாமும்=நெருப்பைத்தன் வாயினிடத்துச்சிதறும் கையிற்றாங்கிய மழுவுந்தாமுமாக; அனலும்வெங் காலுமென்ன=அக்கினியும் காற்றும்போல; பொங்கிய விசையிற்சென்று=மிகுந்த வேகத்தோடு ஓடிச்சென்று; பொருகரி தொடர்ந்து செல்லும்=போர்செய்கின்ற யானையைப்பின்தொடர்ந்து செல்கின்ற; செங்கண் வாளரியிற்கூடி = சிவந்த கண்களையும் வாள்போலும் பற்களையுமுடைய சிங்கம் போல எதிர்த்து; கிடைத்தனர் சீற்றமிக்கார்=கிட்டினார் கோபத்தில்மிக்க எறிபத்தநாயனார்.—எ-று. (உஉ)

கண்டவ ரிதுமுன்பண்ண னுரித்தவக் களிறேபோலும்
அண்டரு மண்ணுளோருந் தடுக்கினு மடர்த்துச்சிந்தத்
துண்டித்துக் கொல்வேனென்று சுடர்மழு வலத்தில்வீசிக்
கொண்டெழுந் தன்பர்சென்று காலினாற் குலுங்கப்பாய்ந்தார்.

(இ-ள்.) கண்டவரிதுமுன் பண்ணவுரித்த வக்களிறேபோலும்=அவ்யானையைக்கண்ட எறிபத்தநாயனார் இவ்யானைமுன்னே சிவபிரான் உரித்தயானைதானோ (ஆனால் இதனை); அண்டரு மண்ணுளோருந் தடுக்கினும் = விண்ணுலகத்தாரும் மண்ணுலகத்தாரும் வந்து தடுத்தாலும்; அடர்த்துச்சிந்தத் துண்டித்துக்கொல்வேனென்று = கோபித்து இரத்தம் சிதறும்படி வெட்டிக்கொன்று விடுவேனென்று; சுடர்மழு வலத்தில்வீசிக் கொண்டெழுந் தன்பர்சென்று = ஒளியினையுடைய மழுவாயுதத்தை வலக்கையில் வீசிக்கொண்டு தாவி எறிபத்தநாயனார் போய்; காலினாற் குலுங்கப்பாய்ந்தார்=அவ்யானை குலுங்கும்படி காலினாலேபாய்ந்துதைத்தார்.—எ-று. (உ௫)

பாய்தலு மிசைகொண்டுய்க்கும் பாகரைக் கொண்டுசீறிக்
காய்தழ லுமிழ்கண்வேழந் திரிந்துமேற் கதுவவச்சந்
தாய்தலை யன்பின்முன்பு நிற்குமே தகைந்துபாய்ந்து
தோய்தனித் தடக்கைவீழ மழுவினாற் றுணித்தார்தொண்டர்.

(இ-ள்.) பாய்தலுமிசைகொண்டுய்க்கும் = பாய்ந்தவுடனேதன்மேலேறிக்கொண்டு செலுத்துகின்ற; பாகரைக்கொண்டுசீறி = பாகர்களைத் தன்னிடத்துவைத்துக்கொண்டு கோபித்து; காய்தழலுமிழ்கண்வேழம் = எரிகின்ற கோபத்தீயைக் கக்குங் கண்களையுடைய யானையானது; திரிந்துமேற்கதுவ = மாறுபட்டு அவரிடத்துக்கோபித்துச்செல்ல; அச்சந்தாய்தலையன்பின்முன்புநிற்குமே= அச்சமானது தாய்ப்பசுகன்றினிடத்துவைத்த தலையன்புபோலும் இந்நாயனாரது அடியார் பத்திக்குமுன் நிற்குமோ நில்லாது (அதனால்); தகைந்துபாய்ந்து=அவ்யானையைத் தடுத்துப்பாய்ந்து; தோய்தனித்தடக்கைவீழ=நிலத்தில்தாழ்ந்த பெரிய துதிக்கையானது விழும்படி; மழுவினாற்றுணித்தார் தொண்டர் = மழுப்படையினால் எறிபத்தநாயனார்வெட்டி வீழ்த்தினார்.—எ-று (உ௬)

மக்கட்டாயன்புதன் பயன்கருதியும் நிற்கும் ஆதலின் கன்றுகருதிய தாய்ப்பசு அன்பு அவ்வாறின்றிக்கன்றின் பயன்கருதியே நிற்றலில் அச்சிறப்புநோக்கிக்கன்றைக் கருதியதாயென் றுரைக்கப்பட்டது. கன்றைநினைந்தெழுதாயென வந்த கணக்கதுமாகாதே எனக்கூறியவாறு பற்றியும்அறிக. அவ்வன்பின்மேன்மைதோன்றத் தலையன்பென்றார். இந்நாயனார் அன்பு அடியார்க்குத் துன்பநேரிட்டுழி தன்னுயிர்க்கிறுதிவரினும் அது கருதாது அதனைநீக்குதலில் தாயன்போடுவமையாயிற்று. அத்தலையன்பின் முன்அச்சம் நில்லாமையின் நிற்குமே என்றார். இதனால் உயிர்க்கிறுதி விளைக்கத்தக்க யானையினிடத்து ஒரு சிறிதும் அச்சமின்றிச்சென்று அவ்யானை அடியார்க்குச்செய்த இடர்காரணமாய்த் தன்னை இழந்துநின்று இந்நாயனார் அவ்யானையைத் தடிந்தபத்திவலிகாண்க.

கையினைத் துணித்தபோது கடலெனக் கதறிவீழ்ந்து
மைவரை யனையவேழம் புரண்டிட மருங்குவந்த
வெய்யகோற் பாகர்மூவர் மிசைகொண்டா ரிருவராக
ஐவரைக் கொன்றுநின்றா ரருவரை யனையதோளார்.




சிவகாமியாண்டார் கருவூர்ப்பெருமானுக்குப் புட்பங்கொண்டேகுங்கால் புகழ்ச்சோழர்பட்டத்தியானை பூங்கூடையைப்பறித்து மிதித்தலும் சிவகாமியாண்டார் மனம்வருந்த எறிபத்தர்மழுவாளுடன்வெளிப்பட்டியானையையும் பாகர்கள் நால்வரையுந் துணித்தது.

(இ-ள்.) கையினைத் துணித்தபோது = துதிக்கையை வெட்டியபொழுது; கடலெனக் கதறிவீழ்ந்து = கடல் முழங்கினாற்போலக் கதறி நிலத்தில்விழுந்து; மைவரையனைய வேழம்புரண்டிட = கரியமலைபோலும் அந்தயானையானது புரள; மருங்குவந்த வெய்யகோற் பாகர்மூவர் = அருகில்வந்த கொடியகுத்துக்கோற்காரர்மூவரும்; மிசைகொண்டாரிருவராக = அந்த யானையின்மேலிருந்தபாகர் இருவருமாக; ஐவரைக்கொன்று நின்றார் = ஐவரையும் துணித்துநின்றார்; அருவரையனையதோளார் = அரியமலைபோலும் தோள்களையுடைய எறிபத்தநாயனார்.—எ-று. (உரு)

வெட்டுண்டு பட்டுவீழ்ந்தா ரொழியவே றுள்ளாரோடி
மட்டவிழ் தொங்கன்மன்னன் வாயிற்கா வலரைநோக்கிப்
பட்டவர்த் தனமும்பட்டுப் பாகரும் பட்டாரென்று
முட்டநீர் கடிதுபுக்கு முதல்வனுக் குரையுமென்றார்.

(இ-ள்.) வெட்டுண்டுபட்டு வீழ்ந்தாரொழிய = இந்நாயனாரால் துணிக்கப்பட்டு இறந்துவிழுந்த ஐவரல்லாமல்; வேறுள்ளாரோடி = தப்பிய வேறுபாகர்கள் ஓடிச்சென்று; மட்டவிழ்தொங்கன்மன்னன் = தேன்பிலிற்றிய ஆத்திமாலையை யணிந்த புகழ்ச்சோழ நாயனாரது; வாயிற்காவலரைநோக்கி = அரண்மனைவாயிலாளர்களைப்பார்த்து; பட்டவர்த்தனமும்பட்டு = பட்டத்து யானையும் இறந்து; பாகரும்பட்டாரென்று = அதனைச்செலுத்தும் பாகரும்இறந்தார்களென்று; முட்டநீர்கடிதுபுக்கு = நீவிர்சேர விரைவிற்சென்று; முதல்வனுக்குரையுமென்றார் = அரசனுக்குத் தெரிவிப்பீராகளென்று சொன்னார்கள்.—எ-று. (உசு)

மற்றவர் மொழிந்தமாற்ற மணிக்கடை காப்போர்கேளாக்
கொற்றவன் றன்பாலெய்திக் குரைகழல் பணிந்துபோற்றிப்
பற்றலரி லாதாய்நின்பொற் பட்டமால் யானைவீழச்
செற்றனர் சிலராமென்று செப்பினர் பாகரென்றார்.

(இ-ள்.) அவர்மொழிந்தமாற்றம் = அப்பாகர்கள் கூறியவார்த்தையை; மணிக்கடைகாப்போர்கேளா = மணிகளழுத்தியவாயிலைக் காக்கின்றவர்கள் கேட்டு; கொற்றவன்றன்பாலெய்தி = அப்புகழ்ச்சோழநாயனாரிடத்துச்சென்று; குரைகழல் பணிந்துபோற்றி = ஒலிக்கின்ற வீரக்கழலை யணிந்த திருவடிகளில் வணங்கித்துதித்து; பற்றலரிலாதாய் = மாற்றாரில்லாதவரே; நின்பொற்பட்டமால் யானைவீழ = உம்முடைய பொற்பட்டம் வீக்கிய பெரியயானையானது விழும்படி; செற்றனர் சிலராமென்று = சிலர்கொன்றார்களென்று; செப்பினர்பாகரென்றார் = பாகர்கள் வாயிலில்வந்து சொன்னார்களெனக்கூறினர்கள்.—எ-று. (உஎ)

மற்று-அசை.

சிவகாமியாண்டார் எறிபத்தநாயனாரென்னும் இருவரையுஞ்சேர்த்துச்சிலரென்றார்.

வளவனுங் கேட்டபோதின் மாறின்றி மண்காக்கின்ற
கிளர்மணித் தோளலங்கற் சுரும்பினங் கிளர்ந்துபொங்க
அளவில் சீற்றத்தினாலே யார்செய்தா ரென்றுகேளான்
இளவரி யேறுபோல வெழின்மணி வாயினீங்க.

(இ-ள்.) வளவனுங் கேட்டபோதில் = புகழ்ச்சோழநாயனாரும் அதைக்கேட்ட அளவில்; மாறின்றி மண்காக்கின்ற = பகைவரில்லாமல்நிலவுலகத்தை அரசாட்சி செய்கின்ற; கிளர்மணித்தோளலங்கல் = (போரைவிரும்பி) ஓங்குகின்ற அழகிய புயத்தின்கண் உள்ளமாலையில்; சுரும்பினங்கிளர்ந்துபொங்க = வண்டுகள் கிளம்பி ஒலிக்க; அளவில் சீற்றத்தினாலே = அடங்காதகோபத்தினாலே; யார் செய்தாரென்று கேளான் = இதுயாவர்செய்தவரென்று (வாயிலாளரைக்) கேளாதவனாய்; இளவரியேறுபோல = இளையசிங்கேறுபோல; எழின்மணிவாயினீங்க = அழகினையுடைத்தாகிய இரத்தினங்களழுத்திய அரண்மனைவாயிலினின்றும் வெளிப்பட்டுவர. — எ-று. (உ௮)

தந்திரத் தலைவர்தாமுந் தலைவன்ற னிலைமைகண்டு
வந்துறச் சேனைதன்னை வல்விரைந் தெழமுன்சாற்ற
அந்தரத் தகலமெல்லா மணிதுகிற்ப தாகைதூர்ப்ப
எந்திரத் தேருமாவு மிடையிடை களிறுமாகி.

(இ-ள்.) தந்திரத்தலைவர்தாமும் = சேனைத்தலைவர்களும்; தலைவன்றனிலைமைகண்டுவந்து = புகழ்ச்சோழநாயனாரது (போர்கருதிச்செல்லும்) நிலைமையை நோக்கிவந்து; உறச்சேனைதன்னை = திரளாகச்சேனைகளை; வல்விரைந்தெழமுன்சாற்ற = விரைவிலெழும்படி முன்னே பறையறைவிக்க; அந்தரத்தகலமெல்லாம் = ஆகாயத்தின்பரந்த இடங்களெல்லாம்; அணிதுகிற்பதாகைதூர்ப்ப = அழகிய துகிற்கொடிகள் மூடவும்; எந்திரத்தேருமாவும் = எந்திரப்பொறிகளை அமைத்திருக்கும் தேரும் குதிரையும்; இடையிடைகளிறுமாகி = இடைஇடையேயானைகளும் ஆகக்கூடி. — எ-று. (உ௯)

வில்லொடு வேல்வாட்டண்டு பிண்டிபா லங்கண்மிக்க
வல்லெழு முசலநேமி மழுக்கழுக் கடைமுன்னான
பல்படைக் கலன்கள்பற்றிப் பைங்கழல் வரிந்தவன்கண்
எல்லையில் படைஞர்கொட் புற்றெழுந்தன ரெங்குமெங்கும்.

(இ-ள்.) வில்லொடு வேல்வாட்டண்டு = வில்லோடுவேலும் வாளும் தண்டமும்; பிண்டிபாலங்கள் = பீலித்தண்டங்களும்; மிக்கவல்லெழுமுசலநேமி = மிகுந்த வலிய இருப்புலக்கைகளும் சக்கரமும்; மழுக்கழுக்கடைமுன்னான = மழுவாயுதமும் எறியீட்டியும் முதலான; பல்படைக்கலன்கள்பற்றி = பலபடைக்கலங்களைப்பற்றி; பைங்கழல் வரிந்த = பசியபொன்னாலாகிய வீரக்கழலைக்கட்டிய; வன்கண் எல்லையில் படைஞர் = வன்கண்மையையுடைய எண்ணிறந்த படைவீரர்கள்; கொட்புற்றெழுந்தன ரெங்குமெங்கும் = எங்கெங்கும் குதித்தெழுந்தார்கள். — எ-று. (௩௦)

உச்சாகத்தோடு குதித்துவருதலில் கொட்புற்றெழுந்தனரென்றார்.

இம்மூன்றுங் குளகம்.

சங்கொடு தாரைகாளந் தழங்கொலி முழங்குபேரி
வெங்குரற் பம்பைகண்டை வியன்றுடி திமிலைதட்டி
பொங்கொலிச் சின்னமெல்லாம் பொருபடை மிடைந்தபொற்பின்
மங்குல்வான் கிளர்ச்சிநாண மருங்கெழுந் தியம்பிமல்க.

(இ-ள். சங்கொடு தாரைகாளம் தழங்கொலி=சங்குடன்தாரையும் எக்காளமும் ஆகிய இவைகள் மிக்கொலிக்கும் ஒலியோடு; முழங்குபேரிவெங்குரற் பம்பைகண்டை=முழங்குகின்ற பேரிகையும் வெவ்விதாகிய ஒலியையுடைய பம்பைப்பறையும் கண்டையும்; வியன்றுடி திமிலைதட்டி=பெருமையினையுடைத்தாகிய உடுக்கும் திமிலைப்பறையும் ஆகிய இவைகளை யடித்தலால்; பொங்கொலிச்சின்னமெல்லாம்=உண்டாகின்ற ஒலித்தொகுதிகளெல்லாம்; பொருபடைமிடைந்தபொற்பின்=போர்செய்கின்ற சேனைகள் நெருங்கிய தோற்றத்தோடு; மங்குல்வான்கிளர்ச்சிநாண=வானின்கண் சஞ்சரிக்கும் முகிற்றொகுதிகளினது இடித்தெழும் செலவுநாணும்படி; மருங்கெழுந்தியம்பிமல்க=(அரசனது) நாற்புறமும் கூடி ஒலித்து நெருங்க.—எ-று. (௩க)

சின்னமெல்லாம் பொற்பின் கிளர்ச்சிநாண இயம்பி மல்கஎன இயையும்.

தூரியத்து வைப்புமுட்டுஞ் சுடர்ப்படை யொலிப்புமாவின்
றார்மணி யிசைப்பும்வேழ முழக்கமுந் தடந்தேர்ச்சீரும்
வீரர்தஞ் செருக்கினார்ப்பு மிக்கெழுந் தொன்றுமெல்லைக்
காருடன் கடைநாட்பொங்குங் கடலெனக் கலித்தவன்றே.

(இ-ள்.) தூரியத்துவைப்பும்=வாத்தியங்களினுடையஒலியும்; முட்டுஞ் சுடர்ப்படை யொலிப்பும்=நெருங்கிய ஒளிவீசுகின்ற ஆயுதங்கள் ஒன்றோடொன்று உரோஞ்சுதலினாலாய ஒலியும்; மாவின்றார்மணியிசைப்பும்=குதிரைக்கழுத்திலணியும் கிண்கிணிமாலையின் ஒலியும்; வேழமுழக்கமும்=யானைகளின் பிளிறொலியும்; தடந்தேர்ச்சீரும்=விசாலமாகிய தேர்செல்லும் சிறப்பாலாகிய ஒலியும்; வீரர்தஞ்செருக்கினார்ப்பும்=படைவீரர்களது செருக்கினாலுண்டாகும் ஆரவாரமும்; மிக்கெழுந்தொன்றுமெல்லை=மேற்பட்டு எழுந்து ஒன்றாய்ச் சேர்ந்தபொழுது; காருடன்கடைநாட்பொங்குங் கடலெனக்கலித்த = மேகத்தோடு கற்பாந்தத்திற் பெருகி முழங்குகின்ற கடலைப்போல ஒலித்த.—எ-று. (௩உ)

அன்று. ஏ - அசை.

செருக்கு=வீரத்தாலாயகளிப்பு. கற்பாந்தவெள்ளம் வருங்கால் ஏழுமுகில்களும் ஒன்றாய்வருதலின் காருடன் கடைநாட்பொங்குங்கடலென என்றார்.

பண்ணுறு முறுப்புநான்கிற் பரந்தெழு சேனையெல்லா
மண்ணிடை யிறுகான்மேன்மேல் வந்தெழுந்ததுபோற் றோன்றத்
தண்ணளிக் கவிகைமன்னன் றானைபின் றொடரத்தானோர்
அண்ணலம் புரவிமேற்கொண் டரசமா வீதிசென்றான்.

(இ-ள்.) பண்ணுறுமுறுப்புநான்கில் = பண்ணுறுத்தப்பட்டு நால்வகையுறுப்போடு; பரந்தெழுசேனையெல்லாம்=பரவியெழுகின்ற சேனைகள் எல்லாம்; மண்ணிடையிறுகால் = நிலவுலகத்தில் ஊழிக்காற்றானது; மேன்மேல்வந்தெழுந்ததுபோற்றோன்ற = மிக்குதித்தெழுந்தாற் போலத்தோன்ற; தண்ணளிக்கவிகைமன்னன்=உயிர்கண்மாட்டுவைத்த தண்ணளியாகிய குடையையுடைய புக

ழ்ச் சோழநாயனூர் ; தானைபின்றொடர=சேனைகள் தம்மைப் பின்னேதொடர்ந்துசெல்ல ; தானோரண்ணலம் புரவிமேற்கொண்டு = தான் ஒரு பெருமையினையுடைத்தாகிய அழகிய குதிரையின்மேல் ஏறிக்கொண்டு ; அரசமாவீதிசென்றான்=பெரிய அரசவீதியிற் போனார்.—எ-று. (ருரு)

கடுவிசை முடுகிப்பொங்கிக் களிற்றொடும் பாகர்வீழ்ந்த
படுகளங் குறுகச்சென்றான் பகைப்புலத் தவரைக்காணான்
விடுசுடர் மழுவொன்றேந்தி வேறிரு தடக்கைத்தாய
அடுகளி றென்னநின்ற வன்பரை முன்புகண்டான்.

(இ-ள்.) கடுவிசைமுடுகிப்பொங்கி=(புகழ்ச்சோழநாயனூர்) கடியவேகத்தோடு சென்று கோபித்து ; களிற்றொடும் பாகர்வீழ்ந்த=யானையோடு பாகர்கள் இறந்துகிடக்கின்ற ; படுகளங்குறுகச்சென்றான் =போர்க்களத்துக்கு சமீபமாகப் போனார் ; பகைப்புலத்தவரைக்காணான் = மாற்றார்களொருவரையுங் காணாதவராய் ; விடுசுடர்மழுவொன்றேந்தி = ஒளியைவீசுகின்ற மழுப்படை ஒன்றைக் கையிற்றாங்கிக்கொண்டு ; வேறிருதடக்கைத்தாய=தனியே இரண்டு பெரியகைகளையுடைய ; அடுகளிறென்னநின்ற=கொலைத்தொழில்செய்யும் யானையை ஒத்துநின்ற ; அன்பரை முன்புகண்டான் = எறிபத்தநாயனாரை முன்னேபார்த்தார்.—எ-று. (ருசு)

பொன்றவ ழருவிக்குன்ற மெனப்புரள் களிற்றின்முன்பு
நின்றவர் மன்றுளென்று நிருத்தமே பயிலும்வெள்ளிக்
குன்றவ ரடியரானார் கொன்றவ ரிவரென்றோரான்
வென்றவ ரியாவரென்றான் வெடிபட முழங்குஞ்சொல்லான்.

(இ-ள்.) பொன்றவழருவிக்குன்றமென=பொற்பொடிகள் சேர்ந்து ஒழுகும் அருவியினையுடைய மலைபோல ; புரள்களிற்றின் முன்புநின்றவர்=புரண்டுகொண்டிருக்கும் யானைக்குமுன்னே நிற்கின்ற இவர் ; மன்றுளென்று நிருத்தமே பயிலும்=கனகசபையின்கண் எந்நாளும் நிருத்தத்தைச் செய்யும் ; வெள்ளிக்குன்றவரடியரானார்=கயிலைமலைக் கிறைவராகிய சிவபிரானடியவரானார் (அதனால்) ; கொன்றவரிவரென்றோரான்=யானையைக்கொன்றவர் இவரென்று தெளியாமல் ; வென்றவரியாவரென்றான் = யாவர் இவ்யானையைத் துணித்தவரென்று கேட்டார் ; வெடிபடமுழங்குஞ்சொல்லான்=அதிரும்படியாக ஒலிக்கின்ற சொல்லையுடையபுகழ்ச்சோழநாயனார்.—எ-று. (ருஎ)

அரசனங் கருளிச்செய்ய வருகுசென் றணைந்துபாகர்
விரைசெய்தார் மாலையோய்நின் விறற்களிற் றெதிரேநிற்குந்
திரைசெய் நீருலகின்மன்ன ரியாருளார் தீங்குசெய்தார்
பரசுமுன் கொண்டுநின்ற விவரெனப் பணிந்துசொன்னார்.

(இ-ள்.) அரசனங்கருளிச்செய்ய = புகழ்ச்சோழநாயனார் அவ்விடத்து இவ்வாறுகூறியருள ; அருகுசென்றணைந்துபாகர்=சமீபத்தில் பாகர்கள் கிட்டிச்சென்று ; விரைசெய்தார்மாலையோய் = வாசனைகமழ்கின்ற மலர்மாலையையும் முத்துமாலையையும் உடைய அரசனே ; நின்விறற்களிற் றெதிரேநிற்கும்=உம்மு

டைய வெற்றியினையுடைத்தாகிய பட்டவர்த்தனத்தை எதிர்ந்துநிற்கும்; திரைசெய்நீருலகின்மன்னரியாருளார்=அலைவீசுகின்ற கடலாற்சூழப்பட்ட நிலவுலகத்தின்கண்வாழும் அரசர்கள் யாரிருக்கின்றார்கள் ஒருவருமில்லை; தீங்குசெய்தார் பரசுமுன்கொண்டு நின்றவிவரென=அதைக்கொன்றவர் மழுப்படையைக் கையிற்றாங்கிக்கொண்டு முன்னேநின்ற இவர்தானென்று; பணிந்து சொன்னார்=வணங்கிச்சொன்னார்கள்.—எ-று. (௬௫)

குழையணி காதி னானுக் கன்பராங் குணத்தின்மிக்கார்
பிழைபடி னன்றிக்கொல்லார் பிழைத்ததுண் டென்றுட்கொண்டு
மழைமத யானைச்சேனை வரவினை மாற்றிமற்ற
வுழைவயப் புரவிமேனின் றிழிந்தன னுலகமன்னன்.

(இ-ள்.) குழையணிகாதினானுக்கு = சங்கக்குழையை அணிந்த திருச்செவியினையுடைய சிவபிரானுக்கு; அன்பராங்குணத்தின்மிக்கார்=அடியாராகும் குணத்தால் மிக்க இந்நாயனார்; பிழைபடினன்றிக்கொல்லார்=(இவ்யானை) பிழை செய்தாலன்றிக் கொல்லமாட்டார்; பிழைத்ததுண்டென்றுட் கொண்டு = இது அவர்க்குத் தீங்குசெய்ததுண்டென்று தம்முள்ளத்துக் கருதிக்கொண்டு; மழைமதயானைச்சேனை வரவினைமாற்றி=மழைபோலும் மதத்தைச்சொரிகின்ற யானையோடு கூடிய சேனைகளின் செலவைத்தடுத்து; அவ்வுழைவயப்புரவிமேனின்று= தான் ஏறிவந்த பிடருரோமங்களை யுடைய வெற்றியினையுடைத்தாகிய குதிரையினின்றும்; இழிந்தனனுலகமன்னன் = இறங்கினார் உலகத்தையாளும் அரசராகிய புகழ்ச்சோழநாயனார்.—எ-று. மற்று - அசை. (௬௭)

மைத்தடங் குன்றுபோலு மதகளிற் றெதிரேயிந்த
மெய்த்தவர் சென்றபோது வேறொன்று புகுதாவிட்ட
அத்தவ முடையேனானே னம்பல வாணரன்பர்
இத்தனை முனியக்கெட்டே னென்கொலோ பிழையென்றஞ்சி.

(இ-ள்.) மைத்தடங் குன்றுபோலும் = கரிய பெருமையினையுடைத்தாகிய மலைபோலும்; மதகளிற்றெதிரே=மதத்தினையுடைய இவ்யானையின் எதிரே; இந்தமெய்த்தவர்சென்றபோது=இந்த மெய்மையான தவத்தினையுடைய அடியார் போனபோது; வேறொன்றுபுகுதாவிட்ட=வேறோர் தீங்கு அதனால் இவர்க்குச் சம்பவிக்காமல் இருக்கப்பெற்ற; அத்தவமுடையேனானேன்=அவ்வித பெருந்தவத்தையுடையவனாக யான் ஆனேன்; அம்பலவாணரன்பர்=சிவபிரானடியார்; இத்தனைமுனிய=தமக்குநேரிட்ட தீங்குகாரணமாய் இவ்வாறு வெகுளும்படிக்கு; கெட்டேன்என்கொலோ பிழையென்றஞ்சி = கெட்டேனால்நேரிட்ட பிழை யாதோவென்று அச்சமுற்று.—எ-று. (௬௮)

யானைசெய்த பிழையைத் தன்பிழையாகக் கூறுங்கருத்தால் கெட்டேன் பிழை என்கொலோ என்றார் தன்பரிசனத்தாலும் தன்சேனையாலும் வந்த பிழைதனதாதலின். கெட்டேன் என்பது தன்குற்றத்திற்குப் பரிந்து அறிஞர் கூறும் மொழி.

செறிந்தவர் தம்மைநீக்கி யன்பர்முன் றொழுதுசென்றீ
தறிந்திலே னடியேனங்குக் கேட்டதொன் றதுதானிற்க
மறிந்தவிக் களிற்றின்குற்றம் பாகரோ டிதனைமாள
எறிந்ததே போதுமோதா னருள்செய்யு மென்றுநின்றான்.

(இ-ள்.) செறிந்தவர்தம்மைநீக்கி=(புகழ்ச்சோழநாயனார்) தம்மோடு நெருங்கிவரும் மந்திரி பிரதானிகளையும் விலகச்செய்து; அன்பர் முன்றொழுது சென்று=அவ் வெறிபத்தநாயனாருக்கு முன்பாக வணங்கிப்போய்; ஈதறிந்திலேனடியேன் = இவ்யானை தேவரீருக்குக் குற்றஞ்செய்ததென்பதை அறியமாட்டேன்; அங்குக்கேட்டதொன்றதுநிற்க = அங்கு நான் கேள்வியுற்றது மாற்றான் நிகழ்ந்ததென்னும் மற்றொன்றேயாம் அதனால் அதுநிற்க; மறிந்தவிக்களிற்றின்குற்றம்=இறந்த இவ்யானை செய்த குற்றத்திற்குப்; பாகரோடிதனைமாள=பாகரோடு இவ்யானையை இறக்கும்படி; எறிந்ததேபோதுமோ=மழுவாற்றுணித்ததொன்றேபரிகாரமாகவமையுமோ; அருள்செய்யுமென்று நின்றான்=இன்னும்வேறுளதாயில் அதனையும் அருள்செய்யவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்துநின்றார்.—எ-று. தான் இரண்டும் - அசை. (ங௯)

இவ்விரண்டுங்குளகம்.

மன்னவன் றன்னைநோக்கி வானவ ரீசர்நேசர்
சென்னியித் துங்கவேழஞ் சிவகாமி யாண்டார்கொய்து
பன்னகா பரணர்ச்சாத்தக் கொடுவரும் பள்ளித்தாமந்
தன்னைமுன் பறித்துச்சிந்தத் தரைப்படத் துணித்துவீழ்த்தேன்.

(இ-ள்.) வானவரீசர்நேசர்=தேவர்கட்கிறைவராகியசிவபிரானுக்கு அடிமைபூண்டொழுகும் எறிபத்தநாயனார்; மன்னவன்றன்னைநோக்கி = புகழ்ச்சோழநாயனாரைப்பார்த்து; சென்னியித்துங்கவேழம் = சோழனே இந்த உயர்ந்த யானையானது; சிவகாமியாண்டார்கொய்து = சிவகாமியாண்டாரென்னும் அடியாரெடுத்து; பன்னகாபரணர்ச்சாத்தக்கொடுவரும் = சர்ப்பாபரணரான சிவபிரானுக்குச் சாத்தும்படி கொண்டுவந்த; பள்ளித்தாமந் தன்னைமுன்பறித்துச்சிந்த =திருப்பள்ளித்தாமத்திற்குரிய மலர்களைமுன்பறித்து நிலத்திற்சிதற (அதனால்); தரைப்படத்துணித்து வீழ்த்தேன் = இதனை நிலத்தில்விழும்படி வெட்டி விழுத்தினேன்.—எ-று. (சு0)

மாதங்கந் தீங்குசெய்ய வருபரிக் காரர்தாமு
மீதங்குக் கடவுவாரும் விலக்கிடா தொழிந்துபட்டார்
ஈதிங்கு நிகழ்ந்ததென்றா ரெறிபத்த ரென்னவஞ்சிப்
பாதங்கண் முறையாற்றாழ்ந்து பருவரைத் தடந்தோண்மன்னன்.

(இ-ள்.) மாதங்கந்தீங்குசெய்ய=இவ்யானையானது அத்திருப்பூங்கூடையைப்பறித்து அம்மலர்களைச்சிந்த; வருபரிக்காரர்தாமும் = உடன்செல்லும்குத்துக்கோற்காரரும்; மீதங்குக்கடவுவாரும் = மேலிருந்து அவ்யானையைச்செலு

த்தும்பாகரும்; விலக்கிடாதொழிந்துபட்டார் = விலக்காதொழிந்தகாரணத்தால் அவர்களுந் துணிக்கப்பட்டார்கள்; ஈதிங்குநிகழ்ந்ததென்றார் = இது இவ்விடத்து நடந்தசெய்தியென்று அருளிச்செய்தார்; எறிபத்தரென்னவஞ்சி = இவர் இவ்வூரில்வாழ்ந்திருக்கும் எறிபத்தநாயனாரென்று புகழ்ச்சோழநாயனார் அச்சமுற்று; பாதங் கண்முறையாற்றாழ்ந்து = அவர் திருவடிகளை அட்டாங்க விதியோடுவணங்கி; பருவரைத்தடந்தோண் மன்னன் = பருத்தமலைபோலும் பெரியதோளையுடைய புகழ்ச்சோழநாயனார்.—எ-று. (சக)

அங்கண ரடியார்தம்மைச் செய்தவிவ் வபராதத்துக்
கிங்கிவை தம்மாற்போதா தென்னையுங் கொல்லவேண்டு
மங்கல மழுவாற்கொல்கை வழக்குமன் றிதுவாமென்று
செங்கையி லுடைவாள்வாங்கிக் கொடுத்தனன் றீர்வுநேர்வான்.

(இ-ள்.) அங்கணரடியார்தம்மை = சிவபிரானடியாரை; செய்தவிவ்வபராதத்துக்கு=இவ்யானைசெய்த தீங்குக்குத்தீர்வு; இங்கிவைதம்மாற்போதாது= இங்குபாகரோடு யானையையும் துணித்ததனால் அமையாது; என்னையுங்கொல்லவேண்டும் = அபராதஞ்செய்தற் கேதுவாயிருந்த அடியேனையுங் கொல்லவேண்டும்; மங்கலமழுவாற் கொல்கைவழக்கன்று = மங்கலகரமானதேவரீர் கையில் வைத்திருக்கும் மழுப்படையினாற் கொல்லுதல் முறைமையல்ல; இதுவாமென்று = அதற்கு இதுவேயாமென்று; செங்கையிலுடைவாள்வாங்கி=சிவந்ததன் திருக்கரத்தினால் மருங்கிற்கட்டிய குற்றுடைவாளை எடுத்து; கொடுத்தனன் தீர்வுநேர்வான் = தன்பிழைக்குத் தீர்வைக்கருதினவராய்க் கொடுத்தார் புகழ்ச்சோழநாயனார்.—எ-று. உம்மை - அசை. (சஉ)

இவ்விரண்டுங் குளகம்.

வெந்தழற் சுடர்வாணீட்டும் வேந்தனை நோக்கிக்கெட்டேன்
அந்தமில் புகழானன்புக் களவின்மை கண்டேனென்று
தந்தவாள் வாங்கமாட்டார் தன்னைத்தான் றுறக்குமென்று
சிந்தையா லுணர்வுற்றஞ்சி வாங்கினார் தீங்குதீர்ப்பார்.

(இ-ள்.) வெந்தழற் சுடர்வாணீட்டும் = கொடிய தீப்போலும் ஒளிவீசுகின்ற உடைவாளையெடுத்துத் தன்கையிற்கொடுக்கும்; வேந்தனைநோக்கி = புகழ்ச்சோழநாயனாரைப்பார்த்து; கெட்டேன் அந்தமில்புகழானன்புக்கு = கெட்டயான் அளவுபடாத புகழ்ச்சோழநாயனாருடைய அன்புக்கு; அளவின்மைகண்டேனென்று=எல்லையில்லாமையைக் கண்டேனென்று; தந்தவாள் வாங்கமாட்டார் = அவர்கொடுத்த உடைவாளை வாங்காதவராய்; தன்னைத்தான் றுறக்குமென்று = வாங்காதொழியில் தன்னுயிரைத் தானேநீக்கிக் கொள்ளுவாரென்று; சிந்தையாலுணர்வுற்றஞ்சி = தமது உள்ளத்தாலுணர்ந்து அதுகாரணமாய் அச்சமுற்று; வாங்கினார் தீங்குதீர்ப்பார் = அத்தீங்கைநீக்குங் கருத்துடையராய் அதனைவாங்கினார்.—எ-று. (சங)

வாங்கிய தொண்டர்முன்பு மன்னனார் தொழுதுநின்றே
ஈங்கெனை வாளினாற்கொன் றென்பிழை தீர்க்கவேண்டி
ஓங்கிய வுதவிசெய்யப் பெற்றன னிவர்பாலென்றே
ஆங்கவ ருரைப்பக்கண்ட வெறிபத்த ரதனுக்கஞ்சி.

(இ-ள்.) வாங்கியதொண்டர்முன்பு=தான்கொடுத்த உடைவாளைத்தங்கரத்தில் வாங்கிக்கொண்ட எறிபத்தநாயனார்முன்னர்; மன்னனார்தொழுதுநின்று= புகழ்ச்சோழநாயனார் வணங்கிநின்று; ஈங்கெனைவாளினாற்கொன்று = இங்கே அடியேனை இவ்வுடைவாளாற்கொன்று; என்பிழைதீர்க்கவேண்டி = யான்செய்ததீங்கைத்தீர்க்கும்படிகருதி ;ஓங்கியவுதவிசெய்யப்பெற்றனனிவர்பாலென்று= மிக்க உதவியைச்செய்யும்படிக்கு அடியேன் இந்நாயனாராற் பெற்றேனென்று ; ஆங்கவருரைப்பக்கண்ட = அப்புகழ்ச்சோழநாயனார் கூற அந்நாயனார் நிலைமையைக்கண்ட ; எறிபத்தரதனுக்கஞ்சி = எறிபத்தநாயனார் அவரதுபத்தி நிலைமைக்கு அச்சமுற்று.—எ-று. ஏ - இரண்டும் அசை. (சச)

வன்பெருங் களிறுபாகர் மடியவு முடைவாளைத்தந்
தென்பெரும் பிழையினாலே யென்னையுங் கொல்லுமென்னும்
அன்பனார் தம்மைத்தீங்கு நினைத்தன னென்றுகொண்டு
முன்பென துயிர்செகுத்து முடிப்பதே முடிவென்றெண்ணி.

(இ-ள்.) வன்பெருங்களிறுபாகர் = வலியபெருமையினை யுடைத்தாகிய பட்டத்துயானையும் பாகர்களும்; மடியவு முடைவாளைத்தந்து=இறக்கவும் (அதனால்) மனவருத்தமடையாது தன்னுடைய உடைவாளை என்கையிற்கொடுத்து ; என் பெரும்பிழையினாலே = என்னுடைய பெரியகுற்றத்தினால்; என்னையுங் கொல்லுமென்னும்=அடியேனையுங் கொல்லவேண்டுமென்று கூறும் ; அன்பனார் தம்மை=பேரன்பினையுடைய இவரை ; தீங்குநினைத்தன னென்றுகொண்டு=குற்றமுடையாரெனக் கருதினேனென்று தம்முள்ளத்திற் குறித்து ; முன்பெனதுயிர் செகுத்து = முன்னே எனதுயிரை உடைவாளாற்குத்தி ; முடிப்பதே முடிவென்றெண்ணி = இறக்கச்செய்வதே அப்பிழைக்குத்தீர்வாக இருக்கின்றதென்று கருதி.—எ-று. (சரு)

தீங்குநினைத்தனனென்றது. இவ்வரசன்நீதியைமுறையேநடாத்தும்இயல்புடைய னல்லனாதலின் இவ்வாறு நிகழ்ந்ததெனமுன் இழிவாகத் தான்கருதியதை - யானைசெய்தபிழைக்கு யானையோடு பாகரைவீழத் துணித்தது அமைவுடைத்தாகவும் அதனோடொழியாது என்பிழைக்கு எனனையுந் துணித்தல்வேண்டுமெனக்கூறும் இவ்வன்பரைத் தீங்குகருதிய என்பெருங்குற்றத்திற்கு என்னுயிரிறக்க விரைவிற்றண்டித்தலே முறையெனக் கொண்டகருத்தால் முன்பெனதுயிர் செகுத்து முடிப்பதே முடிவென்றாரென்க.

புரிந்தவர் கொடுத்தவாளை யன்பர்தங் கழுத்திற்பூட்டி
அரிந்திட லுற்றபோதி லரசனும் பெரியோர்செய்கை
இருந்தவா றிதுவென்கெட்டே னென்றெதிர் கடிதிற்சென்று
பெருந்தடந் தோளாற்கூடிப் பிடித்தனன் வாளுங்கையும்.

(௫௬)




புகழ்ச்சோழர் சேனையுடன் நாயனார்முன்வந்து நிகழ்ந்ததையறிந்து அக்குற்றத்திற்குப்பரிகாரம்போதாது தன்னையுந் துணிக்கவேண்டுமென்று உடைவாளைக்கொடுக்க இவர்பத்தியையறிந்து தன்னுடலைத் துணிக்கச்சோழர்தடுக்க வசரீரியிளம்ப யானைபாகர்களைவர் உயிர்பெறப்பூங்கூடையில் புட்பநிரம்ப விதனைக்கண்ட திசயித்துநாயனார் வேண்டிக்கொண்டபடி சோழர்யானைமீதுசென்றது.

(இ-ள்.) புரிந்தவர் கொடுத்தவாளை = விரும்பி அப்புகழ்ச்சோழநாயனார் கொடுத்த உடைவாளை; அன்பர்தங் கழுத்திற்பூட்டி = எறிபத்தநாயனார் தம்முடைய கழுத்திலேசேர்த்து; அரிந்திட லுற்றபோதில் = அறுக்கத்தொடங்கும் பொழுது; அரசனும் பெரியோர்செய்கை இருந்தவாறிதுவென் கெட்டேனென்று = புகழ்ச்சோழநாயனாரும் இப்பெரியோருடையசெய்கை இவ்வாறிருந்தது என்னுயிற்று கெட்டேனென்றுகூறி இரங்கி; எதிர்கடிதிற்சென்று = அவரெதிரில்விரைந்துபோய்; பெருந்தடந்தோளால் = விசாலமான பெரிய கைகளினுல்; கூடிப்பிடித்தனன் வாளுங்கையும் = தொடர்ந்து (அவர் கருதியவாறு செய்யாது) வாளையும் கையையும் தடுத்துப்பிடித்தார்.—எ-று. (சகூ)

இம்மூன்றுங் குளகம்.

வளவனர் விடாதுபற்ற மாதவர் வருந்திநிற்ப
அளவிலாப் பரிவில்வந்த விடுக்கணை யகற்றவேண்டிக்
களமணி களத்துச்செய்ய கண்ணுத லருளால்வாக்குக்
கிளரொளி விசும்பின்மேல்வந் தெழுந்தது பலருங்கேட்ப.

(இ-ள்.) வளவனர் விடாதுபற்ற = புகழ்ச்சோழநாயனார் கையைவிடாமற்பிடித்துக்கொள்ள; மாதவர் வருந்திநிற்ப = பெரிய தவத்தையுடைய எறிபத்தநாயனார் அதனுல் வருத்தமுற்றுநிற்ப; அளவிலாப் பரிவில்வந்த = அளவில்லாத அன்பினுல் இருவரிடத்தும் நிகழ்ந்த; இடுக்கணை யகற்றவேண்டி = துன்பத்தை நீக்கும்படியாகத்தம் திருவுள்ளத்துக்கருதி; களமணிகளத்து = விடத்தைத்தரித்தகண்டத்தையும்; செய்ய கண்ணுதலருளால் = சிவந்த நெற்றிக்கண்ணையும் உடைய சிவபிரான் திருவருளினுல்; வாக்குக்கிளரொளி விசும்பின்மேல் = ஓர் அசரீரிவாக்கானது விளங்குகின்ற ஒளியினையுடைய ஆகாயத்தில்; வந்தெழுந்ததுபலருங்கேட்ப = யாவருங்கேட்கும்படி உதித்தெழுந்தது.—எ-று. (சஎ)

களமென்பது கறுப்பு. அது நஞ்சுக்குப் பண்பாகுபெயர் ஆயிற்று.

தொழுந்தகை யன்பின்மிக்கீர் தொண்டினை மண்மேற்காட்டச்
செழுந்திரு மலரையின்று சினக்கரி சிந்தத்திங்கட்
கொழுந்தணி வேணிக்கூத்த ரருளினுற் கூடிற்றென்றங்
கெழுந்தது பாகரோடு மியானையு மெழுந்ததன்றே.

(இ-ள்.) தொழுந்தகை யன்பின்மீக்கீர் = (அவ்வாக்கு எவ்வாறெழுந்ததெனில்) யாவரும் தொழத்தக்க மேன்மையினையுடைய அன்பாற்சிறந்தவர்களே; தொண்டினை மண்மேற்காட்ட = உம்முடைய தொண்டின் பெருமையை உலகத்தார்க்குக் காட்டும்படி; செழுந்திருமலரை = செழுமையான திருப்பள்ளித்தாமத்திற்குரியமலரை; இன்று சினக்கரிசிந்த = இன்றைக்கு இந்த கோபத்தினையுடைய யானையானது சிதறும்படி; திங்கட்கொழுந்தணிவேணிக்கூத்தர் = இளம்பிறையை அணிந்த சடைமுடியையுடைய சிவபிரான்; அருளினுற் கூடிற்றென்று = திருவருளால் நேர்ந்ததென்று; அங்கெழுந்தது = அவ்விடத்துதித்தது (அப்பொ

மூசு) ; பாகரோடு மியானையு மெழுந்தது=பாகர்களுடன் யானையும் உயிர்பெற் றெழுந்தது.—எ-று. அன்று - ஏ-அசை (சஅ)

பாகரோடும் என்ற உம்மை எதிரதுதழீஇயது. முற்றும்மையுமாம். யானை யும் என்ற உம்மை உயர்வு சிறப்பு.

ஈரவே பூட்டும்வாளை விட்டெறி பத்தர்தாமு
நேரியர் பெருமான்றாண்மேல் விழுந்தனர் நிருபர்கோனும்
போர்வடி வாளைப்போக வெறிந்தவர் கழல்கள்போற்றிப்
பார்மிசைப் பணிந்தான்விண்ணோர் பணிமலர் மாரிதூர்த்தார்

(இ-ள்.) ஈரவேபூட்டும் வாளைவிட்டு = தன் ஊட்டியை அறுக்கக்கருதி யேபூட்டிய உடைவாளை விடுத்து ; எறிபத்தர்தாமும்=எறிபத்தநாயனாரும்; நேரி யர்பெருமான் றாண்மேல் விழுந்தனர் = சோழர்களுக்குட்சிறந்த புகழ்ச்சோழ நாயனாருடைய திருவடிகளில் விழுந்தார் ; நிருபர்கோனும் போர்வடிவாளைப் போகவெறிந்து = அரசருட்சிறந்த புகழ்ச்சோழநாயனாரும் தான் அவர் கையி னின்றும்பறித்த போர்செய்தற்குரிய உடைவாளைத் தூரத்திற் போகும்படியாக எறிந்து ; அவர் கழல்கள்போற்றி=அந்த எறிபத்தநாயனாருடைய திருவடிகளைத் துதித்து; பார்மிசைப்பணிந்தான்=நிலமுறும்படி சாட்டாங்கமாய் வணங்கினார் ; விண்ணோர்பனி மலர்மாரிதூர்த்தார் = அதைக்கண்ட தேவர்கள் குளிர்ந்த மலர் மழையைப் பொழிந்தார்கள்.—எ-று. (சகூ)

இருவரு மெழுந்துவானி லெழுந்தபே ரொலியைப்போற்ற
அருமறைப் பொருளாயுள்ளா ரணிகொள்பூக் கூடைதன்னின்
மருவிய பள்ளித்தாம நிறைந்திட வருளமற்றைத்
திருவருள் கண்டுவாழ்ந்து சிவகாமி யாருநின்றார்-

(இ-ள்.) இருவருமெழுந்து = எறிபத்தநாயனாரும் புகழ்ச்சோழ நாயனா ரும் ஒருவரையொருவர் வணங்கியெழுந்துநின்று ; வானிலெழுந்த பேரொலியைப் போற்ற = ஆகாயத்தின்கண் எழுந்தஅசரீரிவாக்கைத் துதிக்க ; அருமறைப்பொ ருளாயுள்ளார் = அரியவேதத்தின்பொருளாயுள்ள சிவபிரான் ; அணிகொள்பூக் கூடைதன்னில்=அழகியதிருப்பூங்கூடையில்; மருவியபள்ளித்தாமநிறைந்திடவ ருள = சேர்ந்ததிருப்பள்ளித் தாமத்துக்குரியமலர்கள்நிறையும்படி அருளிச்செய் ய ; அத்திருவருள்கண்டுவாழ்ந்து = அவ்வாறான சிவபிரான் திருவருளைக்கண்டு அதனால் ஆனந்தவாழ்வடைந்து ; சிவகாமியாருநின்றார் = சிவகாமியாண்டாரெ ன்னும் மறையவரும் அங்குநின்றருளினார்.—எ-று. மற்று - அசை (ருo)

மட்டவி ழலங்கல்வென்றி மன்னவர் பெருமான்முன்னர்
உட்டரு களிப்பினோடு முறங்கிமீ தெழுந்ததொத்து
முட்டவெங் கடங்கள்பாய்ந்து முகிலென முழங்கிப்பொங்கும்
பட்டவர்த் தனத்தைக்கொண்டு பாகரு மணையவந்தார்.

(இ-ள்.) மட்டவிழலங்கல் = வாசனைவிண்டு அலர்ந்த ஆத்திமாலையை அணிந்த; வென்றி மன்னவர் பெருமான் முன்னர்=வெற்றியினையுடைய அரசர்களுக்கு அரசராகிய புகழ்ச்சோழ நாயனாருக்கு முன்பு; உட்டரு களிப்பினோடும் =தம் உள்ளத்தில் உண்டாகிய மகிழ்ச்சியோடும்; உறங்கிமீ தெழுந்ததொத்து= நித்திரைசெய்து பின் எழுந்தாற்போல; மூட்டவெங் கடங்கள் பாய்ந்து=நாற்புறமும் நிறையும்படியாகக்கொடிய மதநீரைச்சொரிந்து; முகிலென முழங்கிப் பொங்கும் = மேகம் முழங்கினாற்போலப் பிளிறொலிசெய்து களித்துநிற்கும்; பட்டவர்த்தனத்தைக்கொண்டு = பட்டவர்த்தனம் என்னும் பெயரையுடைய யானையை நடத்திக்கொண்டு; பாகருமணையவந்தார் = பாகர்களும் சமீபத்தில் வந்தார்கள்.—எ-று. உம்மை இறந்தது தழீஇயது. (௫௧)

ஆனசீர்த் தொண்டர்கும்பிட் டடியனேன் களிப்பவிந்த
மானவெங் களிற்றினேறி மகிழ்ந்தெழுந் தருளுமென்ன
மேன்மையப் பணிமேற்கொண்டு வணங்கிவெண் குடையினீழல்
யானைமேற் கொண்டுசென்றா ரிவுளிமேற் கொண்டுவந்தார்.

(இ-ள்.) ஆனசீர்த்தொண்டர் கும்பிட்டு = மேன்மைமிக்க சிறப்பினையுடைய எறிபத்த நாயனார் புகழ்ச்சோழ நாயனாரை வணங்கி; அடியனேன் களிப்ப = அடியேன் மனமகிழ்ச்சி யடையும்படி; இந்தமானவெங் களிற்றினேறி=இந்த வீரமுடைத்தாகிய கொடிய யானையின்மேல் ஏறி; மகிழ்ந்தெழுந் தருளுமென்ன = மகிழ்ச்சியோடு எழுந்தருளுமென்று சொல்ல; மேன்மையப் பணிமேற்கொண்டு வணங்கி = மேலான அந்நாயனார் பணித்த மொழியைத்தாம் அங்கீகரித்துக்கொண்டு அவரை நிலமுறவணங்கி; வெண்குடையினீழல் யானைமேற் கொண்டுசென்றார் = வெள்ளிய கொற்றக்குடையின் நிழற்கீழ் யானையின்மேல் ஏறிக்கொண்டுபோனார்; இவுளிமேற் கொண்டுவந்தார்=முன் குதிரையின்மேல் ஏறிக்கொண்டுவந்த புகழ்ச்சோழநாயனார்,—எ-று. (௫௨)

அந்நிலை யெழுந்தசேனை யார்கலி யேழுமொன்றாய்
மன்னிய வொலியினார்ப்ப மண்ணெலா மகிழ்ந்துவாழ்த்தப்
பொன்னெடும் பொதுவிலாட னீடியபுனிதர் பொற்றாள்
சென்னியிற் கொண்டுசென்னி திருவளர் கோயில்புக்கான்.

(இ-ள்.) அந்நிலை யெழுந்தசேனை = அவ்விடத்தில் திரண்டெழுந்த சேனைகள்; ஆர்கலி ஏழும் ஒன்றாய் = ஏழு சமுத்திரமும் ஒன்றாய்; மன்னிய ஒலியினார்ப்ப=கூடி ஒலித்த ஒலிபோல ஆரவாரிக்கவும்; மண்ணெலா மகிழ்ந்து வாழ்த்த = நிலவுலகத்துள்ளார் யாவரும் மகிழ்ச்சியடைந்து துதிக்கவும்; பொன்னெடும் பொதுவில்=பெரிய கனகசபையின்கண்; ஆடனீடிய புனிதர்பொற்றாள் = ஆனந்த நிருத்தஞ்செய்தருளுகின்ற நடேசப்பிரானது அழகிய திருவடிகளை; சென்னியிற் கொண்டு=சிரசிலே பொருந்தத்தியானித்துக்கொண்டு; சென்னிதிருவளர் கோயில்புக்கான்=புகழ்ச்சோழ நாயனார் அழகிய அரண்மனையில் புகுந்தார்,—எ-று. (௫௩)

தம்பிரான் பணிமேற்கொண்டு சிவகாமி யாருஞ்சார
எம்பிரா னன்பரான வெறிபத்தர் தாமுமென்னே
அம்பல நிறைந்தார்தொண்ட ரறிவதற் கரியாரென்று
செம்பியன் பெருமையுன்னித் திருப்பணி நோக்கிச்சென்றார்.

(இ-ள்.) தம்பிரான் பணிமேற்கொண்டு = சிவபிரானுக்குத் தாம்செய்யும் திருப்பணியை மேற்கொண்டு; சிவகாமியாருஞ்சார=சிவகாமியாண்டாரும் திருக்கோயிலை அடைய; எம்பிரானன்பரான = எமது சிவபிரானுக்கு அன்பு பூண்டொழுகும்; எறிபத்தர்தாமும் = எறிபத்த நாயனாரும்; என்னே அம்பல நிறைந்தார் தொண்டர் = இது என்ன ஆச்சரியம் அம்பலத்தின்கண் பொலிந்து விளங்கியருளும் நடேசப்பிரானது திருவடியார்கள்; அறிவதற் கரியாரென்று= எம்மால் அளவிட்டறிதற்கரிய பெருமையை யுடையாரென்று; செம்பியன் பெருமையுன்னி = புகழ்ச்சோழ நாயனாரது பெருமையைத்தமது திருவுள்ளத்திற்கருதிக்கொண்டு; திருப்பணி நோக்கிச்சென்றார்=அவ்வாலயத்திற் செய்யும் திருப்பணியைக்குறித்துச் சென்றருளினார்.—எ-று. (ருச)

மற்றவ ரிணையவான வன்பெருந் தொண்டுமண்மேல்
உற்றிடத் தடியார்முன்சென் றுதவியே நாளுநாளு
நற்றவக் கொள்கைதாங்கி நலமிகு கயிலைவெற்பிற்
கொற்றவக் கணத்தின்முன்னுங் கோமுதற் றலைமைபெற்றார்.

(இ-ள்.) அவரிணையதான வன்பெருந்தொண்டு = (அவ்வெறிபத்தநாயனார் திருக்கருவூர்த் திருவானிலையார்க்குச்செய்யும் திருத்தொண்டேயன்றி, மேற்கூறிய முறையான வன்மையோடுகூடிய பெரியதொண்டை; மண்மேலுற்றிடத் தடியார்முன்சென்று = நிலவுலகத்தின்கண் அடியார்க்கு ஆபத்து நேரிட்டபொழுது அவர்முன்சென்று; உதவி நாளுநாளும் = அவ்விடையூற்றை நீக்கித்தினந்தோறும்; நற்றவக்கொள்கைதாங்கி=நல்ல தவநெறியைப் பூண்டுபின்; நலமிகு கயிலைவெற்பின் = மேன்மைமிக்க திருக்கயிலையில்; கொற்றவக் கணத்தின்முன்னும்=வெற்றியினையுடைய அச்சிவகணங்கட்கு முன்னாக இருக்கும்; கோமுதற் றலைமை பெற்றார்=தலைவராகிய முதல்வரென்னும் முதன்மையைப் பெற்றார்.—எ-று. மற்று, ஏ-அசை. (ருரு)

மென்மைப்பத்திக்கு வேறாதலின் வன்பெருந்தொண்டென்றார். மென்மைப்பத்தியாவது :— உலகியலைக்கடவாது விதிப்படி சிவபூசை அடியார்பூசை செய்தொழுகும்பத்தி. வன்மைப்பத்தியாவது உலகியலைக்கடந்து சிவபிரானுக்கும் அடியார்களுக்கும் இடையூறுற்றிடத்துத் தன்னுயிர்க்கும் அஞ்சாது அவ்விடையூற்றை நீக்குதல் முதலியன செய்தொழுகுவது.

ஆளுடைத் தொண்டர்செய்த வாண்மையுந் தம்மைக்கொல்ல
வாளினைக் கொடுத்துநின்ற வளவனார் பெருமைதானு
நாளுமற் றவர்க்குநல்கு நம்பர்தா மளக்கிலன்றி
நீளுமித் தொண்டினீர்மை நினைக்கிலா ரளக்கவல்லார்.

(இ-ள்.) ஆளுடைத் தொண்டர்செய்த வாண்மையும் = சிவபிரானால் ஆட்கொள்ளப்பட்ட எறிபத்தநாயனார்செய்த திருத்தொண்டின் வலிமையையும்; தம்மைக்கொல்ல = (அத்தொண்டின் சிறப்புநோக்கித்) தன்குற்றந் தீரத்தன்னைக் கொல்லும்படி; வாளினைக்கொடுத்துநின்ற = தம் உடைவாளை அவர்கையில் எடுத்துக்கொடுத்துநின்ற; வளவனார் பெருமையும்=புகழ்ச்சோழ நாயனார் பெருமையையும்; நாளுமற் றவர்க்குநல்கும்=நாடோறும் அவ்விருவர்க்கும் அருள்செய்யும்; நம்பர்தாமளக்கிலன்றி=சிவபிரான் வரையறுத்தாலல்லது; நீளுமித்தொண்டினீர்மை = மிக்க இத்திருத்தொண்டின் பெருமையை; நினைக்கிலாரளக்கவல்லார் = கருதுமிடத்து யாவர் வரையறுத்துக்கூற வல்லவர்கள் ஒருவருமில்லை.—எ-று. தான்—அசை. (ருசு)

தேனாருந் தண்பூங்கொன்றைச் செஞ்சடை யவர்பொற்றாளில்
ஆனாத காதலன்ப ரெறிபத்த ரடிகள்சூடி
வானாளுந் தேவர்போற்று மன்றுளார் நீறுபோற்றும்
ஏனாதி நாதர்செய்த திருத்தொழி லியம்பலுற்றேன்.

(இ-ள்.) தேனாருந்தண்பூங்கொன்றை=தேன்தங்கிய குளிர்ந்த பொலிவினையுடைத்தாகிய கொன்றைப்பூ மாலையைச்சூடிய; செஞ்சடை யவர்பொற்றாளில் = செய்யசடையையுடைய சிவபிரானது அழகிய திருவடியில்; ஆனாத காதலன்பர்=குறையாத பேரன்பினையுடைய; எறிபத்த ரடிகள்சூடி=எறிபத்த நாயனாரது திருவடிகளை என்சிரசின்மேற் சூடிக்கொண்டு; வானாளுந்தேவர் போற்றும்; விண்ணுலகத்தை ஆள்கின்ற தேவர்கள் துதிக்கும்; மன்றுளார் நீறுபோற்றும்=நடேசப்பிரானது விபூதியைஎந்நாளும்பேணிப்பத்திசெய்தொழுகும்; ஏனாதிநாதர்செய்த=ஏனாதிநாதநாயனார்செய்த; திருத்தொழி லியம்பலுற்றேன்=பத்தியின்வலியைச் சொல்லத்தொடங்கினேன்.—எ-று. (ருஎ)

எறிபத்தநாயனார்புராணம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - சுoஎ.

திருச்சிற்றம்பலம்.

## ஏனாதிநாதநாயனார் புராணம்.

வேறு.

புண்டரிகம் பொன்வரைமே லேற்றிப் புவியளிக்குந்
தண்டரள வெண்கவிகைத் தார்வளவர் சோணாட்டில்
வண்டறை பூஞ்சோலை வயன்மருதத் தண்பணைசூழ்ந்
தெண்டிசையு மேறியசீர் மூதூ ரெயினனூர்.

(இ-ள்.) புண்டரிகம் பொன்வரைமேலேற்றி = புலிக்கொடியைப்பொன்மலையாகிய இமயமலையின் மேல்நாட்டி; புவியளிக்குந் தண்டரளவெண்கவிகை = பூமியை அரசாட்சிசெய்யும் குளிர்ச்சியாகிய வெள்ளியமுத்துக் குடை

யினையுடைய ; தார்வளவர் சோணாட்டில் = ஆத்திமாலையை அணிந்த சோழர்களது இராசதானியாகிய சோழநாட்டில் ; வண்டறைபூஞ்சோலை = வண்டுகள் ஒலிக்கும் மலர்களையுடைய சோலைகளும் ; வயன்மருதத் தண்பணைசூழ்ந்து=வயல்களோடுகூடிய குளிர்ச்சியினையுடைய மருதநிலமுஞ்சூழ்ந்து ; எண்டிசையுமேறியசீர் = எட்டுத்திக்குகளிலும் பரந்தபுகழையுடைய ; மூதூரெயினனூர் = பழமையாகிய ஊரானது எயினனூராம்.—எ-று. (க)

வேழக் கரும்பினொடு மென்கரும்பு தண்வயலிற்
றாழக் கதிர்ச்சாலி தானோங்குந் தன்மையதாய்
வாழக் குடிதழைத்து மன்னியவப் பொற்பதியில்
ஈழக் குலச்சான்றா ரேனாதி நாதனார்.

(இ-ள்.) வேழக்கரும்பினொடு மென்கரும்பு = வேழக்கரும்புகளோடு மெல்லியகரும்புகளும் ; தண்வயலிற்றாழ = குளிர்ந்த வயல்களினிடத்துத் தம் வளர்ச்சியிற்றாழும்படி ; கதிர்ச்சாலியோங்குந் தன்மையதாய் = கதிரையுடைய செந்நெற்பயிர்கள் உயருந்தன்மையை யுடையதாய் ; வாழக்குடி தழைத்து=வாழ்கின்ற அந்தக்குடிகள் ஓங்கி; மன்னியவப் பொற்பதியில் = நிலைபெற்றிருக்கின்ற அந்த அழகிய எயினனூரில் (வாழ்பவர்) ; ஈழக்குலச்சான்றார் = (அவர்யாரெனில்) ஈழக்குலத்தில் அவதரித்த சான்றார் மரபினையுடையவர் ; ஏனாதிநாதனார்= ஏனாதிநாத நாயனாரென்று சொல்லப்படுவார்,—எ-று. தான் - அசை. (உ)

வாழ்பவர் என்பது அவாயநிலையால் வருவிக்கப்பட்டது.

தொன்மைத் திருநீற்றுத் தொண்டின் வழிபாட்டி
னன்மைக் கணின்ற நலமென்றுங் குன்றாதார்
மன்னர்க்கு வென்றி வடிவாட் படைபயிற்றுந்
தன்மைத் தொழில்விஞ்சை யிற்றலைமை சார்ந்துள்ளார்.

(இ-ள்.) தொன்மைத் திருநீற்று = (அவர்) பழமையாகிய திருவெண்ணீற்றின்மேல் அன்புவைத்தொழுகும் ; தொண்டின்வழிபாட்டின் = அடிமைத்திறத்தாற்செய்யும் சிவபிரான் வழிபாட்டினாலுண்டாகும் ; நன்மைக்கணின்ற = நன்னெறிக்கண்நிற்கின்ற ; நலமென்றுங்குன்றாதார் = தகுதிப்பாட்டில்எந்நாளுங் குறையாதவர் அதுவன்றி ; மன்னர்க்குவென்றி வடிவாட்படைபயிற்றும் = அரசர்களுக்கு வெற்றியினையுடைய கூரியவாட்படையைப் பயிற்சிசெய்விக்கின்ற ; தன்மைதொழில் விஞ்சையில்=குணத்தோடுகூடிய தொழிலாகியவித்தையிலே ; தலைமை சார்ந்துள்ளார் = முதன்மையை யடைந்தவர்.—எ-று. (௩)

மறையுள் விதித்தநெறி என்னுஞ் சிறப்புத்தோன்றத் தொன்மைத்திருநீறென்றும், அதனைப்பொருளாகக் கொண்டுநிற்கும் அவர்நிலைமை நன்னெறி என்பதுதோன்ற நன்மைக்கணின்றென்றும், அந்நலத்தில் தமக்கெவ்வித இடர்நேர்படினும் தாம்வைத்த பத்திமைகுறைபாரென்பது விளக்கிய என்றுங் குன்றாதாரென்றும், அவரது வாள்வித்தையின் பயிற்சிச்சிறப்புத்தோன்ற மன்னர்க்குப்பயிற்றுந்தலைமை சார்ந்துள்ளாரென்றுங் கூறினர்.

வாளின் படைபயிற்றி வந்த வளமெல்லா
நாளும் பெருவிருப்பா னண்ணுங் கடப்பாட்டிற்
றாளுந் தடமுடியுங் காணாதார் தம்மையுந்தொண்
டாளும் பெருமா னடித்தொண்டர்க் காக்குவார்.

(இ-ள்.) வாளின்படைபயிற்றி = (அவர்) வாட்படைபயிலுந் தொழிலை அரசர் முதலாயினோர்க்குக் கற்பித்து ; வந்தவளமெல்லாம் = அதனால் வந்தபொருள்வருவாயை எல்லாம்; தாளுந்தடமுடியுங்காணாதார் தம்மையுந் தொண்டாளும் பெருமான் = திருவடியையும் பெருமையாகிய திருமுடியையுந் தேடியறியாத திருமால்பிரமன் என்னும் இருவரையும் அடிமையாகக் கொண்டருளும் சிவபிரானது ; அடித்தொண்டர்க்கு = திருவடியார்களுக்கு ; நாளும்பெருவிருப்பால் = நாள்தோறும் தம் உள்ளத்து நிகழும் பேரன்பினால் ; நண்ணுங்கடப்பாட்டில் = உதித்த கொடைக்குண மிகுதியால் ; ஆக்குவார்=கொடுக்கின்றவர்.—எ-று. (ச)

நள்ளார் களும்போற்று நன்மைத் துறையின்கண்
எள்ளாத செய்கை யியல்பி னொழுகுநாட்
டள்ளாத தங்க டொழிலுரிமைத் தாயத்தின்
உள்ளா னதிசூர னென்பா னுளனானான்.

(இ-ள்.) நள்ளார்களும் போற்றும் = பகைவர்களும் தம்மைவழிபடுதற்குரிய ; நன்மைத்துறையின்கண் = சால்பாகிய நன்னெறிக்கண் ; எள்ளாதசெய்கை = குறைவில்லாத செய்கையோடுகூடிய ; இயல்பினொழுகுநாள் = முறைமையோடு நடக்கும்அந்நாளில்; தள்ளாத தங்கடொழிலுரிமைத் தாயத்தின்=தள்ளக்கூடாத தங்கள்தொழிலுரிமைக்குரிய தாயத்தாரில் ; உள்ளானதிசூரனென்பானுளனானான் = உள்ளவனாய் அதிசூரனென்றொருவனிருந்தான்.—எ-று. (ரு)

இவர் பகைவர்களிடத்தும் தங்கீதிவழுவாத தகுதியுடையவரென்பது விளக்கிய நள்ளார்களும் போற்றும் என்றார்.

மற்றவனுங் கொற்ற வடிவாட் படைத்தொழில்கள்
கற்றவர்க டன்னிற் கடந்துள்ளா ரில்லையெனும்
பெற்றிமையான் மாநிலத்து மிக்க பெருமிதம்வந்
துற்றுலகிற் றன்னையே சால மதித்துள்ளான்.

(இ-ள்.) அவனுங்கொற்ற வடிவாட்படைத்தொழில்கள் = மேற்கூறிய அவ்வதிசூரனென்பவனும் வெற்றியினையுடைய கூரியவாட் படைபயிற்றுந்தொழில்களை ; கற்றவர்கள் தன்னிற்கடந்துள்ளாரில்லையெனும் = கற்றுக்கொண்டவர்களில் தன்னினும் மேம்பட்டார் ஒருவருமில்லையென்று சொல்லும் ; பெற்றிமையான் மாநிலத்து = முதன்மையினால் பெரியநிலவுலகத்தின்கண் ; மிக்கபெருமிதம்வந்துற்று = மிகுந்த இறுமாப்படைந்து ; உலகில் தன்னையே சாலமதித்துள்ளான் = அங்குதன்னையே மிகவும்மதித்தவன்.—எ-று. மற்று - அசை. (சு)

தானாள் விருத்திகெடத் தங்கள்குலத் தாயத்தின்
ஆனாத செய்தொழிலா மாசிரியத் தன்மைவள
மேனாளுந் தான்குறைந்து மற்றவர்க்கே மேம்படலால்
ஏனாதி நாதர்திறத் தேலா விகல்புரிந்தான்.

(இ-ள்.) தானாள்விருத்திகெட = தான்செய்துவரும் சீவனோபாயங்கெடும்படி ; தங்கள்குலத்தாயத்தின் = தங்கள்குலத்திற்குரிய ஞாதிகளுக்கு ; ஆனாதசெய்தொழிலாம் = குறையாதசாதித்தொழிலாகிய ; ஆசிரியத் தன்மைவளம் = வாட்படைபயிற்றும் ஆசிரியத்தன்மையால் வரும்வருவாயானது; மேனாளுந்தான் குறைந்து = மேல்மேல் நாடோறும் குறைவடைந்து ; அவர்க்கே மேம்படலால் = ஏனாதிநாதநாயனாருக்கே மேம்படுதலினாலே ; ஏனாதிநாதர் திறத்து = அந்நாயனாரிடத்து; ஏலாவிகல்புரிந்தான் = நீதியில்லாத பகைமையைச்செய்தான்.—எ-று. (௭)

மற்று-அசை.

கதிரோ னெழமழுங்கிக் கால்சாயுங் காலை
மதிபோ லழிந்துபொறா மற்றவனுஞ் சுற்றப்
பதியோ ருடன்கூடப் பண்ணியமர் மேற்சென்
றெதிர்போர் விளைப்பதற்கே யெண்ணித் துணிந்தெழுந்தான்.

(இ-ள்.) கதிரோனெழமழுங்கி = சூரியனுதயஞ்செய்ய ஒளியிழந்து ; கால்சாயுங் காலைமதிபோலழிந்து = இருளடையும் உதயகாலத்துச் சந்திரன் போலமனமழிந்து ; பொறாஅவனும் = அதனைப் பொறுக்கலாற்றாத அவ்வதிசூரனும் ; சுற்றப்பதியோருடன் கூடப்பண்ணியமர்மேற்சென்று = தம்சுற்றத்தாரையும் ஊராரையும் ஒருங்குசேரும்படிசெய்து அந்நாயனார் மேற்சென்று ; எதிர்போர்விளைப்பதற்கே = எதிராகப் போர்செய்வதற்கே ; எண்ணித்துணிந்தெழுந்தான் = கருதிநிச்சயித்தெழுந்தான்.—எ-று. (௮)

தோள்கொண்ட வல்லாண்மைச் சுற்றத்தொடுந்துணையாங்
கோள்கொண்ட போர்மள்ளர் கூட்டத்தொடுஞ் சென்று
வாள்கொண்ட தாயம் வலியாரே கொள்வதென
மூள்கின்ற செற்றத்தான் முன்கடையி னின்றழைத்தான்.

(இ-ள்.) தோள்கொண்ட வல்லாண்மைச்சுற்றத்தொடும் = தம்தோள்களினிடத்துத் தாங்கப்பட்ட வலிமையினையுடைய தனதுசுற்றத்தாரோடும் ; துணையாங்கோள் கொண்டபோர்மள்ளர் = தனக்கு உதவியாகவரும் கொள்கையை உடையபோர்வீரர்களது ; கூட்டத்தொடுஞ்சென்று = தொகுதியோடுஞ்சென்று ; வாள்கொண்டதாயம் = வாள்வித்தையினால் ஆகியஉரிமையை ; வலியாரேகொள்வதென = வலியவர்களே கொள்ளுதற்குரியதென்று; மூள்கின்றசெற்றத்தால் = மேற்கொண்ட கோபத்தொடு ; முன்கடையினின்றழைத்தான் = அவருடைய தலைக்கடையினின்று போர்க்கறைகூவினான்.—எ-று. (௯)

வெங்கட் புலிகிடந்த வெம்முழையிற் சென்றழைக்கும்
பைங்கட் குறுநரியே போல்வான் படைகொண்டு
பொங்கிப் புறஞ்சூழ்ந்து போர்குறித்து நேர்நின்றே
யங்கட் கடைநின் றழைத்தா னதுகேளா.

(இ-ள்.) வெங்கட்புலிகிடந்த=கொடிய கட்பார்வையினையுடைய புலி இருக்கின்ற; வெம்முழையிற் சென்றழைக்கும் = கொடியமலை முழையின்கண் சென்று அப்புலியை அறைகூவும்; பைங்கட்குறு நரிபோல்வான் = சிறியபார்வையினையுடைய குறிய நரியையொத்தவன் ; படைகொண்டு பொங்கிப் புறஞ்சூழ்ந்து=ஆயுதங்களைத் தாங்கிக்கொண்டு கோபத்தோடு அவரிருக்கை எல்லையைச்சூழ்ந்து ; போர்குறித்து நேர்நின்று=போரைக்கருதி நேராகநின்று ; அங்கட்கடைநின்று = அங்குள்ள தலைக்கடைவாயிலினின்று ; அழைத்தா னொலிகேளா=அழைத்த அவ்வதிசூரனுடைய ஒலியைக் கேள்வியுற்று.—எ-று. (௧௦)

ஏ - அசை.

ஆர்கொல் பொரவழைத்தா ரென்றரியேற் றிற்கிளர்ந்து
சேர்வுபெறக் கச்சிற் செறிந்தவுடை மேல்வீக்கி
வார்கழ லுங்கட்டி வடிவாட் பலகைகொடு
போர்முனையி லேனாதி நாதர் புறப்பட்டார்.

(இ-ள்.) ஆர்கொல்பொரவழைத்தாரென்று=யாவர் கொல்போர் செய்யக்கருதி அழைத்தார்களென்று ; அரியேற்றிற்கிளர்ந்து = சிங்கேறுபோல மேற்கொண்டெழுந்து ; சேர்வுபெறக்கச்சிற் செறிந்தவுடை மேல்வீக்கி=பொருந்தும்படி கச்சோடுசேர்ந்த உடையை மேலேகட்டி; வார்கழலுங்கட்டி=வாரினால் வீரக்கழலையுங் காலிற்கட்டி ; வடிவாட்பலகைகொடு=கூரியவாளையும் பரிசையையும் கையில் எடுத்துக்கொண்டு ; போர்முனையிலே னாதிநாதர் புறப்பட்டார்=அமர்முனையில் ஏனாதிநாதநாயனார் புறப்பட்டார்.—எ-று. (௧௧)

கொல் - ஐயம்.

கச்சிற் செறிந்த உடை என்றதனால் உடையின்மேல் வீக்கப்பட்ட கச்சுடையராயென்பது கருத்து.

புறப்பட்ட போதின்கட் போர்த்தொழில்கள் கற்கும்
விறற்பெருஞ்சீர்க் காளையர்கள் வேறிடத்து நின்றார்
மறப்படை வாட் சுற்றத்தார் கேட் டோடிவந்து
செறற்கரும் போர்வீரர்க் கிருமருங்குஞ் சேர்ந்தார்கள்.

(இ-ள்.) புறப்பட்டபோதின்கண் = ஏனாதிநாதநாயனார் போர்க்கோலங் கொண்டு புறப்பட்டபொழுது ; போர்த்தொழில்கள்கற்கும்=அவரிடத்தில் வாட்போர்த்தொழிலைக் கற்றுக்கொள்ளும் ; விறற்பெருஞ்சீர்க்காளையர்கள்=வலியால் மிக்க சீரையுடைய யவ்வனப்பருவமுள்ள வீரர்களும் ; வேறிடத்துநின்றார் = வேறிடங்களில் நின்று பயிற்சிசெய்கின்றவர்களாகிய ; மறப்படைவாட்சுற்றத்தார்கேட்டு=வீரத்தையுடைய வாளைப்பயின்ற அவருறவினர்களும் அதைக்கேட்டு ; ஓடிவந்து செறற்கரும் போர்வீரர்க்கு = விரைந்துவந்து ஒருவராலும் செயித்தற்கரிய போர்த்தொழில் வல்லவீரராகிய அவ்வேனாதி நாதநாயனாருக்கு ; இருமருங்குஞ்சேர்ந்தார்கள்=இரண்டுபக்கத்தினுஞ் சேர்ந்தார்கள்.—எ-று. (௧௨)

வந்தழைத்த மாற்றான் வயப்புலிப்போத் தன்னார்மு
ன்நந்தமது வாட்பயிற்று நற்றாயங் கொள்ளுங்கால்
இந்தவெளி மேற்கைவகுத் திருவேம் பொருபடையுஞ்
சந்தித் தமர்விளைத்தாற் சாயாதார் கொள்வதென.

(இ-ள்.) வந்தழைத்தமாற்றான்=போர்செய்யும்பொருட்டுவந்து அறைகூவியபகைவனாகிய அதிசூரன்; வயப்புலிப்போத்தன்னார்முன்=வலியினையுடைய ஆண்புலிபோன்ற ஏனாதிநாதநாயனாருக்குமுன்னே (கூறுவானாயினான்); நந்தமது வாட்பயிற்றும்=நம்மரபிற்குரிய வாள்வித்தையைக் கற்பிக்கும்; நற்றாயங்கொள்ளுங்கால்=நல்லஉரிமையை நாமிருவரும் ஒருவர்க்கொருவர் தனக்கெனச் சிறப்பாகக்கொள்ளுமிடத்து; இந்தவெளிமேல் = இவ்விடத்திருக்கின்ற வெளியிடத்தில்; இருவேம்பொருபடையுங்கைவகுத்து = இருவருடைய போர்த்தொழிற்குரிய படைவீரர்களையும் இருவகுப்பாகவகுத்து; சந்தித்தமர்விளைத்தால் = எதிர்த்துயுத்தஞ்செய்தால்; சாயாதார்கொள்வதென=தோல்வியடையாதவர்கள் கொள்வதேநலமென்று.—எ-று. (கரு)

சாயாதார்கொள்வதெனக் கூறுவானாயினான் என இயையும். கூறுவானாயினான் என வருவித்துரைக்கப்பட்டது.

என்றுபகைத் தோனுரைப்ப வேனாதி நாதரது
நன்றுனக்கு வேண்டுமே னண்ணுவனென் றுண்மகிழ்ந்து
சென்றவன் முன்சொன்ன செருக்களத்துப் போர்குறிப்பக்
கன்றி யிருபடையுங் கைவகுத்து நேர்மலைவார்.

(இ-ள்.) என்றுபகைத்தோனுரைப்ப = இவ்வாறு மாறுபட்டோனாகிய அதிசூரன் கூறக்கேட்டு; ஏனாதிநாதரதுநன்று=ஏனாதிநாதநாயனார் நீவரையறுத்துக் கூறியது நன்றாக இருக்கின்றது; உனக்குவேண்டுமே னண்ணுவனென்றுண்மகிழ்ந்து=உனக்கு அவ்வாறு செய்ய விருப்பமிருக்குமேல் நானும் உன்னோடு யுத்தஞ்செய்வதற்கு நிச்சயமாக வருகின்றேனென்று மனமகிழ்கூர்ந்து; சென்றவன்முன்சொன்ன செருக்களத்துப்போர்குறிப்ப = அவ்வதிசூரன் மேற்குறித்த வெளியிற்போய் போரைநிச்சயிக்க; கன்றியிருபடையும் கைவகுத்து நேர்மலைவார்=மேல் இருவர்களுடைய படைவீரர்களும் இருகூறாய்வகுக்கப்பட்டு ஒருவரோடொருவர் எதிர்த்துக் கிட்டிப் போர்செய்வாராயினர்.—எ-று. (கசு)

வேறு.

மேக வொழுங்குகண் முன்கொடு மின்னிரை தம்மிடை யேகொடு
மாக மருங்கினு மண்ணினும் வல்லுரு மேறெதிர் செல்வன
வாக நெடும்பல கைக்குல மாள்வினை வாளுடை யாடவர்
காக மிடைந்த களத்திரு கைகளின் வந்து கலந்தனர்.

(இ-ள்.) வல்லுருமேறெதிர்=வலியினையுடைய இடியேறுகள் எதிரே; மேகவொழுங்குகண்முன்கொடு = மேகக்கூட்டங்களைத் தம்முன்னேகொண்டு;

மின்னிரைதம்மிடையேகொடு=மின்வரிசைகளை அதனிடையேகொண்டு; மாக மருங்கினு மண்ணினும்=விண்ணின்கண்ணும் மண்ணின்கண்ணும்; செல்வன வாக=சென்றாற்போல; நெடும்பலகைக்குலம்=நீண்டதோற்பலகைக் குலங்களையும்; ஆள்வினைவாளுடையாடவர்=போராடுகின்ற முயற்சியையும் வாட்படையையும் உடைய படைவீரர்கள்; காகமிடைந்தகளத்து = காகங்கள் நெருங்கிய போர்க்களத்து; இருகைகளின்வந்துகலந்தனர்=இருகைகளினும்வந்துகலந்தார்கள்.—எ-று. (கரு)

ஆடவர்செல்வன வாகக்கலந்தனர் என இயையும். பரிசையை மேகவொழுங்குகளாகவும், படையை மின்னலாகவும், உரத்தசொல்லை இடியேறாகவும்கூறினர்.

கால் கழல்கட்டிய மள்ளர்கள் கைகளின் மெய்க ளடக்கிய
வாளொளி வட்ட முனைத்திட வந்திரு கைகளின் முந்தினர்
வேலொடுவே லெதிர் நீள்வன மேவிய பாதலம் விட்டுயர்
ஞால முறும்பணி வீரர்க ணாசிமிர் கின்றன வொத்தன.

(இ-ள்.) கால்கழல்கட்டியமள்ளர்கள் = காலினிடத்து வீரக்கழலைக்கட்டிய படைவீரர்கள்; கைகளின்மெய்களடக்கிய = தம்கைகளினிடத்து உடம்புகளை அடக்குதற்குரிய; வாளொளிவட்டமுனைத்திட=மிக்க ஒளியினையுடைய பரிசையானது தம்முன்னே முனைத்துத்தோன்ற; வந்திருகைகளின் முந்தினர்=வந்து இருமருங்கும் முற்பட்டார்கள்; வேலொடுவேலெதிர்நீள்வன = (அவர்களெதிர்க்குங்கால்) வேற்படையோடு வேற்படைகள் எதிரெதிர் நீண்டிருப்பன; மேவியபாதலம்விட்டு=தாம்வாழும் நாகலோகத்தைவிட்டு வந்து; உயர்ஞாலமுறும்பணி வீரர்கள்=உயர்ந்த நிலவுலகத்தின்கண் பொருந்தும்படி நாகராசாக்கள்; நாநிமிர்கின்றனவொத்தன=தம்நாக்களை எதிர்நீட்டினாலொத்தன.—எ-று. (கசு)

வெங்கண் விறற்சிலை வீரர்கள் வேறிரு கையினு நேர்பவர்
தங்கள் சிலைக்குல முந்தின தாவில் சரங்க ணெருங்குவ
பொங்கு சினத்தெரி யிற்புகை போகு கொடிக்கள் வளைத்தெதிர்
செங்கண் விழிக்கனல் சிந்திய சீறு பொறிச்செல வொத்தன.

(இ-ள்.) வெங்கண்விறற்சிலை வீரர்கள் = கொடிய கோபக்கண்களையுடைய வலியோடுகூடிய வில்லைத்தாங்கிய படைவீரர்கள்; வேறிருகையினுநேர்பவர்தங்கள்=வேறாய்த்தனித்தனிஇருமருங்கும் எதிர்த்துப் போர்செய்கின்றவர்களுடைய; சிலைக்குலமுந்தின=விற்றொகுதிகளினின்று புறப்பட்ட; தாவில்சரங்கணெருங்குவ=கெடுதலில்லாத அம்புகள் நெருங்குவன; பொங்குசினத்தெரியிற்புகை=அவர் உண்ணின்றுதிக்கும் மிகுந்த கோபமாகிய தீயினின்றும்; புகைபோகுகொடிக்கள்வளைத்து=புகையாகச்செல்கின்ற இரேகைகளினால் வளைக்கப்பட்டு; எதிர்செங்கண் விழிக்கனல்சிந்திய = எதிரெதிரே செல்கின்ற சிவந்தகண்ணினின்றும் உதித்த கோபத்தீயானது சிந்தப்பட்ட; சீறுபொறிச் செலவொத்தன = கொடியபொறிகளின் சிதறுதலையொத்திருந்தன.—எ-று. (கஎ)

வாளொடு நீள்கை துடித்தன மார்பொடு வேல்கள் குளித்தன
தோளொடு வாளி நிலத்தன தோலொடு தோல்க டகைத்தன
தாளொடு வார்கழ லிற்றன தாரொடு சூழ்சிர மற்றன
நாளொடு சீறி மலைப்பவர் நாடிய போர்செய் களத்தினில்.

(இ-ள்.) வாளொடுநீள்கைதுடித்தன=வாட்படையோடு நெடியகைகள் (அற்றுவிழுதலால்) துடித்தன; மார்பொடுவேல்கள்குளித்தன = மார்பினிடத்து வேலாயுதங்கள் முழுகின; தோளொடுவாளிநிலத்தன=அறுக்கப்பட்ட தோள்களோடு அம்புகளும் நிலத்திற்கிடந்தன; தோலொடு தோல்கடகைத்தன=பரிசைகளோடு பரிசைகள் ஒன்றையொன்று நெருக்கின; தாளொடுவார்கழலிற்றன = கால்களோடு அக்கால்களிற் கட்டிய வீரக்கழல்களும் அறுந்து கிடந்தனதாரொடு சூழ்சிரமற்றன = மாலையோடுசூழ்ந்ததலைகள்அறுந்துகிடந்தன; நாளொடுசீறிமலைப்பவர்=தம்வாணாளோடு கோபித்துப் போர்செய்தவர்கள்; நாடியபோர்செய்களத்தினில்=விரும்பிய அப்போர்க்களத்தில்.—எ-று. (கஅ)

மலைபவர் என்றது மலைப்பவர் என விகாரமாயிற்று. மார்பொடு என்றது உருபுமயக்கம். தம் ஆயுள் பெறுதற்கரிய சிறப்பிற்றாக அதனையும் வெறுத்துமலைதலில் நாளொடு சீறி மலைப்பவர் என்றார்.

குருதியி னதிகள் பரந்தன குறையுட லொழுகி யலைந்தன
பொருபடை யறுதுணி சிந்தின புடைசொரி குடருடல் பம்பின
வெருவர வெருவை நெருங்கின விசியறு துடிகள் புரண்டன
இருபடை தனினு மெதிர்ந்தவ ரெதிரெதி ரமர்செய் பறந்தலை.

(இ-ள்.) குருதியினதிகள்பரந்தன = இறந்தவர்களது இரத்தவெள்ளத்தாலாகிய ஆறுகள் பரவியோடின; குறையுடலொழுகி யலைந்தன = தலைகுறைந்தகவந்தங்கள் சஞ்சரித்துத்திரிந்தன; பொருபடை யறுதுணிசிந்தின=போர்செய்கின்ற சேனைகளின் உடல்களின்அற்றதுண்டுகள்நிலத்திற் சிதறிக்கிடந்தன; புடைசொரி குடருடல் பம்பின = தம் அருகில்சரிந்த குடல்களையுடைய உடம்புகள் நெருங்கிக்கிடந்தன; வெருவர வெருவை நெருங்கின = யாவரும் அஞ்சும்படி நிணங்கள் நெருங்கிக்கிடந்தன; விசியறு துடிகள் புரண்டன = வார்கள் அறுந்த உடுக்குகள் புரண்டுகிடந்தன; இருபடைதனினு மெதிர்ந்தவர் = இருபுறச்சேனைகளிலும் எதிர்த்து; எதிரெதிரமர்செய் பறந்தலை=ஒருவரோடொருவர் மாறுபட்டுப் போர்செய்கின்ற போர்க்களத்தில்.—எ-று. (கசு)

நீளிடை முடுகி நடந்தெதிர் நேரிரு வரிலொரு வன்றொடர்
தாளிரு தொடையற முன்பெயர் சாரிகை முறைமை தடிந்தனன்
வாளொடு விழுமுடல் வென்றவன் மார்பிடை யறமு னெறிந்திட
ஆளியி னவனு மறிந்தன னுயினர் பலருள ரெங்கணும்.

(இ-ள்.) நீளிடைமுடுகிநடந்து = நெடுந்தூரம் விரைவாய் எதிர்த்துச் சென்று; எதிர்நேரிருவரிலொருவன் = எதிரெதிரே எதிர்த்த இருவீரர்களில் ஒருவன்; தொடர்தாளிரு தொடையற முன்பெயர்=தன்னைத்தொடர்ந்த காலி

ரண்டும் இருதொடையும் அற்றுவிழும்படி முன்னேசெல்கின்ற; சாரிகை முறைமைதடிந்தனன்=சாரிகை வரிசையில் வெட்டினான்; வாளொடு விழுமுடல்= (அவனால் வெட்டுண்டு) வாட்படையோடுவிழுகின்ற உடம்பானது; வென்றவன் மார்பிடை யறமுனைறிந்திட=தன்னைவென்ற மாற்றானுடைய மார்பு இடையே யறும்படி முற்பட்டு வேகத்தால் வீசிவெட்ட; ஆளியினவனு மறிந்தனன் = சிங்கேற்றையொத்த அவ்வீரனும் இறந்தான்; ஆயினர்பலருள ரெங்கணும் = இவ்வாறு இறந்த பலவீரர்கள் எவ்விடத்தும் அநேகருளர்.—எ-று. (உ0)

கூர்முனை யயில்கொடு முட்டினர் கூடிமு னுருவிய தட்டுட
னேருர முருவ வுறைப்புட னேர்பட வெதிரெதிர் குத்தினர்
ஆருயிர் கழியவு நிற்பவ ராண்மையி லிருவரு மொத்தமை
போரடு படைகொ டளப்பவர் போல்பவ ரளவிலர் பட்டனர்.

(இ-ள்.) கூர்முனை யயில்கொடு முட்டினர் = கூரியமுனையினையுடைய வேலாயுதத்தைக்கொண்டு எதிர்த்துப் போர்செய்தவர்கள்; கூடிமுனுருவியதட்டுடன்=நெருங்கி முன்னே உருவப்பட்ட பரிசையோடு; நேருரமுருவ வுறைப்புடன்=நேராக மார்பு உருவும்படி உறுதியோடு; நேர்பட வெதிரெதிர் குத்தினர்=மார்புக்குநேராக எதிரெதிரே குத்தினராய்; ஆருயிர்கழியவுநிற்பவர் = தம்முடைய அரிய உயிரானது நீங்கவும் நிற்கின்றவர்கள்; ஆண்மையிலிருவருமொத்தமை = தாம் வலிமையில் இருவர்களும் ஒத்திருத்தலை; போரடுபடைகொடு = போரினிடத்துக் கொல்லுகின்ற படையைக்கொண்டு; அளப்பவர் போல்பவர்=அளந்தறிவார்களை யொத்தவர்களா யிருந்தார்கள்; அளவிலர்பட்டனர்=இவ்வாறு அளவில்லாத வீரர்கள் இறந்தார்கள்.—எ-று. (உக)

அடுபடை கொடுபோ ரளப்பவர்போல்பவர் என இயையும்.

பொற்சிலை வளைய வெதிர்ந்தவர் புற்றர வணைய சரம்பட
விற்படை துணியவு நின்றிலர் வெற்றிகொள் சுரிகை வழங்கினர்
முற்றிய பெருவள னின்றியு முற்படு கொடைநிலை நின்றிட
உற்றன வுதவிய பண்பின ரொத்தன ருள்சில கண்டகர்.

(இ-ள்.) பொற்சிலைவளைய வெதிர்ந்தவர் = அழகிய விற்கள்வளையும்படி எதிர்த்தவர்கள்; புற்றரவணையசரம்பட = புற்றிடத்துவாழும் பாம்பையொத்த அம்புகள் படுங்கால்; விற்படைதுணியவுநின்றிலர் = தம் கையிலிருக்கும் வில்லுக்கள் வெட்டுப்படவும் தாழ்த்து நில்லாமல்; வெற்றிகொள் சுரிகை வழங்கினர்=வெற்றியினையுடைய உடைவாளை அப்பாணங்களுக்கு எதிராக வீசினவர்களாய்; முற்றியபெருவள னின்றியும் = தமக்குரிய நிரம்பிய பலசெல்வங்கள் கேடடைந்தும்; முற்படுகொடைநிலைநின்றிட=தாம் முன்னேசெய்த கொடையானது நிலைநிற்கும்படி; உற்றனவுதவியபண்பினர்=தமக்குநேரிட்ட பொருளை இரப்பார் கையிற்கொடுக்கும் குணமுடையவர்களை; ஒத்தனருளர் சிலகண்டகர் = ஒத்தவர்களா யிருந்தார்கள் சிலபடைவீரர்கள்.—எ-று. (உஉ)

...ங்கினர்சிலகண்டகர் ஒத்தனர் என இயையும்.

அடன்முனை மறவர் மடிந்தவ ரலர்முக முயிருள வென்றுறு
படர்சிறை சுலவு கருங்கொடி படர்வன சுழல்வன துன்றலில்
விடுசுடர் விழிக ளிரும்புசெய் வினைஞர்த முலையின் முகம்பொதி
புடைமிடை கரியிடை தங்கிய புகைவிடு தழலை நிகர்ந்தன.

(இ-ள்.) அடன்முனை மறவர் மடிந்தவர் = பகையோடு யுத்தஞ்செய்த போர்க்களத்து மடிந்த வீரர்களுடைய; அலர்முகமு யிருளவென்று = மலர்ந்த முகங்களைநோக்கி இவ்வுடலில் உயிர் தங்கியிருக்கின்றதென்று; உறுபடர்சிறை சுலவுகருங்கொடி = வருகின்ற பரம்பிய சிறகினையுடைத்தாய்ச் சூழ்கின்ற கரிய காகங்கள்; படர்வன சுழல்வன துன்றலில் = கிட்டுவனவாயும் நீங்கிச்சூழ்வன வாயும் நெருங்கி யிருத்தலால்; விடுசுடர் விழிகள் = ஒளிவீசுகின்ற இறந்தவீரர்களுடையகண்கள்; இரும்புசெய் வினைஞர்தமுலையின் முகம்பொதி = கொல்லருடைய உலைமுகத்தில் பொதிந்த; புடைமிடை கரியிடைதங்கிய = அடுப்பில் நெருங்கிய கரியினிடத்துத் தங்கிவரும்; புகைவிடுதழலை நிகர்ந்தன = புகையை விடுகின்ற நெருப்பையொத்தன.—எ-று. (உங)

விழிகள்நிகர்ந்தனஎன இயையும். நிகர்த்தனஎன்பது நிகர்ந்தனஎனவிகாரமாயிற்று.

திண்படை வயவர் பிணம்படு செங்கள மதனிடை முன்சிலர்
புண்படு வழிசொரி யுங்குடர் பொங்கிய கழுகு பருந்தொடு
கொண்டெழு பொழுதினு முன்செயல் குன்றுத லிலர்தலை நின்றனர்
விண்படர் கொடிவிடு பண்பயில் விஞ்சையர் குமரரை வென்றனர்.

(இ-ள்.) திண்படைவயவர் = வலியினையுடையபடைவீரர்கள்; பிணம்படு செங்கள மதனிடைமுன்சிலர் = இறந்துகிடக்கும் போர்க்களத்தினிடத்துமுன்னேசிலர்; புண்படுவழிசொரியுங்குடர் = ஆயுதத்தால் புண்பட்ட இடத்தில் நின்றும்சொரிகின்ற குடல்களை; பொங்கிய கழுகுபருந்தொடு = நெருங்கிய கழுகுகள்பருந்துடன்; கொண்டெழு பொழுதினும் = கொண்டெழும் பொழுதும்; முன்செயல்குன்றுத லிலர்தலைநின்றனர் = தாம் முன்னின்றசெயலில் குறையாதவர்களாய்நின்று கொண்டிருந்தவர்கள்; விண்படர்கொடி விடுபண்பயில் = ஆகாயத்தில் பட்டத்தைவிட்டு விளையாடுகின்ற இசையைப்பழகிய; விஞ்சையர் குமரரைவென்றனர் = வித்தியாதரர்களுடைய சிறுவர்களைச் செயலால்வென்றார்கள்.—எ-று. கொடி = பட்டம். (உச)

வேறு.

இம்முனைய வெம்போரி லிருபடையின் வாள்வீரர்
வெம்முனையின் வீடியபின் வீடாது மிக்கொழிந்த
தம்முடைய பல்படைஞர் பின்னாகத் தாமுன்பு
தெம்முனையி லேனாதி நாதர் செயிர்த்தெழுந்தார்.

(இ-ள்.) இம்முனையவெம்போரில் = இவ்வாறுமுனைத்தகொடியபோர்க்களத்தில்; இருபடையின்வாள்வீரர் = இரண்டுசேனைகளிலுள்ளவாளை யேந்திய

வீரர்கள் ; வெம்முனையின்வீடியபின் = கொடியபோரில் இறந்தபின்பு ; வீடாது மிக்கொழிந்த=இறவாது மிகுதியாய்நீங்கிய ; தம்முடையபல்படைஞர்பின்னாக= தம்முடையபலபடை வீரர்களும் பின்னேவர ; தாமுன்புதெம்முனையிலேனாதி நாதர்=தாம்முன்னாகப்போர்முனையில் ஏனாதிநாதநாயனார் ; செயிர்த்தெழுந்தார்= கோபித்து அமர்செய்தற்கெழுந்தார்.—எ-று. (உரு)

வெஞ்சினவா ளுயுமிழ வீரக்கழல் கலிப்ப
நஞ்சணிகண் டர்க்கன்பர் தாமெதிர்ந்த ஞாட்பின்கண்
எஞ்சியெதிர் நின்ற விகன்முனையில் வேலுழவர்
தஞ்சிரமுந் தோளுரமுந் தாளுரமுந் தாந்துணித்தார்.

(இ-ள்.) வெஞ்சினவாளுயுமிழ = வெவ்விய கோபத்தோடு வாட்படையானதுநெருப்பினைக்கக்க ; வீரக்கழல்கலிப்ப = திருவடியிற்றரித்த வீரகண்டையானதுஒலிக்க ; நஞ்சணிகண்டர்க்கன்பர்தாமெதிர்ந்த ஞாட்பின்கண்=நஞ்சையணிந்த திருமிடற்றையுடைய சிவபிரானுக்கு அன்பராகிய ஏனாதிநாதநாயனார் தாம் எதிர்த்தபோரினிடத்து; எஞ்சியெதிர்நின்ற=(அதிசூரன்பக்கத்து இறவாதவர்களாய்)சேடித்து எதிர்நின்ற ; இகன்முனையில் வேலுழவர்தஞ்சிரமும்=பகைமுனையில்வந்த வேல்வீரர்களுடைய சிரசையும் ; தோளுரமுந்தாளுரமுந்துணித்தார்=தோளையும் மார்பையும் தாளினுடைய வலியையும் வெட்டினார்.—எ - று. தாம் - அசை. (உசு)

தலைப்பட்டா ரெல்லாருந் தனிவீரர் வாளிற்
கொலைப்பட்டார் முட்டாதார் கொல்களத்தை விட்டு
நிலைப்பட்ட மெய்யுணர்வு நேர்பட்ட போதில்
அலைப்பட்ட வார்வமுதற் குற்றம்போ லாயினார்.

(இ-ள்) தலைப்பட்டாரெல்லாரும் = அவரோடெதிர்த்து வந்தவர்களெல்லாரும் ; தனிவீரர்வாளிற்கொலைப்பட்டார் = ஒப்பற்றவீரராகிய ஏனாதிநாதநாயனாருடைய வாட்படையினாற் கொலைசெய்யப்பட்டார்கள் ; முட்டாதார்கொல்களத்தைவிட்டு=அவரை எதிர்க்காதவர்கள்போர்க்களத்தைவிட்டு ; நிலைப்பட்ட மெய்யுணர்வுநேர்பட்டபோதில் = நிலையாகியமெய்யுணர்ச்சி உதித்தகாலத்தில் ; அலைப்பட்டவார்வமுதற்குற்றம் போலாயினார்=ஓடப்பட்டகாம வெகுளிமயக்கங்கள்போலானார்கள்.—எ-று (உஎ)

மெய்யுணர்ச்சியாவது:—வீடுபேற்றிற்கு வாயிலாகிய உணர்ச்சியைமெய் யென்றும், ஏனையவற்றைப் பொய்யாய் அழியும் இயல்புடைமையால் அசத்தெனவுங்கருதவரும் உணர்வு. அம்மெய்யுணர்வு நேரிடுங்கால் அவிச்சைநீங்க அதன் காரியமாகிய அவாவெகுளிமயக்கங்கள் பொய்யாய் ஒழியப்படுதலில் ஈதவரோடு தற் குவமையாயிற்று.

இந்நிலைய வெங்களத்தி லேற்றடைந்த மானத்தாற்
றன்னுடைய பல்படைஞர் மீண்டார் தமைக்கொண்டு
மின்னொளிவாள் வீசி விறல்வீரர் வெம்புலியே
றன்னவர்த முன்சென் றதிசூர னேரடர்ந்தான்.

(இ-ள்) இந்நிலையவெங்களத்தில்=இவ்வாருனகொடியபோர்க்களத்தில் ; ஏற்றடைந்தமானத்தால்=எதிர்த்துத்தான்தோற்றுப்போன அவமானத்தால்; தன்னுடையபல்படைஞர்=தன்னுடையபலபடைவீரர்களில் ; மீண்டார்தமைக்கொண்டு = தோற்றோடித் திரும்பவந்தவர்களையெல்லாம் சேர்த்துக்கொண்டு ; மின்னொளிவாள்வீசி=மின்போல ஒளிவீசுகின்ற வாட்படையைவீசி ; விறல்வீரர்வெம்புலியேறன்னவர்தமுன்சென்று = வெற்றியினையுடைய வீரராகிய கொடியபுலியேற்றையொத்த ஏனாதிநாதநாயனுர் முன்போய் ; அதிசூரனேரடர்ந்தான் = அதிசூரனும் எதிர்த்து யுத்தஞ்செய்தான்.—எ-று. (உஅ)

மற்றவர்தஞ் செய்கை வடிவா ளொளி காணச்
சுற்றிவரும் வட்டணையிற் ரேன்ரு வகைகலந்து
பற்றியடர்க் கும்பொழுதிற் றுனும் படைபிழைத்துப்
பொற்றடந் தோள் வீரர்க் குடைந்து புறகிட்டான்.

(இ-ள்.) மற்றவர்தஞ்செய்கை = அவ்வேனாதிநாதநாயனுர் தந்தொழிலினுல் ; வடிவாளொளிகாணச்சுற்றி = கூரியவாளை ஒளிகாணும்படிவீசி ; வரும்வட்டணையிற் ரேன்ருவகைகலந்து = வருகின்றவட்டணையினிடத்து தம்முடம்பு தெரியாவகைபரிசையில்மறைந்து ; பற்றியடர்க்கும் பொழுதிற்ருனும்படைபிழைத்து = வாளைப்பிடித்து எதிர்க்கும்பொழுது அதிசூரனும் படையோடு தப்பி ; பொற்றடந்தோள்வீரர்க்குடைந்து புறகிட்டான் = அழகியபெரியதோள்களையுடைய ஏனாதிநாதநாயனுருக்குத் தோற்றோடினுன்.—எ-று. (உகூ)

போன வதிசூரன் போரிலவர்க் கழிந்த
மானமிக மீதூர மண்படுவான் கண்படான்
ஆனசெய லோரிரவுஞ் சிந்தித் தலமருவான்
ஈனமிகு வஞ்சனையால் வெல்வனென வெண்ணினுன்.

(இ-ள்.) போனவதிசூரன்=இவ்வாறுதோற்றுப்போனஅதிசூரனனவன்; போரிலவர்க்கழிந்த மானமிகமீதூர = போரில் அந்நாயனுருக்குத்தான் தோற்றதனுலுண்டாகிய மானமானது மிகவும்மேம்பட; மண்படுவான்கண்படான்=நிலத்தில் படுத்திருக்கின்றவன் உறங்காதவனுய் ; ஆனசெயல்=தான் தோல்வியடைந்தசெய்கையை ; ஓரிரவுஞ்சிந்தித்தலமருவான் = ஓரிராமுழுதும்யோசித்துமனம்வருந்துகின்றவன்; ஈனமிகுவஞ்சனையால்=குற்றம்மிகுந்த கபடமார்க்கத்தால்; வெல்வனெனவெண்ணினுன் = இவனைவெல்லவேணுமென்று தன்னுள்நினைந்தான்.—எ-று. (௩௦)

சேட்டாருங் கங்குல் புலர்காலைத் தீயோனு
நாட்டாரைக் கொல்லாதே நாமிருவேம் வேறிட்டு
வாட்டாயங் கொள்போர் மலைக்க வருகவெனத்
தோட்டார்பூந் தாரர்க்குச் சொல்லிச் செலவிட்டான்.

(இ-ள்.) சேட்டாருங்கங்குல்புலர்காலை=மிக்க இருள்விடியுஞ்சமயத்து; தீயோனு நாட்டார்ரைக்கொல்லாது = தீயோனாகிய அதிசூரனும் நாட்டிலுள்ளவர்களை (நமக்காக)அழைத்துக்கொல்லாமல் ; நாமிருவேம்வேறிடத்து=நாமிருவேமும்தனியிடத்தில் ; வாட்டாயங்கொள்போர் மலைக்கவருகவென=வாள்வித்தை பயிற்றும் தொழிலுரிமையைக் கொள்ளுதற்குக்காரணமான போரைச்செய்ய நீர் வரவேணுமென்று ; தோட்டார்பூந்தாரார்க்கு = இதழ்நிறைந்தமலர் மாலையையணிந்த ஏனாதிநாதநாயனாருக்கு ; சொல்லிச்செலவிட்டான் = சொல்லியனுப்பினான்.—எ-று. ஏ - அசை. (௩௧)

சேட்டார்தோட்டாரென அல்வழிக்கண் டகரம் இரட்டியது.

இவ்வாறு கேட்டலுமே யேனாதி நாதனார்
அவ்வாறு செய்த லழகிதென வமைந்து
கைவா ளமர்விளைக்கத் தான்கருது மக்களத்தில்
வெவ்வா ளுரவோன் வருகவென மேற்கொள்வார்.

(இ-ள்.) இவ்வாறு கேட்டலும் = இவ்வாறு அதிசூரன் கூறியவார்த்தையைக்கேட்டவுடன்; ஏனாதிநாதனார்=ஏனாதிநாதநாயனார்;அவ்வாறுசெய்தல்=அவன்கூறியவாறுசெய்வது ; அழகிதெனவமைந்து = அழகென்று அதற்குடன்பட்டு ; கைவாளமர்விளைக்கத்தான் கருதுமக்களத்தில் = கையிற்றாங்கிய வாட்படையினால் போர்செய்யும்படி அவ்வதிசூரன்குறித்த அப்போர்க்களத்தில் ; வெவ்வாளுரவோன்=கொடியவாளையுடையவலியோனாகிய அவன் ; வருகவெனமேற்கொள்வார் = வரக்கடவன்என்றுஅவன்கூற்றைமேற்கொள்வாராயினார்.—எ-று.

ஏ - அசை.

சுற்றத்தார் யாரு மறியாவகை சுடர்வாள்
பொற்பலகை யுந்தாமே கொண்டு புறம்போந்து
மற்றவன்முன் சொல்லி வரக்குறித்த வக்களத்தே
பற்றலனை முன்வரவு பார்த்துத் தனிநின்றார்.

(இ-ள்.) சுற்றத்தார்யாருமறியாவகை = தம்முடைய சுற்றத்தார் யாவரும் தம்செலவை அறியாமலிருக்கும்படி ; சுடர்வாள்பொற் பலகையுந் தாமே கொண்டு=ஒளிவீசுகின்ற வாளாயுதத்தையும் அழகிய பரிசையையும் தாமேஎடுத்துக்கொண்டு ; புறம்போந்து = புறம்பேசென்று ; மற்றவன்முன்சொல்லிவரக்குறித்த வக்களத்தே=அவ்வதிசூரன் முன்போர்க்குவரும்படி சொல்லிக்குறிப்பித்த அப்போர்க்களத்தில்;பற்றலனை முன்வரவுபார்த்து=பகைவனாகிய அதிசூரனுடையவரவை எதிர்பார்த்துக்கொண்டு ; தனிநின்றார்=தனியேநின்றார்.—எ-று.(௩௨)

ஏகாரம் - தேற்றம்.

தீங்கு குறித்தழைத்த தீயோன் றிருநீறு
தாங்கிய நெற்றியினார் தங்களையே யெவ்விடத்தும்
ஆங்கவருந் தீங்கிழையா ரென்ப தறிந்தானுய்ப்
பாங்கிற் றிருநீறு பண்டு பயிலாதான்.

(இ-ள்.) தீங்குகுறித்தழைத்ததீயோன்=வஞ்சத்தைத் தன்மனதிற்குறித்து அந்நாயனாரைப் போர்க்கழைத்த அதிசூரன்; திருநீறுதாங்கிய நெற்றியினார்தங்களையே = விபூதியணிந்த நெற்றியினையுடைய அடியார்களை; எவ்விடத்தும் ஆங்கவருந்தீங்கிழையா ரென்பதறிந்தானாய்=பகைவராய்வந்து எதிர்த்தழியும் அவ்வேனாதிநாதநாயனார் தீங்குசெய்யமாட்டாரென்பதை நெடுநாட்பயின்று அறிந்தவனாய்; பாங்கிற்றிருநீறுபண்டுபயிலாதான் = நன்மையோடு விபூதியை முன்னாளில் ஓர்நாளேனுந் தரியாதவன்.—எ-று. (௬௪)

வெண்ணீறு நெற்றி விரவப் புறம்பூசி
யுண்ணெஞ்சில் வஞ்சக் கறுப்பு முடன்கொண்டு
வண்ணச்சுடர்வாண் மணிப்பலகை கைக்கொண்டு
புண்ணியப் போர்வீரர்க்குச் சொன்ன விடம்புகுந்தான்.

(இ-ள்.) வெண்ணீறுநெற்றி விரவப்புறம்பூசி=வெண்மையாகிய விபூதியை நெற்றியினிடத்துப் பொருந்தும்படி பூசிப் புறத்தும்பூசி; உண்ணெஞ்சில் வஞ்சக்கறுப்புமுடன்கொண்டு=நெஞ்சினுள்ளே வஞ்சனையாகிய ஓர்களங்கத்தையும் உடனே வைத்துக்கொண்டு; வண்ணச்சுடர்வாள்=அழகிய ஒளியினையுடைய வாட்படையையும்; மணிப்பலகைகைக்கொண்டு = மணிகளழுத்திய பரிசையையுங்கையிலே பிடித்துக்கொண்டு; புண்ணியப்போர்வீரர்க்கு = புண்ணியராகிய போர்த்தொழிலில் வீரப்பாடுடைய ஏனாதிநாதநாயனாருக்கு; சொன்னவிடம் புகுந்தான்=குறித்துச்சொல்லுவித்த இடத்தில் தானும்சேர்ந்தான்.—எ-று. (௬௫)

பூசி என்றது முன்னுங்கூட்டப்பட்டது. இவ்விரண்டுங்குளகம்.

வென்றி மடங்கல் விடக்குவர முன்பார்த்து
நின்றாற் போனின்ற நிலைகண்டு தன்னெற்றி
சென்று கிடைப்பளவுந் திண்பலகை யான்மறைத்து
முன்றனி வீரர்க்கெதிரே மூண்டான் மறம்பூண்டான்.

(இ-ள்.) வென்றிமடங்கல்=வெற்றியினையுடைய சிங்கேறானது; விடக்குவரமுன்பார்த்து=தனக்கு மாமிசவுணவுக்குரிய விலங்குவருதலை எதிர்பார்த்து; நின்றாற்போனின்ற நிலைகண்டு=நின்றாற்போல நாயனார் தன்வரவை எதிர்பார்த்து நின்றநிலையை அதிசூரன்கண்டு; தன்னெற்றிசென்று கிடைப்பளவும்=தன்னுடைய நெற்றியைத்தான் அவரைக்கிட்டி எதிர்க்குமளவும்; திண்பலகையான் மறைத்து=திண்ணியபரிசையினால் மறைத்துக்கொண்டு; முன்றனி வீரர்க்கெதிரே=முதன்மையினையுடைய ஒப்பற்றவீரராகிய ஏனாதிநாதநாயனாருக்கெதிராக; மூண்டான்மறம்பூண்டான்=வஞ்சனைபூண்ட அதிசூரன் முடுகிச்சென்றான்.எ-று

விடக்கு ஆகுபெயர்.

அடல்விடையே றென்ன வடர்த்தவனைக் கொல்லும்
இடைதெரிந்து தாள்பெயர்க்கு மேனாதி நாதர்
புடைபெயர்ந்த மாற்றான் பலகை புறம்போக்கக்
கடையவன்ற னெற்றியின்மேல் வெண்ணீறு தாங்கண்டார்.

(இ-ள்.) அடல்விடையேறென்ன=வலியினையுடைய இடபேறுபோல; அடர்த்தவனைக்கொல்லு மிடைதெரிந்து =நெருக்கி அவ்வதிசூரனைக்கொல்லும் சமயத்தைநோக்கி; தாள்பெயர்க்கு மேனாதிநாதர்=தன் திருவடியை மாறிவைக்கும் ஏனாதிநாதநாயனார்; புடைபெயர்ந்தமாற்றான்=தன் அருகில் கிட்டிச்சென்ற பகைவனாகிய அதிசூரன்; பலகைபுறம்போக்க=தன்முகத்தைமறைத்த பரிசையைப்புறம்பே எடுக்க; கடையவன்ற னெற்றியின்மேல்=கீழ்மகனாகிய அவ்வதிசூரனுடைய நெற்றியினிடத்து; வெண்ணீறு தாங்கண்டார்=வெள்ளிய விபூதியைத்தாம் பார்த்தார்.—எ-று. (கஎ)

தாள்பெயர்தல் = மாற்றான்வருங்கால் அவனெதிர் அடிமாறிப்பாய்ந்து செல்லுதல்.

கண்டபொழுதே கெட்டேன் முன்பிவர்மேற் காணாத
வெண்டிருநீற் றின்பொலிவு மேற்கண்டேன் வேறினியென்
அண்டர்பிரான் சீரடியா ராயினா ரென்றுமனங்
கொண்டிவர் தங் கொள்கைக் குறிவழிநிற் பேனென்று.

(இ-ள்.) கண்டபொழுதே =அவ்வாறு அவனை விபூதியுடையனாகப்பார்த்த பொழுதே; கெட்டேன் முன்பிவர்மேற்காணாத = கெட்டேன் முன்னே இவருடம்பில் காணப்படாத; வெண்டிருநீற்றின்பொலிவு = வெள்ளிய விபூதியின் பொலிவை; மேற்கண்டேன் வேறினியென் = இப்பொழுது பார்த்தேன் வேறு கருதவேண்டியது யாதுமில்லை; அண்டர்பிரான் சீரடியாராயினாரென்று= சிவபிரான் திருவடியாராயினாரிவரென்று; மனங்கொண்டு = மனதிற்குறித்து; இவர்தங்கொள்கைக்குறிவழி=இவர் உட்கொண்ட மனக்குறிப்பின்வழியில்; நிற்பேனென்று=யான்நிற்றற்குரியேனெனக்கருதி.—எ-று. (கஅ)

இவரடியாராயினாராதலின் இவரோடெதிர்த்தல் பிழையாமெனா அதற்குப் பரிந்து கெட்டேனென்றும், இவர்க்கடிமைபூண்டு நிற்றலேயன்றிப் பகைமேற்கொண்டொழுகுதல் தகாதென்னுங்கருத்தால் வேறினியென்னென்றுங்கூறினார்.

கைவா ளுடன்பலகை நீக்கக் கருதியது
செய்யார் நிராயுதரைக் கொன்றா ரெனுந்தீமை
யெய்தாமை வேண்டு மிவர்க்கென் றிரும்பலகை
நெய்வா ளுடனடர்த்து நேர்வார்போ னேர்நின்றார்.

(இ-ள்.) கைவாளுடன்பலகை நீக்கக்கருதியதுசெய்யார் = கையிலிருக்கின்றவாளோடு பரிசையையும்விட்டு விடமுன்நினைந்து பின்அதைச்செய்யாதவராய்; இவர்க்கு நிராயுதரைக்கொன்றாரெனுந்தீமை = இவ்வடியாருக்கு நிராயுதரைக்கொன்றா ரென்கின்றபழிச்சொல்; எய்தாமைவேண்டுமென்று=அடையாதிருக்கவேண்டுமென்று; இரும்பலகை நெய்வாளுடன்=பெரியபரிசையும்வாளுமாகிய இவைகளோடு; அடர்த்துநேர்வார்போனேர்நின்றார் = அவனோடெதிர்த்துநிற்பாரைப்போல அவனெதிரில்நின்றார்.—எ-று. இவ்விரண்டுங்குளகம்.()

அந்நின்ற தொண்டர் திருவுள்ள மாரறிவார்
முன்னின்ற பாதகனுந் தன்கருத்தே முற்றுவித்தான்
இந்நின்ற தன்மை யறிவா ரிவர்க்கருள
மின்னின்ற செஞ்சடையார் தாமே வெளிநின்றார்.

(இ-ள்.) அந்நின்றதொண்டர் = அவ்வாறு நின்ற ஏனாதிநாதநாயனாருடைய; திருவுள்ளமாரறிவார் = திருவுள்ளக் குறிப்பையாரறிந்து சொல்லவல்லவர்கள்; முன்னின்றபாதகனும் = அவரெதிரில்நின்ற பாதகனாகிய அதிசூரனும்; தன்கருத்தேமுற்றுவித்தான் = தான்கருதிய எண்ணப்படி நிறைவேற்றினான்; இந்நின்ற தன்மை = இவ்வாறு நின்றநிலைமையை; அறியார்மின்னின்ற செஞ்சடையார்இவர்க்கருள = அறிந்தவராகிய மின்போலப் பிரகாசிக்கின்ற சிவந்த சடையையுடையசிவபிரான் இவர்க்கருள் செய்யும்படி; தாமேவெளிநின்றார் = தாமேவலியவெளிப்பட்டுக் காட்சிகொடுத்தருளினார்.—எ-று. (௪0)

மாற்றானை மாற்றானெனவும் நீறுசாத்தியமை வஞ்சமென்றுங் கருதாது நிராயுதரைக் கொன்றபழி அவர்க்குவருதல்தகாதெனநிற்றலில் அந்நின்றதொண்டரென்றும், அவர்கருத்து நலஞ்சிறந்த அடியார் மேல்வைத்த பத்திவலைவால் அவ்வேடத்தினும்வேறுபாடின்றித் தற்செயலறுத்துத் திருவருள்வழித்தாய்நிற்றலில் ஆரறிவாரென்றும், அவருள்ளத்து விரவி உடனின்று அறியும்முதல்வர் என்பதுவிளக்கிய இந்நின்றதன்மை யறிவாரென்றும், இவ்வாறானமெய்ப்பத்தி கண்டுழி வெளிப்பட்டருளுங் குணமுடைய ரென்பது தோன்ற அருள என்றும், பத்திகண்டுழிதரியாது சடுதியில்வெளிப்பட்டார் என்பார்தாமேவெளிநின்றாரென்றுங்கூறினர். வெளிநின்றார் என்றதனால் பிராணன்நீங்கும் பிற்கணத்துதிக்கும் அருவுடம்பிற்குக் காட்சிகொடுத்தருளினாரென்பது கருத்தாகக்கொள்க.

மற்றினிநாம் போற்றுவதென் வானோர்பி ரானருளைப்
பற்றலர்தங் கைவாளாற் பாச மறுத்தருளி
யுற்றவரை யென்று முடன்பிரியா வன்பருளிப்
பொற்றொடியாள் பாகனார் பொன்னம் பலமணைந்தார்.

(இ-ள்.) இனிநாம்போற்றுவதென் = இனிநாம்வேறு துதிக்கவேண்டியதென்ன ஒன்றுமில்லை; பற்றலர்தங்கைவாளால் = மாற்றானுடையகைவாளினால்; பாசமறுத்தருளி = பாசத்தைநீக்கியருளி; வானோர்பிரானருளையுற்றவரை = சிவபிரான்திருவருளையடைந்த ஏனாதிநாதநாயனாரை; பொற்றொடியாள்பாகனார் = அச்சிவபிரானார்; என்றுமுடன்பிரியாவன்பருளி = எந்நாளும் தம்மோடுநீங்காதிருந்து வாழும் அன்பினைக்கொடுத்து; பொன்னம்பலமணைந்தார் = சிதம்பரத்தில்புகுந்தருளினார்.—எ-று. மற்று - அசை. (௪௧)

தம்பெருமான் சாத்துந் திருநீற்றுச் சார்புடைய
எம்பெருமா னேனாதி நாதர் கழலிறைஞ்சி
யும்பர்பிரான் காளத்தி யுத்தமர்க்குக் கண்ணப்ப
நம்பெருமான் செய்தபணி நாந்தெரிந்த வாறுரைப்பாம்.

(இ-ள்.) தம்பெருமான் சாத்துந்திருநீற்றுச்சார்புடைய = தம்முதல்வராகிய சிவபிரானார்பூசிய திருநீற்றின்மேல் மெய்ச்சார்பானமெய்ப்பத்தியுடைய; எம்பெருமானேனாதிநாதர்கழலிறைஞ்சி = எம்பிரானாகியஏனாதிநாதநாயனார்




ஏனாதிநாதநாயனார் அரசர்க்கு வாள்வித்தைபயிற்றுவிப்பதினால்வருமூதியம் சிவனடியார்க்களிக்கப்பெருகக்கண்ட அதிசூரனு தியகுறைபடுதலையுணர்ந்து போருக்கழைத்ததிலிளைத்துப் பின்வஞ்சனையால் வெல்லத்தன் நெற்றியில் திருநீறுதரித்துப்போர்க்களத்துத்தன் கருத்தைநிறைவேற்றியது.

வீரக்கழலையணிந்த திருவடிகளைவணங்கி ; உம்பர்பிரான்காளத்தி யுத்தமர்க்கு = தேவர்பிரானாகிய திருக்காளத்தியின் கண்வாழும் சிவபிரானுக்கு ; கண்ணப்பநம்பெருமான்செய்தபணி = கண்ணப்பநாயனாராகிய நமதுபிரானார் செய்ததிருத்தொண்டை ; நாந்தெரிந்தவாறுரைப்பாம் = நாம் அறிந்தவாறுசொல்வாம்.—எ-று.

ஏனாதிநாதநாயனார்புராணம் முற்றிற்று.

ஆ௳ திருவிருத்தம் ௬௪௧.

---

திருச்சிற்றம்பலம்.

## கண்ணப்பநாயனார் புராணம்.

---

மேவலர் புரங்கள்செற்ற விடையவர் வேதவாய்மைக்
காவலர் திருக்காளத்திக் கண்ணப்பர் திருநாடென்ப
நாவலர் புகழ்ந்துபோற்று நல்வளம் பெருகிநின்ற
பூவலர் வாவிசோலை சூழ்ந்தபோத் தப்பிநாடு.

(இ-ள்.) மேவலர் புரங்கள்செற்ற விடையவர் = பகைவர்களதுமுப்புரத்தை எரித்தருளிய இடபத்தை வாகனமாகக்கொண்டவரும்; வேதவாய்மைக்காவலர் = வேதத்திற்கூறும் மெய்க்கடவுளும் ஆகிய சிவபிரான்வீற்றிருந்தருளும்; திருக்காளத்திக்கண்ணப்பர் திருநாடென்ப = திருக்காளத்தி என்னுந் திருப்பதியில் பேறுபெற்ற கண்ணப்பநாயனாரது திருநாடென்று அறிஞர்கூறுவர் ; நாவலர்புகழ்ந்துபோற்றும் = கவிவாணர்களாற் புகழ்ந்து துதிக்கத்தக்க; நல்வளம்பெருகிநின்ற = நல்லவளத்தில்நிறைவடைந்து நிலைபெற்ற ; பூவலர்வாவிசோலைசூழ்ந்தபோத்தப்பிநாடு = பூக்கள் மலர்ந்தவாவிகளும் சோலைகளும் சூழ்ந்தபோத்தப்பிநாட்டை.—எ-று. (௧)

கவிவாணராவார் = சமயகுரவர் மூவரும் நக்கீரர்முதலியோரும் என்க. போத்தப்பிநாடு கண்ணப்பர்திருநாடென்ப எனஇயையும்.

இத்திரு நாடுதன்னி லிவர்திருப் பதியாதென்னி
னித்தில வருவிச்சார னீள்வரை சூழ்ந்தபாங்கர்
மத்தவெங் களிற்றுக்கோட்டு வன்றொடர் வேலிகோலி
ஒத்தபே ரரணஞ்சூழ்ந்த முதுபதி யுடுப்பூராகும்.

(இ-ள்.) இத்திருநாடுதன்னில் = இத்தன்மையினையுடைத்தாகிய திருநாட்டின்கண் ; இவர்திருப்பதியாதென்னில் = இக்கண்ணப்பநாயனார் அவதரித்தருளிய திருப்பதியாதென்று கேர்வினவில் ; நித்திலவருவிச்சாரல் = முத்துக்களை வாரிக்கொண்டு வருகின்றஅருவியோடுகூடிய மலைப்பக்கங்களையுடைய ; நீள்வரைசூழ்ந்தபாங்கர் = நீண்டமலைகள் சூழ்ந்தஇடத்தில் ; மத்தவெங்களிற்றுக்கோட்டு = மதம்பொழிகின்ற கொடிய யானைக்கொம்பினால் ; வன்றொடர்வேலிகோலி = மிக்க பிணிப்பினையுடைய வேலிகளைவளைத்து ; ஒத்தபேரரணஞ்சூழ்ந்து = நிரையொ

த்தபெரிய காட்டரணல் சூழப்பட்ட ; முதுபதியுடுப்பூராகும்=பழையவூராகிய உடுப்பூரென்று சொல்லப்படும்.—எ-று. (உ)

குன்றவ ரதனில்வாழ்வார் கொடுஞ்செவி ஞமலியார்த்த
வன்றிறல் விளவின்கோட்டு வார்வலை மருங்குதூங்கப்
பன்றியும் புலியுமெண்குங் கடமையு மானின்பார்வை
அன்றியும் பாறைமுன்றி லைவன முணங்குமெங்கும்.

(இ-ள்.) குன்றவரதனில்வாழ்வார் = அவ்வூரில்வாழ்கின்றவர்கள் குறவர்கள் ; கொடுஞ்செவிஞமலியார்த்த = கொடியசெவிகளையுடைய நாய்களைக்கட்டிய ; வன்றிறல் விளவின்கோட்டு = மிக்கவலியினையுடைய விளாமரத்தினது கொம்புகளில் ; வார்வலைமருங்குதூங்க = வாராற்பின்னியவலைகள் அருகில்தூக்கியிருக்க ; பன்றியும் புலியுமெண்கும் = பன்றியும் புலியும் கரடியும் ; கடமையுமானின் பார்வையன்றியும்=கடமை மிருகமும் ஆகிய விலங்கின்பார்வை மிருகங்கள்வாழ்தலன்றியும் ; பாறைமுன்றில் ஐவனமுணங்கு மெங்கும்=பாறையாயிருக்கின்ற தம்முற்றங்களில் தினைகளும் எவ்விடத்தும்காய்ந்துகொண்டிருக்கும். எ-று. (ந)

வன்புலிக் குருளையோடும் வயக்கரிக் கன்றினோடும்
புன்றலைச் சிறுமகார்கள் புரிந்துட னாடலன்றி
அன்புறு காதல்கூர வணையுமான் பிணைகளோடும்
இன்புற மருவியாடு மெயிற்றியர் மகளிரெங்கும்.

(இ-ள்.) வன்புலிக் குருளையோடும்=வலியபுலிக்குட்டிகளோடும் ; வயக்கரிக்கன்றினோடும் = வெற்றியினையுடைய யானைக்கன்றுகளோடும்; புன்றலைச் சிறுமகார்கள்=புல்லியதலையையுடைய வேடர்சிறுவர்கள்; புரிந்துடனாடலன்றி= விரும்பிவிளையாடுதலேயன்றி ; அன்புறுகாதல்கூர=அன்பும் மிக்ககாதலும் அதிகப்படும்படி; அணையுமான்பிணைகளோடும்=தம்மிடத்துவரும் பெண்மான்களோடும் ; இன்புறமருவியாடும்=இன்பமுண்டாகும்படித்தழுவி விளையாடுகின்ற ; எயிற்றியர்மகளிரெங்கும் = வேடச்சிறுமிகள் எவ்விடத்தும்உளர்.—எ-று. (ச)

ஈண்டுபுன்றலையென்றது எண்ணெய்தேயாது வெயில்வெப்பத்தால் சிவப்படைந்த மயிருடைமைபற்றி. வேடச்சிறுமிகள் தினைக்கதிர்முதலிய உணவுகளைக்கொடுத்தலால் அப்பயிற்சிநோக்கி அவரைக்கண்டுழி அம்மான்பிணைகள் தாமே வருதலில் அணையுமான்பிணைகளென்றார்.

வெல்படைத் தறுகண்வெஞ்சொல் வேட்டுவர் கூட்டந்தோறுங்
கொல்லெறி குத்தென்றார்த்துக் குழுமிய வோசையன்றிச்
சில்லரித் துடியுங்கொம்புஞ் சிறுகணு குளியுங்கூடிக்
கல்லெனு மொலியின்மேலுங் கறங்கிசை யருவியெங்கும்.

(இ-ள்.) வெல்படைத்தறுகண்வெஞ்சொல் = பகைவர்களை வெல்லத்தக்க ஆயுதங்களையும் வன்கண்மையையும் கொடுஞ்சொல்லையுமுடைய; வேட்டுவர்

கூட்டந்தோறும் = வேடர்களது கூட்டமிருக்குமிடங்களில் ; கொல்லெறிகுத் தென்றார்த்து = இதைக்கொல் இதைவளைதடிமுதலியவற்றாலெறி இதை ஈட்டி முதலியவற்றாற் குத்தென்று ஆரவாரித்தலால் ; குழுமியவோசையன்றி = கூடி எழுந்த ஓசையேயல்லாமல் ; சில்லரித்துடியுங்கொம்பும் = சிறிய உருக்குப்பரல் களைப்போட்டிருக்கும் உடுக்குகளும்கொம்புவாத்தியமும்; சிறுகணுருளியுங்கூடி= சிறியகண்ணையுடைய சிறுபறையும்திரண்டு ; கல்லெனுமொலியின்மேலும் = கல் லென்று ஒலிக்கும் ஒலியினும்மிக்கு;கறங்கிசையருவியெங்கும்=ஒலிக்கின்றஇசை யையுடைய அருவி எவ்விடத்துமிருக்கும்.—எ-று. (௫)

அரி = தண்டைவெண்டையம் முதலியவற்றிலிடும் உருக்குப்பரல்கள். வெங்கலத்தாற்செய்த உடுக்கில்அரியிடப்படுதலில் சில்லரித்துடிஎன்றார். அன்றி ஆகுபெயரால் அவ்வுருக்குப் பரல்களையுடைய வெண்டையங்கள்கட்டிய உடுக் கெனினுமமையும்.

ஆறலைத் துண்ணும்வேட ரயற்புறங் கவர்ந்துகொண்ட
வேறுபல் லுருவின்மிக்கு விரவுமா னிரைகளன்றி
ஏறுடை வானந்தன்னி லிடிக்குர லெழிலியோடு
மாறுகொண் முழக்கங்காட்டு மதக்கைம்மா நிரைகளெங்கும்.

(இ-ள்.) ஆறலைத்துண்ணும்வேடர் = (வழியிற்செல்வாரை) கூறைகொ ண்டு அவ்வருவாயால் சீவனஞ்செய்கின்றவேடர்கள் ; அயற்புலங் கவர்ந்து கொண்ட=அயல்நாடுகளிற்போய் கொள்ளைகொண்டுவந்த ; வேறுபல் லுருவின் மிக்கு = வேறுபாடான பலநிறத்தோடுகூடி ; விரவுமானிரைகளன்றி = நெருங் கிய விலங்கின்தொகுதிகளேயல்லாமல் ; ஏறுடைவானந்தன்னில் =உயர்வாகிய ஆகாயத்தில் ; இடிக்குரலெழிலியோடு = இடியிடிக்கும் ஒலியையுடைய மேகங் களோடு ; மாறுகொண்முழக்கங்காட்டும் = மாறுபட்டபிளிறொலியைக் காட்டு கின்ற ; மதக்கைம்மாநிரைகளெங்கும் = மதஞ்சொரிகின்ற துதிக்கையினையுடை யயானைக்கூட்டங்க ளெவ்விடத்துமிருக்கின்றன.—எ-று. (௬)

மைச்செறிந் தனையமேனி வன்றொழின் மறவர்தம்பால்
அச்சமு மருளுமென்று மடைவிலா ருடைவன்றோலார்
பொச்சையி னறவுமூனின் புழுக்கலு முணவுகொள்ளு
நச்சழற் பகழிவேடர்க் கதிபதி நாகனென்பான்.

(இ-ள்.) மைச்செறிந்தனையமேனி = மைக்குழம்புதிரண்டாற்போலும் உடம்பினையும் ; வன்றொழின்மறவர் = கொடிய கொலைத்தொழிலையும் உடைய வேடர்கள் ; தம்பாலச்சமுமருளுமென்று மடைவிலார் = தம்மிடத்துப்பயமும் பிற உயிர்மேல்அருளும் எந்நாளும் இல்லாதவர்கள் ; உடைவன் றோலார் = வலியதோலுடையை உடையவர்கள் ; பொச்சையினறவும் = காடுகளில் தேடி எடுக்கும்தேனையும் ; ஊனின்புழுக்கலு முணவுகொள்ளும்=விலங்குகளின் தசை யோடுகூடிய மலைநெல்முதலிய வற்றாலாயசோற்றையும் உணவாகக்கொள்கின்ற; நச்சழற்பகழிவேடர்க்கு=நஞ்சுபோலும் அழல்வீசுகின்ற அம்புகளையுடைய அவ்

வேடர்களுக்கு ; அதிபதிநாகனென்பான் = அரசனுவான் யாரெனில் நாகனென்று சொல்லப்படுவான்.—எ-று. (எ)

மைச்செறிந்தென அல்வழிக்கண் ஐகாரவீற்று வல்லெழுத்துமிக்கு நின்றது.

பெற்றியாற் றவமுன்செய்தா னாயினும் பிறப்பின்சார்பாற்
குற்றமே குணமாவாழ்வான் கொடுமையே தலைநின்றுள்ளான்
விற்றொழில் விறலின்மிக்கான் வெஞ்சின மடங்கல்போல்வான்
மற்றவன் குறிச்சிவாழ்க்கை மனைவியுந் தத்தையென்பாள்.

(இ-ள்.) பெற்றியாற்றவமுன் செய்தானாயினும் = இயல்பால்தவத்தை முற்பிறப்பில் செய்தவனாயிருந்தாலும் ; பிறப்பின்சார்பால் = தான்பிறந்த வேடச்சாதிக்குரிய ஒழுக்கத்தால் ; குற்றமே குணமாவாழ்வான் = தீத்தொழிலையேதற்செய்கையாகக்கொண்டு ஒழுகுகின்றவன் ; கொடுமையேதலைநின்றுள்ளான் = கொடுமைசெய்தலையே முதன்மையான தருமமாகக்கருதுகின்றவன் ; விற்றொழில்விறலின்மிக்கான் = விற்றொழிலிலும் வலிமையிலும் மிக்கவன் ; வெஞ்சினமடங்கல்போல்வான் = கொடியகோபத்தையுடைய சிங்கேற்றையொத்தவன் ; அவன்குறிச்சிவாழ்க்கை = அந்நாகனுடைய சிற்றூரின் அரசுரிமைக்குரியவாழ்க்கைத்துணையாகிய ; மனைவியுந்தத்தையென்பாள் = மனையாளுந்தத்தையென்று சொல்லப்படுவாள்.—எ-று. மற்று - அசை. (அ)

உம்மைஇரண்டில்முன்னையது உயர்வு சிறப்பு பின்னையது இறந்தததழீஇயது. ஏகாரம் இரண்டும்தேற்றம். கண்ணப்பநாயனாரைத்தனக்குப்புத்திரனாகப்பெறுந்தவம் முன்செய்தானென்பது விளக்கிய பெற்றியாற்றவமுன்செய்தானென்றார்.

அரும்பெறன் மறவர்தாயத் தான்றதொல் குடியில்வந்தாள்
இரும்புலி யெயிற்றுத்தாலி யிடையிடை மனவுகோத்துப்
பெரும்புற மலையப்பூண்டாள் பீலியுங் குழையுந்தட்டச்
சுரும்புறு படலைமுச்சிச் சூரரிப் பிணவுபோல்வாள்.

(இ-ள்.) அரும்பெறன் மறவர்தாயத்தான்றதொல் குடியில்வந்தாள் = அவள் வேடச்சாதிகளுள் உயர்ந்தபழமையாகிய குடிப்பிறப்பில் பெறுதற்கரிய சிறப்பினையுடையவளாய்ப்பிறந்தவள் ; இரும்புலியெயிற்றுத்தாலி = பெரியபுலியினதுபல்லாலாகியதாலியின் ; இடையிடைமனவுகோத்து = இடையிடையேபலகரைகளைக்கோத்து ; பெரும்புறமலையப் பூண்டாள் = பெரியமுதுகின் பக்கத்தலையும்படி பூண்டுகொண்டவள் ; பீலியுங்குழையுந்தட்ட = மயிற்பீலியுந் தழைகளும் ஒன்றோடொன்றுதாக்க ; சுரும்புறுபடலைமுச்சி = வண்டுகள் விழுகின்ற மாலையைத்தரித்த உச்சிக்கொண்டையையுடைய ; சூரரிப்பிணவுபோல்வாள் = அச்சத்தைக்கொடுக்கும் பெண்சிங்கத்தைப்போலச் செல்பவள்.—எ-று. (கூ)

போல்வாளென்றது ஈண்டுநடையுவமம் - தட்டல் = மோதல்.

பொருவருஞ் சிறப்பின்மிக்கா ரிவர்க்கினிப் புதல்வர்ப்பேறே
அரியதென் றெவருங்கூற வதற்படு காதலாலே
முருகல ரலங்கற்செவ்வேன் முருகவேண் முன்றிற்சென்று
பரவுதல் செய்துநாளும் பராய்க்கட னெறியினிற்பார்.

(இ-ள்.) பொருவருஞ்சிறப்பின்மிக்கார்=ஒப்பிடுதற்கரிய சிறப்பினால்மிக்காராகிய ; இவர்க்கினிப் புதல்வர்ப்பேறே=இவ்விருவருக்கும் இனிபுத்திரப்பேறொன்றே ; அரியதென்றெவருங்கூற=இல்லையென்று கண்டார்யாவரும்எடுத்துச்சொல்ல ; அதற்படுகாதலால்=அப்புத்திரப்பேற்றின்வாஞ்சையினால் (அவ்விருவரும்) ; முருகலரலங்கற்செவ்வேல்=வாசனைவிண்டு அலர்கின்ற கடப்பம்பூமாலையை யணிந்த சிவந்தவேற்படையையுடைய ; முருகவேண்முன்றிற்சென்று= முருகக்கடவுளின் சந்நிதியிற்போய் ; பரவுதல்செய்துநாளும் = துதிசெய்துஎந்நாளும் ; பராய்க்கடனெறியினிற்பார்=வழிபட்டுவரும் முறைமையில் நிற்பாராயினார்.—எ-று. (கo)

ஏகாரம் இரண்டில்முன்னையது தேற்றம்பின்னையதுஅசை.

வாரணச் சேவலோடும் வரிமயிற் குலங்கள்விட்டுத்
தோரண மணிகடூக்கிச் சுரும்பணி கதம்பநாற்றிப்
போரணி நெடுவேலார்க்குப் புகழ்புரி குரவைதூங்கப்
பேரணங் காடல்செய்து பெருவிழா வெடுத்தபின்றை.

(இ-ள்.) வாரணச்சேவலோடும்=கோழிச்சேவல்களோடும் ; வரிமயிற்குலங்கள்விட்டு=புள்ளிகளையுடைய மயிற்றொகுதிகளைப் பிரார்த்தனையாகச்செலுத்தி ; தோரணமணிகடூக்கி=தோரணங்களாகமணிகளைக்கட்டி ; சுரும் பணிகதம்பநாற்றி=வண்டுகள்வரிசையாக மொய்த்தகடம்பமாலைகளைத்தூக்கி ; போரணி நெடுவேலார்க்கு=போர்செய்தலையேதனக்குச் சிறப்பாகக்கொண்ட நீண்டவேற்படையையுடையமுருகக்கடவுளுக்கு ; புகழ்புரி *குரவைதூங்க=புகழ்ச்சியைவிரும்பியகுரவைக்கூத்தாட ; பேரணங்காடல்செய்து = பெரியதேவராட்டியை வெறியாட்டயர்வித்து ; பெருவிழாவெடுத்தபின்றை = மிக்கதிருவிழாவைநடத்தியபின்பு.—எ-று. (கக)

பயில்வடுப் பொலிந்தயாக்கை வேடர்தம் பதியாநாகற்
கெயிலுடைப் புரங்கள்செற்ற வெந்தையார் மைந்தரான
மயிலுடைக் கொற்றவூர்தி வரையுரங் கிழித்ததிண்மை
அயிலுடைத் தடக்கைவென்றி யண்ணலா ரருளினாலே.

(இ-ள்.) பயில்வடுப் பொலிந்தயாக்கை = பகைவராலும் விலங்குகளாலும் உண்டாகிய தழும்புகள் நிறைந்தஉடம்பினையுடைய ; வேடர்தம்பதியாநாகற்கு = வேடர்களுக்கு அரசனாகிய நாகனுக்கு ; எயிலுடைப்புரங்கள்செற்ற = மதில்களோடு கூடிய முப்புரங்களையும் எரித்தருளிய ; எந்தையார்மைந்தரான= எமதுசிவபிரான் திருக்குமாரராகிய; மயிலுடைக்கொற்றவூர்தி=மயிலாகியவெற்

*குரவை காமமும்வென்றியும் அடைவோர்வாயாலொலித்துக்கைகோத்தாடல்.

தியினையுடையவூர்தியையும் ; வரையுரங்கிழித்ததிண்மை=கிரவுஞ்சமலையின்வலிமைகெடும்படி பிளந்ததிண்மையான ; அயிலுடைத்தடக்கை = வேற்படைதங்கிய விசாலமாகிய திருக்கரத்தையும்உடைய ; வென்றியண்ணலாரருளினால் = வெற்றியிற்சிறந்த அம்முருகக்கடவுளது திருவருளினால் —எ-று. ஏ - அசை.

கானவர் குலம்விளங்கத் தத்தைபாற் கருப்பநீட
ஊனமில் பலிகள்போக்கி யுறுகடன் வெறியாட்டோடும்
ஆனவத் திங்கள்செல்ல வளவில்செய் தவத்தினாலே
பான்மதி யுவரியின்றூ லெனமகப் பயந்தபோது.

(இ-ள்.) கானவர்குலம்விளங்க=வேடர்களது குலம்விளங்குதற்குக்காரணமாக ; தத்தைபாற்கருப்பநீட=தத்தையின் வயிற்றில் உண்டான கருப்பமானதுவளர; ஊனமில்பலிகள்போக்கி=அக்கருப்பத்திற்கோர்குறைவுவராமல்தெய்வங்களுக்குப் பலிகள்செய்து ; உறுகடன் வெறியாட்டோடுமான = செய்யவேண்டிய பெரியகடனாகிய வெறியாட்டுடன்கூடிய ; அத்திங்கள்செல்ல= அக்கருப்பம்வளர்தற்குரியமாசங்கள்பத்தும்முடிய; அளவில்செய்தவத்தினால் = அளவின்றிச்செய்ததவத்தினால்;பான்மதியுவரியின்றூலென=(பாற்கடலினும்உயர்வுடைய)வெள்ளியசந்திரனை உவர்க்கடலானதுஈன்றாற்போல ; மகப்பயந்தபோது=குழந்தையைப்பெற்றசமயத்து.—எ-று. ஏ - அசை. (கரு)

அக்குழந்தையினுயர்வும் தத்தையின் இழிவுந் தோன்றப் பான் மதியுவரியின்றூலெனக்கூறினர்.

கரிப்பரு மருப்பின்முத்துங் கழைவிளை செழுநீர்முத்தும்
பொருப்பினின் மணியும்வேடர் பொழிதரு மழையேயன்றி
வரிச்சுரும் பலையவானின் மலர்மழை பொழிந்ததெங்கும்
அரிக்குறுந் துடியேயன்றி யமரர்துந் துபியுமார்த்த.

(இ-ள்.) கரிப்பருமருப்பின்முத்தும் = யானைகளின்பருத்தகொம்பினில் உதித்தமுத்துக்களையும் ; கழைவிளைசெழுநீர்முத்தும்=மூங்கில்களில் உண்டான செழுமையானநீரையுடையமுத்துக்களையும்; பொருப்பினின் மணியும்=மலையில் உதிக்கும்வயிரம்முதலியமணிகளையும் ; வேடர்பொழிதரு மழையேயன்றி=வேடர்கள் எடுத்துமகிழ்ச்சியால் இறைக்குமழையேயல்லாமல் ; வரிச்சுரும்பலைய= வரியினையுடையவண்டுகள்சுற்ற ; வானின்மலர் மழைபொழிந்த தெங்கும்=ஆகாயத்தில்பூமழை அச்சிற்றூரில் எவ்விடத்தும் பொழிந்தது ; அரிக்குறுந்துடியேயன்றி=உருக்குப்பரல்களைப் போட்டிருக்கின்ற சிறியஉடுக்குகளேயல்லாமல் ; அமரர்துந்துபியுமார்த்த=தேவர்களது துந்துபிவாத்தியமும்முழங்கின.—எ-று.

இந்நான்கும் குளகம் - உம்மை இறந்ததுதழீஇயது.

அருவரைக் குறவர்தங் களகன்குடிச் சீறூராயம்
பெருவிழா வெடுத்துமிக்க பெருங்களி கூருங்காலைக்
கருவரை காளமேக மேந்திய தென்னத்தாதை
பொருவரைத் தோள்களாரப் புதல்வனை யெடுத்துக்கொண்டான்.



1. நாகனும், தந்தையும், ஸ்கந்தருக்கும யிலும் சேவலும் விட்டுவழிப்படப்பிள்ளை ப்பேருண்டாகியது.

2. நாகன் அக்குழந்தைக்குத் திண்ணனு ரெனப்பிள்ளைத்திருநாம மளித்தது.

3. திண்ணர் வில்வித்தைக் கற்றபின்தந் தைதன்னரசுரிமையமளித்தது.

கண்ணப்பர் திருவவதாரம் நாமகர்ணம் பட்டாபிடேகம் முதலியதுணர்த்துகிறது.

(இ-ள்.) அருவரைக்குறவர் = ஏறுதற்கரிய மலையில்வாழும் வேடர்கள்; தங்கள அகன்குடிச்சிறூராயம்=தங்கள் அகன்ற குடிகள்வாழ்தற் கிடமானசிற்றூரின்கண்கூட்டத்தோடு ; பெருவிழாவெடுத்து=பெரியவிழாவைஎடுத்து; மிக்கபெருங்களி கூருங்காலை = அதிக களிப்படைந் திருக்குங்காலத்தில் ; கருவரைகாளமேக மேந்தியதென்ன=மைநாகமலையானது ஒருகரியமேகத்தைத் தாங்கிக்கொண்டாற்போல ; தாதைபொருவரைத் தோள்களார=தந்தையாகிய நாகன் போர்செய்தற்குரிய மலைபோலுந்தன் தோள்களிற் பொருந்தும்படி; புதல்வனையெடுத்துக்கொண்டான்=அக்குழந்தையை எடுத்துக்கொண்டான்.—எ-று.

கருங்கதிர் விரிக்குமேனிக் காமரு குழவிதானும்
இரும்புலிப் பறழிஞேங்கி யிறவுள ரளவேயன்றி
யரும்பெற லுலகமெல்லா மளப்பரும் பெருமைகாட்டித்
தருங்குறி பலவுஞ்சாற்றுந் தன்மையிற் பொலிந்துதோன்ற.

(இ-ள்.) கருங்கதிர்விரிக்குமேனி=கரியஒளியை வீசும் திருமேனியையுடைய; காமருகுழவிதானும்=அழகியகுழந்தையும்; இரும்புலிப்பறழிஞேங்கி=பெருமையான புலிக்குட்டிபோலவளர்ந்து; இறவுளரளவேயன்றி=வேடர்கள்மட்டுமேயன்றி ; அரும்பெறலுலகமெல்லாம்=பெறுதற்கரிய உலகங்கள்முழுதும்; அளப்பரும்பெருமைகாட்டித்தரும்=அளவிடற்கரியபெருமையைக் காட்டிக்கொடுக்கும் ; குறிபலவுஞ்சாற்றும்=பலநற்குறிகளையும் விளக்கும் ; தன்மையிற்பொலிந்துதோன்ற=குணத்தோடு பொலிவடைந்து விளங்க.—எ-று. (௧௬)

காமர் மரு என்றது காமருஎனமரீஇயது.

உம்மைஇரண்டில் முன்னையது இறந்தது தழீஇயது பின்னையது முற்றும்மை.

அண்ணலைக் கையிலேந்தற் கருமையா லுரிமைப்பேருந்
திண்ணனென் றியம்புமென்னத் திண்சிலை வேடரார்த்தார்
புண்ணியப் பொருளாயுள்ள பொருவில்சீ ருருவினானைக்
கண்ணினுக் கணியாத்தங்கள் கலன்பல வணிந்தாரன்றே.

(இ-ள்.) அண்ணலைக்கையிலேந்தற் கருமையால்=அக்கண்ணப்பநாயனாராகியகுழந்தையைக்கையினிடத்து எடுத்தற்குக்கூடாமையால் ; உரிமைப்பேருந்திண்ணனென்றியம்புமென்ன=அவர்க்குஉரித்தான திருநாமமும் திண்ணனாரென்று அழையுங்களென்றுபேரிட ; திண்சிலைவேடரார்த்தார் = வலியவிற்களையுடையவேடுவர்கள்மகிழ்ச்சியால்ஆரவாரித்தார்கள் ; புண்ணியப்பொருளாயுள்ள=புண்ணியமேஒருருவாய்த்திரண்டுவந்தாற்போன்ற ; பொருவில்சீருருவினானை=ஒப்பற்றசிறப்பாகியதிருவுருவத்தையுடையவரை ; கண்ணினுக்கணியாத்தங்கள் =கண்ணுக்கு அலங்காரமாகும்படி தங்கள்மரபிற்குள்ள ; கலன்பலவணிந்தார்=பல ஆபரணங்களையும் அணிந்தார்கள்.—எ-று. அன்று - ஏ - அசை. (௧௭)

இவ்விரண்டுங்குளகம்.

வரையுறை கடவுட்காப்பு மறக்குடி மரபிற்றங்கள்
புரையிறென் முறைமைக்கேற்பப் பொருந்துவ போற்றிச்செய்து
விரையிளந் தளிருஞ்சூட்டி வேம்பிழைத் திடையிற்கோத்த
அரைமணிக் கவடிகட்டி யழகுற வளர்க்குநாளில்.

(இ-ள்.) வரையுறைகடவுட்காப்பும்=மலைவாழும் தெய்வங்களை வழிபாடுசெய்யும்காவலும் (அதுவன்றி); மறக்குடிமரபில் = மறவருடைய குலத்தில்; தங்கள்புரையிறென்முறைமைக்கேற்ப=தாங்கள்செய்யும் குற்றமற்ற பழமையாகிய ஒழுக்கத்திற்கிசைய; பொருந்துவபோற்றிச்செய்து=ஏற்கும்பூசை முதலியவற்றையும் பேணிச்செய்து; விரையிளந்தளிருஞ்சூட்டி=வாசனைகமழும் இளமையாகிய தளிர்களையும் தரித்து; வேம்பிழைத்திடையிற்கோத்த=வேம்பின்கோலை இழைத்து இடையிடையிலேகோத்த; அரைமணிக்கவடிகட்டி = அரைமணியோடு கூடிய பலகரைமாலையையும் இடையிற்கட்டி; அழகுறவளர்க்குநாளில்= அழகாகவளர்க்குங்காலத்து.—எ-று. (கஅ)

வேம்பிழைத் திடையிற்கோத்த அரைமணிஎன்றதனால் அரைமணிபோல் வேப்பங்கோலாற்செய்த தெனப்பொருள்கொள்க.

வருமுறைப் பருவந்தோறும் வளமிகு சிறப்பிற்றெய்வப்
பெருமடை கொடுத்துத்தொக்க பெருவிறல் வேடர்க்கெல்லாந்
திருமலி துழனிபொங்கச் செழுங்களி மகிழ்ச்சிசெய்தே
யருமையிற் புதல்வர்ப்பெற்ற வார்வமுந் தோன்றவுய்த்தார்.

(இ-ள்.) வருமுறைப்பருவந்தோறும்=வருகின்ற முறைமையினையுடைய தால்சப்பாணிமுதலிய பருவங்கள்தோறும்; வளமிகுசிறப்பில்=வளம்மிக்க சிறப்போடு; தெய்வப்பெருமடைகொடுத்து=தெய்வங்களுக்குரிய பெரியமடைகளைக்கொடுத்து; தொக்கபெருவிறல்வேடர்க்கெல்லாம்=கூடிய மிக்கவலியினையுடைய வேடர்களுக்கெல்லாம்; திருமலிதுழனிபொங்க=மங்கலகரமான வாத்தியத்தின் ஒலிகள்மேம்பட; செழுங்களிமகிழ்ச்சிசெய்து=நல்லபெருமகிழ்ச்சிசெய்வித்ததுமல்லாமல்; அருமையிற்புதல்வர்ப்பெற்ற=அருமைப்பாட்டால் தாம்புத்திரனைப்பெற்ற; ஆர்வமுந்தோன்றவுய்த்தார் = அன்பையும் யாவரும் அறியும்படி அவ்விருவரும் நடத்தினார்கள்.—எ-று. ஏ - அசை. (கசு)

இவ்விரண்டுங் குளகம்.

ஈண்டுமடையென்றது. வனதெய்வங்களுக்குச்செய்யும் பெரும்பூசனை அதாவது:—காய்கிழங்கு மாமிசம்முதலிய பலபிரப்புக்களைத் தனித்தனிகுவித்து நிவேதித்து வழிபடுதல்.

ஆண்டெதி ரணைந்துசெல்ல விடுமடித் தளர்வுநீங்கிப்
பூண்டிகழ் சிறுபுன்குஞ்சிப் புலியுகிர்ச் சுட்டிசாத்தி
மூண்டெழு சினத்துச்செங்கண் முளவுமுள் ளரிந்துகோத்த
நாண்டரு மெயிற்றுத்தாலி நலங்கிளர் மார்பிற்றூங்க.

(இ-ள்.) ஆண்டெதிரணைந்துசெல்ல=ஓராண்டுப்பருவம் அவர்க்குவர; இடும்அடித்தளர்வுநீங்கி = அடியிட்டுநடக்கும் தளர்நடையினின்றும்நீங்கி; பூண்டிகழ்சிறு புன்குஞ்சி=ஆபரணங்கள் விளங்குகின்ற சிறிய புல்லியகுடுமியினிடத்து; புலியுகிர்ச்சுட்டிசாத்தி = புலிநகத்தாலாகிய நெற்றிச்சுட்டியைச் சாத்தி; மூண்டெழுசினத்துச்செங்கண்=மேம்பட்டெழுகின்ற கோபத்தாற் சிவந்தகண்ணையுடைய; முளவுமுள்ளரிந்துகோத்த = முட்பன்றியினது முட்களையரிந்து கோத்திருக்கும்; நாண்டருமெயிற்றுத்தாலி = கயிற்றினிடத்துத் தொங்குகின்ற புலிப்பல்தாலியானது; நலங்கிளர் மார்பிற்றூங்க=நன்மைமிக்கமார்பினிடத்துப் பிரகாசிக்க.—எ-று. (௨௦)

ஈண்டுதாலியென்றது முட்பன்றி முட்களையரிந்துகோத்த புலிப்பல்லோடு சேர்ந்த சரமாலையை.

பாசொளி மணியோடார்த்த பன்மணிச் சதங்கையேங்கக்
காசொடு தொடுத்தகாப்புக் கலன்புனை யரைஞாண்சேர்த்தித்
தேசுடை மருப்பிற்றண்டை செறிமணிக் குதம்பைமின்ன
மாசறு கோலங்காட்டி மறுகிடை யாடுநாளில்.

(இ-ள்.) பாசொளிமணியோடார்த்த=பசுமையான நீலமணியோடுகோத்த; பன்மணிச்சதங்கையேங்க=பலமணிகளையுடைய சதங்கையானது திருவரையில் ஒலிக்க; காசொடுதொடுத்தகாப்பு = மணியோடுகோத்த காப்பிணையும்; கலன்புனையரைஞாண்சேர்த்தி = ஆபரணமாக அலங்கரித்துச்செய்த அரைஞாணையும் திருக்கரத்தும் திருவரையினும் சேர்த்து; தேசுடைமருப்பிற்றண்டை= ஒளிவீசுகின்ற யானைக்கொம்பாற்செய்த தண்டையும்; செறிமணிக்குதம்பைமின்ன=நெருங்கிய மணிகளழுத்திய குதம்பையும்திருவடியினும்திருச்செவியினும் பிரகாசிக்க; மாசறுகோலங்காட்டி=இவ்விதமான குற்றமற்ற திருக்கோலப்பொலிவைக் கண்டார் கண்களிக்கும்படிகாட்டி; மறுகிடையாடுநாளில்=அச்சிற்றூர்த்தெருவில் விளையாடிக்கொண்டிருக்கும்நாளில்.—எ-று. (௨௧)

முன்வேம்பிழைத்திடையிற்கோத்த கவடிமாலை வேடர்மரபிற்கேற்றகாப்பாய் அணியப்பட்டதென்றும், ஈண்டுமணிச்சதங்கை அரைஞாணென்றது அலங்காரத்தின்பொருட்டு அணியப்பட்டதாகவுங்கொள்க. குதம்பைஎன்பதுகாதில் தொங்க அணியும் ஓராபரணம். குணுக்கென்பாரும் உளர்.

தண்மல ரலங்கற்றாதை தாய்மனங் களிப்பவந்து
புண்ணியக் கங்கைநீரிற் புனிதமாந் திருவாய்நீரில்
உண்ணனைந் தமுதமூறி யொழுகிய மழலைத்தீஞ்சொல்
வண்ணமென் பவளச்செவ்வாய் குதட்டியே வளராநின்றார்.

(இ-ள்.) தண்மலரலங்கற்றாதை=குளிர்ந்த மலர்மாலையை அணிந்த தந்தையாகியநாகனும்; தாய்மனங்களிப்பவந்து = தாயாகிய தத்தையும் மனங்களிகூரஅவரருகில்வந்து; புண்ணியக்கங்கைநீரிற் புனிதமாந்திருவாய்நீரில் = புண்

ணியருபமான சுரநதிநீரினும் மிகத்தூய்மையான திருவாய் நீரினிடத்து; உண்ணனைந்தமுதமூறி = உள்ளேநனைந்து அமுதத்தைப்பெருக்கி; ஒழுகியமழலைத்தீஞ்சொல்=வெளிப்படுகின்ற மழலையாகிய இனியசொல்லையுடைய; வண்ணமென்பவளச்செவ்வாய்=அழகிய மிருதுவான பவளம்போலுஞ் சிவந்தவாயை; குதட்டிவளராநின்றார்=குதட்டிக்கொண்டுவளர்ந்தார்.—எ-று ஏ - அசை. (௨௨)

இம்மூன்றுங்குளகம்.

குதட்டல்=வாயைமெல்லுதல். இவர்வாய்நீர்பின்சிவபிரானுக்குக் கங்கை நீரினுஞ்சிறந்த திருமஞ்சனமாதலிற்கங்கைநீரிற் புனிதமாந் திருவாய்நீரென்றார். வாய்நீரமுதூறுங்கால் வாய்குதட்டல் குழந்தைகட்கு வழக்காதலில்வாய் குதட்டியென்றார்.

பொருபுலிப் பார்வைப்பேழ்வாய் முழையெனப் பொற்கைநீட்டப்
பரிவுடைத் தந்தைகண்டு பைந்தழை கைக்கொண்டோச்ச
இருசுடர்க் குறுகண்டீர்க்கு மெழில்வளர் கண்ணீர்மல்கி
வருதுளி முத்தமத்தாய் வாய்முத்தங் கொள்ளமாற்றி.

(இ-ள்.) பொருபுலிப்பார்வைப்பேழ்வாய் = அவர்பொரத்தக்கபுலிப்பார்வையின் ஆழ்ந்தவாயை; முழையெனப்பொற்கைநீட்ட=ஓர்பாறையின் முழைஞ்சென்று கருதி அழகிய திருக்கரத்தை அதில்நீட்ட; பரிவுடைத்தந்தைகண்டு= அவர்மேலன்புடையதந்தையாகிய நாகன்பார்த்து; பைந்தழைகைக்கொண்டோச்ச=பசியதழையைக்கையிலெடுத்து அடிக்கும்படி ஓங்க; இருசுடர்க்குறுகண்டீர்க்கும்=சோமசூரியர்களாகிய சிவபிரான் திருக்கண்களிரண்டிற்குந் துன்பத்தைப் பின்னே நீக்குதற்குக்காரணமான; எழில்வளர்கண்ணீர்மல்கி= அழகுவளரும் திருக்கண்களினின்றும் நீரைச்சொரிந்து; வருதுளிமுத்தம் = வருகின்றகண்ணீர்த் துளிகளாகிய முத்தத்தை; அத்தாய்வாய்முத்தங்கொள்ளமாற்றி=அந்நாகன் மனையாளாகியதற்றாயானவள் எடுத்து முத்தமிட நீக்கி.—எ-று. (௨௩)

துடிக்குற டுருட்டியோடித் தொடக்குநாய்ப் பாசஞ்சுற்றிப்
பிடித்தறுத் தெயினப்பிள்ளைப் பேதைய ரிழைத்தவண்டல்
அடிச்சிறு தளிராற்சிந்தி யருகுறு சிறுவரோடுங்
குடிச்சிறு குரம்பையெங்குங் குறுநடைக் குறும்புசெய்து.

(இ-ள்.) துடிக்குறடுருட்டியோடி = உடுக்குவடிவாய்ச்செய்த கட்டையை உருட்டி அதன்பின் ஓடிச்சென்று; தொடக்குநாய்ப்பாசஞ்சுற்றி=கட்டியிருக்கின்ற வேட்டைநாய்களின் கயறுகளைச்சூழ்ந்து; பிடித்தறுத்து=கையாற் பிடித்தறுத்து; எயினப்பிள்ளைப்பேதையரிழைத்தவண்டல்=வேடர்களதுபிள்ளைத்தன்மையையுடைய சிறுமகளிர்கள் கையாற்செய்த சிறுவீடுகளை; அடிச்சிறு தளிராற்சிந்தி=திருவடியாகிய சிறிய தளிர்கொண்டழித்து; அருகுறு சிறுவரோடும்=தன் அருகிற்சூழ்ந்த எயினச்சிறுவர்களோடும்; குடிச்சிறு குரம்பையெங்கும்=சிறுகுடிக்கண்ணுள்ள கூரைவீடுகளெங்குஞ் சென்று; குறுநடைக்குறும்புசெய்து=குறுநடையோடு பலகுறும்புகளைச்செய்து.—எ-று. (௨௪)

அனையன பலவுஞ்செய்தே யைந்தின்மே லானவாண்டின்
வனைதரு வடிவார்கண்ணி மறச்சிறு மைந்தரோடுஞ்
சினைமலர்க் காவுளாடிச் செறிகுடிக் குறிச்சிசூழ்ந்த
புனைமருப் புழலைவேலிப் புறச்சிறு கானிற்போகி.

(இ-ள்.) அனையனபலவுஞ்செய்து = அவ்வாறான பலவிளையாடல்களை யுஞ்செய்து ; ஐந்தின்மேலான வாண்டில் = ஐந்துவயதுசென்றதன்மேல் வரும் ஆறும்வயதில் ; வனைதருவடிவார்கண்ணி=அலங்காரமாகச்செய்த மிருதுவான வார்களையும் கண்ணிகளையும் எடுத்துக்கொண்டு ; மறச்சிறுமைந்தரொடும்=எயின ப்பிள்ளைகளோடும் ; சினைமலர்க்காவுளாடி=கிளைகளையுடைய பூஞ்சோலைகளில் விளையாடி ; செறிகுடிக்குறிச்சிசூழ்ந்த=நெருங்கிய குடிகளையுடைய சிற்றூரை ச்சூழ்ந்திருக்கின்ற; புனைமருப்புழலைவேலிப்புறச்சிறுகானிற்போகி=அலங்காரமா னயானைக் கொம்புகளாற்செய்த உழலைவேலியின் புறத்தே உள்ள சிறியகாட்டிற் சென்று.—எ-று. ஏ-அசை. (௨௫)

இருமருங்கும் இருகோடூன்றி அதில்டுெந்துளைகளில் இடப்பட்டயானைக்கோ டுகள் உழன்றுகொண்டிருத்தலில் உழலைவேலிஎன்றார். உழலைவேலி என்னுங்கால் அதன்வழியில் நட்டிருக்கும் மரம் செல்வார்க்கிடங்கொடுத்துப் பின்உழன்றுதன் னிலையில் நிற்றலில் உழலைமரத்தையுடைய வேலியென்றுரைத்தலுமமையும்.

கடுமுயற் பறழினோடுங் கானவே னத்தின்குட்டி
கொடுவரிக் குருளைசெந்நாய் கொடுஞ்செவிச் சரபமான
முடுகிய விசையிலோடித் தொடர்ந்துமுன் பற்றிமுற்றத்
திடுமரத் திரளிற்கட்டி வளர்ப்பன வெண்ணிலாத.

(இ-ள்.) கடுமுயற்பறழினோடும் = கடியவேகத்தையுடைய முயற்குட் டியோடும் ; கானவேனத்தின்குட்டி=காட்டுப்பன்றியின் குட்டியும் ; கொடுவரி க்குருளைசெந்நாய் = வேங்கையினது குட்டியும் செந்நாயும் ஆகிய இவைகளை ; கொடுஞ்செவிச்சரபமான=கொடுமையான செவியையுடைய சரபம்போல; முடு கியவிசையிலோடி = வேகமான விசையோடு பின்சென்று ; தொடர்ந்துமுன்பற் றி=அவைகளைத்தொடர்ந்து முன்மறித்துப்பிடித்து ; முற்றத்திடுமரத்திரளிற்க ட்டி=முற்றத்தில் இட்டுவளர்க்கும் மரக்கூட்டங்களிற் பிணித்து ; வளர்ப்பன வெண்ணிலாத=அளவில்லாதன அந்நாயனரால் வளர்க்கப்படுவன.—எ-று. ()

பறவைச்சாதியுள்ளுஞ்சிலவற்றிற்குச்செவியுடைமை "கவி, செந்நாளைக் குவிபுறத்திருந்தசெவிசெஞ்சேவ" லென்னும்செய்யுள்வழக்குநோக்கியுமுணர்க.

அலர்பகல் கழிந்தவந்தி யையவிப் புகையுமாட்டிக்
குலமுது குறத்தியூட்டிக் கொண்டுகண் டுயிற்றிக்கங்குல்
புலரவூ ணுணவுநல்கிப் புரிவிளை யாட்டின்விட்டுச்
சிலமுறை யாண்டுசெல்லச் சிலைபயில் பருவஞ்சேர்ந்தார்.

(இ-ள்.) அலர்பகல்கழிந்தவந்தி=உதயமாகிய பகற்காலம்நீங்கியமாலைப் பொழுதில் ; ஐயவிப்புகையுமாட்டி = கடுகாலாகியகாப்புப் புகையையுஞ்சுற்றி;

குலமுதுகுறத்தியூட்டி = குறவர்குலத்தில்முதிர்ந்தவயதுடையவளாகிய குறத்தியானவள் உணவுகளையூட்டி ; கொண்டுகண்டுயிற்றி=எடுத்துக்கொண்டு நித்திரைசெய்வித்து ; கங்குல்புலரவூனுணவுநல்கி = இரவுவிடியத்தசையுணவுகளைக்கொடுத்து ; புரிவிளையாட்டின்விட்டு=விரும்பிய விளையாடல்களைச் செய்யும்படிசெய்து ; சிலமுறையாண்டுசெல்ல=இவ்வாறுசிலவருடங்கள்முறையாகச்செல்ல ; சிலைபயில்பருவஞ்சேர்ந்தார்=விற்றொழிற்பயிலும்பருவமடைந்தார்.—எ-று. (உஎ)

இவ்வைந்துங் குளகம்.

தந்தையு மைந்தனாரை நோக்கித்தன் றடித்ததோளாற்
சிந்தையுண் மகிழப்புல்லிச் சிலைத்தொழில் பயிற்றவேண்டி
முந்தையத் துறையின்மிக்க முதியரை யழைத்துக்கூட்டி
வந்தநாட் குறித்ததெல்லா மறவர்க்குச் சொல்லிவிட்டான்.

(இ-ள்.) தந்தையுமைந்தனாரைநோக்கி=தந்தையாகியநாகனும் தன்புதல்வராகியதிண்ணனாரைப்பார்த்து; தன்றடித்ததோளால்=தனதுபருத்ததோள்களால் ; சிந்தையுண்மகிழப்புல்லி=உள்ளே மனமகிழ்ச்சியுண்டாகக் கட்டியணைத்து ; சிலைத்தொழில்பயிற்றவேண்டி=அவர்க்கு வில்வித்தையைக் கற்பிக்கும்படிவிருப்பங்கொண்டு ; முந்தையத்துறையின்மிக்க=முன்னே அவ்வில்வித்தையில்மேம்பட்ட;முதியரையழைத்துக்கூட்டி=பயிற்சியிற்சிறந்தவரைஅழைத்துஅவர்களைஒருங்குசேர்த்து ; வந்தநாட்குறித்ததெல்லாம் = வில்வித்தைக்குரித்தாயிருந்தநாளைநியமித்த செய்திகளையெல்லாம் ; மறவர்க்குச் சொல்லிவிட்டான்=தம் உறவினராகிய வேடர்களுக்கெல்லாம் சொல்லியனுப்பினான்.—எ-று. (உஅ)

வேடர்தங் கோமானாகன் வென்றிவே ளருளாற்பெற்ற
சேடரின் மிக்கசெய்கைத் திண்ணன்விற் பிடிக்கின்றானென்
றாடியற் றுடியுஞ்சாற்றி யறைந்தபே ரோசைகேட்டு
மாடுயர் மலைகளாளு மறக்குலத் தலைவரெல்லாம்.

(இ-ள்.) வேடர்தங்கோமானாகன்=வேடர்களுக்கரசனாகிய நாகனென்பவன் ; வென்றிவேளருளாற்பெற்ற=வெற்றியினையுடைய முருகக்கடவுள் திருவருளினாற் பெற்றெடுத்த ; சேடரின்மிக்கசெய்கை = அறிவுடையோர்களிற்சிறந்தசெய்கையுடைய ; திண்ணன்விற்பிடிக்கின்றானென்று = திண்ணனென்னும் புத்திரன் இன்னநாளில்வில்லைப்பிடிக்கின்றானென்று ; ஆடியற்றுடியுஞ்சாற்றி=வெற்றியிற்சிறந்த உடுக்குவாத்தியத்தையும் அடித்து ; அறைந்தபேரோசைகேட்டு=வாயாற்சொல்லியபெரியஒலியைக்கேட்டு ; மாடுயர்மலைகளாளும் = அருகில்உயர்ந்த மலைகளை ஆண்டுகொண்டிருக்கும்; மறக்குலத்தலைவரெல்லாம்=வேடர்குலத்தரசர்களெல்லாம்.—எ-று. (உகூ)

மலைபடு மணியும்பொன்னுந் தரளமும் வரியின்றோலுங்
கொலைபுரி களிற்றின்கோடும் பீலியின் குவையுந்தேனுந்
தொலைவில்பன் னறவுமூனும் பலங்களுங் கிழங்குந்துன்றச்
சிலையுடை வேடர்கொண்டு திசைதொறு நெருங்கவந்தார்.

(இ-ள்.) மலைபடுமணியும்பொன்னும்=மலையினிடத்துதிக்கும் இரத்தினங்களும் பொன்னும் ; தரளமும்வரியின்றோலும்=முத்தும்வேங்கைப் புலியினது தோலும் ; கொலைபுரிகளிற்றின்கோடும்=கொலைசெய்கின்றயானையின்கொம்பும்; பீலியின்குவையுந்தேனும்=மயிற்பீலியின்தொகுதியும் கொம்புத்தேனும் ; தொலைவில்பன்னறவுமூனும்=கெடாத பலவகையானகள்ளும் மாமிசங்களும் ; பலங்களுங்கிழங்குந்துன்ற=பழங்களையும் கிழங்குகளையும் நெருங்கும்படி ; சிலையுடைவேடர்கொண்டு = வில்லையுடைய வேடர்கள் எடுத்துக்கொண்டு ; திசைதொறு நெருங்கவந்தார்=திக்குகள்தோறும் நெருங்கவந்தார்கள்.—எ-று. (௩௦)

மல்கிய வளங்களெல்லா நிறைந்திட மாறில்சீறூர்
எல்லையி லடங்காவண்ண மீண்டினர் கொணர்ந்தாரெங்கும்
பல்பெருங் கிளைஞர்போற்றப் பராய்க்கடன் பலவுநேர்ந்து
வில்விழா வெடுக்கவென்று விளம்பினன் வேடர்கோமான்.

(இ-ள்.) மல்கியவளங்களெல்லாநிறைந்திட=நெருங்கிய இவ்வித பலவளங்களெல்லாம் நிறையும்படி ; மாறில்சீறூரெல்லையிலடங்காவண்ணம்=ஒப்பற்ற அச்சிற்றூரின் எல்லையிலடங்காதிருக்கும்படி ; ஈண்டினர்கொணர்ந்தாரெங்கும்= நெருங்கி எங்குங்கொண்டுவந்தார்கள் (அப்பொழுது); வேடர் கோமான்=வேடர்களுக்கு அரசனாகியநாகன் ; பல்பெருங்கிளைஞர்போற்ற=பெருமையாகிய பலசுற்றத்தார்கள்துதிக்கும்படி ; பராய்க்கடன்பலவுநேர்ந்து=வனதெய்வங்களை வழிபட்டு பலிமுதலிய பலகடன்களையும்செய்து ; வில்விழாவெடுக்க வென்றுவிளம்பினன் = வில்விழாவை எடுக்கக்கடவீரென்று அவ்வேடர்களுக்குச் சொன்னான்.—எ-று. (௩௧)

பான்மையிற் சமைத்துக்கொண்டு படைக்கலம் வினைஞரேந்தத்
தேனலர் கொன்றையார்தந் திருச்சிலைச் செம்பொன்மேரு
வானது கடலினஞ்ச மாக்கிட வவர்க்கேபின்னுங்
கானவூ னமுதமாக்குஞ் சிலையினைக் காப்புச்சேர்த்தார்.

(இ-ள்.) பான்மையிற் சமைத்துக்கொண்டு=முறைமையோடு வில்விழாவிற்குரிய பொருள்களை எடுத்துக்கொண்டு ; படைக்கலம் வினைஞரேந்த=ஆயுதங்களைவீரர்கள்அருகில்ஏந்திநிற்க; தேனலர்கொன்றையார்தம்=தேன்தங்கியகொன்றைப்பூமாலையைச்சூடிய சிவபிரானது ; திருச்சிலைச்செம்பொன்மேருவானதுகடலினஞ்சமாக்கிட=அழகியவில்லென்றுகூறும் சிவந்தபொன்மயமாகிய மேருவானதுதன்நாயனருக்குமுன்னே திருப்பாற்கடலிலுதித்த ஆலாகலத்தை அமுதுசெய்யக் கொடுத்தகாரணத்தால் (அதற்குத்தீர்வாக); அவர்க்கேபின்னுங்கானவூனமுதமாக்கும் =அப்பிரானுருக்கே திரும்பவும் காட்டின்கணுள்ளமாமிசத்தை அமுதமாகச் செய்விக்குங்கருத்தால் (வந்தாற்போலும்) ; சிலையினைக்காப்புச்சேர்த்தார் = ஓர் வில்லைக்காப்புக்கட்டினார்கள்.—எ-று. (௩௨)

நஞ்சையமுதாகச்செய்தல்:—பாற்கடல்கடையத் தான்மத்தாயிருந்து நஞ்சையுண்டாக்குதல். மந்தரம் மத்தாகக்கூறியிருக்க மேருவைமத்தென்றுகூறியது அதன் ஓர்பகுதியாயிருக்கும் முறைபற்றியேனும் மேருவின்சாதிபற்றியேனும் என்க. திண்ணனார் வாய்ப்படுத்தி அமுதமாக்கிற்றென்க.

சிலையினைக் காப்புக்கட்டுந் திண்புலி நரம்பிற்செய்த
நலமிகு காப்புநன்னா ணாகனார் பயந்தநாகக்
குலம்விளங் கரியகுன்றின் கோலமுன் கையிற்சேர்த்தி
மலையுறை மாக்களெல்லாம் வாழ்த்தெடுத் தியம்பினார்கள்.

(இ-ள்.) சிலையினைக்காப்புக்கட்டும்=விழாவெடுக்கும் வில்லைக்காப்புக்கட்டுகின்ற; திண்புலிநரம்பிற்செய்த=வலியினையுடையபுலியின்நரம்பினாற்செய்யப்பட்ட ; நலமிகுகாப்புநன்னாண்=நன்மையைத் தரும்காப்பாகியநல்லநாணை; நாகனார்பயந்த=நாகனென்னும் வேடர்க்கிறைவன்பெற்ற ; நாகக்குலம் விளங்கரிய குன்றின்=தேவர்குலத்தார்க்கும் தன்னியல்பு அறிதற்கரிய குன்றாகிய திண்ணனாரது ; கோலமுன்கையிற்சேர்த்தி=அழகியமுன்கையினிடத்துக்கட்டி ; மலையுறைமாக்களெல்லாம்=மலையின்கண்வாழும் வேடர்களெல்லாம்; வாழ்த்தெடுத்தியம்பினார்கள் = வாழ்த்துக்கூறினார்கள்.—எ-று. (௩௩)

ஐவன வடிசில்வெவ்வே றமைந்தன புற்பாற்சொன்றி
மொய்வரைத் தினைமென்சோறு மூங்கில்வன் பதங்கண்மற்றுங்
கைவினை யெயினராக்கிக் கலந்தவூன் கிழங்குங்கூடச்
செய்வரை யுயர்ப்பவெங்குங் கலந்தனர் சினவில்வேடர்.

(இ-ள்.) ஐவனவடிசில் வெவ்வேறமைந்தன=மலைநெற்சோறு தனித்தனிசமைக்கப்பட்டனவும்; புற்பாற்சொன்றி=பாலிற்சமைத்த புல்லரிசிச்சோறும்; மொய்வரைத் தினைமென்சோறு=நெருங்கிய மலைச்சாரலில் விளைந்த மிருதுவானதினை யரிசிச்சோறும் ; மூங்கில்வன்பதங்கண்மற்றும்=மூங்கிலரிசியின் வலிய சோறும் வேறுவகையானசோறும் ; கைவினையெயினராக்கி=அட்டிற்றொழிலில் வல்லவராகிய வேடர்களால் ஆக்கப்பட்டு ; கலந்தவூன்கிழங்குங்கூட = மாமிசத்தோடுகலந்த கிழங்கும் சேர்ந்திருக்கும்படி ; செய்வரையுயர்ப்ப = செய்குன்று போலக்குவிய ; எங்குங்கலந்தனர் சினவில்வேடர்=எவ்விடத்தும் கோபத்தையுடைய வில்லைவைத்திருக்கும் வேடர்கள் நெருங்கவைத்தார்கள்.—எ-று. (௩௪)

செந்தினை யிடியுந்தேனு மருந்துவார் தேனிற்றோய்த்து
வெந்தவூ னயில்வார்வேரி விளங்கனிக் கவளங்கொள்வார்
நந்திய வீயலுண்டி நசையொடு மிசைவார்வெவ்வே
றந்தமி லுணவின்மேலோ ராயினா ரளவிலார்கள்.

(இ-ள்.) செந்தினையிடியுந்தேனுமருந்துவார் = சிவந்த தினைமாவையும் தேனையும் உண்பார்கள் (சிலர்) ; தேனிற்றோய்த்து வெந்தவூனயில்வார்=தேனி

லேசேர்த்து வெந்தமாமிசத்தைப் புசிப்பார்கள் (சிலர்); வேரிவிளங்கனிக்கவளங் கொள்வார்=தேனோடுகலந்தவிளாம்பழத்தின்கவளத்தைக்கொள்வார்கள்(சிலர்); நந்தியவீயலுண்டி நசையொடுமிசைவார் = மிக்க ஈயலென்னும் செல்லினுணவை ஆசையோடுண்புரர்கள் (சிலர்); வெவ்வேறந்தமி லுணவின்மேலோராயினரள விலார்கள்=வெவ்வேறாகிய அநேகவித உணவினால் எண்ணிறந்தவர்கள் உண்டுமகிழ்ச்சியின் மேம்பட்டவர்களாயினார்கள்.—எ-று. (ருரு)

அயல்வரைப் புறத்தின்வந்தா ரருங்குடி யிருப்பினுள்ளார்
இயல்வகை யுணவிலார்ந்த வெயிற்றிய ரெயினரெல்லாம்
உயர்கதி ருச்சிநீங்க வொழிவில்பன் னறவுமாந்தி
மயலுறு களிப்பினீடி வரிசிலை விழவுகொள்வார்.

(இ-ள்.) அயல்வரைப்புறத்தின்வந்தார்=அயற்புலத்துள்ள மலையிலிருக்கின்றவர்களும்; அருங்குடியிருப்பினுள்ளார்=அச்சிற்றூர்க்குடியிருப்பி லுள்ளவர்களும்; இயல்வகையுணவிலார்ந்த=தம்மரபின் முறைப்படி வகைமையான உணவையுண்டு அதனால் மகிழ்ச்சியடைந்த; எயிற்றியரெயினரெல்லாம் =வேடிச்சிகளும் வேடர்களும் ஆகியஎல்லாரும்; உயர்கதிருச்சிநீங்க=உயர்வுபெற்ற சூரியன் அபரான்னப்போதையடைய; ஒழிவில்பன்னறவுமாந்தி=நீக்கமில்லாத பலவகையானகள்ளை அருந்தி; மயலுறுகளிப்பினீடி=மயக்க முடையகளிப்பால்மிக்கு; வரிசிலைவிழவுகொள்வார்=வரிந்தவில் விழாவைக்கொள்வாராயினார்.—எ-று. ()

பாசிலைப் படலைசுற்றிப் பன்மலர்த் தொடையல்சூடிக்
காசுடை வடத்தோல்கட்டிக் கவடிமெய்க் கலன்கள்பூண்டார்
மாசில்சீர் வெட்சிமுன்னா வருந்துறைக் கண்ணிசூடி
ஆசிலா சிரியனேந்து மடற்சிலை மருங்குசூழ்ந்தார்.

(இ-ள்.) பாசிலைப் படலைசுற்றி = பச்சிலைகளாற்றொடுத்த மாலைகளைச் சுற்றி; பன்மலர்த்தொடையல்சூடி = பலமலர்மாலைகளையுந்தரித்து; காசுடைவடத்தோல்கட்டி = இரத்தினங்களோடுசேர்ந்த தோல்வட்டங்களை அரையிற்கட்டி; கவடிமெய்க்கலன்கள் பூண்டார்=உடம்பினிடத்துப் பலகரைகளாலாகிய ஆபரணங்களை யணிந்துகொண்ட வேடர்கள்; மாசில்சீர் வெட்சிமுன்னா = குற்றமற்ற சிறப்பினையுடைய வெட்சிப்பூமுதலாக; வருந்துறைக்கண்ணிசூடி = வருகின்ற புறப்பொருட்டுறைக்குரிய கரந்தைமுதலிய மாலைகளைச்சூடிக்கொண்டு; ஆசிலாசிரியனேந்தும்=குற்றமற்ற ஆசிரியனால் ஏந்தப்பட்ட; அடற்சிலைமருங்கு சூழ்ந்தார்=வலியவில்லின்மருங்கு சூழ்ந்துவந்தார்கள்.—எ-று. (ருஎ)

தொண்டக முரசுங்கொம்புந் துடிகளுந் துளைகொள்வேயும்
எண்டிசை நிறைந்துவிம்ம வெழுந்தபே ரொலியினோடு
திண்டிறன் மறவராரப்புச் சேண்விசும் பிடித்துச்செல்லக்
கொண்டசீர் விழவுபொங்கக் குறிச்சியை வலங்கொண்டார்கள்.

(இ-ள்.) தொண்டக முரசுங்கொம்பும் = குறிஞ்சிப்பறையும் முரசப்பறையும் கொம்புவாத்தியமும்; துடிகளுந் துளைகொள்வேயும் = உடுக்குகளும் துளையினையுடைய வேய்ங்குழலும்; எண்டிசை நிறைந்துவிம்ம = எட்டுத்திக்குகளினும் நிறைந்து ஒலிக்க; எழுந்தபேரொலியினோடும் = எழாநின்றபேரோசையோடும்; திண்டிறன் மறவரார்ப்பு=திண்ணிய வலியினையுடைய மறவர்களது ஆரவாரம்; சேண்விசும் பிடித்துச்செல்ல=நெடுந்தூரத்துக்கு ஆகாசத்தைமுட்டி எழும்ப; கொண்டசீர் விழவுபொங்க=சிறப்புத்தங்கிய திருவிழாவானது பொங்கும்படி; குறிச்சியை வலங்கொண்டார்கள் = அச்சிற்றூரை வலமாகவந்தார்கள்.—எ-று. (௫அ)

குன்றவர் வரிகொண்டாடக் கொடிச்சியர் துணங்கைதூங்கத்
துன்றிய மகிழ்ச்சியோடுஞ் சூரர மகளிராட
வென்றிவில் விழவினோடும் விருப்புடை யேழாநாளாம்
அன்றிரு மடங்குசெய்கை யழகுற வமைத்தபின்னர்.

(இ-ள்.) குன்றவர் வரிகொண்டாட=வேடர்கள் குறிஞ்சிக்குரிய பண்ணைப் பாடிக்கொண்டாட; கொடிச்சியர் துணங்கைதூங்க=வேடப்பெண்கள் துணங்கைக்கூத்தாட; துன்றிய மகிழ்ச்சியோடும் = மிக்கமகிழ்ச்சியோடும்; சூரரமகளிராட = (அதைக்கண்டு) மலைவாழும் தெய்வப்பெண்கள் ஆட; வென்றிவில்விழவினோடும் =வெற்றியினையுடைய வில்விழாவோடும்; விருப்புடையேழாநாளாமன்று = விருப்பினையுடைய ஏழாம்நாளாகிய அன்று; இருமடங்குசெய்கை=இரண்டுபங்கு சிறப்புக்களை; அழகுறவமைத்தபின்னர்=அழகாகச்செய்தபின்பு.—எ-று. துணங்கை=இருகைமுடக்கிப்பழுப்புடையொற்றியாடல்.

வெங்கதிர் விசும்பினுச்சி மேவிய பொழுதிலெங்கு
மங்கல வாழ்த்துமல்க மருங்குபல் லியங்களார்ப்பத்
தங்கடொன் மரபின்விஞ்சைத் தனுத்தொழில் வலவர்தம்பாற்
பொங்கொளிக் கரும்போரேற்றைப் பொருசிலை பிடிப்பித்தார்கள்.

(இ-ள்.) வெங்கதிர் = வெம்மையாகிய கிரணங்களையுடைய சூரியன்; விசும்பினுச்சி மேவியபொழுதில் = வானினுச்சி அடைந்தபொழுதில்; எங்கு மங்கல வாழ்த்துமல்க=எவ்விடத்தும் மங்கலகரமான வாழ்த்தொலி நிரம்பவும்; மருங்குபல்லியங்களார்ப்ப = அருகில் பலவாத்தியங்கள் ஆரவாரிக்கவும்; தங்கடொன் மரபின்=தங்கள் பழமையாகிய குலத்திற்பிறந்த; விஞ்சைத்தனுத்தொழில் வலவர்தம்பால் = விற்றொழிலாகிய வித்தைவல்லவர்களிடத்து; பொங்கொளிக்கரும்போரேற்றை = மிக்க ஒளியினையுடைய கரியபோர்செய்யும் சிங்கேற்றையொத்த திண்ணனாரை; பொருசிலை பிடிப்பித்தார்கள் = போர்த்தொழில் கற்றற்குரிய வில்லைப்பிடிக்கும்படி செய்வித்தார்கள்.—எ-று. (௬0)

பொற்றடவரையின் பாங்கர்ப் புரிவுறு கடன்முன்செய்த
விற்றொழிற் களத்தினண்ணி விதிமுறை வணங்கிமேவும்
அற்றைநாட் டொடங்கிநாளு மடற்சிலை யாண்மைமுற்றக்
கற்றன னென்னையாளுங் கானவர்க் கரிய சிங்கம்.

(இ-ள்.) பொற்றடவரையின்பாங்கர் = அழகிய மலைகளினிடத்து; புரிவுறுகடன்முன்செய்த=செய்யத்தக்க பூசைகளை முன்னே செய்துமுடித்த; விற்றொழிற்களத்துநண்ணி = வில்வித்தைகற்கும் இடத்தில் அடைந்து ; விதிமுறை வணங்கி=அவ்விடத்தை விதிப்படி வணங்கி ; மேவும் அற்றைநாட்டொடங்கி நாளும் = அக்களத்தையடைந்த அன்றுமுதல் நாள்தோறும் ; அடற்சிலையாண்மைமுற்றக்கற்றனன்=வலிய விற்றொழிற்பயிற்சியின் வல்லமையை நிரம்பக்கற்றுக்கொண்டார் ; என்னையாளுங் கானவர்க்கரியசிங்கம்=அடியேனை யாட்கொள்ளுதற்குரிய வேடர்குலத்தில் அரியராக அவதரித்த சிங்கம்போன்ற திண்ணனார்.—எ-று. (௬௧)

வண்ணவெஞ் சிலையுமற்றப் படைகளு மலரக்கற்றுக்
கண்ணகன் சாயல்பொங்கக் கலைவளர் திங்களேபோல்
எண்ணிரண் டாண்டின்செவ்வி யெய்தினா ரெல்லையில்லாப்
புண்ணியந் தோன்றிமேன்மேல் வளர்வதன் பொலிவுபோல்வார்.

(இ-ள்.) வண்ணவெஞ்சிலையும் = அழகினையுடைத்தாகிய கொடிய வில்வித்தையையும் ; மற்றப்படைகளு மலரக்கற்று=வேறு ஈட்டி தண்டாயுதம்முதலியபல படைக்கலவித்தையையும் நன்றாகக்கற்றுக்கொண்டு ; கண்ணகன்சாயல் பொங்க=பரம்பிவீசுகின்ற திருமேனியின் காந்தியானது அதிகப்பட ; கலைவளர் திங்களேபோல்=கலைகள்வளர்கின்ற சந்திரனைப்போல ; எண்ணிரண்டாண்டின் செவ்வியெய்தினார்=பதினாறுவயசு நிரம்பியபருவம் அடைந்தார் ; எல்லையில்லாப் புண்ணியந்தோன்றி = எண்ணிறந்த புண்ணியங்கள் ஒருருவாயுதித்து ; மேன்மேல்வளர்வதன் பொலிவுபோல்வார் = மேலும் மேலும் வளர்கின்ற பொலிவை யொத்தவர்.—எ-று. (௬௨)

வேறு.

இவ்வண்ணந் திண்ணனார் நிரம்புநாளி லிருங்குறவர் பெருங் குறிச்சிக்கிறைவனாய, மைவ்வண்ண வரைநெடுந்தோ ணாகன்றானு மலையெங்கும் வனமெங்கும் வரம்பில்காலங், கைவ்வண்ணச் சிலைவேட்டை யாடித் தெவ்வர் கணநிரைகள் பலகவர்ந்து கானங்காத்து,மெய்வ்வண்ணந் தளர் மூப்பின் பருவமெய்தி வில்லுழவின் பெருமுயற்சி மெலிவானானன்.

(இ.ள்.) இவ்வண்ணந்திண்ணனார் நிரம்புநாளில் = இவ்வாறு திண்ணனார் பதினாறுவயசு நிரம்பியநாளில் ; இருங்குறவர் பெருங்குறிச்சிக்கிறைவனாய =பெருமையினையுடைய வேடர்கள் வாழ்கின்ற பெரியசீறூருக்கு அரசனாகிய ; மைவண்ணவரை நெடுந்தோணாகன்றானும் = மைநாகம்போலும் நெடியதோள்களையுடைய நாகனும் ; மலையெங்கும் வனமெங்கும் வரம்பில்காலம் = மலைமுழுதும் வனமுழுதும் நெடுநாளாக ; கைவண்ணச்சிலை வேட்டையாடி = கையிற்றரித்த அழகிய வில்வேட்டையாடி ; தெவ்வர்கண நிரைகள்பல கவர்ந்துகானங்காத்து = பகைவர் தொகுதிகளின் பசுக்கூட்டங்கள் பலவற்றைக்கவர்ந்துகொண்டு காட்டைக்காவல்செய்து ; மெய்வண்ணந்தளர் மூப்பின் பருவமெய்தி=

உடம்பின் அழகு தளர்தற்குக்காரணமான வயோதிகப்பருவமடைந்து ; வில்லு ழவின்பெருமுயற்சி மெலிவானுனன்=வில்வித்தையின் பெரியமுயற்சியில் இளை த்தவனுனன்.—எ-று. (சங)

அங்கண்மலைத் தடஞ்சாரற் புனங்களெங்கு மடலேனம் புலிகரடி கடமையாமா, வெங்கண்மரைகலையொடுமான் முதலாயுள்ளமிருகங்கண் மிகநெருங்கி மீதூர்காலைத், திங்கண்முறை வேட்டைவினை தாழ்த்ததெ ன்று சிலைவேடர் தாமெல்லாந் திரண்டுசென்று, தங்கள்குல முதற்றலைவ னுகியுள்ள தண்டெரிய னுகன்பாற் சார்ந்துசொன்னுர்.

(இ-ள்.) அங்கண்மலைத்தடஞ்சாரற் புனங்களெங்கும் = அழகிய இடத் தையுடைய மலைகளின் விசாலமாகிய மலைப்பக்கங்களிலுள்ள புனங்களெல்லாம்; அடலேனம்புலி கரடிகடமையாமா=வலியினையுடைய பன்றி புலி கரடி கடமை காட்டுப்பசு; வெங்கண்மரைகலையொடுமான்முதலாயுள்ள=கோபக்கண்ணையுடை யகலைமாஞெடு பெண்மான்முதலாகிய;மிருகங்கண்மிகநெருங்கிமீதூர்காலை=வில ங்குகள்மிகவும் நெருங்கி அதிகப்பட்டிருக்குங்காலத்து ; திங்கண்முறை வேட் டைவினை தாழ்த்ததென்று = மாசமுறைகளில்செய்கின்ற வேட்டைமுறைமை யானதுதவறியதென்று ; சிலைவேடர்தாமெல்லாந்திரண்டுசென்று = வில்லையே ந்திய வேடர்களெல்லாம் ஒருங்குசேர்ந்துபோய் ; தங்கள்குலமுதற்றலைவனுகியு ள்ள=தங்கள் குலத்துக்கு முதன்மையை யுடையஅரசனுயிருக்கும் ; தண்டெ ரியனுகன்பாற் சார்ந்துசொன்னுர்=குளிர்ந்த மாலையையணிந்த நாகனிடத்துக் கிட்டிச்சொன்னுர்கள்.—எ-று. (சச)

சொன்னவுரை கேட்டலுமே நாகன்றுனுஞ் சூழ்ந்துவரு தன்மூப்பி ன் றொடர்வுநோக்கி, முன்னவர்கட் குரைசெய்வான் மூப்பினுலே முன் போல வேட்டையினின் முயலகில்லேன், என்மகனை யுங்களுக்கு நாதனு க வெல்லீருங் கைக்கொண்மி னென்றபோதி, னன்னவரு மிரங்கிப்பி ன் மகிழ்ந்து தங்கோ னடிவணங்கி யிம்மாற்ற மறைகின்றுர்கள்.

(இ-ள்.) சொன்னவுரை கேட்டலுமேநாகனும் = அவ்வேடர்கள்சொன் னவார்த்தையைக் கேட்டவுடன் நாகனென்பவனும் ; சூழ்ந்துவருதன்மூப்பின் தொடர்வுநோக்கி=தன்னைப்பற்றி வருகின்றவயோதிகப் பருவத்தின் சம்பந்தத் தைநினைந்து ; முன்னவர்கட்குரைசெய்வான்=தன்முன்னின்ற அவ்வேடர்களுக் குச்சொல்லுவானுயினுன் ; மூப்பினுலே முன்போல வேட்டையினின் முயலகில் லேன்=வயோதிகத்தினுலேமுன்போலவேட்டைத்தொழிலில்முயலமாட்டேன் ; என்மகனை யுங்களுக்கு நாதனுக=என்புதல்வனை யுங்களுக்கு அரசனுக ; எல்லீரு ங்கைக்கொண்மி னென்றபோதில்=நீவிரெல்லீரும் அங்கீகரியுங்களென்று கூறி யபொழுதில்; அன்னவருமிரங்கி=அவ்வேடர்களும்(இவ்வரசன் இவ்வாறு மூப்ப டைந்தானென்று) இரக்கமுற்று ; பின்மகிழ்ந்து=பின் (அவன்கருத்திற்கிசைய இவன்புதல்வனை அரசனுகக்கொள்ளுதல் நமக்குநன்கென்று) மகிழ்ச்சியடைந்து;

தங்கோனடிவணங்கி=தமது தலைவனாகிய நாகனதுபாதத்தைவணங்கி ; இம்மாற்றமறைகின்றார்கள்=இவ்வார்த்தையைச் சொல்லத்தொடங்கினார்கள்.—எ-று. ()

ஏகாரம் - தேற்றம். தான் - அசை.

இத்தனைகாலமுநினது சிலைக்கீழ்த்தங்கி யினிதுண்டு தீங்கின்றி யிருந்தோமின்னும், அத்தவுன தருள்வழியே நிற்பதல்லா லடுத்தநெறி வேறுளதோ வதுவேயன்றி, மெய்த்தவிறற் றிண்ணனையுன் மரபிற்சால மேம்படவே பெற்றளித்தாய் விளங்குமேன்மை, வைத்தசிலை மைந்தனையீண் டழைத்துநுங்கள் வரையாட்சி யருளென்றார் மகிழ்ந்துவேடர்.

(இ-ள்.) இத்தனைகாலமு நினதுசிலைக்கீழ்த்தங்கி = இவ்வளவு காலமும் உனது வில்லாண்மையின்கீழ் அடங்கி ; இனிதுண்டுதீங்கின்றி யிருந்தோம்=இனிதாகவுண்டு யாதொரு தீங்குமில்லாமல் நாங்கள்வாழ்ந்திருந்தோம் ; இன்னுமத்தவுனதருள்வழியே நிற்பதல்லால்=இன்னும் இறைவனேஉமது ஆணைவழியில்நாங்கள்நிற்பதேயல்லாமல் ; அடுத்தநெறிவேறுளதோ வதுவேயன்றி=எங்களுக்கடுத்தமார்க்கம் வேறிருக்கின்றதோ இல்லை அதுவல்லாமல் ; மெய்த்தவிறற் றிண்ணனை=உடம்பின்கண்ணவாகிய வலியினையுடைய திண்ணனாரை ; உன்மரபிற்சால மேம்படவே பெற்றளித்தாய்=உன்வமிசத்தின் மிகமேம்பாடுடையவனாகவேஎங்களுக்குப் பெற்றுக்கொடுத்தாய் (அதனால்) ; விளங்குமேன்மைவைத்த சிலைமைந்தனையீண்டழைத்து=விளக்கமான மேன்மையினையுடைய வில்லையேந்திய அத்திண்ணனை இங்கேஅழைத்து; நுங்கள்வரையாட்சியருளென்றார்மகிழ்ந்துவேடர் = உங்களுடைய மலையரசாட்சியைக் கொடுவென்று வேடர்கள்மகிழ்ந்து சொன்னார்கள்.—எ-று. (௪௬)

சிலைமறவ ருரைசெய்ய நாகன்றானுந் திண்ணனைமுன் கொண்டுவரச்செப்பிவிட்டு, மலைமருவு நெடுங்கானிற் கன்னிவேட்டை மகன்போகக் காடுபலி மகிழவூட்டத், தலைமரபின் வழிவந்த தேவராட்டி தனையழைமி னெனவங்குச் சார்ந்தோர்சென்று, நிலைமையவ டனக்குரைப்ப நரைமூதாட்டி நெடிதுவந்து விருப்பினொடுங் கடிதுவந்தாள்.

(இ-ள்.) சிலைமறவருரைசெய்ய நாகனும் = வில்லையுடைய வேடர்கள் இவ்வாறுகூற நாகனென்பவனும் ; திண்ணனைமுன்கொண்டு வரச்செப்பிவிட்டு= திண்ணனாரைத் தன்முன் அழைத்துக்கொண்டுவரும்படி சொல்லியனுப்பி ; மலைமருவுநெடுங்கானிற்கன்னிவேட்டை=மலைகள்பொருந்திய நெடியகாட்டில் கன்னிவேட்டைக்கு ; மகன்போகக் காடுபலிமகிழவூட்ட = தன்மகன்போகும்படி காட்டிலுள்ள தெய்வங்கட்குப் பலியை விரும்பும்படி இட ; தலைமரபின்வழிவந்த தேவராட்டிதனை யழைமினென=தன்தாதைமுதலியோர் மரபில் அநுசரித்துவந்த தேவராட்டியை அழையுங்களென்றுகூற ; அங்குச்சார்ந்தோர் சென்று நிலைமையவடனக்குரைப்ப=அங்கிருந்தவேடர்கள்போய் நாகன்கூறிய அவ்வார்த்தையை அத்தேவராட்டிக்குச்சொல்ல ; நரைமூதாட்டிநெடிதுவந்து விருப்பினொ

டுங் கடிதுவந்தாள்=அந்நரைமுதிர்ந்த தேவராட்டியானவள் மகிழ்ச்சியடைந்து விருப்போடு விரைவாகவந்தாள்.—எ-று. தான் - அசை. (சஎ)

கன்னி வேட்டை என்பது வேடர்கள் நாள்குறித்துச்செய்யும் முதல்வேட்டை.

கானில்வரித் தளிர்துதைந்த கண்ணிசூடிக் கலைமருப்பி னரிந்தகுழை காதிற்பெய்து, மானின்வயிற் றரிதாரத் திலகமிட்டு மயிற்கழுத்து மனவுமணி வடமும்பூண்டு, தானிழிந்து திரங்கிமுலை சரிந்துதாழத் தழைப்பீலி மரவுரிமேற் சாரவெய்திப், பூநெருங்கு தோரைமலி சேடைநல்கிப் போர்வேடர் கோமானைப் போற்றிநின்றாள்.

(இ-ள்.) கானில்வரித்தளிர்துதைந்த கண்ணிசூடி=காட்டிலிருக்கின்ற வரியினையுடைய தளிர்கள்நெருங்கிய மாலையைத் தரித்துக்கொண்டு ; கலைமருப்பினரிந்த குழைகாதிற்பெய்து=மான்கொம்பை அரிந்து செய்த குண்டலத்தைக் காதில் இட்டுக்கொண்டு ; மானின்வயிற்றரிதாரத்திலகமிட்டு = மான்வயிற்றிலுதித்த அரிதாரத்தினால் நெற்றித்திலகமிட்டு ; மயிற்கழுத்துமனவுமணி வடமும்பூண்டு=மயிற்கழுத்துக்களை நறுக்கி அதனோடுஇடையிடையே கோக்கப் பட்டசங்குமணிவடத்தையும் கழுத்திற் பூண்டுகொண்டு ; தானிழிந்து திரங்கிமுலைசரிந்துதாழ=தானேஇழிந்து திரையுடைத்தாய்முலைகள்இறங்கி இருக்க ; தழைப்பீலிமரவுரிமேற் சாரவெய்தி = சந்தனத்தழையும் மயிற்பீலியும் மரவுரியின்மேற் கட்டியிருக்கும்படி அங்கு அடைந்து ; பூநெருங்கு தோரைமலி சேடைநல்கி = மலர்கள் விரவியிருக்கும் மலைநெல்லாலாகியசேடையரிசியை வாழ்த்திக்கொடுத்து ; போர்வேடர் கோமானைப் போற்றி நின்றாள்=போர்த்தொழிலில் வல்லவேடர்களுக்குத்தலைவனாகிய நாகனென்பவனைத்துதித்துநின்றாள்.—எ-று. (சஅ)

ஈண்டு சேடை என்றது அட்சதையாக இடும்மலைநெல்லரிசியை. அதுவாழ்த்தியிடுங்கால் மலரோடு விரவியிடுதலில் பூநெருங்குதோரைமலி சேடை என்றார். மனோசிலைஎன்னும் அரிதாரமானது மலைகளிலுதிக்கும். அதற்குவேறாய்நறுமணம்வீசும் அரிதாரம் மான்வயிற்று தித்தலில் மானின்வயிற்ற ரிதாரம்என்றார். ஈண்டுமானென்றது கத்தூரிமிருகம் என்பாருமுளர்.

நின்றமுது குறக்கோலப் படிமத்தாளை நேர்நோக்கி யன்னைநீ சிரப்புநீங்கி, நன்றினிதி னிருந்தனையோ வென்றுகூறு நாகனெதிர் நலம்பெருக வாழ்த்திநல்ல, மென்றசைய மீயலொடு நறவும்வெற்பில் விளைவளனும் பிறவளனும் வேண்டிற்றெல்லாம், அன்றுநீ வைத்தபடி பெற்றுவாழ்வே னழைத்தபணி யென்னென்று ளணங்குசார்ந்தாள்.

(இ-ள்.) நின்றமுது குறக்கோலப்படிமத்தாளை = தன்னெதிரேநின்றவயோதிகமடைந்தகுறவர்க்குரியபடி மக்கோலத்தையுடையவளை ; நேர்நோக்கியன்னைநீசிரப்புநீங்கி=எதிரேபார்த்துத்தாயே நீவறுமையின்றி ; நன்றினிதினிருந்த

னையோவென்றுகூறும்=நன்காக வாழ்ந்திருக்கின்றாயாவென்றுகூறும் ; நாகனே திர்நலம்பெருகவாழ்த்தி=நாகனெனும் வேடராசன் முன்நன்மை யுண்டாகுக வென்று ஆசிர்வதித்து ; நல்லமென்றசையுமீயலொடுநறவும் = நல்லமிருதுவான மாமிசமும் ஈயற்பொரியோடுதேனும் ; வெற்பில்விளைவளனும் பிறவளனும்வேண் டிற்றெல்லாம் = மலைகளில் உண்டாகிய கிழங்குகாய்பழம் முதலியவளங்களும் பிறவளங்களும் விரும்பியவைகளையெல்லாம் ; அன்றுநீவைத்தபடி பெற்றுவாழ் வேன் = அந்நாளில் நீ ஏற்படுத்திய நிமந்தப்படி பெற்று வாழ்ந்துகொண் டிரு க்கின்றேன் ; அழைத்தபணி யென்னென்றாளணங்கு சார்ந்தாள் = என்னை இப் பொழுது அழைத்தகாரியம் என்னவென்றுகேட்டாள் அத்தேவராட்டி.—எ-று.

படிமம்=தவவேடம். தேவராட்டியெனினும் படிமத்தாளெனினுமொக்கும். ஆண்பாலினும் படிமத்தானென்றும் தேவராளனென்றும் வழக்குண்டு. பெண்பால் பெருவழக்கிற்றாதலில் படிமத்தாளெனப் பெண்பாலேகூறினர்.

கோட்டமிலென் குலமைந்தன் றிண்ணனெங்கள் குலத்தலைமையா
ன்கொடுப்பக் கொண்டுபூண்டு, பூட்டுறுவெஞ் சிலைவேடர் தம்மைக்காக்
கும் பொருப்புரிமை புகுகின்றா னவனுக்கென்றும், வேட்டைவினை யெ
னக்குமே லாகவாய்த்து வேறுபுலங் கவர்வென்றி மேவுமாறு, காட்டிலு
றை தெய்வங்கள் விரும்பியுண்ணக் காடுபலி யூட்டென்றான் கவலையில்
லான்.

(இ-ள்.) கோட்டமிலென் குலமைந்தன்றிண்ணன் = நீதிநெறிகோடுதலி ல்லாத என்குலத்திற்பிறந்த புதல்வனாகிய திண்ணனென்பவன் ; எங்கள்குலத் தலைமையான் கொடுப்பக்கொண்டுபூண்டு=எங்கள்குலத்துக்குரிய அரசுரிமையா கிய முதன்மையை யான்கொடுக்கும்படி பெற்றுக்கொண்டு அதனையடைந்து ; பூட்டுறுவெஞ்சிலை வேடர்தம்மைக்காக்கும் = பூட்டுகின்ற கொடிய விற்களையு டைய வேடர்களைக்காக்கின்ற ; பொருப்புரிமைபுகுகின்றான்=மலையாளுகையை அடைகின்றான் ; அவனுக்கென்றும்=அத்திண்ணனுக்கு எந்நாளும் ; வேட்டை வினையெனக்கு மேலாகவாய்த்து=என்னிலும் அதிகமாக வேட்டைத்தொழிலா னது கிடைத்து ; வேறுபுலங்கவரவென்றி மேவுமாறு=மாற்றரசர்களது சிற்றூ ரைக் கொள்ளைகொள்ளுதற்குக் காரணமான வெற்றிகிடைக்கும்படி ; காட்டிலு றை தெய்வங்கள் விரும்பியுண்ண=வனதெய்வங்கள் மகிழ்ந்துண்ணும்படி ; கா டுபலியூட்டென்றான் கவலையில்லான் = காட்டிற் பலியிடென்றுகூறினான் துன்ப மற்றநாகனென்பவன்.—எ-று. (௫௦)

மற்றவன்றன்மொழிகேட்ட வரைச்சூராட்டி மனமகிழ்ந்திங் கன்
போடு வருகின்றேனுக், கெற்றையினுங் குறிகண்மிக நல்லவான விதனா
லே யுன்மைந்தன் றிண்ணனை, வெற்றிவரிச் சிலையோனின் னளவிலன்
றி மேம்படுகின் றானென்று விரும்பிவாழ்த்திக், கொற்றவன தெய்வங்க
ண் மகிழவூட்ட வேண்டுவன குறைவின்றிக் கொண்டுபோனாள்.

(இ-ள்.) அவன்றன்மொழிகேட்டவனாச்சூராட்டி=அந்நாகன்கூறியவார்த்தையைக்கேட்ட மலையின்கண்வாழும் தேவராட்டியானவள் ; மனமகிழ்ந்திங்கன்போடுவருகின்றேனுக்கு=மனமகிழ்ச்சியோடு இவ்விடத்துவருகின்றஎனக்கு; எற்றையினுங் குறிகண்மிகநல்லவான = எந்நாட்களினும் நிகழாதகுறிகள்மிகவும் நலமுடையவாயிருந்தன ; இதனாலே யுன்மைந்தன் றிண்ணனான=இக்காரணத்தால்உன்னுடைய புதல்வனாகிய திண்ணனென்னும் ; வெற்றிவரிச்சிலையோனின்னளவிலன்றி=வெற்றியினையுடைத்தாகிய வரிந்தவில்லையுடையோன் உன்னளவிலல்லாமல் ; மேம்படுகின்றானென்று விரும்பிவாழ்த்தி=மேன்மையடைகின்றானென்று விருப்பத்தொடு வாழ்த்துக்கூறி ; கொற்றவனதெய்வங்கண்மகிழவூட்டவேண்டுவன=வெற்றியினையுடைய வனதெய்வங்கள் மகிழும்படிக்குப் பலியிடவேண்டிய பொருள்களை ; குறைவின்றிக் கொண்டுபோனாள்=குறைவில்லாமல் வாங்கிக்கொண்டுபோனாள்.—எ-று. மற்று - அசை. (௫௧)

தெய்வநிகழ் குறமுதியாள் சென்றபின்பு திண்ணனார் சிலைத்தாதை யழைப்பச் சீர்கொண், மைவிரவு நறுங்குஞ்சி வாசக்கண்ணி மணிநீல மலையொன்று வந்ததென்னக், கைவிரவு சிலைவேடர் போற்றவந்து காதல்புரி தாதைகழல் வணங்கும்போதிற், செவ்வரைபோற் புயமிரண்டுஞ் செறியப்புல்லிச் செழும்புலித்தோ லிருக்கையின்முன் சேரவைத்தான்.

(இ-ள்.) தெய்வநிகழ்குற முதியாள்சென்றபின்பு = தெய்வம் ஆவேசித்தற்கிடமா யிருக்கும் படிமத்தாள்போனபின்பு; திண்ணனார் சிலைத்தாதையழைப்ப=திண்ணனாரானவர் வில்லையுடைய தன்தாதையாகிய நாகன்அழைக்க ; சீர்கொண்மை விரவுநறுங் குஞ்சிவாசக்கண்ணி=சிறப்பினையுடையகருநிறம் பொருந்திய நறியகுடுமியில் வாசனையுடைத்தாகிய கண்ணியைச்சூடி ; மணிநீலமலையொன்றுவந்ததென்ன = நீலமணி மலையொன்று வந்ததென்றுசொல்லும்படி ; கைவிரவுசிலைவேடர் போற்றவந்து = கையிற்றங்கிய வில்லையுடைய வேடர்கள் தம்மைச்சூழும்படியாகவந்து ; காதல்புரிதாதை கழல்வணங்கும்போதில்=தம்மேல்விருப்புடைய தமதுபிதாவாகிய நாகன்பாதங்களில் தொழும்பொழுது ; செவ்வரைபோற் புயமிரண்டுஞ் செறியப்புல்லி = செப்பமான மலைபோலும்இரண்டு புயங்களும்சேரும்படி தழுவிக்கொண்டு; செழும்புலித்தோ லிருக்கையின் முன்சேரவைத்தான் = செழுமையான புலித்தோலிருக்கையில் தன்முன்னே யிருக்கும்படிவைத்தான்.—எ-று. (௫௨)

முன்னிருந்த மைந்தன்முக நோக்கிநாகன் மூப்பெனைவந் தடைதலினான் முன்புபோல, என்னுடைய முயற்சியினால் வேட்டையாடவினி யெனக்குக் கருத்தில்லை யெனக்குமேலாய், மன்னுசிலை மலையர்குலக் காவல்பூண்டு மாறெறிந்து மாவேட்டையாடியென்றும், உன்னுடைய மரபுரிமை தாங்குவாயென் றுடைதோலுஞ் சுரிகையுங்கைக் கொடுத்தானன்றே,

(இ-ள்.) முன்னிருந்தமைந்தன் முகநோக்கிநாகன்=நாகனென்னும் அரசன் தன்னெதிரே யிருந்த புத்திரனது முகத்தைப்பார்த்து; மூப்பெனைவந்தடைதலினுன் முன்புபோல=எனக்கு வார்த்திகப்பருவம் வந்தபடியால்முன்னாட்போல; என்னுடைய முயற்சியினுல் வேட்டையாட = என்முயற்சிகொண்டு மிருக வேட்டையாடுதற்கு; இனியெனக்குக் கருத்தில்லை=இனிமேல் எனக்கு எண்ணமில்லை; எனக்குமேலாய்மன்னுசிலை மலையர்குலக்காவல்பூண்டு=என்னிலும் அதிகமாக நிலைபெற்றவில்லை யேந்தியவேடர்குலத்துக்குக் காத்தற்றொழிலைமுறைமையாகக்கொண்டு; மாறெறிந்து மாவேட்டையாடியென்றும்=பகைவரைவென்று விலங்குவேட்டையாடி எந்நாளும்; உன்னுடைய மரபுரிமைதாங்குவாயென்று=உனக்கு உரித்தான சாதியுரிமையைத்தாங்கிக் கொள்வாயென்று; உடைதோலுஞ்சுரிகையுங்கைக்கொடுத்தான்=தான் உடுத்தற்குரிய தோலையும் உடைவாளையும் அவர்கையிற்கொடுத்தான்.—எ-று. அன்று - ஏ - அசை. (௫௩)

தந்தைநிலை யுட்கொண்டு தளர்வுகொண்டு தங்கள்குலத் தலைமைக்குச் சார்வுதோன்ற, வந்தகுறை பாடதனை நிரப்புமாறு மனங்கொண்ட குறிப்பினுன் மறுமைகொண்டு, முந்தையவன் கழல்வணங்கி முறைமைதந்த முதற்சுரிகை யுடைதோலும் வாங்கிக்கொண்டு, சிந்தைபரங் கொளநின்ற திண்ணனார்க்குத் திருத்தாதை முகமலர்ந்து செப்புகின்றான்.

(இ-ள்.) தந்தைநிலையுட்கொண்டு தளர்வுகொண்டு=தன் தகப்பனுடைய நிலைமையைத் தன்மனதில் அங்கீகரித்துக்கொண்டு(அவனுக்கு வார்த்திகமடைந்த காரணமாய்) வருத்தமடைந்து; தங்கள்குலத்தலைமைக்குச் சார்வுதோன்ற=தங்கள்குலத்துக்குரிய அரசுரிமைக்கு ஒருதுணையுண்டாகவும்; வந்தகுறைபாடதனை நிரப்புமாறு=(வேடர்குடிக்கு)வந்தகுறைவை ஒழித்துவிடும்படிக்கும்; மனங்கொண்டகுறிப்பினுன் மறுமைகொண்டு=தன்மனதிற்கொண்ட எண்ணத்தால் அவன் வார்த்தையை மறுக்காமற்கைக்கொண்டு; முந்தையவன் கழல்வணங்கி=முதன்மையையுடைய அந்நாகனது வீரக்கழலையணிந்தபாதங்களிலே வணங்கி; முறைமைதந்த முதற்சுரிகை யுடைதோலும்வாங்கிக்கொண்டு=தனக்குஅரசுரிமைகொடுத்த முதன்மையினையுடைய உடைவாளையும் தோலுடையையும் கையில்வாங்கிக்கொண்டு; சிந்தைபரங்கொளநின்ற திண்ணனார்க்கு = மனசில் அரசுரிமையென்னும் ஒருபெரும்பாரம் கொள்ளும்படி நின்ற திண்ணனுருக்கு; திருத்தாதைமுகமலர்ந்து செப்புகின்றான்=தந்தையாகிய நாகன்முகமலர்ச்சியோடு சொல்லத்தொடங்கினான்.—எ-று. (௫௪)

பரம் என்றது பாரத்தை. ஈண்டு சிந்தை பரங்கொளநிற்றல் இதனை எவ்வண்ணமாய்ச் சரியாய்நடத்துதலென்று எண்ணங்கொள்ளநிற்றல்.

நம்முடைய குலமறவர் சுற்றத்தாரை நான்கொண்டு பரித்ததன்மேனலமேசெய்து, தெம்முனையி லயற்புலங்கள் கவர்ந்துகொண்ட திண்சிலையின் வளமொழியாச் சிறப்பின்வாழ்வாய், வெம்முனையின் வேட்டைக

ளு முனக்குவாய்க்கும் விரைந்துநீ தாழாதே வேட்டையாட, இம்முரண் வெஞ் சிலைவேடர் தங்களோடு மெழுகவென விடைகொடுத்தா னியல் பினின்றான்.

(இ-ள்.) நம்முடைய குலமறவர்சுற்றத்தாரை = நமது குலத்துக்குரிய வேடர்களாகியஉறவினரை; நான்கொண்டுபரித்ததன்மே னலமேசெய்து=நான் தாங்கிக் காப்பாற்றியதினும் அதிகமாகச்காப்பாற்றி ; தெம்முனையிலயற்புலங்கள் கவர்ந்துகொண்ட=பகைவர்களது முனைத்தபோரில் அயற்குறிச்சிக்களி னின்றும் கவர்ந்துகொண்டுவந்த ; திண்சிலையின் வளமொழியாச் சிறப்பின்வாழ்வாய் = திண்மையாகிய வில்வள்மானது நீங்காதசிறப்போடு வாழ்வாய்; வெம்முனையின் வேட்டைகளுமுனக்குவாய்க்கும்=கொடியவேட்டைத்தொழிலில்வேட்டைமிரு கங்களும் உனக்குக்கிடைக்கும்(அதனால்); விரைந்துநீதாழாதேவேட்டையாட= நீவிரைவாகக் காலதாமசஞ்செய்யாமல் வேட்டையாடுதற்கு ; இம்முரண்வெஞ் சிலைவேடர் தங்களோடும் = இந்தவலியகொடுமையாகிய வில்லையுடைய வேடர் களோடு ; எழுகவெனவிடைகொடுத்தா னியல்பினின்றான்=செல்வாயாகவென் றுஅவருக்கு அனுமதிகொடுத்தான் தான்செய்யுந் தொழில்முறைமையில் நின்ற நாகன்.—எ-று. (௫௫)

இயல்பினிற்றலாவது:—தன்னரசுரிமையைப் புதல்வன்மாட்டுவைத்துநீதி செலுத்தச்செய்தல்.

செங்கண்வயக் கோளரியே றன்னதிண்மைத் திண்ணனார் செய்தவ த்தின் பெருமைபெற்ற, வெங்கண்விறற் றாதைகழல் வணங்கிநின்று வி டைகொண்டு புறம்போந்து வேடரோடு, மங்கலநீர்ச்சுனைபடிந்து மனை யின்வைகி வைகிருளின் புலர்காலை வரிவிற்சாலைப், பொங்குசிலை யடல் வேட்டைக் கோலங்கொள்ளப் புனைதொழிற்கை வினைஞரொடும் பொ லிந்துபுக்கார்.

(இ-ள்.) செங்கண் வயக்கோளரியே றன்னதிண்மைத் திண்ணனார் = சிவந்தகண்களையுடைய வலியசிங்கேற்றையொத்த திண்மையையுடைய திண்ண னார் ; செய்தவத்தின்பெருமைபெற்ற=முற்செய்த தவங்காரணமாய்ப்பெருமை யடைந்த ; வெங்கண்விறற்றாதை கழல்வணங்கிநின்று = கொடிய கோபக்கண் ணையும் வெற்றியையுமுடைய தந்தையாகியநாகனதுபாதங்களை நிலமுறவணங்கி நின்று ; விடைகொண்டுபுறம்போந்துவேடரோடு = அனுமதி பெற்றுக்கொண்டு வேடர்களுடன் தானும்புறம்பேசென்று ; மங்கல நீர்ச்சுனைபடிந்து மனையின் வைகி=மங்கலகரமான நீரையுடைய் சுனையின்முழ்கித்தாமிருக்கும்வீட்டில்தங்கி யிருந்து ; வைகிருளின்புலர்காலைவரிவிற்சாலை=தங்கிய இருளையுடைய விடியற் காலத்து வரிந்தவிற்சாலையினிடத்து ; பொங்குசிலையடல்வேட்டைக் கோலங் கொள்ள = பொலிவடைந்த சிலையாற்செய்யும் வலியினையுடைய வேட்டைக் குரிய கோலத்தைக் கொள்ளும்படி ; புனைதொழிற்கை வினைஞரொடும் பொலிந்

துபுக்கார் = அலங்கரிக்குந்தொழிலில் கைவல்லவர்களோடும் பொலிவடைந்து போனார்.—எ-று. (ருசு)

அரையிருள்தங்கிய விடியற்காலம் என்பார்வைகிருளின் புலர்காலைஎன்றார். அதுவேட்டைக்குரியகாலம்.

வேறு.

நெறிகொண்ட குஞ்சிச் சுருடுஞ்சி நிமிர்ந்துபொங்க
முறிகொண்ட கண்ணிக் கிடைமொய்யொளிப் பீலிசேர்த்தி
வெறிகொண்ட முல்லைப் பிணைமீது குறிஞ்சிவெட்சி
செறிகொண்ட வண்டின் குலஞ்சேர்கொளப் பின்புசெய்து.

(இ-ள்.) குஞ்சிநெறிகொண்டகுஞ்சிச்சுருணிமிர்ந்து பொங்க=வணங்கி நெறிப்படைந் திருக்கின்றதலைமயிரினது சுருள்கள்நிமிர்வடைந்து உச்சியில்முடிக்கப்பட்டுப்பொலிவடைய; முறிகொண்டகண்ணிக்கிடை=அதன்மீதுதளிராற் கட்டப்பட்ட மாலைக்குநடுவில்; மொய்யொளிப் பீலிசேர்த்தி = விளக்கமான ஒளியினையுடைய பீலித்தட்டையாற்செய்த பிணையல் மாலையையணிந்து; வெறிகொண்டமுல்லைப்பிணைமீது = அதன் கீழ்வாசனைகமழும் முல்லையரும்பாற்றொடுத்த பிணையல்மாலையின்மேல்; குறிஞ்சிவெட்சி செறிகொண்ட வண்டின்குலஞ்சேர்கொளப்பின்புசென்று=குறிஞ்சிப்பிணையலும் வெட்சிப்பிணையலும் நெருங்கிய வண்டின்கூட்டங்கள் சிறப்போடு கீதம்பாட அதன்கீழ்அலங்கரித்து.—எ-று.

நெறிப்பாவது:—கமுகம்பாளையின் கணுள்ளவளைவுபோன் றிருக்குமயிரின்வளைவு. நிமிர்ந்துபொங்க என்றதனால் உச்சிக்கண் அம்மயிர்சேர்த்து முடிக்கப்பட்டதென்றும், முறிகொண்ட கண்ணிக்கிடைஎன்றதனால் அந்தமுடிப்பில் தளிராற்சமைந்த ஓர்மாலை இண்டைபோலச் சூட்டப்பட்டதென்றும், மொய்யொளிப்பீலி சேர்த்திஎன்றதனால் அதன்கீழ் ஈரங்குலம்பழுதற அரிந்துதொடுத்த மயிற்பீலிக் கண்ணிவளைக்கப்பட்டதென்றும், அதன்கீழ்முல்லைப்பிணைமீதுகுறிஞ்சிவெட்சி என்றதனால்முல்லையரும் பின்பிணையலும்பின் குறிஞ்சியரும்பின்பிணையலும்பின்வெட்சியின்பிணையலும்முறையே அலங்கரிக்கப்பட்டதென்றும் பொருள் போந்தவாறறிக.

முன்னெற்றியின் மீது முருந்திடை வைத்தகுன்றி
தன்னிற் புரிகொண்ட மயிர்க்கயி றரச்சாத்தி
மின்னிற் றிகழ்சங்கு விளங்குவெண் டோடுகாதின்
மன்னிப் புடைநின்றன மாமதி போலவைக.

(இ-ள்.) முன்னெற்றியின்மீது முருந்திடைவைத்த=முன்னெற்றியின்மேல் கத்தரித்த மயிலிறகின் அடிமுள்ளோடு இடையிடையேவைத்த; குன்றிதன்னிற் புரிகொண்டமயிர்க்கயிறரச்சாத்தி=குன்றிமணிகளால் முப்புரியாகக்கொண்ட மயிர்க்கயிற்றைப் பொருந்தும்படியணிந்து; மின்னிற்றிகழ்சங்கு விளங்குவெண்டோடு=மின்போல் விளங்குகின்ற விளக்கமான வெள்ளியசங்கினாற் செய்தகுழையானது; காதின்மன்னிப்புடை நின்றனமாமதிபோலவைக=இருகா

தினிடத்துமிருந்து இருபுடை யுதித்துவிளங்குகின்ற பெருமையினையுடைய இரண்டு சந்திரனைப்போலத்தோன்ற.—எ-று. (நகஅ)

கண்டத்திடை வெண்க வடிக்கதிர் மாலைசேரக்
கொண்டக்கொடு பன்மணி கோத்திடை யேனக்கோடு
துண்டப்பிறை போல்வன தூங்கிட வேங்கைவன்றோற்
றண்டைச்செயல் பொங்கிய சன்னவீரந் தயங்க.

(இ-ள்.) கண்டத்திடைவெண்க வடிக்கதிர்மாலைசேரக்கொண்டு=கழுத்தில்வெண்மையான பலகறையாலாகிய ஒளியினையுடைய மாலைகள்சேர்ந்துவிளங்கத்தரித்துக்கொண்டு; அக்கொடுபன்மணிகோத்து = சங்குமணியோடு பலமணிகளையும்கோத்து; இடையேனக்கோடு துண்டப்பிறைபோல் வனதூங்கிட= நடுவில்பன்றிக்கொம்பான இளம்பிறைபோல்வன தொங்க; வேங்கைவன்றோற்றண்டைச்செயல்பொங்கிய சன்னவீரந்தயங்க=வேங்கையினது வலியதோலாலாகிய தண்டைபோல் ஓர்வலையமாய்த்தைத்த சன்னவீரமென்னும்வெற்றிமாலையானது கழுத்திலிருந்து நாபியளவும்விளங்க.—எ-று. (நகக)

சன்னவீரம்=அரசர்முதலாயினோர் முத்தாற்செய்யும் ஓர்சிறந்தமாலையாதலில் இவர்க்குவேடர்கள் வேங்கைத்தோலால்தைத்து வலையமாகஇட்டனரென்க.

மார்பிற் சிறுதந்த மணித்திரண் மாலைதாழத்
தாரிற் பொலிதோள் வலயங்க டழைத்துமின்னச்
சேர்விற் பொலி கங்கணமீது திகழ்ந்தமுன்கை
கார்விற்செறி நாணெறி கைச்செறி கட்டிகட்டி.

(இ-ள்.) மார்பிற்சிறுதந்த மணித்திரண்மாலைதாழ= மார்பினிடத்துயானைக்கொம்பாற் கடைந்தசிறியமணிகளின் கொத்துக்களாலாகியதாழ்வடமானது தாழ்ந்துவிளங்க; தாரிற்பொலி தோள்வலயங்க டழைத்துமின்ன = மாலையாற்பொலிவடைந்த தோளினிடத்துவாகு வலயங்கள் ஒளியைவீசிப்பிரகாசிக்க; சேர்விற்பொலி கங்கணமீதுதிகழ்ந்தமுன்கை=ஒளியோடுகூடி விளங்குகின்ற கங்கணமானது தன்மேல்விளங்கியிருக்கின்ற முன்கையினிடத்து; கார்விற்செறிநாணெறிகைச்செறிகட்டிகட்டி = கரியவில்லினிடத்துப் பிணித்தநாணைத்தெறித்தற்குச்சாதனமான கைக்கோதையென்னும் உறையைக்கட்டி.—எ-று. (௬௦)

எறிதல் = நாணெறிதற்கும் அம்புவிடுதற்கும் சாதனமாதல். கைச்செறிகட்டி=கைக்கோதை, விரலுறை, புட்டியெனினுமமையும்.

அரையிற்சர ணத்துரி யாடையின் மீதுபௌவத்
திரையிற்படு வெள்ளல் கார்த்து விளிம்புசேர்த்தி
நிரையிற்பொலி நீளுடைத் தோல்சுரி கைப்புறஞ்சூழ்
விரையிற்றுவர் வார்விசி போக்கி யமைத்துவீக்கி.

(இ-ள்.) அரையிற்சரணத் துரியாடையின்மீது=திருவரையின் கண்மயிற்பீலியோடு சேர்ந்தபுலித்தோலாடையின்மேல்; பௌவத்திரையிற்படுவெள்

ளலகார்த்து=கடற்றிரையில் உதிக்கும்வெண்மையான பலகறைக் கோவையை இருமருங்கும் பொருந்தப்பிணித்து ; விளிம்புசேர்த்தி = அவ்வாடையின் கரைகளைச் செவ்வணிருக்கச்செய்து=நிரையிற் பொலிநீளுடைத்தோல்=வரிசையோடு பொலிந்தநீண்ட உடையாகிய தோலையும் ; சுரிகைப்புறஞ்சூழ்=உடைவாளின்புறத்தையும் சூழும்படி ; விரையிற்றுவர்வார்விசி போக்கியமைத்துவீக்கி=நறுமணங்கமழும் சிவந்தவாரின் கச்சைச்செலுத்தி யமையும்படிகட்டி.—எ-று. (சுக)

சரணம்=மயிற்பீலி. அலகு=பலகறைக்குஆகுபெயர். துவர்வார்=பவளம்போலச் சாயமூட்டியவார்.

வீரக்கழல் காலின் விளங்க வணிந்துபாதஞ்
சேரத்தொடு நீடுசெருப்பு விருப்பு வாய்ப்பப்
பாரப்பெரு வில்வலங்கொண்டு பணிந்து திண்ணன்
சாரத் திருத்தாண் மடுத்தேற்றி வியந்துதாங்கி.

(இ-ள்.) வீரக்கழல்காலின் விளங்கவணிந்து = வீரவெண்டையத்தைக் கணைக்காலின்கண் விளங்கும்படிதரித்து ; தொடுநீடுசெருப்புபாதஞ்சேர=தொடுக்கப்பட்ட நீண்டசெருப்பானது திருவடியிற்பொருந்த; விருப்புவாய்ப் பப்பாரப்பெருவில் வலங்கொண்டுபணிந்து=விருப்பம் உண்டாகும்படி கனத்தபெரிதாகிய வில்லைவலமாகவந்துவணங்கி ; திண்ணன்சாரத்திருத்தாண் மடுத்தேற்றிவியந்துதாங்கி=திண்ணனார் விற்குனியாது வலக்காற் பெருவிரலிற் பொருந்தவைத் தமுத்து குறவளைத்துநாணேற்றித்தெய்வங்களைத்துதித்து அவ்வில்லைக் கையிலெடுத்துக்கொண்டு.—எ-று. (சுஉ)

அங்கப் பொழுதிற் புவனத்திடர் வாங்கவோங்கித்
துங்கப் பெருமாமழை போன்றுதுண் ணென்றொலிப்ப
வெங்கட் சினநீடு விலங்கு விலங்கிநீங்கச்
செங்கைத் தலத்தாற் றடவிச்சிறு நாணெறிந்தார்.

(இ-ள்.) அங்கப்பொழுதிற்புவனத்திடர்வாங்கவோங்கி=அதுசமயத்தில் உலகின்கணுள்ள பிறவித்துன்பமானது நீங்கும்படிமிக்கு ; துங்கப்பெருமாமழை போன்று துண்ணென்றொலிப்ப=உயர்வான் மிக்கபெரியமேகம்போலவிரைவாக ஒலிக்கும்படி; வெங்கட்சினநீடு விலங்குவிலங்கிநீங்க=கொடிய கோபக்கண்ணையுடையமிருகங்கள் அகன்றோட ; செங்கைத்தலத்தாற்றடவிச் சிறுநாணெறிந்தார் =சிவந்த திருக்கரத்தாற் றடவிச்சிறியநாணைத்தொனிக்கச்செய்தார்.-எ-று. (சுங)

பல்வேறு வாளிபுதை பார்த்துடன் போதவேவி
வில்வேடராயத் துடிமேவி யொலிக்கு முன்றிற்
சொல்வேறு வாழ்த்துத் திசைதோறுந் துதைந்துவிம்ம
வல்லேறு போல்வா ரடல்வாளி தெரிந்துநின்றார்.

(இ-ள்.) பல்வேறுவாளிபுதைபார்த்து=பலவகையான அம்புகளைஅம்புக்கட்டுகளினின்றும்பார்த்தெடுத்து ; உடன்போதவேவி=ஒருங்குதன்னுடன் எடு

த்துவரும்படி வேவுகாரருக்குச்சொல்லி ; வில்வேடராயம்=வில்லினைத்தாங்கிய வேடர்கூட்டமும் துடிமேவியொலிக்குமுன்றில் = உடுக்கும்திரண்டொலிக்கின்ற முற்றத்தில் ; சொல்வேறுவாழ்த்து=சொல்லுகின்ற பலவகையானவாழ்த்தொலியானது; திசைதோறுந் துதைந்துவிம்ம=திக்குகள்தோறும் நெருங்கிஅதிகரிக்க; வல்லேறுபோல்வார் = வலிய ஆண்சிங்கம்போலும் திண்ணனார் ; அடல்வாளி தெரிந்துநின்றார் = கொலைத்தொழிலையுடையபாணங்களைத்தொடுத்துநின்றார்.—எ-று. (ருச)

மானச்சிலை வேடர்மருங்கு நெருங்கு போதிற்
பானற்குல மாமலரிற் படர்சோதி யார்முன்
றேனற்றசை தேறல் சருப்பொரி மற்றுமுள்ள
கானப்பலி நேர்கடவுட் பொறையாட்டி வந்தாள்.

(இ-ள்.) மானச்சிலைவேடர்=வெற்றிமிக்கவில்லையேந்திய வேடர்கள் ; மருங்குநெருங்குபோதில்=அருகில் நெருங்கியிருக்கும்சமயத்து; பானற்குலமாமலரில்=பெருமையினையுடைய நீலோற்பலமலரின் தொகுதியினின்றும்; படர்சோதியார்முன்=எழும் ஒளிபோலும் கருநிறமுடைய திண்ணனார்முன்; தேனற்றசை தேறல்=தேனும் நல்ல தசையும் கள்ளும் ; சருப்பொரிமற்றுமுள்ள=மலைநெற்சருவும் பொரியும் இவையல்லாத வேறுபலபொருள்களையும் ; கானப்பலிநேர்= காட்டின்கண்பலியிட்ட; கடவுட்பொறையாட்டிவந்தாள்=தேவராட்டியானவள் அவனிடத்துவந்தாள்.—எ-று. (ருரு)

சரு=தேவருணவு வேடர்கள்செய்யுங்கால் பால்சேர்த்தமைத்தலும் மாமிசம்சேர்த்தமைத்தலும்உண்டு.

நின்றெங்கு மொய்க்குஞ் சினவேடர்க ணீங்கப்புக்குச்
சென்றங்கு வள்ள றிருநெற்றியிற் சேடைசாத்தி
யுன்றந்தை தந்தைக்கு மிந்நன்மைக ளுள்ளவல்ல
நன்றும்பெரி துன்விற னம்மள வன்றிதென்றாள்.

(இ-ள்.) நின்றெங்குமொய்க்கும்=நாற்புறத்துஞ் சூழ்ந்துஎவ்விடத்துங் கூடியிருக்கும் ; சினவேடர்கணீங்கப்புக்குச்சென்று=கோபமுடையவேடர்கள் விலகும்படி உள்ளேபுகுந்து ; வள்ளல்திருநெற்றியிற்சேடைசாத்தி=திண்ணனாரதுதிருநெற்றியில் சேடைஅரிசியைத்தரித்து; உன்றந்தை தந்தைக்கும்=உன்னுடைய மூதாதைக்கும் ; இந்நன்மைகளுள்ளவல்ல = இவ்வித நல்லசகுனங்கள் உண்டாயிருக்கவில்லை ; நன்றும்பெரிதுன்விறலிது=மிகவும்பெரிது உன்னுடைய வெற்றியாகிய இது ; நம்மளவன்றென்றாள்=நம்மாலளவிட்டுக் கூறுதற்குரியதன்றென்று சொன்னாள்.—எ-று. (ருசு)

தந்தைதந்தைக்கும் என்ற உம்மை உன்பிதாவுக்கும்என எதிரதுதழீஇநின்றது. நன்றும் என்றதில் உம்மை சிறப்பும்மை. நன்று பெரிதெனக்கூட்டி விரித்தல்விகாரமாக்கினுமமையும். திருநெற்றியிற்சேடைசாத்துங்கால் திலகமிட்டன்றிச்சாத்தலமையாமையின் அரிதாரத்திலகமிட்டுச்சேடைசாத்தி எனக்கொள்க.

அப்பெற்றியில் வாழ்த்து மணங்குடை யாட்டிதன்னைச்
செப்பற்கரி தாயசிறப்பெதிர் செய்து போக்கிக்
கைப்பற்றிய திண்சிலைக் கார்மழை மேகமென்ன
மெய்ப்பொற்புடை வேட்டையின் மேற்கொ டெழுந்துபோந்தார்.

(இ-ள்.) அப்பெற்றியில்வாழ்த்தும்=அவ்வாறு வாழ்த்துகின்ற ; அணங்குடையாட்டிதன்னை=தேவராட்டிக்கு ; செப்பற்கரிதாயசிறப்பு=சொல்லுதற்கருமையாகிய சிறப்புக்களை ; எதிர்செய்துபோக்கி=அவளுக்குக்கைம்மாறாகச்செய்தனுப்பி ; கைப்பற்றியதிண்சிலை=கையினிடத்துப்பிடித்த திண்ணிய வில்லையுடைய ; கார்மழைமேகமென்ன=கரியசூற்கொண்டமேகம்போல ; மெய்ப்பொற்புடைவேட்டையின்மேற்கொடு=திருமேனிப்பொலிவுடையராய் வேட்டையாடுந்தொழிலைமேற்கொண்டு ; எழுந்துபோந்தார்=எழுந்துபுறப்பட்டார்.—எ-று. ()

வேறு.

தாளில்வாழ் செருப்பர்தோ றழைத்தநீடு தானையார்
வாளியோடு சாபமேவு கையர்வெய்ய வன்கணார்
ஆளியேறு போலவேகு மண்ணலார்மு னெண்ணிலார்
மீளிவேடர் நீடுகூட்ட மிக்குமே லெழுந்ததே.

(இ-ள்.) தாளில்வாழ்செருப்பர்=காலிற்றொடுத்த செருப்பை யுடையவர்களாயும் ; தோறழைத்தநீடுதானையார்=தோலினால் விரித்துடுத்த நீண்டஆடையையுடையவர்களாயும் ; வாளியோடுசாபமேவுகையர்=அம்புகளோடு வில்லேந்தியகையை யுடையவர்களாயும் ; ஆளியேறுபோலவேகும் = ஆண்சிங்கம்போல வேட்டைத்தொழிலை மேற்கொண்டுசெல்லும் ; அண்ணலார்முன்=பெருமையிற்சிறந்த திண்ணனார்முன் ; எண்ணிலார்மீளிவேடர்நீடுகூட்டம்=எண்ணிறந்த வலியையுடையவேடர்களது தொகுதியானது; மிக்குமேலெழுந்தது=மிகுந்துமேற்கொண்டெழுந்தது.—எ-று. ஏ-அசை. (௬அ)

வன்றொடர்ப் பிணித்தபாசம் வன்கைமள்ளர் கொள்ளவே
வென்றிமங்கை வேடர்வில்லின் மீதுமேவு பாதமுன்
சென்றுநீளு மாறுபோல்வ செய்யநாவின் வாயவாய்
ஒன்றொடொன்று நேர்படாம லோடுநாய்கண் மாடெலாம்.

(இ-ள்.) வன்றொடர்ப்பிணித்தபாசம் = வலியசங்கிலித்தொடரோடுகட்டப்பட்ட கயிற்றை ; வன்கைமள்ளர்கொள்ள=திண்ணியகைகளையுடைய வேடர்கள் பிடித்துக்கொண்டுவர ; வென்றிமங்கைவேடர் வில்லின்மீதுமேவுபாதம்= வேடர்கள்ஏந்திய வில்லினிடத்திருக்கும் வீரலட்சுமியின் திருவடிகள் ; முன் சென்றுநீளுமாறுபோல்வ = முன்னேசென்று நீளுதல்போலும் ; செய்யநாவின் வாயவாய்=சிவந்த நாவோடுகூடியவாயையுடையனவாய் ; ஒன்றொடொன்றுநேர்படாமல்=ஒன்றோடொன்று ஒத்துதலில்லாமல் ; ஓடுநாய்கண்மாடெலாம்=வேடர்கள்பக்கங்களில் நாய்கள்ஓடும்.—எ-று. (௬௯)

போர்வலைச் சிலைத்தொழிற் புறத்திலே விளைப்பவச்
சார்வலைத் தொடக்கறுக்க வேருமையர் தம்முனே
கார்வலைப் படுத்தகுன்று கானமா வளைக்கநீள்
வார்வலைத் திறஞ்சுமந்து வந்தவெற்பர் முந்தினர்.

(இ-ள்.) போர்வலைச் சிலைத்தொழில் = வேட்டையாடுதற்குரிய வலைத்தொழிலையும் சிலைத்தொழிலையும்; புறத்திலேவிளைப்ப = புறம்பேசெய்யும்படிக்கும்; அச்சார்வலைத்தொடக்கறுக்க=அகத்துத் தன்னைப்பந்தித்தபாசமாகிய அவ்வலையின்பிணிப்பை யறுக்கும்படிக்கும் ; ஏருமையர்தம்முனே = செல்லும்திண்ணனருக்குமுன்னே ; கார்வலைப்படுத்தகுன்று = கரியவலைகளைக்கட்டிய குன்றினிடத்தும்; கானமாவளைக்க=காட்டினிடத்தும்உள்ளவிலங்குகளைப்பிடிக்கும்படி; நீள்வார்வலைத்திறஞ்சுமந்து=நீண்டவாராலாகிய வலைத்தொகுதிகளைச்சுமந்துகொண்டு; வந்தவெற்பர்முந்தினர்=வந்தவேடர்கள் முற்பட்டுநடந்தார்கள்.—எ-று. ()

நண்ணிமா மறைக்குலங்க ணாடவென்று நீடுமத்
தண்ணிலா வடம்புகொன்றை தங்குவேணி யார்தமைக்
கண்ணினீடு பார்வையொன்று கொண்டுகாணு மன்பர்முன்
எண்ணில்பார்வை கொண்டுவேட ரெம்மருங்கு மேகினர்.

(இ-ள்.) நண்ணிமாமறைக்குலங்கள்=பெருமையினையுடையவேதங்கள் கிட்டி ; நாடவென்று நீடும்=எந்நாளும் தேட அவைகளால் அறியப்படாது நிற்கும்;அத்தண்ணிலாவடம்புகொன்றை=அத்தன்மையினையுடையகுளிர்ந்த இளம்பிறையும் அடப்பமலரும்கொன்றைமலரும் ; தங்குவேணியார்தமை=பொருந்தியசடைமுடியையுடைய காளத்திநாதரை ; கண்ணினீடு பார்வையொன்று கொண்டு=கண்ணாகிய மிக்கபார்வையொன்றைக்கொண்டு; காணுமன்பர்முன்=காணத்தக்கதிண்ணனர் முன்னே ; எண்ணில்பார்வைகொண்டு=அளவற்றபார்வைமிருகங்களைக்கொண்டு ; வேடரெம்மருங்குமேகினர் = வேடர்கள் எப்பக்கத்தும்புறப்பட்டார்கள்.—எ-று. (எக)

பார்வை என்றது கட்பார்வைக்கும் பார்வைமிருகத்துக்கும் பொதுவாய் நின்றது. ஒருகண்ணை யிடந்தப்பி என்றபடி.

கோடுமுன் பொலிக்கவுங் குறுங்கணு குளிக்குல
மாடுசென் றிசைப்பவு மருங்குபம்பை கொட்டவுஞ்
சேடுகொண்ட கைவிளிச் சிறந்தவோசை செல்லவுங்
காடுகொண் டெழுந்தவேடு கைவளைந்து சென்றதே.

(இ-ள்.) கோடுமுன்பொலிக்கவும்=ஊதுகுழல்கள் முன்னேமுழங்கவும்; குறுங்கணுகுளிக்குலம்=குறியகண்ணையுடையசிறுபறையின்தொகுதிகள் ; மாடுசென்றிசைப்பவும்=பக்கங்களில் சேர்ந்து ஒலிக்கவும் ; மருங்குபம்பை கொட்

டவும்=அதனருகே முல்லைப்பறை யடிக்கவும்; சேடுகொண்டகைவிளிச்சிறந்த வோசைசெல்லவும்=திரண்டு கைதட்டுதலால் உண்டான சிறப்புடைய ஓசை பரம்பவும்; காடுகொண்டெழுந்தவேடு = காடுபோலத் திரண்டெழுந்த வேடர் தொகுதி; கைவளைந்துசென்றது=சூழ்ந்துசென்றது.—எ-று. (எ௨)

வேடு - தொழிலாகுபெயர், ஏ - அசை.

நெருங்குபைந் தருக்குலங்க ணீடுகாடு கூடநேர்
வருங்கருஞ் சிலைத்தடக்கை மானவேடர் சேனைதான்
பொருந்தடந் திரைக்கடற் பரப்பிடைப் புகும்பெருங்
கருந்தரங்க நீள்புனற் களிந்திகன்னி யொத்ததே.

(இ-ள்.) நெருங்குபைந்தருக்குலங்கள்=நெருங்கிய பசுமையாகிய மரக் கூட்டங்கள்; நீடுகாடுகூட=மிக்கிருக்கும் காட்டினை யடையும்படி; நேர்வருங் கருஞ்சிலைத் தடக்கை=நேராக வருகின்ற கருமையான வில்லேந்திய கைகளை யுடைய; மானவேடர்சேனை=வெற்றிமிக்கவேடச்சேனையானது; பொருந்தடந் திரைக்கடற் பரப்பிடைப்புகும்=பொராநின்ற விசாலமாகிய அலைவீசுகின்ற பரந்தகடலிடத்துச் செல்லாநின்ற; பெருங்கருந் தரங்கநீள் புனற்களிந்தி கன்னி யொத்தது=பெரிதாகிய கரியநிறமுள்ள அலைகளோடு உயர்ந்த நீரையுடைய காளிந்தியென்னும் நதிமாதையொத்திருந்தது.—எ-று. (எ௩)

தான் - சாரியை. ஏ - அசை.

காட்டைக் கடலாகவும் வேடர்களது செலவைக் காளிந்தியின் செலவாகவும் உவமை கூறப்பட்டது. காளிந்தி என்றது களிந்தியெனவிகாரமாயிற்று.

தென்றிசைப் பொருப்புடன் செறிந்தகானின் மானினம்
பன்றிவெம் மரைக்கணங்க ளாதியான பல்குலந்
துன்றிநின்ற வென்றடிச் சுவட்டினெறற்றர் செல்லவே
வன்றடக்கை வார்கொடெம் மருங்கும்வேட ரோடினர்.

(இ-ள்.) தென்றிசைப் பொருப்புடன் செறிந்தகானில் = நம்மூருக்குத் தென்றிசைக்கணுள்ள மலையோடு கூடிய காட்டினிடத்து; மானினம்பன்றிவெம்மரைக்கணங்கள்=மான்களும் காட்டுப்பன்றிகளும் வெவ்விதாகிய மரைத்தொகுதிகளும்; ஆதியானபல்குலம்=முதலான பலவிலங்கின் சாதிகள்; துன்றிநின்றவென்றடிச் சுவட்டினெறற்றர்செல்ல = நெருங்கி நிற்கின்றனவென்று அடிச்சுவட்டின் வழியால் வேவுகாரர்கள் செல்ல; வன்றடக்கை வார்கொடு=வலிமையாகிய பெரியகைகளில் வார்வலைகளை எடுத்துக்கொண்டு; எம்மருங்கும் வேடரோடினர்=நான்கு பக்கங்களினும் வேடர்கள் சென்றார்கள்.—எ-று. (எச)

ஓடியெறிந்து வாரொழுக்கி யோசனைப் பரப்பெலா
நெடியதிண் வலைத்தொடக்கு நீளிடைப் பிணித்துநேர்
கடிகொளப் பரந்தகாடு காவல்செய் தமைத்தபின்
செடிதலைச் சிலைக்கைவேடர் திண்ணனார் முனண்ணினார்,

(இ-ள்.) ஓடியெறிந்து வாரொழுக்கி=ஒடிவலைகளைக்கட்டி வார்களைவீக்கி; யோசனைப் பரப்பெலாம்=ஒருயோசனையெல்லையுடைய இடங்களெல்லாம்; நெடிய திண் வலைத்தொடக்கு=நீண்ட திண்ணியவலையினதுதொடர்களை ; நீளிடைப்பிணி த்து=நெடுந்தூரம் செல்லும்படி கட்டி ; நேர் கடிகொளப் பரந்தகாடு=நேராகக் (கண்டார்) அச்சங்கொள்ளும்படி பரம்பிய அக்காட்டை ; காவல்செய் தமைத்த பின்=(மிருகங்கள் வெளியிற் செல்லாமலிருக்கும்படி) காவலிட்டு வைத்தபின்பு; செடிதலைச் சிலைக்கைவேடர்=புதர்போன்ற மயிர்த்தலையையுடைய வில்லைக் கை யிலேந்திய வேடர்கள் ; திண்ணனார் முன்நண்ணினார்=திண்ணனார் முன்சென் றார்கள்.—எ-று. (எ௫)

ஒடிதல்=குறுகுதல். நீண்டுசெல்லாதுகுறுகிய வலையை ஒடியென்றது ஆகுபெயர். அதாவது:—சுருக்குவலைகளை இடையிடையேகட்டி என்றபடி.

வெஞ்சிலைக்கை வீரனாரும் வேடரோடு கூடிமுன்
மஞ்சலைக்கு மாமலைச் சரிப்புறத்து வந்தமா
அஞ்சுவித் தடர்க்குநாய்க ளட்டமாக விட்டுநீள்
செஞ்சரத்தி னோடுசூழல் செய்தகானு ளெய்தினார்.

(இ-ள்.) வெஞ்சிலைக்கை வீரனாரும்=கொடியவில்லைக் கையிலேந்திய திண்ணனாரும் ; வேடரோடுகூடி=வேடர்களோடு சேர்ந்து ; முன்மஞ்சலைக்கு மாமலைச் சரிப்புறத்து வந்தமா=முன்னே மேகங்கள் சஞ்சரிக்கின்ற பெரியமலைப் பக்கங்களினின்றும் வந்த மிருகங்களை ; அஞ்சுவித் தடர்க்குநாய்கள்=அஞ்சும் படிசெய்து நெருங்குகின்ற நாய்களை ; அட்டமாகவிட்டு=அருகாகச் செலுத்தி ; நீள்செஞ் சரத்தினோடு=நீண்ட செப்பமான அம்போடு ; சூழல்செய்த கானு ளெய்தினார்=(வேட்டையின்பொருட்டு வேடர்களால்) வளைக்கப்பட்டகாட்டினி டத்துச் சென்றார்.—எ-று. (எ௬)

அட்டம் = அருகு. அருக்காகவிட்டுச் சூழல்செய்த வெனக்கூட்டுக.

வெய்யமா வெழுப்பவேவி வெற்பராய மோடிநேர்
எய்யும்வாளி முன்றெரிந்து கொண்டுசெல்ல வெங்கணு
மொய்குரற் றுடிக்குலங்கள் பம்பைமுன் சிலைத்தெழக்
கைவிளித் ததிர்த்துமா வெழுப்பினார்கள் கானெலாம்.

(இ-ள்.) வெற்பராயம்=வேடர்கூட்டங்கள் ; வெய்யமா வெழுப்பவே வி=கொடிய விலங்குகளை (அவைகளிருக்கும் இடங்களினின்றும்) எழுப்பும்படி வேவுகாரரையனுப்பி ; நேர் எய்யும் வாளிமுன்றெரிந்துகொண்டு ஓடிச்செல்ல= அவ்வேவுகாரர் எழுப்புங்கால் நேர்பட்டுவரும் விலங்கெதிரே எய்தற்குரிய அம்பு களை முன்னே தெரிந்தெடுத்துக்கொண்டு விரைந்துபோக ; எங்கணு மொய்கு ரற்றுடிக்குலங்கள் = எவ்விடத்தும் மொய்த்த ஒலியையுடைய உடுக்குகளும் ; பம்பைமுன் சிலைத்தெழ=பம்பைப்பறையும் முன்னேஒலித்து எழும்ப ; கைவி

ளித்ததிர்த்து=கைகொட்டி வாயால் உரப்பி; மாவெழுப்பினார்கள் கானெலாம்= அக்காட்டுள் மறைந்திருக்கும் விலங்குகளை யெல்லாம் அவ்வேவுகாரர்கள் எழுப்பினார்கள்.—எ-று. (எ௭)

ஏனமோடு மானினங்க ளெண்குதிண் கலைக்குலங்
கானமேதி யானைவெம் புலிக்கணங்கள் கான்மரை
யானமாவ னேகமா வெருண்டெழுந்து பாயமுன்
சேனைவேடர் மேலடர்ந்து சீறியம்பு நூறினார்.

(இ-ள்.) ஏனமோடு மானினங்கள்=காட்டுப்பன்றியோடு மான்றொகுதிகளும்; எண்குதிண்கலைக்குலம்=கரடிகளும் வலியகருமான்கூட்டங்களும்; கானமேதியானை = காட்டெருமைகளும் யானைகளும்; வெம்புலிக்கணங்கள்கான்மரை = கொடியபுலிக்கூட்டங்களும் காட்டுப்பசுக்களும்; ஆனமாவனேகமா= ஆகியவிலங்குகள் அனேகமாக;வெருண்டெழுந்துபாய=வெருட்சிகொண்டு எழும்பிப்பாய்ந்துசெல்ல; முன்சேனைவேடர் = அவைகளுக்குமுன் எதிர்சென்ற அவ்வேடச்சேனைகள்; மேலடர்ந்துசீறியம்புநூறினார் = எதிர்த்துக்கோபங் கொண்டு நெருங்கி அம்புகளினாலழித்தார்கள்.—எ-று. (எ௮)

வேறு.

தாளறுவன விடைதுணிவன தலைதுமிவன கலைமா
வாளிகளொடு குடல்சொரிதர மறிவனசில மரையா
நீளுடல்விடு சரமுருவிட நிமிர்வனமிடை கடமா
மீளிகொள்கணை படமுடலெழ விழுவனபல வுழையே.

(இ-ள்.) கலைமான்=கலைமான்கள்; தாளறுவனவிடைதுணிவனதலைதுமிவன=கால்கள்வெட்டுண்டனவாய் இடுப்புகள் துணிக்கப்பட்டனவாய் தலைகள் வெட்டுண்டன; வாளிகளொடு குடல்சொரிதரமறிவனசிலமரை=அம்புகளோடு குடர்களும்கீழேசொரியஇறந்துகிடந்தன சிலமரைகள்; நீளுடல்விடுசரமுருவிட=விடுகின்றஅம்பானது நீண்டஉடம்பினூடுருவ; நிமிர்வனமிடைகடமா=நெருங்கியமதத்தையுடையயானைகள் நிமிர்ந்துசெல்வன; மீளிகொள்கணைபடமுடலெழ=வலிகொண்டஅம்புகள் தைத்ததனால் உடலானதுமேலெழுந்து; விழுவனபலவுழையே=பலமான்கூட்டங்கள் பின்புநிலத்தில் விழுவன.—எ-று. (எ௯)

ஆம்-அசை.

வெங்கணைபடு பிடர்கிழிபட விசையுருவிய கயவாய்
செங்கனல்விட வதனொடுகணை செறியமுனிரு கருமா
அங்கெழுசிர முருவியபொழு தடலெயிறுற வதனைப்
பொங்கியசின மொடுகவர்வன புரைவனசில புலிகள்.

(இ-ள்.) சிலபுலிகள்=சிலபுலிகள்; வெங்கணைபடுபிடர்கிழிபட=கொடியஅம்புகள் படுதலால்பிடர்கிழிந்துபோக; விசையுருவியகயவாய்=விசையோடு அவ்வம்புகள் உருவிய பிளந்தவாயானது; செங்கனல்விட = சிவந்தநெருப்பை

வீச; அதனொடுகணைசெறிய=அந்நெருப்போடு வாய்வழியாக அப்பாணங்கள்நெருக்க; முனிருகருமா=அதன்முன்னிருக்கும் பன்றியினது; அங்கெழுசிரமுருவியபொழுது=அழகியதலையைத்தைத்தூடுருவுங்கால்; அடலெயிறுறவதனை=வலியதன்பல்லிலுறும்படி அப்பன்றியை; பொங்கியசினமொடுகவர்வனபுரைவன=மிக்கசினத்தோடுகவர்தலையொத்தன.—எ-று. (அ௰)

பின்மறவர்கள் விடுபகழிகள் பிறகுறவயி றிடைபோய்
முன்னடுமுக மிசையுருவிட முடுகியவிசை யுடனக்
கொன்முனையடு சரமினமெதிர் குறுகியமுக முருவத்
தன்னெதிரெதிர் பொருவனநிகர் தலையனபல கலைகள்.

(இ-ள்.) மறவர்கள்பின்விடுபகழிகள்=வேடர்கள்பின்னேநின்றுவிடுகின்றபாணங்கள்; பலகலைகள்பிறகுறவயிறிடைபோய்=பலகலைமான்களின்பின் உருவியவயிற்றின் வழியாய்ச்சென்று; முன்னடுமுகமிசையுருவிட=முற்பக்கத்துநடுமுகத்தைஉருவ; அக்கொன்முனையடுசரம்=அவ்வேட்டைமுகத்துக் கொல்கின்ற அம்புகள்; முடுகியவிசையுடனெதிர்குறுகியவினமுகமுருவ = முடுக்கிய விசையோடுதன்னெதிர்வந்தகலைமான்களின் முகத்தைஉருவுதலால்; தன்னெதிரெதிர் பொருவனநிகர்தலையன=அம்மான்கள் தன்னோடுதொனுக எதிரெதிர் போர்செய் தலையொத்ததலையையுடையன.—எ-று. (அக)

கருவரையொரு தனுவொடுவிசை கடுகியதென முனைநேர்
குரிசின்முன்விடு மடுசரமெதிர் கொலைபயில்பொழு தவையே
பொருகரியொடு சினவரியிடை புரையறுமுடல் புகலால்
வருமிரவொடு பகலணைவன வெனமிடையுமவ் வனமே.

(இ-ள்.) கருவரையொருதனு வொடுவிசைகடுகியதென=கரியமலையொன்று ஓர் வில்லையேந்திக்கொண்டுவிசையாகவந்ததென்று சொல்லும்படி; முனைநேர்குரிசில்=வேட்டையில்வந்ததிண்ணனார்; முன்விடுமடுசரம்=விலங்கின் எதிரில் விடுகின்றகொலைத்தொழிலையுடைய அம்புகள்; எதிர்கொலைபயில்பொழுது=எதிரேசென்று அவைகளைக்கொல்லுங்கால்; அவையேபொருகரியொடுசினவரியிடை=அவ்வம்புகளே பொராநின்றயானையோடு கோபமுள்ள சிங்கத்தினிடத்தும்; புரையறுமுடல்புகலால்=வலியஉடலில்தைத்துருவலால் (இறந்து); வருமிரவொடுபகலணைவனவென = வருகின்ற இராக்காலத் தோடுபகற்காலமும் ஒன்றுபட்டு இருந்தாற்போல; மிடையுமவ்வனம் = அவ்வனத்தில்நெருங்கியிருக்கும்.—எ-று. (அஉ)

ஏகாரமிரண்டில்முன்னையதுதேற்றம் பின்னையது அசை.

நீளிடைவிசை மிசைகுதிகொள நெடுமுகிறெட வெழுமான்
றாளுறுகழன் மறவர்கள்விடு சரநிரைதொடர் வனதாம்
வாள்விடுகதிர் மதிபரிவுற வருமெனவிழு முழையைக்
கோளொடுபயில் பணிதொடர்நிலை கொளவுளவெதிர் பலவே.

(இ-ள்.) நீளிடைவிசைமிசைகுதிகொள=வெளியில்விசையோடுமேலே குதித்து; நெடுமுகிலுடைவெழுமான்=நீண்டமேகமண்டலத்தைமுட்டும்படி எழுகின்றமான்களை; தாளுறுகழன்மறவர்கள்விடு=கால்களிற்பிணித்தவீரக்கழலையுடைய வேடர்கள்விடப்பட்ட; சரநிரைதொடர்வனதாம்=அம்பின் வரிசைகள் தொடர்ந்துசெல்வன; வாள்விடுகதிர்மதி பரிவுறவருமென = ஒளியைவீசுகின்ற கிரணங்களையுடைய சந்திரன் இராகுவினால்பீடிக்கப்படவருங்காலமுண்டென்று; விழுமுழையை=அதனினின்றும் அச்சத்தால்நீங்குகின்றமானை; கோளொடுபயில் பணி=கிரகங்களோடு சேர்ந்த இராகுவானது; தொடர்நிலைகொளவுளவெதிர்பல =தொடர்ந்து பற்றும் நிலைமையைக்கொள்ளும்படி எதிரேபல இடங்கள் உள்ளன.—எ-று. ஏ-அசை. (அ௩)

கடல்விரிபுனல் கொளவிழுவன கருமுகிலென நிரையே
படர்வொடுசெறி தழைபொதுளிய பயில்புதல்வன மதன்மேல்
அடலுறுசர முடலுறவரை யடியிடமல மரலான்
மிடைகருமரை கரடிகளொடு விழுவனவன மேதி.

(இ-ள்.) கடல்விரிபுனல்கொள= கடலினிடத்து விரிவாகியநீரையுண்ணும்படி; விழுவனகருமுகிலென=விழுகின்றகரியமேகம்போல; நிரையேபடர்வொடுசெறிதழைபொதுளிய=வரிசையாகவேபடர்ச்சியோடுசெறிவாகிய தழைகள்நெருங்கிய; பயில்புதல்வனமதன்மேல்=புதலினையுடையவனத்தினிடத்து; அடலுறுசரமுடலுற=வலியினையுடைய அம்புகள் உடம்பில்தைக்க; வரையடியிடமலமரலால் = மலையடிவாரத்தில் சுழலுதலோடு; மிடைகருமரைகரடிகளொடு=நெருங்குகின்ற கரியமரையோடும் கரடிகளோடும்; விழுவனவனமேதி =காட்டெருமைகள் இறந்துவிழுகின்றன.—எ-று. (அ௪)

மிடைகருமரைகரடிகளொடு அலமரலால் வன்மேதிகருமுகிலென விழுவன எனஇயையும். புதல்வனத்தைக்கடலாகக்கொள்க.

பலதுறைகளின் வெருவரலொடு பயில்வலையற நுழைமா
உலமொடுபடர் வனதகைவுற வுறுசினமொடு கவர்நாய்
நிலவியவிரு வினைவலையிடை நிலைசுழல்பவர் நெறிசேர்
புலனுறுமன னிடைதடைசெய்த பொறிகளினள வுளவே.

(இ-ள்.) பலதுறைகளின் வெருவரலொடு=பலவழிகளினின்றும் அச்சத்தோடு; பயில்வலையறநுழைமா=கட்டியவலைகளறும்படி நுழைந்துசெல்கின்ற விலங்குகள்; உலமொடுபடர்வனதகைவுற=விசையோடுசெல்லுதலைத் தடுக்கும்படி; உறுசினமொடுகவர்நாய்=மிக்ககோபத்தோடு அவ்விலங்குகளைக் கவர்கின்ற நாய்கள்; நிலவியவிருவினைவலையிடை=விளக்கமான நல்வினைதீவினையென்னும் இருவினைகளாகியவலையினிடத்துப்பட்டு; நிலைசுழல்பவர்=தந்நிலைகலங்கிநிற்கும்அவர்கள்; நெறிசேர்புலனுறுமனனிடைதடைசெய்த = மோக்கநெறியிற்சேர்தற்குரியஞானத்தோடுசேர்ந்தமனத்தைத்தடுத்த; பொறிகளினளவுள=ஐம்பொறிகளின்நிலைமையைஒத்திருந்தன.—எ-று. படர்வன-முற்றுத்தொழிற்பெயர் ஏ-அசை.

துடியடியன மடிசெவியன துறுகயமுனி தொடரார்
வெடிபடவிரி சிறுகுருளைகண் மிசைபடுகொலை விரவார்
அடிதளர்வுறு கருவுடையன வணைவுறுபிணை யலையார்
கொடியனவெதிர் முடுகியுமுறு கொலைபுரிசிலை மறவோர்.

(இ-ள்.) துடியடியனமடிசெவியன=உடுக்கையொத்த கால்களையுடைய னவாயும் மடிந்தகாதுகளையுடையனவாயும் ; துறுகயமுனிதொடரார் = நெரு ங்கிவரும்யானைக்கன்றுகளைத்தொடர்ந்துவேட்டையாடார் ; வெடிபடவிரிசிறுகு ருளைகண்மிசை = வெடித்தஒலியுண்டாக ஓடுகின்றசிறியவிலங்கின் பிள்ளைகளிட த்து ; படுகொலைவிரவார் = கொலையைச்செய்யமாட்டார்கள் ; அடிதளர்வுறுகரு வுடையன=அடிபெயர்க்குங்கால்தளர்வடைந்து கருப்பமுடையவாய் ; அணைவு றுபிணையலையார்=வருகின்றபெண்மான்களைக்கொல்லார் ; கொடியனவெதிர்முடு கியும்=கொடியவிலங்குகளின் எதிரிற்சென்றும் ; உறுகொலைபுரிசிலைமறவோர்= அவற்றைமிகக்கொலைசெய்கின்ற வில்லையுடையவேடர்கள்.—எ-று. (அசு)

உம்மை-உயர்வுசிறப்பு.

இவ்வகைவரு கொலைமறவினை யெதிர்நிகழ்வுழி யதிரக்
கைவரைகளும் வெருவுறமிடை கானெழுவதொ ரேனம்
பெய்கருமுகி லெனவிடியொடு பிதிர்கனல்விழி சிதறி
மொய்வலைகளை யறநிமிர்வுற முடுகியகடு விசையில்.

(இ-ள்.) இவ்வகைவருகொலை மறவினை=இவ்வாறுவருகின்ற கொலைத் தொழிலாகியவேட்டைவினை ; எதிர்நிகழ்வுழி=தன்னெதிரே நடக்கும்பொழுது ; அதிர=நிலம் அதிரும்படிக்கும் ; கைவரைகளும்வெருவுற=துதிக்கையினையுடை யமலைபோலும்யானைகளும் அஞ்சும்படிக்கும் ; மிடைகானெழுவதோரேனம்= நெருங்கியகாட்டினின்றும் எழும்பிய ஓர் பன்றியானது ; பெய்கருமுகிலென= மழையைப்பெய்கின்ற கரியமேகம்போல; இடியொடுபிதிர்கனல்விழிசிதறி=இடி த்தகுரலோடு கோபக்கனலைக்கண் களினின்றும்சிதறி ; மொய்வலைகளையறநிமிர் வுற = நெருங்கியவலைகளறும்படி மேற்கிளம்பி ; முடுகியகடுவிசையில்=கடியவி சையோடோடியது.—எ-று. (அஎ)

வலைகளை என்பதில் ஐ-அசை. முடுகியதௌன்பதில்துவ்விகுதிவிகாரத்தாற் றொக்கது. உம்மை-உயர்வுசிறப்பு.

போமதுதனை யடுதிறலொடு பொருமறவர் களரியே
றாமவர்தொடர் வுறும்விசையுட னடிவழிசெலு மளவிற்
றாமொருவரு மறிகிலரவர் தனிதொடர்வுழி யதன்மேல்
ஏமுனையடு சிலைவிடலைக ளிருவர்களடி பிரியார்.

(இ-ள்.) போமதுதனையடுதிறலொடு=போகின்ற அப்பன்றியைக்கொல் லத்தக்கவலிமையோடு ; பொருமறவர்களரியேறாமவர் = எதிர்க்கும்வேடர்களு க்குச்சிங்கேறுபோன்றதிண்ணனார் ; தொடர்வுறும்விசையுடன்=பின்தொடரும்

விசையோடு ; அடிவழிசெலுமளவில் = அதனடிவழியாகச்செல்லும் சமயத்து ; தாமொருவருமறிகிலர் = அவ்வேடர்கள் தாங்கள் ஒருவரும் அறியவில்லை ; அவர்தனிதொடர்வுழி = திண்ணனார் தனியே அப்பன்றியைப்பற்றித்தொடரு ங்கால் ; அதன்மேல் ஏழுனையடு சிலைவிடலைகள்=அதன்பின்பு அம்பினாற்பகைவ ரைக்கொல்கின்றவில்லையுடையகாளைகள் ; இருவர்களடிபிரியார்=இருவர்திண்ண னரைஅடிபிரியாதவர்கள்.—எ-று. (அஅ)

நாடியகழல் வயவர்களவர் நாணனுநெடு வரிவிற்
காடனுமெனு மிருவருமலை காவலரொடு கடிதிற்
கூடினர்விடு பகழிகளொடு கொலைஞமலிகள் வழுவி
நீடியசரி படர்வதுதரு நீழலின்விரை கேழல்.

(இ-ள்.) நாடியகழல்வயவர்களவர் = திண்ணனாரைத்தேடி வீரக்கழலை யணிந்த வீரர்களாகிய ; நாணனுநெடுவரிவிற்காடனும்=நாணனும் நெடிதாய்வரி ந்துகட்டும் வில்லையுடைய காடனும் ; எனுமிருவருமலைகாவலரொடு = என்னும் அவ்விருவரும் மலையைக்காப்பவர்களோடு ; கடிதிற்கூடினர்=விரைவிற்கூடினார் கள் ; விடுபகழிகளொடு=அவர்களால் விடப்பட்ட அம்புகளோடு ; கொலைஞமலி கள் வழுவி=கொலைத்தொழில்செய்யும் நாய்களுக்குந்தப்பி ; தருநீழலின்விரைகே ழல்=மரநீழலில் விரைந்துசெல்லும் பன்றியானது ; நீடியசரிபடர்வது=நெடுந் தூரமாயிருக்கும் மலைச்சாரல் வழியிற்சென்றது.—எ-று. (அசு)

படர்வது காலவழுவமைதி. இவ்விரண்டுங்குளகம்.

குன்றியைநிகர் முன்செறவெரி கொடுவிழியிடி குரனீள்
பன்றியுமடல் வன்றிறலொடு படர்நெறிநெடி தோடித்
துன்றியதொரு குன்றடிவரை சுலவியநெறி சூழற்
சென்றதனிடை நின்றதுவலி தெருமரமர நிரையில்.

(இ-ள்.) குன்றியைநிகர்முன்செற = குன்றிமணியை நிகர்த்துமுன்னே எதிர்ந்தாரைக்கொல்லும்படி ; எரிகொடுவிழியிடிகுரனீள்பன்றியும்=கோபத்தால் எரிகின்ற கொடியகண்களையும் இடிபோன்ற குரலையும் நீண்ட உருவத்தினையும் உடைய அப்பன்றியும் ; அடல்வன்றிறலொடு படர்நெறிநெடிதோடி=மிக்கவலி யோடு தான்செல்லுதற்குரிய மார்க்கத்தில் நெடுந்தூரம் ஓடி ; துன்றியதொரு குன்றடிவரை=நெருங்கிய ஒருமலையினடியில் ; சுலவியநெறிசூழற்சென்று=சூழ் ந்தவழியில் உள்ள காட்டையடைந்து; அதனிடை=அவ்விடத்து ; வலிதெருமரம ரநிரையில் நின்றது=வலியிழந்து மரச்செறிவில் நின்றது.—எ-று. (௯0)

உம்மை எதிரது தழீஇயது.

அத்தருவளர் சுழலிடையடை யதனிலையறி பவர்முன்
கைத்தெரிகணை யினிலடுவது கருதலர்விசை கடுகி
மொய்த்தெழுசுடர் விடுசுரிகையை முனைபெறவெதி ருருவிக்
குத்தினருடன் முறிபடவெறி குலமறவர்க டலைவர்.

(இ-ள்.) அத்தருவளர்சுழலிடையடை = அந்தத்தருக்கள்நெருங்கியகாட்டிலடைந்த ; அதனிலையறிபவர் = அப்பன்றியின் இருப்பை அறிந்தவராய்; முன்கைத்தெரிகணையினிலவெதுகருதலர் = தான்முன்னேகையில் ஆய்ந்தெடுத்த அம்பாற்கொல்ல நினைக்காமல் ; விசைகடுகி = விசையோடுகிட்டி ; மொய்த்தெழுசுடர்விடுசுரிகையை = திரண்டு ஒளிவீசுகின்ற உடைவாளை ; முனைபெறவெதிருருவிக்குத்தினர் = எதிரே உருவிநுதி அழுந்தும்படிகுத்தினார் ; உடன்முறிபட = உடல்துண்டாக ; எறிகுலமறவர்கடலைவர் = கொல்லுகின்ற வேடர்குலத்திற்குத் தலைவராகிய திண்ணனாரும்.—எ-று. (௯௧)

திண்ணனாரும் அறிந்தவராய்க்குத்தினார் என இயையும்.

சூழல் சுழலெனவிகாரமாயிற்று.

வேறு.

வேடர்தங் கரியசெங்கண் வில்லியார் விசையிற்குத்த
மாடிரு துணியாய்வீழ்ந்த வராகத்தைக் கண்டுநாணன்
காடனே யிதன்பினின்று காதங்கள் பலவந்தெய்த்தோம்
ஆடவன் கொன்றானச்சோ வென்றவ ரடியிற்றாழ்ந்தார்.

(இ-ள்.) வேடர்தங்கரியசெங்கண்வில்லியார் = வேடர்குலத்தி லவதரித்தகரிய நிறத்தையும்சிவந்தகண்ணையுமுடையவில்லையேந்தியதிண்ணனார் ; விசையிற்குத்த = விசையோடு உடைவாளாற்குத்த ; மாடிருதுணியாய்வீழ்ந்த = அச்சூழலிடத்துஇருதுண்டாக அற்றுவிழுந்த; வராகத்தைக்கண்டுநாணன் = பன்றியைநாணனென்பவன் பார்த்து ; காடனேயிதன்பினின்று = காடா இதன்பின்னாக இன்றைக்கு ; காதங்கள் பலவந்தெய்த்தோம் = பலகாவதங்கள் கழிந்துவந்து இளைத்தோம் ; ஆடவன்கொன்றானச்சோவென்று = இவ்வாண்டன்மையை யுடைய திண்ணன் கொன்றுவிட்டான் இது ஆச்சரியமென்று விதந்து ; அவரடியிற்றாழ்ந்தார் = அவ்விருவரும் அத்திண்ணனார் திருவடியில்வணங்கினார்கள்.—எ-று. (௯௨)

அச்சோ என்றது ஈண்டு ஆச்சரியக்குறிப்பு. தம்மாற்கொல்லப்படாத பன்றியைக் கன்னிவேட்டையில் இத்திண்ணன் கொன்றானென்று அவர் வீரத்தை விதக்குங் கருத்தால் அச்சோ என்றனர்.

மற்றவர் திண்ணனார்க்கு மொழிகின்றார் வழிவந்தாற்ற
உற்றது பசிவந்தெம்மை யுதவிய விதனைக்காய்ச்சிச்
சற்றுநீ யருந்தியாமுந் தின்றுதண் ணீர்குடித்து
வெற்றிகொள் வேட்டைக்காடு குறுகுவோ மெல்லவென்றார்.

(இ-ள்.) அவர்திண்ணனார்க்குமொழிகின்றார் = அந்நாணனுங் காடனும் திண்ணனாரைநோக்கிச்சொல்லுகின்றார்களாய் ; வழிவந்தாற்றவுற்றது பசிவந்தெம்மை = வெகுதூரம்வழிநடந்தபடியால்பசிநோயானது எம்மையடைந்தது ; உதவியவிதனைக்காய்ச்சி = நமக்குக்கிடைத்த இப்பன்றியைத்தீயில்வெதுப்பி ; சற்றுநீயருந்தியாமுந்தின்று = நீயுங்கொஞ்சம் உண்டு நாங்களுந்தின்று ; தண்ணீர்குடித்து

=குளிர்ந்த நீரையருந்தி ; வெற்றிகொள் வேட்டைக்காடு=நாம்வெற்றியடைந்த வேட்டையாடியகாட்டை ; குறுகுவோமெல்லவென்றார்=மெல்ல அடைவோமென்றுசொன்னார்கள்.—எ-று. மற்று-அசை. (௩௩)

என்றவர் கூறநோக்கித் திண்ணனார் தண்ணீரெங்கே
நன்றுமிவ் வனத்திலுள்ள தென்றுரை செய்யநாண
னின்றவிப் பெரியதேக்கி னப்புறஞ் சென்றானீண்ட
குன்றினுக் கயலேயோடுங் குளிர்ந்தபொன் முகலியென்றான்.

(இ-ள்.) என்றவர்கூறநோக்கி=இவ்வாறு அவ்விருவருஞ்சொல்ல(அதுகேட்டு) அவர்களைப்பார்த்து; திண்ணனார் தண்ணீரெங்கே=திண்ணனாரானவர் தண்ணீரெவ்விடத்து ; நன்றுமிவ்வனத்திலுள்ளதென்றுரைசெய்ய=மிகவும் இவ்வனத்திலிருக்கின்றதென்றுவினவ ; நாணன்னின்றவிப்பெரியதேக்கினப்புறஞ்சென்றால்=அதற்குநாணனானவன்(உத்தரமாக)இவ்விடத்துநிற்கின்ற இந்தப்பெரியதேக்கமரத்திற்கு அப்பாற்போனால் ; நீண்டகுன்றினுக்கயலேயோடுங்குளிர்ந்த பொன்முகலியென்றான்=அவ்விடத்து உயர்ந்தமலைக்குப்பக்கத்தில்குளிர்ச்சியினையுடையபொன்முகலிநதியோடுகின்றதென்றுசொன்னான்.—எ-று. (௩௪)

ஈண்டுநீண்டகுன்றென்றது திருக்காளத்திமலையையே என்க. நன்று என்பதுபெரிது என்னும்பொருள்படநின்ற உரிச்சொல்.நன்றுபெரிதென்றதனாற்கொள்க.

பொங்கிய சினவில்வேடன் சொன்னபின் போவோமங்கே
இங்கிது தன்னைக்கொண்டு போதுமி னென்றுதாமும்
அங்கது நோக்கிச்சென்றார் காவத மரையிற்கண்டார்
செங்கணே றுடையார்வைகுந் திருமலைச் சாரற்சோலை.

(இ-ள்.) பொங்கிய சினவில்வேடன்சொன்னபின்=மிகுந்தகோபத்தினையுடையவில்லைத்தாங்கியநாணன்சொன்னபின்பு ; போவோமங்கேயிங்கிதுதன்னைக்கொண்டுபோதுமினென்று=திண்ணனார் நீசொன்ன இடத்திற்குநாம்போவோமாக அவ்விடத்து இப்பன்றியையெடுத்துக்கொண்டுவருவீர்களென்று;தாமுமங்கதுநோக்கிச்சென்றார்=தாமும் அத்திருமலையைப்பார்த்துக்கொண்டுபோனார் ; காவதமரையிற்கண்டார்=அரைக்காததூரத்தில் தரிசித்தார் ; செங்கணேறுடையார் வைகும் = சிவந்தகண்ணினையுடைய இடபத்தைவாகனமாகக்கொண்ட சிவபிரானார்வீற்றிருந்தருளும் ; திருமலைச்சாரற்சோலை = திருக்காளத்திமலையினது அடிவாரத்திலிருக்கும் சோலையை.—எ—று. (௩௫)

நாணனே தோன்றுங்குன்றி னண்ணுவே மென்னநாணன்
காணநீ போதினல்ல காட்சியே காணுமிந்தச்
சேணுயர் திருக்காளத்தி மலைமிசை யெழுந்துசெவ்வே
கோணமில் குடுமித்தேவ ரிருப்பர்கும் பிடலாமென்றான்.

(இ-ள்.) நாணனேதோன்றுங்குன்றினண்ணுவேமென்ன=(திண்ணனார்) நாணனே எதிரேதோன்றுகின்ற இம்மலையினிடத்துச்செல்வோமென்றுசொல்ல ; நாணன்காணநீபோதின்=நாணன்கூறுவானாயினான்தரிசிக்கும்படிநீபோனால் ; நல்லகாட்சியேகாணும் = நல்லதரிசனமே உனக்குண்டாகும் (அதுயாதென்றால்) ; இந்தச்சேணுயர் திருக்காளத்திமலைமிசையெழுந்து=இந்த ஆகாயமளவு முயர்ந்த திருக்காளத்திமலையின்கண்தோன்றி ; செவ்வேகோணமில்குடுமித்தேவரிருப்பர்= நேரே குறைவில்லாத குடுமித்தேவரிருப்பார் ; கும்பிடலாமென்றான்=அவரைவணங்கலாமென்று சொன்னான்.—எ-று. (௬௬)

ஆவதெ னிதனைக்கண்டிங் கணைதொறு மென்மேற்பாரம்
போவதொன் றுளதுபோலு மாசையும் பொங்கிமேன்மேன்
மேவிய நெஞ்சும்வேறோர் விருப்புற விளையாநிற்குந்
தேவரங் கிருப்பதெங்கே போதென்றார் திண்ணனார்தாம்.

(இ-ள்.) ஆவதெனிதனைக்கண்டிங்கணைதொறும் = மேல்விளைவதுயாது இம்மலையைத்தரிசித்து இங்கு இதனைக்கிட்டிச்சேருந்தோறும் ; என்மேற்பாரம் போவதொன்றுளதுபோலும்=என்மேலுள்ளபாரமானதுநழுவிவிழுவதுபோலவொன்றிருக்கின்றது ; ஆசையும்பொங்கிமேன்மேன்மேவிய = இதனிடத்து அடையவேண்டும் என்னும் அவாவும் அதிகரித்துமேன்மேலும் ஓங்கும்படிக்கு; நெஞ்சும் வேறோர்விருப்புறவிளையாநிற்கும் = மனமும் என்றால் இன்னதென்று நிச்சயிக்கக்கூடாததோர் பெருவிருப்பம்வர உதித்துநிற்கும் (அதனால்) ; தேவரங்கிருப்பதெங்கே=குடுமித்தேவர் அம்மலையினிடத்து வீற்றிருந்தருளுவது எவ்விடத்து ; போதென்றார் திண்ணனார் = அவ்விடத்துக்கு நீசெல்வாயாக என்றுசொன்னார் திண்ணனார்.—எ-று. போதுக என்பதில் வியங்கோள்விகுதிவிகாரத்தாற்றொக்கது. ()

இதுதமக்கோர்காலும் நிகழாத நிகழ்ச்சியாய்வியப்புத்தருதலில் ஆவதென் என்றும்,கரணவிருத்திகள்முன்போலன்றிஉடலியைபின்வேறாய்ஒருங்கி உடற்பற்றறநிற்றலால்உடல்அதன்வயத்ததாய்ச்செல்லலில்பாரம் போவதொன்றுளதுபோலும் என்றுங்கூறினர். பாரம்போவதென்றது:—விரைந்துநடக்கவிரும்பினானுக்குத்தடையாயதலைச்சுமைநழுவினால் அவன்நடைதடைப்படாமைபோலென்க. ஆசைஎன்பதுபொதுவிருப்பு.அதாவது:—இதனையடைந்து காணுவோமென்றெழும் உணர்வு. அதுவும் தடையின்றிக்கிளர்தலில் பொங்கிமேன்மேல்மேவிய என்றும், பேரானந்தம் விளைத்தற்கேதுவாய் முறுகிவளர்ந்தபேரன்பானது இதுவென்று சுட்டியுணரப்படாததாய் அகத்துநிகழ்தலில்நெஞ்சும்வேறோர்விருப்புற என்றும்கூறினர்- உம்மை இரண்டும்இறந்ததுதழீஇயது.

உரைசெய்து விரைந்துசெல்ல வவர்களு முடனேபோந்து
கரைவளர் கழையின்முத்துங் காரகிற் குறடுஞ்சந்தும்
வரைதரு மணியும்பொன்னும் வயிரமும் புளினந்தோறுந்
திரைகண்முன் றிரட்டிவைத்த திருமுக லியினைச்சார்ந்தார்.

(இ-ள்.) உரைசெய்துவிரைந்துசெல்ல = இவ்வாறுதிண்ணனார்கூறி விரைவாய்ச்செல்ல ; அவர்களுமுடனேபோந்து = அவ்விருவர்களும் அவருடனேசென்று ; கரைவளர்கழையின்முத்தும்=கரையில்வளர்கின்ற மூங்கில்முத்துக்களையும் ; காரகிற்குறடுஞ்சந்தும்=கருமையாகிய அகிலந்துண்டுகளையுஞ்சந்தனத்தையும் ; வரைதருமணியும்பொன்னும்வயிரமும்=மலைகளினின்றும்உதித்தமணியையும் பொன்னையும் வயிரத்தையும் ; புளினந்தோறும்=மணற்குன்றுகடோறும் ; திரைகண்முன்றிரட்டிவைத்த=அலைகளால்முன்னேசேர்த்துவைத்திருக்கும்; திருமுகலியினைச்சார்ந்தார்=பொன்முகலியாற்றையடைந்தார்.—எ-று. (கூஅ)

ஆங்கதன் கரையின்பாங்கோ ரணிநிழற் கேழலிட்டு
வாங்குவிற் காடன்றன்னை மரக்கடை தீக்கோல்பண்ணி
ஈங்குநீ நெருப்புக்காண்பா யிம்மலை யேறிக்கண்டு
நாங்கள்வந் தணைவோமென்று நாணனுந் தாமும்போந்தார்.

(இ-ள்.) ஆங்கதன்கரையின்பாங்கு = அப்பொன்முகலி நதிக்கரையருகில்; வாங்குவிற்காடன்றன்னை = (திண்ணனார்)வளைந்த வில்லையுடைய காடனை நோக்கி ; ஓரணிநிழற்கேழலிட்டு = ஒரு அழகியமரநிழலில் அப்பன்றியைப்போட்டு ; மரக்கடைதீக்கோல்பண்ணி = மரத்தால்தீக்கடைகோல்செய்து ; ஈங்குநீ நெருப்புக்காண்பாய்=இவ்விடத்து நீ நெருப்பை யுண்டாக்குவாய் ; இம்மலையேறிக்கண்டு=இம்மலையிடத்து ஏறிச்சுவாமியைத்தரிசித்து ; நாங்கள்வந்தணைவோமென்று=நாங்களிருவரும் வருவோமென்று சொல்லி ; நாணனுந்தாமும்போந்தார்=நாணனுந்தாமுமாக மலைமேல் எழுந்தருளினார்.—எ-று. (கக)

அளிமிடை கரைசூழ்சோலை யலர்கள்கொண் டணைந்தவாற்றின்
றெளிபுன லிழிந்துசிந்தை தெளிவுறுந் திண்ணனார்தாங்
களிவரு மகிழ்ச்சிபொங்கக் காளத்தி கண்டுகொண்டு
குளிர்வரு நதியூடேகிக் குலவரைச் சாரல்சேர்ந்தார்.

(இ-ள்.) அளிமிடைகரைசூழ்சோலை=வண்டுகள் மொய்க்கும் கரையிற்சூழ்ந்த சோலையின்கணுள்ள ; அலர்கள்கொண்டணைந்தவாற்றின் = மலர்களைத் திரையால் வாரிக்கொண்டு வருகின்ற பொன்முகலியின் ; தெளிபுனலிழிந்து = தெளிந்தநீரிலிறங்கி ; சிந்தைதெளிவுறுந்திண்ணனார் =மனத்தெளிவடைந்ததிண்ணனார்; களிவருமகிழ்ச்சிபொங்க=களிப்போடு கூடியமகிழ்ச்சியானதுமேம்பட; காளத்திகண்டுகொண்டு=திருக்காளத்திமலையைப்பார்த்துக்கொண்டு ; குளிர்வரு நதியூடேகி=குளிர்ச்சியாகிய அந்நதியைக்கடந்துசென்று ; குலவரைச்சாரல் சேர்ந்தார்=மேன்மையான அம்மலைச்சாரலை அடைந்தார்.எ-று. தாம்-அசை.(௧00)

கதிரவ னுச்சிநண்ணக் கடவுண்மால் வரையினுச்சி
அதிர்தரு மோசையைந்து மார்கலி முழக்கங்காட்ட
இதுவென்கொ றுணவென்றூர்க் கிம்மலைப் பெருந்தேன்சூழ்ந்து
மதுமல ரீக்கண்மொய்த்து மருங்கெழு மொலிகொலென்றான்.

(இ-ள்.) கதிரவனுச்சிநண்ண = சூரியன்வானினுச்சியில்வர ; கடவுண் மால்வரையினுச்சி=தெய்வத்தன்மையினையுடைய பெருமையாகிய திருக்காளத்திமலையின்சிகரத்தில் ; அதிர்தருமோசையைந்தும் = முழங்குகின்றதேவதுந்துபியைந்தும் ; ஆர்கலிமுழக்கங்காட்ட = கடல்போலமுழங்க ; இது வென்கொ ணாணாவென்றார்க்கு=நாணனை இவ்வோசையாதென்று வினாவிய திண்ணனாருக்கு (நாணன்); இம்மலைப்பெருந்தேன்சூழ்ந்து=இம்மலையினிடத்துப்பெரியவண்டுகள்சுற்றி ; மதுமலரீக்கண்மொய்த்து=தேனின்பொருட்டுமலரிடத்துத்தேனீக்கள் மொய்த்தலால் ; மருங்கெழுமொலிகொலென்றான் = இம்மலையருகில் எழுகின்ற ஒலிபோலும் என்றான்.—எ-று. (௧௦௧)

திண்ணனார்தஞ்செவிக்குக்கேட்டதேவதுந்துபி யொலியுணராது ஈதியாது எனவினாவ அது கேளாதநாணன் தனக்குக்கேட்ட தேனீயினொலியின்மேல் வைத்து ஐயப்பாடாய்க்கூறினனென்க.

முன்புசெய் தவத்தினீட்ட முடிவிலா வின்பமான
அன்பினை யெடுத்துக்காட்ட வளவிலா வார்வம்பொங்கி
மன்பெருங் காதல்கூர வள்ளலார் மலையைநோக்கி
என்புநெக் குருகியுள்ளத் தெழுபெரு வேட்கையோடும்.

(இ-ள்.) முன்புசெய்தவத்தினீட்டம் = திண்ணனார்முற்பிறப்பிற்செய்த சிவபுண்ணியத்தின் தொகுதிகள் ; முடிவிலாவின்பமான=அழியாதபேரின்பத்துக்குக்காரணமான ; அன்பினையெடுத்துக்காட்ட=பேரன்பைஅவர்க்கு எடுத்துக் காண்பிக்க (அதனால்);அளவிலாவார்வம்பொங்கி=அடங்காதவிருப்பானது விருத்தியடைந்து ; மன்பெருங்காதல்கூர=நிலைபெற்றபெருவிருப்பாய்மிக ; வள்ளலார்மலையைநோக்கி=காளத்தியார் வீற்றிருந்தருளும் திருமலையைப்பார்த்துக்கொண்டு ; என்புநெக்குருகி=எலும்புநெக்குவிட்டுருகி ; உள்ளத்தெழுபெருவேட்கையோடும்=உள்ளத்தின்கண் எழுகின்றபேரவாவோடும்.—எ-று. (௧௦௨)

திண்ணனார் புத்திக்கண் சிவபிரானைப்பூசித்த புண்ணியத்தொகுதி விரவிநிற்றலின் அதனைமுன்புசெய்தவத்தினீட்டம் என்றும், அச்சிவபுண்ணியம்மலபரிபாகம் வருவித்துத்திருவருண் ஞானத்தை விளைக்குமாதலில் அத்திருவருண் ஞானம் பதிந்துழிவரும் அன்பை அதனோடபேதமாக்கி அன்பினையெடுத்துக் காட்ட வென்றுங்கூறினர். அச்சிவபுண்ணியமே சிவஞானத்திற்கேதுவென்பது "கீழ்ச்செய்தவத்தாற் கிழியீடுநேர்பட்டு" எனத்திருவாசகத்தும், "புண்ணியனைப்பூசித்த புண்ணியத்தினாலே நண்ணியஞானத்தினா" லெனச் சிவஞான சித்தியினுங்கூறுமுறை பற்றியுணர்க.

நாணனு மன்புமுன்பு நளிர்வரை யேறத்தாமும்
பேணுதத் துவங்களென்னும் பெருகுசோ பானமேறி
ஆணையாஞ் சிவத்தைச்சார வணைபவர் போலவையர்
நீணிலை மலையையேறி நேர்படச் செல்லும்போதில்.

(இ-ள்.) நாணனுமன்புமுன்பு=நாணனென்பவனும் அன்பும்முன்னாக; நளிர்வரையேற=குளிர்ந்தமலையில்ஏற ; தாமும்பேணுதத்துவங்களென்னும்=திண்ணனாரும் நியதக்கிரமமாய்ச்சுட்டி யுணரும் முப்பத்தாறு தத்துவங்களென்று சொல்லப்படும் ; பெருகுசோபானமேறி = பெரியசோபானவழியால்ஏறி ; ஆணையாஞ்சிவத்தைச்சாரவணைபவர்போல = ஆக்கல்முதலிய ஐந்தொழிலுக்குங் காரணமான முடிவிலாற்றல் என்னும் சத்தியையுடைய சிவபிரானைக்கிட்டி அடைவார்போல ; ஐயர்நீணிலைமலையையேறி = காளத்திநாதரது நீண்டநிலைமையையுடைய மலையில்ஏறி ; நேர்படச்செல்லும்போதில் = நேராகநடக்கும்பொழுதில்.—எ-று. (௧௦௩)

பேணுதல்=ஈதிவ்வியல்பிற்றெனச்சுட்டி யுணர்தல். சுட்டியுணர்வார்க்குச்சோபானம்போல் ஒன்றன்மேலொன்றாய்த்தத்துவங்கள் நிற்றலில் தத்துவங்களென்னுஞ் சோபானமென்றும், தத்துவ சோபானத்தின் வழிசென்று சிவதரிசனஞ்செய்வார்போல இவர் இச்சோபானவழியேறிச்சிவதரிசனஞ்செய்தார் என வினையுவமம்போந்தவாறுகாண்க.

திங்கள்சேர் சடையார்தம்மைச் சென்றவர் காணுமுன்னே
அங்கணர் கருணைகூர்ந்த வருட்டிரு நோக்கமெய்தத்
தங்கிய பவத்தின்முன்னைச் சார்புவிட் டகலநீங்கிப்
பொங்கிய வொளியினீழற் பொருவிலன் புருவமானார்.

(இ-ள்.) திங்கள்சேர்சடையார்தம்மை = இளம்பிறைதரித்த சடையினையுடைய சிவபிரானை ; சென்றவர்காணுமுன்னே=அடைந்துஅத்திண்ணனார் தரிசிப்பதற்குமுன் ; அங்கணர்கருணைகூர்ந்த=சிவபிரானது கிருபைமிக்க ; அருட்டிருநோக்கமெய்த=திருவருட்பார்வைதம்மையடைய ; தங்கியபவத்தின் = தாம்உற்பவித்த இப்பிறப்பில் ; முன்னைச்சார்பு விட்டகலநீங்கி=முன்தொன்று தொட்டுப்பிறவிக்குக்காரணமானமலமாயைகன்மங்களின் தொடர்ச்சி அகன்று; பொங்கியவொளியினீழல்=தம்முள்ளத்து மேற்கொண்டதிருவருணீழலில்தங்கி; பொருவிலன் புருவமானார்=ஒப்பில்லாத அன்பே உருவமானார்.—எ-று. (௧௦௪)

இம்மூன்றுங்குளகம்.

இரும்பைக்காந்தம் வலித்தாற்போலத் தன்னைவசித்து ஆவேசித்து நிற்கும் திருவருளென்பது விளக்கிய பொங்கிய ஒளியினீழலென்றும், கருவிகரணங்கள் யாவும் திருவருள்வழித்தாயுதிக்கும் அன்பின்வழித்தாய் நிற்றலில் அவ்வன்பே அவர்க்கு உருவமாயிற்றென்பார் அன்புருவமானாரென்றுங்கூறினர்.

மாகமார் திருக்காளத்தி மலையெழு கொழுந்தாயுள்ள
ஏகநா யகரைக்கண்டா ரெழுந்தபே ருவகையன்பின்
வேகமா னதுமேற்செல்ல மிக்கதோர் விரைவினோடு
மோகமா யோடிச்சென்றார் தழுவினார் மோந்துநின்றார்.

(இ-ள்.) மாகமார்திருக்காளத்திமலையெழு=விண்ணுலகளவுக்கும் உயர்ந்த திருக்காளத்தி என்னும் திருமலையில் தானேயுதித்த ; கொழுந்தாயுள்ள=கொழுந்துபோல் இருக்கின்ற ; ஏகநாயகரைக்கண்டார் = காளத்திநாதரைத்தரிசித்தார் ;எழுந்தபேருவகையன் பின்வேகமானது மேற்செல்ல; தன்னுள்ளெழுந்தபெருமகிழ்ச்சிக்குக்காரணமான அன்பினெழுச்சியானது மேற்கொண்டுசெல்ல; மிக்கதோர்விரைவினோடும்=அதிகவிரைவாய் ; மோகமாயோடிச்சென்றார்=ஆசையாய் ஓடிப்போய் ; தழுவினார்மோந்துநின்றார் = சுவாமியைத்தழுவி உச்சியைமோந்தார்.—எ-று. (கoரு)

நெடிதுபோ துயிர்த்துநின்று நிரைந்தெழு மயிர்க்காறேறும்
வடிவெலாம் புளகம்பொங்க மலர்க்கணீ ரருவிபாய
அடியனேற் கிவர்தாமிங்கே யகப்பட்டா ரச்சோவென்று
படியிலாப் பரிவுதானோர் படிவமாம் பரிசுதோன்ற.

(இ-ள்.) நெடிதுபோதுயிர்த்துநின்று=நெடுநேரம் உச்சியைமோந்து(முத்தமிட்டு)நின்று; நிரைந்தெழுமயிர்க்காறேறும்=வரிசையாய் எழுகின்ற உரோமகூபங்கள்தோறும் ; வடிவெலாம்புளகம்பொங்க=திருமேனிமுழுதும் மயிர்க்கூச்செறிய ; மலர்க்கணீரருவிபாய = தாமரைமலர்போலுந் திருக்கண்களினின்றும் ஆனந்த அருவிசொரிய ; அடியனேற்கிவரிங்கேயகப்பட்டார்=அடியேனுக்கு இவர் இங்கேகிடைத்தார் ; அச்சோவென்று = அச்சோவென்று வியந்து ; படியிலாப்பரிவுதானோர் படிவமாம்பரிசுதோன்ற=நிகரற்ற அன்பேதமக்கு ஓருருவாம்வண்ணம் கண்டார்க்குத்தோன்றும்படி.—எ-று. தாம்-அசை. (கoசு)

இதுதீவிரதரபத்தியின் சின்னங்களைக்குறிப்பித்துநிற்றலின் இவர்தீவிரதரபத்தியுடையரென்பதுகாண்க.

வெம்மறக் குலத்துவந்த வேட்டுவச் சாதியார்போற்
கைம்மலை கரடிவேங்கை யரிதிரி கானந்தன்னில்
உம்முடன் றுணையாயுள்ளா ரொருவரு மின்றிக்கெட்டேன்
இம்மலைத் தனியேநீரிங் கிருப்பதே யென்றுநைந்தார்.

(இ-ள்.) வெம்மறக்குலத்துவந்த=கொடியமறவர்குலத்திற்பிறந்த; வேட்டுவச்சாதியார்போல்=வேடச்சாதியர்போல் ; கைம்மலைகரடிவேங்கை அரிதிரிகானந்தன்னில்=யானை கரடி வேங்கை சிங்கங்கள் திரிகின்ற காட்டில் ; உம்முடன்றுணையாயுள்ளாரொருவருமின்றி=உம்மோடுதுணையாயுள்ளவர்கள் ஒருவருமில்லாமல் ; கெட்டேனிம்மலைத்தனியே நீரிங்கிருப்பதேயென்றுநைந்தார் = இந்தமலையில்தனியேநீரிங்கிருக்கலாமா கெட்டேனென்றுவருந்தினார்.—எ-று. (கoஎ)

கைச்சிலை விழுந்ததோரார் காளையார் மீளவிந்தப்
பச்சிலை யோடுபூவும் பறித்திட்டு நீரும்வார்த்து
மச்சிது செய்தார்யாரோ வென்றனு மருங்குகின்ற
அச்சிலை நாணன்றானு னானிது வறிந்தேனென்பான்.

(இ-ள்.) கைச்சிலைவிழுந்ததோரார் காளையார்=திண்ணனார்தனதுகையி லிருக்கின்ற வில்லுக்கீழேவிழுந்ததையும் அறியாமல்; மீளவிந்தப்பச்சிலையோடு பூவும்=திரும்ப இந்தப்பச்சிலையுடன் பூவையும்; பறித்திட்டுநீரும்வார்த்து=கொய்திட்டு நீரையும்வார்த்து; மச்சிதுசெய்தார்யாரோ வென்றலும்=அழகாகிய இதுசெய்தவர்யாரென்றுகேட்கவும்; மருங்குநின்றவச்சிலைநாணனும்=அவரருகில் நின்றவில்லையுடைய அந்நாணனும்; நானிதுவறிந்தேனென்பான்=நான் இதனையறிந்தேனென்பானாயினன்—எ-று. தான்-அசை. (௧௦௮)

மஞ்சு=அழகு. மஞ்சு என்றது மச்செனவிகாரமாயிற்று.

வன்றிற லுந்தையோடு மாவேட்டை யாடிப்பண்டிக்
குன்றிடை வந்தோமாகக் குளிர்ந்தநீ ரிவரையாட்டி
ஒன்றிய விலைப்பூச்சூட்டி யூட்டிமுன் பறைந்தோர்பார்ப்பான்
அன்றிது செய்தானின்று மவன்செய்தா னாகுமென்றான்.

(இ-ள்.) வன்றிறலுந்தையோடு=மிக்கவலியினையுடைய உன்தந்தையுடன் (நாங்கள்); மாவேட்டையாடி=விலங்குகளைவேட்டையாடிக்கொண்டு; பண்டிக்குன்றிடைவந்தோமாக=முன் ஓர்நாள் இம்மலையினிடத்துவருங்கால்; குளிர்ந்தநீரிவரையாட்டி=குளிர்ச்சியினையுடைய நீரால்இத்தேவரைமுழுக்காட்டி; ஒன்றியவிலைப்பூச்சூட்டி=கூட்டமான இலைகளையும் பூவையுஞ்சூட்டி; ஊட்டி முன்பறைந்தோர்பார்ப்பான்=சிலபொருள்களை உண்பித்து முன்னேநின்று சிலமொழிகளைப்பறைந்து ஒருபார்ப்பான்; அன்றிது செய்தான்=அன்றைக்கிவ்வாறு செய்தான்(அதனால்); இன்றுமவன்செய்தானாகுமென்றான்=இன்றைக்கு மவனே செய்தவனாவன் என்று கூறினான்—எ-று. பறைதல்=சொல்லுதல். (௧௦௯)

உண்ணிறைந் தெழுந்ததேனு மொழிவின்றி யாராவன்பிற்
றிண்ணனார் திருக்காளத்தி நாயனார்க் கினியசெய்கை
எண்ணிய விவைகொலாமென் றிதுகடைப் பிடித்துக்கொண்டவ்
வண்ணலைப் பிரியமாட்டா தளவிலா தரவுநீட.

(இ-ள்.) உண்ணிறைந்தெழுந்ததேனும்=உள்ளத்தின்கண் நிறைந்துகிளரும் இயல்பிற்றாயினும்; ஒழிவின்றியாராவன்பிற்றிண்ணனார்=நீக்கமின்றி யுதிக்கும் அடங்காதபேரன்பினையுடைய திண்ணனார்; திருக்காளத்திநாயனார்க்கு=திருக்காளத்தியில் வீற்றிருந்தருளும் பிரானார்க்கு; இனியசெய்கை எண்ணிய விவைகொலாமென்று=இனியனவாகிய செய்கைமதிக்கத்தக்க இவைகளாமென்று; இதுகடைப்பிடித்துக்கொண்டு=நாணன்கூறிய மொழியை உறுதியாகக்கருதிக்கொண்டு; அவ்வண்ணலைப் பிரியமாட்டாது = அக்காளத்திநாதரைப்பிரியக்கூடாமல்; அளவிலாதரவுநீட=அளவுபடாத ஆசைபெருக.—எ-று. (௧௧௦)

உள்ளமென்றது புருடனோடுகூடிய இதயதாமரையை. அதன்கண் நிறைந்தெழுதல் அரும்பிற்குக்குமித்திருந்த மணம்மலரும்பருவத்துதித்தல்போலத்தீவிரசத்திபதிவுழிமுதல்வனோடு தன்மாட்டுள்ள இயைபுநாடியுதித்தல். உணர்வோ

டொற்றுமைப்பட்டவன் பென்பார் உண்ணெகிழ்ந்தெழுந்த என்றும், அவ்வா றுபரிபாகவிசேடத்தால் உதிப்பினும் உதித்தொரு சிறிது நின்றுமறையுமியல் பிற் றன்றென்பார் ஒழிவின்றியாராவன்பென் றுங்கூறினர். ஈண்டு அன்பென்றது அ ன்புடையானுக்குத்தொடர்வுடையார் மாட்டுந் தலைவிக்குத்தலைவன்மாட்டும் உதி க்கும் அழிதன்மாலையவான வேட்கைபோலாது நித்தியமாய்வீட்டைவிரும்பிமுத ல்வன்மாட்டெழும்காதன்மிகுதியை. காதல்மிகுதியெனினும் பேரவாவெனினு மொக்கும். ஏனும் என்னும்வினையெச்ச விகுதி எழுந்ததென்னும் முற்றோடியைந் திறந்தகாலமுணர்த்திநின்றது.

இவர்தமைக் கண்டேனுக்குத் தனியரா யிருந்தாரென்னே
இவர்தமக் கமுதுசெய்ய விறைச்சியு மிடுவாரில்லை
இவர்தமைப் பிரியவொண்ணா தென்செய்கே னினியான்சால
இவர்தமக் கிறைச்சிகொண்டிங் கெய்தவும் வேண்டுமென்று.

(இ-ள்.) இவர்தமைக்கண்டேனுக்கு=இவரைக்கண்டவெனக்கு; தனி யராயிருந்தாரென்னே=இவர் ஒருவராகவே இருக்கின்றார் இது என்; இவர்தமக் கமுதுசெய்ய=இந்நாயனாரமுது செய்யும்படி; இறைச்சியுமிடுவாரில்லை=இறைச் சியையும் கொடுப்பார்களில்லை; இவர்தமைப்பிரிய வொண்ணாது=இத்தேவரைப் பிரியவுங்கூடாது; என்செய்கேனினியான்=இதற்குநான் இனி என்னசெய்வே ன்(ஆனாலும்); சால இவர்தமக்கிறைச்சி கொண்டிங்கெய்தவும் வேண்டுமென்று= மிக இவர் உண்ணும்படிக்கு நான் இறைச்சியைக்கொண்டு இங்குவரவும் வேண்டு மென்று நினைத்து.—எ-று. உம்மை இரண்டும் இறந்தது தழீ இயது. (௧௧௧)

போதுவர் மீண்டுசெல்வர் புல்லுவர் மீளப்போவர்
காதலி னோக்கிநிற்பர் கன்றகல் புனிற்றுப்போல்வர்
நாதனே யமுதுசெய்ய நல்லமெல் லிறைச்சிநானே
கோதறத் தெரிந்துவேறு கொண்டிங்கு வருவேனென்பார்.

(இ-ள்.) போதுவர்மீண்டுசெல்வர்=(காளத்தியாரைவிட்டுச்சிறிதுதூரம்) போவர் திரும்பிவருவர்; புல்லுவர்மீளப்போவர்=தழுவிக்கொள்ளுவர் திரும்பிப் போய்; காதலினோக்கிநிற்பர்=விருப்போடு அவ்விடத்துப் பார்த்துக் கொண்டு நிற்பர்; கன்றகல் புனிற்றுப்போல்வர்=கன்றைநீங்கிய புனிற்றுப்போல அலறுவர்; நாதனேயமுதுசெய்ய=முதல்வரேநீர் அமுது செய்யும்படி; நல்லமெல்லிறைச்சி =நல்லமிருது வானஇறைச்சியை; நானேகோதறத் தெரிந்து=நானே பழுதறத் தெரிந்து; வேறுகொண்டிங்குவருவேனென்பார்=வெவ்வேறாயெடுத்துக்கொண்டு இ ங்குவருவேனென்றுகூறுவர்.—எ-று. (௧௧௨)

இம்மூன்றுங்குளகம்.

ஆர்தம ராகிநீரிங் கிருப்பதென் றகலமாட்டே
னீர்பசித் திருக்கவிங்கு நிற்கவுங் கில்லேனென்று
சோர்தரு கண்ணீர்வாரப் போய்வரத் துணிந்தாராகி
வார்சிலை யெடுத்துக்கொண்டு மலர்க்கையாற் றொழுதுபோந்தார்.

(இ-ள்.) ஆர்தமராகநீரிங்கிருப்பதென்று=எவரைச் சுற்றமாகக்கொண்டு நீரிங்கிருப்பீரென்று(அதனால்); அகலமாட்டேன்=பிரியவும்மாட்டேன்; நீர்பசித்திருக்க விங்கு நிற்கவுங் கில்லேனென்று=நீர் பசியோடிருக்க இங்கே நிற்கவும் மாட்டேனென்று; சோர்தரு கண்ணீர்வார=துளிக்கின்ற கண்ணீரானது பெருகும்படி; போய்வரத் துணிந்தாராகி = வேட்டையாடிவருதற்கு நிச்சயித்தவராய்; வார்சிலையெடுத்துக்கொண்டு=நீண்டவில்லைக் கையிலெடுத்துக்கொண்டு; மலர்க்கையாற் றொழுதுபோந்தார் = தாமரைமலர்போலுங் கையாற் கும்பிட்டுக்கொண்டு போனார் அத்திண்ணனார்.—எ-று. (ககங)

உம்மை நில்லாதொழியவும் மாட்டேனென்று எதிரது தழீஇயது.

முன்புநின் றரிதுநீங்கி மொய்வரை யிழிந்துநாணன்
பின்புவந் தணையமுன்னைப் பிறதுறை வேட்கைநீங்கி
அன்புகொண் டுய்ப்பச்செல்லு மவர்திரு முகலியாற்றின்
பொன்புனை கரையிலேறிப் புதுமலர்க் காவிற்புக்கார்.

(இ-ள்.) முன்புநின் றரிதுநீங்கி=காளத்தியார் திருமுன்நின்று ஆராமையோடுநீங்கி; மொய்வரையிழிந்து=செறிந்திருக்கும் அம்மலையினின்றும் இறங்கி; நாணன்பின்புவந்தணைய=நாணனென்பவன் பின்னேவர; முன்னைப்பிறதுறைவேட்கைநீங்கி=முன்னிருந்த வேறுவகைகளான விருப்பத்தினின்றும் நீங்கி; அன்புகொண் டுய்ப்பச்செல்லுமவர்=அன்பானது தம்மைக்கொண்டு செலுத்தப்போகின்றதிண்ணனார்; திருமுகலியாற்றின்=திருமுகலி நதியினைக்கடந்து; பொன்புனைகரையிலேறி=அழகிய அக்கரையிலேறி; புதுமலர்க் காவிற்புக்கார்=புதிய மலர்களையுடைய சோலையிற்சென்றார்.—எ-று. (ககச)

பிறதுறைவேட்கைஎன்றது=வேட்டைக்காடுபுகுதல் தந்தையைக்காணல் முதலியன.

காடனு மெதிரேசென்று தொழுதுதீக் கடைந்துவைத்தேன்
கோடுடை யேனமுங்கள் குறிப்படி யுறுப்பையெல்லா
மாடுற நோக்கிக்கொள்ளு மறித்துநாம் போகைக்கின்று
நீடநீர் தாழ்த்ததென்னே வென்றலு நின்றநாணன்.

(இ-ள்.) காடனு மெதிரேசென்று தொழுது = காடனென்பவனும் எதிராகப்போய் கைகுவித்து வணங்கி; தீக்கடைந்துவைத்தேன்=அரணியால் தீயை உண்டாக்கிவைத்திருக்கின்றேன்; கோடுடையேனம் = கொம்பினையுடைய பன்றியினது; உறுப்பையெல்லாம்=இவ்வவயவங்களையெல்லாம்; உங்கள் குறிப்படி =உங்கள் அடையாளப்படி; மாடுறநோக்கிக்கொள்ளும்=இங்கிருக்கப்பார்த்துக்கொள்ளும்; மறித்துநாம்போகைக்கு = மீண்டுநாம்வேட்டைக்காடு புகுதற்கு; இன்றுநீட நீர்தாழ்த்ததென்னே வென்றலு நின்றநாணன்=இப்பொழுதுமிகவும் நீங்கள் தாமதஞ்செய்தது யாதென்று வினவவும் அருகில்நின்ற நாணனானவன் (சொல்வானாயினன்).—எ-று. (ககரு)

அங்கிவன் மலையிற்றேவர் தம்மைக்கண்ட ணைத்துக்கொண்டு
வங்கினைப் பற்றிப்போதா வல்லுடும் பென்னநீங்கான்
இங்குமத் தேவர்தின்ன விறைச்சிகொண் டேகப்போந்தா
னங்குலத் தலைமைவிட்டா னலப்பட்டான் றேவர்க்கென்றான்.

(இ-ள்.) அங்கிவன்மலையில்=அவ்விடத்து இத்திண்ணன் மலையிலிருக்கின்ற; தேவர் தம்மைக்கண்டு=குடுமித்தேவரைப்பார்த்து; அணைத்துக்கொண்டு=கையாற்றழுவிக்கொண்டு; வங்கினைப்பற்றிப்போதா=மரப்பொந்தினைப் பற்றிவிடாத; வல்லுடும்பென்னநீங்கான்=வலிய உடும்புபோல நீங்காதவனாய்; இங்குமத்தேவர்தின்ன=இவ்விடத்தும் அத்தேவர் உண்ணும்படிக்கு; இறைச்சிகொண்டேகப்போந்தான்=இறைச்சியைக்கொண்டு செல்லும்படிக்கு வந்தான்; நங்குலத்தலைமைவிட்டான்=நம்முடையகுலத்துக்குத் தலைமையான ஒழுக்கத்தைவிட்டான்; நலப்பட்டான் றேவர்க்கென்றான் = இத்தேவர்களுக்கு ஆளானான் என்றான்.—எ-று. வங்கு=மரப்பொந்து. இவ்விரண்டுங்குளகம். (௧௧௬)

என்செய்தாய்திண்ணநீதா னென்னமால்கொண்டாயெங்கள்
முன்பெரு முதலியல்லை யோவென முகத்தைநோக்கார்
வன்பெரும் பன்றிதன்னை யெரியினில் வதக்கிமிக்க
இன்புறு தசைகள்வெவ்வே றம்பினா லீர்ந்துகொண்டு.

(இ-ள்.) என்செய்தாய் திண்ணநீதான் = அதுகேட்டகாடன் திண்ணனே நீ என்னகாரியஞ்செய்தாய்; என்னமால்கொண்டாய்=எவ்விதமயக்கங்கொண்டாய்; எங்கண்முன்பெருமுதலியல்லையோவென=எங்களுக்கு முன்னான பெருமையினையுடைய முதல்வன் நீயல்லையாவென்று கூற; முகத்தைநோக்கார் = அவன்முகத்தைப் பார்க்காமல்; வன்பெரும் பன்றிதன்னை=வலிய பெரியபன்றியை; எரியினில்வதக்கி=நெருப்பில்வாட்டி; மிக்கவின்புறுதசைகள் வெவ்வேறு=வெவ்வேறாகச்சிறந்த இனிய இறைச்சிகளை; அம்பினாலீர்ந்துகொண்டு=தனித்தனிவெதுப்பி அம்பின் நுனியால் அரிந்தெடுத்துக்கொண்டு.—எ-று. (௧௧௭)

கோலினிற் கோத்துக்காய்ச்சிக் கொழுந்தசை பதத்தில்வேவ
வாலிய சுவைமுன்காண்பான் வாயினி லதுக்கிப்பார்த்துச்
சாலவு மினியவெல்லாஞ் சருகிலை யிணைத்தகல்லை
ஏலவே கோலிக்கூட வதன்மிசை யிடுவாரானார்.

(இ-ள்.) கோலினிற்கோத்துக்காய்ச்சி=அம்பில் அவ்விறைச்சியைக்கோத்துவாட்டி; கொழுந்தசை பதத்தில்வேவ=கொழுமையாகிய இறைச்சிகள் பக்குவமாகவேக; வாலியசுவைமுன்காண்பான்=இனியசுவையைத்தான் முன்னேகாணும்படிக்கு; வாயினிலதுக்கிப்பார்த்து = வாயிலிட்டுமென்று பார்த்து; சாலவுமினியவெல்லாம்=மிகவும் இனியதாயிருக்கும் அவைகளை; சருகிலை யிணைத்த

1 கண்ணப்பர்
2 சிவகோசரியார்
3 நாணன்
4 காடன்

4. திண்ணனார் நாணன் காடனுடன் வேட்டையாடி பன்றியைவதைத்தது.



5. திண்ணர் நாணனுடன் ஸ்ரீகாளத்தீசுரைதரிசித்தது.




6. பதப்படுத்திய பன்றிரச்சியை நாவில் சுவைத்து சுவாமிக்களித்தது.



7. திண்ணர் பொன்முகலி நீரை வாயிற் கொண்டு சுவாமி திருமுடியில் திருமஞ்சனமாட்டியது.



8. திண்ணர் காளத்தீசருக்கு மாம்சத்தை யுண்பித்தது.



9. சிவகோசரியார் சுவாமிசன்னிதானத்திலுள்ள அநுசிதங்களைப்போக்கியது.



கண்ணப்பர் அற்புதத்திருத்தொண்டு.

கல்லை=உதிர்ந்த இலையாலிணைத்த கல்லையை ; ஏலவேகோலி=பொருந்தத் தைத்து ; கூடவதன்மிசையிடுவாரானார்=அவ்விறைச்சிகளையெல்லாம் ஒருங்கு அதன்மேல்வைப்பாராயினர்;—எ-று. (௧௧௮)

இவ்விரண்டுங்குளகம்.

மருங்குநின் றவர்கள்பின்னு மயன்மிக முதிர்ந்தானென்னே
அரும்பெற லிறைச்சிகாய்ச்சி யதுக்கிவே றுமிழாநின்றான்
பெரும்பசி யுடையனேனும் பேச்சில னெமக்கும்பேறு
தரும்பரி சுணரான்மற்றைத் தசைபுறத் தெறியாநின்றான்.

(இ-ள்.) மருங்குநின்றவர்கள்=அருகில்நின்ற காடன்நாணன் என்னும் அவ்விருவரும்;பின்னுமயன்மிகமுதிர்ந்தானென்னே=(குடுமித்தேவரைக்காணும் பொழுதிருந்த)மயலினும் மிகமுதிர்ந்த மயலுடையவனாயினான் இது என்ன ஆச்சரியம்; அரும்பெறலிறைச்சிகாய்ச்சி=பெறுதற்கரிய இவ்விறைச்சியைத் தீயில் வெதுப்பி ; அதுக்கிவேறுமிழாநின்றான் = வாயில்மென்று விழுங்காது வேறிடத்து உமிழுகின்றான் ; பெரும்பசியுடையனேனும் பேச்சிலன்=மிக்கபசியுடையவனா யிருந்தாலும் அதைக்குறித்து எம்மோடொன்றும் உரையாடா திருக்கின்றான் ; நமக்கும்பேறுதரும் பரிசுணரான்=நமக்கும் அவ்விறைச்சியுணவைப் பகுந்துகொடுக்கும் தன்மையையும் அறியவில்லை ; மற்றைத்தசைபுறத் தெறியாநின்றான்=மிகுந்த இறைச்சியைப்புறத்தில் எறிகின்றான்.—எ-று. (௧௧௯)

தேவுமால் கொண்டானிந்தத் திண்ணன்மற் றிதனைத்தீர்க்க
லாவதொன் றறியோந்தேவ ராட்டியை நாகனோடு
மேவிநாங் கொணர்ந்துதீர்க்க வேண்டுமெவ் வேட்டைக்கானில்
ஏவலாட் களையுங்கொண்டு போதுமென் றெண்ணிப்போனார்.

(இ-ள்.) தேவுமால் கொண்டானிந்தத் திண்ணன் = இந்தத்திண்ணன் தெய்வமருளடைந்தான் ; இதனைத்தீர்க்கலாவ தொன்றறியோம்=இதை நீக்குதற்கு வழியொன்றையும் அறியோம் ; தேவராட்டியை நாகனோடு=தேவராட்டியைநாகனோடு ; மேவிநாங்கொணர்ந்து தீர்க்கவேண்டும் = அழைத்துக்கொண்டு வந்து இம்மருளை நீக்கவேண்டும்(ஆதலால் ;அவ்வேட்டைக்கானில்=அந்தவேட்டையாடும் காட்டில்வந்திருக்கும் ; ஏவலாட்களையுங் கொண்டுபோதுமென்று = ஏவலாளர்களையும் அழைத்துக்கொண்டு உடுப்பூருக்குச் செல்வோமென்று; எண்ணிப்போனார் = தம்முள் ஒருவரோடொருவர் யோசித்துக்கொண்டு போனார்கள்.—எ-று. மற்று - அசை. (௧௨௦)

கானவர் போனதோரார் கடிதினிற் கல்லையின்கண்
ஊனமு தமைத்துக்கொண்டு மஞ்சன மாட்டவுன்னி
மாநதி நன்னீர்தூய வாயினிற் கொண்டுகொய்த
தூநறும் பள்ளித்தாமங் குஞ்சிமேற் றுணையக்கொண்டார்.

(இ-ள்.) கானவர்போனதோரார்=அத்திண்ணனார் அருகில்நின்ற வேடரிருவர்களும் தம்மைவிட்டு நீங்கிய செய்கையை உணராதவராய்; கடிதினிற்கல்லையின்கண்=விரைவாகக் கல்லையினிடத்து; ஊனமுதமைத்துக்கொண்டு=இறைச்சியாகிய திருவமுதை வைத்துக்கொண்டு; மஞ்சனமாட்டவுன்னி = திருமஞ்சனமாட்டும்படி நினைந்து; மாநதிநன்னீர் = பெருமையினையுடைய பொன்முகலியாற்றின் நல்லநீரை; தூயவாயினிற்கொண்டு = தூய்மையாகிய திருவாயில் திருமஞ்சனமாக அமைத்துக்கொண்டு; கொய்ததூநறும் பள்ளித்தாமம்=சாத்தும்பொருட்டுப் பறித்த திருப்பள்ளித்தாமத்தை; குஞ்சிமேற் றுதையக்கொண்டார்=குடுமியின்மேல் நெருங்கும்படி செருகிக்கொண்டார்.—எ-று. (௧௨௧)

தனுவொரு கையில்வெய்ய சரத்துடன் றாங்கிக்கல்லைப்
புனிதமெல் லிறைச்சிநல்ல போனக மொருகையேந்தி
இனியவெம் பிரானார்சாலப் பசிப்பரென் றிரங்கியேங்கி
நனிவிரைந் திறைவர்வெற்பை நண்ணினார் திண்ணனார்தாம்.

(இ-ள்.) தனுவொருகையில்வெய்ய சரத்துடன்றாங்கி=வில்லை ஒருதிருக்கரத்தில் கொடிய அம்போடு பிடித்துக்கொண்டு; கல்லைப்புனிதமெல்லிறைச்சி =கல்லையின்கண் வைத்திருக்கும் தூய்மையான மெல்லிய இறைச்சியாகிய; நல்ல போனகமொருகை யேந்தி = நல்லதிருவமுதை ஒரு திருக்கரத்தில் ஏந்திக்கொண்டு; இனியவெம்பிரானார்=இனியராகிய எமது முதல்வர்; சாலப்பசிப்பரென் றிரங்கியேங்கி = மிகப்பசியுடைய ராவரென்று அதற்கு இரக்கமுற்றுத்திகைப்படைந்து; நனிவிரைந் திறைவர்வெற்பை நண்ணினார் திண்ணனார் = மிகவும் விரைவாய்க் காளத்திநாதரது திருமலையை அடைந்தார் திண்ணநாயனார்.—எ-று.

தாம்-அசை.

இளைத்தனர் நாயனாரென் றீண்டச்சென் றெய்திவெற்பின்
முளைத்தெழு முதலைக்கண்டு முடிமிசை மலரைக்காலில்
வளைத்தபொற் செருப்பான்மாற்றி வாயின்மஞ் சனநீர்தன்னை
விளைத்தவன் புமிழ்வார்போல விமலனார் முடிமேல்விட்டார்.

(இ-ள்.) இளைத்தனர் நாயனாரென்று=இத்தேவர்பசியால் இளைப்படைந்திருப்பாரென்று; ஈண்டச்சென்றெய்தி=விரைவாகப்போய்; வெற்பின்முளைத்தெழுமுதலைக் கண்டு=அத்திருமலையில் உதித்தெழுந்த காளத்திநாதரைத் தரிசித்து; முடிமிசைமலரை=அவர் திருமுடியின்கண்முன் சாத்தப்பட்டமலரை; காலில் வளைத்தபொற் செருப்பான்மாற்றி=தன்திருவடியிற் சூழ்ந்த அழகிய செருப்பாகிய திருவலகினாற்போக்கி; வாயின்மஞ்சனநீர்தன்னை=தனது திருவாயின்கண் அமைத்ததிருமஞ்சன நீரை; விளைத்தவன்புமிழ்வார்போல=தன்னுள்ளத்துதித்த அன்பை உமிழ்கின்றவர்போல; விமலனார் முடிமேல்விட்டார்=காளத்தியார் திருமுடியின்மேல் அபிடேகம்ஆகப்பெய்தார்.—எ-று. (௧௨௩)

விளைந்த என்பது விளைத்த என விகாரமாயிற்று.

தலைமிசைச் சுமந்தபள்ளித் தாமத்தைத் தடங்காளத்தி
மலைமிசைத் தம்பிரானார் முடிமிசை வணங்கிச்சாத்திச்
சிலைமிசைப் பொலிந்தசெங்கைத் திண்ணனார் சேர்த்தகல்லை
இலைமிசைப் படைத்தவூனின் றிருவமு தெதிரேவைத்து.

(இ-ள்.) தலைமிசைச்சுமந்த பள்ளித்தாமத்தை=தன்திருமுடியின்மேற் சூடிய திருப்பள்ளித்தாமமாகிய பூங்கொத்தை ; தடங்காளத்திமலைமிசைத்தம்பிரானார்=பெருமையாகிய திருக்காளத்தியென்னும் மலையின்கண் வீற்றிருந்தருளும் பிரானாரது ; முடிமிசைவணங்கிச்சாத்தி = திருமுடியின்மேல் தொழுதுசாத்தி ; சிலைமிசைப்பொலிந்த செங்கைத்திண்ணனார்=வில்லானது தன்னிடத்துவிளங்கித்தோன்றும் திருக்கரத்தையுடைய திண்ணனார் ; சேர்த்தகல்லையிலை மிசைப்படைத்த=சேர்த்தமைத்த கல்லையிலையினிடத்துப்படைக்கப்பட்ட ; ஊனின்றிருவமுதெதிரே வைத்து = இறைச்சியாலமைந்த திருவமுதத்தைத் திருமுன்னே படைத்து.—எ-று. (கஉச)

கொழுவிய தசைகளெல்லாங் கோலினிற் றெரிந்துகோத்தங்
கழலுறு பதத்திற்காய்ச்சிப் பல்லினா லதுக்கிநாவிற்
பழகிய வினிமைபார்த்துப் படைத்தவிவ் விறைச்சிசால
அழகிது நாயனீரே யமுதுசெய் தருளுமென்றார்.

(இ-ள்) கொழுவியதசைகளெல்லாம் = கொழுமையாகிய இறைச்சிகளையெல்லாம் ; கோலினிற்றெரிந்துகோத்து = அம்பினால் ஆராய்ந்தெடுத்து அதிற்கோத்து;அங்கழலுறு பதத்திற்காய்ச்சி=அவ்விடத்துத்தீயில் மிக்கபதமாக வெதுப்பி ; பல்லினாலதுக்கி=அதைப்பல்லினாலேமென்று ; நாவிற்பழகிய வினிமைபார்த்து=நாவினாற்பழகியபடி சுவைபார்த்து ; படைத்த விவ்விறைச்சி=படைக்கப்பட்ட இவ்விறைச்சியானது ; சாலவழகிதுநாயனீரே = மிகவும் நன்றாயிருந்தது நாயனார் நீரே ; அமுதுசெய்தருளு மென்றார்=திருவமுதுசெய்தருள வேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தார்.—எ-று. இவ்விரண்டுங் குளகம். (கஉரு)

அன்னவிம் மொழிகள்சொல்லி யமுதுசெய் வித்தவேடர்
மன்னனார் திருக்காளத்தி மலையினார்க் கினியநல்லூண்
இன்னமும் வேண்டுமென்னு மெழுபெருங் காதல்கண்டு
பன்னெடுங் கரங்கள்கூப்பிப் பகலவன் மலையிற்றாழ்ந்தான்.

(இ-ள்) அன்னவிம்மொழிகள் சொல்லி=அவ்வாறான இவ்விதமொழிகளைக்கூறி ; அமுதுசெய்வித்த = காளத்திநாதரைத்திருவமுதுசெய்வித்த ; வேடர்மன்னனார்=வேடர்கட்கதிபரான திண்ணநாயனார் ; திருக்காளத்தி மலையினார்க்கு=திருக்காளத்தியில் வாழும்பிரானார்க்கு ; இனியநல்லூண் = இனிமையாகிய நல்ல இறைச்சி ; இன்னமும் வேண்டுமென்னும் = இன்னுந்திருவமுதமைக்கவேண்டியிருக்கும் என்னுங்கருத்தால்; எழுபெருங்காதல் கண்டு=எழுகின்ற பெருவிருப்பத்தைக்கண்டு ; பன்னெடுங்கரங்கள்கூப்பி=(இன்றுபகல்முழுதும்வேட்டை

யிலிஜேத்த இவரைஇன்னும்வேட்டையாடச்செய்தல் பழுதென்றுகருதித்)தன்னு டையபலநீண்ட கிரணங்களாகிறகைகளைக்குவித்துக்கொண்டு; பகலவன் மலையிற் ருழ்ந்தான்=சூரியன்மேற்குமலையிற்ருழ்ந்தான்.—எ-று. (௧௨௬)

தாழ்ந்தான் என்பது மலையில்வணங்கினுன் என்னும் குறிப்புப்பொருளு ம் உணர்த்தி நின்றது.

அவ்வழி யந்திமாலை யணைதலு மிரவுசேரும்
வெவ்விலங் குளவென்றஞ்சி மெய்ம்மையின் வேறுகொள்ளாச்
செவ்விய வன்புதாங்கித் திருக்கையிற் சிலையுந்தாங்கி
மைவரை யென்னவையர் மருங்குநின் றகலாநின்ருர்.

(இ-ள்.) அவ்வழியந்திமாலையணைதலும்=அப்பொழுது அந்திப்போதா கிய மாலைக்காலம்வரவும்; இரவிற்சேரும் வெவ்விலங் குளவென்றஞ்சி = இம்ம லையில் இரவில்வந்தடையுங் கொடியவிலங்குகள் இருக்கின்றனவென்று அதனுல் வருந் தீங்கிற்குப்பயந்து; மெய்ம்மையின் வேறுகொள்ளா =உண்மையினின்றுந் திரியாத்; செவ்வியவன்புதாங்கி=செப்பமாகிய அன்பினையுந் தாங்கிக்கொண்டு; மைவரையென்ன=மைநாகமென்னும் மலையைப்போல; ஐயர்மருங்குநின் றக லாநின்ருர்=காளத்தியார் பக்கலில் நின்றும் அகல்கின்ருராயினுர்.—எ-று.(௧௨௭)

அகலாநின்ருரென்பது நிகழ்காலவினைமுற்று.

சார்வருந் தவங்கள்செய்து முனிவரு மமரர்தாமுங்
கார்வரை யடவிசேர்ந்துங் காணுதற் கரியார்தம்மை
ஆர்வமுன் பெருகவாரா வன்பினிற் கண்டுகொண்டே
நேர்பெற நோக்கிநின்ருர் நீளிரு ணீங்கநின்ருர்.

(இ-ள்) சார்வருந் தவங்கள்செய்தும் = செய்தற்கரிய தவங்களைச் செய் தும்; முனிவருமமரர்தாமும்=முனிவர்களும் தேவர்களும்; கார்வரையடவிசேர் ந்தும்=கரியமலையையும் வனத்தையும் அடைந்தும்; காணுதற்கரியார்தம்மை = அறியக்கூடாத சிவபிரானை; ஆர்வமுன்பெருக = பெருவிருப்பானது முன்னே மேம்பட;ஆராவன்பினிற்கண்கொண்டு= அடங்காத அன்புகாரணமாகத் தரிசித் துக்கொண்டு; நேர்பெற நோக்கிநின்ருர்=அவர் திருமுன்னே பார்த்துக்கொண்டு நின்ருர்; நீளிரு ணீங்கநின்ருர் = பெரியமலவிருள் நீங்கும்படி நின்ற திண்ண னுர்.—எ-று. ஏ - அசை. (௧௨௮)

கழைசொரி தரளக்குன்றிற் கதிர்நில வொருபாற்பொங்க
முழையர வுமிழ்ந்தசெய்ய மணிவெயி லொருபான்மொய்ப்பத்
தழைகதிர்ப் பரிதியோடுஞ் சந்திரன் றலையுவாவிற்
குழையணி காதர்வெற்பைக் கும்பிடச் சென்றுலொக்கும்.

(இ-ள்.) கழைசொரிதரளக்குன்றில்=மூங்கில்கள் சொரிகின்ற முத்துக் குவைகளினுடைய; கதிர்நிலவொருபாற்பொங்க = ஒளிவீசுகின்ற நிலவானது ஒருபக்கத்தில் விளங்கித் தோன்றலாலும்; முழையரவுமிழ்ந்த=மலைமுழைகளி லிருக்கின்ற பாம்புகள் கக்கிய;செய்யமணிவெயிலொருபான்மொய்ப்ப = செப்ப

மான இரத்தினங்களின் ஒளி ஒருபக்கத்தில் பரம்பியிருத்தலானும்; தழைகதிர்ப் பரிதியோடும்=பரம்பிய கிரணங்களையுடைய சூரியனோடு; சந்திரன்றலையுவாவிசு=சந்திரனும் அமாவாசையில்; குழையணிகாதர்வெற்பை=சங்கக்குழையினையணிந்த திருச்செவியினையுடைய திருக்காளத்தியாரது திருமலையை; குடபிடச்சென்றுலொக்கும்=தரிசிக்கவந்தாற்போலும்.—எ-று. (௬௨௯)

உவாஎன்பது அமாவாசைக்கும் பூரணைக்கும் வழக்குண்மையின் ஈண்டுதலையுவா என்றது அமாவாசையையே என்க.

விரவுபன் மணிகள்கான்ற விரிகதிர்ப் படலைபொங்க
மரகத மொளிகொணீல மணிகளி னிமைக்குஞ்சோதி
பொரவிரு சுடருக்கஞ்சிப் போயின புடைகடோறும்
இரவிரு ளொதுங்கினாலே போன்றுள தெங்குமெங்கும்.

(இ-ள்.) விரவுபன்மணிகள்கான்ற=கூட்டமாய்த் திரண்ட பல இரத்தினங்கள் கக்குகின்ற; விரிகதிர்ப்படலைபொங்க = விரிந்த ஒளியின்தொகுதிகள் பிரகாசித்தலால்; மரகதமொளிகொணீலமணிகளினிமைக்குஞ் சோதி=மரகதமும்ஒளிவிளங்குகின்ற நீலமணிகளும் ஆகிய இவைகளின் வீசுகின்ற ஒளியானது; பொரஇருசுடருக்கஞ்சிப் போயின புடைகடோறும்=சந்திரன் சூரியன் என்னும் இரண்டுசுடரும் தன்வலியைக்கெடுக்க அதனால் அச்சமுற்றுப்போன இடங்கடோறும்; இரவிருளொதுங்கினாலே போன்றுளதெங்கு மெங்கும் = இரவிருளானது ஒதுங்கியிருந்தாற்போ லிருந்தது எவ்விடங்களிலும்.—எ-று. (௬௩௦)

செந்தழ லொளியிற்பொங் குந்தீபமா மரங்களாலு
மந்திகண் முழையில்வைத்த மணிவிளக் கொளிகளாலும்
ஐந்துமா றடக்கியுள்ளா ரரும்பெருஞ் சோதியாலும்
எந்தையார் திருக்காளத்தி மலையினி லிரவொன்றில்லை.

(இ-ள்.) செந்தழலொளியிற்பொங்கும் = சிவந்தநெருப்பின் ஒளிபோல் விளங்குகின்ற; தீபமா மரங்களாலும்=சோதிவிருட்சங்களினாலும்; மந்திகண் முழையில்வைத்த=குரங்குகள் தாங்கள்வாழும் குகையில் ஏற்றிய; மணிவிளக்கொளிகளாலும்=இரத்தினதீபத்தின் காந்தியினாலும்; ஐந்துமாறடக்கியுள்ளார்=ஐம்புலன்களையும் ஆறு பகைகளையும் அடக்கினவர்களாகிய முனிவர்களது தவத்தால் வெளிப்படும்; அரும்பெருஞ்சோதியாலும் = ஞானவொளியினாலும்; எந்தையார் திருக்காளத்திமலையினில்=எமது பிதாவாகிய காளத்தியப்பரது திருமலையினிடத்து; இரவொன்றில்லை=இரவென ஒருபொருள் இல்லை.—எ-று. ()

சோதிவிருட்சமாவது:—பகற்காலத்துத் தன்னொளிதோன்றாது இரவில் தன்னொளியை வெளிப்படுத்துகின்ற ஓர் விருட்சம். அதன்றி இனம்பற்றிச் சோதிப்புல்லுங்கொள்க. ஞானவொளியாவது:—அவர் தவமகிமையினால் நெடுந்தூரத்துக்காண்பார்க்கு அவருடம்பு ஒளிப்பிழம்பாகத் தோன்றுவது.

வருங்கறைப் பொழுதுநீங்கி மல்கிய யாமஞ்சென்று
சுருங்கிட வறிந்தபுள்ளின் சூழ்சிலம் போசைகேட்டுக்
கருங்கட லென்னநின்ற கண்டுயி லாதவீரர்
அரும்பெறற் றம்பிரானுர்க் கமுதுகொண் டணையவேண்டி.

(இ-ள்.) வருங்கறைப்பொழுதுநீங்கி = வருகின்ற இராக்காலம்போய்; மல்கிய யாமஞ்சென்று=இருள்நிறைந்த நடுயாமமுஞ்சென்று; சுருங்கிடவறிந்த புள்ளின் = இரவிருள்விடிய அந்நேரத்தையுணர்ந்த பறவைகளின்; சூழ்சிலம் போசைகேட்டு = சூழ்ந்தொலிக்கும் ஒலியைக்கேட்டு; கருங்கட லென்னநின்ற கண்டுயிலாதவீரர் = கரியகடல்போலத் துயிலாதுநின்ற திண்ணனாயனுர் (அப்பொழுது); அரும்பெறற் றம்பிரானுர்க்கு = தமக்கு அடைதற்கரிய பெரும்பேருன சிவபிரானுக்கு; அமுதுகொண் டணையவேண்டி = திருவமுதைச் சம்பாதித்துக்கொண்டுவரநினைந்து.—எ-று. (கங௨)

ஏறுகாற் பன்றியோடு மிருங்கலை புனமான்மற்றும்
வேறுவே றினங்கள்வேட்டை வினைத்தொழில் விரகினுலே
ஊறுசெய் காலஞ்சிந்தித் துருமிகத் தெரியாப்போதின்
மாறடு சிலையுங்கொண்டு வள்ளலைத் தொழுதுபோந்தார்.

(இ-ள்.) ஏறுகாற்பன்றியோடும்=வயிற்றிலேறும் குறியகாலினையுடைய பன்றிகளோடும்; இருங்கலைபுனமான்=பெரிய கருமான்களும் வனத்திலுள்ள புள்ளிமான்களும்; மற்றும் வேறுவேறினங்கள்=இவையல்லாத வேறுவேருன மிருகங்களையும்; வேட்டைவினைத்தொழில்விரகினுலே=வேட்டையாடுதலில்தான்கற்றசாமார்த்தியத்தினுலே; ஊறுசெய்காலஞ்சிந்தித்து = அவைகளைக்கொல்லுங்காலம்இதுவென்று கருதிக்கொண்டு; உருமிகத்தெரியாப்போதில்=உருவம் மிகவும் தெரியாதிருக்கும் புலரிக்காலத்து; மாறடுசிலையுங்கொண்டு = பகைவரைவெல்லத்தக்க வில்லையும் எடுத்துக்கொண்டு; வள்ளலைத்தொழுதுபோந்தார் =காளத்தியாரைவணங்கிக்கொண்டு வேட்டைக்குப்போனுர்.—எ-று. (கஙங)

இவ்விரண்டுங் குளகம்.

உடலுக்குத்தக்க காலில்லாமையின் ஏறுகாலென்றுர்.

வேறு.

மொய்காட்டு மிருள்வாங்கி முகங்காட்டுந் தேரிரவி
மெய்காட்டு மன்புடைய வில்லியார் தனிவேட்டை
எய்காட்டின் மாவளைக்க விட்டகருந் திரையெடுத்துக்
கைகாட்டு வான்போலக் கதிர்காட்டி யெழும்போதில்.

(இ-ள்.) மொய்காட்டுமிருள்வாங்கி=மிகுந்த இருளைநீக்கி; முகங்காட்டுந்தேரிரவி = தனது மண்டலத்தை வெளிப்படக்காட்டுகின்ற தேரினையுடைய சூரியனுனவன்; மெய்காட்டுமன்புடைய=மெய்ம்மைப்பத்தியினையுடைய; வில்

10. சிவகோசரியார்சம்புரோட்சனை செய்து சிவபெருமானை அருச்சித்தது.

11. காளத்திசர்சிவகோசரியார் கனவில் திண்ணர் பெருமையைக்கூரியது.

12. சுவாமிவலக்கண்ணிலுதிரஞ்சொரிதலைக்கண்ட திண்ணர் சோபித்தது.



13. உதிரம் நிற்காமைகண்டு பூண்டைப்பறித்துசுவாமிகண்ணில்பிழிந்தது.

14. மீண்டும் நிற்காமைகண்டு திண்ணர்தன்கண்ணை சுவாமிகண்ணிலப்ப அம்பினால்பேர்த்தது.

15. திண்ணர் பேர்த்தகண்ணை சுவாமிகண்ணில் அப்பஉதிரம்நின்றது.

சிவகோசரியார அன்பும் கண்ணப்பர் அருமைத்திருத்தொண்டும் உணர்த்துகிறது.

லியார்தனிவேட்டையெய்காட்டின்மாவளைக்க = திண்ணனுர் தனியே வேட்டையாடுகின்ற காட்டிலுள்ள விலங்குகளை வளைக்கும்படி; விட்டகருந் திரையெடுத்து=தாணிடப்பட்ட ஓர்கரிய திரையையெடுத்து; கைகாட்டுவோன்போல = கையைக்காட்டுகின்றவன்போல; கதிர்காட்டியெழும்போதில்=கிரணங்களைவிரித்துக்கொண்டு (வேட்டையாடுகவென்)றெழும் சமயத்தில்.—எ-று. (௧௩௪)

வேட்டையெய்காட்டின் மாவளைக்க என்பதற்கு, வேட்டையில் காட்டுப்பன்றியையும் காட்டிலுள்ள மான்முதலிய விலங்குகளையும் வளைக்கும்படிக்கென்றுரைத்தலுமொன்று.

> எய்தியசீ ராகமத்தி லியம்பியபூ சனைக்கேற்பக்
> கொய்தமல ரும்புனலு முதலான கொண்டணைந்தார்
> மைதழையுங் கண்டத்து மலைமருந்தை வழிபாடு
> செய்துவருந் தவமுடைய முனிவர்சிவ கோசரியார்.

(இ-ள்.) எய்திய சீராகமத்தில்=சிவபிரான் திருமுகத்தினின் றுதித்த சிறப்பினையுடைய சைவாகமங்களில்; இயம்பிய பூசனைக்கேற்ப=விதித்த பூசாவிதிக்கு ஏற்கும்படி; கொய்தமலரும்புனலும்=பறித்த புட்பங்களும் திருமஞ்சனமும்; முதலான கொண்டணைந்தார் = முதலியஉபகரணங்களைக் கொண்டுவந்தார்; மைதழையுங் கண்டத்து மலைமருந்தை=கருநிறம்விளங்கிய திருமிடற்றையுடைய திருக்காளத்திமலையின்கண்வாழும் சஞ்சீவிபோலும் காளத்திநாதரை; வழிபாடுசெய்துவருந் தவமுடைய=நாள்தோறும் வழிபாடு செய்துகொண்டுவருகின்ற தவத்தையுடைய; முனிவர் சிவகோசரியார்=முனிவராகிய சிவகோசரியாரென்னும் சிவமறையவர்.—எ-று. இவ்விரண்டுங் குளகம். (௧௩௫)

> வந்துதிரு மலையின்கண் வானவர்நா யகர்மருங்கு
> சிந்தைநிய மத்தோடுஞ் செல்கின்றார் திருமுன்பு
> வெந்தவிறைச் சியுமெலும்புங் கண்டகல மிதித்தோடி
> இந்தவநு சிதங்கெட்டே னியார்செய்தா ரென்றழிவார்.

(இ-ள்.) வந்துதிருமலையின்கண்=திருக்காளத்தி மலைக்குவந்து; வானவர்நாயகர்மருங்கு=தேவர்களுக்கு முதல்வராகிய காளத்திநாதரது சந்நிதியில்; சிந்தை நியமத்தோடும் = தம்திருவுள்ளத்து உமைந்தநியமவிதியோடும்; செல்கின்றார்=செல்கின்ற அச்சிவகோசரியார்; திருமுன்புவெந்த விறைச்சியு மெலும்புங் கண்டு = (காளத்திநாதர்)திருமுன்னே பக்குவமான இறைச்சியையும் எலும்பையுங்கண்டு; அகலமிதித்தோடி=அதன்சமீபத்து மிதியாது தூரத்தே கால்வைத்து மிதித்தோடி; இந்தவநுசிதம் = இவ்வாறான அநுசிதத்தை; யார்செய்தார் கெட்டேனென்றழிவார்=யாவர்செய்தவர்கள் என்று இரக்கத்தாற் கெட்டேனென்று கூறி மனம்வருந்துவாராயினுர்.—எ-று. (௧௩௬)

அநுசிதம்=தூய்மையின்மை.

மேவநேர் வரவஞ்சா வேடுவரே யிதுசெய்தார்
தேவதே வீசனே திருமுன்பே யிதுசெய்து
போவதே யிவ்வண்ணம் புகுதநீர் திருவுள்ளம்
ஆவதே யெனப்பதறி யழுதுவிழுந்த லமந்தார்.

(இ-ள்.) மேவநேர்வரவஞ்சா=உம்முடைய திருமுன் அடையவும் நேரேவரவும் மனதில் அச்சமில்லாத; வேடுவரேயிதுசெய்தார்=வேடுவர்களே இந்த அநுசிதத்தைச்செய்தவர்கள்; தேவதேவீசனே = தேவர்களுக்கெல்லாம் தேவாயிருக்கின்ற சகத்காரணரே; திருமுன்பே யிதுசெய்துபோவதே=உமதுதிருமுன் இவ்வாறுசெய்து போகலாமா; இவ்வண்ணம்புகுதநீர் திருவுள்ளம் ஆவதே=இவ்வாறு சம்பவிக்கும்படி திருவுள்ளஞ்செய்யலாமா; எனப்பதறியழுது விழுந் தலமந்தார்=என்று திருமேனி பதறிக் கண்ணீர்விட்டழுது நிலத்தில் விழுந்துதெருமரலடைந்தார்.—எ-று. தெருமரல்=மனச்சுழற்சி. (கஙஎ)

பொருப்பிலெழுஞ் சுடர்க்கொழுந்தின் பூசனையுந் தாழ்க்கநான்
இருப்பதினி யென்னென்றவ் விறைச்சியெலும் புடனிலையுஞ்
செருப்படியு நாயடியுந் திருவலகான் மாற்றியபின்
விருப்பினொடுந் திருமுகலிப் புனன்மூழ்கி விரைந்தணைந்தார்.

(இ-ள்.) பொருப்பிலெழுஞ் சுடர்க்கொழுந்தின் = இத்திருக்காளத்திமலையில் எழுந்த ஒளிக்கொழுந்தினது; பூசனையுந்தாழ்க்க=சிறப்பிற்குரிய பூசை செய்யுங் காலந்தடைப்பட; நானிருப்பதினியென்னென்று = நான் இங்கே இருப்பதில் இனி என்னபிரயோசனமென்று; அவ்விறைச்சியெலும்புடனிலையும்=அவ்விறைச்சியெலும்புகளோடு சருகிலையா லாயகல்லையையும்; செருப்படியுநாயடியும்=திண்ணனார் அடிவைப்பையும் அவரோடு பிரியாத நாயின் அடியையும்; திருவலகான்மாற்றியபின்=திருவலகுகொண்டுபோக்கியபின்; விருப்பினொடுந் திருமுகலிப் புனன்மூழ்கி=அன்போடு பொன்முகலி யாற்றில்நீராடி; விரைந்தணைந்தார்=விரைவாகவந்தார் சிவகோசரியார்.—எ-று. (கஙஅ)

பழுதுபுகுந் ததுதீரப் பவித்திரமாஞ் செயல்புரிந்து
தொழுதுபெறு வனகொண்டு தூயபூ சனைதொடங்கி
வழுவிதிரு மஞ்சனமே முதலாக வரும்பூசை
முழுதுமுறை மையின்முடித்து முதல்வனார் கழல்பணிந்தார்.

(இ-ள்.) பழுதுபுகுந்ததுதீர=சம்பவித்த குற்றம்தீரும்படி; பவித்திரமாஞ் செயல்புரிந்து=பரிகாரமென்னும் பிராயச்சித்தத்தைச்செய்து; தொழுதுபெறுவனகொண்டு=வணங்கித்தாம்பெற்ற பூசைக்குரிய உபகரணங்களை எடுத்துக்கொண்டு; தூயபூசனைதொடங்கி=தூய்மையாகிய பூசையைத்தொடங்கி; வழுவிதிரு மஞ்சனமேமுதலாக=குற்றமற்ற திருமஞ்சனம் முதலாக; வரும்பூசை முழுதும்=(அபிடேகத்தின்பின்பு சந்தனஞ்சாத்தல்புட்பஞ்சாத்தல் தூபங்கொடுத்த

ல் தீபங்கொடுத்தல் நிவேதித்தல் என்னும் ஐந்துபசாரத்தையும் ; முறைமையின் முடித்து=கிரமமாகச்செய்து முடித்து ; முதல்வனார்கழல் பணிந்தார் = சிவபிரான்திருவடிகளை வணங்கினார்.—எ-று. (௧௩௯)

பவித்திரமாஞ் செயல்புரிந்து என்றதனால் பிராயச்சித்தத்தின் பொருட்டுச்செய்யும் பஞ்சகவ்வியஸ்நானம் முதலியனவுங்கொள்க.

பணிந்தெழுந்து தனிமுதலாம் பரனென்று பன்முறையாற்
றுணிந்தமறை மொழியாலே துதிசெய்து சுடர்த்திங்கள்
அணிந்தசடை முடிக்கற்றை யங்கணரை விடைகொண்டு
தணிந்தமனத் திருமுனிவர் தபோவனத்தி னிடைச்சார்ந்தார்.

(இ-ள்.) பணிந்தெழுந்து=வணங்கியெழுந்து ; தனிமுதலாம்பரனென்று =தனக்குவேறுமுதல்வரில்லாதபரம்பொருளிவரென்று ; பன்முறையாற்றுணிந்தமறைமொழியாலே துதிசெய்து=பலமுறையினால்நிச்சயித்தவேத மந்திரங்களால் தோத்திரஞ்செய்து; சுடர்த்திங்களணிந்த=ஒளிவிளங்கிய இளம்பிறையையணிந்த ; சடைமுடிக்கற்றையங்கணரை=கூட்டமானசடைமுடியையுடைய காளத்திநாதரிடத்து; விடைகொண்டு=விடைபெற்றுக்கொண்டு; தணிந்தமனத்திருமுனிவர்=உபசாந்தியடைந்த திருவுள்ளத்தையுடைய சிவகோசரியார் ; தபோவனத்தினிடைச் சார்ந்தார்=தாம்வாழும் தபோவனத்தை யடைந்தார்.—எ-று. (௧௪௦)

இவ்வண்ணம் பெருமுனிவ ரேகினா ரினியிப்பால்
மைவண்ணக் கருங்குஞ்சி வனவேடர் பெருமானார்
கைவண்ணச் சிலைவளைத்துக் கான்வேட்டை தனியாடிச்
செய்வண்ணத் திறமொழிவேன் றீவினையின் றிறமொழிவேன்.

(இ-ள்.) இவ்வண்ணம் பெருமுனிவரேகினார்=இவ்வாறு பெருமையினையுடைய சிவகோசரியார் தன்தபோவனத்தை யடைந்தார் ; இனியிப்பால்=இனிமேல் இவ்விடத்து ; மைவண்ணக் கருங்குஞ்சி=மேகம்போலுங்கரிய குடுமியினையுடைய ; வனவேடர் பெருமானார்=வனத்தின் கண்வாழும் வேடர்கட்கு முதல்வராகிய திண்ணனார் ; கைவண்ணச் சிலைவளைத்து=தாங் கையில் ஏந்திய அழகிய வில்லைவளைத்து ; கான்வேட்டை தனியாடி=காட்டின்கண் தனியே வேட்டையாடி ; செய்வண்ணத் திறமொழிவேன் = செய்கின்ற பூசையின் வகைமையைச் சொல்லத்தொடங்கினேன் ; தீவினையின் றிறமொழிவேன்=தீவினைப்பகுதிகளின் வலிமையை நீக்கிக்கொள்வேணாகிய யான்.—எ-று. (௧௪௧)

திருமலையின் புறம்போன திண்ணனார் செறிதுறுகற்
பெருமலைக ளிடைச்சரியிற் பெரும்பன்றி புனமேய்ந்து
வருவனவுந் துணிபடுத்து மானினங்கள் கானிடைநின்
றொருவழிச்சென் றேறுதுறை யொளிநின்று கொன்றருளி.

(இ-ள்.) திருமலையின்புறம்போன திண்ணனார்=திருக்காளத்தி மலையின் புறம்பே எழுந்தருளிய திண்ணநாயனார் ; செறிதறுகற் பெருமலைகளிடைச்சாரியில்=நெருங்கிய திறுகல்லோடுகூடிய பெரியமலை களினிடத்தும் சாரலினும் உள்ள ; பெரும் பன்றிபுனமேய்ந்து வருவனவுந் துணிபடுத்து=பெரியபன்றிகள் தினைக்கொல்லைகளை மேய்ந்து வருவனவற்றையும் பாணத்தாற்றுணித்து(அதன்றி); மானினங்கள் கானிடைநின்று=மான்கூட்டங்கள் காட்டினின்றும் ; ஒருவழிச்சென் றேறுதுறை=ஒருவழியாகப்போய் ஏறுகின்ற நீர்த்துறையில் ; ஒளிநின்று கொன்றருளி=ஒதுங்கி நின்றுகொன்று.—எ-று. (கசஉ)

ஒதுங்கி நிற்றல்=மறைந்துநிற்றல். ஒளிநின்று கொன்றருளி என்னுமிடத்து ஒளியினின்று கொன்றென்றுபொருளுரைத்தலுமொன்று. ஒளி ஒதுக்கிடம். அதாவது:— வேட்டையாடுவோர் தங்கிலைவிலங் குணராவண்ணம் மரமுதலிய வற்றில்மறைவுகட்டி நிற்குமிடம்.

பயில்விளியாற் கலையழைத்துப் பாடுபெற வூடுருவும்
அயின்முக வெங்கணைபோக்கி யடியொற்றி மரையினங்க
டுயிலிடையிற் கிடையெய்து தொடர்ந்து கடமைகளெய்து
வெயில்படுவெங் கதிர்முதிரத் தனிவேட்டை வினைமுடித்தார்.

(இ-ள்.) பயில்விளியாற்கலையழைத்து=கலைமான் போலப் பயிலாகவிளித்தலினால் அக்கலைமான்களையழைத்து ; பாடுபெறவூடுருவும்=அவை இறக்கும்படி அதனை ஊடுருவத்தக்க ; அயின்முக வெங்கணை போக்கி = கூரியநுதியினையுடைய வெவ்விதான அம்புகளை எய்து ; அடியொற்றி=அடியின்வழி சென்று; மரையினங்கடுயிலிடையிற் கிடையெய்து=மரைக்கூட்டங்கள் துயிலுமிடங்களில் அத்தொகுதியை அம்பாலெய்து ; தொடர்ந்து கடமைகளெய்து = மேற்பின் தொடர்ந்துகடமை மிருகங்களையுங்கொன்று ; வெயில்படு வெங்கதிர்முதிர=ஒளிவீசுகின்ற கொடியசூரியனது கிரணங்கள் முதிருங்காலமளைய ; தனிவேட்டை வினைமுடித்தார்=ஒப்பற்ற வேட்டைத்தொழிலை முடித்தார்.—எ-று. (கசங)

இவ்விரண்டுங்குளகம்.

பட்டவன விலங்கெல்லாம் படர்வனத்தி லொருசூழல்
இட்டருகு தீக்கடைகோ லிருஞ்சுரிகை தனையுருவி
வெட்டிநறுங் கோற்றேனை மிகமுறித்துத் தேக்கிலையால்
வட்டமுறு பெருங்கல்லை மருங்குபுடை படவமைத்தார்.

(இ-ள்.) பட்டவன விலங்கெல்லாம்=தம்மால் இறந்தகாட்டின்கணுள்ள மிருகங்களை யெல்லாம் ; படர்வனத்திலொரு சூழலிட்டு=பரம்பிய அவ்வனத்தினுள்ள ஒருசோலையிலிட்டு; அருகுதீக்கடைகோல்=அதனருகில் தீக்கடைகோலை; இருஞ்சுரிகை தனையுருவிவெட்டி = பெருமையினையுடைய தமது உடைவாளையுருவி வெட்டிச்செய்துகொண்டு; நறுங்கோற்றேனை மிகமுறித்து=நல்லகொம்புத்தேன்களை மிகவும் ஒடித்து ; தேக்கிலையால்வட்டமுறு பெருங்கல்லை மருங்கு=

தேக்கிலையினால் வட்டமாகச்செய்த பெரியகல்லையினிடத்து ; புடைபட வமைத்தார்=தன்னருகில் வைத்துக்கொண்டார்.—எ-று. (கசச)

இந்தனத்தை முறித்தடுக்கி யெரிகடையு மரணியினில்
வெந்தழலைப் பிறப்பித்து மிகவளர்த்து மிருகங்கள்
கொந்தியயி லலகம்பாற் குட்டமிடுங் கொழுப்பறிந்து
வந்தனகொண் டெழுந்தழலில் வக்குவன வக்குவித்து

(இ-ள்.) இந்தனத்தைமுறித்தடுக்கி = விறகைமுறித்து அடுக்கி ; எரிகடையுமரணியினில்=தீக்கடைகின்ற கோலினால்; வெந்தழலைப்பிறப்பித்து=கொடியநெருப்பையுண்டாக்கி ; மிகவளர்த்து=மிகவும் அதிகமாகச்சொலிப்பித்து ; மிருகங்கள்கொந்தியயிலலகம்பால்=மிருகங்களைக்கூரியநுனியையுடைய அம்பினாற்கொத்தி ; குட்டமிடுங்கொழுப்பறிந்து=வலைவாகத்தோண்டி எடுக்கும் கொழுப்புள்ள இடங்களையறிந்து ; வந்தனகொண்டெழுந்தழலில்=வந்த அம்மாமிசங்களை எடுத்துக்கொண்டு சுவாலித்தெழுகின்ற நெருப்பில் ; வக்குவனவக்குவித்து=வதக்குதற்குரிய அவைகளை வெதும்பச்செய்து.—எ-று. (கசரு)

வதக்குவனவென்னுஞ்சொல்லை இடைக்குறைத்துவக்குவன வெனவேடர்குழூஉக்குறியாய்ஓதலில் அவ்வாறு கூறினர்.

வாயம்பா லழிப்பதுவும் வகுப்பதுவுஞ் செய்தவற்றின்
ஆயவுறுப் பிறைச்சியெல்லா மரிந்தொரு கல்லையிலிட்டுக்
காயநெடுங் கோல்கோத்துக் கனலின்க ணுறக்காய்ச்சித்
தூயதிரு வமுதமைக்கச் சுவைகாண லுறுகின்றார்.

(இ-ள்.) வாயம்பாலழிப்பதுவும்=அம்மாமிசங்களில்அம்பினுனியால்அரிந்து தள்ளவேண்டியவைதையும் ; வகுப்பதுவும்செய்து=அதினின்றும் கீறி எடுக்கத்தக்கதையும் எடுத்து ; அவற்றினாயவுறுப்பிறைச்சியெல்லாம்=அம்மிருகங்களிலுள்ள உறுப்புகளின் தசைகளையெல்லாம் ; அரிந்தொருகல்லையிலிட்டு=ஒருகல்லையிலரிந்திட்டு ; காயநெடுங்கோல்கோத்து=அவ்வுறுப்புகளை நீண்ட அம்பினிடத்துக்கோத்துவேகும்படிக்கு ; கனலின்கணுறக்காய்ச்சி=நெருப்பிற்பொருந்தவெதுப்பி ; தூயதிருவமுதமைக்க = தூய்மையாகியதிருவமுதைக்காளத்திநாதருக்கமைக்கும்படி ; சுவைகாணலுறுகின்றார்=சுவைபார்க்கத்தொடங்கினார்.—எ-று. ()

எண்ணிறந்த கடவுளருக் கிடுமுணவு கொண்டூட்டும்
வண்ணவெரி வாயின்கண் வைத்ததெனக் காளத்தி
அண்ணலார்க் காம்பரிசு தாஞ்சோதித் தமைப்பார்போற்
றிண்ணனார் திருவாயி லமைத்தாரூன் றிருவமுது.

(இ-ள்.) எண்ணிறந்த கடவுளருக்கிடும் = அளவில்லாத தேவர்களுக்கு இடுதற்குரிய ; உணவுகொண்டூட்டும் = அவியுணவைத்தானுண்டு உண்பிக்கும் ; வண்ணவெரி வாயின்கண்வைத்ததென = நிறத்தினையுடைய வைசுவானரனென்

னும் அக்கினிதேவன் தன்வாயின்கண் வைத்தாற்போல ; காளத்தியண்ணலார்க் காம்பரிசு=திருக்காளத்தியப்பருக்கு ஆகும் முறைமையை ; தாஞ்சோதித் தமைப்பதற்கு=தாம்வாயினிடத்திட்டுச்சுவைபார்த்துத்திருவமுதமைக்கும்பொருட்டு; திண்ணனார் திருவாயி லமைத்தாருள் திருவமுது=திண்ணனாயனார் மாமிசமாகிய திருவமுதைத் திருவாயிலிட்டுச் சுவைபார்த்தார்.—எ-று. (௧௪௭)

ஈண்டு உணவென்றது வபையுணவை. அவ்வபைமுதலில் நெய்பூசி யாகாக்கினியின் சிகையென்னும் நாவிலிட்டு வாட்டப்பட்டுப் பின் தேவதைகளுக்கு அவைபகிர்ந்திட்டு ஓமம்பண்ணப்படுதலால் எரிவாயின்கண்வைத்ததெனவுங்கடவுளருக்கிடுமுணவெனவுங் கூறினர்.

நல்லபதமுறவெந்து நாவின்க ணிடுமிறைச்சி
கல்லையினிற் படைத்துத்தேன் பிழிந்து கலந்ததுகொண்டு
வல்விரைந்து திருப்பள்ளித் தாமமுந்துாய் மஞ்சனமும்
ஒல்லையினின் முன்புபோ லுடன்கொண்டு வந்தணைந்தார்.

(இ-ள்.) நல்லபத முறவெந்து=நன்மையாகிய பக்குவம் அமையும்படி வெந்து ; நாவின்கணிடுமிறைச்சி=நாவிலிட்டு இனிமைபார்க்கும் மாமிசத்தை ; கல்லையினிற்படைத்து=தேக்கிலைக் கல்லையிற்படைத்து; தேன்பிழிந்து கலந்ததுகொண்டு=தேனைப்பிழிந்து விரவியதை எடுத்துக்கொண்டு ; வல்விரைந்து=வேகமாய்ச்சென்று ; திருப்பள்ளித்தாமமும்=திருப்பள்ளித்தாமமாகிய மலரையும் ; தூய்மஞ்சனமும்=தூய்தாகிய திருமஞ்சனத்தையும் ; ஒல்லையினின் முன்புபோல்=நொடிப்பொழுதில் முன்போலத் (திருமுடியினும் திருவாயினுமாக) ; உடன்கொண்டு வந்தணைந்தார்=அமைத்துக்கொண்டு வந்தருளினார்.—எ-று. (௧௪௮)

நல்லபதமென்றது பாகக்குறைவில்லாத பக்குவத்தை.

வந்துதிருக் காளத்தி மலையேறி வனசரர்கள்
தந்தலைவ னாரிமையோர் தலைவனார் தமையெய்தி
அந்தணனார் பூசையினை முன்புபோ லகற்றியபின்
முந்தைமுறை தம்முடைய பூசனையின் செயல்முடிப்பார்.

(இ-ள்.) வந்துதிருக்காளத்திமலையேறி=அங்குநின்றும் வந்து திருக்காளத்திமலையிலேறி; வனசரர் கடந்தலைவனார்=வேடர்களுக்குத் தலைவராகிய திண்ணனாயனார் ; இமையோர்தலைவனார்தமை யெய்தி = தேவர்கட்குத் தலைவராகிய காளத்திநாதரை அடைந்து; அந்தணனார்பூசையினை = சிவகோசரியார்பூசித்தமலர்களை ; முன்புபோலகற்றியபின்=முன்போலச் செருப்புக்காலால்நீக்கியபின்பு ; முந்தைமுறை தம்முடைய பூசனையின் செயன்முடிப்பார்=முன்செய்ததுபோல் வாய்நீராகிய திருமஞ்சனமாட்டி மாமிசமாகிய திருவமுதையூட்டித்தம்பூசைத் தொழிலை முடிப்பாராயினார்.—எ-று. (௧௪௯)

ஊனமுது கல்லையுடன் வைத்திது முன்னையினன்றால்
ஏனமொடு மான்கலைகண் மரைகடமை யிவையிற்றில்
ஆனவுறுப் பிறைச்சியமு தடியேனுஞ் சுவைகண்டேன்
றேனுமுடன் கலந்ததிது தித்திக்கு மெனமொழிந்தார்.

(இ-ள்.) ஊனமுதுகல்லை யுடன்வைத்து=மாமிசமாகிய திருவமுதைக் கல்லையுடன் திருமுன்னேவைத்து ; இதுமுன்னையினன்று = இதுமுன்கொடுத்த அமுதினும் நன்மையுடையது ; ஏனமொடு மான்கலைகள்=பன்றியோடுமான்களும் கருமான்களும் ; மரைகடமையிவையிற்றில்=மரைகளும்கடமை மிருகங்களும் ஆகிய இவைகளில் ; ஆனவுறுப் பிறைச்சியமுது=உண்டான அவயவங்களிலுள்ள இறைச்சியமுது இது ; அடியேனுஞ் சுவைகண்டேன் = அடியேனும் இதனைச்சுவைத்துப் பக்குவம்பார்த்தேன் ; தேனுமுடன் கலந்தது = தேனும் இதனோடுகலக்கப்பட்டது (அதனால்) ; இது தித்திக்குமென மொழிந்தார்=இது மிகவும் தித்திப்பாயிருக்குமென்று விண்ணப்பஞ்செய்தார்.—எ-று. ஆல் - அசை.

இப்பரிசு திருவமுது செய்வித்துத் தம்முடைய
ஒப்பரிய பூசனைசெய் தந்நெறியி லொழுகுவார்
எப்பொழுது மேன்மேல்வந் தெழுமன்பாற் காளத்தி
யப்பரெதி ரல்லுறங்கார் பகல்வேட்டை யாடுவார்.

(இ-ள்.) இப்பரிசு திருவமுதுசெய்வித்து=இவ்வாறு தினந்தோறுந் திருக்காளத்தியாரைத் திருவமுதுசெய்வித்து ; தம்முடைய வொப்பரிய பூசனைசெய்து=தமது ஒப்புச்சொல்லுதற்கரிய பத்தியோடு கூடிய பூசையைச் செய்துகொண்டு ; அந்நெறியிலொழுகுவார்=அவ்வொழுக்கநெறியில் ஒழுகும் திண்ணனாயனார் ; எப்பொழுதுமேன்மேல்வந்தெழுமன்பால்=எக்காலமும்மேன்மேல் இடைவிடாது முறுகிவளர்ந்தெழும் பேரன்பினால் ; காளத்தியப்பரெதிர்=திருக்காளத்தியப்பர் திருமுன்னே ; அல்லுறங்கார்பகல் வேட்டையாடுவார் = இரவிலுறங்கார் பகலின்கண் மிருகவேட்டையாடுவாராயினார்.—எ-று. (௧௫௧)

மாமுனிவர் நாடோறும் வந்தணைந்து வனவேந்தர்
தாமுயலும் பூசனைக்குச் சாலமிகத் தளர்வெய்தித்
தீமையென வதுநீக்கிச் செப்பியவா கமவிதியால்
ஆமுறையி லர்ச்சனைசெய் தந்நெறியி லொழுகுவரால்.

(இ-ள்.) மாமுனிவர்நாடோறும் வந்தணைந்து = பெருமையினையுடைய சிவகோசரியார் அவர்பூசிக்கும் தினந்தோறும்வந்து ; வனவேந்தர் முயலும் பூசனைக்கு = வனத்துக்குவேந்தராகிய திண்ணனார் முயன்று செய்யும் பூசையைக் குறித்து ; சாலமிகத் தளர்வெய்தி=மிகத்தளர்ச்சியடைந்து ; தீமையெனவிது நீக்கி=இது குற்றமென்று அவர்செய்யும் பூசையைமாற்றி ; செப்பியவாகமவிதியால்=சைவாகமங்கள் கூறியவிதிப்படி ; ஆமுறையிலர்ச்சனைசெய்து = பொருந்

தும் முறைமையாற் பூசித்து ; அந்நெறியிலொழுகுவார் = தாமும் அந்நெறியி லொழுகுவாராயினர்.—எ-று. தாம்-ஆல்-அசை. (௧௫௨)

நாணனொடு காடனும்போய் நாகனுக்குச் சொல்லியபின்
ஊணுமுறக் கமுமின்றி யணங்குறை வாளையுங்கொண்டு
பேணுமக னார்தம்பால் வந்தெல்லாம் பேதித்துக்
காணுநெறி தங்கள்குறி வாராமற் கைவிட்டார்.

(இ-ள்.) நாணனொடு காடனும்போய் = நாணனுடன் காடனும் சென்று; நாகனுக்குச் சொல்லியபின் = தந்தையாகிய நாகனுக்குத் திண்ணனாருடைய செய்கையைச்சொன்னபின் ; ஊணுமுறக்கமுமின்றி = அதுகேட்டதனால் உண்ணுதலும் உறங்குதலும் ஒழிந்து ; அணங்குறைவாளையுங்கொண்டு = தேவராட்டியையும் அழைத்துக்கொண்டு ; பேணுமகனார் தம்பால்வந்து = தம்மால் விரும்பப்படும் தன்மகனாரிடத்துவந்து ; எல்லாம்பேதித்துக்காணுநெறி = (அவருக்கு முன்னிருந்த உலகியலான) எண்ணங்களெல்லாம் பேதித்திருக்கும் முறைமையினால்; தங்கள் குறிவாராமற்கைவிட்டார் = தங்கள்தெய்வத்தை முன்னிட்டுப்பார்க்கும் குறிகைவராமல் திண்ணனாரைவிட்டுப் போனார்கள்.—எ-று. (௧௫௩)

தங்கள் குறியாவது:—தெய்வம் ஆவேசிக்கச்செய்து தேவராட்டிவாயாற் கேட்குங் குறிகளும் மலைநென்முதலியவற்றை எடுத்து ஒற்றை இரட்டைபார்த்தல்முதலியனவுமாம்.

முன்புதிருக் காளத்தி முதல்வனா ரருணோக்கால்
இன்புறுவே தகத்திரும்பு பொன்னானாற் போல்யாக்கை
தன்பரிசும் வினையிரண்டுஞ் சாருமல மூன்றுமற
அன்புபிழம் பாய்த்திரிவா ரவர்கருத்தி னளவினரோ.

(இ-ள்.) முன்பு திருக்காளத்திமுதல்வனா ரருணோக்கால் = திண்ணனார் தரிசிப்பதற்குமுன்னே திருக்காளத்தியப்பரது திருவருட்பார்வையால் ; இன்புறுவேதகத்திரும்பு பொன்னானாற்போல் = இன்பத்தைவிளைக்கும் இரதகுளிகையினால் இரும்பானது பொன்னானாற்போல ; யாக்கைதன்பரிசும் = உடம்பின்தன்மையும் ; வினையிரண்டுஞ்சாருமலமூன்றுமற; நல்வினை தீவினையென்னும் இருவினையும் தம்மைப்பந்தித்த ஆணவம் மாயைகன்மமென்னும் மும்மலமும் பந்தியாது நீங்க ; அன்புபிழம் பாய்த்திரிவார் = அன்பே தமக்கோ ருருவாய்த்திரிகின்ற அத்திண்ணநாயனார் ; அவர்கருத்தி னளவினரோ = அவரால் அளந்தறியுங்குறியின் அளவினையுடையரா அன்று.—எ-று. (௧௫௪)

வேதகம் என்றது இரதகுளிகை. அதுகாட்டினவுடன் பொன்னாக்கும் தரிசவேதிஎன்றும், பரிசித்தவுடன் பொன்னாக்கும் பரிசவேதி என்றும் இருவகையாம். இவ்விரண்டும் பொன்னாக்குமியல்புடைமையால் பொதுப்படவேதி எனக் கூறினர். பிழம்பு என்றது உருவம். யாக்கையோடுகூடிய வழி உயிர் அதுவாய்தா

னெனநிற்கும் ஆதலில் அவ்வபிமானமின்றி நின்றாரென்பார் யாக்கைதன்பரிசெ ன்றும், அவ்வாறுநிற்புழிநுகரும்பிராரத்தமென்னும் இருவினையின்பயனும் அவர் நுகராமையின்வினையிரண்டுமென்றும், தம்மைப்பந்தித்த ஆணவமலம்பக்குவப்ப ட்டுத் தான்விளக்கும்போத்திருத்துவத்தை விளையாமையானும் இருவினையும்சா மியமாய்த்தடையுற்று நிற்றலானும் மாயை கலைமுதலிய தன்காரியமாகிய கருவிவ ழியால் மலகன்மங்கட்கேற்க உணர்வுவிளக்காய் நின்று மயக்கஞ்செய்யாமையா னும் சாருமலமூன்று மறவென்றுங்கூறினர். பிராரத்தத்தால் வரும்சுகதுக்கங்க ளவினையிரண்டும் எனக்காரியத்தைக் காரணமாக உபசரித்தார். போத்திருத்துவ மாவது :—போகக்கிரியையைவிளக்கும் கர்த்தாவாதல் என்க. பிராரத்தம் அனுப வியாது நீங்குமோ எனின் தீவிரபத்திஞானமுடையோர்க்கு நால்வகைப்பிராரத் தத்துள் மந்தசுத்தமேயன்றித் தீவிரவேகமும் வாதியாதெனமேலோர் கூறுவர். ஆதலில் வாதியாதென்க. அனுபவிக்கத்தக்கது அனுபவியாதொழியாதென நூல் களுள் விதித்தநியமம் மாறுபடுமெனின் தீவிரபத்திஞானமுடையரல்லார்க்கே அ ந்நியமம் சிறப்பென்றும் ஆன்றோர்கூறுவாராதலில் அந்நியமம் பிறழாதென்க.

அந்நிலையி லன்பனா ரறிந்தநெறி பூசிப்ப
மன்னியவா கமப்படியான் மாமுனிவ ரர்ச்சித்திங்
கென்னுடைய நாயகனே யிதுசெய்தார் தமைக்காணேன்
உன்னுடைய திருவருளா லொழித்தருள வேண்டுமென.

(இ-ள்.) அந்நிலையிலன்பனார்=மேற்சொல்லிய முறையினால்திண்ணனார்; அறிந்தநெறிபூசிப்ப=தாம் அறிந்தஅளவிற்பூசித்துவர ;மன்னியவாகமப்படியால் =நிலைபெற்றசைவாகமவிதியால்; மாமுனிவரர்ச்சித்து=பெருமையினையுடையசி வகோசரியார்பூசித்து ; இங்கென்னுடையநாயகனே = இவ்விடத்து எனதுகட வுளே ; இதுசெய்தார்தமைக்காணேன்=இவ்வாறு செய்தவர் இன்னாரென்று அ வரையான்காணவில்லை ; உன்னுடையதிருவருளால்=தேவரீர் கிருபையினால் (இ வ்வனுசிதத்தை); ஒழித்தருளவேண்டுமென=தவிர்த்தருளமேண்டுமென்று பிரா ர்த்தித்துச்செல்ல.—எ-று. (௧௫௫)

ஊணுறக்கமின்றித்திருவருள் மேலீட்டால் அன்பேவடிவாய்நின்றன ரென்பது தோன்ற அந்நிலையிலன்பனாரென்றும், தாம் திருவருள்பெற்றுக் காளத்தியப்பரைத்தெரிசிக்கும்பொழுது இக்குமித்தேவர்க்கு நீர்வார்த்து மலர் கொய்திட்டார்யாரென்று நாணனைவினவ அதற்குநாணன் இலையும் பூவுஞ் சூட் டிச்சிறிதேதோ ஒன்றையூட்டி ஓர்பார்ப்பான் இதுசெய்தான் எனக்கூறியதும் தான் இலைப்பூச்சூட்டியிருக்கக்கண்டதும் ஆக அப்பொழுதுணர்ந்த உணர்ச்சி யையேவிதியாகக்கொண்டுசெய்தலில் அறிந்தநெறிபூசிப்பவென்றுங்கூறினர்.

அன்றிரவு கன்விக்க ணருண்முனிவர் தம்பாலே
மின்றிகழுஞ் சடைமவுலி வேதியர்தா மெழுந்தருளி
வன்றிறல் வேடுவனென்று மற்றவனை நீநினையே
லன்றவன்றன் செய்றன்னை நாமுரைப்பக் கேளென்று.

(இ-ள்.) அன்றிரவு கனவின்கண்=(இவ்வாறு சுவாமியை வேண்டிக்கொண்டு சென்ற) அன்றிராக் கனவில்; அருண்முனிவர் தம்பால் = அருளையுடைய சிவகோசரியாரிடத்து; மின்றிகழுஞ் சடைமவுலி=மின்போலவிளங்குஞ் சடைமுடியையுடைய; வேதியர்தா மெழுந்தருளி=காளத்திநாதர் எழுந்தருளி; வன்றிறல் வேடுவனென்று=மிக்கவலியினையுடைய வேடுவனாக; அவனை நீ நினையேல்=அத்திண்ணனை நீ நினைக்கவேண்டாம்; நன்றவன்றன் செயறன்னை=நன்றாக அவனுடைய செய்கையை; நாமுரைப்பக் கேளென்று=நாம்சொல்ல நீ கேட்பாயாக வென்று.—எ-று. மற்று-ஏ-அசை. (௧௫௬)

அவனுடைய வடிவெல்லா நம்பக்க லன்பென்றும்
அவனுடைய வறிவெல்லா நமையறியு மறிவென்றும்
அவனுடைய செயலெல்லா நமக்கினிய வாமென்றும்
அவனுடைய நிலையிவ்வா றறிநீயென் றருளசெய்தார்.

(இ-ள்.) அவனுடையவடிவெல்லா நம்பக்கலன்பென்றும்=(அத்திண்ணனுடைய உயிருள் ஆவேசித்து அவனன்பில் நாம்விரவியிருத்தலால்) அவனுடைய உடம்புமுழுதும் நம்மிடத்துதித்த அன்பின்வடிவே என்றும்; அவனுடைய வறிவெல்லா நமையறியுமறிவென்றும்=(அவனுணர்வில் தாதான்மியமாய் நாம்நின்று உணர்த்த உணர்தலில்) அவனுணரும் உணர்வெல்லாம் நம்மையுணரும் உணர்வேயன்றிப்பிற உணர்வல்லவென்றும்(அம்முறைபற்றி); அவனுடைய செயலெல்லா நமக்கினியவாமென்றும்=(புதல்வன்தந்தைமாட்டுச் செய்யும் செயல்போல) அவன்நம்மாட்டுச்செய்யும் செயல்களெல்லாம் வழுவாயினும் நமக்கு இனிமையுடையன என்றும்; அவனுடைய நிலையிவ்வாறறி நீ யென்றருள்செய்தார்=அவன்நிலைமையைஇத்தன்மையுடைத்தென்று நீ அறிவாயாகஎன்றருளிச்செய்தார்.—எ-று.

இதுமுதல் ஐந்துபாட்டு சிலபிரதிகளிலில்லாமையால் வெள்ளிப்பாடல்.

பொருப்பினில்வந் தவன்செய்யும் பூசனைக்கு முன்பென்மே
லருப்புறுமென் மலர்முன்னை யவைநீக்கு மாதரவால்
விருப்புறுமன் பெனும்வெள்ளக் கால்பெருகிற் றெனவீழ்ந்த
செருப்படியவ் விளம்பருவச் சேயடியிற் சிறப்புடைத்தால்.

(இ-ள்.) பொருப்பினில் வந்தவன்செய்யும் பூசனைக்குமுன்பு=(அதுவல்லாமல்)மலையிலேறிவந்து அவன்நமக்குச்செய்யும் பூசைக்குமுன்பு; என்மேலருப்புறு மென்மலர்முன்னையவை நீக்கு மாதரவால்=என்மேல் நீ சாத்தியமுகையாயுள்ள மிருதுவான மலர்முன்னுள்ளவைகளை நீக்குங்கருத்தால்; விருப்புறு மன்பெனும் வெள்ளக்கால் பெருகிற்றென=விருப்பம்மிக்க அன்பென்னும் வெள்ள வாய்க்காலானது பெருகினாற்போல; வீழ்ந்தசெருப்படியவ்விளம்பருவச்சே யடியிற் சிறப்புடைத்து=என்மீது வீழ்த்தப்பட்ட செருப்படிவைப்பானது இளம்பருவத்தையுடைய முருகனது சிவந்த அடிவைப்பினும் எனக்கு மிகச்சிறப்புடையது.—எ-று. ஆல் - அசை. (௧௫௮)

உருகியவன் பொழிவின்றி நிறைந்தவவ னுருவென்னும்
பெருகியகொள் கலமுகத்திற் பிறங்கியினி தொழுகுதலா
லொருமுனிவன் செவியுமிழு முயர்கங்கை முதற்றீர்த்தப்
பொருபுனலி னெனக்கவன்றன் வாயுமிழும் புனல்புனிதம்.

(இ-ள்.) உருகியவன் பொழிவின்றிநிறைந்த=உருகுதற்கு ஏதுவான அன்பானது நீங்காதுநிறைந்த ; அவனுருவென்னும் பெருகியகொள்கல முகத்திற் பிறங்கியினி தொழுகுதலால்=அவனது வடிவமென்னும் பெரியபாத்திரத்தினிடத்து விளங்கி இனிமையோடு விழுதலால் ; ஒருமுனிவன் செவியுமிழும்=சன்னு என்னும் ஒருமுனிவர் காதின்வழியாய்விட்ட ; உயர்கங்கை முதற்றீர்த்தப் பொருபுனலின்=உயர்ந்தகங்கை முதலாகிய தீர்த்தமென்னும் கரைமோதுகின்ற நீரினும் ; எனக்கவன்றன் வாயுமிழும் புனல்புனிதம்=எனக்கு அவன் வாயினின்றும் உமிழப்பட்ட நீரானது தூய்மையுடையது.—எ-று. (௧௫௯)

இம்மலைவந் தெனையடைந்த கானவன்ற னியல்பாலே
மெய்ம்மலரு மன்புமேல் விரிந்தனபோல் விழுதலாற்
செம்மலர்மே லயனெடுமான் முதற்றேவர் வந்துபுனை
யெம்மலரு மவன்றலையா லிடுமலர்போ லெனக்கொவ்வா.

(இ-ள்.) இம்மலைவந்தெனையடைந்த=இம்மலையினிடத்துவந்து என்னையடைந்த ; கானவன்றனியல்பாலே=திண்ணனுடையசெய்கையினால் ; மெய்ம்மலரும் = மெய்யினிடத்துச் சூடியமலரும் ; அன்புமேல்விரிந்த தெனவிழுதலால் = அன்பானதுமேல்விரிந்தாற்போல் அவன்சிரசினின்றும்விழுதலினால்; செம்மலர்மேலயனெடுமான்முதற்றேவர் = சிவந்ததாமரைமலரின்கண்வாழும் பிரமனோடு திருமால்முதலியதேவர்கள் ; வந்துபுனையெம்மலருமவன்றலையாலிடுமலர்போலெனக்கொவ்வா=வந்தருசூட்டுகின்ற கற்பகதருமுதலியவற்றின்கணுள்ள எவ்வகைமலர்களும் அவன் சிரசினின்றும் வீழ்த்தப்பட்ட இந்தவனத்தின்மலர்போல எனக்கு ஒவ்வாதனவாம்.—எ-று. (௧௬0)

வெய்யகனற் பதங்கொள்ள வெந்துளதோ வெனுமன்பா
னையுமனத் தினிமையினி னையமிக மென்றிடலாற்
செய்யுமறை வேள்வியோர் முன்புதருந் திருந்தவியி
லெய்யும்வரிச் சிலையவன்று னிட்டவூ னெனக்கினிய.

(இ-ள்.) வெய்யகனற்பதங்கொள்ளவெந்துளதோவெனுமன்பால்=கொடியதீயினிடத்துத்தான்பக்குவத்தை அறியும்படி இதுநன்கு சமைந்ததா என்னும் விருப்பால் ; நையுமனத்தினிமையினினையமிக மென்றிடலால்=கசிந்தமனத்தின்கணுதிக்கும் இனிமையோடுநையும்படிக்கு மிகவும் மெல்லுதலினால் ; செய்யுமறைவேள்வியோர்முன்புதருந்திருந்தவியில்=செப்பமான வேதவிதிப்படிசெய்யும்வேள்வியையுடைய மறையவர்கள் எல்லாத்தேவர்களுக்கும் முற்படக்கொடுக்

குந்திருத்தமான மாமிசசருவினும் ; எய்யும் வரிச்சிலையவன்றானிட்டவூனெனக் கினிய=எய்கின்றவரிந்தவில்லையுடையதிண்ணனால் இடப்பட்டமாமிசம்எனக்கு இனிமையுடையன.—எ-று. (௧௬௧)

வெய்யகனற்பதங்கொள்ள என்றதனால் வேள்விசெய்வோர் தீத்தெய்வத்தின் வாயில்பதம்பார்த்துப்பின்னூட்டுதல்போலெனக்கொள்க.

மன்பெருமா மறைமொழிகண் மாமுனிவர் மகிழ்ந்துரைக்கு
மின்பமொழித் தோத்திரங்கண் மந்திரங்க ளியாவையினு
முன்பிருந்து மற்றவன்றன் முகமலர வகநெகிழ்ந்த
வன்பினினைந் தெனையல்லா லறிவுறா மொழிநல்ல.

(இ-ள்.) மன்பெருமா மறைமொழிகள் = நிலைபெற்ற மிக்கபெருமையினையுடைய வேதவாக்கியங்களும் ; மாமுனிவர் மகிழ்ந்துரைக்கு மின்பமொழித் தோத்திரங்கள்=பெரிய முனிவர்களால் எடுத்துக்கூறும் இன்பத்தைவிளைக்கும் மொழிகளையுடைய தோத்திரங்களும் ; மந்திரங்கள் யாவையினும்=மந்திரங்களும் ஆகிய எல்லாவற்றினும் ; முன்பிருந்து மற்றவன்றன் முகமலரவக நெகிழ்ந்த= முன்னேயிருந்து அத்திண்ணன் தன்முகமலரும்படி மனம்நெகிழ்ந்து சொல்லுதலையுடைய ; அன்பினினைந்தெனையல்லா லறிவுறா மொழிநல்ல=அன்பால் நினைந்து எனையன்றி வேறொருவரையும் அறியாத அவன்வாய்ச் சொல்லானது இனியன.—எ-று. (௧௬௨)

உனக்கவன்றன் செயல்காட்ட நாளைநீ யொளித்திருந்தா
லெனக்கவன்றன் பரிவிருக்கும் பரிசெல்லாங் காண்கின்றா
யனக்கவலை யொழிகென்று மறைமுனிவர்க் கருள்செய்து
புனற்சடிலத் திருமுடியா ரெழுந்தருளிப் போயினார்.

(இ-ள்.) உனக்கவன்றன்செயல்காட்ட=உனக்கு அவ்வியல்புடைய அத்திண்ணனதுபத்திநிலைமையைக்காட்டுதற்கு ; நாளைநீயொளித்திருந்தால்=நாளை அவ்விடத்து நீ மறைந்திருந்தால் ; எனக்கவன்றன்பரிவிருக்கும் = என்னிடத்தில்அவனன்பிருக்கும் ; பரிசெல்லாங்காண்கின்றாய்=முறைமையையெல்லாம்அறிவாய்(அதனால்);மனக்கவலையொழிகென்று=(உனக்கு அவன்செய்யுந்தொழில் இழிவாயிருந்ததென்று அதனால் உண்டாகும்)மனவருத்தத்தை நீக்கிக்கொள்வாயாகவென்று ; மறைமுனிவர்க்கருள்செய்து=வேதங்களையுணர்ந்த சிவகோசரியாருக்குக்கனவில் அருளிச்செய்து; புனற்சடிலத்திருமுடியார்=கங்காநதியையணிந்த சடைமுடியையுடையகாளத்திநாதர் ; எழுந்தருளிப்போயினார் = மறைந்தருளினார்.—எ-று. (௧௬௩)

கனவுநிலை நீங்கியபின் விழித்துணர்ந்து கங்குலிடைப்
புனைதவத்து மாமுனிவர் புலர்வளவுங் கண்டுயிலார்
மனமுறுமற் புதமாகி வரும்பயமு முடனாகித்
துனைபுரவித் தனித்தேர்மேற் றோன்றுவான் கதிர்தோன்ற.

(இ-ள்.) கனவுநிலைநீங்கியபின்=அவ்வாறானசொப்பனாவத்தைநீங்கியபின்பு ; விழித்துணர்ந்து=கண்விழித்துச்சாக்கிராவத்தையடைந்து சிவபிரானருளியதையறிந்த ; கங்குலிடைப்புனிதவத்துமாமுனிவர்=அன்றிரவின்கண்செய்யப்பட்டதவத்தையுடைய சிவகோசரியார்; புலர்வளவுங்கண்டுயிலார்=விடியுமளவும்நித்திரைசெய்யாதவராய் ; மனமுறுமற்புதமாகி=மனசில்மிக்க ஆச்சரியமடைந்து ; வரும்பயமுமுடனாகி=தாம் அனுசிதமாக்கொண்ட குற்றத்தால் பயமுமுடையவராய் ; துனைபுரவித்தனித்தேர்மேல்=வேகமானகுதிரைகட்டிய ஒப்பற்றதேரின்மேல் ; தோன்றுவான்கதிர்தோன்ற=வெளிப்படுகின்ற பெருமையானகிரணத்தையுடைய சூரியன் உதிக்க.—எ-று. (௧௬௪)

முன்னைநாள் போல்வந்து திருமுகலிப் புனன்மூழ்கிப்
பன்முறையுந் தம்பிரா னருள்செய்த படிநினைந்து
மன்னுதிருக் காளத்தி மலையேறி முன்புபோற்
பின்னாகனைப் பூசித்துப் பின்பாக வொளித்திருந்தார்.

(இ-ள்.) முன்னைநாள்போல்வந்துதிருமுகலிப்புனன்மூழ்கி=முன்னாள்போலத்திருமுகலியாற்றில்வந்து நீராடி ; பன்முறையுந்தம்பிரானருள் செய்தபடிநினைந்து=பலதரமும் தமது பிரானாகிய காளத்திநாதர் சொப்பனத்திலருளிய முறையைச்சிந்தித்து ; மன்னுதிருக்காளத்திமலையேறி=நிலைபெற்ற திருக்காளத்திமலையிலேறி ; முன்புபோற்பின்னாகனைப்பூசித்து=முன்போலச்சிவபிரானைப் பூசித்து ; பின்பாகவொளித்திருந்தார்=அப்பிரானார் பின்பாக ஓர்மறைவில் மறைந்திருந்தார்.—எ-று. இவ்விரண்டும்குளகம். (௧௬௫)

வேறு.

கருமுகி லென்னநின்ற கண்படா வில்லியார்தாம்
வருமுறை யாறுநாளின் வருமிர வொழிந்தகாலை
அருமறை முனிவனார்வந் தணைவதன் முன்னம்போகித்
தருமுறை முன்புபோலத் தனிப்பெரு வேட்டையாடி.

(இ-ள்.) கருமுகிலென்னநின்றகண்படாவில்லியார்தாம் = கரியமேகம்போல இரவில்உறங்காது காளத்திநாதரைக்காத்துநின்றதிண்ணனாயனார் ; வருமுறையாறுநாளில்=இம்முறையாகவருகின்ற ஆறும்நாளில் ; வருமிரவொழிந்தகாலை=வருகின்ற இராக்காலம் நீங்கியவிடத்து ; அருமறைமுனிவனார்=அரியவேதங்களையுணர்ந்தசிவகோசரியார்; வந்தணைவதன்முன்னம்போகி=பூசைசெய்யவருமுன்தாம்காட்டிற்சென்று ; தருமுறைமுன்புபோல=திருவமுதாக்கிக்கொடுத்தமுறைக்குமுன்வழக்கப்படி ; தனிப்பெருவேட்டையாடி = ஒப்பற்றபெரியவேட்டையாடி.—எ—று. (௧௬௬)

மாறிலூ னமுதுநல்ல மஞ்சனப் புனலுஞ்சென்னி
ஏறுநாண் மலரும்வெவ்வே றியல்பினி லமைத்துக்கொண்டு
தேறுவார்க் கமுதமான செல்வனார் திருக்காளத்தி
ஆறுசேர் சடையார்தம்மை யணுகவந் தணையாநின்றார்.

(இ-ள்.) மாறிலூனமுதும்=குற்றமற்றமாமிசமாகிய திருவமுதும்; நல்லமஞ்சனப்புனலும்=தூய்மையானதிருமஞ்சன நீரும் ; சென்னியேறுநாண்மலரும்=திருமுடியிற்சாத்துதற்குரியபூங்கொத்துக்களும் ; வெவ்வேறியல்பினிலமைத்துக்கொண்டு=தனித்தனிமுறைப்படியாக்கிக்கொண்டு ; தேறுவார்க்கமுதமானசெல்வனார் = தன்னையுணர்வார்க்குப்பேரின்பமானமுத்திச் செல்வத்தைக்கொடுப்பவராகிய ; திருக்காளத்தியாறு சேர்சடையார்தம்மை=திருக்காளத்திமலையின்கண்வாழும் கங்காநதியைத்தரித்தசடையினையுடைய சிவபிரானை ; அணுகவந்தணையாநின்றார்=அணையும்படி வருகின்றாரயினர்.—எ-று. (கசுஎ)

இவ்விரண்டும் குளகம்.

இத்தனை பொழுது தாழ்த்தே னெனவிரைந் தேகுவார்முன்
மொய்த்தபல் சகுனமெல்லா முறைமுறை தீங்குசெய்ய
இத்தகு தீயபுட்க ளீண்ட முன் னுதிரங்காட்டும்
அத்தனுக் கென்கொல்கெட்டே னடுத்ததென் றணையும்போதில்.

(இ-ள்.) இத்தனைபொழுதுதாழ்த்தேனென=இத்துணைப்போதும் சுவாமிக்கு நிவேதனம் செய்யாது தாழ்வுசெய்தேன் என்று கூறி ; விரைந்தேகுவார்முன்=விரைவிற்செல்கின்ற திண்ணனார்க்குமுன் ; மொய்த்தபல்சகுனமெல்லாம்=தொகுதியானபலசகுனப்புட்களெல்லாம் ; முறைமுறைதீங்குசெய்ய=அடிக்கடிதீக்குறிபைக்காட்ட ; இத்தகுதீயபுட்களீண்ட = இவ்விதத்தீச்சகுனங்களையுணர்த்தும்பறவைகள்வருதலால் ; முன்னுதிரங்காட்டும்=முன்னே இரத்தக்குறியைக்காட்டும்அதனால்;அத்தனுக்கென்கொல்கெட்டேனடுத்ததென்றணையும்போதில்=பிரானுக்குயாதடுத்ததோ கெட்டேனென்றிரங்கிவரும்பொழுது.—எ-று. ()

அண்ணலார் திருக்காளத்தி யடிகளார் முனிவனார்க்குத்
திண்ணனார் பரிவுகாட்டத் திருநய னத்திலொன்று
துண்ணென வுதிரம்பாய விருந்தனர் தூரத்தேயவ்
வண்ணவெஞ் சிலையார்கண்டு வல்விரைந் தோடிவந்தார்.

(இ-ள்.) அண்ணலார்திருக்காளத்தியடிகளார் = பெருமையிற்சிறந்தோராகிய திருக்காளத்தியின்கண் எழுந்தருளிய பிரானார்; முனிவனார்க்கு=சிவகோசரியாருக்கு ; திண்ணனார்பரிவுகாட்ட = திண்ணநாயனாரது அன்பின்மிகுதியைக்காட்டும்படிக்கு ; திருநயனத்திலொன்று=தம்முடையதிருக்கண்களிலொன்று ; துண்ணெனவுதிரம்பாயவிருந்தனர்=கண்டார்அச்சமுறும்படி இரத்தநீர்பாயும்படி இருந்தார் ; தூர்த்தேயவ்வண்ணவெஞ்சிலையார்கண்டு=அதைஅழகியகொடுமையான வில்லையுடைய அத்திண்ணனார் தூரத்தேகண்டு; வல்விரைந்தோடிவந்தார்=மிக்கவிரைவாய் ஓடிவந்தார்.—எ-று. (கசுக)

வந்தவர் குருதிகண்டார் மயங்கினார் வாயினன்னீர்
சிந்திடக் கையிலூனுஞ் சிலையுடன் சிதறிவீழக்
கொந்தலர் பள்ளித்தாமங் குஞ்சிநின் றலைந்துசோரப்
பைந்தழை யலங்கன்மார்பர் நிலத்திடைப் பதைத்துவீழ்ந்தார்.

(இ-ள்.) வந்தவர் குருதிகண்டார்=அவ்வாறுவந்த திண்ணனார் காளத்தியாரது (வலத்திருக்கண்ணில்) உதிரம்பெருகுவதைப்பார்த்து ; மயங்கினார்வாயினின்னீர்சிந்திட=மயங்கினார் பின்திருமஞ்சனத்துக் கமைத்தநீரானது திருவாயினின்றும்சிந்திப்போக ; கையினூனுஞ் சிலையுடன் சிதறிவீழ=கையிலிருக்கின்ற மாமிசமும்பிடித்தவில்லுடன் சிதறுண்டு நிலத்தில்வீழ ; கொந்தலர் பள்ளித்தாமம்=கொத்தாக அலர்ந்த திருப்பள்ளித்தாமமானது ; குஞ்சிநின் றலைந்துசோர=தமது குடுமியினின்றும் நழுவிநிலத்தில்விழ ; பைந்தழை யலங்கன்மார்பர்=பசிய தழைகளாலாகிய மாலையையணிந்த மார்பினையுடையதிண்ணனார் ; நிலத்திடைப் பதைத்துவீழ்ந்தார்=பூமியில் பதைபதைத்து வீழ்ந்தார்.—எ-று. (௧௭௰)

பைந்தழையலங்கன் மார்பர் என்றது அவர் என்னும் சுட்டுப்பெயர் மாத்திரையாய் நின்றது.

விழுந்தவ ரெழுந்துசென்று துடைத்தனர் குருதிவீழ்வ
தொழிந்திடக் காணார்செய்வ தறிந்தில ருயிர்த்துமீள
அழிந்துபோய் வீழ்ந்தார்தேறி யாரிது செய்தாரென்று
எழுந்தனர் திசைகளெங்கும் பார்த்தன ரெடுத்தார்வில்லும்.

(இ-ள்.) விழுந்தவரெழுந்து சென்றுதுடைத்தனர்=நிலத்தில் விழுந்த திண்ணனார் எழுந்துபோய் திருக்கண்ணினின்றும்பெருகும் உதிரத்தைத்துடைத்தார் ; குருதிவீழ்வ தொழிந்திடக்காணார்=அதனால் அத்திருக்கண்ணுதிரம் சொரியாதிருக்கக் காணாதவராய் ; செய்வதறிந்திலர்=அவ்வுதிரம் பெருகாமற்செய்வதற்குவேறொன்றையும் அறியாமல் ; உயிர்த்துமீள அழிந்துபோய்வீழ்ந்தார்=பெருமூச்செறிந்து திரும்பவருந்திச் சிறிதிடஞ்சென்று மயங்கிவிழுந்தார் ; தேறியாரிதுசெய்தாரென்று வெழுந்தனர்=மேல்தெளிவடைந்து யாரிதைச்செய்தா ரென்றெழுந்து ; திசைகளெங்கும் பார்த்தனர்=திக்குகளெங்கும் பார்த்து ; எடுத்தார்வில்லும்=வில்லையும் எடுத்தார்—எ-று. (௧௭௧)

வாளியுந் தெரிந்துகொண்டிம் மலையிடை யெனக்குமாறா
மீளிவெம் மறவர்செய்தா ருளர்கொலோ விலங்கின்சாதி
ஆளிமுன் னாகியுள்ள விளைத்தவோ வறியேனென்று
நீளிருங் குன்றச்சார னெடிதிடை நேடிச்சென்றார்.

(இ-ள்.) வாளியுந் தெரிந்துகொண்டு=அம்புகளையுந் தெரிந் தெடுத்துக்கொண்டு ; இம்மலையிடை யெனக்குமாறாச் செய்தார்=இம்மலையினிடத்து எனக்கு மாறுபட்டுச்செய்த ; மீளிவெம்மறவ ருளர்கொல்=வலியினையுடைய கொடியவேடர்கள் இருக்கின்றார்களோ (அல்லது) ; விலங்கின்சாதியாளிமுன்னாகியுள்ளவிளைத்தவோ=விலங்கின் சாதிகளுள் சிங்கம் முதலான கொடுவிலங்குகள் இவ்வாறு செய்தனவோ ; அறியேனென்று=அறியமாட்டே னென்று ; நீளிருங்குன்றச்சாரல்=நீண்டிருக்கும் பெரிய அம்மலைப்பக்கத்தில் ; நெடிதிடை நேடிச்சென்றார்=நெடுந்தூரம் தேடிப்போனார்.—எ-று. ஓ-அசை. (௧௭௨)

வேடரைக் காணார்தீய விலங்குகண் மருங்குமெங்கும்
நாடியுங் காணார்மீண்டு நாயனார் தம்பால்வந்து
நீடிய சோகத்தோடு நிறைமலர்ப் பாதம்பற்றி
மாடுறக் கட்டிக்கொண்டு கதறினார் கண்ணீர்வார.

(இ-ள்.) வேடரைக்காணார்=அங்குவேடர்களைக் காணாதவராய் ; தீயவி லங்குகண் மருங்குமெங்கு நாடியுங்காணார்=கொடியவிலங்குகளைப் பக்கத்திலெவ் விடத்தும் தேடிக்காணாமல் ; மீண்டுநாயனார் தம்பால்வந்து=திரும்பக் காளத்தி யப்பரிடத்துவந்து ; நீடிய சோகத்தோடும்=மிக்க துயரத்தோடும் ; நிறைமலர்ப் பாதம்பற்றி=நிறைந்தமலர்போலுந் திருவடிகளைப் பிடித்துக்கொண்டு ; மாடுறக கட்டிக்கொண்டு=அருகில் சேரத்திருமேனியை வளைத்துக்கட்டிக்கொண்டு ; கத றினார் கண்ணீர்வார=கண்ணீர்சோரும்படி கதறி அழுதார்—எ-று. (௧௭௩)

பாவியேன் கண்டவண்ணம் பரமனார்க் கடுத்ததென்னோ
ஆவியி னினியவெங்க ளத்தனார்க் கடுத்ததென்னோ
மேவினார் பிரியமாட்டா விமலனார்க் கடுத்ததென்னோ
ஆவதொன் றறிகிலேனா னென்செய்கே னென்றுபின்னும்.

(இ-ள்.) பாவியேன் கண்டவண்ணம்=பாவியாகியநான் கண்டதீச்சகு ணம் ; பரமனார்க் கடுத்ததென்னோ=இப்பிரானார்க்கு வந்தது யாதுகாரணமோ ; ஆவியினினிய=என்னுயிரினும் எனக்கினியராகிய ; எங்களத்தனார்க் கடுத்ததென் னோ=எங்கள்முதல்வர்க்குச்சம்பவித்தது யாதுகாரணமோ ; மேவினர்பிரியமாட் டா=தம்மையடைந்தார் பிரியக்கூடாத(பேரன்புடையராய்நிற்கும்) ; விமலனார்க் கடுத்ததென்னோ=நின்மலருக்கு உண்டாயதுயாதோ ; ஆவதொன்றறிகிலேன்= இதற்குத்தீர்வாயிருத்தல் ஒன்றை அறியேன் ; நான் என்செய்கேனென்றுபின்னு ம்=நான் என் செய்வேனென்று நினைந்து பின்னும்.—எ-று. (௧௭௪)

என்செய்தாற் றீருமோதா னெம்பிரான் றிறத்துத்தீங்கு
முன்செய்தார் தம்மைக்காணேன் மொய்கழல் வேடரென்று
மின்செய்வார் பகழிப்புண்க டீர்க்குமெய்ம் மருந்துநாடிப்
பொன்செய்தாழ் வரையிற்கொண்டு வருவனா னென்றுபோனார்.

(இ-ள்.) என்செய்தாற்றீருமோ=இக்கண்ணினின்றும்ஒழுகுகின்றஉதிர மானது என்ன செய்தால் நீங்குமோ ; எம்பிரான் றிறத்துத்தீங்கு=எமது பிரானா கியகாளத்தி நாதரிடத்துத்தீங்கினை ; முன்செய்தார் தம்மைக் காணேன் = முன் னேசெய்தவர்களை நான் கண்டிலேன் ; மொய்கழல்வேடர்=தரிசுகள் நெருங்கிய வீரக்கழலையணிந்த கால்களையுடையவேட்டுவர்கள் ; என்றுமின்செய்வார்பகழிப் புண்கடீர்க்கும்=எப்பொழுதும் ஒளிவீசுகின்ற நீண்ட அம்புகள்தைத்தபுண்களைத் தீர்த்தற்கேதுவான ; மெய்மருந்துநாடி=மெய்ம்மையானமூலிகை விசேடங்களை த்தேடி ; பொன்செய்தாழ்வரையில்=பொற்பொடிகளையுடைத்தாகிய இம்மலையடி

வாரத்தினின்றும் ; கொண்டுவெருவனுனென்றுபோனார்=நான் கொண்டுவருவே னென்றுபோனார்.—எ-று. இவ்விரண்டுங்குளகம். தான்-அசை. (௭௫)

நினைத்தனர் வேறுவேறு நெருங்கிய வனங்களெங்கும்
இனத்திடைப் பிரிந்தசெங்க ணேறெென வெருக்கொண்டெய்திப்
புனத்திடைப் பறித்துக்கொண்டு பூதநா யகன்பால்வைத்த
மனத்தினுங் கடிதுவந்து மருந்துகள் பிசைந்துவார்த்தார்.

(இ-ள்.) நினைத்தனர்வேறுவேறு = மருந்துகளைத்தேடுங்கருத்துடையா ராய்த்தனித்தனி ; நெருங்கியவனங்களெங்கும் = நெருக்கமானகாடுகளெங்கும்; இனத்திடைப்பிரிந்தசெங்கணேறென=இனத்தைப்பிரிந்தசிவந்தகண்ணையுடைய இடபத்தைப்போல ; வெருக்கொண்டெய்தி=காளத்தியார்கண்ணிற்புண்ணீர் வருவதற்கு அஞ்சிப்போய் ; புனத்திடைப்பறித்துக்கொண்டு = புனங்களில்அம் மருந்துகளைப்பறித்துக்கொண்டு ; பூதநாயகன்பால்வைத்த=பூதகணங்கட்குத்த லைவராகிய சிவபிரானிடத்துத்தாம்வைத்த ; மனத்தினுங்கடிதுவந்து=மனசிலு ம் அதிகவிரைவாய்வந்து ; மருந்துகள் பிசைந்துவார்த்தார்=அம்மருந்துகளைக்கை யிற்பிழிந்து அவர் திருக்கண்ணில்வார்த்தார்.—எ-று. (௭௬)

மற்றவர் பிசைந்துவார்த்த மருந்தினாற் றிருக்காளத்திக்
கொற்றவர் கண்ணிற்புண்ணீர் குறைபடா தொழுகக்கண்டே
இற்றையி னிலைமைக்கென்னே வினிச்செய லென்றுபார்ப்பார்
உற்றநோய் தீர்ப்பதூனுக் கூனெனு முரைமுன்கண்டார்.

(இ-ள்.) மற்றவர்பிசைந்துவார்த்தமருந்தினால்=இவ்வாறுதிண்ணநாயனார் பிழிந்துவார்த்த ஓர்மருந்தினாலும் ; திருக்காளத்திக்கொற்றவர்கண்ணிற்புண்ணீர் =திருக்காளத்தியின்கண்வாழும்பிரானுடையகண்ணினின்றும் இழிந்தகுருதியா னது ; குறைபடாதொழுகக்கண்டு=நில்லாமல் ஒழுகுதலைப்பார்த்து ; இற்றையி னிலைமைக்கு=இவ்வாறாக இவ்வுதிரம் மாறாநிலைமைக்கு ; என்னே யினிச்செய லென்று பார்ப்பார்=இனிச்செய்யவேண்டியது யாதென்று நினைந்தாராய்ப்பார்க் கின்ற திண்ணனார் ; உற்றநோய் தீர்ப்பது=உண்டானநோயைத்தீர்ப்பது ; ஊனு க்கூனெனுமுரைமுன்கண்டார்=ஊனுக்கு ஊனென்று உலகர்கூறும்பழமொழி யையுணர்ந்தார்.—எ-று. ஏ-அசை. (௭௭)

இதற்கினி யென்கணம்பா லிடந்தப்பி னெந்தையார்கண்
ணதற்கிது மருந்தாய்ப்புண்ணீர் நிற்கவு மடுக்குமென்று
மதர்த்தெழு முள்ளத்தோடு மகிழ்ந்துமுன் னிருந்துதங்கண்
முதற்சர மடுத்துவாங்கி முதல்வர்தங் கண்ணிலப்ப.

(இ-ள்.) இதற்கினியென்கணம்பாலிடந்தப்பின்=இவர்க்கு இந்நோய்தீர் தற்கு இனி என்னுடைய கண்ணை அம்பினாலிடந்து அப்பினால் ; எந்தையார்க ண்ணதற்கிதுமருந்தாய்=எமதுபிரானுடைய கண்ணுக்கு இதுவேமருந்தாய்;புண் ணீர்நிற்கவுமடுக்குமென்று=இவ்வுதிரம் நின்றுவிடவுங்கூடுமென்று ; மதர்த்தெழு முள்ளத்தோடும்=களிப்புக்கொண்டெழுந்தமனதோடு ; மகிழ்ந்துமுன்னிருந்து

=மகிழ்ந்துதிருமுன்னே இருந்து ; தங்கண்முதற்சரமடுத்துவாங்கி=தம்முடைய வலக்கண்ணைமுதலில் அம்பால்தோண்டி எடுத்து ; முதல்வர்தங்கண்ணிலப்ப= காளத்திநாதரது திருக்கண்ணிலப்ப.—எ-று. (௧௭௮)

நின்றசெங் குருதிகண்டார் நிலத்தினின் றேறப்பாய்ந்தார்
குன்றென வளர்ந்ததோள்கள் கொட்டினார் கூத்துமாடி
நன்றுநான் செய்தவிந்த மதியென நகையுந்தோன்ற
ஒன்றிய களிப்பினாலே யுன்மத்தர் போலமிக்கார்.

(இ-ள்.) நின்றசெங்குருதிகண்டார் = நிற்கின்றசிவந்தகுருதியைக்கண்டார் ; நிலத்தினின்றேறப்பாய்ந்தார்=மகிழ்ச்சியாற்பூமியினின்றும் எழுந்துபாய்ந்தார் ; குன்றெனவளர்ந்ததோள்கள்கொட்டினார்=மலைபோலவளர்ந்த புயங்களைத்தட்டினார் ; கூத்துமாடி = கூத்தையுமாடி ; நன்றுநான்செய்தவிந்தமதியென =நான்செய்த இந்த புத்தியானது நன்றாக இருந்ததென்று ; நகையுந்தோன்ற= சிரிப்புந்தோன்ற ; ஒன்றியகளிப்பினாலே=மனத்திற்கலந்த பெருமகிழ்ச்சியினால் ; உன்மத்தர்போலமிக்கார்=பயித்தியமடைந்தவர்போலமேம்பட்டார்.—எ-று. ()

வலத்திருக் கண்ணிற்றங்க ணப்பிய வள்ளலார்த
நலத்தினைப் பின்னுங்காட்ட நாயனார் மற்றைக்கண்ணில்
உலப்பில்செங் குருதிபாயக் கண்டன ருலகில்வேடர்
குலப்பெருந் தவத்தால்வந்த கொள்கையி னும்பர்மேலார்.

(இ-ள்.) வலத்திருக்கண்ணிற்றங்கண்=தமது வலக்கண்ணில்தன்னுடையவலக்கண்ணை ; அப்பியவள்ளலார்தம்=இடந்தப்பியதிண்ணனாருடைய ; நலத்தினைப்பின்னுங்காட்ட=பத்தியைப்பின்னுஞ் சிவகோசரியாருக்குக்காட்டு நிமித்தம் ; நாயனார்மற்றைக்கண்ணில்=காளத்தியப்பர்மற்ற இடக்கண்ணில் ; உலப்பில்செங்குருதிபாய=குறையாது இரத்தமானது பெருகச்செய்ய ; உலகில்வேடர் குலப்பெருந்தவத்தால் வந்த=உலகின்கண்வேடர்குலத்தார் பெருந்தவத்தினால் அவதரித்த ; கொள்கையினும்பர்மேலார்கண்டனர் = பத்திமையினால்தேவர்களினும் மேலோராகிய திண்ணனார் பார்த்தார்.—எ-று. (௧௮௦)

கண்டபின் கெட்டேனெங்கள் காளத்தி யார்கண்ணொன்று
புண்டரு குருதிநிற்க மற்றைக்கண் குருதிபொங்கி
மண்டுமேற் றிதனுக்கஞ்சேன் மருந்துகை கண்டேனின்னும்
உண்டொரு கண்ணக்கண்ணை யிடந்தப்பி யொழிப்பேனென்று.

(இ-ள்.) கண்டபின்கெட்டேன்=பார்த்தபின்பு கெட்டேனென்று இரங்கி ; எங்கள்காளத்தியார்கண்ணொன்று=எங்கள்காளத்திநாதரது கண்களில்ஒன்று; புண்டருகுருதிநிற்க=புண்பட்டுவருகின்ற இரத்தமானதுநின்றுவிட; மற்றைக்கண்குருதிபொங்கிமண்டும்=மற்ற இடக்கண் இரத்தம் பெருகிநிறைந்திருக்கும் (ஆனால்) ; மற்றிதனுக்கஞ்சேன் = இவ்வாறுபெருகுவதற்கு அஞ்சமாட்டேன் ; மருந்துகைகண்டேன்=முன் ஓர் மருந்தைக்கைகண்டயான் ; இன்னுமுண்டொருகண்=இன்னும்ஒரு கண் எனக்கு இருக்கின்றது ; அக்கண்ணை யிடந்தப்பி=அ



1 கண்ணப்பநாயனார்
2 சிவபெருமான்
3 சிவகோசரியார்

16. இடக்கண்ணினுதிரம் சொரிதலைக்கண்டுதன் காலை சுவாமிகண்ணருகில்வைத்து மற்றோர்கண்ணைப்பேர்க்க சுவாமி வெளிப்பட்டு திண்ணர்கையைப்பற்றி (கண்ணப்

17. சிவபெருமான் எனது வலப்பக்கத்திலிருப்பாயென ஆக்ஞாபித்தது.

கண்ணப்பநாயனார் மோட்சம்.

18. இவ்வற்புதத்தைக் கண்ட சிவகோசரியார் காளத்தீசர் திருவடியில் விழுந்து நமஸ்கரித்தது.

ந்த இடக்கண்ணை இடந்து அப்பி ; ஒழிப்பேனென்று=அப்புண்ணீரை நீக்குவனென்று.—எ-று. (௧௮௧)

கண்ணுதல் கண்ணிற்றங்க ணிடந்தப்பிற காணுநேர்பா
டெண்ணுவார் தம்பிரான்றன் றிருக்கண்ணி லிடக்காலூன்றி
உண்ணிறை விருப்பினோடு மொருதனிப் பகழிகொண்டு
திண்ணனார் கண்ணிலூன்றத் தரித்திலர் தேவதேவர்.

(இ-ள்.) கண்ணுதல்கண்ணில்=சிவபெருமான்திருக்கண்ணில்; தங்கணிடந்தப்பில்=தமதுதிருக்கண்ணைக்கீண்டி அப்புமிடத்து ; காணுநேர்பாடெண்ணுவார்= (தமக்குக்கண்ணில்லாமையால்கண்ணிருக்குமிடத்தைப்) பரிசத்தால் உணரும்முறைமையை எண்ணினவராய்; தம்பிரான்றன்றிருக்கண்ணில்=காளத்திநாதரது இடத்திருக்கண்ணின் அருகே ; இடக்காலூன்றி=தன் இடக்காலையூன்றி; உண்ணிறைவிருப்பினோடு=உள்ளத்து நிறைந்தபெருவிருப்பத்தோடு ; ஒருதனிப்பகழிகொண்டு = ஒப்பற்ற ஒரு அம்பினைக்கொண்டு ; திண்ணனார் கண்ணிலூன்ற=திண்ணனார் தங்கண்ணிலே இடக்கும்படி ஊன்ற ; தரித்திலர்தேவ தேவர் =தேவர்களுக்கு அதிதேவராகிய காளத்திநாதர் ஆற்றாதவரானார்.—எ-று.(௧௮௨)

செங்கண்வெள் விடையின்பாகர் திண்ணனார் தம்மையாண்ட
அங்கணர் திருக்காளத்தி யற்புதர் திருக்கையப்பாற்
றங்கண்முன் னிடக்குங்கையைத் தடுக்கமூன் றடுக்குநாக
கங்கண ரமுதவாக்கு கண்ணப்ப நிற்கவென்ற.

(இ-ள்.) செங்கண்வெள்விடையின்பாகர்=சிவந்தகண்களையுடைய வெண்மையாகிய இடபவாகனத்தை நடத்தியருளும் காளத்திநாதரும் ; திண்ணனார் தம்மையாண்டவங்கணர்=திண்ணனாரை யடிமைக்கொண்ட கருணையையுடையவரும் ; திருக்காளத்தியற்புதனார்திருக்கை=திருக்காளத்தியின்கண்வாழும்அற்புதருமாகிய பிரானார் திருக்கையானது(வெளிப்பட்டு); அம்பாற்றங்கண் முன்னிடக்குங் கையைத்தடுக்க=அம்பினால் தமது இடக்கண்ணை விரைந்து தோண்டுகின்ற திண்ணனாரது கையைத்தடுக்க ; மூன்றடுக்கு நாககங்கணரமுதவாக்கு=மூன்றுதரமாக நாககங்கணத்தையணிந்த பிரானது அமுதம்போலும் திருவாக்கானது ; கண்ணப்ப நிற்கவென்ற=கண்ணப்பனே நிற்கவென்று அருளின.—எ-று.

மூன்றடுக்கு என்றதனால் நில்லுகண்ணப்ப நில்லுகண்ணப்ப நில்லுகண்ணப்ப என அடுக்கு மூன்றாகக்கொள்க.

கானவர் பெருமானார்தங் கண்ணிடந் தப்பும்போதும்
ஊனமு தவந்தவைய ருற்றுமுன் பிடித்தபோதும்
ஞானமா முனிவர்கண்டார் நான்முகன் முதலாயுள்ள
வானவர் பூவின்மாரி பொழிந்தனர் மறைகளார்ப்ப.

(இ-ள்.) கானவர்பெருமானார்=வேடர்களுக்குத் தலைவராகிய திண்ணனார் ; தங்கண்ணிடந் தப்பும்போதும்=தமது திருக்கண்ணைத் தோண்டிச் சுவா

மிகண்ணில் அப்பும்பொழுதும் ; ஊனமுதுவந்தவையர்=அவரிடம் இறைச்சியாகிய திருவமுதை விரும்பியுண்ட சுவாமியானவர் ; உற்றுமுன் பிடித்தபோதும்=விரைந்துமுன்னே அவர் கையைப் பிடித்தபொழுதும் ; ஞானமா முனிவர்கண்டார்=ஞானத்தையுடைய பெரியமுனிவராகிய சிவகோசரியார் பார்த்து (ஐயம் நீங்கினர்) ; நான்முகன்முதலாயுள்ளவானவர்=அப்பொழுதுபிரமன் இந்திரன்முதலாகிய தேவர்கள் ; பூவின்மாரிபொழிந்தனர் மறைகளார்ப்ப = பூமழையைப் பொழிந்தார்கள் வேதங்கள் ஆரவாரிக்க.—எ-று. (கஅச)

பேறினி யிதன்மேலுண்டோ பிரான்றிருக் கண்ணில்வந்த
ஊறுகண் டஞ்சித்தங்க ணிடந்தப்ப வுதவுங்கையை
ஏறுயர்த் தவர்தங்கையாற் பிடித்துக்கொண் டென்வலத்தின்
மாறிலாய் நிற்கவென்று மன்னுபே ரருள்புரிந்தார்.

(இ-ள்.) பேறினியிதன்மேலுண்டோ = இதன்மேலுயர்ந்த பேறு ஒருவர்க்கு உளதா ; பிரான்றிருக்கண்ணில்வந்த=சிவபிரானது திருக்கண்ணில் உண்டான ; ஊறுகண்டஞ்சி=இடையூற்றைக் கண்டு பயந்து; தங்கணிடந்தப்பவுதவுங்கையை=தமதுகண்ணையிடந்து அப்புதற்குச்சாதனமாக இருந்த கண்ணப்பநாயனுர் கையை ; ஏறுயர்த்தவர்தங்கையாற் பிடித்துக்கொண்டு=இடபக்கொடியையுடைய காளத்திநாதர் தந்திருக்கரத்தாற் பிடித்துக்கொண்டு ; என்வலத்தின்மாறிலாய் நிற்கவென்று=என்னுடைய வலப்பாலில் நிகரற்ற பத்தியையுடைய கண்ணப்பனே நிற்கக் கடவையென்று ; மன்னுபேரருள்புரிந்தார்=நிலைபெற்றபெரிய திருவருளைப் புரிந்தருளினுர்.—எ-று. (கஅரு)

மங்குல்வாழ் திருக்காளத்தி மன்னனுர் கண்ணிற்புண்ணீர்
தங்கணுன் மாற்றப்பெற்ற தலைவர்தா டலைமேற்கொண்டே
கங்கைவாழ் சடையார்வாழுங் கடவூரிற் கலயனுராம்
பொங்கிய புகழின்மிக்கார் திருத்தொண்டு புகலலுற்றேன்.

(இ-ள்.) மங்குல்வாழ்திருக்காளத்தி மன்னனுர்=மேகங்கள் வாழ்கின்ற திருக்காளத்திமலையில் வீற்றிருக்குங் காளத்திநாதருடைய ; கண்ணிற்புண்ணீர்=திருக்கண்ணினின்றும் உதித்த இரத்தத்தை ; தங்கணுன் மாற்றப்பெற்ற=தந்திருக்கண்ணை இடந்தப்பிமாற்றும்படி பெற்றுக்கொண்ட ; தலைவர்தாடலைமேற்கொண்டு=கண்ணப்பநாயனுரது திருவடிகளைச் சிரசின்மேற் சூடிக்கொண்டு ; கங்கைவாழ்சடையார்வாழும்=கங்கைநதி பெருக்கெடுக்கும் சடையினையுடைய சிவபிரான் வாழ்கின்ற; கடவூரிற் கலயனுராம்=திருக்கடவூரில் குங்குலியக்கலயநாயனுரென்னும் ; பொங்கிய புகழின்மிக்கார்=மேம்பட்ட புகழிற் சிறந்தாரது; திருத்தொண்டு புகலலுற்றேன் = திருத்தொண்டினைச் சொல்லத்தொடங்கினேன்.—எ-று. ஏ - அசை. (கஅசு)

கண்ணப்பநாயனுர்புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆ திருவிருத்தம்-அருரு.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# குங்குலியக்கலயநாயனார்புராணம்.

## வேறு.

வாய்ந்தநீர் வளத்தாலோங்கி மன்னிய பொன்னிநாட்டின்
ஏய்ந்தசீர் மறையோர்வாழு மெயிற்பதி யெறிநீர்க்கங்கை
தோய்ந்தநீள் சடையார்பண்டு தொண்டர்மேல் வந்தகூற்றைக்
காய்ந்தசே வடியார்நீடி யிருப்பது கடவூராகும்.

(இ-ள்.) வாய்ந்தநீர்வளத்தாலோங்கி = சிறந்தநீர்வளத்தினால் மேம்பட்டு; மன்னியபொன்னிநாட்டின் = நிலைபெற்று விளங்காநின்ற சோழநாட்டில்; ஏய்ந்த சீர்மறையோர்வாழுமெயிற்பதி = சிறப்பினையுடைய மறையவர்கள்வாழும் மதில்சூழ்ந்த நகரமானது (யாதெனில்); எறிநீர்க்கங்கை தோய்ந்தநீள்சடையார் = அலையெறிகின்ற நீரினையுடைய கங்கைநதி தங்கிய நீண்டசடையை உடையவராகிய; பண்டுதொண்டர்மேல் வந்தகூற்றைக்காய்ந்த சேவடியார் = முன்னாளில் மார்க்கண்டேயரிடத்து எதிர்த்துவந்த யமனை உதைத்த சிவந்த திருவடியையுடைய அமிர்தகடேசர்; நீடியிருப்பது கடவூராகும் = மிகவீற்றிருந்தருளும் திருக்கடவூரென்று சொல்லப்படும்.—எ-று. (க)

வயலெலாம் விளைசெஞ்சாலி வரம்பெலா மலையின்முத்தம்
அயலெலாம் வேள்விச்சாலை யணையெலாங் கழுநீர்க்கற்றை
புயலெலாங் கமுகின்காடப் புறமெலா மதன்சீர்போற்றல்
செயலெலாந் தொழில்களாறே செழுந்திருக் கடவூரென்றும்.

(இ-ள்.) வயலெலாம் விளைசெஞ்சாலி = வயல்களெல்லாம் விளைகின்ற செந்நெற்பயிர்களும்; வரம்பெலாமலையின்முத்தம் = வயல் வரம்புகளெல்லாம் அலையினாலொதுக்கப்பட்ட முத்துக்களும்; அயலெலாம் வேள்விச்சாலை = பக்க இடங்களெல்லாம் யாகசாலைகளும்; அணையெலாங் கழுநீர்க்கற்றை = நீர்க்கால்களின் அணைகளெல்லாம் செங்கழுநீர்களுடைய தொகுதிகளும்; புயலெலாங்கமுகின்காடு = கமுகஞ்சோலைகளிடத்தெல்லாம் மேகங்களும்; அப்புறமெலாமதன்சீர்போற்றல் = அம்மருதத்தின் புறம்பெல்லாம் அந்நிலத்தின் வளங்களைச்சீர்ப்படுத்துதலும்; செயலெலாந்தொழில்களாறே = மறையவர்களது தொழில்களெல்லாம் அறுதொழில்களாயும்; செழுந்திருக்கடவூரென்றும் = செழுமையாகிய திருக்கடவூரினிடத்து எந்நாளும் உள்ளன.—எ-று. (உ)

குடங்கையி னகன்றவுண்கட் கடைசியர் குழுமியாடும்
இடம்படு பண்ணைதோறு மெழுவன மருதம்பாடல்
வடம்புரி முந்நூன்மார்பின் வைதிகமறையோர் செய்கைச்
சடங்குடை யிடங்கடோறு மெழுவன சாமம்பாடல்.

(இ-ள்.) குடங்கையின கன்றவுண்கட்கடைசியர்=உள்ளங்கையிலும் விசாலமாகிய மைதீட்டியகண்களையுடைய வயல்மாதர்கள் ;குழுமியாடுமிடம் படுபண்ணைதோறும்=கூடிக்குரவைக்கூத்தாடுகின்றவிசாலமுடையவயல்கள்தோறும் ; எழுவனமருதம்பாடல்=மருதப்பண்ணின் பாடல்உண்டாவன ; வடம்புரிமுந்நூன்மார்பின் வைதிகமறையோர்=இழையாகச்சேர்த்து முறுக்கிய பூணூலையணிந்த மார்பினையுடைய வைதிகமறையவர்களது ; செய்கைச்சடங்குடை யிடங்கடோறும் =செய்கையாகிய வேள்வித்தொழிலையுடைய இடங்களெல்லாம் ; எழுவனசாமம்பாடல்=சாமவேதத்தின் ஒலிஉண்டாவன.—எ-று. (௩)

துங்கநீண் மருப்பின்மேதி படிந்துபால் சொரிந்தவாவிச்
செங்கயல் பாய்ந்துவாசக் கமலமுந் தீம்பாறு
மங்குறோய் மாடச்சாலை மருங்கிறை யொதுங்குமஞ்சும்
அங்கவை பொழிந்தநீரு மாகுதிப் புகைப்பாறும்.

(இ-ள்.) துங்கநீண் மருப்பின்மேதிபடிந்து=உயர்வாகியநீண்டகொம்பினையுடையஎருமைகள் நீரிற்படிந்து; பால்சொரிந்த வாவிச்செங்கயல்பாய்ந்து=பாலைச்சொரிந்த வாவிகளிலுள்ள சிவந்தகெண்டை மீன்கள்பாய்ந்து ; வாசக்கமலமுந் தீம்பாறும்=வாசனைகமழ்கின்ற தாமரைமலர்களும்மதுரமானபால்மணக்கும்; மங்குறோய் மாடவீதிமருங்கு=விண்ணளவுக்கும் உயர்ந்த மண்டபங்களையுடைய வீதியினிடத்து ; இறையொதுங்கு மஞ்சுமங்கவை பொழிந்தநீரும் = சிறுபொழுது தங்கும் மேகமும் அம்மேகங்கள் துளித்த நீர்த்துளிகளும் ; ஆகுதிப்புகைப்பாறும்=மறையவர் ஆகுதிசெய்யும் புகையிடத்துக்கமழும்.—எ-று. (௪)

மருவிய திருவின்மிக்க வளம்பதி யதனில்வாழ்வார்
அருமறை முந்நூன்மார்பி னந்தணர் கலயரென்பார்
பெருநதி யணியும்வேணிப் பிரான்கழல் பேணிநாளும்
உருகிய வன்புகூர்ந்த சிந்தையா ரொழுக்கமிக்கார்.

(இ-ள்.) மருவியதிருவின்மிக்க=நிலைபெற்ற செல்வத்தாற்சிறந்த ; வளம்பதியதனில் வாழ்வார்=வளத்தினையுடைய அந்நகரத்தில் வாழ்கின்றவர் ; அருமறை முந்நூன்மார்பின்=அரியவேதத்தில்விதித்தமுந்நூலணிந்த மார்பினையுடைய ; அந்தணர்=மறையவர் ;பெருநதியணியும்வேணி=பெருமையாகிய கங்கைநதியைத்தரித்த சடைமுடியையுடைய ; பிரான்கழல்பேணி=சிவபிரானது வீரக்கழலையணிந்த திருவடியைத்தியானித்து ; நாளுமுருகிய வன்புகூர்ந்த=நாள்தோறும் இளகிய அன்புமிகுந்த ; சிந்தையாரொழுக்கமிக்கார்= மனதையுடையவர்

ஒழுக்கத்திற்சிறந்தவர் (அவர்யாரெனில்) ; கலயரென்பார்=குங்குலியக்கலயநாயனாரென்று சொல்லப்படுவோர்.—எ-று. (ரு)

பாலனு மறையோன்பற்றப் பயங்கெடுத் தருளுமாற்றான்
மாலுநான் முகனுங்காணு வடிவுகொண் டெதிரேவந்து
காலனா ருயிர்செற்றார்க்குக் கமழ்ந்தகுங் குலியத்தூபஞ்
சாலவே நிறைந்துவிம்ம விடும்பணி தலைநின்றுள்ளார்.

(இ-ள்.) பாலனுமறையோன்பற்ற=சிறுவனாகிய மார்க்கண்டேயர் அச்சத்தால் தம்மைத்தழுவிக்கொள்ள; பயங்கெடுத்தருளுமாற்றால்=அவரது அச்சத்தை நீக்கியருளும்வண்ணம் ; மாலுநான்முகனுங்காணு=திருமால்பிரமன்என்னும் இருவரும் தேடிக்காணாத ; வடிவுகொண்டெதிரேவந்து=திருவுருவத்தைத் தாங்கிக்கொண்டு அவரெதிரேவந்து ; காலனாருயிர்செற்றார்க்கு=யமனுடைய உயிரைப்போக்கிய அமிர்தகடேசருக்கு; கமழ்ந்தகுங்குலியத்தூபம்=நறுமணங்கமழ்கின்ற குற்குலுவாலாகிய தூபத்தை ; சாலவேநிறைந்து விம்மவிடும்பணி=மிகவும் நிறைந்துதிருவாலயத்தில் பரம்பும்படிஇடுகின்ற திருப்பணியில் ; தலைநின்றுள்ளார்=நின்றொழுகுகின்றவர்—எ-று. (௬)

கங்கைநீர் கலிக்குஞ்சென்னிக் கண்ணுத லெம்பிராற்குப்
பொங்குகுங் குலியத்தூபம் பொலிவுறப் போற்றிச்செல்ல
அங்கவ ரருளினாலே வறுமைவந் தடைந்தபின்னுந்
தங்கணா யகர்க்குத்தாமுன் செய்பணி தவாமையுய்த்தார்.

(இ-ள்.) கங்கைநீர்கலிக்குஞ்சென்னி=கங்கைநதியானது முழங்குகின்ற சிரசினையும் ; கண்ணுதலெம்பிராற்கு=நெற்றிக்கண்ணினையும் உடையஎமதுபிரானாகிய அமிர்தகடேசருக்கு ; பொங்குகுங்குலியத்தூபம்=பரம்புகின்றகுற்குலுவாலாகிய தூபத்தை ; பொலிவுறப்போற்றிச்செல்ல=பொலிவுறும்படி நாள்தோறும்செய்து ஒழுகிவர ; அங்கவரருளினாலே=சிவபிரான்திருவருளினாலே ; வறுமைவந்தடைந்தபின்னும் = தமக்கு வறுமையெய்தியபின்னும் ; தங்கணாயகர்க்குத்தாமுன்செய்பணி=தங்கள் பிராணர்க்குத் தாம்முன்செய்துவந்த திருப்பணியை ; தவாமையுய்த்தார்=தவறாமல் நடத்தினார்.—எ-று. (எ)

இந்நெறி யொழுகுநாளில் இலம்பாடு நீடுசெல்ல
நன்னில முற்றும்விற்று நாடியவடிமை விற்றும்
பன்னெடுந் தனங்கண்மாளப் பயின்மனை வாழ்க்கைதன்னில்
மன்னிய சுற்றத்தோடு மக்களும் வருந்தினார்கள்.

(இ-ள்.) இந்நெறியொழுகுநாளில்=இவ்வாறுதாம்செய்யுந் திருப்பணியில் வழுவாமல் நடத்திவரும் நாளில் ; இலம்பாடு நீடுசெல்ல=வறுமையானது அதிகப்பட; நன்னிலமுற்றும்விற்றும்=நல்லவிளை நிலங்களை எல்லாம் விற்றும் ; நாடியவடிமைவிற்றும் = தம்மையடைந்த அடிமையாட்களை விற்றும் ; பன்னெடுந்தனங்கண்மாள=பலவகையானபெரிய செல்வங்களெல்லாம் அழிந்துவிட (அத

ளுல்) ; பயின்மனைவாழ்க்கைதன்னில் = தாம்பழகிய இல்வாழ்க்கை நிலையில் ; மன்னிய சுற்றத்தோடும் = நிலைபெற்ற சுற்றத்தாரோடு ; மக்களும் வருந்தினார்கள்=புத்திரர்களும் பசிநோயால் வருத்தமடைந்தார்கள்.—எ-று. (அ)

யாதொன்று மில்லையாகி யிருபக லுணவுமாறிப்
பேதுறு மைந்தரோடும் பெருகுசுற் றத்தைநோக்கிக்
காதல்செய் மனைவியார்தங் கணவனார் கலயனார்கை
கோதின்மங் கலநூற்றாலி கொடுத்துநெற் கொள்ளுமென்றார்.

(இ-ள்.) யாதொன்றுமில்லையாகி=உணவுசெய்தற்கேதுவாய் யாதொரு பொருளும்இல்லையாய் (அதனால்) ; இருபகலுணவுமாறி=இரண்டுநாளளவும்உணவில்லாமல் ; பேதுறுமைந்தரோடும்=வருந்துகின்ற புத்திரர்களோடும் ; பெருகுசுற்றத்தைநோக்கி= மிக்கசுற்றத்தாரைப்பார்த்து; காதல் செய்மனைவியார்=அவர்கள் மேல்விருப்பத்தையுடையமனைவியார்; தங்கணவனார்கலயனார்கை=தங்கொழுனராகியகுங்குலியக்கலயநாயனாரது திருக்கரத்தில் ; கோதின்மங்கலநூற்றாலிகொடுத்து=குற்றமற்ற மங்கலகரமானநூலிற்கோத்ததிருமங்கிலியத்தைக்கொடுத்து ; நெற்கொள்ளுமென்றார்=இதைமாறி நெல்லைவாங்கிவருவீரென்றார்.-எ-று.()

அப்பொழு ததனைக்கொண்டு நெற்கொள்வா னவரும்போக
ஒப்பில்குங் குலியங்கொண்டோர் வணிகனு மெதிர்வந்துற்றான்
இப்பொதி யென்கொலென்றார்க் குள்ளவா றியம்பக்கேட்டு
முப்புரி வெண்ணூன்மார்பர் முகமலர்ந் திதனைச்சொன்னார்.

(இ-ள்.) அப்பொழுததனைக்கொண்டு = அவர்கொடுத்தபொழுது மங்கிலியத்தை வாங்கிக்கொண்டு ; நெற்கொள்வானவரும்போக=நெல்லைவாங்கிவரும்படி அந்நாயனாரும் அங்காடிவழியிற்செல்ல ; ஒப்பில்குங்குலியங்கொண்டு=உயர்ந்த கு குலுப்பொதியை எடுத்துக்கொண்டு ; ஓர் வணிகனுமெதிர்வந்துற்றான் =ஒருசெட்டியும் எதிரேவந்தான்; இப்பொதியென்கொ லென்றார்க்கு=இப்பொதியாதென்று வினவின நாயனாருக்கு ; உள்ளவாறியம்பக்கேட்டு=அவன் உள்ளவண்ணம் உயர்ந்த குங்குலியப்பொதியென்று சொல்லக்கேள்வியுற்று ; முப்புரி வெண்ணூன் மார்பர்=முப்புரியாக வெள்ளியபூணூலையணிந்த மார்பினையுடைய குங்குலியக்கலயநாயனார் ; முகமலர்ந்திதனைச் சொன்னார் = முகமலர்ச்சியோடு இவ்வாறு சொன்னார்.—எ-று. (கo)

ஆறுசெஞ் சடைமேல்வைத்த வங்கணர் பூசைக்கேற்ற
நாறுகுங் குலியமீதே னானின்று பெற்றேனல்ல
பேறுமற் றிதன்மேலுண்டோ பெறாப்பேறு பெற்றுவைத்து
வேறினிக் கொள்வதென்னென் றுரைத்தெழும் விருப்பின்மிக்கார்.

(இ-ள்.) ஆறுசெஞ்சடைமேல்வைத்த = சிவந்தசடையின்மேற்கங்கையை வைத்தருளிய ; அங்கணர்பூசைக்கேற்ற=சிவபிரானதுபூசனைக்கியைந்த ; நாறுகுங்குலியமீதேல்=வாசனைகமழ்கின்ற குற்குலுஇதுவாயின் ; நானின்று பெ




1. குங்குலியக்கலயர் 3 மக்கள்)
2 மனைவி 4 திருவீரட்டானர்

5. நாயனாமனை)
6. குங்குலியப்பொதி)

குங்குலியக்கலயர் திருவீரட்டானருக்கு குங்குலியத்திருத்தொண்டுபுரிந்துவர சிவபிரான் வறுமைமேலிடச்செய்ய பசிபொறுத்து உணவுக்கு தன்மனைவி தத்தமாங்கிலியத்தை வழியில்கண்ட குங்குலியப்பொதிக்களித்து திருத்தொண்டிலிருக்க எம்பெருமான்நாயனர்மனைநிரம்ப நிதியுதவிபாலடிசில் உண்டு துன்மொழிந்திருப்பா யென்றருளியது.

ற்றேன்=நான் இன்றைக்கிதனை வாங்கப்பெற்றேன் ; நல்லபேறுமற்றிதன்மேலு ண்டோ=இதனினும் நல்லபேறுமிக்கது இல்லை; பெரும்பேறு பெற்றுவைத்து= பெறுதற்கரியபேறாகிய இதனைவாங்கிக்கொண்டு; வேறினிக்கொள்வதென்னென் றுரைத்து=வேறுஇனி அங்காடியிற்சென்று வாங்குவது என்னவென்று கூறி ; எழும் விருப்பின்மிக்கார்=எழுகின்ற பேரவாவிற் சிறந்தவரானார்.—எ-று. (௧௧)

மனைவியாரும் புதல்வர்களும் தானும் பசிநலியவறுமையடைந்தவிடத்து என்பார் இன்றென்றும், உடலோடுயிர் கூடியடையும் பயன் சிவதன்மமேயாத லின் நல்லபேறிதன்மேலுண்டோ வென்றும், பெறுதற்கரியபேறாகிய இதனை ப்பெற்றுக்கொண்டதன்மேல் நெற்கொள்வதிற் பயனென்னென்பார் வேறினிக் கொள்வதென்னென்றுங்கூறினர். இந்நாயனார்தம்பசிநலிவும் புதல்வர் சுற்றத் த்தார் முதலியோர் பசிநலிவும் நோக்காது தாம்செய்யும் சிவபணி ஒன்றிலே ஒரு ப்பட்டு நின்று உலகியலைப் பேதித்தவாறுகாண்க.

பொன்றரத் தாருமென்று புகன்றிட வணிகன்றானும்
என்றர விசைந்ததென்னத் தாலியைக் கலயரீந்தார்
அன்றவ னதனை வாங்கி யப்பொதி கொடுப்பக்கொண்டு
நின்றிலர் விரைந்துசென்றார் நிறைந்தெழு களிப்பினோடும்.

(இ-ள்.) பொன்றரத்தாருமென்றுபுகன்றிட = பொன்னைக்கொடுக்கின் றேன் இக்குற்குலுவை நீர் எனக்குக்கொடுமென்று நாயனார்கூற ; வணிகன்றானு மென்றரவிசைந்ததென்ன=அச்செட்டியும் எத்தனைபொன்கொடுத்தற்கு நீர் இ சைந்தீர் என்றுசொல்ல ; தாலியைக்கலயரீந்தார்=தாலியைக் குங்குலியக்கலய நாயனார் கொடுத்தார் ; அன்றவனதனைவாங்கி=அன்றைக்கு அவன் அத்தாலியை வாங்கி ; அப்பொதிகொடுப்பக்கொண்டு = அந்தப்பொதியைக்கொடுக்கத்தான்வா ங்கிக்கொண்டு ; நின்றிலர்விரைந்து சென்றார்=அங்குநில்லாமல் விரைவாய் ஆலய த்தைநோக்கிச்சென்றார்; நிறைந்தெழுகளிப்பினோடு = உள்ளத்து நிறைந்து எழா நின்றபெருமகிழ்ச்சியோடு.—எ-று. உம்-அசை. (௧௨)

விடையவர் வீரட்டானம் விரைந்துசென் றெய்தியென்னை
உடையவ ரெம்மையாளு மொருவர்தம் பண்டாரத்தில்
அடைவுற வொடுக்கியெல்லா மார்ந்தெழு மன்புபொங்கச்
சடையவர் மலர்த்தாள்போற்றி யிருந்தனர் தமக்கொப்பில்லார்.

(இ-ள்.) விடையவர் வீரட்டானம்=இடபத்தைவாகனமாகக் கொண்ட அமிர்தகடேசரது திருவீரட்டானத்தை ; விரைந்துசென்றெய்தி = விரைவாக அடைந்து ; என்னையுடையவர்=என்னை அடிமையாக உடையவரும் ; எம்மை யாளுமொருவர்தம்=எம்மை ஆளாகக்கொள்ளும் ஒருவருமாகிய சிவபிரானது ; பண்டாரத்திலடைவுறவொடுக்கியெல்லாம் = கருவேலத்தில் எல்லாக்குங்குலியத் தையும் முறையாகவைத்து ; ஆர்ந்தெழுமன்புபொங்க=தந்திருவுள்ளத்து நிறை ந்தெழாநின்ற பேரன்பானதுமேம்பட ; சடையவர் மலர்த்தாள்போற்றியிருந்த னர் = சிவபிரானது மலர்போலும் திருவடிகளை வணங்கித் தூபப்பணிசெய்து

கொண்டிருந்தார் ; தமக்கொப்பில்லார்=தமக்குவேறொப்பாரையில்லாத குங்குலியக்கலய நாயனார்.—எ-று. (௧௩)

உடையவனுக்கு உயிர் உடைப்பொருளென்பது விளக்கிய என்னையுடையவரென்றும், அவ்வுடைப்பொருள்களாகிய உயிர்களை அடிமைக்கொண்டருளும் முறைமைதோன்ற ஆளுமென்றுங்கூறினர்.

அன்பரங் கிருப்பநம்ப ரருளினா லளகைவேந்தன்
றன்பெரு நிதியந்தூர்த்துத் தரணிமே னெருங்கவெங்கும்
பொன்பயில் குவையுநெல்லும் பொருவில்பல் வளனும்பொங்க
மன்பெருஞ் செல்வமாக்கி வைத்தனன் மனையினீட.

(இ-ள்.) அன்பரங்கிருப்ப=குங்குலியக்கலய நாயனார் (அவ்வாறு தூபப்பணிசெய்துகொண்டு) ஆலயத்திலிருக்க; நம்பரருளினால்=(அவரது பத்திமையையுணர்ந்த)சிவபிரான் திருவருளினால் ; அளகைவேந்தன்றன் பெருநிதியம்=அளகைக்கதிபனாகிய குபேரன் தன்னுடைய (கருவேலத்திலிருக்கும்) பெரியநிதியங்களை ; தரணிமேனெருங்கத்தூர்த்து=பூமியின்மேல் (குங்குலியக்கலய நாயனார்மனையில்)நெருங்கும்படி நிறைத்து ; எங்கும் பொன்பயில்குவையும்=எவ்விடங்களினும் பொன்னாலாகிய குவியலும் ; நெல்லும் பொருவில்பல்வளனும்பொங்க=நெற்குவியல்களும் ஒப்பற்ற பலவளங்களும் மேம்பட ; மன்பெருஞ்செல்வமாக்கி=நிலைபெற்ற பெரிய செல்வமுண்டாகும்படி ; வைத்தனன் மனையினீட = அவர்மனையில் மிகவைத்தான்.—எ-று. (௧௪)

மற்றவர் மனைவியாரு மக்களும் பசியால்வாடி
அற்றைநா ளிரவுதன்னி லயர்வுறத் துயிலும்போதி
னற்றவக் கொடியனார்க்குக் கனவிடை நாதனல்கத்
தெற்றென வுணர்ந்துசெல்வங் கண்டபின் சிந்தைசெய்வார்.

(இ-ள்.) மற்றவர் மனைவியாரும்=அவ்வாறொழுகும் அந்நாயனாரதுமனைவியும் ; மக்களும் பசியால்வாடி=பிள்ளைகளும் பசியால்வருந்தி ; அற்றைநாளிரவுதன்னில்=அந்நாளிரவில் ; அயர்வுறத்துயிலும்போதில்=பசிவருத்தத்தால் அயர்ந்து நித்திரைசெய்யும்பொழுது ; நற்றவக்கொடியனார்க்கு = நல்லதவக்கொடிபோலும் அவர் மனைவியாருக்கு ; கனவிடைநாதனல்க = கனவின்கண் சிவபிரான் (செல்வமுண்டானவகைமையை) அருளிச்செய்ய ; தெற்றெனவுணர்ந்து=விரைவாக நித்திரையொழிந்து ; செல்வங்கண்டபின் சிந்தைசெய்வார்= (சொப்பனத்தில் அருளியவாறு தங்கள்மனையில்) செல்வங்களிருக்கக்கண்டபின்பு இவ்வாறு நினைப்பாராய்.—எ-று. (௧௫)

கொம்பனா ரில்லமெங்குங் குறைவிலா நிறைவிற்காணும்
அம்பொனின் குவையுநெல்லு மரிசியு முதலாயுள்ள
எம்பிரா னருளாமென்றே யிருகரங் குவித்துப்போற்றித்
தம்பெருங் கணவனார்க்குத் திருவமு தமைக்கச்சார்ந்தார்.

(இ-ள்.) கொம்பனார்=கொம்புபோன்ற திருமேனியையுடைய குங்குலியக்கலயநாயனார் மனைவியார் ; இல்லமெங்குங்குறைவிலாநிறைவிற்காணும்=தம் வீடுமுழுதும் குறைவில்லாமல் நிறைந்திருக்கக்காணப்படும் ; அம்பொனின்குவையுநெல்லும்=அழகியபொற்குவையும் நெல்லுக்குவையும் ; அரிசியுமுதலாயுள்ள= அரிசிக்குவையும் முதலாயுள்ளபொருள்கள் ; எம்பிரானருளாமென்று = எமது சிவபிரான் திருவருளால் உண்டாயினவென்று ; இருகரங்குவித்துப்போற்றி=இரண்டுகைகளையும் குவித்துத் துதித்து ; தம்பெருங்கணவனார்க்கு=தமது பெருமையினையுடைய நாயனாராகிய கணவர்க்கு ; திருவமுதமைக்கச்சார்ந்தார்=திருவமுது அமைக்கும்படி பாகசாலையை அடைந்தார்.—எ-று. (௧௬)

இவ்விரண்டுங்குளகம்.

கண்டபின்கொம்பனார் சிந்தைசெய்வாராய்ச் சார்ந்தார் என இயையும்.

காலனைக் காய்ந்தசெய்ய காலனார் கலயனாராம்
ஆலுமன் புடையசிந்தை யடியவ ரறியுமாற்றாற்
சாலநீ பசித்தாயுன்றன் றடநெடு மனையினண்ணிப்
பாலினின் னடிசிலுண்டு பருவர லொழிகவென்றார்.

(இ-ள்.) காலனைக்காய்ந்த செய்யகாலனார்=யமனையுதைத்த சிவந்ததிருவடியையுடையசிவபிரான்; கலயனாராமாலுமன் புடையசிந்தையடியவரறியுமாற்றால்=குங்குலியக்கலயநாயனாராகியபரந்தபோன்பையுடையமனசோடுகூடியஅடியாரறியும் வண்ணம்(சிவலிங்கத்தினிடமாய்வெளிப்பட்டு) ; சாலநீபசித்தாயுன்றன்றடநெடுமனையினண்ணி=நீமிகப்பசித்திருக்கின்றாய்உன்னுடைய விசாலமானபெரியவீட்டிற்சென்று ; பாலினின்னடிசிலுண்டு=பாலோடுகூடிய இனிய அன்னத்தைப்புசித்து; பருவர லொழிக வென்றார்=உன்பசித்துன்பத்தைநீக்கிக்கொள்வாயாக என்றருளிச்செய்தார்.—எ-று. (௧௭)

தன்பணி நீக்கிமுதல்வன் பணியேபணியாகக்கொண்டுநிற்கும்முறைமையைக்கண்டுமனையிற் செல்வமுண்டாக்கிவெளிப்பட்டிவ்வாறருளிச்செய்தனரென்க.

கலையனா ரதனைக்கேளாக் கைதொழு திறைஞ்சிக்கங்கை
அலைபுனற் சென்னியார்த மருண்மறுத் திருக்கவஞ்சித்
தலைமிசைப் பணிமேற்கொண்டு சங்கரன் கோயினின்று
மலைநிகர் மாடவீதி மருங்குதம் மனையைச்சார்ந்தார்.

(இ-ள்.) கலையனாரதனைக்கேளா = குங்குலியக்கலயநாயனார் சிவபிரான் அருளியதிருவாக்கைக்கேட்டு ; கைதொழுதிறைஞ்சி=கைகூப்பிவணங்கிநின்று ; கங்கையலைபுனற்சென்னியார்தம்=அலைவீசுகின்றநீர்மயமானகங்கையை அணிந்த திருமுடியையுடையபிரானாரது; அருண்மறுத்திருக்கவஞ்சி=திருவருளைமறுத்து அங்குவசித்தற்கு அச்சமுற்று ; தலைமிசைப்பணிமேற்கொண்டு=அவர்கட்டளையிட்டபணியைச்சிரசின் மேற்கொண்டு ; சங்கரன்கோயினின்றும்=சிவபிரானது திருக்கோயிலினின்றும் ; மலைநிகர்மாடவீதிமருங்கு=மலையையொத்தமாடவீதியின்கணுள்ள ; தம்மனையைச்சார்ந்தார்=தம்வீட்டையடைந்தார்.—எ-று. (௧௮)

மறுத்திருக்கஅஞ்சினென்றதனால் தாம்செய்யும் பணிநியோமம்அளவும்முற்றச்செய்யாது இடையேவிட்டுச்சென்றாரென்க.

இல்லத்திற் சென்றுபுக்கா ரிருநிதிக் குவைகளார்ந்த
செல்வத்தைக் கண்டுநின்று திருமனை யாரைநோக்கி
வில்லொத்த நுதலாயிந்த விளைவெலா மென்கொலென்ன
அல்லொத்த கண்டனெம்மா னருடர வந்ததென்றார்.

(இ-ள்.) இல்லத்திற்சென்றுபுக்கார் = நாயனார்தம்வீட்டிற்புகுந்தருளினார்; இருநிதிக்குவைகளார்ந்த = அவ்விடத்துப்பெரியநிதிக்குவைகளாகநிறைந்திருக்கின்ற; செல்வத்தைக்கண்டுநின்று=செல்வத்தைப்பார்த்துநின்று; திருமனையாரைநோக்கி=தமதுதிருமனைவியாரைப்பார்த்து; வில்லொத்தநுதலாய்=விற்போலும்நெற்றியையுடையபெண்ணே; இந்தவிளைவெலாமென்கொலென்ன = இப்பெற்றியாகிய சம்பத்துக்களெல்லாம் எப்படியுண்டாயிற்றென்றுவினவ; அல்லொத்தகண்டனெம்மான்=அவர் இருள்போலுங் கரியகண்டத்தையுடைய எமதுசிவபிரான்; அருடரவந்ததென்றார்=திருவருள்கொடுக்க எமக்குக்கிடைத்ததென்றுசொன்னார்.—எ-று. (௧௯)

மின்னிடை மடவார்கூற மிக்கசீர்க் கலயனார்தா
மன்னிய பெருஞ்செல்வத்து வளமலி சிறப்பைநோக்கி
என்னையு மாளுந்தன்மைக் கெந்தையெம் பெருமானீசன்
றன்னரு ளிருந்தவண்ண மென்றுகை தலைமேற்கொண்டார்.

(இ-ள்.) மின்னிடைமடவார்கூற = மின்போலும் இடையினையுடைய அவர்மனைவியார் இவ்வாறுகூற; மிக்கசீர்க்கலயனார்=மிக்கசிறப்பினையுடைய குங்குலியக்கலயநாயனார்; தாம்மன்னிய பெருஞ்செல்வத்து=தாம் அடைந்த நிலைபேறுடைய பெரியசெல்வத்தின்; வளமலிசிறப்பைநோக்கி=வளமைநிறைந்த சிறப்பைப் பார்த்து; என்னையு மாளுந்தன்மைக்கு = எளியேனையும் ஆட்கொண்டருளும் முறைமைக்கு; எந்தையெம்பெருமானீசன்றன்=எமதுபிதாவும் எம்பெருமானுமாகிய சிவபிரானது; அருளிருந்தவண்ணமென்று = திருவருளிருந்தவாறிதுவென்று; கைதலைமேற்கொண்டார்=தமது திருக்கரங்களைச் சிரமேற்குவித்து வணங்கினார்.—எ-று. (௨0)

பதுமநற் றிருவின்மிக்கார் பரிகலந் திருத்திக்கொண்டு
கதுமெனக் கணவனாரைக் கண்ணுதற் கன்பரோடும்
விதிமுறை தீபமேந்தி மேவுமின் னடிசிலூட்ட
அதுநுகர்ந் தின்பமார்ந்தா ரருமறைக் கலயனார்தாம்.

(இ-ள்.) பதுமநற்றிருவின்மிக்கார்=தாமரைமலரில்வீற்றிருக்கும் திருமகளினும் சிறந்த குங்குலியக் கலயநாயனார் மனைவியார்; பரிகலந்திருத்திக்கொண்டு=(திருவமுதுசெய்வித்ததற்குரிய)பரிகலங்களைச் சுத்திசெய்துகொண்டு; கதுமெனக்கணவனாரை=விரைவாகத்தன்கணவராகிய குங்குலியக்கலயநாயனாரை;

கண்ணுதற்கன்பரோடும் = சிவபிரான் அடியார்களோடும்; விதிமுறைதீபமே ந்தி = வழிபாடுசெய்யும் முறைப்படி தீபாராதனைசெய்து; மேவுமின்னடிசிலூட்ட=விரும்பத்தக்க இனிமையாகிய அன்னத்தை உண்பிக்க; அது நுகர்ந்தின்ப மார்ந்தார்=அப்பாலடிசிலையுண்டு இன்பமடைந்தார்; அருமறைக்கலயனார்=அரியவேதங்களையுணர்ந்த குங்குலியக்கலயநாயனார்.—எ-று. (௨௧)

பரிகலமாவது:—பொன்வெள்ளி முதலிய வற்றாலாய இலையும் வாழையின்மிகச்சுருள் விரியாத இலையுமாம். பரிகலந்திருத்தி என்றதனால் தலசுத்திசெய்து மேற்சொல்லிய இலைகளையிட்டுக் கறியமுது படைத்தலுங்கொள்க.

ஊர்தொறும் பலிகொண்டுய்க்கு மொருவன தருளினாலே
பாரினி லார்ந்தசெல்வ முடையராம் பண்பினீடிச்
சீருடை யரிசிநல்ல செழுங்கறி தயிர்நெய்பாலால்
ஆர்தரு காதல்கூர வடியவர்க் குதவுநாளில்.

(இ-ள்.) ஊர்தொறும் பலிகொண்டுய்க்கும்=ஊர்கள்தோறும் ஐயமேற்றுத்தன்திருமேனியைவாழச்செய்யும்; ஒருவனதருளினாலே=ஒருவராகிய சிவபிரானது திருவருளினாலே; பாரினிலார்ந்த செல்வமுடையராம் பண்பினீடி= நிலவுலகத்தில் நிறைந்தசெல்வத்தையுடையராயிருக்கும் நிலைமையிற்சிறந்து; சீருடையரிசி நல்லசெழுங்கறி=சிறந்த செந்நெலரிசியும் நல்லசெழுமையானகறியும்; தயிர்நெய்பாலால்=தயிரும்நெய்யும்பாலும் ஆகிய இவைகளால்; ஆர்தருகாதல்கூர=உண்ணத்தக்க விருப்பானது மிகும்படி; அடியவர்க்குதவுநாளில்=சிவனடியார்களுக்கு அமுதுசெய்வித்து வரும்நாளில்.—எ-று. (௨௨)

சீருடையரிசி என்றதனால் நொய்யும் நுறுங்குங்களைந்த முனைமுறியா அரிசி என்க.

செங்கண்வெள் ளேற்றின்பாகன் றிருப்பனந் தாளின்மேவும்
அங்கணன் செம்மைகண்டு கும்பிட வரசனார்வம்
பொங்கித்தன் வெழமெல்லாம் பூட்டவும் நேர்நில்லாமைக்
கங்குலும் பகலுந்தீராக் கவலையுற் றழுங்கிச்செல்ல.

(இ-ள்.) செங்கண்வெள்ளேற்றின்பாகன்=சிவந்தகண்களையுடைய வெண்மையாகிய இடபத்தைவாகனமாகக்கொண்டருள்பவராகிய; திருப்பனந்தாளின்மேவுமங்கணன்=திருப்பனந்தாள் என்னுந்திருப்பதியில் வீற்றிருந்தருளும் சடையப்பநாதர்; செம்மைகண்டுகும்பிட=முன்போல் நேராயிருக்கும் முறைமையைக்கண்டு தரிசிக்கும்படி; அரசனார்வம்பொங்கி = சோழராசன் ஆசைமிகுந்து; தன்வேழமெல்லாம் பூட்டவுநேர்நில்லாமை=தன்னுடைய யானைகளையெல்லாம் பிணிக்கப்பட்ட பூங்கச்சிற்பூட்டியிழுக்கவும் நேர்நில்லாமையினால்; கங்குலும்பகலுந் தீராக்கவலையுற்றழுங்கிச்செல்ல=இரவும்பகலும் நீங்காத விசனமடைந்து அதனால் வருந்திச்செல்ல.—எ-று. (௨௩)

தாடகையென்னும் பார்ப்பினிதிருமஞ்சனமாட்டி மாலைசார்த்துங்கால் உடைசிறிது நழுவ அவ்வுடையை இருமுழங்கையாலும் இடுக்கிக்கொண்டு மாலையைப்பிடித்துநிற்க அவள் மானங்காக்கும்படி அப்பொழுது திருமேனியைச்சாய்த்து மாலைசூடிக்கொண்டமையால் அதுவே திருமேனிவளைந்ததற்குக் காரணமென்க.

மன்னவன் வருத்தங்கேட்டு மாசறு புகழின்மிக்க
நன்னெறிக் கலயனார்தா நாதனை நேரேகாணும்
அந்நெறி தலைநின்றானென் றரசனை விரும்பித்தாமு
மின்னெறித் தனையவேணி விகிர்தனை வணங்கவந்தார்.

(இ-ள்.) மன்னவன் வருத்தங்கேட்டு = சோழராசனுடைய வருத்தத்தைக் கேள்வியுற்று ; மாசறுபுகழின்மிக்க = குற்றமற்ற புகழினாற்சிறந்த ; நன்னெறிக்கலயனார்தாம்=நன்மார்க்கத்தையுடைய குங்குலியக்கலயநாயனார் ; நாதனைநேரேகாணும் = சடையப்பரை நேரேதரிசிக்கும் ; அந்நெறிதலைநின்றானென்று=முயற்சியிலிருக்கின்றானென்று ; அரசனைவிரும்பித்தாமும்=அச்சோழராசனைக்காண விரும்பித்தாமும்; மின்னெறித்தனையவேணிவிகிர்தனை=மின்விளங்கினாற்போற் பிரகாசிக்கும் சடையப்பநாதரை ; வணங்கவந்தார்=வணங்கும்படிக்குவந்தார்.—எ-று. (உச)

மழுவுடைச் செய்யகையர் கோயிலின் மருங்குசென்று
தொழுதுபோந் தன்பினோடுந் தொன்மறை நெறிவழாமை
முழுதுலகினையும்போற்ற மூன்றெரி புரப்போர்வாழுஞ்
செழுமலர்ச் சோலைவேலித் திருப்பனந் தாளைச்சேர்ந்தார்.

(இ-ள்.) மழுவுடைச் செய்யகையர்=மழுவாயுதத்தை யேந்திய சிவந்த திருக்கரத்தையுடைய அமிர்தகடேசரது ; கோயிலின்மருங்குசென்று=ஆலயத்திற்சென்று ; தொழுதுபோந்தன்பினோடும்=அன்பினோடும் வணங்கி விடைபெற்றுக்கொண்டு மீண்டு ; தொன்மறை நெறிவழாமை=பழமையாகிய வேதநெறிதவறாமல் ; முழுதுலகினையும்போற்ற = உலகம்முழுவதையும் காக்கும்பொருட்டு; மூன்றெரிபுரப்போர்வாழும்=முத்தீயை வளர்க்கும் மறையவர்கள் வாழ்கின்ற ; செழுமலர்ச்சோலைவேலி=செழுமையான மலர்கள்நிறைந்த சோலையைவேலியாகவுடைய ; திருப்பனந்தாளைச்சேர்ந்தார்=திருப்பனந்தாளென்னுந் திருப்பதியை அடைந்தார்.—எ-று. (உரு)

காதலா லரசனுற்ற வருத்தமுங் களிற்றினோடும்
தீதில்வன் சேனைசெய்யுந் திருப்பணி நேர்படாமை
மேதினி மிசையேயெய்த்து வீழ்ந்திளைப் பதுவுநோக்கி
மாதவக் கலயர்தாமு மனத்தினில் வருத்தமெய்தி.

(இ-ள்.) காதலாலரசனுற்ற வருத்தமும்=சிவபிரானை நேரேதரிசிக்கவேண்டுமென்னும் விருப்பால் சோழராசன் அடைந்த மனத்துயரும் ; களிற்றினோ




திருப்பனந்தாளில் சாய்ந்திருந்த சிவலிங்கப்பெருமானை அரசன் யானையாலும் நிமிர்க்கமுடியாததை நாயனார் தன்மனக்கயிற்றால் நிமிர்த்து திருக்கடவூரை அடைந்து, திருஞானசம்பந்தசுவாமி திருநாவுக்கரசுசுவாமி இவர்களைக்கண்டு திருவமுதளித்தது.

டும் நீதில்வன்சேனை=யானைகளோடு குற்றமில்லாத வலியசேனைகள்; செய்யுந்திருப்பணிநேர்படாமை=தாஞ்செய்யுந்திருப்பணியானது முடியாமையால்; மேதினிமிசையே யெய்த்து=நிலத்தின்மேல் எய்த்து ; வீழ்ந்திளைப்பதுவுநோக்கி=விழுந்து இளைத்து நிற்பதையும்பார்த்து ; மாதவக்கலயர்தாமும்=பெரிய தவத்தையுடைய குங்குலியக்கலயநாயனாரும் ; மனத்தினில்வருத்தமெய்தி = தம்முடைய திருவுள்ளத்து வருத்தமடைந்து.—எ-று. (உசு)

சேனையு மானைபூண்ட திரளுமெய்த் தெழாமைநோக்கி
யானுமிவ் விளைப்புற்றெய்க்கு மிதுபெற வேண்டுமென்று
தேனலர் கொன்றையார்தந் திருமேனி பூங்கச்சேய்ந்த
மானவன் கயிறுபூண்டு கழுத்தினால் வருந்தலுற்றார்.

(இ-ள்.) சேனையுமானைபூண்டதிரளும்=சேனைகளும் பூங்கச்சிற்பிணித்தயானைக்கூட்டங்களும் ; எய்த்தெழாமைநோக்கி = இழுத்து அதனால் இளைப்படைந்து நிலத்தினின்று எழாதிருப்பதைப்பார்த்து ; யானுமிவ்விளைப் புற்றெய்க்கும் = அடியேனும் இவ்வாறான இளைப்பையடைந்து அதனால் எய்த்திருக்கும் ; இதுபெறவேண்டுமென்று=இதனையடையவேண்டுமென்று ; தேனலர்கொன்றையார்தந்திருமேனி=தேன்விண்டு அலர்ந்த கொன்றைமாலையைத்தரித்த சடையப்பநாதரது திருமேனியில் ; பூங்கச்சேய்ந்தமானவன் கயிறுபூண்டு=பூங்கச்சோடுகூடிய பெரியவலியகயிற்றைச் சுற்றிக்கொண்டு ; கழுத்தினால் வருந்தலுற்றார்=கழுத்தினாலிழுத்துவருந்தினார்.—எ-று. (உஎ)

நண்ணிய வொருமையன்பி னாருறு பாசத்தாலே
திண்ணிய தொண்டர்பூட்டி யிளைத்தபின் திறம்பிநிற்க
ஒண்ணுமோ கலயனார்த மொருப்பாடு கண்டபோதே
அண்ணலார் நேரேநின்றா ரமரரும் விசும்பிலார்த்தார்.

(இ-ள்.) நண்ணியவொருமையன்பின்=நாயனாருள்ளத்துதித்த ஒருப்பட்ட அன்போடு ; நாருறுபாசத்தாலே=நாராலாகியகயிற்றால் ; திண்ணியதொண்டர் பூட்டியிளைத்தபின்=பத்திவலியையுடைய குங்குலியக்கலய நாயனார் தங்கழுத்திற்பூட்டி அதனால் இளைப்படைந்தபின்பு ; திறம்பிநிற்கவொண்ணுமோ=அவரதுபத்தியைப்பிழைத்துநிற்றற்குப்பிரானார்க்கு அமையுமோ; கலயனார்தமொருப்பாடுகண்டபோதே=குங்குலியக்கலயநாயனாரது பத்தியின் ஒருப்பாட்டைக்கண்டவுடன் ; அண்ணலார் நேரேநின்றார்=சடையப்பநாதர் திருமேனிநிமிர்ந்து தரிசனங்கொடுத்தார் ; அமரரும் விசும்பிலார்த்தார்=தேவர்களும் ஆகாயத்தில் ஆரவாரித்தார்கள்.—எ-று. (உஅ)

ஒருப்பட்ட பத்தியுடையார் கருத்தின் வழிமுடிப்பாராதலில் திறம்பி நிற்கவொண்ணுமோ என்றார்.

பார்மிசை நெருங்கவெங்கும் பரம்பின பயில்பூமாரி
தேர்மலி தானைமன்னன் சேனையுங் களிறுமெல்லாங்
கார்பெறு கானம்போலக் களித்தன கைகள்கூப்பி
வார்கழல் வேந்தன்றொண்டர் மலரடி தலைமேல்வைத்து.

(இ-ள்.) பார்மிசைநெருங்கவெங்கும்=(அப்பொழுது)நிலவுலகத்தின்கண் எங்கும் நெருங்கும்படி ; பரம்பினபயில் பூமாரி=தேவர்கள்சொரிந்த பூமழைகள் பரம்பின ; தேர்மலிதானைமன்னன்=தேரோடுகூடியதானைகளையுடைய அரசனது ; சேனையுங்களிறுமெல்லாம்=சேனையும் யானையும் ஆகிய எல்லாம் ; கார்பெறு கானம்போல=மழைபொழியப்பெற்றகாடுபோல; களித்தன=களிப்படைந்தன; கைகள்கூப்பி வார்கழல்வேந்தன்=கைகளைக்குவித்து வாராற்கட்டிய வீரக்கழலை யணிந்த சோழராசன் ; தொண்டர்மலரடிதலைமேல்வைத்து = குங்குலியக்கலய நாயனாருடையமலர்போலுந் திருவடிகளைச் சிரசின்மேற் சூடிக்கொண்டு.—எ-று.

விண்பயில் புரங்கள்வேவ வைதிகத் தேரின்மேருத்
திண்சிலை குனியநின்றார் செந்நிலை காணச்செய்தீர்
மண்பகுந் தவனுங்காணா மலரடி யிரண்டும்யாரே
பண்புடை யடியாரல்லாற் பரிந்துநேர் காணவல்லார்.

(இ-ள்.) விண்பயில்புரங்கள்வேவ = ஆகாயத்திற் சஞ்சரித்த முப்புரங்களும் எரியும்படி ; வைதிகத்தேரில்=வேதரூபமான தேரினிடத்து ; மேருத்திண்சிலை குனியநின்றார்=மேருவாகிய திண்ணிய வில்லானது வளையும்படி நின்ற சிவபிரானுடைய ; செந்நிலைகாணச்செய்தீர் = நேராய்நிற்கும் நிலைமையைக் காணும்படி செய்தீர் ; மண்பகுந் தவனுங்காணா=மண்ணை அளந்த திருமாலும் தேடிக்காணாத ; மலரடியிரண்டும்=அவரது மலர்போலுந் திருவடிகளிரண்டையும் ; பண்புடை யடியாரல்லால்=நற்குணங்களையுடைய அடியார்களேயன்றி; பரிந்து நேர் காணவல்லார்யார் = விரும்பிநேரிற்காணவல்லவர்கள் யார் ஒருவருமில்லை.—எ-று. ஏ - அசை. (௬௦)

என்றுமெய்த் தொண்டர்தம்மை யேத்தியங் கெம்பிரானுக்
கொன்றிய பணிகண்மற்று முள்ளன பலவுஞ்செய்து
நின்றவெண் கவிகைமன்ன னீங்கவு நிகரிலன்பர்
மன்றிடை யாடல்செய்யு மலர்க்கழல் வாழ்த்திவைகி.

(இ-ள்.) என்றுமெய்த்தொண்டர்தம்மையேத்தி=இவ்வாறாகமெய்ம்மையான குங்குலியக்கலயநாயனாரைப் புகழ்ந்து ; அங்கெம்பிரானுக் கொன்றியபணிகள்=அவ்விடத்துச் சிவபிரானுக்கேற்ற திருப்பணிகளும் ; மற்றுமுள்ளன பலவுஞ்செய்து=வேறுள்ளன பலவற்றையும் செய்து ; நின்றவெண் கவிகைமன்னனீங்கவும்=நிலைபெற்ற வெண்மையான கொற்றக்குடையினையுடைய சோழராசன் தம் ஊருக்குப்போகவும் ; நிகரிலன்பர் = ஒப்பற்ற குங்குலியக்கலயநாய

னார்; மன்றிடையாடல்செய்யும்=பொன்னம்பலத்தின்கண் நிருத்தஞ்செய்தருளு கின்ற; மலர்க்கழல் வாழ்த்திவைகி=திருவடிகளைத்துதித்து அங்கிருந்து.—எ-று.

சிலபகல் கழிந்தபின்பு திருக்கட வூரினண்ணி
நிலவுதம் பணியிற்றங்கி நிகழுநாள் நிகரில்காழித்
தலைவராம் பிள்ளையாருந் தாண்டகச் சதுரராகும்
அலர்புக ழரசுங்கூட வங்கெழுந் தருளக்கண்டு.

(இ-ள்.) சிலபகல்கழிந்தபின்பு=சிலநாள்சென்றபின்பு; திருக்கடவூரி னண்ணி = திருக்கடவூரென்னும் திருப்பதிக்குவந்து; நிலவுதம்பணியிற்றங்கி நிகழுநாள்=விளங்குகின்ற தூபப்பணிசெய்தலில் நிலைபெற்று வாழ்கின்றநாளில்; நிகரில்காழித்தலைவராம் பிள்ளையாரும்=ஒப்பில்லாத சீர்காழித்தலைவராகிய ஆளு டையபிள்ளையாரும்; தாண்டகச்சதுரராகு மலர்புகழரசும் = திருத்தாண்டகச் சதுரரென்னும் ஆண்டவரசும்; கூடவங்கெழுந்தருளக்கண்டு=ஒருங்கு அத்தல த்திற்கு எழுந்தருளிவரக்கண்டு.—எ-று. (௯௨)

மாறிலா மகிழ்ச்சிபொங்க வெதிர்கொண்டு மனையிலெய்தி
ஈறிலா வன்பின்மிக்கார்க் கின்னமு தேற்குமாற்றால்
ஆறுநற் சுவைகளோங்க வமைத்தவ ரருளேயன்றி
நாறுபூங் கொன்றைவேணி நம்பர்த மருளும்பெற்றார்.

(இ-ள்.) மாறிலாமகிழ்ச்சிபொங்க=நிகரற்றமகிழ்ச்சிமேம்பட்ட; எதிர் கொண்டு மனையிலெய்தி=அவர்களை எதிர்கொண்டு அழைத்து வீட்டிற்குவந்து; ஈறிலாவன்பின்மிக்கார்க்கு=கெடாத அன்பிற்சிறந்த அவ்விருவர்க்கும்; இன்ன முதேற்குமாற்றால் = இனிய திருவமுதைப் பொருந்தும் வகையால்; ஆறுநற்சு வைகளோங்கவமைத்து=அறுசுவைகளும் குறைவுபடாமற்செய்து; அவரருளே யன்றி=அவர்கள் திருவருளேயல்லாமல்; நாறுபூங்கொன்றைவேணி=வாசனைக மழ்கின்ற பொலிவாகிய கொன்றைப்பூமாலையைச்சூடிய சடைமுடியையுடைய; நம்பர்தமருளும்பெற்றார்=சிவபிரான் திருவருளையும்பெற்றார். - எ-று. (௯௩)

கருப்புவில் லோனைக்கூற்றைக் காய்ந்தவர் கடவூர்மன்னி
விருப்புறு மன்புமேன்மேன் மிக்கெழு வேட்கைகூர
ஒருப்படு முள்ளத்தன்மை யுண்மையாற் றமக்குநேர்ந்த
திருப்பணி பலவுஞ்செய்து சிவபத நிழலிற்சேர்ந்தார்.

(இ-ள்.) கருப்புவில்லோனை = கரும்புவில்லையுடைய மன்மதனையும்; கூற்றைக்காய்ந்தவர்=யமனையும் கோபித்த சிவபிரான் (வீற்றிருந்தருளும்); கட வூர்மன்னி=திருக்கடவூரில் வசித்து; விருப்புறுமன்பு=விருப்பத்தையுண்டா க்கும் பேரன்பானது; மேன்மேன்மிக்கெழுவேட்கைகூர=மேலும்மேலும் அதி கரித்தற்கேதுவான ஆசையுண்டாக; ஒருப்படுமுள்ளத்தன்மையுண்மையால்= ஒருப்பாடான பத்திமையானது உண்டாயிருத்தலினால்; தமக்குநேர்ந்த = தங்க

ருத்திற்கிசைந்த ; திருப்பணிபலவுஞ்செய்து = பல திருப்பணிகளையும்செய்து ; சிவபதநிழலிற்சேர்ந்தார் = சிவபிரானது திருவடிநிழலையடைந்தார்.—எ-று. (ருச)

தேனக்க கோதைமாதர் திருநெடுந் தாலிமாறிக்
கூனற்றண் பிறையினர்க்குக் குங்குலியங் கொண்டுய்த்த
பான்மைத்திண் கலயனாைப் பணிந்தவ ரருளினாலே
மானக்கஞ் சாறர்மிக்க வண்புகழ் வழுத்தலுற்றேன்.

(இ-ள்.) தேனக்ககோதைமாதர் = தேனனது விளங்குகின்ற மாலையையணிந்த தன்பத்தினியாரது; திருநெடுந்தாலிமாறி = (நெற்கொள்ளக்கொடுத்த) அழகியபெரிய தாலியைவிற்று ; கூனற்றண்பிறையினர்க்கு = வளைந்த குளிர்ச்சியான இளம்பிறையைமுடித்த சிவபிரானுக்கு ; குங்குலியங்கொண்டுய்த்த = குங்குலியத்தைவாங்கி அத்திருப்பணியைச்செய்த ; பான்மைத்திண்கலயனாை = குணத்தையுடைய திண்ணிய குங்குலியக்கலய நாயனாை ; பணிந்தவரருளினாலே = வணங்கிஅவர் திருவருளினால் ; மானக்கஞ்சாறர் = மானக்கஞ்சாற நாயனாரது ; மிக்கவண்புகழ் வழுத்தலுற்றேன் = மேலான அடியார்க்குக்கொடுக்கும் கொடையாலாகிய புகழைச்சொல்லத் தொடங்கினேன்.—எ-று. (ருரு)

குங்குலியக்கலய நாயனார் புராணம் முற்றிற்று.

ஆக-திருவிருத்தம்-அஎ0.

திருச்சிற்றம்பலம்.

---

## மானக்கஞ்சாறநாயனார்புராணம்.

மேலாறு செஞ்சடைமேல் வைத்தவர்தாம் விரும்பியது
நூலாறு நன்குணர்வார் தாம்பாடு நேரன்மையது
கோலாறு தேன்பொழியக் கொழுங்கனியின் சாறொழுகுங்
காலாறு வயற்கரும்பின் கமழ்சாறூர் கஞ்சாறூர்.

(இ-ள்.) கோலாறுதேன்பொழிய = கோற்றேன்கள் கொம்பின்வழியே சொரிய ; கொழுங்கனியின் சாறொழுகும் = அதனோடு கொழுமையான பழங்களின் சாறு ஒழுகுகின்ற ; காலாறு வயற்கரும்பின் = வாய்க்கால்வழியே வயலிடத்துள்ள கரும்பினது ; கமழ்சாறூர்கஞ்சாறூர் = வாசனை கமழும் சாறுபாய்கின்ற கஞ்சாறூரானது ; மேலாறுசெஞ்சடைமேல் வைத்தவர்தாம் விரும்பியது = சிவந்தசடைமுடியின்மேல் தேவருலகத்திலிருக்கும் கங்கையைவைத்தருளிய சிவபிரான் விரும்பப்பட்டது ; நூலாறு நன்குணர்வார் தாம்பாடுநேரன்மையது = நூல்வழிகளை நன்குணர்ந்த புலவர்கள்பாடும் பெருமையை உடையது.—எ-று. (க)

கஞ்சாறூர் மேலாறு செஞ்சடைமேல் வைத்தவர்தாம் விரும்பியது என்றதனால் வைப்புத்தலங்களி லொன்றெனக.

கண்ணீலக் கடைசியர்கள் கடுங்களையிற் பிழைத்தொதுங்கி
உண்ணீர்மைப் புணர்ச்சிக்கண் ணுறைத்துமலர்க் கண்சிவக்குந்
தண்ணீர்மென் கழுநீர்க்குத் தடஞ்சாலி தலைவணங்கு
மண்ணீர்மை நலஞ்சிறந்த வளவயல்க ளுளவயல்கள்.

(இ-ள்.) கண்ணீலக் கடைசியர்கள் = நீலமலர்போலும் கண்களையுடையவயல்மாதர்கள்; கடுங்களையிற் பிழைத்தொதுங்கி = பிடுங்கிய களையினின்றும் தப்பி ஒதுங்கி; உண்ணீர்மைப் புணர்ச்சிக்கண்ணுறைத்து =உள்ளே நிலவுகின்ற நீர்மையாகிய புணர்ச்சியிடத்துப் பிணங்கி; மலர்க்கண்சிவக்கும்=பூவாகிய கண்கள் சிவப்படையும்; தண்ணீர்மென்கழுநீர்க்கு = குளிர்ச்சியையுடைய மிருதுவான செங்கழுநீர் மலராகிய நாயகிக்கு; தடஞ்சாலி தலைவணங்கும் = வளர்ந்த நெற்பயிராகிய நாயகன் (பிணக்குத் தீர்க்கும்படி) தலையால் வணங்குகின்ற; மண்ணீர்மை நலஞ்சிறந்த=நிலவளத்தாற் சிறந்த; வளவயல்க ளுளவயல்கள்=வளத்தினையுடையவயல்கள் அயலில் உள்ளன.—எ-று. (உ)

நீர்மைப்புணர்ச்சி என்பதற்கு நீரின் சம்பந்தமென்றும் பொருள்கொள்க. சாலியாகிய கணவன் வணங்குதற்குச் சிலேடைவகையால் உள்ளத்தின்கண் நிகழும் புணர்ச்சிக்கண்போந்த ஊடல் ஏதுவாகக்கொள்க.

புயல்காட்டுங் கூந்தல்சிறு புறங்காட்டப் புனமயிலின்
இயல்காட்டி யிடையொதுங்க வினங்காட்டு முழத்தியர்கண்
முயல்காட்டு மதிதோற்கு முகங்காட்டக் கண்மூரிக்
கயல்காட்டுந் தடங்கள்பல கதிர்காட்டுந் தடம்பணைகள்.

(இ-ள்.) புயல்காட்டுங்கூந்தல் = மேகம்போலும் கருநிறத்தைக்காட்டுகின்ற அளகமானது; சிறுபுறங்காட்ட=பிடரின்பக்கத்துக்காட்ட; புனமயிலினியல்காட்டி யிடையொதுங்க=புனத்திற் சஞ்சரிக்கின்ற மயிலினது சாயலைக்காட்டி இடையானது ஒசிய; இனங்காட்டு முழத்தியர்கள்=தமது குழாத்தைக்காட்டி நிற்கும் வயல்மாதர்கள்; முயல்காட்டு மதிதோற்கு முகங்காட்ட = முயற்களங்கத்தைத் தன்னிடத்துக் காட்டிநிற்கும் நிறைமதியைத் தோற்கச்செய்யும் முகத்தைக்காட்ட; கண்மூரிக் கயல்காட்டுந் தடங்கள்பல = கண்களை வலியையுடைய கெண்டைமீன்கள் காட்டுகின்ற வாவிகள் பல; கதிர்காட்டுந் தடம்பணைகள்=நெற்கதிர்களைக் காட்டுகின்ற விசாலமாகிய மருதநிலங்களில்.—எ-று. ()

சேறணிதண் பழனவயற் செழுநெல்லின் கொழுங்கதிர்போய்
வேறருகு மிடைவேலிப் பைங்கமுகின் மிடறுரிஞ்சி
மாறெழுதிண் குலைவளைப்ப வண்டலை தண்டலையுழவர்
தாறரியு நெடுங்கொடுவா ளனையவுள தனியிடங்கள்.

(இ-ள்.) சேறணிதண் பழனவயல்=சேற்றால் அழகுசெய்யும் குளிர்ச்சியையுடைய சிறந்த வயலின்கணுள்ள; செழுநெல்லின் கொழுங்கதிர்போய்=செழுமையான நெற்பயிர்களது கொழுமையுற்ற கதிர்கள்சென்று; வேறருகு மிடை

வேலி=வேருக அருகில்நெருங்கிய வேலியாகிய ; பைங்கமுகின் மிடறுரிஞ்சி = பசிய கமுகினது கழுத்தை உரோஞ்சி ; மாறெழுதிண் குலைவளைப்ப=மாருக எழுந்த வலிய அதன்குலைகளை வளைத்துநிற்றல் ; வண்டலைதண்டலையுழவர்=வண்டுகள் சஞ்சரிக்கின்ற மருதநிலச்சோலையையுடைய பள்ளர்கள் ; தாறரியு நெடுங்கொடுவா ளனையவுள=கமுகின் குலைகளை அரிகின்ற நெடிய அரிவாளையொத்தன வாயுள்ள ; தனியிடங்கள்=தனித்த அநேகஇடங்களில்.—எ-று. (௪)

பாங்கின்மணிப் பலவெயிலுஞ் சுலவெயிலு முளமாட
ஞாங்கரணி துகிற்கொடியு நகிற்கொடியு முளவரங்கம்
ஓங்குநிலைத் தோரணமும் பூரணகும் பமுமுளவாற்
பூங்கணைவீ தியிலணைவோர் புலமறுகுஞ் சிலமறுகு.

(இ-ள்.) பாங்கின்மணிப் பலவெயிலும்=தன்னிடத்துப் பலமணிகளினது ஒளிகளையும் ; சுலவெயிலு முளமாடம்=சூழ்ந்த மதில்களையும் மாடங்கள் உள்ளன ; ஞாங்கரணிதுகிற்கொடியும்=முற்பக்கத்தில் அலங்கரிக்கப்பட்ட கொடியாடைகளையும் ; நகிற்கொடியு முளவரங்கம்=முலைகளையுடைய மாதர்களையும் சபைகள் உள்ளன ; ஓங்குநிலைத்தோரணமும்=உயர்ந்தநிலையாகக்கட்டப்பட்ட மகரதோரணங்களையும் ; பூரணகும்பமும்=நிறைகுடங்களையும் ; பூங்கணைவீதியிலணைவோர் = மாரவேள்மலர்க்கணைகளைத்தொடுக்கும் வீதியில் அடைந்தவர்களது ; புலமறுகுஞ்சிலமறுகுஉள=கட்புலன்கள் மயங்குதற்குரியசிலவீதிகள் உள்ளன.—எ-று. ஆல்-அசை. (௫)

மனைசாலு நிலையறத்தின் வழிவந்து வளம்பெருகும்
வினைசாலு முழவுதொழின் மிக்கபெருங் குடிதுவன்றிப்
புனைசாயன் மயிலனையார் நடம்புரியப் புகன்முழவங்
கனைசாறு மிடைவீதிக் கஞ்சாறு விளங்கியதால்.

(இ-ள்.) மனைசாலு நிலையறத்தின் வழிவந்து=இல்லறமென்று சொல்லுகின்ற நிலைமையை உடைய அறநெறியில்வந்து ; வளம்பெருகும் வினைசாலும்=செல்வம்பெருகுதற்கேதுவான தொழிலிற்சிறந்த ; உழவுதொழின் மிக்கபெருங்குடிதுவன்றி=உழவுதொழிலால் மேம்பட்ட பெருகிய குடிகள்நெருங்கி ; புனைசாயன் மயிலனையார் நடம்புரிய=அலங்கரிக்கும் மயிலையொத்த சாயலையுடைய மகளிர்கள் நாட்டியஞ்செய்ய ; புகன்முழவங் கனைசாறுமிடைவீதி = புகழத்தக்க முழவப்பறையானது ஒலிக்கின்ற விழாவானது நெருங்கிய வீதியினையுடைய ; கஞ்சாறுவிளங்கியது=கஞ்சாறுஎன்னும் திருப்பதியானது விளக்கமடைந்திருந்தது.—எ-று. ஆல்-அசை. (௬)

அப்பதியிற் குலப்பதியா யரசர்சே னுபதியாஞ்
செப்பவருங் குடிவிளங்கத் திருவவதா ரஞ்செய்தார்
மெய்ப்பொருளை யறிந்துணர்ந்தார் விழுமிய வேளாண்மைகுடிமை
வைப்பனைய மேன்மையினர் மானக்கஞ் சாறனார்.

(இ-ள்.) அப்பதியிற் குலப்பதியாய்=அவ்வூரில்வாழும் வேளாண்குலத்திற்குமுதல்வராய்; அரசர்சேனபதியாம் = அரசர்களுக்குச் சேனபதியென்று; செப்பவருங் குடிவிளங்க = சொல்லவருகின்ற குடியின்கண் விளங்கும்படி ; திருவவதாரஞ்செய்தார்=திருவவதாரஞ் செய்தருளினார் (அவர்யாரெனில்) ; மெய்ப்பொருளை யறிந்துணர்ந்தார் = சிவபிரானாகிய பரம்பொருளை ஆராய்ந்துணர்ந்தவர் ; விழுமியவேளாண்குடிமை=மேலான வேளாளகுலத்திற்கு ; வைப்பனைய மேன்மையினார் = புதையல்போன்ற மேன்மையுடையவர் ; மானக்கஞ்சாறனார் =மானக்கஞ்சாறநாயனாரென்னும் பெயரையுடையவர்.—எ-று. (எ)

பணிவுடைய வடிவுடையார் பணியினொடும் பனிமதியின்
அணிவுடைய சடைமுடியார்க் காளாகும் பதம்பெற்ற
தணிவில்பெரும் பேறுடையார் தம்பெருமான் கழல்சார்ந்த
துணிவுடைய தொண்டர்க்கே யேவல்செயுந் தொழில்பூண்டார்.

(இ-ள்.) பணிவுடைய வடிவுடையார்=அடியார்களை வணங்கும் இயல்புடைய திருவுருவுடையார் ; பணியினொடும் பனிமதியின்=பாம்பினோடு குளிர்ந்த இளம்பிறையும் ; அணிவுடைய சடைமுடியார்க்கு = அணிந்திருக்கும் சடைமுடியையுடைய சிவபிரானுக்கு ; ஆளாகும் பதம்பெற்ற = அடிமையாகும் நிலைமையைப்பெற்ற ; தணிவில்பெரும்பேறுடையார்=குறைவற்ற பெரும்பேற்றையுடையவர் ; தம்பெருமான் கழல்சார்ந்த = தமதுமுதல்வராகிய சிவபிரானது வீரக்கழலையணிந்த திருவடிகளையே தமக்குச் சார்பாகக்கொண்ட; துணிவுடைய தொண்டர்க்கே = உறுதிப்பாடுடைய அடியார்களுக்கே ; ஏவல்செயுந்தொழில் பூண்டார் = பணிவிடைசெய்கின்ற அறத்தையே மேற்கொண்டொழுகுகின்றவர்.—எ-று. (அ)

மாறில்பெருஞ் செல்வத்தின் வளம்பெருக மற்றதெலாம்
ஆறுல்வுஞ் சடைக்கற்றை யந்தணர்த மடியாராம்
ஈறில்பெருந் திருவுடையா ருடையாரென் றியாவையுநேர்
கூறுவதன் முன்னவர்தங் குறிப்பறிந்து கொடுத்துள்ளார்.

(இ-ள்.) மாறில்பெருஞ்செல்வத்தின்வளம்பெருக=கெடுதலில்லாதபெரியசெல்வத்தின் உயர்வுநாடோறும்விருத்தியடைய ; மற்றதெலாம் = அச்செல்வமுழுதும் ; ஆறுலவுஞ்சடைக்கற்றையந்தணர்தம் = கங்காநதியுலாவுகின்றசடைத்தொகுதியையுடையசிவபிரானது ; அடியவராமீறில்பெருந்திருவுடையாருடையாரென்று = அடியவரென்னும் அழியாப் பெருஞ்செல்வத்தையுடையவரேஉடையவரென்று; இயாவையுநேர்கூறுவதன்முன்=எல்லாப்பொருள்களையும் அவ்வடியவர்கள் இது வேண்டுமென்று எதிரேசென்று சொல்லுவதற்கு முன்னே ; அவர்தங்குறிப்பறிந்து கொடுத்துள்ளார் = அவர் கருத்தறிந்துகொடுக்கின்றவர்.—எ-று. (௯)

நித்தியமாகிய முத்தித்திருவசித்தற்கு இடமாயிருத்தலில் அடியாரை ஈறில் பெருந்திருவுடையாரென்றார். அவர் அச்செல்வத்தையுடையாரென்றதனால்

அனித்தியமாகியபொருள் நித்தியமாய பயனைக்கொடுத்து நிலவுதற்கு வைப்பிடம் அவர்களே என்று நாயனருணர்ந்தவர் என்றாராயிற்று.

விரிகடல்சூழ் மண்ணுலகில் விளங்கியவித் தன்மையராம்
பெரியவர்க்கு முன்சிலநாள் பிள்ளைப்பே றின்மையினல்
அரியறியா மலர்க்கழல்க ளறியாமை யறியாதார்
வருமகவு பெறற்பொருட்டு மனத்தருளால் வழுத்தினர்.

(இ-ள்.) விரிகடல் சூழ்மண்ணுலகில்=விரிந்தகடலாற் சூழப்பட்ட நிலவுலகத்தின்கண் ; விளங்கியவித்தன்மையராம் பெரியவர்க்கு=விளக்கமான இப்பத்தியையுடையராயிருக்கும் மானக்கஞ்சாறநாயனருக்கு ; முன்சிலநாள் பிள்ளைப்பேறின்மையினல் = சிலநாள்வரையும் புத்திரவுற்பத்தியில்லாமையினல் ; அரியறியாமலர்க்கழல்கள்=திருமாலினல் முன்தேடியறியாத மலர்போலும் வீரக்கழலையணிந்த திருவடிகளை ; அறியாமையறியாதார்=அறியாதிருத்தலையறியாதார் ; வருமகவுபெறற்பொருட்டு=(தம்குலம் விருத்தியடைதற்கு ஏதுவாக) வரும் பிள்ளைப்பேற்றைப் பெறும்பொருட்டு ; மனத்தருளால் வழுத்தினர்=தம்முள்ளத்து அன்போடு சுவாமியைத்தோத்திரஞ்செய்தார்.—எ-று. (௧௦)

குழைக்கலையும் வடிகாதிற் கூத்தனு ரருளாலே
மழைக்குதவும் பெருங்கற்பின் மனைக்கிழத்தி யார்தம்பால்
இழைக்கும்வினைப் பயன்சூழ்ந்த விப்பிறவிக் கொடுஞ்சூழல்
பிழைக்குநெறி தமக்குதவப் பெண்கொடியைப் பெற்றெடுத்தார்.

(இ-ள்.) குழைக்கலையும் வடிகாதிற்கூத்தனுரருளாலே = குண்டலம் அலைகின்ற நீண்டகாதினையுடைய நடேசப்பிரானது திருவருளினல் ; மழைக்குதவும் பெருங்கற்பின் = மழைவேண்டுழிபெய்விக்கும் பெருங்கற்பினையுடைய ; மனைக்கிழத்தியார்தம்பால்=அவர் திருமனைவியாரிடத்து ; இழைக்கும் வினைப்பயன்சூழ்ந்த = முற்பிறப்பிற்செய்த வினைப்பயனை அனுபவித்தற்கு ஏதுவான ; இப்பிறவிக்கொடுஞ்சூழல் = இந்தப்பிறவியாகிய கொடியகாட்டை ; பிழைக்குநெறிதமக்குதவ= பிழைத்து உய்யும் நெறியைத்தமக்குக்கொடுக்கும்படி ; பெண்கொடியைப் பெற்றெடுத்தார்=கொடிபோன்ற ஒரு பெண்குழந்தையைப் பெற்றெடுத்துக்கொண்டார்.—எ-று. குழைக்கு-என்பதில் கு-அசை. (௧௧)

பிறந்தபெரு மகிழ்ச்சியினற் பெருமூதூர் களிசிறப்பச்
சிறந்தநிறை மங்கலதூ ரியமுழங்கத் தேவர்பிரான்
அறந்தலைநின் றவர்க்கெல்லா மளவில்வளத் தருள்பெருக்கிப்
புறந்தருவார் போற்றிசைப்பப் பொற்கொடியை வளர்க்கின்றார்.

(இ-ள்.) பிறந்த பெருமகிழ்ச்சியினல்=குழந்தைபிறந்த பெரியமகிழ்ச்சி காரணமாக ; பெருமூதூர்களிசிறப்ப=பெரியபழமையான அவ்வூரானது மகிழ்ச்சியாற்சிறப்படைய ; சிறந்தநிறைமங்கலதூரியமுழங்க=சிறப்பினையுடைய நிறை

வாகிய மங்கலவாத்தியங்கள் ஒலிக்க ; தேவர்பிரானறந்தலை நின்றவர்க்கெல்லாம் =சிவபிரானது திருவருள் வழியில் நின்ற அடியார்களுக்கெல்லாம் ; அளவில்வள த்தருள்பெருக்கி=அளவில்லாத வளத்தோடுகூடிய கொடையை ஓங்கச்செய்து ; புறந்தருவார் போற்றிசைப்ப=பாதுகாக்குந்தாதியர்கள் வாழ்த்தொலிசொல்ல ; பொற்கொடியைவளர்க்கின்ருர்=பொன்னுலாகிய கொடிபோலும் அப்புத்திரியை வளர்ப்பாராயினர்.—எ-று. (கஉ)

காப்பணியு மிளங்குழவிப் பதநீங்கிக் கமழ்சுரும்பின்
பூப்பயிலுஞ் சுருட்குழலும் பொலன்குழையு முடன்ருழ
யாப்புறுமென் சிறுமணிமே கலையணிசிற் ருடையுடன்
கோப்பமைகிண் கிணியசையக் குறுந்தளிர்மெல் லடியொதுங்கி.

(இ-ள்.) காப்பணியுமிளங்குழவிப்பதநீங்கி=காப்பணிதற்குரிய இளமையானகுழந்தைப்பருவம் நீங்கி ; கமழ்சுரும்பின் பூப்பயிலுஞ் சுருட்குழலும்=மணம்வீசுகின்ற வண்டுகளையுடையபூக்களைமுடித்த சுருண்ட கூந்தலும் ; பொலன்குழையுமுடன்ருழ=பொன்னுலாகிய குண்டலமும் ஒருங்குதாழ்ந்துகொண்டிருக்க; யாப்புறுமென்சிறுமணிமேகலையணி சிற்ருடையுடன்=கட்டப்பட்டமிருதுவான சிறியமணிகளாலாகிய எண்கோவைமணியணிந்த சிற்ருடையோடு ; கோப்பமைகிண்கிணியசைய = கோக்கப்பட்ட சிறுசதங்கையானது அசையும்படி ; குறுந்தளிர் மெல்லடியொதுங்கி = சிறியதளிர்போலும் மிருதுவான அடிவைப்பினுல் ஒதுங்கி நடந்து.—எ-று. (கங)

புனைமலர்மென் கரங்களினுற் போற்றியதா தியர்நவெண்
மனையகத்து மணிமுன்றின் மணற்சிற்றி லிழைத்துமணிக்
கனைகுரா ஞர் புரமலையக் கழன்முதலாப் பயின்றுமுலை
நனைமுகஞ்செய் முதற்பருவ நண்ணினளப் பெண்ணமிர்தம்.

(இ-ள்.) புனைமலர்மென்கரங்களினுல்=அலங்கரித்தமலர்போலும் மிருதுவாகியகைகளினுல் ; போற்றியதாதியர்நவெண்=தன்னைப்பாதுகாக்கின்ற செவிலித்தாயர்நவில்; மனையகத்துமணிமுன்றில்=வீட்டினிடத்துள்ள அழகியமுற்றத்தில்; மணற்சிற்றிலிழைத்து=மணலாலாகிய சிறுவீட்டைக்கட்டி; மணிக்கனைகுரனூபுரமலைய=மணிகணிறைந்தஒலிக்கின்ற பாதசிலம்புகள் அசையும்படி ; கழன்முதலாப்பயின்று=கழங்காடல்முதலிய விளையாடல்களைச்செய்து ; முலைநனைமுகஞ்செய்முதற்பருவம் = தனமானது அரும்புபோலத் தோற்றுதற்குரிய பேதைப்பருவத்தை ; நண்ணினளப் பெண்ணமிர்தம்=அடைந்தாள் அந்தப்பெண்ணமிர்தமாகிய புதல்வி.—எ-று. (கச)

உறுகவின்மெய்ப் புறம்பொலிய வொளிநுசுப்பை முலைவருத்த
முறுவல்புற மலராத முகிண்முத்த நகையென்னு
நறுமுகைமென் கொடிமருங்கு னளிர்ச்சுருளந் தளிர்ச்செங்கை
மறுவில்குலக் கொழுந்தினுக்கு மணப்பருவம் வந்தணைய.

(இ-ள்.) உருகவின் மெய்ப்புறம்பொலிய=மிக்கஅழகானது உடம்பினிடத்துவிளங்க ; ஒளிநுசுப்பைமுலைவருத்த=காந்தியுள்ள இடையை முலையானது பாரத்தால்வருத்த ; முறுவல்புறமலராத=இளஞ்சிரிப்பானது புறத்து வெளிப்படாத ; முகிண்முத்தநகையென்னும் நறுமுகைமென்கொடிமருங்குல்=முகிழ்த்தமுத்தினையொத்த பல்வரிசையாகிய நறிய அரும்பினையுடையமிருதுவானகொடியென்னும் இடையினையும் ; நளிர்ச்சுருளந்தளிர்ச்செங்கை=குளிர்ச்சியாய்ச்சுருண்டு அழகினையுடைத்தாகிய தளிர்போலும்சிவந்தகையினையும் உடைய; மறுவில்குலக்கொழுந்தினுக்கு=குற்றமற்ற (மானக்கஞ்சாற நாயனார்) குலத்திற்குக்கொழுந்தாயுள்ள அப்புதல்விக்கு ; மணப்பருவம் வந்தணைய=மணஞ்செய்யும் பருவமானதுவர.—எ-று. (௧௫)

திருமகட்கு மேல்விளங்குஞ் செம்மணியின் றீபமெனும்
ஒருமகளை மன்னுலகி லோங்குகுல மரபினராய்க்
கருமிடற்று மறையவனார் தமராய கழலேயர்
பெருமகற்கு மகட்பேச வந்தணைந்தார் பெருமுதியோர்.

(இ-ள்.) திருமகட்குமேல்விளங்கும்=அழகில் இலக்குமிக்கு மேலாகவிளங்குகின்ற ; செம்மணியின்றீபமெனுமொருமகளை=மாணிக்க தீபமென்றுசொல்லும் ஒப்பற்ற புத்திரியை ; மன்னுலகிலோங்குகுலமரபினராய் = நிலைபெற்ற உலகத்தின்கண் உயர்ந்த தங்குலத்திற்கேற்ற வருணமுடையவராய் ; கருமிடற்றுமறையவனார்தமராய=கரியகண்டத்தையுடைய சிவபிரானது அடியவராகிய ; கழலேயர் பெருமகற்கு = கழலேயர் என்னும் வேளாளரது புதல்வராகிய ஏயர்கோன்கலிக்காம நாயனாருக்கு ; மகட்பேசவந்தணைந்தார் பெருமுதியோர்=மணம்பேசும்படி பெரிய முதியோர்கள் வந்தார்கள்.—எ-று. (௧௬)

வந்தமூ தறிவோரை மானக்கஞ் சாறனார்
முந்தைமுறை மையின்விரும்பி மொழிந்தமணத் திறங்கேட்டே
எந்தமது மரபினுக்குத் தகும்பரிசா லேயுமெனச்
சிந்தைமகிழ் வுறவுரைத்து மணநேர்ந்து செலவிட்டார்.

(இ-ள்.) வந்தமூதறிவோரை = தம்மிடத்துவந்த பேரறிவினையுடைய முதியோரை; மானக்கஞ்சாறனார்=மானக்கஞ்சாறநாயனார் ; முந்தைமுறைமையின்விரும்பி=பழையதம் மரபினரென்னும் முறைமையால் விரும்பியழைத்து ; மொழிந்தமணத் திறங்கேட்டு=அவர்கூறிய மணமுறையைக் கேட்டு ; எந்தமது மரபினுக்கு=எம்முடைய மரபுக்கு ; தகும்பரிசாலேயுமென = தக்கமுறைமையாற் பொருந்தியதென்று ; சிந்தைமகிழ் வுறவுரைத்து=மனமகிழ்ச்சியோடுசொல்லி ; மணநேர்ந்துசெலவிட்டார் = மணத்திற்குடன்பட்டு அவரையனுப்பினர்.—எ-று. (௧௭)

ஏ - அசை.

சென்றவருங் கஞ்சாறர் மணமிசைந்த படிசெப்பக்
குன்றனைய புயத்தேயர் கோனாரு மிகவிரும்பி
நின்றநிலை மையினிரண்டு திறத்தார்க்கு நேராய
மன்றல்வினை மங்கலநாண் மதிநூல்வல் லவர்வகுத்தார்.

(இ-ள்.) சென்றவருங் கஞ்சாறர் = வந்தவர்களும் மானக்கஞ்சாறநாயனார்; மணமிசைந்தபடிசெப்ப = மகட்கொடுக்க இசைந்தமையைச் சொல்ல; குன்றனையபுயத்து=மலைபோலும் புயத்தையுடைய; ஏயர்கோனாருமிக விரும்பி=ஏயர்கோன் கலிக்காம நாயனாரும் மிகவிருப்பம் அடைந்து; நின்ற நிலைமையின்=நிற்குமிடத்து; இரண்டுதிறத்தார்க்கும்=அவ்விருதிறத்தார்க்கும்; நேராய மன்றல்வினை மங்கலநாள்=ஒத்த மணவினைக்குரிய மங்கலகரமான முகூர்த்தத்தை; மதிநூல்வல்லவர்வகுத்தார்=புத்தியினால் ஊகித்துணர்ந்த சோதிடநூல்வல்லவர்கள் வகுத்தார்கள்.—எ-று. (௧௮)

மங்கலமாஞ் செயல்விரும்பி மகட்பயந்த வள்ளலார்
தங்குலநீள் சுற்றமெலாந் தயங்குபெருங் களிசிறப்பப்
பொங்கியவெண் முளைப்பெய்து பொலங்கலங்க ளிடைநெருங்கக்
கொங்கலர்தண் பொழின்மூதூர் வதுவைமுகங் கோடித்தார்.

(இ-ள்.) மங்கலமாஞ்செயல்விரும்பி = மங்கலத்தொழிலாகிய செயலைச் செய்யவிரும்பி; மகட்பயந்தவள்ளலார்=அப்புத்திரியைப்பெற்ற மானக்கஞ்சாறநாயனார்; தங்குலநீள் சுற்றமெலாம்=தம்முடைய குலத்திலுள்ள பெரிய உறவினர்களுக்கெல்லாம்; தயங்குபெருங் களிசிறப்ப=மிக்க களிப்பு ஓங்க; பொலங் கலங்க ளிடைநெருங்க = பொற்பாத்திரத்தினிடத்து நெருங்கும்படி; பொங்கியவெண் முளைப்பெய்து = பொலிவாகிய வெள்ளியபாலிகைமுளையை இட்டு; கொங்கலர்தண் பொழின்மூதூர்=தேன்விண்டு அலர்கின்ற குளிர்ந்த பொழில் சூழ்ந்த பழையகஞ்சாறூரை; வதுவைமுகங் கோடித்தார் = மணஞ்செய்தற்குரிய சிறப்புடையதாக அலங்காரஞ்செய்தார்கள்.—எ-று. (௧௯)

கஞ்சாறர் மகட்கொடுப்பக் கைப்பிடிக்கவருகின்ற
எஞ்சாத புகழ்ப்பெருமை யேயர்குலப் பெருமானுந்
தஞ்சால்பு நிறைசுற்றந் தலைநிறைய முரசியம்ப
மஞ்சாலு மலர்ச்சோலைக் கஞ்சாற்றின் மருங்கணைய.

(இ-ள்.) கஞ்சாறர்மகட்கொடுப்ப = மானக்கஞ்சாறநாயனார் தம்புதல்வியை மணஞ்செய்துகொடுக்க; கைப்பிடிக்க வருகின்ற=அப்புத்திரியைமணஞ்செய்துகொள்ளும்படி வருகின்ற; எஞ்சாதபுகழ்ப்பெருமை=குறையாத புகழோடுகூடியபெருமையை உடைய; ஏயர்குலப்பெருமானும்=ஏயர்கோன் கலிக்காமநாயனாரும்; தஞ்சால்புநிறைசுற்றம் =தம்முடைய சால்பமைந்த சுற்றத்தார்; தலைநிறைய முரசியம்ப=கூட்டமாய்வர முரச வாத்தியம் முழங்க; மஞ்சாலுமலர்ச்

சோலை=மேகங்கள் அசைகின்ற மலர்கள்சூழ்ந்த சோலையினையுடைய; கஞ்சாற் றின் மருங்கணைய=கஞ்சாறூரின் மருங்குவர.—எ-று. (௨0)

வள்ளலார் மணமவ்வூர் மருங்கணையா முன்மலர்க்கண்
ஒள்ளிழையைப் பயந்தார்தந் திருமனையி லொருவழியே
தெள்ளுதிரை நீருலக முய்வதற்கு மற்றவர்தம்
உள்ளநிலைப் பொருளாய வும்பர்பிரா னுமணைவார்.

(இ-ள்.) வள்ளலார்மணமவ்வூர்மருங்கணையாமுன்=ஏயர்கோன்கலிக்கா மநாயனார்மணவெழுச்சிஅவ்வூருக்குவரமுன்; மலர்க்கண்ஒள்ளிழையைப்பயந்தா ர்தம்=நீலமலர்போலும்கண்ணையுடைய ஒள்ளியஆபரணத்தையணிந்த அப்புத்தி ரியைப்பெற்றமானக்கஞ்சாறநாயனாரது; திருமனையிலொருவழியே=திருமனையி னிடத்து ஓர்வழியாக; தெள்ளுதிரைநீருலகமுய்வதற்கு=தெளிவானதிரையை யுடையகடலாற்சூழப்பட்ட உலகம்கதியடையும்பொருட்டு; அவர்தமுள்ளநிலை ப்பொருளாய=அம்மானக்கஞ்சாற நாயனாருடைய திருவுள்ளத்தினிடத்து வாச ஞ்செய்யும் மெய்ப்பொருளாகிய; உம்பர்பிரானுமணைவார் = தேவர்கட்கெல் லாம் முதல்வர் வருவாராயினர்.—எ-று. மற்று - அசை. (௨௧)

வேறு.

முண்டநிறை நெற்றியின்மேன் முண்டித்த திருமுடியிற்
கொண்டசிகை சிகையின்கட் கோத்தணிந்த வெற்புமணி
பண்டொருவ னுடலங்கம் பரித்தநா ளதுகடைந்த
வெண்டரள மெனக்காதின் மிசையசையுங் குண்டலமும்.

(இ-ள்.) முண்டநிறைநெற்றியின்மேல்=திரிபுண்டரம்நிறைந்த திருநெ ற்றிக்குமேல்; முண்டித்ததிருமுடியில்=வபனஞ்செய்த திருமுடியிலே; கொண் டசிகை=கொள்ளப்பட்ட குடுமியும்; சிகையின்கட்கோத்தணிந்தவெற்புமணி= அக்குடுமியினிடத்துக் கோத்துத் தரிக்கப்பட்ட எலும்பினாற்செய்த மணிகளும்; பண்டொருவனுடலங்கம்பரித்தநாள்=முற்காலத்துதிருமாலினது திருமேனியின் கணுள்ள எலும்புகளைத் தரித்துக்கொண்டநாளில்; அதுகடைந்தவெண்டரளமெ ன=அவ்வெலும்பைக் கடைந்தெடுத்த வெள்ளியமுத்துப்போல; காதின்மிசை யசையுங்குண்டலமும்=காதினிடத்து அசையாநின்ற குண்டலங்களும்.—எ-று.()

அவ்வென்பி னொளிமணிகோத் தணிந்ததிருத் தாழ்வடமும்
பைவன்பே ரரவொழியத் தோளிலிடும் பட்டிகையும்
மைவந்த நிறக்கேச வடப்பூணு நூலுமனச்
செவ்வன்பர் பவமாற்றுந் திருநீற்றுப் பொக்கணமும்

(இ-ள்.) அவ்வென்பினொளிமணிகோத்து = முன்சொல்லப்பட்ட எலு ம்பினாற்செய்த ஒளியினையுடைய மணிகளைக்கோத்து; அணிந்ததிருத்தாழ்வடமு ம்=அணிகின்ற அழகியதாழ்வடமும்; பைவன்பேரரவொழிய=படத்தினையுடை

ய வலியபெரிய அரவல்லாமல்; தோளிலிடும்பட்டிகையும் = தோளிலிருக்கின்ற யோகப்பட்டமும்; மைவந்தநிறக்கேசவடப்பூணநூலும் = கரியநிறத்தினையுடைய மயிரை வடமாக முறுக்கிய பூணநூலும்; மனச்செவ்வன்பர்பவமாற்றும் = மனத்தால் நன்னெறியிற் செல்கின்ற அடியார்களது பிறவிநோயைத்தீர்க்கும்; திருநீற்றுப்பொக்கணமும் = திருநீற்றுப்பையும்.—எ-று. (உங)

ஒருமுன்கைத் தனிமணிகோத் தணிந்தவொளிர் சூத்திரமும்
அருமறைநூற் கோவணத்தின் மிசையசைத்த திருவுடையும்
இருநிலத்தின் மிசைதோய்ந்த வெழுதரிய திருவடியும்
திருவடியிற் றிருப்பஞ்ச முத்திரையுந் திகழ்ந்திலங்க.

(இ-ள்.) ஒருமுன்கைத்தனிமணிகோத்து = ஒருமுன்கையினிடத்து ஒப்புமணியைக்கோத்து; அணிந்தவொளிர்சூத்திரமும் = தரித்த விளக்கமான நூலும்; அருமறைநூற்கோவணத்தின்மிசை = அரியவேதமாகிய கோவணத்தின் மீது; அசைத்ததிருவுடையும் = கட்டப்பட்ட உடையும்; இருநிலத்தின்மிசைதோய்ந்த = பெருமையானபூமியின்மேல் அழுந்திய; எழுதரியதிருவடியும் = எழுதுதற்கரியதிருவடியும்; திருவடியிற்றிருப்பஞ்சமுத்திரையும் = அத்திருவடியினிடத்து மங்கலகரமான பதுமம் சங்கம் மகரம் சக்கரம் தண்டம் என்னும் சாமுத்திரிகையிற் கூறும் ரேகை ரூபமானமுத்திரிகைகளும்; திகழ்ந்திலங்க = விளங்கித்தோன்ற.—எ-று. (உச)

அம்முத்திரைகள் அடிவைப்பிற்றோன்று மென்பது விளக்கிய இருநிலத்தின்மிசைதோய்ந்த திருவடிஎன்றார். எழுதரிய என்றதனால், சிவப்பு, மிருது, தசைதல், முதலியனகொள்க. யோகிகட்குப்பதுமாதி முத்திரைகள் பாதத்திலிருக்குமென்பது விளக்கிய திருப்பஞ்சமுத்திரையும் எனக்கூறினர்.

பொடிமூடு தழலென்னத் திருமேனி தனிற்பொலிந்த
படிநீடு திருநீற்றின் பரப்பணிந்த பான்மையராய்க்
கொடிநீடு மறுகணைந்து தம்முடைய குளிர்கமலத்
தடிநீடு மனத்தன்பர் தம்மனையி னகம்புகுந்தார்.

(இ-ள்.) பொடிமூடுதழலென்ன = சாம்பல்மூடிய நெருப்புப்போல; திருமேனிதனிற்பொலிந்த = திருமேனியினிடத்து விளங்கிய; படிநீடுதிருநீற்றின் = ஒப்பற்றவிபூதியினது; பரப்பணிந்த பான்மையராய் = உத்தூளனத்தையணிந்ததன்மையுடையராய்; கொடிநீடுமறுகணைந்து = கொடிகட்டிய வீதியிற்சேர்ந்து; தம்முடைய குளிர்கமலத்தடிநீடும் = தம்முடைய குளிர்ந்ததாமரை மலரையொத்த திருவடிகள் தங்குகின்ற; மனத்தன்பர்தம்மனையினகம் புகுந்தார் = மனத்தையுடைய மானக்கஞ்சாற நாயனாரது திருமனையினுள்ளே புகுந்தருளினார்.—எ-று. (உரு)

இந்நான்குங்குளகம்.

வந்தணைந்த மாவிரத முனிவரைக்கண் டெதிரெழுந்து
சிந்தைகளி கூர்ந்துமகிழ் சிறந்தபெருந் தொண்டனார்
எந்தைபிரான் புரிதவத்தோ ரிவ்விடத்தே யெழுந்தருள
உய்ந்தொழிந்தே னடியேனென் றுருகியவன் பொடுபணிந்தார்.

(இ-ள்.) வந்தணைந்த மாவிரதமுனிவரைக்கண்டு=தமதுமனைக்கு எழுந்தருளிய மகாவிரதமுனிவரைக்கண்டு; எதிரெழுந்துசிந்தை களிகூர்ந்து=அவரெதிரே தரிப்பின்றி எழுந்து மனக்களிப்புமிக்கு; மகிழ்சிறந்தபெருந்தொண்டனார்=மகிழ்ச்சியடைந்த பெரிய மானக்கஞ்சாற நாயனார்; எந்தைபிரான்புரிதவத்தோர்=எமதுபிரானை விரும்பிச்செய்கின்ற தவத்தையுடைய மகாவிரதர்; இவ்விடத்தேயெழுந்தருள = அடியேன்மனையில் எழுந்தருளுதலால்; உய்ந்தொழிந்தேனடியேனென்று=பிறவித்துன்பத்தினின்றும் நீங்கிப்பிழைத்தேன் அடியேனென்று; உருகிய வன்பொடுபணிந்தார்=மனமுருகுதற்கேதுவான அன்போடு வணங்கினார்.—எ-று. (௨௬)

நற்றவராம் பெருமானார் நலமிகுமன் பரைநோக்கி
உற்றசெயன் மங்கலமிங் கொழுகுவதென் னெனவடியேன்
பெற்றதொரு பெண்கொடிதன் வதுவையெனப் பெருந்தவரு
மற்றுமக்குச் சோபனமா குவதென்று வாய்மொழிந்தார்.

(இ-ள்.) நற்றவராம்பெருமானார் = நல்லதவவேடங்கொண்டெழுந்தருளும் சிவபிரான்; நலமிகுமன்பரைநோக்கி = நன்மைமிக்கமானக்கஞ்சாற நாயனாரைப்பார்த்தருளி; உற்றசெயன்மங்கலமிங்கொழுகுவதென்னென=மங்கலகரமான செயல்இங்கேசெய்வது எதற்காகவென்றுவினவ; அடியேன்பெற்றதொருபெண்கொடிதன்வதுவையென=அதற்கவர் அடியேன் பெற்றபெண்குழந்தையினது மணமென்றுசொல்ல; பெருந்தவரும் உமக்குச் சோபனமாகுவதென்று வாய்மொழிந்தார்=பெரியதவத்தையுடைய சிவபிரானும் உமக்கு நன்மையுண்டாகக் கடவதென்று திருவாய்மலர்ந்தருளினார்.—எ-று. மற்று-அசை. (௨௭)

ஞானச்செய் தவரடிமேற் பணிந்துமனை யகநண்ணி
மானக்கஞ் சாறனார் மணக்கோலம் புனைந்திருந்த
தேனக்க மலர்க்கூந்தற் றிருமகளைக் கொண்டணைந்து
பானற்கந் தரமறைத்து வருமவரைப் பணிவித்தார்.

(இ-ள்.) ஞானச்செய்தவரடிமேற்பணிந்து = ஞானம் நிறைந்த தவத்தினையுடைய மகாவிரதரது திருவடிகளில்வணங்கி; மனையகநண்ணி=தன்வீட்டினுட்புகுந்து; மானக்கஞ்சாறனார்=மானக்கஞ்சாறநாயனார்; மணக்கோலம்புனைந்திருந்த=திருமணக்கோலம் புனைந்திருந்த; தேனக்கமலர்க் கூந்தற்றிருமகளை=தேன்கமழும் மலர்களைமுடித்த கூந்தலையுடைய தமது புத்திரியை; கொண்டணைந்து=அழைத்துக்கொண்டுவந்து; பானற்கந்தரம்=நீலமலர்போலும் கருமையாகிய கண்டத்தை; மறைத்துவருமவரைப்பணிவித்தார்=மறைத்துவந்த சுவாமியைப்பணியும்படி செய்வித்தார்.—எ-று. (௨௮)




1. மானக்கஞ்சாரநாயனர் . 2. அருளால் கிடைத்த புத்திரிகை

3. விரதி ) 4. கலிக்காமநாயனர்.

மானக்கஞ்சாரநாயனர் அருளால் கிடைத்த புத்திரிகையை கலிக்காமநாயனருக்கு மணஞ்செய்விக்க கோலங்கொண்டேக சிவ பிரான் விரதிவடிவங்கொண்டு பஞ்சவடிக்குக் கேட்ட அக்கன்னிகையின்கூந்தலை அரிந்தூட்ட விரதிமறைந்து நாயனரை விருஷாபாரூடராய் அநுக்கிரகித்து கன்னிகைக்கு மணஞ்செய்ய மீண்டுங் கூந்தலைத்தந்தது.

தஞ்சரணத் திடைப்பணிந்து தாழ்ந்தெழுந்த மடக்கொடிதன்
மஞ்சுதழைத் தெனவலர்ந்த மலர்க்கூந்தற் புறநோக்கி
அஞ்சலிமெய்த் தொண்டரைப்பார்த் தணங்கிவடன் மயிர்நமக்குப்
பஞ்சவடிக் காமென்றார் பரவவடித் தலங்கொடுப்பார்.

(இ-ள்.) தஞ்சரணத் திடைப்பணிந்து தாழ்ந்தெழுந்த மடக்கொடித ன்=தம்முடையபாதங்களில் தாழ்ந்து வணங்கி எழுந்தமடமையையுடைய பெ ண்ணினது ; மஞ்சுதழைத்தெனவலர்ந்த=மேகம் தளிர்த்தாற்போல் விளங்கித் தோன்றுகின்ற ; மலர்க்கூந்தற்புறநோக்கி=பூக்களை முடித்த கூந்தலின் புறத்தை ப்பார்த்து ; அஞ்சலிமெய்த்தொண்டரைப்பார்த்து=தம்மை அஞ்சலிசெய்துகொ ண்டு நிற்கும் மெய்ம்மையான மானக்கஞ்சாறநாயனாரைநோக்கி; அணங்கிவடன் மயிர்=உமது புத்திரியாகிய இவளது கேசபாரமானது ; நமக்குப் பஞ்சவடிக்கா மென்றார்=நமக்கு மயிர்ப்பூணூற் கயிற்றுக்கு ஆமென்று கூறினார்; பரவவடித்தல ங்கொடுப்பார் = எந்நாளும் வணங்கும்படிக்குத் தமது திருவடிகளை அவருக்குக் கொடுத்தருளும் சிவபிரான்.—எ-று. பஞ்சவடி=மயிர்ப்பூணூல். (௨௯)

அருள்செய்த மொழிகேளா வடற்சுரிகை தனையுருவிப்
பொருள்செய்தா மெனப்பெற்றே னெனக்கொண்டு பூங்கொடிதன்
இருள்செய்த கருங்கூந்த லடியிலரிந் தெதிர்நின்ற
மருள்செய்த பிறப்பறுப்பார் மலர்க்கரத்தி னிடைநீட்ட.

(இ-ள்.) அருள்செய்தமொழிகேளா=மகாவிரதமுனிவர் அருளிச்செய்த வார்த்தையை மானக்கஞ்சாறநாயனார்கேட்டு ; அடற்சுரிகைதனையுருவி = வலியி னையுடைய குற்றுடைவாளையுருவி ; பொருள்செய்தாமெனப் பெற்றேனெனக் கொண்டு=பெரும்பொருளை ஆக்கிக்கொண்டவன்போல (இப்பெரியவர் இதனைக் கேட்கப்) பெற்றேன் என்று உள்ளத்திற் கருதிக்கொண்டு; பூங்கொடி தனிருள் செய்த கருங்கூந்தல்=பொலிவினையுடைய தன்புத்திரியினது இருளையொத்தகரு மையாகிய கேசத்தை ; அடியிலரிந்து = அடிப்பட அரிந்து ; எதிர்நின்ற=தம்எதி ரேநின்ற ; மருள்செய்தபிறப்பறுப்பார்=மயக்கத்தைவிளைக்கும் பிறவியைநீக்கும் சிவபிரானது ; மலர்க்கரத்தி னிடைநீட்ட=மலர்போலும் திருக்கரத்திற்கொடு க்க.—எ-று. (௩௦)

வாங்குவார் போனின்ற மறைப்பொருளா மவர்மறைந்து
பாங்கின்மலை வல்லியுடன் பழையமழ விடையேறி
ஓங்கியவிண் மிசைவந்தா ரொளிவிசும்பு நிலநெருங்கத்
தூங்கியபொன் மலர்மாரி தொழும்பர்தொழு தெதிர்விழுந்தார்.

(இ-ள்.) வாங்குவார்போனின்ற = (அக்கேசத்தைக்கைநீட்டி) வாங்கும் மகாவிரதிபோல் நின்ற ; மறைப்பொருளா மவர்மறைந்து=வேதத்தின்பொருளா கிய சிவபிரானார் மறைந்தருளி ; பாங்கின்மலைவல்லியுடன் = தம் ஒருகூற்றிலி ருக்கும் உமாதேவியாரோடு ; பழையமழவிடையேறி = பழமையாகிய இள மையினையுடைய இடபத்தின்மீது எழுந்தருளி ; ஓங்கியவிண்மிசைவந்தார் =

உயர்ந்த ஆகாயத்தின்கண் காட்சிகொடுத்தருளினர் ; ஒளிவிசும்புநிலநெருங்க= ஒளியினையுடைய ஆகாயத்திலும் பூமியிலும் நெருங்கும்படி ; தூங்கியபொன் மலர்மாரி=கற்பகவிருட்சத்தின் மலர்மாரிசொரிந்தன ; தொழும்பர்தொழு தெழ்ந்தார் விழுந்தார்=மானக்கஞ்சாறநாயனர் கைகளைச்சிரமேற் குவித்துத்திருமுன்னே நிலமுறவணங்கினர்.—எ-று. இவ்விரண்டுங்குளகம். (௬௧)

விழுந்தெழுந்து மெய்ம்மறந்த மெய்யன்பர் தமக்குமதிக்
கொழுந்தலைய விழுங்கங்கை குதித்தசடைக் கூத்தனர்
எழும்பரிவி னம்பக்க லுனக்கிருந்த பரிசிந்தச்
செழும்புவனங் களிலேறச் செய்தோமென் றருள்செய்தார்.

(இ-ள்.) விழுந்தெழுந்துமெய்ம்மறந்த=இவ்வாறு நிலமுறவணங்கி எழுந்து பரவசமடைந்த ; மெய்யன்பர்தமக்கு=மெய்ம்மையாகிய அன்பினையுடைய மானக்கஞ்சாற நாயனருக்கு ; மதிக்கொழுந்தலையவிழுங் கங்கைகுதித்த சடைக் கூத்தனர்=இளம்பிறை அசையும்படி விழுகின்ற கங்காநதியானது பாயும் சடைமுடியையுடைய சிவபிரானர் ; எழும்பரிவினம்பக்கலுனக்கிருந்தபரிசு = உள்ளத்துஙிகழும் பேரன்பினல் நம்மடியாரிடத்து உனக்கிருந்தபத்தியை ; இந்தச்செழும்புவனங்களி லேறச்செய்தோமென் றருள்செய்தார் = இந்தச்செழுமையான மூவுலகங்களிலும் பரம்பும்படி செய்தோமென்று அருள்செய்தார்.—எ-று.(௬௨)

ஏறச்செய்தோமென்றதனல் அத்திருமணத்தில் வந்து அப்புத்திரியின் கேசத்தைக்கேட்கும் வாயிலாய் அவர் பத்தியை வெளிப்படுத்தல் பிரானர் கருத்தென்க.

மருங்குபெருங் கணநாதர் போற்றிசைப்ப வானவர்க
ணெருங்கவிடை மேற்கொண்டு நின்றவர்மு னின்றவர்தாம்
ஒருங்கியநெஞ் சொடுகரங்க ளுச்சியின்மேற் குவித்தையர்
பெருங்கருணைத் திறம்போற்றும் பெரும்பேறு நேர்பெற்றர்.

(இ-ள்.) மருங்குபெருங்கணநாதர் போற்றிசைப்ப=தம் அருகில் பெருமையினையுடைய சிவகணங்கள் துதிசெய்ய ; வானவர்கணெருங்க=தேவர்குழாம் அருகிற்சூழ ; விடைமேற்கொண்டு நின்றவர்முன்=இடபவாகனத்தின்மேல் எழுந்தருளிநின்ற சிவபிரான் திருமுன்னே ; நின்றவர் தாமொருங்கிய நெஞ்சொடு= நின்ற மானக்கஞ்சாறநாயனர் ஒருப்பட்டமனதோடு ; கரங்களுச்சியின்மேற்குவித்து=கைகளைச் சிரசின்மேற் குவித்துக்கொண்டு ; ஐயர்பெருங் கருணைத்திறம் போற்றும்=சிவபிரானது மிக்க அருட்டிறத்தை எந்நாளும் துதிக்கும் ; பெரும் பேறுநேர்பெற்றர்=பெரியபேற்றினை உடனே பெற்றுக்கொண்டார்.—எ-று. ()

இதனல் அப்பொழுது தேகம் நீங்காதிருந்தாரென்றே பொருள்.

தொண்டனர் தமக்கருளிச் சூழ்ந்திமையோர் துதிசெய்ய
இண்டைவார் சடைமுடியா ரெழுந்தருளிப் போயினர்
வண்டுவார் குழற்கொடியைக் கைப்பிடிக்க மணக்கோலங்
கண்டவர்கள் கண்களிப்பக் கலிக்காம னர்புகுந்தார்.

(இ-ள்.) தொண்டனார்தமக்கருளி=மானக்கஞ்சாறநாயனாருக்கு இவ்வாறருள்செய்து ; சூழ்ந்திமையோர் துதிசெய்ய=தேவர்கள் நாற்புறமுஞ் சூழ்ந்து துதிக்க; இண்டைவார் சடைமுடியார் = இண்டைமாலையை அணிந்த நீண்ட சடைமுடியையுடைய சிவபிரான் ; எழுந்தருளிப்போயினார்=மறைந்தருளினார் ; வண்டுவார்குழற்கொடியைக் கைபிடிக்க = வண்டுகள்விழும் நீண்ட அளகத்தையுடைய அப்புத்திரியை விவாகஞ்செய்ய ; மணக்கோலங்கண்டவர்கள் கண்களிப்ப=மணக்கோலத்தைத் தரிசித்தவர்களது கண்கள் களிப்படையும்படி ; கலிக்காமனார்புகுந்தார்=ஏயர்கோன் கலிக்காமநாயனார் வந்தருளினார்.—எ-று. (௬௪)

வந்தணைந்த வேயர்குல மன்னவனார் மற்றந்தச்
சிந்தைநினை வரியசெயல் செறிந்தவர்பாற் கேட்டருளிப்
புந்தியினின் மிகவுவந்து புனிதனா ரருள்போற்றிச்
சிந்தைதளர்ந் தருள்செய்த திருவாக்கின் றிறங்கேட்டு.

(இ-ள்.) வந்தணைந்தவேயர்குல மன்னவனார்=மானக்கஞ்சாற நாயனார் மனைக்குவந்த ஏயர்கோன்கலிக்காமநாயனார் ; அந்தச்சிந்தை நினைவரியசெயல்=மனசினால் நினைத்தற்கரிய அவ்வாறானசெயலை ; செறிந்தவர்பாற் கேட்டருளி=மணமெதிர்கொண்டுவந்தவர்களிடத்துக் கேள்விப்பட்டு ; புந்தியினின் மிகவுவந்து=தம்உள்ளத்தில் மிகவும் மகிழ்ந்து ; புனிதனாரருள்போற்றி=சிவபிரான்திருவருளைத் துதித்து ; சிந்தைதளர்ந்து=மனதில் தளர்ச்சியடைந்து ; அருள்செய்த திருவாக்கின்றிறங்கேட்டு= (அத்தளர்ச்சிநீங்கும் வண்ணம்) அருளிச்செய்த சிவபிரான் திருவாக்கினது திறத்தைக்கேட்டு.—எ-று. மற்று-அசை. (௬௫)

சிந்தைநினைவரியசெயல் என்றது வதுவைக்கோலஞ்செய்த புதல்வியின் கேசத்தை மாவிரதவேடங்கொண்ட சிவபிரானிடத்தில் அவர் கொய்துகொடுத்ததைஎன்க. புந்தியினின் மிகவுவந்து என்றது அதிகாரணமாய் அவரது அடியார் பத்தியின் சிறப்புநோக்கி என்க. புனிதனாரருள்போற்றி என்றது சிவபிரானுக்கு இவ்வாறு வெளிப்பட்டருளுங் கருணையிருந்தது கருதி என்க. சிந்தைதளர்ந்தென்றது. தான்மணஞ்செய்தபின் இவ்வாறுநிகழ்ந்தால் தனக்கும் அத்திருவருள்கிடைக்கும் அவ்வாறின்றி முன்னிகழ்ந்த மைகுறித்தும் சுவாமியினால் கேசம்விரும்பிக் கொள்ளப்பட்ட பெண்ணை விவாகஞ்செய்தல் எவ்வாறெனக் கருதியும் என்க. திருவாக்கின் றிறங்கேட்டென்றது இவற்றிற்கு நீவருந்தாது மணஞ்செய்யென்றெழுந்தவாறு கேட்டென்க.

மனந்தளரு மிடர்நீங்கி வானவர்நா யகாருளாற்
புனைந்தமலர்க் குழல்பெற்ற பூங்கொடியை மணம்புணர்ந்து
தனம்பொழிந்து பெருவதுவை யுலகெலாந் தலைசிறப்ப
இனம்பெருகத் தம்முடைய வெயின்மூதூர் சென்றணைந்தார்.

(இ-ள்) மனந்தளருமிடர்நீங்கி=ஏயர்கோன் கலிக்காமநாயனார் தம்மனத்தைத்தளரச்செய்கின்ற துன்பத்தினின்றும் நீங்கி ; வானவர்நாயகரருளால் = தேவர்கட்குநாயகராகியசிவபிரான்திருவருளினால்; புனைந்தமலர்க்குழல்பெற்ற=

முன்போல அலங்கரித்த மலர்களைமுடித்த கேசத்தைப் பெற்றுக்கொண்ட ; பூங்கொடியைமணம்புணர்ந்து=அப்பெண்ணை(மானக்கஞ்சாறநாயனார்கொடுக்க)விவாகஞ் செய்துகொண்டு; தனம்பொழிந்து=தனங்களைச்சொரிந்து; பெருவதுவையுலகெலாந்தலை சிறப்ப=உலகம்முழுதும் பெருமையாகிய மணச்செயல் சிறப்பைச்செய்ய ; இனம்பெருக=சுற்றத்தார்கள் களிப்படைய; தம்முடைய வெயின்மூதூர் சென்றணைந்தார்=தமதுமதில்சூழ்ந்த பழமையான திருப்பெருமங்கலத்தை அடைந்தார்.—எ-று. (௩௬)

இவ்விரண்டுங்குளகம்.

ஒருமகள் கூந்தறன்னை வதுவைநா ளொருவர்க்கீந்த
பெருமையார் தம்மைப்போற்றும் பெருமையென் னளவிற்றாமே
மருவிய கமரிற்புக்க மாவடு விடேலென்னோசை
உரிமையாற் கேட்கவல்லார் திறமினி யுரைக்கலுற்றேன்.

(இ-ள்) ஒருமகள்கூந்தறன்னை=தம்முடைய ஒருபுத்திரியின் கூந்தலை; வதுவைநாளொருவர்க்கீந்த=கலியாணநாளில் (மாவிரத வடிவாய்வந்த சிவபிரானாகிய) ஓர்அடியாருக்குக்கொடுத்த; பெருமையார்தம்மை=பெருமையுடைய மானக்கஞ்சாற நாயனாரை; போற்றும்பெருமை யென்னளவிற்றாமே = துதிக்கும்பெருமை என்னளவில் அடங்குமா அடங்காது ; மருவியகமரிற்புக்க=பொருந்திய நிலப்பிளப்பிற்புகுந்த ; மாவடுவிடேலென்னோசை=மாவடுவின் விடேல் விடேல் என்னும் ஓசையை ; உரிமையாற் கேட்கவல்லார்=உரிமைப்பத்தியினாற் கேட்கவல்ல அரிவாட்டாய நாயனாரது ; திறமினி யுரைக்கலுற்றேன்=சரிதத்தை இனிச்சொல்லத்தொடங்கினேன்.—எ-று. (௩௭)

மானக்கஞ்சாற நாயனார் புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

ஆக-திருவிருத்தம்-௬௦௭.

---

## அரிவாட்டாயநாயனார்புராணம்.

வரும்புனற் பொன்னி நாட்டொரு வாழ்பதி
சுரும்பு வண்டொடு சூழ்ந்து முரன்றிட
விரும்பு மென்க ணுடையவாய் விட்டுநீள்
கரும்பு தேன்சொரி யுங்கண மங்கலம்.

(இ-ள்.) வரும்புனற்பொன்னி நாட்டொருவாழ்பதி = இடையறாது ஒழுகுகின்ற நீரினையுடைய காவிரிநாட்டின்கண் ஒப்பற்ற குடிகள் வாழ்தற்குரிய ஊராவது ; சுரும்புவண்டொடு சூழ்ந்துமுரன்றிட=ஆண்வண்டுகள் தேன்வண்டுகளோடு சுற்றிஒலிக்க ; விரும்புமென்கணுடைய வாய்விட்டு=விரும்பத்தக்கமிருதுவான கணுக்களையுடைய வாயைப்பிளந்து ; நீள்கரும்புதேன் சொரியுங்கணமங்கலம்=நீண்டகரும்புகள் தேனைச்சொரியாநின்ற கணமங்கலமென்னும் நகரமாம்.—எ-று. (க)

செந்நெ லார்வயற் கட்டசெந் தாமரை
முன்னர் நந்துமிழ் முத்தஞ் சொரிந்திடத்
துன்னு மள்ளர்கை மேற்கொண்டு தோன்றுவார்
மன்னு பங்கய மாநிதி போன்றுளார்.

(இ-ள்.) செந்நெலார்வயற்கட்ட செந்தாமரை = செந்நெற்பயிர்களையுடைய வயலினிடத்துக் களைகட்ட செந்தாமரைமலர்களில் ; முன்னர்நந்துமிழ் முத்தஞ்சொரிந்திட=முற்பட்டுச் சங்குகள் ஈன்ற முத்துக்கள்சொரிய ; துன்னு மள்ளர் கைமேற்கொண்டு தோன்றுவார்=(அத்தாமரைமலர்களை)நெருங்கியபள்ளர்கள் கையிலெடுத்துக்கொண்டு வருவாராய்(அதனால்) ; மன்னுபங்கயமாநிதிபோன்றுளார்=நிலைபெற்றபதுமமென்னும் மாநிதியை உடையனையொத்தார்கள். ()

வளத்தி னீடும் பதியதன் கண்வரி
யுளர்த்து மைம்பா லுடையோர் முகத்தினுங்
களத்தின் மீதுங் கயல்பாய் வயலயற்
குளத்து நீளுங் குழையடை நீலங்கள்.

(இ-ள்.) வளத்தினீடும் பதியதன்கண்=பலவளங்களால் உயர்ந்த அக்கணமங்கலத்தின்கண் ; வரியுளர்த்துமைம்பாலுடையோர் முகத்தினுங் களத்தின் மீதும்=வண்டுகள் உழுகின்ற கூந்தலையுடைய மகளிர்கள் முகத்தினும் அவர்கள் கழுத்தினும் ; கயல்பாய் வயலயற்குளத்தும்=கயல்மீன்கள் பாய்கின்ற வயலின் புறத்திலுள்ள குளங்களிலும் ; நீளுங்குழையடை நீலங்கள்=மிக்கிருக்கும்குழையை அடைந்த நீலமலர்கள்.—எ-று. (௩)

முகத்திற்குழையடை நீலங்கள்=காதளவோடிய கண்களென்றும் ; களத்திற்குழையடை நீலங்கள்=குழைவாகச்செய்த நீலமணிகளென்றுங்கொள்க.

அக்கு லப்பதி தன்னி லறநெறித்
தக்க மாமனை வாழ்க்கையிற் றங்கினர்
தொக்க மாநிதித் தொன்மையி லோங்கிய
மிக்க செல்வத்து வேளாண் டலைமையார்.

(இ-ள்.) அக்குலப்பதிதன்னில் = அவ்விதவளந்தங்கிய குடிப்பிறப்பிற் சிறந்தவர்களையுடைய அக்கணமங்கலத்தில் ; அறநெறித்தக்கமாமனைவாழ்க்கையிற்றங்கினர்=அறநெறியினாற்சிறந்த பெருமையினையுடைய இல்வாழ்க்கைநெறியில் வாழ்கின்றவர் ; தொக்கமாநிதித்தொன்மையிலோங்கிய=திரண்டபெரியதிரவிய சம்பத்தின் பழமையாலுயர்ந்த ; மிக்கசெல்வத்துவேளாண்டலைமையார்=மேலானசெல்வத்தையுடைய வேளாண்குலத்திற்குத் தலைமைபூண்டவர்.—எ-று.

தாயனா ரெனு நாமந் தரித்துளார்
சேய காலந் தொடர்ந்துந் தெளிவிலா
மாய னார்மண் கிளைத்தறி யாதவத்
தூய நாண்மலர்ப் பாதந் தொடர்ந்துளார்.

(இ-ள்.) தாயனாரெனு நாமந்தரித்துளார்=அவர் தாயனாரென்னுந் திருநாமம் உடையவர்; தெளிவிலாமாயனார் சேயகாலந்தொடர்ந்தும் மண்கிளைத்தறியாத=ஞானமில்லாத திருமாலானவர் நீட்டித்த காலந்தேடியும் மண்ணைக்கீண்டும்அறியாத; அத்தூயநாண்மலர்ப் பாதந்தொடர்ந்துளார் = அச்சிறப்பினையுடைய சிவபிரானது தூய்மையான புதிய தாமரைமலர்போலுந் திருவடிகளைப் பற்றுகக்கொண்டொழுகுகின்றவர்.—எ-று. (௫)

மின்னு செஞ்சடை வேதியர்க் காமென்று
செந்நெ லின்னமு தோடு செங்கீரையு
மன்னு பைந்துணர் மாவடு வுங்கொணர்ந்
தன்ன வென்று மமுதுசெய் விப்பாரால்.

(இ-ள்.) மின்னுசெஞ்சடை வேதியர்க்காமென்று = அவர் விளங்குகின்ற சிவந்தசடையினையுடைய சிவபிரானுக்கு ஈதுஆகுமென்று; செந்நெலின்னமுதோடு செங்கீரையும்=செந்நெலரிசியின் இனிய அமுதோடு செப்பமானகீரையும்; மன்னுபைந்துணர்மாவடுவுங்கொணர்ந்து=நிலைபெற்ற பசியகொத்தாயுள்ளமாம்பிஞ்சும் கொண்டுவந்து; அன்னவென்று மமுதுசெய்விப்பர்=அவைகளை எந்நாளும் திருவமுது செய்விப்பார்.—எ-று. ஆல் அசை. (௬)

இந்த நன்னிலை யின்னல்வந் தெய்தினுஞ்
சிந்தை நீங்காச் செயலினு வந்திட
முந்தை வேத முதல்வ ரவர்வழி
வந்த செல்வ மறியாமை மாற்றினார்.

(இ-ள்.) இந்த நன்னிலை=இப்படிப்பட்ட நல்ல திருத்தொண்டானது; இன்னல்வந்தெய்தினுஞ் சிந்தைநீங்காச் செயலினுவந்திட = வறுமைநேரிட்டவிடத்தும் மனதில்மறவாமற்செய்யும் இந்நாயனாரது செய்கைகாரணமாய் (உலகத்தார் உணர்ந்து)களிக்கும்படி; முந்தைவேதமுதல்வர்=பழையவேதங்களை அருளிய முதல்வராகிய சிவபிரான்; அவர்வழிவந்தசெல்வம்=அவரிடத்திருந்தசெல்வத்தை; அறியாமை மாற்றினார்=இவ்வாறுசென்றதென்று யாரும் அறியக்கூடாமற் போக்கிவிட்டார்.—எ-று. (௭)

மேவு செல்வங் களிறுண் விளங்கனி
யாவ தாகி யழியவு மன்பினாற்
பாவை பங்கர்க்கு முன்பு பயின்றவத்
தாவில் செய்கை தவிர்ந்திலர் தாயனார்.

(இ-ள்.) மேவுசெல்வங்களிறுண் விளங்கனியாவதாகியழியவும்=தன்னிடத்துள்ள செல்வங்கள் யானையுண்ட விளாம்பழம்போல நிலையில்லாததாகியழிந்துபோகவும்; அன்பினாற் பாவைபாகர்க்குமுன்பு பயின்ற=பத்தியினால் உமாதேவி பாகராகிய சிவபிரானுக்குத் தாம்முன்புசெய்துவந்த; அத்தாவில் செய்கை தவிர்ந்திலர் தாயனார்=அவ்வித கெடுதலில்லாத செய்கையினின்றும் அத்தாயநாயனார் நீங்காதிருந்தார்.—எ-று. (௮)

ஈண்டுக்களிறு என்றது விளங்கனிக்குள்ள ஓர்நோயை. அது விளங்கனி உளதுபோற்காட்டி உள்ளீடின்றாகச்செய்யும். அதுபோல அச்செல்வம் உள்ளது போலிருந்து இல்லையாகி என்பார் ஆவதாகியழியவும் என்றும், அவர் செய்துவந்த சிவபுண்ணியத்தின்பெருமை தோன்றத் தாவில்செய்கையென்றுங் கூறினர்.

அல்ல னல்குர வாயிடக் கூலிக்கு
நெல் லறுத்துமெய் நீடிய வன்பினு
னல்ல செந்நெலிற் பெற்றன நாயனார்க்
கொல்லை யின்னமு தாக்கொண் டொழுகுவார்.

(இ-ள்.) அல்லனல்குரவாயிட=துயரத்தை விளைக்கும் வறுமையானது தமக்குண்டாக; கூலிக்கு நெல்லறுத்தும்=கூலிக்காக நெற்களை அறுத்தும்; மெய்ந்நீடிய வன்பினுல்=மெய்ம்மைமிக்க அன்பினுல்; நல்ல செந்நெலிற்பெற்றன=நல்லசம்பாநெல்லினுற் கிடைத்த அரிசிகளை; நாயனார்க் கொல்லையின்னமுதாக் கொண்டொழுகுவார்=சிவபிரானுக்கு விரைவில் இனிய திருவமுதிற்குரியதாக அமைத்துக்கொண்டு அந்நெறியில் ஒழுகுகின்றவர்.—எ-று. (கூ)

சாலி நேடி யறுத்தவை தாம்பெறுங்
கூலி யெல்லாந் திருவமு தாக்கொண்டு
நீல நெல்லரி கூலிகொண் டுண்ணுநாண்
மால யற்கரி யாரது மாற்றுவார்.

(இ-ள்.) சாலிநேடியறுத்தவை=செந்நெற்களைத்தேடி யறுத்து அவைகளில்; தாம்பெறுங்கூலியெல்லாம் = தாம்பெறத்தக்க கூலிநெற்களையெல்லாம்; திருவமுதாக்கொண்டு=சுவாமிக்குத் திருவமுதிற்குரியனவாக அமைத்துக்கொண்டு; நீலநெல்லரி கூலிகொண்டுண்ணுநாள்=கார்நெல்லரிந்த கூலியைத்தாம்பெற்றுக்கொண்டு உணவுசெய்துவரும்நாளில்; மாலயற்கரியாரது மாற்றுவார்=திருமால் பிரமன் என்னும் இருவர்க்கும் அரியசிவபிரான் அக்கார் நெல்லரிசியில்லாமல் அதனையும் போக்குவாராயினர்.—எ-று. (க0)

வேறு.

நண்ணிய வயல்களெல்லா நாடொறு முன்னங்காண
வண்ணவார் கதிர்ச்செஞ்சாலி யாக்கிட மகிழ்ந்துசிந்தை
அண்ணலா ரறுத்தகூலி கொண்டிஃ தடியேன்செய்த
புண்ணிய மென்றுபோத வமுதுசெய் விப்பாரானார்.

(இ-ள்.) நண்ணியவயல்களெல்லாம்=(தாம்கூலியறுக்கும்படி) யடைந்தவயல்களிலெல்லாம்; நாடொறுமுன்னங்காண = நாள்தோறும் தன்கண்முன்னே காணும்படி; வண்ணவார் கதிர்ச்செஞ்சாலியாக்கிட=அழகிய நீண்டகதிரையுடைய சம்பாநெல்லாகச் சிவபிரான்செய்விக்க; மகிழ்ந்து சிந்தை = அதனால் மனமகிழ்ச்சியடைந்து; அண்ணலாரறுத்தகூலிகொண்டு = தாயநாயனார்தான் அறுத்தசம்பாநெற்கூலியைக்கொண்டு; இஃதடியேன் செய்தபுண்ணியமென்று

=எல்லாஞ்சாலியாயவாறு அடியேன்முன் செய்தபுண்ணியமென்று ; போதவமு துசெய்விப்பாரானுர்=முன்னையினும் அதிகமாகச் சுவாமிக்குத் திருவமுதுசெய் விப்பாரானுர்.—எ-று. (கக)

வைகலு முணவிலாமை மனைப்படப் பையினிற்புக்கு
நைகர மில்லாவன்பி னங்கைகை யடகுகொய்து
பெய்கலத் தமைத்துவைக்கப் பெருந்தகை யருந்தித்தங்கள்
செய்கடன் முட்டாவண்ணந் திருப்பணி செய்யுநாளில்.

(இ-ள்.) வைகலுமுணவிலாமை = நாள்தோறும் உணவில்லாமையினுல் ; மனைப்படப்பையினிற்புக்கு=வீட்டின் புறத்திலுள்ள கொல்லையிற்போய் ; நைக ரமில்லாவன்பின்=நைகுதலில்லாத அன்பினையுடைய ; நங்கைகையடகுகொய் து=அவர் மனைவியார் தங்கையினுல்இலைக்கறிகளைக்கொய்து ; பெய்கலத்தமைத் துவைக்க=போசனபாத்திரத்திற் படைக்க ; பெருந்தகையருந்தி=தாயனாயனுர் அதை அமுதுசெய்து ; தங்கள் செய்கடன்முட்டாவண்ணம்=தாம் இருவரும் செய்யும்முறைமையிற் குறையாவண்ணம் ; திருப்பணிசெய்யுநாளில்=அத்திருப் பணிசெய்தொழுகும்நாளில்.—எ-று. (கஉ)

மனைமருங் கடகுமாள வடநெடு வானமீனே
அனையவர் தண்ணீர்வார்க்க வமுதுசெய் தன்பனுரும்
வினைசெயன் முடித்துச்செல்ல மேவுநா ளொருநாண்மிக்க
முனைவனுர் தொண்டர்க்கங்கு நிகழ்ந்தது மொழியப்பெற்றேன்.

(இ-ள்.) மனைமருங்கடகுமாள=மனைக்கொல்லையிலுள்ள இலைக்கறிகள் அற்றுப்போக ; வடநெடுவான மீனேயனையவர் = அருந்ததியொத்த கற்பினையு டைய அவர் மனைவியார் ; தண்ணீர்வார்க்கவமுதுசெய்து=குளிர்ந்தநீரைப் பாத் திரத்திலிட அதனைப்பானம்பண்ணி ; அன்பனுரும் வினைசெயன் முடித்துச்செ ல்ல=அடியவராகிய தாயனாயனுரும் தாம் சுவாமிக்குச் செய்யும் திருப்பணிகளை முடித்துக்கொண்டுவர ; மேவுநாளொருநாள் = (அவ்வாறு) இருக்கும்நாளில் ஓர் நாள் ; முனைவனுர் தொண்டர்க்கு=மேலானசிவபிரானது அடியாராகிய தாயநா யனுருக்கு; அங்கு நிகழ்ந்தது மொழியப்பெற்றேன்=அங்குநிகழ்ந்த ஓர் விசேட த்தைச்சொல்லத்தொடங்கினேன்.—எ-று. (கஙு)

இதனுல் இத்தாயனாயனுர்செல்வம்நீங்கலால் வறுமையுற்றும் கூலிக்கரிய ரிந்தும் தமக்குணவாகக்கொண்ட கார்நெற் கூலியரிகிட்டாமைக்குமனமகிழ்ந்தும் அடகுண்டும் நீருண்டும் சிவபிரானைத்தம்மினும் இனியராய்க்கொண்டு செய்யும் தந்தொண்டிற் குறையாமனின்றமைகாண்க.

முன்புபோன் முதல்வனுரை யமுதுசெய் விக்கமூளும்
அன்புபோற் றூயசெந்நெ லரிசிமா வடுமென்கீரை
துன்புபோ மனத்துத்தொண்டர் கூடையிற் சுமந்துசெல்லப்
பின்புபோ மனைவியாரான் பெற்றவஞ் சேந்திச்சென்றுர்.




அரிவாட்டாயநாயனர் சிவபிரான் திருவமுதுக்குச் செந்நெலரிசியுஞ் செங்கீரையும் மாவடுவும் கொடுபோக பசியால் தள்ளுண்டு கமரில் சிதறி வீழக்கண்டு நாயனர் தன் கழுத்தை அரிய சிவபிரான் தன் கையால் தடுத்துக் காத்தருளியது.

(இ-ள்.) முன்புபோன்முதல்வனுரையமுதுசெய்விக்க = முன்போலச்சிவபிரானைத்திருவமுதுசெய்விக்கும்படி; முளுமன்புபோல்=தம்மிடத்துதித்த அன்புபோல; தூயசெந்நெல்லரிசிமாவடுமென்கீரை=தூய்மையானசெந்நெலரிசியும் மாவடுவும் மிருதுவானகீரையும்; துன்புபோமனத்துத்தொண்டர்=துன்பமில்லாத மனதையுடைய அடியவர்; கூடையிற்சுமந்துசெல்ல=கூடையில்வைத்துச்சுமந்துபோக; பின்புபோமனைவியார்=பின்செல்கின்ற அவர்மனைவியார்; ஆன்பெற்றவஞ்சேந்திச்சென்றார் = பசுவினிடத்துதித்த கவ்வியம் ஐந்தையும் ஏந்திக்கொண்டுபோனார்.—எ-று. (௧௪)

போதரா நின்றபோது புலர்ந்துகா றளர்ந்துதப்பி
மாதரார் வருந்திவீழ்வார் மட்கல மூடுகையாற்
காதலா லணைத்துமெல்லாங் கமரிடைச் சிந்தக்கண்டு
பூதநா யகர்தந்தொண்டர் போவதங் கினியேனென்று.

(இ-ள்.) போதராநின்றபோது=(தாயநாயனார்)இவ்வாறுபோகும்பொழுது; புலர்ந்துகாறளர்ந்துதப்பி=கால்வற்றி அதனால் நடைதள்ளாடித்தவறி; வருந்திவீழ்வார்=வருந்திவீழும் அவரை; மாதரார்மட்கலமூடுகையாற்காதலாலணைத்தும் = அவர்மனைவியார்தங்கையிலுள்ள பஞ்சகவ்வியபாத்திரத்தைமூடியிருக்கும்கையினால்விருப்போடு அணைத்தும்; எல்லாங்கமரிடைச்சிந்தக்கண்டு=மாவடு அரிசி கீரை ஆகிய எல்லாம்நிலப்பிளப்பில்சிதறிவீழப்பார்த்து; பூதநாயகர்தந்தொண்டர்=சிவபிரானது தொண்டராகிய தாயநாயனார்; போவதங்கினியேனென்று=இனி அவ்விடத்துக்குப்போகவேண்டியது ஏன் என்று.—எ-று. (௧௫)

நல்லசெங் கீரைதூய மாவடு வரிசிசிந்த
அல்லறீர்த் தாளவல்லா ரமுதுசெய் தருளுமப்பே
றெல்லையி றீமையேனிங் கெய்திடப் பெற்றிலேனென்
றொல்லையி லரிவாட்பூட்டி யூட்டியை யரியலுற்றார்.

(இ-ள்.) நல்லசெங்கீரைதூயமாவடுவரிசிசிந்த=நல்லசெப்பமான கீரையும் தூய்மையானமாவடுவும் செந்நெலரிசியும் கமரிற்சிந்துதலால்; அல்லறீர்த்தாளவல்லாரமுதுசெய்தருளுமப்பேறு=பிறவித்துன்பத்தைநீக்கி அடிமைக்கொள்ள வல்லசிவபிரான் திருவமுதுசெய்தருளும் பெருப்பேற்றை; எல்லையிறீமையேனிங்கெய்திடப்பெற்றிலேனென்று=அளவில்லாத கொடுமையையுடைய யான்இவ்விடத்து அடையப்பெறவில்லையென்று; ஒல்லையிலரிவாட்பூட்டி=விரைந்து அரிவாளைப்பூட்டி; ஊட்டியை யரியலுற்றார் = கழுத்தின்அடியை அரியத்தொடங்கினார்.—எ-று. இவ்விரண்டுங்குளகம். (௧௬)

ஆட்கொள்ளு மையர்தாமிங் கமுதுசெய் திலர்கொலென்னாப்
பூட்டிய வரிவாட்பற்றிப் புரையற விரவுமன்பு
காட்டிய நெறியினுள்ளந் தண்டறக் கழுத்தினோடும்
ஊட்டியு மரியாநின்றார் ருறுபிறப் பரிவாரொத்தார்.

(இ-ள்.) ஆட்கொள்ளுமையர்தாம் = எம்மைஅடிமைக்கொண்ட சிவபிரான்; இங்கமுதுசெய்திலரென்னா=இவ்விடத்துத் திருவமுதுசெய்யா தொழிந்

தாரென்று ; பூட்டியவரிவாட்பற்றி=கழுத்திற்பூட்டிய அரிவாளைப்பிடித்துக்கொண்டு ; புரையறவிரவுமன்புகாட்டியநெறியின்=குற்றமில்லாமல் நெருங்கிய பேரன்பைக்காட்டும்வழியால் ; உள்ளந்தண்டற = உள்ளந்தண்டானது அறும்படி ; கழுத்திஞேடு மூட்டியுமரியாநின்றார்=கழுத்திஞேடு ஊட்டியையும் அறுத்தார்; உறுபிறப்பரிவாரொத்தார்=மிக்க பிறவியின்வேரை அறுத்துவிடுவோரை யொத்தவர்.—எ-று. கொல்-அசை. (கஎ)

ஊட்டி=விழுங்குதற்கிடனுயமுடிச்சு: உள்ளந்தண்டு=அதனருகிலுள்ள பெருநரம்பு.

மாசறு சிந்தையன்பர் கழுத்தரி யரிவாட்பற்றும்
ஆசில்வண் கையைமாற்ற வம்பலத் தாடுமையர்
வீசிய செய்யகையு மாவடுவிடேல் விடேலென்
ருேசையுங் கமரினின்று மொக்கவே யெழுந்ததன்றே.

(இ-ள்.) மாசறுசிந்தையன்பர் = குற்றமற்ற மனத்தையுடையதாய நாயனுர் ; கழுத்தரியரிவாட்பற்றும்=தம்முடைய கழுத்தையரியும் அரிவாளைப்பிடித்திருக்கும் ; ஆசில்வண்கையைமாற்ற=சிறப்பமைந்தவண்மையையுடைய கையைநீக்க ; அம்பலத்தாடுமையர்=அம்பலத்தின்கண் ஆடியருளும் பிரானுரது ; வீசியசெய்யகையும்=வீசியெடுத்த சிவந்ததிருக்கரமும்; மாவடுவிடேல்விடேலென்ருேசையும் = மாவடுவினின்றும் உண்டாகின்ற விடேல் விடேல் என்னும் ஒலியும் ; கமரினின்று மொக்கவேயெழுந்தது = நிலப்பிளப்பினின்றும் ஒருங்கு உண்டாயிற்று.—எ-று. (கஅ)

எழுந்தது என்றது பன்மையிலொருமைமயங்கியது. அன்று - ஏ - அசை. கால்வற்றி நடைதள்ளாடி வடுவரிசி கீரைகமரிற் சிந்தநாயனுர் அமுதுசெய்யவில்லையேயென்னும் பத்திமிகுதியாற் றன்குற்றத்திற்கே பரிந்து அரிவாட்பூட்டியூட்டியரியவும் இவர்பேரன்பிற்குச் சிவபிரான் கமரில் வெளிப்பட்டருளியவாறிதனுற் காண்க.

திருக்கைசென் றரிவாட்பற்றுந் திண்கையைப் பிடித்தபோது
வெருக்கொடங் கூறுநீங்க வெவ்வினை விட்டுநீங்கிப்
பெருக்கவே மகிழ்ச்சிநீடத் தம்பிரான் பேணித்தந்த
அருட்பெருங் கருணைநோக்கி யஞ்சலி கூப்பிநின்று.

(இ-ள்.) திருக்கைசென்று=சிவபிரானது அழகிய திருக்கரமானது வெளிப்பட்டு; அரிவாட்பற்றுந் திண்கையைப்பிடித்தபோது=அரிவாளைப் பிடித்துக்கொண்டிருக்கும் நாயனுரது வலியகையைப்பிடித்தகாலத்து ; வெருக்கொடங்கூறுநீங்க=அச்சங்கொண்டு அரிவாளரிந்த ஊறுனது நீங்கிவிட; வெவ்வினைவிட்டுநீங்கி=கொடியதீவினை தம்மைவிட்டு நீங்கி ; பெருக்கவே மகிழ்ச்சிநீட=மிகவும்மகிழ்ச்சி உண்டாகும்படி ; தம்பிரான்பேணித்தந்த=சிவபிரான் விரும்பிக்கொடுத்த ; அருட்பெருங்கருணைநோக்கி=அருளாகிய பெருங்கருணையைக்கண்டு ; அஞ்சலிகூப்பிநின்று=அஞ்சலியாய்க்கையைக் குவித்துக்கொண்டு நின்று.எ-று.

அடியனே னறிவிலாமை கண்டுமென் னடிமைவேண்டிப்
படிமிசைக் கமரில்வந்திங் கமுதுசெய் பரனேபோற்றி
துடியிடை பாகமான தூயநற் சோதிபோற்றி
பொடியணி பவளமேனிப் புரிசடைப் புராணபோற்றி.

(இ-ள்.) அடியனேனறிவிலாமைகண்டும்=அடியேனது அறியாமையை அறிந்தும்; என்னடிமைவேண்டி = என்னை அடிமையாகக்கொள்ள விரும்பி; படிமிசைக்கமரில்வந்து=நிலப்பிளப்பின்கண்வந்து; இங்கமுது செய்பரனேபோற்றி=இங்கே திருவமுதுசெய்கின்ற பரம்பொருளே இரட்சி; துடியிடைபாகமான = உடுக்குப்போலும் இடையையுடைய உமாதேவியைப் பாகத்திலுடைய; தூயநற்சோதிபோற்றி= தூய்மையான நல்ல ஒளிப்பிழம்பே இரட்சி; பொடியணிபவளமேனி=விபூதியணிந்த பவளம்போன்ற திருமேனியையும்; புரிசடைப் புராணபோற்றி=முறுக்கிய சடையையும் உடைய பழையோரே இரட்சி.எ-று.

என்றவர் போற்றிசெய்ய விடபவா கனராய்த்தோன்றி
நன்றுநீ புரிந்தசெய்கை நன்னுத லுடனேகூட
என்றுநம் முலகில்வாழ்வா யென்றவ ருடனேநண்ண
மன்றுளே யாடுமையர் மழவிடை யுகைத்துச்சென்றார்.

(இ-ள்.) என்றவர் போற்றிசெய்ய=என்றிவ்வாறுஅந்நாயனார்துதிசெய்ய; இடபவாகனராய்த்தோன்றி=இடபவாகனத்தின்மேற் காட்சிகொடுத்து; நன்று நீபுரிந்தசெய்கை=நீ செய்த திருத்தொண்டானது நன்றாயிருந்தது; நன்னுதலுடனேகூட=நல்ல நுதலினையுடைய உன் மனையாளோடு வந்து; என்றுநம்முலகில்வாழ்வாயென்று=எந்நாளும் நமது சிவலோகத்தில் வாழக்கடவை என்றருளிச்செய்து; அவர்உடனேநண்ண=அத்தொண்டரும் அவர்மனைவியாரும் தம்முடனேவர; மன்றுளேயாடுமையர்=திருவம்பலத்தின்கண் நிருத்தஞ்செய்தருளும் சிவபிரானார்; மழவிடையுகைத்துச்சென்றார்=இளமையாகிய இடபத்தை நடாத்திக்கொண்டு சிவலோகத்திற் கெழுந்தருளினார்.—எ-று. (உக)

பரிவுறு சிந்தையன்பர் பரம்பொரு ளாகியுள்ள
பெரியவ ரமுதுசெய்யப் பெற்றிலே னென்றுமாவின்
வரிவடு விடேலெனுமுன் வன்கழுத் தரிவாள்பூட்டி
அரிதலா லரிவாட்டாய ராயினார் தூயநாமம்.

(இ-ள்.) பரிவுறு சிந்தையன்பர்=அன்புமிக்க மனத்தையுடைய அத்தாயநாயனார்; பரம்பொருளாகியுள்ள = உலககாரணராயிருக்கின்ற; பெரியவரமுதுசெய்யப் பெற்றிலேனென்று=சிவபிரானார் திருவமுதுசெய்யும்படியான பேற்றை யான் அடைந்திலேனென்று; மாவின்வரிவடுவிடேலெனுமுன் = மாவினது நிறம்பொருந்திய வடுவானது விடேலென் றொலிப்பதற்குமுன்னே; வன்கழுத்தரிவாள்பூட்டி=வலியகழுத்தில் அரிவாளைப்பூட்டி; அரிதலாலரிவாட்டாய

ராயினர் தூயநாமம்=அரிதலினல் அரிவாட்டாயநாயனரென்கின்ற தூய்மையா னதிருநாமத்தையுடையவரானர்.—எ-று. (உஉ)

முன்னிலை கமரேயாக முதல்வனு ரமுதுசெய்யச்
செந்நெலி னரிசிசிந்தச் செவியுற வடுவினேசை
அந்நிலை கேட்டதொண்ட ரடியிணை தொழுதுவாழ்த்தி
மன்னுமா னயர்செய்கை யறிந்தவா வழுத்தலுற்றேன்.

(இ-ள்.) முன்னிலைகமரேயாக = நிலப்பிளப்பே முன்னிலையாயிருக்க; முதல்வனரமுதுசெய்ய=சிவபிரான் திருவமுதுசெய்யவும்; செந்நெலினரிசிசிந்த =சம்பாநெல்லரிசிஅக்கமரிற்சிதற; செவியுறவடுவினேசை=அதனல்தந்திருச்செவியினிடத்து மாவடுவின் விடேலென்னும் ஓசையை; அந்நிலைகேட்டதொண்டர்=அப்பொழுதேகேட்ட அரிவாட்டாய நாயனருடைய; அடியிணைதொழுதுவாழ்த்தி=திருவடிகளை வணங்கித்துதித்து; மன்னுமானயர்செய்கை = நிலைபெற்ற புகழையுடைய ஆனயநாயனரது திருத்தொண்டை; அறிந்தவாவழுத்தலுற்றேன்=அறிந்தவண்ணம் சொல்லத்தொடங்கினேன்.—எ-று. (உ௩)

அரிவாட்டாயநாயனர்புராணம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கூ௩௦.

---

உ

திருச்சிற்றம்பலம்.

## ஆனயநாயனர்புராணம்.

---

வேறு.

மாடு விரைப்பொலி சோலையில் வான்மதி வந்தேறச்
சூடு பரப்பிய பண்ணை வரம்பு சுரும்பேற
ஈடு பெருக்கிய போர்களின் மேக மிளைத்தேற
நீடு வளத்தது மேன்மழ நாடெனு நீர்நாடு.

(இ-ள்.) மாடுவிரைப்பொலி சோலையில் = அருகிலுள்ள வாசனைகமழும் சோலைகளிடத்து; வான்மதி வந்தேற=வெண்மையினை யுடைய சந்திரன்வந்து தவழவும்; சூடுபரப்பிய பண்ணைவரம்பு சுரும்பேற=நெல்லரிகளைப் பரப்பியிருக்கின்ற வயல்வரம்புகளில் வண்டுகள்உயர்ந்துபறக்கவும்; ஈடுபெருக்கிய போர்களின் மேகமிளைத்தேற=ஒன்றுக்கொன்று சமமாக உயர்ந்திருக்கும் நெற்போர்களில் மேகங்கள் இளைப்படைந்து ஏறவும்; நீடுவளத்தது மேன்மழநாடெனும் நீர்நாடு = மிக்கவளத்தினையுடையதுமேன்மழநாடென்று சொல்லும் நீர்வளஞ்சிறந்தநாடு.()

நீவி நிதம்ப வுழத்தியர் நெய்க்குழன் மைச்சூழன்
மேவி யுறங்குவ மென்சிறை வண்டு விரைக்கஞ்சப்
பூவி லுறங்குவ நீள்கயல் பூமலி தேமாவின்
காவி னறுங்குளிர் நீழ லுறங்குவ கார்மேதி.

(இ-ள்.) நீவிநிதம்பவுழத்தியர் = ஆடையைக்கொய்சகம் வைத்துடுத்த கடிதடத்தையுடைய வயல்மாதர்கள் ; நெய்க்குழன்மைச்சூழல்=மயிர்ச்சாந்தூசிய கேசபாரமாகின்ற கரியசூழலினிடத்து ; மேவியுறங்குவமென்சிறைவண்டு= சேர்ந்துதுயில்வனமெல்லிய சிறகினையுடையவண்டுகள் ; விரைக்கஞ்சப்பூவிலுறங்குவ நீள்கயல் =வாசனைகமழும் தாமரைமலரில் துயில்வனநீண்டகயல்மீன்கள் ; பூமலிதேமாவின்காவின்=பூக்கள்நிறைந்த தேமாஞ்சோலையின்; நறுங்குளிர்நீழல் =நறுமணங்கமழுங்குளிர்ந்த நிழலில் ; உறங்குவகார்மேதி = துயில்வன கருமையாகிய எருமைகள்.—எ-று. (௨)

வன்னிலை மள்ள ருகைப்ப வெழுந்த மரக்கோவை
பன்முறை வந்தெழு மோசை பயின்ற முழக்கத்தால்
அன்ன மருங்குறை தண்டுறை வாவி யதன்பாலைக்
கன்ன லடும்புகை யான்முகில் செய்வ கருப்பாலை.

(இ-ள்.) வன்னிலைமள்ளர் = வலியநிலைமையினை யுடைய பள்ளர்கள் ; உகைப்பவெழுந்தமரக்கோவை=(மாடுகள்பூட்டி)ஓட்டுதலால் சுற்றுகின்ற கரும்பாலைக்கோவைமரங்கள் ; பன்முறை வந்தெழும்=பலதரமும் சுற்றிவருதலால் எழாநின்ற ; ஓசைபயின்ற முழக்கத்தால் = ஓசையோடுகூடியமுழக்கத்தினால் ; அன்னமருங்குறை = அன்னங்கள் அருகில் வாசஞ்செய்கின்ற ;தண்டுறை வாவியதன்பால்=குளிர்ச்சியினையுடைய வாவியின்பக்கத்து ; கன்னலடும் புகையால் = கருப்பஞ்சாற்றைக் காய்ச்சுகின்ற புகையினால் ; முகில்செய்வகருப்பாலை= முகிலைக்காட்டுகின்றன கரும்பாலைகள்.—எ-று. ஐ-அசை. (௩)

பொங்கிய மாநதி நீடலை யுந்து புனற்சங்கந்
துங்க விலைக்கத லிப்புதன் மீது தொடக்கிப்போய்த்
தங்கிய பாசடை சூழ்கொடி யூடு தவழ்ந்தேறிப்
பைங்கமு கின்றலை முத்த முதிர்க்குவ பாளையென.

(இ-ள்.) பொங்கியமாநதிநீடலையுந்துபுனற்சங்கம் = பிரவாகிக்குங்கால் பொங்குகின்ற பெரியகாவிரியினுடைய நீண்ட அலைகளால் ஒதுக்கப்பட்ட நீரிலிருக்கின்ற சங்குகள் ; துங்கவிலைக்கதலிப் புதன்மீது தொடக்கிப்போய்த்தங்கிய= உயர்ந்த இலையினையுடைய வாழைப்புதல்களின் மேல்தொடக்குண்டுகமுகமரத்திற்றுவிய ; பாசடைசூழ்கொடியூடுதவழ்ந்தேறி=பசியஇலைசூழ்ந்த கொடிவழியாகத் தவழ்ந்து ஏறி ; பைங்கமுகின்றலைமுத்தமுதிர்க்குவபாளையென = பசியகமுக

மரத்தினது தலைமேல் முத்தங்களைச் சொரிவன அக்கமுகம் பாளையினின்றும் பூச் சொரிவதுபோல.—எ-று. (௪)

அல்லி மலர்ப்பழ னத்தய லாகிள வானீனும்
ஒல்லை முழுப்பையு கைப்பி னுழக்கு குழக்கன்று
கொல்லை மடக்குறு மான்மறி யோடு குதித்தோடு
மல்கு வளத்தது முல்லை யுடுத்த மருங்கோர்பால்.

(இ-ள்.) அல்லிமலர்ப்பழனத்தயலாகிளவானீனும்=அகவிதழ்தங்கிய மலர்களையுடைய வயல்களினருகில் மிக்க இளமையான பசுவீன்ற; ஒல்லைமுழுப்பையுகைப்பினுழக்கு குழக்கன்று=விரைவாகச் சிறுபுதல்களைக் காலுதையினால் உழக்குகின்ற இளங்கன்றானது; கொல்லைமடக்குறுமான்மறியோடு குதித்தோடும் = கொல்லையிலிருக்கின்ற மடமையினையுடைய சிறியமான்கன்றுகளோடு குதித்துச் செல்லும்; மல்குவளத்தது முல்லையுடுத்த மருங்கோர்பால்=நிறைந்தவளத்தினையுடைத்தாயிருக்கும் முல்லைநிலத்தைச்சூழ்ந்த நிலத்தின் ஓர்பகுதியில்.—எ-று. ()

கண்மலர் காவிகள் பாய விருப்பன கார்முல்லைத்
தண்ணகை வெண்முகை மேவு சுரும்பு தடஞ்சாலிப்
பண்ணை யெழுங்கயல் பாய விருப்பன காயாவின்
வண்ண நறுஞ்சினை மேவிய வஞ்சிறை வண்டானம்.

(இ-ள்.) கார்முல்லைத்தண்ணகை வெண்முகைமேவுசுரும்பு= கார்ப்பருவத்திற்குரிய முல்லையினது குளிர்ந்த ஒளியினையுடைத்தாகிய வெள்ளிய அரும்பினிடத்திருக்கும் வண்டுகள்; கண்மலர்காவிகள்பாயவிருப்பன = தேன்கள்மலர்ந்த காவிகளினிடத்திலிருந்து பாயும்படி இருக்கின்றன; காயாவின் வண்ணநறுஞ்சினைமேவிய வஞ்சிறைவண்டானம்=காயாமரத்தினது கரிய நறுமணங்கமழும் கிளைகளில் இருக்கின்ற அழகிய சிறகினையுடைய நாரைகள்; தடஞ்சாலிப்பண்ணையெழுங் கயல்பாயவிருப்பன=விசாலமான நெற்பயிர்களையுடைய வயலினிடத்தெழாநின்ற கயல்மீன்கள் பாயும்படியாய் இருக்கின்றன.—எ-று. (௬)

இவ்விரண்டும் திணைமயக்கமாய்வந்தன. தண்ணகைவெண்முகை மேவுசுரும்பு என்னுங்கால் குளிர்ந்தமாதர்களது தந்தவரிசைபோலும் முகையின்கண் தங்கும் சுரும்புகள் என்றுரைத்தலுமொன்று.

பொங்கரில் வண்டு புறம்பலை சோலைகண் மேலோடும்
வெங்கதிர் தங்க விளங்கிய மேன்மழ நன்னாடாம்
அங்கது மண்ணி னருங்கல மாக வதற்கேயோர்
மங்கல மானது மங்கல மாகிய வாழ்மூதூர்.

(இ-ள்.) பொங்கரில்வண்டு புறம்பலைசோலைகள்=மரக்கோடுகளிலிருக்கின்ற வண்டுகள்புறத்தில் அலைகின்ற சோலைகள்; மேல்ஓடும்வெங்கதிர்தங்கவிளங்கிய = மேலேசெல்லும் சூரியன் தடைப்படும்படி உயர்ந்திருக்கும்; மே

ன்மழநன்னுடாம் = நல்லமேன்மழநாடாகிய ; அங்கதுமண்ணினருங்கலமாக = அந்நாடானது நிலவுலகத்தின் ஓராபரணமாக விளங்க ; அதற்கேயோர் மங்கல மானது=அம்மேன்மழநாட்டிற்கே ஓர்மங்கலகரமாயுள்ளது ; மங்கலமாகிய வாழ் மூதூர்=திருமங்கலமென்னும் பெயரிணையுடைத்தாகிய செல்வந்தங்கிய பழமை யாகிய ஊர்.—எ-று. (எ)

ஒப்பில் பெருங்குடி நீடிய தன்மையி லோவாமே
தப்பில் வளங்கள் பெருக்கி யறம்புரி சால்போடுஞ்
செப்ப வுயர்ந்த சிறப்பின் மலிந்தது சீர்மேவும்
அப்பதி மன்னிய வாயர் குலத்தவ ரானயர்.

(இ-ள்.) ஒப்பில்பெருங்குடிநீடிய தன்மையில்=(அது)உவமிக்கப்படாத பெரியநான்கு வருணத்துக்குடிகளும் மிக்கிருக்கும் இயல்பினல் ; ஓவாமேதப்பில் வளங்கள்பெருக்கி=குறைவுபடாமல் குற்றமற்ற பலவளங்களையும் பெருக்கி ; அற ம்புரிசால்போடும்=தருமஞ்செய்கின்ற மேன்மையால்; செப்ப வுயர்ந்த சிறப்பின் மலிந்தது=யாவரும் எடுத்துக்கூறும்படி உயர்வடைந்தசிறப்பினல் மேம்பட்டது ; சீர்மேவுமப்பதிமன்னிய=அவ்வித சீரையுடைத்தாயிருக்கும் அத்திருமங்கலமெ ன்னுந் திருப்பதியின்கண்வாழ்கின்ற ; ஆயர்குலத்தவரானயர் = இடையர்களது குலத்தில்அவதரித்தவர் ஆனயநாயனர்.—எ-று. (அ)

ஆயர் குலத்தை விளக்கிட வந்துத யஞ்செய்தார்
தூய சுடர்த்திரு நீறு விரும்பு தொழும்புள்ளார்
வாயினின் மெய்யின் வழுத்து மனத்தின் வினைப்பாலிற்
பேயுட னுடு பிரானடி யல்லது பேணுதார்.

(இ-ள்.) ஆயர்குலத்தைவிளக்கிடவந்துதயஞ்செய்தார்=(அவர்)இடையர் குலத்தை விளக்குதற்குவந்து அவதாரஞ்செய்தவர் ; தூயசுடர்த் திருநீறு விரும் புதொழும் புள்ளார்=தூய்மையான ஒளியினையுடைய விபூதியை விரும்புகின்ற அடித்தொண்டுள்ளவர்; வாயினின் மெய்யின் வழுத்துமனத்தின்வினைப்பாலில்= வாக்கினலும் காயத்தினலும் துதிக்கும் மனத்தினலும் (வாழ்த்துதலும்வணங்குத லும் நினைத்தலுமாகிய) வியாபாரங்களால் ; பேயுடனுடு பிரானடியல்லதுபேணு தார்=பேயோடு ஆடுகின்ற சிவபிரான் திருவடியல்லது வேறென்றையும் விரும் பாதவர்.—எ-று. (கூ)

ஆனிரை கூட வகன்புற விற்கொடு சென்றேறிக்
கானுறை தீய விலங்குறு நோய்கள் கடிந்தெங்குந்
தூநறு மென்பு லருந்தி விரும்பிய தூநீருண்
டேனமி லாய முலப்பில பல்க வளித்துள்ளார்.

(இ-ள்.) ஆனிரைகூடவகன்புறவிற்கொடுசென்றேறி=(அவர்) பசுக்கூட் டங்களை ஒருங்கு விசாலமான முல்லைநிலத்திற்கொண்டுபோய் ; கானுறைதீயவில

ங்குறு நோய்கள்கடிந்து=காட்டில்வாழும்(புலிமுதலான)தீயமிருகங்களால் உண்டாகின்ற துன்பத்தைநீக்கி; எங்குந்தூநறு மென்புலருந்திவிரும்பியதூநீருண்டு = எங்குந்தூய்மையாகிய நல்லமிருதுவான புல்லைமேய்ந்து விரும்பத்தக்க தூய்மையானநீரையுண்டு; ஊனமிலாய முலைப்பிலபல்க வளித்துள்ளார்=குற்றமற்ற பசுக்கூட்டங்கள் எண்ணிறந்தன விருத்தியடையும்படி நாள்தோறுங் காப்பாற்றுகின்றவர்.—எ-று. (௰)

கன்றொடு பான்மறை நாகு கறப்பன பாலாவும்
புன்றலை மென்சினை யானொடு நீடு புனிற்றாவும்
வென்றி விடைக்குல மோடு மினந்தொறும் வெவ்வேறே
துன்றி நிறைந்துள சூழ லுடன்பல தோழங்கள்.

(இ-ள்.) கன்றொடுபான்மறைநாகுகறப்பன பாலாவும் = கன்றுகளோடு பால்மறுத்த பசுக்களும் இளங்கன்றுகளோடு கறக்கின்ற பாலினையுடைய பசுக்களும்; புன்றலை மென்சினையானொடுநீடு புனிற்றாவும்=புல்லிய தலையினையுடைய மிருதுவானசினைப்பசுவோடுமிக்க ஈன்றணிமைத் தானபசுவும்; வென்றிவிடைக்குலமோடு = வெற்றியினையுடைய இடபங்களோடு; இனந்தொறும் வெவ்வேறே=பசுத்தொகுதிகள்தோறும் தனித்தனி; துன்றிநிறைந்துளசூழலுடன் பல தோழங்கள் = சோலைகளோடு பலதொழுவங்களிலும் நெருங்கி நிறைந்துள்ளன.—எ-று. விடைக்குலமோடும் என்பதில் உம்-அசை. (௧௧)

ஆவி னிரைக்குல மப்படி பல்க வளித்தென் றுங்
கோவல ரேவல் புரிந்திட வாயர் குலம்பேணுங்
காவலர் தம்பெரு மானடி யன்புறு கானத்தின்
மேவு துளைக்கரு விக்குழல் வாசனை மேல்கொண்டார்.

(இ-ள்.) ஆவினிரைக்குலமப்படி பல்கவளித்து = பசுக்கூட்டங்களின் தொகுதியை அவ்வாறாக நாள்தோறும் விருத்தியடையும்படி காப்பாற்றி; என்றுங்கோவலரேவல்புரிந்திட=எந்நாளும் இடையர்கள் தாம்இட்ட பணிவிடையைச் செய்யும்படி; ஆயர்குலம்பேணுங்காவலர் = அவ்விடையர் கூட்டத்தைக் காப்பாற்றும் முதல்வராகிய ஆனாயநாயனார்; தம்பெருமானடியன்புறு = தமது முதல்வராகிய சிவபிரானது திருவடிக்கு அன்புமிக்க; கானத்தின்மேவு துளைக் கருவிக் குழல் வாசனைமேல் கொண்டார்=இசையோடுகூடிய இன்னிசைத்துளைக்கருவியாகிய புள்ளாங்குழலை வாசித்தலைமேற் கொண்டொழுகுவாரானார்.-எ-று.

வேறு.

முந்தைமறை நூன்மரபின் மொழிந்தமுறை யெழுந்தவே
யந்தமுத லிரண்டி லரிந்துநரம் புறுதானம்
வந்ததுளை நிரையாக்கி வாயுமுதல் வழங்குதுளை
யந்தமில்சீ ரிடையிட்டி னங்குலியெண் களினமைத்து.

(இ-ள்.) முந்தைமறைநூன்மரபின் மொழிந்தமுறை=பழமையான காந்தருவவேதம் முறைமையாற்கூறிய விதிப்படி (இருபதுவிரல் நீளத்தில் ஒர்கணு

வும் சுற்றுநாலரைவிரலு முள்ளதாய்) ; எழுந்தவேய்=எழுந்தமூங்கிலே ; அந்தமுத லிரண்டி லரிந்து = அந்தத்தில் இரண்டும் முதலில் நாலும் நீக்கி (மேற்கூறிய இருபதுவிரல் அளவில்) அரிந்து ; நரம்புறுதானம் வந்ததுளே = தந்திரித்தான த்தில் செய்யப்பட்ட எட்டுத்துளைகளையும் ; வாயுமுதல்வழங்குதுளே=வாய்வைத் தூதும் துளையையும் ; அந்தமில்சீரிடையீட்டின் = குற்றமில்லாத சிறப்போடு எட்டுத்துளையும் (ஒவ்வோரரிசியளவாக) ; அங்குலிஎண்களின் நிரையாக்கியமை த்து= அங்குலிவிரல்கள் வரிசையாக இடைவிட்டு ஏற்றவாறுசெய்து.—எ-று. ()

காந்தருவவேதம் உபவேதத்துள் ஒன்றுதலின் முந்தைமறைநூலென்றார். உபவேதங்களாவன:— ஆயுள்வேதம் தனுவேதம் காந்தருவவேதம் சிற்பம் என இவை. நரம்புறுதானம் என்றது மெட்டுவைக்குந் துளைத்தானம் தந்திரித்தான மெனினுமொக்கும். எனவேகடைந்த வெண்கலத்தால் இடப்பால் அணையிட்ட டைத்துவளைவாயாகிய வலப்பால் அடையாதுதிறந்து முகத்தில் இருவிரல் நீக்கிமு தல்வாய்விட்டு அதற்கு ஏழுவிரலும் வளைவாயில் இரண்டுவிரலும் நீக்கிநின்ற ஒன் பதுவிரலினும் ஒருவிரல் எட்டுத்துளையிட்டுச்செய்த வங்கியத்தை என்க. வளைவா ய்க்கடுத்த எட்டாவதுதுளை முத்திரையெனவும் ஏழுதுளையும் முறையே சத்தசுர மெனவும் கூறப்படும்."இருவிரல்கணீக்கி முதல்வா யேழ்நீக்கி, மருவுதுளையெட்டு மன்னும், பெருவிரல்க, ளுலஞ்சுகொள்க பரப்பென்று நன்னுதலாய்,கோலஞ்செ ய்வங்கியத்தின்கூற்று" சரிகமபதனியென் றேழெழுத்தாற்றனம், வரிபரந்த கண் ணினய் வைத்துத், தெரிவரிய, ஏழிசையுந்தோன்று மிதனுள்ளே பண்பிறக்கும், சூழ்முதலாஞ் சுத்ததுளே, என்பதனுனுணர்க. (௩௩)

எடுத்தகுழற் கருவியினி லெம்பிரா னெழுத்தஞ்சுந்
தொடுத்தமுறை யேழிசையின் சுருதிபெற வாசித்துத்
தடுத்த சராசரங்களெலாந் தங்கவருந் தங்கருணை
யடுத்த விசையமுதளித்துச் செல்கின்றா ரங்கொருநாள்.

(இ-ள்.) எடுத்தகுழற் கருவியினில்=மேற்சொல்லியவாறமைத்த புள்ளா ங்குழலில் ; எம்பிரானெழுத்தஞ்சும்=எமது சிவபிரான் திருவெழுத் தைந்தினை யும் ; தொடுத்தமுறையேழிசையின் சுருதிபெறவாசித்து=வைத்தமுறைப்படி ஏ ழுசுரங்களுக்குரியசுருதிகள் அமையும்படி வாசித்து ; தடுத்தசராசரங்களெலாந் தங்கவரும்=இசையால் தடுக்கப்பட்ட சரம் அசரமாகிய எல்லா உயிர்வர்க்கங்க ளும் உருகிநிற்றற்கேதுவாகவரும்; தங்கருணையடுத்த=தமது காருணியத்தாலாய; இசையமுதளித்துச் செல்கின்றா ரங்கொருநாள்=கானமாகிய அமுதத்தையூட்டிச் செல்கின்ற அவர் அவ்வாறொழுகும் ஓர்நாள்.—எ-று. (௩௪)

வாசமலர்ப் பிணேபொங்க மயிர்நுழுதி மருங்குயர்ந்த
தேசுடைய சிகழிகையிற் செறிகண்ணித் தொடைசெருகிப்
பாசிலைமென் கொடியின்வடம் பயிலநறு விலிபுனைந்து
காசுடைநா ணதற்கயலே கருஞ்சுருளின் புறங்கட்டி.

(இ-ள்.) வாசமலர்ப் பிணேபொங்க = வாசனைகமழும் மலராற்றொடுத்த பிணையன்மாலையானது பொலிவடைய ; மயிர்நுழுதிமருங்குயர்ந்த = மயிரைக்

கோதி வலப்புறம் உயரமுடித்த ; தேசுடைய சிகழிகையில் = ஒளியினையுடைய மயிர்முடியில் ; செறிகண்ணித்தொடைசெருகி = நெருங்கிய கண்ணிமாலையைச் சூடி (அதன்மேல்); பாசிலைமென்கொடியின்வடம்பயில=பசிய இலைக்கொடியின் வடமொன்றுபொருந்த ; நறுவிலிபுனைந்து = அதில் நறுவிலிக்காயையுங்கட்டி ; காசுடைநாண்=பொற்காசினையுடைய மயிர்க்கயிற்றை ; அதற்கயலேகருஞ்சுருளின்புறங்கட்டி = மேற்கூறிய கொடிவடத்தின் அருகே கரிய மயிர்முடியின் புறத்துக்கட்டி.—எ-று. (கரு)

வெண்கோட லிலைச்சுருளிற் பைந்தோட்டு விரைத்தொன்றித்
தண்கோல மலர்புனைந்த வடிகாதி னொளிதயங்கத்
திண்கோல நெற்றியின்மேற் றிருநீற்றி னொளிகண்டோர்
கண்கோட னிறைந்தாராக் கவின்விளங்க மிசையணிந்து.

(இ-ள்.) வெண்கோடலிலைச்சுருளில்=வெண்காந்தளிலையைச் சுருளாகச் செய்துவைத்து ; பைந்தோட்டு விரைத்தொன்றித் தண்கோல மலர்புனைந்த = பசுமையாகிய இதழையுடைய மணங்கமழும் செங்காந்தளின் குளிர்ச்சியுடைத்தாகிய அழகிய பூக்களைத்தூக்கிய; வடிகாதினொளிதயங்க=வடிந்த காதினொளியானதுவிளங்க ; திண்கோலநெற்றியின்மேல் = மிக்கஅழகுள்ளநெற்றியின்மீது ; திருநீற்றினொளிகண்டோர் கண்கோடனிறைந்து = விபூதியினொளியானது கண்டவர்களுடைய கண்களைக் கவரும்படி நிறைவடைந்து ; ஆராக்கவின்விளங்கமிசையணிந்து=அடங்காத ஒளி விளங்கும்படிப்பூசி.—எ-று. (கசு)

நெற்றிமேற் பூசி என இயையும்.

நிறைந்தநீ றணிமார்பி னிரைமுல்லை முகைசுருக்கிச்
செறிந்தபுனை வடந்தாழத் திரடோளின் புடையலங்கல்
அறைந்தசுரும் பிசையரும்ப வரையுடுத்த மரவுரியின்
புறந்தழையின் மலிதானைப் பூம்பட்டுப் பொலிந்தசைய.

(இ-ள்.) நிறைந்தநீறணிமார்பில்=நிறைவாகியவிபூதியைத்தரித்ததிருமார்பில் ; நிரைமுல்லைமுகைசுருக்கிச் செறிந்தபுனைவடந்தாழ=வரிசையாக முல்லையரும்பைச் சுருக்கிக்கட்டப்பட்ட அலங்காரமாகிய மாலைதாழவும் ; திரடோளின் புடையலங்கல்=திரண்ட தோள்களினிடத்துத் தாழ்ந்தமாலைகளில் ; அறைந்தசுரும் பிசையரும்ப=ஒலிக்கின்ற வண்டுகள் இசைபாடவும்; அரையுடுத்த மரவுரியின்புறம்=திருவரையிலுடுத்த மரவுரியின்புறத்து ; தழையின்மலிதானை=தழையாற்செய்த முன்தானையையுடைய; பூம்பட்டுப்பொலிந்தசைய=பூம்பட்டானது பொலிவடைந்தசையவும்.—எ-று. (கஎ)

சேவடியிற் றொடுதோலுஞ் செங்கையினில் வெண்கோலு
மேவுமிசை வேய்ங்குழலு மிகவிளங்க வினைசெய்யுங்
காவல்புரி வல்லாயர் கன்றுடையா னிரைசூழப்
பூவலர்தார்க் கோவலனர் நிரைகாக்கப் புறம்போந்தார்.

(இ-ள்.) சேவடியிற்றொடுதோலும்=சிவப்பாகிய திருவடியில் செருப்பும்; செங்கையினில் வெண்கோலும்=சிவந்த திருக்கரத்தில் வெள்ளியகோலும்; மேவுமிசை வேய்ங்குழலும்=இசைபொருந்திய புள்ளாங்குழலும்; மிகவிளங்க=மிகவும் பிரகாசிக்கவும்; வினைசெய்யுங்காவல்புரிவல்லாயர்=நாயனாரது ஏவற்றொழிலைச்செய்யும் பசுக்களைக்காக்கின்ற வலிய இடையர்களும்; கன்றுடையா னிரைசூழ=கன்றோடுகூடிய பசுக்கூட்டங்களும் சூழ்ந்துவரவும்; பூவலர்தார்க்கோவலனார்=பூக்கள் மலர்ந்த மாலையையுடைய ஆனாய நாயனார்; நிரைகாக்கப் புறம்போந்தார்=அப்பசுக்கூட்டங்களைக் காக்கும்படி புறத்தில்வந்தார்.—எ-று. (கஅ)

நீலமா மஞ்ஞையேங்க நிரைக்கொடி புறவம்பாடக்
கோலவெண் முகையேர்முல்லைக் கோபம்வாய் முறுவல்காட்ட
ஆலுமின் னிடைசூழ்மாலைப் பயோதர மசையவந்தாள்
ஞாலநீ டரங்கிலாடக் காரெனும் பருவநல்லாள்.

(இ-ள்.) நீலமாமஞ்ஞையேங்க = நீலநிறத்தையுடைய பெருமையான மயில்கள் ஒலிக்கவும்; நிரைக்கொடி புறவம்பாட = வரிசையான கொடிகளினுள்ள (வண்டுகள்) முல்லைப்பண்ணைப்பாடவும்; கோலவெண்முகையேர்முல்லைக்கோபம் = அழகிய வெண்மையாகிய முகையினாற் சிறந்த முல்லையரும்புகளும் இந்திரகோபமும்; வாய்முறுவல்காட்ட=வாயையும் பற்களையும் காட்ட; ஆலுமின்னிடை=அசைகின்ற மின்னாகிய இடையோடு; சூழ்மாலைப் பயோதர மசையவந்தாள் = சூழ்ந்தமாலைக்காலத்து வருமேகமாகிய முலைகள் அசையும்படி வந்தாள்; ஞாலநீடரங்கிலாட=நிலவுலகமாகிய பெரியசபையில் ஆடும்படி; காரெனும்பருவநல்லாள்=கார்காலமாகிய பருவத்தையுடைய பெண்ணானவள்.—எ-று.

கொடிப்புரவம்பாட என்புழி கட்டில்கூப்பிட்டதென்றாற்போல இலக்கணையாகக்கொள்க.

எம்மருங்கு நிரைபரப்ப வெடுத்தகோ லுடைப்பொதுவர்
தம்மருங்கு தொழுதணையத் தண்புறவில் வருந்தலைவர்
அம்மருங்கு தாழ்ந்தசினை யலர்மருங்கு மதுவுண்டு
செம்மருந்தண் சுரும்புசுழல் செழுங்கொன்றை மருங்கணைந்தார்.

(இ-ள்.) எம்மருங்கு நிரைபரப்ப=நாற்புறத்திலும் பசுக்கூட்டங்களைப் பரவச்செய்யும்படி; எடுத்தகோலுடைப்பொதுவர்=கையிலெடுத்தகோலையுடைய இடையர்கள்; தம்மருங்கு தொழுதணைய = தம்மருகு தொழுதுகொண்டுவர; தண்புறவில் வருந்தலைவர்=குளிர்ந்தமுல்லைநிலத்தில் வருகின்ற ஆனாயநாயனார்; அம்மருங்கு=அவ்விடத்து; தாழ்ந்தசினை=தாழ்ந்திருக்கும் கிளைகளிலுள்ள; அலர் மருங்குமதுவுண்டு=பூக்களில் தேனையுண்டு; செம்மருந்தண் சுரும்புசுழல் = களிப்படையும் குளிர்ந்தவண்டுகள் சூழ்ந்த; செழுங்கொன்றை மருங்கணைந்தார்=செழுமையான கொன்றைமரத்தின் சமீபத்தில் அடைந்தார்.—எ-று.(உo)

சென்றணைந்த வானுயர் செய்தவிரைத் தாமமென
மன்றன்மலர்த் துணர்தூக்கி மருங்குதாழ் சடையார்போ
னின்றநறுங் கொன்றையினை நேர்நோக்கி நின்றுருகி
யொன்றிய சிந்தையிலன்பை யுடையவர்பான் மடைதிறந்தார்.

(இ-ள்.) சென்றணைந்தவானுயர்=கொன்றையின் சமீபத்தையடைந்த ஆனாயநாயனார்; செய்தவிரைத்தாமமென=ஒருவராற்கட்டப்பட்ட வாசனைகமழும் மலர்மாலைபோல; மன்றன்மலர்த்துணர்தூக்கி=நறுமணம்வீசும் பூங்கொத்துக்களைத் தன்னிடத்துத்தாங்கி; மருங்குதாழ்சடையார்போல்=புறத்திற் றாழ்கின்ற சடையினையுடைய சிவபிரானையொத்து; நின்றநறுங்கொன்றையினை = நிற்கின்ற நறுவிய கொன்றைமரத்தை; நேர்நோக்கி நின்றுருகி=நேராகப்பார்த்து நின்று மனமுருகி; ஒன்றியசிந்தையிலன்பை=ஒருப்பட்ட தம்முள்ளத்துதிக்கும் பேரன்பை; உடையவர்பான் மடைதிறந்தார் =தம்மையாளாகவுடைய சிவபிரானிடத்து மடைதிறந்து பாயச்செய்தார்.—எ-று. (உக)

அன்பூறி மிசைப்பொங்கு மமுதவிசைக் குழலொலியால்
வன்பூதப் படையாளி யெழுத்தைந்தும் வழுத்தித்தா
முன்பூதி வருமளவின் முறைமையே யெவ்வுயிரும்
என்பூடு கரைந்துருக்கு மின்னிசைவேய்ங் கருவிகளில்.

(இ-ள்.) அன்பூறிமிசைப்பொங்கும்=அன்போடுகலந்து மேலேபொங்குகின்ற; அமுதவிசைக் குழலொலியால் = அமுதம்போலும் புள்ளாங்குழலின் ஓசையினால்; வன்பூதப்படையாளி=வலியபூதப்படையையுடையசிவபிரானது; எழுத்தைந்தும் வழுத்தி = திருவைந்தெழுத்தையும் தோத்திரஞ்செய்து; தாம் முன்பூதிவருமளவின் முறைமையே=தாம்முன்பு ஊதிக்கொண்டுவருகின்ற முறைமைப்படி; எவ்வுயிருமென் பூடுகரைந்துருக்கும்=எவ்வுயிர்களையும் எலும்புள்ளும்சென்று கரைந்துருகச்செய்கின்ற; இன்னிசைவேய்ங்கருவிகளில்=இனிய இசையையுடைய பலவகைப்புள்ளாங்குழல்களுள்.—எ-று. (உஉ)

ஏழுவிர லிடையிட்ட வின்னிசைவங் கியமெடுத்துத்
தாழுமலர் வரிவண்டு தாது பிடிப்பனபோலச்
சூழுமுரன் றெழநின்று தூயபெருந் தனித்துளையில்
வாழியநந் தோன்றலார் மணியதரம் வைத்தூத.

(இ-ள்.) ஏழுவிரலிடையிட்டவின்னிசைவங்கியமெடுத்து=(அரிசியளவிடும் ஓர்துளைக்கு ஒவ்வொரு விரல் இடம்விட்டிருக்கும் முத்திரையென்னும் துவாரத்தோடு) எட்டுத்துவாரங்களையுடைய மேற்கூறிய இனிய இசையோடு கூடிய புள்ளாங்குழலையெடுத்து; தாழுமலர்வரிவண்டு தாதுபிடிப்பனபோல = மலரில் விழுகின்ற வரிபொருந்திய வண்டுகள் அந்தமலரினுள்ள தாதுகளைப்பற்றிக்கொண்டு அசையாமல் ஊதுதல்போல; சூழுமுரன் றெழநின்று=நாற்புறமும் இசை




வநத்தில் பசுநிரை மேய்த்திருந்த ஆனாயநாயனார் கொன்றைமலரைக்கண்டு சிவபிரான் ஜடாபாரமென பாவித்து சராசரங்களெல்லாம் பரவசமாகும்படி குழலிசையால் ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தைஒத சிவபெருமான் அருள்சுரந்து விடையேறி பார்ப்பதிசமேதராய் அநுக்கிரகித்தது.

யானது நிறைந்து பரவும்படி நின்று; தூயபெருந் தனித்துளையில்=புள்ளாங்குழலின் முதலில் இட்ட தூய்மையான பெரிய ஒப்பற்ற துவாரத்தில்; நந்தோன்றலார்=நமது ஆனாயநாயனார்; மணியதரம் வைத்தூத = அழகிய அதரத்தைவைத்து ஊத.—எ-று. (உங)

வங்கியமென்பது புள்ளாங்குழலின் பொதுப்பெயர். வாழிய அசை.

முத்திரையே முதலனைத்து முறைத்தானஞ் சோதித்து
வைத்ததுளை யாராய்ச்சி வக்காணை வழிபோக்கி
யொத்தநிலை யுணர்ந்ததற்பி னொன்றுமுதல் படிமுறையால்
அத்தகைமை யாரோசை யமரோசை களினமைத்தார்.

(இ-ள்.) முத்திரை முதலனைத்தும் = முத்திரைமுதலாக எல்லாத்துளைகளையும்; முறைத்தானஞ்சோதித்து=முறையாகத்தான சோதனைசெய்து; வைத்ததுளையாராய்ச்சி=அமைக்கப்பட்ட துளைகளை யாராய்ச்சிசெய்துபின்; வக்காணைவழிபோக்கி=இராகசோதனையறிய விரல்களைமுறையே போக்கி; ஒத்தநிலையுணர்ந்ததற்பின்=இசையொத்திருத்தலையறிந்தபின்பு; ஒன்றுமுதல் படிமுறையால்=சட்சம்முதல் நிடாதம்வரைக்கும் வரிசையாக; அத்தகைமையாரோசையமரோசைகளி னமைத்தார்=அவ்வாறாக எச்சாகவும் தக்காகவும் அமைத்தருளினார்.—எ-று. ஏ - அசை. (உச)

முத்திரை என்பது வளைவாய்க்கடுத்த எட்டாவதுதுளை. ஒன்றுமுதற் படிமுறையால் என்றதனால், அதற்கடுத்ததுளைசட்சமும், அதற்கடுத்ததுளை இடபமும், அதற்கடுத்ததுளை காந்தாரமும், அதற்கடுத்ததுளை மத்திமமும், அதற்கடுத்ததுளை பஞ்சமமும், அதற்கடுத்ததுளை தைவதமும், அதற்கடுத்த முதற்றுளை நிடாதமும், ஆகக்கொள்க. இவ்விசைகள்பிறக்குமிடத்து தாரத்துழையும், உழையிற்குரலும், குரலில் இளியும், இளியுட்டுத்தமும், துத்தத்தில்விளரியும், விளரியுட்கைக்கிளையும், கைக்கிளையுட்டாரமுமாக, ஒன்றிலொன்று பிறக்குமென்றுணர்க.

மாறுமுதற் பண்ணின்பின் வளர்முல்லைப் பண்ணாக்கி
யேறியதா ரமுமுழையுங் கிழமைகொள விடுந்தானம்
ஆறுலவுஞ் சடைமுடியா ரஞ்செழுத்தி னிசைபெருகக்
கூறியபட் டடைக்குரலாங் கொடிப்பாலை யினிநிறுத்தி.

(இ-ள்.) மாறுமுதற்பண்ணின்பின்=சுரங்கள் மாறுபட்டுவருகின்ற குறிஞ்சிப்பண்ணின்பின்; வளர்முல்லைப்பண்ணாக்கி = வளர்ந்தமுல்லைப் பண்ணையமைத்து; ஏறியதாரமுமுழையும்=பாலையாழுக்கமைந்ததாரமும் உழையும்; கிழமைகொளவிடுந்தானம்=பொருந்தும்படி இடப்பட்ட தானங்களில்; ஆறுலவுஞ் சடைமுடியார் = கங்காநதிதவழும் சடைமுடியையுடைய சிவபிரானது; அஞ்செழுத்தினிசைபெருக=திருவைந்தெழுத்தி னிசையானது பெருகும்படி; கூறியபட்டடைக்குரலாம்= (அப்பாலையாழின் பேதங்களைமுடித்துப்பின்பு) சொல்லப்

பட்ட இளியைக்குரலாகவுடைய ; கொடிப்பாலையினினிறுத்தி=கொடிப்பாலையினிடத்து நிறுத்தி.—எ-று. (உ௫)

தாரமும் உழையும் கிழமைகொள என்றதனால் "தாரத்துழைதோன்றப்பாலையாழ்" என்றபடி பின்பாலையாழாக்கி என்க. கூறியபட்டடைக்குரலாங் கொடிப்பாலையினினிறுத்தி என்றமையால் அப்பாலையாழுக்குட் குரல்குரலாய செம்பாலையினும் துத்தங்குரலாய படுமலைப்பாலையினும் கைக்கிளைகுரலாய செவ்வழிப்பாலையினும் உழைகுரலாய அரும்பாலையினும் அமைத்துப்பின் இளிகுரலாய கொடிப்பாலையினினிறுத்தி என்க.

ஆயவிசைப் புகனான்கி னமைந்தபுகல் வகையெடுத்து
மேயதுளைப் பற்றுவன விடுவனவாம் விரனிரையிற்
சேயவொளி யிடையலையத் திருவாள னெழுத்தஞ்சுந்
தூயவிசைக் கிளைகொள்ளுந் துறையஞ்சின் முறைவிளைத்தார்.

(இ-ள்.) ஆயவிசைப் புகனான்கில்=இசைக்குரித்தான பண் பண்ணியல் திறம் திறத்திறம் என்னும் இசைவகைநான்கினும் ; அமைந்தபுகல் வகையெடுத்து=தான்பாடும் கொடிப்பாலைக்கமைந்த கூறுபாடானதிறத்தையெடுத்து ; மேயதுளைப்பற்றுவன விடுவனவாம் விரனிரையில்=நரம்புத்தானத்தில் இருக்கும் ஏழுதுளைகளையும் பொத்துதற்குரியனவும் விடுதற்குரியனவுமாகிய விரல்வரிசையில் உதிக்கும் ; சேயவொளியிடையலைய=சிவந்த ஒளியானது குழலிடத்துச் சஞ்சரிக்கும்படி ; திருவாளனெழுத்தஞ்சும்=சிவபிரானது திருவைந்தெழுத்தையும் ; தூயவிசைக் கிளைகொள்ளும்=தூய்மையான இசையின் பகுப்பைக்கொள்ளும் ; துறையஞ்சின் முறைவிளைத்தார்=ஐந்துதுறையிலும் முறையேபாடினார்.—எ-று.

துளைகளைப் பொத்திவிடுதற்குரிய விரல்களாவன:—இடக்கையில் அங்குட்டமும் கனிட்டையும் நீக்கி மூவிரலும் வலக்கையில் அங்குட்டம்நீக்கி நால்விரலும் ஆக ஏழும் என்க. இசைக்கிளையைந்தாவன:—ஆயத்தம், எடுப்பு, உக்கிரம், சஞ்சாரம், இடாயம், எனவிவை.

மந்தரத்து மத்திமத்துந் தாரத்தும் வரன்முறையாற்
றந்திரிகண் மெலிவித்துஞ் சமங்கொண்டு வலிவித்தும்
அந்தரத்து விரற்றொழில்க ளளவுபெற வசைத்தியக்கிச்
சுந்தரச்செங் கனிவாயுந் துளைவாயுந் தொடக்குண்ண.

(இ-ள்.) மந்தரத்துமத்திமத்தும் = மந்தரச்சுருதியினும் மத்திமச்சுருதியினும் ; தாரத்தும்வரன்முறையால் = தாரச்சுருதியினும் முறைப்படி ; தந்திரிகண்மெலிவித்தும்=சுரத்தானத்திற்குரிய துளைகளைமென்மையாகப்பொத்தியும் ; சமங்கொண்டுவலிவித்தும்=சமமாகப்பொத்தியும்வன்மையாகப்பொத்தியும் ; அந்தரத்துவிரற்றொழில்கள்=இடையீடானதுளைகளின்விரற்றொழில்களை; அளவுபெறவசைத்தியக்கி=அளவுகுறையாமல் அசைத்து இயக்குவித்து ; சுந்தரச்செங்க

னிவாயும்=அழகியசிவந்த கனிபோலும் அதரமும்; துளைவாயுந்தொடக்குண்ண = புள்ளாங்குழலின் துளைவாயும் ஒன்றுபட்டிணங்க.—எ-று. (௨௭)

மந்தரம்—படுத்தலோசை. மத்திமம்—நலிந்தஓசை. தாரம்—எடுத்தலோசை.

எண்ணியநூற் பெருவண்ண மிடைவண்ணம் வனப்பென்னும்
வண்ணவிசை வகையெல்லா மாதுரிய நாதத்தி
னண்ணியபா ணியுமியலுந் தூக்குநடை முதற்கதியிற்
பண்ணமைய வெழுமோசை யெம்மருங்கும் பரப்பினார்.

(இ-ள்.) எண்ணியநூற்பெருவண்ணம்=இசைநூலிற்கூறியபெருவண்ணம்; இடைவண்ணம்வனப்பென்னும்=இடைவண்ணம்வனப்புஎன்னும்; வண்ணவிசைவகையெல்லாம்=அழகிய இசையின் வகைமையெல்லாம்; மாதுரியநாதத்தின்=மதுரமான இனிமையைக்கொடுக்கும் நாதத்தால்; நண்ணியபாணியுமியலும்=அமைந்ததாளமும் இராகமும்; தூக்குநடைமுதற்கதியில்=ஆராயும் நடைமுதலானகதியோடு; பண்ணமையவெழுமோசை=பண்ணானது அமையும்படிக்கு எழுகின்ற ஓசையை; எம்மருங்கும்பரப்பினார்=எவ்விடத்தும்பரவச்செய்தார்.—எ-று.

செய்யுளுக்கு வண்ணம் வனப்புப்போல, இசைநூலிற்பண்ணுக்குப்பெருவண்ணம் இடைவண்ணம் வனப்புமுதலியகூறப்படும் அவை இக்காலத்தரியன.

வள்ளலார் வாசிக்கு மணித்துளைவாய் வேய்ங்குழலின்
உள்ளுறையஞ் செழுத்தாக வொழுகியெழு மதுரவொலி
வெள்ளநிறைந் தெவ்வுயிர்க்கு மேலமரர் தருவிளைதேன்
றெள்ளமுதி னுடன்கலந்து செவிவார்ப்ப தெனத்தேக்க.

(இ-ள்.) வள்ளலார்வாசிக்கும்=இவ்வாறுஆனாயநாயனார்வாசிக்கின்ற; மணித்துளைவாய்வேய்ங்குழலின்=அழகியதுளையையுடைய புள்ளாங்குழலின்; உள்ளுறையஞ்செழுத்தாக=உள்ளீடானது திருவைந்தெழுத்தாக; ஒழுகியெழுமதுரவொலி=எவ்விடத்தும் பரம்பி எழுகின்ற மாதுரிய ஓசையாகிய; வெள்ளநிறைந்தெவ்வுயிர்க்கும்=வெள்ளம்நிறைவுபெற்று எல்லாவுயிர்களுக்கும்; மேலமரர்தருவிளைதேன்=மேலானகற்பகதருவில்விளைந்ததேனை; தெள்ளமுதினுடன்கலந்து=தெளிவாகிய அமுதத்தோடுகலந்து; செவிவார்ப்பதெனத்தேக்க = காதுத்துவாரத்தில் வார்த்தாற்போலநிறைக்க.—எ-று. (௨௯)

ஆனிரைக ளறுகருந்தி யசைவிடா தணைந்தயரப்
பானுரைவாய்த் தாய்முலையிற் பற்றுமிளங் கன்றினமுந்
தானுணவு மறந்தொழியத் தடமருப்பின் விடைக்குலமு
மான்முதலாங் கான்விலங்கு மயிர்முகிழ்த்து வந்தணைய.

(இ-ள்.) ஆனிரைகளறுகருந்தி = பசுக்கூட்டங்கள் அறுகம்புற்களைமேய்ந்து; அசைவிடாதணைந்தயர = மேல் அதனை அசைவிடாமல் தம்மையடைந்து உருக; பானுரைவாய்த்தாய் முலையிற்பற்று மிளங்கன்றினமும்=பால்நுரையை

வாயினிடத்துடைத்தாய் தாயின்முலையைப்பற்றி யுண்ணுகின்ற இளங்கன்றின் தொகுதியும் ; தானுணவுமறந்தொழிய=தானுண்ணும் பாலுணவை மறந்துஉண்ணுதொழிய ; தடமருப்பின்விடைக்குலமும்=பெரியமருப்பினையுடைய இடபக்கூட்டங்களும் ; மான்முதலாங்கான்விலங்கும் = மான்முதலாகியகாட்டிலுள்ள விலங்குகளும் ; மயிர்முகிழ்த்துவந்தணைய=குதூகலத்தால்மயிர்க்கூச்செறிந்துதம்சமீபத்து வந்தடைய.—எ-று. (௬௦)

ஆடுமயி லினங்களுமங் கசைவயர்ந்து மருங்கணுக
ஊடுசெவி யிசைநிறைந்த வுள்ளமொடு புள்ளினமு
மாடுபடிந் துணர்வொழிய மருங்குதொழில் புரிந்தொழுகுங்
கூடியவன் கோவலருங் குறைவினையின் றுறைநின்றார்.

(இ-ள்.) ஆடுமயிலினங்களும்=அக்காட்டில் ஆடுகின்ற மயிற்கூட்டங்களும் ; அங்கசைவயர்ந்து மருங்கணுக = அவ்வாடுதலொழிந்து தம்மருகில்வர ; ஊடுசெவி யிசைநிறைந்த = காதின்வழியாகச்சென்று பண்ணிறைசையானது நிறைந்த ; உள்ளமொடு புள்ளினமும்=மனதோடு பறவைக்கூட்டங்களும் ; மாடுபடிந்துணர்வொழிய=அருகிற்சேர்ந்து தம்உணர்வு பரவசமாக; மருங்குதொழில் புரிந்தொழுகும்=அருகில்மேய்த்தற்றொழிலைச் செய்துகொண்டிருக்கும் ; கூடியவன்கோவலரும் = திரண்டவலியினையுடைய இடையர்களும் ; குறைவினையின் றுறைநின்றார் = தாங்கள்செய்யும் மேய்த்தற்றொழிலொழிந்து இசைக்குருகிநின்றார்கள்.—எ-று. இம்மூன்றுங்குளகம். (௬௧)

பணிபுவனங் களிலுள்ளார் பயில்பிலங்கள் வழியணைந்தார்
மணிவரைவா ழரமகளிர் மருங்குமயங் கினர்மலிந்தார்
தணிவிலொளி விஞ்சையர்கள் சாரணர் கின்னரரமரர்
அணிவிசும்பி னயர்வெய்தி விமானங்கண் மிசையணைந்தார்.

(இ-ள்.) பணிபுவனங் களிலுள்ளார்=நாகலோகத்திலுள்ளவர்கள் (இந்தக்குழலிசைகேட்டு); பயில்பிலங்கள் வழியணைந்தார்=தாம்முன்பயின்ற பிலங்களின் வழியேறி நிலவுலகத்தில் வந்தார்கள் ; மணிவரைவா ழரமகளிர்=அழகியமலையில்வாழும் வரையரமகளிர்கள் ; மருங்குமயங்கினர்மலிந்தார்=இசையால்மயங்கி அந்நாயனார் மருங்குநெருங்கினார்கள் ; தணிவிலொளிவிஞ்சையர்கள்=குறையாத தேககாந்தியையுடைய வித்தியாதரர்களும் ; சாரணர்கின்னரரமரர் = சாரணர்களும் கின்னரர்களும்தேவர்களும் ; அணிவிசும்பினயர்வெய்திவிமானங்கண் மிசையணைந்தார்=இசைகேட்டயர்வடைந்து ஆகாயத்தினிடத்து விமானங்களின்மேல் ஏறிவந்தார்கள்.—எ-று. (௬௨)

சுரமகளிர் கற்பகப்பூஞ் சோலைகளின் மருங்கிருந்து
கரமலரி னமுதூட்டுங் கனிவாய்மென் கிள்ளையுடன்
விரவுநறுங் குழலலைய விமானங்கள் விரைந்தேறிப்
பரவிய வேழிசையமுதஞ் செவிமடுத்துப் பருகினார்.

(இ-ள்.) சுரமகளிர்கற்பகப்பூஞ் சோலைகளின்மருங்கிருந்து = தெய்வப் பெண்கள் பூக்களையுடைய கற்பகச்சோலைகளினிடத்திருந்து ; கரமலரினமுதூட்டும்=கையாகியமலர்களினிடத்துவைத்து அமுதத்தை ஊட்டுகின்ற ; கனிவாய்மென் கிள்ளையுடன் = கொவ்வைக்கனிபோலும் சிவப்பாகிய வாயினையுடைய கிளிப்பிள்ளைகளோடு ; விரவுநறுங் குழலலைய=தெய்வமணங்கமழும் நெருங்கிய கேசங்கள் அலையும்படி ; விமானங்கள்விரைந்தேறி = தேவவிமானங்களிடத்து விரைவாக ஏறிக்கொண்டு ; பரவியவேழிசையமுதம்=எவ்விடத்தும் பரந்த ஏழிசையாலுண்டாகிய கானரசத்தை ; செவிமடுத்துப்பருகினார் = செவிவழியாய் நிறைத்து உண்டார்கள்.—எ-று. (ருரு)

நலிவாரு மெலிவாரு முணர்வொன்றாய் நயத்தலினால்
மலிவாய் வெள்ளெயிற்றரவ மயின்மீது மருண்டுவிழுஞ்
சலியாத நிலையரியுந் தடங்கரியு முடன்சாரும்
புலிவாயின் மருங்கணையும் புல்வாய புல்வாயும்.

(இ-ள்.) நலிவாருமெலிவாரும்=வருத்தும்வலியரும் வருத்தப்படும் மெலியவரும் ; உணர்வொன்றாய்நயத்தலினால்=(இக்குழலிசைகேட்டுத் தம்முட்பேதமில்லாமல்)மனம் ஒருப்பட்டு விரும்புங்காரணத்தால் ; மலிவாய்வெள்ளெயிற்றரவம்=அகன்றவாயையும் வெள்ளிய பற்களையுமுடைய பாம்பானது ; மயின்மீது மருண்டுவிழும் = (அச்சமின்றி) மயிலின்மேல் மயங்கிவிழும் ; சலியாதநிலையரியும் = சலிப்படையாத நிலைமையையுடைய சிங்கமும் ; தடங்கரியு முடன்சாரும்=பெரியயானைகளும் பகையின்றி ஒருங்குசேர்ந்திருக்கும் ; புல்வாயபுல்வாயும்=புல்லியவாயினையுடைய கருமான்களும் ; புலிவாயின் மருங்கணையும்=புலியின்வாயினிடமாக அச்சமின்றிச்சேரும்.—எ-று. (ருசு)

மருவியகால் விசைத்தசையா மரங்கண்மலர்ச் சினைசலியா
கருவரை வீழருவிகளுங் கான்யாறுங் கலித்தோடா
பெருமுகிலின் குலங்கள்புடை பெயர்வொழியப் புனல்சோரா
இருவிசும்பி னிடைமுழங்கா வெழுகடலு மிடைதுளும்பா.

(இ-ள்.) மருவியகால்விசைத்தசையா=(ஆனாயநாயனாரது புள்ளாங்குழலிசைபரத்தலினால்) சஞ்சரிக்கின்ற காற்றுக்கள் விசைகொண்டு அசையாமலிருந்தன ; மரங்கண்மலர்ச்சினைசலியா=மரங்களிலுள்ள மலர்களையுடைய கிளைகள் சலியாதிருந்தன ; கருவரைவீழருவிகளும்=கரியமலையின்கண் விழுகின்ற அருவிகளும் ; கான்யாறுங்கலித்தோடா=கான்யாறுகளும் ஒலித்தோடாமலிருந்தன ; பெருமுகிலின்குலங்கள்=பெரியமேகக்கூட்டங்கள் ; புடைபெயர்வொழியப்புனல்சோரா = புடைபெயர்தலின்றி நீரைச்சொரியாதிருந்தன ; இருவிசும்பினிடைமுழங்கா=அவைபெரிய ஆகாயத்தில் முழங்காவாயின ; எழுகடலு மிடைதுளும்பா=ஏழுகடல்களும் தம்மிடத்தில் நீரைப்பெருக்கித் ததும்பாமலிருந்தன.

இவ்வாறு நிற்பனவுஞ் சரிப்பனவு மிசைமயமாய்
மெய்வாழும் புலன்கரண மேவியவொன்றா யினவால்
மொய்வாச நறுங்கொன்றை முடிச்சடையா ரடித்தொண்டர்
செவ்வாயின் மிசைவைத்த திருக்குழல் வாசனையுருக்க.

(இ-ள்.) இவ்வாறு நிற்பனவுஞ் சரிப்பனவும்=மேற்சொல்லியபிரகாரம் மரங்கள்முதலியநிலையியற்பொருள்களும்மனிதர்முதலிய இயங்கியற்பொருள்களும்; இசைமயமாய் மெய்வாழும்புலன்கரணமேவியவொன்றாயின=குழலிசையின் மயமாய்உடம்பும் உடம்பாலுணரும் ஐம்புலன்களும் அந்தக்கரணங்களுமாய் வேறுபட்டிருந்தனவெல்லாம் வேறுபாடின்றி ஒன்றாயின; மொய்வாச நறுங்கொன்றை முடிச்சடையாரடித்தொண்டர்=மிகுந்தவாசனைகமழும் நல்லகொன்றை மாலையை முடித்த சடைமுடியையுடைய சிவபிரானது திருவடியாராகிய ஆனாய நாயனார்; செவ்வாயின் மிசைவைத்த திருக்குழல்வாசனையுருக்க=சிவந்த திருவாயில்வைத்து ஊதுகின்ற புள்ளாங்குழலின் வாசனையானது தம்மையுருக்குதலால்.—எ-று. ஆல் - அசை. (கூசு)

உருக்குதலால் ஒன்றாயின என இயையும்.

மெய்யன்பர் மனத்தன்பின் விளைந்தவிசைக் குழலோசை
வையந்தன் னையுநிறைத்து வானுந்தன் வயமாக்கிப்
பொய்யன்புக் கெட்டாத பொற்பொதுவி னடம்புரியும்
ஐயன்றன் றிருச்செவியி னருகணையப் பெருகியதால்.

(இ-ள்.) மெய்யன்பர்மனத்தன்பின் விளைந்தவிசைக் குழலோசை=மெய்யன்பராகிய ஆனாயநாயனாரது மனதிலுதித்த அன்பிலுண்டாகிய புள்ளாங்குழலின் ஓசையானது; வையந்தன்னையுநிறைத்து = மண்ணுலகத்தையும் நிரப்பி; வானுந்தன்வயமாக்கி=ஆகாயத்தையும் அவ்வாறு தன்வயமாய் நிறையச்செய்து; பொய்யன்புக்கெட்டாத=பொய்விரவிச்செய்யும் அன்புக்கு அளவுபடாத; பொற்பொதுவி னடம்புரியும் = பொன்னம்பலத்தில் ஆனந்தநடனஞ் செய்தருளும்; ஐயன்றன் றிருச்செவியினருகணையப்பெருகியது = சிவபிரானது திருச்செவியினருகுசென்று நிறைந்தது.—எ-று. ஆல் - அசை. (கூஎ)

ஆனாயர் குழலோசை கேட்டருளி யருட்கருணை
தானாய திருவுள்ள முடையதவ வல்லியுடன்
கானாதி காரணராங் கண்ணுதலார் விடையுகைத்து
வானாறு வந்தணைந்தார் மதிநாறுஞ் சடைதாழ.

(இ-ள்.) ஆனாயர்குழலோசைகேட்டருளி=ஆனாயநாயனாருடைய புள்ளாங்குழலோசையைக்கேட்டருளி; அருட்கருணைதானாயதிருவுள்ளமுடையதவ வல்லியுடன் = உயிர்கண்மாட்டுவைத்த பெருங்கருணையே வடிவாயமைந்த திருவுள்ளத்தையுடைய தவக்கொடியாகிய உமாதேவியாரோடு; கானாதிகாரணராங் கண்ணுதலார்விடையுகைத்து=இசைக்கு ஆதிகாரணராய் விளங்குகின்றநெற்றிக்

கண்ணையுடைய சிவபிரானார் இடபத்தை வாகனமாகநடாத்திக்கொண்டு; வானூறுவந்தணைந்தார்=ஆகாயமார்க்கத்தில் எழுந்தருளினார்; மதிமுறுஞ்சடைதாழ=இளம்பிறைதங்கிய சடைகள்தாழும்படி.—எ-று. (௩அ)

சூக்குமவாக்குக்குக் காரணமான நாதத்தைத் தமக்குத் திருமேனியாக வுடைமையின் கானதிகாரணரென்றார். கானம் நாதம் பற்றியுதித்தலின்.

திசைமுழுதுங் கணநாதர் தேவர்கட்கு முன்னெருங்கி
மிசைமிடைந்து வரும்பொழுது வேற்றொலிகள் விரவாமே
யசையவெழுங் குழலநாதத் தஞ்செழுத்தாற் றமைப்பரவும்
இசைவிரும்புங் கூத்தனா ரெழுந்தருளி யெதிர்நின்றார்.

(இ-ள்.) திசைமுழுதுங்கணநாதர்=எத்திக்கினுஞ் சிவகணங்கள்; தேவர்கட்குமுன்னெருங்கி=தேவகணங்களுக்கு முன்னேநெருங்கி; மிசைமிடைந்து வரும்பொழுது =வானின்கண்கூடிவரும்பொழுது; வேற்றொலிகள்விரவாமே = மற்றெவ்வொலிகளும் கலவாமல்; அசையவெழுங்குழனாதத்து=அசைந்து எழுகின்ற புள்ளாங்குழலின் இசையில்; அஞ்செழுத்தால் தமைப்பரவும் = திருவைந்தெழுத்தால் தம்மைத்துதிக்கின்ற; இசைவிரும்புங் கூத்தனார்=பண்ணைவிரும்பிய சிவபிரானார்; எழுந்தருளி யெதிர்நின்றார்=ஆனாய நாயனார்முன்பு எழுந்தருளிக் காட்சிகொடுத்து நின்றார்.—எ-று. (௩௯)

முன்னின்ற மழவிடைமேன் முதல்வனா ரெப்பொழுதுஞ்
செந்நின்ற மனப்பெரியோர் திருக்குழல் வாசனைகேட்க
இந்நின்ற நிலையேநம் பாலணைவா யெனவவரும்
அந்நின்ற நிலைபெயர்ப்பா ரையர்திரு மருங்கணைந்தார்.

(இ-ள்.) முன்னின்றமழவிடைமேன்முதல்வனார் = இடபவாகனத்தின் மேற்காட்சிகொடுத்தருளிய சிவபிரானார்; எப்பொழுதுஞ் செந்நின்ற மனப்பெரியோர் திருக்குழல்வாசனைகேட்க=எக்காலமும் செம்மைக்குணம் நிலைபெற்ற மனத்தையுடைய ஆனாயநாயனாரது திருக்குழல்வாசனையைத் தான்கேட்கும்படி; இந்நின்றநிலையே நம்பாலணைவாயென=இவ்வாறுவாசித்து நின்றபடியே நம்மிடத்துவருகவென்று கட்டளையிட; அவருமந்நின்ற நிலைபெயர்ப்பார் ஐயர் திருமருங்கணைந்தார்=அவ்வானாய நாயனாரும் அவ்வாறுதான் நின்றநிலையை நீங்கிச் சிவபிரானது பக்கலிற்சேர்ந்தார்.—எ-று. (௪௦)

விண்ணவர்கண் மலர்மாரி மிடைந்துலக மிசைவிளங்க
எண்ணிலரு முனிவர்குழா மிருக்குமொழி யெடுத்தேத்த
அண்ணலார் குழற்கருவி யருகிசைத்தங் குடன்செல்லப்
புண்ணியனா ரெழுந்தருளிப் பொற்பொதுவி னிடைப்புக்கார்.

(இ-ள்.) விண்ணவர்கண்மலர்மாரி=தேவர்கள்பொழிகின்ற மலர்மழையானது; மிடைந்துலக மிசைவிளங்க=மண்ணுலகத்தில் நெருங்கிவிளங்க; எண்

ணிலருமுனிவர்குழாம்=அளவற்ற அருமையான முனிவர்கூட்டங்கள் ; இருக்கு மொழியெடுத்தேத்த=வேதவாக்கியங்களை யெடுத்துத்துதிக்க ; அண்ணலார்குழ ற்கருவி=ஆனாயநாயனார் புள்ளாங்குழலை ; அருகிசைத்தங் குடன்செல்ல=அரு கில்நின்று வாசித்துத் தம்முடன்செல்ல ; புண்ணியனரெழுந்தருளி=புண்ணிய வடிவராகிய சிவபிரான் எழுந்தருளி ; பொற்பொதுவினிடைப்புக்கார்=பொன் னம்பலத்திற் புகுந்தருளினார்.—எ-று. (சுக)

வேறு.

தீதுகொள் வினைக்குவாரோஞ் செஞ்சடைக் கூத்தர்தம்மைக்
காதுகொள் குழைகள்வீசுங் கதிர்நில விருள்கால்சீப்ப
மாதுகொள் புலவிநீக்க மனையிடை யிருகாற்செல்லத்
தூதுகொள் பவராநம்மைத் தொழும்புகொண் டுரிமைகொள்வார்.

(இ-ள்.) செஞ்சடைக்கூத்தர்தம்மை=சிவந்தசடையினையுடைய சிவபி ரானை; காதுகொள்குழைகள்வீசும்=காதிற்றரித்த குண்டலங்கள் வீசுகின்ற; கதிர் நிலவிருள்கால்சீப்ப=கிரணங்களின் ஒளியானது இருட்டைப்போக்க; மாதுகொ ள்புலவிநீக்க=பரவையார்கொண்ட ஊடல் நீக்கும்படி; மனையிடையிருகாற்செ ல்ல=அவர் திருமாளிகையிடத்து இரண்டுதரம்செல்லும்படி ; தூதுகொள்பவ ராம்=தூதாகக்கொண்ட சுந்தரமூர்த்திநாயனாராம் ; நம்மைத்தொழும்புகொண் டுரிமைகொள்வார்=நம்மை யடிமைக்கொண்டு அவ்வுரிமையைக் கொள்ளவல்லவ ர் (அதனால்) ; தீதுகொள்வினைக்குவாரோம்=தீமையையுடைய வினைவழியில்பிற க்கவரமாட்டோம்.—எ-று. (சுஉ)

ஆம்-ஈண்டுத் துணிவுப்பொருளில்வந்தவிடைச்சொல்.

ஆனாயநாயனார்புராணம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் - கூஎஉ.

---

உ

திருச்சிற்றம்பலம்.

## மூர்த்திநாயனார் புராணம்.

---

சீர்மன்னு செல்வக் குடிமல்கு சிறப்பினோங்குங்
கார்மன்னு சென்னிக் கதிர்மாமணி மாடவைப்பு
நார்மன்னு சிந்தைப் பலநற்றுறை மாந்தர்போற்றும்
பார்மன்னு தொன்மைப் புகழ்பூண்டது பாண்டிநாடு.

(இ-ள்.) சீர்மன்னுசெல்வக்குடிமல்குசிறப்பினோங்கும்=சீரினையுடையசெ ல்வம்மிக்ககுடிகள் நிறைந்திருத்தலால் சிறப்புடைத்தாய்விளங்கும் ; கார்மன்னு சென்னிக்கதிர்மாமணிமாடவைப்பு = மேகங்கள்தங்கியசிகரத்தையும் ஒளிவீசும் மாணிக்கங்களிழைத்த மண்டபங்களையுமுடையஊராவது ; நார்மன்னுசிந்தை

ப்பலநற்றுறைமாந்தர்போற்றும்=அன்போடுகலந்தமனதையுடைய பல்வாயநன் னெறிக்கண்வாழும் மனிதர்களால் துதிக்கப்படும் ; பார்மன்னுதொன்மைப்புக ழ்பூண்டதுபாண்டிநாடு=நிலவுலகத்தின்கண் நிலைபெற்றபழமையானபுகழினைப் பெற்றதாகியபாண்டிநாடாம்.—எ-று. (க)

சாயுந்தளிர் வல்லி மருங்குல் னெடுந்தடங்கண்
வேயும்படு தோளியர் பண்படு மின்சொற்செய்ய
வாயும்படு நீள்கரைமண் பொருந் தண்பொருந்தம்
பாயுங்கட லும்படு நீர்மை பணித்தமுத்தம்.

(இ-ள்.) நீர்மைபணித்தமுத்தம்=நீருள்ளமுத்துக்கள் ; சாயுந்தளிர்வல்லிம ருங்குல்=சாய்கின்றதளிரையுடையகொடிபோன்ற இடையையும் ; நெடுந்தடங் கண்வேயும்படுதோளியர்=நீண்டவிசாலமாகிய கண்களையும்மூங்கில்போலும்தோ ள்களையுமுடைய மகளிர்களது ; பண்படுமின்சொற்செய்யவாயும்படும்=பண்ண மைந்த இனியசொற்களையுடைய சிவந்தவாயினும் உதிக்கும் (அதுவன்றி) ; நீள் கரைமண்பொருந்தண்பொருந்தம்பாயுங்கடலும்படும்=நீண்டகரையிலே மணல் களைத்திரைக்கையாலேற்றுகின்றகுளிர்ந்ததாம்பிரபர்ணிபாய்கின்றகடலினும் உதி க்கும்.—எ-று. (உ)

மொய்வைத்த வண்டின் செறிசூழன் முரன்றசந்தின்
மைவைத்த சோலை மலயந்தர வந்தமந்த
மெய்வைத்த காலுந் தருஞால மளந்தமேன்மைத்
தெய்வத் தமிழுந் தருஞ்செவ்வி மணஞ்செயீரம்.

(இ-ள்.) செவ்விமணஞ்செயீரம்=நறுமணத்தைச்செய்யும் குளிர்ச்சியை ; மொய்வைத்தவண்டின் செறிசூழன்முரன்ற = கூட்டமாகநெருங்கிய வண்டின் தொகுதிகள் ஒலிக்கும் ; சந்தின்மைவைத்தசோலை=மேகங்கள்தவழ்கின்ற சந்த னச்சோலையையுடைய ; மலயந்தரவந்தமந்தமெய்வைத்தகாலுந்தரும்=பொதிய மலைகொடுக்கவருகின்ற சிறுதென்றற்காற்றும் கொடுக்கும் (அதுவன்றி) ; ஞால மளந்தமேன்மை=நிலவுலகத்துப் பரந்தமேன்மையினையுடைய ; தெய்வத்தமிழு ந்தரும்=தெய்வீகமாகிய தமிழ்ப்பாடையும்கொடுக்கும்.—எ-று. (ங)

சூழு மிதழ்ப்பங் கயமாகவத் தோட்டின்மேலாள்
தாழ்வின்றி யென்றுந் தனிவாழ்வதத் தையலொப்பார்
யாழின் மொழியிற் குழலின்னிசை யுஞ்சுரும்பும்
வாழு நகர மதுராபுரி யென்பதாகும்.

(இ-ள்.) சூழுமிதழ்ப்பங்கயமாகவத்தோட்டின்மேலாள்=இதழ் சூழ்ந்ததா மரைமலராகக்கருதி அம்மலரில்வாழ்கின்ற இலக்குமியானவள் ; தாழ்வின்றியெ ன்றுந்தனிவாழ்வது=குறைவின்றி எந்நாளுந்தனித்துவாழ்ந்துகொண்டிருப்பது ; அத்தையலொப்பார்யாழின்மொழியில்=அவ்விலக்குமிக்கு ஒப்பானமகளிர்களது இனிமையான மொழியினிடத்து யாழினது இசையும்; குழலின்னிசையுஞ்சுரும்

பும்=அவர்கள்கேசத்தினிடத்து இனிய இசையோடுவேண்டும் ; வாழுநகரமதுராபுரியென்பதாகும்=வாழ்கின்றநகரமாகியமதுராபுரியென்றுசொல்லப்படும்.-எ-று.

சால்பாய மும்மைத் தமிழ்தங்கிய வங்கண்மூதூர்
நூல்பா யிடத்தும் முளநோன்றலை மேதிபாயப்
பால்பாய் முலை தோய்மதுப்பங்கயம் பாயவெங்குஞ்
சேல்பாய் தடத்தும் முளசெய்யுண்மிக் கேறுசங்கம்.

(இ-ள்.) சால்பாயமும்மைத்தமிழ்தங்கியவங்கண்மூதூர்=பெருமையமைந்த இயலிசைநாடகமென்னும் மூன்றுதமிழுமிருக்கின்ற அழகிய இடமகன்ற பழமையாகிய அவ்வூரில் ; நூல்பாயிடத்துஞ் செய்யுண்மிக்கேறுசங்கம்முள=நூல்கள்வாசிக்கின்ற இடத்தும் செய்யுளான்மிக்குயர்ந்த கல்விச்சங்கங்கள் உள்ளன ; நோன்றலைமேதிபாய=பெரியதலையையுடைய எருமைகள்பாய்தலினால் ; பால்பாய்முலைதோய்மதுப்பங்கயம்பாய=அம்மேதிகளின் பால்சொரிகின்ற முலையானது தோய்ந்து அதனால் மதுவானது தாமரைமலர்களிடத்துப்பாய ; எங்குஞ்சேல்பாய்தடத்தும் = எவ்விடத்தும் சேல்கள்பாய்ந்துகொண்டிருக்கும் தடாகங்களினும் ; செய்யுண்மிக்கேறுசங்கம்முள=வயல்களில் மிக்கேறுகின்ற சங்குகள் உள்ளன.—எ-று. (ரு)

மந்தானிலம் வந்தசை பந்தரின் மாடமுன்றிற்
பந்தாடிய மங்கையர் பங்கயச் செங்கைதாங்குஞ்
சந்தார்முலை மேலன தாழ்குழை வாண்முகப்பொற்
செந்தாமரை மேலன நித்திலஞ் சேர்ந்தகோவை.

(இ-ள்.) மந்தாநிலம்வந்தசைபந்தரின்மாடமுன்றில்=சிறுதென்றற் காற்றானது வந்து உலாவுகின்ற பந்தலையுடைய வீடுகளின் முற்றத்தில், பந்தாடிய மங்கையர் = பந்தடித்து விளையாடுகின்ற மகளிர்களுடைய ; பங்கயச்செங்கை தாங்கும்=தாமரைமலர்போலும் சிவந்தகைகளால் தாங்கப்பட்ட ; சந்தார்முலை மேலனநித்திலஞ்சேர்ந்தகோவை=சந்தனம்பூசிய முலைகளின்மேல் உள்ளனமுத்தாலாகிய கோவைகள் ; தாழ்குழைவாண்முகப்பொற்செந்தாமரைமேலன=தாழ்ந்தகுழையோடு கூடியஒளியினையுடைய முகமாகிய அழகிய செந்தாமரைமலரின் மேலுள்ளன ; நித்திலஞ்சேர்ந்தகோவை = முத்துப்போலும் வேர்வையினது கோவை.—எ-று, (சா)

மும்மைப்புவ னங்களின் மிக்கதன் றேயம்மூதூர்
மெய்ம்மைப்பொரு ளாந்தமிழ்நூலில் விளங்குவாய்மைச்
செம்மைப்பொரு ளுந்தரு வார்திரு வாலவாயில்
எம்மைப்பவந் தீர்ப்பவர் சங்க மிருந்ததென்றால்.

(இ-ள்.) மெய்ம்மைப்பொருளாந் தமிழ்நூலின் = உண்மைப்பொருளையுடைய தமிழ்நூல்களில் ; விளங்குவாய்மைச் செம்மைப்பொருளுந்தருவார் = விளங்குகின்ற மெய்ம்மையான சிறந்தபொருளையும் அருளிச்செய்பவராய் ; திரு

வாலவாயி லெம்மைப்பவந்தீர்ப்பவர்சங்கமிருந்ததென்றால்=திருவாலவாயின்கண் வீற்றிருந்து அடியேங்களைப் பிறவிநோய் தீர்த்தலும் சுந்தரேசர் சங்கத்தலைப்புலவராய் இருக்கப்பெற்றதென்றால்; மும்மைப்புவனங்களின் மிக்கதன்றே யம்மூதூர்=அந்த மதுரைமாநகரம் மூன்றுலகங்களினும் மிகச்சிறந்ததேயாம்.—எ-று.

விளங்குவாய்மைச் செம்மைப்பொருளுந்தருவார் என்புழி விளக்கமான மெய்ம்மையினையுடைய அகப்பொருளைச் சங்கத்தாருக்கு அருளிச்செய்வாராய் என்றுரைத்தலுமொன்று.

அப்பொற்பதி வாழ்வணி கக்குலத் தான்றதொன்மைச்
செப்பத்தகு சீர்க்குடி செய்தவஞ் செய்யவந்தார்
எப்பற்றினையு மறுத் தேறுகைத் தேறுவார்தாண்
மெய்ப்பற்றெனப் பற்றி விடாத விருப்பின்மிக்கார்.

(இ-ள்.) அப்பொற்பதி வாழ்வணிகக்குலத்து=அந்த அழகிய மதுரைமாநகரத்தில் வாழும் வணிகர்களுடைய குலத்தில்; ஆன்றதொன்மைச் செப்பத்தகு = கல்விசெல்வங்களாலான்ற பழமையான அறிஞர்களால்எடுத்தோதுதற்குரிய; சீர்க்குடிசெய்தவஞ்செய்யவந்தார்=சிறந்தகுடிகள் செய்யத்தக்க தவத்தைச் செய்தகாரணத்தால் அவதரித்தவர்; எப்பற்றினையுமறுத்து=எவ்வகைப் பற்றினையும் அறுத்து; ஏறுகைத்தேறுவார்தாள்=இடபத்தை வாகனமாகச்செலுத்தி யேறும் சிவபிரானது திருவடிகளை; மெய்ப்பற்றெனப்பற்றிவிடாதவிருப்பின்மிக்கார்=எமக்கோர் மெய்ப்பற்றெனப்பற்றி அப்பற்றுவிடாத பெருவிருப்பிற்சிறந்தவர்.—எ-று. (அ)

நாளும்பெருங் காத னயப்புறும் வேட்கையாலே
கேளுந்துணை யும்முதற் கேடில் பதங்களெல்லாம்
ஆளும்பெரு மானடித் தாமரை யல்லதில்லார்
மூளும்பெரு கன்பெனு மூர்த்தியார் மூர்த்தியார்தாம்.

(இ-ள்.) நாளும்பெருங்காதனயப்புறும் வேட்கையாலே=நாள்தோறும் பெருவிருப்பின் நயப்புமிக்க ஆசையினால்; கேளுந்துணையும் முதற்கேடில் பதங்களெல்லாம்=உறவினரும் துணைவரும் முதலாகிய குறைவற்றபேறுகளெல்லாம்; ஆளும்பெருமானடித்தாமரையல்லதில்லார்=தம்மையாட்கொண்ட சிவபிரானது பாததாமரையல்லாமல் வேறொன்றையும் கொள்ளாதவர்(அவர்யாரெனில்); மூளும்பெருகன்பெனுமூர்த்தியார் மூர்த்தியார்=உண்டாகின்ற மிக்க அன்பே வடிவமாக்கொண்ட மூர்த்திநாயனார்.—எ-று. தாம் - அசை. (க)

அந்திப்பிறை செஞ்சடை மேலணி யாலவாயில்
எந்தைக்கணி சந்தனக் காப்பிடை யென்றுமுட்டா
அந்தச்செய லின்னிலை நின்றடி யாருவப்பச்
சிந்தைக்கினி தாய திருப்பணி செய்யுநாளில்.

(இ-ள்.) அந்திப்பிறைசெஞ்சடைமேலணி=மாலைக்காலத்தில் உதிக்கின்ற மூன்றும்பிறையைச் சிவந்த சடைமுடியின்மேல்தரித்த; ஆலவாயிலெந்தைக்கு=திருவாலவாயில் வீற்றிருந்தருளும் எமதுபிரானாகிய சுந்தரேசருக்கு; அணிசந்தனக்காப்பு = அணியப்பட்ட சந்தனக்காப்பாகிய பணியானது; இடையென்றுமுட்டாவந்தச்செயலின் னிலைநின்று=இடையில் எந்நாளும் குறைவுபடாமல் செய்யும் அத்திருத்தொண்டின் நிலைமையினின்று; அடியாருவப்பச்சிந்தைக்கினிதாயதிருப்பணிசெய்யுநாளில்=அடியார்கள் மனமகிழும்படி தம்முள்ளத்துக்கு இனிமையாகிய அத்திருப்பணியைச் செய்தொழுகும்நாளில்.—எ-று. (கo)

கானக்கடி சூழ்வடு கக்கரு நாடர்காவன்
மானப்படை மன்னன் வலிந்து நிலங்கொள்வானா
யானைக்குதி ரைக்கரு விப்படை வீரர்திண்டேர்
சேனைக்கட லுங்கொடு தென்றிசை நோக்கிவந்தான்.

(இ-ள்.) கானக்கடிசூழ்வடுகக்கருநாடர்காவன்மானப்படைமன்னன் = காட்டரண்சூழ்ந்த வடுகச்சாதியானாகிய கருநாடக தேசத்தாரை யாளுகின்ற வலியவேற்படையைத் தாங்கிய ஓரரசன்; வலிந்துநிலங்கொள்வானாய் = பிற அரசர்களை வலிசெய்து அவர்நிலத்தைக் கொள்ளுங்கருத்துடையவனாய்; யானைக்குதிரைக்கருவிப்படைவீரர்திண்டேர்சேனைக்கடலுங்கொடு = யானையும் குதிரையும் ஆயுதங்களைத்தாங்கிய படைவீரர்களும் திண்ணியதேரும் ஆகிய நால்வகைச்சேனையென்னும் கடலையுந் தன்னுடன்கொண்டு; தென்றிசைநோக்கிவந்தான்=தெற்குத்திக்கைநோக்கிப் போர்செய்யவந்தான்.—எ-று. (கக)

வந்துற்ற பெரும்படைமண் புதையப்பரப்பிச்
சந்தப்பொதி யிற்றமிழ்நாடுடை மன்னன்வீரஞ்
சிந்தச்செரு வென்றுதன்னாணை செலுத்துமாற்றாற்
கந்தப்பொழில் சூழ்மதுராபுரி காவல்கொண்டான்.

(இ-ள்.) பெரும்படைமண்புதையப்பரப்பி = தன்னொடுவந்தபெரியநால்வகைச்சேனைகளையும் அந்நாடுமுழுதும் பரவச்செய்து; சந்தப்பொதியிற் றமிழ்நாடுடைமன்னன் வீரஞ்சிந்த = சந்தனமரங்களையுடைய பொதியமலையிற்பிறந்த தமிழ்நாட்டையாளும் பாண்டியனுடைய வீரமானது கெடும்படி; செருவென்று தன்னாணை செலுத்துமாற்றால் = அவன்போரைவெற்றிகொண்டு தன்னுடைய அரசாட்சியை அந்நாடுமுழுதும் செலுத்தும்படி; கந்தப்பொழில்சூழ் மதுராபுரி காவல்கொண்டான்=வாசனைகமழும் சோலைசூழ்ந்த மதுராபுரியின் ஆளுகையைக் கைக்கொண்டான்.—எ-று. (கஉ)

வல்லாண்மையின் வண்டமிழ்நாடு வளம்படுத்து
நில்லாநிலை யொன்றியவின்மையி னீண்டமேரு
வில்லானடி மைத்திறமேவிய நீற்றின்சார்பு
செல்லாதரு கந்தர்திறத்தினிற் சிந்தைதாழ்ந்தான்.

(இ-ள்.) வல்லாண்மையின் வண்டமிழ்நாடுவளம்படுத்து நில்லாநிலையொன்றிய வின்மையில்=வலிய ஆண்மையினால் வளவிய தமிழ்நாட்டை வளஞ்செய்து நில்லாதநிலைமையோடு கூடிய வறுமையுடைமையினால்; நீண்டமேரு வில்லானடிமைத்திறமேவிய நீற்றின் சார்புசெல்லாது = நீண்டமேருவை வில்லாகவுடைய சிவபிரானுக்கு அடிமைத்திறம் அமைந்த விபூதியின்சார்பில் அவ்வரசன் செல்லாமல்; அருகந்தர்திறத்தினிற் சிந்தைதாழ்ந்தான்=ஆருகதர்களுடைய மதத்தில் விருப்புடையவனானான்.—எ-று. (கந)

தாழுஞ்சமண் கையர்தவத்தைமெய் யென்றுசார்ந்து
வீழுங்கொடி யோனதுவன்றியும் வெய்யமுன்னைச்
சூழும்வினையா லரவஞ்சுடர்த் திங்களோடும்
வாழுஞ்சடை யானடியாரையும் வன்மைசெய்வான்.

(இ-ள்.) தாழுஞ்சமண்கையர்தவத்தைமெய்யென்று சார்ந்து=தாழ்ந்திருக்கும் சமணர்களாகிய இழிஞர்கள் கூறும்தவத்தைமெய்ந்நெறியென்றுசார்ந்து; வீழுங்கொடியோன்=அம்மதத்தில்விழுங் கொடியோனாகிய அவ்வரசன்; அதுவன்றியும் = அம்மதத்தில்சேர்ந்ததல்லாமலும்; வெய்யமுன்னைச்சூழும் வினையால்=கொடியமுற்பவத்திற் சூழும் தீவினைவழியால்; அரவஞ்சுடர்த்திங்களோடும் வாழுஞ்சடையான்=பாம்பானது ஒளியினையுடைய இளம்பிறையோடு பகையின்றி வாழ்கின்ற சடைமுடியையுடைய சிவபிரானது அடியாரையும் வன்மைசெய்வான்=அடியார்களையும் வருத்துவானாயினான்.—எ-று. (கச)

செக்கர்ச்சடை யார்விடையார்திரு வாலவாயுண்
முக்கட்பர னார்திருத்தொண்டரை மூர்த்தியாரை
மைக்கற்புரை நெஞ்சுடைவஞ்சகன் வெஞ்சமண்பேர்
எக்கர்க்குட னாகவிகழ்ந்தன செய்யவெண்ணி.

(இ-ள்.) செக்கர்ச்சடையார்விடையார்=செக்கர்போலும் சிவந்த சடையையுடையவரும் இடபத்தை வாகனமாகவுடையவருமாகிய; திருவாலவாயுண் முக்கட்பரனார் திருத்தொண்டரை மூர்த்தியாரை=திருவாலவாயுள் வீற்றிருந்தருளும் மூன்றுகண்களையுடைய சிவபிரானாரது திருத்தொண்டராகிய மூர்த்திநாயனாரை; மைக்கற்புரை நெஞ்சுடைவஞ்சகன்=கரியகற்போலும் கடியமனசையுடைய வஞ்சகனாகிய அவ்வரசன்; வெஞ்சமண்பேரெக்கர்க்குடனாக=கொடிய சமணரென்னும் இறுமாப்புடையவர்களுக்கு உடன்பாடாகும்படி; இகழ்ந்தன செய்யவெண்ணி=இழிந்த செய்கைகளைச்செய்யக்கருதி.—எ-று. (கரு)

அந்தம்மில வாமிறைசெய்யவு மன்பனார்தா
முந்தைம்முறை மைப்பணிமுட்டலர் செய்துவந்தார்
தந்தம்பெரு மைக்கள வாகிய சார்பினிற்கும்
எந்தம்பெரு மக்களையாவர் தடுக்கவல்லார்.

(இ-ள்.) அந்தமிலவாமிறைசெய்யவும் = அளவில்லாத துன்பங்களை அம்மூர்த்திநாயனாருக்குச் செய்யவும்; அன்பனார்தாமுந்தைமுறைமைப்பணி=அந்நாயனார் முன்செய்யும் சந்தனக்காப்புச் சாத்தும்திருப்பணியில்; முட்டலர்செய்துவந்தார்=குறைபாடிலராய் நாடோறுஞ்செய்துவந்தார்; தந்தம்பெருமைக்களவாகிய சார்பினிற்கும்=தங்கள்தங்கள் பெருமைக்கேற்றதிருத்தொண்டின்சார்பினிற்கின்ற; எந்தம் பெருமக்களையாவர்தடுக்கவல்லார்=எம்முடையபெரியோர்களையார்தடுக்கவல்லவர்கள் ஒருவருமில்லை.—எ-று. (கசு)

முந்தைம்முறை என்பதில் மகரம் விரித்தல் விகாரம்.

எள்ளுஞ்செயல் வன்மைகளெல்லையில் லாதசெய்யத்
தள்ளுஞ்செய லில்லவர்சந்தனக் காப்புத்தேடிக்
கொள்ளுந்துறையு மடைத்தான்கொடுங் கோன்மைசெய்வான்
றெள்ளும்புனல் வேணியர்க்கன்பருஞ் சிந்தைநொந்து.

(இ-ள்.) கொடுங்கோன்மைசெய்வான்=கொடுங்கோடனத்தும் அவ்வரசன்; எள்ளுஞ்செயல் வன்மைகள்=இகழத்தக்க செய்கையாகிய கொடுந்தொழில்கள்; எல்லையில்லாதசெய்ய = அந்நாயனாருக்கு அளவில்லாதன வாகச்செய்யவும்; தள்ளுஞ்செயலில்லவர்=அதனால் தந்திருப்பணியில் குறைவுபடும் செய்கையில்லாத அந்நாயனார்; சந்தனக்காப்புத்தேடிக்கொள்ளுந் துறையுமடைத்தான்= சந்தனக்காப்புக்குரிய சந்தனக்கட்டைகளை யாராய்ந்துவாங்கும் இடங்களையும் கொடுக்கவொட்டாமல் தடுத்துவிட்டான்; தெள்ளும்புனல் வேணியர்க்கன்பருஞ் சிந்தைநொந்து=தெளிவாகிய கங்கைநீர்தங்கிய சடைமுடியையுடைய சிவபிரானுக்கன்பரும் மனம்வருந்தி.—எ-று. (கஎ)

புன்மைச்செயல் வல்லமண்குண்டரிற் போதுபோக்கும்
வன்மைக்கொடும் பாதகன்மாய்ந்திட வாய்மைவேத
நன்மைத்திரு நீற்றுயர்நன்னெறி தாங்குமேன்மைத்
தன்மைப்புவிமன்னரைச்சார்வதென்றென்றுசார்வார்.

(இ-ள்.) புன்மைச்செயல்வல்லமண்குண்டரில் = இழிதொழிலில்வல்ல சமணராகிய குண்டர்களிடத்து; போதுபோக்கும் வன்மைக்கொடும்பாதகன்மாய்ந்திட=காலத்தை வீணாகக் கழிக்கின்ற வன்மையினையுடைய கொடியபாதகனாகிய அரசன்இறக்க; வாய்மைவேத நன்மைத்திருநீற்றுயர் நன்னெறிதாங்கும் = மெய்மையான வேதத்தில்விதித்த நன்மையை விளக்கும் விபூதியைத் தரிக்கும் உயர்ந்த சைவநெறியைத் தாங்கிக்கொள்ளும்; மேன்மைத்தன்மைப்புவிமன்னரைச் சார்வதென்றென்று சார்வார்=மேன்மைக்குணத்தையுடைய அரசரை இந்நாடு அடைவதென்னுளென்று தம் உள்ளத்திற் கருதிவருவாராயினார்.—எ-று. ()

காய்வுற்றசெற் றங்கொடுகண்டகன் காப்பவுஞ்சென்
றாய்வுற்றகொட் பிற்பகலெல்லை யடங்கநாடி
யேய்வுற்றநற் சந்தனமெங்கும்பெறாதுசிந்தை
சாய்வுற்றிட வந்தனர்தம்பிரான் கோயிறன்னில்.



1 மூர்த்திநாயனார்)  2 சுந்தரேசர்.)

மூர்த்திநாயனார் சுந்தரேசருக்குச் சந்தனக்காப்புக்குச் சந்தனமுதவிவர கர்னாடகவரசன் பாண்டியனைவென்று சமணனாகி நாயனாரையுமாக்கப்புக வுட்படாததைக்கண்டு தொண்டுக்கு சந்தனம்கிடைக்காமற்செய்ய நாயனார்தன்கையையுரைத்து சிவபிரானுக்களிக்க வன்றிரவுவரசனிறந்து பதிலாகநாயனார் செங்கோல்நடாத்தியது.

(இ-ள்.) காய்வுற்றசெற்றங்கொடு கண்டகன்காப்பவும்=(இவர்பணியைத்தடைசெய்யுங் காரணமாய்) வெகுண்டெழும் பகைமையைக்கொண்டு அக்கொடுங்கோலரசன் சந்தனக்கட்டையை யாவருங்கொடுக்காமல் தடைசெய்யவும்; சென்றுஆய்வுற்ற கொட்பிற்பகலெல்லையடங்கநாடி = மூர்த்திநாயனார் பலவிடங்களிற்சென்று தேடுகின்ற செலவினாற் பகல்முழுதும் தேடி; ஏய்வுற்றநற்சந்தனமெங்கும்பெறாது=காப்புக்கிசைந்த நல்லசந்தனம் எவ்விடத்தும் கிடையாமல்; சிந்தைசாய்வுற்றிட வந்தனர்தம்பிரான்கோயிறன்னில்=மனந்தளர்ச்சியடையச் சிவபிரான் திருக்கோயிலில்வந்தார்.—எ-று. (கக)

நட்டம்புரி வாரணி நற்றிரு மெய்ப்பூச்சின்று
முட்டும்பரி சாயினுந் தேய்க்குங்கை முட்டாதென்று
வட்டந்திகழ் பாறையின் வைத்து முழங்கைதேய்த்தார்
கட்டும்புறந் தோனரம் பென்பு கரைந்துதேய.

(இ-ள்.) நட்டம்புரிவாரணி நற்றிரு மெய்ப்பூச்சு=நடனம்செய்தருளுகின்ற சிவபிரான் திருமேனியிற் றரிக்கத்தக்க சந்தனக்காப்பு; இன்றுமுட்டும்பரிசாயினும்=இன்றைக்குக் கிடையாமற்போனாலும்; தேய்க்குங்கைமுட்டாதென்று=சந்தனக்கட்டையைத்தேய்க்கின்ற கைக்குக்குறைவின்றென்று; வட்டந்திகழ்பாறையின் வைத்துமுழங்கைதேய்த்தார் = வட்டமாகஇருக்கும்சந்தனச்சாணையில் முழங்கையைவைத்துத் தேய்த்தார்; கட்டும்புறந்தோனரம்பென்புகரைந்துதேய=கைக்குறுதியாகக் கட்டியபுறத்திலுள்ளதோலும் அதனுள்ளிருக்கும் நரம்பும் எலும்பும் கரைந்து குறைய.—எ-று. (உ0)

கல்லின்புறந் தேய்த்த முழங்கை கலுழ்ந்துசோரி
செல்லும்பரப் பெங்கணு மென்பு திறந்துமூளை
புல்லும்படி கண்டு பொறுத்திலர் தம்பிரானார்
அல்லின்க ணெழுந்த துவந்தருள் செய்தவாக்கு.

(இ-ள்.) கல்லின்புறந்தேய்த்தமுழங்கை=கல்லினிடத்து நாயனார் தேய்த்தமுழங்கையானது; கலுழ்ந்துசோரிசெல்லும் பரப்பெங்கணும்=உதிரத்தைப் பெருக்கித் தான் செல்லுமிடங்களெல்லாம்; என்புதிறந்து மூளைபுல்லும்படிகண்டு=எலும்பு வெளிப்பட்டு அதனுள்ளிருக்கும் மூளை ஒழுகுவதைக்கண்டு; பொறுத்திலர்தம்பிரானார்=திருவாலவாயுடையார் பொறுக்காதவராய்; அல்லின்கணெழுந்தது வந்தருள்செய்தவாக்கு = திருவுள்ளங்களித்து அருளிச்செய்த ஓரசரிரிவாக்கானது அன்றிரவில் உதித்தது.—எ-று. (உக)

அன்பின்றுணி வாலிது செய்திட லையவுன்பால்
வன்புன்கண் விளைத்தவன் கொண்டமண் ணெல்லாங்கொண்டு
முன்பின்னல் புகுந்தன முற்றவு நீத்துக்காத்துப்
பின்புன்பணி செய்துநம் பேருல கெய்துகென்ன.

(இ-ள்.) அன்பின் றுணிவா லிதுசெய்திடலைய = அன்பனேபத்தியின் உறுதிப்பாட்டால் இவ்வாறு செய்யாதொழியக்கடவை; உன்பால்வன்புன்கண் விளைத்தவன்கொண்டமண்ணெல்லாங்கொண்டு = உன்னிடத்துமிக்கதுயரத்தைச் செய்த அவ்வரசன் கவர்ந்துகொண்ட பூமிமுழுதையுமீயேகைக்கொண்டு; முன் பின்னல்புகுந்தன முற்றவு நீத்துக்காத்து = முன்னே அவனாற் புகுந்தகொடுங்கோன்மைகள் முழுதையும் நீக்கிக் காவல்செய்து; பின்புன்பணிசெய்து நம்பேருல கெய்துகென்ன = பின்பு நீ செய்யத்தக்கதிருப்பணியைச்செய்து நமதுசிவலோகத்தை அடைவாயாகவென்று.—எ-று. (உஉ)

இவ்வண்ண மெழுந்தது கேட்டெழுந் தஞ்சிமுன்பு
செய்வண்ண மொழிந்திடத் தேய்ந்தபுண் ணூறுதீர்ந்து
கைவண்ண நிரம்பின வாசமெல் லாங்கலந்து
மொய்வண்ண விளங்கொளி யெய்தினர் மூர்த்தியார்தாம்.

(இ-ள்.) இவ்வண்ணமெழுந்ததுகேட்டெழுந்தஞ்சி = இவ்வாறெழுந்த திருவாக்கினைக்கேட்டு அச்சமுற்றெழுந்து; முன்புசெய்வண்ண மொழிந்திடத் தேய்ந்த புண்ணூறுதீர்ந்து = முன்புசெய்யும் முழங்கையைத்தேய்க்கும்தொழிலில் நீங்க உடனே தேய்ந்ததனாலுண்டாகிய புண்ணும் அதன் ஊறும் ஒழிந்து; கைவண்ணநிரம்பின = கையானது அழகோடு முன்போல்வளர்ந்தன; வாசமெல்லாங் கலந்து மொய்வண்ணவிளங்கொளியெய்தினர் மூர்த்தியார் = உடனே நறுமணங் களெல்லாம் சேர்ந்து திரண்ட அழகிய விளக்கமான காந்தியைத் தேகத்தில் அடைந்தார் மூர்த்திநாயனார்.—எ-று. தாம் - அசை. (உ௩)

இவ்விரண்டுங் குளகம். கைவண்ணநிரம்பின என ஒருமையிற்பன்மை வந்தது.

அந்நாளிர வின்க ணமண்புகல் சார்ந்துவாழு
மன்னுகிய போர்வடு கக்கரு நாடர்மன்னன்
றன்னாளு முடிந்தது சங்கரன் சார்பிலோர்க்கு
மின்னுமென நீடிய மெய்நிலை யாமைவெல்ல.

(இ-ள்.) அந்நாளிரவின்கண் = அன்றிரவில்; அமண்புகல் சார்ந்துவாழும் = சமணர்களுடைய மதச்சார்பைச் சார்ந்துவாழ்கின்ற; மன்னுகியபோர்வடுகக்கருநாடர் மன்னன்றன்னாளுமுடிந்தது = அரசனுகிய போர்செய்கின்ற வடுகக் கருநாடக ராசனுடைய வாழ்நாளும் முடிந்தது; சங்கரன்சார்பிலோர்க்கு மின்னுமென நீடியமெய்நிலையாமைவெல்ல = சிவபிரானது திருவருட்சார்பில்லாதவர்களுக்கு நீட்டித்த பூரணயுளை யடைந்திருக்கத்தக்க மெய்யும் பாவமிகுதியால் மின்னைப்போல அற்பாயுளை யடையுமென்பதை யாவர்க்கும் புலப்படுத்துங் காரணமாய்.—எ-று. (உ௪)

வெல்ல என்பது மேம்பட என்னும் பொருட்டாய்ப் புலப்படுத்தன்மேற்று. மனிதர்க்கு ஆயுள் நூறுயிருப்பினும் அரனார்க்கும் அவரடியார்க்கும் இடை

பூறு விளைப்பரேல் அவராயுள் நிலையுதலின்றி அன்றேயழியும் என்பது விளக்கிய நிலையாமைவெல்ல என்றார்.

இவ்வாறுல கத்தினிறப்ப வுயர்ந்த நல்லோர்
மெய்வாழுல கத்து விரைந்தணை வார்களேபோல்
அவ்வாறர னூரடியாரை யலைத்த தீயோன்
வெவ்வாய்நிர யத்திடைவிழ்வான் விரைந்து வீந்தான்.

(இ-ள்.) உலகத்தினிறப்ப வுயர்ந்தநல்லோர் = இந்நிலவுலகத்தில் மிக்க மேன்மையடைந்த நல்லோர்கள் ; மெய்வாழுலகத்து விரைந்தணைவார்கள் இவ்வாறுபோல்=மெய்ப்பொருளாகிய சிவபிரான்வாழும் சிவலோகத்துத் தீவிரமாய் அணைவார்கள் இதுபோல ; அரனூரடியாரையவ்வா றலைத்ததீயோன்=சிவனடியாராகிய மூர்த்திநாயனூரை மேற்கூறியபடி வருத்தினகொடியோனுகிய அவ்வரசன் ; வெவ்வாய்நிரயத்திடைவீழ்வான் விரைந்துவீந்தான் = கொடியவாயையுடைய நிரயத்தில் வீழும்படி விரைந்து இறந்தான்.—எ-று. ஏ - அசை. (உரு)

முழுதும்பழு தேபுரிமூர்க்க னுலந்த போதின்
எழுதுங்கொடி போல்பவ ருட்பட வேங்குஞ்சுற்ற
முழுதும்புலர் வுற்றது மற்றவ னன்னமாலைப்
பொழுதும்புலர் வுற்றது செங்கதிர் மீதுபோத.

(இ-ள்.) முழுதும்பழுதேபுரிமூர்க்கனுலந்தபோதின் = சிவனடியார்களுக்குமுழுதும்துன்பத்தையேசெய்த மூர்க்கனுகிய அவ்வரசன் இறந்தபோது ; எழுதுங்கொடிபோல்பவருட்பட=சித்திரத்தில்எழுதுங்கொடிபோன்றஅவன்பத்தினிகள் அடங்க ; ஏங்குஞ்சுற்றமுழுதும் புலர்வுற்றது=வருந்துகின்ற சுற்றம் முழுதும் விசனமடைந்தது ; அவனன்னமாலைப்பொழுதும்புலர்வுற்றது=அவ்வரசனது இதயத்தையொத்த இராக்காலமும் விடிந்தது.—எ-று. (உசு)

மற்று-அசை.

அவ்வேலையி லங்க ணமைச்சர்கள் கூடித்தங்கள்
கைவ்வேறுகொ ளீம வருங்கடன் காலைமுற்றி
வைவ்வேலவன் றன்குல மைந்தரு மின்மையாலே
செய்வேறு வினைத்திறஞ் சிந்தனை செய்துதேர்வார்.

(இ-ள்.) அவ்வேலையிலங்கணமைச்சர்கள்கூடி=அப்பொழுது அவ்விடத்துள்ளமந்திரிகள் ஒருங்குகூடி ; தங்கள்கைவேறுகொளீமவருங்கடன்காலைமுற்றி = தங்கள் ஒழுக்கத்திற்கு வேறுனமயானத்திற்செய்யும் தகனமுதலாகிய தொழில்களை உதயத்திற்செய்து ; வைவேலவன் றன் குலமைந்தருமின்மையாலே=கூரியவேலையுடைய அவ்வரசன் குலத்திற்குரியபுதல்வர்களும்இல்லாதபடியால் ; செய்வேறுவினைத்திறஞ்சிந்தனை செய்துதேர்வார் = தாம்செய்யத்தக்க வேறாய ஓர்செயலின்பகுதியைச்சிந்தித்துத்தெளிவாராயினுர்.—எ-று. (உஎ)

தாழுஞ்செய லின்றொரு மன்னவன் றாங்கவேண்டுங்
கூழுங்குடியு முதலாயின கொள்கைத் தேனுஞ்
சூழும்படை மன்னவன் றோளிணை காவலின்றி
வாழுந்தகைத் தன்றிந்த வையக மென்றுசொன்னார்.

(இ-ள்.) கூழுங்குடியும்முதலாயினகொள்கைத்தேனும்=பயிரும்அப்பயிரையிடும் குடிகளும் முதலான சிறப்பையுடைத்தாயிருந்தாலும்; சூழும்படைமன்னவன்தோளிணைகாவலின்றி = தன்னைச்சுற்றியசேனைகளையுடைய அரசனது இரண்டுபுயங்களாலும் காக்கும் காவலில்லாமல்; வாழுந்தகைத்தன்றிந்தவையகம் =வாழ்வடையும் தகுதியையுடையதல்ல இவ்வுலகம் (அதனால்); தாழுஞ்செயலின்றொருமன்னவன்றாங்கவேண்டும் என்றுசொன்னார் = நீதியிற்குறைவுபடாமல் ஓர் மன்னவன் உலகத்தை அரசாளவேண்டுமென்றுசொன்னார்கள்.—எ-று.(உஅ)

வேறு.

பன்முறை யுயிர்களெல்லாம் பாலித்து ஞாலங்காப்பான்
றன்னெடுங் குடைக்கீழ்த்தத்த நெறிகளிற் சரித்துவாழு
மன்னரை யின்றிவைகு மண்ணுல கெண்ணுங்காலை
யின்னுயி ரின்றிவாழும் யாக்கையை யொக்குமென்பார்.

(இ-ள்.) ஞாலம்பன்முறையுயிர்களெல்லாம்பாலித்துக்காப்பான்றன்னெடுங்குடைக்கீழ்=நிலவுலகமானது பலமுறையும் உயிர்களையெல்லாம்பரிபாலித்துக்காக்கின்ற அரசனுடைய நீண்டசந்திரவட்டக்குடைக்கீழ்; தத்தநெறிகளிற்சரித்துவாழும்=தங்கள்தங்கட்குரிய அறநெறிகளில் தவறாது ஒழுகிவாழ்வடையும்; மன்னரையின்றிவாழுமண்ணுலகெண்ணுங்கால்=ஆராயுமிடத்து ஆளும்அரசரையின்றி இருக்கும் நிலவுலகமானது; இன்னுயிரின்றிவாழும்யாக்கையையொக்குமென்பார்=இனிய உயிரில்லாமல்வாழ்கின்ற உடம்பையொக்குமென்று அறிஞர் கூறுவார்.—எ-று. ஐ-அசை. (உக)

இவ்வகை பலவுமெண்ணி யிங்கினி யரசரில்லைச்
செய்வ்வகை யிதுவேயென்று தெளிபவர் சிறப்பின்மிக்க
மைவ்வரை யனையவேழங் கண்கட்டி விட்டான்மற்றக்
கைவ்வரை கைக்கொண்டார்மண் காவல்கைக் கொள்வாரென்று.

(இ-ள்.) இவ்வகைபலவுமெண்ணியிங்கினியரசரில்லை = இவ்வாறுபலவற்றையும் தாம்யோசித்து இவ்விடத்து இனிமேல்பட்டத்திற்குரிய அரசர்களில்லை; செய்வகையிதுவேயென்றுதெளிபவர்=செய்யும்வாறு இதுவேயென்று நிச்சயிக்கின்ற அம்மந்திரிமார்கள்; சிறப்பின்மிக்கமைவரையனையவேழங்கண்கட்டிவிட்டால்=அரசுவாவுக்குரியசிறப்பான்மிக்ககரியமலைபோலும் யானையைக்கண்ணைக்கட்டிவீதியில்விட்டால்; அக்கைவரைகைக்கொண்டார் மண்காவல்கைக்கொள்வாரென்று= அந்தயானையால் எடுத்துக்கொள்ளப்பட்டவர்கள் இந்நாட்டை அரசாளுதற்குரியவர்களென்று கருதி.—எ-று. மற்று-அசை. (கூ0)

செம்மாண்வினை யர்ச்சனை நூன்முறை செய்துதோளால்
இம்மாநில மேந்தவொ ரேந்தலை யேந்துகென்று
பெய்ம்மாமுகில் போன்மதம் பாய்பெரு கோடைநெற்றிக்
கைம்மாவை நறுந்துகில் கொண்டுகண் கட்டிவிட்டார்.

(இ-ள்.) செம்மாண்வினையர்ச்சனை நூன்முறைசெய்து=செப்பமானமாட்சிமையையுடைய பூசைவினையை நூலிற்கூறியவாறுசெய்து; தோளாலிம்மாநிலமேந்தவோரேந்தலையேந்துகென்று=தோளினால் இந்தப்பெரிய உலகத்தைத் தாங்கும்படி ஓரரசனை நீ எடுத்து உன்பிடரில்தாங்கென்று; பெய்ம்மாமுகில்போன்மதம்பாய் = பெய்யாநின்ற மேகம்போல்மதம்பாய்ந்து; பெருகோடைநெற்றிக்கைம்மாவை=பெருகுகின்றமுகபடாத்தோடு கூடியநெற்றியையுடைய யானையை; நறுந்துகில்கொண்டு கண்கட்டிவிட்டார்=பூந்துகில்கொண்டுகண்ணைக்கட்டிவிட்டார்கள்.—எ-று. (கூக)

கண்கட்டி விடுங்களி யானையக் காவன்மூதூர்
மண்கொட்புற வீதி மருங்கு திரிந்துபோகித்
திண்பொற்றட மாமதில் சூழ்திரு வாலவாயின்
விண்பிற்பட வோங்கிய கோபுர முன்புமேவி.

(இ-ள்.) கண்கட்டிவிடுங்களியானை=கண்ணைப்பூந்துகிலால்மறைத்துக்கட்டி விடப்பட்ட களிப்பினையுடைய யானையானது; அக்காவன்மூதூர்மண்கொட்புறவீதி மருங்குதிரிந்துபோகி=அந்தக்காவலையுடைய பழமையான மதுரைமாநகரத்தில் தூளிகள்மேலே கிளம்பும்படி வீதிகளில்உலாவிக்கொண்டுபோய்; திண்பொற்றடமாமதில் சூழ்திருவாலவாயின்=வலியபொன்மயமான மிகவும் உயர்ந்த மதில்சூழ்ந்த திருவாலவாயென்னும் ஆலயத்தின்; விண்பிற்படவோங்கியகோபுர முன்புமேவி=ஆகாயமும் அதன் உயர்வுக்குப்பிற்படும்படிஉயர்ந்தமுதற்கோபுரத்துக்கு முன்போய்.—எ-று. (கூஉ)

நீங்கும்மிர வின்க ணிகழ்ந்தது கண்டதொண்டர்
ஈங்கெம்பெரு மானரு ளாமெனி லிந்தவையந்
தாங்குஞ்செயல் பூண்பனென் றுள்ளந் தளர்வுநீங்கிப்
பூங்கொன்றை மிலைந்தவர் கோயிற் புறத்தினிற்ப.

(இ-ள்.) நீங்கும்மிரவின்கணிகழ்ந்தது கண்டதொண்டர்=நீங்கியமுதனாளிரவின்கண் தமக்காக அசரீரிவாக்குண்டானதை அறிந்த மூர்த்திநாயனார்; ஈங்கெம்பெருமானருளாமெனில்=இவ்விடத்து எமதுபிரானாகிய சுந்தரேசரது திருவருளுக்குஇசைந்ததாயின்; இந்தவையந்தாங்குஞ்செயல்பூண்பனென்று = இந்த நிலவுலகத்தை ஆளுதற்குரிய அரசுரிமையை யான்பெற்றுக்கொள்வேனென்று; உள்ளந்தளர்வுநீங்கி = தம்மனத்துயரம் ஒழிந்து; பூங்கொன்றைமிலைந்தவர்கோயிற்புறத்தினிற்ப = பொலிவினையுடைய கொன்றைமாலையைச்சூடிய சுந்தரேசரது திருக்கோபுரவாயிற்புறத்துநிற்க.—எ-று. (கூகூ)

வேழத்தர சங்கண் விரைந்து நடந்துசென்று
வாழ்வுற்றுல கஞ்செய் தவத்தினின் வள்ளலாரைச்
சூழ்பொற்சுடர் மாமணி மாநிலந் தோயமுன்பு
தாழ்வுற்றெடுத் துப்பிடர் மீது தரித்ததன்றே.

(இ-ள்.) வேழத்தரசங்கண் விரைந்துநடந்துசென்று=அரசுவாவானது அவ்விடத்துவிரைவாய் நடந்துபோய்; வாழ்வுற்றுலகஞ்செய்தவத்தினின்வள்ளலாரை=தாம்வாழ்வடையுங்காரணமாய் உலகத்தார்செய்த தவப்பயனால் மூர்த்திநாயனாரை; சூழ்பொற்சுடர்மாமணிமாநிலந்தோய=தன்கழுத்திற்சூழ்ந்த பொன்னாலாகிய ஒளியினையுடைய கிண்கிணிமாலை பெரியநிலத்தில் படும்படி; முன்பு தாழ்வுற்றெடுத்துப்பிடர்மீதுதரித்தது=அவர்திருமுன்னேவணங்கி அந்நாயனாரை யெடுத்துப் பிடரின்மீதுவைத்துக்கொண்டது.—எ-று. அன்று-ஏ-அசை. (௩௪)

இம்மூன்றுங்குளகம்.

மாதங்க மெருத்தினில் வைத்தவர் தம்மைக்காணு
ஏதங்கெட வெண்ணிய திண்மை யமைச்சரெல்லாம்
பாதங்களின் மீது பணிந்தெழுந் தார்களப்போ
தோதங்கிளர் வேலையை யொத்தொலி மிக்கதவ்வூர்.

(இ-ள்.) மாதங்கமெருத்தினில்வைத்தவர்தம்மைக்காணு = அவ்வரசுவாவானது தன்பிடரின்மேல் எடுத்துவைத்த மூர்த்திநாயனாரைக்கண்டு; ஏதங்கெட வெண்ணிய திண்மையமைச்சரெல்லாம் = உலகத்தில் தீங்கு நீங்கும்படி கருதிய திட்பமான அறிவினையுடைய மந்திரிகளெல்லாம்; பாதங்களின்மீது பணிந்தெழுந்தார்கள்=அந்நாயனாருடைய திருவடிகளில்வணங்கி எழுந்தார்கள்; அப்போதோதங்கிளர்வேலையை யொத்தொலிமிக்கதவ்வூர்=அப்பொழுது பிரவாகித்தெழுகின்ற கடலையொத்து மகிழ்ச்சியாலுண்டாகிய ஆரவாரம் அவ்வூரின்கண் மிக்கிருந்தது.—எ-று. (௩௫)

சங்கங்கண் முரன்றன தாரைகள் பேரியோடும்
எங்கெங்கு மியம்பின பல்லிய மெல்லையில்ல
அங்கங்கு மலிந்தன வாழ்த்தொலி யம்பொற்கொம்பின்
பங்கன்னரு ளாலுல காள்பவர் பாங்கரெங்கும்.

(இ-ள்.) அம்பொற்கொம்பின்பங்கன்னருளால்=அழகிய பொற்கொம்பு போன்ற உமாதேவிபாகராகிய சுந்தரேசரது திருவருளினால்; உலகாள்பவர்பாங்கரெங்கும்=உலகையாளப்பெற்ற மூர்த்திநாயனாரது பக்கங்களெல்லாம்; தாரைகள்பேரியோடு சங்கங்கள் முரன்றன=தாரைகள் பேரிகைகளோடு சங்கவாத்தியங்களும் ஒலித்தன; எங்கெங்குமியம்பினபல்லிய மெல்லையில்ல=பலவாத்தியங்களும் அளவிறந்தனவாய் எவ்விடத்தும் முழங்கின; அங்கங்குமலிந்தன வாழ்த்தொலி=அவ்வவ்விடங்களிலும் வாழ்த்தொலிமிக்கன.—எ-று. (௩௬)

வெங்கட்களிற் றின்மிசை நின்று மிழிச்சிவேரித்
தொங்கற்சுடர் மாலைகள் சூழ்முடி சூடுசாலை
யங்கட்கொடு புக்கரி யாசனத் தேற்றியொற்றைத்
திங்கட்குடைக் கீழுரி மைச்செயல் சூழ்ந்துசெய்வார்.

(இ-ள்.) வெங்கட்களிற்றின்மிசைநின்றுமிழிச்சி = கொடியகோபக்கண்ணையுடைய அவ்வரசுவாவினது பிடரினின்றும் மூர்த்திநாயனாரை இறக்கி ; வேரித்தொங்கற்சுடர்மாலைகள்சூழ் = தேன்தங்கிய கட்டப்பட்ட மலர்மாலையும் ஒளியினையுடைய இரத்தினமாலைகளும் சூழ்ந்திருக்கும் ; முடிசூடு சாலையங்கட்கொடுபுக்கரியாசனத்தேற்றி = முடிசூடுஞ் சாலையினிடத்துக்கொண்டுபோய்ச் சிங்காசனத்தில் எழுந்தருளச்செய்து ; ஒற்றைத்திங்கட்குடைக்கீழ் = ஒப்பற்ற சந்திரவட்டக்குடையின்கீழ் ; உரிமைச்செயல்சூழ்ந்துசெய்வார் = அபிடேகஞ்செய்தற்குரிய செய்கையை யோசித்துச்செய்வாராயினர்.—எ-று. (௩௭)

மன்னுந்திசை வேதியின் மங்கல வாகுதிக்கட்
டுன்னுஞ்சுடர் வன்னி வளர்த்துத் துதைந்தநூல்சூழ்
பொன்னின்கல சங்கள் குடங்கள் பூரித்ததூநீர்
உன்னுஞ்செயன் மந்திர யோகர் நிறுத்தினார்கள்.

(இ-ள்.) மன்னுந்திசைவேதியின் = மூர்த்திநாயனார் வீற்றிருக்குங் கிழக்குத்திக்கில் அவரெதிரில் இடப்பட்ட வேதிகையில் ; மங்கலவாகுதிக்கட்டுன்னுஞ் சுடர்வன்னிவளர்த்து = மங்கலகரமான ஆகுதிகளோடு கூடிச்சொலிக்கின்ற ஓமாக்கினியை வளர்த்து ; துதைந்தநூல்சூழ் பொன்னின்கலசங்கள் = நெருங்கிய முப்புரியாகச்செய்த நூலைச்சுற்றிய பொன்னாலாகிய கலசங்களிலும் ; குடங்கள் பூரித்ததூநீர் = குடங்களிலும் நிறைக்கப்பட்ட தூய்மையான கங்கைமுதலிய தீர்த்தங்களை ; உன்னுஞ்செயன்மந்திரயோகர் நிறுத்தினார்கள் = தியானிக்கின்ற செய்கையையுடைய மாந்திரிகர்கள் தாபித்தார்கள்.—எ-று. (௩௮)

வந்துற்றெழு மங்கல மாந்தர்க டம்மைநோக்கிச்
சிந்தைச்சிவ மேதெளி யுந்திரு மூர்த்தியார்தா
முந்தைச்செய லாமமண் போய்முதற் சைவமோங்கில்
இந்தப்புவி தாங்கியிங் கின்னர சாள்வனென்றார்.

(இ-ள்.) வந்துற்றெழுமங்கலமாந்தர் கடம்மைநோக்கி = தம்மைவந்துவணங்கி எழுகின்ற மங்கலகரஞ் செய்தற்குரியமந்திரிமுதலாயினரைப்பார்த்து ; சிந்தைச்சிவமேதெளியுந் திருமூர்த்தியார் = தம்முள்ளத்துச்சிவபிரானையே தெளிகின்றயோகச்செல்வத்தையுடைய மூர்த்திநாயனார் ; முந்தைச்செயலாமமண்போய் = இதற்குமுன் கொடியசெயலிலிருந்த சமணர்கள்மதம் அழிந்து ; முதற்சைவமோங்கில் = முதன்மையாகிய சைவமதம்விருத்தியானால் ; இந்தப்புவிதாங்

கியிங்கின்னரசாள்வனென்றார்=இந்தப்பூமியைவகித்து இவ்விடத்து இனிய அர சாட்சியைச்செய்வனென்றார்.—எ-று. தாம்-அசை. (கூகூ)

அவ்வாறு மொழிந்தது கேட்ட வமைச்சரோடு
மெய்வ்வாழ்தரு நூலறி வின்மிகு மாந்தர்தாமும்
எவ்வாறருள் செய்தனை மற்றவை யன்றியாவர்
செய்வார்பெரி யோயெனச் சேவடி தாழ்ந்துசெப்ப.

(இ-ள்.) அவ்வாறுமொழிந்ததுகேட்டவமைச்சரோடு=அந்தப்பிரகாரம் மூர்த்திநாயனார் அருளிச்செய்ததைக்கேட்டமந்திரிமார்களோடு; மெய்வாழ்தரு நூலறிவின்மிகுமாந்தர்தாமும்=உண்மையானவேதாகம நூலுணர்ச்சியான்மிகுந் தபெரியோர்களும்; எவ்வாறருள்செய்தனையவையன்றி=நீ எவ்வாறு பணித்தனை அப்பணியன்றி அதற்குவேறாக; யாவர்செய்வார்பெரியோயெனச் சேவடிதாழ்ந் துசெப்ப = யார்செய்யவல்லவர்கள்பெரியோனே என்றுதிருவடிகளைவணங்கிச் சொல்ல.—எ-று. மற்று-அசை. (சுo)

வையம்முறை செய்குவ னாகில் வயங்குநீறே
செய்யும்மபி டேகமு மாகச் செழுங்கலன்கள்
ஐயன்னடை யாளமுமாக வணிந்து தாங்கு
மொய்புன்சடை மாமுடி யேமுடி யாவதென்றார்.

(இ-ள்.) வையம்முறைசெய்குவனாகில்=நிலவுலகத்தையான்ஆள்தற்குரி யவனானால்; வயங்குநீறேசெய்யும்மபிடேகமுமாக = விளங்குகின்ற விபூதியே செய்யப்பட்ட அபிடேகமாகவும்; செழுங்கலன்களையன்னடையாளமுமாக= செழுமையானதிருவாபரணங்கள் சிவபிரானது திருவடையாள்மாலையாகவும்; அணிந்துதாங்கும்=அணிந்துகொண்டு நான்தரிக்கின்ற; மொய்புன்சடைமாமுடி யேமுடியாவதென்றார்=நெருங்கியபுல்லியசடைமுடியே அபிடேகத்தின் பின்சூ டும்முடியாகவும் இருக்கத்தக்கதென்றுசொன்னார்.—எ-று. (சுக)

இவ்விரண்டுங்குளகம்.

என்றிவ்வுரை கேட்டலு மெல்லையில் கல்வியோரும்
வன்றிண்மதி நூல்வளர் வாய்மை யமைச்சர்தாமு
நன்றிங்கரு ளாலென நற்றவ வேந்தர்சிந்தை
யொன்றும்மர சாளுரி மைச்செய லானவுய்த்தார்.

(இ-ள்.) என்றிவ்வுரைகேட்டலு மெல்லையில்கல்வியோரும்=இவ்வாறு நாயனார்கூறிய இந்தவார்த்தையைக்கேட்டவுடனே அளவிடப்படாதகல்வியையு டையபெரியோர்களும்; வன்றிண்மதிநூல்வளர்வாய்மை யமைச்சர்தாமும்=மிக த்திட்பமான அறிவுநூலைத்தெளிந்த மெய்ம்மையையுடையமந்திரிமாரும்; நன்றி ங்கருளாலென=நன்றாயிருந்தது இவ்விடத்துத்தேவரீர்திருவருளென்று; நற்ற வவேந்தர்சிந்தையொன்றும்=நல்லதவத்தையுடையஅம்மூர்த்திநாயனாரது திரு



1 மூர்த்திநாயனார்

மூர்த்திநாயனார் விபூதி-அபிடேகதிரவியமாகவும், உருத்திராக்கம்-கலனாகவும், சடைமுடி-மகுடமாகவும், பாவித்துசுந்தரேசரைவணங்கி அரசாண்டு அவாநீத்து ஸ்ரீ பசுபதிபாலடைந்தது.

வுளத்திற்கமைந்த ; அரசாளுரிமைச்செயலானவுய்த்தார் = அரசாளும் உரிமைச் செயலைக்கொடுத்தார்கள்.—எ-று. (௪௨)

மாடெங்கு நெருங்கிய மங்கல வோசைமல்கச்
சூடுஞ்சடை மௌலி யணிந்தவர் தொல்லையேனந்
தேடுங்கழ லார்திரு வாலவாய் சென்றுதாழ்ந்து
நீடுங்களிற் றின்மிசை நீண்மறு கூடுபோந்தார்.

(இ-ள்.) மாடெங்குநெருங்கிய மங்கலவோசைமல்க = நாயனாரிருமருங்கும்நெருங்கிய மங்கலவாத்தியங்களின் ஒலிநிறைய ; சூடுஞ்சடைமௌலியணிந்தவர்=சூடப்பட்டசடையைமுடியாகவணிந்தமூர்த்திநாயனார் ; தொல்லையேனந்தேடுங்கழலார் = முன்னாளில் திருமாலாகியபன்றிதேடிய வீரக்கழலையணிந்த திருவடியையுடைய சிவபிரானது ; திருவாலவாய் சென்றுதாழ்ந்து = திருவாலவாயென்னுந் தலத்தையடைந்து வணங்கி ; நீடுங்களிற்றின் மிசைநீண்மறு கூடு போந்தார்=உயர்ந்த அரசுவாவின்மீது நீண்டதிருவீதியிற் பவனிவந்தார்.—எ-று.

மின்னும்மணி மாளிகை வாயிலின் வேழமீது
தன்னின்று மிழிந்து தயங்கொளி மண்டபத்திற்
பொன்னின்னரி மெல்லணைச் சாமரைக் காமர்பூங்கான்
மன்னுங்குடை நீழ லிருந்தனர் வையந்தாங்கி.

(இ-ள்.) மின்னும்மணி மாளிகைவாயிலின் = ஒளிவீசுகின்ற மணிகளிழைத்த அரண்மனைவாசலிற்சென்றவுடன் ; வேழமீதுநின்றுமிழிந்து = அவ்யானையினின்றும் இறங்கி ; தயங்கொளிமண்டபத்தில் = விளங்குங் காந்தியையுடைய அத்தாணிமண்டபத்தில் ; பொன்னின்னரி மெல்லணை = பொன்னாலாகிய சிங்காசனத்தின்கண் ; சாமரைக்காமர் பூங்கான் மன்னும் = சாமரங்களின் விரும்பத்தக்க மிருதுவான காற்றானதுவீசுகின்ற ; குடைநீழலிருந்தனர்வையந் தாங்கி = வெண்கொற்றக்குடைநிழலில் வீற்றிருந்தருளினார் நிலவுலகத்தைத்தாங்கி.—எ-று. தன் - சாரியை. (௪௪)

குலவுந்துறை நீதி யமைச்சர் குறிப்பின்வைகக்
கலகஞ்செ யமண்செய லாயின கட்டுநீங்கி
நிலவுந்திரு நீற்று நெறித்துறை நீடுவாழ
உலகெங்கு நிரம்பிய சைவ முயர்ந்துமன்ன.

(இ-ள்.) குலவுந்துறைநீதியமைச்சர்குறிப்பின்வைக=அறநெறியில்விளங்கியிருக்கும் மந்திரிமார்கள் தம்குறிப்பின்வழிநடக்கவும் ; கலகஞ்செயமண்செயலாயினகட்டுநீங்கி=தீங்குசெய்துகொண்டிருந்த அமணர்களுடைய ஆசாரமாகிய கட்டுப்பாடு ஒழிந்து ; நிலவுந்திருநீற்றுநெறித்துறை நீடுவாழ = விளங்குகின்றவிபூதியின்ஒழுக்கநெறியானது நீடித்துவாழவும் ; உலகெங்குநிரம்பிய சைவமுயர்ந்துமன்ன=உலகம்முழுதும் நிரம்பியசைவமார்க்கம் ஓங்கிநிலைபெறவும்—எ-று. ()

நுதலின்கண் விழித்தவர் வாய்மை நுணங்குநூலின்
பதமெங்கு நிறைந்து விளங்கப் பவங்கண்மாற்ற
உதவுந்திரு நீறுயர் கண்டிகை கொண்டவேணி
முதன்மும்மையி னுலல் காண்டனர் மூர்த்தியார்தாம்.

(இ-ள்.) நுதலின்கண்விழித்தவர் = நெற்றிக்கண்ணையுடையசிவபிரானது ; வாய்மைநுணங்குநூலின்பதமெங்குநிறைந்துவிளங்க=மெய்ம்மை நிறைந்த நுட்பமானவேதாகமநூல்களிற்கூறிய சைவவைதிகமார்க்கமானது எவ்விடத்தும் பரவிவிளங்க ; பவங்கண்மாற்றவுதவும்=பிறவிகளைநீக்குதற்கேதுவாகஉதவிசெய்கின்ற ; திருநீறுயர்கண்டிகைகொண்டவேணிமுதல் = திருநீறும் உயர்ந்த உருத்திராக்கமும்தாங்கிக்கொண்டசடைமுடியும் முதலான ; மும்மையினுலகாண்டனர்மூர்த்தியார் = மூன்று அடையாளங்களோடும் உலகத்தையாண்டார்மூர்த்திநாயனுர்.—எ-று. தாம்-அசை. இவ்விரண்டுங்குளகம். (௬௬)

ஏலங்கமழ் கோதையர் தந்திற மென்றுநீங்குஞ்
சீலங்கொடு வெம்புலன் றெவ்வுடன் வென்றுநீக்கி
ஞாலந்தனி நேமி நடாத்தி நலங்கொளூழி
காலம்முயிர் கட்கிட ரான கடிந்துகாத்து.

(இ-ள்.) ஏலங்கமழ்கோதையர்தந்திறம்=மயிர்ச்சாந்துகமழ்கின்ற கூந்தலையுடையமகளிர்களது இணைவிழைச்சாகியநிலைமையில் ;என்றுநீங்குஞ்சீலங்கொடு=எந்நாளுநீங்கியிருக்கும்துறவை ஒழுக்கமாகக்கொண்டு ; வெம்புலன்றெவ்வுடன்வென்றுநீக்கி=கொடியபுலன்களைப்பகைவர்களோடு செயித்துத்தள்ளி ; ஞாலந்தனிநேமிநடாத்தி=நிலவுலகத்தில் ஒப்பற்றதனது ஆஞ்ஞாசக்கரத்தைநடாத்தி ; நலங்கொளூழிகாலம்முயிர்கட்கிடரானகடிந்துகாத்து ; நன்மைமிக்கநெடுங்காலம்ஆன்மகோடிகளுக்குவருந்துன்பங்களைஒழித்துக்காப்பாற்றி.—எ-று. (௬௭)

பாதம்பர மன்னவர் சூழ்ந்து பணிந்துபோற்ற
ஏதம்பிணி யாவகை யிவ்வுல காண்டுதொண்டின்
பேதம்புரி யாவருட் பேரர சாளப்பெற்று
நாதன்கழற் சேவடி நண்ணின ரண்ணலாரே.

(இ-ள்.) பாதம்பரமன்னவர்சூழ்ந்துபணிந்துபோற்ற = திருவடிகளில் வேற்றரசர்கள்கப்பங்கொண்டு சூழ்ந்துவணங்கித்துதிக்க ; ஏதம்பிணியாவகையிவ்வுலகாண்டு=தீங்குநேரிடாமல் இந்தநிலவுலகத்தையாண்டு(அதனோடு);தொண்டின்பேதம்புரியாவருட்பேரரசாளப்பெற்று=அடிமைத்திறத்தில் வேறுபடாதபெரியஅருளரசுசெலுத்தவும்பெற்று ; நாதன்கழற்சேவடி நண்ணினரண்ணலார்= அம்மூர்த்திநாயனுர் சிவபிரானது வீரக்கழலணிந்த சிவந்ததிருவடியை அடைந்தார்.—எ-று. இவ்விரண்டுங்குளகம். ஏ-அசை. (௬௮)

அகல்பாறையின் வைத்து முழங்கையை யன்றுதேய்த்த
இகலார்களிற் றன்பரை யேத்தி முருகனாரா
முகில்சூழ்நறுஞ் சோலையின் மொய்யொளி மாடவீதிப்
புகலூர்வரு மந்தணர் தந்திறம் போற்றலுற்றும்.

(இ-ள்.) அகல்பாறையின்வைத்துமுழங்கையையன்றுதேய்த்த=அகன்றசந்தனச்சாணையில்வைத்துமுழங்கையைஅந்நாளில்தேய்த்த; இகலார்களிற்றன்பரையேத்தி=பகைகொண்டயானைபோலும் மூர்த்திநாயனாரைத்துதித்து; முருகனாராம்=முருகநாயனாரென்னும்; முகில்சூழ்நறுஞ்சோலையின்=மேகங்கள்சூழ்ந்தநறுமணங்கமழும்சோலையினையுடைய; மொய்யொளிமாடவீதி=திரண்டஒளிவீசுகின்றமாடவீதியோடுகூடிய; புகலூர்வருமந்தணர்தந்திறம்=திருப்புகலூரில் அவதரித்த அந்தணரது அடிமைத்திறத்தை; போற்றலுற்றும் = சொல்லத்தொடங்குவாம்.—எ-று. (சுக)

மூர்த்திநாயனார்புராணம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௪0௨௧.

உ

திருச்சிற்றம்பலம்.

## முருகநாயனார்புராணம்.

தாதுசூழுங் குழன்மலையா டளிர்க்கைசூழ்ந் திருமேனி
மீதுசூழும் புனற்கற்றை வேணிநம்பர் விரும்புபதி
சோதிசூழு மணிமௌலிச் சோழர்பொன்னித் திருநாட்டுப்
போதுசூழுந் தடஞ்சோலைப் பொய்கைசூழும் பூம்புகலூர்.

(இ-ள்.) தாதுசூழுங்குழன்மலையாள்=மலர்த்தாதுகள்தங்கிய கூந்தலையுடைய உமாதேவியாரது; தளிர்க்கைசூழ்ந்திருமேனி = தளிர்போன்றகையானதழுவிக்கொள்ளும்திருமேனியையும்; மீதுசூழும்புனற்கற்றைவேணிநம்பர்விரும்புபதி=திருமுடியின்மேல்பெருக்கெடுக்கும் கங்கைநதிதங்கிய கூட்டமான சடையையுமுடைய சிவபிரான் வீற்றிருந்தருளும்தலமாவது; சோதிசூழுமணிமௌலிச்சோழர்=ஒளிவிளங்கும் மணிகளிழைத்த கிரீடத்தையுடைய சோழர்களது; பொன்னித்திருநாட்டு=காவிரிநாட்டில்; போதுசூழுந்தடஞ்சோலை=மலர்கள்சூழ்ந்திருக்கும் பெரியசோலைகளோடுகூடிய; பொய்கைசூழும் பூம்புகலூர்=வாவிகள்நாற்புறத்திலும் சூழும் திருப்புகலூர்.—எ-று. (க)

நாமமூதூர் மற்றதனு ணல்லோர்மனம்போ லவரணிந்த
சேமநிலவு திருநீற்றின் சிறந்தவெண்மைத் திருந்தொளியில்
யாமவிருளும் வெளிபரக்கு மிரவேயல்ல விரைமலர்மேற்
காமர்மதுவுண் சிறைவண்டுங் களங்கமின்றி விளங்குமால்.

(இ-ள்.) நாமமூதூர்மற்றதனுள்=யாவராலும் அறியத்தக்கபழமையினை யுடைய அத்திருப்புகலூரில்; நல்லோர்மனம்போலவரணிந்த = அடியார்களது திருவுள்ளத்தைப்போல்அவ்வடியார்களணிந்த; சேமநிலவுதிருநீற்றின்=சுகத்தைக் கொடுக்கும் விபூதியினது; சிறந்தவெண்மைத் திருந்தொளியால்=சிறப்புள்ள வெள்ளியதிருத்தமான பிரகாசத்தினால்; யாமவிருளும் வெளியாக்குமிரவேயல்ல=இரவிருளும்வெளியாகச்செய்யப்படும் அவ்வாறான இரவுமாத்திரமல்ல; விரைமலர்மேற்காமர்மதுவுண்சிறைவண்டும்=வாசனைகமழும்மலர்களினிடத்து அழகிய தேனையுண்ணுகின்ற சிறகினையுடையவண்டுகளும்; களங்கமின்றிவிளங்கும்=(புலரிக்காலத்து மலர்கொய்யுமிடத்துக்)கருநிறம் நீங்கி வெண்ணிறமாய்விளங்கும்.—எ-று. ஆல்-அசை, (உ)

நண்ணுமிசைதேர் மதுகரங்க ணனைமென்சினையின் மருங்கலைய
வண்ணமதுரத் தேன்பொழிவ வாசமலர் வாயேயல்ல
தண்ணென்சோலை யெம்மருங்குஞ் சாருமடமென் சாரிகையின்
பண்ணின்கிளவி மணிவாயும் பதிகச்செழுந்தேன் பொழியுமால்.

(இ-ள்.) நண்ணுமிசைதேர்மதுகரங்கள்=அச்சோலையினிடத்துவரும்இசைபாடுகின்றவண்டுகள்; னனைமென்சினையின்மருங்கலைய = அரும்புகளையுடைய கிளைகளின்புறத்தில் அசைய; வண்ணமதுரத்தேன்பொழிவ=அழகியமதுரமான தேனைப்பொழிவன; வாசமலர்வாயேயல்ல = வாசனைகமழும்மலர்களின்வாய்மாத்திரமல்ல; தண்ணென்சோலையெம்மருங்கும்=குளிர்ந்திருக்கும்சோலையினது எப்புறத்தும்; சாருமடமென்சாரிகையின்=வருகின்ற இளமையினையுடையமிருதுவான நாகணவாய்ப்புள்ளின்; பண்ணின்கிளவிமணிவாயும்=பண்ணமைந்த சொல்லையுடைய அழகியவாயும்; பதிகச்செழுந்தேன்பொழியும் = திருப்பதிகமாகிய செழுமைதங்கியதேனைச்சொரியும்.—எ-று. ஆல்-அசை. (ஙு)

ஆளுடையபிள்ளையாரும் ஆண்டவரசும்பலநாள்வசித்தகாரணத்தால் அங்குத்திருப்பதிகங்கள் அதிகமாய்வழங்கின என்பதுகருத்து.

வண்டுபாடப் புனற்றடத்து மலர்ந்துகண்ணீ ரரும்புவன
கொண்டவாச முகையவிழ்ந்த குளிர்பங்கயங்க ளேயல்ல
அண்டர்பெருமான் றிருப்பாட்டி னமுதம்பெருகச் செவிமடுக்குந்
தொண்டர்வதன பங்கயமுந் துளித்தகண்ணீ ரரும்புமால்.

(இ-ள்.) வண்டுபாடப்புனற்றடத்து=வண்டுகள்பாடும்படி நீரையுடையதடாகத்தில்; மலர்ந்துகண்ணீரரும்புவன = விகசித்துக்கண்ணீரைத்துளிப்பன; கொண்டவாசமுகையவிழ்ந்த=வாசனைதங்கியமுகைவிண்டலர்ந்த; குளிர்பங்கயங்களேயல்ல =குளிர்ந்ததாமரைமலர்கள்மாத்திரமேயல்ல; அண்டர்பெருமான்றிருப்பாட்டின்=சிவபிரானைத்துதிக்கும் தேவாரப்பதிகத்தில் உள்ள; அமுதம்பெருகச்செவிமடுக்கும்=இசையமுதம் பெருகுமிடத்து அதனைக் காதுத்துவாரத்தால் பானம்பண்ணும்; தொண்டர்வதனபங்கயமும்=அடியார்களது முகமா

யதாமரைமலரும் ; துளித்தகண்ணீரரும்பும் = துளிக்கின்றஆனந்தக்கண்ணீரைச்சொரியும்.—எ-று. ஆல்-அசை. (ச)

தாமரைபரத்தில்-கள்ளாகிய நீரைத்துளிப்பனவென்று குறிப்புப்பொருள் கொள்க.

ஆனபெருமை வளஞ்சிறந்த வந்தண்புகலூ ரதுதன்னின்
மானமறையோர் குலமரபின் வந்தார்முந்தை மறைமுதல்வர்
ஞானவரம்பின் றலைநின்றார் நாகம்புனைவார் சேவடிக்கீழ்
ஊனமின்றி நிறையன்பா லுருகுமனத்தார் முருகனார்.

(இ-ள்) ஆனபெருமைவளஞ்சிறந்த=அவ்வாறானபெருமையோடு கூடியவளத்தாற்சிறந்த ; அந்தண்புகலூரதுதன்னில்=அழகிய தட்பத்தையுடைய திருப்புகலூரில்வாழும் ; மானமறையோர்குலமரபின்வந்தார்=வெற்றிப்பாட்டையுடையமறையவர்குலத்திலவதரித்தவர் ; முந்தைமறைமுதல்வர்=முதன்மையான வேதத்தை உணர்ந்தவர் ; ஞானவரம்பின்றலைநின்றார் = ஞானம்நிறைந்த ஒழுக்கத்தில் நின்றவர்(அவர்யாரெனில்); நாகம்புனைவார்சேவடிக்கீழ்=பாம்பையணிந்தசிவபிரானதுசிவந்ததிருவடிக்கீழ் ; ஊனமின்றிநிறையன்பால் = குற்றமின்றி நிறைந்த அன்புகாரணமாய் ; உருகுமனத்தார்முருகனார்=உருகுகின்றமனத்தையுடையவராகிய முருகநாயனார்.—எ-று. (ரு)

அடைமேலலவன் றுயிலுணர வலர்செங்கமல வயற்கயல்கண்
மடைமேலுகளுந் திருப்புகலூர் மன்னிவாழுந் தன்மையராய்
விடைமேல்வருவார்க் காளாய மெய்ம்மைத்தவத்தா லவர்கற்றைச்
சடைமேலணியத் திருப்பள்ளித் தாமம்பறித்துச் சாத்துவார்.

(இ-ள்.) அடைமேலலவன்றுயிலுணர=நண்டுகள்தாமரையிலையில்நித்திரைசெய்ய ; அலர்செங்கமலவயற்கயல்கள் = மலர்கின்றசெந்தாமரைமலர்களையுடையவயல்களிலுள்ளகயல்மீன்கள் ; மடைமேலுகளுந்திருப்புகலூர் = மடையின்மேற்பாய்கின்றதிருப்புகலூரின்கண்ணே ; மன்னிவாழுந்தன்மையராய் = நிலைபெற்றுவாழுந்தன்மையுடையவராய் ; விடைமேல்வருவார்க்காளாயமெய்ம்மைத்தவத்தால் = இடபத்தின்மேலெழுந்தருளிவராநின்றசிவபிரானுக்கு அடிமைத்திறம்பூண்டமெய்ம்மையானதபோபலத்தினால் ; அவர்கற்றைச்சடைமேலணிய=அப்பிரானதுகூட்டமானசடைமுடியின்மேல்தரிக்கும்படி; திருப்பள்ளித்தாமம்பறித்துச்சாத்துவார் = திருப்பள்ளித் தாமத்திற்குரியமலர்களைக்கொய்து சாத்துகின்றவர் —எ-று. (சு)

புலரும்பொழுதின் முன்னெழுந்து புனிதநீரின் மூழ்கிப்போய்
மலருஞ்செவ்வித் தம்பெருமான் முடிமேல்வானீ ராற்றுமதி
உலவுமருங்கு முருகுயிர்க்க நகைக்கும்பதத்தி னுடன்பறித்த
அலகின்மலர்கள் வெவ்வேறு திருப்பூக்கூடை களிலமைப்பார்.

(இ-ள்.) புலரும்பொழுதின்முன்னெழுந்து=விடியுங்காலத்துமுன்னே துயிலெழுந்து ; புனிதநீரின்மூழ்கிப்போய் = தூய்மையாகியநீரில்முழுகிச்சென்று ; மலருஞ்செவ்வித்தம்பெருமான்முடிமேல்=மலரும்பருவத்தில் தமதுபிரானு

ரதுதிருமுடியின்மேல் ; வானீராறுமதியுலவுமருங்கு=கங்கைநதியும் இளம்பிறையுஞ்சஞ்சரிக்கின்றபக்கத்தில் ; மருகுயிர்க்கநகைக்கும்பதத்தினுடன் பறித்த=வாசனைகமழும்படியாகவிளங்கியிருக்கும்பக்குவத்தில் உடனேகொய்த ; அலகின்மலர்கள்வெவ்வேறு=எண்ணிறந்தமலர்களைத்தனித்தனி ; திருப்பூக்கூடைகளிலமைப்பார்=திருப்பூக்கூடைகளில்வைப்பார் —எ-று. (எ)

கோட்டுமலரு நிலமலருங் குளிர்நீர்மலருங் கொழுங்கொடியின்
றோட்டுமலரு மாமலருஞ் சுருதிமலருந் திருவாயிற்
காட்டுமுறுவ னிலவலரக் கனகவரையிற் பன்னகநாண்
பூட்டுமொருவர் திருமுடிமேற் புனையலாகு மலர்தெரிந்து.

(இ-ள்.) கோட்டுமலரும்நிலமலரும்குளிர்நீர்மலரும் = கோட்டுப்பூவும்நிலப்பூவும் குளிர்ந்த நீர்ப்பூவும் ; கொழுங்கொடியின்றோட்டுமலரும் ஆமலரும்= கொழுமையான கொடியிலுண்டாகிய இதழையுடையமலரும் ஆகின்ற இந்நால்வகைமலரும் ; சுருதிமலருந்திருவாயிற்காட்டுமுறுவனிலவலர=வேதங்கள்விளங்குகின்ற திருவாயினிடத்துக்காட்டப்பட்ட புன்முறுவலானது நிலவைவீச ; கனகவரையிற்பன்னகநாண்பூட்டுமொருவர்=மேருவாகியவில்லில் ஆதிசேடனென்னும் நாணியைப்பூட்டியசிவபிரானது; திருமுடிமேற்புனையலாகுமலர்தெரிந்து=திருமுடியின்மேற்காலைமுதலியகாலங்களுக்கேற்கத்தரிக்கத்தக்கமலர்களை ஆராய்ந்து. ()

கொண்டுவந்து தனியிடத்தி னிருந்துகோக்குங் கோவைகளும்
இண்டைச்சுருக்குந் தாமமுட னிசைக்கும் வாசமாலைகளுந்
தண்டிற்கட்டுங் கண்ணிகளுந் தாளிற்பிணைக்கும் பிணையல்களு
நுண்டாதிறைக்குந் தொடையல்களுஞ் சமைத்துநுடங்கு நூன்மார்பர்.

(இ-ள்.) கொண்டுவந்துதனியிடத்திருந்துகோக்குங்கோவைகளும்= நால்வகைமலரையும் எடுத்துவந்து ஏகாந்தமான திருமாலைக்குறட்டிலிருந்து கோக்கப்பட்டகோவைமாலைகளும் ; இண்டைச்சுருக்குந்தாமமுடனிசைக்கும்வாசமாலைகளும்=இண்டைமாலையும்பத்திமாலையோடுவாசனைகமழும்ஆரம்முதலியமாலைகளும் ; தண்டிற்கட்டுங்கண்ணிகளும்=வாழைநாரை அளவாகக்குறுக அரிந்ததண்டில்மலர்களைக்கட்டி அவைகளையெல்லாஞ்சேர்த்துப் பெரிதாகக்கட்டும்கொண்டைமாலைகளும் ; தாளிற்பிணைக்கும்பிணையல்களும் = மலர்களை அடியோடுஅடிசேர்த்துநாராற்பிணைக்கும்சரமாலைகளும் ; நுண்டாதிறைக்குந்தொங்கல் களும்= நுண்ணியமகரந்தத் தையிறைக்கும்தூக்காகச் சாத்தும்மாலைகளும் ; சமைத்துநுடங்குநூன்மார்பர்=கட்டி அசைகின்ற பூணூலணிந்த மார்பினையுடையமுருகநாயனார்.—எ-று. இவ்விரண்டுங்குளகம். கண்ணி=கொண்டைமாலை. (கூ)

ஆங்கப்பணிக ளானவற்றுக் கமைத்தகாலங் களினமைத்துத்
தாங்கிக்கொடுசென் றன்பினொடுஞ் சாத்திவாய்ந்த வர்ச்சனைகள்
பாங்கிற்புரிந்து பரிந்துள்ளார் பரமர்பதிகப் பற்றான
ஓங்கிச்சிறந்த வஞ்செழுத்து மோவாநாவி னுணர்வினார்.



முருகநாயனர் வைகறைஎழுந்து விதிப்படி நித்தியகருமங்கள்முடித்து வர்த்தமானீச்சருக்குதூய நால்வகைப் புட்மாலைதொடுத்துதவி ஸ்ரீ பஞ்சாக்ஷரம்ஓதி ஸ்ரீ ஞானசம்பந்தர்மணத்தில் முத்தியடைந்தது.

(இ-ள்.) ஆங்கப்பணிகளானவற்றுக்கு=அவ்வர்த்தமான வீச்சரத்துமேற் சொல்லியவாறு கட்டப்பட்ட அத்திருமாலைப்பணிகளுக்கு ; அமைத்தகாலங்களி னமைத்து=நியமிக்கப்பட்ட காலைமுதலிய நாலுகாலங்களிலும்கட்டி ; தாங்கிக் கொடுசென்றன்பினொடுஞ்சாத்தி=அம்மாலைகளை எடுத்துக்கொண்டு அவ்வாலயத் திற்சென்று அன்போடு அணிந்து ; வாய்ந்தவர்ச்சனைகள்பாங்கிற்புரிந்து பரிந்து ள்ளார் = சிறந்தபூசைகளைமுறைமையோடுவிதிப்படிசெய்து அன்புபூண்டொழு குபவராய் ; பரமர்பதிகப்பற்றானதோங்கிச்சிறந்த = சிவபிரானுடையதிருப்பதிகச் சார்வான உயர்வாய்ச்சிறப்படைந்த ; அஞ்செழுத்துமோவாநாவினுணர்வினர்= திருவைந்தெழுத்தும் நீங்காது உச்சரிக்கும் நாவோடு உணரும் உணர்வுடையவர். எ-று. (கஎ)

ஓவாநாவினுணர்வினரென்றமையால்-செபிக்கும்முறைமையும் சிந்திக்கு ம் முறைமையும் கூறியவாறாயிற்று.

தள்ளுமுறைமை யொழிந்திடவித் தகுதியொழுகு மறையவர்தாந்
தெள்ளுமறைகண் முதலான ஞானஞ்செம்பொன் வள்ளத்தில்
அள்ளியகில மீன்றளித்த வம்மைமுலைப்பா லுடனுண்ட
பிள்ளையார்க்கு நண்பருமாம் பெருமையுடையா ராயினர்.

(இ-ள்.) தள்ளுமுறைமையொழிந்திட=வேதாகமங்களில் விலக்கியிருக் கின்றவற்றையாவரும் நீங்க ; இத்தகுதியொழுகுமறையவர்தாம்=இவ்வாறாக விதி மார்க்கத்துநடக்கின்ற முருகநாயனார் ; தெள்ளுமறைகண்முதலானஞானம்=தெ ளிந்த வேதாகமமுதலானஞானங்களை ; செம்பொன்வள்ளத்தில் அள்ளி=சிவந் தபொன்னாற்செய்த கிண்ணத்தில் எடுத்து ; அகிலமீன்றளித்தவம்மைமுலைப்பாலு டனுண்ட=உலகமுழுவதையும் பெற்றெடுத்தபிராட்டியாரது முலைப்பாலோடு உ ண்டருளிய ; பிள்ளையார்க்குநண்பருமாம்=ஆளுடையபிள்ளையாருக்கு நண்பராக வுமாம்; பெருமையுடையாராயினர்=பெருமையையுடையவராயினர்.—எ-று.()

அன்னவடிவு மேனமுமா யறிவாரிருவ ரறியாமே
மன்னும்புகலூ ருறைவாரை வர்த்தமான வீச்சரத்து
நன்னர்மகிழ்ச்சி மனங்கொள்ள நாளும்பூசை வழுவாமே
பன்னும்பெருமை யஞ்செழுத்தும் பயின்றே பணிந்துபரவினர்.

(இ-ள்.) அன்னவடிவுமேனமுமாய்=அன்னவடிவாயும்பன்றிவடிவாயும்; அறிவாரிருவரறியாமே = அடியையும்முடியையும் அறியத்தொடங்கியபிரமன் மால் என்னும் இருவரும் அறியாமல் ; மன்னும்புகலூருறைவாரை=நிலைபெற்ற திருப்புகலூரின்கண்வாழும்சிவபிரானை ; வர்த்தமானவீச்சரத்து=வர்த்தமானவீ ச்சரம் என்னும் ஆலயத்துள் ; நன்னர்மகிழ்ச்சிமனங்கொள்ள=சிறந்த மகிழ்ச்சி தம்முளத்துதிக்க ; நாளும்பூசைவழுவாமே=நாள்தோறும்பூசைதவறாமற்செய்து; பன்னும்பெருமையஞ்செழுத்தும்=செபித்தற்குரிய பெருமையுடைத்தாகிய திரு வைந்தெழுத்தையும் ; பயின்றுபணிந்து பரவினர் = ஓதிவணங்கித்துதித்தார். எ-று. ஏ-அசை. (கஉ)

அங்கணமருந் திருமுருக ரழகார்புகலிப் பிள்ளையார்
பொங்குமணத்தின் முன்செய்த பூசையதனாற் புக்கருளிச்
செங்கணடலே றுடையவர்தாஞ் சிறந்தவருளின் பொருளளிக்கத்
தங்கள்பெருமா னடிநீழற் றலையாநிலைமை சார்வுற்றார்.

(இ-ள்.) அங்கணமருந்திருமுருகர் = அவ்விடத்துப்பணிசெய்திருந்தருளும் திருமுருகநாயனார் ; அழகார்புகலிப்பிள்ளையார்=அழகினையுடைய சீகாழியில் அவதரித்த ஆளுடையபிள்ளையாரது ; பொங்குமணத்தின் முன்செய்தபூசையதனால் = பொலிவினையுடையதிருமணத்தில்தாம் முன்செய்த சிவபூசையின்பலத்தினால் ; புக்கருளி=சென்றருளி ; செங்கணடலேறுடையவர்தாம் = சிவந்தகண்களையுடையவலிய இடபத்தைவாகனமாகக்கொண்ட சிவபிரான் ; சிறந்தவருளின்பொருளளிக்க=சிறப்பானதிருவருட்செல்வத்தைக்கொடுக்க ; தங்கள்பெருமானடிநீழற்றலையாநிலைமைசார்வுற்றார்=தமதுபெருமானாகிய அச்சிவபிரானது திருவடிநிழலிற்றலைப்பட்டிருக்கும் நிலைமையை அடைந்தார்.—எ-று. (கரு)

அரவமணிந்த வரையாரை யர்ச்சித்தவர்தங் கழனிழற்கீழ்
விரவுபுகலூர் முருகனார் மெய்ம்மைத்தொண்டின் றிறம்போற்றி
கரவிலவர்பால் வருவாரைக் கருத்திலுருத் திரங்கொண்டு
பரவுமன்பர் பசுபதியார் பணிந்தபெருமை பகர்வுற்றேன்.

(இ-ள்.) அரவமணிந்தவரையாரையர்ச்சித்து=சர்ப்பத்தைஆபரணமாகவணிந்ததிருவரையையுடைய சிவபிரானைப்பூசித்து; அவர்தங்கழனிழற்கீழ்விரவுபுகலூர்முருகனார் = அவருடையதிருவடிநிழற்கீழ்க்கலந்ததிருப்புகலூரில்அவதரித்த முருகநாயனாரது; மெய்ம்மைத்தொண்டின்றிறம்போற்றி=மெய்ம்மையானதிருத்தொண்டின்நிலைமையைத்துதித்து ; கரவிலவர்பால்வருவாரை = வஞ்சமற்றமனத்தையுடையஅடியாருக்குக்காட்சிகொடுத்தருளும்சிவபிரானை; கருத்திலுருத்திரங்கொண்டுபரவும்=தம்மனதில் உருத்திரமந்திரத்தால்இரவும்பகலும்துதிக்கின்ற ; அன்பர்பசுபதியார்=அன்பராகிய உருத்திரபசுபதிநாயனார் ; பணிந்தபெருமைபகர்வுற்றேன்=வழிபட்டபெருமையைச்சொல்லத்தொடங்கினேன்.—எ-று.(கச)

முருகநாயனார்புராணம் முற்றிற்று.

ஆக-திருவிருத்தம்-௧0௩௫.

உ

திருச்சிற்றம்பலம்.

## உருத்திரபசுபதிநாயனார்புராணம்.

வேறு.

நிலத்தினோங்கிய நிவந்தெழும் பெரும்புன னீத்த
மலர்த்தடம்பணை வயல்புகு பொன்னிநன் னாட்டுக்
குலத்தினோங்கிய குறைவிலா நிறைகுடி குழுமித்
தலத்தின்மேம்படு நலத்தது பெருந்திருத் தலையூர்.

(இ-ள்.) நிலத்திலோங்கியநிவந்தெழும்பெரும்புனனீத்தம்=நிலவுலகத்தில்வளம்பெருகுதற்கேதுவாய்மேற்கொண்டுபெருகுகின்ற மிக்ககாவிரியின்பிரவாகமானது ; மலர்த்தடம்பணைவயல்புகுபொன்னிநன்னாட்டு = தாமரைமலர்களையுடைய விசாலமான வயல்களிற் செல்லுகின்ற சோழநாட்டில் ; குலத்திலோங்கிய குறைவிலா நிறைகுடிகுழுமி=குலத்தாற்சிறந்த அறிவொழுக்கங்களிற் குறைவில்லாதநிறைந்தகுடிகள்நெருங்கி ; தலத்தின்மேம்படுநலத்தது பெருந்திருத்தலையூர்= அந்நாட்டூர்களில் பெருமைபெற்றநலத்தையுடையதுயாதெனின் பெரியதிருத்தலையூர்.—எ-று. (௧)

வானளிப்பன மறையவர் வேள்வியின் வளர்தீ
தேனளிப்பன நறுமலர்ச் செறிசெழுஞ் சோலை
ஆனளிப்பன வஞ்சுகந் தாடுவார்க் கவ்வூர்
தானளிப்பன தருமமு நீதியுஞ் சால்பும்.

(இ-ள்.) மறையவர்வேள்வியின்வளர்தீவானளிப்பன = அந்தணர்களது யாகாக்கினிகள் மழையைக்கொடுப்பன ; நறுமலர்ச்செறிசெழுஞ்சோலைதேனளிப்பன = நறுமணங்கமழும் பூக்கள்நெருங்கிய செழுமையாகியசோலைகள்தேனைக்கொடுப்பன; ஆன்உகந்தாடுவார்க்கஞ்சளிப்பன=பசுக்கள்கௌவியத்தைவிரும்பிஆடியருளும்சிவபிரானுக்கு அக்கௌவியங்களைக்கொடுக்கின்றன ; அவ்வூரளிப்பனதருமமுநீதியுஞ்சால்பும் = அவ்வூரால் அளிக்கப்படுவன அறமும் நீதியும் சால்பும்.—எ-று. (௨)

அங்கண்மாநக ரதனிடை யருமறை வாய்மைத்
துங்கவேதியர் குலத்தினிற் றோன்றிய தூயோர்
செங்கண்மால்விடை யார்செழும் பொன்மலை வல்லி
பங்கினாரடி மைத்திறம் புரிபசு பதியார்.

(இ-ள்.) அங்கண்மாநகரதனிடை=அழகியஇடமகன்றபெருமைதங்கிய அந்நகரத்தில்; அருமறைவாய்மைத் துங்கவேதியர்குலத்தினிற் றோன்றியதூயோர்=அரிதாகியமறையிற்கூறும்மெய்ம்மையமைந்த ஒழுக்கத்தால் உயர்ந்தமறையவர்குலத்தில் உதித்த தூயவர் (அவர்திருப்பெயர்யாதெனில்); செங்கண்மால்விடையார்=சிவந்தகண்களையுடைய திருமாலாகிய இடபத்தை யூர்ந்தருளும் ; செழும்பொன்மலைவல்லிபங்கினார்=செழுமையான இமயமலையின் புத்திரியாகியஉமாதேவியை ஓர் கூற்றிலுடைய சிவபிரானது ; அடிமைத்திறம்புரி பசுபதியார் = திருத்தொண்டைச்செய்கின்ற பசுபதிநாயனார்.—எ-று. (௩)

ஆயவந்தண ரருமறை யுருத்திரங் கொண்டு
மாயனாரறி யாமலர்ச் சேவடி வழுத்துந்
தூயவன்பொடு தொடர்பினி விடையறாச் சுருதி
நேயநெஞ்சின ராகிய தொழிற்றலை நின்றார்.

(இ-ள்.) ஆயவந்தணரருமறையுருத்திரங்கொண்டு=அந்தப்பசுபதிநாயனார் அரிய யசுர்வேதத்திற்கூறும் சதஉருத்திரமந்திரத்தால்; மாயனாரறியாமலர்ச்சேவடிவழுத்தும்தூயவன்பொடு=திருமால்தேடியறியாத மலர்போலும்திருவடிகளைத் துதிக்கின்றதூய்மையானபத்தியோடு ; தொடர்பினிலிடையறாச் சுருதிநேயநெஞ்சினராகிய=சந்தசில் இடைநீங்காதசுருதியைவிரும்பியமனமுடையவராயிருக்கும்; தொழிற்றலைநின்றார்=ஓதற்றொழிலிற்சிறந்தார்.—எ-று. (ச)

கரையில்கம்பலை புள்ளொலி கறங்கிட மருங்கு
பிரசமென்சுரும் பறைந்திடக் கருவரால் பிறழு
நிரைநெடுங்கய நீரிடை நெருப்பெழுந் தனைய
விரைநெகிழ்ந்தசெங் கமலமென் பொய்கையுண் மேவி.

(இ-ள்) கரையில்கம்பலை புள்ளொலிகறங்கிட = அளவுபடாத தழனியைப்புட்களொலித்துக்கொண்டு சுற்ற ; மருங்குபிரசமென் சுரும்பறைந்திட = அருகில் தேனையுண்ணும்பொருட்டு மிருதுவான ஆண்வண்டுகள் ஒலிக்க ; கருவரால்பிறழும்=கரியவரால் மீன்கள்பிறழ்ந்து செல்லுகின்ற ; நிரைநெடுங்கயநீரிடைநெருப்பெழுந்தனைய=நிறைந்தநெடியவாவியில் நீரினிடத்து நெருப்புச்சொலித்துஉதித்தாலொத்த ; விரைநெகிழ்ந்த செங்கமலமென்பொய்கையுண்மேவி = வாசனையோடு முகைவிண்டலர்ந்த செந்தாமரைமலர்களையுடைய மிருதுவான தடாகத்தில் சென்று.—எ-று. (டு)

தெள்ளுதண்புனல் கழுத்தள வாயிடைச் செறிய
உள்ளுறப்புக்கு நின்றுகை யுச்சிமேற் குவித்துத்
தள்ளுவெண்டிரைக் கங்கைநீர் ததும்பிய சடையார்
கொள்ளுமன்பினி லுருத்திரங் குறிப்பொடு பயின்றார்.

(இ-ள்.) ஆயிடைதெள்ளு தண்புனல் கழுத்தளவுசெறிய=அந்தவாவியினிடத்துத் தெளிவாகிய குளிர்ந்த நீரானது தன்கழுத்தளவும் பொருந்தும்படி ; உள்ளுறப்புக்குநின்றுகையுச்சிமேற்குவித்து=அதனுட்புகுந்து நின்று இருகரங்களையும் சிரமேற் கூப்பிக்கொண்டு ; வெண்டிரைதள்ளுகங்கைநீர்ததும்பிய சடையார்=வெள்ளிய அலைவீசுகின்ற கங்காநதியானது நிறைந்து ததும்புகின்ற சடையையுடைய சிவபிரான் ; கொள்ளுமன்பினி லுருத்திரங்குறிப்பொடுபயின்றார்= தம்பணியை விரும்பிக்கொள்ளத்தக்க அன்புகாரணமாய் திருவுருத்திர மந்திரத்தை உள்ளக்கருத்தோடு ஓதினார்.—எ-று. இவ்விரண்டுங்குளகம். (சு)

அருமறைப்பய னாகிய வுருத்திர மதனை
வருமுறைப்பெரும் பகலு மெல்லியும்வழு வாமே
திருமலர்ப்பொகுட் டிருந்தவ னனையவர் சிலநாள்
ஒருமையுய்த்திட வுமையிட மகிழ்ந்தவ ருவந்தார்.

(இ-ள்.) அருமறைப்பயனாகிய வுருத்திரமதனை=அரியவேதத்தின் பயனாகிய திருவுருத்திரத்தை ; வருமுறைப்பெரும்பகலு மெல்லியும்வழுவாமே =




1. உருத்திரபசுபதிநாயனார்

உருத்திரபசுபதிநாயனார் தாமரைத்தடாகத்தில் கழுத்தளவுஜலத்தில் நின்று சிரமேற்கைகூப்பி அகோராத்திரம் சிவபெருமானைச் சிந்தித்து வேதபுருடனுக்குக் கண்ணாகிய உருத்திரமந்திரத்தைச் செபித்துச் சிவபெருமான் சந்நிதானமடைந்தது.

ஓதிவரும்முறைமையில் பெரிய பகற்காலத்தும் இராக்காலத்தும்தவறாமல் ; திரு மலர்ப்பொருட்டிருந்தவனனையவர்=அழகிய தாமரைமலரின் கர்ணிகையில் வீற் றிருக்கும் நான்முகனையொத்த பசுபதியார் ; சிலநாள் ஒருமையுய்த்திட = சிலகா லம் ஒருமைப்பாட்டோடு தோத்திரஞ்செய்துவர ; உமையிடமகிழ்ந்தவருவந்தார் = உமாதேவியை இடப்பாகத்தில்கொண்டருளும் சிவபிரானார் அவர்பணிக்குத் திரு வுள்ளமகிழ்ச்சியடைந்தார்.—எ-று. (எ)

வேதங்களிற் கூறப்படும் பிராமங்களுக்கும் மந்திரங்களுக்கும் திருவைந் தெழுத்தையுடைய உருத்திரமே மிகச்சிறந்ததென்பது விளக்கிய அருமறைப்பய னாகிய உருத்திரமென்றார்.

காதலன்பர்த மருந்தவப் பெருமையுங் கலந்த
வேதமந்திர நியதியின் மிகுதியும் விரும்பி
ஆதிநாயக ரமர்ந்தருள் செய்யமற் றவர்தாந்
தீதிலாநிலைச் சிவபுரி யெல்லையிற் சென்றார்.

(இ-ள்.) காதலன்பர்தமருந் தவப்பெருமையும்=அன்பினையுடைய பசு பதியாரது அரியதவத்தின் பெருமையையும் ; கலந்தவேதமந்திர நியதியின் மிகு தியும் விரும்பி=திருவுருத்திரத்தில் ஒருப்பட்ட நியமத்தின் மிகுதியையும் விரு ம்பி ; ஆதிநாயக ரமர்ந்தருள்செய்ய = முதற்கடவுளாகிய சிவபிரான் திருவுள ங்கொண்டு கிருபைசெய்ய ; அவர் தீதிலாநிலைச் சிவபுரியெல்லையிற் சென்றார் = அப்பசுபதியார் குற்றமில்லாத நிலைமையையுடைய சிவலோகத்தின் எல்லையைத் தமக்கிடமாகச் சென்றருளினார்.—எ-று. மற்று - தாம் - அசை. (அ)

நீடுமன்பினி லுருத்திர மோதிய நிலையால்
ஆடுசேவடி யருகுற வணைந்தன ரவர்க்குப்
பாடுபெற்றசீ ருருத்திர பசுபதி யாராங்
கூடுநாமமு நிகழ்ந்தது குவலயம் போற்ற.

(இ-ள்.) நீடுமன்பினி லுருத்திரமோதிய நிலையால் = மிக்கபேரன்பால் திருவுருத்திரத்தைச் செபித்த நியமத்தால் ; ஆடுசேவடியருகுற வணைந்தனர் = பொன்னம்பலத்தில் ஆனந்தநிருத்தஞ்செய்தருளும் திருவடிக்கருகாக அடைந் தார் ; அவர்க்குப் பாடுபெற்ற சீருருத்திர பசுபதியாராம்=(அதனால்) அந்நாயனா ருக்கு மேன்மைபெற்ற சிறப்பினையுடைய உருத்திரபசுபதியாரென்னும் ; கூடுநா மமு நிகழ்ந்தது குவலயம்போற்ற=சம்பந்தத்தையுடைய திருநாமமும் உலகத்தார் துதிக்கும்படி உண்டாயிற்று.—எ-று. அருகு=சாமீபபதம். (கூ)

அயில்கொண்முக்குடு மிப்படை யார்மருங் கருளாற்
பயிலுருத்திர பசுபதி யார்திறம் பரசி
எயிலுடைத்தில்லை யெல்லையி னாளைப்போ வாராஞ்
செயலுடைப்புறத் திருத்தொண்டர் திறத்தினை மொழிவாம்.

(இ-ள்.) அயில்கொண்மூக் குடுமிப்படை யார்மருங்கு = கூர்மைபெற்ற மூன்றுசிகைகளையுடைய சூலத்தை ஆயுதமாகக்கொண்ட சிவபிரானது அருகில்; அருளாற்பயி லுருத்திரபசுபதியார்திறம்பரசி=திருவருளினால் அன்புசெய்தொழுகிய உருத்திரபசுபதிநாயனருடைய அடிமைத்திறத்தைத் துதித்து ; எயிலுடைத்தில்லையெல்லையில் = மதில்சூழ்ந்த சிதம்பரத்தின் எல்லையின்கண்ணே ; நாளைப்போவாராஞ் செயலுடைப் புறத்திருத்தொண்டர்திறத்தினை மொழிவாம்=நாளைப்போவோமென்னுங் கருத்தினையுடைய புறத்திருத்தொண்டரது சரிதத்தைச் சொல்லுவாம்.—எ-று. (கo)

உருத்திரபசுபதிநாயனார் புராணம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கoசஙு.

திருச்சிற்றம்பலம்.

## திருநாளைப்போவார்நாயனார்புராணம்.

பகர்ந்துலகு சீர்போற்றும் பழையவளம் பதியாகுந்
திகழ்ந்தபுனற் கொள்ளிடம்பொன் செழுமணிக டிரைக்கரத்தான்
முகந்துதர விருமருங்கு முளரிமலர்க் கையேற்கும்
அகன்பணைநீர் நன்னாட்டு மேற்காநாட் டாதனூர்.

(இ-ள்.) பகர்ந்துலகு சீர்போற்றும்=உலகத்தார் அதன்சிறப்பினை எடுத்துச்சொல்லிப்புகழும்; பழையவளம்பதியாகும்=பழமையாகியவளத்தினையுடைய ஊராம் அது(யாதெனில்) ; திகழ்ந்தபுனற்கொள்ளிடம்=விளங்குகின்ற நீரையுடைய கொள்ளிடநதியானது ; பொன்செழுமணிக டிரைக்கரத்தான் முகந்துதர=பொன்னையும் செழுமையாகிய மணிகளையும் அலையென்னும் கையினால் வாரிக்கொடுக்க ; இருமருங்கு முளரி மலர்க்கையேற்கும்=அதன் இருபுறத்துமுள்ள தாமரைகள் மலராகிய தமது கையினால் ஏற்றுக்கொள்ளும் ; அகன்பணைநீர்நன்னாட்டு=அகன்றவயல்களையுடைய நல்லசோழநாட்டில்; மேற்காநாட்டாதனூர்=மேற்காநாட்டைச்சார்ந்த ஆதனூர் —எ-று. (க)

நீற்றலர்பே ரொளிநெருங்கு மப்பதியி னிறைகரும்பின்
சாற்றலைவன் குலைவயலிற் றகட்டுவரா லெழப்பகட்டேர்
ஆற்றலவன் கொழுக்கிழித்த சால்வழிபோ யசைந்தேறிச்
சேற்றலவன் கருவுயிர்க்க முருகுயிர்க்குஞ் செழுங்கமலம்.

(இ-ள்.) நீற்றலர்பேரொளிநெருங்கும்பதியில்=விபூதியின் விரிந்தபெரிய ஒளியானதுபரவியிருக்கும்அவ்வூரில் ; நிறைகரும்பின் சாற்றலைவன் குலைவயலில் = நிறைந்திருக்கும் கரும்பின்சாற்றினால் அலைகின்ற வலிய கதிர்க்குலைகளையுடைய வயல்களில் ; தகட்டுவராலெழ = அச்சவடிவிற்றுகியவரால் மீன்கள் எழும்படி ; பகட்டேராற்றலவன்கொழுக்கிழித்த= எருமைக்கடாக்கள் பூட்டிய ஏர்செல்லும் வழியில் அக்கலப்பையின் நுனியிலிருக்கும் வலியகொழுவானது

கிழித்த ; சால்வழிபோயசைந்தேறி=படைச்சாலின் வழியேசென்று அசைந்து கொண்டு ஏறி ; சேற்றலவன் கருவுயிர்க்க=சேற்றில்வாழும் பெண்நண்டுகள் கருவை ஈன ; முருகுயிர்க்குஞ் செழுங்கமலம் = விகசித்துவாசனையை வீசும் செழுமையாகியதாமரைமலர்கள்.—எ-று. (௨)

நனைமருவுஞ் சினைபொதுளி நறுவிரைசூழ் செறிதளிரிற்
றினகரன்மண் டிலம்வருடுஞ் செழுந்தருவின் குலம்பெருகிக்
கனமருவி யசைந்தலையக் களிவண்டு புடைசூழப்
புனன்மழையோ மதுமழையோ பொழிவொழியா பூஞ்சோலை.

(இ-ள்.) நனைமருவுஞ்சினைபொதுளி=அரும்புகளையுடைய கிளைகள்நெருங்கி ; நறுவிரைசூழ் செறிதளிரில்=நறுமணங்கமழும் செறிந்த தளிர்களினால்; தினகரன்மண்டிலம்வருடும்=சூரியனுடையவட்டவடிவைத்தடவுகின்ற; செழுந் தருவின் குலம்பெருகி=செழுமையாகிய விருட்சக்கூட்டங்கள் நிறைந்து ; கனமருவி யசைந்தலைய = மேகக்கூட்டங்கள் அதிற்சேர்ந்து அசைந்து சஞ்சரிக்க ; களிவண்டு புடைசூழ=களிப்பினையுடைய வண்டுகள் அருகில்சூழ்தலைச்செய்ய ; புன்னமழையோமதுமழையோ = நீர்மழையையும் தேன்மழையையும் ; பொழிவொழியாபூஞ்சோலை=பொழிதலை நீங்காதிருந்தன பூஞ்சோலைகள்.—எ-று. (௩)

பாளைவிரி மணங்கமழும் பைங்காய்வன் குலைத்தெங்கின்
றாளதிர மிசைமுட்டித் தடங்கிடங்கி னெழப்பாய்ந்த
வாளைபுதை யச்சொரிந்த பழமிதப்ப வண்பலவி
னீளமுதிர் கனிகிழிதே னீத்தத்தி லெழுந்துகளும்.

(இ-ள்.) பாளைவிரிமணங்கமழும்=பாளைகள்விரிந்துமணங்கமழாநின்ற; பைங்காய்வன்குலைத் தெங்கின் = பசியகாயோடு கூடிய வலிய குலைகளையுடைய தென்னமரங்களின் ; தாளதிரமிசைமுட்டி=அடி அதிரும்படியாக அதனிடத்து முட்டி ; தடங்கிடங்கி னெழப்பாய்ந்தவாளை = விசாலமாகிய பள்ளங்களினின்றும் எழுந்துபாய்ந்தவாளைமீனானது ; புதையச்சொரிந்த பழமிதப்ப=(அப்பள்ளத்தில்) முழுகும்படி (அதனிடத்துச்) சொரிந்த தெங்கின் பழங்கள் மிதக்க(அதனால்பின்); வண்பலவினீளமுதிர்கனிகிழிதேனீத்தத்திலெழுந்துகளும்=(எழுந்து) வளவிய பலாமரத்தினது மிகமுதிர்ந்த பழங்கள் கிழிந்து சொரிகின்ற தேன்வெள்ளத்தில்பாய்ந்து விளையாடும்.—எ-று. முட்டிப்பாய்ந்தவாளை என இயையும்.()

வயல்வளமுஞ் செயல்படுபைந் துடவையிடை வருவளமும்
வியலிடமெங் கணுநிறைய மிக்கபெருந் திருவினவாம்
புயலடையு மாடங்கள் பொலிவெய்த மலிவுடைத்தா
யயலிடைவே றடிநெருங்கக் குடிநெருங்கி யுளதவ்வூர்.

(இ-ள்.) வயல்வளமுஞ் செயல்படுபைந்துடவையிடை வருவளமும் = வயல்களிடத்துண்டாகிய வளங்களும் வைத்துண்டாக்கப்பட்ட பசிய நிறத்தினை

யுடைய தோட்டங்களினின்றும் வருகின்ற வளங்களும்; வியலிடமெங்கணு நிறையமிக்கபெருந்திருவினவாம் = விசாலமான அந்நாட்டிடமெங்கும் நிறைந்திருக்கும்படி மேம்பட்ட பெரியசெல்வத்தை யுடைத்தாயிருக்கும்; புயலடையு மாடங்கள் பொலிவெய்த=மேகங்கள்தவழும் மாளிகைகள் பொலிவடையும்படி; மலிவுடைத்தாயயலிடைவேறடிநெருங்க=மிக்க தோற்றமுடையதாய் அருகிடங்களில் தனித்தனி இடையில் ஓரடி நெருங்கியிருக்கும்படி; குடிநெருங்கியுளதவ்வூர்=குடிநெருங்கியுள்ளது அந்தவூர்.—எ-று. (௫)

குடிகளின் மிகுதிதோன்ற அடிநெருங்கக்குடி நெருங்கி என்றார்.

மற்றவ்வூர்ப் புறம்பணையின் வயன்மருங்கு பெருங்குலையிற்
சுற்றம்விரும் பியகிழமைத் தொழிலுழவர் கிளைதுவன்றிப்
பற்றியபைங் கொடிச்சுரைமேற் படர்ந்தபழங் கூரையுடைப்
புற்குரம்பைச் சிற்றில்பல நிறைந்துளதோர் புலைப்பாடி.

(இ-ள்.) அவ்வூர்ப் புறம்பணையின் வயன்மருங்கு=அவ்வாதனூரின்கண்ணே மருதநிலத்தைச்சார்ந்த வயலின்புறத்தில் உள்ள; பெருங்குலையிற் சுற்றம் விரும்பிய கிழமைத்தொழிலுழவர் கிளைதுவன்றி = பெரியகரையில் உறவினராய் ஒருவர்க்கொருவர் விரும்பத்தக்க தமக்குரித்தாயுள்ள உழவுதொழில்செய்யும் பள்ளர்களது சாதியாரால்நெருங்கப்பட்டு; பற்றியபைங்கொடிச்சுரைமேற்படர்ந்த=தாவி ஓடுகின்ற பசிய சுரைக்கொடியானது மேலேபடர்ந்திருக்கும்; பழங்கூரையுடைப்புற் குரம்பைப்பலசிற்றில்=பழையகூரையையுடையபுல்லாலாய பல குடிசைகளாகவிருக்கும் சிறுவீடுகள்; நிறைந்துளதோர்புலைப்பாடி=நிறையப்பட்டுள்ளது ஓர்புலைச்சேரி.—எ-று. மற்று - அசை. (௬)

கூருகிர்மெல் லடியளகின் குறும்பார்ப்புக் குழுச்சுழலும்
வார்பயின்முன் றிலினின்ற வள்ளுகிர்நாய்த் துள்ளுபறழ்
காரிரும்பின் சரிசெறிகைக் கருஞ்சிறார் கவர்ந்தோட
வார்சிறுமென் குரைப்படக்கு மரைக்கசைத்த விருப்புமணி.

(இ-ள்.) கூருகிர்மெல்லடியளகின் குறும்பார்ப்புக்குழுச்சுழலும்=கூரிய நகத்தோடுகூடிய மிருதுவான அடியையுடைய கோழிப்பெடையின் சிறியகுஞ்சுகளின் கூட்டங்கள் சூழ்ந்துகொண்டிருக்கும்; வார்பயின்முன்றிலினின்ற=வார்வலைகள்தூக்கியமுற்றத்திலேநிற்கின்ற; வள்ளுகிர்நாய்த்துள்ளுபறழ்=செறிவான கால்நகங்களையுடைய நாய்களின் துள்ளியோடுங் குட்டிகளை; காரிரும்பின்சரி செறிகை=கரியஇரும்பினாற் செய்தகைச்சரிசெறிந்தகையினையுடைய; கருஞ்சிறார்கவர்ந்தோட=கரியசிறுவர்கள் கவர்ந்துகொண்டுசெல்ல; ஆர்சிறுமென்குரைப்படக்கும் = அக்குட்டிகள் ஆர்க்கின்ற சிறியமிருதுவான குரைப்பைஅடக்கிவிடும்; அரைக்கசைத்தவிருப்புமணி = அச்சிறார்கள் அரையிற்கட்டிய இரும்பினாற்செய்த சதங்கைமணிகள்.—எ-று. (௭)

அளகு=கோழிப்பெடை.

வன்சிறுதோன் மிசையுழத்தி மகவுறக்கு நிழன்மருதுந்
தன்சினைமென் பெடையொடுங்குந் தடங்குழிசிப் புதைநீழன்
மென்சினைய வஞ்சிகளும் விசிப்பறைதூங் கினமாவும்
புன்றலைநாய்ப் புனிற்றுமுழைப் புடைத்தெங்கு முடைத்தெங்கும்.

(இ-ள்.) வன்சிறுதோன்மிசை = வலியினையுடைத்தாகிய சிறியதோலி னிடத்து ; உழத்திமகவுறக்கு நிழன்மருதும் = உழத்தியர்கள் குழந்தைகளைத்தூங் கும்படிசெய்கின்ற நிழலினையுடையமருதமரமும் ; தன்சினை மென்பெடையொ டுங்கும் = தன்னுடையசினையோடு மிருதுவான கோழிப்பெடைகள் ஒடுங்குதற்கு ரிய ; தடங்குழிசிப்புதைநீழல் = விசாலமான பானைகளைப்புதைத்திருக்கும் நிழலோ டுகூடிய ; மென்சினையவஞ்சிகளும் = மிருதுவான கிளைகளையுடைய வஞ்சிமர ங்களும் ; விசிப்பறைதூங்கினமாவும் = வாரால்விசித்த பறைகளைத்தூக்கியிருக்கி ன்ற மாமரமும் ; புன்றலைநாய்ப்புனிற்றுமுழை = புல்லியதலையையுடையநாய்கள் குட்டிபோட்டிருக்கும்முழைகளை ; புடைத்தெங்குமுடைத்தெங்கும் = அருகிலுள் ளதென்னமரமும் எவ்விடத்துமுள்ளது.—எ-று. (அ)

செறிவலித்திண் கடைஞர்வினைச் செயல்புரிவை கறையாமக்
குறியளக்க வழைக்குஞ்செங் குடுமிவா ரணச்சேக்கை
வெறிமலர்த்திண் சினைக்காஞ்சி விரிநீழன் மருங்கெல்லா
நெறிகுழற்புன் புலைமகளிர் நெற்குறுபாட் டொலிபரக்கும்.

(இ-ள்.) செறிவலித்திண்கடைஞர் = மிகுந்தவல்லியினையுடையதிண்ணியப ள்ளர்கள் ; வினைச்செயல் புரிவைகறையாமக்குறியளக்கவழைக்கும் = தாங்கள் செய்யும் உழவுதொழிலுக்குரிய வேலைகளைச்செய்கின்றவிடியற்சாமத்தினது குறி யை வரையறுக்கக்கூவும் ; செங்குடுமிவாரணச்சேக்கை = சிவந்தகுடுட்டோடுகூ டிய கோழிச்சேவல்களது துயிலிடமாகிய ; வெறிமலர்த்திண்சினைக்காஞ்சி = வாச னைகமழும்மலர்களையுடைய வலியகிளைகளாலோங்கிய காஞ்சிமரத்தின் ; விரிநீ ழன் மருங்கெல்லாம் = விரிந்தநிழலிடங்களெல்லாம் ; நெறிகுழற்புன்புலைமகளிர் = நெறித்தகுழலையுடைய புன்மையானவயல்மாதர்கள் ; நெற்குறுபாட்டொலிபர க்கும் = நெல்லைக்குற்றுகின்றபாட்டொலியானதுபரந்திருக்கும்.—எ-று. (க)

புள்ளுந்தண் புனற்கலிக்கும் பொய்கையுடைப் புடையெங்குந்
தள்ளுந்தா ணடையசையத் தளையவிழ்பூங் குவளைமது
விள்ளும்பைங் குழற்கதிர்நென் மிலைச்சியபுன் புலைச்சியர்கள்
கள்ளுண்டு களிதூங்கக் கறங்குபறை யுங்கலிக்கும்.

(இ-ள்.) பொய்கையுடைப்புடையெங்கும் = வாவிகளையுடையஇடமெங் கணும் ; புள்ளுந்தண்புனற்கலிக்கும் = நீர்க்கோழிமுதலிய புட்களும் நீரினிடத்து ஒலிக்கும் ; தள்ளுந்தாணடையசைய = (அடியிடுந்தோறும்) தள்ளாடும் கால்நடை யானது அசைதலினால்; தளையவிழ்பூங்குவளைமதுவிள்ளும் = இதழ்விண்டலர்ந்த

பொலிவினையுடையகுவளைகள்தேனைச்சிந்தும் ; பைங்குழற்கதிர் நென்மிலைச்சிய புன்புலைச்சியர்கள்=பசியஅளகத்திினிடத்து நெற்கதிர்களைச் சூடியபுல்லியவய ல்மாதர்கள் ; கள்ளுண்டுகளிதூங்க=கள்ளையுண்டுகூத்தாட ; கறங்குப்பறையுங்க லிக்கும்=அக்கூத்துக்கிசைய அடிக்கப்படும்மருதப்பறையுமொலிக்கும்.-எ-று.(கo)

இப்படித்தா கியகடைஞ ரிருப்பின்வரைப் பினின்வாழ்வார்
மெய்ப்பரிவு சிவன்கழற்கே விளைந்தவுணர் வொடும்வந்தார்
அப்பதியி லூர்ப்புலைமை யான்றதொழிற் றாயத்தார்
ஒப்பிலவர் நந்தனா ரெனவொருவ ருளரானார்.

(இ-ள்.) இப்படித்தாகியகடைஞரிருப்பின்வரைப்பினின்வாழ்வார்=இத் தன்மையுடையபள்ளர்கள்இருப்பிடமாகிய அச்சேரியில்வாழ்கின்றவர் ; மெய்ப்ப ரிவுசிவன்கழற்கேவிளைந்தவுணர்வொடும்வந்தார் = மெய்யன்பானது சிவபிரான் திருவடிக்கேவைக்கப்பட்ட உணர்வோடு அவதரித்தவர்; அப்பதியிலூர்ப்புலைமை யான்றதொழிற்றாயத்தார்=அவ்வூரில்ஊர்ப்புலையனென்னும் புலைத்தன்மையாலு யர்ந்த தொழிலுரிமையுடையவர் ; ஒப்பிலவர்நந்தனார்என=தனக்குவேறொப்பி ல்லாதவர் நந்தனாரென்றுசொல்லுந்திருப்பெயரையுடைய ; ஒருவருளரானார்= ஒருவரிருந்தார்.—எ-று. (கக)

பிறந்துணர்வு தொடங்கியபின் பிறைக்கண்ணிப் பெருந்தகைபாற்
சிறந்தபெருங் காதலினாற் செம்மைபுரி சிந்தையராய்
மறந்துமய னினைவின்றி வருபிறப்பின் வழிவந்த
அறம்புரி கொள்கையராயே யடித்தொண்டி னெறிநின்றார்.

(இ-ள்.) பிறந்துணர்வுதொடங்கியபின்= (அவர்) தாம்நிலவுலகத்தில்அ வதரித்துவிவேகம்வந்தபின்பு ; பிறைக்கண்ணிப்பெருந்தகைபால்=பிறையாகிய கொண்டைமாலையஅணிந்தசிவபிரானிடத்துவைத்த ; சிறந்தபெருங்காதலினால் =சிறப்பாகியபேரன்பினால் ; செம்மைபுரிசிந்தையராய்=செப்பமடைந்தமனமு டையவராய்;மறந்து மயனினைவின்றி = மறந்தேனும் பிறதெய்வங்களை நினையா மல்; வருபிறப்பின்வழிவந்த=தாம்அவதரித்தகுலாசாரநெறிக்குரிய ; அறம்புரிகொ ள்கையராய் = சிவதருமங்களைச்செய்யுங் கொள்கையையுடைய வராய் ; அடித் தொண்டினெறிநின்றார்=திருவடிக்குத் தொண்டுபூண்டொழுகும்வழியில்நிலைபெ ற்றவரானார்.—எ-று. ஏ-அசை. (கஉ)

ஊரில்விடும் பறைத்துடவை யுணவுரிமை யாக்கொண்டு
சார்பில்வருந் தொழில்செய்வார் தலைநின்றார் தொண்டினாற்
கூரிலைய முக்குடுமிப் படையண்ணல் கோயிறொறும்
பேரிகையே முதலாய முகக்கருவி பிறவினுக்கும்.

(இ-ள்.) ஊரில்விடும்பறைத்துடவை=ஊரிலுள்ளவரால் விடப்படும்ப றையர்க்குரியபுன்செய்மானியத்தில்வரும் ; உணவுரிமையாக்கொண்டு=உணவை

த்தமக்குரிமையாகக்கொண்டு ; சார்பில்வருந்தொழில் செய்வார்=தமக்குரியசார்பால்வரும்தொழில்களைச்செய்துகொண்டு; தலைநின்றார்தொண்டினால்=திருத்தொண்டின்நிலையில்நின்றார் ; கூரிலையமுக்குடுமிப்படையண்ணல் கோயிறொறும்=கூரிய அச்சவடிவானமூன்றுகுடுமியினையுடைய சூலத்தையேந்திய சிவபிரான்திருக்கோயில்கள்தோறும் ; பேரிகையேமுதலாயமுகக்கருவிபிறவினுக்கும்=பேரிகைவாத்தியம் முதலானமுகத்தையுடையபிறவாத்தியங்களுக்கும்.—எ-று. (௧௩)

பேரிகைமுதலியவற்றிற்குத்தோல்கட்டும்வாய்முகமாதலின் முகக்கருவிஎன்றார். பிறவென்றதனால்மத்தளமுதலியவுங்கொள்க.

போர்வைத்தோல் விசிவாரென் றினையனவும் புகலுமிசை
நேர்வைத்த வீணைக்கும் யாழுக்கு நிலைவகையாற்
சேர்வுற்ற தந்திரியும் தேவர்பிரா னர்ச்சனைகட்
கார்வத்தி னுடன்கோரோ சனமுமிவை யளித்துள்ளார்.

(இ-ள்.) போர்வைத்தோல்விசிவாரென்றினையனவும்=வாத்தியங்களின்வாயைமூடியிடும் போர்வைத்தோலும் அதனைவிசிக்கின்றவாருமாகிய இவைபோல்வனவும் ; புகலுமிசைநேர்வைத்தவீணைக்கும்யாழுக்கும்=எடுத்துக்கூறும்இசையையொழுங்காகவைத்த வீணைக்கும் பாலையாழ்முதலியயாழுக்கும் ; நிலைவகையாற்சேர்வுற்றதந்திரியும்=சுரத்தானங்களுக்கேற்கஇசைவுபட்டநரம்புகளும் ; தேவர்பிரானர்ச்சனைகட்கு=சிவபிரானுக்குரியபூசைக்கு ; ஆர்வத்தினுடன்கோரோசனமும்=விருப்பத்தோடுகோரோசனமும் (ஆகிய) ; இவையளித்துள்ளார்=இவைகளைக்கொடுப்பாராயினார்.—எ-று. இவ்விரண்டுங்குளகம். (௧௪)

இவ்வகையாற் றந்தொழிலி னியன்றவெலா மெவ்விடத்துஞ்
செய்வனவுங் கோயில்களிற் றிருவாசற் புறநின்று
மெய்விரவு பேரன்பு மிகுதியினா லாடுதலும்
அவ்வியல்பிற் பாடுதலு மாய்நிகழ்வா ரந்நாளில்.

(இ-ள்.) இவ்வகையாற்றந்தொழிலினியன்றவெலாம்=இந்தப்பிரகாரம்தம்சாதித்தொழிலுக்கமைந்தபணிகளையெல்லாம்;எவ்விடத்தும்செய்வனவும்=தாம்செல்லும் ஆலயங்கள்தோறும் செய்துவருவனவும் (அதுவன்றி); கோயில்களிற்றிருவாசற்புறநின்று=அவ்வாலயங்களின் திருவாசலின்புறத்தே நின்று ; மெய்விரவுபேரன்புமிகுதியினால் ஆடுதலும்=மெய்மையோடுகூடிய பேரன்பின்மிகுதியினால்ஆனந்தக்கூத்தாடுதலும்; அவ்வியல்பிற்பாடுதலுமாய் நிகழ்வாரந்நாளில்=அவ்வன்போடு பாடுதலும்உடையவராய் நடந்துவருவாராயினார் அந்நாளில். ()

திருப்புன்கூர்ச் சிவலோகன் சேவடிகண் மிகநினைந்து
விருப்பினொடுந் தம்பணிகள் வேண்டுவன செய்வதற்கே
அருத்தியினா லொருப்பட்டங் காதனார் தனிநின்றும்
வருத்தமுறுங் காதலினால் வந்தவ்வூர் மருங்கணைந்தார்.

(இ-ள்.) திருப்புன்கூர்ச்சிவலோகன்=திருப்புன்கூரென்னும் திருப்பதியில்வீற்றிருந்தருளும்சிவலோக நாயகராகியசிவபிரான் ; சேவடிகண்மிகநினைந்து

நின

= திருவடிகளை மிகவும் நினைந்து ; விருப்பினொடுந் தம்பணிகள்=அன்போடுதொம்செய்யத்தக்கதிருப்பணிகளில் ; வேண்டுவனசெய்வதற்கே = வேண்டுவனவற்றைச்செய்யும்பொருட்டு ; அருத்தியினாலொருப்பட்டு=பெருங்காதலினால் மனவொருப்பாடுடையவராய் ; அங்காதனூர் தனிலின்றும்=அத்திருப்புன்கூருக்குத் தாம் வாழும்ஆதனூரினின்றும் ; வருத்தமுறுங்காதலினால்=(தமக்குத்தரிசனம் நேரிடுமோஎன்னும்)வருத்தத்தைவிளைக்கும் பேரன்போடு ; வந்தவ்வூர்மருங்கணைந்தார் =அவ்வூருக்குப்புறம்புவந்து சேர்ந்தார்.—எ-று. இவ்விரண்டுங் குளகம். (கசு)

சீரேறு மிசைபாடித் திருத்தொண்டர் திருவாயி
னேரேகும் பிடவேண்டு மெனநினைந்தார்க் கதுநேர்வார்
காரேறு மெயிற்புன்கூர்க் கண்ணுதலார் திருமுன்பு
போரேற்றை விலங்கவருள் புரிந்தருளிப் புலப்படுத்தார்.

(இ-ள்) சீரேறுமிசைபாடி = சிவபிரானுக்குரிய சிறப்புமிக்க புகழைப் பாடி ; திருவாயினேரே கும்பிடவேண்டுமென நினைந்தார்திருத்தொண்டர்க்கு= திருவாயிலினின்று சுவாமியை நேராகவே தரிசிக்கவேண்டுமென்று நினைந்தாராகிய அந்நாயனருக்கு ; அதுநேர்வார் காரேறுமெயிற்புன் கூர்க்கண்ணுதலார் = அவ்வாறருள்செய்வாராய் மேகங்கள் தவழும் மதில்சூழ்ந்த திருப்புன்கூரில் வாழும் நெற்றிக்கண்ணையுடைய சிவலோகநாதர் ; திருமுன்புபோரேற்றை விலங்கவருள்புரிந் தருளிப்புலப்படுத்தார்=திருமுன்னே இருக்கின்ற போர்த்தொழில்செய்யும் வலியினையுடைய நந்தியை விலகும்படி அந்நந்திக்கு அருள்செய்து இவர்க்குத் தரிசனங்கொடுத்தருளினார்.—எ-று. (கஎ)

சிவலோக முடையவர்தந் திருவாயின் முன்னின்று
பவலோகங் கடப்பவர்தம் பணிவிட்டுப் பணிந்தெழுந்து
சுவலோடு வாரலையப் போவார்பின் பொருகுழல்
அவலோடு மடுத்ததுகண் டாதரித்துக் குளந்தொட்டார்.

(இ-ள்.) சிவலோகமுடையவர் தந்திருவாயின்முன்னின்று = அத்திருப்பதியில் வீற்றிருந்தருளும் சிவலோகநாதருடைய திருவாயிலின்முன்னே நின்று ; பவலோகங்கடப்பவர் தம்பணிவிட்டுப் பணிந்தெழுந்து=பிறவிக்குக்காரணமான உலகாசாரத்தைக்கடந்துசெல்பவராகிய நாயனர் தஞ்சுதந்தரமிழந்து சிவபிரானை வணங்கி எழுந்து ; சுவலோடுவாரலையப்போவார் = முதுகிலவார்த்தியங்களை விசித்தற்குரியவார்கள் அலையப்போகின்ற அவர் ; பின்பொருகுழலவலோடு மடுத்தது கண்டு=பின் ஒருசோலையை விருப்போடு அடைந்து அதைப்பார்த்து ; ஆதரித்துக் குளந்தொட்டார்=ஆசைகொண்டு ஓர் குளத்தைவெட்டினார்.—எ-று. (கஅ)

வடங்கொண்ட பொன்னிதழி மணிமுடியார் திருவருளாற்
றடங்கொண்ட குளத்தளவு சமைத்ததற்பின் றம்பெருமான்
இடங்கொண்ட கோயில்புறம் வலங்கொண்டு பணிந்தெழுந்து
நடங்கொண்டு விடைகொண்டு தம்பதியி னண்ணினார்.




நந்தனர் சதாசிவஙமத்தை யுச்சரித்துச் சிவாலயங்களுக்குப் பேரிகை-மத்தளம்-யாழ்-முதலியவைகளுக்குத் தோல்-வார்-நரம்பும் அபிடேகத்திற்குக் கோரோசனமுங் கொடுத்துத் திருவாயிற்புறத்தே கூத்தாடிப்பாடித் திருப்புன்கூரில் நந்தியை விலகச்செய்வித்துச் சுவாமியை தரிசித்து அங்கோர் திருக்குளம்வெட்டிச் சிதம்பரத்திற்கு நாளைப்போவேன் நாளைப்போவே னென்றுசொன் னமையால் திருநாளைப்போவாரென்ற திருநாமமும்பூண்டு தில்லையை அணுகி இவ்விழிபிறப்பு நடேசரைத்தரிசிக்கத் தடைசெய்கிற தென்று தக்கித்துயித்திரைசெய்யச் சுவாமி சொற்பனத்தில்தோன்றித் தீயில்மூழ்கிவருவாயென்றுரைத்துத் தில்லைமூவாயிரவர் கனவிலுந்தோன்றித் தீவளர்க்கக்கட்டளையிட அவ்வாறு அவர்களால் வளர்த்ததீயில் மூழ்கிப் பிராமண முனிவராக வெளிவந்தது.

(இ-ள்) நாளைப்போவேனென்று = இவ்வாறு நாளைப்போவேனென்று சொல்லி; நாள்கள்செலத்தரியாது = அநேகநாள்கழிந்துபோக (அதனால்) சகிக்காமல்; பூளைப்பூவாம் பிறவிப்பிணிப்பு = சிறுபூளையின் பூவைப்போல (நொய்தாய் நீங்கிவிடும்) இப்பிறவியினது சம்பந்தம்; ஒழியப்போவாராய் = ஒழியும்படிசெல்லுங்கருத்துடையவராய்; பாளைப்பூங்கமுகுடுத்த = பாளைகளையுடைய பொலிவாகிய கமுகமரங்கள்சூழ்ந்த; பழம்பதியினின்றும்போய் = தம்முடைய பழைய ஆதனூரினின்றும்நீங்கி; வாளைப்போத்தெழும்பழனஞ்சூழ்=வாளைஆண்கள் எழாநின்றவயல்கள்சூழ்ந்த; தில்லைமருங்கணைந்தார் = அச்சிதம்பரத்தின் எல்லையைவந்தடைந்தார்.—எ-று. (உஉ)

செல்கின்ற போழ்தந்தத் திருவெல்லை பணிந்தெழுந்து
பல்குஞ்செந் தீவளர்த்த பயில்வேள்வி யெழுப்புகையு
மல்குபெருங் கிடையோது மடங்கணெருங் கினவுங்கண்
டல்குந்தங் குலநினைந்தே யஞ்சியணைந் திலர்நின்றார்.

(இ-ள்.) செல்கின்றபோழ்து = அவர்போம்பொழுது; அந்தத்திருவெல்லைபணிந்தெழுந்து = அச்சிதம்பரத்தின் திருவெல்லையைவணங்கி எழுந்து; பல்குஞ்செந்தீவளர்த்த = சுவாலிக்கும் சிவந்த ஓமத்தீயை வளர்த்தலால்; பயில்வேள்வியெழும்புகையும் = யாகஞ்செய்கின்ற இடங்களில் எழாநின்ற புகையும்; மல்குபெருங்கிடையோதும் = மிகுந்த பெரியமறையவர் சிறார்களது தொகுதி அத்தியயனஞ்செய்யும்; மடங்கணெருங்கினவுங் கண்டு = மடங்கள் நெருங்கியிருக்கின்ற சிறப்பையும்பார்த்து; அல்குந்தங்குலநினைந்து = இழிவான தம்முடைய குலத்தைநினைத்து; அஞ்சியணைந்திலர்நின்றார் = அச்சமுற்று அங்குச்செல்லாதவராய் நின்றுவிட்டார்.—எ-று. (உங)

நின்றவரங் கெய்தரிய பெருமையினை நினைப்பார்முன்
சென்றிவையுங் கடந்தூர்சூ ழெயிற்றிருவா யிலைப்புக்கார்
குன்றனைய மாளிகைக டொறுங்குலவும் வேதிகைகள்
ஒன்றிய மூவாயிரமங் குளவென்பா ராகுதிகள்.

(இ-ள்.) நின்றவரங்கெய்தரியபெருமையினை நினைப்பார் = அங்குநின்ற அந்நாயனார்தாம் அங்கு கிட்டுதற்கரியபெருமையுடைத்தாயிருப்பதை நினைத்து; முன்சென்றிவையுங்கடந்து=முற்பட்டுப்போய் மேல்நின்ற விடத்துள்ள இவைகளையுங் கடந்து; ஊர்சூழெயிற்றிருவாயிலைப்புக்கார் = ஊரைச்சூழ்ந்த மதிலின் திருவாயிலை அடைந்தார்; குன்றனையமாளிகைகடொறுங்குலவும்வேதிகைகள் = மலைபோலும் உயர்ந்த வீடுகள்தோறும் விளங்குகின்ற வேதிகைகளும்; ஒன்றிய மூவாயிரம் அங்குளவென்பாராகுதிகள் = அங்கு ஒருமித்த மூவாயிரமென்னுந் தொகையுள்ளனவென்று சொல்லப்படும் மறையவர்களது ஆகுதிகளும்.—எ-று.

இப்பரிசா யிருக்கவெனக் கெய்தலரி தென்றஞ்சி
அப்பதியின் மதிற்புறத்தி னாராத பெருங்காதல்
ஒப்பரிதாய் வளர்ந்தோங்க வுள்ளுருகிக் கைதொழுதே
செப்பரிய திருவெல்லை வலங்கொண்டு செல்கின்றார்.

(இ-ள்.) இப்பரிசாயிருக்க = இவ்வாறாயிருக்க ; எனக்கெய்த லரிதென்றஞ்சி=எனக்கு அவ்விடத்திற்போதல் கூடாதென்று அச்சமுற்று : அப்பதியின் மதிற்புறத்தின்= அத்திருப்பதியின் மதிலின்புறத்தில் ; ஆராதபெருங்காதலொப்பரிதாய் வளர்ந்தோங்க=அடங்காதபேரன்பானது சமானமின்றிவளர ; உள்ளுருகிக்கைதொழுது=மனமுருகிக்கைகூப்பி வணங்கிக்கொண்டு ; செப்பரியதிருவெல்லை=சொல்லுதற்கரிய திருவெல்லையை ; வலங்கொண்டு செல்கின்றார் = வலஞ்செய்துகொண்டு போவாராயினார்.—எ-று. இவ்விரண்டுங்குளகம். ஏ-அசை. ()

இவ்வண்ண மிரவுபகல் வலஞ்செய்தங் கெய்தரிய
அவ்வண்ண நினைந்தழிந்த வடித்தொண்ட ரயர்வெய்தி
மைவண்ணத் திருமிடற்றார் மன்றினடங் கும்பிடுவ
தெவ்வண்ண மெனநினைந்தே யேசறவி னொடுந்துயில்வார்.

(இ-ள்.) இவ்வண்ணமிரவுபகல்வலஞ்செய்து=இவ்வாறு இரவும்பகலும் வலமாகவந்து ; அங்கெய்தரியஅவ்வண்ணநினைந்தழிந்த=அவ்விடத்துத்தாம்கிட்டுதற்கரிய அத்தன்மையை நினைந்து வருந்திய ; அடித்தொண்டரயர்வெய்தி=சிவபிரான் திருவடிக்குத்தொண்டுபூண்டொழுகும் அந்நாயனார் அயர்ச்சியடைந்து; மைவண்ணத் திருமிடற்றார்=கரியதிருமிடற்றினையுடைய நடேசப்பிரான் ; மன்றினடங்கும்பிடுவது=கனகசபையில் செய்தருளும் ஆனந்தநடனத்தைத் தரிசிப்பது ; எவ்வண்ணமெனநினைந்து=எவ்வாறென்று தம் உள்ளத்துக்கருதி ; ஏசறவினொடுந்துயில்வார்=அத்துயரத்தினோடு நித்திரைசெய்வாராயினார்.—எ-று. (உசு)
ஏ - அசை.

இன்னறரு மிழிபிறவி யிதுதடையென் றேதுயில்வார்
அந்நிலைமை யம்பலத்து ளாடுவா ரறிந்தருளி
மன்னுதிருத் தொண்டரவர் வருத்தமெலாந் தீர்ப்பதற்கு
முன்னணைந்து கனவின்கண் முறுவலொடு மருள்செய்வார்.

(இ-ள்.) இன்னறருமிழிபிறவியிது=துன்பத்தைவிளைக்கும் இழிவாகிய இப்புலைப்பிறவி ; தடையென்றேதுயில்வார்=தரிசித்தற்குத் தடையாயிருந்ததென்று துயிலும் நாயனாருடைய ; அந்நிலைமையம்பலத்து ளாடுவாரறிந்தருளி = அந்தநிலைமையை அம்பலத்தின்கண் ஆடியருளும் பிரானார் திருவுளங்கொண்டருளி ; மன்னுதிருத்தொண்டரவர்=நிலைபெற்ற திருத்தொண்டராகிய அந்நாளைப்போவாரது ; வருத்தமெலாந் தீர்ப்பதற்கு = மனத்துயரத்தையெல்லாம் நீக்கும்பொருட்டு ; முன்னணைந்து கனவின்கண் = அவரது கனவிலே வெளிப்பட்டுவந்து ; முறுவலொடுமருள்செய்வார்=புன்முறுவலோடு அருளிச்செய்வாராயினார்.

இப்பிறவி போய்நீங்க வெரியினிடை நீமூழ்கி
முப்புரிநூன் மார்பருடன் முன்னணைவா யெனமொழிந்த
அப்பரிசே தில்லைவா ழந்தணர்க்கு மெரியமைக்க
மெய்ப்பொருளா னாரருளி யம்பலத்தே மேவினார்.

(இ-ள்.) இப்பிறவிபோய்நீங்க=இந்தஇழிபிறப்பு நீங்கிப்போக ; எரியினிடைநீமூழ்கி=நெருப்பிலே நீ மூழ்கியெழுந்து ; முப்புரிநூன் மார்பருடன்=மூன்றுபுரியாகிய பூணூலையணிந்த தில்லைமூவாயிரவருடன் ; முன்னணைவாயென மொழிந்தவப்பரிசே=நமதுசபைக்குமுன்வந்து தரிசிப்பாயென்று மொழிந்தவண்ணமே ; தில்லைவாழந்தணர்க்கும்=தில்லைமூவாயிரம் மறையவர்களுக்கும் ; எரியமைக்க மெய்ப்பொருளானருளி=நாளைப்போவார்மூழ்குதற்குரிய தீயை அமைக்கும்படி நடேசப்பிரான் அருளிச்செய்து ; அம்பலத்தேமேவினர்=திருவம்பலத்தில் மறைந்தருளினர்.—எ-று. (உ௮)

தம்பெருமான் பணிகேட்ட தவமறையோ ரெல்லாரும்
அம்பலவர் திருவாயின் முன்பச்ச முடனீண்டி
யெம்பெருமா னருள்செய்த பணிசெய்வோ மென்றேத்தித்
தம்பரிவு பெருகவருந் திருத்தொண்டர் பாற்சார்ந்தார்.

(இ-ள்.) தம்பெருமான்பணிகேட்ட=தம்மையாளும் நடேசப்பிரான்பணித்தகட்டளையைக்கேட்ட ; தவமறையோரெல்லாரும்=தவத்தினையுடைய தில்லைமூவாயிரவர்கள் யாவர்களும் ; அம்பலவர்திருவாயின்முன்பு=நடேசப்பிரானதுதிருவாயிலின்முன்னே ; அச்சமுடனீண்டி=அச்சத்தோடுகூடி ; எம்பெருமானருள்செய்த=எமதுமுதல்வர் அருளிச்செய்த ; பணிசெய்வோமென்றேத்தி=பணிவிடையையாம் செய்வோமென்றுசுவாமியைத்துதித்து ; தம்பரிவுபெருகவரும்=தம்மிடத்துப்பேரன்பானதுமிகும்படி அங்குவந்திருக்கும் ; திருத்தொண்டர்பாற்சார்ந்தார்=திருநாளைப்போவாரைஅடைந்தார்கள்.—எ-று. (உ௯)

ஐயரே யம்பலவ ரருளாலிப் பொழுதணைந்தோம்
வெய்யவழ லமைத்துமக்குத் தரவேண்டி யெனவிளம்ப
நையுமனத் திருத்தொண்டர் நானுய்ந்தே னெனத்தொழுதார்
தெய்வமறை முனிவர்களுந் தீயமைத்த படியொழிந்தார்.

(இ-ள்.) ஐயரேயம்பலவரருளால்=பெரியவரே நடேசப்பிரான்திருவருளால் ; இப்பொழுதணைந்தோம்=இப்பொழுது உம்மிடத்துவந்தோம் ; வெய்யவழலமைத்துமக்குத்தரவேண்டியெனவிளம்ப=கொடியதீயைஉண்டாக்கி நீர் மூழ்கக்கொடுக்கவேண்டியென்று அவர்கள்கூற ; நையுமனத்திருத்தொண்டர்=கசிந்தமனதையுடையஅந்நாளைப்போவார்நாயனர் ; நானுய்ந்தேனெனத்தொழுதார்=அடியேனுய்ந்தேனென்றுகைகூப்பிவணங்கினர் ; தெய்வமறைமுனிவர்களும்=தெய்வத்தன்மையையுடைய வேதங்களை யுணர்ந்த தில்லை மூவாயிரவர்களும் ; தீயமைத்தபடிமொழிந்தார்=அங்குத் தீ உண்டாக்கியதைச்சொன்னார்கள். (௩௰)

மறையவர்கண் மொழிந்ததற்பின் றென்றிசையின் மதிற்புறத்துப்
பிறையுரிஞ்சுந் திருவாயின் முன்னாகப் பினுகர்த
விறையருளான் மறையவர்க ளொருப்பமைதத குழியெய்தி
இறையவர்தாண் மனங்கொண்டே யெரிசூழ வலங்கொண்டார்.




அவ்வாறு வெளிவந்த நாயனர் தில்லைமூவாயிரவர் தம்மைச்சூழக் கனகசபையை அணுக உடனே அம்மூவாயிரவர் நாயனரைக்கா ணாதவராகித் திகைக்கச் சிவபிரான் நாயனருக்குத் தமது திருவடிநீழலைத்தந்தது.

(இ-ள்.) மறையவர்கள்மொழிந்ததற்பின் = தில்லைமூவாயிரவர்கள் சொன்னபின்பு; தென்றிசையின்மதிற்புறத்து = தெற்குத்திக்கிலுள்ளமதிலின்புறத்தே; பிறையுரிஞ்சுங்கோபுரவாயின்முன்னாக = சந்திரன்தவழும் திருக்கோபுரவாயிலின் முன்னே; பிஞ்ஞகர்தந்நிறையருளால் = சிவபிரானுடைய நிறைந்ததிருவருளினால்; மறையவர்கணெருப்பமைத்தகுழியெய்தி = தில்லைமூவாயிரவர்கள் நெருப்புண்டாக்கிய குண்டத்திற்சென்று; இறையவர்தாண்மனங்கொண்டு = நடேசப்பிரானது குஞ்சிதபாதத்தைத்தம்மனதில்தியானித்துக்கொண்டு; எரிசூழவலங்கொண்டார் = எரியைவலமாகச்சூழ்ந்துவந்தார்.—எ-று. (ருக)

கைதொழுது நடமாடுங் கழலுன்னி யழல்புக்கார்
எய்தியவப் பொழுதின்க ணெரியின்க ணிம்மாயப்
பொய்த்தகையு முருவொழித்துப் புண்ணியமா முனிவடிவாய்
மெய்திகழ்முந் நூல்விளங்க வேணிமுடி கொண்டெழுந்தார்.

(இ-ள்.) கைதொழுதுநடமாடுங்கழலுன்னியழல்புக்கார் = கைகுவித்துவணங்கிக்குஞ்சிதபாதத்தைத்தியானித்துக்கொண்டு அந்தநெருப்பில்முழுகினார்; எய்தியவப்பொழுதின்கண் = அவர்முழுகிய அச்சமயத்தில்; எரியின்கணிம்மாயப்பொய்த்தகையுமுருவொழித்து = அந்தநெருப்பில்இந்தமயக்கத்திற்கேதுவான பொய்மைபொருந்திய சரீரம்நீங்கி; மெய்திகழ்முந்நூல்விளங்க = திருமேனியில் விளங்குகின்றமுந்நூலானதுபிரகாசிக்க; வேணிமுடிகொண்டெழுந்தார் = சடைமுடிதாங்கிக்கொண்டு தீயினின்றும் எழுந்தார்.—எ-று. (ருஉ)

செந்தீமே லெழும்பொழுது செம்மலர்மேல் வந்தெழுந்த
அந்தணன்போற் றோன்றினா ரந்தரதுந் துபிநாதம்
வந்தெழுந்த திருவிசும்பில் வானவர்கண் மகிழ்ந்தார்த்துப்
பைந்துணர் மந்தாரத்தின் பனிமலர்மாரிகள் பொழிந்தார்.

(இ-ள்) செந்தீமேலெழும்பொழுது = சிவந்தநெருப்பில முழுகியெழும்பொழுது; செம்மலர்மேல்வந்தெழுந்த = செம்மைநிறமுள்ள திருமாலின் உந்தித்தாமரையில்உதித்தெழுந்த; அந்தணன்போற்றோன்றினார் = பிரமனைப்போல்விளங்கினார்; அந்தரதுந்துபிநாதம் = தேவதுந்துபியின்ஒலியானது; இருவிசும்பில்வந்தெழுந்தது = பெருமையினையுடைய ஆகாயத்தில்உண்டாயிற்று; வானவர்கண்மகிழ்ந்தார்த்து = தேவர்கள்மனமகிழ்ந்து ஆரவாரித்து; பைந்துணர்மந்தாரத்தின் = பசியபூங்கொத்துக்களையுடைய கற்பகவிருட்சத்தின்; பனிமலர்மாரிகள்பொழிந்தார் = குளிர்ந்தமலர்மழைகளைச்சொரிந்தார்கள்.—எ-று. (ருரு)

திருவுடைய தில்லைவா ழந்தணர்கள் கைதொழுதார்
பரவரிய தொண்டர்களும் பணிந்துமனங் களிபயின்றார்
அருமறைசூழ் திருமன்றி லாடுகின்ற கழல்வணங்க
வருகின்றார் திருநாளைப் போவாரா மறைமுனிவர்.

(இ-ள்.) திருவுடையதில்லைவாழந்தணர்கள்=ஞானச்செல்வத்தினையுடையதில்லைமூவாயிரமறையவர்கள் ; கைதொழுதார்=கைகுவித்து வணங்கினார்கள் ; பரவரியதொண்டர்களும்=எடுத்துச்சொல்லுதற்கரிய சிறப்பினையுடையஅடியார்களும் ; பணிந்துமனங்களிபயின்றார்=வணங்கிமனத்திற்களிப்படைந்தார்கள் ; அருமறைசூழ்திருமன்றில்=அருமையாகிய வேதங்கள்சூழ்ந்து முழங்கும்திருவம்பலத்தில் ; ஆடுகின்றகழல்வணங்க=ஆனந்தநிருத்தஞ்செய்யும்திருவடிகளைத் தரிசிக்கும்பொருட்டு;வருகின்றார்திருநாளைப்போவாராமறைமுனிவர்=திருநாளைப்போவாரென்னும் திருப்பெயரையுடையமறைமுனிவரானவர்வருகின்றாராயினார்.—எ-று.()

தில்லைவா ழந்தணரு முடன்செல்லச் சென்றெய்திக்
கொல்லைமான் மறிக்கரத்தார் கோபுரத்தைத் தொழுதிறைஞ்சி
ஒல்லைபோ யுட்புக்கா ருலகுய்ய நடமாடும்
எல்லையினைத் தலைப்பட்டார் யாவர்களுங் கண்டிலரால்.

(இ-ள்.) தில்லைவாழந்தணருமுடன்செல்லச்சென்றெய்தி = தில்லைமூவாயிரமறையவர்களும் தம்முடன்வரத்தாமும் எழுந்தருளி ; கொல்லைமான்மறிக்கரத்தார்=தினைக்கொல்லையில்வாழ்கின்றமான்கன்றையேந்தியதிருக்கரத்தையுடையநடேசப்பிரானது; கோபுரத்தைத்தொழுதிறைஞ்சி=தெற்குக்கோபுரத்தைத்தொழுதுவணங்கி, ஒல்லைபோயுட்புக்கார்=விரைந்துசென்றுஉள்ளேபுகுந்தவர்;உலகுய்யநடமாடும்=உலகத்தார்உய்யும்பொருட்டுஆனந்தநிருத்தஞ்செய்தருளும் ; எல்லையினைத்தலைப்பட்டார்=கனகசபையின்திருவெல்லையை அடைந்தார் ; யாவர்களுங்கண்டிலர்=அங்குநின்றயாவர்களும்அவரைக்காணாதவரானார்கள்.—எ-று. (௩௫)

ஆல்-அசை.

அந்தணர்க ளதிசயித்தா ரருமுனிவர் துதிசெய்தார்
வந்தணைந்த திருத்தொண்டர் தம்மைவினை மாசறுத்துச்
சுந்தரத்தா மரைபுரையுந் துணையடிக டொழுதிருக்க
அந்தமிலா வானந்தப் பெருங்கூத்த ரருள்புரிந்தார்.

(இ-ள்.) அந்தணர்களதிசயித்தார் = தில்லைமூவாயிரவர்கள் ஆச்சரியமடைந்தார்கள் ; அருமுனிவர்துதிசெய்தார்=அரியமுனிவர்கள்தோத்திரஞ்செய்தார்கள் ; வந்தணைந்ததிருத்தொண்டர்தம்மை=முனிவடிவாய்த்தம்மையடைந்த அத்திருநாளைப்போவார்நாயனாரை ; வினைமாசறுத்து=வினைப்பகுதிகளாகியஅழுக்கைநீக்கி ; சுந்தரத்தாமரைபுரையும்=அழகியசெந்தாமரைமலர்போலும் ; துணையடிகடொழுதிருக்க=தம்முடையஇரண்டுதிருவடிகளையும்வணங்கியிருக்கும்படி ; அந்தமிலாவானந்தப்பெருங்கூத்தர் = அளவுபடாதஆனந்த நிருத்தமாகியபெரியகூத்தையுடையபிரானார் ; அருள்புரிந்தார்=கிருபைசெய்தருளினார்.—எ-று. ()

மாசுடம்பு விடத்தீயின் மஞ்சனஞ்செய் தருளியெழுந்
தாசின்மறை முனியாகி யம்பலவர் தாளடைந்தார்
தேசுடைய கழல்வாழ்த்தித் திருக்குறிப்புத் தொண்டர்வினைப்
பாசமற முயன்றவர்செய் திருத்தொண்டின் பரிசுரைப்பாம்.

(இ-ள்.) மாசுடம்புவிட=(தமக்குமுன்னிருந்த) அழுக்குடலம் நீங்க; தீயின்மஞ்சனஞ்செய்தருளியெழுந்து=நெருப்பில்முழுகியெழுந்து; ஆசின்மறைமுனியாகி=குற்றமற்ற வேதங்களையுணர்ந்த முனிவராய்; அம்பலவர்தாளடைந்தார்=அம்பலவாணர் திருவடியையடைந்த திருநாளைப் போவார்நாயனாருடைய; தேசுடையகழல்வாழ்த்தி= ஒளிதங்கிய திருவடிகளைத்துதித்து; திருக்குறிப்புத்தொண்டர்=திருக்குறிப்புத்தொண்டரென்னும்; வினைப்பாசமறமுயன்றவர்செய்=வினைமுதலிய பாசப்பற்றுநீக்கமுயன்ற அந்நாயனார்செய்த; திருத்தொண்டின்பரிசுரைப்பாம்=திருத்தொண்டினியல்பைச்சொல்லுவாம்.—எ-று. (௩எ)

திருநாளைப்போவார்நாயனார்புராணம் முற்றிற்று.

ஆக-திருவிருத்தம்-௯0அ௨.

திருச்சிற்றம்பலம்.

---

## திருக்குறிப்புத்தொண்டநாயனார்புராணம்.

ஏயுமாறுபல் லுயிர்களுக் கெல்லையில் கருணைத்
தாயனாடனி யாயின தலைவரைத் தழுவ
வாயுநான்மறை போற்றநின் றருந்தவம் புரியத்
தூயமாதவஞ் செய்தது தொண்டைநன் னாடு.

(இ-ள்.) ஏயுமாறுபல்லுயிர்களுக்கெல்லையில்கருணைத்தாயனாள்=பக்குவத்திற்கிசையப் பல ஆன்மகோடிகளுக்கு அளவில்லாத கிருபையை விளக்கும் தாயையொத்த உமாதேவியார்; தனியாயினதலைவரைத்தழுவ=ஒப்பில்லாத தங் கணவரைத்தழுவுங் காரணமாய்; ஆயுநான்மறைபோற்றநின்று=அறிஞர்களால் ஆராயும் நுண்மைப்பொருளையுடைய நான்குவேதங்களும் துதிக்கும்படி நின்று; அருந்தவம்புரிய=அரியதவத்தைச்செய்ய; தூயமாதவஞ்செய்தது=தூய்மையாகிய பெரியதவத்தைச்செய்தது; தொண்டைநன்னாடு=தொண்டைநாடானது.-எ-று.

நன்மைமேவிய நடுநிலை யொழுக்கத்து நயந்த
தன்மைமேவிய தலைமைசால் பெருங்குடி தழைப்ப
வன்மையோங்கெயில் வளம்பதி பயின்றது வரம்பின்
றொன்மைமேன்மையி னிகழ்பெருந் தொண்டைநன் னாடு.

(இ-ள்.) நன்மைமேவிய நடுநிலையொழுக்கத்துநயந்த=நன்மைபொருந்திய நடுவுநிலைமையோடு கூடிய ஒழுக்கத்தால் நயப்படைந்த; தன்மைமேவிய தலைமைசால்பெருங் குடிதழைப்ப=குணத்தினையுடைய மேன்மையமைந்த பெரியகுடிகள்விருத்தியடையுங் காரணமாய்; வன்மையோங்கெயில்வளம்பதிபயின்றது = வலிமைமிக்க மதிலாற்சூழப்பட்ட வளந்தங்கிய நகரங்களையுடையது; வரம்பின்றொன்மை மேன்மையினிகழ் பெருந்தொண்டை நன்னாடு = நன்னெறியின் பழமையான மேன்மையுடைத்தாயிருக்கின்ற பெருமையினையுடைய நல்ல தொண்டைநாடானது.—எ-று. (௨)

நற்றிறம்புரி பழையனூர்ச் சிறுத்தொண்டர் நவைவந்
துற்றபோதுதம் முயிரையும் வணிகனுக் கொருகாற்
சொற்றமெய்ம்மையுந் தூக்கியச் சொல்லையே காக்கப்
பெற்றமேன்மையி னிகழ்ந்தது பெருந்தொண்டை நாடு.

(இ-ள்.) நற்றிறம்புரிபழைய னூர்ச்சிறுத்தொண்டர் = நற்செய்கைகளைச் செய்கின்ற பழைய னூரில்வாழும் சிவபிரான்பணிகளைச்செய்யும் சிறியதொண்டர்களாகிய வேளாளர்கள் ; நவைவந்துற்றபோதுதம்முயிரையும் = தமக்குஓர்குற்றம் நேரிட்டபொழுதுதம்உயிரையும் ; வணிகனுக்கொருகாற்சொற்றமெய்ம்மையுந்தூக்கி = ஓர்செட்டிக்குத் தாங்கள் ஒருதரம்கூறியமெய்ம்மையையுஞ்சீர்தூக்கிப்பார்த்து ; அச்சொல்லையே காக்கப்பெற்ற மேன்மையினிகழ்ந்தது = அவனுக்குக் கூறிய மெய்ம்மொழியையே காக்கும்படி உயிரைக்கொடுக்கப்பெற்ற மையினுற்சிறப்படைந்தது ; பெருந்தொண்டைநாடு = பெரியதொண்டைநாடு.—எ-று. (௫)

வணிகனுக்காக வேளாளர் உயிர்விடுத்தலாவது:—தன்கணவன் நாள்தோறும் பிறமங்கையரிடஞ்சென்று நட்புற்றிருப்பதை அறிந்த அவன்மனைவிபலகால்தடுத்துத்தன்வசமாக்கும்படி வேண்டிய உபாயங்கள்சொல்லியும் அவன்கேளாமல்தன்கருத்திற்கு இடையூறு யிருக்கின்றளென்பதைநினைந்து அவளை வஞ்சமாய் அடுத்த ஊரில் நடக்கும் ஓர்சிறப்பை அவட்குக்காட்ட விருப்பமுள்ளவன்போல் அழைத்துக்கொண்டுபோய் நடுக்காட்டிற் கொன்றுவிட்டான். மறுபிறப்பில் அவள் ஒருபசாசாய்ச் செட்டியாய்ப்பிறந்த அக்கணவனைக் கொல்லக் கருதியிருந்தாள். அச்செட்டியின் சாதகம்பார்க்க வந்த ஒருசோதிடன்வடதிசைநோக்கி நீ சென்றால் ஒருபேயால் இறப்பை அது நிச்சயம் ஆயினும் நான் அப்பேய் உன்னைத் தொடராமல்ஓர்மந்திரவாளைஉனக்குக்கொடுக்கின்றேன்இவ்வாள் உன்னிடத்திருக்கும்வரைக்கும்அந்தப்பேய் உன்னைஅணுகாதென்று அதைக்கொடுத்தான். அவன் வர்த்தகம்செய்யப்போகும்பொழுது நீலியென்னும் அப்பேய் முற்பிறப்பில்அவன் செய்தபழிக்குப் பழிவாங்கும் நிமித்தம் அவன்மனைவிபோல்வடிவங்கொண்டுபின் தொடர்ந்துவர அவ்வணிகன் சிலகுறிகளால்இதுபேயென்றறிந்துதன் கையிலிருக்கும் மந்திரவாளின் வலியினுல் பயப்படாமல் அந்தஊரிலுள்ள வேளாளரிடத்துச் சேர்ந்தான். அப்பேய் அவர்களிடத்துச் சென்று என்கணவராகிய இவர் வெகுநாளாக என்னுடன் பேச்சின்றி விரோதப்பட்டிருக்கின்றார் என்கீழ்ப்படிந்த நடக்கையை எவ்வளவும் இரக்கமின்றி வெறுக்கின்றார் நீதிமான்களாகிய நீங்கள் அவருக்குஎன்னிடத்திலுள்ள கோபத்தை நீக்கி இவ்வெதிரிலுள்ள மண்டபத்தில் அவரையும் என்னையும் போகவிடுவீர்களாயின் சிலவார்த்தை அவரோடு பேசுகின்றேனென்று பாசாங்காய்ச் சொன்னவுடன் செட்டி இவளென்மனைவியல்லள் ஓர்வலியபேய் கொல்லவந்திருக்கின்றதென்றான். அதற்கு நீலி ஐயா இவரென்கணவரேயாம் என் இடுப்பில் இருக்கும் இக்குழந்தையை அவரிடத்தில் விட்டால் அது உங்களுக்கு நிச்சயங்காட்டிவிடுமென்று மாயக்குழந்தையை நிலத்தில் விட்டாள் அதுசெட்டியின்மேல்விழுந்து விளையாடிற்று அப்போதுவேளாளர்கள்செட்டியாரே நீர்பொய்சொல்லுகின்றீர்உம்முடையமனையாள் துன்பமடை

யாமல் இம்மண்டபத்திற்புகுந்து அவட்குச் சமாதானஞ்சொல்லி வாருமென்றார்கள் அப்பொழுது அவன்கையில்வாளைப்பிடித்துக்கொண்டுசென்றான் அதுகண்டநீலி இக்கத்தியை நீங்கள்வாங்கிவைத்துக்கொள்ளாவிட்டால் என்னைக்கொன்றுவிடுவானென்றுகூறஅவர்கள் அம்மொழியை நிச்சயமாகஎண்ணி அவ்வாளைவாங்கிக்கொள்ளவும் வணிகன்பயந்து இந்தஆயுதமிருந்தபடியால்நானிதுவரையில் பிழைத்திருந்தேன் இல்லாவிட்டால் பேயாலிறந்து விடுவேனென்ன வேளாளர்கள் நீரொருவர்இறந்துவிட்டால் எழுபதின்மரும் உயிர்விடுகின்றோமென்றுதேற்றிஉள்ளே அனுப்பினார்கள் அங்குப்புகுந்த அக்கணமே அந்தப்பேய்வணிகனைக்கொன்றுவிட்டுப் பின் அவன்தாய்போல்வடிவங்கொண்டு வேளாளரைநோக்கி உங்களிடத்துவந்தஎன்மகனைஎன்சேய்தீர்களென்றுகேட்க அவர்கள்செட்டிவருவானென்று வெகுநேரம்பார்த்தும் அவன்வராமையால் அம்மண்டபத்தின்கதவைத்திறந்து அவனுடலங்கிழிபட்டிருந்ததைக்கண்டு எழுபதுபேரும்தாங்கள்சொல்லிய சொற்றவறாமல் தீயில்குதித்து உயிரைக்கொடுத்தார்கள் என்னுஞ்சரித்திரமாம்.

ஆணையாமென நீறுகண் டடிச்சேர னென்னுஞ்
சேணுலாவுசீர்ச் சேரனார் திருமலை நாட்டு
வாணிலாவுபூண் வயவர்கண் மைத்துனக் கேண்மை
பேணநீடிய முறையது பெருந்தொண்டை நாடு.

(இ-ள்.) ஆணையாமெனநீறுகண்டு=சிவபிரான்திருவருள்வடிவமென்று உழமண்வெளுப்பைநீறாகக்கண்டுவணங்கி ; அடிச்சேரனென்னும்=அடியேன்சேரனென்றுகூறும் ; சேணுலாவுசீர்ச்சேரனார்=நெடுந்தூரம் பரம்பிய கீர்த்தி மிக்க சேரமானுடைய ; திருமலைநாட்டு=மலைநாட்டின்கண் ; வாணிலாவுபூண்வயவர்கள்=ஒளிவீசுகின்ற ஆபரணங்களையணிந்தவீரர்கள் ; மைத்துனக்கேண்மைபேண=மைத்துனரென்னும்உரிமையைப்பேணும்படியாக; நீடியமுறையது=நீடித்தமுறைமையையுடையது;பெருந்தொண்டைநாடு=பெரியதொண்டைநாடானது.—எ-று. (௪)

சேரநாட்டிலிருந்த ஓர்பெண் கலகத்தால் வேறுபட்டுவந்த சுற்றத்தாரை நீங்கித்தொண்டைநாட்டில்ருக்கும் வேளாளர்களிடத்தில் வந்துவளர்ந்துகொண்டிருக்க.பின்கலகந்தீர்ந்தவுடன்சிதறிப்போன சுற்றத்தார் தம் நாட்டையடைந்து விசாரித்துப்பார்க்கும்பொழுது ஓர் பெண்குறைந்திருக்கக்கண்டு காஞ்சிமண்டலத்தில்வந்துஅதைஅழைத்துக்கொண்டு போகும்படிவளர்த்தவேளாளர்களைக்கேட்க நாங்கள்இதுவரையும் எங்கள்புத்திரிபோலவளர்த்துப் பழுதின்றிக்காத்தோம் என்றுவரிசைகொடுத்துமைத்துனக்கேண்மைகொண்டார்களென்றுசரிதமுண்டாயினும் வயவர்களென்றதனால் ஈண்டு அதுபொருந்தாமையின் கரிகாற்சோழன்புத்திரனுக்கும்பவுத்திரனுக்கும் சேரநாட்டுச் சேரர்குலப் பெண்களைமணஞ்செய்துகொடுத்தசரிதம்பற்றி அவ்வீரர்கள் கரிகாற்சோழன்நாட்டில் படைவீரர்களோடு யுத்தஞ்செய்யவராமல் அவர்களுக்கனுகூலமாயிருந்து பிறஅரசர்களைச் செயித்துக்கொடுத்துமைத்துனக்கேண்மைகொண்டார்டினரென்னுஞ்சரிதமே ஈண்டுப்பொரு

த்தமுடைத்துப்போலும். இவ்விரண்டுசரிதமும் அந்நாட்டில் பின்னும்முன்னு மாக நடந்திருக்கலாம். கலகத்தால் வேறுபட்டு வந்தவர்கள் சேரநாட்டுப்படைவீ ரராயின் முற்சரிதமும் அமையும்.

கறைவிளங்கிய கண்டர்பாற் காதல்செய் முறைமை
நிறைபுரிந்திட நேரிழை யறம்புரிந் ததனாற்
பிறையுரிஞ்செயிற் பதிபயில் பெருந்தொண்டை நாடு
முறைமையாமென வுலகினின் மிகுமொழி யுடைத்தால்.

(இ-ள்.) கறைவிளங்கியகண்டர்பால்=கருநிறம் விளங்குகின்ற திருமி டற்றையுடைய சிவபிரானிடத்து ; காதல்செய்முறைமைநிறைபுரிந்திட=தாம்ப த்திசெய்தொழுகும் முறைமையாகியசால்புடைமையைஅப்பிரானார்விரும்ப ; நே ரிழையறம்புரிந்ததனால்=காமாட்சியார்முப்பத்திரண்டு அறங்களையும்காமக்கோட் டத்திற்செய்ததனால் ; பிறையுரிஞ்செயிற்பதிபயில்=இளம்பிறையானதுதவழ்கின் றமதில்சூழ்ந்தபதிகளையுடைய ; பெருந்தொண்டைநாடு=பெருமையாகியதொண் டைநாடானது ; முறைமையாமென=நீதியுடைத்தாமென்று ; உலகினின்மிகு மொழியுடைத்து=உலகத்தில்மிக்க ஓர்வார்த்தையைஉடைத்தா யிருக்கின்றது. ()

ஆல்-அசை.

தாவில்செம்மணி யருவியா றிழிவன சாரல்
பூவில்வண்டினம் புதுநற வருந்துவ புறவம்
வாவிநீள்கயல் வரம்பிற வுகைப்பன மருதம்
நீவிநித்திலம் பரத்திய ருணக்குவ நெய்தல்.

(இ-ள்.) தாவில்செம்மணியருவியாறிழிவனசாரல்= (அந்நாட்டில்) குற் றமற்றமாணிக்கங்களோடு மலைப்பக்கங்களினின்றும் அருவியாறுகள் இறங்குகின் றன ; புறவம்பூவில்வண்டினம்புதுநறவருந்துவ=முல்லைநிலங்களில் மலர்களிடத் துள்ளபுதியதேனைவண்டுகள் அருந்துகின்றன ; மருதம்வாவிநீள்கயல்வரம்பிறவு கைப்பன=மருதநிலங்களிலுள்ளவாவிகளில் நீண்டகயல்மீன்கள் வயல்வரம்புகள் இற்றுவீழும்படிபாய்கின்றன ; நெய்தல்நீவிநித்திலம்பரத்தியருணக்குவ=நெய்த னிலங்களில் உழத்தியர்களால் முத்துக்கள்கழுவி உலர்த்தப்படுகின்றன.—எ-று.()

குறவர்பன்மணி யரித்திதை விதைப்பன குறிஞ்சி
கறவையானிரை மானுடன் பயில்வன கானம்
பறவைதாமரை யிருந்திற வருந்துவ பழனஞ்
சுறவமுண்மருப் பணங்கயர் வனகழிச் சூழல்.

(இ-ள்.) குறிஞ்சிகுறவர்பன்மணியரித்திதைவிதைப்பன=குறிஞ்சிநிலத் தில்வாழும் குறவர்களால் பலமணிகளையரித்துவிதைக்கப்படுவன காராமணிகள் ; கானம்கறவையானிரைமானுடன்பயில்வன=முல்லைநிலங்களில் கறக்கின்றபசுக் கூட்டங்கள் மான்கூட்டங்களோடிருக்கின்றன ; பழனம்பறவைதாமரையிருந்தி றவருந்துவ=வயல்களில் புட்கள்தாமரைமலரிலிருந்து இறால்மீன்களைப்புசிக்கின்

றன ; கழிச்சுறழல்சுறவமுண்மருப்பணங்கயர்வன=கழியிடங்களில் சுறாமீன்களி ன்முள்ளையுடையகொம்புகளை வைத்து விழாக்கொண்டாடப்படுகின்றன.—எ-று.

கொண்டல்வானத்தின் மணிசொரிவனகுல வரைப்பாற்
றண்டுணர்க்கொன்றை பொன்சொரி வனதள வயற்பால்
வண்டன்முத்தநீர் மண்டுகால் சொரிவன வயற்பாற்
கண்டன்முன்றுறைக் கரிசொரி வனகலங் கடற்பால்.

(இ-ள்.) கொண்டல்வானத்தின்மணிசொரிவனகுலவரைப்பால்=மேகங் கள்வானத்தினின்றும் மணிகளைக்கூட்டமானமலைகளினிடத்துச்சொரிகின்றன ; தளவயற்பால்தண்டுணர்க்கொன்றைபொன்சொரிவன=முல்லையினது அருகில்கு ளிர்ந்தபூங்கொத்துக்களையுடைய கொன்றைமரங்கள் பொன்போலும் மலர்களைச் சொரிகின்றன ; வண்டன்முத்தநீர்மண்டுகால்சொரிவனவயற்பால்=வயல்மாதர் சிறுமகளிர்கள்வண்டலாட்டயர்ந்த முத்துக்களை நீர்செல்லுகின்ற கால்வாயானது வயலினிடத்துச்சொரிகின்றன ; கடற்பால்கலங்கண்டன்முன்றுறைக்கரிசொரி வன=கடலினிடத்துள்ள மரக்கலங்கள் தாழைகளைமுன்னாக வுடையகரையினி டத்துயானைகளைச்சொரிகின்றன.—எ-று. (அ)

கரியசொரிவன என்றது பிறதீவிலுள்ள யானைகளைக்கலத்திலேற்றிவந்து இறக்குகின்றார்கள் என்னுங்கருத்து.

தேனிறைந்தசெந் தினையிடி தருமலைச் சீறூர்
பானிறைந்தபுற் பதத்தன முல்லைநீள் பாடி
தூநெலன்னநெய் கன்னலின் கனியதண் டுறையூர்
மீனிறைந்தபே ருணவின வேலைவைப் பிடங்கள்.

(இ-ள்.) மலைச்சீறூர்தேனிறைந்தசெந்தினையிடிதரும்=குறிஞ்சிநிலச்சிற் றூர்கள்தேன்கலந்த செந்தினைமாவைத்தன்னிடத்துவைத்திருக்கும் ; முல்லைநீள் பாடிபானிறைந்தபுற்பதத்தன=முல்லைநிலத்தூர்கள் பால்சேர்ந்தபுல்லன்னத்தை யுடையன ; தண்டுறையூர்தூநெலன்னநெய்கன்னலின்கனிய=குளிர்ந்தமருதநில த்தூர்கள் தூய்மையானசம்பாஅன்னங்களும் நெய்யும்கருப்பஞ்சாறும் ஆகியஇ வைகளோடுஇனியகனிகளையும்உடையன ; வேலைவைப்பிடங்கள்மீனிறைந்தபே ருணவின=நெய்தநிலத்தூர்கள் மீன்கலந்தபெரியஉணவினையுடையன.—எ-று

குழல்செய்வண்டினங் குறிஞ்சியாழ் முரல்வன குறிஞ்சி
முழவுகார்கொள முல்லைகண் முகைப்பன முல்லை
மழலைமென்கிளி மருதமர் சேக்கைய மருத
நிழல்செய்கைதைசூழ் நெய்தலங் கழியன நெய்தல்.

(இ-ள்.) குறிஞ்சிகுழல்செய்வண்டினங்குறிஞ்சியாழ்முரல்வன = குறி ஞ்சிநிலங்களில் வேய்ங்குழல்போல ஒலிக்கின்றவண்டுக்கூட்டங்கள் குறிஞ்சிக்கு ரியபண்ணைப்பாடுகின்றன ; முல்லைமுழவுகார்கொளமுல்லைகண்முகைப்பன=மு ல்லை நிலத்தில் முழவப்பறையை மேகங்கள் ஒலிக்கமுல்லைச்செடிகள் அரும்புகின்

றன ; மருதம்மழலைமென்கிளிமருதமர்சேக்கைய=மருதநிலத்தில் மழலைச்சொற்களைப்பேசுகின்ற மிருதுவானகிளிகள் மருதமரங்களிலிருக்கும் துயிலிடங்களையுடையன ; நெய்தல்நிழல் செய்கைதைசூழ்நெய்தலங்கழியன=நெய்தனிலங்கள் நிழலைக்கொடுக்கும் தாழைகள்சூழ்ந்தநெய்தற்பூவோடுகூடியகழிக்கரையையுடையன.—எ-று. (௧௦)

மல்குமப்பெரு நிலங்களில் வரைபுணர் குறிஞ்சி
யெல்லையெங்கணு மிறவுள ரேனன்முன் விளைக்கும்
பல்பெரும்புனம் பயில்வன படர்சிறைத் தோகை
சொல்லுமப்புனங் காப்பவுஞ் சுரிகுழற் றோகை.

(இ-ள்.) மல்குமப்பெருநிலங்களில்=வளம்நிறைந்தமுற்கூறிய நால்வகைநிலங்களில் ; வரைபுணர்குறிஞ்சியெல்லையெங்கணும்=மலைசார்ந்த குறிஞ்சிநிலத்தின்எல்லைகளெல்லாம் ; இறவுளரேனன்முன்விளைக்கும்=வேடர்கள் தினைப்பயிரை முன்னேவிளைத்துப் பயிரிட்டிருக்கும் ; பல்பெரும்புனம்பயில்வனபடர்சிறைத்தோகை=பலபெரியதினைப் புனங்களில்இருக்கின்றனபரந்தசிறகினையுடையமயில்கள் ; சொல்லுமப்புனங்காப்பவுஞ்சுரிகுழற்றோகை=எடுத்துச்சொல்லத்தக்கஅத்தினைப்புனங்களைக்காப்பவர்களும் சுரித்தகுழலையுடைய மயில்போலுங்குறமாதர்கள்.—எ-று. (௧௧)

அங்கண்வான்மிசை யரம்பையர் கருங்குழற் சுரும்பு
பொங்குபூண்முலைக் கொடிச்சியர் குழன்மூழ்கிப் போகாச்
செங்கண்மால்விடை யார்திருக் காளத்தி யென்னு
மங்குல்சூழ்வரை நிலவிய வாழ்வினன் மல்கும்.

(இ-ள்.) அங்கண்வான்மிசையரம்பையர்கருங்குழற்சுரும்பு = அந்தக்குறிஞ்சிநிலத்தில் விண்ணுலகத்தில் வாழும்தெய்வமகளிர்களதுகரியகூந்தலிலிருக்கும்வண்டுகள் ; பொங்குபூண்முலைக்கொடிச்சியர் குழன்மூழ்கிப்போகா=பொலிவுடைத்தாகிய ஆபரணங்களையணிந்ததனங்களையுடையகுறத்திகளதுகூந்தலில்புகுந்து(வாசனைமிகுதியால்) அக்கூந்தலைவிட்டுநீங்காத ;செங்கண்மால்விடையார்திருக்காளத்தியென்னும்=சிவந்தகண்களையுடையதிருமாலாகியஇடபத்தைவாகனமாகக்கொண்டசிவபிரான்வீற்றிருந்தருளும்திருக்காளத்திஎன்கின்ற; மங்குல்சூழ்வரைநிலவியவாழ்வினன்மல்கும்=மேகங்கள்சூழ்ந்த மலையானதுவிளங்கியிருக்கின்றசிறப்பினால் ஓங்கியிருக்கும்.—எ-று. (௧௨)

பேறுவேறுசூ ழிமையவ ரரம்பையர் பிறந்து
மாறில்வேடரு மாதரு மாகவே வணங்கும்
ஆறுசூழ்சடை யண்ணலார் திருவிடைச் சுரமுங்
கூறுமேன்மையின் மிக்கதந் நாட்டுவண் குறிஞ்சி.

(இ-ள்.) பேறுவேறுசூழிமையவரரம்பையர்=பேற்றைவிரும்பித் தனியாகவலம்வருகின்ற தேவர்களும்தெய்வமகளிரும் ; மாறில்வேடருமாதருமாகவே பிறந்துவணங்கும் = மாறுபாடில்லாதவேடர்களும் வேடமகளிருமாகவே அம்ம

லைக்கண்பிறந்துவணங்கும் ; ஆறுசூழ்சடையண்ணலார்திருவிடைச்சுரமும்=கங்கைசூழ்ந்த சடையினையுடைய சிவபிரான் வீற்றிருந்தருளும்திருவிடைச்சுரமென்னும்திருப்பதியும் ; கூறுமேன்மையின்மிக்கதந்நாட்டுவெண்குறிஞ்சி = எடுத்துச்சொல்லத்தக்க மேன்மையோடுசிறந்திருக்கின்றது அத்தொண்டைநாட்டிலுள்ள வெள்ளத்தினையுடைய குறிஞ்சிநிலத்தில்.—எ-று. (கந)

அம்பொன்வார்குழற் கொடிச்சிய ருடனர மகளிர்
வம்புலாமலர்ச் சுனைபடிந் தாடுநீள் வரைப்பின்
உம்பர்நாயகர் திருக்கழுக் குன்றமு முடைத்தால்
கொம்பர்வண்டுசூழ் குறிஞ்சிசெய் தவங்குறை யுளதோ.

(இ-ள்.) அம்பொன்வார்குழற்கொடிச்சியருடனரமகளிர்=அழகியபொன்னிறமாகிய மலர்களைமுடித்த கூந்தலையுடைய வேடமாதர்களோடுதெய்வமகளிர்கள் ; வம்புலாமலர்ச்சுனைபடிந்தாடுநீள்வரைப்பின் = வாசனைகமழ்கின்ற மலர்கள்நெருங்கிய சுனைநீரில் படிந்துமுழுகுகின்ற நீண்ட இடங்களையுடைய ; உம்பர்நாயகர்திருக்கழுக்குன்றமுடைத்து=தேவர்களுக்குநாயகராகிய சிவபிரான் வீற்றிருந்தருளும் திருக்கழுக்குன்றமென்னும் திருப்பதியையும் உடையது (அசனுல்) ; கொம்பர்வண்டுசூழ்குறிஞ்சிசெய்தவங்குறையுளதோ = பூங்கொம்புகளிடத்துவண்டுகள் சூழ்ந்திருக்கும் குறிஞ்சி நிலம் செய்த தவம் குறையுடைத்தன்று.—எ-று. ஆல்-அசை. (கச)

கோலமுல்லையுங் குறிஞ்சியு மடுத்தசில் லிடங்க
ணீலவாட்படை நீலிகோட் டங்களு நிரந்து
காலவேனிலிற் கடும்பகற் பொழுதினைப் பற்றிப்
பாலையுஞ்சொல்ல லாவன வுளபரன் முரம்பு.

(இ-ள்.) கோலமுல்லையுங்குறிஞ்சியுமடுத்த சில்லிடங்கள்=அழகாகியமுல்லைநிலமும் குறிஞ்சிநிலமும் அடுத்த சில இடங்கள் ; நீலவாட்படைநீலிகோட்டங்களுநிரந்து=நீல நிறமுள்ளவாளாயுதத்தையேந்தியதுற்கையினது கோயில்களும் நெருங்கியுள்ளதாய் ; காலவேனிலிற்கடும்பகற் பொழுதினைப்பற்றி=பெரும்பொழுதாகிய வேனிற்காலத்தில் கடியநண்பகலைச்சேர்த்து ; பாலையுஞ்சொல்லலாவன வுளபரன்முரம்பு=பாலைநிலமென்றுஞ்சொல்லும்படிக்கு உள்ளன பரற்கல்லுகளோடு கூடிய சிலமேட்டுநிலங்கள்.—எ-று. (கரு)

முல்லைநிலமும் குறிஞ்சிநிலமும் காலவேறுபாட்டாற் பிரித்துக்கூறப்பட்டதேயன்றிப்பாலைக்குத்தனியே இடமில்லை என்பார் இழிவுசிறப்பும்மை கொடுத்துப்பாலையுஞ்சொல்லலாவனவுள என்று கூறினர்.

சொல்லுமெல்லையின் புறத்தன துணர்ச்சுரும் பலைக்கும்
பல்பெரும்புனற் கானியா றிடையிடை பரந்து
கொல்லைமெல்லிணர்க் குருந்தின்மேற் படர்ந்தபூம் பந்தர்
முல்லைமென்புதன் முயலுகைத் தடங்குநீண் முல்லை.

(இ-ள்.) சொல்லுமெல்லையின்புறத்தன=முற்கூறிய குறிஞ்சிநிலத்தின் எல்லையின் புறத்தில் உள்ளன; துணர்ச்சுரும்பலைக்கும் = வண்டுகளையுடைய பூங்கொத்துக்களை அலைத்துக்கொண்டு செல்லும்; பல்பெரும்புனற்கானியாறு= பல மிக்கநீரையுடைய காட்டாறுகள்; இடையிடைபரந்து = இடையிடையே பெருக்கெடுத்து; கொல்லைமெல்லிணர்க்குருந்தின்மேல்=முல்லைநிலத்திலிருக்கும் மிருதுவானதுளிர்களையுடைய குருந்தமரத்தின்மேல்; படர்ந்தபூம்பந்தர்=படர்ந்திருக்கின்றபூக்களையுடையபந்தர்போலும்; முல்லைமென்புதன் முயல்=முல்லைக் கொடியினது மிருதுவானபுதலுள்வாழும் முயல்களை; உகைத்தடங்கும்=ஓட்டித் தானும்தன்பெருக்கினின்றும் அடங்கும்; நீண்முல்லை =நீண்டமுல்லைநிலம்.எ-று.

பிளவுகொண்டதண் மதிநுதற் பேதைய ரெயிற்றைக்
களவுகொண்டது தளவெனக் களவலர் தூற்றும்
அளவுகண்டவர் குழனிறங் கனியுமக் களவைத்
தளவுகண்டெதிர் சிரிப்பன தமக்குமுண் டென்று.

(இ-ள்.) பிளவுகொண்டதண்மதிநுதற்பேதையரெயிற்றை=பிளவுபட்டகுளிர்ந்தமூன்றாம் பிறைபையொத்த நெற்றியினையுடைய இடைச்சிகளதுபற்களினழகை; களவுகொண்டதுதளவென=முல்லையரும்புகள் கவர்ந்துகொண்டனவென; களவலர்தூற்றும் = களாக்கொடிகள் அலர்தூற்றும்; அளவுகண்டவர் குழனிறங்கனியுமக்களவை=ஊகத்தாற்கண்டுகொண்டுஅம்மாதர்களதுகூந்தலின் நிறம்போலப்பழுத்திருக்கின்றஅக்களாக்கொடியை; தளவுகண்டெதிர்சிரிப்பன =முல்லைகள்பார்த்து அதனெதிரேசிரிக்கின்றன; தமக்குமுண்டென்று=இக்களவுஅவைகளுக்குமுண்டென்று.—எ-று. அலர்=மலரும் பழிமொழியுமாம். (௧௭)

மங்கையர்க்குவாள் விழியிணை தோற்றமான் குலங்கள்
எங்குமற்றவ ரிடைக்கிடை மலர்க்கொடி யெங்கும்
அங்கண்முல்லையின் றெய்வமென் றருந்தமி ழுரைக்குஞ்
செங்கண்மாலொருழுஞ் சிவன்மகிழ் திருமுல்லை வாயில்.

(இ-ள்.) அங்கண்முல்லையின்றெய்வமென்று=அழகியஇடமகன்றமுல்லை நிலத்திற்குத்தெய்வமென்று; அருந்தமிழுரைக்குஞ்செங்கண்மாலொருழும்=அரிய அகப்பொருணூல் கூறும் திருமால்தொழுகின்ற; சிவன்மகிழ்திருமுல்லைவாயில்= சிவபிரான் மகிழ்ந்தருளும் திருமுல்லைவாயிலினிடத்து; மங்கையர்க்குவாள்விழியிணைதோற்றமான்குலங்கள்எங்கும்=இடைப்பெண்களது வாள்போலுங்கண்ணுக்குத்தோல்வியடைந்த மான்குலங்கள் எவ்விடத்துமுள்ளன; அவரிடைக்கிடை மலர்க்கொடியெங்கும்=அப்பெண்களது இடைக்குத்தோற்ற பூங்கொடிகள் எவ்விடத்துமுள்ளன.—எ-று. (௧௮)

நீறுசேர்திரு மேனியர் நிலாத்திகழ் முடிமேன்
மாறில்கங்கைதா னவர்க்குமஞ் சனந்தர வணைந்தே
யூறுநீர்தரு மொளிமலர்க் கவிகைமா நகரை
வேறுதன்பெரு வைப்பென விளங்குமா முல்லை.

(இ-ள்.) நீறுசேர்திருமேனியர்நிலாத்திகழ்முடிமேன்மாறில்கங்கைதான் = விபூதிசேர்ந்துவிளங்குகின்ற திருமேனியையுடையசிவபிரானதுஇளம்பிறைவிளங்குந் திருமுடிமேல்வாழும்அழிவிலாதகங்கையானது; அவர்க்குமஞ்சனர் தரவணைந்து = அச்சிவபிரானுக்குத்திருமஞ்சனத்தைக் கொடுக்கும்படியாக நிலவுலகத்தில்வந்து ; ஊறுநீர்தருமொளிமலர்க்கலிகைமாநகரை = இடைவிடாதுஊறுகின்றஓர் தீர்த்தத்தைக் கொடுக்கின்ற விளக்கமான மலர்களையுடைய திருவூறல் என்னும் கலிகாநகரத்தை ; வேறுதன்பெருவைப்பென = வேறாகத்தனக்குப்பெரிய ஓர் இடமென்றுகொண்டு ; விளங்குமாமுல்லை = விளங்கியிருக்கும் முல்லைநிலம். எ-று. (கக)

வாசமென்மலர் மல்கிய முல்லைசூழ் மருதம்
வீசுதெண்டிரை நதிபல மிக்குயர்ந் தோடிப்
பாசடைத்தடந் தாமரைப் பழனக்கண் மருங்கும்
பூசல்வன்கரைக் குளங்களு மேரியும் புகுவ.

(இ-ள்.) வாசமென்மலர்மல்கிய=வாசனைகமழும்மிருதுவானமலர்கள் நிறைந்த ; முல்லைசூழ்மருதம்=முல்லைநிலத்தையடுத்தமருதநிலத்தில் ; வீசுதெண்டிரைநதிபல = வீசுகின்ற தெளிவாகிய அலைகளையுடைய பலநதிகள் ; மிக்குயர்ந்தோடி=மிகப்பெருகிப்பாய்ந்து ; பாசடைத்தடந்தாமரைப்பழனங்கண்மருங்கும்=பசிய இலைகள்தங்கிய விசாலமாகிய தாமரைமலர்களோடுகூடிய வயல்களிலும் ; பூசல்வன்கரைக்குளங்களும் ஏரியும்புகுவ=அலைமோதுகின்ற வலியகரைகளையுடைய குளங்களிலும் ஏரிகளிலும் புகுகின்றன.—எ-று. (உ0)

துங்கமாதவன் சுரபியின் திருமுலை சொரிபால்
பொங்குதீர்த்தமாய் நந்திமால் வரைமிசைப் போந்தே
யங்கணித்திலஞ் சந்தன மகிலொடு மணிகள்
பங்கயத்தட நிறைப்பவந் திழிவது பாலி.

(இ-ள்.) துங்கமாதவன்சுரபியின்=உயர்வாகியதவத்தையுடைய வசிட்டமுனிவரது காமதேனுவின் ; திருமுலைசொரிபால்=திருமுலையினின்றும் சொரிந்தபாலானது ; பொங்குதீர்த்தமாய்=பொலிவுதங்கிய தீர்த்தமாய் ; நந்திமால்வரைமிசைப்போந்து = நந்திமலையினின்றும் பூமியில் இழிந்து ; அங்கணித்திலஞ்சந்தனம்=அவ்விடத்துள்ள முத்துக்களையும் சந்தனக்கட்டைகளையும் ; அகிலொடுமணிகள் = அகிற்கட்டைகளோடு இரத்தினங்களையும் (வாரிக்கொண்டு) ; பங்கயத்தடநிறைப்ப=தாமரைவாவிகள் நிறையும்படி ; வந்திழுவதுபாலி=வந்துபெருகுகின்றது பாலாறானது.—எ-று. ஏ-அசை. (உக)

பிள்ளைதைவரப் பெருகுபால் சொரிமுலைத் தாய்போல்
மள்ளர்வேனிலின் மணற்றிடர் பிசைந்துகை வருட
வெள்ளநீரிரு மருங்குகால் வழிமிதந் தேறிப்
பள்ளநீள்வயற் பருமடை யுடைப்பது பாலி.

(இ-ள்.) பிள்ளைதவரப்பெருகு = குழந்தைகள் தடவப்பெருகுகின்ற; பால்சொரிமுலைத்தாய்போல் = பாலைச்சொரியும் முலையையுடையதாயைப்போல்; மள்ளர்வேனிலில் = உழவர்கள்வேனிற்காலத்தில்; மணற்றிடர்பிசைந்துகைவருட = அந்நதிக்கணுள்ள மணல்மேடுகளைத்தோண்டிப் பிசைந்துஊற்றுண்டாக்கிக் கையால்தடவி ஒழுங்குசெய்ய; வெள்ளநீரிருமருங்கு = பெருகுகின்றநீரானது இருமருங்குமுள்ள; கால்வழிமிதந்தேறி = வாய்க்கால்வழியாய்மிதந்துசென்று; பள்ளநீள்வயல் = பள்ளமாகியநீண்டவயல்களிலுள்ள; பருமடையுடைப்பதுபாலி = பரியமடைகளையுடைக்குந்தன்மையதுபாலாறு.—எ-று. (௨௨)

எனவே இந்நதிக்கணுள்ள ஊற்றுமிகுதியால் வேனிற்காலத்தும் மள்ளர் பயிரிடுதற்குரியதென்றாராயிற்று.

> அனையவாகிய நதிபரந் தகன்பணை மருங்கிற்
> கனைநெடும்புன னிறைந்துதிண் கரைப்பெருங் குளங்கள்
> புனையிருங்கடி மதகுவாய் திறந்திடப் புறம்போய்
> வினைஞரார்ப்பொலி யெடுப்பநீர் வழங்குவ வியன்கால்.

(இ-ள்.) அனையவாகியநதிபரந்து = அவ்விதமேன்மையை யுடையபாலாறானதுபெருகி; அகன்பணைமருங்கில் = அகன்றவயல்களின்பக்கத்தில்; கனைநெடும்புனனிறைந்து = ஒலிக்கின்றமிக்கநீரானதுநிறைவடைந்து; திண்கரைப்பெருங்குளங்கள் = திண்ணியகரையோடுகூடியபெரியகுளங்களும்; புனையிருங்கடிமதகு = கட்டப்பட்டபெருமையாகியகாவலையுடையமதகுகளும்; வாய்திறந்திடப்புறம்போய் = உடைத்துக்கொள்ளும்படி புறம்பேசென்று; வினைஞரார்ப்பொலியெடுப்ப = பள்ளர்கள்ஆரவாரஞ்செய்ய; நீர்வழங்குவவியன்கால் = விசாலமாகிய கால்வாய்கள்நீரைக்கொடுக்கின்றன.—எ-று. (௨௩)

> மாறில்வண்பகட் டேர்பல நெருங்கிட வயல்கள்
> சேறுசெய்பவர் செந்நெலின் வெண்முளை சிதறி
> நாறுவார்ப்பவர் பறிப்பவர் நடுபவ ரான
> வேறுபல்வினை யுடைப்பெருங் கம்பலை மிகுமால்.

(இ-ள்.) மாறில்வண்பகட்டேர்பலநெருங்கிடவயல்கள் = மாறுபாடில்லாதவளத்தைக்கொடுக்கும் எருமைக்கடாக்களைப் பூட்டியபலஏர்கள் வயல்களில் நெருங்க; சேறுசெய்பவர் = அவ்வயல்களைச்சேறுசெய்கின்றவர்களும்; செந்நெலின்வெண்முளைசிதறி = அச்சேற்றில் சம்பாநெல்லின் வெள்ளியமுளையைவிதைத்து; நாறுவார்ப்பவர் = நாற்றுவிடுகின்றவர்களும்; பறிப்பவர் = அதனைப்பறிக்கின்றவர்களும்; நடுபவரான = அந்நாற்றைநடுகின்றவர்களுமாகிய; வேறுபல்வினையுடை = வேறானபலதொழில்களையுடைய (உழவர்களது); பெருங்கம்பலைமிகும் = பெரிய ஆரவாரம் மிக்கிருக்கும்.—எ-று. ஆல்-அசை. (௨௪)

வரும்புனற்பெருங் கால்களை மறித்திட வாளை
பெருங்குலைப்பட விலங்குவ பிறங்குநீர்ப் பழன
நெருங்குசேற்குல முயர்த்துவ நீள்கரைப் படுத்துச்
சுருங்கைநீர்வழக் கறுப்பன பருவராற் றொகுதி.

(இ-ள்.) வரும்புனற்பெருங்கால்களைமறித்திடவாளை=நீர்வருகின்றபெரியகால்வாய்களை வாளைமீன்கள்குறுக்கிட்டுமறிக்க; பெருங்குலைப்படவிலங்குவ=(அதனால்அந்நீர்கள்தான்வரும்) அக்கரையைச்சேர எதிர்த்தோடுகின்றன; பிறங்குநீர்ப்பழனநெருங்குசேற்குலம்=விளங்குகின்றநீரையுடைய வயல்களில் நெருங்கியிருக்கின்றகெண்டைமீன்கள்; உயர்த்துவநீள்கரைப்படுத்து=பள்ளமானவயல்களைநீண்டகரையாகச்செய்துஉயர்த்திவிடுகின்றன; சுருங்கைநீர்வழக்கறுப்பன=மதகுகளில்நீர்வரும்வழக்கத்தை அதிற்புகுந்துஅடைக்கின்றன; பருவராற்றொகுதி=பரியவராலின்தொகுதிகள்.—எ-று. (௨௫)

சுருங்கை=நீர்வரும்சிறுவழி. நீர்ஊற்றெனினுமொக்கும்.

தளைத்தடம்பணை யெழுந்தசெந் தாமரைத் தவிசின்
இளைத்தசூல்வளை கண்படுப் பனவிடை யெங்கும்
விளைத்தபாசொளி விளங்குநீள் விசும்பிடை யூர்கோள்
வளைத்தமாமதி போன்றுள மருதநீர் வைப்பு.

(இ-ள்.) தளைத்தடம்பணையெழுந்த=வரம்புகளையுடையவிசாலமாகியவயல்களில்உதித்த; செந்தாமரைத்தவிசின்=செந்தாமரைமலரின்மேல்; இளைத்தசூல்வளைகண்படுப்பனவிடையெங்கும் = இடையிடையேஎவ்விடத்தும் சூலால் எய்ப்படைந்த சங்குகள்துயில்வன(எத்தன்மைத்தெனில்); விளைத்தபாசொளிவிளங்கும்=உதிக்கின்றபசிய ஒளியோடுபிரகாசிக்கும்; நீள்விசும்பிடையூர்கோள்=நீண்ட ஆகாயத்தின்கண்பரிவேடத்தால்; வளைத்தமாமதிபோன்றுள=சூழப்பட்டபூரணசந்திரனையொத்திருந்தன; மருதநீர்வைப்பு=நீர்தங்கியமருதநிலத்தில். ()

ஓங்குசெந்நெலின் புடையன வுயர்கழைக் கரும்பு
பூங்கரும்பயன் மிடைவன பூகமப் பூகப்
பாங்குநீள்குலைத் தெங்குபைங் கதலிவண் பலவு
தூங்குதீங்கனிச் சூதநீள் வேலிய சோலை.

(இ-ள்.) ஓங்குசெந்நெலின்புடையன = வளர்ந்த செந்நெற்பயிர்களின் பக்கத்திலுள்ளன; உயர்கழைக்கரும்பு=உயர்வாகிய வேழக்கரும்புகள்; பூங்கரும்பயன் மிடைவனபூகம்=பொலிவினையுடைய அக்கரும்பின் புறத்தே நெருங்கிச்சூழ்வன கமுகமரங்கள்; அப்பூகப்பாங்குநீள்குலைத்தெங்கு=அக்கமுகினருகானது நீண்ட குலையினையுடைய தென்னமரங்களும்; பைங்கதலிவண்பலவு=பசியவாழைமரங்களும் வளந்தங்கிய பலாமரங்களும்; தூங்குதீங்கனிச்சூதம்=தொங்குகின்ற மதுரமான கனிகளையுடைய மாமரங்களுமாகிய; நீள்சோலைவேலிய=நீண்டசோலைகளை வேலியாகவுடையன.—எ-று. (௨௭)

நீடுதண்பணை யுடுத்தநீண் மருங்கின நெல்லின்
கூடுதுன்றிய விருக்கைய விருந்தெதிர் கொள்ளும்
பீடுதங்கிய பெருங்குடி மனையறம் பிறங்கு
மாடமோங்கிய மறுகன மல்லன்மூ தூர்கள்.

(இ-ள்.) மல்லன்மூதூர்கள்=வளந்தங்கிய பழமையாகிய ஊர்கள்; நீடு தண்பணையுடுத்த=மிக்க குளிர்ந்தவயல்களாற் சூழ்ந்த; நீண்மருங்கின=நீண்டபக்கங்களையுடையன; நெல்லின்கூடுதுன்றியவிருக்கைய=நெல்லுநிறைக்கும் குதிர்கள் நெருங்கிய வீடுகளையுடையன; விருந்தெதிர்கொள்ளும்=விருந்தினரைஎதிர்கொண்டழைக்கும்; பீடுதங்கிய பெருங்குடி=பெருமை யோடுகூடிய பெரியகுடிகளது; மனையறம்பிறங்கும்=இல்லறம் விளங்கியிருக்கும்; மாடமோங்கிய மறுகன=மாடங்களுயர்ந்த வீதியையுடையன.—எ-று. (உஅ)

தொல்லைநான்மறை முதற்பெருங் கலையொலி துவன்றி
இல்லறம்புரிந் தாகுதி வேள்வியி லெழுந்த
மல்குதண்புகை மழைதரு முகிற்குலம் பரப்புஞ்
செல்வமோங்கிய திருமறை யவர்செழும் பதிகள்.

(இ-ள்.) தொல்லைநான்மறைமுதல் = பழமையாகிய நான்குவேதம் முதலிய; பெருங்கலை யொலிதுவன்றி = பெரிய கலைகளினது ஒலிகள்சூழப்பட்டு; இல்லறம்புரிந்து=இல்லறத்தை நடத்தி; ஆகுதிவேள்வியிலெழுந்த=ஆகுதிகளைச்செய்யும் யாகத்திலெழுந்த; மல்குதண்புகை=நிறைந்த தட்பமாகிய புகையானது; மழைதருமுகிற்குலம்பரப்பும் = மழையைப்பெய்கின்ற மேகக்கூட்டங்களோடு பரந்துசெல்லும்; செல்வமோங்கிய=செல்வத்தாலுயர்ந்தன; திருமறையவர்செழும்பதிகள்=மறையவர்களது செழுமையாகிய ஊர்கள்.—எ-று. (உகூ)

தீதுநீங்கிடத் திக்கலி யாமவு ணற்கு
நாதர்தாமருள் புரிந்தது நல்வினைப் பயன்செய்
மாதர்தோன்றிய மரபுடை மறையவர் வல்லம்
பூதிசாதனம் போற்றிய பொற்பினால் விளங்கும்.

(இ-ள்.) தீதுநீங்கிடத் திக்கலியாமவுணற்கு = திருமாலின் சக்கரத்தால் இறக்கவரும் தீங்கு நீங்கும்படி திக்கலியென்னும் அசுரனுக்கு; நாதர்தாமருள்புரிந்ததும்=சிவபிரான்அவன் அச்சக்கரத்தைச்செயிக்கும்படி அருள்புரிந்த தலமாயும்; நல்வினைப்பயன்செய்மாதர்தோன்றிய=நல்வினைகளின் பயனையே தமக்குரித்தாகச்செய்தொழுகும் மகளிர்கள் உதித்த; மரபுடைமறையவர்வல்லம்=மரபினையுடைய மறையவர்கள்வாழும் திருவல்லமானது; பூதிசாதனம் போற்றிய பொற்பினால் விளங்கும்=விபூதியாகிய மோட்சசாதனத்தைப் பேணியொழுகும் சிறப்போடுவிளங்கும்.—எ-று. (௩0)

நல்வினைப்பயன்செய்மாதர்தோன்றிய மரபுடைமறையவர் என்னுங்கால் நல்வினைப்பயன்செய்யுஞ் சிறப்புவிளங்கிய மரபுடைமறையவரென்றுரைப்பாரு

முளர் அதுபொருந்தாது. தனக்குப் புத்திரிகளேயன்றிப் புத்திரப்பேறின்றென்றறிந்த ஓர் மறையவன் சிவபிரானைப் புத்திரப்பேறுவிரும்பி நோற்குங்கால் புத்திரிகளேயன்றி உனக்குப்புத்திரப்பேறின்றென்று அருளிச்செய்ய அம்மறையவன் தேவரீருக்குரியதிருத்தொண்டாகியபணிகளைச்செய்யும் அப்புத்திரிகள் பிறக்கவரங்கொடுக்கவேண்டுமென்ன அதற்கவர் திருவுளமகிழ்ந்து அவ்வாறு அருளிச்செய்தனரென்னுங்கருத்து மாதர்தோன்றிய என்பதனாற் பெறப்படுதலின். சரிதம் பிறவிடத்துமுளதேற்காண்க.

அருவிதந்தசெம் மணிகளும் புறவிலாய் மலரும்
பருவியோடைக ணிறைந்திழி பாலியின் கரையின்
மருவுகங்கைவாழ் சடையவர் மகிழ்ந்தமாற் பேறும்
பொருவில் கோயிலுஞ் சூழ்ந்ததப் புறம்பணை மருதம்.

(இ-ள்.) அருவிதந்த செம்மணிகளும் = மலைச்சாரலினின்றிழியும் அருவிகள் கொழித்துவந்த சிவந்தநிறத்தையுடைய இரத்தினங்களையும் ; புறவிலாய்மலரும்=முல்லைநிலத்தினின்றும்கொய்யப்பட்ட மலர்களையும் ; பருவியோடைகணிறைந்திழி = கலந்துகொண்டு ஓடைகளில்நிறைந்துஇழிகின்ற ; பாலியின்கரையின்மருவு= பாலாற்றின்கரையிலுள்ள ; கங்கைவாழ்சடையவர்=கங்கைதங்கியசடைமுடியையுடையசிவபிரான் ; மகிழ்ந்தமாற்பேறும்பொருவில்கோயிலும் =விரும்பியதிருமாற்பேறென்னும்ஒப்பற்றதிருக்கோயிலும் ; சூழ்ந்ததப்புறம்பணைமருதம்=சூழ்ந்துள்ளதுஅந்தமருதநிலம்.—எ-று. (௩௧)

விரும்புமேன்மையென் பகர்வது விரிதிரை நதிகள்
அருங்கரைப்பயில் சிவாலய மனேகமு மணைந்து
பருங்கையானையை யுரித்தவ ரிருந்தவப் பாசூர்
மருங்குசூழ்தவம் புரிந்ததன்றே மற்ற மருதம்.

(இ-ள்.) விரும்புமேன்மையென்பகர்வது=யாவராலும்விரும்பத்தக்க அம்மருதநிலத்தின்மேன்மையை எவ்வாறெடுத்துச்சொல்வது ;விரிதிரைநதிகளருங்கரைப்பயில்=விரிந்தஅலைவீசுகின்றபாலாறுகுடத்தலை யாறுமுதலியநதிகள்தம்முடையஅரியகரையிலிருக்கின்ற ; சிவாலயமனேகமுமணைந்து=அனேகஞ்சிவாலயங்களிடத்துஞ்சென்றுமீண்டு ; பருங்கையானையையுரித்தவர்=பருத்ததுதிக்கையையுடையகயாசுரனென்னும்யானையைஉரித்தருளும்பிரான் ; இருந்தவப்பாசூர்மருங்குசூழ்=வீற்றிருந்தருளும் அந்தத்திருப்பாசூரென்னும் ஊரினருகில்சூழத்தக்க ; தவம்புரிந்ததுமற்றமருதம்=தவத்தைச்செய்ததுஅம்மருதநிலம்.—எ-று.()
அன்று. ஓ-அசை.

பூமரும்புனல் வயற்களம் பாடிய பொருநர்
தாமருங்கிளை யுடன்றட மென்மலர் மிலைந்து
மாமருங்குதண் ணீழலின் மருதயாழ் முரலுங்
காமர்தண்பணைப் புறத்தது கருங்கழி நெய்தல்.

(இ-ள்.) பூமருவ்புனல்வயற்களம்பாடியபொருநர்=பூக்கள்மருவும்நீரையுடையவயலிலுள்ள நெற்போர்தெளிக்கும் களத்தில்(மருதப்பாட்டைப்)பாடுகின்றஉழவர்கள்; தாமருங்கிளையுடன்றடமென்மலர்மிலைந்து=தாங்கள் அரியசுற்றத்தாரோடு வாவிகளிலுள்ள மிருதுவானமலர்களைச்சூடிக்கொண்டு; மாமருங்குதண்ணிழலின் மருதயாழ்முரலும்=மாமரத்தின்அருகிலிருக்கும் குளிர்ந்தநிழலிலிருந்துமருதயாழைவாசிக்கின்ற; காமர்தண்பணைப்புறத்ததுகருங்கழிநெய்தல்=அழகியகுளிர்ந்தமருதநிலத்தின்புறத்திலுள்ளது கருமையாகிய கழிகளோடுகூடியநெய்தனிலம்.—எ-று. (ருரு)

ஈண்டு களமென்றதுபோர்க்களமன்று நெற்போர்தெளிக்குங்களத்தைஎன்க அவர்பாடுதற்குரியததுவாதலின்.

தூயவெண்டுறைப் பரதவர் தொடுப்பன வலைகள்
சேயநீள்விழிப் பரத்தியர் தொடுப்பன செருந்தி
யாயபேரளத் தளவர்க ளளப்பன வுப்பு
சாயன்மென்னடை யளத்திய ரளப்பன தரளம்.

(இ-ள்.) தூயவெண்டுறைப்பரதவர் தொடுப்பனவலைகள் = தூய்மையானவெள்ளியமணலையுடையகடற்கரைகளில்பரதவர்களால்வலைகள்தொடுக்கப்படுவன; சேயநீள்விழிப்பரத்தியர்தொடுப்பனசெருந்தி = சிவந்தநீண்டகண்களையுடைய பரத்தியர்களால்செருந்திமலர்கள்தொடுக்கப்படுவன; ஆயபேரளத்தளவர்களளப்பனவுப்பு=அந்நிலத்துள்ளபெரியஅளங்களில்உப்பளவர்களால் உப்புஅளக்கப்படுவன; சாயன்மென்னடையளத்தியரளப்பனதரளம்=மயிலின்சாயலையும்மிருதுவானநடையையும்உடையபரத்தியர்களால் முத்துக்கள்அளக்கப்படுவன.()

கொடுவினைத்தொழி லுளையர்கள் கொடுப்பன கொழுமீன்
படுமணற்கரை நுளைச்சியர் கொடுப்பன பவளந்
தொடுகடற்சங்கு துறையவர் குளிப்பன வவர்தம்
வடுவகிர்க்கண்மங் கையர்குளிப் பனமணற் கேணி.

(இ-ள்.) கொடுவினைத்தொழிலுளையர்கள்கொடுப்பனகொழுமீன் = கொடியதீத்தொழில்களைச்செய்கின்ற பரதவர்களால்கொழுமையான மீன்கள்விற்கப்படுகின்றன; படுமணற்கரைநுளைச்சியர் கொடுப்பனபவளம் = மிக்கமணற்கரைகளிலிருந்து நுளைச்சியர்களால்பவளம்விற்கப்படுகின்றன; தொடுகடற்சங்குதுறையவர்குளிப்பன=சகரராற்றோண்டப்பட்டகடலிலுள்ளசங்குகள்அத்துறையிலுள்ள நுளையர்களாற்குளிக்கப்படுவன; அவர்தம்வடுவகிர்க்கண்மங்கையர்குளிப்பனமணற்கேணி=அவர்களுடையமாவடுவின்பிளப்பினையொத்தகண்களையுடையமகளிர்களால் மணற்கேணிகள்குளிக்கப்படுவன.—எ-று. (ருரு)

சுழிப்புனற்கட லோதமுன் சூழ்ந்துகொண் டணிய
வழிக்கரைப்பொதிப் பொன்னவிழ்ப் பனமலர்ப் புன்னை
விழிக்குநெய்தலின் விரைமலர்க் கட்சுரும் புண்ணக்
கழிக்கரைப்பொதி சோறவிழ்ப் பனமடற் கைதை.

(இ-ள்.) சுழிப்புனற்கடலோதமுன்சூழ்ந்துகொண்டணிய = சுழியையுடைய நீர்நிறைந்தகடலின்பெருக்கானது முற்பட்டுச்சூழ்ந்து அணிந்துகொள்ளும்படி; வழிக்கரைப்பொதிப்பொன்னவிழ்ப்பனமலர்ப்புன்னை = அந்நீர்செல்லும்வழிக்கரையிலிருக்கும் புன்னைமரங்கள் பொதியின்கணுள்ளபொன்னிறமாகியமலர்களை அவிழ்க்கின்றன; விழிக்குநெய்தலின்விரைமலர்க்கட்சுரும்புண்ண = கண்போலும்வாசனைகமழும் நெய்தல்மலரினிடத்திருக்கும்வண்டுகள் உண்ணும்படி; கழிக்கரைப்பொதிசோறவிழ்ப்பனமடற்கைதை = கடற்கரையினிடத்துக் கட்டுச்சோறுகளை அவிழ்க்கின்றனமடலையுடையதாழைமலர்கள்.—எ-று. (நசு)

காயல்வண்கரைப் புரைநெறி யடைப்பன கனிமுட்
சேயதண்ணறுஞ் செழுமுகை செறியுமுண் டகங்கள்
ஆயநுண்மணல் வெண்மையை மறைப்பன வன்னந்
தாயமுன்றுறைச் சூழல்சூழ் ஞாழலின் றாது.

(இ-ள்.) காயல்வண்கரைப்புரைநெறியடைப்பன = கழிக்கானல்களில்வளப்பமானகரையிலுள்ளகுற்றமானவழிகளை அடைக்கின்றன; கனிமுட்சேயதண்ணறுஞ்செழுமுகைசெறியுமுண்டகங்கள் = மிருதுவானமுள்ளுடன்சிவந்ததட்பத்தோடுகூடியசெழுமையானமுகைசெறிந்ததாழைகள்; ஆயநுண்மணல்வெண்மையைமறைப்பன = அக்கடற்கரையிலிருக்கின்ற நுண்ணியமணல்களின் வெண்மையைமறைக்கின்றன; அன்னந்தாயமுன்றுறைச்சூழல்சூழ்ஞாழலின்றாது = அன்னங்கள்தாவிச்செல்கின்ற சமுத்திரக்கரையிலுள்ளசோலையைச்சூழ்ந்த ஞாழல்மலர்களின்தாதுக்கள்.—எ-று. (நஎ)

முண்டகங்கள்என்புழிஆற்றுவெள்ளத்தால் ஒதுக்குண்டு சமுத்திரக்கரையையடைந்ததாமரைமலர்களெனினுமொக்கும்.

வாம்பெருந்திரை வளாகமுன் குடிபயில் வரைப்பிற்
றாம்பரப்பிய கயல்களின் விழிக்கய றவிரக்
காம்பினேர்வருந் தோளியர் கழிக்கயல் விலைசெய்
தேம்பொதிந்தசின் மழலைமென் மொழியசெவ் வழியாழ்.

(இ-ள்.) வாம்பெருந்திரைவளாகமுன்குடிபயில்வரைப்பில் = தாவுகின்ற பெரியஅலைகளையுடைய கடற்கரையில் (பரதவர்கள்)குடியிருக்குமிடத்தில்; தாம்பரப்பியகயல்களின்விழிக்கயல்தவிர = தாங்கள்பரப்பியகயல்மீன்களுள்கண்ணாகியகயல்கள்நீங்க; காம்பினேர்வருந்தோளியர்கழிக்கயல்விலைசெய் = மூங்கிலையொத்த தோளையுடைய அம்மகளிர்கள் கழிக்கணுள்ளகயல்மீன்களைவிற்கின்ற; தேம்பொதிந்தசின்மழலைமென்மொழியசெவ்வழியாழ் = மதுரம்பொதிந்த சிறியமழலையாகியமிருதுவான மொழியினிடத்துள்ளன அந்நிலத்துச்செவ்வழியாழுக்குரியபண்கள்.—எ-று. (நஅ)

மருட்கொடுந்தொழில் மன்னவ னிறக்கிய வரியை
நெருக்கிமுன்றிரு வொற்றியூர் நீங்கவென் றெழுதும்
ஒருத்தர்தப்பெருங் கோயிலி னொருபுறஞ் சூழ்ந்த
திருப்பரப்பையு முடையதத் திரைக்கடல் வைப்பு.

(இ-ள்.) மருட்கொடுந்தொழின் மன்னவனிறச்செயவரியை=மயக்கத்தோடு கொடுந்தொழிலைச்செய்யும்வேரசன் (தந்நாட்டடங்கியசிவாலயங்களுக்கு) ஏற்படுத்தியதீர்வையை; நெருக்கிமுன்றிருவொற்றியூர் நீங்கவென்றெழுதும் =முன்வரியில்நெருக்கித்திருவொற்றியூர்தவிரஎன்றுவரிப்பிளந்தெழுதும்; ஒருத்தர்தம்பெருங்கோயிலின்னொருபுறஞ்சூழ்ந்த=படம்பக்கநாதர் வீற்றிருக்கும்பெரியகோயிலினதுஒருபுறத்துச்சூழ்ந்த; திருப்பரப்பையுமுடையதத்திரைக்கடல்வைப்பு=திருவெல்லையையுமுடையதுஅந்நெய்தனிலம்.—எ-று. (நகூ)

மெய்தரும்புகழ்த் திருமயி லாபுரி விரைசூழ்
மொய்தயங்குதண் பொழிற்றிரு வான்மியூர் முதலாப்
பைதரும்பணி யணிந்தவர் பதியெனைப் பலவா
னெய்தலெய்தமுன் செய்தவந் நிறைதவஞ் சிறிதோ.

(இ-ள்.) மெய்தரும்புகழ்த்திருமயிலாபுரி= மெய்ம்மையைவிளக்கும் புகழினையுடைய திருமயிலாப்பூர்; விரைசூழ்மொய்தயங்குதண்பொழிற்றிருவான்மியூர்முதலா=வாசனைகமழ்கின்றநெருங்கியகுளிர்ச்சியினையுடைய சோலைசூழ்ந்த திருவான்மியூர்முதலாக; பைதரும்பணியணிந்தவர்பதியெனைப்பல=படமுடையபாம்பைஅணியாக அணிந்தசிவபிரான் வீற்றிருக்கும் வேறுதிருப்பதிகளும்பல (அதனால்); நெய்தலெய்தமுன்செய்தவந்நிறைதவஞ்சிறிதோ=நெய்தனிலமானது இத்திருப்பதிகளைத்தான் அடையும்படி முன்னேசெய்த அந்நிறைவாகிய தவம்சிறியதன்று.—எ-று. ஆல்-அசை. (சா)

அங்கண்வான்மிசை என்னுஞ்செய்யுண்முதலாகக் குறிஞ்சிமுதலியநிலத்திணைகளில் உரியதலங்களைக்கூறிமுடித்தார்.

கோடுகொண்டெழுந் திரைக்கடற் பவளமென் கொழுந்து
மாடுமொய்வரைச் சந்தனச் சினைமிசை வளரு
நீடுநெய்தலுங் குறிஞ்சியும் புணர்நிலம் பலவால்
ஆடுநீள்கொடி மாடமா மல்லையே யனைய.

(இ-ள்.) கோடுகொண்டெழுந்திரைக்கடற்பவளமென்கொழுந்து=அலையெறிகின்ற கடலினிடத்துக்கிளைத்தெழாநின்ற பவளக்கொடிகளின் மிருதுவான கொழுந்துகள்; மாடுமொய்வரைச் சந்தனச்சினைமிசைவளரும் = அருகிலுள்ள நெருங்கிய மலையிலுதித்த சந்தனமரத்தின் கிளைகள்மேல் வளர்கின்ற; நீடுநெய்தலுங் குறிஞ்சியும் புணர்நிலம்பல=நீண்ட நெய்தனிலமுங் குறிஞ்சிநிலமும் மயங்கியிருக்கும் நிலங்கள்பலவுள; ஆடுநீள்கொடிமாடமாமல்லையேயனைய = நீண்ட கொடிகள் ஆடுகின்ற மாடங்கள்நெருங்கிய மல்லைநகரத்தையொத்தன—எ-று. ()

மல்லை=மாவலிபுரம். ஆல்-அசை.

மலைவிழிப்பன வெள்வயற் சேல்வரைப் பாறைத்
தலையுகைப்பவுந் தளைச்செறு விடைநெடுங் கருமான்
கலைகுதிப்பன கரும்பகட் டேர்நிகர்ப் பவுமாய்
அலைபுனற்பணை குறிஞ்சியோ டணைவன வனேகம்.

(இ-ள்.) மலைவிழிப்பனவெனவயற்சேல்=வயல்களில்வாழுஞ்சேல் மீன்கள் மலை கண்ணைத்திறந்து பார்த்தல்போல; வரைப்பாறைத் தலையுகைப்பவும்=மலைப்பாறைகளின் தலையிற்பாய்ந்து புரளவும்; தளைச்செறுவிடை நெடுங்கருமான்கலைகுதிப்பன = தளைகளையுடைய வயல்களில் நீண்டபுல்வாய்க்கலைகள் குதிக்கின்றன; கரும்பகட்டேர் நிகர்ப்பவுமாய்=கரியகடாக்களைப்பூட்டிய ஏரை ஒப்பனவுமாய்; அலைபுனற்பணைகுறிஞ்சியோடணைவனவனேகம்=அலைவீசும்புனலையுடையமருதநிலம்குறிஞ்சிநிலத்தோடு மயங்கியிருக்குமிடங்கள் பலவுள. ()

புணர்ந்தவானிரைப் புறவிடைக் குறுமுயல் பொருப்பின்
அணைந்தவான்மதி முயலினை யினமென வணைந்து
மணங்கொள்கொல்லையில் வரகுபோர் மஞ்சன வரைக்கார்
இணைந்துமுல்லையுங் குறிஞ்சியுங் கலப்பன வெங்கும்.

(இ-ள்.) புணர்ந்தவானிரைப்புறவிடைக்குறுமுயல் = பசுக்கூட்டங்கள் நெருங்கிய முல்லைநிலத்தில் வாழுங் குறியமுயலானது; பொருப்பிணைந்தவான் மதிமுயலினை=மலையிடத்தேதங்கிய வெண்மையாகியசந்திரனிடத்துள்ளமுயலை; இனமெனவணைந்து = தனக்கு இனமென்று கருதி அணைதலினால்; மணங்கொள்கொல்லையில்வரகுபோர் = வாசனைகமழும் முல்லைநிலத்திலுள்ள வரகுபோர்களில்; வரைமஞ்சனக்காரிணைந்து=மலையிலிருக்கும் சூற்கொண்டமேகங்கள் கூடுதலினால்; முல்லையுங்குறிஞ்சியுங்கலப்பனவெங்கும்=முல்லைநிலமுங் குறிஞ்சிநிலமும் எங்குங் கலந்திருப்பன.—எ-று. (௬௫)

கவருமீன்குவை கழியவர் கானவர்க் களித்துச்
சிவலுஞ்சேவலு மாறியுஞ் சிறுகழிச் சியர்கள்
அவரையேனலுக் கெயிற்றியர் பவளமுத் தளந்தும்
உவரிநெய்தலுங் கானமுங் கலந்துள வொழுக்கம்.

(இ-ள்.) கவருமீன்குவைகழியவர்கானவர்க்களித்து = நெய்தனிலத்து வாழும்பரதவர்கள்தாங்கள்பிடித்த மீன்களைமுல்லைநிலத்திருக்கும் இடைச்சியர்களுக்குக்கொடுத்து; சிவலுஞ்சேவலுமாறியும்=அவர்களிடத்துள்ளகவுதாரியையும் சேவலையும்மாறிக்கொள்ளுதலினாலும்; சிறுகழிச்சியர்கள்எயிற்றியர்அவரையேனலுக்கு=சிறியநெய்தனிலப்பெண்கள் இடைச்சியர்கள்கொடுக்கும்அவரைக்கும்தினைக்கும்; பவளமுத்தளந்தும்=பவளத்தையும்முத்தையும் படிக்குப்படி அளந்து கொடுத்தலினாலும்; உவரிநெய்தலுங்கானமுங்கலந்துளவொழுக்கம்=கடற்கரையிலிருக்கும் நெய்தனிலமும் முல்லைநிலமும் தொழிலாற்கலந்துள்ளன.—எ-று.

நெய்தலுங்குறிஞ்சியும் மயங்குதல் முற்கூறினமையால் ஈண்டுநெய்தலும் முல்லையுமேகூறினாராதலின் கானவர்எயிற்றியர் என்றது ஆயர் ஆய்ச்சியர்கட்கே ஆயின. அவ்வாறுதல்கடையரென்றது நெய்தநிலமாக்களுக்கும் உழவருக்கும்மறவரென்றதுவேடர்க்கும் பாலைநிலமாக்களுக்கும் பெயராய் வருதல் போலவென்க.

அயனறும்புற வினிலிடைச் சியரணி நடையும்
வியனெடும்பணை யுழத்தியர் சாயலும் விரும்பி
இயலுமன்னமுந் தோகையு மெதிரெதிர் பயில
வயலுமுல்லையு மியைவன பலவுள மருங்கு.

(இ-ள்.) அயனறும்புறவினிலிடைச்சியரணிநடையும் = சமீபத்திலிருக்கும்நல்லமுல்லைநிலத்திலுள்ள இடைச்சியர்களுடைய அழகிய நடையையும்; வியனெடும்பணையுழத்தியர்சாயலும்விரும்பி = விசாலமாகிய நீண்டமருதநிலத்தில்உழத்தியர்களுடைய உடம்பின்சாயலையும்விரும்பி; இயலுமன்னமுந்தோகையுமெதிரெதிர்பயில = நடக்கின்றஅன்னமும்மயிலும்ஒன்றற்கொன்றுஎதிராகவர; வயலுமுல்லையுமியைவனபலவுளமருங்கு = மருதமும்முல்லையும்விரவியிருக்குமிடங்கள்பலவுண்டு அந்நாட்டிடத்து.—எ-று. (௪௫)

மீளுமோதமங் கொழித்தவெண் டரளமுங் கமுகின்
பாளையுக்கவும் விரவலிற் பரத்தியர் பணைமென்
றோளுழத்தியர் மகளிர்மா றாடிமுன் றெருக்கு
நீளுநெய்தலு மருதமுங் கலந்துள நிலங்கள்.

(இ-ள்.) மீளுமோதமங்கொழித்தவெண்டரளமும் = கரையிற்சென்றுதிரும்பிவருகின்ற கடற்பெருக்கானது அவ்விடத்துநீக்கிச்சென்ற வெண்மையாகிய முத்தும்; கமுகின்பாளையுக்கவும் விரவலில் = (மருதநிலத்தின்கணுள்ள)கமுகம்பாளைகளினின்றும் உதிர்ந்தமலர்களும் கலந்திருத்தலால்; பரத்தியர்பணைமென்றோளுழத்தியர்மகளிர் = பரத்தியர்மகளிர்களும் மூங்கில்போலும் மெல்லியதோள்களையுடைய உழத்தியர்மகளிர்களும்; மாறாடிமுன்றெருக்கும் = ஒருவர்க்கொருவர்மாறுபட்டுவாரிக்குவிக்கும்: நீளுநெய்தலுமருதமுங்கலந்துளநிலங்கள் = நீண்டநெய்தலும் மருதமுமாகியநிலங்கள்அந்நாட்டிற்கலந்துள்ளன.—எ-று. (௪௬)

ஆயநானிலத் தமைதியிற் றத்தமக் கடுத்த
மேயசெய்தொழில் வேறுபல் குலங்களின் விளங்கித்
தீயவென்பன கனவிலு நினைவிலாச் சிந்தைத்
தூயமாந்தர்வாழ் தொண்டைநாட் டியல்புசொல் வரைத்தோ.

(இ-ள்.) ஆயநானிலத்து = அவ்வாறானகுறிஞ்சிமுல்லை மருதம் நெய்தலென்னும் நால்வகைப்பட்ட நிலங்களிலும்; அமைதியில் = ஒன்றோடொன்றுவிரவிய நிலங்களிலும்; தத்தமக்கடுத்தமேயசெய்தொழில் = தங்கள்தங்களுக்கேற்றசம்பந்தமான செய்தொழிலையுடைய; வேறுபல்குலங்களின்விளங்கி = வேறானபலசாதிகளால் விளக்கமுற்று; தீயவென்பனகனவிலுநினைவிலா = தீத்தொழில்களாயுள்ளனவற்றைக்கனவிடத்துஞ்செய்யநினையாத; சிந்தைத்தூயமாந்தர்வாழ் = தூயசிந்தையையுடைய மாந்தர்கள்வாழ்கின்ற; தொண்டைநாட்டியல்புசொல்வரைத்தோ = தொண்டைநாட்டின் சிறப்பு என்சொல்லளவிற்றோ அன்று.—எ-று. (௪௭)

இவ்வளந்தரு பெருந்திரு நாட்டிடை யென்று
மெய்வ்வளந்தரு சிறப்பினு லுலகெலாம் வியப்ப
எவ்வுகங்களு முள்ளதென் றியாவரு மேத்துங்
கைவ்விளங்கிய நிலையது காஞ்சிமா நகரம்.

(இ-ள்.) இவ்வளந்தருபெருந்திருநாட்டிடை = இவ்வாறானவளத்தைக் கொடுக்கும் பெருமையுடைத்தாகிய தொண்டைநாட்டில் ; என்றுமெய்வளந்தரு சிறப்பினால்=எந்நாளும்மெய்மையாகியவீட்டுநெறிக்குரியசெல்வத்தைக்கொடுக்கும்சிறப்பினால் ; உலகெலாம்வியப்ப=எல்லாவுலகத்தாரும்வியத்தலால் ; எவ்வுகங்களுமுள்ளதென்று=உகமுடிவிலும் அழியாதிருக்கும்இயல்பையுடையதென்று ; யாவருமேத்துங்கைவிளங்கிய நிலையதுகாஞ்சிமாநகரம்=பலசமயத்தாரும் துதிக்கின்ற ஒழுக்கம் நிரம்பிய தன்மையுடையதுகாஞ்சிபுரம்.—எ-று. (சஅ)

ஆனதொன்னக ரம்பிகை தம்பெரு மானை
மானவர்ச்சனை யாலொரு காலத்து வழிபட்
டூனமில்லற மனேகமு முலகுய்ய வைத்த
மேன்மைபூண்டவப் பெருமையை யறிந்தவா விளம்பில்.

(இ-ள்.) ஆனதொன்னகரம்பிகைதம்பெருமானை = அவ்விதசிறப்பையுடைய பழமையான காஞ்சிபுரமானது பார்வதியார் தமதுபிரானாகியசிவபெருமானை ; மானவர்ச்சனையாலொருகாலத்துவழிபட்டு=பெருமையாகிய பூசைவிதியால் முன்னொருகாலத்தில்வழிபாடுசெய்து; ஊனமில்லறமனேகமுமுலகுய்யவைத்த= குற்றமற்ற அநேகதருமங்களையும் உலகத்தார் பிழைக்கும்பொருட்டுவளர்த்த ; மேன்மைபூண்டவப்பெருமையையறிந்தவாவிளம்பில்=மேன்மையடைந்த அந்தப்பெருமையை அறிந்தவாறு சொல்லப்புகின்.—எ-று. (சகூ)

வெள்ளிமால்வரைக் கயிலையில் வீற்றிருந் தருளித்
துள்ளுவார்புனல் வேணியா ரருள்செயத் தொழுது
தெள்ளுவாய்மையி னாகமத் திறனெலாந் தெரிய
உள்ளவாறுகேட் டருளினா ளுலகையா ளுடையாள்.

(இ-ள்.) வெள்ளிமால்வரைக்கயிலையில்வீற்றிருந்தருளி = பெருமைதங்கியவெள்ளிமலையாகிய திருக்கயிலையில் வீற்றிருந்து ; துள்ளுவார்புனல்வேணியாரருள்செயத்தொழுது = ததும்புகின்றமிக்க கங்கைநீர் நிறைந்தசடைமுடியையுடைய சிவபிரான் அருளிச்செய்யவணங்கி ; தெள்ளுவாய்மையினாகமத்திறனெலாந்தெரிய=தெளிந்தவாய்மையோடுகூடிய ஆகமங்களையெல்லாம்தெரியும்படி ; உள்ளவாறுகேட்டருளினாளுலகையாளுடையாள்=உள்ளபடி கேட்டறிந்தாள் உலகத்தையாளுகின்றமாதாவாகியஉமாதேவியார்.—எ-று. (ருo)

ஆகமம்வேதசாரமாதலின் தெள்ளுமாகமமென்றார். ஆகமத்திறனெலாமென்றதனால் ஆகமங்களையன்றி உபாகமங்களுங்கொள்க.

எண்ணிலாகம மியம்பிய விறைவர்தாம் விரும்பும்
உண்மையாவது பூசனை யெனவுரைத் தருள
அண்ணலார்தமை யர்ச்சனை புரியவா தரித்தாள்
பெண்ணினல்லவ ளாயின பெருந்தவக் கொழுந்து.

(இ-ள்.) எண்ணிலாகமமியம்பியவிறைவர்=(அக்காலத்துப்பிராட்டியார்பொருட்டு)அளவில்லாத ஆகமங்களை அருளிச்செய்த சிவபிரானார்; தாம்விரும்பும் உண்மையாவது பூசனையெனவுரைத்தருள = அவ்வாகமசாரமாய்த் தாம்விரும்பத்தக்கஉண்மைநெறியாவது அருச்சனையேயென்றுஅருளிச்செய்ய (அதைத்திருவுள்ளத்தடைத்து); அண்ணலார்தமையர்ச்சனைபுரியவாதரித்தாள்=சிவபிரானைப்பூசைசெய்தற்குவிருப்பமுற்றாள்; பெண்ணினல்லவளாயினபெருந்தவக்கொழுந்து=தெய்வமாதர்களுள் உயர்ந்தவளாகிய பெரியதவத்துக்குக்கொழுந்துபோல்வாள்.—எ-று. (௫௧)

வேறு.

நங்கையுண்ணிறை காதலைநோக்கி நாயகன்றிரு வுள்ளத்துமகிழ்ந்தே, அங்கணெய்திய முறுவலுந்தோன்ற வடுத்ததென்கொனின் பாலென்றுவினவ, இங்குநாதநீ மொழிந்தவாகமத்தி னியல்பினுலுனை யர்ச்சனை புரியப், பொங்குகின்றதென் னுசையென்றிறைஞ்சிப் போகமார்த்தபூண் முலையினள்போற்ற.

(இ-ள்.) நங்கையுண்ணிறைகாதலைநோக்கி=பிராட்டியாரது திருஉள்ளத்தில்நிறைந்த விருப்பத்தைப்பார்த்து; நாயகன்றிருவுள்ளத்துமகிழ்ந்து=சிவபிரான்திருவுள்ளத்துமகிழ்கூர்ந்து; அங்கணெய்தியமுறுவலுந்தோன்ற=அச்சமயத்துதித்த புன்முறுவலும் விளங்க; அடுத்ததென்கொனின் பாலென்றுவினவ = உன்னிடத்து நிகழ்ந்தவிருப்பம் யாதென்றுவினவ; இங்குநாதநீமொழிந்தவாகமத்தின்=இப்பொழுது சுவாமியே நீர் அருளிச்செய்த திவ்வியாகமங்களில்விதித்த; இயல்பினுலுனையர்ச்சனைபுரிய=முறைமையால் உம்மைப்பூசிக்க;பொங்குகின்றதென்னுசையென்றிறைஞ்சி=என்னுசைமேற்கொண்டதென்று வணங்கி; போகமார்த்தபூண்முலையினள்போற்ற=போகம் அமைந்த ஆபரணங்களையணிந்த தனங்களையுடைய உமாதேவியார்துதிக்க.—எ-று. (௫௨)

தேவதேவனு மதுதிருவுள்ளஞ் செய்துதென்றிசை மிக்கசெய்தவத்தால், யாவருந்தனை யடைவதுமண்மே லென்றுமுள்ளது காஞ்சிமற்றதனுண், மாவமர்ந்தநம் மிருக்கையிலணைந்து மன்னுபூசனை மகிழ்ந்துசெய்வாயென், றேவவெம்பெரு மாட்டியும்பிரியா விசைவுகொண்டெழுந் தருளுதற்கிசைந்தாள்.

(இ-ள்.) தேவதேவனுமதுதிருவுள்ளஞ்செய்து=தேவர்களுக்கெல்லாம் நாயகராகிய சிவபிரானும் பிராட்டியார்மொழியைத்திருவுள்ளங்கொண்டு; தென்றிசைமிக்கசெய்தவத்தால்=தெற்குத்திக்கானது செய்தமிகுந்ததபோபலத்தால்;

யாவருந்தனையடைவது=பிரமாதிதேவர்கள் யாவரும் தம்மையடையத்தக்கதும்; மண்மேல் என்றுமுள்ளதுகாஞ்சி=நிலவுலகத்தில் என்றும் அழியாமலிருப்பதுமா யுள்ளது காஞ்சிபுரமாம் ; அதனுள்மாவமர்ந்த நம்மிருக்கையிலணைந்து=அக்கா ஞ்சிபுரத்தில் மாமரத்தின்கீழிருக்கும் நம்மாலயத்திற்கு வந்து ; மன்னுபூசனைமகி ழ்ந்துசெய்வாயென்றேவ=உறுதிப்பாடான பூசையைவிரும்பிச்செய்வாயென்று கட்டளையிட ; எம்பெருமாட்டியும் பிரியாவிசைவுகொண்டு=எம்பெருமாட்டியா கியஉமாதேவியாருஞ்சுவாமியைப்பிரியக்கூடாதஉடன்பாட்டைக்கைக்கொண்டு; எழுந்தருளுதற்கிசைந்தாள்=அவ்விடத்திற்கு எழுந்தருளும்படிசம்மதித்தாள்.— எ-று. மற்று-அசை. இவ்விரண்டுங்குளகம். (ருஙு)

ஏதமில்பல யோனியெண்பத்து நான்குநூறு யிரபேதில்வைத்த,பே தமும்புரந் தருளுமக்கருணைப் பிரான்மொழிந்தவா கமவழிபேணிப், போதுநீர்மையிற் றொழுதனள்போதப் பொருப்பில்வேந்தனும் விருப் பில்வந்தெய்தி, மாதவம்புரிந் தருளுதற்கமைந்த வளத்தொடும்பரி சனங் களைவிடுத்தான்.

(இ-ள்.) ஏதமில்பலயோனி அதில்வைத்த எண்பத்துநான்குநூறுயிரபே தமும் = (உமாதேவியார்) குற்றமற்ற பலவகைப்பட்ட யோனிகளாய் அவ்யோ னிகளில்வகுக்கப்பட்டஎண்பத்துநான்குநூறுயிரம்பேதங்களையும்; புரந்தருளுமக் கருணைப்பிரான்மொழிந்த=பாதுகாத்தருளும்கிருபையையுடைய சிவபிரான் அ ருளிச்செய்த ; ஆகமவழிபேணி=சைவாகமவிதியை அனுசரித்து ; போதுநீர்மை யிற்றொழுதனள்போத= (தவஞ்செய்யக்கருதிப்) போகவேண்டுமென்னுங்குணத் தோடுசிவபிரானைவணங்கிப்புறப்பட ; பொருப்பில்வேந்தனும்விருப்பில்வந்தெய்தி =(அதுணர்ந்து)மலையரையனும் விருப்பத்தோடுவந்து ; மாதவம்புரிந்தருளுதற் கமைந்த = மகத்தாகிய தவத்தைச்செய்வதற்கு அமைந்த ; வளத்தொடும்பரிசன ங்களைவிடுத்தான்=சம்பத்தோடு பரிசனங்களை அனுப்பினன்.—எ-று. (ருச)

துன்னுபல்லுயிர் வானவர்முதலாச் சூழ்ந்துடன்செலக் காஞ்சியில ணையத், தன்னைநேர்வரும் பதுமமாநாகந் தம்பிராட்டிதா டலைமிசைவை த்தே, அன்னையாயுல கனைத்தையுமீன்று யடியனேனுறை பிலமதனிடை யே, மன்னுகோயில்கொண் டருளுவாயென்ன மலைமடந்தைமற் றதற்க ருள்புரிந்து.

(இ-ள்.) மலைமடந்தைதுன்னுபல்லுயிர்வானவர்முதலா=உமாதேவியா ர்நெருங்கியதேவர்கள் முதலாகச்சொல்லப்பட்டபலஉயிர்வர்க்கங்கள் ; சூழ்ந்துட ன்செலக்காஞ்சியிலணைய=சூழ்ந்துதன்னுடன்வரும்படி காஞ்சிபுரத்தில்வர ; த ன்னைநேர்வரும்பதுமமாநாகம்=தனக்குத்தானே ஒப்பானபதுமமென்னும் மாநா கமானது ; தம்பிராட்டிதாடலைமிசைவைத்து=தங்கள்பிராட்டியாரது திருவடிக ளைச்சிரசின்மேற்சூடி ; அன்னையாயுலகனைத்தையுமீன்று=தாயாகி எல்லாவுல கத்தையும்பெற்றமுதல்வியே ; அடியேனுறைபிலமதனிடையே=அடியேன்வாச ஞ்செய்கின்ற பிலத்தினிடத்திலே ; மன்னுகோயில்கொண்டருளுவாயென்ன =

நிலைபெற்றதிருக்கோயில்கொண்டருளவேண்டுமென்றுபிரார்த்திக்க ; அதற்கருள் புரிந்து=அதற்குச்சம்மதித்து.—எ-று. ஏ-மற்று-அசை. (௫௫)

அங்குமண்ணுல கத்துயிர்தழைப்ப வளவிலின்பத்தி னருட்கருவி ருத்தித், திங்கடங்கிய புரிசடையார்க்குத் திருந்துபூசனை விரும்பினள் செய்ய, எங்குநாடவுந் திருவிளையாட்டாலேகமாமுத லெதிர்ப்படாதொ ழியப், பொங்குமாதவஞ் செய்துகாண்பதற்கே புரிவுசெய்தனள் பொன் மலைவல்லி.

(இ-ள்.) அங்குமண்ணுலகத்துயிர்தழைப்ப=அக்காஞ்சிபுரத்தில் நிலவு லகத்திலுள்ள ஆன்மகோடிகளெல்லாம் விருத்தியடையும்படி ; அளவிலின்பத் தினருட்கருவிருத்தி=அளவுபடாதஇன்பத்துக்கேதுவான கிருபையென்னுங்கா ரணத்தைத்திருவுள்ளத்தடைத்து ; திங்கடங்கியபுரிசடையார்க்கு=இளம்பிறை யைத்தரித்தசடைமுடியையுடைய சிவபிரானுக்கு ; திருந்துபூசனைவிரும்பினள் செய்ய=திருத்தமாகிய பூசையைவிரும்பிச்செய்ய ; எங்குநாடவுந்திருவிளையாட் டால்=எவ்விடத்துந்தேடவும் ஓர் திருவிளையாட்டுக்காரணமாய் ; ஏகமாமுதலெ திர்ப்படாதொழிய=தனக்குவேறொருமுதல்வரையில்லாதசிவபிரான் காட்சிகொ டாமலொழிய ; பொங்குமாதவஞ்செய்துகாண்பதற்கு=பொலிவினையுடைய மகத் தாகிய தவத்தைச்செய்து காணும்பொருட்டு ; புரிவுசெய்தனள் பொன்மலைவல்லி =விருப்பமுற்றாள் இமவானது புத்திரியாகிய உமாதேவி.—எ-று. ஏ-அசை.(௫௬)

உமாதேவிதவஞ்செய்தற்குக்காரணம் உயிர்களின்மேல்வைத்தகருணையே யன்றிப்பிறிதில்லை என்பார் அருட்கருவிருத்தி என்றார். அக்கருணையாவது தாம் வழிபடல்போல் பிறரும் வழிபடுக எனக்காட்டும் இரக்கமிகுதியேயாம்.

நெஞ்சமீசனைக் காண்பதேவிரும்பி நிரந்தரந்திரு வாக்கினினிகழ்வ
தஞ்செழுத்துமே யாகவாளுடைய வம்மைசெம்மலர்க் கைகுவித்தருளித்
தஞ்சமாகிய வருந்தவம்புரியத் தரிப்பரேயவ டனிப்பெருங்கணவர்
வஞ்சநீக்கிய மாவின்மூலத்தில் வந்துதோன்றினார் மலைமகள்காண.

(இ-ள்.) ஆளுடையவம்மை=எம்மையாட்கொள்ளும் இயல்பினையுடை யபார்வதியார் ; நெஞ்சமீசனைக்காண்பதேவிரும்பி=தமதுள்ளத்தில் சிவபிரானைக் காண்பதே கருத்தாக விருப்பமுற்று ; நிரந்தரந்திருவாக்கினினிகழ்வதஞ்செழுத் துமேயாக=எப்பொழுதுந்திருவாயில்உச்சரிக்கப்படுவதுதிருவைந்தெழுத்தேயாக; செம்மலர்க்கைகுவித்தருளி=சிவந்ததாமரைமலர்போலும் திருக்கரங்களைக்கூப் பித்தொழுது ; தஞ்சமாகியவருந்தவம்புரிய=தமக்குப்பற்றுக்கோடாகிய அரியத வத்தைச்செய்ய ; தரிப்பரேயவடனிப்பெருங்கணவர்=அப்பிராட்டியாரது ஒப்ப ற்ற நாயகராகிய சிவபிரான் தரிக்கமாட்டார் ; வஞ்சநீக்கியமாவின்மூலத்தில் = காட்சிகொடாதிருந்தமறைப்பை நீக்கி அந்த மாமரத்தினடியில் ; வந்துதோன்றி னார்மலைமகள்காண = வந்து சிவலிங்கரூபமாய்வெளிப்பட்டார் உமாதேவியார் காணும்படி.—எ-று. (௫௭)

கண்டபோதிலப் பெருந்தவப்பயனுங் கம்பமேவிய தம்பெருமானை, வண்டுலாங்குழற் கற்றைமுன்றாழ வணங்கிவந்தெழு மாசைமுன்பொங் கக், கொண்டகாதலின் விருப்பளவின்றிக் குறித்தபூசனை கொள்கைமே ற்கொண்டு, தொண்டையங்கனி வாயுமைநங்கை தூயவர்ச்சனை தொடங் குதல்புரிவாள்.

(இ-ள்.) அப்பெருந்தவப்பயனும்=தாம்செய்த பெரியதவத்திற்குப் பய னாயிருக்கும் ; கம்பமேவியதம்பெருமானைக்கண்டபோதில்=திருவேகம்பத்தைய டைந்தநமது பெருமானாகிய சிவபிரானைத்தரிசித்தமாத்திரத்தே ; வண்டுலாங்கு ழற்கற்றைமுன்றாழவணங்கி=வண்டுகள்உலாவுகின்ற கேசங்களின்கற்றையானது முன்னேதாழும்படிவணங்கி ; வந்தெழுமாசைமுன்பொங்க=தம்முள்ளத்துதித்த ஆசையானது முற்பட்டுப்பொங்க ; கொண்டகாதலின்விருப்பளவின்றி=மேம்ப ட்டபெருங்காதலினாலாகிய விருப்பானது அளவில்லாமல் ; குறித்தபூசனைகொ ள்கைமேற்கொண்டு=தாம்கருதிய சிவபூசையாகிய கொள்கையைஅதிகரித்து ; தொண்டையங்கனிவாயுமைநங்கை=கொவ்வைக்கனிபோலும் வாயையுள்ளஉமா தேவியார் ; தூயவர்ச்சனைதொடங்குதல்புரிவாள்=பரிசுத்தமாகிய அர்ச்சனையை ச்செய்யத்தொடங்குவாள்.—எ-று. (ருஅ)

உம்பர்நாயகர் பூசனைக்கவர்தா முரைத்தவாகமத் துண்மையேதலைநி ன், றெம்பிராட்டியர்ச் சனைபுரிவதனுக் கியல்பில்வாழ்திருச் சேடியரான, கொம்பனார்கள்பூம் பிடகைகொண்டணையக் குலவுமென்றளி ரடியிணை யொதுங்கி, யம்பிகாவன மாந்திருவனத்தி லானதூநறும் பூமலர்கொய் தாள்.

(இ-ள்.) உம்பர்நாயகர்பூசனைக்கு=தேவர்களுக்குநாயகராகியசிவபிரான் தம்மைப்பூசிக்குநிமித்தம்; அவர்தாமுரைத்தவாகமத்துண்மையேதலைநின்று=அவ ர்அருளிச்செய்த ஆகமத்திற்கூறும்உண்மையாகிய விதிவழியேநின்று ; எம்பிராட் டியர்ச்சனைபுரிவதனுக்கு=எமதுபிராட்டியாகியஉமாதேவியார்பூசைசெய்வதற்கு; இயல்பில்வாழ்திருச்சேடியரானகொம்பனார்கள் = இயல்பினால் வாழ்கின்றதிருத் தோழியர்களானகமலினி அனிந்திதைஎன்பவர்கள் ; பூம்பிடகைகொண்டணைய =பூக்கூடையைஎடுத்துக்கொண்டுசெல்ல ;குலவுமென்றளிரடியிணையொதுங்கி= விளங்குகின்ற மென்மையாகியதளிர்போன்றபாதங்கள் அடிபெயர்க்குங்கால்பர லுக்கொதுங்கிநடந்து ; அம்பிகாவனமாந்திருவனத்தில்=அம்பிகாவனமென்கின் றதிருநந்தனவனத்தில் ; ஆனதூநறும்பூமலர்கொய்தாள்=உதித்ததூய்மையானந றுமணங்கமழும்பொலிவாகிய மலர்களைக்கொய்தாள்.—எ-று. (ருகூ)

கொய்துபன்மலர் கம்பைமாநதியிற் குலவுமஞ்சன நிலவுமெய்ப்பூ ச்சு, நெய்தருங்கொழுந் தூபதீபங்க ணிறைந்தசிந்தையி னீடியவன்பின், மெய்தரும்படி வேண்டினவெல்லாம் வேண்டுபோதினி லுதவமெய்ப்பூ சை, யெய்தவாகம விதியெலாஞ்செய்தா ளுயிர்கள்யாவையு மீன்றவெம் பிராட்டி.

(இ-ள்.) கொய்துபன்மலர்=பலசாதிமலர்களையும்பறித்து;கம்பையாற்றினிற்குலவுமஞ்சனம்=கம்பையாற்றுநீரில்விளக்கமான திருமஞ்சனத்தையும் ; நிலவுமெய்ப்பூச்சு=விளங்குகின்றதிருமேனியிற்றரிக்குஞ்சந்தனக்காப்பையும் ;நெய்தருங்கொழுந்தூபதீபங்கள்=நறுநெய்யாலமைத்தகொழுவிய தூபதீபங்களையும் ; நிறைந்தசிந்தையினீடியவன்பின்=நிறைவடைந்தமனதினுதித்தஅன்பினால் ; மெய்தரும்படிவேண்டினவெல்லாம்=மெய்ம்மையான பூசைப்படித்தரங்களுக்குவேண்டியஉபகரணங்களையெல்லாம் ; வேண்டுபோதினிலுதவ=பிராட்டியார்வேண்டியபொழுது ஏவலாளர்கள்கொடுக்க ; மெய்ப்பூசையெய்த ஆகமவிதியெலாஞ்செய்தாள்=மெய்ம்மையானபூசையை ஆகமத்திற்கூறும் விதிகளைவழுவாமல்முற்றச்செய்தாள் ; உயிர்கள்யாவையுமீன்றவெம்பிராட்டி=எல்லாஉயிர்களையும்பெற்றமாதாவாகியஎமதுபிராட்டியார்.--எ-று. (௯௦)

கரந்தரும்பய னிதுவெனவுணர்ந்து கம்பமேவிய வும்பர்நாயகர்பா
னிரந்தகாதல்செ யுள்ளத்தளாகி நீடுநன்மைக ளியாவையும்பெருக
வரந்தரும்பொரு ளாமலைவல்லி மாறிலாவகை மலர்ந்தபேரன்பாற்
சிரம்பணித்தெழு பூசைநாடோறுந் திருவுளங்கொளப் பெருகியதன்றே.

(இ-ள்.) கரந்தரும்பயனிதுவெனவுணர்ந்து=கரத்தால் வரும்பயன்இப்பூசைசெய்யும்பேறேஎன்றறிந்து ;கம்பமேவியவும்பர்நாயகர்பால்=ஏகம்பத்தில்வீற்றிருக்கும் தேவர்க்கதிபராகிய சிவபிரானிடத்து ; நிரந்தகாதல்செயுள்ளத்தளாகி=பரந்தவிருப்பத்தைச்செய்கின்ற உள்ளமுடையவளாய் ; நீடுநன்மைகளியாவையும்பெருக=உயர்ந்தநன்மைகளெல்லாமோங்க ; வரந்தரும்பொருளாமலைவல்லி=யாவர்க்கும்வரத்தைக்கொடுக்குங்கருணைவடிவாகிய உமாதேவியார் ; மாறிலாவகைமலர்ந்தபேரன்பால்=மாறுபாடில்லாமல் விகசித்த பேரன்பினால்; சிரம்பணித்தெழுபூசைநாடோறும்=நெடுங்காலம் செய்யப்பட்டுவராநின்றபூசனையானதுநாள்தோறும் ; திருவுளங்கொளப்பெருகியது=சிவபிரான்திருவுள்ளத்துக்குப்பொருந்தும்படிவிருத்தியாயிற்று.—எ-று. அன்று-ஏ-அசை. (௯௧)

நாதரும்பெரு விருப்பொடுநயந்து நங்கையர்ச்சனை செய்யுமப்பொழுதிற், காதன்மிக்கவோர் திருவிளையாட்டிற் கனங்குழைக்கருள் புரிந்திடவேண்டி, யோதமார்கட லேழுமொன்றாகி யோங்கிவானமு முட்படப்பரந்து, மீதுசெல்வது போல்வரக்கம்பை வெள்ளமாந்திரு வுள்ளமுஞ் செய்தார்.

(இ-ள்.) நாதரும்பெருவிருப்பொடுநயந்து=திருவேகம்பரும் மிக்க காதலோடுஅப்பூசனையைவிரும்பி; நங்கையர்ச்சனைசெய்யுமப்பொழுதில்=பிராட்டியார்தம்மைப்பூசைசெய்யும்பொழுது ; காதன்மிக்கவோர்திருவிளையாட்டில்=அப்பிராட்டியார் மேல்விருப்பம்மீக்கூர்ந்தஓர்திருவிளையாடலேதுவாக ; கனங்குழைக்கருள்புரிந்திடவேண்டி=கனத்தகுண்டலங்களை யணிந்த உமாதேவியாருக்கு அருள்செய்யவிரும்பி ; ஓதமார்கடலேழுமொன்றாகி=பெருக்குநிறைந்த ஏழுசமுத்திரமும் ஒன்றுபட்டு ; ஓங்கிவானமுமுட்படப்பரந்து=உயர்ந்துவிண்ணுலகமும் தன்

ளடங்கப்பிரவாகித்து ; மீதுசெல்வதுபோல்வர = மேற்கொண்டுவருவதுபோல்வருதற்கு ; கம்பைவெள்ளமாந்திருவுள்ளமுஞ்செய்தார்=கம்பாநதியானதுபிரவாகமாகும் திருவுள்ளத்தையுஞ்செய்தருளினார்.—எ-று. (சுஉ)

அண்ணலாரருள் வெள்ளத்தைநோக்கி யங்கயற்கண்ணி தம்பெருமான்மேல், விண்ணெலாங்கொள வரும்பெருவெள்ள மீதுவந்துறு மெனவெருக்கொண்டே, யுண்ணிலாவிய பதைப்புறுகாத லுடன்றிருக்கையாற் றடுக்கவில்லாமை, தண்ணிலாமலர் வேணியினாரைத்தழுவிக்கொண்டன டன்னையேயொப்பாள்.

(இ-ள்.) அண்ணலாரருள்வெள்ளத்தைநோக்கியங்கயற்கண்ணி= சிவபிரான் திருவருளால்வரும்கம்பைநதியின்பிரவாகத்தைஅழகியகயல்போலுங்கண்களையுடைய உமாதேவியார்பார்த்து ; விண்ணெலாங்கொளவரும்பெருவெள்ளம்=ஆகாயமுழுதும் வியாபிக்கும்படி வருகின்றபெரியவெள்ளமானது ; மீதுதம்பெருமான்மேல்வந்துறுமெனவெருக்கொண்டு= மேற்கொண்டுதமதுமுதல்வரிடத்துவருமென்றுஅச்சமுற்று; உண்ணிலாவியபதைப்புறுகாதலுடன்=உள்ளத்திற்கலந்தபதைப்பினாலெழும்ஆசையோடும் ; திருக்கையாற்றடுக்கவில்லாமை=திருக்கரங்களாற்றடுக்கஅவ்வெள்ளம்தடைபடாமையால் ; தண்ணிலாமலர்வேணியினாரை=குளிர்ந்தசந்திரன்விளங்கும்சடையையுடையமுதல்வரை ; தழுவிக்கொண்டனடன்னையேயொப்பாள்=தழுவிக்கொண்டாள் தனக்குத்தானேஒப்பானஉமாதேவியார்—எ-று. ஏ-அசை. (சுரு)

மலைக்குலக்கொடி பரிவுறுபயத்தான் மாவின்மேவிய தேவர்நாயகரை, முலைக்குவட்டொடு வளைக்கையானெருக்கி முறுகுகாதலா விறுகிடத்தழுவச், சிலைத்தனித்திரு நுதறிருமுலைக்குஞ் செந்தளிர்க்கரங் களுக்குமெத்தெனவே, கொலைக்களிற்றுரி புனைந்ததம்மேனி குழைந்துகாட்டினார் விழைந்தகொள்கையினார்.

(இ-ள்.) மலைக்குலக்கொடிபரிவுறுபயத்தால் = மலையரையன்குலத்தில் அவதரித்தஉமாதேவியார்(இந்நதியால் சுவாமிக்குஇடையூறுண்டாமென்னும்) துன்பத்தோடுகூடியஅச்சத்தால் ; மாவின்மேவியதேவர்நாயகரை=மாமரநீழலில்வீற்றிருந்தருளும்தேவர்க்கதிபரை ; முலைக்குவட்டொடுவளைக்கையானெருக்கி=முலையாகியமலைச்சிகரங்களோடுவளையலையணிந்தகைகளினால்நெருக்கி ; முறுகுகாதலாவிறுகிடத்தழுவ=முறுகிவளரும்பேரன்பால் இறுகும்படிதழுவுங்கால்; சிலைத்தனித்திருநுதறிருமுலைக்கும்=விற்போல்வளைந்தஒப்பற்றநெற்றியையுடையஉமாதேவியார்திருமுலைகளுக்கும் ; செந்தளிர்க்கரங்களுக்குமெத்தென=சிவந்ததளிர்போலுந்திருக்கரங்களுக்கும்மெத்தென்றிருக்கும்படி ; கொலைக்களிற்றுரிபுனைந்ததம்மேனி=கொலைத்தொழிலைச்செய்யும்யானையினதுஉரியைப்போர்த்ததமது திருமேனியை; குழைந்துகாட்டினார்விழைந்தகொள்கையினார்=குழையும்படிசெய்தார் அப்பிராட்டியார் பூசையைவிரும்பிய கொள்கையை யுடையசிவபிரான்.—எ-று. ஏ-அசை. (சுச)

கம்பர்காதலி தழுவமெய்குழையக் கண்டுநிற்பவுஞ் சரிப்பவுமான
உம்பரேமுதல் யோனிகளெல்லா முயிரும்யாக்கையு முருகியொன்றாகி
யெம்பிராட்டிக்கு மெல்லியரானா ரென்றுமேகம்ப ரென்றெடுத்தேத்த
வம்புலாமலர்நிறையவிண்பொழியக் கம்பையாறுமுன்வணங்கியதன்றே.

(இ-ள்.) கம்பர்காதலிதழுவமெய்குழையக்கண்டு=திருவேகம்பர் தமது நாயகியார் தழுவுங்காரணத்தால் திருமேனிகுழையப்பார்த்து; நிற்பவுஞ்சரிப்பவுமானவும்பரே முதல்யோனிகளெல்லாம்=இயங்கியற்பொருளும் நிலையியற்பொருளுமாகிய தேவர்முதல் எழுவகைப்பட்ட யோனிகளிலுள்ள உயிர்வர்க்கங்களும்; உயிரும்யாக்கையுமுருகியொன்றாகி=உடம்பும் உயிரும் உருகுதலால் ஒருதன்மைப்பட்டு; எம்பிராட்டிக்கு மெல்லியரானார்=எங்கள்பிராட்டியாருக்குத் தழுவக்குழைந்ததிருமேனியையுடையரானார்; என்றுமேகம்பரென்றெடுத்தேத்த=எந்நாளும் இத்திருவேகம்பரென்று எடுத்துத்துதிசெய்ய; வம்புலாமலர்நிறையவிண்பொழிய=வாசனைகமழும்பூக்களை ஆகாயம்நிறையும்படி தேவர்கள்சொரிய; கம்பையாறுமுன்வணங்கியது=கம்பையாறானது பிராட்டியார் திருமுன்(தான்செய்தகுற்றத்தைப் பொறுத்தருளும்படி தன்னுடைய நிசவுருவங்கொண்டு) வணங்கியது.—எ-று. அன்று. ஏ-அசை. (சுடு)

பூதியாகிய புனிதநீறாடிப் பொங்குகங்கைதோய் முடிச்சடைபுனைந்து, காதில்வெண்குழை கண்டிகைதாழக் கலந்தயோகத்தின் மருவியகருத்தால், ஆதிதேவனா ராயுமாதவஞ்செ யவ்வரங்கொலோ வகிலமீன்றளித்த, மாதுமெய்ப்பயன் கொடுப்பவேகொண்டு வளைத்தழும்புடன் முலைச்சுவடணிந்தார்.

(இ-ள்.) பூதியாகியபுனிதநீறாடி=மகதயிசுவரிய மெனக்கூறும்தூய்மையாகிய விபூதியைத்திருமேனியில் உத்தூளனமாகப்பூசிக்கொண்டு; பொங்குகங்கைதோய்முடிச்சடைபுனைந்து = பெருகுகின்ற கங்கைநதி தங்குதற்கிடமானசடைமுடியைக்கட்டிக்கொண்டு; காதில்வெண்குழைகண்டிகைதாழ=திருச்செவியில்வெண்மையாகிய சங்கக்குழையும் உருத்திராக்கமுந் தொங்கும்படி; கலந்தயோகத்தின்மருவியகருத்தால்=ஒருப்பட்ட சிவயோகத்தில் வீற்றிருந்த திருவுள்ளத்தோடு; ஆதிதேவனாராயுமாதவஞ்செய்=முதற்கடவுளாகியசிவபிரானார் அறிஞர்களால் ஆராயத்தக்க மகத்தாகிய தவத்தைச்செய்த; அவ்வரங்கொலோவகிலமீன்றளித்த = அவ்விசேடந்தானோ எல்லாவுலகத்தையும்பெற்றெடுத்த; மாதுமெய்ப்பயன்கொடுப்பவேகொண்டு=மாதாவாகிய உமாதேவியார்தன்திருமேனிப்பரிசவின்பத்தைக்கொடுக்கத்தாம் பெற்றுக்கொண்டு; வளைத்தழும்புடன்முலைச்சுவடணிந்தார்=அவர்வளைத்தழும்போடு முலைச்சுவட்டையுந் தரித்தருளினார்.—

ஆய்தல்=தாமும் அவ்வாறு தவஞ்செய்யவேண்டுமெனக்கருதுதல். பிரானைப்பிராட்டியார் தவங்காரணமாய்த்தழுவினாற்போலப்பிரானார்க்கும்அவர்திருமேனியைப் பரிசித்து வளைத்தழும்பும் முலைத்தழும்பும் பெறுதற்குஒர்தவமும் ஏதுவாகக் கூறியவாறு.

கோதிலாவமு தனையவண்முலைக்குக் குழைந்ததம்மண வாளநற்கோல
மாதுவாழவே காட்டிமுனின்று வரங்கள்வேண்டுவ கொள்கவென்றருள
வேதகாரண ராயவேகம்பர் விரைமலர்ச்செய்ய தாமரைக்கழற்கீழ்
ஏதநீங்கிய பூசனைமுடிந்த தின்மைதானறி விப்பதற்கிறைஞ்சி.

(இ-ள்.) கோதிலா வமுதனை யவண்முலைக்கு=குற்றமற்ற தேவர் அமுதத்தையொத்த பிராட்டியாரது திருமுலைகளுக்கு; குழைந்ததம் மணவாள நற்கோலம்=குழைவடைந்த தமது நன்மையாகிய மணவாளக் கோலத்தை; மாதுவாழவே காட்டி முனின்று=அப்பிராட்டியார் வாழ்வடையும்படி காட்டிக் காட்சிகொடுத்தருளி; வரங்கள் வேண்டுவ கொள்கவென்றருள=நீவேண்டிய வரங்களைப் பெற்றுக்கொள்வாயாக வென்று அருளிச்செய்ய; வேதகாரணராயவேகம்பர்=(பிராட்டியார்) வேதங்களால் எடுத்தோதும் முதற்கடவுளாகிய திருவேகம்பர்; விரைமலர்ச்செய்ய தாமரைக்கழற்கீழ்=வாசனை கமழும் செந்நிறமாகிய தாமரை மலர்போலும் திருவடிக்கீழ்; ஏதநீங்கிய பூசனை முடிந்ததின்மைதானறிவிப்பதற் கிறைஞ்சி=விதிக்குறை வில்லாத பூசையானது சாங்கமாக முடியாமையை அறிவிக்கும் பொருட்டு வணங்கி.—எ-று. (௧௭)

பிராட்டிக்கு அமுதம் உயர்பொருளன்றாயினும் உலகப்பொருள்களின் மிக்க சிறப்புடைமையின் உவமையாயிற்று. விதி வழுவாமற் செய்தலின் ஏதநீங்கிய பூசனை என்றார். முடிந்ததின்மை=பூசைக்குரிய உபசாரங்கள் முற்றுப்பெறாமை. உபசாரம்=பஞ்சோபசாரம் முதலியன.

அண்டர்நாயக ரெதிர்நின்றுகூறு மளவினாலஞ்சி யஞ்சலிகூப்பிக்,
கொண்டவிற்றையென் பூசனையின்னுங் குறைநிரம்பிடக் கொள்கவென்
றருள, வண்டுவார்குழன் மலைமகள்கமல வதனநோக்கிய மலர்க்கணெற்
றியின்மேன், முண்டநீற்றர்நின் பூசனையென்றுமுடிவதில்லைநம் பாலென
மொழிய.

(இ-ள்.) அண்டர் நாயக ரெதிர்நின்று கூறும்=தேவர்பிரானாகிய திருவேகம்பர் திருமுன்னேநின்று கூறுகின்ற; அளவினா லஞ்சியஞ்சலி கூப்பி=அவ்வளவில் அச்சமுற்றுக் கைகளை அஞ்சலியாகக் குவித்து; கொண்டவிற்றையென் பூசனையின்னும்=தேவரீர் ஏற்றுக்கொண்ட இற்றைநாட் பூசனையை இன்னும்; குறைநிரம்பிடக் கொள்கவென் றருள=குறையும் முற்றும்படி கொண்டருள வேண்டுமென்று பிரார்த்திக்க; வண்டுவார்குழன் மலைமகள் கமல வதன நோக்கிய=வண்டுகள் விழுகின்ற நீண்ட அளகத்தையுடைய பிராட்டியாரது தாமரை மலர்போலும் முகத்தைப்பார்த்த; மலர்க்கணெற்றியின் மேன்முண் டநீற்றர்=நெற்றியின் மேல்மலர்ந்த கண்ணையும் திரிபுண்டரமாக அணிந்த விபூதியையுமுடைய ஏகாம்பர நாதர்; நின்பூசனையென்று முடிவதில்லை நம்பாலெனமொழிய=உன் பூசையானது எந்நாளும் நம்மிடத்து முடிந்துவிடுகிறதில்லை எப்பொழுதும் இருக்கும் என்று கட்டளையிட.—எ-று. (௧௮)

மாறிலாதவிப் பூசனையென்று மன்னவெம்பிரான் மகிழ்ந்துகொண் டருளி, யீறிலாதவிப் பதியினுளெல்லா வறமும்யான்செய வருள்செய வேண்டும், வேறுசெய்வினை திருவடிப்பிழைத்த லொழியவிங்குளார் வேண்டினசெயினும், பேறுமாதவப் பயன்கொடுத்தருளப் பெறவும்வே ண்டுமென் றனள்பிறப்பொழிப்பாள்.

(இ-ள்.) மாறிலாதவிப்பூசனையென்றுமன்ன=கேடடையாய்ச்சிறப்பிற் றுய இப்பூசனையானது எந்நாளும் நிலைபெறும்படி; எம்பிரான்மகிழ்ந்து கொண் டருளி=எமதுபிரானே தேவரீர் திருவுள்ளத்து மகிழ்கூர்ந்தருளி; ஈறிலாதவிப் பதியினுளெல்லாவறமும்=பிரளயத்தும் அழியாத இந்நகரத்தில் முப்பத்திரண்ட றங்களையும்; யான்செயவருள் செயவேண்டும்=அடியேன் செய்யும் படிகிருபை செய்யவேண்டும்; இங்குளார்வேறுசெய்வினை திருவடிப்பிழைத்தலொழியவேண் டினசெயினும்=இந்நகரத்தின்க ணுள்ளார்விலக்கியவாகிய தொழில்கள்திருவடி ப்பிழையல்லாதவேண்டிய தீமைகளைச் செய்வாராயினும்; பேறுமாதவப்பயன் கொடுத்தருளப்பெறவும் வேண்டு மென்றனள் பிறப்பொழிப்பாள்=அத்தீமைக்கு ப் பெறும்பேறாக அவருக்குப்பெரிய தவப்பயனைக் கொடுத்து அருள்செய்யவும் வேண்டுமென்றருளிச்செய்தாள் உயிர்களின் பிறவித்துன் பத்தை நீக்கியருள்பவ ளாகிய உமாதேவியார்.—எ-று. இம்மூன் றுங்குளகம். (௬௯).

சிவபூசை எல்லா அறங்களினுஞ் சிறந்து கேடின்றிநிற்றலின் மாறிலா என்றார் சிவநிந்தை வேதாகம நிந்தைமுதலியன. எல்லாத்தீவினைகளிலும் உய்தி யில்குற்றமாகலின் அது திருவடிப்பிழையென விலக்கப்பட்டது. "பிழைப்பனு கிலுந் திருவடிபிழையேன்" என்னுந் தேவாரத்தானும் உணர்க. விதிக்குவேறாக லின் விலக்கியவற்றைவேறுசெய்வினை என்றார்.

விடையின்மேலவர் மலைமகள்வேண்ட விரும்புபூசனை மேவிவீற்றி ருந்தே, யிடையறுவற மாக்கும்வித்தாக விகபரத்திரு நாழிநெல்லளித் துக், கடையராகியு முயர்ந்தவராயுங் காஞ்சிவாழ்பவர் தாஞ்செய்தீவினை யுந், தடைபடாதுமெய் நெறியடைவதற்காந் தவங்களாகவு முவந்தருள் செய்தார்.

(இ-ள்.) விடையின்மேலவர் மலைமகள்வேண்ட=இடபவாகனத்தின்மேல் வீற்றிருந்தருளும் பிரானார் உமாதேவியார் வேண்டிக்கொள்ள; விரும்புபூசனை மேவிவீற்றிருந்து=அவர்விரும்பிச்செய்யும் பூசையை ஏற்றுக்கொண்டு அங்குவீ ற்றிருந்தருளி; இடையறுவறமாக்கும் வித்தாக=நீங்காத முப்பத்திரண்டறங்க ளை ஆக்குதற்குக்காரணமாக; இகபரத்திருநாழிநெல்லளித்து=இகத்துக்கும் பரத் துக்கும் இருநாழிநெல்லைக்கொடுத்து; கடையராகியு முயர்ந்தவராயும் = கீ ழோராயும்மேலோராயும்; காஞ்சிவாழ்பவர் தாஞ்செய்தீவினையும்=காஞ்சிநகர த்தில் வாழ்கின்றவர்கள் தாங்கள்செய்கின்ற பாவங்களும்; தடைபடாது மெய் நெறியடைவதற்காம்=தடையின்றி வீடடைவதற்கேதுவான; தவங்களாகவுமு

வந்தருள்செய்தார் = தவங்களாயிருக்கவும் மகிழ்ந்து வரங்கொடுத்தருளினார். ஏ-று. ஏ-அசை. (எ0)

எண்ணரும்பெரு வரங்கண்முன்பெற்றங் கெம்பிராட்டிதம் பிரான் மகிழ்ந்தருள, மண்ணின்மேல்வழி பாடுசெய்தருளி மனையறம்பெருக் குங் கருணையின, னண்ணுமன்னுயிர் யாவையும்பல்க நாடுகாதலி னீடியவாழ் க்கைப், புண்ணியத்திருக் காமக்கோட்டத்துப் பொலியமுப்பதோ டிர ண்டறம்புரக்கும்.

(இ-ள்.) அங்கெம்பிராட்டி எண்ணரும் பெருவரங்கள்முன்பெற்று = அவ்விடத்து எமதுபிராட்டியாராகிய உமாதேவியார் யாவராலும் அளவிடக்கூடாத பெரியவரங்களை முன்னேபெற்றுக்கொண்டு ; தம்பிரான்மகிழ்ந்தருள மண்ணின் மேல்வழிபாடுசெய்தருளி = தமதுபிரானார் மகிழ்ந்தருளும்படி காஞ்சிநகரத்தில் பூசித்து; மனையறம் பெருக்குங்கருணையினால்=இல்லறதருமத்தை வளர்க்கவேண் டுமென்னுங் கிருபையினால்; நண்ணுமன்னுயிர் யாவையும்பல்க = உடம்போடு கூடிய நிலைபெற்ற சீவகோடிகளெல்லாம் விருத்தியாகும்படி ; நாடுகாதலினீடிய வாழ்க்கை = கருதிய விருப்போடு நீட்டித்து வாழுதற்குரிய (இடமாகிய) ; புண்ணியத்திருக் காமக்கோட்டத்து=புண்ணியவடிவான காமக்கோட்டத்தில்; பொலியமுப்பதோ டிரண்டறம்புரக்கும் = பொலிவடையும்படி முப்பத்திரண் டறங்களையும் வளர்ப்பாள்.—எ-று. (எக)

அலகினீடவத் தறப்பெருஞ்செல்வி யண்டமாந்திரு மனைக்கிடுந் தீப, முலகில்வந்துறு பயனறிவிக்க வோங்குநாண்மலர் மூன்றுடனொ ன்று, நிலவவாண்டினுக் கொருமுறைசெய்யு நீடுதொன்மையா னிறைந் தபேருலக, மலர்பெருந்திருக் காமக்கோட்டத்து வைத்தநல்லற மன்ன வேமன்னும்.

(இ-ள்.) அலகினீடவத் தறப்பெருஞ்செல்வி = அளவிடற்கரிய மிக்க தவத்தையுடைய அறத்தை வளர்க்கும் பெரிய பிராட்டியார் ; அண்டமாந்திரு மனைக்கிடுந்தீபம்=பிரமாண்டமாகிய திருமாளிகைக்கு இடப்பட்ட விளக்காகிய (சோமன்சூரியன்அங்கிஎன்னும்முச்சுடரும்); உலகில்வந்துறுபயனறிவிக்க=அப் பிராட்டியார் நிலவுலகத்தில் வந்தபயனை அறிவிக்கும்படி ; ஓங்குநாண்மலர் மூன்றுடனொன்று = உயர்ந்த புதிதான நீலமலர்கள் மூன்றோடுகூடிய ஒரு பூவானது ; நிலவவாண்டினுக் கொருமுறைசெய்யும் = விளங்கும்படி ஓராண் டிற்கு ஓர்தரம் முறையாகமலரும் ; நீடுதொன்மையா னிறைந்தபேருலகம் = நீட் டித்த பழமையினால் நிறைவடைந்த பெரிய நிலவுலகத்து ; மலர்பெருந்திருக் காமக்கோட்டத்து = விளங்கிய பெருமையாகிய காமக்கோட்டத்தின் கண் ; வைத்தநல்லற மன்னவேமன்னும் = வைக்கப்பட்ட நல்லறமானது ஓங்கும்படி வீற்றிருந்தருளும்.—எ-று. (எஉ)

காமக்கோட்டத்து ஒளியுடைய நீலமலர் மூன்றொருதாளில் மலருமென் பதற்குப்பிரமாணம் "தோன்றுமலர்த்திபச்சுடர்" பார்த்து என்று இரட்டையர் உலாவிற்கூறியவாற்றானும் உணர்க.

தீங்குதீர்க்குநற் றீர்த்தங்கள்போற்றுஞ் சிறப்பினாற்றிருக் காமக் கோட்டத்தின், பாங்கின்மூன்றுல கத்தினுள்ளோரும் பரவுதீர்த்தமாம் பைம்புனற்கேணி, வாங்குதெண்டிரை வேலைமேகலைசூழ் வையகந்தனக் கெய்தியபடியா, யோங்குதன்வடிவாய்நிறைந்தென்று முள்ளதொன்றுல காணியென்றுளதால்.

(இ-ள்.) தீங்குதீர்க்குநற் றீர்த்தங்கள்போற்றுஞ்சிறப்பினால் = பாவங் களைப்போக்கும் நல்ல தீர்த்தங்களெல்லாம் வழிபடும் மேன்மையினால்; திருக் காமக்கோட்டத்தின் பாங்கில் = காமக்கோட்டத்தின் அருகில்; மூன்றுலகத்தி னுள்ளோரும்பரவு = மூவுலகத்தினுள்ளாரும் துதிக்கத்தக்க; தீர்த்தமாம் பைம் புனற் கேணியொன்று=தீர்த்தமாகிய பசிய நீரையுடைய ஒருதடாகம்; வாங்கு தெண்டிரை வேலைமேகலைசூழ் = வளைந்ததெள்ளிய அலைவீசுகின்ற கடலாகிய மேகலையானது சூழ்ந்த; வையகந்தனக்கெய்திய படியாயோங்கு = நிலவுலகத் தார்க்கு வீடடைவதற்கேதுவான ஏணியாயிருக்கும்; தன்வடிவாய்நிறைந்தென் றுமுள்ளது = தன் உருவத்தை யுடைத்தாய் நிறைவடைந்து எந்நாளும் உள்ள தாய்; உலகாணி யென்றுளது=உலகாணியென்று பெயர்பெற்றுள்ளது.--எ-று.

அந்தமின்றிநல் லறம்புரிந்தளிக்கு மம்மைதன்றிருக் காமக்கோட்ட த்தில், வந்துசந்திர சூரியர்மீது வழிக்கொளாததன் மருங்குபோதலினாற், சந்தமாதிர மயங்கியெம்மருங்குஞ் சாயைமாறிய தன்றிசைமயக்கம்,இந் தமாநிலத் தவரெலாங்காண வென்றுமுள்ளதொன் றின்றுமங்குளதால்.

(இ-ள்.) அந்தமின்றிநல் லறம்புரிந்தளிக்கும் = அழிவின்றி நல்ல தரு மங்களை எந்நாளும்செய்து உயிர்களைப்பாதுகாக்கும்; அம்மைதன்றிருக் காமக் கோட்டத்தில் = உமாதேவியார் வீற்றிருந்தருளும் காமக்கோட்ட மென்னும் ஆலயத்தில்; வந்துசந்திரசூரியர் = சந்திரசூரியர்கள்வந்து; மீதுவழிக்கொளா ததன் மருங்குபோதலினால் = மேலே செல்லாமல் அவ்வாலயத்தின் பக்கத்தில் போகின்றபடியால்; சந்தமாதிரமயங்கி = நல்லதிக்குகள் மாறுண்டு; எம் மருங்குஞ் சாயைமாறியதன் றிசைமயக்கம்=அதனால் எவ்விடத்தும் நிழல்கள் மாறியிருக்கின்ற அவ்வாலயத்தின்திசை மயக்கமானது; இந்தமாநிலத்தவரெ லாங்காண = இந்த பெரிய நிலவுலகத்தவர்களெல்லாங் காணும்படி; என்று முள்ளதொன் றின்றுமங்குளது = எந்நாளும் உள்ளதாகிய ஒன்று இன்றைக் கும் அவ்விடத்துள்ளது.—எ-று. ஆல்-அசை. (எச)

கன்னிநன்னெடுங் காப்புடைவரைப்பிற் காஞ்சியாந்திரு நதிக்கரை மருங்கு, சென்னியிற்பிறை யணிந்தவர் விரும்பு திருப்பெரும்பெய ரிருக் கையிற்றிகழ்ந்து, மன்னுவெங்கதிர் மீதெழும்போது மறித்துமேற்கடற்

றலைவிழும்போதுந், தன்னிழற்பிரி யாதவண்காஞ்சித் தானமேவியமேன்மையுமுடைத்தால்.

(இ-ள்.) கன்னிநன்னெடுங் காப்புடைவரைப்பு = உமாதேவியாரது நல்லபெருங் காவலையுடைய அக்காஞ்சிபுரம்; காஞ்சியாந்திரு நதிக்கரைமருங்கு =காஞ்சி என்றுகூறும் நதிக்கரையின் அருகே; சென்னிமேற்பிறை யணிந்தவர் விரும்பு = சிரசில் இளம்பிறையை அணிந்த சிவபிரான் விரும்பத்தக்க; திருப்பெரும்பெய ரிருக்கையில் = திருப்பெரும்பெயரிருக்கையென்னும் ஆலயத்து; திகழ்ந்துமன்னுவெங் கதிர்மீதெழும்போதும்=விளங்கி நிலைபெற்ற வெம்மையாகிய கிரணங்களைப்பரப்பும் சூரியன் உச்சியில் வரும்பொழுதும்; மறித்துமேற்கடற்றலைவிழும்போதும்=மீண்டு மேற்கடலினிடத்து மறையும் பொழுதும்; தன்னிழற்பிரியாத வண்காஞ்சித்தானமேவிய மேன்மையுமுடைத்து = தனதுநிழல் மேற்குக் கிழக்குகளிற் பிரிந்து நில்லாதவளவிய காஞ்சித்தானம் அங்கிருக்கும் பெருமையுமுடையது.—எ-று. ஆல் - அசை. வரைப்பின் என்புழி இன்-அசை.

கன்னிநன்னெடுங் காப்புடைவரைப்பில் என்பதற்குகாமாட்சியின் அங்கத்தில் உதித்த துர்க்கையின் காவலையுடைய நகரமென்றுரைத்தலு மொன்று. காஞ்சித்தானம்=காஞ்சி விருட்சம் இருக்குமிடம். காஞ்சிபுரம் என்றதற்கு காஞ்சிமரத்தையுடைய புரமென்றும், பிரமனுற் பூசிக்கப்பட்ட புரமென்றும், இருபொருளுண்டென்க.

மறைகளாற்றுதித் தருந்தவம்புரிந்து மாறிலாநிய மந்தலைநின்று
முறைமையால்வரும் பூசனைசெய்ய முனிவர்வானவர் முதலுயிரெல்லா
நிறையுமன்பினு லர்ச்சனைசெய்ய நீடுகாமங்க ளவரவர்க்கருளி
யிறைவர்தாமகிழ்ந்தருளியபதிக ளெண்ணிறந்தவத் திருநகரெல்லை.

(இ-ள்.) முனிவர் வானவர் முதலுயிரெல்லாம் = முனிவர்களும் தேவர்களும் முதலான ஆன்மகோடிகளெல்லாம்; நிறையுமன்பினு லர்ச்சனைசெய்ய= நிறைந்த பத்தியோடு வழிபாடுசெய்து; மறைகளாற்றுதித் தருந்தவம்புரிந்து= வேதங்களாற்றுதித்து அரிய தவத்தைச்செய்து; மாறிலா நியமந்தலை நின்று= கெடாத நியமநெறியில்நின்று; முறைமையால்வரும் பூசனைசெய்ய = வேதாகம விதிப்படிசெய்யும் அர்ச்சனையைச்செய்த காரணத்தால்; நீடுகாமங்க ளவரவர்க் கருளி=வேண்டியவரங்களை அவரவர்களுக்குக்கொடுத்து; இறையவர்தா மகிழ்ந் தருளியபதிகள்=சிவபிரான் விரும்பி வீற்றிருந்தருளுகின்ற ஆலயங்கள்; எண்ணிறந்தவத் திருநகரெல்லை=அத்திருநகரெல்லையில் அளவில்லாதனவாம்.—எ-று

மன்னுகின்றவத் திருநகர்வரைப்பின் மண்ணின்மிக்கதோர்நன்மையினுலே,துன்னும்யானையைத் தூற்றில்வர்ழ்முயன்முன் றுரக்கவெய்திய தொலைவிலூக்கத்தாற், றன்னிலத்துநின் றகற்றுதல் செய்யுந் தானமன்றியுந் தனுவெழுந்தரணி, யெந்நிலத்திலுங் காண்பருமிறவாத் தானமென்றிவை யியல்பினிலுடைத்தால்.

(இ-ள்.) மன்னுகின்றவத் திருநகர்வரைப்பு = அழியாதிருக்கின்ற அக் காஞ்சிபுரம் ; மண்ணின் மிக்கதோர் நன்மையினுலே = அந்த எல்லைக்கணுள்ள மேலான ஓர் விசேடத்தினால் ; துன்னும் யானையைத் தூற்றில்வாழ்முயல் முன்றுரக்கவெய்திய தொலைவிலாக்கத்தால் = வருகின்ற யானையைப் புதலில் வாழ்கின்ற முயலானது முன்சென்று துரத்தும்படிவந்த கேடில்லாதவலியினால்; தன்னிலத்தினின்ற கற்றுதல்செய்யுந் தானமன்றியும் = தான்வாழும் நிலத்தி னின்றும் நீங்கச்செய்யும் இடமல்லாமலும் ; தனுவெழுந்தரணி=இறந்த உடம் புகள் உயிர்பெற்றெழுகின்ற இடமும்; எந்நிலத்திலுங் காண்பரு மிறவாத் தானம் = எந்த இடத்திலுங் காணக்கூடாத கிட்டினவர்கள் இறவாத்தானமும்; என்றிவை யியல்பினிலுடைத்து = என்று சொல்லும் இவைகளையும் இயல்பாக உடையது.—எ-று. (எஎ)

வரைப்பின் என்புழி இன் - அசை. துன்னும் யானையைத் தூற்றில் வாழ்முயன்முன் றுரக்கவெய்திய தொலைவிலாக்கத்தால் தன்னிலத்தினின் றகற் றுதல் செய்யுந்தானம் என்பது = குறுமுயல் போய்க்கரி தொடர் பொது. தனு வெழுந்தரணி என்பது=இறந்தவர்கள் உயிர்பெற்றெழும் இடம். ஆல்-அசை.

ஈண்டுதீவினை யாவையுநீக்கி யின்பமேதரும் புண்ணியதீர்த்தம்
வேண்டினார்தமக் கிட்டசித்தியதாய் விளங்குதீர்த்தநன் மங்கலதீர்த்த
நீண்டகாப்புடைத் தீர்த்தமூன்றுலகி னிகழ்ந்தசாருவ தீர்த்தமுமுதலா
ஆண்டுநீடிய தீர்த்தமெண்ணிலவு மமரநாட்டவ ராடுதலொழியார்.

(இ-ள்.) ஈண்டு தீவினை யாவையு நீக்கி = வருகின்ற பாவங்களையெல் லாம்போக்கி ; இன்பமேதரும் புண்ணிய தீர்த்தம்=இன்பத்தையே கொடுக்கும் துரித நாசனமென்னும் புண்ணிய தீர்த்தமும் ; வேண்டினார் தமக்கிட்ட சித்தி யதாய் விளங்குதீர்த்தம் = விரும்பினவர்களுக்கு இட்டமான பொருள்கள் சித் திக்கத்தக்கதாய் விளங்கியிருக்கும் இட்டசித்தி என்னும் தீர்த்தமும் ; நன்மங் கலதீர்த்தம் = நல்ல மங்களங்களை விளைக்கும் மங்கலதீர்த்தமும்; நீண்ட காப் புடைத்தீர்த்தம் = தேவர்களால் எந்நாளும் காக்கப்பட்ட சுரரட்சிதம் என்னுங் காப்புடைத்தீர்த்தமும் ; மூன்றுலகி னிகழ்ந்த சாருவதீர்த்தமுமுதலா = மூன் றுலகத்தினுள்ள(தீர்த்தங்கள்யாவும் பிரமன்பொருட்டு ஒருங்குசேர்ந்துவந்த)சர்வ தீர்த்தமும்முதலாக ; ஆண்டுநீடிய தீர்த்தமெண்ணிலவும் = அந்நகரத்திலிருக்கும் தீர்த்தங்கள் எண்ணிலாதன வற்றிலும் ; அமரநாட்டவ ராடுதலொழியார்=விண் ணுலகத்தில்வாழும் தேவர்கள் முழுகுதலை ஒழியார்கள்.—எ-று. (எஅ)

தாளதொன்றினின் மூன்றுபூமலருந் தமனியச் செழுந் தாமரைத்தடமு
நீளவார்புனல் குடதிசையோடிநீர்கரக்குமா நதியுடனீடு
நாளலர்ந்தசெங் குவளைபைங்கமல நன்பகற்றரு பாடலமன்றி
காளமேகமொப் பாளுறைவரைப்பிற் கண்படாதகா யாப்புளியுளதால்.

(இ-ள்.) தாளதொன்றினின்மூன்றுபூமலரும் = ஓர்காளத்தில் மூன்று மலர்கள் அலர்கின்ற ; தமனியச்செழுந் தாமரைத்தடமும் = பொற்றாமரை

வாவியும் ; நீளவார்புனல் குடதிசையோடி = மிகப்பெருகும் நீரானது மேற்றி சைக்கண் ஓடிப்பின்; நீர்கரக்கு மாநதியுடன்=அந்நீர் மறைந்துபோகும் பம்பை யென்னும் நதியுடன் ; நீடுநாளலர்ந்த பைங்குவளை செங்கமலம்=மிக்க பகற்கா லத்தில் அலர்ந்தபசியகுமுதமலரும் (இரவில்அலர்ந்த)செந்தாமரைமலரும் ; நன் பகற்று பாடலமன்றி=நல்லபகலில் அலரும் பாதிரிமரமும் அல்லாமல் ; காள மேக மொப்பாளுறை வரைப்பில்=கரிய மேகம்போலும் திருமேனியையுடைய காமாட்சியார் வீற்றிருக்கும் காஞ்சி நகரத்தில் ; கண்படாத காயாப்புளியுளது= உறங்காத காயாப்புளியும் இருக்கின்றது.—எ-று. ஆல்-அசை. (௭௯)

மேற்றிசைக்கண் சென்ற பம்பை விண்ணுலகிற்சேரும் எனப்புராணங் கூறலில் நீர்கரக்கும் நதியாயிற்று.

சாயைமுன்பிணிக் குங்கிணறொன்று தஞ்சமுண்ணினஞ் சாந்தட மொன்று, மாயையின்றிவந் துள்ளடைந்தார்கள் வானரத்துரு வாம்பில மொன்று, மேயவவ்வுரு நீங்கிடக்குளிக்கும் விளங்குபொய்கையு மொன் றுவிண்ணவரோ, டாயவின்பமுய்க் கும்பிலமொன்றோ டனையவாகிய வதிசயம்பலவால்.

(இ-ள்.) சாயைமுன் பிணிக்குங்கிணறொன்று=தன்னை நோக்கினரது சாயையை அவர்க்குத்தோன்றாமல் தன்னுள் அடக்கிக்கொள்ளும் கூவமொன்று; தஞ்சமுண்ணினஞ் சாந்தடமொன்று=இதுநமக்குஇதத்தைத்தருமென்றுகருதி ஒருவன்உண்டால்நஞ்சாக இருக்கும்பொய்கையொன்று ; மாயையின்றிவந் துள் ளடைந்தார்கள் வானரத்துரு வாம்பிலமொன்று = வஞ்சமென்று கருதாது அதனுட் புகுந்தவர்கள் குரங்குருவத்தை அடையும் பிலத்துவாரமொன்று ; மேயவவ்வுரு நீங்கிடக்குளிக்கும் விளங்கு பொய்கையுமொன்று = அடைந்த அவ்வானரவுருவம் நீங்கும்படி முழுகும் விளக்கமான தடாகமுமொன்று ; விண் ணவரோ டாயவின்ப முய்க்கும் பிலமொன்றோடு = தேவர்களோடு கலந்து அவ் விடத்திலுண்டாம் இன்பத்தை நுகரும் பிலத்துவார மொன்றோடு; அனைய வாகிய வதிசயம்பல=அக்காஞ்சியில் அத்தன்மைத்தாகிய அதிசயம்பல உள.— எ-று. சண்டுச்சாயை என்றது பிரதிபிம்பத்தை. ஆல்-அசை. (௮௦)

அஞ்சுவன்கரத் தாறிழிமதந்தோ ரானைநிற்கவு மரையிருட்டிரியு மஞ்சுநீள்வது போலுமாமேனி மலர்ப்பதங்களில் வண்சிலம்பொலிப்ப நஞ்சுபில்கெயிற் றரவவெற்றரையி னுமமூன்றிலைப் படையுடைப்பிள்ளை யெஞ்சலின்றிமுன் றிரியவுங்குன்ற மெறிந்தவேலவன் காக்கவுமிசையும்.

(இ-ள்.) அஞ்சுவன்கரத்தாறிழிமதத்து=ஐந்துவலிய திருக்கரங்களையும் ஆறுபோற்பெருகுகின்ற மும்மதத்தையும் உடைய ; ஓரானைநிற்கவும் = விநாயக மூர்த்தியாகிய ஓரானையானது அங்குநின்று காக்கவும் ; மலர்ப்பதங்களில் வண்சி லம்பொலிப்ப=தாமரைமலர்போலும் திருவடிகளில் வளவிய சிலம்புகள் ஒலிசெ ய்ய=மஞ்சு நீள்வதுபோலுமரையிருட்டிரியுமாமேனி = மேகத்தின் செலவுபோ

னும்நயோமத்தில் சஞ்சரிக்கின்றபெருமையாகிய திருமேனியையும் ; நஞ்சுமிழ் கெயிற்றரவ வெற்றரையின்=நஞ்சுகொப்பளிக்கும் பற்களையுடைய பாம்பைக்கச் சாக அணிந்தவெற்றரையினையும்உடைய; நாமமூன்றிலைப்படையுடைப்பிள்ளை= அச்சத்தைக்கொடுக்கும் மூன்று இலை நுனிபோலும் கூரியநுதியோடுகூடிய சூலப் படையைத்தரித்தவயிரவமூர்த்தி ; எஞ்சலின்றிமுன்றிரியவும்=ஒழிவின்றிமுன் னேசஞ்சரித்துக்கொண்டிருக்கவும்; குன்றமெறிந்த வேலவன்காக்கவுமிசையும்= கிரவுஞ்சமலையைப்பிளந்த வேலேந்திய முருகக்கடவுள்காக்கவும் அந்நகரம் இருக் கும்.—எ-று. (அக)

சத்திதற்பர சித்தயோகிகளுஞ் சாதகத்தனித் தலைவருமுதலா, நித் தமெய்திய வாயுண்மெய்த்தவர்க ணீடுவாழ்திருப் பாடியுமனேகஞ்,சித்த ர்விஞ்சைய ரியக்கர்கந்தருவர் திகழ்ந்துமன்னுவார் செண்டுகையேந்தி, வித்தகக்கரிமேற்கொளுங்காரிமேவுசெண்டணைவெளியுமொன்றுளதால்.

(இ-ள்.) சத்திதற்பர சித்தயோகிகளும்=சிவசத்தியை உபாசிக்கும் இய ல்பினராகிய சித்தயோகிகளும் ; சாதகத்தனித்தலைவருமுதலா=அவ்யோகநெறி யைச்சாதிக்கும் சாதகரென்னும் ஒப்பற்ற தலைவர்களும்முதலாக ; நித்தமெய்திய வாயுண்மெய்த்தவர்கள்=நீட்டித்தவாணாளையுடைய மெய்ம்மையான தவத்திகளு ம் ; நீடுவாழ்திருப்பாடியுமனேகம்= நெடுங்காலம்வாழ்ந்திருக்கின்ற சிற்றூர்களும் அனேகம்உள்ளன ; சித்தர்விஞ்சையரியக்கர்கந்தருவர் = சித்தர்களும் வித்தியா தரர்களும் இயக்கர்களும் கந்தருவர்களும் ; திகழ்ந்து மன்னுவார் = விளங்கி அங்குவசிப்பார் ; செண்டுகையேந்தி வித்தகக்கரி மேற்கொளும்=செண்டாயுதத் தைக்கையிற்றாங்கித் திறமையான யானையின்மேல் ஏறிச்செல்லும் ; காரிமேவு செண்டணை வெளியுமொன்றுளது = ஐயனார் வீற்றிருந்தருளும் வையாளிவெளி யும் ஒன்றுள்ளது.—எ-று. ஆல்-அசை. (அஉ)

செண்டு=குதிரையோச்சுங்கசை ; வையாளி = குதிரைநடத்தும்வெளி ; சாதகத்தனித்தலைவரென்றது:—மருந்து மந்திரம் யோகம் முதலியவற்றால் ஆயுள் நீட்டித்திருக்கும் சாதகம்செய்கின்றவர்களை.

வந்தடைந்தவர் தம்முருமாய மற்றுளாரைத்தாங் காண்பிடமுளது, சிந்தையோகத்து முனிவர்யோகினிகள் சேரும்யோகபீ டமுமுளதென் றும், அந்தமில்லறம் புரப்பவள்கோயி லானபோகபீ டமுமுளதாகும், எந்தையார்மகிழ் காஞ்சிநீடெல்லை யெல்லையில்லன வுள்ளவாரறிவார்.

(இ-ள்.) வந்தடைந்தவர்தம்முருமாய=அவ்விடத்து வந்தவர்கள்தம்மு ருவம் பிறருக்குக்காணாமல் மறைய ; மற்றுளாரைத்தாங்காண் பிடமுளது = பிற ரைத்தாங் காணும்படியான ஒருசபையும்உண்டு ; சிந்தையோகத்து முனிவர்யோ கினிகள்=தமது சித்தத்தை யோகநெறியில் வைத்திருக்கும் முனிவர்களும்யோ கினிகளும்; சேரும்யோகபீடமுமுளது=அனுதினம்வந்தடையும் யோகபீடமும் ஒன்றுள்ளது; என்றும் அந்தமில்லறம் புரப்பவள்கோயிலான போகபீடமுமுளதா

கும்=என்நாளும்அழியாத முப்பத்திரண்ட றங்களையும் வளர்க்கின்ற காமலோசனி வீற்றிருந்தருளும் காமக்கோட்டமாகிய போகபீடமும்உண்டு; எந்தையார்மகிழ்கா ஞ்சிநீடெல்லை = எமதுமுதல்வராகிய ஏகாம்பரநாதர் மகிழ்ந்து வீற்றிருந்தருளும் காஞ்சிநகரத்தின்பெரியதிருவெல்லையில்; எல்லையில்லன வுள்ளவாறறிவார்=விம்மி தங்கள் அளவிறந்தன உள்ளன அதை யாரறிவார்கள்.—எ-று. (அரு)

யோகினிகள் = மனிதருட் சித்திபெற்ற ஓர்வகைமகளிர்கூழாம். விம்மி தங்கள் கூறப்படாதனவும் பலவுளஎன்றதற்கு எல்லையில்லனஎன்றும், அவை முனிவர்சித்தர் முதலியதவத்தினர்க்கேயன்றி எம்மனோர்க்குப் புலப்படாமையின் யாரறிவாரென்றுங்கூறினர்.

தூண்டுசோதியொன் றெழுந்திருடிரக்குஞ் சுரர்கள்வந்துசூ ழுருத் திரசோலை, வேண்டினார்கடம் பிறப்பினையொழிக்கு மெய்நெறிக்கணின் றார்கடாம்விரும்பித், தீண்டில்யாவையுஞ் செம்பொனாக்குவதோர் சிலையு முண்டுரை செய்வதற்கரிதால், ஆண்டநாயகி சமயங்களாறு மகிலயோ னியு மளிக்குமந்நகரம்.

(இ-ள்.) தூண்டுசோதியொன் றெழுந்திருடிரக்கும்=விளங்கிஎழாநின்ற ஒளிப்பிழம்பொன்று இரவில் உதித்து இருளைநீக்குதற்கிடமாயிருக்கும்; சுரர்கள் வந்து சூழுருத்திரசோலை = தேவர்கள்வந்து நாடோறுஞ்சூழும் உருத்திரசோலையும்; வேண்டினார்கடம் பிறப்பினையொழிக்கும் ஓர்சிலையும் = விரும்பினவர்களது பிறப்பையொழித்து வீடடைவிக்கும் ஓர்சிலையும்; மெய்நெறிக்கணின்றார்கடாம் விரும்பித்தீண்டில் யாவையுஞ் செம்பொனாக்குவதோர் சிலையுமுண்டு = மெய்ம்மையான நன்னெறிக்கணின்றவர்கள் பொன்னாக்கவேண்டுமென்றுவிரும்பித்தீண்டுவித்தால்(ஓடுமுதலிய எல்லாப்பொருள்களையும்)சிவந்தபொன்னாகச்செய்யும்(பரிசவேதியாகிய) ஓர்சிலையும்உண்டு; உரைசெய்வதற்கரிது=இவ்வாறானபெருமையை எடுத்துக்கூறுதற்குக்கூடாது; ஆண்டநாயகி சமயங்களாறுமகிலயோனியுமளிக்குமந்நகரம்=எம்மையாட்கொள்ளும் முதல்வியாகிய காமாட்சியார்அறுசமயங்களையும் எல்லாயோனிகளையும் காக்கின்ற அந்நகரத்தில்.—எ-று. (அச)

ஓர்சிலை என்றது முன்னுங்கூட்டப்பட்டது. தீண்டில் என்றது தீண்டுவித்தால் எனப்பிறவினையாய்நின்றது. ஆல்-அசை.

என்றுமுள்ளவிந் நகர்கலியுகத்தி லிலங்குவேற்கரி காற்பெருவளத் தோன், வன்றிறற்புலி யிமயமால்வரைமேல் வைக்கவேகுவோன் றனக்கி தன்வளமை, சென்றுவேடன்முன் கண்டுரைசெய்யத் திருந்துகாதநான் குட்படவகுத்துக்,குன்றுபோலுமா மதில்புடைபோக்கிக் குடியிருத்தின கொள்கையின்விளங்கும்.

(இ-ள்.) என்றுமுள்ள விந்நகர் கலியுகத்தில் = எக்காலத்தும் அழிவின்றி விளங்கும் இக்காஞ்சி நகரமானது கலியுகத்திலே; வன்றிறற்புலி இமயமால்வரைமேல் வைக்கவேகுவோன் = மிக்க வலியுள்ள புலிக்கொடியை இமய

மலையின்மேல் நாட்டும்படி செல்பவனாகிய ; இலங்குவேற்கரிகாற்பெருவளத்தோ ன்றனக்கு=விளங்குகின்றவேலையேந்திய கரிகாற்சோழனென்னும் பெரியவளத் தையுடைய அரசனுக்கு ; இதன்வளமை=இந்நகரத்தின்வளத்தை ; முன்சென் றுவேடன் கண்டுரைசெய்ய = முன்னாக ஓர் வேடன்சென்று கண்டுசொல்ல ; திருந்துகாதநான் குட்படவகுத்து=திருத்தமான சுற்றெல்லை நான்குகாததூரம் அடங்கும்படி நகர்த்திருவெல்லையை வகுத்து ; குன்றுபோலுமா மதில்புடை போக்கி=மலைபோலும் பெரியமதிலை அவ்வெல்லையில் உண்டாக்கி ; குடியிருத் தினகொள்கையின் விளங்கும்=உயர்ந்தவரும் இழிந்தவருமாய்ப்பலகுடிகளை அந் நகரத்தில் இருக்கும்படிசெய்த பெருமையோடு விளங்கும்.—எ-று. (௮௫)

வேறு.

தண்காஞ்சி மென்சினைப்பூங் கொம்பராடல் சார்ந்தசைய வதன்மரு ங்கு சுரும்புதாழ்ந்து, பண்காஞ்சி யிசைபாடும் பழனவேலிப்பணைமருதம் புடையுடைத்தாய்ப்பாரினீடு, திண்காஞ்சி நகர்நொச்சியிஞ்சிசூழ்ந்த செ ழுங்கிடங்கு திருமறைக ளொலிக்குந்தெய்வ, வண்காஞ்சி யல்குன்மலை வல்லிகாக்க வளர்கருணைக் கடலுலகஞ் சூழ்ந்தான்மானும்.

(இ-ள்.) தண்காஞ்சி மென்சினைப்பூங் கொம்பராடல் சார்ந்தசைய = குளிர்ந்த காஞ்சிமரத்தினது மிருதுவான சினையாகிய பூங்கொம்புகள் காற்றால் அசைந்தாட ; அதன்மருங்கு சுரும்புதாழ்ந்து=அக்கொம்புகளிடத்துள்ள மலர் களில் (தேன் நசையால்) வண்டுகள் வீழ்ந்து ; பண்காஞ்சி யிசைபாடும் பழன வேலி=மருதப்பண்ணை இசையோடு பாடுகின்ற சோலையாகிய வேலிகளையுடைய; பணைமருதம் புடையுடைத்தாய் = வயலோடுகூடிய மருதநிலத்தை அருகில உடையதாய்; பாரினீடுதிண் காஞ்சிநகர் நொச்சியிஞ்சிசூழ்ந்த = நிலவுலகத்தில் உயர்ந்த திட்பமான காஞ்சிநகரத்தினது நொச்சியாகிய மதிலைச்சூழ்ந்த; செழுங் கிடங்கு=செழுமையாகிய அகழ்க்கிடங்கானது ; திருமறைக ளொலிக்குந்தெய்வ வண் காஞ்சியல்குன் மலைவல்லிகாக்க = அழகிய வேதங்கள் ஒலிக்கும் தெய்வத் தன்மையானவளவிய காஞ்சியென்னும் மேகலையை அணிந்த நிதம்பத்தையுடைய பார்வதியார் காவல் செய்கின்றபடியால் ; வளர்கருணைக்கடலுலகஞ் சூழ்ந்தான் மானும்=அப்பிராட்டியாரது மிக்க திருவருளாகிய கடலானது இந்நகரத்தைச் சூழ்ந்ததை யொத்திருக்கும்.—எ-று. (௮௬)

காஞ்சியும் மருதத்திற்குரிய மரமாதலின் மருதப்பண்ணைக் காஞ்சி யென்றார்.

கொந்தலர்பூங் குழலியபக் கொம்புகம்பர் கொள்ளும்பூ சனைகுறி த்த தானங்காக்க, மந்திரமா மதிலகழி யவர்தாந்தந்த வாய்மையயா கமவி தியின்வகுப்புப்போலு, மந்தமில்சீர்க் காஞ்சியவந் தடைந்தார்க்கன்றி யடைகளங்க மறுப்பரிதென் றறிந்துசூழ, வந்தணைந்து தன்கறுப்புமுவ ப்புநீக்கு மாகடலும் போலுமலர்க் கிடங்குமாதோ.

(இ-ள்.) மலர்க்கிடங்கு=தாமரை மலர்களோடுகூடிய அகழ்க்கிடங்கு; கொந்தலர்பூங் குழலிமயக்கொம்பு = கொத்துக்களாய் அலர்ந்த மலர்களைமுடித்த அளகத்தையுடைய பார்வதிதேவியார்; கம்பர் கொள்ளும்பூசனை குறித்ததானங் காக்க=ஏகாம்பரநாதர் விரும்பித்திருவுளங் கொண்டருளும் பூசைத்தானத்தை இரட்சிக்க; மந்திரமாமதிலகழி = மந்திரமயமான பிராகாரமதிலோடுகூடிய அகழ்க்கிடங்கை; அவர்தாந்தந்தவாய்மையாகமவிதியின் வகுப்புப்போலும்=அவரால் அருளிச்செய்யப்பட்ட மெய்மையான சிவாகமவிதியினால் நிருமித்தலையொக்கும் (அதுவன்றி); அந்தமில்சீர்க் காஞ்சியைவந் தடைந்தார்க்கன்றி=அழிவில்லாத காஞ்சிநகரத்தை அடைந்தார்க்கல்லது; அடைகளங்க மறுப்பரிதென்றறிந்து=தம்மையடைந்த குற்றத்தை நீக்கிக்கொள்ளுதல் கூடாதென்றறிந்து; சூழவந்தணைந்துதன் கறுப்புமுவர்ப்பு நீக்குமாகடலும்போலும்=அக்காஞ்சியைச் சூழும்படிவந்து தன் கருநிறமாகிய களங்கத்தையும் உவரையும் நீக்கிக்கொள்ளும் பெரிய கடலையுமொக்கும்—எ-று. மாது-ஓ-அசை. (எ)

ஆன்மசுத்தி - தானசுத்தி - திரவியசுத்தி - மந்திரசுத்தி - இலிங்கசுத்தி - என்னும் ஐவகைச்சுத்தியுள், ஆன்மசுத்திக்குப் பின்செய்யுந் தானசுத்தியில் மந்திரத்தால் பிராகாரமும் அகழியும் பூசைத்தானத்தில் செய்கவென்று சிவாகமங்களில் விதித்தலில், மந்திரமாமதிலகழி யவர்தாந்தந்த வாய்மையாகம விதியின் வகுப்புப்போலும் - என்றார்.

ஆங்குவள ரெயிலினுடன் விளங்கும்வாயி லப்பதியில் வாழ்பெரி
யோ ருள்ளம்போல, ஓங்குநிலைத் தன்மையவா யகிலமுய்ய வுமைபாக
ரருள்செய்த வொழுக்கமல்லாற், றீங்குநெறி யடையாத தடையுமாகிச்
செந்நெறிக்க ணிகழ்வாய்மை திருந்துமார்க்கந், தாங்குலவ நிலவிவள
ரொளியாலென்றுந் தடநெடுவா ளைப்பனவாந் தகையவாகும்.

(இ-ள்.) ஆங்குவளரெயிலி னுடன்விளங்கும்வாயில்=அவ்வகழ்க்கிடங்கினருகில் ஓங்கியமதிலுடன் விளங்கியிருக்கும் வாயிலானது; அப்பதியில் வாழ்பெரியோருள்ளம்போல=அக்காஞ்சி நகரத்தில் வாழும் சான்றோர்களது இதயம்போல; ஓங்குநிலைத்தன்மையவாய் = உயர்ந்தநிலையுடைத்தாய், சிலேடையால் உள்ளத்தின் பரத்தில் நடுவு நிலைமையும் வாயில் பரத்தில் கதவு நிலையுடைமையுங்கொள்க; அகிலமுய்ய=உலகத்தாரீடேறும்படி; செந்நெறிக்கணிகழ்வாய்மை = வீட்டுநெறிக்கண் செலுத்துவிக்கும் மெய்ம்மையாகிய; உமைபாகரருள்செய்த ஒழுக்கமல்லால்=சிவபிரான் அருளிச்செய்த ஒழுக்கம்போல் ஒழுங்குடைத்தாதலன்றி; தீங்குநெறியடை யாததடையுமாகி = (அவ்வொழுக்கம் தன்னையுடையார்க்குப் பாவம்வாராதிருத்தற்குத் தடையாயிருக்குமதுபோல்) அந்நகருக்குப் பகைவரால் இடையூறுவராது தடுக்குந்தடையுமுடையதாய்; திருந்துமார்க்கந் தாங்குலவநிலவி = (பின்னும் அவ்வொழுக்கம் திருத்தமான பிரமசரிய முதலிய அறநெறிகளும் சரியைமுதலிய அனுட்டானங்களுமாகிய பல நன்னெறிகளையுடைத் தாதல்போல்) திருத்தமாகிய மார்க்கங்கள் பல தன்னிடத்தினின்றும்

விளங்கும்படி தான்விளங்கி; என்றும்வளரொளியால் தடநெடுவானளப்பன வாந்தகையவாகும் = எந்நாளும்மிக்கோங்கிய காந்தியோடு விசாலமாகிய நீண்ட விண்ணுலகத்தை அளப்பதற் கெழுந்தன்மை யுடையனவுமாகும்.—எ-று. (அஅ)

மாறுபெற லருங்கனக மாடநீடு மணிமறுகு நெடுந்தெருவும் வளத்தில்வந்த, ஆறுபயி லாவணவீதிகளும் மற்று மமைந்தநக ரணிவரைக ணடுவுபோக்கிக், கூறுபடு நவகண்ட மன்றிமல்கக் கொண்டவனே கங் கண்ட மாகியன்ன, வேறொருமண் ணுலகுதனி லுளதாலென்ன விளங் கியமா லோகநிலை மேவிற்றன்றே.

(இ-ள்.) மாறு பெறலருங்கனகமாட நீடு=வேறு ஒப்பிடுதற்கரியபொன் மயமான மண்டபங்கள் மிக்கிருக்கின்ற ; மணிமறுகு நெடுந்தெருவும்=அழகிய வீதிகளும் நெடுவீதிகளும் ; வளத்தில் வந்த ஆறுபயிலாவணவீதிகளும்=வளத்தாற்சிறந்த நிலைமையுடைய அங்காடிவீதிகளும் ; மற்றும் அமைந்தநகர்=மற்றுமுண்டான உறுப்புக்களையுமுடைய அந்நகரமானது; அணிவரைக ணடுவுபோக்கிக்கூறுபடு நவகண்டமன்றி = அழகிய (இமயம்முதலிய ஒன்பது) குலமலைகளைக் (கண்டங்களுக் கெல்லையாக) இடையிடை போக்கப்பட்டு (அம்மலைகளால் எல்லைகள் அமைத்துக்) கூறு செய்யப்படும் நவகண்டத்தோடுகூடிய பூமியே அன்றி ; மல்கக்கொண்டவனே கங்கண்டமாகியன்ன=பல மலைகள் எல்லையாக வைத்து நெருங்கும்படிகொண்ட அநேகங்கண்டமாய் அவ்வாறு வகுக்கப்பட்ட; வேறொரு மண்ணுலகுதனி லுளதாலென்ன = வேறொரு பூலோகத்தை இந்தக் காஞ்சி மண்டலம் தன்னிடத்து உளதென்று சொல்லும்படி ; விளங்கிய மாலோக நிலைமேவிற்று=விளக்க மடைந்தஓர் மகாலோகத்தின் நிலைமையை அடைந்தது.—எ-று. அன்று-ஏ-அசை. (அகூ)

பாகமருங் கிருபுடையு முயர்ந்துநீண்ட படரொளிமா ளிகைநிரைகள் பயின்மென்கூந்தற், றோகையர்தங் குழாமலையத் தூக்குமுத்தின் சுடர்க்கோவைக் குளிர்நீர்மை துதைந்தவீதி,மாகமிடை யொளிதழைப்ப மன்னிநீடு மருங்குதா ரகையலைப வரம்பில்வண்ண, மேகமிடை கிழித் தொழுகுந்தெய்வக்கங்கை மேனதிகள் பலமண்மேல் விளங்கியோங்கும்.

(இ-ள்.) பாகமருங்கிருபுடையு முயர்ந்துநீண்ட=பகுப்பாக இருமருங்கிலும் முன்னும் பின்னும் ஓங்கி நீண்டிருக்கும் ; படரொளிமாளிகை நிரைகள்= படர்ந்த ஒளியோடு கூடிய மண்டபங்களின் வரிசையில் ; பயில்மென் கூந்தற் றோகையர்தங்குழாம் = சஞ்சரிக்கின்ற மிருதுவான அளகத்தையுடையமகளிர் கூட்டங்கள் ; அலையத்தூக்குமுத்தின்சுடர்க்கோவைக்குளிர்நீர்மை துதைந்த வீதி =அலங்காரத்தின் பொருட்டு அலையும்படிதூக்கிய ஒளியுடைய முத்துமாலையின் கோவைகளினால் குளிர்ந்ததன்மையடைந்த வீதியானது ; மாகமிடையொளிதழைப்பமன்னி=விண்ணுலகத்தில் நின்றும் வருங்கால் மிக்க ஒளியுடைத்தாயிருந்து ; நீடுமருங்கு தாரகையலையவரம்பில் வண்ணமேகம்=உயர்ந்த அருகுகளில்

விண்மீன்கள் அலையும்படி ஒப்பிடுதற்கரிய கருநிறத்தோடு கூடிய மேகங்களை; இடைகிழித்தொழுகுந் தெய்வக்கங்கை மேனதிகள்பலமண்மேல் விளங்கியோங்கும்=இடையே கிழித்துக்கொண்டு பூமியிலிறங்குகின்ற தேவகங்கையினின்றும் பிரிந்தநதிகள் பல நிலவுலகத்து வந்தாற்போல விளக்கமடைந்திருக்கும்.—எ-று.

கிளரொளிச்செங் கனகமயந் தானாய்மாடு கீழ்நிலையோர் நீலச்சோபானம்பூணக், கொளவமைத்து மீதொருபாற் கன்னசாலை குலவயிரத் தாலமைத்த கொள்கையாலே, யளவில்சுடர்ப் பிழம்பானார் தம்மைத் தேடி யகழ்ந்தேன மானானு மன்னமாகி, வளர்விசும்பி லெழுந்தானும் போலநீடு மாளிகைக ளுளமற்றமறுகுதோறும்.

(இ-ள்.) கிளரொளிச்செங்கனக மயந்தானாய்=மிக்க ஒளியையுடைய சிவந்த பொன்மயமாய் ஆக்கப்பட்டு; மாடு கீழ் நிலையோர் நீலச்சோபானம் பூணக்கொளவமைத்து=அருகிலுள்ள கீழ்நிலையின் ஓர் பகுதியில் நீலமணியாற்படியானது பொருந்தியிருக்கும்படி செய்து; மீதொரு பாற்கன்னசாலை குலவயிரத்தாலமைத்த கொள்கையால்=மேல்நிலையின் ஓர் பகுதியில் விமானத்தின் கன்னசாலையை உயர்ந்தவயிரத்தால் அமைத்தமுறைமையால்; அளவில்சுடர்ப்பிழம்பானார்தம்மை = அளவுபடாத ஒளிப்பிழம்பாய் நீண்டசிவபிரானை; தேடியகழ்ந்தேனமானானும் = அவர் அடியைத்தேடிப்பூமியைக்கீண்டு பன்றிவடிவமானதிருமாலும்; அன்னமாகிவளர்விசும்பி லெழுந்தானும்போல நீடும் = முடியைத் தேடி அன்னவடிவாய் உயர்ந்த ஆகாயத்திற்பறந்தபிரமனையும்போல உயர்ந்திருக்கும்; அம்மறுகுதோறு முளமாளிகைகள்=அவ்வீதிகள்தோறும் உள்ள சிலமாளிகைகள்.—எ-று. ஆல்-மற்று-ஏ-அசை. (சுக)

மின்பொலிபன் மணிமிடைந்த தவளமாட மிசைப்பயில்சந் திரகாந்தம் விசும்பின்மீது, பொன்புரையுஞ் செக்கர்நிறப் பொழுதுதோன்றும் புனிற்றுமதி கண்டுருகிப் பொழிந்தநீரால், வன்புலியி னுரியாடைத் திருவேகம்பர் வளர்சடையு மிளம்பிறையுங் கண்டுகும்பிட், டன்புருகிமெய் பொழியக் கண்ணீர்வாரு மடியவரு மனையவுள வலகிலாத.

(இ-ள்.) மின்பொலிபன்மணி மிடைந்ததவளமாடம் = ஒளிவீசுகின்ற பலமணிகள் இழைத்த வெண்மைநிறமுடைய மண்டபங்கள்; மிசைப்பயில் சந்திர காந்தம் = தம்மிடத்து அழுத்தியிருக்கும் சந்திரகாந்தக்கற்கள்; விசும்பின்மீது பொன்புரையுஞ் செக்கர்நிறப்பொழுது தோன்றும்=வானினிடத்துப் பொன்போலும் செந்நிறத்தையுடைய மாலைக்காலத் துதிக்கும்; புனிற்றுமதி கண்டுருகிப்பொழிந்த நீரால் = இளம்பிறையைக் கண்டுருகிப் பொழியப்பட்ட நீரால்; வன்புலியி னுரியாடைத் திருவேகம்பர்=வலிய புலித்தோலாகிய உடையைத்தரித்த ஏகாம்பரநாதரது; வளர்சடையு மிளம்பிறையுங்கண்டு கும்பிட்டு= வளர்ந்தசடையையும் இளம்பிறையையும் தரிசித்துக்கைகுவித்து வணங்கி; அன்புருகி மெய்பொழியக் கண்ணீர்வாரும் = அன்பாலுருகி உடம்பில் சிதறும்படி

ஆனந்தக் கண்ணீரைச்சொரியும்; அடியவரு மனையவுள வலகிலாத = அடிய வரையுமொத்து எண்ணிலாதன உள்ளன.—எ-று. (௯௨)

முகிலுரிஞ்சுங் கொடிதொடுத்த முடியவாகு முழுப்பளிங்கின் மாளிகைகண் முற்றுஞ்சுற்று, திகரில்சரா சரங்களெல்லா நிழலினாலே நிறைதலினா னிறைதவஞ்செ யிமயப்பாவை, நகிலுழுத சுவடும்வளைத் தழும்பும்பூண்ட நாயகனார் நான்முகற்குப் படைக்கநல்கும், அகிலயோ னிகளெல்லா மமைத்துவைத்த வரும்பெரும்பண் டாரநிலை யனையவா கும்.

(இ-ள்.) முகிலுரிஞ்சுங் கொடிதொடுத்த முடியவாகும் = மேகங்கள் தவழ்ந்து செல்லும் கொடிகட்டிய சிகரங்களை யுடையனவா யிருக்கும்; முழுப் பளிங்கின் மாளிகைகண் முற்றும் = முழுதும் பளிங்கினாற்செய்த மண்டபங்க ளின் புறம்முழுதும்; சுற்றுதிகரில் சராசரங்களெல்லா நிழலினானிறைதலினால் = சுற்றித்திரிகின்ற ஒப்பற்ற சராசரங்களென்னும் சீவகோடிகளெல்லாம் பிரதிபிம் பத்தினால் அதனுள் நிறைந்திருத்தலினால்; நிறைதவஞ் செயிமயப்பாவை = குறைவில்லாத தவத்தைச் செய்கின்ற காமாட்சியாரது; நகிலுழுத சுவடும் வளைத்தழும்பும்பூண்ட நாயகனார் = முலைகள் அழுந்திய தழும்பையும் கரத்திலு ள்ள வளைகள் அழுந்திய தழும்பையும் தந்திருமேனியில் தரித்துக்கொண்ட ஏகாம்பரநாதர்; நான்முகற்குப் படைக்கநல்கும் = பிரமனுக்குப் படைக்கும்படி கொடுக்கும்; அகிலயோனிகளெல்லா மமைத்துவைத்த = பலவகையான யோனி களையெல்லாம் சேர்த்துவைத்த; அரும்பெரும்பண்டாரநிலை யனையவாகும் = அருமையான பெரிய கருவேலத்தின் நிலைமையை உடையனவாம்.—எ-று. (௯௩)

ஏ - அசை.

பொற்களப மாளிகைமேன் முன்றினின்று பூங்கழங்கு மணிப்பந்து ம் போற்றியாடும், விற்புருவக் கொடிமடவார் கலன்கள்சிந்தி விழுவன வுங் கெழுவுதுணை மேவுமாதர், அற்புமுதிர் கலவியினிற் பரிந்துசிந்து மணிமணிச்சே டியர்தொகுக்கு மவையுமாகி, நற்கனக மழையன்றிக் காஞ்சியெல்லை நவமணிமா ரியும்பொழியு நாளுநாளும்.

(இ-ள்.) பொற்களபமாளிகைமேன் முன்றினின்று = பொன்னாலாகிய களபச்சாந்துபூசியமாளிகைகளின்மேல் முற்றத்தினின்று; பூங்கழங்குமணிப்பந் தும் போற்றியாடும் = பொலிவுடைத்தாகிய கழற்காய்களையும் மணிகள் அழுத்தி யபந்துகளையும் விரும்பியாடுகின்ற; விற்புருவக்கொடி மடவார்கலன்கள் சிந்திவி ழுவனவும் = விற்போலும்புருவத்தையுடைய கொடிபோன்றமாதர்கள் ஆபரணங் களினின்றும் சிதறிவிழுகின்ற பொன்களும்; கெழுவுதுணைமேவுமாதர் அற்பு முதிர்கலவியினில் = தழுவுகின்ற நாயகர்களோடுகூடியமகளிர்கள் அன்புமுதிர்ந்த புணர்ச்சிக்கண்; பரிந்துசிந்து மணிமணி = வருத்தமுற்றுச்சிந்துகின்ற ஆபரணங்க

ளிலுள்ள மணிகளாகிய; சேடியர்தொகுக்கு மவையுமாகி=தோழியர்களால்தொகுக்கப்படும் அவைகளுமாய்; நற்கனகமழையன்றிக் காஞ்சியெல்லை=நல்லபொன்மழையேயல்லாமல் காஞ்சிபுரத்தி னெல்லையில்; நவமணிமாரியும் பொழியுநாளுநாளும்=நவரத்தினமழையும்சொரியும் நாள்தோறும் நாள்தோறும்—எ-று (கூச)

பூமகளுக் குறையுளெனுந் தகையவான பொன்மாடத் தரமியங்கள் பொலியநின்று, மாமகரக்குழைமகளிர் மைந்தரங்கண் வந்தேறுமுன்னறுநீர் வண்டலாடத், தூமணிப்பொன் புனைநாளத் துருத்திவீசுஞ் சுடர்விடுசெங் குங்குமநீர்த் துவலைதோய்ந்த, காமர்மணி நாசிகையின் மருங்குதங்குங் கருமுகில்கள் செம்முகில்க ளாகிக்காட்டும்.

(இ-ள்.) பூமகளுக் குறையுளெனுந்தகையவான பொன்மாடத்து=இலக்குமிதேவிக்கு வாசஞ்செய்தற்கிடமென்னும் மேன்மையமைந்த பொன்னாற்செய்த மாடங்களின் மேலுள்ள; அரமியங்கள்பொலியநின்று=நிலாமுற்றங்களிற் பொலிவடையநின்று; மாமகரக்குழைமகளிர்=பெருமையானமகரகுண்டலங்களையணிந்த மகளிர்கள்; மைந்தர் அங்கண்வந்தேறு முன்னறுநீர்வண்டலாட=ஆடவர்கள் அந்நிலாமுற்றங்களில் வந்து ஏறுவதற்கு முன்னே நல்லபனி நீரால்வண்டலாட்டயரும்படி; தூமணிப்பொன் புனைநாளத்துருத்திவீசும் = தூய்மையான மணிகளழுத்திய பொன்னாற்செய்த நாளத்தையுடையநீர் தூவுந்துருத்தியினின்று வீசுகின்ற; சுடர்விடுசெங் குங்குமநீர்த் துவலைதோய்ந்த=ஒளியைப்பரப்பும் சிவந்தகுங்குமக்குழம்பு கலந்தபனிநீர்த்துளிகள் தெறித்த; காமர்மணிநாசிகையின் மருங்குதங்கும்=அழகிய மணிகளிழைத்தகோபுரநாசியின் அருகில்தங்கியிருக்கும்; கருமுகில்கள்செம்முகில்களாகிக்காட்டும் = கரியநிறமுடைய முகில்கள் செந்நிறமுள்ளமுகில்களாய் விளங்கியிருக்கும்.—எ-று. (கூடு)

இமமலிய வெடுத்தநெடு வரைகள்போல விலங்குசுதைத் தவளமாளிகைநீள்கோட்டுச், சிமையடையுஞ்சோபான நிரையும்விண்ணுந் தெரிவரிய தூய்மையினு லவற்றுட்சேர்ந்து, தமர்களுடனிழிந்தேறு மைந்தர் மாதர் தங்களையும் விசும்பிடைநின் றிழியாநிற்கும், அமரரையு மரமகளிர் தமையும்வெவ்வே றறிவரிதாந் தகைமையன வனேகமங்கண்.

(இ-ள்.) இமமலியவெடுத்த நெடுவரைகள்போல=பனிமூடும்படி நெடியமலைகள் போலக்கட்டப்பட்ட; இலங்குசுதைத்தவளமாளிகை=விளங்குகின்ற சுண்ணச்சாந்துபூசிய வெண்மையாகிய மண்டபங்களின்; நீள்கோட்டுச்சிமையடையுஞ்சோபானநிரையும்=நீண்டசிகரத்தினது உச்சியை அடைதற்குரிய படிகளின்வரிசையையும்; விண்ணுந்தெரிவரிய தூய்மையினுலவற்றுட்சேர்ந்து = விண்ணுலகத்தையும் பிரித்து அறிதற்குக்கூடாத நிலைமையினால் அச்சோபானத்தை அடைந்து; தமர்களுடனிழிந்தேறு மைந்தர் மாதர்தங்களையும்=உறவினர்களோடு இறங்கி ஏறுகின்ற ஆடவர்களையும் மகளிர்களையும்; விசும்பிடைநின்றிழியா

நிற்கும் அமரரையும் அரமகளிர்தமையும் = விண்ணுலகத்தினின்று இறங்கிவருகின்ற தேவர்களையும் அரம்பையர்களையும்; வெவ்வேறறிவரிதாந்த கைமையனவனேகமங்கண் = தனித்தனி வேறுபடுத்து அறிதற்கரிய பெருமையை உடையனவாய் அந்நகரத்து அனேகமாளிகைகள் உள.—எ-று. (௬௬)

அரவநெடுந் தேர்வீதி யருகுமாடத் தணிமணிக்கோ புரத்தயலே
வியல்வாய்நீண்ட, விரவுமர கதச்சோதி வேதித்திண்ணை விளிம்பினொளி
துளும்புமுறை படிமீதேறுங், குரவலருங் குழன்மடவா ரடியிலூட்டுங்
குழம்படுத்த செம்பஞ்சின் சுவட்டுக்கோலம், பரவைநெடுந்தரங்கமிசை
விளங்கித்தோன்றும் பவளநறுந் தளிரனைய பலவும்பாங்கர்.

(இ-ள்.) அரவநெடுந்தேர்வீதி யருகுமாடத்து = ஒலியினையுடைய நெடிய தேரோடும்வீதிகளி னிருபுறத்து மிருக்கும் மண்டபங்களின் அருகில்; அணிமணிக்கோபுரத்தயல் = அழகிய இரத்தினங்களழுத்திய கோபுரத்தின் பக்கத்தில் உள்ள; வியல்வாய் நீண்டவிரவு மரகதச்சோதி வேதித்திண்ணை விளிம்பினொளி துளும்புமுறை = விசாலமுடைத்தாய் நீண்ட மரகதமணிகளின் சோதி நெருங்கிய வேதியாகிய திண்ணையின் விளிம்புகளின் ஒளியானது படிகளில் பத்திபாயும் முறைமையினால்; படிமீதேறுங் குரவலருங் குழன்மடவார் = அப்படிகள்மீதேறிச் செல்கின்ற குராமலர்கள் விளங்கி யிருக்கும் கூந்தலையுடைய மகளிர்; அடியிலூட்டுங் குழம்படுத்த செம்பஞ்சின் சுவட்டுக்கோலம் = பாதங்களிற்பூசிய குழம்பிற்சேர்ந்த செம்பஞ்சோடு விரவிய அடிச்சுவட்டின் கோலமானது; பரவைநெடுந் தரங்கமிசை விளங்கித்தோன்றும் = கரிய கடலினிடத்து நெடிய அலையின்மீது பிரகாசித்துத் தோன்றும்; பவளநறுந் தளிரனைய பலவும் பாங்கர் = பவளத்தின் நறுவிய கொழுந்துகளை ஒத்திருக்கும் பலவிடங்கள் அருகிலுள்ளன.—எ-று. ஏ-அசை. (௬௭)

வெம்புசினக் களிற்றதிர்ப்பு மாவினார்ப்பும் வியனெடுந்தேர்க் காலி
சைப்பும் விழவறாத, அம்பொன்மணி வீதிகளி லரங்கிலாடு மரிவையர்நூ
புரவொலியோ டமையுமிம்பர், உம்பரினிந் திரன்களிற்றின் முழக்குந்
தெய்வ வுயரிரவி மாக்கலிப்பு மயனூர்தித்தேர், பம்பிசையும் விமானத்தி
லாடுந்தெய்வப் பாவையர்நூ புரவரவத் துடனேபல்கும்.

(இ-ள்.) வெம்புசினக் களிற்றதிர்ப்பு மாவினார்ப்பும் = மிக்கெழுகின்ற கோபத்தையுடைய யானையினது பிளிறொலியும் குதிரைகளின் கனைப்பும்; வியனெடுந்தேர்க் காலிசைப்பும் = விசாலமாகிய நீண்டதேர்க்கால் செல்கின்ற ஒலியும் ஆகிய இவைகள்; விழவறாதவம்பொன்மணிவீதிகளில் = திருவிழாநீங்காத அழகிய பொன்னையும் மணிகளையும் பரப்பியதெருவீதிகளிலுள்ள; அரங்கிலாடுமரிவையர்நூபுரவொலியோடு = நாடகசாலையில் நிருத்தஞ்செய்யும் நாடகக்கணிகையரது சிலம்பிற்றோன்றும் ஒலியோடு; அமையுமிம்பர் = இந்நகரத்தினிடத்து அமைந்திருக்கும்; உம்பரினிந்திரன் களிற்றின்முழக்கும் = அந்நகரத்தின் மேலி

டத்துத்தேவேந்திரனது அயிராவதயானையின் பிளிறொலியும்; தெய்வவுயரிரவி மாக்கலிப்பும்=தெய்வத்தன்மையுடைய உயர்ந்த சூரியனது குதிரையின்கனைப்பும்; அயனூர்தித்தேர் பம்பிசையும் = பிரமன் ஊர்ந்துவருகின்ற யானமாகிய தேரினின்றும்பரவி எழும் ஓசையும்ஆகியஇவைகள்; விமானத்திலாடுந்தெய்வப் பாவையர் நூபுரவரவத்துடனேபல்கும்=தேவவிமானங்களில் ஆடுகின்ற தெய்வ மகளிர்களது சிலம்பொலியோடு பரவியிருக்கும்.—எ-று. (௯௮)

அருமறையந் தணர்மன்னு மிருக்கையான வாகுதியின் புகையடுத்த வம்பொன்மாடப், பெருமறுகு தொறும்வேள்விச் சாலையெங்கும் பெறு மவிப்பா கங்கொடுக்கும் பெற்றிமேலோர், வருமுறைமை யழைத்து விடு மந்திரமெம்மருங்கும் வானவர்நா யகர்திருவே கம்பர்முன்றிற், றிரு மலிபொற் கோபுரத்து நெருங்குமெல்லாத் தேவரையு மணித்தாகக் கொண்டுசெல்லும்.

(இ-ள்.) அருமறையந்தணர் மன்னுமிருக்கையான=அரியவேதங்களையுணர்ந்த மறையவர்கள்வாழும் இருப்பிடமான; ஆகுதியின்புகையடுத்தவம்பொன்மாடப்பெருமறுகுதொறும் = ஓமஞ்செய்கின்ற புகைகள்பரம்பிய அழகியபொன்மயமான மாளிகையுடைய பெரியவீதிகள்தோறும்உள்ள; வேள்விச்சாலையெங்கும் பெறுமவிப்பாகங் கொடுக்கும் பெற்றிமேலோர் = யாகசாலைகளிலெல்லாம் அவ்வத்தேவர்கள் பெறுதற்குரிய அவியின்பங்கைஅவர்க்கீயும் குணத்தினையுடையமேலோராகிய மறையவர்கள்; வருமுறைமை யழைத்துவிடுமந்திரம் = அத்தேவர்கள் அவ்வவியை ஏற்றுக்கொள்ளும் பொருட்டு வரும்படி நிச்சயமாய் அழைக்கும் மந்திரங்கள்; வானவர்நாயகர் திருவேகம்பர்முன்றில் எம்மருங்கும் = தேவர்க்கதிபரான ஏகாம்பரநாதரது சேவையின்பொருட்டு அவர் திருமுற்றம்முழுதும்; திருமலிபொற் கோபுரத்து நெருங்கும்=அழகுமிக்க கோபுரவாயிலிலும் நெருங்கிநிற்கின்ற; எல்லாத்தேவரையு மணித்தாகக்கொண்டு செல்லும்=எல்லாத் தேவரையும் யாகசாலையின் சமீபமாக அழைத்துக்கொண்டு செல்லும்.—எ-று.()

அரசர்குலப் பெருந்தெருவுந் தெற்றிமுற்றத் தாயுதங்கள் பயிலும் வியலிடமுமங்கண், புரசைமதக் கரிகளொடு புரவியேறும் பொற்புடைய வீதிகளும் பொலியவெங்கும், விரைசெய்நறுந் தொடையலங்கற் குமரர்செய்யும் வியப்புறுசெய் தொழில்கண்டு விஞ்சைவிண்ணோர், நிரைசெறியும் விமானவூர் திகளின்மேலு நிலமிசையும் பலமுறையு நிரந்துநீங்கார்.

(இ-ள்.) அரசர்குலப்பெருந்தெருவும்=அரசர்களுடைய மாளிகைகள் அமைந்தபெரியவீதிகளும்; தெற்றிமுற்றத் தாயுதங்கள்பயிலும் வியலிடமும் = சித்திரகூடங்களின்முற்றத்தில் படைக்கலங்களைப் பழகுகின்ற விசாலமானஇடமும்; அங்கண்புரசைமதக் கரிகளொடுபுரவியேறும் பொற்புடையவீதிகளும்= அவ்விடத்துக்கழுத்திடுகயிற்றையுடைய மதம்பொழிகின்றயானைகளோடுகுதிரை

களையும் ஏறிநடாத்தும் அழகியவீதிகளும் ; எங்கும்பொலிய = ஆகிய எவ்விடத்தும் பொலிவடையும்படி ; விரைசெய்நறுந்தொடை யலங்கற்குமரர்செய்யும்= வாசனைகமழும் நல்லதொடுத்த மாலைகளையும் கோத்தமாலைமுதலியவைகளையும் அணிந்த அரசகுமாரர்கள் செய்கின்ற ; வியப்புறுசெய் தொழில்கண்டு=அதிசயமான பயிற்சிவிசேடத்தைக்கண்டு ; விஞ்சைவிண்ணோர்நிரை = பலவித்தைகளையும் அறிந்ததேவர்களது தொகுதிகள் ; செறியும்விமானவூர்திகளின்மேலும் நிலமிசையும்=நெருங்கிய தேவவிமானங்களிலும் விமானமின்றி அந்நகரிடத்தும் ; பலமுறையுநிரந்து நீங்கார்=பலதரமும்வந்துகூடி நீங்காதிருந்தார்கள் -எ-று.— ()

வெயிலுமிழும் பன்மணிப்பூண் வணிகமாக்கள் விரவுநிதி வளம்பெருக்கும் வெறுக்கைமிக்க, வயினிலவு மணிக்கடைமா நகர்களெல்லாம் வனப்புடைய பொருட்குலங்கண் மலிதலாலே, கயிலைமலை யார்கச்சியாலயங்கள் கம்பமுமே வியதன்மை கண்டுபோற்றப், பயிலுமுருப் பலகொண்டு நிதிக்கோன்றங்கப் பயிலளகா புரிவகுத்த பரிசுகாட்டும்.

(இ-ள்.) வெயிலுமிழும்பன்மணிப்பூண்வணிகமாக்கள்=ஒளியைக்காலும் பலவகைமணிகளாற்செய்த ஆபரணங்களையணிந்த வணிகர்கள் ; விரவுநிதிவளம்பெருக்கும் = நெருங்கிய பாக்கியவளங்களை விருத்திசெய்தற்கிடனான ; வெறுக்கைமிக்கவயினிலவு மணிக்கடைமா நகர்களெல்லாம் = செல்வமிக்க இடத்தால் விளக்கமடைந்த இரத்தினங்களழுத்திய முதல்வாயிலையுடைய பெரியமாளிகைகளெல்லாம் ; வனப்புடைய பொருட்குலங்கண்மலிதலாலே = சிறப்பமைந்த முத்துமணிபொன்முதலியபொருட்டொகுதிகள் தம்மிடத்துமிக்கிருத்தலினால்; கயிலைமலையார் கச்சியாலயங்கள் கம்பமும்=கயிலையில் வீற்றிருந்தருளும் தனது தோழராகிய ஏகாம்பரநாதர் கச்சிக்கண்ணுள்ள பல ஆலயங்களிலும் திருவேகம்பத்தும் ; மேவியதன்மை கண்டுபோற்ற=வீற்றிருந்தருளும் முறைமையைத்தரிசித்து த்துதிக்கும்படி ; பயிலுமுருப்பலகொண்டு நிதிக்கோன்றங்கப்பயிலளகாபுரி வகுத்தபரிசுகாட்டும்=விஞ்சையினால் தான்பழகிய பலஉருவங்களையெடுத்துக் கொண்டு குபேரன்வசிக்கும்படி தனக்கிடமாகஇருக்கும் அளகாபுரியையும் பலவாகவகுத்த முறைமையைக்காட்டும்.—எ-று. (௧௦௧)

விழவின்மலி திருக்காஞ்சி வரைப்பின்வேளாண் விழுக்குடிமைப் பெருஞ்செல்வர் விளங்கும்வேணி, மழவிளவெண் டிங்கள்புனை கம்பர் செம்பொன் மலைவல்லிக் களித்தவரு ளுணவின்மூலந், தொழவுலகு பெறுமவடா னருளப்பெற்றுத் தொன்னிலத்து மன்னுபயிர் வேதவாய்மை, யுழவுதொழி லாற்பெருக்கி யுயிர்களெல்லா மோங்கவருந் தருமவினைக் குளராலென்றும்.

(இ-ள்.) விழவின்மலி திருக்காஞ்சி வரைப்பின் = மங்கல விழாவால் சிறப்புமிக்கிருக்கும் காஞ்சிநகரத் தெல்லையில்வாழும் ; வேளாண் விழுக்குடிமைப் பெருஞ்செல்வர் = வேளாண்மைத் தொழில்செய்யும் உயர்குலத்தராகிய

பெரிய செல்வர்கள் ; விளங்கும்வேணி மழவிளவெண்டிங் கள்புனைகம்பர் = ஒளிவிடும் சடைமுடியின்மேல் இளமைதங்கிய பிறையைச்சூடிய ஏகாம்பரநாதர் ; செம்பொன் மலைவல்லிக் களித்தவரு ளுணவின்மூலம் = சிவந்த பொன் மலையாகிய இமவான்மகளுக்குக் கொடுத்தருளிய அருள்வடிவான இருநாழி நெல்லையும் ; தொழவுலகு பெறுமவடா னருளப்பெற்று=எல்லாவுயிரும் தன்னை வணங்குதற்கேதுவாய் அவ்வுயிர்களைப்பெற்ற மாதாவாகிய அப்பிராட்டியார் கொடுக்கத்தாம் பெற்று; தொன்னிலத்து மன்னுபயிர்=பழமையாகிய நிலவுலகத்து நிலைபெற்ற பயிர்களை ; வேதவாய்மை யுழவுதொழி லாற்பெருக்கி = வேதத்தில் விதித்தஉழவு தொழிலினால் பெருகச்செய்து ; உயிர்களெல்லாம் ஓங்கவருந்தருமவினைக்கென்றும் உளர்=ஆன்மகோடிகளெல்லாம் விருத்தியடையும்படி வருகின்ற அறவினைகளுக்கெல்லாம்காரணராகஎந்நாளும் இருக்கின்றார்கள்.—எ-று. ஆல்-அசை. (கoஉ)

ஓங்கியநாற் குலத்தொவ்வாப் புணர்விற்றம்மி லுயர்ந்தனவு மிழிந்தனவு மானசாதி, தாங்குழுமிப் பிறந்தகுல பேதமெல்லாந் தந்தகைமைக்கேற்றதனி யிடங்கண்மேவி, யாங்குநிறைகிளை பயின்று மரபினூற்ற வடுத்தவினைத் தொழின்முறைமை வழாமைநீடு,பாங்குவள ரிருக்கைநிலை பலவுமெல்லாம் பண்புநீ டியவுரிமைப் பாலவன்றே.

(இ-ள்.) ஓங்கியநாற் குலத்தொவ்வாப் புணர்வில் = உயர்ந்த நான்கு வருணத்துப் பொருந்தாத கலப்பினால் ; தம்மிலுயர்ந்தன வுமிழிந்தனவுமான= தங்களுக்குள் ஒன்றற்கொன் றுயர்ந்தனவும் ஒன்றற்கொன் றிழிந்தனவுமான ; சாதிதாங்குழு மிப்பிறந்த குலபேத மெல்லாம்=அனுலோமர் பிரதிலோமரென்னும் இருசாதிகளும் அவ்விருசாதிகளுள் அனுலோமத்தானும்பிரதிலோமப்பெண்ணும் பிரதிலோமத்தானும் அனுலோமப்பெண்ணுங்கலந்து பிறந்தபலவேறுவகைப்பட்ட எல்லாச்சாதியும் ; தந்தகைமைக் கேற்றதனி யிடங்கண்மேவி=தமது ஒழுக்கத்திற்குரிய வேறிடங்களிலிருந்து; ஆங்குநிறை கிளைபயின்று=அவ்விடங்களில் நிறைந்த உறவினர்களோடு கலந்து ; மரபினூற்ற அடுத்தவினைத்தொழின் முறைமை வழாமை=தம்மரபிற் செய்தற்குரிய செய்தொழில்களின் முறைமை வழுவாமல் ; நீடுபாங்குவளரிருக்கை நிலைபலவுமெல்லாம்=மிக்க குணத்தோடு ஓங்கியிருக்கும் வீடுகளையுடைய பலவிடங்களும் ; பண்புநீடியவுரிமைப்பால=நற்செய்கைகண்மிக்க உரிமையை உடையனவாகும்.—எ-று.அன்று-ஏ- அசை. ()

அனுலோமராவார்:—மறையவர்தம்சாதியல்லாத மூன்றுவருணத்துப்பெண்களைமணஞ்செய்யுங்கால்அரசமாதிடத்திற் பிறந்த சவர்ணனும் வைசியமாதிடத்திற் பிறந்த நிஷாதனும் சூத்திரப்பெண்ணிடத்திற்பிறந்த பார்சுவனும், அரசர் தம் சாதியல்லாத இரண்டு சாதிப்பெண்களைமணஞ்செய்யுங்கால் வைசியப்பெண்ணிடத்திற் பிறந்த மாகிஷனும் சூத்திரப்பெண்ணிடத்திற்பிறந்த தவுட்ணியனும், வைசியர்தம்சாதியல்லாத சூத்திரமாதை மணஞ்செய்யுங்கால் அவளிடத்திற் பிறந்தஉக்கிரனும் என அறுவர். பிரதிலோமராவார் :—மறையவர் மகளிரி

டத்து விவாகமின்றி க்ஷத்திரியனுக்குப் பிறந்த சூதனும் வைசியனுக்குப் பிறந்த வைதேகனும் சூத்திரனுக்குப்பிறந்த சண்டாளனும், க்ஷத்திரிய மகளிரிடத்து விவாகமின்றிவைசியனுக்குப்பிறந்த மாகதனும் சூத்திரனுக்குப்பிறந்தக்ஷத்தாவும், வைசிய மகளிரிடத்து விவாகமின்றிச் சூத்திரனுக்குப்பிறந்த இரதகாரகனும் என அறுவர். பிரதிலோமத்தானுக்கும் அனுலோமப்பெண்ணுக்கும் பிறந்தவன் விராத்தியன் எனவும், அனுலோமத்தானுக்கும் பிரதிலோமப் பெண்ணுக்கும் பிறந்தவன் அந்தராளன் எனவும் உணர்க. அனுலோமச்சாதிகள் கலப்பாலிழிவுடைத்தேனும் சைவாகமத்திற்கூறும் தீக்ஷைக்கும் நான்காச்சிரம தருமங்கட்கும் உரியன வென்பது தோன்ற உயர்ந்தனவென்றும், அவ்வாறு பிரதிலோம சாதிகள் அருகமுடையனவல்ல பாவமுடையனவென்பது தோன்ற இழிந்தனவென்றுங்கூறினர். இது விராத்தியர் அந்தராளர்க்கும் ஒக்கும்.

வேறு.

ஆதி மூதெயி லந்நகர் மன்னிய
சோதி நீண்மணித் தூபமுந் தீபமுங்
கோதில் பல்லிய முங்கொடி யும்பயில்
வீதி நாளு மொழியா விழாவணி.

(இ-ள்.) ஆதிமூதெயி லந்நகர்மன்னிய=முதன்மையான பழைய மதில் சூழ்ந்த அக்காஞ்சி நகரத்தில் இருக்கின்ற ; சோதிநீண்மணித்தூபமுந் தீபமும்= சுடர்விடுகின்ற பெரியமணிகளாற்செய்த இரத்தின கலசங்களில் இடும் தூபங்களும் இரத்தினத்தம்பங்களில் இடும்விளக்குகளும் ; கோதில்பல்லியமுங் கொடியும்=குற்றமற்றபலவாத்தியங்களும் சொடியாடைகளும் ; பயில்வீதிநாளுமொழியாவிழாவணி=நெருங்கிஇருக்கின்ற வீதிகளெல்லாம் எந்நாளும் திருவிழாச்சிறப்பைநீங்கா திருந்தன.—எ-று. (௧௦௪)

தூபமுந்தீபமும் கோதில் பல்லியமுங் கொடியும் பயில் அந்நகர் மன்னிய வீதிஎன இயையும்.

வாயி லெங்கணுந் தோரண மாமதின்
ஞாயி லெங்கணுஞ் சூழ்முகி னுண்மதி
தோயி லெங்கணு மங்கலந் தொண்டர்சூழ்
கோயி லெங்கணு மும்பர் குலக்குழாம்.

(இ-ள்.) வாயிலெங்கணுந் தோரணம் =(அந்நகரத்திலுள்ள மாளிகைகளின்) வாசல்கள்தோறும் மகரதோரணங்கள் கட்டிஇருக்கின்ற ; மாமதின்ஞாயிலெங்கணுஞ்சூழ்முகில்=பெரியமதிலிலுள்ளஉறுப்புக்களிலெல்லாம் சூழ்கின்ற மேகங்கள் தவழ்கின்ற ; நாண்மதிதோயி லெங்கணுமங்கலம்=நாடோறும் சந்திரன்தவழுகின்ற வீடுகளிலெல்லாம் மங்கலத்தொழில்கள் நடக்கின்றன ; தொண்டர்சூழ்கோயிலெங்கணு மும்பர்குலக்குழாம்=சிவனடியார்கள் வலஞ்செய்யும் ஆலயங்கள் தோறும்தேவச்சாதியரதுதொகுதிகள் இருக்கின்றன.—எ-று.()

வேத வேதியர் வேள்வியே தீயன
மாத ரோதி மலரே பிணியன
காதல்வீதி விலக்கே கவலைய
சூத மாதவி யேபுறஞ் சூழ்வன.

(இ-ள்.) வேதவேதியர் வேள்வியேதீயன=வேதங்களையுணர்ந்த மறையவர்கள் செய்கின்ற யாகங்களே தீயனவாயிருக்கின்றன தீமையுடையனஇல்லை; மாதரோதிமலரேபிணியன=மகளிர்கள் கூந்தலிலிருக்கும்மலர்களே பிணியனவாயிருக்கின்றன பிணியுடையனஇல்லை ; காதல்வீதிவிலக்கேகவலைய=விரும்பத்தக்கதிருவீதியில் உள்ள குறுந்தெருக்களே கவலை யுடையனவாயிருக்கின்றன கவலையுடையனஇல்லை ; சூதமாதவியே புறஞ்சூழ்வன=மாமரங்களும் குருக்கத்திமரங்களுமே புறத்திற்சூழ்வன இரத்தலின்பொருட்டுப் புறஞ்சூழ்வன இல்லை. ()

தமக்கென ஓர்குணமுடைய பொருள்களில் அந்நகரத்தில்லாத தீக்குணமுதலியவற்றை ஏற்றிச் சொற்சிலேடை வகையாற் கூறியவாறு. தீயன=நெருப்பையுடையன. பிணியன=கட்டப்பட்டன. கவலை=சந்துமுடுக்கு. சூழ்வன=சுற்றியிருப்பன.

சாய லார்க ணுசுப்பே தளர்வன
ஆய மாடக் கொடியே யசைவன
சேய வோடைக் களிறே திகைப்பன
பாய சோலைத் தருவே பயத்தன.

(இ-ள்.) சாயலார்கணு சுப்பேதளர்வன=மயில்போலும் சாயலையுடைய மாதர்களது இடைகளே தளர்வடைந்திருக்கின்றன தளர்வடைவன இல்லை ; ஆயமாடக்கொடியே யசைவன=அந்நகரத்தில் கட்டப்பட்டிருக்கின்ற மாளிகைகளில்உள்ள கொடியாடைகளே சலிப்படைகின்றன சலிப்படைகின்றனஇல்லை; சேயவோடைக் களிறேதிகைப்பன = சிவந்த பொன்னாலாகிய நெற்றிப்பட்டத்தையுடைய யானைகளே மயக்கமடைந்து நிற்பன மயக்கமடைகின்றன இல்லை ; பாயசோலைத் தருவேபயத்தன=அகன்ற சோலைகளிலேயுள்ள தருக்களே பயத்தையுடையன அச்சமுடையன இல்லை.—எ-று. (கஎ)

தளர்தல்=ஒசிதல். சலித்தல்=அசைதல். பயம்=பழம் முதலியபலன்.

அண்ண லாரன்ப ரன்பேமு னூர்த்தன
தண்ண றுஞ்செழுந் தாதே துகளன
வண்ண நீண்மணி மாலையே தாழ்வன
எண்ணில் குங்குமச் சேறே யிழுக்கின.

(இ-ள்.) அண்ணலா ரன்பரன்பே முனூர்த்தன = சிவபிரானது அடியார்கள் அன்பே முற்பட்டுப் பிணிக்கப்பட்டன பிணிக்கப்படுவன இல்லை ; தண்ணறுஞ்செழுந்தாதேதுகளன = குளிர்ந்த வாசனைகமழும் செழுமையான பராகங்களே துகளாயுள்ளன குற்றமுள்ளன இல்லை ; வண்ணநீண்மணி மாலையேதா

ழ்வன=அழகிய நீண்ட இரத்தினமாலைகளே தாழ்கின்றன தாழ் வடைந்தன இல்லை ; எண்ணில் குங்குமச் சேறேயிழுக்கின=மிகுந்த குங்குமக்குழம்பே இழுக்குடையன தவறுன நடக்கையுடையன இல்லை.—எ-று. (கoஅ)

ஆர்த்தல்=தொடக்குண்டல். துகளன=பொடியாயுள்ளன. தாழ்தல்=தொங்குதல். இழுக்குதல்=வழுக்குதல்.

வென்றி வானவர் தாம்விளை யாடலும்
என்று முள்ளவர் வாழு மியற்கையு
நன்று முள்ளத்து நண்ணினர் வேட்கையு
மொன்று மங்கொழி யாவகை யுய்ப்பது.

(இ-ள்.) வென்றிவானவர் தாம்விளையாடலும்=வெற்றியையுடைய தேவர்கள் விளையாட்டயர்தலையும் ; என்றுமுள்ளவர் வாழுமியற்கையும்=அழியாநிலைமைபெற்ற சித்தர்கள் எந்நாளும் வாழ்ந்திருக்கின்ற நிலைமையையும் ; நன்றும்=எல்லாநன்மையையும்; உள்ளத்து நண்ணினர்வேட்கையுமொன்றும்=உள்ளத்தோர் பொருளைக் கருதிவைத்திருக்கின்றவர்களது அவாவுள் ஒன்றையும் ; அங்கொழியாவகையுய்ப்பது=அவ்விடத்து நீங்காமலிருக்கும் வண்ணம் செலுத்துவது அந்நகர்.—எ-று. (கoகூ)

புரங் கடந்தவர் காஞ்சிபு ரம்புகழ்
பரப்பு நீள்புவ னம்பதி னுன்கினும்
வரம்பில் போக வனப்பின் வளமெலா
நிரப்பு கொள்கல மென்ன நிறைந்ததால்.

(இ-ள்.) புரங்கடந்தவர்காஞ்சிபுரம் = திரிபுரத்தை யெரித்தருளிய சிவபிரான் வீற்றிருந்தருளும் காஞ்சிபுரமானது ; புகழ்பரம்புநீள்புவனம் பதினுன்கினும்=தன்கீர்த்தி பரம்பிய நீண்டபதினுன்கு உலகினும்உள்ள; வரம்பில்போக வனப்பின் வளமெலாம்= எண்ணிறந்தபோகங்களின் சிறப்பிற்கேதுவான வளப்பங்களெல்லாம் ; நிரம்புகொள்கலமென்னநிறைந்தது=நிறைந்த ஓர்பாத்திரம் போல் நிறைவடைந்திருந்தது.—எ-று. ஆல்-அசை. (ககo)

வேறு.

அவ்வகைய திருநகர மதன்கணொரு மருங்குறைவார்
இவ்வுலகிற் பிறப்பினு லேகாலிக் குலத்துள்ளார்
செவ்வியவன் புடைமனத்தார் சீலத்தி னெறிநின்றூர்
மைவிரவு கண்டரடி வழித்தொண்ட ருளரானுர்.

(இ-ள்.) அவ்வகைய திருநகரமதன்கண்=அத்தன்மையாகிய காஞ்சிபுரத்தின்கண் ; ஒருமருங்குறைவார்=ஓரிடத்தில் வாழ்கின்றவரும் ; இவ்வுலகிற் பிறப்பினுல் = இந்நிலவுலகில் பிறப்பைக் குறிக்குமிடத்து ; ஏகாலிக்குலத்துள்ளார்=ஏகாலியர்குலத்துள் அவதரித்தவரும் ; செவ்விய வன்புடை மனத்தார்=

செப்பமான அன்புவிரவிய மனத்தினரும் ; சீலத்திநெறி நின்றார்=நல்லொழுக்கத்தில் வழுவாது நின்றவரும் ஆகிய ; மைவிரவுகண்டரடி வழித்தொண்டருளராஞர்=கரியதிருமிடற்றையுடைய சிவபெருமானது திருவடிக்குவழிவழியே தொண்டுசெய்தொழுகும்ஒருவர்இருந்தார்.—எ-று. (௧௧௧)

மண்ணின்மிசை வந்ததற்பின் மனமுதலா யினமூன்றும்
அண்ணலார் சேவடியின் சார்வாக வணைவிப்பார்
புண்ணியமெய்த் தொண்டர்திருக் குறிப்பறிந்து போற்றுநிலைத்
திண்மையினாற் றிருக்குறிப்புத் தொண்டரெனுஞ் சிறப்பினார்.

(இ-ள்.) மண்ணின்மிசை வந்ததற்பின்=அவர்நிலவுலகத்தில் அவதரித்தபின் ; மனமுதலாயின மூன்றும்=மனம் வாக்கு காயம் என்னும் திரிகரணங்களும் ; அண்ணலார்சேவடியின் சார்வாகவணைவிப்பார்=சிவபிரானது சிவந்ததிருவடிகளிடத்துப் பற்றாகஇருக்கும்படி செலுத்துகின்றவர் ; புண்ணியமெய்த்தொண்டர் திருக்குறிப்பறிந்து=சிவபுண்ணியமே திருவுருவான மெய்யடியார்களது திருவுளத்துக்குறிப்பையறிந்து ; போற்றுநிலைத்திண்மையினால்=வழிபாடு செய்கின்றபத்திநிலைமையின் உறுதியினால் ; திருக்குறிப்புத் தொண்டரெனுஞ்சிறப்பினார்=திருக்குறிப்புத்தொண்டரென்னுஞ் சிறப்புப்பெயரைஉடையவர்.—எ-று.()

தான்குறித்துணர்தற்குரிய காட்சியுணர்வால் அடியார்திருவுள்ளக் குறிப்பினை உணர்தலில் திருக்குறிப்புத் தொண்டரென்னுஞ் சிறப்புப் பெயருடையரானார் என்க.

தேரொலிக்க மாவொலிக்கத் திசையொலிக்கும் புகழ்க்காஞ்சி
யூரொலிக்கும் பெருவண்ணா ரெனவொண்ணா வுண்மையினார்
நீரொலிக்க வராவிரைக்க நிலாமுகிழ்க்குந் திருமுடியார்
பேரொலிக்க வுருகுமவர்க் கொலிப்பர்பெரு விருப்பினொடும்.

(இ-ள்.) தேரொலிக்க மாவொலிக்க=தேர்ஒலித்தலினாலும் குதிரைகள் கனைத்தலினாலும் சிறப்புற்று ; திசையொலிக்கும் புகழ்க்காஞ்சியூர் = திசைகள்தோறும் பரம்பிய புகழையுடைய காஞ்சிநகரத்தில் ; ஒலிக்கும் பெருவண்ணாரெனவொண்ணா வுண்மையினார்=ஆடைகளைஒலிக்கும் பெரியவண்ணாரென்று சொல்லத்கூடாத மெய்ப்பத்தியுடையவர் ; நீரொலிக்கவரா விரைக்க=கங்கைநீர் முழங்கவும் அதனிடத்துப்பாம்புகள் மூச்சுக்காற்றுவிட்டு வாயாற்சீறவும் ; நிலாமுகிழ்க்குந்திருமுடியார்=அதைக்கண்ட இளம்பிறையானது அஞ்சி ஒடுங்கி யிருக்கும் திருமுடியையுடையாரது ; பேரொலிக்க வுருகுமவர்க்கு = திருநாமங்களைப்பிறஅடியார் உச்சரிக்க அதுகேட்டுமனமும் காயமும் உருகிநிற்கும் அடியார்களுக்கு ; ஒலிப்பர்பெரு விருப்பினொடும் = பெருவிருப்போடு அவர் ஆடையை ஒலித்துக்கொடுப்பார்.—எ-று. (௧௧௨)

ஒலித்தல் என்றது ஈண்டு ஆடையின் அழுக்கை அகற்றுதல். ஆடையொலித்தகூலியென்பதனாலும் உணர்க. பேரொலித்தல்=திருநாமகீர்த்தனஞ்செய்தல்.

தேசுடைய மலர்க்கமலச் சேவடியா ரடியார்தந்
தூசுடைய துகண்மாசு கழிப்பார்போற் றொல்லைவினை
யாசுடைய மலமூன்று மணையவரும் பெரும்பிறவி
மாசுதனை விடக்கழித்து வருநாளி லாங்கொருநாள்.

(இ-ள்.) தேசுடையமலர்க்கமலச் சேவடியாரடியார்தம் = ஒளியுள்ள செந்தாமரைமலர்போன்ற சிவந்த திருவடிகளையுடைய சிவபிரான் அடியார்களது; தூசுடையதுகண்மாசு கழிப்பார்போல் = ஆடைகளிலுள்ள குற்றமாகிய அழுக்கினை நீக்குமவர்போல்; தொல்லைவினை யாசுடையமலமூன்றும அணையவரும் = பழையகன்மம் முதலான குற்றத்தைவிளைக்கும் மும்மலங்களும் தம்மைஅணைந்த காரணத்தால் வருகின்ற; பெரும்பிறவிமாசு = பெரியபிறவியாகிய அழுக்கு; தனைவிடக்கழித்துவருநாளில் ஒருநாள்=தன்னை நீங்கும்படி நீக்கிவருநாட்களுள் ஓர்நாள்.—எ-று. ஆங்கு-அசை. (ககச)

பொன்னிமயப் பொருப்பரையன் பயந்தருளும் பூங்கொடிதன்
னன்னிலைமை யன்றளக்க வெழுந்தருளு நம்பெருமான்
றன்னுடைய வடியவர்தந் தனித்தொண்டர் தம்முடைய
அந்நிலைமை கண்டன்பர்க் கருள்புரிவான் வந்தணைவான்.

(இ-ள்.) பொன்னிமயப்பொருப் பரையன்பயந்தருளும் பூங்கொடிதன் =பொன்மயமாகிய இமயமலை யரசன்பெற்ற உமாதேவியாரது; நன்னிலைமை யன்றளக்க வெழுந்தருளு நம்பெருமான்=நல்லபத்திநிலைமையை அந்நாளிற் பரிசோதிக்க எழுந்தருளிய நமதுபிரானாகிய ஏகாம்பரநாதர்; தன்னுடைய வடியவர்தந் தனித்தொண்டர் தம்முடைய=தம்முடைய அடியார்களுக்கு ஒப்பற்ற அடியவராக இருக்கும் திருக்குறிப்புத் தொண்டநாயனாரது; அந்நிலைமை கண்டன்பர்க்கருள்புரிவான் வந்தணைவான்=அவ்விதபத்திநிலைமையைக் கண்டு அந்நாயனாருக்குக் கிருபைசெய்யும்படி வருவாராயினர்.—எ-று. (சகரு)

இவ்விரண்டுங் குளகம்.

சீதமலி காலத்துத் திருக்குறிப்புத் தொண்டர்பால்
ஆதுலராய் மெலிந்துமிக வழுக்கடைந்த கந்தையுடன்
மாதவ வேடந்தாங்கி மாலறியா மலரடிகள்
கோதடையா மனத்தவர்முன் குறுநடைகள் கொளக்குறுகி.

(இ-ள்.) சீதமலிகாலத்துத் திருக்குறிப்புத் தொண்டர்பால்=குளிர்மிகுந்தகார்காலத்து திருக்குறிப்புத் தொண்டநாயனாரிடத்தில்; ஆதுலராய்மெலிந்து மிகவழுக்கடைந்த கந்தையுடன்=விரத்தராய் நியமவிரதத்தால் திருமேனிஇளைத்து மிக அழுக்கடைந்த பொந்தையுடனே; மாதவவேடந்தாங்கி=மக

த்தான தவவேடமாகிய பூதி உருத்திராக்கங்களை யணிந்து ; மாலறியா மலரடிகள்=திருமாலால் அறியப்படாத மலர்போலுந்திருவடிகள் ; கோதடையாமனத்தவர்முன் = குற்றமில்லாத மனதையுடைய திருக்குறிப்புத்தொண்ட நாயனார் முன் ; குறுநடைகள் கொளக்குறுகி=தளர்ந்தநடைகொள்ளும்படி எழுந்தருளி. எ-று. (ககசு)

தவவேடத்துளெல்லாஞ் சிறந்தமையின் பூதிஉருத்திராக்கங்களே மாதவவேடமெனக் கொள்ளப்பட்டது. குறுநடைகள் கொளஎன்றது திருமேனிஇளைத்தலால் தளர்ந்த நடைகளை அடையவெனக்கொள்க. ஆதுலர்என்றது ஈண்டு விரத்த ரென்னும் பொருள்பட நின்றது.

திருமேனி வெண்ணீறு திகழ்ந்தொளிருங் கோலத்துக்
கருமேக மெனவழுக்குக் கந்தையுட னெழுந்தருளி
வருமேனி யருந்தவரைக் கண்டுமன மகிழ்ந்தெதிர்கொண்
டுருமேவு மயிர்ப்புளக முளவாகப் பணிந்தெழுந்தார்.

(இ-ள்.) திருமேனி வெண்ணீறு திகழ்ந்தொளிருங்கோலத்து=திருமேனியின்மீது வெண்மையாகிய திருநீறு தோற்றமாய் விளங்குகின்ற கோலத்துடன் ; கருமேக மெனவழுக்குக்கந்தையுட னெழுந்தருளிவரும்=ஒருகரியமேகம் போல அழுக்கடைந்த பொந்தையுடனே எழுந்தருளி வராநின்ற ; மேனியருந்தவரைக்கண்டு=அரிய அத்தவவேடராகிய சிவபிரானைத் தரிசித்து ; மனமகிழ்ந்தெதிர்கொண்டு = மனமகிழ்ச்சியடைந்து எதிர்கொண்டுசென்று ; உருமேவுமயிர்ப்புளக முளவாக = தமதுதிருமேனியின்கண் உண்டாகியஉரோமங்கள் புளகிக்கும்படி ; பணிந்தெழுந்தார்=நிலமுற வணங்கி எழுந்தார்.—எ-று. (ககஎ)

கோலம்-பொலிவு. இவ்விரண்டுங்குளகம்.

எய்துமவர் குறிப்பறிந்தே யினியமொழி பலமொழிந்து
செய்தவத்தீர் திருமேனி யிளைத்திருந்த தென்னென்று
கைதொழுது கந்தையினைத் தந்தருளுங் கழுவவென
மைதிகழ்கண் டங்கரந்த மாதவத்தோ ரருள்செய்வார்.

(இ-ள்.) எய்துமவர் குறிப்பறிந்து=எழுந்தருளிய அவ்வடியாரது திருவுளக்குறிப்பறிந்து ;இனியமொழிபலமொழிந்து=இனிமையான சொற்கள் பலவற்றைஎடுத்துக்கூறி ; செய்தவத்தீர் திருமேனி யிளைத்திருந்ததென்னென்று கைதொழுது=செய்யப்பட்ட தவத்தையுடையவரே உம்முடைய திருமேனி இளைப்படைந்திருக்கிறதற்குக் காரணம் யாதென்றுவினவிக்கைகுவித்துவணங்கி; கந்தையினைத்தந்தருளுங்கழுவவென=(திருமேனியில்தரித்திருக்கும்)கந்தையை அழுக்குநீக்கித்தருதற்குக் கொடுத்தருளுமென்றுகேட்க ; மைதிகழ்கண்டங்கரந்த=நீலநிறம்விளங்கிய திருமிடற்றை மறைத்த ; மாதவத்தோரருள்செய்வார் = பெரிய தவவேடத்தையுடைய சிவபிரான் அருளிச்செய்வார்.—எ-று. ஏ-அசை. (ககஅ)

அழுக்கடைந்த கந்தையுடையராய் வந்தமையால் கந்தை ஒலிப்பிக்குங் கருத்துடையரென அவர்குறிப்புணர்தலின் குறிப்பறிந்தாரென்றார்.

இக்கந்தை யழுக்கேறி யெடுக்கவொண்ணா தெனினும்யான்
மெய்க்கொண்ட குளிர்க்குடைந்து விடமாட்டேன் மேற்கடற்பால்
அக்குன்றம் வெங்கதிரோ னணைவதன்முன் றருவீரேற்
கைக்கொண்டு போயொலித்துக் கொடுவாருங் கடிதென்றார்.

(இ-ள்.) இக்கந்தையழுக்கேறி யெடுக்கவொண்ணாதெனினும் = இப்பொந்தையானது அதிக அழுக்கடைந்து தரித்தற்குத்தகுதியற்றதாய் இருப்பினும்; யான்மெய்க்கொண்டகுளிர்க்குடைந்து விடமாட்டேன் = நான் இதை உடம்பினிடத்து அடையும் குளிருக்குப் பயந்து கைவிடமாட்டேன்; மேற்கடற் பாலக் குன்றம் வெங்கதிரோ னணைவதன்முன்றருவீரேல்=மேற்றிசைக் கடலினிடத்து உள்ள அம்மலையைச் சூரியன் அடைவதற்குமுன் கொடுப்பீராயின்; கைக்கொண்டுபோயொலித்துக் கொடுவாருங்கடிதென்றார் = வாங்கிக்கொண்டுபோய்விரைந்து வெளுத்துக்கொண்டு வருவீராகஎன்று அருளிச்செய்தார். = எ-று. (சகக)

எடுத்தல்-உபயோகித்தல்.

அழுக்குமிக்கிருத்தலால் நீக்கவேண்டியதென்பார் எடுக்க வொண்ணாதெனினும் என்றும், பசிப்பிணிக்கு அன்னம்போல் குளிராலாய உடற்பனிப்புக்கு இன்றியமையாச் சிறப்பிற்றாய் இதனைக்கொண்டேன் என்பார் குளிர்க்குடைந்து விடமாட்டேனென்றுங் கூறினர்.

தந்தருளு மிக்கந்தை தாழாதே யொலித்துமக்கின்
றந்திபடு வதன்முன்னந் தருகின்றே னெனவவருங்
கந்தையிது வொலித்துணக்கிக் கடிதின்றே தாரீரேல்
இந்தவுடற் கிடர்செய்தீ ரென்றுகொடுத் தேகினார்.

(இ-ள்.) தந்தருளுமிக்கந்தை தாழாதேயொலித்து = (இவ்வாறருளிச்செய்த சிவபிரானாகிய அடியவரை நாயனார்பார்த்து) இந்தக்கந்தையைக் கொடுத்தருளும் இதனை விரைவாகவெளுத்து; உமக்கின்றந்திபடுவதன் முன்னந்தருகின்றேனென = இன்றைக்கு மாலைப்பொழுதாகுமுன் உமக்குக் கொடுக்கின்றேனென்று நாயனார்கூற; அவருங்கந்தையிது வொலித்துணக்கிக் கடிதின்றேதாரீரேல்=அடியவர்வேடங்கொண்ட சிவபிரானும் கந்தையாகிய இதைவெளுத்து உலர்த்தி விரைந்து இத்தினத்திலேயே தாராதொழிந்தால்; இந்தவுடற்கிடர்செய்தீரென்று கொடுத்தேகினார்=இந்த உடம்பிற்குத் துன்பத்தைச் செய்தீரென்று கொடுத்துப்போனார்.—எ-று. (கஉo)

அடியவர்கள் தம்மை உடற்குவேறாய் என்றுங்காண்பார் என்பார் இந்தஉடல்என்றும், அவ்வடியார்தஞ்சார்பு முதல்வன் சார்பாகநிற்கும்இயல்புடை

யாராதலின் பிராரத்தவினைவழியுதிக்குஞ் சுகதுக்கங்களை உடற்கன்மமாகக் கொள்வாரென்னுங்கருத்தால் தாமும் இந்த உடற்கிடர் செய்தீர் என்றுங்கூறினர்.

குறித்தபொழு தேயொலித்துக் கொடுப்பதற்குக் கொடுபோந்து
வெறித்தடநீர்த் துறையின்கண் மாசொழிந்து மிகப்புழுக்கிப்
பிறித்தொலிக்கப் புகுமளவிற் பெரும்பகல்போய்ப் பின்பகலாய்
மறிக்கரத்தார் திருவருளான் மழையெழுந்து பொழிந்திடுமால்.

(இ-ள்.) குறித்தபொழுதே யொலித்துக்கொடுப்பதற்குக் கொடுபோந்து =(சிவபிரானாகிய திருத்தொண்டரால்)குறிக்கப்பட்ட மாலைப் பொழுதிற்கு முன் வெளுத்துக்கொடுக்கும்படி வாங்கிக்கொண்டுபோய் ; வெறித்தடநீர்த்துறையின் கண்மாசொழித்து=வாசனைகமழும் விசாலமாகிய (ஆடையொலிக்கும்) நீர்த்துறையின்கண் அழுக்குநீங்கும்படிதோய்த்து ; மிகப்புழுக்கிப்பிறித்தொலிக்கப்புகுமளவில்=சாணம் உவர்மண்சேர்த்து நீர்வார்த்துப்புழுக்கிஅவ்வழுக்கைப்பிறித்து மீண்டு ஒலிக்கப்புகுமிடத்து ; பெரும்பகல்போய்ப் பின்பகலாய் =உச்சிப்பொழுதுபோய் அபரான்னமாய் ; மறிக்கரத்தார் திருவருளால்=மான்கன்றையேந்திய சிவபிரான் திருவருளினால் ; மழையெழுந்து பொழிந்திடும்=மேகந் திரண்டெழுந்து நீரைப்பெய்யும்.—எ-று. ஆல்-அசை. (௬௨௧)

திசைமயங்க வெளியடைத்த செறிமுகிலின் குழாமிடைந்து
மிசைசொரியும் புனற்றாரை விழிநுழையா வகைமிடைய
அசைவுடைய மனத்தன்ப ரறிவுமறந் தருந்தவர்பால்
இசைவுநினைந் தழிந்தினியா னென்செய்கே னெனநின்றார்.

(இ-ள்.) திசைமயங்கவெளியடைத்த=திக்குகள் மயங்கும்படி அந்தன் இடைவெளிகளைமூடிய ; செறிமுகிலின் குழாமிடைந்து=செறிந்த மேகக்கூட்டங்கள் ஒன்றாகச்சேர்ந்து ; மிசைசொரியும் புனற்றாரை=விண்ணினின்றும் சொரிகின்றநீர்த்தாரையானது ; விழிநுழையாவகைமிடைய=கட்பொறிகள் நுழைந்து செல்லுதற்கிடமின்றி நெருங்கியிருக்க (அதனால்); அசைவுடைய மனத்தன்பர் அறிவுமறந்து=வருத்தமடைந்த மனதையுடைய அந்நாயனார் தமதுஉணர்வு மயங்கி ; அருந்தவர்பாலிசைவு நினைந்தழிந்து=அரியதவத்தையுடைய சிவபிரானாகியஅடியவரிடத்து தாம் அவர் வருந்தாவண்ணந்தருகின்றேனென்று கொண்ட உடன்பாட்டைநினைந்துமனம்புழுங்கி ; இனியானென்செய்கேனெனநின்றார்=இனியானிதற்கென்செய்கேனென்றுநினைந்து அங்குநின்றருளினார்.—எ-று.

ஓவாதே பொழியுமழை யொருகால்விட் டொழியுமெனக்
காவாலி திருத்தொண்டர் தனிநின்றார் விடக்காணார்
மேவார்போற் கங்குல்வர மெய்குளிரும் விழுத்தவர்பால்
ஆவாவென் குற்றேவ லழிந்தவா வெனவிழுந்தார்.

(இ-ள்.) ஓவாதேபொழியுமழை = நீங்காமல்பொழிகின்றமழையானது ; ஒருகால் விட்டொழியுமென = ஒருதரம்விட்டுவிடுமென்று ; காவாலிதிருத்தொண்டர் = சிவபிரானது திருத்தொண்டராகிய திருக்குறிப்புத்தொண்டநாயனார் ; தனிநின்றார்விடக்காணார் = தனியேயோசித்துநின்றார்மழைபெய்யாதொழியக்காணாமல் ; மேவார்போற்கங்குல்வர = பகைவர்போல்இரவானதுவர (அதனால்) ; மெய்குளிரும்விழுத்தவர்பால் = திருமேனிபனிப்படையும்மேலானதவத்தையுடைய அடியவரிடத்து ; ஆவாவென்குற்றேவலழிந்தவா வெனவிழுந்தார் = ஆ ஆ யான் செய்யுங்குற்றேவலாகியபணிவிடைஅழிந்தவண்ணம்ஈதென்றுநிலத்தில்மயங்கிவிழுந்தார்.—எ-று. ஆவா = இரக்கக்குறிப்பு. (கஉங)

விழுந்தமழை யொழியாது மெய்த்தவர்சொல் லியவெல்லை
கழிந்ததுமுன் பொலித்துமனைக் காற்றேற்க வறிந்திலேன்
செழுந்தவர்தந் திருமேனி குளிர்காணுந் தீங்கிழைத்த
தொழும்பனேற் கினியிதுவே செயலென்று துணிந்தெழுவார்.

(இ-ள்.) விழுந்தமழையொழியாது = பெய்கின்றமழையானதுபொழியாதொழியவில்லை ; மெய்த்தவர்சொல்லியவெல்லைகழிந்தது = மெய்ம்மையானதவத்தையுடைய அடியார்சொல்லிய மாலைப்பொழுதும் நீங்கினது ; முன்பொலித்துமனைக்காற்றேற்கவறிந்திலேன் = முன்னமே இதனைவெளுத்து வீட்டிற்காற்றையேற்றி உலர்த்த வறியேன் ; செழுந்தவர்தந்திருமேனி = நன்மைமிக்க அடியாரது திருமேனியானது ; குளிர்காணுந்தீங்கிழைத்த = குளிரடையும்படி குற்றஞ்செய்த ; தொழும்பனேற்கினியிதுவே செயலென்று = அடியேனுக்கு இனிமேல் தீர்வாகச்செய்யுந்திறம் இதுவேயென்று ; துணிந்தெழுவார் = நிச்சயித்தெழுவாராயினார்.—எ-று. (கஉச)

மனைக்காற்றேற்றல் = தோய்த்தகந்தையைப்பிழிந்து இருபுறத்திலும் இருவர் பிடித்து மனையில் நின்று வீசிக்காற்றுண்டாக்கல்.

கந்தைபுடைத் திடவெற்றுங் கற்பாறை மிசைத்தலையைச்
சிந்தவெடுத் தெற்றுவனென் றணைந்துசெழும் பாறைமிசைத்
தந்தலையைப் புடைத்தெற்ற வப்பாறை தன்மருங்கு
வந்தெழுந்து பிடித்ததணி வளைத்தழும்பர் மலர்ச்செங்கை.

(இ-ள்.) கந்தைபுடைத்திட வெற்றுங்கற்பாறைமிசை = கந்தைநீர்சேர்ந்தமையால் காற்றுக்கொண்டுபுடைக்கும்படி அடிக்கின்ற துறைக்கல்லில் ; தலையைச்சிந்தவெடுத்தெற்றுவனென்றணைந்து = தன்தலையைச்சிதறும்படி எடுத்துமோதுவேனென்று அத்துறைக்கல்லைக் கிட்டி ; செழும்பாறைமிசை = செப்பமானஅத்துறைக்கல்லினிடத்து ; தந்தலையைப்புடைத்தெற்ற = தன்னுடையசிரசைமோதிஅடிக்குமிடத்து ; அப்பாறைதன்மருங்கு வந்தெழுந்துபிடித்தது = அத்துறைக்கல்லினிடத்து உதித்து நாயனார் திருக்கரத்தைப்பிடித்துக் கொண்டது ;




1. திருக்குறிப்புத்தொண்டர்.
2. ஸ்ரீஏகாம்பரநாதர்.
3. அழுக்காடை.

திருக்குறிப்புத்தொண்டர் ஏகாலியர்குலத்துதித்துச் சிவனடியார்கள் ஆடைகளை ஒலித்துத்தரும் நியமம் பூண்டொழுகும் நாளில் ஸ்ரீஏகாம்பரநாதர் ஓர்தவசிரேட்டராய் அழுக்காடையுடன் நாயனர்முன் தோன்ற அவரைக்கண்டுவணங்கிக் குறித்தகாலத்திற்குள் அவ்வாடையை ஒலித்துத்தருவதாகப்பெற்று அழுக்குசிறிதுபோக்கி வெள்ளாவியில்வைத்து ஒலிக்குந்தருணத்தில் ஸ்ரீஏகாம்பரநாதர்திருவருளால் மாரிபெய்து மாலைப்பொழுதுதோன்ற நாயனர் பயந்து குறித்தகாலங் கடந்ததென்று தமது சிரசைக்கற்பாறையில்மோதச் சர்வாந்தரியாமியாகிய ஸ்ரீஏகாம்பரநாதர் தமது திருக்கரத்தால் நாயனர் சிரசைத்தாங்கி இடபாரூடராய் அனுக்கிரகித்தது.

அணிவளைத்தழும்பர்மலர்ச்செங்கை=அழகிய காமலோசனியாருடைய வளைத்தழும்பணிந்தஏகாம்பரநாதரது தாமரைமலர்போலுஞ்சிவந்ததிருக்கரம்.—எ-று. ()

வானிறைந்த புனன்மழைபோய் மலர்மழையா யிடமருங்கு
தேனிறைந்த மலரிதழித் திருமுடியார் பொருவிடையின்
மேனிறைந்த துணைவியொடும் வெளிநின்றார் மெய்த்தொண்டர்
தானிறைந்த வன்புருகக் கைதொழுது தனிநின்றார்.

(இ-ள்.) வானிறைந்தபுனன்மழைபோய்மலர்மழையாயிட=ஆகாயத்தினிடத்துப்பொழிகின்ற மழைநீங்கித்தேவர்கள்பொழியும் மலர்மழையுண்டாக; மருங்குதேனிறைந்தமலரிதழித்திருமுடியார்=தன்னிடத்துத்தேன்நிறைந்த மலர்ந்தகொன்றைப்பூமாலையைச்சூடிய திருமுடியையுடையசிவபிரான்; பொருவிடையின்மேனிறைந்ததுணைவியொடும் வெளிநின்றார்=போர்த்தொழில்செய்யும் இடபத்தின்மேல்நிறைவடைந்ததமதுதேவியாரோடுவெளிப்பட்டருளினார்; மெய்த்தொண்டர்நிறைந்த வன்பொழுகக் கைதொழுதுநின்றார்=மெய்ம்மையானதிருக்குறிப்புத்தொண்டர் தம் உள்ளத்துநிறைந்த அன்புபெருகும்படிகைகுவித்து வணங்கித்தனியேநின்றார்—எ-று. தான்-அசை. (கஉசு)

முன்னவரை நேர்நோக்கி முக்கண்ணர் மூவுலகு
நின்னிலைமை யறிவித்தோ நீயுமினி நீடியநம்
மன்னுலகு பிரியாது வைகுவா யெனவருளி
யந்நிலையே யெழுந்தருளி யணியேகாம் பரமணைந்தார்.

(இ-ள்.) முன்னவரைநேர்நோக்கிமுக்கண்ணர்=தம்திருமுன்னே நிற்கின்ற அந்நாயனாரைநேராகப்பார்த்தருளி மூன்றுகண்களையுடையபிரானார்; மூவுலகுநின்னிலைமையறிவித்தோம்=மூன்றுலகத்தும்உன்னுடையமகிமையைவிளங்கச்செய்தோம்; நீயுமினிநீடியநம் மன்னுலகுபிரியாதுவைகுவாயெனவருளி=அதுவன்றிநீயும் இனிபெருமைமிக்கநமது அழியாதசிவபதத்தைநீங்காதிருப்பாயாகவென்று அருளிச்செய்து; அந்நிலையேயெழுந்தருளி=அப்பொழுதேமறைந்தெழுந்தருளி; அணியேகாம்பரமணைந்தார்=அழகியதிருவேகாம்பரத்தை அடைந்தருளினார்—எ-று. (கஉஎ)

சீர்நிலவு திருக்குறிப்புத் தொண்டர்திருத் தொழில்போற்றிப்
பார்குலவத் தந்தைதா ளறவெறிந்தார் பரிசுரைக்கேன்
பேரருளின் மெய்த்தொண்டர் பித்தனெனப் பிதற்றுதலால்
ஆருலகி லிதனுண்மை யறிந்துரைக் கவிசைந்தெழுவார்.

(இ-ள்.) சீர்நிலவுதிருக்குறிப்புத்தொண்டர்=புகழ்விளங்கிய திருக்குறிப்புத்தொண்டநாயனாரது; திருத்தொழில்போற்றி=திருத்தொண்டைத்துதித்துமேல்; பார்குலவத்தந்தைதாளறவெறிந்தார்பரிசுரைக்கேன்=உலகமெல்லாம் அறியும்படிதந்தையாகிய எச்சதத்தன்தாளறும்படி மழுவாற்றுணித்தசண்டே

சரது சரிதத்தைச்சொல்லத்தொடங்கினேன் (தந்தைதாளெறிதல்தீங்கன்றோவெனின்); பேரருளின்மெய்த்தொண்டர்பித்தனெனப்பிதற்றுதலால்=பேரருளினையுடையவன்றொண்டப்பிரான் முதல்வனையாட்கொள்ளவருங்கால் பித்தனென்றுரைத்தலினால்; ஆருலகிலிதனுண்மையறிந்துரைக்கவிசைந்தெழுவார்=இச்சண்டேசர்பாதகம்பணியாம்உண்மையை ஆராய்ந்துஉரைக்கவல்லுனர்யாவர் ஒருவருமில்லை—எ-று. (௧௨அ)

தடுத்தாட்கொள்ளவந்தபிரானை வன்றொண்டர் பித்தனென்றிகழ்ந்ததைஅம்முதல்வர் நன்காகக்கொண்டு அதனையேமுதலாகவைத்துப்பாடென்றருளியவாறுபோலஇப்பாதகத்தையும் நன்காகக்கொண்டு சண்டேசர்பதங்கொடுத்தலின் இதனுண்மையறிந்துரைத்தல் கூடாதென்றுராயிற்று. முதல்வனுக்கு அதிபாதகம்நன்காதல்போல மகாபாதகமும் நன்காயிற்றென்றுணர்க.

திருக்குறிப்புத்தொண்ட நாயனார்புராணம்.
முற்றிற்று.
ஆகதிருவிருத்தம் ௧௨௬௦.

உ

திருச்சிற்றம்பலம்.

# சண்டேசுரநாயனார் புராணம்.

பூந்தண் பொன்னி யெந்நாளும் பொய்யா தளிக்கும் புனனாட்டு
வாய்ந்த மண்ணித் தென்கரையின் மன்ன முன்னாள் வரைகிழிய
ஏந்து மயில்வே னிலைகாட்டி யிமையோ ரிகல்வெம் பகைகடக்குஞ்
சேந்த னளித்த திருமறையோர் மூதூர் செல்வச் சேய்ஞலூர்.

(இ-ள்.) பூந்தண்பொன்னியெந்நாளும்=பொலிவுடைத்தாகிய தட்பமுடைய காவிரிநதியானது எக்காலமும்; பொய்யாதளிக்கும்புனனாட்டு=பெருகுங்காலத்துப்பொய்த்தலின்றி நீரைக்கொடுக்கின்ற சோழநாட்டின்; வாய்ந்தமண்ணித்தென்கரையின்மன்ன=சிறப்பமைந்தமண்ணியாற்றின் தென்கரையிலே நிலைபெறுக; முன்னாள்வரைகிழிய ஏந்துமயில்வேனிலைகாட்டி=ஆதிகாலத்தில் கிரவுஞ்சகிரியானது இருகூறுப்படவுபட ஏந்தியகூர்மையான வேற்படையின் வலியைக்காண்பித்து; இமையோரிகல்வெம்பகை கடக்கும்=தேவர்களோடுமாறுபட்டகொடியதாருகன்முதலிய அசுரர்களாகிய பகைவரைவெற்றிகொண்ட; சேந்தனளித்ததிருமறையோர்மூதூர் = முருகக்கடவுள் உண்டாக்கிய செல்வமிக்கமறையவர்கள்வாழும்பழைய ஊரானது; செல்வச்சேய்ஞலூர் = செல்வமிக்கதிருச்சேய்ஞலூர்.—எ-று. (௧)

சேய்ஞலூர்என்றது நகரத்துக்கு ஞகரம் ஒத்துவந்தஎழுத்துப்போலி. முரு

சக்கடவுள் கிரவுஞ்சகிரியையும் தாருகனையுங்கொன்றபாவம் போகச்சிவபிரானை ப்பூசித்ததலம் ஆதலின் சேந்தனளித்த சேய்ஞலூரென்றார். மண்ணித்தென்கரை யின் மன்ன அளித்தமூதூர் எனஇயையும்.

செம்மைவெண்ணீற் றொருமையினு ரிரண்டுபிறப்பின் சிறப்பினர்
மும்மைத்தழலோம் பியநெறியார் நான்குவேத முறைபயின்றார்
தம்மையைந்து புலனும்பின் செல்லுந்தகையா ரறுதொழிலின்
மெய்ம்மையொழுக்க மேழுலகும் போற்றுமறையோர் விளங்குவது.

(இ-ள்.) செம்மை வெண்ணீற்றொருமையினர்=செப்பமான திருவெண் ணீறு தரிக்கும் வைதிகசைவநெறியில் ஒருப்பட்ட பத்தியுடையவர்களும் ; இர ண்டுபிறப்பின்சிறப்பினர்=சன்மத்தினுலும் கன்மத்தினுலும் ஆகியஇருபிறப்பின் சிறப்பையுடையவர்களும் ; மும்மைத்தழலோம்பிய நெறியார்=மூன்றக்கினிகளை வளர்க்கும் வைதிகநெறியையுடையவர்களும் ; நான்குவேதமுறைபயின்றார்=நா ன்குவேதங்களையும் கிரமமாக ஓதினவர்களும் ; ஐந்துபுலனுந்தம்மைப்பின் செ ல்லுந்தகையார்=யாவரையும் தம்வழிச்செலுத்தும் ஐம்புலவிடயங்களையுந்தம்மை ப்பின் செல்லச்செய்யுந்தகுதியை உடையவர்களும் ஆகிய ; அறுதொழிலின் மெய்ம்மையொழுக்கம்=ஓதல்முதலிய அறுதொழிலோடுகூடிய மெய்ம்மையான ஒழுக்கத்தை ; ஏழுலகும் போற்றுமறையோர் விளங்குவது=ஏழுலகத்தாரும் புகழத்தக்கமறையவர்கள் விளங்கியிருப்பது அவ்வூர்.—எ-று. (உ)

முறைபயின்றாரென்றதனால் பதமும் சடையும் கிரமமும் கனமும் ஆகிய முறைமையோடு பயின்றவர் என்க.

கோதின்மான்றோற் புரிமுந்நூல் குலவுமார்பிற் குழைக்குடுமி
யோதுகிடைசூழ் சிறுவர்களு முதவும்பெருமை யாசானும்
போதின்விளங்குந் தாரகையு மதியும்போலப் புணர்மடங்கண்
மீதுமுழங்கு முகிலொதுங்க வேதவொலிகண் முழங்குவன.

(இ-ள்.) கோதின்மான்றோற் புரிமுந்நூல்குலவுமார்பில்=குற்றமற்றமா ன்றோலோடுகூடிய முப்புரிநூலானது விளங்குகின்றமார்பினையும் ; குழைக்குடு மியோதுகிடை சூழ்சிறுவர்களும் = மிருதுவானகுடுமியையும் உடையவேத மோதும்குழாமாகச்சூழ்ந்த சிறுவர்களும் ; உதவும்பெருமையாசானும்=வேதத் தைக்கற்பிக்கும் பெருமையையுடைய குருவும் ; போதின்விளங்குந்தாரகையு மதியும்போலப்புணர்=இராக்காலத்து விளங்கித்தோன்றுகின்ற விண்மீன்களையும் சந்திரனையும் போலச்சூழ்ந்திருக்கின்ற; மடங்கண்மீதுமுழங் குமுகிலொதுங்க= ஓதும் பள்ளிகளின்மீது முழங்குகின்றமேகங்கள் ஒதுங்கவும் ; வேதவொலிகண் முழங்குவன=வேதமோதும் ஒலிகள்ஒலிக்கின்றன.—எ-று. (ந)

யாகநிலவுஞ் சாலைதொறு மறையோரீந்த வவியுணவின்
பாகநுகர வருமாலு மயனுமூரும் படர்சிறைப்புண்

மாகமிகந்து வந்திருக்குஞ் சேக்கையெனவும் வானவர்கோ
னுக்மணையுங் கந்தெனவு நாட்டும்யூப வீட்டமுள.

(இ-ள்.) யாகநிலவுஞ்சாலைதொறும்=யாகஞ்செய்கின்றசாலைகள் தோறும்; மறையோரீந்த வவியுணவின் பாகநுகரவரும்=மறையவர்கள்கொடுக்கின்ற அவிப்பாகத்தைஉண்ணவருகின்ற ; மாலுமயனுமூரும்படர்சிறைப்புள்=திருமாலும் பிரமனும்செலுத்துகின்றபடர்ந்தசிறகினையுடையகருடனும்அன்னமும் ;மாகமிகந்துவந்திருக்குஞ் சேக்கையெனவும் = விண்ணுலகத்தைவிட்டுப்பூமியில் வந்து இருத்தற்கிடமானகுடம்பைபோலவும்; வானவர்கோனுகமணையுங்கந்தெனவும்= அவியுணவுகொள்ளப் பூமியில்வந்த இந்திரனது அயிராவத யானையைக்கட்டுந் தறிபோலவும் ; நாட்டும்யூபவீட்டமுள=நாட்டப்பட்டயூபத்தம்பங்களின் தொகுதிகள் அநேகம்உண்டு.—எ-று. (ச)

சதுரமாய்நீண்டிருக்கும் யூபத்தம்பத்தின்நுனி முகிழம்போலிருத்தலின் சேக்கைபோலென்றார். யூபத்தம்பம்=பசுபந்தத்தின்பொருட்டு யாகசாலைக்கண் நாட்டும் ஓர்தறி.

தீம்பாலொழுகப் பொழுதுதொறு மோமதேனுச் செல்வனவுந்
தாம்பாடியசா மங்கணிப்போர் சமிதையிடக்கொண் டணைவனவும்
பூம்பாசடைநீர்த் தடமூழ்கி மறையோர்மகளிர் புகுவனவும்
ஆம்பான்மையினில் விளங்குவன வணிநீண்மறுகு பலவுமுள.

(இ-ள்.) தீம்பாலொழுகப் பொழுதுதொறும்=மதுரமானபால் ஒழுகும்படிகாலந்தோறும்; ஓமதேனுச்செல்வனவும்=ஓமத்திற்குப் பால்கொடுக்கும் பசுக்கள்செல்லுதலும் ; தாம்பாடியசாமங்கணிப்போர் = தாங்கள் ஓதியவேதங்களை உருவோட்டுகின்ற பிரமசாரிகள் ; சமிதையிடக்கொண்டணைவனவும்=ஓமத்தீயில்தானம் செய்யும்படி சமிதைகளை எடுத்துக்கொண்டு வருதலும் ; பூம்பாசடைநீர்த்தடமூழ்கி = மலர்களோடுகூடிய பசிய இலைகளையுடைய தடாகத்தின் நீரில் முழுகி ; மறையோர்மகளிர் புகுவனவும்=மறையவர்களது பன்னிகள்புகுதலும்; ஆம்பான்மையினில் விளங்குவன=ஆகியகுணங்களோடுவிளங்கியிருக்கும்; அணிநீண்மறுகு பலவுமுள = அழகிய நீண்ட வீதிகள்பலஉண்டு அவ்வூரில்.—எ-று. ()

செல்வன, அணைவன, புகுவன, பன்மை முற்றுத்தொழிற்பெயர்.

பொழுதுதொறும் என்றதனால் உச்சிப்பொழுதில்அக்கினி கோத்திரம் இன்மையால் காலைமாலைஇரண்டுங்கொள்க. பிரமசரியர்க்கு அக்கினி கோத்திரம் இன்மையால் சமிதைமாத்திரம் சாயுங்காலத்து ஓமஞ்செய்வாராதலிற் சமிதையிடக்கொண்டணைவனவும் என்றார்.

வாழ்பொற்பதிமற் றதன்மருங்கு மண்ணித்திரைகள் வயல்வரம்பின்
றாழ்விற்றரளஞ் சொரிகுலைப்பாற் சமைத்தயாகத் தடஞ்சாலை
சூழ்வைப்பிடங்க ணெருங்கியுள தொடங்குசடங்கு முடித்தேறும்
வேள்வித்தலைவர் பெருந்தேர்கள் விண்ணோரேறும் விமானங்கள்.

(இ-ள்.) வாழ்பொற்பதியதன்மருங்கு=இவ்விதமறையவர்கள் வாழ்கின்றஅழகிய அத்திருப்பதியில் ; மண்ணித்திரைகள் வயல்வரம்பின்தாழ்வில்=மண்ணியாற்றின்அலைகள்வயல்வரம்பின்பள்ளத்தில்; தரளஞ்சொரிகுலைப்பால்=முத்துக்களைவீசுகின்றகரையினிடத்து;சமைத்தயாகத்தடஞ்சாலை=ஆக்கியவிசாலமாகியயாகசாலைகள் ;சூழ்வைப்பிடங்கணெருங்கியுள=சூழ்ந்தவைப்பாகியஇடங்களில்நெருங்கியுள்ளன ; தொடங்குசடங்குமுடித்து=தாங்கள்தொடங்கிய வேள்விச்சடங்குகளை முற்றமுடித்து ; ஏறும்வேள்வித்தலைவர்பெருந்தேர்கள்=யாகமுதல்வர்கள் ஏறும் பெரியதேர்களும் ; விண்ணோரேறும் விமானங்கள்=தேவர்கள் ஏறுகின்றவிமானங்களும்.—எ-று. மற்று - அசை. (௬)

வேள்வித்தலைவர்பெருந்தேர்கள் விண்ணோரேறும் விமானங்கள் நெருங்கியுள எனஇயையும். யாகஞ்செய்வித்தார் யாகமுடிவில் அவபிருத நீராடியபின்னர் மங்கலகரமாய்த்தேரேறி வீடுசேர்வர் ஆதலின் ஏறும்வேள்வித்தலைவர்பெருந்தேர்கள் என்றார். ஈண்டுவேள்வித்தலைவர் என்றது வேள்விசெய்வித்தாரை. அவியுணவின்பொருட்டுவந்த விண்ணோர்கள் யாகம்முடிந்துழி விமானத்தில் ஏறித்தம்மூர் புகுவார் ஆதலின் விண்ணோர்ஏறும் விமானங்கள் என்றார்.

மடையிற்கழுநீர் செழுநீர்சூழ் வயலிற்சாலிக் கதிர்க்கற்றை
புடையிற்சுரும்பு மிடைகமுகு புனலிற்பரம்பு பூம்பாளை
அடையிற்பயிலுந் தாமரைநீ ளலரிற்றுயிலுங் கயல்கள்வழி
நடையிற்படர்மென் கொடிமௌவ னணையிற்றிகழுஞ் சினைக்காஞ்சி.

(இ-ள்.) மடையிற்கழுநீர்=ஓடுகின்றநீரைஅடைக்கும் மடைகளில்செங்கழுநீர்களும் ; செழுநீர்வயலிற்சாலிக்கதிர்க்கற்றை=செழுமையாகிய நீர்சூழ்ந்த வயலினிடத்து நெற்கதிர்களின்கூட்டமும்; புடையிற்சுரும்புமிடைகமுகு=அதன்பக்கங்களில் வண்டுகள் தேன்நசையால் ஒலிக்கும்கமுகமரங்களும்; புனலிற்பரம்புபூம்பாளை=நீரிற்பரம்பியிருக்கின்ற கமுகமரத்தின் பூம்பாளைகளும்; அடையிற்பயிலுந்தாமரை நீளலரிற்றுயிலுங்கயல்கள்=இலையோடுகூடிய நீண்டதாமரைமலரில் துயில்கின்றகயல்மீன்களும்; வழிநடையிற்படர்மென்கொடிமௌவல்=நடக்கும்வழியிற்படர்ந்த மிருதுவானகொடியையுடைய முல்லைகளும் ; நணையிற்றிகழுஞ்சினைக்காஞ்சி = முகையால் விளங்குங்கிளைகளையுடைய காஞ்சிமரங்களும் (அவ்வூரில் உள்ளன).—எ-று. (௭)

சென்னியபயன் குலோத்துங்கச் சோழன்றில்லைத் திருவெல்லை
பொன்னின்மயமாக் கியவளவர் போரேறென்றும் புவிகாக்கு
மன்னர்பெருமா னநபாயன் வருந்தொன்மரபின் முடிசூட்டுந்
தன்மைநிலவு பதியைந்தி னொன்றாய்விளங்குந் தகைத்தவ்வூர்.

(இ-ள்.) சென்னியபயன்குலோத்துங்கச்சோழன்=சோழவமிசத்தில் அவதரித்த அபயகுலசேகரனும் குலோத்துங்கச்சோழனும்; தில்லைத்திருவெல்லை=

சிதம்பரத்தின் திருவெல்லையை ; பொன்னின்மயமாக்கிய வளவர்போரேறு= பொற்றகட்டால்வேய்ந்த அவ்வமிசத்தினனும் போரைச்செய்யுஞ் சிங்கேறுபோன்று ; என்றும்புவிக்காக்கு மன்னர்பெருமான்=தன்காலமுழுதும் பூமியை அரசாளும் அரசர்பெருமானுமாகிய ; அநபாயன்வருந்தொன்மரபில் = அநபாயச்சக்கிரவர்த்தியும் அவதரித்தபழமையான மரபினராகியசோழர்கள் ; முடிசூட்டுந்தன்மைநிலவுபதியைந்தின் = முடிசூட்டிக்கொண்டு அரசாளுதற்கிடமான மேன்மைமிக்கஐந்து திருப்பதிகளில் ; ஒன்றாய்விளங்குந்தகைத்தவ்வூர்=ஒன்றாகவிளங்குந்தகைமையுடையது அந்தத்திருச்சேய்ஞலூர்.—எ-று. (அ)

ஐந்துதிருப்பதிகளாவன:—கருவூர்-உறையூர்- திருவாரூர் - திருச்சேய்ஞலூர்-காவிரிப்பூம்பட்டினம்-எனஇவை. அபயகுலசேகரசோழன் திருமுறைகண்டமையாலும் அநபாயன் இந்நூல்செய்வித்தோன்ஆதலானும் இவர்மரபினராகிய சோழரெனச்சிறப்பித்தல் அமைவுடைத்து குலோத்துங்கச்சோழனையும் உடன்கூறியது எற்றுக்கெனின் அவன் அக்காலத்துச்சேய்ஞலூரை அரசாண்டிருக்கும் பயன்கருதி என்க.

பண்ணின்பயனா நல்லிசையும் பாலின்பயனா மின்சுவையுங்
கண்ணின்பயனும் பெருகொளியுங் கருத்தின்பயனா மெழுத்தஞ்சும்
விண்ணின்பயனும் பொழிமழையும் வேதப்பயனுஞ் சைவமும்போன்
மண்ணின்பயனா மப்பதியின் வளத்தின்பெருமை வரம்புடைத்தோ.

(இ-ள்.) பண்ணின்பயனாநல்லிசையும் = பண்ணிற்குப்பயனாகிய நல்லவோசையும் ; பாலின்பயனா மின்சுவையும்=பாலிற்குப்பயனாகிய இனியசுவையும் ; கண்ணின்பயனும்பெருகொளியும்=கண்ணிற்குப்பயனாகிய விளக்குமுதலியமிக்க ஒளியும் ; கருத்தின்பயனா மெழுத்தஞ்சும்=நினைப்பிற்குப்பயனாகிய திருவைந்தெழுத்தும் ; விண்ணின்பயனும் பொழிமழையும் = ஆகாயத்திற்குப் பயனாகிய பொழிகின்றமழையும் ; வேதப்பயனுஞ் சைவமும்போல்=வேதத்திற்குப் பயனாகிய சைவசமயமும்போல; மண்ணின்பயனாமப்பதியின்=நிலவுலகத்திற்குப் பயனாயமைந்த அத்திருச்சேய்ஞலூரிலுள்ள ; வளத்தின்பெருமை வரம்புடைத்தோ= வளங்களின்பெருமை எடுத்துக்கூறும் அளவுடையதன்று.—எ-று. (௯)

பண்ணின்கணுள்ள ஓசை அதனைச்சிறப்பித்துப்பயன்படச்செய்தலிற்பண்ணின்பயனென்றும், கண்ணினொளிவிளக்குமுதலிய ஒளியாற்பயன்படுதலிற்கண்ணின்பயனும் பெருகொளிஎன்றும், திருவைந்தெழுத்தைஓத எழுங்கருத்தேசிறப்புடைமையின் அக்கருத்துக்குப்பயனாவது திருவைந்தெழுத்தாதலிற் - கருத்தின்பயனாமெழுத்தஞ்சும்என்றும், வேதம்பலபொருளைக்கூறுமேனும் அதனாற்சித்தித்தபயன் சைவமாதலில் வேதப்பயனுஞ்சைவமென்றுங்கூறினர் - ஏனையபதங்களின் பயன் வெளிப்படை.

பெருமைபிறங்கு மப்பதியின் மறையோர்தம்முட் பெருமனைவாழ்
தருமநிலவு காசிபகோத் திரத்துத்தலைமை சார்மரபில்

அருமைமணியு மளித்ததுவே நஞ்சுமளிக்கு மரவுபோல்
இருமைவினைக்கு மொருவடிவா மெச்சதத்த னுளனானான்.

(இ-ள்.) பெருமைபிறங்குமப்பதியின் மறையோர்தம்முள் = மேன்மை விளங்கிய அத்திருப்பதியில்வாழ்ந்திருக்கும் மறையவர்களுக்குள் ; பெருமனைவாழ்தருமநிலவுகாசிபகோத்திரத்து=பெருமையான இல்வாழ்க்கை நிலைக்குவேண்டியதருமங்கள்வழுவாமல் நிலைபெற்றிருக்கும் காசிபகோத்திரத்தில் ; தலைமைசார் மரபில்=தலைமையமைந்தகுலத்தில் ; அருமைமணியுமளித்து=கிடைத்தற்கரிய நாகமணியையுங்கொடுத்து ; அதுவேநஞ்சுமளிக்குமரவுபோல் = அதுதானேபின் நஞ்சையுங்கொடுக்கும்பாம்புபோல; இருமைவினைக்குமொருவடிவாம்=சண்டேசுரநாயனாரைப் பிள்ளையாகப்பெறும்பெரும்புண்ணியமும் அவர்செய்யுஞ்சிவபூசைக்குஇடையூறு செய்யும்பெரும்பாவமும் ஆகிய இரண்டிற்கும் ஏதுவான ஒருவடிவத்தையுடையவனாயிருக்கும் ; எச்சதத்தனுளனானான்=எச்சதத்தனென்பவன் ஒருவனிருந்தான்.—எ-று. (க0)

மணியும் நஞ்சும் பாம்புகொடுத்தல்போல இவனும் நல்வினையையும் தீவினையையும் பயத்தலில் அரவுபோல் என்றார்.

மற்றைமறையோன் திருமனைவி வாய்ந்தமரபின் வந்துதித்தாள்
சுற்றம்விரும்பு மில்வாழ்க்கைத் தொழிலாளுலகிற் றுணைப்புதல்வற்
பெற்றுவிளங்குந் தவஞ்செய்தாள் பெறும்பேறெல்லைப் பயன்பெறுவாள்
பற்றையெறியும் பற்றுவரச் சார்பாயுள்ள பவித்திரையாள்.

(இ-ள்.) மற்றைமறையோன் திருமனைவி = மேற்கூறியதன்மையையுடைய எச்சதத்தன்மனையாள்; வாய்ந்தமரபின்வந்துதித்தாள்=சிறந்தமரபிற் பிறந்தவள் ; சுற்றம்விரும்பு மில்வாழ்க்கைத்தொழிலாள்=உறவின்ரால் விரும்பத்தக்க மனையறத்தைச்செய்கின்றவள் ; உலகிற்றுணைப்புதல்வற் பெற்றுவிளங்குந்தவஞ்செய்தாள்=உலகத்தில் தமக்குத்துணையாய் நன்னெறிக்கண் செலுத்தும் சண்டேசுரநாயனாரைமேலேபெற்று அதனால் புகழடைதற்கேதுவான தவத்தைச்செய்தவள் ; பெறும்பேறெல்லைப் பயன்பெறுவாள் = புதல்வரைப் பெறுவார் பெறும்பேற்றிற்கு முடிவான பயனைப்பெறத்தக்கவள் ; பற்றையெறியும் பற்றுவரச்சார்பாயுள்ள பவித்திரையாள் = உலகப்பற்றைமறுக்கும் சிவநேசமானது வருதற்குச்சார்பான குணத்தோடுகூடிய பவித்திரையென்னும் பெயரையுடையவள்.—எ-று. (கக)

நன்றிபுரியு மவர்தம்பா னன்மைமறையின் றுறைவிளங்க
என்றுமறையோர் குலம்பெருக வேழுபுவனங் களுமுய்ய
மன்றினடஞ்செய் பவர்சைவ வாய்மைவளர மாதவத்தோர்
வென்றிவிளங்க வந்துதயஞ் செய்தார் விசாரசருமனார்.

(இ-ள்.) நன்றிபுரியு மவர்தம்பால் = நன்னெறியில் விரும்பி நடத்தும் எச்சதத்தன் பவித்திரை யென்னும் அவ்விருவரிடத்தும் ; நன்மை மறையின்று

றைவிளங்க=நன்மையானவேதஒழுக்கம்குறைவின்றிவிளக்கமடையவும் ; என்று மறையோர்குலம்பெருக=எந்நாளும் மறையவர்களுடையமரபுவிருத்தியடையவு ம்; ஏழுபுவனங்களுமுய்ய=ஏழுலகத்தாரும் கடத்தேறவும் ; மன்றினடஞ்செய்ப வர்=கனகசபையில் ஆடியருளுகின்ற பிரானுரது ; சைவவாய்மைவளர=சைவ மார்க்கம் ஓங்கவும் ; மாதவத்தோர்வென்றிவிளங்க=மகத்தாகியதவத்தையுடைய பெரியோர்களின்மகிமைவிளக்கமடையவும் ; வந்துதயஞ்செய்தார்விசாரசருமனு ர்=உலகத்தில்வந்து அவதரித்தருளினுர் விசாரசருமரென்னும் பெயரையுடைய புத்திரர்.—எ-று. (கஉ)

மறையின் துறைவிளங்க என்றதனுல் அவரது சிவபூசையின் ஒருப் பாடும், மாதவத்தோர் வென்றிவிளங்க என்றதனுல் திருப்பணித்தீங்கு சகியாமை யும் குறிப்பித்தவாறு. மறையிற்கூறும் அறங்கள் பலவற்றுள்ளும் சிவபூசையே சிறப்புடைமையானும், மாதவத்தோர்க்கெல்லாம் அபராதங்கள் பலவற்றுள்ளு ம்திருப்பணித்தீங்கே உய்தியில் குற்றமாகக்கொள்ளும் குணமுடைமையினுனும் என்க.

ஐந்துவருட மவர்க்கணைய வங்கமாறு முடனிறைந்த
சந்தமறைக ளுட்படமுன் றலைவர்மொழிந்த வாகமங்கண்
முந்தையறிவின் றொடர்ச்சியினுன் முகைத்தமலரின் வாசம்போற்
சிந்தைமலர வுடன்மலருஞ் செவ்வியுணர்வு சிறந்ததால்.

(இ-ள்.) ஐந்துவருட மவர்க்கணைய=அவ்விசாரசருமருக்கு ஐந்துவயது வர ; அங்கமாறுமுடனிறைந்த சந்தமறைகளுட்பட=வேதாங்கங்கள்ஆறும் தம் முடன் வேறறக்கூடிய இசையையுடைய நான்குமறைகளும்அடங்க ; முன்றலை வர் மொழிந்தவாகமங்கள் = முன்னுளில் சிவபிரான் அருளிச்செய்த திவ்வியாக மங்களும் ; முந்தையறிவின் றொடர்ச்சியினுல்=பூர்வசன்மத்துண்டாகிய அறி வின்சம்பந்தத்தால் ; முகைத்தமலரின் வாசம்போல்=முகையாயிருக்கும்மலரில் அடங்கியிருக்கும் மணம்போல; சிந்தைமலரவுடன்மலரும்=சித்தவிருத்தியானது நாடோறும் விகசிக்கவிகசிக்கத்தாமும் அதனேடுதிக்கும்; செவ்வியுணர்வுசிறந்தது =உயர்ந்த அறிவானது அவர்க்கு உண்டானது.—எ-று. ஆல்—அசை. (கரு)

சந்தமாவது:—எடுத்தல்-படுத்தல்-நலிதல் - உழப்பு - என்னும் இசைவேறு பாடு - உதாத்தம் - அனுதாத்தம் - சுவரிதம் - பிரசயம் - எனினும் ஒக்கும்.

நிகழுமுறைமை யாண்டேழு நிரம்பும்பருவம் வந்தெய்தப்
புகழும்பெருமை யுபநயனப் பொருவில்சடங்கு முடித்தறிவின்
இகழுநெறிய வல்லாத வெல்லாமியைந்த வெனினுந்தந்
திகழுமரபி னேதுவிக்குஞ் செய்கைபயந்தார் செய்வித்தார்.

(இ-ள்.) நிகழுமுறைமையாண்டேழு நிரம்பும்பருவம் வந்தெய்த=இவ் வாறுஅவர்க்கு அறிவுவளரும்முறைமையினுல் ஏழுவருடம்நிரம்பிய உபநயனப்பரு

வவ்வர ; புகழும்பெருமை யுபநயனப்பொருவில் சடங்குமுடித்து=நூல்களாற் புகழ்ந்து சொல்லத்தக்கபெருமையினையுடைய ஒப்பில்லாத உபநயனச் சடங்கை முடித்து; அறிவினிகழுநெறியவல்லாதவெல்லா மியைந்தவெனினும்=அவருணர் வின்கண் குற்றங்கூறுதற் குரியனவல்லாத ஓதல்முதலிய தொழிற்குரிய எல்லாக் குணங்களும் இயல்பால் உண்டாயிருந்ததேனும் ; தந்திகழுமரபினோதுவிக்குஞ் செய்கை = தங்குலத்தில் உபநயநத்தின்பின்பு வேதமோதுவிக்கும் முறைமை யானதொழிலை ; பயந்தார்செய்வித்தார் = பிதாமாதாக்கள் அவருக்குச் செய் வித்தார்கள்.—எ-று.

குலவுமறையும் பலகலையுங் கொளுத்துவதன்முன் கொண்டமைந்து
நிலவுமுணர்வின் றிறங்கண்டு நிறுவுமறையோ ரதிசயித்தார்
அலகில்கலையின் பொருட்கெல்லை யாடுங்கழலே யெனக்கொண்ட
செலவுமிகுந்த சிந்தையினிற் றெளிந்தாரசிறிய பெருந்தகையார்.

(இ-ள்.) குலவுமறையும்பலகலையும்=விளங்குகின்ற வேதங்களையும்பல கலைஞானங்களையும் ; கொளுத்துவதன்முன்கொண்டு = ஓதுவிப்பதற்கு முன் னமே அப்பொருள்களைத்தாமேயறிந்துகொண்டு ; அமைந்துநிலவுமுணர்வின்றிற ங்கண்டு = அந்நூற்பொருளில் அமைந்துவிளங்குகின்ற அவரதுஅறிவின்றிறத் தைக்கண்டு ; நிறுவுமறையோரதிசயித்தார்=அவரைஓதுந்தொழிலில் நிறுத்தும் மறையவர்கள் ஆச்சரியமடைந்தார்கள் ; அலகில்கலையின்பொருட்கெல்லை=எண் ணிறந்தவேதமுதலியநூல்களிற் கூறும்பொருள்கட்கெல்லாம் முடிந்தபொருள் ; ஆடுங்கழலேயெனக்கொண்ட=திருவம்பலத்தில் தூக்கியாடும் குஞ்சிதத்திருவ டியே யென்றுகொண்ட ; செலவுமிகுந்தசிந்தையினில்=கொள்கைமேம்பட்ட த மதுசித்தத்தில் ; தெளிந்தார்சிறியபெருந்தகையார்=நிச்சயித்தார் உருவாற்சிறிய ரேனும் உணர்வாற்பெருந்தகைமையையுடைய விசாரசருமனார்,—எ-று. (கரு)

நடமேபுரியுஞ் சேவடியார் நம்மையுடையா ரெனுமெய்ம்மை
உடனேதோன்று முணர்வின்க ணொழியாதூறும் வழியன்பின்
கடனேயியல்பாய் முயற்றிவருங் காதன்மேன்மே லெழுங்கருத்தின்
றிடநேர்நிற்குஞ் செம்மலார் திகழுநாளி லாங்கொருநாள்.

(இ-ள்.) நடமேபுரியுஞ்சேவடியார்=ஆனந்தநிருத்தஞ்செய்தருளும் சிவ ந்ததிருவடியையுடைய சிவபிரான் ; நம்மையுடையாரெனும்=நம்மை யாளாக வுடையவரென்றுகருதும்; மெய்ம்மையுடனே தோன்றுமுணர்வின்கண் = மெய் யுணர்ச்சியோடு தம்முள்ளத்துதியாநின்ற அறிவின்கண் ; ஒழியாதூறும்வழியன் பின்கடனே=அதுகாரணமாய் நீங்காது அள்ளூறும் முறைமையையுடைய பத்தி யினால்வழிபாடுசெய்யும்முறைமையே ; இயல்பாய்முயற்றிவரும்=தமக்குரியதாய் ஊக்கிவருகின்ற ; காதன்மேன்மேலெழும்=பெருவிருப்பானது மேல்மேல்உதிக் கும்; கருத்தின்றிடநேர்நிற்குஞ் செம்மலார்=உள்ளக்கருத்தின் உறுதிப்பாட்டில் நிலைபெற்றுநிற்கும்விசாரசருமனார்; திகழுநாளிலொருநாள்=இவ்வாறுவிளங்கியி ருக்கும்நாளில் ஓர்நாள்.—எ-று. ஆங்கு-அசை. (கசு)

சிவபிரான்பதிப்பொருளென்றும் தாம் அவருக்கு உடைப்பொருளாகிய உயிரென்றும் கொண்டாரென்பது விளக்கிய நம்மையுடையாரென்றும், உயிர்ப்பொருளேயன்றிப் பதிப்பொருளில்லையென்னும் சாங்கியநூலார்மதமும் பதிப்பொருளேயன்றி உயிர்ப்பொருள்வேறில்லை யென்னும் மாயாவாதிகள்மதமும் மறுக்கப்படும்படி மெய்ம்மையுடனேதோன்றும்உணர்வென்றும், பெருங்கருணையுடைய முதல்வன்கருணையை மெய்யுணர்வுடையார் நோக்குங்கால் அம்முதல்வன்மாட்டு இடையீடின்றி அன்புமுறுகிவளர்தலில் ஒழியாதூறும் வழியன்பென்றும், அம்முதல்வனுக்குச்செய்யும் பரிசாவது அன்பால்அவனை வழிபடுதலேஎன்பதுவிளக்கிய அன்பின்கடனே இயல்பாய் என்றுங்கூறினர்.

ஓதுகிடையி னுடன்போவா ரூரானிரையி னுடன்புக்க
போதுமற்றங் கொருபுனிற்று போற்றுமவன்மேன் மருப்போச்ச
யாதுமொன்றுங் கூசாதே யெடுத்தகோல்கொண் டவன்புடைப்ப
மீதுசென்று மிகும்பரிவால் வெகுண்டுவிலக்கி மெய்யுணர்ந்து.

(இ-ள்.) ஓதுகிடையினுடன்போவார்=வேதமோதும் சிறுவர்குழாத்துடன்போகின்றவிசாரசருமர் ; ஊரானிரையினுடன்புக்கபோது=அவ்வூரின்கணுள்ள பசுக்கூட்டங்கள் அங்குவர அதன்சமீபத்து அடைந்தபோது ; அங்கொருபுனிற்று=அவ்விடத்துஓர் ஈன்றணிமைத்தானபசுவானது ; போற்றுமவன் மேன் மருப்போச்ச=மேய்க்கும் இடையனைக்கொம்பால்முட்ட ; யாதுமொன்றுங்கூசாது=எவ்வளவேனுந்தன்மனதில் கூச்சமடையாமல் ; எடுத்தகோல்கொண்டவன்புடைப்ப=தன்கையிற்றாங்கியகோலால் அவ்வாயன் அப்பசுவைஅடிக்க ; மீதுசென்றுமிகும்பரிவால்=அவ்விடையனிடத்துச்சென்றுபசுவின்மேல்வைத்தமிக்கஅன்பினுல் ; வெகுண்டுவிலக்கிமெய்யுணர்ந்து=இடையனைக்கோபித்து அப்பசுவை அடிக்காமல்விலக்கி உண்மையை உணர்ந்து.—எ-று. மற்று-ஏ-அசை. (கஎ)

பாவுங்கலைக ளாகமநூற் பரப்பின்றொகுதி பான்மையினுன்
மேவும்பெருமை யருமறைகண் மூலமாக விளங்குலகில்
யாவுந்தெளிந்த பொருணிலையே யெய்தவுணர்ந்த வுள்ளத்தால்
ஆவின்பெருமை யுள்ளபடி யறிந்தாராயற் கருள்செய்வார்.

(இ-ள்.) பாவுங்கலைகள்=பரம்பியமிருதிபுராணம்முதலியகலைகளும்; ஆகமநூற்பரப்பின்றொகுதி=சைவாகமநூல்களாகியவிரிவோடுகூடியதொகுதியும் ஆகியஇவைகள்; பான்மையினுன்மேவும்பெருமையருமறைகள் மூலமாக=நிலைமையினலடைந்தபெருமையுடையஅரியவேதங்களின்மூலமாக ; விளங்குலகில்= விளக்கமடைந்திருக்கும் இந்நிலவுலகத்தில் ; யாவுந்தெளிந்தபொருணிலை=மேற்கூறிய எல்லாநூல்களும் தெளிவாகக்கூறும்பொருளியல்புகளை ; எய்தவுணர்ந்தவுள்ளத்தால்=ஒருங்குணர்ந்த தமதுதிருவுள்ளத்தினுல்; ஆவின்பெருமையுள்ளபடியறிந்தாராயற்கருள்செய்வார்=பசுவினதுபெருமையையும் உள்ளபடியுணர்ந்த விசாரசருமர் இடையனுக்கு அருளிச்செய்வாராயினர்.—எ-று. ஏ-அசை. (கஅ)

இம்மூன்றுங் குளகம்.

அருமறையின் மூலமாகவிளங்குதல்:—அருமறைகளைத்தமக்குக் காரணமாகக்கொண்டுவிளங்குதல். புறப்புறச்சமயம் புறச்சமயம் அகப்புறச்சமயம் அகச்சமயம் என்னும் நால்வகையுள் புறப்புறம் ஆகிய உலகாய்தம் பவுத்தம் ஆருகதம் நீக்கி ஏனையசமயங்களெல்லாம் வேதமூலமாயினும் வேதசாரசைவமாகிய சித்தாந்தசைவம்போல் வேதமூலமன்மையின் அவ்வேதமூலமாய்ச் சிறப்பாய்ச் சித்தாந்தசைவத்தைப்போதித்து விளங்குவன அதற்கநுகுணமானமநுமுதலிய மிருதிகளும் சைவமுதலிய புராணங்களும் காமிகமுதலிய திவ்வியாகமங்களுமேயாமென்பார் வேதமூலமாக விளங்குலகெனக்கூறினர். சித்தாந்தசைவநோக்கி ஏனைய பூர்வபட்சமாய் நிற்றலினென்க. எனவே சித்தாந்தசைவமே சிறப்புடையதெனக்கூறியவாறு.

தங்குமகில யோனிகட்கு மேலாம்பெருமைத் தகைமையன
பொங்குபுனித தீர்த்தங்க ளெல்லாமென்றும் பொருந்துவன
துங்கவமரர் திருமுனிவர் கணங்கள்சூழ்ந்து பிரியாத
அங்கமனைத்துந் தாமுடைய வல்லவோநல் லானினங்கள்.

(இ-ள்.) தங்குமகிலயோனிகட்குமேலாம்=உலகத்தில்வாழும் எல்லா யோனிகட்கும் மேலாய்விளங்கும்; பெருமைத்தகைமையன=பெருமைமிக்க மேன்மையையுடையனவும்; பொங்குபுனிததீர்த்தங்களெல்லாம்=பொலிவுடைத்தாயிருக்குந் தூய்மையான கங்கைமுதலிய தீர்த்தங்களெல்லாம்; என்றும்பொருந்துவன=எந்நாளும் தம்மிடத்து வாழ்தற்குரியனவும்; துங்கவமரர்திருமுனிவர்கணங்கள்=உயர்வாகிய தேவகணங்களும் முனிவர்கணங்களும்; சூழ்ந்துபிரியாதவங்கமனைத்தும்=தம்மைச்சூழ்ந்து பிரியாமலிருக்கும் உறுப்புக்களையெல்லாம்; உடையவல்லவோநல்லானினங்கள்=உடைத்தாயிருக்கின்றனவும் அல்லவா நல்ல பசுக்கூட்டங்கள்.—எ-று. (சகூ)

சிவபிரான் திருமுடிக்கு ஆட்டுதற்குரிய பஞ்சகவ்வியங்களுதிக்கும் நின்மலதேகியாதலில் அகிலயோனிகட்குமேலாம் பெருமைத்தகைமையன என்றார். தேவர்களும் முனிவர்களும் தீர்த்தங்களும் அவற்றின் அங்கங்களில் இருக்குமென்பது. "வேதாவுங்கரியவனு மாவினதுகோட்டடியின் விளங்கிவாழ்வர், கோதாவிமுதற்றீர்த்தங் கோட்டினுதிச்சராசரமுங்கூடிநிற்கு, மீதானசிரத்தமலன் விமலையதனுநெற்றி விசாகனுச்சி, மீதானந்தனிலதனுண் ணுசிதனினுகேசர் விளங்குவாரோ" எனவும், சோதாவிரியென்பது கோதாவியென விகாரமாயிற்று. நாகேசர்=திக்குப்பாலகர்கள். "ஆசகலவிருகன்னநாப்பணச்சுவினிதேவரமர்ந்துவாழ்வார், தேசுடையபருதிமதிநயனத்திற்றந்தத்திற்செறியும்வாயு, வோசையுறுநாவதனில்வருணனுளாமகளோங்கூங்காரநெஞ்சி, னேசமுறயமனியக்கர்கெண்டதலத்தெந்நாளுநிலவுவாரோ" எனவும், ஊங்காரநெஞ்சு=ஊங்காரமுதித்தற்கிடமாகிய நெஞ்சு. கெண்டதலம்=கபோலம். "ஒட்டத்திலுதையாத்தமனசந்தியையுறையுமுறைவன்கண்டத், நீட்டுடையவிந்திரனேயிமிலிருப்பரருக்கனெனவியம்புந்தேவர், வாட்டமில்லாச்சாத்தியரேவாழ்வார்களுரமதனிலனிலவாயு, நீட்டியதாளொருநான்கின்மருத்தென்பர்முழந்தாளினிலவுவாரோ"எனவும், ஒட்டம்=மேலுதடு. இமில்=முரிப்பு. அனிலவாயு=பிராணவாயுக் காதாரமான வாயு. "குரந்தினுதிபன்னகரேகுடிகொள்வர்காந்தருவர்குதத்தினுப்ப, னிருப்பாரம

களிர்கணமிவரெல்லாமேற்குதத்தின்முதுகினெல்லை, யுருத்திரரோசந்தொறுமுறைவார்கள்வசுதேவர்பிதிர்க்களோங்கிப், பருத்தவரைப்பலகைதனிற்பகத்துறைவரொழுமாதர்பரிவுகூர்ந்தே"எனவும், "திருமகளேயபானத்தினாகேசரடிவாலிற்சிறந்துவாழ்வ, ரிரவியொளிவாலின்மயிரிலங்கியிடுஞ்சுரநதிதானேயுநீரின், வரமுடையயமுனைமயமனுதன்னின்மாதவர்களுரோமம்வாழ்வ, ருரமுடையபூதேவியுதரத்திற்பயோதரத்தினாதியெல்லாம்" எனவும், நாகேசர்=தேவர்கள். "சடரத்தினிதையத்திற்றழைத்தமுகமனுதன்னிற்றங்குமங்கி, கடனுடனேகாருகபத்தியமெழுவாயொருமூன்றுங்கடினவென்பி, னுடனுறுசுக்கிலந்தனினாமுறையுமகவினையனைத்துமுறுப்புத்தோறுந், திடமுறுகற்புடைமடவார்செறிந்திருப்பாரிம்முறையைச்சிந்தைசெய்தே" எனவும் வரும் சிவதருமோத்தரச் செய்யுள்களாலுணர்க.

ஆயசிறப்பி னாற்பெற்ற வன்றேமன்று ணடம்புரியு
நாயனார்க்கு வளர்மதியு நதியுநகுவெண் டலைத்தொடையு
மேயவேணித் திருமுடிமேல் விரும்பியாடி யருளுதற்குத்
தூயதிருமஞ் சனமைந்து மளிக்குமுரிமை சுரபிகடாம்.

(இ-ள்.) மன்றுணடம்புரியுநாயனார்க்கு=கனகசபையின்கண் ஆனந்த நிருத்தம் செய்தருளும் நடேசப்பிரானுக்கு; வளர்மதியுநதியுநகுவெண்டலைத் தொடையும்=வளர்கின்ற இளம்பிறையும் கங்கையும் சிரிக்கின்ற வெள்ளிய தலைமாலையும்; மேயவேணித்திருமுடிமேல்=தங்கிய சடையையுடைய திருமுடியின்மேல்; விரும்பியாடியருளுதற்கு=திருவுளங்கொண்டு அபிடேகமாடியருளுதற்கு; தூயதிருமஞ்சனமைந்தும்=தூய்மையான திருமஞ்சனப்பொருள்கள் ஐந்தையும்; அளிக்குமுரிமைசுரபிகள்=கொடுக்கின்ற உரிமையையுடைய பசுக்கள்; ஆயசிறப்பினாற்பெற்றவன்றே=தமக்குரிய சிறப்பினாற் பெற்றனவல்லவா. எ-று. தாம்-அசை. (உ0)

சீலமுடைய கோக்குலங்கள் சிறக்குந்தகைமைத் தேவருடன்
காலமுழுது முலகனைத்துங் காக்குமுதற்கா ரணராகு
நீலகண்டர் செய்யசடை நிருத்தர்சாத்து நீறுதரு
மூலமவதா ரஞ்செய்யு மூர்த்தமென்றான் முடிவென்னோ.

(இ-ள்.) சீலமுடையகோக்குலங்கள்=(அதனால்) அவ்வித சிறப்பையுடைய பசுக்கூட்டங்கள்; சிறக்குந் தகைமைத்தேவருடன்=மேலாம்பெருமையராகிய திருமால் பிரமன் இந்திரன்முதலிய தேவர்களோடு; காலமுழுதுமுலகனைத்தும்=எக்காலமும் உலகம் முழுவதையும்; காக்குமுதற்காரணராகும்=காக்கின்ற ஆதிகாரணராயிருக்கும்; நீலகண்டர்செய்யசடைநிருத்தர்சாத்தும்=கரிய திருமிடற்றையும் சிவந்தசடையையும் உடைய சிவபிரான் திருமேனியில் தரித்தருளும்; நீறுதருமூலமவதாரஞ்செய்யும்=விபூதி உண்டாவதற்குக்காரணமாக இருக்கும் கோமயம்உதிக்கும்; மூர்த்தமென்றான் முடிவென்னோ=மூர்த்தமாம்எனில் இதன்பெருமையை அளவுபடுத்திக்கூறுதல்எவ்வாறோ—எ-று.(உக)

உள்ளாந்தகைமை யினிப்பிறவே றுளவேயுழைமான் மறிக்கன்று
துள்ளுங்கரத்தா ரணிபணியின் சுடர்சூழ்மணிகள் சுரநதிநீர்

தெள்ளுஞ்சடையார் தேவர்கடம் பிராட்டியுடனே சேரமிசைக்
கொள்ளுஞ்சினமால் விடைத்தேவர் குலமன்றோவிச் சுரபிகுலம்.

(இ-ள்.) இச்சுரபிகுலம்=இப்பசுக் கூட்டங்கள்; உழைமான்மறிக்கன்று துள்ளுங்கரத்தார்=உரோமங்களையுடைய மான்மறியாகிய கன்று துள்ளிக் கொண்டிருக்கும் இடக்கரத்தையுடையவரும்; அணிபணியின்சுடர்சூழ்மணிகள்=தரித்திருக்கும் பாம்புகளின் ஒளிவீசும் இரத்தினங்களை; சுரநதிநீர்தெள்ளுஞ்சடையார்=கங்கைநீரானது அலையால் கொழிக்கின்ற சடையினையுடையவரும் ஆகிய சிவபிரான்; தேவர்கடம்பிராட்டியுடனேசேர=தேவர்களுக்கெல்லாம் முதல்வியாகிய பார்வதியாரோடு ஒருங்கு; மிசைக்கொள்ளுஞ்சினமால்விடைத்தேவர்குலமன்றோ=ஏறிநடாத்தும் கோபத்தையுடைய பெரியவிடைத்தேவரது பத்தினிகளாகிய பசுக்களின் வமிசம் அல்லவா (அதனால்); உள்ளுந்தகைமையினிப்பிறவேறுளவே=(இப்பசுக்களின்பெருமையை) விசாரித்து அறியும் முறைமை இனி வேறில்லை.—எ-று. (௨௨)

விடைத்தேவர் சிவபிரான்சந்நிதியில் இருப்பர். அவரைப் பாற்கடலின்கண் உதித்த நந்தை, பத்திரை, சுரபி, சுசீலை, சுமனை என்னும் ஐவகைப்பசுக்களும் பத்தினிகளாகச் சூழ்ந்திருக்கும் அதனால் அப்பசுக்களிற்றோன்றிய பாரம்பரியகுலத்தையுடையது இச்சுரபிகுலம் என்றார் என்க.

என்றின்னனவே பலவுநினைந் திதத்தின்வழியே மேய்த்திந்தக்
கன்றுபயிலா னிரைகாக்கு மிதன்மேலில்லை கடனிதுவே
மன்றுளாடுஞ் சேவடிகள் வழுத்துநெறியா வதுமென்று
நின்றவாயன் றனைநோக்கி நிரைமேய்ப்பொழிக நீயென்பார்.

(இ-ள்.) என்றின்னன பலவுநினைந்து=இத்தன்மையனவென்று இவைபோலும் பலவற்றையும் யோசித்து; இதத்தின்வழிமேய்த்து=அவைகளுக்கு இதமுண்டாம்படி மேய்த்து; இந்தக்கன்றுபயிலானிரை=இந்தக்கன்றையுடைய பசுக்கூட்டத்தை; காக்கும் இதன்மேலில்லைகடன்=காக்கின்ற இதற்குமேலான அனுட்டிக்கத்தக்க ஒழுக்கமில்லை; இதுவேமன்றுளாடுஞ்சேவடிகள்வழுத்துநெறியாவதுமென்று=இப்பசுக்காத்தலே கனகசபையின்கண் ஆனந்தநிருத்தஞ்செய்தருளும் திருவடிகளை வழிபாடுசெய்யும் மார்க்கமாவதும் என்று; நின்றவாயன்றனைநோக்கி=அவ்விசாரசருமர் அங்கு நிற்கின்ற இடையனைப் பார்த்து; நிரைமேய்ப்பொழிகநீயென்பார்=நீ பசுக்கூட்டங்கள் மேய்த்தலை ஒழியக்கடவாயென்று சொல்வாராயினார்.—எ-று. ஏ-இரண்டும் அசை.

இதமுண்டாக மேய்த்தலாவது:—அடியாமலும் அச்சம்வாராமலும் புல்லுள்ளவிடங்களில் மேய்த்தல்.

யானேயினியிந் நிரைமேய்ப்ப னென்றாரஞ்சி யிடைமகனுந்
தானேரிறைஞ்சி விட்டகன்றான் றழுமறையோ ரிசைவினால்
ஆனேநெருங்கும் பேராய மளிப்பாராகிப் பைங்கூழ்க்கு
வானேயென்ன நிரைகாக்க வந்தார்தெய்வ மறைச்சிறுவர்.

(இ-ள்.) யானேயினியிந்நிரைமேய்ப்பனென்றார்=யானே இப்பொழுது இப்பசுக்கூட்டங்களை மேய்ப்பேனென்று கூறினார்; அஞ்சியிடைமகனுந்தா

னெரிவைறஞ்சிவிட்டகன்றான்—தான்செய்த குற்றத்துக்கு அச்சமுற்று அவ்வி டையனும் அவர் திருமுன்னே வணங்கி நீங்கிப்போனான்; தாமுமறையோரிசை வினால்—அவரும் அவ்வூரில்வாழும் மறையவரது உடன்பாட்டால்; ஆனெரு ங்கும்பேராயமளிப்பாராகி—பசுக்களே நெருங்கியிருக்கும் பெரியகூட்டத்தை க்காப்பாற்றுவாராய்; பைங்கூழ்க்குவானேயென்ன—பயிருக்கு மேகம்போல; நிரைகாக்கவந்தார்தெய்வமறைச்சிறுவர்—தெய்வத்தன்மையுடைய வேதங்களை யுணர்ந்த அவ்விசாரசருமர் பசுக்களை மேய்க்கும்படி வந்தார்.—எ-று. (உச)

கோலுங்கயிறுங் கொண்டுகுழைக் குடுமியலையக் குலவுமான்
றோலுநூலுஞ் சிறுமார்பிற் றுவளவரைக்கோ வணஞ்சுடரப்
பாலும்பயனும் பெருகவரும் பசுக்கண்மேய்க்கும் பான்மையினாற்
சாலும்புல்லி னவைவேண்டுந் தனையுமிசையுந் தலைச்சென்று.

(இ-ள்.) கோலுங்கயிறுங்கொண்டு—மேய்க்கும் பலாசக்கோலையும் அ ணைகயிற்றையும் கையில் எடுத்துக்கொண்டு; குழைக்குடுமியலைய—குழைவடை ந்த குடுமியானது அலையும்படி; குலவுமான்றோலுநூலுஞ்சிறுமார்பிற்றுவள— பூணூலின் அளவாய் ஈரங்குலம் அரிந்திடப்பட்ட விளக்கமாகிய கருமான்றோ லும்பூணநூலும் சிறிய மார்பினிடத்து அசைய; அரைக்கோவணஞ்சுடர—திரு வரையில் உடுத்தகோவணம் விளங்க; பாலும்பயனும்பெருக—பாலும் கன்று களும்பெருகும்படி; வரும்பசுக்கண்மேய்க்கும்பான்மையினால்—தன்னிடத்து வந்த பசுக்கூட்டங்களை மேய்க்கவேண்டுமென்னும் விருப்பத்தினால்; சாலும்பு ல்லினவைவேண்டுந்தனையும் — மிகுந்த புற்களில் அப்பசுக்கள் விரும்பும் அளவும்; மிசையுந்தலைச்சென்று—மேயத்தக்க இடத்தில் ஓட்டிப்போய்.— எ - று. (உரு)

பதவுகாலங் களின்மேய்த்துப் பறித்துமளித்தும் பரிவகற்றி
இதமுண்டுறையு ணற்றண்ணீ ரூட்டியச்ச மெதிர்நீக்கி
அதர்நல்லனமுன் செலநீழ லமர்வித்தமுத மதுரப்பால்
உதவும்பொழுது பிழையாம லுடையோரில்லந் தொறுமுய்த்தார்.

(இ-ள்.) பதவுகாலங்களின்மேய்த்து—அப்பசும்புற்றரையில் காலங்கள் தோறும் (பசுக்களை) மேய்த்தும்; பறித்தளித்தும்பரிவகற்றி—மேயக்கூடாதவிட த்திலிருக்கின்ற புல்லைப்பறித்து அவைகளை யுண்ணும்படிகொடுத்தும் அவைக ளின் துன்பத்தைநீக்கி; இதமுண்டுறையுணற்றண்ணீரூட்டி—இதமாக நீர் உண் ணத்தக்க துறையிலே நல்லநீரை உண்ணச்செய்து; அச்சமெதிர்நீக்கி—வேற் று மிருகங்களால் அச்சம்வராமல் எதிர்நின்று காத்து; அதர்நல்லனமுன்செல நீழலமர்வித்து—நல்லனவாயிருக்கின்ற மார்க்கத்தில் முன்னேசென்று நிழலி லே தங்கும்படிசெய்வித்து; அமுதமதுரப்பாலுதவும்பொழுது—அமுதம்போ லும் மாதுரியமான பால்கொடுக்கும் காலத்து; பிழையாமலுடையோரில்லந் தொறுமுய்த்தார்—அப்பசுக்கள் தப்பிப்போகாமல் அவைகளையுடைய மறைய வர்கள் வீடுகள்தோறும்செலுத்தினார்.—எ-று. இவ்விரண்டுங் குளகம். (உசு)

பறித்தும் என்பதில் மகரம் விரித்தல்விகாரம். பதவு=புல். ஆகுபெய ரால் அதனோடுகூடிய இடத்தையுணர்த்திநின்றது.

மண்ணிக்கரையின் வளர்புறவின் மாடும்படுகர் மருங்கினிலுந்
தண்ணித்திலநீர் மருதத்தண் டலைசூழ்குலையின் சார்பினிலும்
எண்ணிற்பெருகு நிரைமேய்த்துச் சமிதையுடன்மே லெரிகொண்டு
நண்ணிக்கங்குன் முன்புகுது நன்னாள்பலவா மந்நாளில்.

(இ-ள்.) மண்ணிக்கரையின் வளர்புறவின்மாடும்=மண்ணியாற்றின் கரையிலுள்ள முல்லைநிலத்திலும்; படுகர்மருங்கினிலும்=அவ்வாற்றின் நீர்நின்ற பள்ளங்களிலும்; தண்ணித்திலநீர்மருதத்தண்டலைசூழ்குலையின்சார்பினிலும்=குளிர்ந்த முத்துக்களையுடைய நீர்வளம் அமைந்த மருதநிலத்தைச்சேர்ந்த சோலைகள்சூழ்ந்த கரையின் அருகுகளிலும்; எண்ணிற்பெருகுநிரைமேய்த்து=தொகையால்மிக்கிருக்கும் பசுக்கூட்டங்களை மேய்த்து; சமிதையுடன்மேலெரிகொண்டுநண்ணி=சமித்துக்களோடு தீயுண்டாக்குவதற்குரிய அரணிக்கோல்களையும் எடுத்துக்கொண்டு ஊரில்வந்து; கங்குன்முன்புகுதுநன்னாள்பலவாமந்நாளில்=மாலைப்பொழுதில் வீட்டிற்செல்கின்ற நல்ல நாட்கள் பலகழிகின்ற நாட்களில்.—எ-று. (உஎ)

ஆயநிரையின் குலமெல்லா மழகின்விளங்கி மிகப்பல்கி
மேயவினிய புல்லுணவும் விரும்புபுனலு மார்தலினால்
ஏயமனங்கொள் பெருமகிழ்ச்சி யெய்தியிரவு நண்பகலுந்
தூயதீம்பான் மடிபெருகிச் சொரியமுலைகள் சுரந்தனவால்.

(இ-ள்.) மேயவினிய புல்லுணவும் = மேய்தற்கினிய புல்லாகிய உணவையும்; விரும்புபுனலுமார்தலினால்=விரும்பத்தக்க நீரையும் அருந்துதலினால்; ஆயநிரையின் குலமெல்லாம்=அவ்விசாரசருமரால் பாதுகாக்கப்பட்ட பசுவின்தொகுதியெல்லாம்; ஏயமனங்கொள் பெருமகிழ்ச்சியெய்தி=பொருந்தும்படி தம்மனதிலுதிக்கும் மிக்க மகிழ்ச்சியையடைந்து; இரவுநண்பகலுந்தூயதீம்பால்=இரவிலும் பகலிலும் தூய்மையுடைய மதுரமானபாலானது; மடிபெருகிச்சொரிய முலைகள்சுரந்தன=மடியினின்றும்பெருகிச்சொரியும்படி முலைகளைச்சுரந்தன.—எ-று. ஆல்-அசை. இவ்விரண்டுங் குளகம்.(உஅ)

மடியிற் பால்பெருகியிருப்பினும் முலைசுரவாக்கால் பால்சொரியா ஆதலின் மடிபெருகிச்சொரிய முலைகள் சுரந்தன என்றார்.

பூணுந்தொழில்வேள் விச்சடங்கு புரியவோம தேனுக்கள்
காணும்பொலிவின் முன்னையினு மனேகமடங்கு கறப்பனவாய்ப்
பேணுந்தகுதி யன்பாலிப் பிரமசாரி மேய்த்ததற்பின்
மாணுந்திறத்த வானவென மறையோரெல்லா மனமகிழ்ந்தார்.

(இ-ள்.) பூணுந்தொழில்வேள்விச்சடங்குபுரிய=மறையவர்கள் நியமமாகக்கொண்டொழுகும் தொழிலாகிய யாகச்சடங்குகளைப்புரிதற்கேதுவாக; ஓமதேனுக்கள்காணும்பொலிவின்=ஔபாசனத்துக்குப் பால்கொடுக்கும் பசுக்கள்காணத்தக்கதோற்றத்தோடு; முன்னையினுமனேகமடங்குகறப்பனவாய்=முன்கறப்பதிலும் அனேகம்பங்கு பாலைக்கறக்கும் இயல்புடையனவாய்; பேணுந்தகுதியன்பால்=பாதுகாக்கின்ற மேன்மையான அன்புகாரணமாய்; இப்பி

ரமசாரிமேய்த்ததற்பின்=இந்தவிசாரசருமரென்னும் பிரமசாரியானவர் இப்பசுக்களைமேய்த்தபின்பு; மாணுந்திறத்தவானவென=மாட்சிமையுடையும் கூறுபாடுடையனவாயினவென்று; மறையோரெல்லாமனமகிழ்ந்தார்=அங்குள்ளமறையவர்களெல்லாரும் மனமகிழ்ச்சியடைந்தார்கள்.—எ-று. (உகூ)

கறப்பனவாய் மாணுந்திறத்தவானவென இயையும். அவர்க்கு அவ்வேள்விச்சடங்கு அறுதொழிலுளொன்றாய் நியமவிதியாதலின் பூணுந்தொழில் வேள்விச்சடங்கு என்றார்.

அனைத்துத்திறத்து மானினங்க ளணைந்தமகிழ்ச்சி யளவின்றி
மனைக்கட்கன்று பிரிந்தாலு மருவுஞ்சிறிய மறைக்கன்று
தனைக்கண்டருகு சார்ந்துருகித் தாயாந்தன்மை நிலைமையவாய்க்
கனைத்துச்சுரந்து முலைக்கண்கள் கறவாமேபால் பொழிந்தனவால்.

(இ-ள்.) அனைத்துத்திறத்து மானினங்கள்=இவ்விசாரசருமர் பாதுகாத்துச்செய்யும் எல்லாஉபசாரங்களினுலும் அப்பசுக்கூட்டங்கள்; அணைந்தமகிழ்ச்சியளவின்றி=தாமடைந்த மகிழ்ச்சிக்கு ஓரளவில்லாமல்; மனைக்கட்கன்றுபிரிந்தாலும்=மனைக்கண்வாழும் தம்கன்றுகள்நீங்கியிருந்தாலும்; மருவுஞ்சிறியமறைக்கன்றுதனைக்கண்டு=தம்முன்நிற்கின்றமறைகளையுணர்ந்த சிறியபிரமசாரியாகிய விசாரசருமரைக்கண்டு; அருகுசார்ந்துருகி=அவர் அருகிற்சென்றுமனமுருகி: தாயாந்தன்மை நிலைமையவாய்= அவர்க்குத்தாயாயிருக்கும் நிலைமையை உடையனவாய்; கனைத்துச்சுரந்துமுலைக்கண்கள்=உங்காரஞ்செய்து முலைக்கண்கள்சுரந்து: கறவாமேபால்பொழிந்தன=ஒருவரும் கறவாமலிருக்கப் பாலைப்பொழிந்தன.—எ-று. ஆல்-அசை. (௩0)

பிரிந்தாலும் என்கிற உம்மைபிரியாதிருந்தாலும் என எதிரதுதழீஇயது. கன்றுஉடன்நிற்பினும் நீங்கினும் இவரையும் ஓர்கன்றாகக்கருதிச் சொரிதலின் தாயாந்தன்மை நிலைமையவாய் என்றார்.

தம்மையணைந்த வான்முலைப்பால் தாமேபொழியக் கண்டுவந்து
செம்மைநெறியே யுறுமனத்திற் றிருமஞ்சனமாங் குறிப்புணர்ந்தே
எம்மையுடைய வள்ளலா ரெய்தநினைந்து தெளிந்ததனின்
மெய்ம்மைச்சிவனார் பூசனையை விரும்பும்வேட்கை விளைந்தெழலும்.

(இ-ள்.) தம்மையணைந்தவான்=தம்மையடைந்தபசுக்கூட்டங்கள்; முலைப்பால்தாமேபொழியக்கண்டுவந்து=முலையின்கணுள்ள பாலைக்கறப்பாரின்றித் தாமேசொரியக்கண்டு அதனால்மனமகிழ்ந்து; செம்மைநெறியுறுமனத்தில்=நன்மார்க்கத்தில்செல்கின்ற உள்ளத்தின்கண்ணே; திருமஞ்சனமாங்குறிப்புணர்ந்து=இதுசிவபிரான்திருமுடிக்குத் திருமஞ்சனத்திற்கு அருகமாகும் என்னும் குறிப்பை அறிந்து; எம்மையுடையவள்ளலார்=எம்மையாளாகவுடைய விசாரசருமர்; எய்தநினைந்துதெளிந்ததனில்=பொருந்தும்படிநினைந்து இது சிவபூசைக்குரித்தாமெனத்தெளிந்து அவ்வுள்ளத்தில்; மெய்ம்மைச்சிவனார்பூசனையை=மெய்ம்மையானசிவபிரானதுபூசையை; விரும்பும்வேட்கை விளைந்தெழலும்=செய்யவிரும்புகின்ற அவாவானது உதித்தெழவும்.—எ-று. ஏ இரண்டும்-அசை. (௩க)

இப்பால் திருமஞ்சனத்திற்காமியல்புடையதென்பதை யறிந்தாராதலிற்குறிப்புணர்ந்தென்றும், இதுபிறமறையவர்கள் அக்கினிகோத்திரத்திற்குரியவாதலில் இதைக்கறந்து திருமஞ்சனஞ்செய்தல்பொருந்துமோ பொருந்தாதோ எனக்கருதி இது அவருபயோகத்திற்கு மிகுதியாகப்பொழிதலால் பொருந்தும் எனக்கொண்டார் என்பது விளக்கிய எய்தநினைந்து தெளிந்தென்றுங்கூறினர்.

அங்கண்முன்னை யர்ச்சனையி னளவின்றொடர்ச்சி விளையாட்டாப்
பொங்குமன்பான் மண்ணிமணற் புளினக்குறையி லாத்தியின்கீழ்ச்
செங்கண்விடையார் திருமேனி மணலாலாக்கிச் சிவாலயமுந்
துங்கநீடு கோபுரமுஞ் சுற்றாலயமும் வகுத்தமைத்தார்.

(இ-ள்.) அங்கண்முன்னையர்ச்சனையின்=அவ்வாறுபூசனைசெய்யும் வேட்கைவிளைந்தவிடத்து முற்பிறப்பிற்செய்த சிவபூசையினுடைய; அளவின்றொடர்ச்சிவிளையாட்டா=மிகுதியின்சம்பந்தமே ஓர்விளையாட்டாக; பொங்குமன்பான்மண்ணிமணற்புளினக்குறையில்=அதிகரிக்கும் அன்பினால் மண்ணியாற்றின்மணற்குன்றிலுள்ள ஆற்றிடைக்குறையில் இருக்கும்; ஆத்தியின்கீழ்=ஆத்திமரத்தின்கீழ்; செங்கண்விடையார்திருமேனி மணலாலாக்கி=சிவந்தகண்ணையுடைய இடபத்தை வாகனமாகக்கொண்ட சிவபிரானது திவ்வியவிலிங்கமேனியை மணலாற்சமைத்து; சிவாலயமுந்துங்கநீடுகோபுரமும்=அப்பிரானார்க்குச் சிவாலயத்தையும் உன்னதமாய்உயர்ந்தகோபுரத்தையும்; சுற்றாலயமும் வகுத்தமைத்தார்= பரிவாரங்களினாலயங்களையும் அம்மணலினால் வகுத்துச் செய்தார்.—எ-று. இவ்விரண்டுங் குளகம். (௬௨)

பிள்ளையார்முற்செய்தவத்தால் மெய்ப்பத்தியோடு சிவபூசைசெய்யும் வாசனையுடையராயினும் விதிவழிமுற்றச்செய்தற்குரியரல்லாத ஏழாண்டின் மேற்படாச்சிறுவராதலின் விளையாட்டா என்றார்.

ஆத்திமலருஞ் செழுந்தளிரு முதலாவருகு வளர்புறவிற்
பூத்தமலர்க டாந்தெரிந்து புனிதர்சடிலத் திருமுடிமேற்
சாத்தலாகுந் திருப்பள்ளித் தாமம்பலவுந் தாங்கொய்து
கோத்தவிலைப்பூங்கூடையினிற் கொணர்ந்துமணந்தங்கிடவைத்தார்.

(இ-ள்.) ஆத்திமலருஞ்செழுந்தளிருமுதலா=காட்டாத்திப்பூவும் அதன்செழுமையான தளிர்களும் முதலாக; அருகுவளர்புறவிற் பூத்தமலர்கள்=அருகில்வளர்ந்தமுல்லைநிலத்தில் அலர்ந்தமலர்களாகிய; புனிதர்சடிலத்திருமுடிமேற்சாத்தலாகும்=சிவபிரான்திருமுடியிற் சாத்தற்குரிய; திருப்பள்ளித்தாமம்பலவுந்தெரிந்துகொய்து=திருப்பள்ளித்தாமங்கள்பலவற்றையும் ஆராய்ந்துகொய்து; கோத்தவிலைப்பூங்கூடையினிற்கொணர்ந்து=இணைத்துத்தைத்த இலையாலாகிய திருப்பூங்கூடையில் எடுத்துக்கொண்டுவந்து; மணந்தங்கிடவைத்தார்=வாசனைகமழும்படிவைத்தார்.—எ-று. தாம்-இரண்டும் அசை. (௬௩)

நல்லநவகும் பங்கள்பெற நாடிக்கொண்டு நாணற்பூங்
கொல்லையிடத்துங் குறைமறைவு மேவுங்கோக்க ளுடன்கூட
ஒல்லையணைந்து பாலாக்க ளொன்றுக்கொருகா லாகவெதிர்
செல்லவவையுங்கனைத்துமுலைநீண்டச்செழும்பால்பொழிந்தனவால்

(இ-ள்.) நல்லநவகும்பங்கள்பெறநாடிக்கொண்டு=நல்லனவாகிய புதியகுடங்களைத்தாம்பெறுதற்குவிரும்பி அவைகளைத்தேடிச் சம்பாதித்துக்கொண்டு; நாணற்பூங்கொல்லையிடத்தும்=நாணல்கள்நெருங்கிய பொலிவினையுடைய முல்லைநிலங்களிலும்; குறைமறைவுமேவுங் கோக்களுடன் கூட=ஆற்றிடைக்குறைவின்மறைந்தவிடங்களிலும் இருக்கின்றபசுக்களோடுகூட; ஒல்லையணைந்துபாலாக்கள்=விரைவாகச்சென்று அப்பசுக்களுள் பாலுள்ளபசுக்கள்; ஒன்றுக்கொருகாலாகவெதிர்செல்ல= ஒவ்வொன்றுக்கு ஒருதரமாகக் கறக்கும்படி தாம் எதிர்செல்லுமிடத்து; அவையுங்கனைத்து=அப்பசுக்களும் கன்றுபோற்கருதி உங்காரஞ்செய்து; முலைதீண்டச் செழும்பால்பொழிந்தன=முலையை அவர்தீண்டுங்கால் செழுமையாகியபாலைச்சொரிந்தன—எ-று. ஆல்-அசை.(௬௪)

கொண்டுமடுத்தகுடநிறையக் கொணர்ந்துவிரும்புங்கொள்கையினால்
அண்டர்பெருமான் வெண்மணலா லயத்துளவைமுன் றாபித்து
வண்டுமருவுந் திருப்பள்ளித் தாமங்கொண்டு வரன்முறையே
பண்டைப்பரிவா லருச்சித்துப் பாலின்றிருமஞ் சனமாட்டி.

(இ-ள்.) மடுத்தகுடநிறையக்கொணர்ந்து=தாம்பால்கறந்தகுடங்கள் நிறைந்தவுடன் அதனைஎடுத்துவந்து; விரும்புங்கொள்கையினால்=அவைகளைவிரும்பியகுணத்தோடு; அண்டர்பெருமான் வெண்மணலாலயத்துள்=தேவர்பிரானாரதுவெண்மணலாலமைத்ததிருக்கோயிலுள்; அவைமுன்றாபித்து=அக்குடங்களைமுன்னேவைத்து; வண்டுமருவுந்திருப்பள்ளித்தாமங்கொண்டு=வண்டுகள்சூழ்கின்ற திருப்பள்ளித்தாமத்திற்குரியமலர்களையும் எடுத்துக்கொண்டு; வரன்முறையேபண்டைப்பரிவாலருச்சித்து=முற்பிறப்பின்வாசனையாலுதிக்கும் அன்பால்விதிப்படி அருச்சித்து; பாலின்றிருமஞ்சனமாட்டி=பாலாலாகிய திருமஞ்சனத்தை அபிடேகஞ்செய்து.—எ-று. (௬௫)

வரன்முறையாலருச்சித்தல்:—ஆசனமூர்த்தி மூலக்கிரமமாக அருச்சித்தல். அவ்விதி அவர்க்கு முற்பிறப்பின்வாசனையால் அங்குத்தானே உதித்தலில் பண்டைப்பரிவாலென்றார்.

மீளமீள விவ்வண்ணம் வெண்பால்சொரிமஞ் சனமாட்ட
ஆளவுடையார் தம்முடைய வன்பரன்பின் பாலுளதாய்
மூளவமர்ந்த நயப்பாடு முதிர்ந்தபற்று முற்றச்சூழ்
கோளமதனி லுண்ணிறைந்து குறித்தபூசை கொள்கின்றார்.

(இ-ள்.) மீளமீளவிவ்வண்ணம்=அடிக்கடி இவ்வாறு; வெண்பால்சொரிமஞ்சனமாட்ட=வெள்ளியபாலினால் மொண்டுசொரியும்படி அபிடேகஞ்செய்ய; ஆளவுடையார்தம்முடைய வன்பரன்பின்பாலுளதாய்=பரிபக்குவரான அடியார்களை ஆளுதற்குரியபிரானார் தம்அடியராகிய விசாரசருமரது அன்பினிடத்துவிரவிப்பின்; மூளவமர்ந்தநயப்பாடுமுதிர்ந்தபற்றுமுற்ற=வளர்தற்கு ஏதுவாய்விரும்பிய பூசைத்தொண்டில் முதிர்ந்தபெருவிருப்பானது முற்றும்படிக்கு; சூழ்கோளமதனில்=தம்மால்வியாபிக்கப்பட்டசிவலிங்கத்தில்; உண்ணிறைந்துகுறித்தபூசைகொள்கின்றார்=கலந்துநின்று அவ்வடியார்கருதிய பூசையை ஏற்றுக்கொள்கின்றார்.—எ-று. இவ்விரண்டுங் குளகம். (௬௬)

முதல்வன் அன்பையுதிப்பித்து உயிர்க்குயிராய்நிற்கும் முறைமையாலவனைத்தன்வசமாக்கி அவருயிருள்ளும்விரவிநின்றானென்பதுவிளக்கிய அன்பரன்பின்பாலுளதாயென்றும்,அவ்வாறுநிற்றலேயன்றி வியாபகக்கலப்பால் எல்லாப்பொருள்களாயும் தன்னியல்பால் வேறாயும்நிற்கும் முதல்வன் தாபரவடிவத்தைத்தானாய்க்காணும் அந்நாயனார்க்கு அதனை யதிட்டித்து அதுவாயும் நிற்றலில் கோளமதனிலுண்ணிறைந்தென்றும்,அவ்வாறுநின்று அவர்செய்யும்பூசையை ஏற்றுக்கோடலில் குறித்தபூசை கொள்கின்றானென்றுங்கூறினார். இவ்வாறு வியாபகமாய் அனந்தசத்தியுடையனாய்நிற்கும்முதல்வன் அனேகர்செய்யும் பூசையையும் ஏககாலத்தில் அங்கீகரிக்கும் அருட்படிவம் உடையனென்பதுபோதலின் முதல்வன் திருமேனியுடையனாயின் ஓரிடத்திற் பூசைகொள்ளுங்கால் மற்றோரிடத்திற் பூசைகொள்ளுதல் பொருந்தாதென்னும் மீமாஞ்சகர் மதம் மறுக்கப்பட்டவாறு.

பெருமைபிறங்குஞ் சேய்ஞலூர்ப் பிள்ளையார்தா முள்ளத்தில்
ஒருமைநினைவா லும்பர்பிரா னுவக்கும்பூசை யுறுப்பான
திருமஞ்சனமே முதலவற்றிற் றேடாதனவன் பினினிரப்பி
வருமந்நெறியே யர்ச்சனைசெய் தருளிவணங்கி மகிழ்கின்றார்.

(இ-ள்.) பெருமைபிறங்குஞ்சேய்ஞலூர்ப்பிள்ளையார்=மகிமைவிளங்கும் திருச்சேய்ஞலூரில் அவதரித்த விசாரசருமனார்; உள்ளத்திலொருமைநினைவால்=தம்முடையதிருவுள்ளத்தில் ஒருமைப்பாடானபத்தியினால்; உம்பர்பிரானுவக்கும்பூசையுறுப்பான=தேவர்பிரானாகிய சிவபெருமான் மகிழ்கூர்ந்தருளும்பூசைக்கு அங்கங்களான; திருமஞ்சனமுதலவற்றில்=திருமஞ்சனம் முதலானபொருள்களில்; தேடாதனவன்பினினிரப்பி=சம்பாதிக்காத பிறபொருள்களை அன்பாற்பாவித்து அக்குறைவைப்பூரணமாக்கி; வருமந்நெறியேயர்ச்சனைசெய்தருளி=தாம்செய்துவரும் அம்முறையேபூசைசெய்து; வணங்கிமகிழ்கின்றார்=வணங்கிமகிழ்ச்சியடைவாராயினார்.—எ-று. தாம்-அசை. ஏகாரமிரண்டில் முன்னையது அசை. பின்னையதுதேற்றம். (௩௭)

தேடாதனவாவன:—சந்தனம் தூபதீபம் நைவேத்தியம்முதலியன.

இறையோனடிக்கீழ் மறையவனா ரெடுத்துத்திருமஞ் சனமாட்டு
நிறைபூசனைக்குக் குடங்கள்பா னிரம்பச்சொரிந்து நிரைக்குலங்கள்
குறைபாடின்றி மடிபெருகக் குவிந்தமுலைப்பால் குறைவின்றி
மறையோர்மனையின் முன்புதரும் வளங்கள்பொலிய வைகுமால்.

(இ-ள்.) இறையோனடிக்கீழ்=சிவபிரானதுதிருவடியினிடத்து; மறையவனாரெடுத்துத் திருமஞ்சனமாட்டு நிறைபூசனைக்கு= விசாரசருமர்கறந்து அபிடேகஞ்செய்யும்நிறைந்தபூசைக்கு; குடங்கள்பானிரம்பச்சொரிந்து=குடங்கள்நிரம்பும்படிபாலைச்சுரந்துகொடுத்து; நிரைக்குலங்கள்=அப்பசுக்கூட்டங்கள்; குறைபாடின்றிமடிபெருக= குறைவில்லாமல்மடியானதுபெருகும்படிக்கு; குவிந்தமுலைப்பால்குறைவின்றி=குவிந்தமுலைகளில்பால்கறக்கும் அளவிற்குறையாமல்; மறையோர்மனையின்முன்புதரும்=மறையவர்களதுவீடுகளில் மு

ன்புபோலக்கொடுக்கும்; வளங்கள்பொலியவைகும்—பாலின்வளங்கள்பொலி யும்படி இருக்கும்.—எ-று. ஆல்-அசை. (ருஅ)

செயலிப்படியே பலநாளுஞ் சிறந்தபூசை செய்வதற்கு
முயல்வுற்றதுவே திருவிளையாட் டாகமுந்நூ லணிமார்பர்
இயல்பிற்புரியு மற்றிதனைக் கண்டித்திறத்தை யறியாத
அயன்மற்றொருவ னப்பதியி லந்தணாளர்க் கறிவித்தான்.

(இ-ள்.) செயலிப்படியேபலநாளும்—இவ்வாறான முறைப்படியே பல தினமும்; சிறந்தபூசைசெய்வதற்கு முயல்வுற்று—சிறப்பாகியபூசையைச் செய்யும்படிதொடங்கி; அதுவேதிருவிளையாட்டாக—அவ்வாறொழுகுதலே தமக்கோர் ஆடலாக; முந்நூலணிமார்பர்—முந்நூலையணிந்தமார்பினையுடையவிசாரசருமர்; இயல்பிற்புரியுமிதனைக்கண்டு—தம்மியல்பாற்செய்தொழுகும் இப்பூசைத்திறத்தைக்கண்டு; இத்திறத்தையறியாத—இச்செயலையறியாத; அயலொருவன்—அயலானொருவன்; அப்பதியிலந்தணாளர்க்கறிவித்தான்—அவ்வூரில்வாழும் மறையவர்களுக்குத்தெரிவித்தான்.—எ-று. மற்று-இரண்டும் அசை.(ருகூ)

அச்சொற்கேட்ட வருமறையோ ராயனறியா னென்றவற்றின்
இச்சைவழியே யான்மேய்ப்பே னென்றெம்பசுக்க டமைக்கறந்து
பொச்சமொழுகு மாணவகன் பொல்லாங்குரைக்க வவன்றாதை
யெச்சதத்தன் றனையழைமி னென்றாரவையி னிருந்தார்கள்.

(இ-ள்.) அச்சொற்கேட்டவருமறையோர்—அயலான்சொன்ன அந்தச் சொல்லைக் கேள்வியுற்ற அரியவேதங்களையுணர்ந்த மறையவர்கள்; ஆயனறியானென்று—இடையன் இப்பசுக்களை மேய்க்க அறியானென்று; அவற்றினிச்சைவழியேயான்மேய்ப்பேனென்று—அப்பசுக்களின் கருத்தின்படியே யான் மேய்க்கின்றேனென்று கூறி; எம்பசுக்கடமைக்கறந்து—எம்முடைய பசுக்களின் பாலைக்கறந்து; பொச்சமொழுகுமாணவகன்பொல்லாங்குரைக்க—பொய்யோடு விரவியொழுகுகின்ற அப்பிரமசாரியினுடைய தீமையை நாமெல்லாம் எடுத்துச்சொல்ல; அவன்றாதையெச்சதத்தன்றனையழைமினென்றார்—அவன் பிதாவாகிய எச்சதத்தனை யழையுங்களென்றார்; அவையினிருந்தார்கள்—சபையின்கணிருந்தவர்கள்.—எ-று. (சO)

அவையினிருந்த அச்சொற்கேட்ட அருமறையோரென இயையும்.

ஆங்குமருங்கு நின்றார்க ளவ்வந்தணன்றன் றிருமனையின்
பாங்குசென்று மற்றவனை யழைத்துக்கொண்டு வரப்பரந்த
ஓங்குசபையோ ரவனைப்பார்த் தூரானிரைமேய்த் துன்மகன்செய்
தீங்குதன்னைக் கேளென்று புகுந்தபரிசு செப்புவார்.

(இ-ள்.) ஆங்குமருங்குநின்றார்கள்—அவ்விடத்துச் சபையார் அருகினின்ற ஏவலாளர்கள்; அவ்வந்தணன்றன்றிருமனையின்பாங்குசென்று—அவ்வெச்சதத்தனுடைய திருமாளிகையினிடத்துப்போய்; மற்றவனையழைத்துக்கொண்டுவர—அவ்வெச்சதத்தனை அழைத்துவர; பரந்தவோங்குசபையோரவனைப்பார்த்து—பரம்பியிருக்கும் உயர்ந்த சபையார்கள் அவ்வெச்சதத்தனைப்பார்த்து;

ஊரானிரைமேய்த்துன்மகன்செய்=ஊரிலுள்ள மறையவர்கள் பசுக்களை மேய்த்து உன் புதல்வன்செய்த; தீங்குதன்னைக்கேளென்று=குற்றத்தை நீகேளென்று; புகுந்தபரிசுசெப்புவார்=நடந்தசெயலைச் சொல்லத்தொடங்கினார்.—எ-று. (சுச)

அந்தணரா ராகுதிக்குக் கறக்கும்பசுக்க ளானவெல்லாஞ்
சிந்தைமகிழ்ந்து பரிவினாற் றிரளக்கொடுபோய் மேய்ப்பான்போற்
கந்தமலிபூம் புனன்மண்ணி மணலிற்கறந்து பாலுகுத்து
வந்தபரிசே செய்கின்றா னென்றானென்று வாய்மொழிந்தார்.

(இ-ள்.) அந்தணராகுதிக்குக்கறக்கும்=இவ்வூர் மறையவர்கள் செய்யும் அக்கினிகோத்திரத்திற்குக் கறக்கின்ற; பசுக்களானவெல்லாம்=ஓமதேனுக்களையெல்லாம்; சிந்தைமகிழ்ந்துபரிவினால்=மனமகிழ்ந்து அன்போடு; திரளக்கொடுபோய்மேய்ப்பான்போல்=சேர்த்துக்கொண்டுபோய் மேய்க்கின்றவனைப்போல; கந்தமலிபூம்புனன்மண்ணி=வாசனை கமழ்கின்ற மலர்கள் தங்கியநீரையுடைய மண்ணியாற்றின்; மணலிற்கறந்துபாலுகுத்து=மணலினிடத்துக்கறந்து பாலைச்சொரிந்து; வந்தபரிசேசெய்கின்றான்=தனக்கு வேண்டியவாறே செய்கின்றானென்று; என்றானென்றுவாய்மொழிந்தார்=ஒருவன் வந்துசொன்னானென்று குற்றஞ்சாட்டிக் கூறினார்கள்.—எ-று. (சுஉ)

பசுக்களிடத்து இரக்கமுடையவன்போற்காட்டி மேய்க்கப்புகுந்தது பால்கறந்து ஊற்றியாடு நிமித்தமேயன்றி வேறில்லையென்பார் பரிவினால் மேய்ப்பான்போல் என்றார்.

மறையோர்மொழியக் கேட்டஞ்சிச் சிறுமாணவகன் செய்தவி
றிறையுநான்முன் பறிந்திலே னிதற்குமுன்பு புகுந்ததனை
நிறையும்பெருமை யந்தணர்காள் பொறுக்கவேண்டு நீங்களெனக்
குறைகொண்டிறைஞ்சி யினிப்புகுதிற் குற்றமெனதே யாமென்றான்.

(இ-ள்.) மறையோர்மொழியக்கேட்டஞ்சி=தன்புதல்வன் குற்றத்தை அவ்வூரில்வாழும் மறையவர்கள் சொல்ல எச்சதத்தன் கேள்விப்பட்டு அதற்குப்பயந்து; சிறுமாணவகன்செய்தவீது=சிறிய அப்பிரமசரியன்செய்த இப்பிழையை; இறையுநான்முன்பறிந்திலேன்=ஒருசிறிதேனும் நான் முன் அறியேன்; இதற்குமுன்புபுகுந்ததனை=நீங்கள் எனக்குத்தெரிவிக்க முன்பு நிகழ்ந்த குற்றத்தை; நிறையும்பெருமையந்தணர்காள்பொறுக்கவேண்டும்நீங்களென=நிறைந்த தகுதியையுடைய மறையவர்களே நீங்கள் பொறுத்தருளவேண்டுமென்று; குறைகொண்டிறைஞ்சி=அவர்களைக் குறையிரந்து வணங்கி; இனிப்புகுதிற்குற்றமெனதேயாமென்றான்=இனிமேல் இவ்வாறு அவன்செய்ய நேர்படில் அக்குற்றம் என்னதே யாமென்று கூறினான்.—எ-று. (சுரு)

அந்தணாளர் தமைவிடைகொண் டந்திதொழுது மனைபுகுந்து
வந்தபழியொன் றெனநினைந்தே மகனார்தமக்கு வாய்நேரான்
இந்தநிலைமை யறிவேனென் றிரவுகழிந்து நிரைமேய்க்க
மைந்தனார்தாம் போயினபின் மறைந்துசென்றான் மறைமுதியோன்.

(இ-ள்.) மறைமுதியோன்=வேதங்களையுணர்ந்த வயோவிருத்தனான எச்சதத்தன்: அந்தணாளர்தமைவிடைகொண்டு=அவ்வூரிலிருக்கும் மறையவர்களிடத்து விடைபெற்றுக்கொண்டு; அந்திதொழுது மனைபுகுந்து=சாயங்காலத்திற்செய்கின்ற சந்திவந்தனத்தை முடித்துத் தன்வீட்டிட்புகுந்து; வந்தபழியொன்றெனநினைந்து=இப்புத்திரனால் எமக்குநேரிட்டபழி ஈதொன்றென்றுகருதி; மகனார்தமக்கு வாய்நேரான்=அவ்விசாரசருமருக்கு அச்செய்தியைச்சொல்லாதவனாய்; இந்தநிலைமையறிவேனென்றிரவுகழிந்து=இவன்செய்யுஞ்செயலை நாளைத்தினம் யான் அறிவேனென்று அன்றிரவுகழிந்து; நிரைமேய்க்கமைந்தனார்போயினபின்=பசுக்களைமேய்க்க விசாரசருமர்போனபின்பு; மறைந்துசென்றான்=அவர்க்குத்தெரியாமல் மறைவாகப்போனான்.—எ-று. (௪௪)

ஏ-தாம்-அசை.

சென்றமறையோன் றிருமகனார் சிறந்தவூரா னிரைகொடுபோய்
மன்றன்மருவும் புறவின்கண் மேய்ப்பார்மண்ணி மணற்குறையில்
அன்றுதிரளக் கொடுசென்ற வதனையறிந்து மறைந்தப்பா
னின்றகுரவின் மிசையேறி நிகழ்வதறிய வொளித்திருந்தான்.

(இ-ள்.) சென்றமறையோன்றிருமகனார்=அவ்வாறு மறைந்துசென்ற எச்சதத்தன் தனதுதிருமகனாராகிய விசாரசருமர்; சிறந்தவூரானிரைகொடுபோய்=சிறப்பமைந்த அவ்வூரிலிருக்கும் பசுக்கூட்டங்களை ஓட்டிக்கொண்டுசென்று; மன்றன்மருவும்புறவின்கண்மேய்ப்பார்=வாசனைகமழும் முல்லைநிலத்தின்கண்மேய்க்கின்றவர்; மண்ணிமணற்குறையில்=மண்ணியாற்றிலுள்ள ஆற்றிடைக்குறையில்; அன்றுதிரளக்கொடுசென்ற அதனை=அன்றைக்குத்திரளாக ஓட்டிக்கொண்டுபோனதை; அறிந்துமறைந்து=அறிந்து அங்குத்தான் மறைவாய்; அப்பானின்றகுரவின்மிசையேறி=அருகில்நின்ற குராமரத்தில்ஏறி; நிகழ்வதறிய ஒளித்திருந்தான்=நடக்கின்றதை அறியும்படி ஒளித்துக்கொண்டிருந்தான்.—எ-று. (௪௫)

அன்புபுரியும் பிரமசா ரிகளுமூழ்கி யரனார்க்கு
முன்புபோல மணற்கோயி லாக்கிமுகைமென் மலர்கொய்து
பின்புவருமான் முலைபொழிபால் பெருகுங்குடங்கள் பேணுமிடந்
தன்பாற்கொணர்ந்து தாபித்துப் பிறவும்வேண்டு வனசமைத்தார்.

(இ-ள்.) அன்புபுரியும் பிரமசாரிகளுமூழ்கி=சிவபிரானிடத்து நேசத்தையே எப்பொழுதும்விரும்பியிருக்கும் பிரமசாரியாகிய விசாரசருமரும்மண்ணிநீரில்முழுகி; அரனார்க்குமுன்புபோல மணற்கோயிலாக்கி=சிவபிரானுக்குத்தாம் முன்செய்ததுபோலமணலால் ஆலயஞ்செய்து; முகைமென்மலர்கொய்து=(அரும்புக்குவேறாய்) முகையாயிருக்கும் மிருதுவானமலர்களைக்கொய்து; பின்புவருமான்முலைபொழிபால்=தம்பின்னேவருகின்ற பசுக்கள்முலையினின்றும்பொழிகின்றபால்; பெருகுங்குடங்கள்பேணுமிடந் தன்பாற்கொணர்ந்துதாபித்து=நிறைந்தகுடங்களைப்பாதுகாப்பான இடத்திற்கொண்டுவந்து தாபனஞ்செய்து; பிறவும்வேண்டுவனசமைத்தார்=பூசைக்குவேண்டுவனவாகிய இலிங்கமூர்த்திமுதலிய பிறபொருள்களையும் உண்டாக்கினார்.—எ-று. (௪௬)

நின்றவிதியின் விளையாட்டா நிறைந்தவரும்பூ சனைதொடங்கி
யொன்றுமுள்ளத் தண்மையினு லுடையநாதன் றிருமுடிமேன்
மன்றல்விரவுந் திருப்பள்ளித் தாமஞ்சாத்தி மஞ்சனமா
நன்றுநிறைதீம் பாற்குடங்க ளெடுத்துநயப்புற் றாட்டுதலும்.

(இ-ள்.) நின்றவிதியின்விளையாட்டா=சைவாகமத்தில் நிலைபெற்றவிதியினுலாகிய ஓர்திருவிளையாட்டாக; நிறைந்தவரும்பூசனைதொடங்கி=நிறைவான அரியஅர்ச்சனையை முன்போலஆசனமூர்த்தி மூலக்கிரமமாகச்செய்யத்தொடங்கிமுடித்து; ஒன்றுமுள்ளத்தண்மையினுல்=ஒருப்பட்ட தமது திருவுள்ளத்துவிளைந்த மெய்ப்பத்தியினுல்;உடையநாதன்றிருமுடிமேல்=தம்மையாளாகவுடைய சிவபிரானது திருமுடியின்மேல், மன்றல்விரவுந் திருப்பள்ளித்தாமஞ்சாத்தி=அபிடேகத்தின்பொருட்டு வாசனைகமழும்மலரை எடுத்துச்சாத்தி; மஞ்சனமாநன்றுநிறை தீம்பாற்குடங்கள்=திருமஞ்சனமாக மிகநிறைந்த மதுரமானபாற்குடங்களை; எடுத்துநயப்புற்றாட்டுதலும்=எடுத்து விருப்போடு அபிடேகஞ்செய்யவும்.—எ-று. (சஎ)

அபிடேகத்தின்பொருட்டு மலர்சாத்தலென்றது அட்டபுட்பஞ்சாத்தியெனினும் அமையும்.

பரவமேன்மே லெழும்பரிவும் பழையபான்மை மிகும்பண்பும்
விரவமேதக் கவர்தம்பான் மேவும்பெருமை வெளிப்படுப்பான்
அரவமேவுஞ் சடைமுடியா ரருளாமென்ன வறிவழிந்து
குரவமேவு முதுமறையோன் கோபமேவும் படிகண்டான்.

(இ-ள்.) பரவமேன்மேலெழும்பரிவும்=வழிபடுங்கால் மேலும்மேலும் முறுகிவளரும்அன்பும்; பழையபான்மை மிகும்பண்பும்விரவ=முற்பிறப்பின் வாசனைவளரும் முறைமையும்பொருந்த; மேதக்கவர்தம்பால்=அவ்விதமேன்மையுடைய விசாரசருமரிடத்து; மேவும்பெருமைவெளிப்படுப்பான்=தங்கியபெருமையை யாவர்க்குந்தெரிவிக்கும்படி; அரவமேவுஞ்சடைமுடியாரருளாமென்ன=பாம்புகள்வாழுஞ்சடைமுடியையுடைய சிவபிரானது திருவருள்வெளிப்பட்டாற்போல; அறிவழிந்து=அறிவுமயங்கி; குரவமேவுமுதுமறையோன்=குராமரத்தின்மேல் மறைந்திருக்கும் முதியமறையோனுகிய எச்சதத்தன்; கோபமேவும்படிகண்டான்=கோபம் உதிக்கும்படி பார்த்தான்.—எ-று. (சஅ)

இவ்விரண்டுங்குளகம்.

கண்டபோதே விரைந்திழிந்து கடிதுசென்று கைத்தண்டு
கொண்டுமகனர் திருமுதுகிற் புடைத்துக்கொடிதா மொழிகூறத்
தொண்டுபுரியுஞ் சிறியபெருந் தோன்றலார்தம் பெருமான்மேன்
மண்டுகாத லருச்சனையின் வைத்தார்மற்றென் றறிந்திலரால்.

(இ-ள்.) கண்டபோதே விரைந்திழிந்து=எச்சதத்தன் அவர்செய்கையைப்பார்த்தபொழுதே விரைவாகக்குராவினின்றும் இறங்கி; கடிதுசென்றுகைத்தண்டுகொண்டு=ஓடிச்சென்று கையில்வைத்திருக்குங்கோலைக்கொண்டு; மகனூர்திருமுதுகிற்புடைத்து=தன்மகனூராகிய விசாரசருமர் முதுகில்அடித்து;

கொடிதாமொழிகூற=கொடியவார்த்தைகளைச்சொல்ல; தொண்டுபுரியுஞ்சிறியபெருந்தோன்றலார்=சிவபிரானுக்குப்பூசைத்தொண்டுசெய்யும் வயதாற்சிறியபெருமையிற்சிறந்த அவ்விசாரசருமர்; தம்பெருமான்மேன்மண்டுகாதல்=தம்முடையமுதல்வரிடத்துமிக்கெழும்பேரன்பை; அருச்சனையின்வைத்தார்மற்றொன்றறிந்திலர்=பூசிக்கும் முறைமையிற்செலுத்தினர் அதனால் எச்சதத்தன் அடித்தன்முதலிய வேறொன்றையும் அறியவில்லை.—எ-று. (௪௯)

ஆல் - அசை.

அவரது அன்பின்மிகுதிவிளக்கிய மண்டுகாதலென்றும், அக்காதல்வழித்தாய சிவகரணங்களைப் பூசைக்குரிய வியாபாரமாத்திரத்தால் வைத்துநிற்றலில் அருச்சனையின்வைத்தாரென்றும், அதனால் அவரது ஞானேந்திரியமும் கன்மேந்திரியமும் அவ்வியாபாரமாத்திரமாய் நின்றனவேயன்றி வேறுபுலன்களை நுகர்ந்துதொழிற்படாமையின் அடித்தல் வைதல் முதலியசெயலை யவரறியவில்லையாதலில் மற்றொன்றறிந்திலர் என்றுங்கூறினர்.

மேலாம்பெரியோர் பலகாலும் வெகுண்டோனடிக்க வேறுணரார்
பாலார்திருமஞ் சனமாட்டும் பணியிற்சலியா ததுகண்டு
மாலாமறையோன் மிகச்செயிர்த்து வைத்ததிருமஞ் சனக்குடப்பால்
காலாலிடறிச் சிந்தினன் கையாற்கடைமைத் தலைநின்றான்.

(இ-ள்.) மேலாம்பெரியோர்=மேலானதிருவருண்ஞானத்தையடைந்தவிசாரசருமர்; பலகாலும்வெகுண்டோனடிக்கவேறுணரார்=பலதரமுங்கோபங்கொண்ட எச்சதத்தனனவன் கோலாலடிக்குங்கால் தன்பூசைநியமமேயன்றிவேறொன்றையும் அறியாதவராய்; பாலார்திருமஞ்சனமாட்டும் பணியில்சலியாதது=பாலாலாகியதிருமஞ்சனத்தைத் திருமுடியில் அபிடேகஞ்செய்யுந் திருத்தொண்டில்சலியாதிருத்தலை; கையாற்கடைமைத்தலைநின்றான்=ஒழுக்கத்தால்கீழ்மையின் முதலில்நின்றவனாகிய; மாலாமறையோன்கண்டுமிகச்செயிர்த்து=கோபத்தால்மயங்கிய எச்சதத்தன்கண்டு மிகக்கோபித்து; வைத்ததிருமஞ்சனக்குடப்பால்=அவரருகில்வைத்திருக்குந் திருமஞ்சனக்குடத்திலிருக்கும் பாலை; காலாலிடறிச்சிந்தினன்=காலாலுதைத்துக்கவிழ்த்தான்.—எ-று. (௫௦)

கை = ஒழுக்கம்.

தம் அன்பின்விரவியமுதல்வனோடு தாமும் அவரருளாற்றற்போதமறவிரவிநிற்றலில் மேலாம்பெரியோரென்றும், சிவபூசைத்திரவியத்தைக் காலாலிடறியது பெருந்தீங்காதலிற் கையாற்கடைமைத்தலைநின்றானென்றுங்கூறினர்.

சிந்தும்பொழுதி லதுநோக்குஞ் சிறுவரிறையிற் றீயோனைத்
தந்தையெனவே யறிந்தவன்றன் றாள்கள்சிந்துந் தகுதியினால்
முந்தைமருங்கு கிடந்தகோ லெடுத்தார்க்கதுவே முறைமையினால்
வந்துமழுவா யிடவெறிந்தார் மண்மேல்வீழ்ந்தான் மறையோனும்.

(இ-ள்.) சிந்தும்பொழுதிலதுநோக்குஞ்சிறுவர்=திருமஞ்சனக்குடத்தினுள்ளபால்சிந்தியபோது அதைப்பார்த்தவிசாரசருமர்; இறையிற்றீயோனைத்தந்தையெனவேயறிந்து=அக்கணமே கொடியோனாகிய அவ்வெச்சதத்தனைத்

தன்தந்தையென்றேதெரிந்து; அவன்றன்றாள்கள்சிந்துந்தகுதியினால்—அவன் கால்களைத்துணிக்குங்கருத்தால்; முந்தைமருங்குகிடந்தகோல்எடுத்தார்க்கு—முற்பட்டுத்தன் அருகிற்கிடந்தகோல் ஒன்றையெடுத்த அவ்விசாரசருமருக்கு; அதுவேமுறைமையினால்வந்துமழுவாயிட—அக்கோலே அவர்கருத்தின்படிதிரிந்து மழுப்படையாய்வர; எறிந்தார்—அப்படையால் அவன்கால்களைவெட்டினார்; மண்மேல்வீழ்ந்தான்மறையோனும்—அப்பொழுதுநிலத்தில்வீழ்ந்திறந்தான் எச்சதத்தனும்.—எ-று. (ருக)

புலனுணர்வெல்லாமொருங்கப்பெற்றாராயினும் அபிடேகத்திரவியத்தை நோக்கும் உணர்வும், அபிடேகஞ்செய்யும் பாணியிந்திரியவியாபாரமும் உடையராதலில் அபிடேகிக்குந் திருமஞ்சனஞ் சிந்தியதென நோக்குதலின் அது நோக்குமென்றும், இவ்வதிபாதகஞ்செய்தோன் தந்தையாயினுந்தண்டித்தல்கடனாமெனக்கொண்டாராதலின் தந்தையெனவேயறிந்தென்றும், சிவகரணம் பெற்ற அவர்கருத்தின்படி அக்கோலே மழுவாய்த்திரிதலின் அதுவேமுறைமையினால்வந்து மழுவாயிடவென்றுங் கூறினர்.

எறிந்தவதுவே யர்ச்சனையி லிடையூறகற்றும் படையாக
மறிந்ததாதை யிருதாளுந் துணித்தமைந்தர் பூசனையில்
அறிந்தவிடையூ றகற்றினராய் முன்போலர்ச்சித் திடப்புகலுஞ்
செறிந்தசடைநீண் முடியாருந் தேவியோடும் விடையேறி.

(இ-ள்.) எறிந்தவதுவேயர்ச்சனையில்—எறியப்பட்டஅம்மழுப்படையே சிவபூசையில்; இடையூறகற்றும்படையாக—விக்கினத்தைநீக்கும் பாசுபதாத்திரமாக; மறிந்ததாதையிருதாளும்—தடைசெய்ததாதையினது இரண்டுகால்களையும்; துணித்தமைந்தர்பூசனையில்—வெட்டியவிசாரசருமர் தாம் செய்யும் சிவபூசையில்; அறிந்தவிடையூறகற்றினராய்—தம்மால் அறியப்பட்ட விக்கினத்தை நீக்கிக்கொண்டவராய்; முன்போலர்ச்சித்திடப்புகலும்—தடையின்றிமுன்போலப் பூசைசெய்யும்படிதொடங்கவும்; செறிந்தசடைநீண்முடியாரும்—நெருங்கிய சடையாலுயர்ந்த முடியையுடைய சிவபிரானும்; தேவியோடும்விடையேறி—உமாதேவியாரோடும் விடையின்மேல் எழுந்தருளி.—எ-று. (ருஉ)

சிவபூசையில்விக்கினங்களை நிவர்த்திபண்ணுதற்குரியது பாசுபதாத்திர மந்திரமாதலின் இடையூறகற்றும்படையாகவென்றும், அதனால் பூமி அந்தரம் சொர்க்கம் என்னும்மூவிட இடையூற்றையும்நீக்கிப் பூசைசெய்வார்போல இடையூற்றைநீக்கினரென்னுங்கருத்தால் பூசனையில்அறிந்த இடையூறகற்றினராய் என்றுங்கூறினர்.

பூதகணங்கள் புடைசூழப் புராணமுனிவர் புத்தேளிர்
வேதமொழிக ளெடுத்தேத்த விமலமூர்த்தி திருவுள்ளங்
காதல்கூர வெளிப்படலுங் கண்டுதொழுது மனங்களித்துப்
பாதமலர்கண் மேல்விழுந்தார் பத்திமுதிர்ந்த பாலகனார்.

(இ-ள்.) பூதகணங்கள்புடைசூழ—பூதக்கூட்டங்கள் அருகிற்சூழவும்; புராணமுனிவர்புத்தேளிர்—பழமையாகிய எழுமுனிவர்களும் முப்பத்துமுக்கோடிதேவர்களும்; வேதமொழிகளெடுத்தேத்த—வேதவாக்கியங்களைஎடுத்துத்

துதிக்கவும்;விமலமூர்த்தி=இயல்பாகமலவழுக்கில்லாத சிவபிரான்; திருவுள்ள
ங்காதல்கூரவெளிப்படலும்=திருவுள்ளத்துக்கருணைமீக்கூரக் காட்சிகொடுக்கு
ங்கால்;கண்டுதொழுதுமனங்களித்து=அதைத்தரிசித்துவணங்கி உள்ளம் ஆன
ந்தத்தாற்களிப்படைந்து: பாதமலர்கண்மேல்விழுந்தார்=அப்பிரானாரது பாத
தாமரைகளில்விழுந்து சாட்டாங்கமாகவணங்கினார்; பத்திமுதிர்ந்தபாலகனார்=
முதிர்ந்தபத்தியையுடைய விசாரசருமர்.—எ-று. (௫௩)

இவ்விரண்டுங் குளகம்.

தொடுத்தவிதழி சூழ்சடையார் துணைத்தாணிழற்கீழ் விழுந்தவரை
யெடுத்துநோக்கி நம்பொருட்டா லீன்றதாதை விழவெறிந்தா
யடுத்ததாதை யினியுனக்கு நாமென்றருள்செய் தணைத்தருளி
மடுத்தகருணை யாற்றடவி யுச்சிமோந்து மகிழ்ந்தருள.

(இ-ள்.) தொடுத்தவிதழிசூழ்சடையார்=தொடுக்கப்பட்ட கொன்றை
ப்பூமாலையானதுசூழ்ந்த சடைமுடியையுடைய சிவபிரானார்; துணைத்தாணிழற்
கீழ்விழுந்தவரை=தமது இரண்டுதிருவடிநிழற்கீழ் வணங்கியவிசாரசருமரை;
எடுத்துநோக்கிநம்பொருட்டால்=திருக்கரத்தால் எடுத்துக் கிருபாநோக்கஞ்செ
ய்து நமதுநிமித்தம்; ஈன்றதாதைவிழவெறிந்தாய்=உன்னைப்பெற்றபிதா இறக்
கும்படி கால்களைவெட்டினாய்; அடுத்ததாதையினியுனக்கு நாமென்றருள்செய்
தணைத்தருளி=ஆதலில் உனக்குரியதந்தை இனிமேல் நாமேயென்று திருவா
ய்மலர்ந்து திருமார்பில்அணைத்து; மடுத்தகருணையாற்றடவி=திருவுள்ளத்துள்
நிறைந்தகிருபையினால் முதுகைத்தடவி; உச்சிமோந்துமகிழ்ந்தருள=அவரது
உச்சியைமோந்து மகிழ்கூர்ந்தருள.—எ-று. (௫௪)

விசாரசருமருக்குத் தாம்தந்தையானோமென்றற்கேற்கப் புதல்வர்க்கு
த்தாதைசெய்யும் உச்சிமோத்தல் அணைத்தல் தடவல்முதலியனவும் சிவபிரா
ன்செய்தனரென்க. தன்போலாக்குதற்குக் கோழிதன்முட்டையைப்பரிசித்த
லும் மீன்தன்முட்டையைநோக்குதலும்போலப் பிரானாரும் நோக்குதலும் பரி
சித்தலும் தன்போலாகச்செய்தற்கேதுவாயினவென்க.

செங்கண்விடையார் திருமலர்க்கை தீண்டப்பெற்ற சிறுவனார்
அங்கண்மாயை யாக்கையின்மே லளவின்றுயர்ந்த சிவமயமாய்ப்
பொங்கியெழுந்த திருவருளின் மூழ்கிப்பூமே லயன்முதலாத்
துங்கவமரர் துதிசெய்யச் சூழ்ந்தவொளியிற் றோன்றினார்.

(இ-ள்.) செங்கண்விடையார் திருமலர்க்கை=சிவந்தகண்ணையுடைய
இடபத்தைவாகனமாகக்கொண்டருளும் சிவபிரான் சிவந்தமலர்போலுந் திரு
க்கரங்களால்; தீண்டப்பெற்றசிறுவனார்=பரிசிக்கும்படி பெற்றுக்கொண்டவி
சாரசருமர்; அங்கண்மாயையாக்கையின்மேல்=அப்பொழுது மாயாகாரியமா
ன உடம்பினிடத்து; அளவின்றுயர்ந்தசிவமயமாய்=வரம்பின்றியுயர்ந்தசிவசா
ரூபத்தையடைந்து; பொங்கியெழுந்ததிருவருளின்மூழ்கி=தம் உள்ளத்துமேற்
கிளர்ந்துதித்த திருவருள்வெள்ளத்துமுழுகி; பூமேலயன்முதலா=தாமரைமல
ரில்வாழும் பிரமன்முதலாக; துங்கவமரர்துதிசெய்ய=உயர்ந்ததேவர்கள்துதி




விசாரசருமர் மறையவர் குலத்துதித்து வேதமுதலிய கலைகளுணர்ந்துவருங்கால் ஒருநாள் ஆனிரைமேய்க்கும் இடையனை ஓர்பசுமு ட்ட அதனை அவன் அடிக்கப்போனதைக்கண்டு பொருமாகி அன்றுமுதல் தாமே அவ்வானிரைகளை மேய்க்கத்துணிந்து அப்பசுக்கள் சொரியும் பாலைக் குடங்களில் நிரப்பி மண்ணியாற்றின்கரை ஆத்திமரத்தடியில் மணலாற் சிவலிங்கமமைத் தப்பாலாற் றிருமஞ்சன மாட்டுகையிற்கண்ட தந்தைகோலாற் புடைத்துக் காலாற் பாற்குடத்தை யிடறவுணர்ந்து அவன் தாளைத்துணிக்க உடனே சிவபிரா ன் உமாசமேதராய் விடைமீதெழுந்தருளி நம்பொருட்டுப் பிதாவைத் துணித்தமையால் இனிநாமே உனக்குத் தாவதயாமின்றே மேலும் நாமேற்றுக்கொள்ளும் பரிகலம் பரிவட்டம் மாலைமுதலியன உனக்கே யுரியனவென்றுங் கட்டியீட்டருளித் தருசடையிற்றரித்த கொன்றைமாலையை அவர்கழுத்திற்றரித்துச் சண்டேசர்பதத்தைத்தந்

க்கும்படி; சூழ்ந்தவொளியிற்றோன்றினார்=தம் திருமேனியினின்றும் பரம்பிய ஒளியோடு விளங்கினார்.—எ-று. இவ்விரண்டுங் குளகம். (௫௫)

அண்டர்பிரானுந் தொண்டர்தமக் கதிபனாக்கி யனைத்துநாம்
உண்டகலமு முடுப்பனவுஞ் சூடுவனவு முனக்காகச்
சண்டீசனுமாம்பதந்தந்தோ மென்றங்கவர்பொற் றடமுடிக்குத்
துண்டமதிசேர் சடைக்கொன்றை மாலைவாங்கிச் சூட்டினார்.

(இ-ள்.) அண்டர்பிரானும்=சிவபிரானும்; தொண்டர்தமக்கதிபனாக்கி=திருத்தொண்டர்களுக்கு அவரைத்தலைவராகச்செய்து; நாம்உண்டகலமுமுடுப்பனவும்=நாம்உண்ணப்பட்ட பரிகலமும் தரிக்கப்பட்ட பரிவட்டமும்; சூடுவனவும் அனைத்துமுனக்காக=சூடப்பட்ட மாலைமுதலியனவும்ஆகிய எல்லாம் உனக்காகும்படி; சண்டீசனுமாம்பதந்தந்தோமென்று=சண்டீசர்பதத்தையும் உனக்குக் கொடுத்தோமென்றுகூறி; அங்கவர்பொற்றடமுடிக்கு=அவ்விசாரசருமரது அழகியபெருமையினையுடைத்தாகிய திருமுடியின்மேல்; துண்டமதிசேர் சடை=பிளவாகிய இளம்பிறைதவழும் சடையின்கணுள்ள; கொன்றைமாலை வாங்கிச்சூட்டினார்=கொன்றைமாலையை எடுத்துச்சூட்டியருளினார்.—எ-று.()

அனைத்தும் என்றதனால் சந்தனம் தாம்பூலம் முதலியனவுங்கொள்க. சண்டீசனும் என்கிற உயர்வுசிறப்பும்மை பிரித்துக் கூட்டப்பட்டது.

எல்லாவுலகு மார்ப்பெடுப்ப வெங்குமலர்மா ரிகள்பொழியப்
பல்லாயிரவர் கணநாதர் பாடியாடிக் களிபயிலச்
சொல்லார்மறைக டுதிசெய்யச் சூழ்பல்லியங்களெழச்சைவ
நல்லாறோங்க நாயகமா நங்கள்பெருமான் றொழுதணைந்தார்.

(இ-ள்.) எல்லாவுலகுமார்ப்பெடுப்ப=எல்லாஉலகிலுள்ளாரும் மகிழ்ச்சியால் அரஎன்று ஆரவாரிக்கவும்; எங்குமலர்மாரிகள்பொழிய=எவ்விடத்தும் மலர்மழைகள்சொரியவும்; பல்லாயிரவர்கணநாதர்=அநேகமாயிரங் கணத்தலைவர்கள்; பாடியாடிக்களிபயில=பாடிநடித்துக் களிப்படையவும்; சொல்லார்மறைகடுதிசெய்ய=சொற்கள்நிறைந்த வேதங்கள் துதிசெய்யவும்; சூழ்பல்லியங்களெழ=நான்குபுறத்தும் சூழ்ந்து பலவாத்தியங்கள் ஒலிக்கவும்; சைவநல்லாறோங்க=நல்லசைவநெறியானது வளரவும்; நாயகமாநங்கள்பெருமான்=கணங்களுக்குமுதல்வராகும் எங்கள்பிரானாகிய சண்டேசுரநாயனார்; தொழுதணைந்தார்=வணங்கிக்கொண்டு சிவபிரான் பின்சென்று சிவலோகமடைந்தார்.—எ-று.

ஞாலமறியப் பிழைபுரிந்து நம்பரருளா னான்மறையின்
சீலந்திகழுஞ் சேய்ஞலூர்ப் பிள்ளையார்தந் திருக்கையிற்
கோலமழுவா லேறுண்டு குற்றநீங்கிச் சுற்றமுடன்
மூலமுதல்வர் சிவலோகமெய்தப் பெற்றான் முதுமறையோன்.

(இ-ள்.) ஞாலமறியப்பிழைபுரிந்து=உலகத்தார்அறியும்படிக்குச் சிவபூசைக்கிடையூறாகிய பெரும்பாதகத்தைச்செய்து நம்பரருளால்நான்மறையின் சீலந்திகழுஞ்சேய்ஞலூர்ப்பிள்ளையார்தம்=சிவபிரான் திருவருளினால் நான்குவேதங்களிற்கூறும் ஒழுக்கத்தால் விளக்கமடையும் திருச்சேய்ஞலூரில் அவதரித்த சண்டேசுரநாயனாரது; திருக்கையிற்கோல மழுவாலேறுண்டு=திருக்கரத்திற்றாங்கிய அழகியமழுப்படையினால் வெட்டுண்டு; குற்றநீங்கிச்சுற்றமுடன்=அதனால் அப்பாதகம்நீங்கித் தன் உறவினரோடு; மூலமுதல்வர்சிவலோகமெய்த=

உலகுக்குக்காரணமான சிவபிரான்வீற்றிருந்தருளும் சிவலோகத்தைத் தானும் அடையும்படி; முதுமறையோன்பெற்றான்—முதிய மறையவனாகிய எச்சதத்தன்பெற்றுக்கொண்டான்.—எ-று. (௫அ)

சிவபூசைக்கிடையூறுசெய்தல் பெரும்பாதகமாதலிற் பிழைபுரிந்தென்றும் உடனே வெட்டுண்டலால் அப்பாதகம் நீங்கிற்றாதலில் குற்றநீங்கி என்றும் மேலாம்பதமடைந்த நாயனாரது தந்தையாதலின் சுற்றமுடன் முதுமறையோன் சிவலோகமெய்தப் பெற்றானென்றுங்கூறினர்.

வந்துமிகைசெய் தாதைதாண் மழுவாற்றுணித்த மறைச்சிறுவர்
அந்தவுடம்பு தன்னுடனே யரனார்மகனா ராயினார்
இந்தநிலைமை யறிந்தாரார் ஈறிலாதார் தமக்கன்பு
தந்தவடியார் செய்தனவே தவமாமன்றோ சாற்றுங்கால்.

(இ-ள்.) வந்துமிகைசெய்தாதைதாள்—தம்முன்வந்து பூசைக்கிடையூறுசெய்த பிதாவாகிய எச்சதத்தனது கால்களை; மழுவாற்றுணித்தமறைச்சிறுவர்—மழுப்படையால் வெட்டிய விசாரசருமர்; அந்தவுடம்புதன்னுடனே—தாம் அடைந்த மனுட உடம்புடனேயே; அரனார்மகனாராயினார்—சிவபிரான் திருமகனாரானார்; இந்தநிலைமையறிந்தாரார்—இவ்வாறு பாதகம் பணியாய்ச் சிவபதமடைந்த முறைமையை அறிந்தவர்கள் யார்ஆயின்;சாற்றுங்கால்—விசாரித்துச் சொல்லுமிடத்து;ஈறிலாதார்தமக்கு—அழிவில்லாத சிவபிரானுக்கு; அன்புதந்தவடியார்செய்தனவேதவமாம்—அன்புசெய்த அடியவர்கள் செய்யப்பட்டன அவமாயினும் அவைகளே தவமாக ஆகும்.—எ-று. அன்று-ஓ-அசை.()

அவந்தவமாதல் நிடேதமும் விதித்தனவாதல் அவை அவ்வாறாதற்குக் காரணம் முதல்வன் தன் அருளாற் றன்னைச்சார்ந்துநிற்கும் அடியார்செயல் தன்செயலாகக்கோடலின் என்க.

நேசநிறைந்த வுள்ளத்தா னீலநிறைந்த மணிகண்டத்
தீசனடியார் பெருமையினை யெல்லாவுயிருந் தொழவெடுத்துத்
தேசமுய்யத் திருத்தொண்டத் தொகைமுன்பணித்த திருவாளன்
வாசமலர்மென் கழல்வணங்க வந்தபிறப்பை வணங்குவாம்.

(இ-ள்.) நேசநிறைந்தவுள்ளத்தால்—அன்புநிறைந்த மனசினால்; நீலநிறைந்தமணிகண்டத்தீசன்—கருமைநிறைந்த நீலமணிபோலும் திருமிடற்றினையுடைய சிவபிரான்; அடியார்பெருமையினை—திருவடியார் பெருமையை; எல்லாவுயிருந்தொழவெடுத்துத்தேசமுய்ய—எல்லாவுயிர்களும் வணங்கப் பதிகமெடுத்து நிலவுலகத்துள்ளார் உய்யும்படி; திருத்தொண்டத்தொகைமுன்பணித்த திருவாளன்—திருத்தொண்டத்தொகையை முன்னே அருளிச்செய்த சுந்தரமூர்த்திசுவாமிகளது; வாசமலர்மென்கழல்வணங்க—வாசனைகமழும் தாமரைமலர்போலும் மிருதுவான திருவடிகளை வணங்குதற்கு; வந்தபிறப்பைவணங்குவாம்—எமக்குக்கிடைத்த மானுடப்பிறப்பை யாம் வணங்குவாம்.—எ-று. (௬௦)

சண்டேசுரநாயனார்புராணம் முற்றிற்று.

மும்மையாலுலகாண்டசருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - ௧௨௭௦.

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| | | திருமுறைகண்டபுராணம். | |
| ௩௧ | ௧0 | கொடுக்கும் | கெடுக்கும் |
| ௩௭ | ௯ | எண்ணெய | எண்ணெயம் |
| ௪௪ | ௨௧ | வமருலங் | வமருலகங் |
| ௪௯ | ௩௨ | ஞாநம் | ஞானம் |
| ௫0 | ௩௫ | வாய்மைபாரே | வாய்மையாரே. |
| | | சேக்கிழார்நாயனார்புராணம் | |
| ௧௯ | ௧௭ | குலநில | குறுநில |
| ,, | ௨0 | திறமைவிரி | திறமைபுரி |
| ௩0 | ௩௪ | தாமறை | தாமரை |
| ௩௩ | ௧௮ | னொவிபோ | னொலிபோ |
| ௬௨ | ௯ | பெற்றன | பெற்றென. |
| | | திருத்தொண்டர்புராணம். | |
| ௪௬ | ௪௨ | சமைய | சமய |
| ௨௧ | ௯ | அணைவர | அணைவா |
| ,, | ௩௨ | தன்னுன்ள | தன்னுள்ள |
| ௨௨ | ௨௫ | எடுக்துக்கொண்டு | எடுத்துக்கொண்டு |
| ௩௫ | ௩௬ | ஒட்டி | ஓட்டி |
| ௪0 | ௩ | க்ருமை | கருமை |
| ௫௨ | ௧0 | புல்விவித்து | புல்லுவித்து |
| ,, | ௩0 | பேயென | பேறேயென |
| ௫௩ | ௧௧ | யடைதற்யொகு | யடைதற்கு |
| ,, | ,, | சூரியனைத்து | சூரியனையொத்து |
| ௬௬ | ௨௪ | எழுலகமு | எழுலகு |
| ௭0 | ௧௫ | குன்றன்னார் | குன்றனார் |
| ௮௨ | ௧௫ | நிறைகுடைந் | நிறைகுடந் |
| ௮௪ | ௨௪ | வந்தாரெ | வந்தாரெ |
| ௮௭ | ௫ | தெற்றிவிழி | நெற்றிவிழி |
| ௯௮ | ௧ | நம்பியாரூரஓ | நம்பியாரூரனொ |
| ,, | ௩0 | நம்பியாரூரே | நம்பியாரூரரே |
| ௧0௪ | ௨௫ | திருமேனீ | திருமேனி |
| ௧0௯ | ௧0 | பூஞ்சோலை | பூஞ்சோலைசூழ் |
| ௧௧௧ | ௨௪ | கருள் | நகருள் |
| ,, | ௨௫ | நசடை | சடை |
| ௧௨௫ | ௨௪ | விரும்பி | விரும்பிப் |
| ௧௩௫ | ௩௫ | பேதைம | பேதமை |
| ,, | ௩௬ | பேதப் | பேதைப் |
| ௧௫௪ | ௨௨ | யாருக்கும் | யாருக்கு |
| ,, | ௨௩ | மென்றருள | மணமென்றருள |
| ,, | ௫ | ருளி | டருளி |
| ௧௬௪ | ௩0 | யாவனார்க் | யானாயர்க் |
| ௧௬௫ | ௧௮ | னப்பிரா | னம்பிரா |
| ,, | ௧௯ | தண்டிச்கு | தண்டிக்கு |
| ௧௬௭ | ௨ | லம்மானுச் | லம்மானுக் |
| ௧௭௧ | ௧௫ | ச்கத்தை | க்கத்தை |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௧௭௫ | ௫ | வாழ்ச்சைக்கு | வாழ்க்கைக்கு |
| ௧௬௬ | ௧௯ | அத்திருநீலகண்ட | அவ்வியற்பகை |
| ௨0௯ | ௨௨ | பட்டால் | பாட்டால் |
| ௨௨௩ | ௨௯ | எழுந்தழுளினார் | எழுந்தருளினார் |
| ௨௩௪ | ௧௩ | வீதறிராநின்ற | வீற்றிராநின்ற |
| ௨௪0 | ௨௫ | வடிவு | வடிவு |
| ௨௪௬ | ௧௫ | இடையெ | இடையே |
| ௨௬௯ | ௨௬ | களிற்றெறிரோ | களிற்றெறிரோ |
| ௨௭௯ | ௧௫ | டன்ளாத | டள்ளாத |
| ,, | ௨௧ | பணிகத | பணிகட |
| ௩0௨ | ௧௪ | முததங் | முத்தங் |
| ௩௨௧ | ௧௯ | களேரடு | களோடு |
| ௩௨௪ | ௧௨ | வேடரொடு | வேடரோடு |
| ௩௪௪ | ௨௬ | கண்கொண்டு | கண்டுகொண்டு |
| ௩௪௫ | ௧௬ | புடைகடொறும் | புடைகடோறும் |
| ௩௬0 | ௩௧ | தூர்த்தே | தூரத்தே |
| ௩௭௫ | ௨௫ | வெழ | வேழ |
| ௩௭௬ | ௬ | மணணவன | மன்னவன் |
| ,, | ௧0 | னுஸடய | னுடைய |
| ௩௭௭ | ௩௧ | ஆகாய்த்தல் | ஆகாயத்தில் |
| ௩௯0 | ௧௧ | த்ம்தனடியே | ங்தேனடியே |
| ௩௯௬ | ௧0 | விப்பாரால் | விப்பரால் |
| ,, | ௩௪ | பாகர்க்கு | பங்கர்க்கு |
| ௩௯௮ | ௩௩ | யமுசெய் | யமுதுசெய் |
| ௩௯௯ | ௩௬ | நிருர் | நின்றுர் |
| ௪௧௩ | ௨௪ | நிறைங்க்கும் | நிறைந்தெவ்வுயிர்க்கும் |
| ௪௧௬ | ௨௬ | றிருச்தெவி | றிருச்செவி |
| ௪௧௮ | ௪ | புண்ணியனு | புண்ணியனு |
| ௪௩௫ | ௩௨ | தொளியல் | தொளியால் |
| ,, | ௩௩ | வெளிபரச்கு | வெளிபரக்கு |
| ௪௬௧ | ௧௬ | கரிய | கரி |
| ௪௬௫ | ௩௧ | வந்திழுவது | வந்திழிவது |
| ௫0௪ | ௭ | முன்ளவர் | முள்ளவர் |
| ௫௧௬ | ௩ | புவிக்காக்கு | புவிகாக்கு |